லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

## மூன்றாம் பாகம்



சீதை பதிப்பகம்

லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

# WAR AND PEACE

(மூன்றாம் பாகம்)

பதிப்பாசிரியர் :

**எஸ். கௌமாரீஸ்வரி,**

எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்.

**சீதை பதிப்பகம்**

6, தோப்பு வெங்கடாசலம் தெரு, (பாரதி சாலை ஸ்டேட் வங்கி அருகில்),
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
✆ : 28443791

**சி. மகேந்திரன்**
*ஆசிரியர், தாமரை*

# அணிந்துரை

பன்முகத்தோடு தன்னை உணர்ந்து வளர்த்தெடுக்கும் தேவை இன்றைய தமிழக வாசகர் உலகத்திற்கு அவசியமாகி விட்டது. சின்னத்திரை, பெரியத் திரை என்று மக்களின் கவனமெல்லாம் எங்கேயோ கடத்திச் செல்லப்படும் காலத்தில் மனிதனை மனிதனாக காப்பாற்றி வைத்திருப்பதே நெருக்கடி மிகுந்த ஒன்றாக மாறிவிட்டது.

மனிதனின் இந்த மனிதத் தன்மையைக் காப்பாற்றும் மருந்து நூல்களில்தான் இருக்கின்றது. தமிழ்ப் படைப்புலகு எல்லையில்லா நூல்களை வெளியிட்டுக் கொண்டிருந்தாலும், இன்றைய தமிழகத்தின் தேவைக்கு இது போதுமானதாக இல்லை. எனவே அயல் மொழிகளிலிருந்து தமிழாக்கம் செய்யப்படுவதும், இன்றைய காலத்தின் அவசியமாக இருக்கிறது.

தமிழாக்கி பின் அச்சாக்கும் முயற்சிகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று சமகாலப் படைப்புகளை மொழிபெயர்த்து வெளியிடுவது. மற்றொன்று, ஆரம்ப கால நூல்களை (முன்னரே மொழியாக்கம் செய்யப்பட்டவை) மீண்டும் இன்றைய நவீன புரிதலுக்கேற்ப தமிழாக்கம் செய்து வெளியிடுதல். அண்மைக் காலங்களில் மொழியாக்கங்களில் மீண்டும் மீளாக்கம் செய்தல் கூடுதலாகவுள்ளது. சிறிய மூலதனத்தில் கணிணியின் துணையுடன் நூல்களை வெளியிட முடியும் என்பது இந்த நூல்களின் வருகைக்கு முக்கியமான காரணமாகிறது.

கடந்த காலத்தின் அரிய மொழியாக்கங்கள் பல, இப்பொழுது மீண்டும் வந்து நம்மை திகைக்க வைக்கின்றன. சில புத்தகங்கள் மீண்டும் வாசிக்க இயலுமா, என்ற ஏக்கத்தை இந்த நூல்களின் வருகை மாற்றியமைத்துள்ளது. இது வரவேற்கத்தக்கது. ஆனாலும், சில நூல்களில், இந்த நூல் பற்றிய மொழியாக்க வரலாறுத் தொடர்ச்சி குறிப்பிடப்படுவதில்லை. ஆரம்ப கால மொழியாக்க வாழ்க்கை மிகவும் கடினம் நிறைந்தது. அத்தகைய முன்னோடிகளின் முயற்சிகள் பதிவு செய்யப்பட வேண்டியவை. சில நூல்களில், இந்த குறிப்புவிடுபட்டு விடுகின்றது. இது வரவேற்கக் கூடியதல்ல.

லியோ டால்ஸ்டாய், உலக ஞானிகளில் ஒருவர். இந்தியத் தந்தை மகாத்மாவிற்கே வழிகாட்டிய பெருமையைப் பெற்றவர். இவரது

புகழ்மிக்க 'போரும் அமைதியும்' என்ற மொழியாக்க நூலை இப்பொழுது வெளியிட்டுள்ளார்கள்.

திரு. ராஜசேகரன் துடிப்பு மிக்கவர். இவர் வெளியிட்டுள்ள பல நூல்கள் மிகக் குறைந்த விலையில் மக்களை சென்றடைந்திருக் கிறது. இவரது 'சீதை பதிப்பகம்' லியோ டால்ஸ்டாயின் 'போரும் அமைதியும்' என்ற மொழியாக்க நூலை வெளியிட்டுள்ளது. இம் மொழிபெயர்ப்பை, பதிப்பகக் குழு செம்மைப்படுத்தியுள்ளது.

லியோடால்ஸ்டாயின் ஆங்கிலத்தில் வெளியிட்ட War & Peace என்னும் நூல், அறிஞர் டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்த நூல் சக்தி பிரசுராலயத்தின் நிறுவனர் திரு. வை.கோவிந்தன் அவர்களால், பதிப்பிக்கப்பட்டது. விற்பனை உரிமை என். சி. பி. எச்.யிடம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த மொழிபெயர்ப்பைப் பற்றி பதிப்பாளர் வை.கோவிந்தன் குறிப்பிடும் போது, ''பேராசிரியர் டி.எஸ்.சொக்கலிங்கம் அவர்களைத் தமிழாக்கித் தருமாறு கேட்டோம். பேராசிரியர் என்றால் 'புரபொசர்' என்ற ஆங்கிலச் சொல்லின் மொழிபெயர்ப்பு அன்று. உள்ளபடியே அவர் பேராசிரியர். தமிழ்நாட்டில் தமிழ் வளம்பெறச் செய்தவர்களில் இவர் முக்கியமானவர். மொழி பெயர்ப்பில் ஐம்பது சதவீதம் மார்க் கிடைத்து விட்டால் அது நல்ல மொழிபெயர்ப்பு என்பது என் கருத்து. ஸ்ரீ சொக்கலிங்கம் அவர்கள் தம் மொழிபெயர்ப்பில், பெரிதும் வெற்றி கண்டிருக்கிறார் என்பது என் கருத்து'' என்று கூறியுள்ளார்.

'லியோ டால்ஸ்டாய் நூலை, தாய் மொழியான ரஷ்ய மொழியில் தான் எழுதினார். லூய்சா, அயில்மிர் மாட் ஆகியோர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்கள். இந்த இருவரின் மொழிபெயர்ப்புதான் சிறப்பிற்குரியது' என்று, உலக அறிஞர்களில் ஒருவரான பெர்னாட்ஷா குறிப்பிட்டுள்ளார். இந்த ஆங்கில மொழியாக்கத்தைத் தான் திரு. டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் தமிழ்ப்படுத்தியிருக்கிறார்கள்.

பதிப்பின் நிறைகுறைகளைப் பற்றி வாசகர்கள் தீர்மானிப்பது தான் நியாயமானதாக இருக்க முடியும். நூல் சம்பந்தப்பட்ட இறுதி தீர்ப்புக் கூறும் நீதிபதிகள் வாசகர்கள்தான். ஆனாலும் உலகப் புகழ்பெற்ற, இந்த நூலை தமிழ் வாசகர்கள் கட்டாயம் படிக்க வேண்டும் என்று கேட்டு கொள்ளும் உரிமை எனக்கிருக்கிறது. இந்த நூலை, அனைவரும் வாசித்து, பயன் பெறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

22.7.2003 **சி. மகேந்திரன்**

சென்னை

# போரும் அமைதியும்



## 11

### 1

ஒரு உறுப்பில் பூரணமாக இடைவிடாத சலனம் இருக்கும் என்பதை மனித உள்ளத்தால் கிரகித்துக்கொள்ள முடிவதில்லை. ஒரு குறிப்பிட்ட சலனத்தைப் பற்றி மட்டும்தான் மனிதன் அறிந்து கொள்ளுகிறான். அதாவது, அந்த இடைவிடாத சலனத்தில் உள்ள உறுப்பில் ஒரு பாகத்தைத் தனியாகப் பிரித்து ஆராய்ச்சி செய்யும்போது அவன் புரிந்து கொள்ளுகிறான். ஆனால், இடைவிடாத சலனத்தில் உள்ள அந்தப் பிரிவுகளை, அவன் சலனமற்ற பிரிவுகளாகச் செய்து ஆராய்ச்சி செய்யும்போதுதான், ஒரு பெரிய தவறு நேரிடுகிறது. நமது முன்னோர்கள் செய்து வந்த ஒரு ஏமாற்று வாதம் எல்லோரும் அறிந்த விஷயம். அதாவது, ஆச்சிலெஸ் என்பவன் ஆமையைவிட பத்து மடங்கு அதிக வேகமாக நடக்கக்கூடியவனாய் இருந்தாலும், அவன் அந்த ஆமையைப் பிடிக்க முடியாது என்பதுதான் அந்த ஏமாற்று வாதமாகும். தனக்கும் ஆமைக்கும் உள்ள அந்த தூரத்தை ஆச்சிலெஸ் கடந்து முடியும்போது அந்த தூரத்தில் பத்தில் ஒரு பங்கு தூரத்தை ஆமை மேலும் கடந்துவிடுகிறது. அந்த பத்தில் ஒரு பங்கு தூரத்தை ஆச்சிலெஸ் கடக்கும் முன்பாக, நூறில் ஒரு பங்கு தூரத்தை ஆமை கடந்துவிடுகிறது. இம்மாதிரியாக சொல்லிக் கொண்டே போவார்கள். ஆகவே, இந்தப் பிரச்னை, தீர்க்க முடியாத ஒரு பிரச்னை என்று நமது முன்னோர்களுக்குக்குத் தோன்றி வந்தது. ஆமையை ஒருக்காலும் ஆச்சிலெஸால் தோற்கடிக்க முடியாது என்ற அசட்டுத்தனமான பேச்சு இதிலிருந்துதான் பிறந்தது; அந்த சலனத்தைச் சலனமில்லாத பிரிவுகளாகப் பிரித்தார்கள். ஆனால், ஆச்சிலெஸின் சலனமும், ஆமையின் சலனமும் இடைவிடாத தொடர்ச்சியான சலனங்களாகும். சலனத்தின் பிரிவுகளைச் சின்னஞ் சிறியவையாகப் பிரித்துக் கொண்டே போனால், அந்தப் பிரச்னைக்கு உண்டான முடிவிடம் நாம் நெருங்கியதாகத் தோன்றலாம். ஆனால், நாம் அதை அடையவே முடியாது. சின்னஞ் சிறு பிரிவுகளையும் பத்தில் ஒரு பாகம் அவை முன்னேறிப்

போவதையும் வைத்துக்கொண்டு, மொத்தமான முன்னேற்றத்தைக் கணக்கு போட்டால்தான், அந்தப் பிரச்னைக்கு முடிவு காணமுடியும். இம்மாதிரி சின்னஞ்சிறு பிரிவுகளை எப்படி கணக்கிடுவது என்று கணித சாஸ்திரத்தில் ஒரு பிரிவு தோன்றி இருக்கிறது. சலனத்தின் சிக்கலான பிரச்னைகளுக்கு, முன்பெல்லாம் முடிவுகாண முடியாது என்று தோன்றிய பிரச்னைகளுக்கு, இதன் மூலம் இப்பொழுது முடிவு காண முடியும்.

இந்தப் புதிய கணித சாஸ்திரம் நமது முன்னோர்களுக்குத் தெரியாது. இடைவிடாத சலனத்தைப் பற்றிய பிரச்னைகளில் முடிவு காணும்போது, சின்னஞ் சிறு பிரிவுகளைப் பிரதான சலனத்தோடு சேர்த்துக் கணக்கு பார்ப்போமானால் அந்தத் தவறு ஏற்படாது. அதாவது, தொடர்ச்சியான சலனத்திற்குப் பதிலாக, பிரிவுகளை அதிலிருந்து தனியாகப் பிரித்து ஆராய்ச்சி செய்யும் தவறு ஏற்படாது.

சரித்திர சம்பந்தமான சம்பவங்களை ஆட்டிவைக்கும் விதியும், இதே கொள்கையில்தான் நடைபெற்று வருகிறது. மனித சமூகத்தின் போக்கானது கணக்கற்ற மனித உள்ளங்களில் ஏற்படும் விருப்பங்களினால் அமைகிறது. அது தொடர்ச்சியானது.

இந்தத் தொடர்ச்சியான முன்னேற்றத்தின் விதிகளை அறிவதுதான் சரித்திரத்தின் நோக்கம். மனித உள்ளங்களின் விருப்பங்களினால் மொத்தமாய் ஏற்படக்கூடிய இந்த விதிகளை அறிவதற்கு, மனித உள்ளமானது தனித்தனியாகப் பிரித்த பகுதிகளைக் கொண்டு நிர்ணயிக்கிறது. தொடர்ச்சியாக நடந்துகொண்டுவரும் சம்பவங்களில் இருந்து சிலவற்றைப் பொறுக்கி எடுத்து, அவற்றை மற்றவைகளிலிருந்து பிரித்து ஆராய்ச்சி செய்வதே சரித்திரத்தின் முதலாவது முறையாகும். எந்த சம்பவத்திற்கும் ஆரம்பம் என்பதுஇல்லை; இருக்கவும் முடியாது. ஏனெனில், ஒரு சம்பவம் மற்றொரு சம்பவத்திலிருந்து அறுபடாது தொடர்ந்து வருகிறது.

இரண்டாவது முறையானது குறிப்பிட்ட ஒரு மனிதரின் செய்கைகளை ஆராய்ச்சி செய்வதாகும். அதாவது, ஒரு மன்னர், அல்லது ஒரு கமாண்டர் ஆகியவர்களின் செய்களை சீர்தூக்கிப் பார்ப்பது. கணக்கற்ற தனித்தனி மனித உள்ளங்களின் விருப்பங்கள் கூடிச் சேர்ந்து நிற்பதற்கு சமானமாக அந்தத் தனிப்பட்டவரின் செய்கைகளைப் பாவித்து ஆராய்ச்சி செய்வதாகும். ஆனால், சரித்திரப் பிரசித்தி பெற்ற ஒரு தனிப்பட்ட நபர், அந்தத் தனித்தனி உள்ளங்களின் மொத்த விருப்பங்களை எப்பொழுதுமே பிரதிபலித்ததில்லை.

உண்மையிடம் நெருங்கவேண்டும் என்று சரித்திர சாஸ்திரம் முயற்சி செய்கிறது. ஆனால், எப்பொழுதுமே தன்னுடைய ஆராய்ச்சிக்காக சின்னஞ் சிறு பகுதிகளையே அது எடுத்துக்கொள்ளுகிறது. அது எடுத்துக்கொள்ளும் பகுதிகள் எவ்வளவு சிறியவையாய் இருந்தாலும், மற்றவைகளை விட்டு அதைப் பிரித்து எடுத்து ஆராய்ச்சி செய்யக்கூடாது என்று நாம் நினைக்கிறோம். ஒரு அற்புதத்தின் ஆரம்பம் என்று நினைத்துக் கொள்ளுவதோ, அல்லது மக்கள் பலருடைய விருப்பங்களை ஒரு சரித்திரப் பிரசித்தி பெற்றவர் தம்முடைய செய்கைகளால் பிரதிபலிக்கிறார் என்று சொல்லுவதோ பொய்யானவையாகும்.

சரித்திரத்தில் இருந்து பெறக்கூடிய முடிவுகளை தூள் தூளாகத் தகர்த்து எறிவதற்கு, ஒரு பெரிய முயற்சி அவசியமே இல்லை. ஏதாவது ஒரு பகுதியை, சிறியதையோ பெரியதையோ, எடுத்து ஆராய்ச்சி செய்ய வேண்டும். ஆராய்ச்சிக்காரருக்கு அம்மாதிரி செய்ய உரிமையுண்டு. ஏனெனில், சரித்திரம் சொல்லுகிற எந்தப் பகுதியும் அம்மாதிரி பிரிந்து எடுக்கப்பட்டதுதான்.

மிகச் சிறிய பகுதியை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். (அது மனிதர்களின் தனிப்பட்ட போக்குகளைக் காட்டும் வேறு விதமான சரித்திரமாய் இருக்கும்) அதன் பின்னால் அவற்றை கூட்டிச் சேர்க்கும் வித்தையைச் செய்ய வேண்டும். (அதாவது, இந்த மிகச் சிறிய பகுதிகளின் ஒட்டு மொத்தத்தை கண்டுபிடிக்க வேண்டும்) அப்புறம்தான் சரித்திரத்தின் விதிகளைக் கண்டுபிடிக்கலாம் என்று நாம் நம்ப முடியும்.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் முதல் பதினைந்து வருஷங்களில் ஐரோப்பாவில் கோடிக்கணக்கான மக்களின் நடமாட்டங்கள் காணப்பட்டன. வழக்கமான தொழில்களை விட்டுவிட்டு அவர்கள் ஐரோப்பாவின் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு போவார்கள்; ஒருவரை ஒருவர் கொள்ளையடிப்பார்கள், கொலை செய்வார்கள்; வெற்றி பெறுவார்கள்; அதைரியத்தில் மூழ்குவார்கள்; சில வருஷங்களுக்குள் வாழ்க்கையின் போக்கு முழுவதுமே மாறி, ஒரு கடுமையான கிளர்ச்சியைத் தோற்றுவித்தது; அந்தக் கிளர்ச்சி முதலில் வேகமாய் இருந்தது; பின்னால் அயர்ந்து போயிற்று. 'இந்தக் கிளர்ச்சிக்குக் காரணம் என்ன? எந்த விதிகள் இதை ஆண்டு வந்தன?' என்று மனித உள்ளம் கேட்கிறது.

சரித்திர ஆசிரியர்கள் இந்தக் கேள்விக்கு பதில் சொல்லு கிறார்கள்: பாரிஸ் நகரத்தில் ஒரு கட்டிடத்தில் ஒரு டஜன் பேர்கள்

சொல்லியவைகளையும், செய்தவைகளையும் நமக்குக் காட்டி, அந்த சொல்லியவைகளையும் செய்தவைகளையும் 'புரட்சி' என்று கூறுகிறார்கள்; பின்னால் அவர்கள் நெப்போலியனைப் பற்றியும், அவருக்கு சாதகமாகவும் பாதகமாகவும் இருந்த நபர்களைப் பற்றியும், விரிவான வாழ்க்கைச் சரித்திரங்களை நமக்குக் கொடுக்கிறார்கள்; அவர்களில் பலருக்கு மற்றவர்கள் மீதிருந்த செல்வாக்கைப்பற்றி நமக்குக் கூறுகிறார்கள்; கடைசியாக 'இவற்றால்தான் அந்தக் கிளர்ச்சி தோன்றியது' என்றும், 'இவைதான் அதன் விதிகள்' என்றும் சொல்லுகிறார்கள்.

ஆனால் மனித உள்ளம் இந்த வியாக்யானத்தை நம்ப மறுக்கிறது. அது மட்டுமல்ல, இம்மாதிரியான வியாக்யான தவறானது என்றும் சொல்லுகிறது. ஏனெனில், ஒரு பலமான அற்புதத்தை ஒரு பலவீனமான அற்புதம் தோற்றுவிப்பதாக அந்த வியாக்யானம் கூறுகிறது. மனித விருப்பங்களின் ஒட்டு மொத்தம்தான் புட்சியையும் நெப்போலியனையும் தோற்றுவித்தது. அந்த ஒட்டு மொத்தம்தான் முதலில் அவைகளை சகித்துக் கொண்டிருந்தது. அதுதான் அவைகளை அழிக்கவும் செய்தது.

'வெற்றி கிடைக்கும் ஒவ்வொரு தடவையிலும் வெற்றி வீரர்கள் இருந்திருக்கிறார்கள்; எந்த நாட்டிலும் புரட்சி ஏற்படும் ஒவ்வொரு தடவையிலும் பெரிய மனிதர்கள் இருந்திருக்கிறார்கள்' என்று சரித்திரம் சொல்லுகிறது. 'வெற்றிவீரர்கள் தோன்றும் ஒவ்வொரு தடவையிலும் அங்கே யுத்தங்கள் தோன்றுகின்றன என்பது உண்மையே; ஆனால், அந்த வெற்றி வீரர்கள் அந்த யுத்தங்களுக்கு காரணமாய் இருந்தார்கள் என்பதை இது நிரூபிக்கவில்லை; அதைப் போலவே, தனிப்பட்ட ஒருவரின் சொந்த நடவடிக்கைகளில் யுத்தம் ஏற்படுவதற்கான விதிகளைக் கண்டுபிடிப்பதும் அசாத்தியம்' என்று மனித அறிவு சொல்லுகிறது. என்னுடைய கெடிகாரத்தில் பத்து மணி ஆகும்போது, பக்கத்தில் உள்ள மாதா கோயிலின் மணிகளைக் கேட்கிறேன். ஆனால், கெடிகாரத்தில் பத்து மணி ஆகிறபடியால் தான் அங்கே மணிகள் அடிக்கின்றன என்று நான் நினைத்துக் கொள்ளவோ, அந்த கெடிகாரத்தில் உள்ள கைகள்தான் அந்த மணிகளின் அசைவுக்குக் காரணம் என்று நினைத்துக் கொள்ளவோ, எனக்கு உரிமை கிடையாது.

நான் ஒரு ரயில்வே எஞ்ஜினைப் பார்க்கும்போது, அதனுடைய ஊதல் சப்தம் கேட்டதும், அதனுடைய வால்வுகள் திறந்து சக்கரங்கள் சுற்றுவதைப் பார்க்கிறேன். ஆனால் அந்த ஊதல் சப்தமும் சக்கரங்கள் சுற்றுவதும்தான், அந்த எஞ்ஜின் போவதற்குக் காரணமாம் என்று முடிவு செய்ய எனக்கு உரிமை கிடையாது.

இலை துளிர் காலத்தின் பிற்பகுதியில் ஓக் மரங்கள் துளிர் விடுவதால்தான், குளிர்ந்த காற்று அடிக்கிறது என்று விவசாயிகள் சொல்லுகிறார்கள். ஆனால், ஒவ்வொரு இலை துளிர் காலத்திலும் ஓக்மரம் துளிர் விடும்போது குளிர்ந்த காற்று வீசிக்கொண்டுதான் இருக்கிறது. ஆனால் ஓக் மரம் துளிர் விடும்போது எதனால் குளிர்ந்த காற்று அடிக்கிறது என்பது எனக்குத் தெரியாது. என்றாலும், அந்த ஓக் மரம் துளிர் விடுவதனால்தான், குளிர்ந்த காற்று அடிக்கிறது என்று விவசாயிகள் கூறுவதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. ஏனெனில், அந்தத் துளிர்களால் அந்தக் காற்றை வீசும் படிச் செய்ய முடியாது. சந்தர்ப்பங்கள் ஒன்று கூடுவதையே அந்த விஷயத்தில் நாம் காணலாம். வாழ்க்கையின் எல்லா அற்புத சம்பவங்களிலும் அம்மாதிரியே சந்தர்ப்பங்கள் ஒன்று கூடுவதை நான் பார்க்கிறேன். எவ்வளவு ஜாக்கிரதையாக கெடிகாரத்தின் கைகளை நான் பார்த்தபோதிலும், ஓக் மரத்தைப் பார்த்த போதிலும். அந்த மணிகள் அடிப்பதின் காரணத்தையோ, எஞ்ஜின் நகர்வதின் காரணத்தையோ, இலை துளிர் காலத்தில் காற்று அடிப்பதின் காரணத்தையோ என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. அதைக் கண்டுபிடிக்க வேண்டுமானால், மணி அடிபடுவதின் விதிகளையும், காற்று அடிப்பதன் விதிகளையும், நீராவியின் வேலைகளைப்பற்றிய விதிகளையும் நான் கற்றுக் கொள்ள வேண்டும். சரித்திரமும் அம்மாதிரியே செய்ய வேண்டும். அம்மாதிரி வழியில் வேலை செய்வதற்கான முயற்சிகள் ஏற்கெனவே ஆரம்பமாகி விட்டன.

சரித்திரத்தின் விதிகளை நாம் கற்றுக் கொள்ள வேண்டுமானால், நாம் கவனிக்க வேண்டிய விஷயங்களை முற்றிலும் மாற்ற வேண்டும். அதாவது, மன்னவர்களையும் மந்திரிகளையும் ஜெனரல்களையும் நாம் விட்டுவிட வேண்டும். மக்களை உந்தித் தள்ளக்கூடிய பொதுவான மிகச் சிறிய பகுதிகளைக் கவனிக்க வேண்டும். இம்மாதிரி வழியில் சரித்திரத்தின் விதிகளை அறிந்து கொள்ளுவதற்கு மனிதன் எவ்வளவு தூரம் முன்னேறுவது சாத்தியம் என்பதை ஒருவராலும் சொல்ல முடியாது. ஆனால், சரித்திரத்தின் விதிகளைக் கண்டுபிடிப்பதற்கு இந்த வழியில் போனார்தான் சாத்தியமாகும் என்பது தெளிவான விஷயம். என்றாலும், மன்னர்களுடையவும், கமாண்டர்களுடையவும், மந்திரிகளுடை யவும் நடவடிக்கைகளை விஸ்தரித்து, அந்த செய்கைகளிலிருந்து தங்களுக்கு ஏற்படும் அபிப்பிராயங்களை சரித்திர ஆசிரியர்கள் சொல்லுகிறார்கள். அந்த முயற்சியில், பத்து லட்சத்தில் ஒரு பங்கு கூட, நாம் மேலே சொல்லிய வழியில், தங்கள் மனோ முயற்சியை சரித்திர ஆசிரியர்கள் செலவிடவில்லை.

11

2

ஒரு டஜன் ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த துருப்புகள் ருஷ்யாவுக்குள் பாய்ந்து புகுந்தன. ருஷ்ய ராணுவமும் மக்களும் ஸ்மாலென்ஸ்க் வரையிலும், பின்னால் ஸ்மாலென்ஸ்கிலிருந்து பாராடினோ வரையிலும் பிரஞ்சுக்காரர்களுடன் மோதாமல் தடுத்து வந்தார்கள். பிரஞ்சு ராணுவம் தன்னுடைய லட்சியத்தை நோக்கி முன்னேறியது. அதனுடைய லட்சியம் நெருங்க நெருங்க அதன் வேகமும் அதிகரித்தது. கீழே விழும் ஒரு உடம்பு தரையை நெருங்க நெருங்க எப்படி வேகத்தில் அதிகரிக்குமோ, அதே மாதிரி அந்த வேகம் இருந்தது. அந்த ராணுவத்திற்குப் பின்னால் பசியால் வாடும் விரோதப் பிரதேசங்கள் சுமார் ஆயிரம் வெர்ஸ்டுகள் இருந்தன. ராணுவத்திற்கு முன்னால் அதற்கும் அதன் லட்சியத்திற்கும் இடையே சுமார் சில டஜன் வெர்ஸ்டுகள் தூரமே இருக்கும். நெப்போலியனுடைய ராணுவத்திலுள்ள ஒவ்வொரு சிப்பாயும் இதை அறிவான். ஆகவே, அந்த படையெடுப்பு தன்னுடைய சொந்த உந்தித் தள்ளும் வேகத்தில் போய்க் கொண்டிருந்தது.

எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக ருஷ்ய ராணுவம் பின்வாங்கியதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாக, எதிரியின் மீதுள்ள வெறுப்பு மூர்க்கம் கொண்டு பொங்கி எழுந்தது. அந்த ராணுவம் பின்வாங்கிக் கொண்டிருந்தபோது, அதன் எண்ணிக்கை அதிகரித்து, அதன் சக்தியும் பலப்படுத்தப்பட்டது. பாராடினோவில் ஒரு மோதல் ஏற்பட்டது. இரண்டு ராணுவங்களில் எதுவுமே சிதைந்து போகவில்லை. ஆனால், அந்த மோதுதலுக்குப் பின்பு, ருஷ்ய ராணுவம் உடனே பின்வாங்கியது. ஒரு பந்தானது, தன்னை விட அதிக வேகமாய் வருவதோடு மோதினால், அது பின்னால்வந்து சேரும். அதே மாதிரி, ருஷ்ய ராணுவம் அந்த மோதுதலுக்குப் பின்னால் பின்வாங்க ஆரம்பித்தது. அஃதைப் போலவே, படையெடுத்து வரும் அந்த பந்தானது, தவிர்க்க முடியாதபடி உந்தித் தள்ளும் வேகத்தோடு வந்து கொண்டிருந்தபடியால், இன்னும் சிறிது தூரம் முன்னால் போயிற்று. ஆனால், அந்த மோதுதலானது அதனுடைய வேகத்தைக் குறைத்துவிட்டது.

மாஸ்கோவிற்கு அப்புறம் எண்பது மைல் தூரத்திற்கு ருஷ்யர்கள் பின்வாங்கினார்கள். பிரஞ்சுக்காரர்கள் மாஸ்கோவை அடைந்ததும், அங்கேயே நிற்கவேண்டியதாயிற்று. அதன் பின்னால், ஐந்து வாரங்களுக்கு ஒரு போர் கூட நடைபெறவில்லை. மரண

காயமடைந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருக்கும் ஒரு மிருகம், தன்னுடைய காயங்களை நக்கிக் கொண்டிருக்கும். அதே மாதிரி, பிரஞ்சுக் காரர்கள் ஐந்து வாரங்கள் ஒன்றுமே செய்யாமல், மாஸ்கோவில் தங்கி இருந்தார்கள். அதன் பின்பு, திடீரென்று எவ்வித புதிய காரணமும் இல்லாமல் திரும்பி ஓடினார்கள். காலுகா ரஸ்தாவை நோக்கி அவர்கள் பறந்தார்கள். அங்கே மாலா - யாராஸ்லாவெட்ஸ் என்ற இடத்தில் ஒரு சிறிய போரில் அவர்கள் வெற்றி பெற்றார்கள். அப்படி இருந்தும் பெரிய போர் எதையும் செய்யாமல் இன்னும் வேகமாக ஸ்மாலென்ஸ்கிற்கு ஓடினார்கள். அங்கிருந்து பெரியோ ஜினாவிற்கும், அங்கிருந்து வில்னாவிற்கும், அங்கிருந்து அதற்கு மேலும் ஓடினார்கள்.

ஆகஸ்டு 26-ந் தேதியன்று மாலையில் குட்டுஜோவும், அந்த ருஷ்ய ராணுவம் முழுவதும் பாராடினோவில் தங்களுக்கு வெற்றி கிடைத்ததாகவே நம்பினார்கள். அம்மாதிரியே சக்கரவர்த்திக்கு குட்டுஜோவ் அறிக்கை அனுப்பினார். புதிதாக ஒரு தாக்குதலை நடத்தி எதிரிகளைத் தொலைத்துவிடுவதற்குத் தயாராகும்படி அவர் உத்தரவிட்டார். யாரையும் ஏமாற்றுவதற்காக அவர் இம்மாதிரி செய்யவில்லை; எதிரி முறியடிக்கப்பட்டான் என்று அவரும், அந்த போரில் கலந்து கொண்ட ஒவ்வொருவரும் நம்பியபடியால் தான் அம்மாதிரி உத்தரவிட்டார்.

ஆனால், அன்று மாலை பூராவும் மறுநாளும் ஒன்றன்பின் ஒன்றாக அறிக்கைகள் வந்துகொண்டே இருந்தன. இதற்கு முன் கேள்விப்படாத விதத்தில் நஷ்டங்கள் ஏற்பட்டுவிட்டன என்றும், ருஷ்ய ராணுவத்தில் சரிபாதி அழிந்துவிட்டது என்றும், அவை யெல்லாம் கூறின. ஆகவே, புதிதாய் ஒரு போர் ஆரம்பிப்பது என்பது அசாத்தியம் என்று ஸ்தாபிதமாயிற்று.

முழுத் தகவல்களும் வந்து சேரும் முன்பு, காயம்பட்டவர்களை யெல்லாம் கொண்டு வந்து சேர்க்கும் முன்பு, வெடி வருந்து சப்ளைகளை சரியாக சேகரித்துக்கொள்ளும் முன்பு, மாண்டு போனவர்களை கணக்கு எடுக்கும் முன்பு, கொல்லப்பட்டவர் களுக்குப் பதிலாக புதிய அதிகாரிகளை நியமிக்கும் முன்பு, சிப்பாய்கள் எல்லாரும் உண்டு உறங்குவதற்கு முன்பு, யுத்தம் ஆரம்பிப்பது என்பது அசாத்தியமான காரியம். ஆனால், அந்தப் போர் நடந்த தினத்திற்கு மறுநாள் காலையில் பிரஞ்சு ராணுவம் முன்னேற ஆரம்பித்தது. தன்னுடைய லட்சியத்தை அடையவதற்கு இடையில் உள்ள தூரத்தைக் கடக்க வேண்டும் என்ற வேகத்தோடு அது முன்னேறியது. மறுநாள் தாக்கவேண்டும் என்று குட்டுஜோவ்

விரும்பினார். அந்த முழு ராணுவமும் அதே மாதிரியே விரும்பியது. ஆனால், ஒரு தாக்குதலை நடத்துவதற்கு விருப்பம் மட்டும் இருந்தால் போதுமானதல்ல. அம்மாதிரி செய்வதற்கு ஒரு சாத்தியமும் இருக்க வேண்டும். அந்த சாத்தியம் அப்பொழுது அங்கு இல்லை. ஒருநாள்கூட பின்வாங்காமல் இருப்பது சாத்தியமானதாய் இல்லை. அதே மாதிரி மறுநாளும் மூன்றாம் நாளும் பின்வாங்காமல் இருப்பது சாத்தியமில்லாமல் இருந்தது. செப்டம்பர் முதல் தேதியன்று மாஸ்கோவிற்கு சமீபமாக ருஷ்ய ராணுவம் வந்து சேர்ந்தது. அப்பொழுதுகூட போரிடவேண்டும் என்ற எண்ணம் ராணுவம் முழுவதும் பலமாய் இருந்தபோதிலும், சூழ்நிலைகளின் அவசியத்தால் மாஸ்கோவுக்கு அப்புறமும் பின்வாங்க நேரிட்டது. அந்தத் துருப்புகள் கடைசியாக மேலும் ஒரு நாள் பின்வாங்கி மாஸ்கோவை எதிரிகளிடம் விட்டுவிட்டன.

படையெடுப்புத் திட்டங்களையும், போர்த்திட்டங்களையும் ஜெனரல்களே தயாரிப்பதாக சிலர் நினைப்பது வழக்கம். ஒரு தேசப்படத்தின் முன்பாக உட்கார்ந்துகொண்டு இந்த யுத்தத்திலோ, அந்த யுத்தத்திலோ தாம் எப்படிச் செய்வார் என்பதை யார் வேண்டுமானாலும் மனோராஜ்யம் செய்துகொண்டிருக்கலாம். அம்மாதிரி பேர்வழிகள் சில கேள்விகளைக் கேட்கலாம். அவையாவன: பின்வாங்கி வரும்போது குட்டுஜோவ் இதையோ, அதையோ ஏன் செய்யவில்லை? பில்லை என்ற இடத்திற்கு அவர் வரும் முன்பு, அவர் ஏன் ஒரு இடத்தில் நின்று அணிவகுத்து இருக்கக்கூடாது? மாஸ்கோவைக் கைவிட்டுவிட்டு காலூகா ரஸ்தா வழியாக அவர் ஏன் பின்வாங்கி இருக்கக்கூடாது? இதுமாதிரி பல கேட்கலாம். இந்த விதமான வழிகளில் நினைக்கிறவர்கள் ஒரு விஷயத்தை மறந்துவிடுகிறார்கள்; அல்லது அறியாமல் இருக்கிறார்கள். அதாவது, தவிர்க்க முடியாத நிலைமைகள் எப்பொழுதுமே சேனாதிபதியின் நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்திவிடுகின்றன. நாம் சௌக்கியமாக ஒரு அறையில் உட்கார்ந்துகொண்டு, சில போர் நடவடிக்கைகளை, தேசப் படங்களைக் கவனித்து ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கலாம்; இப்பக்கமும் அப்பக்கமும் துருப்புகள் இருப்பதாகக் கணக்குப் போட்டுக்கொண்டு ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அம்மாதிரி நடக்க வேண்டும் என்று ஆராய்ச்சி செய்யலாம்; ஆனால், ஒரு சேனாதிபதியின் நடவடிக்கைகளை இம்மாதிரியெல்லாம் செய்ய முடியாது. நாம் ஆராய்ச்சி செய்யும்போது ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து யுத்தம் ஆரம்பிப்பதாக வைத்துக்கொண்டு செய்வோம். அம்மாதிரி ஒரு சேனாதிபதி நடக்க முடியாது. பற்பல

விதமாக மாறிக்கொண்டிருக்கும் சம்பவங்களுக்கு இடையே, சேனாதிபதி எப்பொழுதுமே அமர்ந்து வேலை செய்ய வேண்டி இருக்கிறது. ஆகவே, நடந்து கொண்டிருக்கும் ஒரு சம்பவத்தின் முழு தாத்பரியத்தையும் எந்த நேரத்திலும் அவரால் சிந்திக்க முடியாது. ஒவ்வொரு வினாடியிலும் அந்த சம்பவம் கண்ணுக்குப் புலப்படாமல் உருவாகிக்கொண்டிருக்கிறது. இடைவிடாமல் ஒவ்வொரு வினாடியும் தொடர்ச்சியாக உருவாகிக் கொண்டிருக்கும் இந்த சம்பவங்களுக்கு இடையில் சேனாதிபதி இருக்கிறார். இச்சமயத்தில் அவரைச்சுற்றி சூழ்ச்சிகளும், தொல்லைகளும், அவசர வேலைகளும், அதிகாரங்களும், திட்டங்களும், பயமுறுத்தல்களும், ஏமாற்றுதல்களும் நடந்து கொண்டிருக்கின்றன. இவற்றோடு ஒன்றுக்கொன்று விரோதமான, எண்ணிக்கையற்ற கேள்விகளுக்கு அவர் பதில் சொல்லியாகவேண்டி இருக்கிறது.

பில்லைக்கு வருவதற்கு முன்பாக காலுகா ரஸ்தா வழியாக தமது ராணுவத்தை குட்டுஜோவ் கொண்டுபோய் இருக்க வேண்டுமென்று ராணுவ சாஸ்திர நிபுணர்கள் மிகுந்த அக்கறையோடு சொல்லுகிறார்கள். யாரோ ஒருவர் அம்மாதிரி யோசனையை குட்டுஜோவிடம் சொல்லியதாகவும் அவர்கள் கூறுகிறார்கள். ஒரு கஷ்டமான சமயத்தில், ஒன்றல்ல, டஜன் கணக்கான யோசனைகளை சேனாதிபதி பெறுவது வழக்கம். ஆனால், இந்த யோசனைகளெல்லாம் கேந்திரங்களையும், ராணுவ தந்திரங்களையும் அடிப்படையாகக் கொண்டு, ஒன்றுக்கொன்று விரோதமாகவே இருக்கும்.

தமக்கு வந்துள்ள யோசனைகளில் எதையாவது ஒன்றைப் பொறுக்கி எடுக்கவேண்டியதுதான் சேனாதிபதியின் வேலை என்று நினைக்கலாம். ஆனால், அதையும் கூட அவரால் செய்ய முடியாது. சம்பவங்களும் காலமும் காத்துநிற்பதில்லை. உதாரணமாக, காலூகா ரஸ்தாவுக்குக் கடந்து போகும்படி 28-ந் தேதியன்று அவருக்கு யோசனை கூறப்பட்டது. ஆனால், அச்சமயத்தில் மிலாராடாவிச்சிடமிருந்து ஒரு உதவியாளர் சேனாதிபதியிடம் வந்தார். தாம் பிரஞ்சுக்காரர்களுடன் போர் புரிவதா, அல்லது பின்வாங்குவதா என்பதைப்பற்றி அவர்கேட்டிருந்தார். அந்த வினாடியே அதற்கு உத்தரவு கொடுத்து ஆகவேண்டும். பின்வாங்கும்படி உத்தரவு கொடுத்தால், காலூகா ராஸ்தாவிற்குப் பிரியும் இடத்திற்கு மேலாக போகவேண்டியதாய் இருக்கும். அந்த உதவியாளருக்குப் பின்னால் உணவுப் பொருள்களை எந்த

இடத்திற்குக் கொண்டு போகவேண்டும் என்று உத்தரவு கேட்பதற்காக சப்ளை இலாகா தலைவர் வருகிறார்; காயம் அடைந்தவர்களை எங்கே கொண்டு போகவேண்டும் என்று கேட்பதற்காக ஆஸ்பத்திரிகளின் தலைவர் வருகிறார்; அதன் பின்னால், பீட்டர்ஸ்பர்க்கிலிருக்கும் சக்கரவர்த்தியிடமிருந்து ஒரு தூதர் வருகிறார்; மாஸ்கோவைக் கைவிடக் கூடாது என்று சக்கரவர்த்தி சொல்லி அனுப்புகிறார்; சேனாதிபதிக்குக் குழி பறித்துக் கொண்டிருக்கும் (எப்பொழுதுமே அம்மாதிரி செய்கிறவர்கள் ஒருவர் அல்ல, பலர் இருப்பார்கள்) போட்டியாள் ஒருவர் காலூகா ரஸ்தாவிற்குத் திரும்பக்கூடாது என்று சொல்லும் ஒரு திட்டத்தைக் கொடுக்கிறார். இவ்வளவுக்கும் மேலாக தம்முடைய பலத்தைக் காப்பாற்றுவதற்காகச் சேனாதிபதிக்கு உணவும், உறக்கமும் தேவையாய் இருக்கின்றன. இவற்றோடு, யுத்தப்பரிசுகள் கொடுப்பதில் தாம் விட்டுவிட்டுப் போய்விட்டதாக ஒரு கௌரவமான ஜெனரல் வந்து குறை கூறுகிறார்; அந்த ஜில்லாவின் பிரஜைகள் வந்து தங்களைப் பாதுகாக்க வேண்டும் என்று கேட்கிறார்கள்; அந்தப் பிரதேசத்தைச் சுற்றிப்பார்த்து அறிக்கை அனுப்பும்படி அனுப்பப்பட்ட ஒருவர் அங்கே வருகிறார். அவர் முந்தை அதிகாரியின் அறிக்கைக்கு நேர்விரோதமாக அறிக்கை கொடுக்கிறார்; எதிரியின் நிலைமையை அறிந்து வருவதற்காக அனுப்பப்பட்ட ஒரு ஒற்றனும், ஒரு கைதியும், ஒரு ஜெனரலும் அங்கே திரும்பி வருகிறார்கள்; அவர்கள் ஒவ்வொருவரும் எதிரியின் நிலைமையைப்பற்றி வெவ்வேறு வழியாகச் சொல்லுகிறார்கள். தவறாக நினைத்துக்கொள்ளுவதில் பழகிப் போனவர்களும், அல்லது ஒரு சேனாதிபதியின் காரியங்களில் மேற்கண்ட விதமான நிலைமைகளை அறியதாவர்களும் நமக்கு வருணிக்க ஆரம்பிக்கிறார்கள். அதாவது, பில்லையில் ராணுவம் இருப்பதைச் சுட்டிக்காட்டி, மாஸ்கோவை விட்டுவிடுவதா, அல்லது காப்பாற்றுவதா என்பதைப்பற்றி சேனாதிபதி செப்டம்பர் 1-ந் தேதியன்று தீர்மானம் செய்யமுடியும் என்று கூறுகிறார்கள். ஆனால், ருஷ்ய துருப்புகள் மாஸ்கோவுக்கு நான்கு மைலுக்கு குறைவாகவே இருந்தபடியால், அம்மாதிரி தீர்மானிப்பதற்கு இடமே இல்லை. அந்தப் பிரச்னை எப்பொழுது முடிவாயிற்று? டிரிசாவிலும், ஸ்மாலென்ஸ்கிலும் அது முடிவாயிற்று. முக்கியமாக, ஆகஸ்டு 24-ந் தேதியன்று ஷெவார்டினாவிலும், ஆகஸ்டு 26-ந் தேதியன்று பாராடினோவிலும், பாராடினோவிலிருந்து பில்லைக்குப் பின்வாங்கிக் கொண்டிருந்த ஒவ்வொரு நிமிஷத்திலும் அது தீர்மானிக்கப்பட்டது.



நிலைமையைப் பரிசீலனை செய்து வரும்படி எர்மோலாவை குட்டுஜோவ் அனுப்பினார். அவர் திரும்பி வந்து, மாஸ்கோ, முன்பு போர் செய்வது அசாத்தியம் என்றும், அவர்கள் பின்வாங்க வேண்டும் என்றும் குட்டுஜோவிடம் சொன்னார். குட்டுஜோவ் அவரை மௌனமாகப் பார்த்தார்.

'உமது கையை என்னிடம் கொடு' என்று சொல்லி, அந்தக் கையைப்பற்றி, அதன் நாடியை சோதிப்பதுபோல கையைத் திருப்பினார். 'உமக்கு உடம்பு சௌக்கியமாய் இல்லை, எனது அன்பான பேர்வழியே. நீர் என்ன சொல்லுகிறீர் என்பதை யோசித்துப்பாரும் என்றார்.

போர் செய்யாமல் மாஸ்கோவிற்கு அப்புறமும் பின்வாங்க வேண்டிய அவசியம் ஏற்படும் என்பதை குட்டுஜோவ் இன்னமும் ஒப்புக்கொள்ளவில்லை.

மாஸ்கோவின் ஒரு வாசலான டார்காமைலாவ் என்ற வாசலில் இருந்து நான்கு மைல் தூரத்தில் பார்க்லோனி ஹில் என்ற இடம் இருக்கிறது. அந்த இடத்தில் குட்டுஜோவ் தமது வண்டியிலிருந்து இறங்கினார். அந்த ரஸ்தாவின் ஓரத்திலே ஒரு பெஞ்சு மீது அமர்ந்தார். ஜெனரல்களும், மாஸ்கோவிலிருந்து வந்த கோமகன் ராஸ்டாப்சைனும் அடங்கிய ஒரு பெரிய கூட்டம், அவரைச் சூழ்ந்து நின்றது. இந்தப் புத்திசாலிகளான கூட்டத்தில் பல கோஷ்டிகள் இருந்தன. அவர்கள் எல்லோருமே சாதக பாதகங்களைப்பற்றியும், ராணுவத்தின் நிலைமைகளைப் பற்றியும், சமர்ப்பிக்கப்பட்ட திட்டங்களைப் பற்றியும், பொதுவாக ராணுவ பிரச்னைகளைப் பற்றியும் விவாதித்துக்கொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்தை யுத்தக் கவுன்சில் என்று அழைக்காவிட்டாலும், அது உண்மையில் யுத்தக் கவுன்சில்தான் என்று அங்கிருந்த எல்லாரும் நினைத்தார்கள். அங்கு பேசிய பேச்சுக்களெல்லாம் பொது விவகாரங்களைப் பற்றியதாகவே இருந்தன. சொந்த விஷயங்களைப்பற்றி யாராவது கேட்டாலும், பதில் சொன்னாலும், அவற்றை மெதுவான குரலில் பேசி வந்தார்கள். அதைப் பேசி முடிந்ததும், மீண்டும் பொதுவான விவகாரங்களைப் பற்றியே பேசி வந்தார்கள். தமாஷோ, சிரிப்போ, அல்லது புன்சிரிப்போ, அங்கிருந்தவர்களிடம் காணப்படவில்லை. அப்பொழுது உள்ள நிலைமைக்குத் தக்கபடி அவர்களும் உயர்ந்தபடியில் நிற்கவேண்டும் என்று முயற்சி செய்து

கொண்டிருந்ததாகத் தோன்றியது. இந்த கோஷ்டிகள் எல்லாம் தங்களுக்குள் பேசிக்கொண்டிருக்கும்போது, சேனாதிபதிக்குப் பக்கத்தில் நிற்க முயற்சி செய்தன. (அவருடைய பேச்சுதான் அந்தக் கூட்டத்தின் மையமாக விளங்கியது). அவர்கள் பேசுவதை அவர் கேட்க வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கம், அங்கே பேசப்பட்டவைகளை எல்லாம் சேனாதிபதி கவனித்துக்கேட்டார். சில சமயங்களில் அவர்கள் சொல்லியதைத் திரும்பிச் சொல்லும் படியும் அவர் கேட்டார். ஆனால், அந்த உரையாடல்களில் தாம் கலந்து கொள்ளவில்லை. தம்முடைய கருத்தையும் அவர் வெளிப்படுத்த வில்லை. யாராவது ஒருவர் பேசியதை அவர் கேட்ட பின்பு, தாம் எதைக் கேட்க வேண்டுமென்று விரும்பினாரோ, அதை அவர்கள் பேசவில்லை என்று அதிருப்தி கொண்டதைப்போல, அவருடைய முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக்கொள்ளுவார். தேர்ந்து எடுக்கப்பட்ட சில போர்க்களங்களைப் பற்றி சிலர் விவாதித்துக் கொண்டிருந் தார்கள். அவர்கள் அந்த இடங்களின் அமைப்புகளைப்பற்றி குணதோஷம் கூறாமல், அவற்றை யார் தேர்ந்து எடுத்தார்களோ, அவர்களின் சாமர்த்தியங்களைப்பற்றிக் குணதோஷம் கூறிக்கொண்டிருந்தார்கள். இரண்டு தினங்களுக்கு முன்பாகவே ஒரு போரை நடத்தி இருக்கவேண்டும் என்றும், அப்படிச் செய்யாததால் ஒரு தவறு நேர்ந்துவிட்டது என்றும் சிலர் வாதம் செய்துகொண்டிருந்தார்கள். கிராசார்ட் என்ற புதிதாய் வந்த பிரஞ்சுக்காரர் ஸ்பானிய சீருடை அணிந்து கொண்டிருந்தார்; சாலமங்கா என்ற இடத்தில் நடந்த யுத்தத்தைப்பற்றி அவர் சொல்லிய விவரங்களை வேறு சிலர் பேசிக்கொண்டிருந்தார்கள். (இந்த பிரஞ்சுக்காரரும், ருஷ்ய ராணுவத்தைச் சேர்ந்த ஒரு ஜெர்மன் இளவரசரும், சாரகோசா முற்றுகையைப்பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அதே மாதிரி மாஸ்கோவையும் ஏன் பாதுகாக்க முடியாது என்று அவர்கள் சிந்தித்துக் கொண்டிருந்தார்கள்.) நான்காவது கோஷ்டியிடம் கோமகன் ராஸ்டாப்சைன் பேசிக்கொண்டிருந்தார். பாதுகாப்புப் படையோடு சேர்ந்து, மாஸ்கோவின் கோட்டைச் சுவர்களுக்கு முன்பாக தம்முடைய உயிரைக் கொடுப்பதற்குத் தயாராய் இருப்பதாக அவர் சொன்னார். ஆனால், அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறிய முடியாமல் தாம் தவிப்பதாகவும், நடக்கிற விஷயங்களைத் தாம் சீக்கிரமாக அறிந்து கொண்டால், நிலைமை வேறுவிதமாய் இருக்கும் என்றும் அவர் சொன்னார்... தங்களுடைய யுத்த தந்திர சாமர்த்தியங்களை வெளியே காட்டிக் கொண்டு ஐந்தாவது கோஷ்டி, துருப்புகள் இப்பொழுது எம்மாதிரி நடக்கவேண்டும் என்பதைக்

கூறிக்கொண்டிருந்தார்கள். ஆறாவது கோஷ்டி முற்றிலும் அசட்டுப் பேச்சுக்களையே பேசிக்கொண்டிருந்தார்கள். குட்டுஜோவின் தோற்றம் வரவர சிந்தனையில் ஆழ்ந்தும் இருண்டும் காணப் பட்டது. இந்த எல்லாப் பேச்சுகளிலிருந்தும் அவர் ஒரு விஷயத்தைக் கண்டார்: மாஸ்கோவைப் பாதுகாப்பது என்பது காரியத்தில் நடக்க முடியாத விஷயம்; இந்த வார்த்தைகளின் முழு அர்த்தத்தையும் அவர் உணர்ந்தார்; அதாவது, புத்தியற்ற கமாண்டர் யாராவது ஒருவர் அம்மாதிரி உத்தரவிடுவாரானால், அதனால் குழப்பம் ஏற்படுமே ஒழிய போர் நடக்காது. ஏனெனில், அம்மாதிரி போர் செய்வது அசாத்தியம் என்பதை எல்லாக் கமாண்டர்களும் உணர்ந்து இருந்தார்கள். அதோடு, அவர்கள் பேசிய பேச்சுக்களெல்லாம், மாஸ்கோவைக் கைவிட்ட பின்பு என்ன நடக்கும் என்பதைப் பற்றியதாகவே இருந்தன. அசாத்தியம் என்று நினைக்கிற போருக்கு அந்தக் கமாண்டர்கள் தங்கள் துருப்புகளை எப்படி நடத்திக்கொண்டு போக முடியும்? கீழ்த்தர அதிகாரிகளும், சிப்பாய்களும்கூட அம்மாதிரி நடத்த முடியாது என்றும், ஆகவே, தோல்வி நிச்சயம் கிடைக்கும் என்று தெரிந்துகொண்டு போர் செய்யப்போக முடியாது என்றும் நினைத்தார்கள். பாதுகாப்பு செய்ய வேண்டியதுதான் என்று பெனிக்சன் வற்புறுத்தினாலும், அதைப்பற்றி மற்றவர்கள் இன்னமும் விவாதித்துக்கொண்டிருந் தாலும், அந்தப் பிரச்னையானது தற்சமயம் முக்கியமானதாய் இல்லை. அதன் பெயரால் வாதப்பிரதிவாதங்கள் செய்வதற்கும், சூழ்ச்சிகள் செய்வதற்குமே அது உபயோகமாக இருந்தது. இதை குட்டுஜோவ் நன்றாய் அறிவார்.

போர்க்களத்தை தேர்ந்தெடுத்த பெனிக்சன் தமது ருஷ்ய தேசாபிமானத்தை வேகமாய் காட்டினார். (கண்ணைச் சிமிட்டாமல் இதை கவனித்துக் கேட்க குட்டுஜோவால் முடியவில்லை). மாஸ்கோவை எப்படியாவது பாதுகாக்கவேண்டும் என்று பெனிக்சன் வற்புறுத்தினார். அவருடைய நோக்கம் பட்டப் பகலைப்போல குட்டுஜோவுக்கு விளங்கியது. அதாவது, பாதுகாப்பு ஏற்பாடுகள் தோல்வியுறுமானால் ஸ்பாரோ ஹில்ஸ் என்ற இடத்திலிருந்து போர் செய்யாமலேயே ராணுவத்தைக் கொண்டு வந்த குட்டுஜோவ் மீது அந்தப் பழி சேரும்; பாதுகாப்பு ஏற்பாடுகள் வெற்றி பெறுமானால் அதற்குண்டான கீர்த்தியை பெனிக்சன் பெற்றுக் கொள்ளலாம்; அல்லது போர் செய்யாமல் இருந்தாலும், மாஸ்கோவைக் கைவிட்ட பழியிலிருந்து பெனிக்சன் தப்பித்துக் கொள்ளலாம். ஆனால், அந்த முதியவரின் மனதில் இந்த சூழ்ச்சி இப்பொழுது இடம் பெறவில்லை. ஒரு பயங்கரமான

பிரச்னையில் தான் அவருடைய மனம் முழுவதும் கவர்ந்திருந்தது. அந்த பிரச்னைக்கு யாரிடமிருந்தும் எவ்விதமான பதிலும் அவருக்குக் கிடைக்கவில்லை. இப்பொழுது அவருக்கு ஏற்பட்டுள்ள கேள்வி இதுதான்: 'மாஸ்கோவிற்கு நெப்போலியன் வந்து சேரும்படி உண்மையிலேயே நான்தான் இடம் கொடுத்தேனா? எப்பொழுது நான் அதைச் செய்தேன்? எப்பொழுது அது தீர்மானிக்கப்பட்டது? பின்வாங்கும்படி பிலாட்டாவுக்கு நேற்று நான் உத்தரவு கொடுத்தபோதுதான் அது நடந்ததா? அல்லது, அதற்கு முந்தைய நாள் மாலையில் உத்தரவுகளைக் கொடுக்கும்படி பெனிக்சனுக்கு சொல்லிவிட்டு, நான் தூங்கப்போனபோது நடந்ததா? அல்லது, அதற்கும் முன்னால் நடந்ததா?... எப்பொழுது, எப்பொழுது இந்த பயங்கரமான விஷயம் தீர்மானிக்கப்பட்டது? மாஸ்கோ கைவிடப்படவேண்டும்; ராணுவம் பின்வாங்க வேண்டும்; அதற்கான உத்தரவுகளைக் கொடுத்தாக வேண்டும்.' அந்த பயங்கரமான உத்தரவைக் கொடுப்பதானது தமது சேனாதிபத்தியத்தை ராஜிநாமா செய்வதற்கு ஒப்பானது என்று அவருக்குத் தோன்றியது. அதிகாரத்தில் அவருக்கு ஆசையுண்டு. அதில் அவர் பழக்கப்பட்டுப் போனார். (இளவரசர் பிராஜாரோவ்ஸ்கியின் தலைமையில் அவர் துருக்கியில் சேவை செய்தார். அவருக்கு பட்டங்கள் கொடுத்தது குட்டுஜோவுக்கு கோபத்தை மூட்டியது). ஆனால், ருஷ்யாவைக் காப்பாற்றுவதற்கு தாம்விதிக்கப்பட்டிருப்பதாக அவர் நம்பினார். அதனால்தான் சக்வரர்த்தியின் விருப்பத்திற்கு எதிராக மக்களின் விருப்பத்தினால் அவர் சேனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த கஷ்டமான சந்தர்ப்பங்களில் அவர் ஒருவரால்தான் ராணுவத்தை நடத்த முடியும் என்று அவர் உண்மையாக நம்பினார். தோற்கடிக்கப்பட முடியாது என்று கருதப்பட்ட நெப்போலியனை அவர் ஒருவர்தான் பயமின்றி எதிர்க்க முடியும் என்று உறுதியாக நம்பினார். ஆகவே, தாம் இப்பொழுது பிறப்பிக்கவேண்டிய உத்தரவுகளைப்பற்றி நினைத்தபோது அவர் பீதி கொண்டார். ஆனால், ஏதாவது ஒன்றைத் தீர்மானித்தாக வேண்டும். தம்மைச் சுற்றி நடந்துகொண்டிருக்கும் அந்த உரையாடல்கள் கட்டுமீறிப் போவதை உடனே நிறுத்தி ஆகவேண்டும்.

மிகவும் முக்கியமான ஜெனரல்களை அவர் தம்மிடம் அழைத்தார்.

'என்னுடைய புத்தி நல்லதாய் இருந்தாலும், கெட்டதாய் இருந்தாலும் அதை நம்பித்தான் ஆகவேண்டும்' என்று அவர்

சொல்லிவிட்டு, அந்த பெஞ்சியிலிருந்து எழுந்தார். பின்னால் தமது வண்டிகள் காத்துக்கொண்டிருக்கும் பில்லை என்ற இடத்திற்கு சவாரி போனார்.

## 11 4

ஆண்ட்ரூ சாவாஸ்டியானாவின் முகாம் பெரிதாகவும், நன்றாகவும் இருந்தது. அந்த இடத்தில் மாலை 2 மணிக்கு யுத்தக் கவுன்சில் கூட ஆரம்பித்தது. ஆளோடிக்கு அப்புறமாக அந்த பெரிய விவசாயியின் குடும்பத்தைச் சேர்ந்த ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் கூடி நின்றார்கள். ஆண்ட்ரூவின் ஆறு வயதான பேத்தியின் பெயர் மாலாஷா. 'கலங்காத மேன்மை தங்கியவர்' அந்தக் குழந்தையைத் தட்டிக்கொடுத்து, தாம் தேநீர் சாப்பிட்டபோது கொஞ்சம் சர்க்கரையும் கொடுத்தார். அந்தப் பெரிய அறையில் ஒரு செங்கல் அடுப்பிற்கு மேலாக அந்தக் குழந்தை நின்றுகொண்டிருந்தாள். நாணம் கலந்த மகிழ்ச்சியோடு அங்கு வந்த ஜெனரல்களின் முகங்களையும், சீருடைகளையும், பதக்கங் களையும் மாலாஷா பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு மூலையில் தெய்வச் சிலைகளுக்குக் கீழாகப் போடப்பட்டிருந்த அகலமான பெஞ்சுகளில் ஒவ்வொருவராக வந்து ஜெனரல்கள் அமர்ந்தார்கள். மாலாஷா தன் மனதிற்குள் 'தாதா' என்று அழைத்துக் கொண்டிருக்கிற குட்டுஜோவ், அந்த அடுப்பிற்குப் பின்னால் ஒரு இருண்ட மூலையில் தனித்து அமர்ந்து இருந்தார். ஒரு சாய்வு நாற்காலியில் ஆழ்ந்து உட்கார்ந்து, அடிக்கடி தமது தொண்டையைக் கனைத்துக்கொண்டும், தமது பொத்தான் போடாத கோர்ட்டின் கழுத்துப்பட்டியை இழுத்துக்கொண்டும், தமது பிடரியைக் கிள்ளிக்கொண்டும் இருந்தார். உள்ளே வந்தவர்கள் ஒவ்வொருவராக சேனாதிபதியிடம் போனார்கள். அவர் சிலருடைய கைகளை அழுத்தினார். சிலருக்கு தலையை ஆட்டினார். குட்டுஜோவுக்கு எதிராக இருந்த ஜன்னலின் திரையை அவருடைய உதவியாளரான காய்சாராவ் அகற்றப்போனார். ஆனால், குட்டுஜோவ் கோபமாகத் தமது கையை அசைத்தார். தமது முகத்தை ஒருவரும் பார்ப்பதற்கு 'கலங்காத மேன்மை தங்கியவர்' பிரியப்படவில்லை என்பதை காய்சாராவ் அறிந்து கொண்டார்.

அந்த விவசாயியின் மேஜை மீது தேசப் படங்களும் திட்டங்களின் படங்களும் பென்சில்களும் காகிதங்களும் கிடந்தன.

அதைச்சுற்றி ஏராளமானவர்கள் கூடிவிட்டபடியால் அந்த மேஜைக்குப் பக்கத்தில் போடுவதற்காக மற்றொரு பெஞ்சை சேவகர்கள் கொண்டு வந்தார்கள். எர்மோலாவ், காய்சாராவ், டால், ஆகியவர்கள் அப்பொழுதுதான் வந்தபடியால், அந்த பெஞ்சில் அமர்ந்தார்கள். தெய்வச் சிலைகளுக்குக் கீழாக முன் வரிசையில் பார்க்ளே டி டாலி அமர்ந்திருந்தார். அவருடைய நெற்றி அவருடைய வழுக்கைத் தலையோடு கலந்திருந்தது. அவருடைய கழுத்தில் செயின்ட் ஜார்ஜ் பதக்கம் தொங்கிக்கொண்டிருந்தது. அவர் முகம் வெளிறி அசௌக்கியமாகக் காணப்பட்டார். இரண்டு தினங்களாக அவருக்கு ஜுரம் இருந்தது. இப்பொழுது வலியினால் அவர் உடம்பு நடுங்கிக்கொண்டிருந்தது. அவருக்குப் பக்கத்தில் உவராவ் இருந்தார். அவர் மற்றவர்களைப்போல மெதுவாகப் பேசி, வேகமாகக் கைகளை ஆட்டி, எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். குட்டையாக டாக்டுராவ் தமது கைகளை வயிற்றின் மீது மடக்கி வைத்துக்கொண்டு, புருவங்களை உயர்த்தி, கவனமாய் கேட்டு வந்தார். மற்றொரு, பக்கத்தில் கோமகன் ஆஸ்டர்மேன் - டால்ஸ்டாஸ்ய் சிந்தனையில் ஆழ்ந்து அமர்ந்திருந்தார். அவருடைய எடுப்பான தோற்றங்களையும், மின்னுகிற கண்களையும் கொண்ட தலையானது அவருடைய கை மீது சாய்ந்திருந்தது. கன்னப்பொட்டில் உள்ள கருப்புத் தலை முடியை முன்னோக்கிச் சுருட்டிவிடுவது ராயேவ்ஸ்கியின் வழக்கம். அந்த தோற்றத்தோடு அவர் குட்டுஜோவைப் பார்ப்பதும், கதவைப் பார்ப்பதுமாக தம்முடைய பொறுமையின்மையைக் காட்டிவந்தார். கானாவ்நைட்சினுடைய உறுதியான, அழகான, அன்பான முகமானது ஒரு மென்மையான, தந்திரமான புன்னகையால் ஒளிர்விட்டுக்கொண்டிருந்தது. அவருடைய பார்வை மாலாஷாவின் பார்வையை சந்தித்தது. அவருடைய கண்களில் தோன்றிய தோற்றத்தைக்கொண்டு அந்த சிறிய பெண் புன்னகை காட்டினாள்.

அவர்கள் எல்லாரும் பெனிக்சனுக்காகக் காத்திருந்தார்கள். ராணுவ நிலைமையைப் பார்த்து வரப்போவதாக சொல்லிக் கொண்டு, அவர் ஒரு அருமையான டின்னரைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். நான்கு மணியிலிருந்து ஆறு மணி வரையில் அவர்கள் அவருக்காகக் காத்திருந்தார்கள். அந்த நேரத்தில் அவர்கள் ஆலோசனைகளை ஆரம்பிக்கவில்லை. வேறு விஷயங்களைப் பற்றியே மெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள்.

பெனிக்சன் அந்த அறைக்குள் நுழைந்த பின்பே, குட்டுஜோவ் அந்த மூலையிலிருந்து எழுந்து, அங்கிருந்த மேஜையை நோக்கி

முன்னால் வந்து அமர்ந்தார். ஆனால், அந்த மெழுகுவத்தி வெளிச்சத்தில் அவருடைய முகத்தைப் பார்க்கக்கூடிய தூரத்திற்கு அவர் வரவில்லை.

பெனிக்சன் அந்தக் கவுன்சிலில் விவாதத்தை ஆரம்பித்து, ஒரு கேள்வியைப் போட்டார்: 'ருஷ்யாவின் புராதனமான தலை நகரை நாம் கைவிட்டு விடுவதா, அல்லது அந்தத் தலைநகரை நாம் பாதுகாப்பதா?'. அதன் பின்னால், ஒரு நீளமான, பொதுவான அமைதி நிலவியது. ஒவ்வொருவரும் முகமும் சுளித்தது. குட்டுஜோவின் கோபமான உறுமல்களும், இடையிடையே தோன்றிய இருமல்களும்தான் அந்த அமைதியைக் கலைத்ன. எல்லா கண்களும் அவரை நோக்கின. மாலாஷா கூட 'தாதா'வை நோக்கினாள். அவள் அவருக்கு சமீபமாக இருந்தபடியால், அவருடைய முகம் எம்மாதிரி சுளிக்கிறது என்பதைக் கண்டாள். அவர் அழப்போகிற மாதிரி காணப்பட்டார். ஆனால், அந்தத் தோற்றம் வெகு நேரம் நீடிக்கவில்லை.

'ருஷ்யாவின் தொன்மையான, புனிதமான தலைநகர்' என்று, பெனிக்சனின் வார்த்தைகளைக் கோபமாக அவர் திடீரென்று திருப்பிச் சொன்னார்.

அம்மாதிரி அவர் சொல்லியது, அந்த வார்த்தைகளில் உள்ள பொய்யான தொனியை எல்லாரும் கவனிக்கும்படி செய்யக் கூடியதாய் இருந்தது. 'மேன்மை தங்கியவரே, நான் உமக்கு ஒன்று சொல்லுகிறேன். நீர் சொல்லிய அந்த வாக்கியத்தில், ஒரு ருஷ்யனுக்கு எவ்விதமான அர்த்தமும் இல்லை. (அவர் முன்னால் குனிந்தார்). அம்மாதிரி ஒரு கேள்வியைப் போட முடியாது. அது புத்தியற்றது, இந்த கனவான்களை இங்கே அழைத்து நாம் பேச விரும்பிய கேள்வி ராணுவ சம்பந்தமானதாகும். அந்தக் கேள்வி ருஷ்யாவைக் காப்பாற்றுவதாகும். ஒரு போர் இல்லாமல், மாஸ்கோவை விட்டுவிடுவது நல்லதா, அல்லது ஒரு போர் செய்து, மாஸ்கோவையும், ராணுவத்தையும் இழந்துவிடுவது நல்லதா? இந்தக் கேள்வியில்தான் உங்களுடைய கருத்து எனக்கு வேண்டும்' என்று அவர் கூறி, தமது நாற்காலியில் சாய்ந்தார். விவாதங்கள் ஆரம்பமாயின. தம்முடைய கட்சி தோற்றுப் போனதாக அவர் இன்னமும் கருதவில்லை. பில்லையில் ஒரு தற்காப்புப் போர் நடத்துவது என்பது சாத்தியம் இல்லை என்று பார்க்ளேயும் மற்றவர்களும் சொல்லியதை அவர் ஒப்புக்கொண்டார். ஆனால் ருஷ்ய நாட்டுப்பற்றிலும், மாஸ்கோ மீதுள்ள அன்பினாலும் அவர் தூண்டப்பட்டு, ஒரு திட்டத்தை சொன்னார். அதாவது, வலது

பக்கத்திலிருந்து இடது பக்கவாட்டிற்கு இரவில் துருப்புகளை மாற்றி, மறு நாளன்று பிரஞ்சுக்காரர்களின் வலது பக்கவாட்டைத் தாக்கவேண்டும் என்று அவர் சொன்னார். அபிப்பிராயங்கள் பிளவு பட்டதாய் இருந்தன. அந்தத் திட்டத்திற்கு சாதகமாகவும், பாதகமாகவும் வாதங்கள் எடுத்துச் சொல்லப்பட்டன. எர்மோலாவ், டாக்டுராவ், ராயேவ்ஸ்கி, ஆகியவர்கள் பெனிக்சனை ஆதரித்தார்கள். தலைநகரைக் கைவிடும் முன்பாக ஒரு தியாகம் செய்யவேண்டியது அவசியம் என்று அவர்கள் நினைத்தார்களா? அல்லது வேறு சொந்த காரணங்கள் உண்டா? என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். ஆனால், தவிர்க்க முடியாத சம்பவங்களின் போக்கை இந்தக் கவுன்சிலில் மாற்றி அமைக்க முடியாது என்பதை இந்த ஜெனரல்கள் அறிந்ததாகவோ, அல்லது உண்மையில் முன்பே மாஸ்கோ கைவிடப்பட்டு விட்டது என்பதை இவர்கள் அறிந்ததாகவோ காணப்படவில்லை. மற்ற ஜெனரல்கள் இதை அறிந்திருந்தார்கள். ஆகவே, மாஸ்கோவைப் பற்றிய கேள்விகளை அவர்கள் விட்டுவிட்டு எந்த வழியாக ராணுவம் பின்வாங்க வேண்டும் என்பதைப் பற்றியே பேசினார்கள். தனக்கு முன்னால் நடந்துகொண்டிருப்பவைகளைக் குத்திட்ட பார்வையோடு நோக்கிக்கொண்டிருந்த மாலாஷாவுக்கு, இந்தக் கவுன்சிலில் நடந்த விஷயம் வேறு விதமாகத்தோன்றியது. அதாவது, 'தாதா'வுக்கும் 'நீள கோட்டு'க்கும் (பெனிக்சனை அப்படித்தான் அவள் அழைத்தாள்) ஏற்பட்டுள்ள சொந்தத் தகராறு போல அவளுக்குக் காணப்பட்டது. வாதங்கள் நடந்து கொண்டிருந்தபோது, வேகமான, சூட்சுமமான பார்வையால் பெனிக்சனை 'தாதா' நோக்கியதை அவள் கவனித்தாள். 'தாதா' எதோ சொல்லியவுடன், பெனிக்சன் வாயை மூடிக்கொண்டதைப் பார்த்து, அவளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. பெனிக்சனின் முகம் திடீரென்று சிவந்தது. கோபமான அந்த அறையில் மேலும் கீழும் உலாவினார். நமது துருப்புகளை வலது பக்கத்திலிருந்து இடது பக்கவாட்டிற்கு இரவில் மாற்றி, பிரஞ்சுக்காரர்களின் வலது பக்கவாட்டைத் தாக்க வேண்டும் என்ற தமது திட்டத்திலுள்ள சாதக பாதகங்களைப் பற்றி, அமைதியாகவும் நிம்மதியாகவும் குட்டுஜோவ் கருத்து கூறியதுதான் அவருக்கு மிகுந்த வேதனையாக இருந்தது.

'கனவான்களே, கோமகனின் திட்டத்தை என்னால் அங்கீகரிக்க முடியாது. எதிரிக்கு சமீபமாகத் துருப்புகளை மாற்றுவது எப்பொழுதுமே அபாயகரமானது. ராணுவ சரித்திரத்தில் இதற்கு ஆதாரம் இருக்கிறது. உதாரணமாக...' என்று குட்டுஜோவ் சொல்லி, ஒரு உதாரணத்தைத் தேடிப்பிடிக்க சிந்திப்பதாகக் காணப்பட்டார்.

பின்னால், ஒரு தெளிவான, கபடமற்ற பார்வையோடு பெனிக்சனைப் பார்த்துப் பேசினார்: 'ஓ, ஆம், பிரீட்லாண்டு யுத்தத்தை (கிழக்கு பிரஷ்யாவில் உள்ள பிரீட் லாண்டில் 1807 - ம் வருஷத்தில் ஒரு போர் நடந்தது. அந்தப் போரில் பெனிக்சனின் தலைமையில் இருந்த ருஷ்யர்களையும் பிரஷ்யர்களையும் நெப்போலியன் தோற்கடித்து, மிகுந்த கடுமையான கஷ்டங்களை உண்டுபண்ணினார். இதன் பின்னால், பிரஷ்யா தனியாகப் பிரிந்து விட்டது.) எடுத்துக்கொள்ளுவோம். அந்தப் போரை கோமகன் நன்றாய் நினைவில் வைத்திருக்கிறார் என்று நினைக்கிறேன். அங்கே... முழுமையாக வெற்றி கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால், எதிரிக்கு வெகு சமீபமாய் இருந்து கொண்டு துருப்புகளை மாற்றியமைத்ததேயாகும்...'

ஒரு வினாடி தயக்கம் ஏற்பட்டது. ஆனால், அது வெகு நீண்ட நேரமாக எல்லாருக்கும் தோன்றியது.

விவாதங்கள் மீண்டும் ஆரம்பம் ஆயின. ஆனால், இடை யிடையே நின்று நின்று நடந்தன. இனிமேல் சொல்லுவதற்கு எதுவும் இல்லை என்று எல்லாரும் உணர்ந்தார்கள்.

அம்மாதிரி விவாதங்கள் தயங்கி நின்ற ஒரு சமயத்தில் குட்டுஜோவ் தாம் பேசுவதற்கு தயாராவதைப்போல ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டார்.

'நல்லது, கனவான்களே, உடைந்த பாத்திரங்களுக்கு நான் தான் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும் என்பதுபோல எனக்குத் தோன்று கிறது' என்று அவர் சொல்லிவிட்டு, மெதுவாக எழுந்து மேஜையை நோக்கி வந்தார். 'கனவான்களே, உங்களுடைய அபிப்பிராயங்களை நான் கேட்டேன். உங்களில் சிலர், நான் சொல்லுவதை ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம். ஆனால்...' என்று சிறிது நிறுத்தி, 'சக்கரவர்த்தியினால் என்னிடம் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தைக் கொண்டு, துருப்புகளைப் பின்வாங்கும்படி நான் உத்தரவிடுகிறேன்.'

சவ அடக்கத்திற்குப் பின்னால் திரும்புகிற கூட்டம் எம்மாதிரி சோகமான, மரியாதையான அமைதியோடு திரும்புமோ, அதேமாதிரி அந்த ஜெனரல்கள் அங்கிருந்து கலைந்து போனார்கள்.

சில ஜெனரல்கள் மெதுவான குரலில், அந்த கவுன்சில் கூட்டத்தில் அவர்கள் பேசியதற்கு முற்றிலும் மாறான போக்கில், தங்களுடைய சேனாதிபதியிடம் ஏதோ சொன்னார்கள்.

இரவுச் சாப்பாட்டிற்காகப் போகவேண்டிய மாலாஷா, ஜாக்கிரதையாக அந்த அடுப்பின் மேலிருந்து கீழே, இறங்கினாள். இறங்கியபோது, அதிலிருந்து முன்னால் நீண்டிருந்த பகுதியில் கால்களை வைத்து, அங்கிருந்து கீழே நழுவினாள். அங்கு நின்று கொண்டிருந்த ஜெனரல்களின் கால்களுக்கிடையில் அவள் நழுவியதும் அந்த அறையிலிருந்து பாய்ந்து ஓடினாள்.

ஜெனரல்களை அனுப்பிய பின்பு, தமது முழங் கைகளை மேஜை மீது வைத்துக்கொண்டு குட்டுஜோவ் அமர்ந்திருந்தார். அந்த பயங்கரமான கேள்வியைப் பற்றியே எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டிருந்தார்: 'எப்பொழுது, எப்பொழுது மாஸ்கோவைக் கைவிடவேண்டும் என்ற விஷயம் தவிர்க்க முடியாததாக வந்து நேர்ந்தது? விஷயத்தை முடிவு செய்துவிட்ட அந்த காரியம் எப்பொழுது நிகழ்ந்தது? இதற்கு யார் பொறுப்பு?'

'நான் இதை எதிர்பார்க்கவில்லை' என்று அன்றிரவு வெகு நேரம் கழித்து வந்து அவருடைய உதவியாளரான ஷ்னைடேர் என்பவரிடம் அவர் கூறினார். 'நான் இதை எதிர்பார்க்கவில்லை! இம்மாதிரி நடக்கும் என்று நான் நினைத்தவில்லை.'

'கலங்காத மேன்மை தங்கியவரே, நீர் கொஞ்சம் இளைப்பாற வேண்டும்' என்று ஷ்னைடேர் பதில் சொன்னார்.

'இல்லை! துருக்கியர்களைப்போல அவர்கள் இன்னமும் குதிரை மாமிசத்தைச் சாப்பிடுவார்கள்' என்று குட்டுஜோவ் கூவி, தமது பருத்த முஷ்டியால் மேஜை மீது குத்தினார். 'அவர்கள் அப்படியே செய்வார்கள். அதுமட்டும்...'

## 11

### 5

அதே சமயத்தில், போர் செய்யாமல் துருப்புகள் பின்வாங்கிக் கொண்டிருப்பதை விட, அதிக முக்கியமான சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. அதாவது, மாஸ்கோவைக் காலி செய்வதும், அதை சுட்டெரிப்பதுமாகும். அம்மாதிரி செய்வதற்கு ராஸ்டாவ்சைனே தூண்டிவிட்டார் என்று வழக்கமாக சொல்லப்பட்டு வந்தது. அவர் குட்டுஜோவுக்கு நேர்மாறான விதத்தில் நடந்து கொண்டார்.

பாராடினோ போருக்குப் பின்னால், துருப்புகள் மாஸ்கோவைக் கடந்து பின்வாங்கவேண்டியது எப்படி தடுக்க முடியாத விதத்தில்

ஏற்பட்டதோ, அதே மாதிரி மாஸ்கோவைக் கைவிட்டு, அதைச் சுட்டெரிப்பதும் தவிர்க்க முடியாததாய் இருந்தது.

ஒவ்வொரு ருஷ்யனும் அதை முன் கூட்டியே சொல்லியிருக்க முடியும்; காரணங்கள் காட்டி அல்ல; நமது ஒவ்வொருவர் உள்ளத்திலும், நமது தந்தைகளின் உள்ளத்திலும் வேரூன்றிய அந்த உணர்ச்சியினால், அம்மாதிரி சொல்லி இருக்க முடியும்.

மாஸ்கோவில் என்ன நடந்ததோ, அதே மாதிரியான காரியங்கள் ஸ்மாலென்ஸ்கில் ஆரம்பித்து, ருஷ்யாவில் உள்ள எல்லாப் பட்டணங்களிலும், கிராமங்களிலும் நடந்தன. கோமகன் ராஸ்டாப்சைனோ, அல்லது அவருடைய பிரகடனங்களோ, தூண்டுதல் செய்யாமலேயே மற்ற இடங்களில் நடந்தன. கொஞ்சம் கூட கவலை இல்லாமல், எதிரியின் வரவை மக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கலகம் செய்யவில்லை. அல்லது கோபம் கொள்ளவுமில்லை. அல்லது யாரையும் அடித்துக் கொல்லவுமில்லை. ஆனால், அவர்கள் தங்கள் விதியை எதிர்நோக்கினார்கள். அந்தக் கஷ்டமான சமயத்தில் என்ன செய்யவேண்டும் என்பதைக் கண்டுபிடிக்க, அவர்களுடைய உள்ளத்தில் வலிமை இருந்ததை அவர்கள் உணர்ந்தார்கள். எதிரி சமீபத்தில் வந்ததும், பணக்காரர்கள் தங்களுடைய சொத்துக்களை விட்டுவிட்டு வெளியேறினார்கள். ஆனால், ஏழைகள் அங்கேயே தங்கி, அங்கே இருந்தவைகளையெல்லாம் கொளுத்தி அழித்தார்கள்.

இம்மாதிரிதான் இருக்கவேண்டும், இம்மாதிரிதான் எப்பொழுதுமே இருக்கும் என்ற உணர்வு ஒவ்வொரு ருஷ்யனின் உள்ளத்திலும் முன்னாலும் இருந்தது; இப்பொழுதும் இருக்கிறது. இந்த உணர்வும், மாஸ்கோவை எதிரிகள் பிடித்துக்கொள்ளுவார்கள் என்று முன்னாலேயே தோன்றிய உள்ளுணர்வும் 1812 - ம் வருஷத்தில் மாஸ்கோவிலுள்ள ருஷ்ய உயர் வட்டாரங்களில் காணப்பட்டன. ஜூலியினும், ஆகஸ்டு ஆரம்பத்திலும் மாஸ்கோவை விட்டு பலர் வெளியேறியதால் அவர்கள் இதை எதிர்பார்த்தார்கள் என்பதைக் காட்டுகிறது. அதை விட்டுப் போனவர்கள் தங்களால் எவற்றையெல்லாம் எடுத்துக்கொள்ள முடியுமோ, அவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு போனார்கள். தங்களுடைய வீடுகளையும், தங்களுடைய உடைமைகளில் பாதிக்கு மேலானவற்றையும் விட்டு விட்டுப் போனார்கள். கண்ணால் காணமுடியாத 'தேச பக்தி'யினால் அப்படிச் செய்தார்கள். அந்த தேச பக்தி, வார்த்தைகளிலோ, அல்லது தந்தை

நாட்டைக் காப்பாற்றுவதற்காக தங்கள் குழந்தைகளைக் கொடுப்பதிலோ, அல்லது அம்மாதிரி இயற்கைக்கு விரோதமான காரியங்களிலோ காணப்படுவதில்லை. ஆனால், படாடோபம் இல்லாமல், சாதாரணமாக, கட்டுப்பாடாக அந்த தேச பக்தி வேலை செய்கிறது. ஆகவே, மிகுந்த சக்திவாய்ந்த பலன்களைக் கொடுக்கக் கூடிய வழியில் அந்த தேச பக்தி நடத்திவைக்கிறது.

'ஆபத்திலிருந்து ஓடிப்போவது அவமானமான விஷயம்; கோழைகள்தான் மாஸ்கோவை விட்டு ஓடிப்போவார்கள்' என்று அவர்களிடம் சொல்லப்பட்டது. மாஸ்கோவை விட்டுவிட்டுப் போவது அவமானமான விஷயம் என்று ராஸ்டாப்சைன் தமது பிரகடனங்கள் மூலமாக அவர்களுக்கு அறிவித்தார். தாங்கள் கோழைகள் என்று அழைக்கப்படுவதைப்பற்றி அவர்கள் வெட்கம் அடைந்தார்கள்; அதைவிட்டுப் போவதற்கும் அவர்கள் வெட்கம் அடைந்தார்கள்; என்றாலும் அவர்கள் போனார்கள்; ஏனெனில், அம்மாதிரிதான் செய்தாகவேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள். அவர்கள் ஏன் போனார்கள்? நெப்போலியன் தாம் பிடித்த நாடுகளில் செய்த அட்டூழியங்களை ராஸ்டாப்சைன் எடுத்துக் காட்டிப் பயமுறுத்தியதால் அவர்கள் போனார்கள் என்று சொல்ல முடியாது. முதலில் போனவர்கள் படித்துத் தேர்ந்த பணக்காரர்களேயாகும். வீயன்னாவும், பெர்லினும் சிதைந்து போகாமல் அப்படியே இருக்கின்றன என்பதை அவர்கள் அறிவார்கள்; நெப்போலியனுடைய ஆக்கிரமிப்புக்குப் பின்னால், அங்குள்ள பிரஜைகள் மகிழ்ச்சியான பிரஞ்சுக்காரர்களுடன் உல்லாசமாக நேரம் போக்கி வருகிறார்கள் என்பதையும் அவர்கள் அறிவார்கள்; ருஷ்யர்களுக்கும், முக்கியமாக ருஷ்ய சீமாட்டிகளுக்கு பிரஞ்சுக்காரர்களிடம் மிகுந்த பிரியம் உண்டு என்பதையும் அவர்கள் அறிவார்கள்.

மாஸ்கோவில் பிரஞ்சு ஆட்சி ஏற்பட்ட பின்பு, காரியங்கள் நன்றாக நடக்குமா, அல்லது கெடுதலாக நடக்குமா என்ற விஷயத்தைப்பற்றி, ருஷ்யர்களுக்கு எவ்வித சிரத்தையும் இல்லை. இதனால் தான் அவர்கள் வெளியே போனார்கள். பிரஞ்சுக்கார்களின் ஆட்சியின் கீழ் இருப்பது என்பது நினைக்க முடியாத விஷயம். அதைவிட மகாமோசமான வேறு காரியம் எதுவும் நடக்க முடியாது. பாராடினோ போருக்கு முன்பாகவே அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். அந்தப் போருக்குப் பின்னால், இன்னும் அதிகமாகப் போக ஆரம்பித்தார்கள். மாஸ்கோவைப் பாதுகாக்கப் போவதாக ராஸ்டாப்சைன் சொல்லிக்கொண்டிருந்த போதிலும்,

அதிசயங்கள் செய்யக்கூடிய இபரியன் தேவ மாதாவின் உருவச் சிலையைக் கொண்டுவந்து யுத்தத்துக்குப் போகப்போவதாக அவர் சொல்லிய போதிலும், பிரஞ்சுக்காரர்களை நாசமாக்கக்கூடிய பலூன்களைப்பற்றிப் பேசியபோதிலும், தமது பிரகடனங்களில் எல்லாவிதமான அசட்டுத்தனங்களையும் ராஸ்டாப்சைன் எழுதி வந்த போதிலும், அவற்றையெல்லாம் கவனிக்காமல், அவர்கள் வெளியேறிக்கொண்டு தான் இருந்தார்கள். ராணுவம்தான் போர் செய்ய வேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள். அந்த ராணுவத்தினால் அதைச் செய்ய முடியவில்லையென்றால், நெப்போலியனோடு போர்செய்வதற்காக வாலிப சீமாட்டிகளையும் வீட்டு அடிமைகளையும் மாஸ்கோவின் மூன்று குன்றுகள் என்ற இடத்திற்கு அழைத்துக்கொண்டு போக முடியாது என்பதையும் அவர்கள் அறிவார்கள். ஆகவே, தங்களுடைய உடைமைகளை நாசமாகும்படி விட்டுவிட்டுப் போவதற்கு அவர்கள் வருந்தினாலும், அதைவிட்டு போய்த்தான் ஆகவேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள். மாஸ்கோ ஒரு பெரிய நகரம். மரத்தாலான கட்டிடங்களை ஏராளமாகக் கொண்டுள்ளது. ஆகவே, மாஸ்கோவைக் கைவிட்டால், அவற்றைக் கொளுத்திவிடுவார்கள் என்பது நிச்சயம். என்றாலும், அந்தப் பிரம்மாண்டமான, செல்வம் மிகுந்த பட்டணத்தை நாசமாக்கும்படி விட்டுவிடுவதால் ஏற்படக்கூடிய பிரம்மாண்டமான முக்கியத்துவத்தை, அவர்கள் யோசித்துப் பார்க்காமலேயே அதைவிட்டு வெளியேறினார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தாங்களாகவே வெளியேறினார்கள். என்றாலும், அவர்கள் வெளியேறியதால் ஏற்பட்ட பலனினால்தான் அந்த பிரம்மாண்டமான காரியத்தை சாதிக்க முடிந்தது. அந்த பிரம்மாண்டமான காரியம் ருஷ்யர்களுக்கு எப்பொழுதுமே தலைசிறந்த பெருமையாக விளங்கிக்கொண்டிருக்கும். கோமகன் ராஸ்டாப்சைன் தன்னைப் போகாமல் தடுத்து விடுவாரோ என்று பயந்த ஒரு சீமாட்டி ஜூன் மாதத்திலேயே அதைவிட்டு வெளியேறினாள். அவள் போகும் போது தன்னுடைய நீக்ரோக்களையும், தன்னுடைய பெண் - கோமாளிகளையும் அழைத்துக்கொண்டு, தன்னுடைய சாராட்டாவ் எஸ்டேட்டுக்குப் போனாள். அச்சமயத்தில், போன பார்ட்டின் உத்தரவுக்கு, தான் கீழ்படிந்து இருக்கமுடியாது என்ற உணர்வோடு போனாள். அம்மாதிரி அவள் செய்தது, உண்மையாக அப்படியே நேர்மையாக அந்த பிரம்மாண்டமான காரியத்தை நிறைவேற்றுவதாய் இருந்தது. அந்த பிரம்மாண்டமான காரியம்தான் ருஷ்யாவைக் காப்பாற்றியது. மாஸ்கோவை விட்டு வெளியேறியவர்களைக் குறை

கூறிக்கொண்டிருந்த கோமகன் ராஸ்டாப்சைன் இப்பொழுது அரசு செயலகங்களை அங்கிருந்து அகற்றிவிட்டார்; உபயோகமற்ற ஆயுதங்களைக் குடிகாரர்களுக்கு வழங்கினார்; தெய்வச் சிலைகளை ஊர்வலமாகக் கொண்டு வர ஏற்பாடு செய்தார்; மகான்களின் சின்னங்களையோ, தெய்வச் சிலைகளையோ, அங்கிருந்து அப்புறப்படுத்தக்கூடாது என்று அகஸ்டின் பாதிரியாருக்கு உத்தரவிட்டார்; மாஸ்கோவில் இருந்த தனிப்பட்டவர்களின் வண்டிகளை யெல்லாம் பறிமுதல் செய்தார்; அவற்றில் 136 வண்டிகளில் லெப்பிச் என்பவரால் செய்யப்பட்ட பலூனை அப்புறப்படுத்தினார்; மாஸ்கோவைக் கொளுத்திவிடப் போவதாகச் சொல்லி, தம்முடைய வீட்டை எப்படிக் கொளுத்தினார் என்பதை விளக்கிக் காட்டினார்; தம்முடைய அநாதை விடுதியை அழித்ததற்காகப் பிரஞ்சுக்காரர்களைக் கண்டித்து ஒரு பிரகடனத்தை வெளியிட்டார்; மாஸ்கோவை தாம் கொளுத்தப் போவதாக சொல்லியவர் இப்பொழுது அப்படிச் சொல்லவில்லை என்று மறுத்தார்; எல்லா ஒற்றர்களையும் பிடித்துத் தம்மிடம் கொண்டு வரும்படி மக்களுக்கு முதலில் உத்தரவிட்டுவிட்டு இப்பொழுது அம்மாதிரி செய்ததற்காக மக்களைக் கண்டித்தார்; மாஸ்கோவி லிருந்து எல்லா பிரஞ்சுக்காரர்களும் வெளியேறவேண்டும் என்று உத்தரவிட்டுவிட்டு, திருமதி ஆபர்ட்சாம் என்பவளை ( மாஸ்கோவிலுள்ள பிரஞ்சு வாசிகளுக்கு அவளுடைய வீடுதான் தலைமை பீடமாக விளங்கியது) அங்கேயே தங்கி இருக்கும்படி அனுமதித்தார்; மதிப்புக்குரிய வயதான போஸ்ட் மாஸ்டரான கிளியூசாரியோவ் என்பவரை எவ்வித குற்றமும் சுமத்தாமல் கைது செய்து நாடு கடத்தினார்; மூன்று குன்றுகள் என்ற இடத்தில் பிரஞ்சுக்காரர்களோடு போர் செய்வதற்காக மக்கள் கூடியிருந்தார்கள்; அவர்களிடமிருந்து தப்புவதற்காக ஒருவனைக் கொல்லும்படி அவர்களிடம் ஒப்புவித்துவிட்டு, பின்வாசல் வழியாகத் தப்பி ஓடினார்; (ராஸ்டாப்சைன் ஒரு பிரகடனத்தில் பின்வருமாறு எழுதியிருந்தார். 'என்ன ஆயுதம் உங்களுக்கு அகப்படுகிறதோ அவற்றை எடுத்துக் கொண்டு குதிரை மீதோ, நடந்தோ வாருங்கள். மூன்று நாட்களுக்கு வேண்டிய ரொட்டிகளை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். மாதா கோயில்களிலிருந்து கொடிகளையும் சிலுவைகளையும் எடுத்துக் கொண்டு மூன்று குன்றுகள் என்ற இடத்திற்கு வந்து கூடுங்கள். அங்கே நான் உங்களோடு இருப்பேன். நாம் ஒன்று சேர்ந்து அந்தக் கொடுமையாளனை நாசம் செய்வோம்.') மாஸ்கோ வீழ்ச்சியுற்ற பின்பு, தாம் உயிரோடு இருக்கப் போவதில்லை என்று அவர்

அறிவித்தார்; ஆனால், அந்த மாஸ்கோ சம்பந்தமாக, தமக்குள்ள பங்கை பெருமையோடு பிரஞ்சு மொழியில் கவிகளாக எழுதினார். (நான் ஒரு டார்ட்டாராகப் பிறந்தேன், ஒரு ரோமனாக ஆக வேண்டும் என்று நான் விரும்பினேன்; பிரஞ்சுக்காரர்கள் என்னை காட்டுமிராண்டி என்றார்கள், ருஷ்யர்கள் என்னை ஜார்ஜஸ் டாண்டின் என்று அழைத்தார்கள்.) என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதில் அர்த்தத்தை இந்த மனிதரால் அறிய முடியவில்லை; ஆனால், மக்களை ஆச்சரியப்படுத்தும் விதத்தில் எதையாவது செய்ய வேண்டும் என்று விரும்பினார்; நாட்டுப்பற்று கொண்ட வீரத்தனமான செய்கையைச் செய்ய அவர் ஆசை கொண்டார்; அந்த மறக்க முடியாத, தடுக்க முடியாத சம்பவத்தோடு - மாஸ்கோவைக் கைவிட்டு, கொளுத்தியது - ஒரு குழந்தையைப்போல விளையாடினார்; அதாவது, அவரைத் தன்னோடு அடித்துக்கொண்டு போன அந்த பிரம்மாண்டமான மக்களின் உணர்ச்சி வேகத்தை, தமது சிறிய கையைக் கொண்டு வேகத்தை அதிகரிக்கவோ, அல்லது நிறுத்தவோ முயற்சி செய்து கொண்டித்தார்.




வில்னாவிலிருந்து ராஜ சபையோடு பீட்டர்ஸ்பர்க்கிற்குத் திரும்பிய பின்புதான், ஒரு கஷ்டமான நிலைமை இருப்பதாக ஹெலன் உணர்ந்தாள்.

பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு பிரபுவின் நட்பு அவளுக்கு இருந்து வந்தது. அந்தப் பிரபு ஏகாதிபத்தியத்தில் ஒரு உயர்தரப் பதவியை வகித்து வந்தார். வில்னாவில் ஒரு வாலிப அயல் நாட்டு இளவரசரோடு அவள் அன்னியோன்னியம் கொண்டாள். பீட்டர்ஸ்பர்க்கிற்கு அவள் திரும்பியதும், அந்தப் பிரபுவும், அந்த இளவரசரும் அங்கே இருந்தார்கள். அந்த இருவரும் தங்களுடைய உரிமைகளைப் பெற்றுக் கொள்ள முயற்சித்தார்கள்; ஹெலனுக்கு இப்போது ஒரு புதிய பிரச்னை ஏற்பட்டது. இருவரில் எவரையும் மனம் நோகும்படி செய்யாமல், தன்னுடைய அந்தரங்கத் தொடர்பை இருவரிடமும் எப்படி காப்பாற்றிக் கொள்வது என்பதுதான் அந்தப் பிரச்னை.

மற்ற பெண்ணுக்கு கஷ்டமானதாகவோ, சாத்தியமற்றதாகவோ தோன்றக்கூடிய இந்தப் பிரச்னை, கோமகள் பெஜுகாவாவிற்கு சிறிது கூட தயக்கத்தைக் கொடுக்கவில்லை. அவள் ஒரு

புத்திசாலியான பெண் என்று பெயர் பெற்றிருந்தாள். அந்தப் பெயர் அவளுக்கு மிகவும் பொருத்தமானது. அவள் தன்னுடைய தர்ம சங்கடமான நிலைமையிலிருந்து தந்திரத்தின் மூலமாகத் தப்பித்துக்கொள்ள முயற்சித்தாலோ, அதை மறைத்து வைக்க முயற்சித்தாலோ, அவள் தன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொண்டதைப் போல ஆகிவிடுவாள். ஆனால், ஹெலன் உண்மையிலேயே ஒரு பெரிய மனிதர் மாதிரி, தனக்கு எது இஷ்டமோ, அதை செய்யக்கூடிய நிலைமையில் உள்ளவர் மாதிரி நடக்க ஆரம்பித்தாள். அதாவது, தன்னுடைய நிலைமை மிகவும் நியாயமான தென்றும், அது நியாயமானதென்று அவள் உண்மையிலேயே நம்பியதாகவும், ஆகவே மற்றவர்களைத்தான் குறை கூற வேண்டுமென்று சொல்வது போல நடந்து கொண்டாள்.

அந்த வாலிப வெளிநாட்டுக்காரர் முதல் தடவையாக அவளைக் கண்டித்தபோது, அவள் தன்னுடைய அழகான தலையை நிமிர்த்தி, அவர் பக்கம் பாதி திரும்பி உறுதியோடு சொன்னாள்: -

'அதுதான் ஆண்மகன் மாதிரி இருக்கிறது. சுயநலமும் கொடூரமும் கொண்டது. நான் வேறு எதையும் எதிர்பார்க்க வில்லை. ஒரு பெண், தன்னையே உமக்குத் தியாகம் செய்கிறாள். உமக்காகக் கஷ்டப்படுகிறாள். அதற்குப் பதில் உம்முடைய வெகுமானம் இதுதான். திருவாளரே, என்னுடைய விருப்பங் களைப் பற்றியும், யாருடன் நான் நட்பாய் இருக்கிறேன் என்பதைப் பற்றியும், என்னைக் கேட்பதற்கு உமக்கு என்ன உரிமை இருக்கிறது? அந்த மனிதர் எனக்கு ஒரு தந்தைக்கும் மேலானவர்.'

அந்த இளவரசர் ஏதோ சொல்ல ஆரம்பித்தார். ஆனால், ஹெலன் அவரை இடைமறித்தாள்.

'நல்லது; ஆமாம், ஒரு தந்தைக்கு இருக்க வேண்டிய உணர்ச்சிகளைத் தவிர, வேறு விதமான உணர்ச்சிகளை அவர் ஒருவேளை கொண்டிருக்கலாம். ஆனால், அதற்காக இங்கே வரக்கூடாது என்று நான் அவரிடம் சொல்ல முடியாது. நான் ஒரு ஆண் மகன் அல்ல. ஆண் மகன்தான் அன்புக்குப் பதில் நன்றி கெட்ட விதமாய் நடப்பான். திருவாளரே, என்னுடைய அந்தரங்கமான உணர்ச்சிகள் சம்பந்தப்பட்ட வரையில், நான் அவற்றிற்குப் பதில் சொல்ல வேண்டியது கடவுளுக்கும், என்னுடைய மனச் சாட்சிக்குமேயாகும். இதை நீர் அறிந்து கொள்ளும்.' அவளுடைய கையை அவளுடைய அழகான விரிந்த மார்பில் வைத்து, மேலே பரலோகத்தைப் பார்த்தாள்.

'ஆனால், கடவுளுக்காக, நான் சொல்வதைக் கொஞ்சம் கவனித்துக் கேள்.'

'நீர் என்னைக் கல்யாணம் செய்து கொள்ளும். நான் உம்முடைய அடிமையாய் இருப்பேன்.'

'ஆனால், அது அசாத்தியமானது.'

'நீர் என்னைக் கல்யாணம் செய்துகொண்டு, அதனால் உமக்கு மதிப்புக் குறைவு ஏற்படுத்திக் கொள்ள நீர் விரும்பவில்லை...' என்று ஹெலன் சொல்லி அழுவதற்கு ஆரம்பித்தாள்.

அந்த இளவரசர் அவளுக்கு தேறுதல் கூற முயற்சித்தார். ஆனால், ஹெலன் முற்றிலும் திகைப்பு கொண்டவளைப் போல, தன்னுடைய கண்ணீருக்கிடையில், தான் திருமணம் செய்து கொள்வதைத் தடுப்பதற்கு எதுவுமில்லை என்று சொன்னாள். அம்மாதிரி திருமணம் செய்வதற்கு முன்ஆதாரங்கள் இருப்பதாகவும் கூறினாள். (ஆனால் அதுவரை அம்மாதிரி ஆதாரங்கள் வெகு சொற்பமானவைகளே. ஆனால், அவள் நெப்போலியனையும், வேறு பல பிரபலஸ்தர்களையும் குறிப்பிட்டாள்.) அவள் அவளுடைய கணவருக்கு மனைவியாக இருந்ததே இல்லையென்றும், அவளைத் தியாகம் செய்துவிட்டார் என்றும் சொன்னாள்.

'ஆனால், சட்டமும் மதமும்...' என்று இளவரசர் அதற்குள்ளாக அடிபணிய ஆரம்பித்துப் பேசலானார்.

'சட்டமும் மதமும்...திருமணம் செய்வதற்கு அவற்றால் முடியவில்லை யென்றால், அப்புறம் அவை யெல்லாம் எதற்காக உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன?' என்று ஹெலன் கேட்டாள்.

இம்மாதிரியாக வெகு எளிதான ஒரு எண்ணம் அவருக்கு அதுவரை தோன்றவில்லை. ஆகவே, அதைக் கேட்டு அவர் ஆச்சரியப்பட்டார். பின்னால், யேசு சங்கம் என்ற சங்கத்திற்கு அவர் மனுச் செய்து, அதைப்பற்றி தமக்கு யோசனை கூறுமாறு கேட்டார். அந்த சங்கத்தோடு அவர் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார்.

சில தினங்களுக்குப் பின்னால், ஹெலன் தன்னுடைய கிராமாந்திர மாளிகையான ஸ்டோன் ஐலண்ட் என்ற இடத்திலுள்ள மாளிகையில் ஒரு விருந்து நடத்திக்கொண்டிருந்தாள். விருந்திற்கு கவர்ச்சியான திருவாளர் டி ஜாபெர்ட் விஜயமானார். அவர் வாலிபர் அல்ல. அவருடைய தலை முடி பனிபோல வெள்ளையாய் இருந்தது. அவருடைய கண்கள் பிரகாசமாக, கறுப்பாக இருந்தன.

அவர் ஒரு பாதிரி. வெளியே போகும் உடையை அணிந்திருந்தார். அவளிடம் அவரை அறிமுகம் செய்து வைத்தார்கள். அங்கே தோட்டத்தில் பிரகாசமாக விளக்குகள் போடப்பட்டிருந்தன. சங்கீதம் ஒரு பக்கத்தில் ஒலித்துக் கொண்டிருந்தது. அவர் அவளிடம் வந்து, கடவுள் மீது அன்பு கொள்ளுவதைப் பற்றியும், கிறிஸ்துவைப் பற்றியும், பரிசுத்த இருதயத்தைப் பற்றியும், வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தார். கத்தோலிக்க மதம் ஒருவருக்கு இம்மையிலும் மறுமையிலும் அளிக்கக்கூடிய நன்மைகளைக் கூறிக் கொண்டிருந்தார். அவற்றைக் கேட்டு ஹெலனுக்கு உள்ளம் உருகியது. பல தடவைகள் அவளுடைய கண்களில் கண்ணீர் நிறைந்து நின்றது. அந்தப் பாதிரியின் கண்களிலும் கண்ணீர் நிறைந்திருந்தது. அவர்களுடைய குரல்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. ஒரு நாட்டியத்திற்காக தம்முடன் வந்து ஆடும்படி ஒருவர் வந்து ஹெலனைக் கேட்டார். அவர் வந்தவுடன், அவர்கள் பேசிக் கொண்டிருந்த உரையாடலை நிறுத்திக் கொண்டார்கள். மறு நாள் மாலையில் அந்தப் பாதிரி மீண்டும் ஹெலன் தனிமையிலிருந்தபொழுது வந்து பார்த்தார். அதன் பின்னால், பல தடவைகள் அவர் வந்து பார்த்திருக்கிறார்.

ஒரு நாள் அந்தக் கோமகளை ஒரு ரோமன் கத்தோலிக்க மாதா கோவிலுக்கு அவர் அழைத்துச் சென்றார். அங்கே அவள், பலி பீடத்திற்கு முன்னால் முழங்கால் படியிட்டாள். மந்திரம் சொல்லிக் கொண்டிருந்த நடுத்தர வயதுள்ள ஒரு பிரஞ்சுக்காரர், தமது கைகளை அவளுடைய தலை மீது வைத்தார். அச்சமயம் அவள் தன்னுடைய உள்ளத்தில் ஏதோ ஒரு புதுமையான காற்று வீசுவதைப் போல உணவு பெற்றாள். இதுதான் பரிசுத்த அருள் என்று அவளுக்குப் பின்னால் விளக்கிச் சொன்னார்கள்.

நீளமான அங்கி அணிந்த ஒரு பாதிரியார், அதன் பின்னால் அவளிடம் வந்தார். அவரிடம் அவள் பாவ மன்னிப்புக்காக ஒப்புதல் செய்தாள். அவளுடைய பாவங்களிலிருந்து அவளை அவர் விலக்கி மன்னிப்பு கொடுத்தார். மறு நாள் அவளுக்கு ஒரு பெட்டி வந்தது. அந்தப் பெட்டியில் பிரசாதம் இருந்தது. அதை அவள் உண்ணவேண்டுமென்று அனுப்பினார்கள். சில தினங்களுக்குப் பின்னால், அவளை ரோமன் கத்தோலிக்க மாதா கோவிலில் சேர்த்துக் கொண்டதாகச் செய்தி வந்தது. அவளுக்கு அந்தச் செய்தி மகிழ்ச்சியைக் கொடுத்தது. இன்னும் சில தினங்களில் போப்பாண்டவரே அவள் விஷயத்தைக் கேட்டு, அவளுக்கு ஒரு யாதாஸ்து அனுப்பப் போவதாகச் சொல்லப்பட்டது.

அவள் இப்போதெல்லாம் வெள்ளை ஆடைகளையும், வெள்ளை ரிப்பன்களையும் அணிந்து வந்தாள். அந்த ஆடைகள் அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தன. ஆனால், அவளுடைய மகிழ்ச்சி, அவளுடைய நோக்கத்தை ஒரு வினாடிகூட மறக்கும்படி செய்யவில்லை. அவளைச் சுற்றிலும் நடந்த காரியங்களும், அவள் மீது சிரத்தை கொண்ட பல புத்திசாலிகள் பண்பான, இனிமையான வழிகளில் அவளிடம் பேசி வந்தவையும், வெண்மையான உடையில், புறாவைப் போன்ற பரிசுத்தத்துடன் அவள் இருப்பதாகச் சொல்லப்பட்டதும், அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தன. தந்திரங்கள் செய்யும்போது ஒரு விஷயம் நடப்பதுண்டு. அதாவது, ஒரு முட்டாளானவன், ஒரு பெரிய புத்திசாலியைத் தோற்கடித்து விடுவான். கத்தோலிக்க மதத்திற்கு மாறிய பின்பு, அவளிடமிருந்து அந்தப் பாதிரிகள் சங்கத்திற்குப் பணம் பறிக்க வேண்டுமென்பதே, அந்த இனிமையான வார்த்தைகளின், அந்த இனிமையான செய்கைகளின் நோக்கம் என்பதை ஹெலன் அறிந்து கொண்டாள். ஆனால், தான் அவர்களுக்குப் பணம் கொடுப்பதற்கு முன்பாக, தன்னுடைய கணவரிடமிருந்து தன்னை விடுதலையாக்கி விடுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளைச் செய்தாக வேண்டு மென்று அவள் சொன்னாள். அவளுடைய கருத்தில், ஒவ்வொரு மதத்தினுடைய நோக்கமும், மனித உள்ளங்களுக்குத் திருப்தியை அளிக்கக்கூடிய விதத்தில், சில ஒழுங்குகளை நிலை நிறுத்த வேண்டுமென்பதே யாகும் என்று தோன்றியது. இந்த நோக்கத்தோடு அவள் தனக்கு பாவ மன்னிப்பைக் கொடுத்த பாதிரியோடு பேசிக் கொண்டிருந்தபோது, இதற்குப் பதில் கூறும்படியும், தன்னுடைய விவாகத்தினால் தான் எவ்வளவு தூரம் கட்டுப்பட்டிருக்கிறாள் என்பதைக் கூறும்படியும் அவள் கேட்டாள்.

அந்தி மயங்கும் வேளையில், வரவேற்பு அறையில் ஜன்னலுக்குப் பக்கத்தில் அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். புஷ்பங்களின் நறுமணம் அந்த ஜன்னல் வழியாக உள்ளே வந்து கொண்டிருந்தது. ஹெலன் ஒரு வெள்ளை உடையை அணிந்திருந்தாள். அவளுடைய தோள்களும், மார்பும் ஊடுருவித் தெரியக்கூடிய விதத்தில் அந்த உடை இருந்தது. அந்தப் பாதிரி, நன்றாக உண்டு வளர்ந்த வரைப் போல, பருமானாக இருந்தார். சுத்தமாக க்ஷவரம் செய்திருந்தார். அவருடைய உறுதியான வாய் அழகாய் இருந்தது. அவளுடைய வெள்ளைக் கைகள், அவருடைய முட்டுகளின் மீது அசையாமல் கிடந்தன. அவர் ஹெலனுக்குப் பக்கத்தில் நெருங்கி உட்கார்ந்திருந்தார். அவருடைய உதடுகளில் ஒரு புத்திசாலித்தனமான புன்னகையோடு, அவளுடைய அழகைக்

கண்டு மகிழ்ச்சி அடையும் ஒரு சாந்தமான தோற்றத்தோடும், தமது கருத்தை அவளுக்கு சொல்லிக் கொண்டிருந்தபோது இடையிடையே அவளுடைய முகத்தைப் பார்வையிட்டுக் கொண்டும் அவர் இருந்தார். மனக்குழப்பமடைந்த ஒரு புன்னகையோடு, ஹெலன் அவருடைய சுருளைத் தலை முடியையும், பருத்த, நன்றாய் க்ஷவரம் செய்யப்பட்ட கன்னங் களையும் கவனித்துக் கொண்டு, எந்த வினாடியிலும் அந்த உரையாடல் வேறு விதமாகத் திரும்பக்கூடுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால், அந்தப் பாதிரி, தம்முடைய தோழியின் அழகைக் கண்டு அனுபவித்தபோதிலும், தாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தில் ஆழ்ந்து போய் இருந்தார்.

பாவ மன்னிப்பு கொடுத்த அந்த தந்தை, அச்சமயத்தில் சொல்லிய வாதங்கள் பின்வருமாறு இருந்தன: 'நீ செய்த சத்தியத்தின் முக்கித்துவத்தை உணராமல், இல்லற வாழ்க்கையில் விசுவாசத்தோடு இருப்பதாக ஒரு மனிதருக்குப் பிரமாணம் செய்தாய். ஆனால், அந்த மனிதர் அந்த விசுவாசத்தினால் ஏற்படக்கூடிய மத முக்கியத்துவத்தில் நம்பிக்கை இல்லாதவராய் இருந்தார். அதனால் அவர் அபசாரம் செய்தவர் ஆகிறார். ஆகவே, இரண்டு பிரமாணங்களை அந்த விவாகத்தில் காணவில்லை. இருந்தாலும், நீ செய்து கொடுத்த பிரமாணம் உன்னைக் கட்டுப்படுத்துவதாய் இருக்கிறது. பின்னால், அதிலிருந்து நீ தவறி இருக்கிறாய். அம்மாதிரி நீ செய்த பாவம் எப்படிப்பட்ட பாவமாய் இருக்கிறது? ஒரு கடுமையான குற்றத்தை நீ செய்தாயா, அல்லது லேசான குற்றத்தைச் செய்தாயா? நீ செய்த பாவம் லேசானது; ஏனெனில் நீ அதைக் கெட்ட எண்ணத்தோடு செய்யவில்லை. இப்போது குழந்தைகள் பெற வேண்டும் என்ற நோக்கத்தோடு மட்டும் நீ திருமணம் செய்வாயானால், உன்னுடைய பாவம் மன்னிக்கப்படும். ஆனால், அந்தப் பிரச்னை மீண்டும் இரண்டு விஷயங்களைக் கொண்டது. ஒன்று...'

இதைக் கேட்பதில் ஹெலன் களைப்படைந்தவளாக, திடீரென்று தனது கவர்ச்சிகரமான புன்னகையைக் காட்டிக் கேட்டாள்: 'ஆனால், நான் இப்போது உண்மையான மதத்தில் சேர்ந்து விட்டபடியால், பழைய பொய்யான மதத்தின்படி என் மீது விதிக்கப்பட்ட நிபந்தனைகளுக்கு இப்போது நான் கட்டுப்படவேண்டியது இல்லை என்று நினைக்கிறேன்.'

அவளுடைய மனச்சாட்சிக்கு வழிகாட்டி வந்த அந்த பாதிரியார், அந்த விஷயத்தை இவ்வளவு எளிதாகத் தம்மிடம் அவள் எடுத்துக்

காட்டியதைக் கண்டு திகைத்துப் போனார். தம்முடைய சிஷ்யையின் இந்தவிதமான எதிர்பாராத வேகமான முன்னேற்றத்தைக் கண்டு, அவர் மகிழ்ச்சி கொண்டார். ஆனால், அவர் அவ்வளவு தூரம் கஷ்டப்பட்டுக் கட்டி வந்த அந்த வாத கோபுரத்தை, திடீரென்று அவரால் விட முடியவில்லை.

'நான் ஒருவரை யொருவர் நன்றாய் அறிந்து கொள்வோம், கோமகளே' என்று அவர் ஒரு புன்னகையோடு சொல்லி விட்டு, தம்முடைய ஆத்மார்த்தீக குமாரியின் வாதங்களை மறுத்துக் கூற ஆரம்பித்தார்.



இந்தக் கேள்வி மிகவும் சுலபமானது என்பதையும், மத நோக்கத்தில் மிகவும் எளிதானது என்பதையும், ஹெலன் அறிந்து கொண்டாள். ஆனால், தனக்கு போதிப்பவர்கள் அதற்குக் கஷ்டங்களை உண்டு பண்ணுகிறார்கள் என்று அவள் நினைத்தாள். அம்மாதிரி செய்வதால் ராஜாங்க அதிகாரிகள் என்ன நினைப்பார்களோ என்ற பயம்தான் அவர்களுக்குக் காரணமாய் இருக்கும் என்று அவள் நினைத்தாள்.

ஆகவே, உயர் வட்டாரத்தின் ஆதரவு தனக்குக் கிடைக்கும்படியாக, ஏற்பாடு செய்ய வேண்டுமென்று பிரபுவின் பொறாமையைக் கிளப்பி விடுவதற்காக, தன்னுடைய மற்றொரு காதலரான அந்த வாலிப இளவரசரிடம், தான் என்ன கூறினாள் என்பதை அவருக்கு எடுத்துச் சொன்னாள். அதாவது, அவளை திருமணம் செய்வது ஒன்றினால்தான், அவள் மீது உரிமை ஏற்பட முடியும் என்று அவர் புரிந்து கொள்ளும்படி சொன்னாள். முதலில் அந்த முதிய பிரபுவுக்கு இதைக் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது. அந்தக் கோமகளின் கணவர் உயிரோடு இருக்கும்போது, அம்மாதிரி திருமணம் செய்வது சரியல்லவென்று அந்த இளைஞரைப் போலவே அவர் நினைத்தார். ஆனால், ஒரு கன்னிப்பெண்ணைத் திருமணம் செய்வது எவ்வளவு சுலபமோ, அதே மாதிரி தன்னை திருமணம் செய்வதும் சுலபமானதும் இயற்கையானதுமான விஷயம் என்று உறுதியாகச் சொன்னாள். ஆகவே, அந்தப் பேச்சு, அந்த முதியவரையும் அசைத்தது. ஹெலன் அச்சமயத்தில் சிறிதளவு கூட தயக்கத்தையோ, வெட்கத்தையோ, காட்டியிருப்பாளானால், அல்லது ரகசியமாக நடப்பதுபோலக் காட்டியிருப்பாளானால்,

அவளுடைய கட்சி நிச்சயமாகத் தோற்றுப்போய் இருக்கும். ஆனால், வெட்கத்தையோ, ரகசியமாக செய்வதைப் போலவோ காட்டக்கூடிய எந்த விதமான அறிகுறிகளையும் அவள் செய்யவில்லை. அதற்கு மாறாக, ஒரு நல்ல குணம் படைத்த அப்பாவி மாதிரி, தன்னுடைய அந்தரங்க நண்பர்களிடம் பேச ஆரம்பித்தாள். அதாவது, இளவரசரும் பிரபுவும் திருமணம் செய்ய வேண்டுமென்று தன்னைக் கேட்டுக் கொள்வதாகவும், தான் இருவரையுமே காதலிப்பதாகவும், ஆகவே இருவரில் எவருக்கும் மனம் நோகும்படி நடந்து கொள்ள முடியாமல் இருப்பாகவும் சொல்லி வந்தாள்.

உடனே பீட்டர்ஸ்பர்க் முழுவதும் ஒரு வதந்தி பரவியது. ஹெலன் தன்னுடைய கணவனிடமிருந்து விவாக ரத்து செய்துகொள்ள விரும்புகிறாள் என்பது அந்த வதந்தி அல்ல; அம்மாதிரி வதந்தி ஏற்பட்டிருக்குமானால், அவளுடைய சட்ட விரோதமான நோக்கத்திற்கு, பலமான எதிர்ப்பு தோன்றி இருக்கும். ஆனால், இப்பொழுது பரப்பி விடப்பட்ட வதந்தி வேறு விதமானது. இரண்டு மனிதர்களில் யாரைக் கல்யாணம் செய்து கொள்வது என்று தெரியாமல் ஹெலன் கஷ்டப்படுவதாகவும், அவளுடைய நிலைமை பரிதாபமாய் இருப்பதாகவும் வதந்தி பரவியது. அம்மாதிரி செய்வது சாத்தியமா என்ற கேள்வியே இப்போது கேட்கப்படவில்லை. இருவரில் யாரை திருமணம் செய்துகொள்ளலாம் என்பதைப் பற்றியும், அம்மாதிரி திருமணம் ராஜ சபையில் எம்மாதிரி எடுத்துக் கொள்ளப்படும் என்பதைப் பற்றியுமான பேச்சே பரவி வந்தது. அந்தப் பிரச்னையில், அவ்வளவு தூரம் தங்களுடைய கருத்தை சொல்லுவதற்கு முடியாமல், சில கடுமையான பேர்வழிகள் இருந்தார்கள் என்பது உண்மையே. ஏனெனில், அம்மாதிரி திருமணம் செய்வது திருமணத்தின் புனிதத் தன்மையையே அழிப்பதாகும் என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால், அம்மாதிரி பேசுகிறவர்கள் அதிகமாய் இல்லை. அதனால் அவர்கள் மௌனமாய் இருந்தார்கள். ஆனால், பெரும்பான்மை யோர் ஹெலனுடைய நலனில் அக்கறை கொண்டவர்களாய் இருந்தார்கள். ஆகவே, இருவரில் யாரை அவள் திருமணம் செய்வதால் அவளுக்கு நன்மை ஏற்படும் என்பதிலேயே, அவர்களின் கவனம் சென்றது. கணவர் உயிரோடு இருக்கும்போது, மீண்டும் திருமணம் செய்வது சரியா, தப்பா என்ற விஷயத்தைப் பற்றி அவர்கள் விவாதிக்கவில்லை. ஏனெனில், அந்த விஷயம் முன்பே 'உங்களையும் என்னையும்விட புத்திசாலிகளான மக்களால் தீர்மானிக்கப்பட்டு விட்டதைப்போல, அவர்கள் நினைத்துக்

கொண்டிருந்தார்கள். தீர்மானிக்கப்பட்ட அந்த விஷயத்தின் கருதியைப் பற்றி மீண்டும் வாதித்துக்கொண்டிருப்பது, உயர்வட்டாரத்தில் தாங்கள் வாழ்வதற்கு அருகதையற்றவர்கள் என்பது போல, தங்களுடைய முட்டாள்தனத்தையும், அறிவீனத்தையும் வெளிப்படுத்துவதாய் இருக்கும் என்று நினைத்து, அவர்கள் மௌனமாய் இருந்தார்கள்.

மரியா டிமிட்ரிவ்னா அக்ராசிமாவா ஒருத்திதான், அந்தப் பொதுவான கருத்திற்கு எதிராக, தெளிவாக தன்னுடைய கருத்தைச் சொன்னாள். அவள் பீட்டர்ஸ்பர்க்கிற்கு அந்த வசந்த காலத்தில் தன்னுடைய குமாரர்களில் ஒருவரைப் பார்ப்பதற்காக வந்தாள். ஒரு நடன மண்டபத்தில் ஹெலனை அவள் சந்தித்து, அந்த மண்டபத்தின் மத்தியில் நிறுத்தி, அங்கிருந்த பொதுவான, அமைதியான நிலைமையில் தன்னுடைய கரகரத்த தொனியில் பேசினாள்: - 'ஆகவே, உயிரோடு இருக்கிறவர்களின் மனைவிகள் எல்லாம், மீண்டும் திருமணம் செய்துகொள்ள ஆரம்பித்து விட்டார்களோ! ஒருவேளை, நீ ஏதோ புதிதாக ஒன்றைக் கண்டு பிடித்ததாக நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், எனது அன்பே, உனக்கு முன்பே இந்தக் காரியம் கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறது. வெகு காலத்திற்கு முன்பே இக்காரியத்தைப் பற்றி சிந்தித்திருக்கிறார்கள். இன்னும் கூட இந்தக் காரியத்தை எல்லா விபசார விடுதிகளிலும் செய்து வருகிறார்கள்.' மரியா டிமிட்ரிவ்னா இம்மாதிரி சொல்லிவிட்டு, தன்னுடைய சட்டையின் அகன்ற கைகளை வழக்கம் போல பயமுறுத்தும் தோரணையில் மடக்கிவிட்டுக்கொண்டு, கடுமையான தோற்றத்தோடு சுற்றிலும் பார்த்துவிட்டு, அந்த அறையைக் கடந்து போனாள்.

மரியா டிமிட்ரிவ்னாவைப் பற்றி மக்கள் பயம் கொண்டிருந்த போதிலும் பீட்டர்ஸ்பர்க்கில் அவளை ஒரு கோமாளி என்றே கருதி வந்தார்கள். ஆகவே, அவள் சொன்னவைகளில் ஒரு விகாரமான வார்த்தையை மட்டும், அவர்கள் மெதுவான குரலில் திரும்பத் திரும்ப சொல்லி வந்தார்கள். அதாவது, அந்த வார்த்தையில் தான் அவளுடைய கருத்து முழுவதிற்கும் உள்ள கொடுக்கு இருப்பதாக அவர்கள் நினைத்தார்கள்.

சமீப காலமாக இளவரசர் வாசைலிக்கு தாம் என்ன சொன்னார் என்பது அடிக்கடி மறந்து போகிறது. ஆகவே, ஒரே விஷயத்தை திரும்பத் திரும்ப நூறு தடவைகள் அவர் சொல்லிக் கொண்டிருப் பார். அவருக்கு வாய்ப்பு கிடைக்கிற பொழுதெல்லாம், அவருடைய குமாரியிடம் பின்வருமாறு அவர் பேசி வந்தார்: -

'ஹெலன், நான் உன்னிடம் ஒரு வார்த்தை பேசவேண்டும்' என்று சொல்லி, அவளைத் தனியாக அழைத்துச் சென்று அவளுடைய கையை கீழ்நோக்கி இழுப்பார். 'நான் சில விஷயங்களைப் பற்றி கேள்விப்பட்டேன்...உனக்குத் தெரியும். நல்லது, எனது அன்பான குழந்தையே, உன்னுடைய தந்தையின் இருதயம் எம்மாதிரி மகிழ்ச்சி பெறுகிறது என்பது உனக்குத் தெரியும். அதாவது, நீ... நீ ரொம்பவும் கஷ்டமடைந்து போனாய். ஆனால், என்னுடைய அன்பான குழந்தையே; நீ உன்னுடைய உள்ளத்தை மட்டும் ஆலோசனை கேட்க வேண்டும். நான் சொல்லக் கூடியது அவ்வளவுதான்' என்று எப்போதும் ஒரேவிதமான உணர்ச்சியைக் காட்டும் அவருடைய தோற்றத்தை மறைத்துக்கொண்டு, தம்முடைய கன்னத்தை தமது குமாரியின் கன்னத்தில் அழுத்தி விட்டு, அங்கிருந்து போவார்.

பிலைபின் என்பவர் மிகுந்த புத்திசாலியான மனிதர் என்ற புகழ்ச்சியை இன்னும் இழந்துவிடவில்லை. ஹெலனுக்கு எப்போதுமே உள்ள, கொஞ்சம்கூட விருப்பு வெறுப்பு அற்ற நண்பர்களில், அவர் ஒருவர். அம்மாதிரி மனிதர்கள் எக்காலத்திலும் காதலர்களாக மாற முடியாது. அவர் ஒரு தடவை, ஹெலனுடைய விஷயத்தைப் பற்றி தம்முடைய கருத்தைக் கூறினார். அச்சமயம் அங்கே மிகவும் நெருங்கிய நண்பர்கள், ஒரு சிறு கூட்டமாகக் கூடியிருந்தார்கள்.

'பிலைபின், கவனித்துக் கேளும்' என்று ஹெலன் சொன்னாள். அவள் எப்போதுமே அம்மாதிரிதான் தன்னுடைய நண்பர்களை குடும்பப் பெயர் சொல்லி அழைப்பது வழக்கம். தன்னுடைய மோதிரம் அணிந்த வெள்ளை விரல்களினால் அவருடைய சட்டையின் கையைப் பற்றிச் சொன்னாள். 'நீர் உமது சகோதரிக்குச் சொல்லுகிற மாதிரி எனக்கு பதில் சொல்ல வேண்டும். அதாவது, நான் இந்த விஷயத்தில் என்ன செய்வது? இருவரில் நான் யாரைத் தேர்ந்தெடுக்கவேண்டும்?' என்று கேட்டாள்.

பிலைபின் தமது நெற்றியை சுருக்கிக்கொண்டு, சிறிது யோசனை செய்தார். அவருடைய உதடுகளில் புன்னகை காணப்பட்டது.

'நீ இம்மாதிரி கேட்டதனால், நான் ஆச்சரியமடைந்துவிட வில்லை. ஒரு உண்மையான நண்பன் என்ற முறையில், உன்னுடைய விஷயத்தைப் பற்றி நான் பல தடவைகளில் சிந்தித்திருக்கிறேன். நீ அந்த இளைஞரான இளவரசரை திருமணம் செய்தால்' என்று சொல்லிவிட்டு, ஒரு விரலை மடக்கினார். 'இனிமேல் உன் வாழ்நாள் முழுவதும், மற்றவர்களை மணம்

செய்து கொள்வதற்கான சந்தர்ப்பத்தை இழந்து விடுவாய். அது மட்டுமல்ல, அரசவையின் அதிருப்தியை நீ பெறுவாய். இந்த விஷயத்தில், அந்த அரசவைக்கு ஒரு விதத் தொடர்பு இருக்கிறது என்பது உனக்குத் தெரியும். ஆனால், அந்த முதிய பிரபுவை திருமணம் செய்தால், அவருடைய கடைசி காலத்தை மகிழ்ச்சியானதாகச் செய்ய முடியும். அதைத் தவிர, அந்தப் பிரபுவின் விதவை என்ற முறையில், அந்த இளவரசர் உன்னை மீண்டும் கல்யாணம் செய்துகொள்ள விரும்பக்கூடும்' என்று பிலைபின் சொல்லிவிட்டு, தமது நெற்றியைத் தடவிவிட்டார்.

'அவர்தான் உண்மையான நண்பர்' என்று ஹெலன் சொல்லி, மகிழ்ச்சி கொண்டு மீண்டும் அவருடைய சட்டைக் கையைத் தொட்டாள். 'ஆனால், உமக்குத் தெரியும், நான் இருவரையும் காதலிக்கிறேன். இருவரில் யாருக்கும் வருத்தம் கொடுக்க நான் விரும்பவில்லை. அவர்கள் இருவருவடைய சந்தோஷத்திற்காக நான் என்னுடைய வாழ்க்கையை கொடுக்கத் தயார்' என்றாள்.

பிலைபின் தமது தோள்களைக் குலுக்கினார். அதாவது, இந்தக் கஷ்டத்திற்கு தாம் கூட ஒரு உதவியும் செய்ய முடியாது என்று சொல்வதைப் போல அது இருந்தது.

'மகா சாமர்த்தியான ஒரு பெண். அதாவது விஷயத்தை வெகு தெளிவாகப் போட்டுவிட்டாள். அவள் மூன்று பேர்களையும் ஏக காலத்தில் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறாள்' என்று அவர் நினைத்தார்.

'உனது கணவர் இதைப் பற்றி என்ன சொல்வார் என்பதை எனக்கு சொல்லு' என்று பிலைபின் கேட்டார். அவர் அவருடைய புகழ் மிக பலமாக நிறுவப்பட்டு விட்டபடியால், அம்மாதிரியான கேள்வியைக் கேட்பதற்கு அவர் பயப்படவில்லை.

'இந்த திருமணத்திற்கு அவர் சம்மதிப்பாரா?'

'ஓ, அவர் என்னை அவ்வளவு தூரம் காதலிக்கிறார்' என்று ஹெலன் சொன்னாள். என்ன காரணத்தினாலோ, பீயர் கூட தன்னை காதலிப்பதாக ஹெலன் நினைத்தாள். 'எனக்காக எதை வேண்டுமானாலும் அவர் செய்வார்.'

பிலைபின் மீண்டும் தமது நெற்றியைச் சுருக்கி ஏதோ ஒன்றை கேலியாகச் சொல்லத் தயாரானார்.

'உனக்கு விவாக ரத்து கொடுப்பதற்கு, அவர் தயாராய் இருப்பாரா?' என்று அவர் கேட்டார்.

ஹெலன் சிரித்தாள்.

அந்த திருமணத்தின் நியாயத்தைப் பற்றி சந்தேகம் கொள்ளுபவர்களில், ஹெலனுடைய தாயாரான இளவரசி குராகினாவும் ஒருவள். அவள் தன்னுடைய குமாரியைப்பற்றி எப்போதுமே பொறாமையால் துன்பப்பட்டு வந்தாள். இப்போது ஹெலனுக்கு ஏற்படப்போகும் அதிருஷ்டத்தைக் கண்டு அவளால் சகிக்க முடியவில்லை. ஆகவே, அவள் ஒரு ருஷ்ய பாதிரியிடம் ஆலோசனை செய்தாள். அதாவது, விவாக ரத்து செய்வதும், கணவர் உயிரோடு இருக்கும்போது, மீண்டும் கல்யாணம் செய்து கொள்ளுவதும் முடியுமா? என்று கேட்டாள். அது முடியாத செயல் என்று அந்த பாதிரி பதில் சொன்னார். அவ்ளுக்கு சுவிசேஷத்தி லிருந்து ஒரு வாக்கியத்தை அவர் எடுத்துக் காட்டியபோது, அவள் மகிழ்ச்சி கொண்டாள். அதாவது, மறு திருமணம் செய்து கொள்வது, ஒரு கணவன் உயிரோடு இருக்கும்போது, கூடவே கூடாது என்று அந்த வாக்கியம் தடை செய்திருந்தது.

இந்த வாதங்களை ஒருவராலும் எதிர்த்து பேச முடியாது என்ற உறுதியோடு, அவள் தன்னுடைய குமாரியின் வீட்டிற்கு ஒரு நாள் காலையில், அவளைத் தனியாகச் சந்திப்பதற்காக வந்தாள்.

தனது தாயார் சொல்லிய ஆட்சேபணைகளையெல்லாம் கவனமாக ஹெலன் கேட்ட பின்பு, மரியாதையாகவும் கேலியாகவும் புன்முறுவல் கொண்டாள்.

'ஆனால், அந்த வாக்கியத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக் கிறதே, 'விவாக ரத்து செய்தவர்களை யார் திருமணம் செய்தாலும்...' என்று சொல்கிறதே' என அந்த முதிய இளவரசி சொன்னாள்.

'ஓ, அம்மா, இம்மாதிரி அசட்டுத்தனமாகப் பேசவேண்டாம். உனக்கு ஒரு விஷயமும் புரியாது. என்னுடைய நிலைமையில் நான் செய்யவேண்டிய சில கடமைகள் உண்டு' என்று ஹெலன் ருஷ்ய மொழியிலிருந்து மாறி பிரஞ்சு மொழியில் பேசினாள். தன்னுடைய நிலைமையைத் தெளிவாக ருஷ்ய மொழியில் சொல்ல முடியாது என்று அவள் எப்பொழுதுமே உணர்ந்து வந்தாள். பிரஞ்சு மொழிதான் அவளுக்குச் சரளமாகத் தோன்றியது.

'ஆனால், என்ன அன்பே...'

'ஓ, அம்மா, பரிசுத்த பிதாவை நீ எப்படி அறிந்து கொள்ளாமல் இருக்கிறாய்? அவர்தான் எல்லாவற்றிற்கும் அனுமதி கொடுக்கும் உரிமை உள்ளவர்...' அச்சமத்தில் ஹெலனோடு வசித்து வந்த ஒரு தோழி, மேன்மை தங்கியவர் நடன மண்டபத்தில் இருப்பதாகவும், அவர் அவளைப் பார்க்க விரும்புவதாகவும் கூறினாள்.

'இல்லை, நான் அவரைப் பார்க்க விரும்பவில்லை என்று அவரிடம் சொல்லு. அவர் தாம் சொன்ன சொல்லை நிறைவேற்றாமல் இருப்பதற்காக நான் கோபமாய் இருக்கிறேன்' என்று ஹெலன் கூறினாள்.

'கோமகளே, ஒவ்வொரு பாவத்திற்கும் மன்னிப்பு உண்டு' என்று அழகிய தலை முடியைக் கொண்ட வாலிபர் சொல்லிக் கொண்டே அறைக்குள் நுழைந்தார். அவருடைய முகமும் மூக்கும் நீளமாக இருந்தன.

முதிய இளவரசி எழுந்து, மரியாதையோடு அவருக்குத் தலை வணங்கினாள். அந்த வாலிபர் அவளைக் கொஞ்சமும் கவனிக்க வில்லை. முதிய இளவரசி தனது குமாரியிடம் தலையை ஆட்டிவிட்டு, அந்த அறையிலிருந்து வெளியே போனாள்.

'ஆமாம்...அவள் சொல்வது சரிதான்' என்று அந்த முதிய இளவரசி நினைத்தாள். மேன்மை தங்கியவரின் தரிசனத்தைப் பார்த்ததும் அவளுடைய மறுப்புகள் எல்லாம் மறைந்து போயின. 'அவள் செய்வது சரி. ஆனால், நம்முடைய வாலிப காலத்தில், இவற்றையெல்லாம் எப்படி நாம் அறியாமல் இருந்தோம்? இதெல்லாம் அவ்வளவு சுலபமானதாய் காணப்படுகிறது' என்று அவள் தன்னுடைய வண்டியில் ஏறும்போது நினைத்தாள்.

ஆகஸ்டு மாத ஆரம்பத்தில், ஹெலனுடைய விவகாரங்கள் தெளிவாயின. அவள் தன்னுடை கணவருக்கு - தன்னை மிகவும் காதலிப்பதாக மனோராஜ்யம் செய்துகொண்டிருந்த கணவருக்கு தன்னுடையக் கருத்தை எழுதினாள். அதாவது, என்.என். என்பவரைக் கல்யாணம் செய்ய தான் உத்தேசித்திருப்பதாகவும், அவள் உண்மையான ஒரே மதமாய் உள்ள மதத்தில் சேர்ந்து விட்டதாகவும், விவாக ரத்துக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் அவர் செய்யும்படியாகவும், அதைப்பற்றிய விஷயத்தை அக்கடிதத்தைக் கொண்டுவருகிறவர் தெளிவாகச் சொல்வார் என்றும் அக்கடிதத்தில் எழுதியிருந்தாள்.

'ஆகவே, நண்பரே, அந்தக் கடவுளின் சக்திவாய்ந்த பராமரிப்பில் உம்மை வைத்துக்கொள்ளும்படி நான் அவரை பிரார்த்திக்கிறேன் - உம்முடைய சிநேகிதி, ஹெலன்.'

பீயரின் வீட்டிற்கு இந்தக் கடிதம் கொண்டுவரப்பட்டது. ஆனால், அவர் அச்சமயத்தில் பாராடினோ யுத்த களத்தில் இருந்தார்.



பாராடினோ போர் முடிவடையும் தருணத்தில், ராயேவ்ஸ்கியின் பீரங்கிப் படை தளத்திலிருந்து, இரண்டாவது தடவையாக பீயர் கீழே இறங்கி ஓடிவந்தார். ஒரு சந்து வழியாக கினியாஜ்கோவாவுக்கு சிப்பாய்களின் கூட்டங்களோடு போனார். அங்கே காயம் கட்டும் கூடாரத்திற்குப் பக்கத்தில் போய்ச் சேர்ந்தார். அந்த இடத்தில் ரத்தக் காட்சிகளைப் பார்த்து, முனங்கல் கூச்சல்களைக் கேட்டதும், அந்த சிப்பாய்க் கூட்டங்களோடு கலந்து, அங்கிருந்து வேகமாய் முன்னேறினார்.

அவர் மனப்பூர்வாக இப்பொழுது விரும்பியது எல்லாம், ஒரே ஒரு விஷயம்தான். அதாவது, அன்று முழுவதும் அவர் அனுபவித்த அந்த பயங்கரமான உணர்ச்சிகளிலிருந்து வேகமாக வெளியேற வேண்டும் என்பதேயாகும். சாதாரணமான வாழ்க்கைக்குத் திரும்பி ஒரு அறையில் தமது படுக்கையில் படுத்து அமைதியாகத் தூங்கவேண்டும் என்று அவர் விரும்பினார். வாழ்க்கையின் சாதாரண நிலையில்தான் தம்மைப் பற்றியோ, தாம் அன்று பார்த்தவைகளைப் பற்றியோ, உணர்ந்தவைகளைப் பற்றியோ அறிந்துகொள்ள முடியும் என்று அவர்நினைத்தார். ஆனால், அந்த வாழ்க்கையின் சாதாரணமான நிலைமைகளை அவரால் எங்கும் கண்டுபிடிக்க முடியவில்லை.

அவர் போய்க்கொண்டிருந்த அந்த ரஸ்தாவுக்கு மேலாக பீரங்கி வெடிகுண்டுகளோ, துப்பாக்கி குண்டுகளோ பறந்து ஊதலிட்டுக் கொண்டு போகவில்லை. ஆனால், ஒரு யுத்த களத்தில் என்னென்ன காணப்படுமோ, அவையெல்லாம் அவரைச்சுற்றி எல்லா பக்கங்களிலும் காணப்பட்டன. அதே மாதிரியான துன்பங்கள், களைப்புகள், விசித்திரமான, பராமுகமான முகங்கள், ரத்தக் காட்சிகள், சிப்பாய்களின் மேலங்கிகள், ஆகியவை காணப் பட்டன. சுடுகிற சப்தங்கள் தூரத்தில் கேட்டபோது அவை இன்னமும் பீயருக்குப் பீதியை உண்டுபண்ணின. துர்வாடையும் தூசியும் வீசிக்கொண்டிருந்தன.

மஜாய்ஸ்க் ரஸ்தா வழியாக இரண்டு மைல் தூரம் போனதும், தெரு வழியில் பீயர் அமர்ந்தார்.

அந்திவேளை வந்துவிட்டது. பீரங்கிகளின் முழக்கங்கள் மறைந்து போயின. தமது முழங்கையில் சாய்ந்துகொண்டு, வெகு நேரம் வரையில் பீயர் படுத்திருந்தார். அந்த இருட்டில் தம்மைக்

கடந்துபோகும் நிழல்களை நோக்கிக்கொண்டிருந்தார். ஒரு பீரங்கிக் குண்டு பயங்கரமாய் ஊதிக்கொண்டு தம்மை நோக்கிப் பறந்து வருவதாக இடைவிடாமல் அவர் கற்பனை செய்து கொண்டிருந்தார். திடீரென்று உடல் பதறி எழுந்து உட்கார்ந்தார். அவர் எவ்வளவு நேரம் அங்கே இருந்தார் என்பது அவருக்கு தெரியாது. நள்ளிரவில் மூன்று சிப்பாய்கள் விறகுகளை எடுத்துக்கொண்டு அவருக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்து தீ மூட்டினார்கள்.

அந்த சிப்பாய்கள் பீயரை கடைக்கண்களால் நோக்கினார்கள். அவர்கள் மூட்டிய தீய எரிய ஆரம்பித்ததும் அதிக ஒரு இரும்புப் பாத்திரத்தை வைத்து அந்த பாத்திரத்திற்குள் காய்ந்துபோன ரொட்டிகளைத் துண்டாக்கிப் போட்டார்கள். சிறிது கொழுப்பையும் அதில் போட்டார்கள். கொழுப்பு வாசனையும் புகை வாசனையும் கலந்து வீசியது. பீயர் எழுந்து உட்கார்ந்து பெருமூச்சுவிட்டார். அந்த மூன்று சிப்பாய்களும் தின்று கொண்டும், தங்களுக்குள் பேசிக்கொண்டும் இருந்தார்கள். பீயரை அவர்கள் கவனிக்கவில்லை.

'நீர் யார்?' என்று திடீரென்று அவர்களில் ஒருவன் கேட்டான். அவர்கள் கேட்டதானது 'உமக்கு உண்பதற்கு விருப்பமானால் உமக்கும் கொடுக்கிறோம். ஆனால், நீர் யோக்கியமானவர்தானா என்பதை எங்களுக்கு சொல்லவேண்டும்' என்று கூறுவதைப்போல இருந்தது.

'நான், நான்...' என்று பீயர் சொன்னார். தமது சமூக அந்தஸ்தை எவ்வளவு தூரம் குறைக்க முடியுமோ, அவ்வளவு தூரம் குறைத்து, இந்த சிப்பாய்களின் அந்தஸ்திற்கு நெருங்கி வரும்படி செய்து, தம்மை அவர்கள் நன்றாகப் புரிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும் என்று உணர்ந்தார். 'நான் ஒரு பாதுகாப்புப்படை அதிகாரி. ஆனால், என்னுடைய மனிதர்கள் இங்கே இல்லை. நான் போருக்கு வந்தேன். அவர்களிடமிருந்து பிரிந்துவிட்டேன்.'

'அப்படியா!' என்று ஒருவன் கேட்டான்.

மற்றொருவன் தலையை ஆட்டினான்.

'இதில் கொஞ்சம் சாப்பிடுகிறீரா?' என்று முதலில் கேட்ட சிப்பாய் கேட்டான். தன்னிடம் இருந்த மர அகப்பையை சுத்தமாக நக்கி, அதை பீயரிடம் கொடுத்தான்.

அந்த நெருப்பின் பக்கத்தின் பீயர் அமர்ந்து அந்த உணவைச் சாப்பிட ஆரம்பித்தார். இதுவரை அவர் சாப்பிட்ட எதையும் விட அது மிகுந்த ருசியாய் இருக்கிறது என்று அவர் நினைத்தார். அவர்

அங்கே அமர்ந்து குனிந்து ஆசையோடு கரண்டி கரண்டியாக எடுத்து வாயில் போட்டு சுவைத்தார். அச்சமயம், அந்த நெருப்பினால் அவருடைய முகம் நன்றாய் தெரிந்தது. அவரை மௌனமாக சிப்பாய்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

'நீர் எங்கே போகவேண்டும்? எங்களுக்கு சொல்லும்' என்று அவர்களில் ஒருவன் கேட்டான்.

'மஜாய்ஸ்கிற்கு போகவேண்டும்.'

'நீர் ஒரு பிரபு அல்லவா?'

'ஆம்.'

'உமது பெயர் என்ன?'

'பீட்டர் கிரைலிச்'

'நல்லது, பீட்டர் கிரைலிச், எங்களோடு வாரும். உம்மை அங்கே கொண்டுபோய் சேர்க்கிறோம்.'

அந்த கும்மிருட்டில் அந்த சிப்பாய்கள் பீயரோடு மஜாய்ஸ்கிற்கு நடந்து போனார்கள்.

அவர்கள் மஜாய்ஸ்கிற்கு அருகில் சென்று அந்த பட்டணத்திற்கு போவதற்காக செங்குத்தான குன்றில் ஏறிக்கொண்டிருந்தபோது சேவல்கள் கூவிக்கொண்டிருந்தன. தாம்இறங்கியிருந்த ஹோட்டல் அந்தக் குன்றின் கீழே இருந்தது என்பதையும், அதைக் கடந்து தாம் வந்துவிட்டதையும் முற்றிலும் மறந்து, அந்த சிப்பாய்களோடு பீயர் போய்க் கொண்டிருந்தார். அவருடைய மறதி அவ்வளவு தூரம் இருந்தது. குன்றின்மேல் ஏறும்போது பாதி வழியில் அவருடைய குதிரைக்காரனை அவர் சந்தித்திருக்காவிட்டால், வெகு நேரம்வரை அந்த நினைவு அவருக்கு தோன்றியே இருக்காது. அவருடைய குதிரைக்காரன் அந்தப் பட்டணத்தில் போய் அவரைத் தேடிவிட்டு, ஹோட்டலுக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். அந்த இருட்டில் பீயரின் வெள்ளைத் தொப்பியைக் கொண்டு அவரை குதிரைக்காரன் அடையாளம் கண்டுகொண்டான்.

'மேன்மை தங்கியவரே, நாங்கள் அதைரியம் கொள்ள ஆரம்பித்தோம். நீர் எப்படி நடந்து வரும்படி நேரிட்டது? நீர் எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்?' என்று அவன் கேட்டான்.

'ஓ, ஆம்' என்றார் பீயர்.

சிப்பாய்கள் நின்றார்கள்.

'அப்படியானால், உமது ஆட்களை நீர் கண்டு பிடித்துவிட்டீர் அல்லவா?' என்று அவர்களில் ஒருவன் கேட்டான். 'நல்லது, போய் வருகிறோம், பீட்டர் கிரைலிச் - அப்படித்தானே?'

'போய் வருகிறோம், பீட்டர் கிரைலிச்' என்று மற்றவர்களும் சொல்லியதை பீயர் கேட்டார்.

'போய் வாருங்கள்' என்று அவர் சொல்லிவிட்டு, தமது குதிரைக் காரனோடு ஹோட்டலுக்குத் திரும்பினார்.

'அவர்களுக்கு நான் ஏதாவது கொடுத்திருக்கவேண்டும்' என்று பீயர் நினைத்து, தமது ஜேபிகளைத் தடவினார். 'இல்லை, கொடுக்காமல் இருப்பது நல்லது' என்று மற்றொரு உள்ளொலி கூறியது.

அந்த ஹோட்டலில் ஒரு அறைகூட கிடைக்கவில்லை. எல்லாம் நிறைந்திருந்தது. பீயர் முற்றத்திற்குப் போனார். தலையிலிருந்து கால்வரை தம்மை மூடிக்கொண்டு, தமது வண்டியில் படுத்தார்.



பீயர் தமது தலையைத் தலையணையில் சாய்க்கும்போதே, தூங்கி விட்டார். ஆனால், திடீரென்று அவருக்கு சப்தங்கள் கேட்டன. பூம், பூம், பூம் என்ற பீரங்கி சப்தங்களும், பீரங்கி குண்டுகள் கீழே விழும் சப்தங்களும், முனக்கங்களும், கூச்சல்களும், இரத்த வாசனையும், வெடி மருந்து வாசனையும் அவருக்குத் தோன்றி, அவற்றால் ஒரு பீதி ஏற்பட்டு, அவரை ஒரு மரண பயம் பற்றிக்கொண்டது. பீதி நிறைந்த தமது கண்களைத் திறந்து, தம்முடைய மேல் சட்டையிலிருந்து தலையை மேலே தூக்கிப் பார்த்தார். அந்த முற்றத்தில் எல்லாம் அமைதியாக இருந்தன. யாரோ ஒருவருடைய வில்லைச் சேவகன், அந்த வெளி வாசல் வழியாக சகதிகளில் உழன்று போய்க்கொண்டு, அந்த ஓட்டல்காரனுடன் பேசிக்கொண்டிருந்தான். தாம் எழுந்ததால் ஏற்பட்ட சப்தத்தைக் கண்டு பதறிய புறக்கள், தங்களுக்கு மேலேயிருந்த அந்த இருண்ட முக்கட்டில் சிறகடித்துக் கொண்டிருந்தன. அந்த முற்றம் முழுவதும், குதிரை லாயங்களைப்போல நெடி வீசி வந்தது. அங்கே அமைதி நிலவியிருந்ததால், அச்சமயம் பீயருக்கு மகிழ்ச்சியாகத் தோன்றியது. கூரை சாய்ப்புகளுக்கு இடையே தோன்றிய நட்சத்திரங்கள் நிறைந்த தெளிவான வானத்தை, அவரால் பார்க்க முடிந்தது.

'கடவுளுக்கு நன்றி. அம்மாதிரி காரியங்கள் முடிந்து விட்டன' என்று கூறி, மீண்டும் தமது தலையை மூடிக்கொண்டார். 'ஓ, பயம் என்பது, எவ்வளவு பயங்கரமான விஷயம், அதற்கு நான் பணிந்து கொடுத்தது, எவ்வளவு வெட்கக்கேடான விஷயம். ஆனால், அவர்கள் கடைசிவரையில் எவ்வளவு உறுதியாக, அமைதியாக நிற்கிறார்கள்...' என்று அவர் நினைத்தார்.

அந்த பீரங்கிப் படையில் இருந்தவர்களையும், தமக்கு உணவு கொடுத்தவர்களையும், அந்த தெய்வச் சிலை முன்பாக வணங்கியவர்களையுமே அவர்கள் என்று பீயர் நினைத்தார். அவர்களை, அந்த விசித்திரமான மனிதர்களை, இதற்கு முன்பாக பீயருக்குத் தெரியாது. என்றாலும், அவர்கள் மற்றவர்களை விடத் தெளிவாக, அவருடைய மனக் கண் முன்பாகத் தோன்றினார்கள்.

'ஒரு சிப்பாயாக, வெறும் சிப்பாயாக' என்று, பீயர் மீண்டும் தூங்க ஆரம்பிக்கும்போது எண்ணினார். 'அந்தப் பொதுவான வாழ்க்கையில் முழுமையாக ஈடுபட வேண்டுமானால், அவர்களை அம்மாதிரி ஈடுபடும்படி செய்யக்கூடிய ரகசியத்தை அறிய வேண்டும். ஆனால், என் மீதிருக்கும் இந்த வேண்டாத விஷயங்களை யெல்லாம், எப்படித் தவிர்ப்பது? என்னுடைய தந்தையிடமிருந்து நான் ஓடிப் போயிருக்கலாம். அல்லது, டோலாகாவுடன் டுயல் சண்டை செய்து பின்பு, நான் ஒரு சிப்பாயாக ராணுவத்தில் சேர்ந்திருக்க வேண்டும்'. இங்கிலீஷ் கிளப்பில் நடந்த விருந்தும், டோலாகாவை போருக்கு அழைத்ததுமாகிய நினைப்புகள் அவருடைய மனதில் திடீரென்று தோன்றின. அதன் பின்னால், அவருடைய நன்மையாளரான டார்ஜோக் என்பவரைப் பற்றிய நினைவு அவருக்கு வந்தது. அதன் பின்னால், பிரீ மேஸன் சங்கத்தில் நடந்த ஒரு சடங்கைப் பற்றிய நினைப்பு அவருக்குத் தோன்றியது. அந்தக் கூட்டம், இங்கிலீஷ் கிளப்பில் நடந்தது. தமக்கு நெருங்கியவராகவும், அன்பானவராகவும் உள்ள ஒருவர், அந்த மேஜையின் கோடியில் இருந்தார். 'ஆம், அவரே தான்; அவர் தான் என்னுடைய நன்மையாளர். ஆனால், அவர் இறந்து போனார். ஆம், அவர் இறந்து போனார். அவர் உயிரோடு இருக்கிறார் என்பதை நான் அறியவில்லை. அவர் இறந்து போனதற்காக, நான் எவ்வளவு துக்கமடைந்தேன். இப்பொழுது அவர் உயிரோடு இருப்பதற்காக, நான் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறேன்' என்று அவர் நினைத்தார். அந்த மேஜையின் ஒரு பக்கத்தில் அனடோலும், டோலாகாவும், நெஸ்வைட்ஸ்கியும், டெனைசாவும் இன்னும் அவர்களைப் போன்ற மனிதர்களும் காணப்பட்டார்கள். (அவருடைய கனவில், இந்த மனிதர்கள் எல்லாம், முன்னால் குறிப்பிட்ட 'அவர்கள்' என்ற

(கோஷ்டியில் சேர்ந்தவர்களாகக் காணப்பட்டார்கள்.) அனடோலும் டோலாகாவும் உரத்த குரலில் பாடிக்கொண்டும் கூச்சலிட்டுக் கொண்டும் இருந்ததை அவர் கேட்டார். ஆனால், இந்த கூச்சல்களுக்கு இடையில், அவருடைய நன்மையாளர் எப்பொழுதும் பேசிக்கொண்டிருந்த வார்த்தைகள் அவருக்கு தெளிவாகக் கேட்டு வந்தன. அவருடைய வார்த்தைகள் பொருள் பொதிந்தவையாகவும், யுத்த களத்தில் பீரங்கி சப்தங்கள் தொடர்ச்சியாகக் கேட்டதைப் போலத் தொடர்ச்சியாகவும், ஆனால், இனிமையாகவும், இதமாகவும் இருந்தன. தமது நன்மையாளர் என்ன சொல்லுகிறார் என்பதை, பீயரால் அறிந்து கொள்ள முடியவில்லை. (அவருடைய கனவில் சிந்தனைப் பிரிவுகள் தெளிவாய்க் காணப்பட்டன.) அவர் நல்ல செயல்களின் அவசியத்தைப் பற்றியும், 'அவர்களைப்' போல இருப்பது சாத்தியம் என்பதைப் பற்றியும் பேசி வந்தார். எளிய, இனிய, உறுதியான முகங்களைக் கொண்ட 'அவர்கள்', தமது நன்மையாளரைச் சுற்றி கூடிக்கொண்டார்கள். 'அவர்கள்' அன்போடு இருந்தாலும், பீயரை 'அவர்கள்' பார்க்கவில்லை. பீயரை அவர்களுடைய கவனத்தை இழுப்பதற்கும் விரும்பி பீயர் எழுந்து நின்றார். ஆனால், அச்சமயத்தில் அவருடைய கால்கள் குளிர்ந்து போய் மூடப்படாமல் இருந்தன.

அதைப் பார்த்து அவர் அவமானமடைந்தார். அவருடைய கால்களை ஒரு கையால் மறைத்தார். அவருடைய மேல் சட்டை உண்மையில் அச்சமயத்தில் கீழே நழுவியது. அதை சரி செய்துகொண்டிருக்கும்போது, பீயர் தமது கண்களைத் திறந்தார். மீண்டும் அதே கூரை சாய்ப்புகளும், கம்பங்களும், முற்றமும் அவருக்குத் தோன்றின. ஆனால், இப்பொழுது அவையெல்லாம் நீல நிறமாகவும், ஒளிர் விட்டுக்கொண்டும், பனியினாலும் மூடுபனியினாலும் மின்னிக்கொண்டும் காணப்பட்டன.

'இப்பொழுது விடிந்து விட்டது' என்று பீயர் நினைத்தார். 'எனக்கு வேண்டியது அதுவல்ல. என்னுடைய நன்மையாளரின் வார்த்தைகளை நான் கேட்டு அறிந்து கொள்ளவே விரும்புகிறேன்'. மீண்டும் அவர், தம்முடைய மேற்சட்டையால் தம்மை மூடிக்கொண்டார். ஆனால், பிரீ மேஸன் சங்கத்தையோ, அல்லது அவருடைய நன்மையாளரையோ, இப்பொழுது அவரால் காண முடியவில்லை. சிந்தனைகள் மட்டும் அங்கு இருந்தன; வார்த்தைகளினால் ஒருவர் வெளிப்படுத்திய சிந்தனைகளோ, அல்லது தாமே உருவாக்கிய சிந்தனைகளோ அங்கு இருந்தன.

இந்த நினைப்புகளை அவர் பின்னால் நினைவு கூர்ந்தபோது, தமக்கு வெளியே யாரோ ஒருவர் அவற்றைப் பேசியதாக அவர் நம்பினார். ஆனால், அன்று அவர் பார்த்த காட்சிகள்தான், அந்த நினைப்புகளை அவருக்குத் தோற்றுவித்தன.

விழித்துக்கொண்டிருக்கும்போது அம்மாதிரி நினைப்புகளை அவர் நினைப்பதற்கும் சொல்லுவதற்கும் அவரால் முடியவில்லை என்று அவருக்குத் தோன்றியது.

'யுத்தத்தை தாங்குவது என்பது, கடவுளின் சட்டத்திற்கு மனிதனுடைய சுதந்திரத்தை சமர்ப்பிக்கும் ஒரு கஷ்டமான காரியமாகும்' என்று ஒரு குரல் சொல்லியது. 'கடவுளின் விருப்பத்திற்குப் பணிந்து போவதே சுலபமான காரியம். அவரிடமிருந்து நீர் தப்ப முடியாது. 'அவர்கள்' சாதாரணமானவர்கள். அவர்கள் பேசுவதில்லை. ஆனால், செய்கையில் காட்டுகிறார்கள். பேசுவது என்பது வெள்ளிக்கு இணை. ஆனால், பேசாமல் இருப்பது, தங்கத்திற்கு இணை. மரணத்திற்கு பயந்துகொண்டு இருப்பவன், எதற்கும் எஜமானனாக இருக்க முடியாது. பயப்படாமல் இருப்பவன் தான், எல்லாவற்றிற்கும் எஜமானனாக முடியும். மனிதனுக்குத் துன்பங்கள் இல்லையென்றால், அவன் தன்னுடைய சக்திக் குறைவையும், தன்னையும் அறிந்துகொள்ள முடியாது. (தமது கனவில் இம்மாதிரி நினைத்துக்கொண்டோ, அல்லது கேட்டுக்கொண்டோ பீயர் இருந்தார்.) எல்லாவற்றினுடையவும் முக்கியத்துவத்தை உமது உள்ளத்தில் எப்படி சேர்த்து வைத்துக்கொள்ளுவது என்பதை அறிவதுதான், எல்லாவற்றையும் விட கஷ்டமான காரியம். எல்லாவற்றையும் ஒன்று சேர்ப்பதா? இல்லை. எல்லாவற்றையும் ஒன்று சேர்ப்பது அல்ல. எண்ணங்களை ஒன்று சேர்க்க முடியாது. ஆனால், இந்த எண்ணங்களையெல்லாம் ஒன்றாகக் கடிவாளம் போட்டு அடங்கி ஆள்வதுதான், நமக்குத் தேவையான விஷயம். ஆம், ஒருவர் அவைகளுக்குக் கடிவாளம் போட வேண்டும், கடிவாளம் போட வேண்டும்' என்று அவர் தமக்குள்ளேயே பரவசம் கொண்டு, திருப்பி திருப்பி சொன்னார். தாம் சொல்ல விரும்பியவைகளை, இந்த வார்த்தைகள் தான் சொல்லுகின்றன என்றும், தம்மை வருத்தி வரும் பிரச்னையை, இவைதான் தீர்த்து வைக்கின்றன என்றும் அவர் நினைத்தார்.

'ஆம், கடிவாளம் போட வேண்டும், கடிவாளம் போடுவதற்கு காலம் வந்து விட்டது.'

'கடிவாளங்களை மாட்டுவதற்கு காலம் வந்துவிட்டது, மேன்மை தங்கியவரே. மேன்மை தங்கியவரே, நாம் குதிரைகளுக்கு கடிவாளம் போடவேண்டும். நேரம் வந்துவிட்டது...' என்று ஏதோ ஒரு குரல், திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தது.

அது தான் அவருடைய குதிரைக்காரனின் குரல். அவரை எழுப்புவதற்கு அவன் முயற்சி செய்துகொண்டிருந்தான். பீயரின் முகத்திற்கு நேராக சூரிய ஒளி வீசியது. அந்த அசுத்தமான உள்முற்றத்தை அவர் நோக்கினார். தங்களுடைய மெலிந்த குதிரைகளுக்கு சிப்பாய்கள் தண்ணீர் காட்டிக்கொண்டிருந்தார்கள். அந்த வாசல் வழியாக வண்டிகள் போய்க்கொண்டிருந்தார். வெறுப்போடு பீயர் தமது முகத்தைத் திருப்பிக்கொண்டார். கண்களை மூடிக்கொண்டு, அந்த வண்டியின் ஆசனத்தில் வேகமாகப் படுத்தார். 'இல்லை, அது எனக்கு வேண்டாம். அதை நான் பார்க்கவோ, புரிந்துகொள்ளவோ விரும்பவில்லை. என்று கனவில் தோன்றிய மெய்ஞானத்தை புரிந்துகொள்ள நான் விரும்புகிறேன். இன்னும் ஒரு வினாடி அதிகமாயிருந்தால் போதும். அவற்றையெல்லாம் நான் அறிந்து கொண்டிருப்பேன். ஆனால், இப்பொழுது என்ன செய்வது? கடிவாளம் போடுவது. ஒவ்வொன்றுக்கும் எப்படி நான் கடிவாளம் போட முடியும்?' என்று பீயர் நினைத்தார். அவர் தம்முடைய கனவில் கண்டவைகளுடையவும், நினைத்தவைக்களுடையவும் அர்த்தங்கள் எல்லாம் அழிந்து போவதைக் கண்டு பீதியுற்றார்.

அந்த குதிரைக்காரனும், வண்டிக்காரனும், அந்த ஓட்டல் காரனும், பீயரிடம் ஒரு விஷயத்தைக் கூறினார்கள். மஜாய்ஸ்க் என்ற இடத்தை பிரஞ்சுக்காரர்கள் நெருங்கிவிட்டதாகவும், அங்கிருந்து நமது வீரர்கள் புறப்பட்டுப் போவதாகவும், ஒரு அதிகாரி வந்து கூறியதாகச் சொன்னார்கள்.

குதிரைகளுக்குக் கடிவாளம் போட்டுக்கொண்டு வரும்படியும், தாம் அந்த நகரத்தின் வழியாக நடந்து போவதாகவும் பீயர் கூறினார்.

சுமார் 10, 000 காயம்பட்டவர்களைப் பின்னால் விட்டுவிட்டு, துருப்புகள் மேலே போய்க்கொண்டிருந்தன. முற்றங்களிலும், வீடுகளில் ஜன்னல்களிலும், தெருக்களிலும், காயமடைந்தவர்கள் நிரம்பியிருந்தார்கள். காயமடைந்தவர்களை ஏற்றிக்கொண்டு போகும் வண்டிகளிலிருந்து, கூச்சல்களும் திட்டுதல்களும் அடித்துக்கொள்ளுதல்களும் காதில் கேட்டன. தம்மிடம் வந்து சேர்ந்த தமது வண்டியை, தமக்குப் பழக்கமான ஒரு காயமடைந்த ஜெனரலுக்கு கொடுப்பதாகவும், அவரோடு தாம் மாஸ்கோவுக்கு

வருவதாகவும் பியர் கூறினார். போகிறவழியில், தமது மைத்துனரான அனடோலும், இளவரசர் ஆண்ட்ரூவும் இறந்து போனதாகக் கேள்விப் பட்டார்.

# 11

## 10

ஆகஸ்டு 30-ந் தேதியன்று மாஸ்கோவிற்கு பியர் வந்தார். அந்த நகரத்தின் வெளி வாசல்களுக்குப் பக்கத்தில் கோமகன் ராஸ்டாப்சைனின் உதவியாளர் அவரை சந்தித்தார்.

'உமக்காக எல்லா இடங்களிலும் தேடிக்கொண்டிருக்கிறோம். உம்மை முக்கியமாகப் பார்க்கவேண்டும் என்று கோமகன் விரும்புகிறார். ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி உம்மிடம் உடனே பேசவேண்டும் என்றும், அதற்காக நீர் அவரைச் சந்திக்க வேண்டும் என்றும் அவர் விரும்புகிறார்' என்று அந்த உதவியாளர் கூறினார்.

வீட்டிற்குப் போகாமல் மற்றொரு வண்டியில் ஏறிக்கொண்டு மாஸ்கோவின் சேனாதிபதியைப் பார்ப்பதற்காக பியர் போனார்.

அன்று காலையில்தான் சாக்கோல்நிக்கியில் உள்ள தமது வசந்த கால ஜாகையிலிருந்து கோமகன் ராஸ்டாப்சைன் திரும்பினார். அவருடைய வீட்டிலுள்ள முன் அறையிலும், வரவேற்பு அறையிலும், ஏராளமான அதிகாரிகள் கூடியிருந்தார்கள். அவருடைய உத்தரவின் பேரில் அங்கு வந்தவர்களாகவே, அல்லது அவரிடமிருந்து உத்தரவுகளைப் பெறுவதற்காக வந்தவர்களாகவோ அவர்கள் இருந்தார்கள். வாசைல்சிக்காவும் பிலாட்டாவும் ஏற்கெனவே கோமகனைப் பார்த்து, அவரிடம் பேசிவிட்டார்கள். அதாவது, மாஸ்கோவைப் பாதுகாப்பது என்பது அசாத்தியம் என்றும், அதை சரணடையும்படி விட்டு விடவேண்டியதுதான் என்றும் அவர்கள் சொன்னார்கள். இந்த விஷயத்தை மாஸ்கோ வாசிகளிடம் சொல்லாமல் மறைத்து வைத்திருந்தார்கள். என்றாலும், சர்க்காரரின் வெவ்வேறு இலாகாக்களின் தலைவர்கள், வெகு சீக்கிரமாக எதிரிகளின் கையில் மாஸ்கோ போய்விடும் என்பதை அறிந்திருந்தார்கள். கோமகன் ராஸ்டாப்சைனுக்கும் இது தெரியும். என்றாலும், தங்களுடைய சொந்த பொறுப்புகளைத் தட்டிக்கழிப்பதற்காகத் தங்களுடைய இலாகாக்களை எப்படி நடத்த வேண்டும் என்பதில் உத்தரவுகளைப் பெறுவதற்காக அவர்கள் கவர்னரிடம் வந்தார்கள்.

வரவேற்பு அறைக்குள் பீயர் நுழைந்தபோது, ஒரு ராணுவ தூதர் ராஸ்டாப்சைனின் அறையிலிருந்து வெளியே வந்துகொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும், அவரிடம் பல கேள்விகளைக் கேட்டார்கள். அந்த தூதர் தமது கைகளால் அதைரியமாக சைகைகளைக் காட்டிக்கொண்டு, அந்த அறையைக் கடந்து போனார்.

வரவேற்பு அறையில் சோர்வடைந்த கண்களோடு பீயர் அமர்ந்திருந்தபோது, அங்கிருந்த வாலிபர்களாயும் முதியவர்களாயும் இருந்த ராணுவ சிவில் இலாகாக்களைச் சேர்ந்த பற்பல விதமான அதிகாரிகளைக் கவனித்து வந்தார். அவர்கள் எல்லாருக்கும் அதிருப்தியும் அமைதிக் குறைவும் இருந்ததாகக் காணப்பட்டார்கள். அங்கிருந்த ஒரு கோஷ்டியிடம் பீயர் சென்றார். அவர்களில் ஒருவரை அவர் அறிவார். பீயருக்கு வந்தனம் சொல்லிவிட்டு, தங்களுடைய பேச்சுக்களைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தார்கள்.

'அவர்களை வெளியே அனுப்பிவிட்டு பின்னால் மீண்டும் கொண்டு வருவதனால் ஒரு கெடுதலும் ஏற்படாது. ஆனால், விஷயங்கள் இப்பொழுது இருக்கிற நிலைமையைப் பார்த்தால், அதற்கும் ஒருவராலும் பதில் சொல்ல முடியாது.'

'ஆனால், அவர் என்ன எழுதுகிறார் என்பதை நீர் பாரும்...' என்று தமது கையில் இருந்த ஒரு அச்சடித்த காகிதத்தைச் சுட்டிக் காட்டி மற்றொருவர் சொன்னார்.

'அது வேறு விஷயம். அது மக்களுக்கு அவசியமாய் இருக்கிறது' என்று முதலில் பேசியவர் கூறினார்.

'அது என்ன விஷயம்?' என்று பீயர் கேட்டார்.

'ஓ, அது ஒரு புதிய பிரகடனம்.'

அதை பீயர் வாங்கி வாசிக்க ஆரம்பித்தார். அதாவது:

'மஜாய்ஸ்க் வழியாகக் கலங்காத மேன்மை தங்கியவர் சென்றார். நம்மை நோக்கி வரும் துருப்புகளை சந்திப்பதற்காக அவர் போனார். அவரை எதிரி சீக்கிரமாகத் தாக்க முடியாதபடி ஒரு பலமான இடத்தில் அவர் அரண் அமைக்கப் போகிறார். இங்கிருந்து அவருக்கு 48 பீரங்கிகளும், அவற்றிற்கு வேண்டிய குண்டுகளும் அனுப்பப்பட்டிருக்கின்றன. கடைசிச் சொட்டு ரத்தம் இருக்கிறவரையில் மாஸ்கோவைத் தாம் பாதுகாக்கப் போவதாக 'கலங்காத மேன்மை தங்கியவர்' சொல்லுகிறார். தெருக்களில் நின்றுகூட அவர் யுத்தம் செய்யத் தயாராய் இருக்கிறார். கோர்ட்டுகள் மூடப்பட்டதற்காக, சகோதரர்களே, நீங்கள் கலங்க

வேண்டாம். காரியங்களை யெல்லாம் ஒழுங்காக அமைத்தாக வேண்டும். போக்கிரிகள் தலை நீட்டினால், அவர்களை நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம். சமயம் வரும்போது நகரத்தில் உள்ள வாலிபர்களும், விவசாய வாலிபர்களும் எனக்கு அவசியமாய் இருக்கும். ஒன்று இரண்டு நாட்களுக்கு முன்பாகவே நான் அதைத் தெரிவிப்பேன். இன்னமும் அவர்களுக்கான அவசியம் வரவில்லை. அதனால் நான் பேசாமல் இருக்கிறேன். கோடாலி உபயோகமாய் இருக்கும். வேட்டையாடும் ஈட்டிகூட மோசமானது அல்ல. ஆனால், மூன்று கவர் பிளந்த கம்பு எல்லாவற்றையும் விட, அதிக உபயோகமாய் இருக்கும். ஒரு கட்டு தானியக்கதிர்களை விட, பிரஞ்சுக்காரன் கனமானவன் அல்ல. நாளை டின்னருக்குப் பின்னால், தேவ மாதாவின் இபரியன் சிலையை காத்தரைன் ஆஸ்பத்திரியில் உள்ள காயம்பட்டவர்களிடம் நான் கொண்டு போவேன். ஜெபிக்கப்பட்ட தண்ணீரை அவர்கள் மீது தெளிப்போம். அவர்கள் சீக்கிரம் குணமாவதற்கு அது உபயோகமாய் இருக்கும். நானும் இப்பொழுது சௌக்கியமாய் இருக்கிறேன். எனது ஒரு கண்ணிலிருந்த வியாதி குணமாய் விட்டது. இப்பொழுது இரண்டு கண்களாலும் நான் கவனித்து வருகிறேன்.'

'நகருக்குள் போர் செய்வது என்பது அசாத்தியம் என்று ராணுவ அதிகாரிகள் என்னிடம் சொன்னார்கள். அதோடு நிலைமை...' என்று பீயர் சொன்னார்.

'நல்லது, அது நிச்சயம். அதைத்தான் நாங்களும் சொல்லிக் கொண்டிருந்தோம்' என்று முதலில் பேசியவர் கூறினார்.

'எனது ஒரு கண்ணிலிருந்து வியாதி குணமாய் விட்டது, இப்பொழுது இரண்டு கண்களாலும் நான் கவனித்து வருகிறேன் என்று அவர் சொல்லுகிறாரே, அதற்கு என்ன அர்த்தம்?' என்று பீயர் கேட்டார்.

'கோமகனுக்கு ஒரு கண்ணில் கண் கட்டி இருந்தது. அவருக்கு என்ன செய்கிறது என்று மக்கள் கேட்கிறார்கள் என அவரிடம் நான் சொல்லியபோது அவர் எரிச்சல் கொண்டார். அது இருக்கட்டும், கோமகனே' என்று அந்த உதவியாளர் புன்னகையோடு திடீரென்று பீயரைப் பார்த்துப் பேசினார். 'உம்முடைய குடும்பத்தில் தொல்லைகள் ஏற்பட்டிருப்பதாக நாங்கள் கேள்விப்படுகிறோம். கோமகளாகிய உமது மனைவி...'

'நான் எதையும் கேள்விப்படவில்லை' என்று சிரத்தை இல்லாமல் பீயர் பதில் அளித்தார். 'ஆனால், நீங்கள் என்ன கேள்விப் பட்டீர்கள்?'

'ஓ, நல்லது, மக்கள் தாங்களாகவே விஷயங்களை உற்பத்தி செய்வார்கள் என்பது நீர் அறிந்தது. நான் என்ன கேள்விப் பட்டேனோ, அதைத்தான் சொன்னேன்.'

'ஆனால், நீர் என்ன கேள்விப்பட்டீர்?'

'நல்லது, உமது மனைவியான கோமகள் வெளிநாட்டிற்கு போவதற்காகத் தயாராகிக்கொண்டிருக்கிறாள் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அதெல்லாம் வெறும் அசட்டுப் பேச்சு என்று நான் நினைக்கிறேன்...' என அந்த உதவியாளர் அதே புன்னகையுடன் பேசினார்.

'இருக்கலாம்' என்று பராக்கு புத்தியோடு தம்மைச் சுற்றி பார்த்துக்கொண்டு பீயர் கூறினார். ஒரு நீல நிற வெளிக்கோட்டை அணிந்திருந்த, ஒரு குட்டையான முதியவன், பனியைப்போன்ற வெள்ளையான தாடியுடனும், புருவங்களுடனும், சிவந்த முகத்துடனும் அங்கு காணப்பட்டான். அவனை பீயர் சுட்டிக்காட்டி அவன் யார் என்று கேட்டார்.

'அவனா? அவன் ஒரு வியாபாரி. அதாவது, ஹோட்டல் வைத்து நடத்துகிற வெரெஷ்சாகின் என்பவன். பிரகடனம் சம்பந்தமாக அவனைப் பற்றிய விவகாரத்தை நீர் கேள்விப் பட்டிருக்கலாம்.'

'ஓ, அவன்தான் வெரெஷ்சாகினா?' என்று பீயர் கேட்டார். அந்த முதியோருடைய அமைதியான, உறுதியான முகத்தை நோக்கினார். அவன் துரோகியாக இருப்பதற்கு ஏதாவது அறிகுறிகள் காணப்படுகின்றனவா என்பதை கவனித்தார்.

'இவன் அவனல்ல. இவன் அந்தப் பிரகடனத்தை எழுதியவனுடைய தந்தை. அந்த வாலிபன் சிறையில் இருக்கிறான். அவன் சுலபமாகத் தப்ப முடியாது' என்று அந்த உதவியாளர் கூறினார்.

ஒரு பதக்கத்தை அணிந்து கொண்டிருந்த ஒரு முதிய கனவானும், தம்முடைய கழுத்தில் ஒரு சிலுவையைத் தொங்க விட்டுக் கொண்டிருந்த ஜெர்மனியரான மற்றொரு அதிகாரியும், அங்கே பேசிக்கொண்டிருந்தவரிடம் நெருங்கினார்கள்.

'அது ஒரு சிக்கலான கதை. உமக்கே தெரியும்' என்றார் அந்த உதவியாளர். அந்தப் பிரகடனம் இரண்டு மாதங்களுக்கு முன்பாக வெளியாயிற்று. கோமகனுக்கு அவ்விஷயம் அறிவிக்கப்பட்டது. அதைப்பற்றி துப்பு துலக்கும்படி அவர் உத்தரவிட்டார். காப்ரியல் ஐவானாவிச் என்பவர் அதைப் பற்றி விசாரித்தார். அதைப் பிரகடனம் 63 கைகள் வழியாகக் கடந்து இருக்கிறது. யாரிடம் இருந்து இதைப் பெற்றாய் என்ற ஒருவரிடம் அவர் கேட்டார். இன்னாரிடமிருந்து

வாங்கினேன் என்று அவர் பதில் சொன்னார். அவரிடம் சென்று அவர் யாரிடமிருந்து வாங்கினார் என்று கேட்டார். அப்படியாகக் கேட்டுக்கொண்டே வந்தபோது, இந்த அரைகுறை படிப்புக் காரனான வியாபாரியிடம் அந்த வரிசை வந்து சேர்ந்தது. அவரிடம் அவருக்கு யார் அதைக் கொடுத்தார் என்று கேட்டார். அவர் யாரிடமிருந்து பெற்றார் என்பது நமக்குத் தெரியும். போஸ்ட் மாஸ்டரிடமிருந்துதான் அவர் பெற்றிருக்க முடியும். ஆனால், அவர்களுக்குள் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தது என்று தோன்றுகிறது. அதனால் அவர் தாமே அதைத் தயாரித்ததாகவும், ஒருவரிடமிருந்தும் அதைப் பெறவில்லை என்றும் பதில் சொன்னார். அவரை அவர்கள் பயமுறுத்தினார்கள். மீண்டும் கேள்விகள் கேட்டார்கள். அவரோ தாமே அதைத் தயார் செய்வததாக விடாமல் சொல்லி வந்தார். இதைக் கோமகனுக்கு அறிவித்தார்கள். அவர் இந்த மனிதரை அழைத்து 'நீர் யாரிடமிருந்து அந்த பிரகடனத்தைப் பெற்றீர்?' என்று கேட்டார். 'நானே அதை எழுதினேன்' என்று அந்த மனிதர் பதில் சொன்னார். 'கோமகனைத்தான் உமக்குத் தெரியுமே' என்று அந்த உதவியாளர் மகிழ்ச்சியாக, பெருமை கொண்ட புன்னகையோடு பேசினார். 'கோமகன் உடனே பயங்கமாக வெகுண்டு எழுந்தார். அந்த மனிதரின் பிடிவாதத்தையும், பொய்க் கூற்றையும், அகம் பாவத்தையும் கொஞ்சம் நினைத்துப்பாரும்.'

'ஆனால், கோமகன் அதை கிளியூசாரியோவிடமிருந்து பெற்றதாக சொல்ல வேண்டுமென்று விரும்பினார் அல்லவா? எனக்குப் புரிகிறது' என்று பீயர் சொன்னார்.

'இல்லவே இல்லை' என்று பீதியோடு அந்த உதவியாளர் பதில் அளித்தார். 'கிளியூசாரியோவ் இந்த விஷயம் இல்லாமலேயே அவர் செய்த வேறு குற்றங்களுக்குப் பதில் சொல்லி ஆகவேண்டும். அதனால்தான் அவரை நாடு கடத்தினார்கள். விஷயம் என்னவென்றால், கோமகனுக்கு இந்தக் காரியம் மிகுந்த எரிச்சலைக் கொடுத்தது. 'உம்மால் இதை எப்படி எழுதியிருக்க முடியும்?' என்று அவர் கேட்டார். தமது மேஜை மீது கிடந்த 'ஹாம்பர்க்கெஜட்'டை எடுத்தார். இதோ இருக்கிறது. இதை நீராக எழுதவில்லை; நீர் மொழி பெயர்த்து இருக்கிறீர். உமக்கு பிரஞ்சு மொழிகூடத் தெரியாது. அதனால் வெறுக்கத்தக்க விதமாக மொழி பெயர்த்து இருக்கிறீர், முட்டாள்' என்றார். நீர் என்ன நினைக்கிறீர்? 'இல்லை, நான் எந்தப் பத்திரிகையையும் வாசிக்கவில்லை; நானேதான் அதை எழுதினேன்' என்று அந்த மனிதர் பதில் சொன்னார். உடனே கோமகன், 'அப்படியானால், நீர் ஒரு தேசத்துரோகி. உம்மை

விசாரணை செய்யச் சொல்லுவேன். நீர் தூக்கில் இடப்படுவீர். யாரிடமிருந்து அதைப் பெற்றீர் என்பதை இப்பொழுது சொல்லும்' என்று கேட்டார் உடனே அந்த மனிதர், 'நான் எந்தப் பத்திரிகையையும் வாசிக்கவில்லை; நானேதான் அதை எழுதினேன்' என்று மறுபடியும் சொன்னார். அந்தப் பேச்சு அதோடு முடிந்தது. அவருடைய தந்தையை கோமகன் வரவழைத்தார். ஆனால், அந்த மனிதர், தாம் பிடித்த பிடியிலிருந்து மாற வில்லை. அதன் பின்னால், அவர் விசாரணை செய்யப்பட்டு கடுங்காவல் தண்டனை அடைந்தார் என்று நினைக்கிறேன். அந்த மனிதனுக்காகப் பரிந்து பேச இப்பொழுது அவருடைய தந்தை வந்திருக்கிறார். அந்த வாலிபர் ஒன்றுக்கும் உபயோகம் இல்லாத ஒரு ஆசாமி. வியாபாரியின் மகனாய் இருந்து, டம்பாச்சாரியாகவும் பெண் வேட்டைக்காரராகவும் இருக்கிற ரகம்; உமக்குத் தெரியும். எங்கோ சில பிரசங்கங்களை அந்த மனிதர் கேட்டிருக்கிறார். உடனே பிசாசைக்கூட ஒரு கை பார்த்துவிடலாம் என்று அவர் மனோராஜ்யம் செய்கிறார். அவர் அம்மாதிரி ரகத்தைச் சேர்ந்தவர். கல் பாலத்திற்குப் பக்கத்தில் ஒரு சாப்பாட்டு விடுதியை அவருடைய தந்தை நடத்தி வருகிறார். பரம்பொருளான கடவுளின் உருவத்தைக் காட்டும் ஒரு பெரிய சித்திரம் அங்கே இருப்பதை நீர் அறிவீர். அந்த சித்திரத்தில், அவருடைய ஒரு கையில் பூகோளமும், மற்றொரு கையில் செங்கோலும் இருப்பதாக வரையப்பட்டிருக்கிறது. அந்த சித்திரத்தை அவன் தன்னுடைய வீட்டிற்குச் சில தினங்களுக்கு எடுத்துக்கொண்டு போனான். அங்கே அவன் என்ன செய்தான் தெரியுமா? யாரோ ஒரு அயோக்கிய ஓவியக்காரனைப் பிடித்து...' என்று உதவியாளர் சொன்னார்.




இந்த கதைகளுக்கு மத்தியில் சேனாதிபதி குட்டுஜோவ் பீயரை அழைத்தார்.

சேனாதிபதி கோமகன் ராஸ்டாப்சைனின் அறைக்குள் அவர் போனார். அவர் தமது முகத்தை சுளித்துக்கொண்டு, நெற்றியையும் கண்களையும் தமது கையால் தடவிக் கொண்டிருந்தார்.

'ஆ, பெரிய வீரரே, சௌக்கியமாய் இருக்கிறீரா?' என்று ராஸ்டாப்சைன் அந்த அறையிலிருந்த குட்டையான மனிதர்

வெளியேறியதும் கேட்டார். 'உம்முடைய வீரத்தைப் பற்றி நாம் கேள்விப்பட்டோம். ஆனால், இப்பொழுது விஷயம் அதுவல்ல. எனது அன்பானவரே, நமக்குள் பேசிக்கொள்ளுவோம். நீர் பிரீமேசன் சங்கத்தைச் சேர்ந்தவரா?' என்று கடுமையாகப் பேசினார். அம்மாதிரி இப்பது, ஏதோ ஒரு குற்றம் போலவும், என்றாலும் அதை மன்னித்துவிட விரும்புவதாகவும், அவர் பேசியது இருந்தது. பீயர் மௌனமாக இருந்தார். 'எனது நண்பரே, எனக்கு கிடைத்த செய்தி ஆதாரமுள்ளது. ஆனால், பிரீ மேசன்களில் எத்தனையோ விதமான பேர்கள் இருக்கிறார்கள். மனித சமூகத்தை காப்பாற்றப்போவதாகச் சொல்லிக்கொண்டு, ருஷ்யாவின் நாசத்தை விரும்பும் கூட்டத்தை நீர் சேர்ந்தவர் அல்ல என்று நான் நம்புகிறேன்.'

'ஆம், நான் ஒரு பிரீ மேசன்' என்றார் பீயர்.

'எனது அன்பானவரே, இதோ பாரும். ஸ்பெரான்ஸ்கியும் மாக்னிட்ஸ்கியும், அவர்களுக்கு உரிய இடங்களுக்கு, நாடு கடத்தப் பட்டார்கள் என்பதை, நீர் அறிந்திருப்பீர் என்று எதிர்பார்க்கிறேன். கிளியூசாரியோவும், அதே மாதிரி பலனை அடைந்தார். சாலமன் கோயிலைக் கட்டப்போவதாக சொல்லிக்கொண்டு, தங்களுடைய தந்தை நாட்டின் கோயிலை நாசமாக்குகிற பலருக்கும், அதே கதிதான் கிடைத்திருக்கிறது. இம்மாதிரி செய்வதற்கு காரணங்கள் உண்டு என்பதை நீர் அறிந்து கொள்ளலாம். அந்த போஸ்ட்மாஸ்டர், தீங்கு செய்யக்கூடிய பேர்வழியாக இல்லாமலிருந்தால், அவரை நான் நாடு கடத்தியிருக்கமாட்டேன். அந்த போஸ்ட்மாஸ்டர் நகரத்திலிருந்து வெளியே போவதற்கு, நீர் உமது வண்டியை அவருக்கு கொடுத்தீர் என்றும், அவருடைய தஸ்தாவேஜுகளை பந்தோபஸ்தாக வைத்திருப்பதற்க, நீர் அவரிடமிருந்து பெற்று இருக்கிறீர் என்றும் நான் அறிகிறேன். உமக்கு கெடுதல் எதுவும் செய்ய நான் விரும்பவில்லை. உம்மிடம் எனக்கு பிரியமுண்டு. என்னடைய வயதில் நீர் பாதிதான் இருப்பீர். ஒரு தந்தையைப் போல, உமக்கு நான் புத்திமதி சொல்லுகிறேன். அம்மாதிரி மனிதர்களோடு எவ்விதமான போக்கு வரத்தும் வைத்துக் கொள்ளாமல், இதை விட்டு கூடிய சீக்கிரம் நீர் புறப்பட்டுப் போகும்படி, நான் உமக்கு ஆலோசனை கூறுகிறேன்.'

'கிளியூசாரியோவ் என்ன தவறு செய்தார், கோமகனே?' என்று பீயர் கேட்டார்.

'அதை அறிந்து கொள்ளுவது என்னுடைய வேலை. அதைப் பற்றி நீர் கேட்க முடியாது' என்று ராஸ்டாப்சைன் கூச்சலிட்டார்.

'நெப்போலியனுடைய பிரகடனங்களை விநியோகம் செய்தார் என்று அவர் மீது குற்றம் சாட்டினார், அம்மாதிரி செய்ததாக

பெரெஷ்சாகின்...' என்று ராஸ்டாப்சைனைப் பார்க்காமலேயே பீயர் பேசினார்.

'அதுதான் விஷயம்' என்று ராஸ்டார்ப்சைன் பீயரைப் பார்த்து முன்னைவிட அதிகமாகக் கூச்சலிட்டு, திடீரென்று முகம் சுளித்தார். 'வெரெஷ்சாகின் ஒரு கெட்டுப் போனவன்; ஒரு துரோகி. அவனுக்கு உரிய தண்டனையை அவன் பெறுவான்' என்று அவர் சொன்னார். ஒரு அவமானத்தை பற்றிப் பேசும்போது, எப்படி பழிவாங்கும் வேகத்தோடு பேசுவார்களோ, அம்மாதிரி அவர் பேசியது இருந்தது. 'என்னுடைய செய்கைகளைப் பற்றி வாதிப்பதற்காக, உம்மை நான் அழைக்கவில்லை. உமக்கு ஒரு ஆலோசனை கூறுவதற்காகவே, நான் அழைத்தேன். அதை உத்தரவு என்று வேண்டுமானாலும் நீர் வைத்துக்கொள்ளலாம். கிளியூசாரியோவ் போன்ற மனிதர்களோடு வைத்துள்ள தொடர்புகளையெல்லாம் உடனே முறித்துவிட்ட, நகரத்தை விட்டு புறப்பட்டுப் போகும்படி நான் கேட்டுக் கொள்ளுகிறேன். அசட்டுத்தனமாக யார் நடந்துகொண்டாலும், அதை நான் சிதறடிப்பேன்' என்று சொன்னார். பெஜுகாவ் மீது, இதுவரை எவ்விதமான குற்றமும் இல்லை; ஆகவே, அவர் மீது இம்மாதிரி குற்றஞ் சாட்டுவது சரியல்ல என்று ஒருவேளை அவருக்குத் தோன்றியிருக்கலாம். அதனால் நட்பு முறையில் பீயரின் கையைப் பற்றி அவர் பேசினார்: 'ஒரு பெரிய பேராபத்து நடக்கப் போகிறது. என்னுடன் பேசுகிறவர்களிடம், மரியாதையாக நடந்துகொள்ளுவதற்கு எனக்கு நேரமில்லை. என்னுடைய தலை சில சமயம் சுற்றுகிறது. எனது அன்பானவரே, நல்லது. இப்பொழுது நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்?'

'ஏன், ஒன்றும் இல்லை' என்று பீயர் பதில் அளித்தார். தமது கண்களை உயர்த்தவோ, தமது முகத்தில் தோன்றிய சிந்தனைக் குறியை மாற்றவோ செய்யாமல் அவர் பேசினார்.

கோமகன் முகம் சுளித்தார்.

'எனது அன்பானவரே, நட்பு முறையில் நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். உம்மால் சாத்தியமான வரையில், சீக்கிரமாக இதைவிட்டுப் போய்விடும். உமக்கு நான் சொல்லக்கூடியதெல்லாம் அதுதான். சொல்லுவதைக் கேட்டு நீர் நடப்பீராகில், அது மிகவும் உமக்கு மகிழ்ச்சியாக இருக்கும். போய் வாரும், எனது அன்பானவரே...ஓ, மற்றொரு விஷயம்' என்று சொல்லிவிட்டு, பீயருக்குப் பின்னால் அவர் கூச்சலிட்டார். 'ஏசுவின் சங்கத்தைச் சேர்ந்த பரிசுத்த பாதிரியார்களின் பிடிப்பில், கோமகள் அகப்பட்டுக் கொண்டாள் என்பது உண்மையா?'

பீயர் அதற்குப் பதில் சொல்லவில்லை. இதற்கு முன்பாக அவர் எப்பொழுதும் காட்டியிராத விதமான கோபத்தோடும் எரிச்சலோடும், ராஸ்டாப்சைனின் அறையை விட்டு வெளியேறினார்.

அவர் தமது வீட்டை வந்து அடையும்போது, ஏற்கெனவே இருட்டிவிட்டது. அவரைப் பார்ப்பதற்காக சுமார் எட்டு பேர் வந்திருந்தார்கள். ஒரு கமிட்டியின் காரியதரிசி, அவருடைய பட்டாளத்தின் கர்னல், அவருடைய மேனேஜர், அவருடைய பிரதான காரியஸ்தர், இன்னும் அவரிடம் தங்களுடைய குறைகளைத் தெரிவித்துக்கொள்ளுவதற்காக வந்தவர்கள், ஆகியவர்களாகும். அவர்கள் எல்லோருக்கும் பீயரிடம் வேலை இருந்தது. பீயரின் உத்தரவுகளைப் பெறுவதற்காக அவர்கள் வந்திருந்தார்கள். இந்தவிஷயங்களில் எல்லாம் பீயருக்கு சிரத்தை இல்லை. இவற்றையெல்லாம் அவர் புரிந்துகொள்ளவுமில்லை. தம்மிடமிருந்து அவர்கள் போவதற்காக ஏதோ பதில்களை சொல்லி அனுப்பினார். கடைசியாக தாம் தனியாக இருந்தபோது, தமது மனைவியின் கடிதத்தைத் திறந்து வாசித்தார்.

'அவர்கள், அந்த பீரங்கிப் படையிலிருந்து சிப்பாய்கள், இளவரசர் ஆண்ட்ரூ ஆகியவர்கள் கொல்லப்பட்டார்கள்... அந்த முதியவர்... கடவுளுக்கு அடிபணிவதே எளிமையானதாகும். துன்பப்படுவது அவசியமானது...இவற்றின் அர்த்தங்கள் எல்லாம்... கடிவாளம் போடவேண்டும்... எனது மனைவி திருமணம் செய்துகொள்ளப் போகிறாள்... ஒருவர் மறந்துவிட வேண்டும். புரிந்துகொள்ளவேண்டும்...' என்று நினைத்துக் கொண்டு, தமது ஆடைகளைக் களையாமலேயே படுக்கையில் படுத்ததும் உடனே தூங்கிவிட்டார்.

மறுநாள் காலையில் அவர் விழித்ததும் அவருடைய பிரதான காரியஸ்தர் அவரிடம் வந்தார். அவர் அந்த நகரத்தை விட்டுப் போய்விட்டாரா, அல்லது போகப் போகிறாரா என்பதை அறிந்து வரும்படி, கோமகன் ராஸ்டாப்சைன் ஒரு போலீஸ் அதிகாரியை அனுப்பியிருந்தார். அந்தத் தகவலை அவருடைய பிரதான காரியஸ்தர் கூறினார்.

பீயருடன் தங்கள் வேலைகளை முடித்துக்கொள்வதற்காக, ஒரு டஜன் பேர்கள் வரவேற்பு அறையில் காத்திருந்தார்கள். பீயர் வேகமாக உடையணிந்துகொண்டு, அவர்களைப் பார்க்கப் போகாமல், பின் வாசலிலுள்ள முற்ற மண்டபத்திற்குப் போய், அங்கிருந்த வெளி வாசல் வழியாக வெளியே போனார்.

அந்த நேரத்திலிருந்து, மாஸ்கோவை அழிக்கும் வேலை முடிவடைகிற வரையில், பீயரின் வீட்டுக்காரர்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் பீயரைப் பார்க்கவே முடியவில்லை. அவர் எங்கிருந்தார் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.

# 11

## 12

செப்டெம்பர் மாதம் முதல் தேதி வரையில், அதாவது நகரத்துக்குள் எதிரி நுழைவதற்கு முதல் நாள் வரையில், ராஸ்டோவ்கள் மாஸ்கோவிலேயே தங்கி இருந்தார்கள்.

ஆபாலென்ஸ்கியின் கோசாக் பட்டாளத்தில் பெட்டியா சேர்ந்த பின்பு, பெலாயா ஜெர்காவ் என்ற இடத்திற்கு புறப்பட்டுப் போனான். அந்த இடத்தில்தான், அவர்கள் அந்த பட்டாளத்தை அமைத்தார்கள். அவன் போனதும், கோமகள் பயத்தினால் பீடிக்கப்பட்டாள். தன்னுடைய புத்திரர்கள் இருவரும் போரில் கலந்திருப்பதையும், தன்னுடைய பாதுகாப்பிலிருந்து அவர்கள் போய்விட்டதையும், இன்றோ, அல்லது நாளையோ, அவர்களில் ஒருவரோ, அல்லது இருவருமோ கொல்லப்பட்டார்கள் என்ற செய்தி வரலாம் என்பதையும், அந்த வசந்த காலத்தில் முதல் தடவையாக அப்பொழுது தான் மிகுந்த தெளிவாக அவள் உணர்ந்தாள். அவளுக்குப் பழக்கமான ஒரு சிநேகிதியின் புத்திரர்கள் மூவர் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். நிக்கலஸைத் திருப்பி அழைக்க அவள் முயற்சித்தாள். பெட்டியாவுடன் தானும் போவதற்கு விரும்பினாள்; அல்லது, பீட்டர்ஸ்பர்க்கில் அவனுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுப்பதற்கு விரும்பினாள். ஆனால், எதுவும் சாத்தியமாகவில்லை. தன்னுடைய பட்டாளம் திரும்பினால் ஒழிய, அல்லது போர்க்களத்திலுள்ள மற்றொரு பட்டாளத்திற்கு தான் மாற்றப்பட்டால் ஒழிய, அவன் திரும்ப முடியாது. ராணுவத்தோடு எங்கேயோ நிக்கலஸ் இருந்தார். அவருடைய கடைசி கடிதத்திற்குப் பின்னால், அவரிடமிருந்து எவ்விதமான தகவலும் இல்லை. அந்த கடைசி கடிதத்தில், இளவரசி மேரியை தாம் சந்தித்தைப் பற்றி விவரமாக எழுதியிருந்தார். இராக் காலங்களில் கோமகள் தூங்குவதில்லை. அவள் எப்பொழுதாவது தூங்கினால், தன்னுடைய குமாரர்கள் இறந்து கிடப்பதைப்போல கனவு காண்பாள். பல ஆலோசனைகளுக்குப் பின்னால், பலரிடம்

பேசியதற்குப் பின்னால், அவளை அமைதி படுத்துவதற்கு கோமகன் வழிகளைக் கண்டுபிடித்தார். ஆபாலென்ஸ்கியின் பட்டாளத்திலிருந்து, பெஸுகாவின் பட்டாளத்திற்கு பெட்டியாவை மாற்றுவதற்கு, அவர் ஏற்பாடு செய்தார். அந்தப் பட்டாளம், மாஸ்கோவிற்குப் பக்கத்தில் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தது. பெட்டியா ராணுவ சேவையில் இருந்தாலும், இம்மாதிரி மாற்றத்தினால் தன்னுடைய குமாரர்களில் ஒருவனையாவது, தன்னுடைய பாதுகாப்பில் வைத்துக் கொள்ளலாம் என்ற திருப்தி கோமகளுக்கு ஏற்பட்டது. பெட்டியாவை மீண்டும் போக விடாமல் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்ய முடியுமென்று அவள் நம்பினாள். ஒரு போரில் கலந்துகொள்ள முடியாத விதத்தில், அவனுடைய உத்தியோக இடங்களை மாற்றிக் கொள்ளலாமென்றும் அவள் நம்பினாள். நிக்கலஸ் போர் முனையில் அபாயத்தில் இருக்கிற வரையில், தன்னுடைய முதல் புத்திரனான அவர் மீதே, தன்னுடைய மற்ற குழந்தைகளைவிட அதிகமான அன்பு தனக்கு இருப்பதாகக் கோமகள் மனோராஜ்யம் செய்துவந்தாள். அம்மாதிரி பட்சபாதம் காட்டுவதற்காக, தன்னையே அவள் கண்டித்துக் கொள்ளுவது உண்டு. ஆனால், தன்னுடைய கடைசி புத்திரனான பெட்டியா படிப்பில் மோசமானவன்; வீட்டிலுள்ள பொருள்களை எப்பொழுதும் உடைத்துக்கொண்டே இருப்பான்; ஒவ்வொருவருக்கும் இடையூறாக இருப்பான்; சப்பை மூக்கையும், மகிழ்ச்சியான கருப்பு கண்களையும், சிவந்த கன்னங்களையும் பெட்டியா கொண்டிருந்தான். அவன் முகத்தில் அப்பொழுது தான் ரோமங்கள் அரும்பிக்கொண்டிருந்தன. இப்பேர்ப்பட்ட ஒரு சிறுவன், பிரம்மாண்டமான, பயங்கரமான, கொடுமையான மனிதர்களோடு சேர்ந்து, போர்க்களத்திற்கு போக விரும்புகிறான். அவர்கள் எங்கேயோ, எதற்காகவோ போர் செய்து கொண்டிருக்கிறார்கள்; ஆனால், அவர்களோடு சேர்ந்திருப்பதில் அவன் மகிழ்ச்சி கொள்ளுகிறான்; இவற்றையெல்லாம் கோமகள் நினைத்தபோது, தன்னுடைய மற்றகுழந்தைகளைவிட அதிகமாக, மிக அதிகமாக, பெட்டியாவை தான் நேசிப்பதாக நினைத்தாள். பெட்டியா திரும்பி வருவதற்கு காலம் நெருங்க நெருங்க, கோமகளுக்கு அதிகமாக அமைதியின்மை ஏற்பட்டது. அவனை சந்திக்கக்கூடிய அந்த மகிழ்ச்சியை அடைவதற்கு, அதுவரை தான் உயிரோடு இருக்கமாட்டாள் என்று நினைக்கவும் ஆரம்பித்தாள். சோனியாவின் பிரசன்னமும், தன்னுடைய அன்புக்குரிய நட்டாஷாவின் பிரச்சனமும், அவளுடைய கணவரின் பிரசன்னமும்

கூட, அவளுக்கு எரிச்சலைக் கொடுத்தன. 'இவர்களோடு எனக்கு என்ன வேண்டியிருக்கிறது? எனக்குப் பெட்டியாவைத் தவிர, வேறு ஒருவரும் தேவையில்லை' என்று நினைத்தாள்.

ஆகஸ்டு கடைசியில் நிக்கலஸிடமிருந்து ராஸ்டோவ்களுக்கு மற்றொரு கடிதம் வந்தது. வாரோநெஜ் என்ற மாகாணத்திலிருந்து அவர் எழுதியிருந்தார். குதிரைகளை வாங்குவதற்காக, அவரை அங்கே அனுப்பியிருந்தார்கள். ஆனால், அந்தக் கடிதம் கோமகளுக்கு அமைதியைக் கொடுக்கவில்லை. தன்னுடைய ஒரு குமாரர் அபாயமான இடத்திலிருந்து விலகி இருப்பதால், பெட்டியாவைப் பற்றிய கவலை அவளுக்கு இன்னும் அதிகமாயிற்று.

ஆகஸ்டு 20-ந் தேதிக்குள்ளாக, ராஸ்டோவ்களுக்குப் பழக்கமானவர்கள் எல்லாருமே, மாஸ்கோவை விட்டு போய்விட்டார்கள். அம்மாதிரி சீக்கிரமாகப் போய்விடும்படி ஒவ்வொருவரும் கோமகளிடம் சொல்லியும்கூட, அவள் அதைக் காதில் வாங்கிக்கொள்ள வில்லை. தன்னுடைய பொக்கிஷமான தன்னுடைய அருமை பெட்டியா திரும்பி வருகிறவரை, அந்தப் பேச்சுக்களை காதில் போட்டுக்கொள்ள முடியாதென்று சொல்லிவிட்டாள். ஆகஸ்டு 28-ந் தேதியன்று பெட்டியா திரும்பி வந்தான். ஆர்வம்கொண்ட கனிவோடு தன்னுடைய தாயார் தன்னை வரவேற்றும்கூட, அந்த 16 வயதான அதிகாரிக்கு திருப்தியைக் கொடுக்கவில்லை. அவனைத் தன்னுடைய பாதுகாப்பிலேயே வைத்திருக்க வேண்டுமென்ற அவளுடைய நோக்கத்தை அவள் மறைத்து வைத்திருந்தபோதிலும், பெட்டியா அதை யூகித்து அறிந்து கொண்டான். அவளோடு இருக்கும்போது அவளுடைய உணர்ச்சிகளுக்கு இணங்கி, தான் பெண்மையாக ஆய்விடக்கூடு மென்று அவன் பயந்தான். அகவே, அவளோடு கனிவில்லாமல் பேசினான். மாஸ்கோவில் அவன் தங்கியிருந்த காலங்களில் கூடியவரையில் அவளைத் தவிர்த்தான். நட்டாஷாவோடு தான், அவன் எப்பொழுதும் இருந்துகொண்டிருப்பான். அவள் மீது காதலர்களுக்கு உள்ள அன்பைப் போன்ற ஒரு சகோதர கனிவு, அவனுக்கு எப்பொழுதுமே உண்டு.

கோமகனின் வழக்கமான அஜாக்கிரதைகளினால், ஆகஸ்டு 29-ந் தேதிவரை, அவர்கள் அதைவிட்டு புறப்படுவதற்கு முடியவில்லை. அவர்களுடைய ரயாஜான், மாஸ்கோ எஸ்டேட்டுகளிலிருந்து தான், அவர்களுடைய உடைமைகளைக் கொண்டு போவதற்கு வண்டிகள் வரவேண்டியதாய் இருந்தன. 30-ந் தேதிவரை அவ்வண்டிகள் வரவில்லை.

ஆகஸ்டு 28-ந் தேதியிலிருந்து 31-ந் தேதிவரையில், ஒரே குழப்பமாகவும், பரபரப்பாகவும் மாஸ்கோ இருந்தது. ஒவ்வொரு நாளும் பாராடினோவில் காயமடைந்த ஆயிரக்கணக்கான வீரர்களை டாராகாமைலாவ் கோட்டை வாசல் வழியாக உள்ளே கொண்டு வந்து, மாஸ்கோவில் வெவ்வேறு பாகங்களுக்கு அவர்களை அனுப்பினார்கள். மாஸ்கோ வாசிகள் தங்களுடைய உடைமைகளை எடுத்துக் கொண்டு, மற்ற வாசல்கள் வழியாக ஆயிரக்கணக்கான வண்டிகளில் போய்க்கொண்டிருந்தார்கள். ராஸ்டாப்சைனின் பிரகடனங்களால் பலன் ஏற்படவில்லை. அந்த பிரகடனங்களாலோ, அல்லது சுயமாகவோ, விசித்திரமான ஒன்றுக்கொன்று விரோதமான வதந்திகள் நகரில் பரவிவந்தன. ஒருவரும் நகரைவிட்டு வெளியேற விடப்பட மாட்டார்கள் என்று சிலர் சொன்னார்கள். மாதாகோயில்களிலுள்ள தெய்வச்சிலைகளை எல்லாம் வெளியே கொண்டு போய் விட்டார்கள் என்றும், நகரிலுள்ளவர்கள் எல்லாரும் வெளியே போய்விடவேண்டு மென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகவும் வேறு சிலர் சொன்னார்கள். பாராடினோ போருக்குப் பின்னால், மற்றொரு போரில் பிரஞ்சுக்காரர்கள் முறியடிக்கப் பட்டதாக சிலர் சொன்னார்கள். ருஷ்ய ராணுவம் அழிக்கப்பட்டதாக வேறு சிலர் சொன்னார்கள். மாஸ்கோவின் தற்காப்புப் படை, பாதிரிகளின் தலைமையில் மூன்று குன்றுகளுக்கு சொல்லுமென்று சிலர் பேசினார்கள். மாஸ்கோவின் ஆர்ச் பிஷப்பான ஆகஸ்டின் என்பவர் வெளியேறக் கூடாதென்று தடை விதிக்கப்பட்டிருப்பதாக சிலர் சொன்னார்கள். துரோகிகளையெல்லாம் பிடித்து விட்டதாகவும், விவசாயிகள் கலகம் செய்து மாஸ்கோவிலிருந்து வெளியே போகிறவர்களைக் கொள்ளை அடிப்பதாகவும் சிலர் சொன்னார்கள். ஆனால், இவையெல்லாம் வெறும் பேச்சுதான். பில்லையில் நடந்த யுத்த கவுன்சிலில், மாஸ்கோவைக் கைவிட்டுவிடவேண்டும் என்று தீர்மானித்த போதிலும், அது இன்னும் அமுலுக்கு வரவில்லை. மாஸ்கோவை விட்டுப் போனவர்களும், இன்னும் தங்கியிருப்பவர்களும், மாஸ்கோ நிச்சயமாக கைவிடப்படும் என்பதை உணர்ந்தார்கள். அதை அவர்கள் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. ஆகவே, சீக்கிரமாக வெளியேறி, தங்களுடைய உடைமைகளைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டு மென்று அவர்கள் நினைத்தார்கள். திடீரென்று எல்லாம் தகர்ந்து போய் மாறிவிடுமென்று பொதுவாக நினைக்கப்பட்டது. ஆனால், செப்டம்பர் 1-ந் தேதி வரையில், அம்மாதிரி எதுவும் நடக்கவில்லை. தூக்கு மேடைக்கு கொண்டு போகப்படும் குற்றவாளி, தான் உடனே

சாகவேண்டும் என்பதை அறிவான் என்றாலும் தன்னை அவன் அழகு பார்த்து, தன்னுடைய தலையிலுள்ள சாய்ந்திருந்த தொப்பியை சரியாக வைத்துக்கொள்வதைப் போல, மாஸ்கோ தன்னை அறியாமலேயே தன்னுடைய பழக்கமான வாழ்க்கையில் போய்க்கொண்டிருந்தது. என்றாலும், அதனுடைய அழிவு காலம் நெருங்கிவிட்டதென்பதையும், அதனுடைய மக்கள் வழக்கமாக அனுபவித்து வந்த வாழ்க்கையின் நிலைமைகள் முழுவதும் மாறிவிடும் என்பதையும் அது அறிந்திருந்தது.

மாஸ்கோவை கைப்பற்றுவதற்கு முன்பாக மூன்று தினங்களில், ராஸ்டோவ்களின் குடும்பத்தார் வெவ்வேறு வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள். குடும்பத்தின் தலைவரான கோமகன் இலியா ராஸ்டோவ், நகரைச் சுற்றி வந்து எல்லாத் திசைகளிலிருந்தும் கிடைக்கிற வதந்திகளை அறிந்துகொண்டு, தங்களுடைய பிரயாணத்திற்காக அவசரமான, மேலெழுந்த வாரியான உத்தரவுகளை தமது வீட்டில் கொடுத்து வந்தார்.

சாமான்கள் கட்டப்படுவதைக் கோமகள் கவனித்து வந்தாள். ஆனால், ஒவ்வொன்றிலும் அவளுக்கு அதிருப்தியே இருந்தது. அவளிடமிருந்து விலகி ஓடும் பெட்டியாவையே எப்பொழுதும் தேடிக் கொண்டிருப்பாள். நட்டாஷாவுடன் எப்பொழுதும் அவன் இருந்து வருவதைக் கண்டு பொறாமை கொண்டாள். சாமான்களை கட்டக் கூடிய காரியார்த்தமான வேலைகளை சோனியா மட்டும்தான் கவனித்து வந்தாள். சமீப காலமாக, சோனியா சோகத்தோடும், மௌனமாகவும் இருந்து வந்தாள், நிக்கலஸின் கடிதத்தில் இளவரசி மேரியைப் பற்றி குறிப்பிட்டிருந்தார். அவளுடைய முன்னிலையிலேயே அதைப் பற்றி கோமகள் மகிழ்ச்சியோடு பேசி வந்தாள். இளவரசியும் நிக்கலஸும் சந்தித்தது தெய்வச் செயல்தான் என்றும் கோமகள் கூறிக்கொண்டிருந்தாள்.

'நட்டாஷாவோடு பால்கோன்ஸ்கி செய்துகொண்ட நிச்சயார்த்தத்தில் நான் எப்பொழுது மகிழ்ச்சி கொண்டதில்லை. ஆனால், இளவரசியை நிக்கலஸ் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று, நான் எப்பொழுதுமே விரும்பி வந்தேன். அம்மாதிரி நடக்குமென்று எனக்கு ஒரு அனுமானம் தோன்றிக்கொண்டிருந்தது. அம்மாதிரி ஏற்படுவது என்பது எவ்வளவு நல்ல காரியமாயிருக்கும்!' என்று கோமகள் சொன்னாள்.

இது உண்மையென்று சோனியா உணர்ந்தாள். ராஸ்டோவ்களின் குடும்ப விவகாரங்களை சரி செய்வதற்கு, ஒரு பணக்காரப்

பெண்ணை நிக்கலஸ் திருமணம் செய்தால்தான் சாத்தியமாகும். ஆகவே, இளவரசியை நிக்கலஸ் ராஸ்டோவ் திருமணம் செய்து கொள்வது, நல்ல ஜோடியாய் இருக்குமென்று அவள் நினைத்தாள். அவளுக்கு அது மிகுந்த மனக் கசப்பாயிருந்தது. ஆனால், தன்னுடைய வருத்தத்திற்கு மாறாக, அல்லது அந்த வருத்தமே காரணமாக நின்று, அப்பொழுது செய்யவேண்டிய மிகுந்த கஷ்டமான வேலைகளைத் தானே ஏற்றுக்கொண்டாள். அதாவது, அவர்களுடைய சாமான்களையெல்லாம் கட்டி சேர்த்து வைப்பதற்கு, அவள் நாள் முழுவதும் சுறுசுறுப்பாய் இருந்து வந்தாள். ஏதாவது செய்யவேண்டுமென்று கோமகனோ, கோமகளோ விரும்பினால், அவர்கள் சோனியாவையே அழைப்பார்கள். பெட்டியாவும், நட்டாஷாவும் அதற்கு நேர் மாறாக இருந்தார்கள். அவர்கள் தங்கள் பெற்றோர்களுக்கு உதவி செய்வதற்கு மாறாக, பொதுவாக ஒவ்வொருவருக்கும் இடையூறாக இருந்தார்கள். நாள் முழுவதும் அவர்கள் ஓடும் காலடி ஓசைகளும், கூச்சல்களும், திடீர் சிரிப்புகளும், வீடு முழுவதும் எதிர் ஒலித்துக் கொண்டிருந்தன. அவர்கள் சிரித்ததற்கும், மகிழ்ச்சியாய் இருந்ததற்கும், காரணம் எதுவும் கிடையாது. அவர்கள் உள்ளத்தில் மகிழ்ச்சியும், குஷியும் நிறைந்திருந்தபடியால், ஒவ்வொரு காரியமும் அவர்களுக்கு மகிழ்ச்சியையும், சிரிப்பையும் கொடுத்து வந்தன. வீட்டைவிட்டு போனபோது ஒரு பையனாய் இருந்தவன், இப்பொழுது ஒவ்வொருவரும் சொல்லியபடி, ஒருசிலாக்கியமான வாலிபராகத் திரும்பியபடியாலும், அவன் வீட்டில் இருப்பதாலும், சமீபத்தில் சண்டையில் சேரக்கூடிய வாய்ப்பு வாய்க்காத பெலாயா ஜெர்காவ் என்ற இடத்தைவிட்டு வந்துவிட்டபடியாலும், இன்னும் சில தினங்களில் போர் நடக்கப்போகிற மாஸ்கோவிற்கு திரும்பி விட்டபடியாலும், தான் பின்பற்றி வரும் நட்டாஷா மிகுந்த உற்சாகமாயிருப்பதாலும், அவன் உற்சாகமடைந்தான். வெகு காலமாக சோகமாய் இருந்தபடியாலும், அவளுடைய துக்கத்தை ஞாபகப்படுத்தக்கூடிய எதுவும் இப்பொழுது இல்லாததாலும், தான் மிகுந்த சௌக்கியமாக இருப்பதாக நினைத்தபடியாலும், நட்டாஷா மகிழ்ச்சியோடு காணப்பட்டாள். தன்னை பூஜிப்பதற்கு ஒருவர் இருப்பதாலும் அவள் மகிழ்ச்சியாய் இருந்தாள்... ஒருவரை பூஜிப்பதானது வாழ்க்கைச் சக்கரங்களுக்கு எண்ணெய் போடுவது போலாகும். ஆகவே, பெட்டியா அவளை பூஜித்துக் கொண்டிருந்த படியால், அவள் மகிழ்ச்சியோடு இருந்தாள். அவர்கள் குஷியோடு இருப்பதற்கு, இவற்றிற்கெல்லாம் மேலாக, மற்ற காரணங்களும் உண்டு. மாஸ்கோ நகர வாசல்களில் போர் நடக்கப் போகிறது;

எல்லாருக்கும் ஆயுதங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ஒவ்வொருவரும் அந்த நகரைவிட்டு தப்பி, வெளியே எங்கேயோ ஓடுகிறார்கள்; பொதுவாக அசாதாரணமான சில காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. இவையெல்லாம், முக்கியமாக வாலிப வயதினருக்கு, மிகுந்த பரபரப்பையும் உற்சாகத்தையும் கொடுக்கக் கூடியவை.

## 11

13

ஆகஸ்டு 31-ந் தேதியாகிய சனிக்கிழமை அன்று ராஸ்டோவ்களின் வீட்டில் ஒவ்வொன்றும் தாறுமாறாகக் கிடந்தன. கதவுகளெல்லாம் திறந்து கிடந்தன. நாற்காலி, மேஜை முதலியவைகளை வெளியே தூக்கி வந்து கொண்டிருந்தார்கள். படங்களையும் கண்ணாடிகளையும் சுவர்களிலிருந்து கீழே இறக்கினார்கள். அறைகளிலெல்லாம் பெட்டிகளும், வைக்கோலும், காகிதங்களும், கயிறுகளும் சிதறிக் கிடந்தன. விவசாயிகளும் வீட்டு அடிமைகளும் மரதள வரிசைகளில் கனமான சாமான்களை எடுத்துக்கொண்டு பாரமாகக் காலடிகளை வைத்து நடந்து சென்றார்கள். முற்றம் முழுவதிலும் விவசாயிகளின் வண்டிகள் நிறைந்திருந்தன. சில வண்டிகளில் சாமான்கள் உயரமாக அடுக்கப்பட்டு, கயிறுகளால் கட்டப்பட்டிருந்தன. சில வண்டிகள் இன்னமும் காலியாய் இருந்தன.

முற்றத்திலும் வீட்டிற்குள்ளும், வண்டிகளைக் கொண்டு வந்திருந்த விவசாயிகள் ஒருவரைப் பார்த்து ஒருவர் போட்ட கூச்சல்களும், காலடி ஓசைகளும் கேட்டு எதிரொலித்துக் கொண்டிருந்தன. காலையிலேயே கோமகன் வெளியே போனார். இந்த கூச்சல்களாலும் குழப்பங்களாலும் கோமகளுக்கு தலைவலி ஏற்பட்டது. புதிய வரவேற்பு அறையில் ஒரு நாற்காலியில் அமர்ந்து, தனது தலையில் வினிகரால் ஒத்தடம் கொடுத்துக்கொண்டிருந்தாள். பெட்டியா வீட்டில் இல்லை. பாதுகாப்புப் படையிலிருந்து ராணுவத்திற்கு தன்னை மாற்றும்படி எற்பாடு செய்வதற்காக ஒரு நண்பனைப் பார்ப்பதற்கு போயிருந்தான். கண்ணாடிச் சாமான்களையும், போர்சிலேன் சாமான்களையும் கட்டுவதை மேல் பார்த்துக்கொண்டு, நடன அறையில் சோனியா இருந்தாள். சாமான்களெல்லாம் அப்புறப்படுத்தப் பட்ட தன்னுடைய அறையில் நட்டாஷா தரையில் உட்கார்ந்திருந்தாள். அவளைச் சுற்றி

ஆடைகளும், ரிப்பன்களும், கழுத்துப் பட்டிகளும் சிதறிக் கிடந்தன. பீட்டர்ஸ்பர்க்கில் முதலாவதாக தான் நடனமாடியபோது அணிந்திருந்த பழைய நடன ஆடையை (அந்த மோஸ்தர் இப்பொழுது மாறிவிட்டது) கையில் பற்றி குத்திட்ட பார்வையோடு தரையை நோக்கிக்கொண்டிருந்தாள்.

ஒவ்வொருவரும் சுறுசுறுப்பாய் இருக்கும்போது, தான் மட்டும் ஒன்றும் செய்யாமல் இருப்பது நட்டாஷாவுக்கு அவமானமாய் இருந்தது. அன்று காலையில் ஏதாவது வேலை செய்ய அவள் பல தடவைகள் முயற்சி செய்தாள். ஆனால், அவளுடைய உள்ளம் அதற்கு இடம் கொடுக்கவில்லை. தன்னுடைய மனப்பூர்வமாக முழு பலத்தோடு செய்வதைத் தவிர, வேறு எப்படி வேலை செய்ய முடியும் என்பது அவளுக்குத் தெரியாது, தெரியவும் முடியாது. போர்சிலேன் சாமான்களைக் கட்டும்போது, சோனியாகவுக்குப் பின்னால் நின்று கொண்டு உதவி செய்ய முயற்சித்தாள். சீக்கிரமாக அந்த வேலையை விட்டுவிட்டு, தன்னுடைய சாமான்களைக் கட்டுவதற்காக தன்னுடைய அறைக்குத் திரும்பினாள். ஆடைகளையும் ரிப்பன்களையும் வேலைக்காரிகளுக்குக் கொடுப்பது வேடிக்கையாய்தான் இருந்தது... ஆனால், அந்த நன்கொடைகளைக் கொடுத்து முடிந்த பின்பு, மீதமுள்ளவை களைக் கட்ட வேண்டி வந்தபோது, அந்த வேலை அவளுக்கு பாரமாய்த் தோன்றியது.

'துனியாஷா, நீ எல்லாவற்றையும் கட்டு; எனது அன்பே, நீ கட்டுவாய், அல்லவா?' அவற்றையெல்லாம் கட்டுவதாக துனியாஷா மனமுவந்து வாக்குறுதி கொடுத்த பின்பு, நட்டாஷா தரையில் அமர்ந்தாள். தன்னுடைய பழைய நடன ஆடையை எடுத்து வைத்துக்கொண்டு பழைய நினைவுகளில் இறங்கினாள். இப்பொழுது அவள் மனதில் என்ன சிந்தனைகள் இருக்க வேண்டுமோ, அவற்றிற்கும் அந்த பழைய நினைவுகளுக்கும் சம்பந்தமே இல்லை. பக்கத்து அறையில் வேலைக்காரர்கள் பேசிய குரலும், பின் பக்கத்து முற்றத்திற்கு அவர்கள் வேமாகப் போக காலடி ஓசைகளும், அவளுடைய சிந்தனையைக் கலைத்தன. நட்டாஷா எழுந்து ஜன்னல் வழியாகப் பார்த்தாள். அங்கே காயம்பட்ட சிப்பாய்களை ஏற்றியிருந்த வண்டிகள் மிகமிக நீளமான வரிசையில் தெருவில் நிற்பதைக் கண்டாள்.

வீட்டுக் காரியஸ்தரும், பழைய தாதியும், சமையல்காரர்களும், வண்டிக்காரர்களும், வேலைக்காரிகளும், சேவர்களும், குதிரைக்காரர்களும், பாத்திரம் துலக்குகிறவர்களும் வெளி வாசலில்

கூடி நின்று, அந்த காயம்பட்டவர்களை வேடிக்கை பாத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு சுத்தமான கைக்குட்டையை தலைமீது போட்டு, அதன் மூலைகளைக் கைகளில் பற்றிக்கொண்டு நட்டாஷா தெருவிற்குப் போனாள்.

முதிய மாவுரா குஜ்மைனிச்னா என்பவள், முன்னால் வீட்டு வேலைகளை மேற்பார்வையிட்டு வந்தவள், வெளி வாசலில் கூடி நின்ற கூட்டத்திலிருந்து முன்னேறி, ஒரு வண்டியிடம் போனாள். அந்த வண்டிக்கு பாய்களினால் மேலே கூரை போடப்பட்டிருந்தது. அந்த வண்டிக்குள்ளே படுத்திருந்த, முகம் வெளிறிய வாலிப அதிகாரியிடம் அவள் பேசினாள். நட்டாஷா சில அடிகள் முன்னால் எடுத்து வைத்து நாணத்தினால் நின்று விட்டாள். இன்னமும் அந்த கைக்குட்டையைப் பற்றிக்கொண்டு, அந்த பழைய வேலைக்காரி பேசுவதைக் கவனித்துக்கொண்டிருந்தாள்.

'அப்படியானால், உமக்கு மாஸ்கோவில் ஒருவரும் இல்லையா? எங்காவது ஒரு வீட்டில் நீர் தங்கினால், உமக்கு அதிக சௌக்கியமாய் இருக்கும்...உதாரணமாக, எங்கள் வீட்டில் தங்கலாம்...குடும்பம் முழுவதும் இதை விட்டுப் போகிறார்கள்' என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தாள்.

'அம்மாதிரி செய்யலாமா என்பது எனக்குத் தெரியாது' என்று அந்த அதிகாரி பலவீனமான குரலில் சொன்னார். 'இதோ எங்களுடைய கமாண்டிங் ஆபீஸர் இருக்கிறார்... அவரைக் கேளு' என்று சொல்லி, ஒரு தடித்த மேஜரைச் சுட்டிக் காட்டினார். அவர் அந்தத் தெருவிலிருந்த வண்டிகளின் வரிசை வழியாகத் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

நட்டாஷா பீதியுற்ற கண்களோடு அந்த காயமடைந்த அதிகாரியின் கண்களை நோக்கிவிட்டு, உடனே மேஜரை சந்திப்பதற்காகப் போனாள்.

'காயமடைந்தவர்கள் எங்கள் வீட்டில் தங்கலாமா?' என்று அவள் கேட்டாள்.

ஒரு புன்னகையோடு அந்த மேஜர் தமது கையைத் தொப்பிக்கு உயர்த்தினார்.

'குமாரியே, உனக்கு யார் வேண்டும்?' என்று அவர் தமது கண்களை இடுக்கி புன்னகை காட்டிக் கேட்டார்.

நட்டாஷா அமைதியோடு தனது கேள்வியைத் திருப்பிச் சொன்னாள். அவளுடைய முகமும், அவளுடைய நடவடிக்கையும்

மிகுந்த சிந்தனையோடு காணப்பட்டன. என்றாலும், கைக்குட்டையின் மூலைகளை இன்னமும் பற்றிக்கொண்டிருந்தாள். அவளுடைய ஆழ்ந்த சிந்தனையைப் பார்த்ததும், அந்த மேஜர் புன்னகை செய்வதை நிறுத்தினார். சிறிது யோசனைக்குப் பின்னால் - இந்தக் காரியம் எவ்வளவு தூரம் சாத்தியமானது என்பதை சிந்திப்பவர்போல - அவர் அம்மாதிரி செய்வதற்கு சம்மதித்தார்.

'ஓ, ஆம், ஏன் அப்படிச் செய்யக்கூடாது? அவர்கள் வேண்டுமானால் தங்கலாம்' என்று அவர் சொன்னார்.

தலையை சிறிது சாய்த்துக்கொண்டு, மாவுராவிடம் வேகமாய் திரும்பிச் சென்றாள். அவள் அந்த அதிகாரியிடம் கருணையோடு பேசிக்கொண்டிருந்தாள்.

'அவர்கள் தங்கலாம். அவர்கள் தங்கலாம் என்று அவர் சொல்லுகிறார்' என மெதுவாக நட்டாஷா கூறினாள்.

அந்த அதிகாரி படுத்திருந்த வண்டி ராஸ்டோவ்களின் வீட்டு முற்றத்திற்குள் திருப்பப்பட்டது. அங்கிருந்த நகர வாசிகளின் வேண்டுகோளுக்கு இணங்கி, டஜன் கணக்கான வண்டிகள், அந்த பாவாஸ்காயா தெருவிலுள்ள முற்றங்களுக்குள் போவதற்காக வரிசையாகத் திரும்பின. தனது வாழ்க்கையில் வழக்கமாக சந்திக்கும் கோஷ்டிக்கு வெளியாக புதிய மக்களோடு தொடர்பு கொள்ளுவதற்கு நட்டாஷா சந்தோஷம் அடைந்தாள் என்று தோன்றியது. தங்களுடைய முற்றத்திற்குள் எத்தனை அதிகமான காயமடைந்தவர்களைக் கொண்டுவர முடியுமோ அவ்வளவு பேரையும் கொண்டு வருவதற்கு அவளும் மாவுராவும் முயற்சி செய்தார்கள்.

'உன்னுடைய அப்பாவிடம் சொல்ல வேண்டும்' என்று மாவுரா கூறினாள்.

'அதைப்பற்றி கவலைப்படாதே, அதைப்பற்றி கவலைப் படாதே. அதனால் என்ன வந்துவிடப் போகிறது? ஒரு நாளைக்கு நாம் வரவேற்பு அறையில் வசிப்போம். நமது வீட்டின் பாதியை அவர்களுக்கு விட்டு விடுவோம்.'

'இதோ பார், வாலிப சீமாட்டியே. நீ எல்லாவற்றையும் தலையில் இழுத்து போட்டுக் கொள்ளுகிறாய். பக்கவாட்டு அறைகளையோ, ஆண்களின் அறைகளையோ, அல்லது தாதியின் அறையையோ நாம் அவர்களுக்கு கொடுத்தாலும் கூட நாம் அனுமதி பெற்றாக வேண்டும்.'

'நல்லது, நான் போய் கேட்கிறேன்.'

நட்டாஷா வீட்டிற்குள் ஓடினாள். பாதி திறந்த கதவு வழியாக முன் பாதங்களால் நடந்து, உட்காரும் அறைக்குப் போனாள். அங்கே வினிகர் வாசனையும் ஹாப்மன் மருந்தின் வாசனையும் வீசிக் கொண்டிருந்தன.

'நீ தூங்கிக்கொண்டிருக்கிறாயா, அம்மா?'

'ஓ, என்ன தூக்கம்?' என்று கோமகள் சொன்னாள். அப்பொழுது தான் தூங்க ஆரம்பித்தவள் உடனே விழித்துக்கொள்டாள்.

'அம்மா, என் கண்ணே' என்று நட்டாஷா சொல்லி, அவளுக்குப் பக்கத்தில் முழங்கால் படியிட்டாள். தன்னுடைய முகத்தை தன்தாயின் முகத்தோடு நெருக்கமாக வைத்துக்கொண்டு, 'நான் வருந்துகிறேன். என்னை மன்னித்துவிடு. நான் அம்மாதிரி இனி செய்யமாட்டேன். உன்னை தூக்கத்திலிருந்து நான் எழுப்பிவிட்டேன். மாவுரா என்னை அனுப்பினாள். அவர்கள் இங்கே சில காயம்பட்ட அதிகாரிகளைக் கொண்டு வந்திருக் கிறார்கள். அவர்கள் வருவதற்கு நீ அனுமதி கொடுப்பாயா? அவர்கள் போவதற்கு வேறு ஒரு இடமும் இல்லை. அவர்களுக்கு நீ அனுமதி கொடுப்பாய் என்று எனக்குத் தெரியும்...' என்று அவள் வேகமாக ஒரே மூச்சில் சொன்னாள்.

'என்ன அதிகாரிகள்? யார் அவர்களைக் கொண்டு வந்தார்கள்? அதைப்பற்றி என்னால் ஒன்றும் புரிந்து கொள்ள முடியவில்லையே?' என்று கோமகள் கேட்டாள்.

நட்டாஷா சிரித்தாள். கோமகளும் சிறிது புன்னகை காட்டினாள்.

'நீ அனுமதி கொடுப்பாய் என்று எனக்குத் தெரியும்...அப்படியே அவர்களிடம் நான் சொல்லிவிடுகிறேன்' என்று கூறி, தனது தாயை முத்தமிட்டுவிட்டு நட்டாஷா எழுந்து வாசலுக்குப் போனாள்.

போகிற வழியில் தனது தந்தையை அவள் சந்தித்தாள். அவர் கெட்ட செய்திகளோடு திரும்பி வந்திருந்தார்.

'நாம் அளவுக்கு அதிகமாகத் தங்கிவிட்டோம்' என்று தம்மை அறியாத எரிச்சலோடு, கோமகன் பேசினார். 'கிளப்பை மூடி விட்டார்கள். போலீஸ்காரர்களும் இதை விட்டு வெளியே போகிறார்கள்.'

'அப்பா, அது சரிதானா, சில காயமடைந்தவர்களை வீட்டிற்குள் வரும்படி நான் அழைத்திருக்கிறேன்?' என்று நட்டாஷா கேட்டாள்.

'நிச்சயமாக சரிதான்' என்று பராக்கு புத்தியோடு அவர் பதில் அளித்தார். 'விஷயம் அதுவல்ல. சிறிய காரியங்களில் நீ திளைத்துக்கொண்டிருக்க வேண்டாம் என்று நான் உன்னை

கேட்டுக்கொள்ளுகிறேன். சாமான்களைக் கட்டுவதில் நீ போய் உதவி செய். நாளையன்று நாம் போக வேண்டும், போக வேண்டும், போக வேண்டும்...'

அம்மாதிரி உத்தரவை கோமகன் தமது பிரதான காரியஸ்தருக்கும், வேலைக்காரர்களுக்கும் கொடுத்தார்.

டின்னர் சமயத்தில் வீட்டிற்கு திரும்பி வந்த பெட்டியா, தான் கேட்ட செய்திகளை எல்லாருக்கும் சொன்னான். கிரெம்லின் என்ற இடத்தில் மக்களுக்கு ஆயுதங்களைக் கொடுப்பதாகவும், மூன்று தினங்களுக்கு முன்பாக தாம் அழைப்புவிடுப்பதாக ராஸ்டாப்சைன் தமது பிரகடனத்தில் சொல்லியிருந்தபோதிலும், இப்பொழுதே உத்தரவு கொடுத்துவிட்டார்கள் என்றும் சொன்னான். நாளையன்று ஒவ்வொரு வரும் ஆயுதங்களோடு மூன்று குன்றுகளுக்கு வரவேண்டும் என்றும், அங்கே ஒரு பெரிய போர் நடக்கப் போகிறதென்றும், அந்த உத்தரவில் குறிப்பிட்டிருப்பதாக மக்கள் பேசிக்கொள்ளுகிறார்கள் என்றும் சொன்னான்.

இதை பெட்டியா சொல்லியபோது, அவன் முகத்தில் காணப்பட்ட ஆவலான பரபரப்பை, பீதியோடு கோமகள் நோக்கினாள். வரப்போகும் போரைப்பற்றிய நினைப்பில் அவன் மகிழ்ந்திருப்பதை அவள் அறிவாள். எனவே, அந்தப் போருக்கு அவன் போகக்கூடாது என்று அவள் ஒரு வார்த்தை சொல்லுவாளானால், அவன் என்ன பேசுவான் என்பதை அவள் அறிந்திருந்தாள். அதாவது, மக்களைப் பற்றியும், கௌவரத்தைப் பற்றியும், தந்தை நாட்டைப் பற்றியும் புத்தியில்லாத விதமாக எதையாவது சொல்லிக் கொண்டிருப்பான்; பிடிவாதமாகவும், ஆண் தன்மையோடும் அவன் பேசுவானாகையால், அதை மறுத்துப் பேசுவதற்கு முடியாமல் இருக்கும்; அவளுடைய திட்டங்களை அவை கெடுத்துவிடும்; ஆகவே, அந்தப் போர் நடப்பதற்கு முன்பாகவே, அந்த இடத்தைவிட்டு புறப்படுவதற்கு ஏற்பாடு செய்ய முடியும் என்று அவள் நம்பினாள்; தங்களுக்கு பாதுகாப்பாளனாக பெட்டியாவையும் தங்களோடு அழைத்துக்கொண்டு போய்விடலாம் என்றும் அவள் நம்பினாள்; ஆகவே, அவள் பதில் சொல்லவில்லை; ஆனால், டின்னருக்குப் பின்னால், கோமகனைத் தனியாக அழைத்து, தங்களை சீக்கிரமாக, சாத்தியமானால் அன்றிரவே அழைத்துக்கொண்டு போய்விடும்படி, கண்ணீர் விட்டு அவள் கெஞ்சினாள். தனக்கு அன்பு இருக்கிற இடத்தில் தன்னை அறியாத தந்திரம் பெண்ணுக்கு ஏற்படுவதுண்டு; அதுவரை பீதி என்பதையே காட்டாமல் இருந்த கோமகள்,

அன்றிரவு அதை விட்டுப் போகாவிட்டால், பீதியினால் தான் மாண்டு விடுவாள் என்று சொன்னாள். இப்பொழுது அதைப்பற்றி நடிப்பு எதுவுமே இல்லாமல் எதைக் கண்டாலும் அவள் பயந்து கொண்டிருந்தாள்.

# 11

## 14

தனது குமாரியைப் பார்த்துவிட்டு வருவதற்காக வெளியே போன திருமதி ஷாஸ் திரும்பி வந்தாள். மியாஸ்நைட்ஸ்கி என்ற தெருவிலுள்ள மதுக் கடையில், தான் கண்ட காட்சிகளை அவள் சொன்னாள். அதைக் கேட்டதும், கோமகளின் பீதி அதிகமாயிற்று. அந்த தெரு வழியாக ஷாஸ் திரும்பி வர முயற்சித்தபோது, அவளால் வர முடியவில்லை. ஏனெனில், மதுக் கடைக்கு முன்பாக, குடியர்களின் கூட்டம் கூடி நின்று கலகம் செய்துகொண்டிருந்தது. ஆகவே, அவள் ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு, பக்கத்து தெரு வழியாக வீட்டிற்கு வந்தாள். அந்த மதுக்கடையில் பீப்பாய்களை மக்கள் உடைப்பதாகவும், அம்மாதிரி அவர்கள் உத்தரவிடப்பட்டிருப்பதாகவும், அவள் ஏறி வந்த வண்டிக்காரன் அவளிடம் சொன்னான்.

டின்னருக்குப் பின்னால், உற்சாகம் கொண்ட வேகத்தோடு ராஸ்டோவ்களின் வீட்டுக்காரர்கள் எல்லாரும், தங்கள் சாமான்களைக் கட்டி, புறப்படுவதற்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். முதிய கோமகன் தானும் வேலை செய்ய ஆரம்பித்து, வீட்டிலிருந்து முற்றத்திற்குப் போவதும், முற்றத்திலிருந்து வீட்டிற்குள் வருவதும், வேகமாக வேலை செய்து கொண்டிருந்தவர்களுக்கு குழப்பமான உத்தரவுகளைக் கொடுப்பதும், அவர்களை இன்னும் அதிகமாக பதைபதைக்கும் படி செய்வதுமாக இருந்தார். முற்றத்து வேலைகளை பெட்டியா கவனித்து வந்தான். முன்னுக்குப் பின் முரணாகக் கோமகன் உத்தரவு கொடுத்தபடியால், சோனியாவுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. வீட்டிற்குள்ளும், முற்றத்திலும் வேலைக்காரர்கள் இரைச்சல்களோடு சுற்றிச் சுற்றி வந்து கூச்சலிட்டுக்கொண்டும், வாதமிட்டுக் கொண்டும் இருந்தார்கள். நட்டாஷா தன்னுடைய தனி குண விசேஷப்படி, திடீரென்று ஆர்வத்தோடு வேலை செயய ஆரம்பித்தாள். முதலில் சாமான்களைக் கட்டும் வேலையில் அவள் வந்து சேர்ந்ததைப் பார்த்து, ஒருவருக்கும் நம்பிக்கை

ஏற்படவில்லை. அவள் எதையாவது சொல்லிக்கொண்டிருப்பாள் என்று நினைத்து, அவள் சொல்லுவதைக் கேட்க விரும்பவில்லை. ஆனால், அவள் உறுதியோடும், ஆர்வத்தோடும், தான் சொல்லுகிறபடி செய்ய வேண்டுமென்று கட்டாயப்படுத்தினாள். அவர்கள் அவள் சொல்லுவதைக் கேட்காமல் இருந்ததற்காகக் கோபம் கொண்டு அழக் கூட ஆரம்பித்தாள். கடைசியாகத் தன்னிடம் அவர்கள் நம்பிக்கை கொள்ளும்படி செய்தாள். அவளுடைய முதல் வேலை கம்பளங்களைக் கட்டுவதாகும். அந்த வேலையில் மிகுந்த உற்சாகத்தோடு அவள் தலையிட்டு, செய்து முடித்து, தன்னுடைய அதிகாரத்தை நிலை நாட்டினாள். விலை உயர்ந்த காபெலின் படுதாக்களும், பாரசீகக் கம்பளங்களும், கோமகன் வீட்டில் இருந்தன. நடன அறையில் இருண்டு பெட்டிகள் திறந்து நின்றன. ஒன்றில், கண்ணாடிச் சாமான்களைப் முழுவதும் வைத்து நிரப்பியிருந்தார்கள். மற்றொன்றில், கம்பளங்களை வைத்து இருந்தார்கள். மேஜைகள் மீது இன்னும் ஏராளமான கண்ணாடிச் சாமான்கள் இருந்தன. அறையிலிருந்து இன்னும் ஏராளமாக கண்ணாடிச் சாமான்களைக் கொண்டு வந்தார்கள். ஆகவே, மற்றொரு பெட்டி அவசியமாயிருந்தது. அதை எடுத்து வருவதற்காக வேலைக்காரர்கள் சென்றார்கள்.

‘சோனியா, ஒரு நிமிஷம் பொறு - நாம் எல்லாவற்றையும் இவற்றிற்குள்ளேயே திணித்து விடலாம்’ என்று நட்டாஷா சொன்னாள்.

‘குமாரியே, அப்படிச் செய்ய உன்னால் முடியாது. நாங்கள் முயற்சி செய்து பார்த்துவிட்டோம்’ என்று பட்லரின் உதவியாளன் கூறினான்.

‘இல்லை, ஒரு நிமிஷம் தயவுசெய்து பொறு’

ஒரு பெட்டியிலிருந்த காகிதத்தால் சுற்றப்பட்டிருந்த தட்டுகளை, நட்டாஷா வேகமாக வெளியே எடுத்தாள்.

‘இந்த தட்டுகளை இந்தக் கம்பளங்களுக்கு இடையே வைக்க வேண்டும்’ என்று அவள் சொன்னாள்.

‘இந்த கம்பளங்கள் பூராவையும் மூன்று பெட்டிகளுக்குள்ளும் அடைத்து விட்டோமானால், அதுவே பெரிய காரியம்’ என்று உதவி பட்லர் கூறினான்.

‘ஓ, தயவு செய்து பொறு’ என்று நட்டாஷா சொல்லிவிட்டு, ஜாக்கிரதையாகவும், வேகமாகவும் சாமான்களைப் பிரித்து வைத்தாள். ‘இவையெல்லாம் நமக்கு அவசியமில்லை’ என்று சொல்லிவிட்டு, சில கீவ் பிரதேசத் தட்டுகளை தனியாக எடுத்து

வைத்தாள். 'இவையெல்லாம் - ஆம், நமக்கு அவசியம். இவற்றையெல்லாம் கம்பளங்களுக்கு இடையே வைக்கவேண்டும்' என்று, ஸாக்சனி தட்டுகளை சுட்டிக்காட்டி, அவள் சொன்னாள்.

'அப்படி வேண்டாம், நட்டாஷா. நீ சும்மாய் இரு. எல்லாவற்றையுமே நாம் கட்டிவிடுவோம்' என்று கண்டிப்போடு சோனியா சொன்னாள்.

'இந்த வாலிப சீமாட்டி, எப்பேர்ப்பட்டவளாய் இருக்கிறாள்' என்று வீட்டுக் காரியஸ்தர் சொன்னார்.

ஆனால் நட்டாஷா இடம் கொடுக்கவில்லை. ஒவ்வொன்றையும் வெளியில் எடுத்து, மீண்டும் வேகமாகத் திருப்பிக் கட்ட ஆரம்பித்தாள். மலிவான ருஷ்ய கம்பங்களும், உபயோகமற்ற கண்ணாடிச் சாமான்களும் அவசியமில்லையென்றும், அவற்றை எடுத்துக் கொண்டு போகவேண்டாமென்றும் அவள் தீர்மானித்தாள். பெட்டிகளிலிருந்து எல்லாவற்றையும் வெளியில் எடுத்து, மீண்டும் பெட்டிகளில் அடுக்க ஆரம்பித்தார்கள். எடுத்துக்கொண்டு போவதற்குத் தகுதியற்ற மலிவான சாமான்களை அவர்கள் களைந்துவிட்ட பின்பு, விலை உயர்ந்த சாமான்கள் எல்லாம் அந்த இரண்டு பெட்டிகளுக்குள்ளும் அடங்கி விட்டன. கம்பளங்கள் வைக்கப்பட்டிருந்த பெட்டியின் மூடியைப் பொருத்த முடியவில்லை. அதிலிருந்து சில சாமான்களை எடுக்க வேண்டியதாயிருந்தது. ஆனால், நட்டாஷா அம்மாதிரி செய்ய விடாமல், தன்னுடைய இஷ்டப்படியே செய்தாள். சாமான்களை மாற்றிமாற்றி வைத்து கீழே அமுக்கி தன்னுடன் அந்த வேலைக்காக அழைத்து வந்திருந்த பெட்டியாவையும் அந்த உதவி பட்லரையும் விட்டு, அந்த பெட்டியின் மூடியை அமுக்கச் செய்தாள். தானும் மும்முரமாய் முயற்சி செய்தாள்.

'அது போதுமானது, நட்டாஷா - நீ சொன்னதுதான் சரி என்பது இப்பொழுது எனக்குத் தெரிகிறது. ஆனால், அந்த பெட்டியில் மேலாயுள்ள ஒன்றை மட்டும் வெளியே எடுத்துவிடு' என்று சோனியா கூறினாள்.

'நான் அப்படிச் செய்ய முடியாது' என்று நட்டாஷா கூச்சலிட்டாள். தன்னுடைய வியர்த்துக்கொண்டிருந்த முகத்தின் மீது தொங்கிக்கொண்டிருந்த தலை முடியை ஒரு கையால் பற்றிக்கொண்டு, மற்றொரு கையால் அந்தக் கம்பளங்களை கீழே அமுக்கினாள். 'பெட்டியா, இப்பொழுது அமுக்கு; வாசைலிச், இப்பொழுது கடினமாக அமுக்கு' என்று அவள் கூச்சலிட்டாள்.

கம்பளங்களையெல்லாம் உள்ளே அமுக்கி, மேலே மூடியைப் போட்டார்கள். நட்டாஷா தனது கைகளைத் தட்டி சந்தோஷக் கூச்சலிட்டாள். அவளுடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர்த் துளிகள் கீழே விழுந்தன. ஆனால், ஒரு நிமிஷந்தான் அம்மாதிரி இருந்தாள். உடனே மீண்டும் புதிய வேகத்தோடு வேலை செய்ய ஆரம்பித்தாள். அவளிடம் எல்லாருக்கும் பூரண நம்பிக்கை ஏற்பட்டது. கோமகனின் உத்தரவை நட்டாஷா மாற்றிவிட்டாள் என்று தெரிந்தபோது கூட, கோமகன் அதற்காகக் கோபம் கொள்ளவில்லை. வேலைக்காரர்கள் அவளிடம் வந்து ஒரு வண்டியில் ஏற்றப்பட்ட சாமான்கள் போதுமா என்றும், கயிறுபோட்டு அவற்றைக் கட்டி விடலாமா என்றும் கேட்டார்கள். இப்பொழுது நட்டாஷாவின் மேல் பார்வையில் வேலைகள் எல்லாம் வெகு துரிதமாக நடந்து வந்தன. அனாவசியமான சாமான்களை விட்டுவிட்டு, மிக உயர்ந்த சாமான்களை மட்டும், எவ்வளவு அடக்கமாகக் காட்டமுடியுமோ அம்மாதிரி கட்டி முடித்தார்கள்.

இரவு வெகுநேரம் வரையிலும், மிகுந்த கடினமாக அவர்க்ள் வேலை செய்த போதிலும், இன்னும் முழுவதும்க் கட்டி முடியவில்லை. பிரயாணத்தை மறுநாள் காலை வரையில் தள்ளி வைத்திருந்தபடியால், கோமகனும் படுக்கைக்குப் போய்விட்டார்.

சோனியாவும் நட்டாஷாவும் தங்கள் ஆடைகளைக் களையாமலேயே, உட்காரும் அறையில் படுத்துத் தூங்கினார்கள்.

அன்று இரவு பாவார்ஷ்காயா வழியாக, மற்றொரு காயமடைந்த வரைக் கொண்டு வந்தார்கள். வெளி வாசலில் நின்றுகொண்டிருந்த மாவ்ரா, அவரை ராஸ்டோவ்களின் வீட்டு முற்றத்திற்குக் கொண்டு வரும்படி சொன்னாள். அவர் ஒரு முக்கியமான மனிதராய் இருக்கக் கூடுமென்று மாவ்ரா நினைத்தாள். அவரை ஒரு பிரயாண வண்டியில் கொண்டு வந்தார்கள். அவர் மீது துணியால் மூடியிருந்தார்கள். வண்டிக்கு முன்னால் வண்டியோட்டியின் பக்கத்தில், ஒரு கௌரவமான முதியவர் அமர்ந்திருந்தார். அந்த வண்டிக்குப் பின்னால் மற்றொரு வண்டியில் ஒரு டாக்டரும் இரண்டு சிப்பாய்களும் தொடர்ந்து வந்தார்கள்.

'தயவு செய்து உள்ளே வாருங்கள். எஜமான்கள் இதைவிட்டு போகிறபடியால் வீடு முழுவதும் காலியாகத்தான் இருக்கும்' என்று அவள் அந்த முதியவரிடம் கூறினாள்.

'நல்லது' என்று அவர் ஒரு பெரு மூச்சோடு சொன்னார். 'உயிரோடு அவரை வீடுகொண்டு சேர்க்க முடியுமென்று நாங்கள்

எதிர்பார்க்கவில்லை. மாஸ்கோவில் எங்களுடைய சொந்த வீடு ஒன்று உண்டு. ஆனால்; இங்கிருந்து வெகுதூரத்தில் அது இருக்கிறது. அந்த வீட்டிலும் இப்பொழுது யாரும் வசிக்கவில்லை.'

'நீங்கள் உள்ளே வந்து, எங்களைக் கௌரவப்படுத்துங்கள். எஜமானரின் வீட்டில் ஒவ்வொன்றும் ஏராளமாய் இருக்கிறது. உள்ளே வாருங்கள். அவர் மிகுந்த அசௌக்கியமாய் இருக்கிறாரா?' என்று அவள் கேட்டாள்.

அவர் நம்பிக்கையற்ற விதமான செய்கை காட்டினார்.

'அவரை உயிரோடு வீடுகொண்டு சேர்ப்போம் என்று நாங்கள் எதிர் பார்க்கவில்லை. டாக்டரை நாங்கள் கேட்கவேண்டும்.'

அந்த முதியவர் வண்டியின் முன் பக்கத்திலிருந்து கீழே இறங்கி, பின்னால் வந்த வண்டிக்குப் போனார்.

'ரொம்ப சரி' என்றார் டாக்டர்.

அந்த முதிய வேலைக்காரர் பிரயாண வண்டிக்குத் திரும்பினார். அதன் உள்ளே நோக்கினார். திருப்தியற்ற விதமாகத் தமது தலையை ஆட்டிவிட்டு, முற்றத்திற்குள் வண்டியைக் கொண்டு போகும்படி வண்டியோட்டிக்கு சொல்லிவிட்டு, மாவ்ராவுக்குப் பக்கத்தில் நின்றார்.

'ஓ, ஏசு கிறிஸ்துவே' என்று அவள் முணுமுணுத்தாள்.

அந்த காயம்பட்டவரை வீட்டிற்குள் கொண்டுவரும்படி அவள் அழைத்தாள்.

'எஜமானர்கள் ஆட்சேபிக்கமாட்டார்கள்...' என்று அவள் சொன்னாள்.

அந்த காயம்பட்டவரை மேல்மாடிக்குக் கொண்டுபோக அவர்கள் விரும்பவில்லை. ஆகவே, பக்கவாட்டிலிருந்த திருமதி ஷாஷின் அறைக்கு அவரைக்கொண்டுபோய் படுக்க வைத்தார்கள்.

அந்த காயமடைந்தவர்தான், இளவரசர் ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கி.

# 11

## 15

மாஸ்கோவின் கடைசி நாள் வந்துவிட்டது. அன்று ஞாயிற்றுக் கிழமை. அப்பொழுது இலையுதிர் காலம். அன்று வானம் தெளிவாகவும், பிரகாசமாகவும் இருந்தது. ஆராதனைக்காக மாதா

கோயில்களில் மணிகள் எல்லாம், வழக்கமாக ஞாயிற்றுக் கிழமைக்கு நடப்பதைப் போல ஒலித்துக்கொண்டிருந்தன. நகருக்கு என்ன நேரிடப் போகிறது என்பதை, ஒருவரும் இன்னமும் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

மாஸ்கோவின் வாழ்க்கை நிலைமை எப்படி இருந்தது என்பதை இரண்டு விஷயங்கள் சுட்டிக் காட்டின. ஒன்று ஏழை மக்கள்; மற்றொன்று பொருள்களின் விலைகள். தொழிலாளர்கள். வீட்டு அடிமைகள், விவசாயிகள், சில அதிகாரிகள், வேதாகம மாணவர்கள், சில பிரபுக்கள், ஆகியவர்கள் கலந்த ஒரு பிரம்மாண்டமான கூட்டம், அன்று அதிகாலையில் 'மூன்று குன்றுகள்' என்ற பிரதேசத்திற்கு போனார்கள். ராஸ்டோப்சைனுக்காக அங்கே காத்திருந்தார்கள். அவர் அங்கே வரவில்லை. ஆகவே, மாஸ்கோவைக் கைவிட்டுவிட்டுப் போகிறார்கள் என்பது அவர்களுக்கு நிச்சயமாகத் தெரிந்த பின்பு, அவர்கள் திரும்பி நகருக்குள் பிரவேசித்து, மதுக் கடைகளுக்கும் உணவுக் கடைகளுக்கும் போனார்கள். அங்கிருந்த நிலைமையை அன்றிருந்த விலைகள் சுட்டிக்காட்டின. ஆயுதங்கள், தங்கள், வண்டிகள், குதிரைகள், ஆகியவைகளின் விலைகள், மேலே ஏறிக்கொண்டே இருந்தன. ஆனால், காகிதப் பணத்தின் மதிப்பும், நகரத்திலுள்ள சுகானுபவச் சரக்குகளின் விலைகளும், கீழே குறைந்துகொண்டே போயின. நடுப் பகலில் விலையுயர்ந்த சரக்குகளை ஏற்றிக்கொண்டு போகிற வண்டிக்காரர்கள், தாங்கள் ஏற்றிச் செல்லும் சாமான்களில் பாதியைத் தங்களுக்குக் கூலியாகக் கொடுத்துவிட வேண்டுமென்று கேட்டார்கள். விவசாயிகளின் குதிரைகள் ஒவ்வொன்றும், 500 ரூபிள்களுக்கு விலை போயின. மேஜை, நாற்காலி, பீரோக்கள், கண்ணாடிகள், அலங்காரப் பொருள் ஆகியவைகளை, விலை எதுவும் இன்றியே இனாமாகக் கொடுத்தார்கள்.

முன்னால் நடந்து வந்த வாழ்க்கையின் நிலைமைகள் மாறிவிட்டதை ராஸ்டோவ்களின் பழைய மோஸ்தரான வீட்டில் வசித்து வந்தவர்கள் கொஞ்சம்கூட உணரவில்லை. அடிமைகளைப் பொறுத்த வரையில், அவர்கள் வீட்டிலிருந்த ஏராளமானவர்களில் மூன்று பேர் இரவிலேயே காணாமல் போய்விட்டார்கள். ஆனால், அந்த வீட்டில் திருட்டு எதுவும் நடக்கவில்லை. அவர்களுடைய உடைமைகளைப் பொறுத்த வரையில், அவர்களுடைய எஸ்டேட்டுகளிலிருந்து வந்த முப்பது விவசாய வண்டிகள் தான் விலை உயர்ந்தவைகளாகக் காணப்பட்டன. அவற்றைக் கண்டு மக்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஆகையால், அந்த வண்டிகளுக்கு ஏராளமாகப் பணம் கொடுத்து வாங்குவதாகப் பலர் கூறினார்கள்.

அவர்களுடைய குதிரைகளுக்கும் வண்டிகளுக்கும் உயர்ந்த தொகை விலையாகக் கொடுப்பதாகக் கூறியது மட்டுமல்ல; முந்தைய தினத்தின் மாலையிலும், செப்டம்பர் 1-ந் தேதியன்று காலையிலும், காயமடைந்த அதிகாரிகள் அனுப்பிய சேவகர்களும் வில்லைச் சேவகர்களும் ராஸ்டோவ்களின் முற்றத்திலும் பக்கத்து வீடுகளிலும் இருந்த காயமடைந்தவர்கள் பலர் மாஸ்கோவை விட்டு தாங்கள் போவதற்கு வண்டிகளில் இடம் கொடுக்கும்படி கேட்டு வந்தார்கள்; பிரதான காரியஸ்தரிடந்தான் அவர்கள் தங்கள் வேண்டுகோள்களை சமர்ப்பித்தார்கள்; ஆனால், அவர் கண்டிப்பாக மறுத்து விட்டார். கோமகனிடம் அதைப்பற்றி தாம் பேச முடியாதென்றும், கூறிவிட்டார். ஒரு வண்டியைக் கொடுத்தால், பின்னால் மற்றொரு வண்டியைக் கேட்கும்போது மறுக்க முடியாது. தங்களுடைய சொந்த வண்டிகளைக் கூட, எல்லா வண்டிகளையும் கூட கொடுக்க வேண்டியதாய் ஏற்படும். அந்த முப்பது வண்டிகளையும் கொடுத்தாலும் கூட, அந்த காயமடைந்தவர்கள் எல்லாரையும் காப்பாற்றிவிட முடியாது. இம்மாதிரியான ஒரு பேராபத்தான சமயத்தில், ஒருவர் தம்மையோ, தமது குடும்பத்தையோ கவனிக்காமல் விட்டுவிட முடியாது. இந்த விதமாகத் தமது எஜமானரின் சார்பில், அந்த பிரதான காரியஸ்தர் சிந்தித்தார்.

காலையில் எழுந்தவுடன், அதிகாலையில்தான் தூங்க ஆரம்பித்த கோமகளை எழுப்பிவிடக்கூடாது என்ற நோக்கத்தில், கோமகன் இலியா ராஸ்டோவ் மெதுவாகப் படுக்கை அறையிலிருந்து முற்ற மண்டபத்திற்கு வந்தார். பூப்போட்ட பட்டு அங்கியை அணிந்திருந்தார். முற்றத்தில் வண்டிகள் எல்லாம் கயிறுகளால் கட்டப்பட்டு தயாராக நின்றன. பிரயாண வண்டிகள் எல்லாம் முற்ற மண்டபத்தில் நின்றுகொண்டிருந்தன. பிரதான காரியஸ்தர் முற்ற மண்டபத்தில் நின்றுகொண்டு, ஒரு முதிய வில்லைச் சேவகனிடமும், கையில் கட்டுப் போட்டுக்கொண்டிருந்த, முகம் வெளிறிய ஒரு வாலிப அதிகாரியிடமும் பேசிக்கொண்டிருந்தார். கோமகனை அந்த பிரதான காரியஸ்தர் பார்த்ததும், கண்டிப்பாக அவர்களுக்கு சைகை காட்டி அதைவிட்டு போகும்படி கூறினார்.

'நல்லது, வாசைலி, எல்லாம் தயாராய் விட்டதா?' என்று கோமகன் தமது வழுக்கைத் தலையைத் தடவிக்கொண்டே கேட்டார். நல்ல சுபாவத்தோடு அந்த அதிகாரியையும், வில்லைச் சேவகனையும் பார்த்து தலையை ஆட்டினார். (புது முகங்களைப் பார்ப்பதற்கு அவருக்கு எப்பொழுதுமே விருப்பமுண்டு.)

'மேன்மை தங்கியவரே, நாம் உடனே குதிரைகளை பூட்டி விடலாம்.'

'நல்லது, கோமகள் விழித்ததும், கடவுளின் அருள் இருந்தால் நாம் உடனே புறப்பட்டுவிடலாம். கனவான்களோ என்ன விசேஷம்?' என்று அவர் சொல்லிவிட்டு, அந்த அதிகாரியைப் பார்த்து, 'எனது வீட்டில் நீர் தங்கி இருக்கிறீரா?' என்று கேட்டார்.

அந்த அதிகாரி நெருங்கி வந்தார். திடீரென்று அவர் முகம் சிவந்தது.

'கோமகனே, எனக்கு அனுமதி கொடுக்க தயவு செய்யுங்கள்... கடவுளுக்காக, உமது வண்டிகளில் ஒன்றில் ஒரு மூலையில் இருக்க அனுமதியுங்கள். இங்கே என்னுடன் எதுவும் இல்லை... சாமான்கள் ஏற்றிய வண்டியில் நான் உட்கார அனுமதித்தால் போதும்.'

அந்த அதிகாரி பேசி முடிப்பதற்கு முன்பாக. அந்த வில்லைச் சேவகன் தனது எஜமானருக்காக அதேமாதிரி விண்ணப்பம் செய்துகொண்டான்.

'ஓ, ஆம், ஆம், ஆம்' என்று கோமகன் அவசரமாகச் சொன்னார். எனக்கு மிகவும் மகிழ்ச்சி, மிகவும் மகிழ்ச்சி. வாசைலிச், நீ அதை செய்து முடிப்பாயாக. ஒன்றிரண்டு வண்டிகளிலுள்ள சாமான்களை கீழே இறக்கி விடு. நல்லது, அதனால் என்ன...எது அவசியமோ, அதை செய்வாயாக...' என்று கோமகன் தெளிவில்லாத எதோ ஒரு உத்தரவை முனங்கினார்.

அதே சமயத்தில், தமது நன்றியைக் காட்டும் முகபாவம் அந்த அதிகாரியின் முகத்தில் தோன்றி, அந்த உத்தரவை உறுதி செய்தது. கோமகன் தம்மைச் சுற்றி பார்த்தார். முற்றத்திலும், வெளி வாசல்களிலும், பக்கவாட்டிலுள்ள ஜன்னலிலும் காயமடைந்த அதிகாரிகளும், அவர்களுடைய வில்லைச் சேவகர்களும் காணப்பட்டார்கள். அவர்கள் எல்லாரும் கோமகனைப் பார்த்து முற்ற மண்டபத்திற்கு முன்னேறினார்கள்.

'தயவு செய்து மேல் படிக்கட்டிற்கு போகலாம், மேன்மை தங்கியவரே. அந்தப் படங்களைப் பற்றி உமது உத்தரவு என்ன?' என்று அந்த பிரதான காரியஸ்தர்கள் கேட்டார்.

கோமகன் அவரோடு வீட்டிற்குள் போனார். வண்டியில் இடம் வேண்டுமென்று கேட்கிற காயமடைந்தவர்களுக்கு, இல்லையென்று சொல்லக்கூடாது என்று கோமகன் தமது உத்தரவை திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்தார்.

'நல்லது, பாதகமில்லை, சில சாமான்களை இறக்கி வைத்துவிடலாம்' என்று, மற்றவர்களுக்கு கேட்டுவிடக்கூடாதே என்ற பீதியில், மெதுவான அந்தரங்கமான குரலில் அவர் பேசினார்.

ஒன்பது மணிக்கு கோமகள் விழித்தாள். மாட்ரியோவ்னா டிமாபீவ்னா என்பவள், கோமகளின் திருமணத்திற்கு முன்பாக, அவளுக்கு சேடியாக இருந்தாள். இப்பொழுது ஒரு பிரதான பாதுகாப்பாளராக வேலை பார்த்து வருகிறாள். அவள் கோமகளிடம் வந்து, திருமதி ஷாஸ் கோபித்துக்கொள்வதாகக் கூறினாள். ஏனெனில், அவளுடைய பெட்டிகளையும், வாலிப சீமாட்டிகளின் வசந்த கால உடைப் பெட்டிகளையும் விட்டுவிட்டுப் போக முடியாதென்று அவர்கள் சொல்லுவதாகக் கூறினாள். கோமகள் இதைப்பற்றி விசாரித்தாள். திருமதி ஷாஸின் பெட்டியை வண்டியிலிருந்து இறக்கி விட்டதாகவும், பெட்டிகளையெல்லாம் கயிறுகளை அவிழ்த்து வண்டிகளிலிருந்து இறக்கி, காயம்பட்டவர் களுக்கு இடம் கொடுக்கப் போவதாகவும், அவள் கேள்விப் பட்டாள். கோமகள் தம்முடைய இளகிய மனப்பான்மையினால், காயம்பட்டவர்களையும் தங்களோடு அழைத்துச் செல்ல உத்தரவு இட்டிருப்பதாக அறிந்தாள். ஆகவே, தனது கணவரை அழைத்து வரும்படி கோமகள் சொல்லியனுப்பினாள்.

'எனது அன்பானவரே, இது என்ன? சாமான்களையெல்லாம் வண்டிகளிலிருந்து இறக்குவதாக நான் கேள்விப்படுகிறேனே.'

'எனது அன்பே, உனக்குத் தெரியும். நான் உன்னிடம் சொல்லி விரும்பினேன், அன்பான கோமகளே...ஒரு அதிகாரி என்னிடம் வந்து, காயம்பட்டவர்களுக்காக சில வண்டிகள் வேண்டுமென்று கேட்டார்...நமது சாமான்களை எல்லாம் வேண்டுமானால், மீண்டும் நாம் விலைக்கு வாங்கிக் கொள்ளலாம். ஆனால், அந்த காயம்பட்டவர்களை பின்னால் விட்டுவிட்டுப் போனாள், அவர்களுக்கு என்ன நேருமென்பதை, யோசித்துப் பார்... உண்மையாக நமது முற்றத்தில் அவர்கள் இருக்கிறார்கள் - நாம் தான் அவர்களை இங்கே வரும்படி அழைத்தோம். அவர்களில் அதிகாரிகளும் இருக்கிறார்கள்...எனது அன்பே, உனக்குத் தெரியுமென்று நான் நினைக்கிறேன்...அவர்களையும் அழைத்துச் செல்வோம்...இப்பொழுது என்ன அவசரம்?'

பண சம்பந்தமான விஷயங்களைப் பேசும் போதெல்லாம், எப்பொழுதும் பீதியோடு தான் அவர் பேசுவார். அதே மாதிரி, இப்பொழுது கோமகன் பேசினார். அம்மாதிரி சங்கோஜத் தொனியை கோமகள் கேட்டுப் பழக்கமாயிருந்தாள். அந்தத் தொனியில் அவர் பேச ஆரம்பித்தால், தனது குழந்தைகளின் நன்மைக்கு விரோதமாக, எதையோ அவர் செய்யப் போகிறார் என்பதை அவள் அறிவாள். அதாவது, ஒரு புது கட்டிடத்தையோ,

அல்லது ஒரு செடிக்கூடத்தையோ, அல்லது ஒரு நாடகத்தையோ, அல்லது ஒரு வாத்தியக் கோஷ்டியையோ ஆரம்பித்து, பணச்செலவிற்கு வழி வைப்பார் என்பது அவளுக்குத் தெரியும். அம்மாதிரியான சங்கோஜத் தொனியில் அவர் எதை பேசினாலும், அதையெல்லாம் ஆட்சேபிப்பது கோமகளுக்கும் வழக்கமாயிருந்தது. அம்மாதிரியாக ஆட்சேபிக்க வேண்டியது தனது கடமையென்றும் அவள் நினைத்தாள்.

கோமகள் கண்ணீர்விட்டு, பணிந்து போகும் தோற்றத்தை மேற்கொண்டு, தனது கணவரிடம் கூறினாள்:

'கோமகனே, நான் சொல்லுவதைக் கவனித்துக் கேளும். நீர் செய்த நிர்வாகத்தினால், நமது வீட்டிற்கு விலையாக எதையும் பெற முடியாமல் போய்விட்டது. இப்பொழுது நமது குழந்தைகளினுடைய உடமைகளையெல்லாம், நம்முடைய உடமைகளையெல்லாம் தூர எறிந்து விடும்படி சொல்லுகிறீர். நமது வீட்டிலுள்ள எல்லாம், நூறு ஆயிரம் ரூபிள்கள் பெறுமானவை என்று நீரே சொன்னீர். எனது அன்பே, நான் அதற்கு சம்மதிக்க முடியாது; முடியவே முடியாது. உமது இஷ்டப்படி செய்து கொள்ளும். காயம்பட்டவர்களைக் காப்பற்ற வேண்டியது சர்க்காரின் பொறுப்பு. அதை அவர்களும் அறிவார்கள். லாப்பூகைன் என்ற எதிர் வீட்டிலுள்ளவர்களைப் பாரும். எல்லா சாமான்களையும் எடுத்துக் கொண்டு, இரண்டு தினங்களுக்கு முன்பாகவே அவர்கள் போய் விட்டார்கள். மற்ற மக்கள் எல்லாம் அப்படித்தான் செய்கிறார்கள். நாம் தான் முட்டாள்களாய் இருக்கிறோம். என் மீது தான் உமக்கு இரக்கம் இல்லாவிட்டாலும், குழந்தைகளுக்காகவாவது கொஞ்சம் இரக்கம் காட்டும்.'

தமது கைகளை அதைரியத்தோடு ஆட்டிக்கொண்டு, பதில் பேசாமல் கோமகன் அந்த அறையை விட்டு வெளியே போனார்.

'அப்பா, எதற்காக நீர் அதைச் செய்கிறீர்?' என்று அவரோடு தனது தாயாரின் அறைக்குள் நுழைந்த நட்டாஷா கேட்டாள்.

'ஒன்றுமில்லை. இதைப் பற்றி உனக்கு என்ன?' என்று கோமகன் கோபத்தோடு முணங்கினார்.

'ஆனால், நான் கேட்டேன். எதற்காக, அம்மா ஆட்சேபிக்கிறாள்?' என்று நட்டாஷா கேட்டாள்.

'இதைப் பற்றி உனக்கென்ன?' என்று கோமகன் கூச்சலிட்டார்.

நட்டாஷா ஜன்னல்களுக்குப் பக்கத்தில் சென்று சிந்தனை செய்தாள்.

'அப்பா, இதோ நம்மைப் பார்ப்பதற்காக பெர்க் வருகிறார்' என்று ஜன்னல் வழியாக வெளியே பார்த்து அவள் கூறினாள்.

# 11

## 16

ராஸ்டோவின் மருமகனான பெர்க் என்பவர், ஏற்கெனவே கர்னலாகி விட்டார். விளாடிமிர், அன்னா ஆகிய பதக்கங்களை அவர் அணிந்து கொண்டிருந்தார். ஒரு அமைதியான, சௌக்கியமான பதவியில் தான், இன்னமும் இருந்து வருகிறார். அதாவது, இரண்டாவது ராணுவத்தில், முதல் டிவிஷனுக்கு உதவி கமாண்டருக்கு உதவியாளராக இருந்து வருகிறார்.

செப்டம்பர் 1-ந் தேதியன்று ராணுவத்திலிருந்து மாஸ்கோவிற்கு அவர் வந்தார்.

மாஸ்கோவில் அவருக்கு வேலை எதுவுமில்லை. ஆனால், ராணுவத்தில் உள்ள ஒவ்வொருவரும், மாஸ்கோவுக்கு போக வேண்டுமென்றோ, அங்கே ஏதோ வேலை இருப்பதாகவோ சொல்லி, ரஜா கேட்டு வந்ததை அவர் கவனித்தார். ஆகவே, தாமும் தமது குடும்ப சம்பந்தமான வேலைகளைக் காரணமாகச் சொல்லி, ரஜா பெறவேண்டியது அவசியம் என்று நினைத்தார்.

ஒரு இளவரசர் வைத்திருந்த வண்டியைப்போல, இரண்டு செம்பழுப்பு நிற குதிரைகள் பூட்டிய சிறிய சொகுசான பிரயாண வண்டியில், தமது மாமனாரின் வீட்டிற்கு பெர்க் வந்து சேர்ந்தார். முற்றத்தில் நின்று கொண்டிருந்த வண்டிகளை உன்னிப்பாய் கவனித்தார். முற்ற மண்டபத்திற்கு அவர் போகும் போது, ஒரு சுத்தமான கைக்குட்டையை எடுத்து, அதில் ஒரு முடிச்சுப் போட்டார்.

முதல் அறையிலிருந்து மெதுவாக, ஆனால் அவசரமாக நடந்து வரவேற்பு அறைக்குள் போனார். அங்கே கோமகனைத் தழுவினார். நட்டாஷாவையும் சோனியாவையும் கைகளில் முத்தமிட்டு, அம்மாவின் உடல் நலத்தைப் பற்றி ஆவலோடு விசாரித்தார்.

'இம்மாதிரி ஒரு சமயத்திலா ஆரோக்கியத்தைப் பற்றி கவனிக்க முடியும்?' என்று கோமகன் சொன்னார். 'இங்கே வாரும்; விஷயங்களையெல்லாம் சொல்லும். ராணுவம் பின்வாங்கப் போகிறதா, அல்லது மற்றொரு போர் நடக்கப் போகிறதா?'

'நம்முடைய தந்தை நாட்டின் விதியை, சர்வ வல்லமையுள்ள கடவுள் ஒருவரே தீர்மானிக்க முடியும். அப்பா, வீர உணர்ச்சியினால் ராணுவம் கொதித்துக் கொண்டிருக்கிறது. ஆனால், தலைவர்கள் கவுன்சிலில் கூடி ஆலோசனை செய்கிறார்கள். என்ன வரப்போகிறது என்பதை ஒருவராலும் அறிய முடியாது. ஆனால், அப்பா, பொதுவாக நான் ஒன்று சொல்ல முடியும். அதாவது, ருஷ்ய ராணுவத்தின் அந்த வீர உணர்ச்சியானது, அந்த புராதன வீரமானது, 26-ந் தேதி நடந்த யுத்தத்தில் தெளிவாய் காணப்பட்டது. அதை வார்த்தைகளால் யாராலும் வர்ணிக்க முடியாது. அப்பா, நான் சொல்லுகிறேன் (ஒரு ஜெனரல் தாம் பேசிய பொழுது, தமது மார்பில் அடித்துக்கொண்டு எப்படிப் பேசினாரோ, அதே மாதிரி பெர்க்கும் தமது மார்பைத் தட்டிக்கொண்டார். ஆனால், ருஷ்ய ராணுவம் என்ற வார்த்தையை அவர் உச்சரித்தபோது, அதை செய்திருக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் கொஞ்சம் தமாதமாக செய்தார்.) கமாண்டர்களாகிய நாங்கள், அந்த வீரர்களைத் தாண்டிவிட வேண்டிய அவசியமே எதுவும் இருந்ததில்லை யென்பதை நான் பகிரங்கமாக உமக்குச் சொல்லுகிறேன். அவர்களை... அவர்கள் அந்த புராதன காலத்து வீரத்தைக் காட்டியபொழுது அவர்களை நிறுத்திப் பிடிப்பதுதான், மிகுந்த கஷ்டமாயிருந்தது. துருப்புகளுக்குத் தலைமை தாங்கி ஜெனரல் பார்க்ளே டி டாலி ஒவ்வொரு இடத்திலும் தமது உயிரை திரணமாக மதித்து நடந்தார். நமது துருப்புகள் ஒரு குன்றின் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்தன. நீரே யூகித்து அறிந்து கொள்ளலாம்' என்றார் பெர்க்.

அந்த நாட்களில் தாம் கேள்விப்பட்ட பற்பல விதமான கதைகளை, தமக்கு ஞாபகம் இருந்த வரையில் பெர்க் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு கூர்மையான நோக்கோடு, நட்டாஷா அவரை கவனித்து வந்தாள். அந்த பார்வை அவரைக் குழப்பியது. அவள் ஏதோ ஒரு கேள்விக்கு, அவருடைய முகத்தல் பதில் கிடைக்குமா என்பதை அறிய முயற்சித்தவள் போலப் பார்த்து வந்தாள்.

'ருஷ்ய வீரர்கள் காட்டிய வீரத்தனங்களைப் போன்றவைகளை, மனதினால் யூகிக்கவோ, அல்லது போதுமானபடி புகழவோ முடியாது' என்று பெர்க் கூறினார். நட்டாஷாவின் கூர்மையான பார்வைக்கு பதில் சொல்லி, அவளை திருப்தி அடையும்படி செய்வதில் கவலை கொண்டவரைப் போல, ஒரு புன்னகையோடு அவளை நோக்கினார். 'ருஷ்யா என்பது மாஸ்கோவில் இல்லை. அது ருஷ்யாவின் புத்திரர்களுடைய இருதயங்களில் இருக்கிறது. அப்படித் தானே, அப்பா?' என்று அவர் சொன்னார்.

ஒரு களைப்பான, அதிருப்தியான தோற்றத்தோடு, கோமகள் உட்காரும் அறையிலிருந்து அப்பொழுதுதான் அந்த அறைக்குள் நுழைந்தாள். வேகமாக பெர்க் குதித்தெழுந்து, அவளுடைய கையை முத்தமிட்டு, அவளுடைய செளக்கியத்தைப் பற்றி விசாரித்தார். அவளிடம் அனுதாபத்தைக் காட்டுவதைப் போலத் தலையை இப்பக்கமும் அப்பக்கமுமாக ஆட்டி, அவளுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்.

'ஆம், அம்மா, ஒவ்வொரு ருஷ்யருக்கும், இது மிகுந்த கடினமான, துக்கமான காலம் என்பதை, நான் உண்மையாகவே கூறுகிறேன். ஆனால், நீயேன் இவ்வளவு கவலையோடு இருக்கிறாய்? இங்கிருந்து போவதற்கு, இன்னமும் போதிய காலம் இருக்கிறது...'

'வேலைக்காரர்கள் என்ன செய்வார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை' என்று கோமகள் சொல்லிவிட்டு, தனது கணவரைப் பார்த்துத் திரும்பினாள். 'இன்னும் எதுவும் தயாராக வில்லையென்று நான் கேள்விப்படுகிறேன். யாராவது ஒருவர் அம்மாதிரி வேலைகளைக் கவனித்துக்கொள்ளவேண்டும். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் தான், மைட்டெங்காவின் உதவி எவ்வளவு அவசியம் என்பது தெரிகிறது. இதற்கு ஒரு முடிவு என்பதே இல்லையென்று தோன்றுகிறது.'

கோமகன் எதையோ சொல்ல விரும்பினார். ஆனால், அப்படிச் சொல்லாமல் தம்மை அடக்கிக் கொண்டார். நாற்காலியிலிருந்து அவர் எழுந்து, வாசலுக்குப் போனார்.

அச்சமயத்தில் தமது மூக்கை சிந்தப்போவதைப் போல, தமது கைக்குட்டையை பெர்க் வெளியே எடுத்தார். அதிலிருந்து முடிச்சை அவர் பார்த்ததும், சிறிது யோசித்தார். உடனே சோகத்தோடும் முக்கியத்துவத்தோடும் தலையை ஆட்டிக்கொண்டார்.

'அப்பா, உம்மிடம் ஒரு பெரிய தயவை கேட்க விரும்புகிறேன்' என்றார் அவர்.

'இம்...' என்று கோமகன் சொல்லி விட்டு அங்கே நின்றார்.

'யுசுபாவின் வீட்டு வழியாக இப்பொழுது நான் வந்து கொண்டிருந்தேன்' என்று சிரித்துக்கொண்டு பெர்க் பேசினார். 'அப்பொழுது எனக்குத் தெரிந்த அந்த வீட்டின் காரியஸ்தர் வெளியே ஓடி வந்து, எனக்கு ஏதாவது பொருள்கள் விலைக்கு வேண்டுமா என்று கேட்டார். நான் ஆவல் கொண்டு உள்ளே போனேன். அங்கே ஒரு சிறிய பீரோவும், உடையணியும் மேஜையும் இருந்தன. அம்மாதிரி ஒரு சிறிய பீரோவை

வேண்டுமென்று வெரா எவ்வளவு தூரம் விரும்பினாள் என்பதையும், அதைப் பற்றி எங்களுக்குள் எப்படி ஒரு வாதம் ஏற்பட்டது என்பதையும் நீர் அறிவீர். (சிறிய பீரோவையும், மேஜையையும் குறிப்பிடும்போது, தம்மையறியாமலேயே ஒரு இனிமையான தொனிக்கு தமது குரலை பெர்க் மாற்றிக் கொண்டார்). அது என்ன அழகாய் இருக்கிறது தெரியமா! அதில் ஒரு ரகசியமான இங்கிலீஷ் டிராயரும் இருக்கிறது. அதை வேண்டுமென்று வெகுகாலமாக அன்புமிக்க வெரா விரும்பி வந்தாள். நான் அதை வாங்கி, அவள் ஆச்சரியப்படும் விதத்தில் கொடுக்க விரும்புகிறேன். உம்முடைய முற்றத்தில் ஏராளமான விவசாயிகளின் வண்டிகள் காணப்படுகின்றன. எனக்கு ஒரு வண்டி கொடும். அந்த மனிதனுக்கு நான் போதுமான பணத்தைக் கொடுக்கிறேன்...'

கோமகன் முகம் சுளித்து இருமினார்.

'நீர் கோமகளைக் கேளும். நான் உத்தரவு எதுவும் கொடுப்ப தில்லை.'

'அது அசௌகரியமாக இருந்தால், எனக்கு வேண்டாம். வெராவுக்காகவே நான் அதை விரும்பினேன்' என்று பெர்க் சொன்னார்.

'ஓ, நீர் பிசாசிடம் போம். எல்லாரும் போங்கள், பிசாசிடம் போங்கள், பிசாசு, பிசாசு....' என்று கோமகன் கூச்சலிட்டார். 'என்னுடைய தலை சுழல்கிறது.'

அவர் அறையை விட்டு வெளியே போனார். கோமகள் அழ ஆரம்பித்தாள்.

'ஆம், அம்மா. ஆம், இப்பொழுதெல்லாம் ரொம்ப கஷ்டமான காலம்' என்று பெர்க் சொன்னார்.

தனது தந்தையோடு நட்டாஷாவும் அந்த அறையை விட்டு வெளியே போனாள். ஒரு தீர்மானத்திற்கு வருவது கஷ்டமா யிருப்பது போல தோன்றியதால், முதலில் அவர் பின்னால் போய், அப்புறம் படிகள் வழியாக கீழே ஓடினாள்.

பெட்டியா முற்ற மண்டபத்தில் நின்று மாஸ்கோவை விட்டு புறப்படுகிற வேலைக்காரர்களுக்கு ஆயுதங்களை கொடுத்துக் கொண்டிருந்தான். சாமான்கள் ஏற்றப்பட்ட வண்டிகள் இன்னமும் முற்றத்திலேயே நின்று கொண்டிருந்தன. இரண்டு வண்டிகளில் கட்டப்பட்டிருந்த கயிறுகளை அவிழ்த்திருந்தார்கள். அவைகளில் ஒன்றில், ஒரு காயமடைந்த அதிகாரி, ஒரு வில்லைச் சேவகனின் உதவியால் ஏறிக்கொண்டிருந்தார்.

'இதெல்லாம் என்ன விஷயம் என்பது உனக்குத் தெரியுமா?' என்று நட்டாஷாவை பெட்டியா கேட்டான்.

தங்களுடைய பெற்றோர்கள் எதற்காக சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதையே அவன் குறிப்பிடுகிறான் என்ற விஷயத்தை அவள் அறிந்து கொண்டாள். ஆனால், அவள் பதில் சொல்லவில்லை.

'எல்லா வண்டிகளையும் காயமடைந்தவர்களுக்கு கொடுத்து விட வேண்டுமென்று அப்பா சொல்லுவது தான் இதற்குக் காரணம். வாசைலிச் என்னிடம் சொன்னார். நான் நினைக்கிறேன்...' என்று பெட்டியா சொன்னான்.

'நான் நினைக்கிறேன்' என்று நட்டாஷா திடீரென்று கூச்சலிட்டு, தனது கோபமான முகத்தோடு பெட்டியாவைப் பார்த்தாள். 'அது மிகவும் வெறுக்கத்தக்கது, பயங்கரமானது என்று நான் நினைக்கிறேன்... என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. நாமலெல்லாரும் அந்த இகழத்தக்க ஜெர்மனியர்களா?'

அவளுடைய தொண்டை விம்மலினால் நடுங்கியது. தன்னுடைய உறுதி தளர்ந்து, தன்னுடைய கோபத்தின் வேகம் வீணாய்விடுமோ என்று பயந்து, அவள் திரும்பி வேகமாக படிகளில் ஏறினாள்.

கோமகளுக்குப் பக்கத்தில் பெர்க் அமர்ந்து, ஒரு பந்து காட்டக்கூடிய மரியாதையான சிரத்தையோடு, அவளை சாமாதானம் செய்து கொண்டிருந்தார். கையில் சுங்கானை வைத்துக் கொண்டு, கோமகன் மேலும் கீழும் அந்த அறையில் உலாவிக் கொண்டிருந்தார். அச்சமயம் கோபத்தினால் முகம் சுளித்து, ஒரு புயல் காற்றைப் போல, நட்டாஷா வேகமாக நடந்து வந்து, தனது தாயாரை நெருங்கினாள்.

'அது பயங்கரமானது! அது வெறுக்கத்தக்கது! நீ அம்மாதிரி உத்தரவு கொடுத்திருக்க முடியாது' என்று அவள் கூச்சலிட்டாள்.

பெர்க்கும் கோமகளும் குழப்பத்தோடும் பீதியுற்றும் அவளை நோக்கினார்கள். கோமகன் இன்னமும் ஜன்னலுக்குப் பக்கத்திலேயே நின்று கேட்டுக் கொண்டிருந்தார்.

'அம்மா, அது அசாத்தியம் முற்றத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை கவனி. அவர்கள் விட்டு விடப்படுவார்கள்...' என்று அவள் கூச்சலிட்டாள்.

'உனக்கு என்ன வந்து விட்டது? நீ குறிப்பிடும் 'அவர்கள்' என்பது யார்? உனக்கு என்ன வேண்டும்?

'ஏன், அவர்கள்தான் அந்த காயம்பட்டவர்கள்; அது அசாத்தியம், அம்மா. அது பிசாசுத்தனமானது...இல்லை, அம்மா, கண்ணே, விஷயம் அதுவல்ல. என்னை மன்னிப்பாயாக, என் கண்ணே... அம்மா, நாம் என்ன எடுத்துக்கொண்டு போகிறோம் என்பது ஒரு பெரிய விஷயமா? முற்றத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை நீ பார்...அம்மா...அது அசாத்தியம்.'

ஜன்னலுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த கோமகன், திரும்பிப் பார்க்காமலேயே கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தார். திடீரென்று அவர் மூச்சு இழுத்து, ஜன்னலிடம் நெருங்கி முகத்தைக் கொண்டு போனார்.

கோமகள் தனது குமாரியை நோக்கினாள். தனது தயாருக்காக அவள் முகத்தில் அவமானம் நிறைந்திருந்ததைக் கண்டாள். அவளுடைய பரபரப்பையும் பார்த்தாள். தனது கணவர் இப்பொழுது எதற்காக தன்னைத் திரும்பிப் பார்க்கவில்லை என்பதையும் அறிந்தாள். சுற்றிலும் அமைதியற்ற விதமாக நோக்கினாள்.

'ஓ, உனது இஷ்டப்படிச் செய். நான் யாருக்காவது இடையூறு செய்கிறேனா?' என்று அவள் உடனே இடங்கொடுத்துவிடாமல் பேசினாள்.

'அம்மா, என் கண்ணே, என்னை மன்னித்து விடு.'

ஆனால், கோமகள் தனது குமாரியை தள்ளிவிட்டு, தனது கணவரிடம் போனாள்.

'என் அன்பே, எது சரியென்று தோன்றுகிறதோ, அம்மாதிரியே நீர் உத்தரவு செய்யும்...அதைப் பற்றி எனக்கு ஒன்றும் புரிந்து கொள்ள முடியாது என்பதை நீர் அறிவீர்' என்று வெட்கத்தால் தனது பார்வையை கவிழ்த்துக்கொண்டு சொன்னாள்.

'முட்டைகள்...முட்டைகள் பெட்டைக் கோழிக்கு கற்றுக் கொடுக்கின்றன' என்று கோமகன் மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கி முனங்கினார். உடனே தமது மனைவியைத் தழுவிக்கொண்டார். தன்னுடைய வெட்கத்தை மறைப்பதற்காக, அவள் தன்னுடைய முகத்தை மகிழ்ச்சியோடு அவருடைய மார்பில் மறைத்துக் கொண்டாள்.

'அப்பா! அம்மா! நான் அதை கவனித்துக் கொள்ளட்டுமா? நான் கவனிக்கலாமா? இன்னமும் நமக்கு வேண்டிய அவசியமான சாமான்களை நாம் எடுத்துக்கொண்டு போகலாம்' என்று நட்டாஷா சொன்னாள்.

கோமகன் சம்மதம் தெரிவிப்பதற்காகத் தலையை ஆட்டினார். அவள் சிறு குழந்தையாக இருந்தபோது, தொட்டுப் பிடிக்கும் விளையாட்டில் எவ்வளவு வேகமாக ஓடுவாளோ, அந்த வேகத்தில் நடன மண்டபம் வழியாகவும், முன் அறை வழியாகவும் ஓடி படிக்கட்டுகளில் இறங்கி, முற்ற மண்டபத்திற்குப் போனாள்.

வேலைக்காரர்கள் நட்டாஷாவைச் சுற்றிக் கூடினார்கள். அவள் கொண்டு வந்திருந்த விசித்திரமான உத்தரவை, அவர்களால் நம்ப முடியவில்லை. கோமகன் தாமே நேரமாக வந்து, தமது மனைவியின் பேரால் அந்த உத்தரவை உறுதி செய்து, வண்டிகளையெல்லாம் காயம் பட்டவர்களுக்குக் கொடுத்து விடும்படியும், பெட்டிகளை சாமான்கள் அறைகளில் கொண்டு சேர்க்கும்படியும் சொல்லிய பின்புதான், அவர்கள் நம்பினார்கள். அந்த உத்தரவை அவர்கள் புரிந்து கொண்டதும், இந்த புது வேலையை மகிழ்ச்சியோடும், ஆர்வத்தோடும் வேலைக்காரர்கள் கவனிக்க ஆரம்பித்தார்கள். அவர்களுக்கு அது விசித்திரமாக இப்பொழுது தோன்றவில்லை. அதற்கு மாறாக, அம்மாதிரிதான் செய்ய முடியுமென்று அவர்களுக்குத் தோன்றியது. அதே மாதிரி, கால் மணி நேரத்திற்கு முன்பாக, காயம்பட்டவர்களைப் பின்னால் விட்டுவிட்டு, சாமான்களை வண்டிகளில் கொண்டுபோக வேண்டுமென்று சொல்லியபொழுது, அவர்களுக்கு அது ஆச்சரியமாக இருக்கவில்லை. அந்த ஒரு வழிதான் சாத்தியமான வழி என்று அப்பொழுது அவர்கள் நினைத்தார்கள்.

இந்தக் காரியத்தைச் சீக்கிரமாகச் செய்து முடிக்காததற்குப் பிராயச்சித்தம் செய்வதைப் போல, அந்த காயம்பட்டவர்களை வண்டிகளில் அமர்த்துவதற்கு, அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் முழுவதும் மிகுந்த ஆவலோடு வேலை செய்ய ஆரம்பித்தார்கள். வீட்டிற்குள் அறைகளிலிருந்த காயம்பட்டவர்கள் அறைகளை விட்டு வெளியே வந்து, வெளிறிய ஆனால் சந்தோஷமான முகத்தோடு வண்டிகளைச் சுற்றி நின்றார்கள். காயம்பட்டவர் களுக்கு வண்டிகளைக் கொடுக்கப் போகிறார்கள் என்ற செய்தி பக்கத்து வீடுகளுக்கும் பரவியது. அங்கிருந்தும் காயம் பட்டவர்கள் ராஸ்டோவ்களின் முற்றத்திற்கு வந்து சேர்ந்தார்கள். காயம்பட்டவர்களில் பலர் வண்டியிலிருந்து சாமான்களை இறக்க வேண்டாமென்றும், சாமான்களுக்கு மேலாக உட்காருவதற்குத் தங்களை அனுமதித்தால் போதும் என்றும் சொன்னார்கள். ஆனால், சாமான்களை இறக்கும் வேலையை ஒரு தடவை ஆரம்பித்த பின்பு அதைநிறுத்த முடியவில்லை. சாமான்களில் பாதியை

விட்டுவிட்டுப் போவதா, அல்லது முழுவதும் விட்டுவிட்டுப் போவதா என்பதை பற்றி, இப்பொழுது ஒருவருக்கும் கவலையிருந்ததாகத் தோன்றவில்லை. பீங்கான் சாமான்கள், படங்கள், கண்ணாடிகள், ஆகியவைகளை மிகுந்த ஜாக்கிரதையோடு முந்தைய நாள் இரவு கட்டிவைக்கப்பட்டிருந்த பெட்டிகள் எல்லாம், இப்பொழுது முற்றத்தில் பரவிக் கிடந்தன. காயம் அடைந்தவர்களுக்கு மேலும் ஒரு வண்டியைக் கொடுக்கலாம்; இன்னும் ஒரு வண்டியைக் கொடுக்கலாம் என்று நினைத்து, இப்பொழுது ஒவ்வொரு வண்டியிலிருந்தும், சாமான்களை இறக்கிக் கொண்டிருந்தார்கள்.

'நாம் இன்னும் நாலு பேர்களை அதிகமாக அழைத்துக்கொண்டு போக முடியும். அவர்கள் என்னுடைய வண்டியை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளட்டும். இல்லையென்றால், அவர்களுக்கு என்ன கதி நேரிடும்?' என்று காரியஸ்தர் சொன்னார்.

'என்னுடைய துணி மணிகளை வைத்திருக்கும் வண்டிகளில் வேண்டுமானாலும் அவர்கள் ஏறிக்கொள்ளட்டும். என்னுடைய வண்டியில் டுனியாஷா என்னோடு வரட்டும்' என்று கோமகள் சொன்னாள்.

துணி மணி வைத்திருந்த வண்டியிலுள்ள சாமான்களை கீழே இறக்கினார்கள். இரண்டு வீடுகளுக்கு அப்பால் இருந்த காயம்பட்டவர்களை ஏற்றுவதற்காக, அந்த வண்டியை அங்கே அனுப்பினார்கள். வீட்டிலுள்ளவர்கள் முழுவதும், வேலைக் காரர்கள் உள்பட, மிகுந்த உற்சாகத்தோடு இருந்தார்கள். நட்டாஷா, சமீப காலத்தில் அவள் அறிந்திராத, பரவசமான உற்சாகத்தோடு காணப்பட்டாள்.

'இதை நாம் எங்கே வைப்பது?' என்று வேலைக்காரர்கள் கேட்டார்கள். ஒரு வண்டியின் பின்னாலிருந்த படியில் ஒரு பெட்டியை வைக்க அவர்கள் முயற்சி செய்தார்கள்.

'அதற்குள் என்ன இருக்கிறது?' என்று நட்டாஷா கேட்டாள்.

'கோமகனின் புத்தகங்கள் இருக்கின்றன.'

'அதை விட்டு விடுங்கள், வாசைலிச் அதை எடுத்து வைத்துக் கொள்வார். அது நமக்குத் தேவையில்லை.'

அந்த பீட்டன் வண்டி முழுவதும் ஆட்களால் நிறைந்திருந்தது. கோமகன் பீட்டர் எங்கே அமருவது என்பது சந்தேகமாகி விட்டது.

'பெட்டியின் மீது உட்கார்ந்து கொள்ளலாம். நீ அந்த பெட்டியின் மீது உட்கார்ந்துக் கொள்வாய் அல்லவா, பெட்டியா?' என்று நட்டாஷா கூச்சலிட்டாள்.

சோனியாவும் சுறுசுறுப்பாகவே இருந்தாள். ஆனால், அவளுடைய முயற்சிகளின் நோக்கம் நட்டாஷாவின் நோக்கங்களுக்கு முற்றிலும் மாறுபாடானது. அவள் பின்னால் விட்டு விடப்படும் சாமான்களைப் பற்றி கோமகன் விரும்பியபடி ஒரு ஜாபிதா தயார் செய்து கொண்டிருந்தாள். தங்களோடு எவ்வளவு அதிகமாக சாமான்களை எடுத்துக்கொண்டு போக முடியுமோ, அவ்வளவு எடுத்துப் போக அவள் முயற்சித்துக் கொண்டிருந்தாள்.

# 11

## 17

பிற்பகல் இரண்டு மணிக்குள்ளாக, ராஸ்டோவ்களின் நாலு பிரயாண வண்டிகளும் முழுவதுமாக நிரப்பப்பட்டு, குதிரைகள் பூட்டப்பட்டு முன் வாசல் முன்பாக நின்று கொண்டிருந்தன. காயம் பட்டவர்களை ஏற்றிய வண்டிகள், ஒன்றன் பின் ஒன்றாக முற்றத்திலிருந்து வெளியேறின.

இளவரசர் ஆண்ட்ரூ ஏறியிருந்த பிரயாண வண்டி, சோனியாவின் கவனத்தை இழுத்தது. முற்ற மண்டபம் வழியாக அது போய்க்கொண்டிருந்தது. ஒரு வேலைக்காரியின் உதவியைக் கொண்டு, ஒரு பெரிய பிரயாண வண்டியில் கோமகளுக்கு உட்காருவதற்கு சௌகரியமாக இருக்கும்படி, சோனியா ஏற்பாடு செய்து கொண்டிருந்தாள். அந்த பெரிய வண்டி வாசலுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிந்தது.

'அது யாருடைய பிரயாண வண்டி?' என்று ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து கேட்டாள்.

'ஏன், உனக்குத் தெரியாதா, குமாரியே? அதில் தான் காயமடைந்த இளவரசர் இருக்கிறார். இரவில் நமது வீட்டில் தான் தங்கினார். இப்பொழுது நம்முடன் தான் அவரும் வருகிறார்' என்று அந்த வேலைக்காரி பதில் அளித்தாள்.

'ஆனால், அவர் யார்? அவருடைய பெயரென்ன?'

'அவர் தான் நம்முடைய நிச்சயார்த்தமாயிருந்தவர் - இளவரசர் பால்கோன்ஸ்கி தான் அவர். அவர் மரணப்படுக்கையிலிருப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள்' என்று பெருமூச்சோடு அந்த வேலைக்காரி சொன்னாள்.

சோனியா அந்த பிரயாண வண்டியிலிருந்து கீழே குதித்து கோமகளிடம் ஓடினாள். கோமகள் களைப்புற்று இருந்தாள். ஒரு

சால்வையை போர்த்திக்கொண்டு, தலையில் தொப்பியை வைத்துக்கொண்டு, புறப்படுவதற்குத் தயாராக அந்த வரவேற்பு அறையில் மேலும் கீழும் உலாவிக் கொண்டிருந்தாள். பிராயாணத்திற்கு முன்பாக வீட்டிலுள்ளவர்கள் எல்லாரும் அங்கே கூடி, மௌனமாக பிரார்த்தனை செய்வது வழக்கம். அதற்காக அவள் காத்துக்கொண்டிருந்தாள். அந்த அறையில் நட்டாஷா இல்லை.

'அம்மா, இளவரசர் ஆண்ட்ரூ இங்கே இருக்கிறார். பிழைக்க முடியாதபடி காயம் அடைந்திருக்கிறார். அவரும் நம்முடன் தான் வருகிறார்' என்று சோனியா கூறினாள்.

பீதியோடு கோமகள் தனது கண்களைத் திறந்தாள். சோனியாவின் கையைப் பற்றிக்கொண்டு சுற்றிலும் நோக்கினாள்.

'நட்டாஷா எங்கே?' என்று அவள் முணுமுணுத்தாள்.

அவர்கள் இருவருக்கும் அந்த செய்தி அச்சமயத்தில் ஒரே ஒரு முக்கியத்துவத்தைக் காட்டியது. அவர்களுடைய நட்டாஷாவைப் பற்றி அவர்கள் அறிவார்கள். இந்தச் செய்தியை அவள் கேட்பாளானால், என்ன நேரிடும் என்பதை அவர்கள் பீதியோடு நினைத்துப் பார்த்தார்கள். அந்தப் பீதியானது, அவர்கள் இருவருக்கும் பிரியமான அந்த மனிதன் மீது உள்ள அனுதாபத்தை அமுக்கிவிட்டது.

'நட்டாஷாவுக்கு இன்னமும் இது தெரியாது. ஆனால், அவர் நம்மோடு தான் வருகிறார்' என்று சோனியா சொன்னாள்.

'அவர் மரணப்படுக்கையில் இருக்கிறார் என்று நீ சொல்லுகிறாயா?'

சோனியா தலையை ஆட்டினாள்.

கோமகள் சோனியாவின் இடுப்பை ஙககளால் கட்டிக்கொண்டு அழ ஆரம்பித்தாள்.

'கடவுளின் வழிகளை நம்மால் கண்டு பிடிக்க முடியாது' என்று அவள் நினைத்தாள். இதுவரை காணப்படாமல் இருந்த அந்த சர்வ வல்லமையுள்ள கடவுளின் கையானது, இப்பொழுது நடக்கிற விஷயத்திலிருந்து தெளிவாகத் தெரிய ஆரம்பித்திருப்பதாக அவள் உணர்ந்தாள். (ருஷ்ய மாதாகோவிலின் சட்டப்படியுள்ள ஒரு விஷயத்தை, இங்கே மீண்டும் வாசகர்களுக்கு ஞாபகமூட்டுகிறோம். ஒருவர் தன்னுடைய மைத்துனியை திருமணம் செய்யக்கூடாது. ஆண்ட்ரூவை நட்டாஷா திருமணம் செய்திருந்தால், இளவரசி மேரியை நிக்கலஸ் திருமணம் செய்வதற்கு இடையூறாக இருக்கும். அம்மாதிரி திருமணம் செய்து ராஸ்டோவ்களின் பணக் கஷ்டத்தை போக்கவும் முடியாமல் இருந்திருக்கும்.)

'நல்லது, அம்மா? ஒவ்வொன்றும் தயாராய் விட்டது. இப்பொழுது என்ன விஷயம்? என்று பரபரப்பான முகத்தோடு அறைக்குள் ஓடிவந்த நட்டாஷா கேட்டாள்.

'ஒன்றுமில்லை. எல்லாம் தயாராய் விட்டால், நாம் புறப்படுவோம்' என்று கோமகள் பதில் அளித்தாள்.

தனது பரபரப்படைந்த முகத்தை மறைப்பதற்காக, தனது அழகு பையை குனிந்து பார்த்தாள். சோனியா நட்டாஷாவைத் தழுவி முத்தமிட்டாள்.

நட்டாஷா கேள்விக் குறியோடு அவளை நோக்கினாள்.

'என்ன விஷயம்? என்ன நடந்து விட்டது?'

'ஒன்றுமில்லை... ஒன்றுமில்லை...'

'எனக்கு ஏதாவது கெடுதலான விஷயமா? அது என்ன?' என்று அவளுக்குள்ள வேகமான உள்ளுணர்வோடு, அவள் வற்புறுத்திக் கேட்டாள்.

சோனியா பெருமூச்சு விட்டாள். பதில் ஒன்றம் சொல்ல வில்லை. கோமகள், பெட்டியா, திருமதி ஷாஸ், மாவ்ரா, வாசைலிச், ஆகியவர்கள் வரவேற்பு அறைக்குள் வந்து, கதவுகளை சாத்திவிட்டு அமர்ந்தார்கள். சில வினாடிகள் ஒருவரையொருவர் பார்க்காமல், மௌனமாக உட்கார்ந்து இருந்தார்கள்.

கோமகன் முதலில் எழுந்தார். ஒரு பெரிய பெருமூச்சோடு தெய்வச் சிலை முன்பு தமக்குச் சிலுவைக் குறி காட்டினார். மற்றவர்களும் அதே மாதிரி செய்தார்கள். பின்னால் கோமகன் மாவ்ராவையும் வாசைலிச்சையும் தழுவினார். அவர்கள் மாஸ்கோவிலேயே தங்கியிருக்க வேண்டியவர்கள். அவர்கள் அவருடைய கையைப் பற்றி தோளில் முத்தமிட்டார்கள். கோமகன் அவர்களுடைய முதுகை லேசாக தட்டி, ஏதோ இனம் புரியாத, பிரியமான, இதமான வார்த்தைகளைச் சொன்னார். கோமகள் பிரார்த்தனை அறைக்குப் போனபோது, அங்கே சோனியா தெய்வச் சிலைகளின் முன்பு முழங்கால் படியிட்டு இருப்பதைப் பார்த்தாள். அந்த உருவங்களை சுவர்களிலேயே தொங்கும்படி அவர்கள் விட்டுவிட்டுப் போனார்கள். (குடும்பத்தில் பரம்பரையாக இருந்து வந்த மிகுந்த அபூர்வமான தெய்வச் சிலைகளை, தங்களோடு அவர்கள் எடுத்துக் கொண்டு போனார்கள்.)

முற்றத்திலுள்ள மண்டபத்தில் அவர்களுடைய ஆட்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் உடைவாள்களையும், குத்துவாள்களையும் பெட்டியா கொடுத்திருந்தான். அவர்களுடைய

உயரமான பூட்ஸ்களுக்குள்ளே, கால் சட்டைகளை நுழைத்து கட்டியிருந்தார்கள். அவர்களுடைய பெல்டுகளை அழுத்தமாக மாட்டியிருந்தார்கள். அங்கே வீட்டிலேயே தங்குகிறவர்களிட மிருந்து, அவர்கள் விடை பெற்றுக்கொண்டிருந்தார்கள்.

ஒரு பிரயாணம் ஆரம்பிக்கும்போது, பல விஷயங்களை மறந்து விடுவதும், சில சாமான்களை தவறான இடங்களில் வைப்பதும் வழக்கம். அதே மாதிரி இப்பொழுதும் நடந்து கொண்டிருந்தது. பிரயாண வண்டிகளின் கதவுகளை திறந்துகொண்டு இரு பக்கங்களிலும் இரண்டு வேலைக்காரர்கள் வெகு நேரம் வரையில் காத்திருந்தார்கள். கோமகள் வண்டிக்குள் ஏறுவதற்கு உதவி செய்வதற்காக, அவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். வேலைக்காரர்கள் தலையணைகளையும், சாமான் மூட்டை களையும் வீட்டுக்குள்ளிலிருந்து வண்டிகளில் கொண்டு வந்து வைப்பதும், மீண்டும் வீட்டிற்குள் ஓடுவதுமாக இருந்தார்கள்.

'அவர்கள் எப்பொழுதுமே ஒவ்வொன்றையும் மறந்து விடுவார்கள்! நான் அம்மாதிரி உட்கார முடியாது என்பது உனக்குத் தெரியாதா?' என்று கோமகள் கேட்டாள்.

டுனியாஷா பற்களை கடித்துக்கொண்டு, பதில் சொல்லாமல் முகத்தில் ஒரு வருத்தமான தோற்றத்தைக் கொண்டு, ஆசனத்தை சரியாக அமைப்பதற்காக அவரசமாக வண்டிக்குள் ஏறினாள்.

'ஓ, இந்த வேலைக்காரர்கள்!' என்று கோமகன் தலையை இப்படியும்அப்படியும் ஆட்டிக்கொண்டு கூறினார்.

எப்பைம் என்ற முதிய வண்டியோட்டி மீது தான், கோமகளுக்கு நம்பிக்கையுண்டு. வண்டியின் முன்னால் இருந்த உயரமான பெட்டி மீது அவன் அமர்ந்து இருந்தான். தனக்குப் பின்னால் என்ன நடக்கிறது என்பதை கவனிப்பதற்குக்கூட, அவன் திரும்பிப் பார்க்கவில்லை. அவனுக்கு முப்பது வருஷ அனுபவம் உண்டு. 'கடவுளின் பெயரால் புறப்பட்டுப் போ' என்று அவனுக்கு உத்தரவு கிடைப்பதற்கு, இன்னும் கொஞ்சம் நேரமாகும் என்பதை அவன் அறிவான். அம்மாதிரி உத்தரவு கொடுத்த பின்பும் கூட, ஒரு தடவையோ, அல்லது இரண்டு தடவையோ அவர்கள் வண்டியை நிறுத்தி மறந்து போன ஏதோ சில சாமான்களை எடுத்து வரும்படி, உத்தரவு இடுவார்கள் என்பதையும் அவன் அறிவான். அதற்குப் பின்னாலும் கூட, அவனை மீண்டும் வண்டியை நிறுத்தச் சொல்லி, ஜன்னல் வழியாக கோமகள் தலையை நீட்டி, கடவுளுக்காக அந்தக் குன்றிலிருந்து கீழே இறங்கும்போது, ஜாக்கிரதையாக ஓட்டிப் போகும்படி கேட்டுக்கொள்வாள் என்பதையும் அவன் அறிவான்.

இவற்றையெல்லாம் அவன் அறிந்திருந்தபடியால், நடக்கப் போகிறவைகளுக்காக குதிரைகளை விட அதிகமாக பொறுமையோடு அவன் காத்திருந்தான். ஆனால், அந்த குதிரைகளின் பக்கத்தில் நின்ற செம்பழுப்பு நிறமுள்ள குதிரையானது, பொறுமையின்றி கீழே தரையை பறித்தும், கடிவாளத்தைக் கடித்துக்கொண்டும் இருந்தது. எல்லாரும் வண்டிகளில் அமர்ந்தார்கள். பிரயாண வண்டிகளின் படிகள் மேலே மடக்கி விடப்பட்டன. கதவுகள் சாத்தப்பட்டன. ஒரு பிரயாண பெட்டியை எடுத்து வரும்படி ஒருவரை அனுப்பினார்கள். ஜன்னல் வழியாக கோமகள் தலையை நீட்டி, அவள் என்ன சொல்ல வேண்டுமோ அதை சொல்லி முடித்தாள். அதன் பின்னால், எப்பைம் தனது தொப்பியை கழற்றி, தனக்கு சிலுவைக் குறிக் காட்டிக்கொள்ள ஆரம்பித்தான் குதிரைக்காரர்களும், மற்ற சேவகர்களும் அதே மாதிரி செய்தார்கள். 'கடவுளின் பெயரால் புறப்பட்டுப் போவாயாக' என்று எப்பைம் சொல்லி, தனது தொப்பியை தலையில் வைத்துக்கொண்டான். 'புறப்படு'. குதிரைக்காரர்கள் குதிரைகளை போகும்படி செய்தார்கள். நோக்கால் இல்லாமலிருந்த குதிரை, தன்னுடைய கழுத்தைக் கொண்டு இழுத்தது. வில்லுகள் கிரீச்சிட்டன. பிரயாண வண்டி ஆடியது. சேவகர்கள், நகர்ந்து போய்க்கொண்டிருந்த வண்டிகளில் குதித்து ஏறி, முன் பெட்டியில் போய் அமர்ந்தார்கள். வண்டிகள் முற்றத்திலிருந்து ரஸ்தாவிற்கு சமதளம் இல்லாத பாதையில் போனபோது குலுங்கின. மற்ற வண்டிகளும் அதே மாதிரி குலுங்கின. அந்த பிரயாண வண்டிகளின் ஊர்வலம் தெருவழியாக போக ஆரம்பித்தது. பிரயாண வண்டிகளில் இருந்தவர்கள் எல்லாரும், வீட்டுக்கு எதிரில் இருந்த மாதா கோயிலை கடந்தபோது, தங்களுக்கு சிலுவைக் குறி காட்டிக்கொண்டார்கள். மாஸ்கோவிலேயே தங்கியிருக்க வேண்டியவர்கள் வண்டிகளுக்கு இரு புறங்களிலும் நடந்து சென்று பிரயாணிகளை வழி அனுப்பினார்கள்.

நட்டாஷாவுக்கு இப்பொழுது ஏற்பட்டிருந்தது போன்ற மகிழ்ச்சி, வெகு அபூர்வமாகத்தான் இதற்கு முன்னால் ஏற்பட்டிருந்தது. கோமகளுக்குப் பக்கத்தில் அவள் அமர்ந்து பரபரப்படைந்த, கைவிடப்பட்ட மாஸ்கோவின் சுவர்கள் மெதுவாக பின்னால் போய்க்கொண்டிருப்பதை பார்த்துக் கொண்டே வந்தாள். இடையிடையே வண்டியின் வழியாக வெளியே தலையை நீட்டி பின்னால் பார்ப்பாள். சில சமயங்களில், தங்கள் வண்டிகளுக்கு முன்னால் போய்க் கொண்டிருந்த

காயமடைந்த சிப்பாய்களின் நீளமான வண்டித் தொடர்களை பார்ப்பாள். அநேகமாக அந்தத் தொடரின் முன்னால் இளவரசர் ஆண்ட்ரூவின் உயரமான மூடியுள்ள வண்டியை பார்ப்பாள். அந்த வண்டிக்குள் யார் இருக்கிறார் என்பது அவளுக்குத் தெரியாது. ஆனால், அந்த ஊர்வலத்தை அவள் பார்க்கும் ஒவ்வொரு நேரத்திலும், அந்த குறிப்பிட்ட வண்டியை பார்ப்பதற்காக, அவளுடைய கண்கள் தேடிக்கொண்டிருக்கும். அந்த வண்டி அவளுக்கு நேராக முன்னால் போய்க்கொண்டிருப்பதை அவள் அறிவாள்.

நிக்கைட்ஸ்கி, பிரஸ்னியா, பாட்னாவைன்ஸ்க் ஆகிய தெருக்களிலிருந்து பல வண்டித் தொடர்கள், ராஸ்டோவ்களின் தொடர்களைப்போலவே, குட்றினாவில் வந்து கலந்து கொண்டன. சாடோவாயா என்ற தெரு வழியாக அவர்கள் போன போது, வண்டிகளும் பிரயாண வண்டிகளும் இரண் டு வரிசைகளாகப் போய்க்கொண்டிருந்தன.

சுக்காரேவ் என்ற தண்ணீர் கோபுரத்தை சுற்றி அவர்கள் போய்க்கொண்டிருந்தபோது, தங்களைக் கடந்து வண்டியிலோ, நடந்தோ போய்க்கொண்டிருந்தவர்களை ஆவலோடும் உன்னிப்போடும் கவனித்து வந்த நட்டாஷா, திடீரென்று மகிழ்ச்சியான ஆச்சரியத்தோடு கூச்சலிட்டாள்.

'என் அன்பே! அம்மா, சோனியா, இதோ பாருங்கள். அவரே தான்!'

'யார்? யார்?'

'பாருங்கள்! ஆம், நான் சொல்லுகிறேன், அது பெஜுகாவ் தான்' என்று நட்டாஷா, ஜன்னல் வழியாக தலையை நீட்டி ஒரு உயரமான பருத்த மனிதர், வண்டிக்காரனின் நீளமான கோட்டை அணிந்திருந்ததை வெறித்துப் பார்த்தாள். அவருடைய நடையிலிருந்தும், அசைவிலிருந்தும், அவர் மாறு வேடம் அணிந்த ஒரு கனவான் என்பது தெளிவாய்த் தெரிந்தது. சுக்காரேவ் கோபுரத்தின் ஆர்ச் வழியாக ஒரு சிறிய மஞ்சள் முகம் கொண்ட, தாடியில்லாத முதியவர் ரோம கோட்டு அணிந்து கொண்டு அவருடன் போவதைப் பார்த்தாள்.

'ஆம், உண்மையிலேயே அவர் பெஜுகாவ் தான். ஒரு வண்டிக்காரனின் கோட்டைஅணிந்து கொண்டு, விசித்திரமாகத் தோன்றும் பழைய புள்ளி. உண்மையாகவே, பாருங்கள், பாருங்கள்' என்று நட்டாஷா சொன்னாள்.

'இல்லை, அது அவர் அல்ல. நீ என்ன, இம்மாதிரி அசட்டுப் பேச்சுக்களை யெல்லாம் பேசிக்கொண்டிருக்கிறாய்?'

'அம்மா' என்று நட்டாஷா கிரீச்சிட்டாள். 'அவர்தான் என்பதற்கு பந்தயம் வைத்து, எனது தலையைக் கூட கொடுக்கத் தயார். நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன். நிறுத்து, வண்டியை நிறுத்து' என்று வண்டியோட்டியைப் பார்த்துக் கூச்சலிட்டாள்.

ஆனால், வண்டியோட்டியால் வண்டியை நிறுத்த முடிய வில்லை. ஏனெனில், மேஷ்சான்ஸ்கி தெருவிலிருந்து இன்னும் பல வண்டிகளும், பிரயாண வண்டிகளும் அங்கு வந்து கொண்டிருந்தன. இந்த வண்டிக்காரர்கள் ராஸ்டோவ்களின் வண்டிக்காரர்களைப் பார்த்து, மேலே நகர்ந்து செல்லும்படியும், தெருக்களை அடைத்துக் கொண்டிருக்க வேண்டாமென்றும் கூச்சலிட்டார்கள்.

உண்மையில் முன்னைவிட இப்பொழுது கொஞ்சம் அதிக தூரத்தில் இருந்தபோதிலும், எல்லா ராஸ்டோவ்களும் பீயரைப் பார்த்தார்கள். அல்லது, பீயர் மாதிரி ஒரு அபூர்வமான சாயலுள்ள ஒருவர், வண்டிக்காரனின் கோட் அணிந்து தெரு வழியாக போய்க் கொண்டிருந்ததைக் கண்டார்கள். அவர் தமது தலையை முன்னால் தொங்க விட்டுக்கொண்டிருந்தார். அவருடைய முகம் கவலை யோடு காணப்பட்டது. அவருக்குப் பக்கத்தில் ஒரு சிறிய தாடியில்லாத சேவகனைப்போல் தோன்றிய ஒரு முதியவர் போய்க் கொண்டிருந்தார். அந்த முதியவர், பிரயாண வண்டியிலிருந்து ஒரு முகம் வெளியே தோன்றி, தங்களைப் பார்ப்பதை கவனித்தார். அவர் மரியாதையோடு பீயரின் முழங் கையை தொட்டு, பிரயாண வண்டியை சுட்டிக் காட்டி அவரிடம் எதையோ சொன்னார். பீயர் சிந்தனையில் மூழ்கியிருந்தபடியால், முதலில் அவர் சொல்லுவதை புரிந்து கொள்ள முடியவில்லை. கடைசியாக அவர் புரிந்து கொண்டதும், அந்த முதியவர் காட்டிய திசையை நோக்கினார். அங்கே நட்டாஷாவை அடையாளம் கண்டு கொண்டார். அவருக்கு முதலில் ஏற்பட்ட உள்ளுணர்ச்சியின்படி, உடனே அப்பக்கமாக திரும்பி, அந்த பியாண வண்டியைப் பார்த்து வேகமாய் போனார். ஒரு டஜன் அடிகள் அவர் எடுத்து வைத்ததும், எதையோ நினைவு கூர்ந்தவரைப் போல திடீரென்று நின்றார்.

ஜன்னலுக்கு வழியாக பார்த்துக்கொண்டிருந்த நட்டாஷாவின் முகம் ஆச்சரியமான அன்போடு ஒளிர் விட்டுக்கொண்டிருந்தது.

'பீட்டர் கிரைலாவிச், இங்கே வாரும், நாங்கள் உம்மை அடையாளம் கண்டுகொண்டோம். இது ரொம்ப ஆச்சரியமானது' என்று கூறி, தன்னுடைய கையை அவரை நோக்கி வெளியே நீட்டினாள். 'இங்கே நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்? நீர் ஏன் இம்மாதிரி இருக்கிறீர்?'

நீட்டிய கையை பீயர் பற்றி, சங்கோஜத்தோடு முத்தமிட்டார். அந்த வண்டிக்குப் பக்கத்தில் அவரும் நடந்து சென்றார்.

'என்ன விஷயம், கோமகனே?' என்று கோமகள் ஆச்சரியமும் அனுதாபமும் கொண்ட தொனியோடு கேட்டாள்.

'என்ன? என்ன? ஏன்? என்னை ஒன்றும் கேட்கவேண்டாம்' என்று பீயர் சொல்லி விட்டு, திரும்பிப் பார்த்தார். அவளுடைய பிரகாசமான, சந்தோஷமான முகத்தோற்றத்தை, அவளைப் பார்க்காமலேயே அவள் புரிந்து கொண்டார். அந்த தோற்றமானது அவரை பரவசத்தால் நிரப்பியது.

'நீரும் மாஸ்கோவில் தங்கப் போகிறீரா?'

பீயர் தயங்கினார்.

'மாஸ்கோவிலா?' என்று ஒருகேள்வித் தொனியில் கேட்டார். 'ஆம், மாஸ்கோவில் தான். போய் வாருங்கள்.'

'நான் மட்டும் ஒரு ஆணாய் இருப்பேனானால்! நானும் உம்மோடு நிச்சயமாக தங்கியிருப்பேன். எவ்வளவு சிலாக்கியமானது. அம்மா, நீ என்னை அனுமதித்தால், நான் தங்கி விடுவேன்' என்று நட்டாஷா சொன்னாள்.

பராக்கு புத்தியோடு நட்டாஷாவை பீயர் நோக்கி, எதையோ சொல்ல ஆரம்பித்தார். அதற்குள்ளாக கோமகள் இடைமறிந்தாள்.

'நீர் போர் முனையில் இருந்தீராமே? நாங்கள் கேள்விப் பட்டோம்.'

'ஆம், நான் இருந்தேன். நாளை மற்றொரு போர் நடக்கலாம்...' என்று ஆரம்பித்தார். ஆனால், நட்டாஷா இடைமறித்தாள்.

'கோமகனே, உமக்கு என்ன வந்து விட்டது. உம்மைப் போல நீர் காணப்படவில்லையே...'

'ஓ, என்னை கேட்க வேண்டாம், என்னைக் கேட்க வேண்டாம். எனக்கே என்னைப் பற்றித் தெரியாது. நாளைய தினம்...ஆனால், இல்லை, போய் வாருங்கள், போய் வாருங்கள்' என்று அவர் முனங்கினார். 'இது ஒரு மகா மோசமான காலம்' என்று சொல்லி விட்டு, அந்த வண்டிக்குப் பின்னால் தங்கி, நடை பாதையில் ஏறிக்கொண்டார்.

வெகு நேரம் வரையில் நட்டாஷா ஜன்னலுக்கு வெளியாக தலையை நீட்டிக்கொண்டு, தன்னுடைய இனிமையான, அன்பான, ஆச்சரியமான, மகிழ்ச்சியான புன்னகையை அவர் மீது வீசிக்கொண்டே வந்தாள்.

11

18

தமது வீட்டை விட்டு பீயர் வெளியேறிய பின்பு, கடந்த இரண்டு நாட்களாக ஒரு காலியான வீட்டில் வசித்து வந்தார். அந்த வீடு அவருடைய நன்மையாளரான காலஞ்சென்ற பாஜ்டீவைச் சேர்ந்தது. அவர் அம்மாதிரி செய்ததற்குக் காரணம் பின் வருமாறு:

அவர் மாஸ்கோவிற்கு திரும்பி கோமகன் ராஸ்டாப்சைனோடு அவர் பேசிய பின்பு, மறுநாள் காலையில் அவர் விழித்தபோது அவர் எங்கே இருக்கிறார் என்பதையோ, அல்லது அவரிடம் எதை எதிர் பார்க்கிறார்கள் என்பதையோ, அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவருடைய வரவேற்பு அறையில், பலர் காத்துக்கொண்டிருப்பதாக அவரிடம் சொல்லப் பட்டது. அவர்களில் ஒரு பிரஞ்சுக்காரரும் இருப்பதாகவும், அவர் தமது மனைவியான கோமகன் ஹெலனிடமிருந்து ஒரு கடிதத்தை கொண்டு வந்திருப்பதாகவும் அவருக்குச் சொல்லப்பட்டது. அதைக் கேட்டதும் அவருக்கு வழக்கமாக ஏற்படக்கூடிய குழப்பமும், நம்பிக்கையற்ற நிலைமையும் அவரைப் பிடித்துக்கொண்டன. ஒவ்வொரு காரியமும் முடிவிற்கு வந்து விட்டதைப் போல அவர் இப்பொழுது உணர்ந்தார். எல்லாம் குழப்பத்திலிருப்பதாகவும், எல்லாம் உடைந்து தகர்ந்து கொண்டிருப்பதாகவும், யார் செய்வதும் சரியாகவோ, அல்லது தப்பாகவோ இல்லையென்றும், எதிர்காலம் எந்த நம்பிக்கையும் காட்டவில்லையென்றும், இந்த நிலைமையிலிருந்து தப்புவதற்கு வழியில்லையென்றும் அவர் நினைத்தார். இயற்கைக்கு விரோதமாக புன்சிரிப்பு காட்டி, தமக்குள்ளேயே முனங்கிக்கொண்டு, ஒரு அதைரியம் கொண்ட மனோபாவத்தோடு முதலில் சோபாவில் அமர்ந்தார். பின்னால் எழுந்து வரவேற்பு அறையின் வாசலுக்குப் போனார். அங்கிருந்த கதவின் இடைவெளி வழியாக வரவேற்பு அறைக்குள் இருந்தவர்களைப் பார்த்தார். கைகளை வீசிக்கொண்டு, அங்கிருந்து திரும்பி வந்து ஒரு புத்தகத்தை கையில் எடுத்தார். அவருடைய பிரதான காரியஸ்தர் இரண்டாவது தடவையாக அவரிடம் வந்து, கோமகளிடமிருந்து கடிதம் கொண்டு வந்திருந்த அந்த பிரஞ்சுக்காரர், ஒரு நிமிஷமாவது அவரைப் பார்க்க வேண்டுமென்று மிகுந்த ஆவலோடு இருப்பதாக கூறினார். பாஜ்டீவின் மனைவியிடமிருந்து ஒருவர் வந்திருந்தார். தனது கணவரின் புத்தகங்களை பீயர் எடுத்து வைத்துக்கொள்ளும்படியும், தான் கிராமத்திற்கு போவதாகவும் அவள் சொல்லி அனுப்பி இருந்தாள்.

'ஓ, ஆம், ஒரே நிமிஷம், பொறு...இல்லை. நிச்சயமாக இல்லை...நான் இதோ வருகிறேன் என்று நீ போய்ச் சொல்லு' என்று தமது பிரதான காரியஸ்தரிடம் பீயர் கூறினார்.

அந்த மனிதர் பீயரின் அறையை விட்டு போனதும், மேஜை மீது கிடந்த தமது தொப்பியை எடுத்துக்கொண்டு, அந்த படிப்பு அறையிலிருந்து மற்றொரு வாசல் வழியாக வெளியே போனார். ஆளோடியில் ஒருவருமில்லை. அந்த ஆளோடி முழுவதும் நடந்து சென்று படிக்கட்டுக்குப் போனார். முகத்தைச் சுளித்து தமது கைகளால் நெற்றியை தேய்த்துக்கொண்டு, முதல் தட்டு வரையில் படிக்காட்டுகளில் இறங்கினார். முன் மண்டபத்து வேலைக்காரன் முன் வாசலில் நின்று கொண்டிருந்தான். பீயர் நின்று கொண்டிருந்த அந்த தட்டிலிருந்து, பின் வாசலுக்குப் போகிற மற்ற படிக்கட்டுகள் இருந்தன. அந்த படிக்கட்டுகள் வழியாக அவர் இறங்கி, பின் வாசல் முற்றத்திற்குப் போனார். அவரை ஒருவரும் பார்க்க வில்லை. அங்கே சில வண்டிகள் காத்துக்கொண்டிருந்தன. வெளி வாசலுக்கு பீயர் போனதும், வண்டிக்காரர்களும் புழக்கடை வேலைக்காரனும் அவரைப் பார்த்து, தங்கள் தொப்பிகளை உயர்த்தினார்கள். அவர்கள் அவரை பார்த்ததாக அவர் உணர்ந்ததும், ஒரு நெருப்புப் பொறியைப் போல அவர் நடந்து கொண்டார். தன்னை மறைத்துக் கொள்வதற்காக, நெருப்புக்கோழி தன்னுடைய தலையை ஒரு புதரில் மறைத்துக்கொள்ளும். அந்த மாதிரி, அவர் தலையை தொங்கவிட்டுக்கொண்டு வேகமான நடையில் தெரு வழியாகப் போனார்.

அன்று அவருக்கு காத்துக்கொண்டிருந்த வேலைகளில் ஜோஸப் பாஜ்டீவின் புத்தகங்களையும் தஸ்தாவேஜிகளையும் பிரித்து அமைப்பதுதான் முக்கியமான வேலையென்று அவருக்குத் தோன்றியது.

அவர் சந்தித்த முதலாவது வண்டியை அவர் அமர்த்திக் கொண்டு, அதில் ஏறி பாட்டிரியார்ச் பான்ஸ் என்ற இடத்திற்கு போகும்படி வண்டியோட்டியிடம் சொன்னார். அங்கே தான் பாஜ்டீவின் விதவையினுடைய வீடு இருந்தது.

போகிற வழியில் சாரி சாரியாக வந்த, சாமான்கள் ஏற்றப்பட்ட வண்டிகளை பார்த்துக்கொண்டே போனார். அவையெல்லாம் எல்லா திசைகளிலிருந்தும் வெளியே போய்க் கொண்டிருந்தன. தாம் ஏறியிருந்த அந்த பழைய ஓட்டை வண்டியிலிருந்து, தாம் கீழே நழுவி விடாமல் இருப்பதற்காக, தம்முடைய பருத்த உடம்பை ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டார். அச்சமயம் பள்ளிக்கூடத்தை

விட்டு தப்பியோடும் ஒரு சிறுவனுக்குள்ள மகிழ்ச்சியான உணர்ச்சியோடு அவர் இருந்தார். போகும் போது வண்டி யொட்டியிடம் பேசிக்கொண்டே போனார்.

கிரெம்லினில் ஆயுதங்களை எல்லாருக்கும் அன்று வழங்குவதாக அந்த வண்டிக்காரன் சொன்னான். நாளையன்று மூன்று குன்றுகளின் கோட்டை வாசல்களுக்கு அப்பால் ஒவ்வொருவரும் அனுப்பப்படுவார்கள் என்றும், அங்கே ஒரு பெரிய போர் நடக்கப் போகிறதென்றும் அவன் சொன்னான்.

பாட்டிரியார்ச் பான்ஸ் என்ற பகுதியை அவர் அடைந்ததும், பாஜ்டீவின் வீட்டை பீயர் கண்டு பிடித்தார். சமீப காலத்தில் அவர் அங்கே போனதில்லை. வெளி வாசலுக்கு அவர் போனார். ஐந்து வருஷங்களுக்கு முன்னால் ஜோஸப் பாஜ்டீவோடு டார்ஜோக்கில் தாம் பார்த்த கெராசிம் என்ற அந்த மஞ்சள் நிறமான, தாடியில்லாத முதியவர், பீயர் கதவை தட்டியவுடன், யார் என்று கேட்பதற்காக வெளியே வந்தார்.

'இப்பொழுது பார்க்க முடியுமா?' என்று பீயர் கேட்டார்.

'தற்கால நிலைமையை உத்தேசித்து, சோபியா டானைலாவ்னா குழந்தைகளோடு டார்ஜோக் எஸ்டேட்டுக்கு போய் விட்டாள், மேன்மை தங்கியவரே.'

'பரவாயில்லை; நான் உள்ளே வருகிறேன். அந்த புத்தகங்களை நான் பார்க்க வேண்டும்' என்று பீயர் சொன்னார்.

'தயவுசெய்து, உள்ளே வாரும். எனது காலஞ்சென்ற எஜமானரின் - கடவுளின் பரலோக ராஜ்யம் அவருடையதாய் இருப்பதாக - சகோதரரான மாக்கார் அலெக்ஜிவிச் இங்கே தங்கியிருக்கிறார். ஆனால், அவர் ஒரு நோயாளி என்பது உமக்குத் தெரியும்' என்று அந்த முதிய வேலைக்காரர் கூறினார்.

மாக்கார் அலெக்ஜிவிச் என்பவர், ஜோஸப் பாஜ்டீவின் பாதி புத்தி சுவாதீனமற்ற ஒரு பெரிய குடிகார சகோதர என்பதை பீயர் அறிவார்.

'ஆம், ஆம், எனக்குத் தெரியும். நாம் உள்ளே போகலாம்...' என்று பீயர் சொல்லி வீட்டிற்குள் போனார்.

ஒரு உயரமான வழுக்கைத் தலையுள்ள, சிவந்த மூக்குடைய முதியவர் உடை - கவுனை அணிந்து கொண்டு, காலில் செருப்புகளை மாட்டிக்கொண்டு, வெளி அறையில் நின்று கொண்டிருந்தார். பீயரைப் பார்த்ததும், எதையோ கோபமாக முனங்கி விட்டு, அந்த ஆளோடி வழியாக போய் விட்டார்.

'அவர் மிகுந்த புத்திசாலி. இப்பொழுது ஒன்றுக்கும் உதவாதவராக போய்விட்டார். மேன்மை தங்கியவரே; நீரே பார்க்கலாம்' என்று கெராசிம் சொன்னார். 'நீர் படிப்பு அறைக்குள் வருகிறீரா?' பீயர் தலையை ஆட்டினார். 'அதை முன்பே பூட்டி வைத்திருந்தார்கள். அப்படியே தான் அது இருக்கிறது. உம்மிடமிருந்து யாராவது வந்தால், அவரிடம் புத்தகங்களை கொடுத்துவிட வேண்டுமென்று சோபியா டானைலாவ்னா உத்தரவிட்டு இருக்கிறார்கள்.'

அந்த இருண்ட படிப்பு அறைக்குள் பீயர் சென்றார். அந்த அறைக்குள் முன்னால் அவருடைய நன்மையாளர் உயிரோடு இருந்தபோது, மிகுந்த பய பக்தியோடு அவர் சென்றிருக்கிறார். ஜோஸப் பாஜ்டீவின் மரணத்திற்குப் பின்னார், அங்கே ஒருவரும் போகாத படியால், அந்த அறை தூசி நிறைந்தும் முன்னை விட அதிகமாக இருளடைந்தும் காணப்பட்டது.

ஒரு ஜன்னலை கெராசிம் திறந்து வைத்துவிட்டு, முன் பாதங்களால் நடந்து வெளியே போனார். அந்த படிப்பு அறையை பீயர் சுற்றி பார்த்து விட்டு, கையெழுத்துப் பிரதிகள் வைக்கப் பட்டிருந்த பீரோவின் பக்கத்தில் சென்றார். ஒரு காலத்தில் மிக பரிசுத்தமான உத்தரவு என்று சொல்லப்பட்டு வந்த ஒன்றை அவர் கையில் எடுத்தார். இது தான் ஸ்காட்லாந்து தேச சட்டங்களின் உண்மையான பிரதி. இந்த சட்டங்களுக்கு பாஜ்டீவின் குறிப்புகளும், வியாக்கியானங்களும் சேர்க்கப்பட்டிருந்தன. தூசி நிறைந்த மேஜை முன்னால் அவர் அமர்ந்து, அந்த கையெழுத்துப் பிரதிகளை அதில் வைத்துத் திறந்தார். பின்னால் அதை மூடிவிட்டு, அதை தள்ளி வைத்து தமது கை மீது தலையை சாய்த்து சிந்தனையில் ஆழ்ந்தார்.

ஜாக்கிரதையோடு அந்த படிப்பு அறைக்குள் கெராசிம் பல தடவைகள் நோக்கினார். ஒரே பாவனையிலேயே எப்பொழுதும் பீயர் உட்கார்ந்து கொண்டிருந்ததை அவர் கவனித்தார்.

இரண்டு மணி நேரத்திற்கு மேலாக கடந்தது. வாசலுக்குப் பக்கத்தில் நின்று, அவருடைய கவனத்தை இழுப்பதற்காக, சிறிது சப்தம் செய்தார். ஆனால், பீயர் அதைக் கேட்கவில்லை.

'வண்டிக்காரனை அனுப்பி விடலாமா, மேன்மை தங்கியவரே?'

'ஓ, ஆம்' என்று பீயர் சொல்லி தம்மை சுதாரித்துக்கொண்டு அவசரமாய் எழுந்தார். 'இங்கே பாரும்' என்று அவர் சொல்லி, அந்த முதியவரை அவருடைய கோட்டிலிருந்த ஒரு பொத்தானால் பற்றி, அந்த முதியவரின் நீர் நிறைந்த, பிரகாசித்துக் கொண்டிருந்த,

பளபளப்பான, மகிழ்ச்சி கொண்ட கண்களை நோக்கினார். 'நான் கேட்கிறேன். நாளையன்று ஒரு யுத்தம் நடக்கப் போகிறது என்பது உமக்குத் தெரியுமா?'

'நாங்கள் அப்படித்தான்கேள்விப்படுகிறோம்' என்று அவர் பதில் அளித்தார்.

'நான் யார் என்பதை நீர் ஒருவரிடமும் சொல்ல வேண்டாமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நான் என்ன சொல்லுகிறேனோ, அம்மாதிரியே நீர் நடக்க வேண்டும்.'

'நல்லது, மேன்மை தங்கியவரே. நீர் ஏதாவது சாப்பிடுகிறீரா?' என்று கெராசிம் கேட்டார்.

'இல்லை, எனக்கு வேறு ஒன்று வேண்டும். விவசாயியின் உடைகளும், ஒரு கைத்துப்பாக்கியும் வேண்டும்' என்று பீயர் சொல்லி, எதிர்பாராத விதமாக நாணம் கொண்டார்.

'நல்லது, மேன்மை தங்கியவரே' என்று கெராசிம் ஒரு வினாடி யோசித்த பின்பு கூறினார்.

அன்று முழுவதும் தமது நன்மையாளரின் படிப்பு அறையிலேயே பீயர் இருந்தார். மன அமைதியில்லாமல், ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு அவர் நடந்து கொண்டும், தமக்குத் தாமே பேசிக்கொண்டும் இருந்ததை கெராசிம் கவனித்தார். அன்று இரவு அங்கே அவருக்கு தயாரிக்கப்பட்டிருந்த படுக்கையிலேயே படுத்துத் தூங்கினார்.

கெராசிம் ஒரு வேலைக்காரராய் இருந்தபடியால், அவருடைய காலத்தில் பல அதிசயமான காரியங்களை அவர் கண்டிருந்தார். ஆகவே, அந்த வீட்டில் பீயர் தங்கப் போவதைக் கேட்டு அவர் ஆச்சரியமடையவில்லை. தாம் சேவை செய்வதற்கு ஒருவர் கிடைத்திருக்கிறாரே என்பதற்காக சந்தோஷமடைந்தார். அன்று மாலையில் - எதற்காக அவையெல்லாம் வேண்டுமென்பதை தமக்குத்தாமே கூட கேட்டுக் கொள்ளாமல் - பீயருக்காக ஒரு வண்டிக்காரனின் கோட்டையும் தொப்பியையும் கொண்டு வந்து கொடுத்தார். மறு நாளன்று கைத்துப்பாக்கியை கொடுப்பதாகக் கூறினார். மாக்கார் அலெக்ஜிவிச் அன்று மாலை இரண்டு தடவைகள் அந்த கதவு வரையில் வந்து, கோபமாக பீயரை பார்த்தார். பீயர் அவரை திரும்பி பார்த்ததும், அவர் தமது உடை - கவுனால் தம்மைச் சுற்றி மூடிக் கொண்டு, வெட்கமடைந்த, கோபமான தோற்றத்தோடு, அங்கிருந்து வேகமாய் போய் விட்டார். கெராசிம் அவருக்கு கொண்டு வந்து கொடுத்த அந்த வண்டிக்காரனின்

கோட்டை, நீராவியினால் சுத்தப்படுத்திக் கொடுத்தார். அச்சமயம் அதை பீயர் அணிந்து கொண்டு, அந்த முதியவருடன் சுக்காரேவ் மார்க்கட்டில் கைத்துப்பாக்கியை வாங்குவதற்காக போய்க் கொண்டிருந்தார். அச்சமயம் தான் அவர் ராஸ்டோவ்களை சந்தித்தார்.



மாஸ்கோ வழியாக ரயாஜான் ரஸ்தாவிற்கு துருப்புகள் பின்வாங்க வேண்டுமென்று குட்டுஜோவ் பிறப்பித்த உத்தரவு, செப்டம்பர் முதல் தேதியன்று இரவில் வெளியிடப்பட்டது.

முதலாவத துருப்புகள் உடனே புறப்பட்டார்கள். அவசரப்படாமல், மெதுவாக, திடமாக இரவு முழுவதும் அவர்கள் போய்க்கொண்டே இருந்தார்கள். டாராகாமைலாவ் என்ற பாலத்திற்குப் பக்கத்திலுள்ள பட்டணத்தை அதிகாலையில் அவர்கள் வந்து அடைந்தார்கள். அச்சமயம் தங்களுக்கு முன்னால், ஏராளமான துருப்புகள் கூட்டமாய் கூடி பாலத்தை வேகமாய் கடந்து, எதிர்ப் பக்கத்தில் மேலே ஏறிக் கொண்டிருந்ததைக் கண்டார்கள். அவர்கள் போவதினால் தெருக்களும், சந்துகளும் அடைபட்டுப் போயின. பின்னால் வந்த துருப்புகள் ஏராளமாய் இருந்தபடியால், காரணமில்லாத அவசரமும் பீதியும் கொண்டார்கள். எல்லாரும் பாலத்தை நோக்கி விரைந்தார்கள். சிலர் பாலத்தின் மீது போனார்கள். சிலர் தெப்பங்களிலும் படகுகளிலும் ஏறி ஆற்றைக் கடந்தார்கள். பிரதான ரஸ்தாவை விட்டு பக்கத்து தெருக்கள் வழியாக குட்டுஜோவ் மாஸ்கோவை கடந்து போனார்.

செப்டம்பர் 2-ந் தேதியன்று காலை 10 மணிக்கு, ராணுவத்தின் கடைசி பகுதி மட்டும்தான் டாராகாமைலாவ் சுற்றுப்புறத்தில் காணப்பட்டது. நெருக்கடி குறைந்தது. மூல ராணுவம் மாஸ்கோவை கடந்து போய்விட்டது.

அதே சமயத்தில், செப்டம்பர் 2-ந் தேதியன்று காலை 10 மணிக்கு, பாக்லோனி குன்றின் மீது நெப்போலியன் தமது துருப்புகளோடு நின்று, தமக்கு முன்னால் காணப்பட்ட பரந்த காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஆகஸ்டு 26-ந் தேதியிலிருந்து, செப்டம்பர் 2-ந் தேதி வரையில், அதாவது, பாராடினோ போரிலிருந்து மாஸ்கோவுக்குள் பிரஞ்சுக்காரர்கள் நுழைகிறவரையில், அந்தப்

பரபரப்பான, மறக்க முடியாத வாரம் முழுவதிலும், இலையுதிர் காலத்து கால நிலை அசாதாரணமாயிருந்தது. அது வருவது எப்பொழுதுமே ஆச்சரியமாகவே இருக்கும். அந்த கால நிலையில், துளிர் காலத்தில் இருப்பதைவிட அதிகமான உஷ்ணத்தை சூரியன் கொடுப்பதுண்டு. சூரியன் பிரகாசமான ஒளிர்விட்டு, ஒவ்வொன்றையும் மின்னும்படி செய்வான். அந்த தெளிவான சுத்தமான சூழ்நிலையில், சூரிய பிரகாசத்தினால் கண்கள் கூசும்படியாயிருக்கும். சுவாசப் பைகள், அந்த மணம் மிகுந்த இலையுதிர் காலத்து காற்றை சுவாசிப்பதால் பலமடைந்தவை போல் காணப்படும். இரவு காலங்களில் கூட உஷ்ணமாயிருக்கும். அந்த இருண்ட இரவு நேரங்களில், தங்க நட்சத்திரங்கள் வானத்திலிருந்து கீழே உதிர்ந்து, நமக்கு மகிழ்ச்சியையும் அதிர்ச்சியையும் கொடுக்கும்.

செப்டம்பர் 2-ந் தேதியன்று காலையில் 10 மணிக்கு, இதே மாதிரியே கால நிலை இருந்தது.

காலை நேரத்தின் பிரகாசமானது இந்திர ஜாலம் போல இருந்தது. பாக்லோனி குன்றிலிருந்து மாஸ்கோவைப் பார்த்த போது, பிரம்மாண்டமாக அது பரந்து காணப்பட்டது. அந்தக் காட்சியில் அங்கேஓடிய நதியும், அதனுடைய தோட்டங்களும் - மாத கோயில்களும் தோன்றின. வழக்கம்போல வாழ்ந்து கொண்டிருப்பது போலவே மாஸ்கோ காணப்பட்டது. அங்கிருந்த விதானங்கள் சூரிய ஒளியில் நட்சத்திரங்களைப் போல மின்னிக்கொண்டிருந்தன.

தாம் இதற்கு முன்பு எப்பொழுதும் பார்த்திராத விதத்தில், விசித்திரமான கட்டிட நிர்மாணங்களோடு தோன்றிய அந்த அதிசய பட்டணத்தின் காட்சியானது, நெப்போலியனுக்கு மன அமைதி இல்லாத, பொறாமை கொள்ளும்படியான ஆவலை உண்டு பண்ணியது. அதாவது, பழக்கமில்லாத ஒரு புதிய காட்சியைப் பார்க்கும்போது, பார்க்கிறவர்களை லட்சியம் செய்யாமல் அந்தப் புதிய காட்சி நிற்கும்போது, அதைப் பார்க்கிறவர்கள் எம்மாதிரி உணர்ச்சி கொள்ளுவார்களோ, அதே உணர்ச்சியை நெப்போலியன் பெற்றார். அந்த பட்டணமானது, தனது வாழ்க்கையை முழுவேகத்தோடு நடத்தி வருவதாகக் காணப்பட்டது. தூரத்திலிருந்து பார்க்கும்போதுகூட, உயிர் உள்ளதையும், உயிர் அற்றதையும் எதோ ஒரு வழியால் கண்டு பிடிப்பதைப் போல, பாக்லோனி குன்றிலிருந்து நெப்போலியன் பார்த்தபோது, அந்த பட்டணத்தின் உயிர் துடிப்பை அறிந்தார். அதாவது, அந்த மகா

பெரிய அழகான பட்டணமானது சுவாசம் விட்டுக் கொண்டிருப்பதைப் போல உணர்ந்தார்.

மாஸ்கோவைப் பார்க்கிற ஒவ்வொரு ருஷ்யரும் அதை ஒரு மாதா என்றே உணர்வார்கள். அதைப் பார்க்கிற ஒவ்வொரு வெளி நாட்டாரும், அந்தத் தாய் பட்டணத்தின் முக்கியத்துவத்தை அறியாமல் இருந்தபோதிலும்கூட, அதனுடைய பெண்மை குணத்தை கட்டாயம் உணர்வார்கள். நெப்போலியனும் அம்மாதிரியே உணர்ந்தார்.

'எண்ணற்ற மாதா கோயில்களைக் கொண்ட அந்த ஆசியப் பட்டணம், அந்த பரிசுத்த மாஸ்கோ! கடைசியாக அந்த பிரசித்தி பெற்ற பட்டணம் இதோ இருக்கிறது! நேரமாய்விட்டது' என்று நெப்போலியன் சொல்லி, குதிரையிலிருந்து கீழே இறங்கி மாஸ்கோவின் பிளானை தமக்கு முன்னால் விரிக்கும்படி உத்தரவிட்டார். துவிபாஷகரான லே லார்னை வரவழைத்தார்.

எதிரியால் கைப்பற்றப்படும் ஒரு பட்டணமானது தன்மானத்தை இழந்த ஒரு கன்னிக்கு ஒப்பாகும் என்று அவர் நினைத்தார். (இதே மாதிரி ஸ்மாலென்ஸ்க் நகரில் டுச்கோவிடம் அவர் கூறினார்.) அந்த கருத்தோடு அவர் முன்னால் பார்த்திராத அந்த கீழ் நாட்டு அழகை நோக்கினார். தாம் வெகு காலமாக விரும்பி வந்த ஆசையானது, கைக்கூட முடியாது என்று தோன்றி வந்த ஆசையானது, கடைசியாக கைக் கூடியதானது அவருக்கு விசித்திரமாய் தோன்றியது. அந்த தெளிவான காலை ஒளியில் அந்த பட்டணத்தைப் பார்ப்பதும், பின்னால் அதன் பிளானைப் பார்ப்பதும், அதிலுள்ள விவரங்களைப் பற்றி சிந்திப்பதுமாய் இருந்தார். அந்த நகரத்தைத் தம் கையில் பற்றிக் கொண்டதாக ஏற்பட்ட உறுதியானது அவருக்கு பரபரப்பையும் திகைப்பையும் கொடுத்தது?

'வேறு விதமாய் எப்படி இருக்க முடியும்?' என்று அவர் நினைத்தார். 'இதோ, எனது காலடியில் இந்த தலைநகரம் இருக்கிறது. அலெக்ஸாண்டர் இப்பொழுது எங்கே இருக்கிறார்? அவர் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறார்? ஒரு விசித்திரமான அழகும் கம்பீரமும் கொண்ட பட்டணம்; ஒரு விசித்திரமும் கம்பீரமும் கொண்ட நேரம்! நான் எந்த விதமாக அவர்களுக்குக் காணப்படுவேன்?' என்று தமது துருப்புகளைப் பற்றி நினைத்தபோது அவர் சிந்தித்தார். 'இதோ, அந்த பட்டணம் இருக்கிறது. பலவீனமான மனிதர்களுக்கெல்லாம் பரிசாக, இதோ இருக்கிறது!' என்று, தமது பக்கத்தில் நின்றவர்களையும், நெருங்கி வந்து அணி வகுத்து நிற்கும் துருப்புகளையும் பார்த்து அவர்

நினைத்தார். 'என்னிடமிருந்து ஒரு வார்த்தைப் பிறந்தால் போதும், அல்லது எனது கையை அசைத்தால் போதும், ஜார்களுடைய அந்தப் புராதன தலைநகரம் அழிந்துபோகும். ஆனால், என்னுடைய கடாட்சம், எப்பொழுதும் ஜெயிக்கப்பட்டவர்களிடம் காட்டுவதற்காகத் தயாராய் இருக்கும். நான் பெருந்தன்மையாகவும், உண்மையிலேயே பெரியவனாகவும் நடந்து கொள்ளவேண்டும். ஆனால், இல்லை, நான் மாஸ்கோவில் இருக்கிறேன் என்பது உண்மையாய் இருக்க முடியாது' என்று திடீரென்று அவர் நினைத்தார். 'என்றாலும், எனது காலடியில், இதோ அது கிடக்கிறது. அதனுடைய தங்க விதானங்களும், சிலுவைகளும், சூரிய வெளிச்சத்தில் மின்னிக் கொண்டும் பளபளத்துக்கொண்டும் இருக்கின்றன. ஆனால், நான் அதற்கு கெடுதல் செய்ய மாட்டேன். அதனுடைய காட்டுமிராண்டித்தனமான, எதேச்சாதிகாரமான புராதன ஞாபகச் சின்னங்கள்மீது மகா பெரிய வார்த்தைகளான நீதியையும், கருணையையும், எழுதும்படி நான் செய்வேன்... இந்த விஷயத்தைப் பற்றிதான் அலெக்ஸாண்டர் மிகுந்த மன வருத்தம் கொள்ளுவார். அவரை எனக்குத் தெரியும் (இப்பொழுது நடந்து கொண்டிருப்பவைகளில் பிரதான முக்கியத்துவம் எல்லாம், அலெக்ஸாண்டருக்கும், தமக்கும் உள்ள சொந்தப் போராட்டத்திலேயே அடங்கி இருப்பதாக நெப்போலியனுக்குத் தோன்றியது.) கிரெம்லினில் உள்ள உயர் பீடத்திலிருந்து - ஆம், அதோ கிரெம்லின் இருக்கிறது. ஆம் - நான் அவர்களுக்கு நேர்மையான சட்டங்களை வகுப்பேன். உண்மையான நாகரீகத்தின் அர்த்தம் என்ன என்பதை அவர்களுக்குப் போதிப்பேன். பாயர்கள் (ருஷ்யாவில் புராதன காலத்திலும், மத்திய காலத்திலும் பாயர்கள் என்று ஒரு பிரபு குடும்பம் இருந்து வந்தது. அந்த பாயர்கள் ஜார்களுக்கு உதவியாளர்களாக செல்வாக்கோடு இருந்து வந்தார்கள். அந்த வகுப்பையும் பட்டத்தையும் முதலவாது பீட்டர் ரத்து செய்துவிட்டார். கடைசியாக இருந்த பாயர் 1750 - ஆம் வருஷத்திலேயே மாண்டு போனார். என்றாலும், பாயர்களைப் பற்றி அடிக்கடி நெப்போலியன் சொல்லுகிறார். ருஷ்யாவைப் பற்றிய அவருடைய அறியாமையையே அது காட்டுகிறது.) தலைமுறை தலை முறையாகத் தங்களை வெற்றி கொண்டவரை உள்ளன்போடு நேசிக்கும்படி நான் செய்வேன். வரப்போகிற தூதுகோஷ்டியிடம், நான் யுத்தத்தை விரும்பியது இல்லை என்றும், இப்பொழுதும் விரும்பவில்லை என்றும் சொல்லுவேன். ருஷ்ய ராஜ சபையின் பொய்யான கொள்கையை எதிர்த்தே நான் போரை ஆரம்பித்ததாகச் சொல்லுவேன். அலெக்ஸாண்டர் மீது நான் அன்பும் மதிப்பும்

வைத்திருப்பதாகவும், எனக்கும் என்னுடைய மக்களுக்கும் பொருத்தமான வகையில் சமாதான நிபந்தனைகளை இந்த மாஸ்கோவில் நான் ஒப்புக்கொள்ளத் தயார் என்றும் சொல்லுவேன். என்னுடைய வெற்றியினால் ஏற்பட்ட சந்தர்ப்பங்களைக் கொண்ட மதிப்பு மிகுந்த சக்கரவர்த்தியை இழிவுபடுத்த நான் விரும்பவில்லை. 'பாயர்களே, நான் போரை விரும்பவில்லை; சமாதானத்தையும், என்னுடைய பிரஜைகள் எல்லாருடைய க்ஷேமத்தையும் நான் விரும்புகிறேன்' என்று கூறுவேன். என்றாலும், அவர்களுடைய பிரசன்னமானது எனக்கு உத்வேகத்தை உண்டு பண்ணும். ஆகவே, நான் எப்பொழுதும் அம்மாதிரி சமயங்களில் செய்வதைப் போலவே அவரிகளிடம் பேசுவேன். அதாவது, தெளிவாகவும் எடுப்பாகவும் கம்பீரமாகவும் பேசுவேன். ஆனால், நான் மாஸ்கோவில் இருக்கிறேன் என்பது உண்மைதானா? ஆம், அதோ அது இருக்கிறது.'

'பாயர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்' என்று தமது பரிவாரத்திடம் கூறினார்.

பாயர்களை அழைத்து வருவதற்காக, ஒரு ஜெனரல் படாடோபமான பரிவாரத்தோடு உடனே சவாரி போனார். இரண்டு மணி நேரம் கழிந்தது. நெப்போலியன் தமது நடுப்பகல் உணவை முடித்துக்கொண்டு, இன்னமும் அதே இடத்தில் பாக்லோனி குன்றில் தூது கோஷ்டியை எதிர்ப் பார்த்து நின்று கொண்டிருந்தார். பாயர்களிடம் எம்மாதிரி பேச வேண்டும் என்பது அவருடைய மனோராஜ்யத்தில் உருவாகிவிட்டது. அந்த பிரசங்கம் நெப்போலியனுடைய நினைப்பில் கம்பீரமாகவும் பிரமாதமானதாகவும் இருந்தது.

,மாஸ்கோவைப் பொறுத்தவரையில் தாம் சொல்லப்போகும் நோக்கமானது மிகுந்த பெருந்தன்மையோடு அமைந்துவிட்டதைக் கண்டு அவரே ஆச்சரியப்பட்டார். ஜார்களின் அரண்மனையில் தம்முடைய பிரபுக்களும் ருஷ்ய பிரபுக்களும் சந்தித்து அளவளாவுவதற்கு நாட்களையும் அவருடைய மனோராஜ்யத்தில் நிச்சயம் செய்துவிட்டார். அதோடு, மக்களின் உள்ளத்தைக் கவரக்கூடிய ஒரு கவர்னரையும் மனோராஜ்யத்தில் அவர் நியமித்துவிட்டார். மாஸ்கோவில் ஏராளமான தர்ம ஸ்தாபனங்கள் இருப்பதாக அவர் அறிந்திருந்தபடியால், அவைகளெல்லாம் தாராளமாக நன்கொடைகள் வழங்கவேண்டும் என்று அவருடைய மனோராஜ்யத்தில் தீர்மானித்துவிட்டார். ஆப்பிரிக்காவில் அந்நாட்டு அங்கியை அணிந்து மசூதியில் எப்படி அவர் உட்கார்ந்திருந்தாரோ, அதே மாதிரி மாஸ்கோவில் ஜார்களைப்

போல நன்கொடைகள் வழங்கவேண்டும் என்று அவர் நினைத்தார். கடைசியாக ருஷ்யர்களின் உள்ளத்தைக் கவருவதற்காக - அவரும் மற்ற பிரஞ்சுக்காரர்களைப் போலவே, உள்ளுணர்ச்சியோடு எதையாவது நினைக்கும்போது, 'எனது அன்பான', 'எனது கனிவான', 'எனது மாதா', என்ற வார்த்தைகள் இல்லாமல் நினைக்க முடியாது - அந்த ஸ்தாபனங்களில் எல்லாம் பின்கண்ட வார்த்தைகளைச் செதுக்கும்படி ஏற்பாடு செய்வதென்று தீர்மானித்தார்: 'இந்த ஸ்தாபனம் என்னுடைய அன்பான மாதாவிற்கு அர்ப்பணம் செய்யப்படுகிறது.' அல்லது, இல்லை அது இப்படி இருக்கவேண்டும்: 'எனது மாதாவின் இல்லம்' என்று அவர் தீர்மானித்தார். 'ஆனால், நான் உண்மையில் மாஸ்கோவில் இருக்கிறேனா? ஆம், இதோ என் முன்னால் அது இருக்கிறது. ஆனால், பட்டணத்திலிருந்து வரவேண்டிய தூதுகோஷ்டி ஏன் இவ்வளவு நேரமாகியும் வரவில்லை?' என்று அவர் ஆச்சரியப்பட்டார்.

இதற்கிடையில், அவருடைய ஜெனரல்களும் மார்ஷல்களும் அவருடைய இருப்பிடத்திற்குப் பின்னால் நின்றுகொண்டு மெதுவான குரலில் பரபரப்போடு பேசிக்கொண்டிருந்தார்கள். தூது கோஷ்டியை அழைத்து வரும்படி அனுப்பப்பட்டவர்கள் திரும்பி விட்டார்கள். மாஸ்கோ காலியாய் இருக்கிறது என்றும், எல்லாரும் அதைவிட்டு போய்விட்டார்கள் என்றும் அவர்கள் சொன்னார்கள். பின்னால் நின்று பேசிக் கொண்டிருந்தவர்களின் முகங்கள் வெளிறி கவலைக் குறிகளோடு காணப்பட்டன. மாஸ்கோவை மக்கள் காலி செய்துவிட்டார்கள் என்பதைக் கண்டு (அது கவலைக்குரிய விஷயமாய் இருந்தாலும்) அவர்கள் பீதி கொள்ளவில்லை; சக்கரவர்த்தியிடம் எம்மாதிரி சொல்லுவது என்பதற்காகவே அவர்கள் பீதி கொண்டார்கள். அதாவது, வீணாக வெகு நேரமாக பாயர்களுக்காக அவர் காத்துக்கொண்டிருந்தபடியால், மாஸ்கோவில் குடிகாரக் கூட்டத்தைத் தவிர, வேறு யாரும் இல்லை என்று அவரிடம் போய் சொல்லுவது அவருடைய நிலைமையைப் பரிதாபகரமானதாகச் செய்யும்; இதைக் கண்டே அவர்கள் பீதியுற்றார்கள். யாராவது சிலரைச் சேர்த்து ஒரு பிரதிநிதி கோஷ்டியாகச் செய்துவிடலாம் என்று சிலர் சொன்னார்கள். மற்றவர்கள் அந்த யோசனையை ஆட்சேபித்தார்கள். ஜாக்கிரதையுடனும், சாமர்த்தியமாகவும் சக்கரவர்த்தியை முதலில் தயார் செய்ய வேண்டும் என்றும், பின்னால் அவரிடம் உண்மையைக் கூறிவிட வேண்டும் என்றும் அவர்கள் சொன்னார்கள்.

'எப்படி இருந்தாலும் அவரிடம் உண்மையைச் சொல்லிவிட வேண்டும். ஆனால், கனவான்களே...' என்று சிலர் சொன்னார்கள்.

நிலைமை மிகவும் தர்ம சங்கடமாய் இருந்தது. ஏனெனில், தம்முடைய மகத்தான திட்டங்களைப் பற்றி சக்கரவர்த்தி யோசனை செய்துகொண்டு, அங்கு விரித்துக்கிடந்த மாஸ்கோவின் படத்திற்கு முன்பாக மேலும் கீழும் பொறுமையோடு உலாவிக் கொண்டிருந் தார்; தமது கையை உயர்த்திக்கொண்டு மாஸ்கோவுக்குப் போகும் ரஸ்தாவைப் பிரகாசமான, பெருமையான புன் முறுவலோடு இடையிடையே நோக்கிக் கொண்டிருந்தார்.

'ஆனால், அது அசாத்தியம்...' என்று அந்த பரிவாரத்தைச் சேர்ந்த கனவான்கள் தங்களுடைய தோள்களைக் குலுக்கிக் கொண்டு கூறினார்கள். கேலிக் கூத்து என்ற அர்த்தத்தைத்தான் அந்த வார்த்தைகள் காட்டியபோதிலும், 'கோலிக்கூத்து' என்ற வாத்தையை உபயோகிக்க அவர்கள் துணியவில்லை.

வீணாக எதிர்பார்த்து ஓய்ந்து போனபடியால், அந்த கம்பீரமான நேரம் இழுத்துக்கொண்டே போவதால், அதனுடைய கம்பீரம் மங்கிப் போவதாக அந்த நடிகரின் உள்ளுணர்ச்சி அவருக்குக் காட்டியபடியால், கடைசியாகச் சக்கரவர்த்தி தமது கையினால் ஒரு சைகை செய்தார். உடனே ஒரு பீரங்கி குண்டு முழங்கி சைகை காட்டியது. அந்த முழக்கத்தைக் கேட்டதும் மாஸ்கோவிற்கு வெளியாக பரவி நின்ற துருப்புகள் டிவெர், காலுகா, டாராகா - மைலாவ் வாசல்கள் வழியாக பட்டணத்திற்குள் நகர்ந்தன. வரவர வேகமாக ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு, இரட்டை நடையிலோ, பெரு நடையிலோ போக ஆரம்பித்தார்கள். அவர்கள் கிளப்பிய தூசி அவர்களை மறைத்தது. அவர்கள் போட்ட கோஷங்கள் காது செவிடு படும்படிக் கேட்டன.

தமது துருப்புகளோடு நெப்போலியன் குதிரை மீது ஏறி டாராகாமைலாவ் வாசல்வரை சென்றார். அங்கே காமெர் - காலெஜ்ஸ்கி கொத்தளத்தில் தூதுகோஷ்டிக்காக எதிர் பார்த்து வெகுநேரம் உலாவிக் கொண்டிருந்தார்.

## 11

## 20

இதற்கிடையில் மாஸ்கோ பட்டணம் காலியாயிற்று. அங்கே இன்னமும் மக்கள் இருந்து கொண்டிருந்தார்கள். ஆனால், முன்னால் இருந்தவர்களில் ஐம்பதில் ஒரு பங்கு பேர்களே இப்பொழுது இருந்த படியால், அந்த பட்டணம் காலியாக

இருந்தது என்றே சொல்லலாம். ராணி ஈ இல்லாத செத்துக் கொண்டிருக்கும் ஒரு தேன் கூட்டை காலியாய் விட்டது என்று நாம் எம்மாதிரி சொல்லுகிறோமோ, அதே முறையில் அந்த பட்டணமும் காலியாய் இருந்தது.

மற்றக் கூடுகளைப் போலவே, ராணி ஈ இல்லாத கூடும் வெளிப் பார்வைக்கு ஒரே மாதிரி தோன்றினாலும், ராணி இல்லாத கூட்டில் உயிர் என்பது கிடையாது.

உயிருள்ள கூடுகளைச் சுற்றி நடுப்பகல் சூரிய ஒளியில் எம்மாதிரி தேனீக்கள் வட்டமிடுமோ, அதே மாதிரிதான் ராணி இல்லாத கூட்டையும் வட்டமிட்டுக்கொண்டு இருக்கும். மற்றக் கூடுகளைப் போலவே அந்தக் கூடும் தூரத்தில் தேன் மணம் வீசும். முன்போலவே தேனீக்களும் உள்ளேயும் வெளியேயும் போவதும் வருவதுமாய் இருக்கும். ஆனால், அந்தக் கூட்டில் உயிர் இல்லை என்பதை அறிவதற்கு ஒருவர் அதை கவனித்துப் பார்க்கவேண்டும். அப்படிக் கவனித்துப் பார்த்தால், முன் போலவே தேனீக்கள் பறக்கவில்லை என்பதையும், மணமும் சப்தமும் முன்போல இல்லை என்பதையும் தேனீ வளர்ப்பவர் அறிந்து கொள்ளுவார். ஒரு உயிருள்ள கூட்டின் சுவரை தேனீ வளர்ப்பவர் விரலால் தட்டினால், ஆயிரக் கணக்கான தேனீக்கள் தங்கள் அடி வயிற்றை உள்ளே அடக்கி ஒரே விதமான ரீங்காரம் செய்து, வேகமாக தங்கள் இறகுகளை அடிப்பதன்மூலம் காற்றில் சப்தம் நிறைந்து நிற்கும். ஆனால், ஒரு உயிரற்ற கூட்டை விரலால் தட்டினால், அம்மாதிரி சப்தம் ஏற்படாது. அந்த உயிரற்ற கூட்டிற்குள், ஒன்றிற்கொன்று சம்பந்தமில்லாத சப்தங்களே கேட்கும். தேன் கூட்டின் அடிப் பலகையில் முன்னால் இருந்து வந்த கிரங்க வைக்கும் இனிமையான தேனின் மணத்திற்கும், விஷத்தின் மணத்திற்கும் பதிலாக, ஆயிரக் கணக்கான தேனீக்களின் உஷ்ணமான காற்றுக்குப் பதிலாக, காலியான, அழிந்து கொண்டிக்கிற மணமானது, தேனோடு கலந்து வீசிக் கொண்டிருக்கும். தங்களுடைய அடி வயிற்றை விம்மிக்கொண்டு, எச்சரிக்கை கொடுப்பதற்காக சப்தமிடவும், தேன் கூட்டைக் காப்பதற்காக தாங்கள் உயிரை விடவும் தயாராய் இருக்கும் காவல் ஈக்களை, அந்த உயிரற்ற கூட்டில் காணமுடியாது. தண்ணீர் கொதிக்கும்போது கேட்கக் கூடிய சப்தத்தைப் போல, அவைகளின் வேலைகளினால் கேட்கக் கூடிய மெதுவான, உயிர் துடிப்பான ரீங்காரத்தை, அந்த உயிரற்ற கூட்டில் கேட்க முடியாது. அதற்கு பதிலாக ஒன்றுக்கொன்று விரோதமான ஒழுங்கில்லாத சப்தங்களே கேட்டுக்கொண்டிருக்கும். நீளமான கருப்பு திருட்டு

ஈக்கள், உடம்பெல்லாம் தேன் வீசிக் கொண்டு பீதியுடனும் திருட்டுத்தனமாகவும் கூட்டிற்கு உள்ளேயும் வெளியேயும் பறந்துகொண்டிருக்கும். அந்த ஈக்கள் கொட்டுவது இல்லை. அபாயம் வரும்போது நழுவி ஓடிவிடும். முன்பெல்லாம் தேனோடு உள்ளே ஈக்கள் வந்து, தேனை அங்கே வைத்துவிட்டு வெளியே பறந்து போகும். ஆனால் உயிரற்ற கூட்டில் உள்ளிலிருந்து வெளியே போகும் ஈக்கள் தேனை எடுத்துக்கொண்டு போகும். உயிரற்ற கூட்டின் அடிபாகத்தைத் தேனீ வளர்ப்பவர்கள் திறந்து பார்ப்பார். கருப்பான, மழமழப்பான ஈக்கள், ஒன்றின் கால்களை மற்றொன்று பற்றிக்கொண்டு, மெழுகை இழுத்துக்கொண்டு, ஓய்வில்லாமல் உழைப்பு ரீங்காரம் செய்துகொண்டு சரம்சரமாக மேலிருந்து அடிவரையில் தொங்கிக் கொண்டிருப்பதை அவர் இப்பொழுது காண முடியாது. அதற்குப் பதிலாக, மெலிந்த கிரக்கம் கொண்ட ஈக்கள் தரையிலும், சுவர்களிலும் வெவ்வேறு திசைகளை நோக்கி ஊர்ந்து செல்வதையே காண்பார். தங்கள் இறகுகளினால் வீசி பெருக்கித் தரையை மழுமழுப்பாக வைப்பது, உயிருள்ள கூட்டிலுள்ள தேனீக்களின் வழக்கம். ஆனால், உயிரற்ற கூட்டில், தரையெல்லாம் மெழுகுத் துண்டுகள் சிதறி இருப்பதையும் கால்களைக் கூட அசைக்க முடியாமல் ஈக்கள் செத்துக் கொண்டிருப்பதையும் செத்த ஈக்கள் அப்புறப்படுத்தப்படாமல் இருப்பதையும் காணலாம்.

தேனீ வளர்ப்பவர் அந்த உயிரற்ற கூட்டின் மூடியைத் திறந்து பார்ப்பார். அங்குள்ள தேன் அடையில் உள்ள இடைகளை தேனீக்கள் அடைத்துக்கொண்டும், அந்தக் கூடு உஷ்ணமாய் இருக்கும்படி செய்துகொண்டும் இருப்பதை இப்பொழுது காண முடியாது. அந்தத் தேன் அடை முன்னால் இருந்தபடி சுத்தமாக இருப்பதும் இல்லை. கவனிப்பாரற்று, துர்மணம் வீசிக் கொண்டிருக்கும். கருப்பு திருட்டு ஈக்கள் வேகமாகவும், திருட்டுத்தனமாகவும், அந்தத் தேன் அடைகளில் தேனைக் குடிப்பதற்கு சுற்றிக்கொண்டிருக்கும். காவல் செய்துவந்த வேலைக்கார சிறிய ஈக்கள் உடல் தளர்ந்து, வயதானவைகளைப் - போல மெதுவாக நகர்ந்து கொண்டிருக்கும். திருட்டு ஈக்களை அவை இப்பொழுது தடுப்பது இல்லை. வாழ்க்கையிலுள்ள எல்லா ஆசைகளையும், எல்லா உணர்ச்சிகளையும் அவை இப்பொழுது இழந்துவிட்டன. குளவிகள், ஆண்தேனீக்கள், பெரிய தேனீக்கள், பட்டுப் பூச்சிகள் இவையெல்லாம், அந்த உயிரற்ற கூட்டின் சுவர்களில் மோதிக்கொண்டு பறந்துகொண்டிருக்கும். இங்கும் அங்கும் சில கோபமான ரீங்காரங்கள் சில வேளைகளில்

கேட்டுக்கொண்டிருக்கும். இங்கும்அங்கும் ஒன்றிரண்டு தேனீக்கள் பழைய சுபாவத்தை மறக்காமல் கூட்டை சுத்தம் செய்து கொண்டிருக்கும். தங்கள் சக்திக்கு மீறிய விதமாக ஒரு செத்துப் போன தேனீயையோ அல்லது பெரிய தேனீயையோ கஷ்டப்பட்டு இழுத்துக் கொண்டிருக்கும். எதற்காக அதைச் செய்ய வேண்டும் என்பதை அறியாமலேயே செய்துகொண்டிருக்கும். ஒரு மூலையில், இரண்டு வயதான தேனீக்கள், சோர்வாக ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டோ, அல்லது தங்களை சுத்தம் செய்துகொண்டே, அல்லது தாங்கள் நட்பினால் செய்கின்றனவா, அல்லது விரோதத்தினால் செய்கின்றனவா என்பதை அறியாமலேயே, ஒன்றையொன்று ஊட்டிக் கொண்டிருக்கும். மற்றொரு இடத்தில், தேனீக்கள் கூட்டமாய் சேர்ந்து ஒன்றையொன்று நசுக்கிக்கொண்டும், அல்லது மற்றொரு தேனீயோடு சண்டை போட்டு, அது செத்து கீழுயள்ள செத்த ஈக்களோடு விழுகிற வரையில் போராடிக்கொண்டும் இருக்கும். உயிரற்ற கூட்டின் மத்தியிலுள்ள இரண்டு பாகங்களையும் தேனீ வளர்ப்பவர் திறந்து பார்ப்பார். உயிருள்ள கூடாக அது இருந்த போது, ஆயிரக்கணக்கான தேனீக்கள் முதுகோடு முதுகு பொருந்தி, கூட்டம்கூட்டமாகக் கூடி, முட்டைகள் குஞ்சு பொரிப்பதை கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். இப்பொழுது அதற்குப் பதிலாக, நூற்றுக் கணக்கான. மந்தமான, கிரக்கமான தேனீக்களையே அங்கே காண முடியும். அவையெல்லாம் அநேகமாக தங்களுடைய புனித வீட்டை பாதுகாத்துக் கொண்டிருக்கும் போது, தங்களை அறியாமலேயே மாண்டு போயின. இப்பொழுது அந்த புனித வீடும் அங்கே இல்லை. மரணத்தின் வாசனையும் அழுகிய வாசனையுமே அங்கு வீசியது. அவைகளில் சில ஈக்கள்தான் இன்னமும் நகர்ந்துகொண்டும், எழுந்துகொண்டும், சோம்பேறித் தனமாக எஜமானரின் கை மீது போய் தங்கி இருக்க முயற்சி செய்கின்றன. ஏனெனில், அந்தக் கையை கொட்டி தன் உயிரை விடுவதற்கு வேண்டிய உணர்ச்சி இப்பொழுது அவற்றிடம் இல்லை. அந்த உயிரற்ற கூட்டின் கதவுகளை தேனீ வளர்ப்பவர் மூடிவிட்டு, அது அழிக்க வேண்டிய கூடு என்பதைக் காட்டுவதற்காக, அதன் மீது ஒரு அடையாளத்தைப் போடுகிறார்.

இதே விதமாக மாஸ்கோ பட்டணமும் காலியாய் இருந்தது. அதே சமயத்தில், காமெர் - காலெஜ்ஸ்கி என்ற கொத்தளத்திற்கு எதிராக களைப்போடும், குழப்பத்தோடும், கடுகடுப்போடும் நெப்போலியன் மேலும் கீழும் உலாவிக்கொண்டிருந்தார்.

பட்டணத்திலிருந்து ஒரு பிரதிநிதி கோஷ்டி தம்மை வந்து பார்க்க வேண்டியது முறைப்படி அவசியம் என்று நினைத்து, அதற்காக காத்துக் கொண்டிருந்தார்.

மாஸ்கோவின் பற்பல மூலைகளில் சில மக்கள், தங்களுடைய பழைய பழக்கத்தின் வழக்கப்படி, தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அறியாமலேயே அங்கும் இங்கும் சுற்றிக் கொண்டிருந்தார்கள்.

கடைசியாக சுற்றிச் சுற்றிப் பேசி மாஸ்கோ பட்டணம் காலியாய் இருக்கிறது என்ற விஷயத்தை நெப்போலியனிடம் தெரிவித் தார்கள். அந்தச் செய்தியை தம்மிடம் வந்து சொல்லிய வரை கோபத்தோடு நோக்கி விட்டு, உடனே திரும்பி மௌனமாக மேலும் கீழும் நடக்க ஆரம்பித்தார்.

'என்னுடைய வண்டியை கொண்டு வாருங்கள்' என்று அவர் சொன்னார்.

தமது மெய்க்காப்பாளரோடு வண்டியில் அமர்ந்து, மாஸ்கோவின் சுற்றுப் புறங்களுக்குப் போனார். வண்டியில் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்: 'மாஸ்கோவிலிருந்து மக்கள் வெளியே போய்விட்டார்கள்! எப்போர்ப்பட்ட, நம்ப முடியாத சம்பவமாய் இருக்கிறது?'

அவர் மாஸ்கோ பட்டணத்திற்குள் போகவில்லை. டாராகா மைலாவ் என்ற சுற்றுப் புறத்தில் உள்ள ஒரு ஹோட்டலில் தங்கினார்.

அவர் எதிர்பார்த்த டம்பக் காட்சி நடைபெற முடியாமல் போய்விட்டது.




இரவு இரண்டு மணியிலிருந்து மறு நாள் பிற்பகல் இரண்டு மணி வரையில் ருஷ்ய துருப்புகள் மாஸ்கோ வழியாக போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களோடு காயம்பட்டவர்களும், மாஸ்கோவிலிருந்து கடைசியாக புறப்பட்ட பிரஜைகளும் போனார்கள்.

அம்மாதிரி போகும்போது, ஸ்டோன், மாஸ்க்வா, யாவுஜா ஆகிய பாலங்களில்தான், கூட்டம் அதிக நெருக்கமாய் இருந்தது.

துருப்புகள் இரண்டாகப் பிரிந்து கிரெம்லினை சுற்றி வளைத்துப் போனபோது, மாஸ்க்வா, ஸ்டோன் பாலங்களில் மிக நெருக்கமாய்

இருந்தபடியால், அந்த நெருக்கத்தினால் ஏற்பட்ட தாமதத்தை உபயோகித்துக் கொண்டு, அந்தப் பாலங்களில் பக்கத்திலிருந்து திருட்டுத்தனமாக நழுவினார்கள். அவர்கள் மாஸ்கோவில் கிரெம்லினுக்கு வழியாக சிவப்பு சதுக்கத்தில் இருந்த வாசைலி பீட்டிபீட் என்ற விசித்திரமான மாதா கோயிலைக் கடந்து, பாராவைட்ஸ்கி கோட்டை வாசல் வழியாகச் சென்று, மீண்டும் குன்றில் ஏறி சிவப்பு சதுக்கத்திற்குப் போனார்கள். அவர்களுக்குச் சொந்தமில்லாத சாமான்கள் சுலபமாக அங்கே கிடைக்கும் என்று அவர்களுக்கு ஏதோ உள்ளுணர்வு கூறியது. அம்மாதிரி கூட்டங்கள், அங்கிருந்த மலிவாக சரக்குகளை விற்கும் கடைகளில், தெருக்களிலும் சந்துகளிலும் காணப்பட்டார்கள். ஆனால், அங்கே வாடிக்கைக் காரர்களை உள்ளே வரும்படி அழைக்கும் வியாபாரிகளின் நயமான குரல்களை இப்பொழுது காணவில்லை; அங்கே விற்கிறவர்கள் யாரையும் காணவில்லை; வழக்கமாக அங்கே சரக்குகளை வாங்கக்கூடும் பலதரப்பட்ட பெண்களையும் காணவில்லை - ஆனால், யூனிபாரங்களையும், மேல் சட்டைகளையும் அணிந்த சிப்பாய்கள்தான், துப்பாக்கிகள் இல்லாமல் அந்த பஜாருக்குள் வெறும்கைகளோடு நுழைந்தார்கள். அந்த பஜாரை விட்டு அவர்கள் வெளியே போகும்போது, கைகளில் மூட்டைகளோடு போனார்கள். வியாபாரிகளும், மிகவும் சொற்பமாய் இருந்த அவர்களுடைய குமாஸ்தாக்களும், செய்வது என்னது என்று தெரியாமல் அங்கே நடமாடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் கடைகளைத் திறந்து, தங்களால் எடுத்துப் போகக்கூடிய அளவு சாமான்களை எடுத்துக் கொண்டு, மீண்டும் கடைகளை பூட்டினார்கள். பஜாருக்கு எதிரிலுள்ள சதுக்கத்தில் தண்டோராக்காரர்கள், சிப்பாய்கள் ராணுவ வரிசையில் வந்து சேரும்படி தண்டோரா அடித்துக்கொண்டிருந்தார்கள். கொள்ளை அடித்துக்கொண்டிருந்த சிப்பாய்கள், அந்த தண்டோரா சப்தம் கேட்டதும். வழக்கமாக அவர்கள் செய்வதுபோல, தண்டோரா அடிக்கும் இடத்தை நோக்கி அவர்கள் போகவில்லை. அதற்கு மாறாக, அந்த இடத்தை விட்டு தூரமாக அவர்கள் ஓடினார்கள். கடைகளிலிருந்த சிப்பாய்களோடும், தெருக்களிலிருந்த சிப்பாய்களோடும் புதிதாக சிலர் காணப்பட்டார்கள். அவர்களின் தலைகள் ஓட்ட க்ஷவரம் செய்யப்பட்டு, சாம்பல் வர்ணக் கோட்டுகளை, அணிந்துகொண்டிருந்தார்கள். அவர்கள்தான் ஜெயில்களிலிருந்து விடுதலை செய்யப்பட்ட கைதிகள். இலைங்கா தெருவின் கோடியில் இரண்டு அதிகாரிகள் காணப்பட்டார்கள். ஒருவர், தமது யூனிபாரத்திற்கு மேலாக கழுத்தில் சவுக்கத்தைக்

கட்டிக் கொண்டு, ஒரு மெலிந்த, இருண்ட சாம்பல் வர்ண குதிரை மீது அமர்ந்திருந்தார். மற்றொருவர், ஒரு வெளிக் கோட்டு அணிந்து அவர் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார். மூன்றாவது அதிகாரி ஒருவர், அவர்களிடம் சவாரியில் வந்தார்.

'அவர்களையெல்லாம் உடனே விரட்டியடிக்கும்படி ஜெனரல் உத்தரவிடுகிறார். இது ரொம்ப அக்கிரமமானது. ராணுவத்திலிருந்து பாதி பேருக்கு மேலாக ஓடி வந்து விட்டார்கள்.'

'நீங்கள் எங்கே போகிறீர்கள்?... எங்கே போகிறீர்கள்?...' என்று அவர், துப்பாக்கிகள் இல்லாமல் தங்களுடைய வெளிச் சட்டைகளை உயரத்தில் பிடித்துக்கொண்டு, தங்களைக் கடந்து போய்க்கொண்டிருந்த மூன்று சிப்பாய்களைப் பார்த்துக் கேட்டார். 'நில்லுங்கள், அயோக்கியர்களே'.

'ஆனால், நீர் எப்படி அவர்களை நிறுத்தப் போகிறீர்?' என்று மற்றொரு அதிகாரி கேட்டார். 'அவர்களை ஒன்று சேர்க்க முடியாது. மற்றவர்கள் ஓடிப்போவதற்கு முன்பாக, ராணுவம் வேகமாய் முன்னேறிச் செல்லவேண்டும். அது ஒன்றுதான் வழி.

'எப்படி வேகமாய் முன்னேற முடியும்? அந்த பாலத்தில் ஜன நெருக்கம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் வேகமாய் போக முடியாது. மற்றவர்கள் ஓடிப்போகாமல் தடுப்பதற்காக, அவர்களை சூழ்ந்து கொள்ளும்படி ஏற்பாடு செய்தால் என்ன?'

'இங்கே வாருங்கள். அங்கே போய் அவர்களை விரட்டி அடியுங்கள்' என்று பிரதான அதிகாரி கூச்சலிட்டார்.

கழுத்துப்பட்டி கட்டியிருந்த அதிகாரி, குதிரையிலிருந்து கீழே இறங்கி ஒரு தண்டோராக்காரனை அழைத்துக் கொண்டு, அங்கிருந்த மண்டபத்திற்குப் போனார். இவர்களைப் பார்த்ததும், சில சிப்பாய்கள் கூட்டமாக ஓட ஆரம்பித்தார்கள். மூக்கிற்குப் பக்கத்தில் சிவந்த பருக்களைக் கொண்ட ஒரு கடைக்காரன், அமைதியான, நிதானமான சிந்தனை தன்னுடைய பருத்த முகத்தில் தோன்ற, வேகமாக தன்னுடைய கைகளை ஆட்டிக்கொண்டு ஆடம்பரமாக அந்த அதிகாரியிடம் வந்தான்.

'மேன்மை தங்கியவரே, எங்களைக் காப்பாற்றுவதற்கு அருள வேண்டும். சில்லறை காரியங்களைப் பற்றி நாங்கள் குறை கூறவில்லை. உங்களுக்கு எது வேண்டுமோ, அதை எடுத்துக் கொள்ளுங்கள். நாங்கள் மகிழ்ச்சி அடைவோம். ஒரு துணியோ, அல்லது இரண்டு துணிகளோ உங்களைப் போன்ற கனவான் களுக்குக் கொடுப்பதற்கு எங்களுக்கு மகிழ்ச்சியாய் இருக்கும்.

ஆனால், இங்கே நடப்பது வெறும் கொள்ளையாய் இருக்கிறது. தயவு செய்து நாங்கள் கடைகளை அடைக்கிற வரையில் எங்களுக்குப் பாதுகாப்பு கொடுங்கள்...'

அதிகாரியைச் சுற்றி கடைக்காரர்கள் கூடினார்கள்.

'ஏ, இதென்ன பிதற்றல்?' என்று, கடுமையான தோற்றத்தோடு கூடிய ஒரு ஒல்லியான மனிதன் கூறினான், 'தலையே போன பின்பு, அதிலுள்ள சிகைக்காக அழுவதைப்போல இருக்கிறது. அவர்களுக்கு எதை வேண்டுமோ, அதை எடுத்துக்கொள்ளட்டும்' என்று அவன் வேகமாக கையை ஆட்டி சொல்லிவிட்டு, அந்த அதிகாரியிடமிருந்து திரும்பினான்.

'ஐவான் சைடாரிச், உனக்கென்ன, நீ என்ன வேண்டுமானாலும் பேசலாம்' என்று கோபமாக முதலில் பேசிய வியாபாரி கூறிவிட்டு, அந்த அதிகாரியைப் பார்த்துச் சொன்னான். 'மேன்மை தங்கியவரே, தயவு செய்து உள்ளே வாரும்.'

'பேசுகிறானாம், பேச்சு' என்று அந்த ஒல்லியானவன் கூச்சலிட்டான். 'இங்குள்ள எனது மூன்று கடைகளில் நூறு ஆயிரம் ரூபிள்கள் பெறுமான சரக்குகள் இருக்கின்றன. நமது ராணுவம் போன பின்பு, அவற்றை காப்பாற்றி விட முடியுமா? மக்களே, கடவுளின் பலத்திற்கு எதிராக நம்மால் என்ன செய்துவிட முடியும்?'

'மேன்மை தங்கியவரே, உள்ளே வாரும்' என்ன முதலாவது வியாபாரி தலைவணங்கி மீண்டும் கேட்டுக் கொண்டான்.

அந்த அதிகாரி குழப்பம் அடைந்து நின்று கொண்டிருந்தார். அவருடைய குழப்பம் அவருடைய முகத்தில் தோன்றியது.

'அது என்னுடைய வேலையல்ல' என்று அவர் சொல்லி விட்டு, வேகமாக ஒரு ஆளோடி வழியாக போய்க் கொண்டிருந்தார்.

ஒரு கடையிலிருந்து வசைமாரி கூச்சலும், அடித்துக்கொள்ளும் கூச்சலும் வெளியே வந்துகொண்டிருந்தன. அந்த கடை முன்பு அந்த அதிகாரி வந்தபோது, சாம்பல் வர்ண கோட்டு அணிந்த, தலை மொட்டையடித்த ஒருவனை பலாத்காரமாய் வெளியே தள்ளிக்கொண்டிருந்தார்கள்.

அந்த மனிதன் குனிந்து அந்த அதிகாரியையும், வியாபாரியையும் கடந்து ஓடினான். அந்தக் கடைகளில் இருந்த சிப்பாய்களை அந்த அதிகாரி பிடிக்கப் போனார். அச்சமயத்தில் மாஸ்க்வா பாலத்திலுள்ள பிரம்மாண்டமான கூட்டத்திலிருந்து பயங்கரமான கூச்சல்கள் கேட்க ஆரம்பித்தன. அந்த அதிகாரி உடனே சதுக்கத்திற்கு ஓடினார்.

'அது என்ன, அது என்ன?' என்று அவர் கேட்டார். ஆனால், அவரது தோழர் அதற்குள்ளாக வாசைலி பீட்டிபீட்டைக் கடந்து, அந்தக் கூச்சல் வரும் திசையை நோக்கி வேகமாக சவாரி போனார்.

அந்த அதிகாரியும் குதிரை மேல் ஏறி, அவர் பின்னால் சவாரி போனார். அவர் பாலத்தை அடைந்ததும், இரண்டு பீரங்கிகள் அங்கே இருப்பதைக் கண்டார். துருப்புகள் பாலத்தில் போய்க்கொண்டிருந்தன. பல வண்டிகள் பாலத்திற்குப் பக்கத்தில் கவிழ்ந்து கிடந்தன. துருப்புகளில் சிலர் பீதியடைந்தும், சிலர் சிரித்துக்கொண்டும் இருப்பதைக் கண்டார். பீரங்கிக்குப் பக்கத்தில் ஒரு வண்டி நின்றுகொண்டிருந்தது. அந்த வண்டியில் இரண்டு குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன. அந்த வண்டியின் சக்கரங்களுக்குப் பக்கத்தில், நாலு பார்ஜாய் நாய்கள் சங்கிலிகளின் கட்டப்பட்டிருந்தன. அந்த வண்டியில் உயரமாக சாமான்கள் இருந்தன. அதன் உச்சியில் ஒரு குழந்தையின் நாற்காலி தலைகீழாக வைக்கப்பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் ஒரு விவசாயப் பெண் உட்கார்ந்துகொண்டு, காதைத் துளைக்கும்படியாக திக்கற்ற விதமாக கூச்சல் போட்டுக்கொண்டிருந்தாள். அந்தக் கூச்சலுக்குக் காரணம் என்ன என்பதையும் அந்த அதிகாரி விசாரித்தார். காரணம் பின்வருமாறு: ஜெனரல் எர்மோலாவ் அங்கே வந்தார்; சிவிலியன்கள் பாலத்தை அடைத்துக்கொண்டு நிற்பதையும், சிப்பாய்கள் கலைந்து கடைகளுக்குப் போவதையும் அவர் கவனித்தார்; உடனே பாலத்தை நோக்கி சுடப்போவதாக பயமுறுத்தும் பொருட்டு, இரண்டு பீரங்கிகளை அங்கே நிறுத்தி வைக்கும்படி உத்தரவிட்டார்; இதைக் கண்டுதான் அந்த பீதிக் கூச்சல்கள் ஏற்பட்டன. இதைப் பார்த்ததும் அந்தக் கூட்டம் ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டு, வண்டிகளை கீழே சாய்த்து கூச்சலிட்டு அந்தப் பாலத்திலிருந்து விலகிப் போனார்கள். இப்பொழுது துருப்புகள் ஒழுங்காக முன்னேறிக்கொண்டிருந்தார்கள்.

## 11

### 22

இதற்கிடையே மாஸ்கோ பட்டணம் காலியாயிற்று. தெருக்களில் ஒரு ஆளைப் பார்ப்பதுகூட ஆபூர்வமாய் இருந்தது. கோட்டை வாசல்களும், கடைகளும் மூடப்பட்டிருந்தன. இங்கும் அங்கும் கள்ளுக் கடைகளைச் சுற்றி சில குரல்களோ, அல்லது குடிகாரர்களின் பாட்டுகளோ கேட்டுக்கொண்டிருந்தன.

தெருக்களில் வண்டிகளில் யாரும் போகவில்லை. காலடி சப்தங்களும் அபூர்வமாய் இருந்தன. பாவார்ஸ்காயா தெரு முற்றிலும் அமைதியாகக் காணப்பட்டது. ராஸ்டோவ்களின் வீட்டிற்கு முன்னாலுள்ள பெரிய முற்றத்தில் வைக்கோல்களும், குதிரைச் சாணங்களும் சிதறிக் கிடந்தன. ஒரு ஆளைக்கூட அந்த முற்றத்தில் காணவில்லை. அந்த வீட்டிலுள்ள பெரிய வரவேற்பு அறையில், அங்கே விட்டுபோன சாமான்களோடு இரண்டே இரண்டு பேர்கள் வசித்து வந்தார்கள். அவர்கள்தான் முற்றத்து சேவகனான இக்னாட்டும், வேலைக்கார பையனான மைஷ்காவுமாகும். அவன் வாசைலிச்சின் பேரன். தனது தாத்தாவோடு மாஸ்கோவில் தங்கியிருந்தான். கிளாவி கார்டு வாத்தியப் பெட்டியை மைஷ்கா திறந்து, ஒரு விரலால் தட்டிக் கொண்டிருந்தான். முற்றத்து சேவகன் இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு பெரிய நிலைக்கண்ணாடி முன்பாக நின்று திருப்தியோடு புன்னகை செய்து கொண்டிருந்தான்.

'நான் வாசிப்பது நன்றாய் இருக்கிறது அல்லவா, மாமா இக்னாட்?' என்று அந்த பையன், திடீரென்று தனது இரண்டு கைகளாலும் வாத்தியத்தை தட்ட ஆரம்பித்ததும் கேட்டான்.

'அபாரமாய் இருக்கிறது!' என்று இக்னாட் பதில் சொல்லி விட்டு, கண்ணாடியில் தனது முகத்தில் காணப்பட்ட சிரிப்பைக் கண்டு ஆச்சரியமடைந்தான்.

'வெட்கக்கேடு! வெட்கக்கேடு!' என்று அப்பொழுதுதான் நிசப்தமாக உள்ளே நுழைந்த மாவ்ராவின் குரலை தங்களுக்குப் பின்னால் கேட்டார்கள். 'எம்மாதிரி அவன் பல்லைக் காட்டுகிறான், அந்த தடிப்பயல்! இதற்குத்தான் நீ இங்கே இருக்கிறாயா? அந்த பக்கத்தில் ஒன்றும் சுத்தமாகவில்லை. வாசைலிச் களைத்துப் போனான். ஒரு நிமிஷம் பொறு.'

இக்னாட் தனது புன்சிரிப்பை விட்டுவிட்டு, தனது பெல்ட்டை சரி செய்து கொண்டும், பணிவோடு தரையை நோக்கிக்கொண்டே அந்த அறையிலிருந்து வெளியே போனான்.

'நான் மெதுவாகத்தான் செய்தேன், அத்தை' என்று அந்த சிறுவன் கூறினான்.

'நானும் உனக்கு மெதுவாகக் கொடுக்கிறேன், குரங்கே' என்று மாவ்ரா கூச்சலிட்டு, பயமுறுத்தலோடு தனது கையை உயர்த்தினாள். 'உன்னுடைய தாத்தாவுக்கு தேநீர் போடுவதற்காக, நீ போய் அந்த சாமோவாரை எடுத்து வா.'

அந்த கிளாவிகார்டு மீதிருந்த தூசியை துடைத்து அதை மூடிவிட்டு, ஒரு ஆழ்ந்த பெருமூச்சோடு அந்த வரவேற்பு அறையிலிருந்து வெளியே வந்து, அதன் பிரதான கதவை பூட்டினாள்.

முற்றத்திற்கு அவள் போனதும் அடுத்தபடியாக என்ன செய்வது என்று யோசித்தாள். வேலைக்காரர்களின் பகுதிக்குச் சென்று தேநீர் குடிப்பதா, அல்லது இன்னமும் அங்கங்கே கிடக்கும் சாமான்களை எடுத்து அறையில் போட்டு பூட்டுவதா என்று யோசித்தாள்.

அந்த அமைதியான தெருவில் வேகமான காலடி ஓசைகளை அவள் கேட்டாள். யாரோ ஒருவர் வெளி வாசலில் வந்து நின்று கதவைத் திறக்க முயற்சித்ததால், அதிலிருந்த தாழ்ப்பாள் படபடத்தது.

வெளி வாசலுக்கு மாவ்ரா போனாள்.

'உமக்கு என்ன வேண்டும்?'

'கோமகன் வேண்டும் - கோமகன் இலியா ஆண்ட்ரிவிச் ராஸ்டோவ் வேண்டும்.'

'நீர் யார்?'

'நான் ஒரு அதிகாரி. நான் அவரைப் பார்க்க வேண்டும்' என்று அவர் இனிமையான, பண்பாடு கொண்ட ருஷ்ய குரலில் பேசினார்.

மாவ்ரா வெளி வாசல் கதவைத் திறந்தாள். ராஸ்டோவ் முகத்தைப் போன்ற உருண்டை முகமுள்ள 18 வயதுள்ள ஒரு அதிகாரி முற்றத்திற்குள் வந்தார்.

'அவர்கள் எல்லாரும் போய்விட்டார்கள், ஐயா. நேற்று மாலை பூஜை நேரத்தில் அவர்கள் போனார்கள்' என்று கனிவோடு மாவ்ரா சொன்னாள்.

வாசலில் நின்றுகொண்டிருந்த அந்த வாலிப அதிகாரி வீட்டிற்குள் போகவேண்டுமா, வேண்டாமா என்று தயங்கிக்கொண்டு நாக்கினால் சூள் கொட்டினார்.

'ஆ, எவ்வளவு கஷ்டமானது, நேற்றே நான் வந்திருக்க வேண்டும்... தவறி விட்டேன்.'

இதற்கிடையில் அந்த வாலிபரின் முகத்தில் காணப்பட்ட ராஸ்டோவ்களின் முகச்சாயல்களை கவனத்தோடும், கனிவோடும் மாவ்ரா ஆழ்ந்து கவனித்தாள். அவருடைய கந்தலரான கோட்டையும், தேய்ந்து போன பூட்ஸ்களையும் அவள் கவனித்தாள்.

'நீர் எதற்காக கோமகனைப் பார்க்க விரும்புகிறீர்?' என்று அவள் கேட்டாள்.

'ஓ, நல்லது... வேறு வழியில்லை' என்று எரிச்சலோடு அவர் கூறிவிட்டு, அங்கிருந்து புறப்படுவதற்காக வாசல் கதவின் மீது கை வைத்தார்.

மீண்டும் அவர் தயங்கி நின்றார்.

'நான் கோமகனின் நெருங்கிய பந்து. அவர் எப்பொழுதும் என்மீது அன்பு கொண்டுள்ளவர். இப்பொழுது நீயே பார் (ஒரு புன்னகையோடு தம்முடைய கோட்டையும் பூட்ஸையும் அவர் நோக்கினார்); இவை யெல்லாம் தேய்ந்து போயின. என்னிடம் பணமில்லை. அதனால் கோமகனை கேட்கலாம் என்று வந்தேன்...'

மாவ்ரா அவரை மேலே பேச விடவில்லை.

'ஒரு நிமிஷம் பொறும், ஐயா. ஒரே ஒரு வினாடி' என்று அவள் சொன்னாள்.

அந்த அதிகாரி வெளிக் கதவின் கைப்பிடியிலிருந்து தமது கையை எடுத்ததும், அவள் திரும்பி வேகமாக தனது முதிய கால்களால் புழக்கடை வழியாக வேலைக்காரர்களின் விடுதிகளுக்கு ஓடினாள்.

மாவ்ரா தனது அறையைப் பார்த்து ஓடிக்கொண்டு இருந்த போது, அந்த அதிகாரி முற்றத்தில் நடந்து கொண்டு, தமது தேய்ந்துபோன பூட்ஸ்களை குனிந்த தலையோடு, உதடுகளில் மெல்லிய இளநகையோடு பார்த்துக் கொண்டிருந்தார். 'எனது சித்தப்பாவை காண முடியாமல் போனது எவ்வளவு துர்பாக்கியம்! இந்தக் கிழவி எவ்வளவு நல்லவளாய் இருக்கிறாள்! அவள் எங்கே ஓடி விட்டாள்? எனது பட்டாளத்தை நான் போய் அடைவதற்கு சுருக்கான வழி எது என்பதை நான் எப்படி கண்டு பிடிப்பது? இப்பொழுது அந்தப் பட்டாளம் ராகோஜ்ஸ்கி வாசலுக்குப் பக்கத்தில் நெருங்கிக் கொண்டிருக்கும்' என்று அவர் நினைத்தார். அச்சமயத்தில், வீட்டின் பின்னாலிருந்து மாவ்ரா வந்தாள். அவளுடைய முகம் பீதியுற்ற, ஆனால் உறுதி கொண்ட தோற்றத்தைக் காட்டியது. கையில் கட்டம் போட்ட ஒருகைக் குட்டையை சுற்றி வைத்திருந்தாள். அந்த அதிகாரியின் பக்கத்தில் சில அடி தூரங்கள் வந்ததும், கைக் குட்டையை அவள் அவிழ்த்து, அதிலிருந்த வெள்ளையான ஒரு 25 ருபிள் நோட்டை எடுத்து அவசரமாக அவரிடம் கொடுத்தாள்.

'மேன்மை தங்கியவர் இங்கு இருந்திருப்பாரானால், ஒரு பந்து என்ற முறையில் அவர் நிச்சயமாக... ஆனால், இப்பொழுதுள்ள நிலைமையில்...'

மாவ்ரா வெட்கம் கொண்டு குழப்பமடைந்தாள். அந்த அதிகாரி அவள் கொடுத்ததை மறுக்கவில்லை. அந்த நோட்டை அமைதியாக வாங்கிக் கொண்டு அவளுக்கு வந்தனம் கூறினார்.

'கோமகன் மட்டும் வீட்டில் இருந்திருப்பாரானால்...' என்று மாவ்ரா சமாதானம் கூற ஆரம்பித்தாள். 'கிறிஸ்து உம்முடன் இருப்பாராக, ஐயா! கடவுள் உம்மை காப்பாற்றுவாராக!' என்று அவள் சொல்லி, அவர் வெளியே போகும்போது தலை வணங்கினாள்.

அவர் தலையை ஆட்டி தமது நடத்தையில் ஆச்சரியம் கொண்டவரைப்போல புன்முறுவல் காட்டி, ஆட்கள் நடமாட்டமில்லாத தெருக்கள் வழியாக வேகமாக ஓடினார். யாவுஜா பாலத்திற்குப் பக்கத்தில் தமது பட்டாளத்தில் சேர்ந்து கொள்ளுவதற்காக அந்த திசையை நோக்கி ஓடினார்.

சாத்தப்பட்ட வாசல் கதவுக்குப் பக்கத்தில் சிறிது நேரம் நீர் நிறைந்த கண்களோடு மாவ்ரா நின்று கொண்டிருந்தாள். சிந்தனையோடு தலையை ஆட்டிக்கொண்டிருந்தாள். அந்த இனம் தெரியாத வாலிப அதிகாரியிடம், தான் எதிர்பாராத, தாய்க்குரிய கனிவும் அனுதாபமும் அவளிடம் சுரந்து கொண்டிருந்தன.

## 11

## 23

மாஸ்கோவில் வார்வார்க்கா என்ற இடத்தில் அரைகுறையாக கட்டப்பட்ட ஒரு வீடு இருந்தது. அதன் அடித் தளத்தில் ஒரு மதுக்கடை இருந்தது. அங்கிருந்து குடிகாரர்களின் கூச்சல்களும் பாட்டுகளும் கேட்டு வந்தன. அந்த அசுத்தமான சிறிய கடையில் மேஜைகளைச் சுற்றி பத்து தொழிலாளர்கள் பெஞ்சுகளில் அமர்ந்திருந்தார்கள். குடியினால் தள்ளாடிக் கொண்டும், வியர்த்துக் கொண்டும், மங்கிய கண்களுடனும் எல்லாரும் சிரமப்பட்டு எதையோ பாடிக்கொண்டு இருந்தார்கள். மிகுந்த சிரமத்தோடும், ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமலும், கஷ்டப்பட்டும் அவர்கள் பாடியடியால், அவர்கள் பாடவேண்டுமென்ற விருப்பத்தோடு பாடுவதாகக் காணப்படவில்லை; தாங்கள் குடித்திருப்பதையும், தங்களுடைய குடி வெறி ஆட்டத்தையும் காட்டுவதற்காகவே பாடுவதாகத் தோன்றியது. ஒரு உயரமான வாலிபன், சுத்தமான நீல நிறக் கோட்டு அணிந்து, அவர்களுக்கு முன்பாக நின்று கொண்டிருந்தான். அவனுடைய மெல்லிய உதடுகள் சுளித்துக்கொண்டிருக்காமல்

இருந்தால், அவனுடைய மந்தமான, சோகமான கண்கள் குத்திட்டிருக்காமல் இருந்தால், அவனுடைய அழகிய நீண்ட நாசியுள்ள முகம் மிகவும் அழகானதாக காணப்பட்டிருக்கும். ஏதோ ஒரு நினைப்பின் பேரில் அங்கு பாடிக் கொண்டிருந்தவர்களின் முன்பாக அவன் நின்று கொண்டிருந்தான். தன்னுடைய சட்டையின் கையை முழங்கை வரை மடக்கி விட்டுக்கொண்டு, அவர்களுடைய தலைகளுக்கு மேலாக தாளத்துக்குத் தக்கபடி கையை ஆட்டிக்கொண்டிருந்தான். அவனுடைய அசுத்தமான விரல்களை விரித்துக்காட்ட முயற்சித்துக் கொண்டிருந்தான். அவனுடைய சட்டையின் கை நழுவி விழுந்துகொண்டே இருந்தது. இடது கையால் அதை மேலே மடக்கி விட்டுக்கொண்டே இருந்தான். அதாவது, அவனுடைய வெள்ளைக் கையின் தசைகள் வெளியே தெரியும்படி இருக்கவேண்டியது மிகவும் முக்கியமான விஷயமென்று அவன் நினைத்ததாய் தோன்றியது. அந்த பாட்டுகளுக்கு மத்தியில் கூச்சல்களும், அடிதடிகளும், அங்கே முற்றத்திலும், ஆளோடியிலும் கேட்டன. அந்த உயரமான வாலிபன் தனது கையை ஆட்டினான்.

'அதை நிறுத்துங்கள்' என்று அவன் உத்தரவிட்டான். 'வாலிபர்களே, அங்கே ஒரு சண்டை நடந்து கொண்டிருக்கிறது' என்று அவன் சொல்லிவிட்டு, மீண்டும் தனது கைச் சட்டையை மடக்கி விட்டுக்கொண்டு, வெளியே முற்றத்திற்குப் போனான்.

தொழிலாளர்கள் அவன் பின்னால் போனார்கள். அந்த உயரமான வாலிபனுடைய தலைமையில், அன்று காலையில் அவர்கள் குடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் குடிப்பதற்காக தொழிற்சாலையிலிருந்து சில தோல்களைக் கொண்டு வந்து கடைக்காரனிடம் கொடுத்தார்கள். பக்கத்திலிருந்த உலைக்கூடத்தில் வேலை செய்து கொண்டிருந்த சில கொல்லர்கள், கள்ளுக்கடையில் குடிகார ஆர்ப்பாட்டம் நடப்பதைக் கேட்டார்கள். கள்ளுக்கடையை உடைத்துத்திறந்து குடிக்கிறார்கள் என்று அவர்கள் நினைத்துக் கொண்டார்கள். தாங்களும் அதே மாதிரி கடைக்குள் நுழைந்து குடிப்பதற்காக முற்றத்திற்கு வந்தார்கள். அதனால்தான் அங்கே சண்டை ஏற்பட்டது.

அந்த கடைக்காரன் கடை வாசலில் ஒரு கொல்லனுடன் சண்டை போட்டுக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் வேறு பல கொல்லர்கள் அங்கே வந்து, அந்தக் கொல்லனை கடைக்காரனிடமிருந்து மீட்டார்கள். அந்தச் சண்டையில் அந்தக் கொல்லன் முகம் குப்புறக்கீழே விழுந்தான்.

மற்றொரு கொல்லன் உள்ளே நுழைவதற்காக தனது மார்பினால் கடைக்காரனைத் தள்ளினான்.

அந்த வாலிபன் தனது கைச் சட்டையை மடக்கி விட்டுக் கொண்டு, அந்தக் கொல்லனின் முகத்தில் அடித்து காட்டுத்தனமாக கூச்சலிட்டான்:

'வாலிபர்களே, அவர்கள் நம்மை எதிர்க்கிறார்கள்.'

அந்த வினாடியில் முதலில் கீழே விழுந்தவன் எழுந்து, தன்னுடைய முகத்தில் ரத்தத்தைக் காட்டுவதற்காக கீறி விட்டுக் கொண்டு, கண்ணீர் கலந்த குரலில் கூச்சலிட்டான்:

'போலீஸ்! கொலை!...வாலிபர்களே, அவர்கள் ஒருவனைக் கொன்றுவிட்டார்கள்.'

'அட கடவுளே, ஒருவனை அடித்துக் கொன்றுவிட்டார்கள் - கொன்றுவிட்டார்கள்...' என்று அந்த இடத்திற்கு பக்கத்திலிருந்த வாசல் வழியாக வெளியே வந்த ஒரு பெண் கதறினாள்.

ரத்தக் கறையோடு இருந்த கொல்லனைச் சுற்றி ஒரு கூட்டம்கூடிவிட்டது.

'மக்களை இதுவரை நீ கொள்ளையடித்தது போதாதா - அவர்களுடைய சட்டையைக் கூட உறிஞ்சிக் கொள்ளுவாயே' என்று அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவன் கடைக்காரனைப் பார்த்துக் கேட்டான். 'திருடனே, நீ எதற்காக ஒருவனைக் கொன்றாய்?'

முற்றத்தில் நின்றுகொண்டிருந்த அந்த உயரமான வாலிபன், தனது மங்கிய கண்களினால் கடைக்காரனையும் கொல்லனையும் மாறி மாறி பார்த்தான். யார் பக்கம் சேர்ந்து சண்டை போடலாம் என்பது பற்றி அவன் சிந்தித்துக் கொண்டிருப்பதாகத் தோன்றியது.

'கொலைகாரன்' என்று அவன் திடீரென்று கடைக்காரனைப் பார்த்துக் கூச்சலிட்டான். 'வாலிபர்களே, அவனைக் கட்டுங்கள்.'

'என்னையா நீங்கள் கட்டப் போகிறீர்கள்?' என்று அந்தக் கடைக்காரன் கூச்சலிட்டு, தன்னை நோக்கி வந்தவனை விலக்கித் தள்ளி, தன்னுடைய தலையிலிருந்த தொப்பியை எடுத்துக் கீழே வீசினான்.

இந்தச் செய்கையில் ஏதோ அதிசயமான, பயப்படக்கூடிய முக்கியத்துவம் இருப்பதைப் போல, அந்த கடைக்காரனைச் சுற்றி நின்ற தொழிலாளிகள் தயங்கி திகைத்தார்கள்.

எனக்குச் சட்டமெல்லாம் நன்றாய் தெரியும், தோழர்களே. நான் இதைப்பற்றி போலீஸ் கேப்டனிடம் சொல்லப் போகிறேன். நான் அவரிடம் போகமாட்டேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இந்தக்

காலத்தில் யாரும் கொள்ளையடிக்க முடியாது' என்று அந்த கடைக்காரன் கூச்சலிட்டு, தன்னுடைய தொப்பியைக் கையில் எடுத்தான்.

'அப்படியானால் போகலாம் வாருங்கள், அப்படியானால் போகலாம் வாருங்கள்' என்று அந்தக் கடைக்காரனும் அந்த உயரமான வாலிபனும் ஒருவருக்கொருவர் கூறிக்கொண்டு ஒரு வழியாகச் சேர்ந்து போனார்கள்.

ரத்தக் கறை படிந்த கொல்லன் அவர்கள் பின்னால் போனான். தொழிலாளர்களும், மற்றவர்களும் அவனுக்குப் பின்னால் பேசிக்கொண்டும் கூச்சலிட்டுக் கொண்டும் போனார்கள்.

மாராசேய்க்காவின் முனையில் ஒரு பெரிய வீடு இருந்தது. அதன் கதவுகள் எல்லாம் அடைக்கப்பட்டிருந்தன. ஒரு பூட்ஸ் வியாபாரியின் விளம்பரப் பலகை, அந்த வீட்டின் முன்பு தொங்கிக்கொண்டிருந்தது. அந்த வீட்டின் முன்பாகக் கிழிந்து போன நீள சட்டைகளை அணிந்துகொண்டு, சோகமான முகங்களைக் கொண்ட, மெலிந்து களைப்படைந்த சுமார் 20 பூட்ஸ் தைப்பவர்கள் நின்றுகொண்டிருந்தார்கள்.

'அவன் நமக்கு ஒழுங்காக சம்பளத்தைக் கொடுத்திருக்க வேண்டும்' என்று சிறிய தாடி கொண்ட ஒரு ஒல்லியான மனிதன் நெற்றியை சுளித்துக்கொண்டு கூறினான்.

'நமத ரத்தத்தை அவன் உறிஞ்சிவிட்டு, இப்பொழுது நம்மை கைக் கழுவிவிட்டதாக அவன் நினைக்கிறான். வாரம் முழுவதும் நம்மை அவன் ஏமாற்றி வந்தான். இப்பொழுது நம்மை இந்த கதிக்குக் கொண்டு வந்து வைத்துவிட்டு அவன் ஓடிவிட்டான்.'

ரத்தக் கறை படிந்த ஒருவனும், ஒரு கூட்டமும் வருவதைப் பார்த்து அவன் பேசுவதை நிறுத்தினான். அந்த செருப்பு தைப்பவர்கள் எல்லோரும், ஆவலான வேடிக்கையோடு அந்த கூட்டத்தில் கலந்து கொண்டார்கள்.

'இவர்கள் எல்லாரும் எங்கே போய்க்கொண்டிருக்கிறார்கள்?'

'ஏன், சந்தேகமில்லாமல் போலீஸுக்குத்தான் போகிறோம்.'

'நாம் தோற்கடிக்கப்பட்டோம் என்பது உண்மையா?'

'நீ என்ன நினைத்துக்கொண்டிருக்கிறாய்? மக்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைப் பார்.'

கேள்விகளும் பதில்களும் கேட்டன. கூட்டம் அதிகமாய்விட்ட சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டு அந்த கள்ளுக்கடைக்காரன் பின் வாங்கி தனது கடைக்குத் திரும்பினான்.

தனது எதிரி மறைந்துவிட்டான் என்பதை கவனிக்காத அந்த உயரமான வாலிபன், தனது திறந்த கையை ஆட்டிக்கொண்டு, மூச்சுவிடாமல் பேசி எல்லாருடைய கவனத்தையும் தன்னிடம் இழுத்தான். எல்லாருடைய உள்ளங்களிலும் தோன்றியுள்ள கேள்விகளுக்குப் பதில் கிடைக்கும் என்று எதிர்பார்த்து, முக்கியமாக அவனைச் சுற்றியே மக்கள் கூடி நின்றார்கள்.

'அவன் சட்டத்தையும் அமைதியையும் நிலை நாட்ட வேண்டும். அதற்காகத்தான் அரசாங்கம் இருக்கிறது. கிறிஸ்துவ நல்லோர்களே, நான் சொல்லுவது சரிதானே?' என்று அந்த உயரமான வாலிபன், வெளிக்குத் தெரியாத ஒரு புன்னகையோடு கூறினான். 'அரசாங்கம் என்பதே இல்லை என்று அவன் நினைக்கிறான். அரசாங்கம் இல்லாமல் ஒருவர் என்ன செய்ய முடியும்? அரசாங்கம் இல்லாமல் போனால், நம்மை கொள்ளையடிப்பதற்கு ஏராளமான பேர்கள் தோன்றிவிடுவார்கள்.'

'ஏன் அசட்டுத்தனமாகப் பேசுகிறாய்?' என்று கூட்டத்திலிருந்து குரல்கள் கேட்டன. 'மாஸ்கோவை இம்மாதிரி அவர்கள் விட்டு விடுவார்களா? யாரோ கேலிக்காக உன்னிடம் சொல்லி இருக்கிறார்கள். நீ அதை நம்பிவிட்டாய். ஏராளமான துருப்புகளை நாம் காண்கிறோம் அல்லவா? அவனை உள்ளே தள்ளுங்கள். அதற்காகத்தான் அரசாங்கம் இருக்கிறது. மக்கள் பேசிக் கொள்ளுவதைக் கவனித்துக் கேளுங்கள்' என்று கூட்டத்தில் இருந்தவர்கள் சிலர், அந்த உயரமான வாலிபனைச் சுட்டிக்காட்டி சொன்னார்கள்.

மாஸ்கோவிலுள்ள சீனப் பகுதியின் சுவருக்குப் பக்கத்தில், ஒரு கம்பளிக் கோட் அணிந்தவனைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் நின்றது. அவன் கையில் ஒரு காகிதத்தை வைத்திருந்தான்.

'ஒரு பிரகடனம், அவர்கள் ஒருபிரகடனத்தை வாசிக்கிறார்கள்! அவர்கள் ஒருபிரகடனத்தை வாசிக்கிறார்கள்!' என்று கூட்டத்திலிருந்து குரல்கள் கேட்டன. சுற்றி நின்றவர்கள் வாசிப்பவனிடம் நெருங்கினார்கள்.

ஆகஸ்டு 31-ந் தேதி வெளியான பிரகடனத்தை கம்பளிக் கோட் அணிந்திருந்தவன் வாசித்துக்கொண்டிருந்தான். தன்னைச் சுற்றி கூட்டம் கூடியதும் அவன் குழப்பம் அடைந்தான். கூட்டத்தை தள்ளிக்கொண்டு அவனிடம் சென்ற அந்த உயரமான வாலிபன், அந்தப் பிரகடனத்தை உரக்க வாசிக்கும்படிக் கூறினான். அவன் நடுங்கிய குரலில் முதலிலிருந்து வாசித்தான்.

'நாளை காலையில், கலங்காத மேன்மை தங்கியவரை நான் பார்க்கப் போகிறேன். அந்த அயோக்கியர்களை அழிப்பதற்காக ராணுவத்திற்கு வேண்டிய உதவியைச் செய்வதற்கு அவருடன் நான் கலந்து பேசுவேன். நாங்களும் பங்கு கொள்ளுவோம்...' இந்த இடத்தில் வாசிப்பவன் தயங்கினான். (அந்த உயரமான வாலிபன்: 'உங்களுக்காக அவர் எல்லாவற்றையும் செய்யப் போவதை நீங்கள் கவனிக்கிறீர்களா?') 'அவர்களை அழிப்பதற்கு, அந்தப் பேர்வழிகளை பிசாசிடம் அனுப்புவதற்கு நாங்களும் பங்கு கொள்ளுவோம். நான் டின்னருக்கு திரும்பி வருவேன். நாம் எல்லோரும் சேர்ந்து வேலை செய்யலாம். நாம் செய்வோம், பூரணமடாகச் செய்வோம். அப்படிச் செய்து அந்த அயோக்கியர்களை நாசமாக்குவோம்.'

கடைசி வார்த்தைகளை வாசித்தபோது பரிபூரண அமைதி நிலவி இருந்தது. அந்த உயரமான வாலிபன் சோகத்தோடு தலையைத் தொங்க விட்டுக்கொண்டிருந்தான். அந்தப் பிரகடனத்திலுள்ள கடைசி பாகத்தை ஒருவரும் அறிந்துகொள்ளவில்லை என்பது தெளிவாய் தெரிந்தது. முக்கியமாக, 'நான் டின்னருக்குத் திரும்பி வருவேன்' என்ற வார்த்தைகள் வாசித்தவனுக்கும், கேட்டவர் களுக்கும் அதிருப்தியே கொடுத்தன. அங்கிருந்த கூட்டத்தாரின் மனப் போக்கானது உயர்ந்த சுருதிக்கு திருப்பி விடப்பட்டிருந்தது; ஆகவே இந்த அனாவசியமான சாதாரண விஷயம் மிகவும் அற்பமாகத் தோன்றியது. அதாவது, அதிகாரத்தின் உயர் பீடத்திலிருந்து பிறப்பிக்கப்படுகிற பிரகடனத்தில், இம்மாதிரியான சாதாரண விஷயங்களுக்கு இடமே இல்லையென்று யாரும் சொல்லக்கூடியது போலத் தோன்றியது.

அவர்கள் எல்லாரும் அதைரியத்தோடும் மௌனமாகவும் நின்றுகொண்டிருந்தார்கள். அந்த உயரமான வாலிபன் தனது உதடுகள் படபடக்க தலையை ஆட்டிக்கொண்டிருந்தான்.

'நாம் அவரைக் கேட்கவேண்டும்... அவரையே கேட்க வேண்டும்...' 'ஆம், அவரை கண்டிப்பாய் கேட்கவேண்டும்...' 'ஏன் கேட்கக் கூடாது? அவர் விளக்கிச் சொல்லுவார்...' என்று கூட்டத்தின் பின்னாலிருந்து திடீரென்று குரல்கள் கேட்டன. அவர்களின் கவனமெல்லாம் இரண்டு குதிரை வீரர்களுடன் சதுக்கத்திற்கு வந்து கொண்டிருந்த போலீஸ் சூப்பரிண்டெண்டின் வண்டி மீது திரும்பியது.

அந்த போலீஸ் சூப்பரிண்டெண்ட், கோபமாக ராஸ்டாப் சைனின் உத்தரவுப்படி, படகுகளையெல்லாம் கொளுத்துவதற்காக

போய் இருந்தார். அந்த வேலையிலிருந்து ஏராளமான பணம் அவர் கையில் தங்கியது. அந்த சமயத்தில் அந்தப் பணத்தை அவர் தமது ஜேபியில் வைத்திருந்தார். தம்மை நோக்கி வரும் கூட்டத்தைப் பார்த்ததும், தமது வண்டியை நிறுத்தும்படி வண்டிக்காரனிடம் கூறினார்.

'இந்த மக்கள் எல்லாரும் யார்?' என்று தம்மை நோக்கி தனித்தனியாகவும், சங்கோஜத்துடனும் வந்து கொண்டிருந்த வர்களைப் பார்த்து அவர் கேட்டார். 'இவர்கள் எல்லாரும் யார்?' என்று தமது முதல் கேள்விக்குப் பதில் வராததைக் கண்டு மீண்டும் கேட்டார்.

'மேன்மை தங்கியவரே...' என்று கம்பளிக் கோட்டு அணிந்திருந்த கடைக்காரன் பேசினான். 'மேன்மை தங்கியவரே, மிக உயர்ந்த மேன்மை தங்கியவரான கோமகனின் பிரகடனப்படி, தங்கள் உயிரை பொருட்படுத்தாமல் சேவை செய்வதற்கு அவர்கள் விரும்புகிறார்கள். இது எந்த விதமான கலகமும் அல்ல. மிக உயர்ந்த மேன்மை தங்கியவர் சொல்லியபடி...'

'கோமகன் இதை விட்டுப் போகவில்லை. அவர் இங்கேதான் இருக்கிறார். உங்களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்கு அவர் உத்தரவு பிறப்பிப்பார்' என்று அந்த சூப்பரிண்டெண்ட் சொல்லிவிட்டு, வண்டிக்காரனைப் பார்த்து, 'நீ போ' என்று கூறினார்.

கூட்டம் நின்றது. சூப்பரிண்டெண்ட் சொல்லியதைக் கேட்டவர் களைச் சுற்றி கூட்டம் வளைந்தது. அங்கிருந்த புறப்பட்டுப் போய்க்கொண்டிருந்த வண்டியையும் அந்தக் கூட்டம் பார்த்துக் கொண்டிருந்தது.

அச்சமயத்தல் ஒரு பீதியுற்ற நோக்கோடு அந்த சூப்பரிண்டெண்ட் திரும்பிப் பார்த்து தமது வண்டிக்காரனிடம் ஏதோ சொன்னார். உடனே குதிரைகளின் வேகம் அதிகரித்தது.

'வாலிபர்களே, இது ஒரு மோசடி. நாம் அந்தக் கோமகனிடமே போவோம்' என்று அந்த உயரமான வாலிபன் கூச்சலிட்டான். 'வாலிபர்களே, அவரை நாம் போகும்படி விடக்கூடாது. அவர் நமக்கு பதில் சொல்லட்டும். அவரை நிறுத்தங்கள்' என்று வெவ்வேறு குரல்கள் கேட்டன. அந்த வண்டிக்குப் பின்னால் மக்கள் ஓடினார்கள்.

அந்த சூப்பரிண்டெண்ட் போன வழியாக உரக்கப் பேசிக்கொண்டு லுபியாங்கா தெருவை நோக்கி கூட்டம் சென்றது.

'பணக்காரர்களும், வியாபாரிகளும் போய்விட்டார்கள். நாம் நாசமடையும்படி நம்மை விட்டுவிட்டார்கள். நாம் நாய்கள் என்று அவர்கள் நினைக்கிறார்களா?' என்று கூட்டத்திலிருந்தவர்கள் அடிக்கடி பேசும் குரல்கள் கேட்டுவந்தன.

# 11

## 24

செப்டெம்பர் முதல் தேதியன்று மாலையில் குட்டுஜோவை பேட்டி கண்ட பின்பு, அவமானமும் மன வருத்தமும் கொண்டு கோமகன் ராஸ்டாப்சைன் மாஸ்கோ திரும்பினார். ஏனெனில், யுத்தக் கவுன்சில் கூட்டத்திற்கு அவரை அழைக்கவில்லை; மாஸ்கோவின் பாதுகாப்பிற்காக தாம் பங்கு கொள்ளுவதாக சொல்லியதை குட்டுஜோவ் லட்சியம் செய்யவில்லை. மாஸ்கோவில் காணப்பட்ட அமைதியையும், தேசாபிமான ஆர்வத்தையும், ராணுவ தலைமை பீடத்தில் உள்ளவர்கள் இரண்டாந்தரமாகக் கருதியதோடு, அவை சம்பந்தமில்லாதவை என்றும், முக்கிய மற்றவை என்றும் நினைத்ததையும் பார்த்து அவர் மலைப்பு கொண்டார். இவற்றையெல்லாம் கண்டு மன வேதனையும் அவமானமும் ஆச்சரியமும் கொண்டு மாஸ்கோவிற்கு ராஸ்டாப்சைன் திரும்பினார். இராச் சாப்பாட்டிற்குப் பின்னால், ஆடைகளைக் களையாமலேயே ஒரு சோபாவில் படுத்தார். நடு இரவுக்குப் பின்னால், குட்டுஜோவிடமிருந்து ஒரு கடிதம் கொண்டுவந்த தூதர் அவரை எழுப்பினார். துருப்புகள் ரயாஜான் ரஸ்தா வழியாக மாஸ்கோவிற்கு அப்பால் போய்க்கொண்டு இருந்தபடியால், மாஸ்கோ பட்டணத்திற்குள் துருப்புகள் போகும்போது, அவர்களுக்கு வழி காட்டுவதற்காக போலீஸ் அதிகாரிகளை அனுப்பும்படி அந்தக் கடிதத்தில் குட்டுஜோவ் கேட்டுக்கொண்டிருந்தார். இந்த விஷயம் ராஸ்டாப் சைனுக்குப் புதிதல்ல. மாஸ்கோவை கைவிட்டு விடுவார்கள் என்பதை அவர் முன்பே அறிந்திருந்தார். பாக்லோனி குன்றில் முதல் நாளன்று குட்டுஜோவுடன் பேட்டி கண்ட பின்புதான், இந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டார் என்பதில்லை; பாராடினோ போருக்குப் பின்னால் மற்றொரு போர் செய்வது அசாத்தியம் என்று மாஸ்கோவிற்கு வந்த எல்லா ஜெனரல்களும் சொல்லி வந்தார்கள். அது மட்டுமல்ல, அரசாங்க உடமைகள் ஒவ்வொரு இரவும்

வெளியேற்றப் பட்டு வந்தன. ராஸ்டாப்சைனின் சொந்த அனுமதி பெற்றே பட்டணத்து வாசிகளின் பாதி பேர்கள் வெளியேறினார்கள். இப்படியெல்லாம் இருந்தும்கூட, இந்தச் செய்தி கோமகனுக்கு ஆச்சரியத்தையும் மன வருத்தத்தையும் கொடுத்தன. ஏனெனில், இதைக் கடிதம் உத்தரவு ரூபமாக குட்டுஜோவிடமிருந்து வந்து, அதிலும் இரவு நேரத்தில் வந்து அவருடைய தூக்கத்தை கெடுத்ததற்காக அவர் எரிச்சல் கொண்டார்.

இந்தக் காலங்களில் தாம் செய்த நடவடிக்கைகளைப் பற்றி பின் காலத்தில், கோமகன் ராஸ்டாப்சைன் எழுதிய ஞாபகக் குறிப்புகளில் குறிப்பிட்டிருக்கிறார். தாம் செய்த காரியங்களை எல்லாம் இரண்டு முக்கியமான காரணங்களை மனதில் வைத்தே செய்ததாக அவர் சொல்லுகிறார். அவையானவன: (1) மாஸ்கோவில் அமைதியை நிலை நாட்டுவது; (2) மாஸ்கோ வாசிகளை அதை காலி செய்துவிட்டு போகும்படி துரிதப் படுத்துவது. இந்த இரண்டு நோக்கங்களையும் ஒருவர் ஒப்புக் கொள்ளுவதாய் இருந்தால், ராஸ்டாப்சைனின் நடவடிக்கைகளை குற்றஞ் சொல்ல முடியாது என்றே தோன்றும். 'பரிசுத்த சின்னங்களையும், துப்பாக்கிகளையும், குண்டுகளையும் பீரங்கிகளையும், உணவுப் பொருள்களையும் மாஸ்கோவிலிருந்து ஏன் அகற்றவில்லை? மாஸ்கோ காலி செய்யப்பட மாட்டாது என்று ஆயிரக்கணக்கான மாஸ்கோ வாசிகள் நம்பும்படி செய்து, அவர்கள் நாசமாகும்படி ஏன் விடவேண்டும்?' இதற்கு கோமகன் ராஸ்டாப்சைன், 'பட்டணத்தில் அமைதியைக் காப்பாற்றுவதற்காக அப்படிச் செய்ய வேண்டியதிருந்தது' என்று பதில் சொல்லுகிறார். 'அரசாங்க காரியாலயங்களிலிருந்து உபயோகமற்ற தஸ்தாவேஜு களையும், லெப்பிச் என்பவரின் பலூனையும், மற்ற சாமான் களையும் எதற்காக அப்புறப்படுத்த வேண்டும்?' இந்தக் கேள்விக்கு கோமகள் ராஸ்டாசைன், 'பட்டணத்தை காலியாக வைப்பதற்கே அம்மாதிரி செய்தோம்' என்று பதில் கூறுகிறார். ஆகவே, பொதுஜன அமைதி ஆபத்தில் இருந்ததாகவும், அதைத் தவிர்ப்பதற்காக செய்யும் எந்த நடவடிக்கையும் நியாயமாகத் தோன்றுகிறதென்றும் ஒருவர் ஒப்புக்கொள்ள வேண்டியதாய் இருக்கிறது.

பிரான்ஸில் செய்யப்பட்ட எல்லா பயங்கரச் செய்கைகளும், பொதுஜன அமைதியை பாதுகாப்பதற்காகவே செய்யப்பட்டதாக சொல்லப்பட்டது.

அப்படியானால், 1812 - ஆம் வருஷத்தில் மாஸ்கோவில் பொது ஜன அமைதிக்கு ஆபத்து நேரிடும் என்று கோமகன் ராஸ்டாப் சைன் பயப்பட்டதற்கு ஆதாரம் என்ன? மாஸ்கோ பட்டணத்தில் குழப்பம்

ஏற்படும் என்று அவர் நினைப்பதற்கு என்ன காரணம் இருந்தது? மாஸ்கோ வாசிகள் மாஸ்கோவை விட்டு வெளியே போய்க்கொண்டிருந்தார்கள்; அதே சமயத்தில் மாஸ்கோவிற்குள் துருப்புகள் வந்துநிறைந்து கொண்டிருந்தார்கள். இந்த விஷயங்களைக் கண்டு மாஸ்கோ வாசிகள் எதற்காக குழப்பம் செய்வார்கள்?

எதிரிகள் ருஷ்யாவில் எந்த நகரத்திலுமோ, அல்லது மாஸ்கோவிலோ பிரவேசித்தபோது, குழப்பத்தின் சாயல் கூட தோன்றியதே இல்லை. செப்டம்பர் முதல் தேதியன்றும், இரண்டாம் தேதியன்றும் பத்தாயிரத்திற்கு மேலாக மக்கள் இன்னமும் மாஸ்கோவில் தங்கி இருந்தார்கள். கவர்னரின் அழைப்பின்பேரில், அவருடைய மாளிகையின் முற்றத்தில் ஒரு கூட்டம் கூடியிருந்ததைத் தவிர, வேறு எதுவும் நேரிடவில்லை. மக்களுக்கு ஆயுதங்களையும் பிரகடனங்களையும் கொடுத்து, அவர்களுடைய ஆவேசங்களைக் கிளப்பி விடுவதற்குப் பதிலாக, மாஸ்கோவில் இருந்த பரிசுத்த சின்னங்களையும், வெடி மருந்துகளையும், ஆயுதங்களையும், பணத்தையும் வெளியேற்று வதற்கு ராஸ்டாப்சைன் நடவடிக்கை எடுத்திருந்தால், மாஸ்கோவை கைவிடப் போகிறோம் என்பதை மக்களுக்குத் தெளிவாகச் சொல்லியிருந்தால், மாஸ்கோவின் நிலைமை இன்னும் நன்றாய் இருந்திருக்கும். அதாவது, பாராடினோ போருக்குப் பின்னால், மாஸ்கோவைக் கைவிடும் நிச்சயம் என்பதை அறிந்ததற்குப் பின்னால், இதைச் செய்திருக்கவேண்டும்.

ராஸ்டாப்சைன் தேசாபிமான உணர்ச்சியுள்ளவராய் இருந்த போதிலும், அவருடைய சுபாவம் படபடப்பும், எரிச்சலும் கொண்டதாய் இருந்தது. அரசாங்க உயர் வட்டாரங்களிலேயே அவர் எப்பொழுதும் தொடர்பு வைத்திருந்தார். மற்ற மக்களுக்கு வழிகாட்ட வேண்டிய அவர், அவர்களைப்பற்றி ஒன்றுமே அறியாமல் இருந்தார். ஸ்மாலென்ஸ்க் நகரில் எதிரி பிரவேசித்ததிலிருந்து, 'ருஷ்யாவின் இருதய'மான தேச மக்களின் ஆவேசத்தை, தாமே தலைமை வகித்து நடத்துவதாக மனோராஜ்யம் செய்து வந்தார். எல்லா அரசாங்க அதிகாரிகளும் நினைப்பதைப் போலவே, அவரும் ஒன்றை நினைத்து வந்தார். அதாவது, மாஸ்கோ வாசிகளின் வெளிச் செய்கைகளை அவர் ஆண்டு வந்தது மட்டுமல்லாமல் அவர்களுடைய மனோபாவத்தையும் கூட தம்முடைய பிரகடனங்களாலும், சுவரொட்டிகளாலும் ஆண்டு வந்ததாக அவர் நினைத்தார்; அந்த பிரகடனங்களும், சுவரொட்டிகளும் ஆபாசமான தொனியில் எழுதப்பட்டிருந்தன;

அந்த மொழியை தங்களுக்குள் பேசவே மக்கள் வெறுத்தார்கள்; ஆகவே, அதிகாரத்தின் உயர் பீடத்திலிருந்து அம்மாதிரி மொழி வெளிவருவதைக் கண்டு அவர்கள் ஆச்சரிய மடைந்தார்கள். பொது மக்களின் உணர்ச்சிக்கு தாம் தலைவராய் இருக்கும் சிறந்த பதவியைக் கண்டு ராஸ்டாப்சைன் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார்; அம்மாதிரி நினைப்பில் அவர் பழகியும் போனார். ஆகவே, அந்தப் பதவியையும் துறந்து, எந்த விதமான வீரச் செய்கைகளையும் காட்டாமல், மாஸ்கோவையும் துறக்கவேண்டிய அவசியம் நேரிட்டபோது, அவருக்கு திகைப்பாய் இருந்தது. தமது கால்களின் கீழ் பூமி நழுவுவதைப் போன்ற ஆதாரமற்ற உணர்ச்சியை அவர் திடீரென்று பெற்றார். ஆகவே, என்ன செய்வது என்று அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லை. மாஸ்கோவை காலி செய்யப் போகிறார்கள் என்பதை அவர் முன்பே கேள்விப்பட்டிருந்தாலும், கடைசி நிமிஷம் வரையில் அவர் அதை மனப்பூர்வமாக நம்பவில்லை; அதற்கு அவர் தயாராகவும் இல்லை. அவருடைய விருப்பத்திற்கு விரோதமாகவே, மாஸ்கோ வாசிகள் வெளியே போனார்கள். அரசாங்க காரியாலயங்கள் வெளியே போயின என்றால், அம்மாதிரி செய்யவேண்டும் என்று அதிகாரிகள் வற்புறுத்தியபடியால் தயக்கத்தோடு அவர் உத்தரவு கொடுத்தார். தமக்கே தாம் மனோராஜ்யம் செய்துகொண்ட தலைவர் பதவியில்தான், அவருடைய கவனம் ஈடுபட்டிருந்தது. ஆர்வமுள்ள மனோராஜ்யம் கொள்ளுகிறவர்கள் எம்மாதிரி நடப்பார்களோ அதே மாதிரியே அவரும் நடந்தார். அதாவது, மாஸ்கோ கைவிடப்படும் என்ற விஷயம் புத்தி பூர்வமாக முன்பாகவே அவருக்குத் தெரிந்திருந்தாலும், அவருடைய உள்ளத்தில் அதை அவர் நம்பவில்லை. ஆகவே, புதிய நிலைமைக்குத் தக்கபடி, தம்முடைய மனோபாவத்தை அவர் அமைத்துக்கொள்ளவில்லை.

அவர் சிரமப்பட்டு உற்சாகத்தோடு நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டார். அவையெல்லாம் பிரஞ்சுக்காரருக்கு எதிராக தம்முடைய தேசாபிமானப் போக்கில் மக்களைக் கிளப்பி விடுவதாகவே இருந்தன. (இவையெல்லாம் எவ்வளவு தூரம் உபயோகமாய் இருந்தன, மக்களிடம் அவை எவ்வளவு தூரம் பலித்தன என்பது வேறு விஷயங்கள்.)

சம்பவங்கள் எல்லாம் அவைகளுடைய உண்மையான சரித்திர குண விசேஷத்தில் உருவாக ஆரம்பித்த பின்பு, பிரஞ்சுக்காரர்கள் மீதுள்ள துவேஷத்தை வார்த்தைகளினால் வெளிப்படுத்துவது மட்டும் போதாது என்று தெரிந்த பின்பு, அந்த துவேஷத்தைக்

காட்டுவதற்கு ஒரு போர் கூட செய்வது சாத்தியமில்லை என்று ஏற்பட்ட பின்பு, மாஸ்கோவை காப்பாற்றுவதற்கு சுயநம்பிக்கை மட்டும் போதாது என்று ஏற்பட்ட பின்பு, மாஸ்கோ வாசிகள் அனைவரும் தங்கள் உடமைகளை விட்டுவிட்டு, தங்களுடைய தேசீய உணர்ச்சியின் முழு வேகத்தையும் காட்டுவதற்கு, ஒத்துழையாமையைக் கைக்கொண்டு ஒரே கூட்டமாக மாஸ்கோவை விட்டு வெளியேறிய பின்பு, ராஸ்டாப்சைன் மேற்கொண்ட தலைமைப் பதவியானது திடீரென்று அர்த்தமற்றதாய் தோன்றியது. தம்முடைய நிலைமை கேலிக் கூத்தாக, பலவீனமாக இருப்பதாகவும், தாம் தனித்து நிற்பதாகவும், தமக்கு ஆதரவு எதுவும் இல்லாதது போலவும், அவர் திடீரென்று எதிர்பாராத விதமாக உணர ஆரம்பித்தார்.

அவர் தூக்கத்திலிருந்து விழித்ததும், கனிவில்லாத, கண்டிப்பான உத்தரவை குட்டுஜோவிடமிருந்து பெற்றார். அதைப் பார்த்ததும் அவருக்கு எரிச்சல் அதிகமாயிற்று. தம்மையே தாம் குறை கூறிக்கொண்டார். அரசாங்க உடமைகளையெல்லாம் வெளியேற்றும் வேலையில் அவரை தனியாக நியமித்திருந்தும் கூட, அந்த உடமைகளெல்லாம் இன்னமும் மாஸ்கோவிலேயே இருந்தன. இனி அவற்றையெல்லாம் வெளியே அனுப்புவது சாத்தியமில்லை.

'இதற்கு யாரை குறை கூறுவது? இம்மாதிரி நடக்கும்படி செய்தது யார்?' என்று அவர் தம்மைத்தானே கேட்டார். 'நானல்ல, நிச்சயமாக நானல்ல. நான் ஒவ்வொன்றையும் தயாராக வைத்திருந்தேன். ஆனால் இதுமாதிரி நடக்கும்படி அவர்கள் செய்துவிட்டார்கள். துஷ்டர்கள்! துரோகிகள்!' என்று அவர் நினைத்தார். ஆனால், துஷ்டர்களும், துரோகிகளும் யார் என்பதை அவர் தெளிவாக மனதில் தெரிந்து கொள்ளவில்லை. ஆனால், அந்த துரோகிகள் யாராய் இருந்தாலும், தம்முடைய நிலைமை இம்மாதிரி பரிதாபகரமாகவும் பொய்யானதாகவும் ஆனதற்கு அவர்களே காரணமாகையால், அவர்களை வெறுக்க வேண்டியது அவசியம் என்று அவர் நினைத்தார்.

மாஸ்கோவின் பல பாகங்களிலிருந்தும் அவரிடம் வந்தவர்களுக்கு அவர் உத்தரவுகளை அன்று இரவு முழுவதும் பிறப்பித்துக் கொண்டிருந்தார். கோமகன் அம்மாதிரி கடுகடுப்பாகவும், எரிச்சலாகவும் இருந்ததை, அவரைச் சுற்றி இருந்தவர்கள் அதற்கு முன்னால் பார்த்ததே இல்லை.

'மேன்மை தங்கியவரே, பத்திரப் பதிவு இலாகாவின் டைரக்டர் உங்களிடம் உத்தரவு பெற்றுவரும்படி சொன்னார்... குருமார்களிடமிருந்து வந்திருக்கிறோம். செனெட்டிலிருந்து, சர்வகலாசாலையிலிருந்து வந்திருக்கிறோம். அனாதை குழந்தை ஆஸ்பத்திரியிலிருந்து, உதவி பிஷப்பிடமிருந்து வந்திருக்கிறோம்... நிலைமையைப் பற்றிய செய்திகள் எங்களுக்கு வேண்டும்... தீயணைக்கும் படையைப் பற்றி உங்கள் உத்தரவு என்ன? ஜெயில் கவர்னரிடமிருந்து... பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து வந்திருக்கிறோம்...' இம்மாதிரியாக அன்று இரவு முழுவதும் கோமகனிடம் வந்துகொண்டே இருந்தார்கள்.

இம்மாதிரி கேள்விகளுக்கெல்லாம், சுருக்கமாகவும் கோபமாகவும் பதில் கூறிக்கொண்டிருந்தார். அதாவது, தம்மிடம் இப்பொழுது உத்தரவு எதுவும் கேட்க வேண்டியது இல்லை என்றும், தாம் ஜாக்கிரதையோடு தயாரித்து வைத்திருந்த திட்டத்தை யாரோ கெடுத்துவிட்டதாகவும், ஆகவே, நடக்கப் போகிற காரியங்களுக்கெல்லாம் அந்த நபர்தான் பொறுப்பானவர் என்றும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

'ஓ, அந்த மடையனிடம் சொல்லு' என்று பத்திரப் பதிவு இலாகாக்காரனுக்கு பதில் சொன்னார். 'அவருடைய தஸ்தாவேஜுகளைக் காப்பாற்றுவதற்கு அவர் இங்கேதான் இருக்கவேண்டும் என்று சொல்லு. தீயணைக்கும் படையைப் பற்றி ஏன் இம்மாதிரி புத்தியற்ற கேள்விகளை என்னிடம் கேட்கிறீர்கள்? அவர்களிடம் குதிரைகள் இருக்கின்றன. பிரஞ்சுக்காரர்களிடம் அவைகளை விட்டு விடாமல் அவர்கள் விளாடிமிருக்கு போகட்டும்.'

'மேன்மை தங்கியவரே, பைத்தியக்கார ஆஸ்பத்திரியின் சூப்பரிண்டெண்ட் வந்திருக்கிறார். உம்முடைய உத்தரவுகள் என்ன?'

'என்னுடைய உத்தரவுகளா? அவர்கள் வெளியே போகட்டும், அவ்வளவுதான்... பைத்தியக்காரர்களை பட்டணத்திற்குள் விட்டு விடட்டும். நமது ராணுவங்களை பைத்தியக்காரர்கள் சேனாதிபத்தியம் செய்து வருவதால், இந்த பைத்தியக்காரர்களை சுதந்திரமாய் இருக்கும்படி செய்யவேண்டும் என்று கடவுள் விரும்புவதாகத் தோன்றுகிறது.'

ஜெயிலில் இருக்கும் கைதிகளை என்ன செய்வது என்று கேட்ட போது, ஜெயில் கவர்னரைப் பார்த்து கோமகன் ராஸ்டாப்சைன் கோமாகக் கூச்சலிட்டார்:

'உம்முடைய கைதிகளைப் பாரா செய்வதற்காக, இரண்டு பட்டாளங்களை - நம்மிடம் அதுதான் இல்லை - உமக்குக் கொடுப்பேன் என்று எதிர்பார்க்கிறீரா? அவர்களை விடுதலை செய்யும். அதைப்பற்றி அவ்வளவுதான்.'

'மேன்மை தங்கியவரே, இன்னமும் சில அரசியல் கைதிக்ள் இருக்கிறார்கள். மெஷ்கோவ், வெரெஷ்சாகின்...'

'வெரெஷ்சாகினா? இன்னும் அவனை தூக்கில் போட வில்லையா?' என்று ராஸ்டாப்சைன் கத்தினார். 'அவனை என்னிடம் கொண்டு வாருங்கள்.'

## 11

## 25

**கா**லை 9 மணிக்கொல்லாம் உத்தரவுகளுக்காக கோமகனிடம் யாரும் வர வில்லை. துருப்புகள் மாஸ்கோ வழியாகப் போய்க்கொண்டிருந்தன. மாஸ்கோ வாசிகளில் யாரால் வெளியே போக முடியுமோ, அவர்கள் தங்கள் சொந்த முறையில் போய்க்கொண்டிருந்தார்கள். போகாமல் தங்கி இருந்தவர்களும், அப்படித் தங்குவதற்கு தாங்களே தீர்மானித்துக் கொண்டார்கள்.

சாக்கோல்நிக்கி என்ற இடத்திற்குப் போவதற்கு தமது வண்டியை தயார் செய்யும்படி கோமகன் உத்தரவிட்டார். அவர் தமது அறையில் கைகளை கட்டிக்கொண்டு, எரிச்சலுடனும், சோகமாகவும், வாய் பேசாமாலும் அமர்ந்திருந்தார்.

அமைதியான, கலவரங்கள் இல்லாத காலங்களில், தம்முடைய முயற்சிகளினால்தான், தம்முடைய ஆளுகையிலுள்ள மக்கள் எல்லாரும், தங்களுடைய வேலைகளைச் செய்து வருவதாக ஒவ்வொரு நிர்வாக அதிகாரியும் நினைப்பதுண்டு. இம்மாதிரியாக தாங்கள் அத்தியாவசியமானவர்கள் என்ற நினைப்பில்தான், ஒவ்வொரு நிர்வாக அதிகாரியும் தம்முடைய வேலைகளுக்கும் முயற்சிகளுக்கும் திருப்தியைப் பெறுகிறார். சரித்திரம் என்ற சமுத்திரம்அமைதியாய் இருக்கிற காலத்தில், நிர்வாக அதிகாரி தம்முடைய சிறிய படகில் அமர்ந்து மக்களின் கப்பலை வழிகாட்டி நடத்துவதற்கு, தமது படகிலிருந்து ஒரு நீண்ட கம்பை கப்பலோடு இணைக்கிறார்; தமது படகு கப்பலுக்கு முன்பாக போய்க்கொண்டு இருப்பதால், தம்முடைய முயற்சிகளினால்தான் அந்தக் கப்பலும் வருகிறது என்று அவர் நினைக்கிறார். ஆனால், புயல் ஏற்படும்

போது, சமுத்திரம் பொங்கும்போது, அந்தப் புயலில் கப்பல் போகவேண்டியிருக்கும்போது, இந்த மனோராஜ்யம் சாத்தியமில்லாமல் போகிறது. அந்த சமயத்தில், கப்பலானது தனது ஏராளமான பலத்தினால் சுதந்திரமாய் போக ஆரம்பிக்கிறது; படகிலிருந்து நீட்டப்படும் அந்தத் தொடர்புக் கம்பானது அந்தக் கப்பலோடு தொடர்புகொள்ள முடியாமல் போய்விடுகிறது; இப்பொழுது திடீரென்று அந்த நிர்வாக அதிகாரி, தாம் பெரிய பலமாக இருந்த நிலைமை மாறி, அற்பமானவராகவும், உபயோகமற்றவராகவும், பல வீனமானவராகவும் காணப்படுகிறார்.

இம்மாதிரிதான் ராஸ்டாப்சைன் உணர்ந்தார். இதுதான் அவரை எரிச்சல் கொள்ளும்படி செய்தது.

ஜனக் கூட்டம் நிறுத்தி பேசிக்கொண்டிருந்த அந்த போலீஸ் சூப்பரிண்டெண்ட் கோமகனைப் பார்ப்பதற்காக உள்ளே சென்றார். குதிரைகளை வண்டியில் பூட்டியாய்விட்டது என்று கோமகனிடம் அறிவிப்பதற்காக, ஒரு உதவியாளர் அதே சமயத்தில் உள்ளே சென்றார். அவர்கள் இருவரும் வெளிறிப் போயிருந்தார்கள். கோமகன் இட்ட வேலைகளை செய்து முடித்தாய்விட்டன என்ற அந்த போலீஸ் சூப்பரிண்டெண்ட் தெரிவித்துவிட்டு, கோமகனைப் பார்ப்பதற்காக முற்றத்தில் ஒரு மகா பெரிய கூட்டம் கூடியிருப்பதாகத் தெரிவித்தார்.

ஒரு வார்த்தைகூட பேசாமல் ராஸ்டாப்சைன் எழுந்து, அவசரமாக தம்முடைய சொகுசான வரவேற்பு அறைக்குச் சென்று, அங்கிருந்து வெளி வராந்தா கதவின் கைப்பிடியில் கை வைத்தார். பின்னால், அங்கிருந்து ஜன்னல் பக்கத்திற்குப் போனார். அந்த ஜன்னல் வழியாக வெளியே இருந்த கூட்டத்தை நன்றாய் பார்க்க முடிந்தது. அந்த உயரமான வாலிபன் கடுமையான தோற்றத்தோடு கூட்டத்தின் முன்னால் நின்று, கையை ஆட்டிக்கொண்டு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். ரத்தக் கறை படிந்த கொல்லனும் அவன் பக்கத்தில் முகத்தை தொங்கவிட்டு நின்றுகொண்டிருந்தான். அந்த அடைத்த ஜன்னல் வழியாக கூட்டத்தின் இரைச்சல் கேட்டுக்கொண்டிருந்தது.

'என்னுடைய வண்டி தயாராகிவிட்டதா?' என்று ஜன்னல் பக்கத்திலிருந்து திரும்பி வந்த ராஸ்டோப்சைன் கேட்டார்.

'தயாராகிவிட்டது, மேன்மை தங்கியவரே' என்று உதவியாளர் பதில் சொன்னார்.

மீண்டும் வராந்தா கதவுக்குப் பக்கத்தில் ராஸ்டாப்சைன் சென்றார்.

'அவர்கள் என்ன வேண்டுமென்று கேட்கிறார்கள்?' என்று அவர் போலீஸ் சூப்பரிண்டெண்டை கேட்டார்.

'மேன்மை தங்கியவரே, பிரஞ்சுக்காரர்களை எதிர்ப்பதற்காக உம்முடைய உத்தரவுகளின்படி அவர்கள் தயாராய் இருப்பதாக சொல்லுகிறார்கள். ஏதோ துரோகம் நடந்துவிட்டதாக கூச்சல் போடுகிறார்கள். அது ஒரு கலகக்கார கூட்டம், மேன்மை தங்கியவரே. அதிலிருந்து நான் தப்பி வருவதற்கு மிகுந்த கஷ்டப்பட்டுப் போனேன். மேன்மை தங்கியவரே, நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன்...'

'நீர் போகலாம். நான் என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றி எனக்கு சொல்லுவதற்கு நீர் அவசியமில்லை' என்று கோபமாக ராஸ்டாப்சைன் கூச்சலிட்டார்.

அந்த வராந்தா கதவுக்குப் பக்கத்தில் அவர் நின்று கூட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

'ருஷ்யாவுக்கு அவர்கள் செய்தது இதுதான்; எனக்கு அவர்கள் செய்தது இதுதான்' என்று அவர் நினைத்தார். இப்பொழுது நடந்துகொண்டிருக்கும் காரியங்களுக்காக, யாராவது ஒருவர் மீது அந்தப் பழியைப் போடுவதற்கு அவருடைய உள்ளத்தில் அடக்க முடியாத கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. முன் கோபம் உள்ளவர்களுக்கு நேருவதைப் போல, கோபத்தினால் அவர் தம் ஸ்வாதீனத்தை இழந்திருந்தார். அந்தக் கோபத்தைக் காட்டுவதற்கு ஒரு வழியைத் தேடிக் கொண்டிருந்தார். 'இதோ அந்தக் கூட்டம் நிற்கிறது. இவர்கள்தான் மக்களின் கழிகடைகள்' என்று அவர் அந்தக் கூட்டத்தை நோக்கியபோது நினைத்தார். 'அவர்களுடைய முட்டாள்தனத்தினால் இந்த கீழ் மக்களை கிளப்பிவிட்டு விட்டார்கள். இப்பொழுது இந்தக் கூட்டத்திற்கு ஒரு பலி வேண்டும்' என்று, அங்கிருந்த உயரமான வாலிபன் தன் கையை ஆட்டிக்கொண்டிருந்ததைக் கண்டவுடன் நினைத்தான். அவரும் ஒரு பலியையே விரும்பிக் கொண்டிருந்தபடியால், தமது கோபம் முழுவதையும் அந்தப் பலியிடம் காட்ட விரும்பியபடியால், அவருக்கு இந்த நினைப்பு தோன்றியது.

'வண்டி தயாராய் விட்டதா?' என்று மீண்டும் அவர் கேட்டார்.

'ஆம், மேன்மை தங்கியவரே. வெரெஷ்சாகினைப் பற்றி உம்முடைய உத்தரவுகள் என்ன? அவன் முற்ற மண்டபத்தில் காத்துக் கொண்டிருக்கிறான்' என்று உதவியாளர் கூறினார்.

'ஆ' என்று, எதிர்பாராத விதமாக ஒரு நினைப்பு ஞாபகத்திற்கு வந்ததைப் போல, ராஸ்டாப்சைன் கூச்சலிட்டார்.

வேகமாக கதவைத் திறந்து உறுதியோடு வராந்தாவிற்குப் போனார். அங்கு நடந்துகொண்டிருந்த பேச்சுக்கள் உடனே நின்றன. தலையிலிருந்த தொப்பிகளை எல்லாரும் கழற்றி கோமகனை நோக்கினார்கள்.

'காலை வந்தனம், வாலிபர்களே' என்று கோமகன் வேகமாக உரத்த சப்தத்தில் பேசினார். 'நீங்கள் இங்கு வந்ததற்காக நன்றி. நான் இன்னும் ஒரு வினாடியில், இதோ, உங்களுடன் வெளியே வருவேன். ஆனால், இந்த துஷ்டனைப் பற்றிய விஷயத்தை முதலில் முடிவு செய்யவேண்டும். மாஸ்கோவிற்கு நாசம் விளைவித்த இந்த துஷ்டனை தண்டிக்கவேண்டும்.'

கோமகன் வேகமாக மீண்டும் அறைக்குள் வந்து கதவை 'தடார்' என்று சாத்தினார்.

அந்தக் கூட்டத்தில் திருப்தியும், சந்தோஷமும் காணப்பட்டது. 'எல்லா துஷ்டர்களையும் அவர் ஒழித்துவிடுவார், நீங்கள் பார்க்கப் போகிறீர்கள். பிரஞ்சுக்காரர்களைப் பற்றி ஏதோ சொன்னீர்கள்... சட்டம் என்றால் என்ன என்பதை அவர் இப்பொழுது உங்களுக்குக் காட்டப் போகிறார்' என்று, அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் நம்பிக்கை இழந்ததற்காக, ஒருவரை ஒருவர் குறை கூறுவதைப் போல பேசிக்கொண்டிருந்தார்கள்.

சில நிமிஷங்களுக்குப் பின்னால், ஒரு அதிகாரி வேகமாக முன்வாசல் வழியாக வெளியே வந்து ஒரு உத்தரவு கொடுத்தார். உடனே குதிரை வீரர்கள் ஒரு வரிசையாக நின்றார்கள். வராந்தாவிலிருந்த கூட்டம் ஆவலோடு முற்ற மண்டபத்திற்கு நகர்ந்தது. ராஸ்டாப்சைன் வேகமாக கோபத்தோடு வெளியே வந்து யாரோ ஒருவரைத் தேடுவதைப் போல சுற்றிலும் பார்த்தார்.

'அவனை எங்கே?' என்று அவர் கேட்டார். அவர் பேசிக் கொண்டிருந்தபோது, இரண்டு குதிரை வீரர்களுக்கு மத்தியில் ஒரு வாலிபன் வீட்டின் முக்கைச் சுற்றி வந்து கொண்டிருப்பதைக் கண்டார். அவன் கழுத்து ஒல்லியாக நீண்டு இருந்தது. மொட்டையடிக்கப் பட்ட அவன் தலையில் சிறிது ரோமம் வளர்ந்திருந்தது. ஒரு காலத்தில் அழகாய் இருந்த கந்தலான ஒரு நீல நிறக் கோட்டை அணிந்திருந்தான். கைதிகள் தரிக்கும் ஒரு அழுக்கடைந்த சணல் கால் சட்டையை அணிந்திருந்தான். அவனுடைய மெல்லிய, பலவீனமான கால்களில் பலமான சங்கிலிகள் போடப்பட்டிருந்தன. அவனுடைய தள்ளாடும் நடைக்கு அவை இன்னமும் இடையூறாய் இருந்தன.

'ஆ' என்று ராஸ்டாப்சைன் சொல்லி, அந்த வாலிபனை பார்த்துக் கொண்டிருந்த பார்வையை வேகமாகத் திருப்பி, முற்ற மண்டபத்தின் கடைசி படியைச் சுட்டிக் காட்டினார். 'அவனை இங்கே கொண்டு வாருங்கள்' என்றார்.

அவர் குறிப்பிட்ட இடத்திற்கு அந்த வாலிபன் சங்கிலிகளின் சப்தத்தோடு விகாரமாய் வந்து நின்றான். அவனுடைய கழுத்தில் உரசிக்கொண்டிருந்த கோட்டின் கழுத்துப் பட்டியை ஒரு விரலால் பிடித்துக்கொண்டு, அவனுடைய நீண்ட கழுத்தை இப்படியும் அப்படியும் ஆட்டி பெருமூச்சு விட்டு, வேலை செய்து பழக்கப்படாத அவனுடைய மெல்லிய கைகளை கட்டிக்கொண்டு பணிவோடு நின்றான்.

அந்த வாலிபன் அந்தக் கடைசி படியில் வந்து நிற்கும்போது பல வினாடிகள் அங்கே மௌனம் நிலவியது. கூட்டத்தில் பின்னால் நின்றவர்கள்தான், முன்னால் அந்த இடத்திற்கு வரவேண்டும் என்பதற்காக தள்ளிக்கொண்டும், பெருமூச்சு விட்டுக்கொண்டும், காலடி சப்தம் செய்துகொண்டும் இருந்தார்கள்.

அந்த வாலிபன் தன்னுடைய இடத்தில் வந்து சேருகிறவரையில், ராஸ்டாப்சைன் முகம் சுளித்துக்கொண்டும், தமது கையால் முகத்தை தேய்த்துக்கொண்டும் நின்றுகொண்டிருந்தார்.

'வாலிபர்களே' என்று கணீரென்ற குரலில் அவர் பேசினார். 'இந்த மனிதன், வெரெஷ்சாகின் ஒரு அயோக்கியன். இவனுடைய செய்கையினால்தான் மாஸ்கோ அழிந்து கொண்டிருக்கிறது.'

அந்த வாலிபன் முன்னால் சிறிது குனிந்து, பணிவோடு தனது விரல்களை கோர்த்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தான். அவனுடைய பலஹீனமான வாலிப முகம், மொட்டையடிக்கப் பட்ட அவன் தலையினால் விகாரமடைந்து, நம்பிக்கையற்ற விதமாக கீழே தொங்கிக்கொண்டிந்தது. கோமகனின் முதல் வார்த்தைகளைக் கேட்டதும், தான் ஏதோ சொல்லவோ, அல்லது அவருடைய கண்களைப் பார்க்கவோ விரும்பியதைப் போல, அவன் தன் தலையை சிறிது உயர்த்தி அவரைப் பார்த்தான். அவனுடைய மெல்லிய கழுத்திலிருந்து பின் காதுவரையில் ஓடிக்கொண்டிருந்த ஒரு நரம்பு, கயிறைப்போல புடைத்து நீல நிறமாக மாறியது; திடீரென்று அவன் முகம் சிவந்தது.

எல்லாருடைய கண்களும் அவன் மீது பதிந்தன. அவன் கூட்டத்தைப் பார்த்தான். அவர்களின் முகத்தில் காணப்பட்ட தோற்றம் அவனுக்கு அதிக நம்பிக்கையைக் கொடுப்பதாகத் தோன்றியது. அவன் சங்கோஜத்தோடும், துக்கத்தோடும் குறுநகை

காட்டி தனது தலையை தொங்கவிட்டான். தான் நிற்பது உறுதியாக இருக்கும்படி தனது பாதங்களை ஒழுங்காய் வைத்தான்.

'அவன் அவனுடைய நாட்டையும் ஜாரையும் காட்டிக் கொடுத்து விட்டான். போனபார்ட்டோடு அவன் சேர்ந்துகொண்டான். இத்தனை ருஷ்யர்களில் இவன் ஒருவன் தான் ருஷ்யாவின் பெயரை அவமானப் படுத்திவிட்டான். மாஸ்கோ நாசமாகும்படி செய்தான்' என்று ராஸ்டாப்சைன் கடுமையான, உறுதியான தொனியில் பேசி, திடீரென்று வெரெஷ்சாகினை நோக்கினார். அவன் முன் மாதிரியே பணிவான நிலைமையில் நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்தும் கோபமடைந்தவரைப்போல, அவர் தமது கையை உயர்த்தி கூட்டத்தைப் பார்த்து கூச்சலிட்டார்:

'எம்மாதிரி அவனை நடத்தவேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களோ, அம்மாதிரி செய்துவிடுங்கள்; அவனை உங்களிடம் ஒப்புவிக்கிறேன்.'

அந்தக் கூட்டம் அமைதியாக இருந்தது. அதில் இருந்தவர்கள், ஒருவரை ஒருவர் நெருக்கிக்கொண்டிருந்தார்கள். அந்த புழுக்கமான சூழ்நிலையில் மூச்சு விடுவதற்காக ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டும், நின்ற இடத்திலிருந்து நகர முடியாமலும், ஏதோ இனம் தெரியாத, புத்திக்கு எட்டாத, பயங்கரமான ஒன்று நேரப்போவதை எதிர்பார்த்துக்கொண்டும் அங்கு நின்றுகொண்டிருப்பது சகிக்க முடியாததாய் இருந்தது. தங்களுக்கு முன்னால் நடப்பவைகளைப் பார்த்துக்கொண்டும், கேட்டுக்கொண்டும் நின்ற முன் வரிசைக் காரர்கள் எல்லாரும், அவர்களுடைய கண்களும் வாய்களும் திறந்து நிற்க, பின்னாலிருந்து தள்ளுகிற கூட்டத்தை நிறுத்தி வைப்பதற்கு தங்கள் முழு பலத்தையும் உபயோகித்தார்கள்.

'அவனை அடியுங்கள்...ருஷ்யாவின் பெயரை அவமானம் செய்ய விடாமல் அந்த துரோகியை அழியுங்கள்; அவனை வெட்டுங்கள்; நான் உத்தரவிடுகிறேன்' என்று ராஸ்டாப்சைன் கூச்சலிட்டார்.

அவர் பேசிய வார்த்தைகளைவிட, அவருடைய கோபமான தொனியே மக்களுக்கு அதிகமாய் கேட்டது. அதைக் கேட்ட கூட்டம் முனங்கிக்கொண்டு முன்னால் தள்ளியது. ஆனால், மீண்டும் தயங்கி நின்றது.

'கோமகனே' என்று பீதியுற்ற வெரெஷ்சாகினின் குரலானது அந்த க்ஷணநேர நிசப்தத்தில் எடுப்பாய் கேட்டது. 'கோமகனே, நம் இருவருக்கும் மேலாக ஒரு கடவுள் இருக்கிறார்...' அவன் தனது தலையை உயர்த்தினான். மீண்டும் அவனுடைய மெலிந்த

கழுத்திலிருந்த நரம்பில் ரத்தம் சேர்ந்து புடைத்தது. அவனுடைய முகம் திடீரென்று சிவந்து மாறியது.

அவன் என்ன சொல்லவேண்டும் என்று விரும்பினானோ, அதைச் சொல்லி முடிக்கவில்லை.

'அவனை வெட்டித் தள்ளுங்கள், நான் உத்தரவிடுகிறேன்...' என்று ராஸ்டாப்சைன் திடீரென்று வெரெஷ்சாகினைப் போல முகம் வெளிறி கூச்சலிட்டார்.

'கத்திகளை உருவுங்கள்' என்று குதிரை வீரர்களின் அதிகாரி கூச்சலிட்டுவிட்டு, தம்முடைய கத்தியை உருவினார்.

அந்தக் கூட்டத்தில் மீண்டும் பலமானதொரு நெருக்கடி ஏற்பட்டு, முன்னால் நின்றவர்களை முற்ற மண்டபத்து படிக்கட்டு வரைபோகும்படி செய்தது. முகத்தில் உணர்ச்சியற்ற தோற்றத்தோடு கூடிய அந்த உயரமான வாலிபன், கடுகடுப்போடு தனது கையை உயர்த்திக்கொண்டு வெரெஷ்சாகினுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான்.

'அவனை வெட்டுங்கள்' என்று அந்தக் குதிரைப் படை அதிகாரி சொல்லியதானது வாய்க்குள் முனங்குவதைப்போல் இருந்தது.

அந்த வீரர்களில் ஒருவன் கோபத்தினால் முகம் சுளித்து, தன்னுடைய கத்தியின் மழுங்கலான பாகத்தால் வெரெஷ்சாகினின் தலையில் அடித்தான்.

'ஆ' என்று வெரெஷ்சாகின் ஆச்சரியத்தோடு பலமாய் கூச்சலிட்டான். தனக்கு இம்மாதிரி செய்யப்படுவதின் காரணத்தை அறியாதவனைப் போல, பீதியுற்ற நோக்கோடு சுற்றிலும் பார்த்தான். அதே மாதிரியான ஆச்சரியமும் பீதியும் அந்தக் கூட்டத்தில் பரவியது. 'ஓ கடவுளே' என்று ஒரு துக்கமான குரல் ஒலித்தது.

ஆச்சரியத்தினால் வெரெஷ்சாகின் கூச்சலிட்ட பின்பு, அவனிடமிருந்து வலியினால் ஏற்படும் ஒரு வருத்தக் குரல் கிளம்பியது. அந்தக் குரல்தான் அவனக்கு வினையாக முடிந்தது. மனித உணர்ச்சியின் வேலியானது அந்தக் கூட்டத்தை அவதுவரை நிறுத்தி வைத்திருந்தது; திடீரென்று அந்த வேலி முறிந்தது. குற்றத்தை ஆரம்பித்து விட்டார்கள்; அதை இப்பொழுது பூர்த்தி செய்தாகவேண்டும். அவனுடைய துக்கமாமன முனக்கங்களெல்லாம், அந்தக் கூட்டத்தின் பயமுறுத்தலான, கோபமான கூச்சல்களில் அமிழ்ந்துவிட்டன. ஏழாவது அலைதான் ஒரு மூழ்குகிற கப்பலுக்கு கடைசி அலையாக அமைந்து அதை மூழ்கடிக்கும். அதேமாதிரி ஒரு தடுக்க முடியாத கடைசி அலை, பின்

பக்கத்தில் கிளம்பி முன்னால் வந்து சேர்ந்து எல்லாரையும் நிலை குலையும்படி செய்தது. தலையில் முதலாவது அடித்த வீரன் மீண்டும் அடிப்பதற்கு தயாரானான். வெரெஷ்சாகின் பீதியடைந்து கூச்சலிட்டு, தன்னுடைய தலையை கைகளால் மறைத்துக்கொண்டு கூட்டத்தை நோக்கி ஓடினான். முன்னால் நின்ற அந்த உயரமான வாலிபன் மீது தடுமாறினான். அவன் தனது கைகளால் வெரெஷ்சாகினின் மெல்லிய கழுத்தைப் பிடித்து, காட்டுத்தனமாக கூச்சலிட்ட பின்பு, இருவரும் முன்னால் தள்ளிக்கொண்டிருக்கும் அந்த கூட்டத்தின் காலடியில் விழுந்தார்கள்.

சிலர் வெரெஷ்சாகினை அடித்துப் பிய்த்தார்கள். வேறு சிலர் அந்த நெட்டையான வாலிபனை அடித்தார்கள். அந்தக் கூட்டத்தின் காலடிகளில் அகப்பட்டு நசுங்கிய அந்தஇருவரின் கூச்சல்களும், அந்த நெட்டையான வாலிபனைக் காப்பாற்ற முயன்றவர்கள் போட்ட கூச்சல்களும், கூட்டத்தின் கோபத்தை இன்னும் அதிகரித்தன. அந்த நெட்டையான வாலிபன் அடிப்பட்டு, அவன் உடம்பெல்லாம் ரத்தம் சொட்டிக்கொண்டிருந்தது. வெகுநேரம் குதிரை வீரர்கள் முயற்சி செய்த பின்புதான் அவனைத் தப்புவிக்க முடிந்தது. அவன் செத்துப் போகிறமாதிரி அவ்வளவு பலமாக அடிபட்டுப் போனான். வெகுநேரம் வரையில் தாங்கள் ஆரம்பித்த வேலையை முடித்துவிட வேண்டுமென்று அசுர வேகத்தில் அந்தக் கூட்டம் முயற்சி செய்து வெரெஷ்சாகினை குத்தியும், நெருக்கியும், பிய்த்தும் வந்தபோதிலும் அவனைக் கொல்ல முடியவில்லை. ஏனெனில், அந்த கூட்டம் முழுவதும் நாலா பக்கங்களிலிருந்தும் நெருக்கிக் கொண்டிருந்தபடியால், மத்தியில் அகப்பட்டவர்களும், அந்தக் கூட்டத்தின் அசைவுகளில் அகப்பட்டுக்கொண்டு முன்னும் பின்னும் ஆடிக்கொண்டிருந்த படியால், அவனைக் கொல்லுவதோ, அல்லது அவன் தப்பிப் போகும்படி விடுவதோ அசாத்தியமாய் இருந்தது.

'அவனை கோடரியால் தாக்குங்கள்... நசுக்கிவிட்டீர்களா?... துரோகி, அவன் கிறிஸ்துவை காட்டிக் கொடுத்துவிட்டான். இன்னமும் உயிரோடு இருக்கிறான்... பிடிவாதக்காரன்... அவனுக்குச் சரியாகக் கொடுங்கள். சித்திரவதைதான், ஒரு திருடனுக்கு சரியான தண்டனை. அரிவாளை உபயோகப் படுத்துங்கள்... என்ன - இன்னும் உயிரோடு இருக்கிறானா?'

அவனுடைய துடிப்புகள் நின்ற பின்புதான், அவனுடைய கூக்குரல் மரணக் குரலாக மாறிய பின்புதான், கீழே விழுந்து ரத்தம் சொட்டிக்கொண்டிருந்த அந்த உடலைவிட்டு மக்கள் வேகமாக இடம் மாற ஆரம்பித்தார்கள். ஒவ்வொருவராக அங்கே வந்து,

அங்கே செய்யப்பட்டதைப் பார்த்து, பீதியோடும் கண்டனத் தோடும் ஆச்சரியத்தோடும் அங்கிருந்து மீண்டும் மீண்டும் பின்னால் தள்ளிக் கொண்டு போனார்கள்.

'ஓ கடவுளே! காட்டு மிருகங்கள் மாதிரி மக்கள் இருக்கிறார்கள்! அவன் எப்படி உயிரோடு இருக்க முடியும்?' என்று அந்த கூட்டத்திலிருந்து குரல்கள் கேட்டன. 'சின்னஞ்சிறு வாலிபனாய் இருக்கிறான். ஒரு வியாபாரியின் மகனாய் இருக்கலாம். எப்பேர்ப்பட்ட மனிதர்கள்!... அவன் சரியான ஆள் அல்லவென்று அவர்கள் சொல்லுகிறார்கள். அதற்கு என்ன அர்த்தம்?... ஓ கடவுளே, மற்றொருவனையும் அங்கே அடித்துப் போட்டு விட்டார்கள் - அவனை அநேகமாக முடித்துவிட்டதாக அவர்கள் சொல்லுகிறார்கள்... ஓ, இந்த ஜனங்கள்... பாவம் செய்வதற்கு இவர்கள் பயப்படுவதில்லையா?' என்று, நீண்ட கழுத்தில் பாதி அறுந்து, முகத்தில் ரத்தமும், தூசியும் படிந்து உருமாறியிருந்த அந்த உயிரற்ற உடலைக் கண்டு வருத்தம் அடைந்து, அதே கூட்டம் இப்பொழுது இம்மாதிரி பேசியது.

மேன்மை தங்கியவரின் வீட்டு முற்றத்தில் ஒரு பிரேதம் கிடப்பது உசிதமல்ல என்று கடமையை உணர்ந்த ஒரு போலீஸ் அதிகாரி அதை அப்புறப்படுத்தும்படி குதிரை வீரர்களுக்குச் சொன்னார். இரண்டு குதிரை வீரர்கள் உருக்குலைந்த அதன் கால்களைப் பற்றி தரையில் இழுத்துக்கொண்டு போனார்கள். குத்தப் பட்ட, புழுதி படிந்த, நீளமான கழுத்தைக் கொண்ட அதன் தலை, அந்த உடலை இழுத்துக் கொண்டு போகும்போது, இங்கும் அங்கும் ஆடிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து கூட்டம் பயந்து பின் வாங்கியது.

வெரெஷ்சாகின் கீழே விழுந்ததும், அங்கிருந்த கூட்டம்காட்டு மிராண்டித்தனமாக கூச்சலிட்டு அவனைச் சுற்றி நெருங்கியவுடன், ராஸ்டாப்சைன் திடீரென்று வெளிறிப் போனார். அவருடைய வண்டி காத்துக்கொண்டிருக்கிற இடமாகிய பின் வாசலுக்கு அவர் போகாமல், தலையை கீழே குனிந்து, எங்கே எதற்காகப் போகிறோம் என்பதை அறியாமல், வேகமாக நடந்து கீழேயுள்ள அறைகளுக்கு ஆளோடி வழியாகப் போனார். அவருடைய முகம் வெள்ளையாய் இருந்தது. அவருடைய கீழ் நாடி படபடவென்று சுளித்துக் கொண்டதை அவரால் கட்டுப்படுத்த முடியவில்லை.

'இந்த வழியாக போகவேண்டும், மென்மை தங்கியவரே... நீர் எங்கே போகிறீர்?... இந்த வழியாக வாரும், தயவு செய்து...' என்று அவருக்குப் பின்னால் ஒரு பீதியுற்ற, நடுநடுங்கிய குரல் கேட்டது.

கோமகன் ராஸ்டாப்சைனினால் பதில் சொல்ல முடியவில்லை. அவருக்குக் காட்டிய பாதை வழியாக அப்படியே திரும்பிப்

போனார். பின் வாசலில் அவருடைய பிரயாண வண்டி நின்று கொண்டிருந்தது. அந்த இடத்தில்கூட அந்தக் கூட்டம் ஊளையிடும் சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது. அவர் அவசரமாக வண்டிக்குள் அமர்ந்து, சாக்கோல் நிக்கியில் உள்ள தமது கிராமாந்திர வீட்டிற்குப் போகும்படி வண்டிக்காரனிடம் சொன்னார்.

மியாஸ்நைட்ஸ்கி தெருவிற்கு அவருடைய வண்டி வந்ததும், அந்த கூட்டத்தின் இரைச்சல் அங்கே கேட்கவில்லை. அப்பொழுதுதான் கோமகன் தாம் செய்த காரியத்திற்கு வருந்த ஆரம்பித்தார். தம்முடைய சிப்பந்திகளின் முன்பாக தாம் பரபரப்படைந்து பீதியுற்றதை காட்டும்படி நேரிட்டதை அவர் நினைத்தபோது, அவருக்கு மிகவும் அதிருப்தியாய் இருந்தது. 'ஜனக்கூட்டம் பயங்கரமானது - அருவருக்கத் தக்கது' என்று பிரஞ்சு மொழியில் தமக்குள் சொல்லிக்கொண்டார் 'மாமிசத்தைத் தவிர, வேறு எதனாலும் திருப்தி அடையாத ஓநாய்களைப் போன்றவர்கள்.' 'கோமகனே, நம் இருவருக்கும் மேலாக ஒரு கடவுள் இருக்கிறார்' என்று வெரெஷ்சாகின் சொல்லிய வார்த்தைகள் திடீரென்று அவருக்குத் தோன்றின. உடனே ஒரு அருவருப்பான நடுக்கம் அவருடைய முதுகு எலும்பில் தோன்றியது. இந்த உணர்ச்சியெல்லாம் ஒரு வினாடிதான் இருந்தது. தம்முடைய இந்த நிலைமையைப் பார்த்து தம்மையே இகழ்ச்சியான புன்னகையோடு கோமகன் ராஸ்டாப்சைன் பார்த்துக்கொண்டார். 'எனக்கு வேறு கடமைகள் இருக்கின்றன. மக்களை திருப்தி செய்தாகவேண்டும். பொதுஜன நன்மைக்காக எத்தனையோ பேர் அழிந்து போனார்கள்; இன்னமும் அழிந்து கொண்டிருக்கிறார்கள்' என்று நினைத்தார். தம்முடைய குடும்பத்திற்கும், தம்மிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கும் பட்டணத்திற்கும், தமக்கும் தாம் செய்யவேண்டிய கடமைகளைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்தார். தமக்கு என்றால், தியோடோர் வாசைலிவிச் ராஸ்டாப்சைன் அல்ல (பொதுஜன நன்மைக்காக தியோடோர் வாசைலிவிச் ராஸ்டாப்சைன் தம்மையே தியாகம் செய்துகொள்ளுவதாக அவர் மனோராஜ்யம் செய்தார்); ஆனால், ஒரு கவர்னர் என்ற முறையிலும், அதிகார பீடத்தினுடையவும், ஜாரினுடையவும் பிரதிநிதி என்ற முறையிலுமே, 'தமக்கு' என்ற வார்த்தையை அவர் உபயோகித்தார். 'நான் தியோடோர் வாசைலிவிச் என்ற முறையில் மட்டும் இருப்பேனானால், என்னுடைய செய்கை முற்றிலும் வேறானதாக இருக்கும்; ஆனால், ஒரு சேனாதிபதி என்ற முறையில் என்னுடைய உயிரையும், கௌரவத்தையும் காப்பாற்ற வேண்டியது என்னுடைய கடமையாகும்.' அவருடைய வண்டியிலுள்ள வில்களின்

அசைவினால் மெதுவாக ஆடிக்கொண்டிருந்தார். அந்தக் கூட்டத்தின் பயங்கரமான சப்தங்கள் இப்பொழுது அவருக்குக் கேட்கவில்லை. ஸ்தூல அமைதி அவருக்கு வளர்ந்தது. அப்படி ஏற்படும்போது, எப்பொழுதும் நடப்பதைப் போல அவருடைய மனமும் ஏன் அமைதியை பெறக்கூடாது என்று, அதற்கான வழிகளை கண்டுபிடிக்க அவருடைய மனம் வேலை செய்தது. ராஸ்டாப்சைனை அமைதிகொள்ளும்படி செய்த அந்த சிந்தனை புதிதான ஒன்று அல்ல; உலகம் தோன்றிய காலத்திலிருந்து மக்கள் ஒருவரை ஒருவர் கொல்ல ஆரம்பித்ததிலிருந்து அது இருந்து வருகிறது. அம்மாதிரி சிந்தனையை மேற்கொண்டு தனது மனதை திருப்தி செய்து கொள்ளாமல், எவனும் தன்னுடைய இனத்தைச் சேர்ந்தவனைக் கொன்றதில்லை. அந்த சிந்தனை என்பது இதுதான். அதாவது 'பொதுஜன நன்மை.'

ஆவேசத்தினால் நிதானம் இழக்காதவன், இந்த 'பொதுஜன நன்மை'யை ஒப்புக்கொள்ளுவதில்லை. ஆனால், கொலை செய்தவன் தான், எப்பொழுதும் இந்த பொதுஜன நன்மை எங்கே இருக்கிறது என்பதை அறிவான். இப்பொழுது ராஸ்டாப்சைனும் அதை அறிந்துகொண்டார்.

அவருடைய மனதில் தோன்றிய சிந்தனைகள், அவர் செய்த காரியங்களுக்காக அவரைக் கண்டிக்கவில்லை; அது மட்டுமல்ல, அவர் தாம் செய்த காரியங்களுக்காக திருப்தியடைந்தார். அதாவது, ஒரு குற்றவாளியை தண்டிக்கவும், அதே சமயத்தில் அந்த ஜனக் கூட்டத்தைத் திருப்தி செய்யவும் ஒரு சௌகர்யமான சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டதற்காக திருப்தி அடைந்தார்.

'வெரெஷ்சாகினை விசாரனை செய்து மரண தண்டனை விதித்தார்கள்' என்று ராஸ்டாப்சைன் நினைத்தார். (ஆனால், உண்மையில் அவனை விசாரித்த செனெட் சபை அவனுக்குக் கடுங்காவல் தண்டனைதான் கொடுத்தது). 'அவன் ஒரு துரோகி; ஒரு ஒற்றன். அவனுக்கு தண்டனை கொடுக்காமல் நான் விட்டுவிட முடியாது. ஆகவே, ஒரே கல்லினால் இரண்டு பறவைகளைக் கொன்றேன்; ஜனக்கூட்டத்தை திருப்தி செய்வதற்காக அதற்கு ஒரு பலியைக் கொடுத்தேன்; அதே சமயத்தில் அந்த துஷ்டனுக்கு தண்டனையும் கொடுத்தேன்.'

தம்முடைய கிராமாந்திர இல்லத்திற்கு வந்த பின்பு, வீட்டுக் காரியங்களைப் பற்றி என்னென்ன செய்யவேண்டும் என்று உத்தரவுகள் கொடுத்தார். அதன் பின்னால் கோமகன் பூரணமாக அமைதி பெற்றார்.

அரை மணி நேரம் கழித்து, வேகமாக ஓடக்கூடிய குதிரைகள் பூட்டிய தமது வண்டியில் ஏறி சாக்கோல்நிக்கி மைதானத்தில் போய்க்கொண்டிருந்தார். நடந்து போனதைப்பற்றி அவர் எதுவும் நினைக்காமல், நடக்கப்போகிற காரியங்களைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தார். குட்டுஜோவ் இருப்பதாக அவர் கேள்விப்பட்ட யாவுஜா பாலத்தை நோக்கி போய்க்கொண்டிருந்தார். குட்டுஜோவ் ஏமாற்றியதற்காக அவரை கண்டிக்கும் பொருட்டு கோபமான, குத்தலான வார்த்தைகளை தம்முடைய மனதில் தயாரித்துக் கொண்டிருந்தார். மாஸ்கோவை கைவிட்டதனால் ஏற்படக்கூடிய துயரங்களுக்கும், ருஷ்யாவை நாசமாகும்படி (ராஸ்டாப்சைன் நினைத்தபடி) செய்ததற்கும் எல்லா பொறுப்புகளும் அந்த முதியவருடைய தலையிலேயே விழும் என்பதை அந்த கிழட்டு நரி உணரும்படி தாம் செய்யப் போவதாகக் கூறிக்கொண்டார். குட்டுஜோவிடம் எம்மாதிரி பேசவேண்டும் என்பதை முன்னதாகவே தயாரித்துக்கொண்ட பின்பு, கோபமாக கடுமையான தோற்றத்தோடு, ராஸ்டாப்சைன் தமது வண்டியில் அமர்ந்தபடியே, இப்பக்கமும் அப்பக்கமும் பார்த்துக்கொண்டே போனார்.

அந்த சாக்கோல்நிக்கி வெட்டவெளி முழுவதும் ஆள் நடமாட்டம் இல்லாமல் இருந்தது. அதன் கோடியில் அனாதை விடுதிகளுக்கும், பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கும் முன்பாக சிலர் காணப்பட்டார்கள். அவர்கள் வெள்ளை ஆடை தரித்திருந்தார்கள். அவர்களைப் போல வேறு பலர் அந்த வெட்டவெளியில் தனித் தனியாக நடந்து கூச்சலிட்டுக்கொண்டும், கைகளை ஆட்டிக் கொண்டும் போனார்கள்.

அம்மாதிரியானவர்களில் ஒருவன், கோமகன் ராஸ்டாப்சைனுடைய வண்டி போய்க்கொண்டிருந்த பாதையை கடப்பதற்காக ஓடிவந்தான். கோமகனும், அவருடைய வண்டிக்காரனும், அவருடைய குதிரை வீரர்களும் ஆச்சரியமும் பீதியும் கொண்டு, அந்த விடுதலையான பைத்தியக்காரர்களையும், முக்கியமாக தங்களை நோக்கி ஓடிவரும் பைத்தியக்காரனையும் பார்த்தார்கள்.

இங்கும் அங்கும் ஆடிக்கொண்டு அவனுடைய சட்டை காற்றில் பறக்க அந்த பைத்தியக்காரன் ராஸ்டாப்சைனை வெறித்துப் பார்த்துக்கொண்டு, தன்னுடைய கரகரப்பான தொனியில் எதையோ கூறிக்கொண்டு, வண்டியை நிறுத்தும்படி சைகை காட்டி உக்கிரத்தோடு ஓடிவந்தான். அவனுடைய இருண்ட முகம், மெல்லியதாகவும் மஞ்சளாகவும் இருந்தது. அவனுடைய தாடி,

ஒழுங்கற்ற முறையில் வெட்டப்பட்டதாக இருந்தது. அவனுடைய கரு விழிகள், மஞ்சளான வெள்ளையோடு சேர்ந்து, அடி இமைகளையொட்டி நிதானமில்லாமல் உருண்டு கொண்டிருந்தன.

'நிறுத்து, குதிரையை இழுத்துப் பிடி, நான் சொல்லுகிறேன்' என்று அவன் காது செவிடுபடும்படியான தொனியில் கத்தினான். மீண்டும் அவன் மூச்சு விடாமல், அழுத்தமான தொனியில் கைகளை ஆட்டிக்கொண்டு எதையோ கத்தினான். வண்டிக்கு எதிராக ஓடி வந்து, பின்னால் வண்டியோடு வண்டியின் பக்கத்தில் ஓட ஆரம்பித்தான்.

'மூன்று தடவைகள் என்னை அவர்கள் கொலை செய்தார்கள். மூன்று தடவைகளிலும் மரணத்திலிருந்து நான் உயிர் பெற்று எழுந்தேன். என்னை அவர்கள் கல்லால் அடித்தார்கள். சிலுவையில் அறைந்தார்கள்... நான் எழுந்திருப்பேன்... எழுந்திருப்பேன்... எழுந்திருப்பேன். என்னுடைய உடலை அவர்கள் சின்னா பின்னப் படுத்தினார்கள். கடவுகளின் ராஜ்யம் கவிழ்த்து விடப்படும்... மூன்று தடவைகள் நான் அதை கவிழ்ப்பேன். மூன்று தடவைகள் அதை மீண்டும் ஸ்தாபிப்பேன்' என்று அவன் கூச்சலிட்டு, வரவர தனது தொனியை உயர்த்திக்கொண்டே போனான்.

கோமகன் ராஸ்டாப்சைன் அந்த ஜனக் கூட்டம் வெரெஷ்சாகினை நெருங்கியபோது எப்படி வெளிறினாரோ, அதே மாதிரி இப்பொழுதும் வெளிறிப்போனார். அவர் திரும்பிக் கொண்டார். 'ஹோ, ஹோ, வேகமாய் போ' என்று அவர் நடுங்கிய குரலில் தமது வண்டிக்காரனைப் பார்த்து கூச்சலிட்டார். குதிரைகள் எவ்வளவு வேகமாக இழுக்க முடியுமோ, அவ்வளவு வேகமாக தரை மீது வண்டி பறந்து கொண்டிருந்தது. வெகு நேரமாக அந்த பைத்தியக்காரனின் கூச்சல்கள் தொலைவில் வரவர மெதுவாக கோமகன் ராஸ்டாப்சைனுக்கு கேட்டுக் கொண்டிருந்தன. அவருடைய கண்களின் முன்பாக, ஆச்சரியம் அடைந்த, பீதியுற்ற 'அந்த துரோகி'யின் ரத்தக்கறை பட்ட முகம் தோன்றியது. வேறு எதுவும் அவருடைய கண்களுக்குத் தோன்றவில்லை.

அந்த மனச் சித்திரம், தமது உள்ளத்தில் ஆழமாக பதிந்துவிட்டது என்று ராஸ்டாப்சைன் நினைத்தார். அந்த ரத்தக்கறை படிந்த சித்திரம் காலத்தினால் கூட தமது மனதிலிருந்து அழிபட முடியாதது என்பதை இப்பொழுது அவர் உணர்ந்தார். தம்முடைய மனதிலேயே அந்த பயங்கரமான நினைவு, முன்னிலும் அதிக குரூரத்தோடும், துன்பத்தோடும், தமது ஆயுள்வரையில் நீடித்து நிற்கும் என்று அவர் உணர்ந்தார். 'அவனை வெட்டித் தள்ளுங்கள். நான் உத்தர

விடுகிறேன்...' என்று அவர் சொல்லிய வார்த்தைகள் அவருடைய காதுகளில் இன்னமும் ஒலித்துக்கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது.

'நான் ஏன் அந்த வார்த்தைகளைப் பேசினேன்? ஏதோ தற்செயலாக நான் அவைகளைப் பேசிவிட்டேன்... நான் அவைகளை சொல்லி இருக்கவேண்டிய அவசியமில்லை' என்று அவர் நினைத்தார். 'அப்படியானால், எதுவுமே நடந்திருக்காது'. முதலில் பீதியுற்று, பின்னால் கோபங்கொண்டு, முதலாவது அடித்த அந்த குதிரை வீரனின் முகமும், கிழிந்த சட்டை போட்டுக் கொண்டிருந்த அந்த வாலிபன் மௌனமாகவும் பீதியுற்ற கண்டனத்தோடு தம்மை நோக்கிய பேர்வையும் அவருக்கு இப்பொழுது தோன்றின. 'என்னுடைய நன்மைக்காக நான் அதைச் செய்யவில்லை. அம்மாதிரி நடப்பதற்கு நான் கடமைப் பட்டிருந்தேன்... அந்த ஜனக் கூட்டம், அந்த துரோகி... பொதுஜன நன்மை' என்று அவர் நினைத்தார்.

யாவுஜா பாலத்தில் துருப்புகளின் நெருக்கடி இன்னமும் இருந்துகொண்டிருந்தது. உஷ்ணம் அதிகமாய் இருந்தது. குட்டுஜோவ் சோர்வோடும், முகம் சுளித்தும், பாலத்திற்குப் பக்கத்தில் ஒரு பெஞ்சில் அமர்ந்து, தமது கை சவுக்கினால் மணலில் கிறுக்கிக்கொண்டிருந்தார். இச்சமயத்தில் ஒரு பிரயாண வண்டி கிரீச் சப்தத்தோடு அங்கு வந்து நின்றது. ஒரு ஜெனரலுடைய சீருடையையும், தொப்பியில் தோகைகளையும் அணிந்த ஒருவர் குட்டுஜோவிடம் நெருங்கி பிரஞ்சு மொழியில் ஏதோ பேசினார். அவர் தான் கோமகன் ராஸ்டாப்சைன். தலைநகரான மாஸ்கோவில் துருப்புகளைத் தவிர வேறு யாரும் இல்லையென்றும், அதனால் தாம் அங்கே வந்ததாகவும் குட்ஜோவிடம் அவர் சொன்னார்.

'மற்றொரு போர் இல்லாமல் மாஸ்கோவை கைவிடப் போவதில்லை என்று, கலங்காத மேன்மை தங்கியவர் என்னிடம் சொல்லாமல் இருந்தால், விஷயம் வேறு விதமாய் இருந்திருக்கும்; இவையெல்லாம் நேரிட்டிருக்க முடியாது' என்று அவர் சொன்னார்.

அவர் என்ன சொன்னார் என்பதை புரிந்துகொள்ளாதவரைப் போலவும், தம்மிடம் அந்த வினாடியில் பேசிக் கொண்டிருப்ப வருடைய முகத்தில் எழுதப்பட்டிருக்கும் ஒரு விசித்திரமான விஷயத்தை வாசிக்க முயற்சி செய்பவரைப் போலவும் ராஸ்டாப்சைனை குட்டுஜோவ் பார்த்தார். ராஸ்டாப்சைன் குழப்பம் அடைந்து மௌனமானார். குட்டுஜோவ் தனது தலையை லேசாக

ஆட்டினார். ஆனால், ஊடுருவிப் பார்க்கும் தமது பார்வையை ராஸ்டாப்சைனின் முகத்திலிருந்து எடுக்காமல் மெதுவாக முனங்கினார்:

*'இல்லை! போர் செய்யாமல் நான் மாஸ்கோவை கைவிடப் போவதில்லை!'*

இந்த வார்த்தைகளை பேசியபோது, வேறு எதையாவது குட்டுஜோவ் நினைத்துக்கொண்டிருந்தாரா, அல்லது இந்த வார்த்தைகள் அர்த்தமற்றவை என்று தெரிந்திருந்தும் வேண்டும் என்றே இவற்றைப் பேசினாரா என்பது தெரியவில்லை. எப்படியிருந்தாலும், ராஸ்டாப்சைன் பதில் ஒன்றும் சொல்லாமல, அவசரமாக அவரை விட்டுப் போனார். ஆனால், ஒரு ஆச்சரியம். மாஸ்கோவின் கவர்னரான, பெருமைகொண்ட கோமகன் ராஸ்டாப்சைன், ஒரு கோசாக் சவுக்கை கையில் பற்றி பாலத்திற்குப் போனார். அங்கே துருப்புகள் போக முடியாமல், பாலத்தை அடைத்துக் கொண்டிருந்த வண்டிகளை விரட்டியடிக்கும் வேலையை தமது கூச்சல்களோடு ஆரம்பித்தார்.



மாலை நாலு மணிக்கெல்லாம் முராட்டின் துருப்புகள் மாஸ்கோவிற்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தன. முதலாவ தாக உர்ட்டெம்பர்க் குதிரைப் படையின் ஒரு பிரிவு வந்தது. அதன் பின்னால், ஏராளமான பரிவாரங்கள் புடை சூழ நேபிள்ஸ் மன்னர் (முராட்) வந்தார்.

செயின்ட் நிக்கலஸின் அதிசயமான உருவச் சிலையைக் கொண்ட மாதா கோயிலுக்குப் பக்கத்தில், அர்பாட் தெருவின் பாதி வழியில் முராட் தமது பிரயாணத்தை நிறுத்தினார். கிரெம்லின் கோட்டையின் நிலைமையைப் பற்றி அறிந்து வருவதற்காக, முன்னதாக அனுப்பப்பட்ட படைப் பிரிவிடமிருந்து செய்தியை எதிர்பார்த்து அங்கே காத்து நின்றார்.

மாஸ்கோவில் தங்கி இருந்தவர்களின் ஒரு கூட்டம் முராட்டைச் சுற்றி கூடியது. நீளமான தலை முடியைக் கொண்ட அந்த கமாண்டர், தோகைகளாலும் தங்க நகைகளாலும் அலங்கரிக்கப் பட்டிருந்த விசித்திரத்தை தயக்கமான ஆச்சரியம் கொண்டு அவர்கள் எல்லோரும் வெறித்துப் பார்த்தார்கள்.

'இவர்தான் அவர்களுடைய ஜார் மன்னரா? ஆள் மோசமாய் இல்லை!' என்று மெதுவான குரல்கள் பேசியது கேட்டுக் கொண்டிருந்தன.

அந்தக் கூட்டத்திடம் மொழி பெயர்ப்பாளரான ஒரு துவிபாஷகர் போனார்.

'உங்களுடைய தொப்பிகளை எடுங்கள்... உங்களுடைய தொப்பிகளை எடுங்கள்' என்ற வார்த்தைகள் அந்த கூட்டத்தில் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு பரவிக் கொண்டிருந்தன. அந்த துவிபாஷகர் ஒரு முதிய வாசல் காப்பவரிடம் பேசினார். கிரெம்லினுக்கு அங்கிருந்து வெகுதூரம் இருக்கிறதா என்று கேட்டார். அவருக்குப் பழக்கமில்லாத போலந்து உச்சரிப்பில் பேசியதை குழப்பத்தோடு அவர் கேட்டுக்கொண்டிருந்தார். துவிபாஷகர் ருஷ்ய மொழியைத்தான் பேசுகிறார் என்பதை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. தம்மிடம் சொல்லியதை அறிந்துகொள்ள முடியாததால் அந்த வாசல் காப்பவர் அங்கிருந்து நழுவி மற்றவர்களுக்குப் பின்னால் போய்ச் சேர்ந்தார்.

அந்த துவிபாஷகரிடம் முராட் நெருங்கி ருஷ்ய ராணுவம் எங்கே இருக்கிறது என்று கேட்கும்படி கூறினார். அந்தக் கேள்வியை ஒரு ருஷ்யர் புரிந்து கொண்டபடியால், பல குரல்கள் அந்த துவிபாஷகருக்குப் பதில் கூற ஆரம்பித்தன. முன்னால் சென்ற முன்னணிப் பிரிவிலிருந்து ஒரு பிரஞ்சு அதிகாரி முராட்டிடம் குதிரை மீது வந்தார். அந்த கோட்டையின் வாசல்கள் மறிக்கப்பட்டு இருக்கின்றனவென்றும், அங்கே ஒரு வேளை மறைந்து நின்று தாக்குவதாய் இருக்கலாம் என்றும் அவர் சொன்னார்.

'நல்லது' என்று முராட் சொல்லிவிட்டு, தமது பரிவாரத்தைச் சேர்ந்த ஒரு கனவானைப் பார்த்துத் திரும்பி, அந்த வாசல்கள் மீது குண்டுகளைப் போடுவதற்காக நான்கு சிறிய பீரங்கிகளை முன்னதாக கொண்டு போகும்படி உத்தரவிட்டார்.

முராட்டுக்குப் பின்னாலிருந்து படை வரிசையிலிருந்து பீரங்கிகள் வேகமாய் வெளியே வந்து அர்பாட் தெரு வழியாக முன்னேறின. வாஜ்வைஜெங்கா தெருவின் கோடிக்கு அவர்கள் போனதும் அங்கிருந்த சதுக்கத்தில் வரிசையாக நின்றார்கள். பீரங்கிகளை அமைக்கும் வேலையை பல பிரஞ்சு அதிகாரிகள் செய்துவிட்டு, கிரெம்லினை தொலைநோக்குக் கண்ணாடிகளால் பார்த்தார்கள்.

கிரெம்லினுக்குள் மாலை பிரார்த்தனைக்காக கோயில் மணிகள் ஒலித்தன. இந்த சப்தம் பிரஞ்சுக்காரர்களுக்கும் குழப்பத்தை உண்டு

பண்ணியது. போர் புரிவதற்காக ஆயுதங்களை எடுக்கும் பொருட்டு இந்த மணிகள் ஒலிப்பதாக அவர்கள் மனோராஜ்யம் செய்தார்கள். சில தரைப்படை வீரர்கள் குட்டாப்யெவ் வாசலை நோக்கி ஓடினார்கள். அங்கே மரங்களால் தடுப்புகள் செய்யப்பட்டிருந்தன. ஒரு அதிகாரியும் வீரர்களும் அதைப் பார்த்து ஓடிய போது, அந்த வாசலின் அடியிலிருந்து இரண்டு துப்பாக்கி குண்டுகள் வெளிப்பட்டன. பீரங்கிகளுக்குப் பக்கத்தில் நின்றுக்கொண்டிருந்த ஒரு ஜெனரல் அந்த அதிகாரியைப் பார்த்து எதோ கூச்சலிட்டார். உடனே அந்த அதிகாரியும் வீரர்களும் பின்னால் திரும்பி ஓடிவந்தார்கள்.

அந்த வாசலிலிருந்து இன்னும் மூன்று தோட்டக்காளின் சப்தம் கேட்டது.

ஒரு குண்டு, ஒரு பிரஞ்சு சிப்பாயின் காலைத் தாக்கியது. அந்த வாசலில் உள்ள தடுப்பிற்குப் பின்னாலிருந்து சிலர் கூச்சலிடும் விசித்திரமான சப்தம் வந்துகொண்டிருந்தது. திடீரென்று எதோ ஒரு உத்தரவை கேட்டதைப் போல அமைதியும் சந்தோஷமும் கொண்டிருந்த அந்த பிரஞ்சு ஜெனரல், அதிகாரிகள், வீரர்கள் ஆகியவர்களுடைய முகங்கள், துன்பத்திற்கும் கஷ்டத்திற்கும் தயாராக உறுதிகொண்டவர்களைப் போல காணப்பட்டன. மார்ஷலில் இருந்து கடைசி சிப்பாய் வரையில், எல்லாருக்கும் அந்த இடம் மாஸ்கோவில் பிரபலமான வாஜ்வைஜெங்கா, மாக்காவாயா, குட்டாப்யெங் தெருக்களாகவோ, அல்லது டிரோயிட்ஸா வாசலாகவோ காணப்படவில்லை; கடுமையான போர் நடக்கக்கூடிய ஒரு புதிய யுத்தகளமாகவே காணப்பட்டது. ஆகவே, அந்த போருக்கு வேண்டிய எல்லா காரியங்களும் தயாராக்கப்பட்டன. வாசல்களிலிருந்து வந்துகொண்டிருந்த கூச்சல்கள் நின்றன. பீரங்கிகள் முன்னால் நகர்த்தி வைக்கப்பட்டன. பீரங்கிக்காரர்கள் தங்களிடமுள்ள தீப்பந்தங்களில் உள்ள சாம்பல்களை ஊதினார்கள். ஒரு அதிகாரி 'சுடு' என்று உத்தரவிட்டார். இந்த உத்தரவுக்குப் பின்னால், இரண்டு குண்டுகள் ஒன்றன்பின் ஒன்றாக ஊதலிட்டுக்கொண்டு பறந்து சென்றன. மர வேலிகளால் தடுக்கப்பட்டிருந்த அந்த கல் வாசலின் மீது அந்த குண்டுகள் விழுந்து, அங்கிருந்து இரண்டு புகைக் கூட்டங்கள் அந்த சதுக்கத்தின் மேலாக பரவ ஆரம்பித்தன.

கற்களால் கட்டப்பட்ட அந்த கிரெம்லின் மீது அந்த சப்தங்கள் எதிரொலித்து மறைந்து போயின. அதன் பின்னால், தங்களுடைய தலைகளுக்கு மேலாக ஒரு விசித்திரமான சப்தத்தை பிரஞ்சுக்காரர்கள் கேட்டார்கள். ஆயிரக்கணக்கான காக்காய்கள் அந்த

சுவர்களிலிருந்து மேலே கிளம்பி ஆகாயத்தில் வட்டமிட்டு கரைந்துகொண்டும், தங்களுடைய இறக்கைகளை சப்தம் கேட்கும் படி அடித்துக்கொண்டும் இருந்தன. அந்த சப்தத்தோடு தனியாக ஒரு மனிதக் குரலும் அந்த வாசலிலிருந்து வந்துகொண்டிருந்தது. அங்கே கிளம்பிய புகையிலிருந்து ஒரு மனிதன் தலையில் எதுவும் இல்லாமல் ஒரு விவசாயக் கோட்டை அணிந்துகொண்டு வெளியே வந்தான். அவன் தன் கையில் ஒரு துப்பாக்கியை பற்றி, பிரஞ்சுக்காரர்களை நோக்கி குறி பார்த்துக்கொண்டிருந்தான். 'சுடு' என்று மீண்டும் அந்த அதிகாரி உத்தரவிட்டார். ஒரு துப்பாக்கி குண்டு சப்தமும், இரண்டு பீரங்கி குண்டுகள் சப்தமும் ஏக காலத்தில் கேட்டன. மீண்டும் அந்த வெளி வாசல் புகையால் மூடப்பட்டது.

அந்த வேலித் தடுப்பிற்குப் பின்னால் நடமாட்டம் எதையும் காணவில்லை. பிரஞ்சு வீரர்களும் அதிகாரிகளும் அந்த வாசலை நோக்கி முன்னேறினார்கள். அந்த வாசலில் மூன்று பேர் காயமடைந்தும், நான்கு பேர் இறந்தும் கீழே கிடந்தார்கள். விவசாய கோட்டுகள் அணிந்த இருவர் அந்த சுவரை ஒட்டி ஜினாமெங்காவை நோக்கி ஓடினார்கள்.

'இவற்றையெல்லாம் சுத்தம் செய்யுங்கள்' என்று அந்த அதிகாரி அந்த வேலித் தடுப்புகளையும், பிரேதங்களையும் சுட்டிக்காட்டி சொன்னார். காயமடைந்தவர்களை அனுப்பிய பின்பு, அங்கிருந்த பிரேதங்களை கைப்பிடி சுவருக்கு அப்பால் பிரஞ்சு சிப்பாய்கள் எடுத்துப் போட்டார்கள்.

மாண்டவர்கள் யார் என்பது ஒருவருக்கும் தெரியாது. 'இவற்றையெல்லாம் சுத்தம் செய்யுங்கள்' என்ற வார்த்தைகள் மட்டும்தான் அந்த மாண்டவர்களைப் பற்றி சொல்லப்பட்டன. உடனே அவர்கள் கைப்பிடி சுவருக்கு அப்பால் எறியப்பட்டார்கள். அங்கே துர்வாசனை ஏற்படக்கூடாதே என்பதற்காக அங்கிருந்து அவர்களை பின்னால் அப்புறப்படுத்தினார்கள். அவர்களின் ஞாபகார்த்தமாக தீயர்ஸ் மட்டும்தான் வாய்ச்சாலகமாக சில வரிகளை எழுதியிருக்கிறார்: 'இந்த கடை கெட்டவர்கள் ஆயுதச் சாலையிலிருந்து கொடுக்கப்பட்ட துப்பாக்கிகளை வைத்துக் கொண்டு, அந்த புனிதமான கொத்தளத்தில் அமர்ந்து பிரஞ்சுக்காரர்களை நோக்கி சுட்டார்கள். அவர்களின் சிலரை வெட்டித் தள்ளி கிரெம்லினிலிருந்து அவர்களை ஒழித்தார்கள்.'

பாதை சுத்தமாய்விட்டதென்று முராட்டுக்கு தெரிவிக்கப் பட்டது. வாசல்கள் வழியாக பிரஞ்சுக்காரர்கள் உள்ளே நுழைந்து செனெட் சதுக்கத்தில் தங்கள் முகாமை அமைத்தார்கள். செனெட்

மாளிகையின் ஜன்னல்கள் வழியாக அங்கிருந்த நாற்காலிகளை சிப்பாய்கள் சதுக்கத்தில் தூக்கி வீசினார்கள். அவைகளை உடைத்து அங்கே கணப்பு மூட்டங்கள் போட்டார்கள்.

மாராசேய்க்கா, லுபியாங்கா, பாக்ரோவ்கா தெருக்கள் வழியாக சில படைப் பிரிவுகள் கிரெம்லினைக் கடந்து போய்க் கொண்டிருந்தன. வாஜ்வைஜெங்கா, நிக்கோல்ஸ்கி, டிவெர்ஸ்கோய் ஆகிய தெருக்களில் சில படைப் பிரிவுகள் முகாம் போட்டன. வீடுகளின் எஜமானர்கள் எங்கும் காணப்படாத படியால், பட்டணங்களில் வழக்கமாக செய்யப்படுவதுபோல, சிப்பாய்களை பட்டண வாசிகளோடு ஒட்டுக் குடிகளாக அமர்த்த வேண்டிய அவசியம் இல்லாமல் இருந்தது. எல்லாரும் முகாம்களில் வசிப்பதைப் போலவே வசிக்க ஆரம்பித்தார்கள்.

உடைகள் கந்தலாகி, பசியால் வாடி, களைப்பால் மெலிந்து, தங்களுடைய ஆதி ராணுவ பலத்தில் மூன்றில் ஒரு பங்காக குறைந்துபோன போதிலும், பிரஞ்சு ராணுவம் மாஸ்கோவிற்குள் பிரவேசித்தபோது ஒழுங்கான முறையில் இருந்தது. பசியால் வாடி களைத்துப் போய் இருந்தாலும், இன்னமும் அந்த ராணுவம் போர் செய்யக்கூடிய, பயமுறுத்தக்கூடிய ராணுவமாகவே இருந்தது. ஆனால், அதனுடைய சிப்பாய்கள் வெவ்வேறு இடங்களுக்கு ஜாகைகளுக்காக கலைந்து போகிறவரையில்தான், அது ஒரு ராணுவமாக இருந்தது. ராணுவத்தில் உள்ள பற்பல பிரிவுகளும் கலைந்து பணக்காரர்களுடைய காலியான வீடுகளில் போய் அமர்ந்தவுடனேயே, அந்த ராணுவம் என்பது எக்காலமும் திரும்ப முடியாயதபடி மறைந்தே போயிற்று. அந்த ராணுவத்திற்கு பதிலாக புதிதாக ஒன்று தோன்றியது. அதாவது, பிரஜைகளாகவும் இல்லாமல், சிப்பாய்களாகவும் இல்லாமல், கொள்ளைக் காரர்களாக ஒரு கூட்டம் தோன்றியது. ஐந்து வாரங்களுக்குப் பின்னால், அதே மனிதர்கள் மாஸ்கோவை விட்டு புறப்பட்டபோது அவர்கள் ஒரு ராணுவமாக புறப்படவில்லை; அவர்கள் ஒரு கொள்ளைக் கூட்டமாக இருந்தார்கள். ஒவ்வொருவரும், தங்களுக்கு உபயோகமானது என்றும். அவசியமானது என்றும், நினைத்த பொருள்களை கட்டி தூக்கிக்கொண்டு போனார்கள். மாஸ்கோவை விட்டு புறப்பட்ட ஒவ்வொரு மனிதனுடைய நோக்கமும், முன்போல ஜெயிக்கவேண்டும் என்ற நோக்கமாய் இல்லை; தன்னுடைய கையில் அகப்பட்டதை காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்ற நோக்கமாகவே இருந்தது. குறுகிய கழுத்தைக் கொண்ட ஒரு ஜாடியில் ஒரு குரங்கு, தன்னுடைய கையைவிட்டு

உள்ளே இருக்கும் விதைகளை தன் கை நிறைய பற்றியதைப் போலவே, அவர்கள் இருந்தார்கள். அதாவது, கை நிறைய பற்றிய பின்பு கையை வெளியே எடுக்க முடியாது; கையில் அகப்பட்டது போய்விடும் என்ற பயத்தினால் கையை விரிக்கவும் அந்த குரங்கு இஷ்டப்படவில்லை; அதனால் அது மாண்டது. அதைப்போல, தாங்கள் கொள்ளையடித்த பொருள்களையும் மாஸ்கோவை விட்டு புறப்படும்போது தங்களோடு எடுத்துக்கொண்டு போனதால், பிரஞ்சுக்காரர்களும் மடிந்தாகவேண்டியதுதான். தன் கையைத் திறந்து கையில் உள்ளதை இழப்பது எப்படி அசாத்தியமாக அந்த குரங்குக்குத் தோன்றியதோ, அதே மாதிரி தங்களுடைய கொள்ளைப் பொருள்களையும் கைவிடுவது அசாத்தியமென்று அந்த பிரஞ்சுக்காரர்களுக்கும் தோன்றியது. மாஸ்கோவிற்குள் நுழைந்த ஒவ்வொரு பட்டாளத்திலும், பத்து நிமிஷங்களுக்குப் பின்னால், ஒரு அதிகாரியையோ, சிப்பாயையோ காண முடியவில்லை. ராணுவ யூனிபாரங்களையும், ஜோடுகளையும் அணிந்துகொண்டு அவர்கள் ஜன்னல்கள் வழியாக சிரித்துக்கொண்டும், அறைகளில் நடந்துகொண்டும் இருந்தார்கள். பாதாள அறைகளிலும், உக்கிராண அறைகளிலும் அதே மாதிரி சிப்பாய்கள் உணவுப் பொருள்களைக் கைப்பற்றுவதில் ஈடுபட்டிருந்தார்கள். முற்றங்களில் வண்டிக் கொட்டகைகளை திறந்துகொண்டும், பூட்டுகளை உடைத்துக் கொண்டும் இருந்தார்கள். சமையல் அறைகளில் மாவைப் பிசைந்துகொண்டும் ரொட்டிகளைச் சுட்டுக்கொண்டும், சமைத்துக்கொண்டும், அல்லது பெண்களையும் குழந்தைகளையும் பயமுறுத்தவோ, வேடிக்கை காட்டவோ, தடவிக் கொடுக்கவோ செய்துகொண்டும் இருந்தார்கள். அதேமாதிரி கடைகளிலும் வீடுகளிலும் ஏராளமான பேர்கள் இருந்தார்கள்; ஆனால், ராணுவம் என்பது மறைந்து போயிற்று.

பட்டணத்தில் சுற்றித் திரியக் கூடாது என்றும், பிரஜைகளிடம் பலாத்காரத்தை காட்டக்கூடாது என்றும், கொள்ளையடிக்கக் கூடாது என்றும், ஒவ்வொரு நாளும் மாலையில் ஆஜர் - பட்டி எடுக்கவேண்டும் என்றும், அன்றைய தினம் பிரஞ்சு கமாண்டர்கள் உத்தரவுகளுக்குமேல் உத்தரவுகளாக பிறப்பித்தார்கள். ஆனால், அதுவரை ராணுவமாக அமைந்திருந்த அவர்கள், இந்த உத்தரவுகளை மதிக்காமல் அந்த நிர்மானுஷ்யமான பட்டணத்தில், சொகுசும் சாப்பாடும் ஏராளமாய் கிடைக்கக்கூடிய பணக்கார பிரதேசத்தை நோக்கி போய்க்கொண்டே இருந்தார்கள். பசியோடிருக்கும் ஒரு மந்தையானது கட்டாந்தரையில் போகும்போது ஒன்று சேர்ந்து ஒழுங்காகப் போகும். ஆனால், புல் வெளியை அது அடைந்ததும்,

யாருக்கும் கட்டுப்படாமல் பரந்து ஓடிவிடும். அதேமாதிரி அந்தச் செல்வம் செழிக்கும் பட்டணத்தில் ராணுவமும் பரந்து ஓடியது.

மாஸ்கோவில் குடிகள் யாரும் இல்லாதபடியால், சிப்பாய்கள் - மணலில் விட்ட தண்ணீரைப் போல - கிரெம்லினில் இருந்து தாங்கள் பிரவேசித்த அந்த பட்டணத்தின் நாலா திசைகளிலும் பரவி மறைந்து போனார்கள். ஒரு வியாபாரியின் வீட்டிற்குள் முதலில் நுழைந்த குதிரைப்படை வீரர்கள், அந்த வீட்டில் தங்களுக்கு வேண்டியதற்கு அதிகமாக குதிரை லாயங்கள் இருந்தபோதிலும், அவை போதாதென்று அந்த வீட்டைவிட பெரிதான பக்கத்து வீட்டிற்குப் போனார்கள். பலர் தங்களுக்குப் பல வீடுகளை அபகரித்துக் கொண்டு, அந்த வீடுகளின் முன்பாக தங்கள் பெயர்களை எழுதி வைத்தார்கள். ராணுவத்தைச் சேர்ந்த வேறு யாராவது அந்த வீடுகளுக்கு வந்தால், அவர்களுடன் சண்டைகூட போட்டார்கள். வீடுகளை முதலில் பிடிப்பதற்கு முன்னால் அந்த பட்டணத்தை பார்ப்பதற்காக சிப்பாய்கள் தெருக்களில் சுற்றினார்கள். எல்லாவற்றையும் கைவிட்டு விட்டு போய்விட்டதாக அவர்கள் கேள்விப்பட்டதும், விலை உயர்ந்த பொருள்களை தங்களுக்கு எடுத்துக் கொள்ளுவதற்காக அவை இருந்த இடங்களுக்கு ஓடினார்கள். அந்த சிப்பாய்களை தடுப்பதற்காக பின்னால் சென்ற அதிகாரிகள், தங்களை அறியாமலேயே தாங்களும் சிப்பாய்களைப் போலவே திருடினார்கள். வண்டித் தெருவிலிருந்த கொட்டகைகளில் வண்டிகள் விடப்பட்டிருந்தன. அங்கே தங்களுக்கு வேண்டிய வண்டிகளை பொறுக்குவதற்காக ஜெனரல்கள் வந்து கூடினார்கள். மாஸ்கோவில் தங்கியிருந்த சில குடியானவர்கள் தங்கள் வீடுகளை சிப்பாய்கள் கொள்ளையடிக்காமல் இருப்பதற்காக அதிகாரிகளை தங்கள் வீடுகளுக்கு அழைத்தார்கள். முடிவற்ற விதமாக ஏராளமான செல்வம் மாஸ்கோவில் காணப்பட்டது. பிரஞ்சுக்காரர்கள் குடியேறிய பகுதிகளைத் தவிர, காலியாய்க் கிடந்த மற்ற பகுதிகளில் இன்னும் ஏராளமாக செல்வங்கள் கிடைக்குமென்று அவர்கள் நினைத்தார்கள். அந்த ராணுவம் முழுவதையும் மாஸ்கோ நகரம் பலமாக மூடிக் கொண்டது. காய்ந்த பூமியில் தண்ணீரை விட்டால், காய்ந்த பூமியும் தண்ணீரும் மறைந்து, அந்த இடத்தில் சகதி தோன்றும்; அதேமாதிரி காலியாகவும் ஏராளமான செல்வங்களோடும் இருந்த மாஸ்கோவில் பசியால் வாடிய ராணுவம் நுழைந்ததும், அங்கே நெருப்பும் கொள்ளையும் தோன்றி, ராணுவத்தையும் அந்த செல்வம் மிகுந்த பட்டணத்தையும் அழித்தன.

மாஸ்கோ பட்டணம் தீப்பற்றி எரிந்ததற்கு, ராஸ்டாப்சை னுடைய மூர்க்கத்தனமான நாட்டுப்பற்றுதான் காரணம் என்று பிரஞ்சுக்காரர்கள் சொன்னார்கள்; பிரஞ்சுக்காரர்களின் காட்டுமிராண்டித்தனம்தான் காரணம் என்று ருஷ்யர்கள் சொன்னார்கள். உண்மையில் மாஸ்கோ எரிந்ததற்கு தனிப்பட்டு ஒருவரோ, அல்லது ஒரு கூட்டமோ காரணம் என்று சொல்ல முடியாது. மாஸ்கோவில் மோசமான 130 நெருப்பணைக்கும் எஞ்ஜின்கள் இருந்தனவா, இல்லையா என்பது ஒரு பக்கம் இருக்கட்டும்; மரத்தினால் கட்டப்பட்ட எந்த பட்டணமும் எரிந்தே தீரும்; அதைப் போலவே, மாஸ்கோவும் எரிந்தது. மரத்தூள் குவியல்கள்மீது தொடர்ச்சியாக பல நாட்கள் நெருப்புப் பொறிகள் விழுந்து கொண்டே இருந்தால், அவை எரிந்துதான் ஆகவேண்டும்; அதைப் போலவே, கைவிடப்பட்ட மாஸ்கோவும் எரிந்தே தீரவேண்டியதாய் இருந்தது. மரத்தினால் கட்டப்பட்ட அந்த பட்டணத்தில் வீட்டுக்காரர்கள் எல்லாரும் தங்கள் வீடுகளில் இருந்தபோதும் கூட, போலீஸ் படை இருந்தபோதும்கூட, எங்காவது ஒரு இடத்தில் தினம் நெருப்பு பிடித்துக் கொண்டிருக்கும்; அப்பேர்ப்பட்ட பட்டணத்தில் வீட்டுக்காரர்கள் போன பின்பு, வீடுகளை சிப்பாய்கள் ஆக்கிரமித்து சுங்கான்களை குடித்துக்கொண்டு, ஒரு நாளைக்கு இரண்டு தடவைகள் தாங்களே சமைத்துக்கொண்டு, செனெட் சபையின் நாற்காலிகளை உடைத்து, செனெட் சதுக்கத்தில் கணப்பு மூட்டங்களை மூட்டிக்கொண்டு இருந்தால், அந்தப் பட்டணம் எரிவதை யாராலும் தடுக்க முடியாது. சமாதான காலங்களில் எந்த ஜில்லாவிலும் கிராமங்களில் துருப்புகளை ஒட்டுக்குடிகளாக வைத்தால், அந்த ஜில்லாவில் தீ விபத்துகள் திடீரென்று அதிகரிப்பதைக் காணலாம். அப்படியானால், கைவிடப்பட்ட மரத்தாலான ஒரு பட்டணத்தில் அயல் நாட்டுத் துருப்புகள் குடியிருக்கும்போது தீ விபத்துகள் அதிகமாய் ஏற்படுவதற்கான காரணங்கள் எவ்வளவு அதிகமாய் இருக்கும் என்பதை யூகித்துக்கொள்ளலாம். ஆகவே, மாஸ்கோ நெருப்புப் பிடித்ததற்கு ராஸ்டாப் சைனின் மூர்க்கத்தனமான தேசாபிமானத்தையோ, பிரஞ்சுக்காரர்களின் காட்டுமிராண்டித் தனத்தையோ காரணமாக சொல்ல முடியாது. சிப்பாய்களுடைய சுங்கான்களும், சமையல் அறைகளும், கணப்பு மூட்டங்களும், தங்களுக்கு சொந்தமில்லாத வீடுகளில் சிப்பாய்கள் அஜாக்கிரதையாக நடந்து கொண்டதுமே மாஸ்கோவிற்கு நெருப்பு வைத்தன. வேண்டுமென்று நெருப்பு வைத்ததாக யாராவது சொன்னால், அது சந்தேகப்படக்கூடிய விஷயம்; ஏனெனில், வீடுகளை கொளுத்துவதற்கு யாருக்கும் எந்த காரணமும்

இருந்ததில்லை; மேலும் அம்மாதிரி வேண்டுமென்று கொளுத்துவது தொந்தரவையும், அபாயத்தையும் விளைவிக்கக் கூடிய காரணமாய் இருக்கும்; ஆகவே, வேண்டுமென்று ஒன்றிரண்டு இடங்களில் தீயை வைத்திருந்தாலும், மாஸ்கோ தகனத்திற்கு அதை காரணமாகச் சொல்ல முடியாது. ஏனெனில், யாரும் தீ வைக்காமலேயே அந்த தகனம் ஏற்பட்டிருக்கும்.

ராஸ்டாப்சைனுடைய மூர்க்கத்தனத்தைச் சுட்டிக் காட்டுவதற்கு பிரஞ்சுக்காரர்களுக்கு எவ்வளவுதான் ஆசை இருந்தாலும், அந்த அயோக்கியன் போனபார்ட்டை குறை கூறுவதற்கு ருஷ்யர்களுக்கு எவ்வளவுதான் ஆசை இருந்தாலும், அல்லது பிற்காலத்தில் தங்களுடைய மக்களின் கையில் ஒரு வீரத் தீவட்டியை கொடுப்பதற்கு ருஷ்யர்களுக்கு எவ்வளவுதான் ஆசை இருந்தாலும் மாஸ்கோவின் தகனத்திற்கு அவைதான் நேரான காரணங்கள் என்று யாராலும் கூற முடியாது. ஏனெனில், .சொந்தக்காரர்களால் கைவிடப்பட்டு, அந்நியர்களால் ஆக்கிரமிக்கப்பட்டு, அவர்கள் குடியேறி சமையல் செய்துவரும் எந்த கிராமமும், எந்த தொழிற்சாலையும், எந்த வீடும் எரியத்தான் செய்யும்; அதே மாதிரி மாஸ்கோவும் எரிய வேண்டியதாய் இருந்தது. மாஸ்கோவை அதில் வாசம் செய்தவர்கள் எரித்ததாகச் சொல்லப்படுவது உண்மை; ஆனால், மாஸ்கோவை கைவிட்டு வெளியேறியவர்கள் அதைச் செய்தார்களேயொழிய, மாஸ்கோவில் தங்கி இருந்தவர்கள் செய்யவில்லை. மாஸ்கோவை எதிரிகள் ஆக்கிரமித்த பின்பு, பெர்லினைப் போலவே, வீயன்னாவைப் போலவே, மற்ற நகரங்களைப் போலவே, அதை பந்தோபஸ்தாக அவர்கள் பாதுகாக்கவில்லை; ஏனெனில், மாஸ்கோவாசிகள் பிரஞ்சுக்காரர்களை ரொட்டியும் உப்பும் கொண்டு வரவேற்கவோ, அல்லது பட்டணத்தின் சாவிகளை பிரஞ்சுக்காரர்களிடம் கொண்டுபோய் கொடுக்கவோ செய்யாமல், பட்டணத்தை கைவிட்டு அதன் பிரஜைகள் வெளியேறிவிட்டபடியால், அந்தப் பட்டணத்தை பிரஞ்சுக்காரர்கள் மரியாதையாக நடத்தவில்லை.

## 11

## 27

மாஸ்கோவில் பிரஞ்சுக்காரர்கள் நட்சத்திர முனைகள் மாதிரி பரவி வந்தபோது, அவர்களுடைய பரவல் பீயர் தங்கியிருந்த இடத்திற்கு செப்டெம்பர் 2-ந் தேதியன்று மாலைதான் வந்து சேர்ந்தது.

கடந்த இரண்டு தினங்களாக தனிமையிலும், விசித்திரமான சந்தர்ப்பங்களிலும் பீயர் வசித்து வந்தபடியால், அவருக்கு பைத்தியம் பிடித்துவிடுமோ என்ற நிலைமையில் அவர் இருந்தார். ஒரே ஒரு விடாப்பிடியான நினைப்புத்தான், அவரை முழுவதும் ஆட்டி வந்தது. இந்த நினைப்பு எப்படி, எப்பொழுது அவரை பீடித்துக்கொண்டது என்பது அவருக்குத் தெரியாது. கடந்த காலத்தைப் பற்றி அவருக்கு எதுவும் நினைப்பில் இல்லை. நிகழ்காலத்தைப் பற்றி அவருக்கு எதுவும் புரியவில்லை. அவர் பார்ப்பதும் கேட்பதுமான எல்லா காரியங்களும் ஒரு கனவைப் போல அவருக்குத் தோன்றின.

வாழ்க்கையின் சிக்கலான அவசியங்கள் அவரை வளைத்துக் கொண்டபடியாலும், அவருடைய தற்கால நிலைமையில் அவற்றுக்கு பரிகாரம் தேட அவரால் முடியாமல் இருந்தபடியாலும், அவற்றிலிருந்து தப்பிக்கொள்ளவே அவர் வீட்டை விட்டு வெளியேறினார். ஜோசப் அலெக்ஜீவிச்சினுடைய புத்தகங் களையும் தஸ்தாவேஜுகளையும் ஒழுங்குபடுத்தி வைக்கவேண்டும் என்ற காரணத்தைச் சொல்லிக்கொண்டு, அவருடைய வீட்டிற்கு பீயர் போனார். ஆனால், வாழ்க்கையின் தொல்லைகளிலிருந்து ஓய்வு பெறுவதற்காக உண்மையில் அங்கே அவர் போனார். ஏனெனில், அவருடைய மனதில், ஜோசப் அலெக்ஜீவிச் ஒரு நிரந்தரமான, பவித்திரமான, அமைதியான சிந்தனை உலகத்தைச் சேர்ந்தவர் என்று தோன்றியது; அவருடைய தற்கால அமைதியற்ற, மனக்குழப்பமான நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்டதாக அந்த உலகம் தோன்றியது. ஆகவே ஒரு அமைதியான புகலிடத்தை அவர் தேடினார்; ஜோசப் அலெக்ஜீவிச்சின் படிப்பு அறை அந்த புகலிடமாக அவருக்கு விளங்கியது. அந்த படிப்பு அறையிலுள்ள அமைதியான சூழ்நிலையில், அந்த தூசி படர்ந்த மேஜைமீது தமது முழங்கைகளை வைத்துக் கொண்டு அவர் அமர்ந்திருந்தபோது, சென்ற சில தினங்களாக நடந்தவைகளில், அமைதியான, முக்கியத்துவமான நினைப்புகள் ஒன்றன்பின் ஒன்றாக அவருடைய மனோராஜ்யத்தில் தோன்றின; முக்கியமாக பாராடினோ போர் தோன்றியது; அதோடு, 'அவர்கள்' என்று அவரால் கருதப்பட்ட அந்தக் கூட்டத்தின் உண்மையையும், எளிமையையும், பலத்தையும் ஒப்பிடும்போது, தம்முடைய நிலைமை அற்பமானதாகவும், உண்மை சிரத்தை அற்றதாகவும் அவருக்கு ஏதோ ஒரு விதமாக தோன்றியது. அவரை அவருடைய மனோராஜ்யத்திலிருந்து கெராசிம் எழுப்பியபோது, மாஸ்கோவை பாதுகாப்பதற்காக மக்கள் செய்யப்போகும் போரில் தாமும்

கலந்துகொள்ள வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. அந்த நோக்கத்தோடுதான் தமக்கு ஒரு விவசாயியின் கோட்டையும், கைத் துப்பாக்கியையும் வாங்கிக் கொடுக்கும்படி கெராசிமை அவர் கேட்டார். அந்த நோக்கத்தோடுதான், தாம் ஜோசப் அலெக்ஜீவிச்சின் வீட்டில் தங்கி இருக்கப் போவதையும், தமது பெயரை ரகசியமாக வைத்திருக்கவேண்டும் என்பதையும் கெராசிமிடம் அவர் சொன்னார். முதல் நாளன்று ஒன்றும் செய்யாமல் தனிமையில் அவர் இருந்தார். பிரீமெஸன் கையெழுத்துப் பிரதிகளில் தமது கவனத்தைச் செலுத்த பல தடவைகள் அவர் முயன்றாலும் அவரால் முடியவில்லை. அச்சமயத்தில்தான், அறிவிப்பு ஆகமத்தில் உள்ள கூடார்த்தமான பொருளை, தமது பெயரோடும், போனபார்ட்டோடும் சம்பந்தப்படுத்தி, அவர் முன்னால் நினைத்துக்கொண்டிருந்த நினைப்புகள் பல தடவைகள் தோன்றின. நெப்போலியனுடைய அதிகாரத்திற்கு முடிவு கட்டும் வேலையை, தம்மீது விதி சுமத்தி இருப்பதாக அவர் நினைத்து வந்த அந்த நினைப்பு, அவருடைய மனதில் தோன்றி மறையும் பல விசித்திரங்களில் ஒன்றாகவே அதுவரையில் இருந்து வந்தது; அவருடைய மனதில் ஆழமாக அது பதியவில்லை.

மாஸ்கோவின் பாதுகாப்புக்காக மக்களோடு கலந்து வேலை செய்யும் நோக்கத்தோடு அவர் அந்த விவசாயியின் கோட்டை வாங்கிய பின்பு, ராஸ்டோவ்களை சந்தித்தார். அச்சமயம் நட்டாஷா அவரைப் பார்த்து, 'நீர் மாஸ்கோவில்தான் இருக்கப் போகிறீரா?... எவ்வளவு சிலாக்கியமானது' என்று கேட்டாள். அச்சமயம், மாஸ்கோவில் தங்கி இருப்பது நல்ல காரியம் என்றும், மாஸ்கோவை எதிரிகள் கைப்பற்றிய பின்பும் அவர் அங்கே தங்கி, விதி நிர்ணயித்து இருக்கிற காரியத்தை அவர் செய்யவேண்டும் என்றும் அவருடைய மனதில் ஒரு சிந்தனை மின்னியது.

அடுத்த நாளன்று எதற்கும் தைரியமாய் இருக்கவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடும், எந்த வகையிலும் 'அவர்களுக்கு' பின் தங்கக் கூடாது என்ற நினைப்போடும், மூன்று குன்றுகளின் வாசலுக்கு பீயர் சென்றார். ஆனால், அவர் வீடு திரும்பியதும், மாஸ்கோவை பாதுகாக்கப் போவதில்லை என்பதை அறிந்ததும், திடீரென்று அவருக்கு ஒரு உணர்ச்சி தோன்றியது. அதாவது, சாத்தியமாகலாம் என்று மட்டும் அவருக்கு முன்பெல்லாம் தோன்றிவந்த ஒரு காரியம், இப்பொழுது பூரணமாக அவசியமானது என்றும், தடுக்க முடியாதது என்றும் தோன்றியது. அவர் மாஸ்கோவில் தங்கி இருந்து, தமது பெயரை மறைத்து, நெப்போலியனைச் சந்தித்து

அவரைக் கொல்லவேண்டும் என்றும் நினைத்தார். ஐரோப்பாவில் ஏற்பட்ட துன்பங்களுக்கெல்லாம் நெப்போலியனே முழுதும் காரணம் என்று அவருக்குத் தோன்றியது. ஆகவே, ஐரோப்பாவுக்கு ஏற்பட்ட துன்பங்களை ஒழிக்க வேண்டும் என்றும், அல்லது தாம் அழிய வேண்டும் என்றும் அவர் நினைத்தார்.

1809 - ஆம் வருஷத்தில் ஒரு ஜெர்மன் மாணவன் வீயன்னாவில் போனபார்ட்டை கொலை செய்ய முயற்சித்ததையும், அதற்காக அந்த மாணவன் சுட்டுக் கொல்லப்பட்டதையும் பற்றிய எல்லா விவரங்களையும் பீயர் அறிவார். ஆகவே, தமது விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக தமது உயிரைக் கொடுக்கும்படியான ஆபத்து ஏற்படும் என்பதை அவர் அறிந்ததும், அவருடைய பரபரப்பு இன்னும் அதிகமாயிற்று.

தடுக்க முடியாதபடி இரண்டு பலமான உண ர்ச்சிகள் பீயரை இந்த நோக்கத்திற்கு இழுத்தன. முதலாவது உணர்ச்சியாவது: இப்பொழுது ஏற்பட்டுள்ள பொதுவான பேராபத்திற்காக தியாகமும், கஷ்டமும் படவேண்டியது அவசியம் என்ற உணர்ச்சியாகும்; இதேமாதிரியான உணர்ச்சிதான், 25-ந் தேதியன்று மஜாய்ஸ்கிற்கு அவர் போகும்படியும், அங்கிருந்து கடுமையாக போர் நடந்து கொண்டிருந்த போர் முனைக்கு செல்லும்படியும், வீட்டை விட்டு இப்பொழுது ஓடி வரும்படியும், அவருக்கு பழகிப்போயிருந்த சொகுசான, சௌகர்யமான வாழ்க்கையை விட்டுவிட்டு, ஆடைகளைக்கூட களையாமல் கடினமான பலகைமீது படுத்துத் தூங்கும் படியும், கொராசிம் உண்கிற மாதிரியான உணவையே உண்ணும் படியும் செய்தது. இரண்டாவது உணர்ச்சியாவது: செயற்கையான, சம்பிரதாயமானவைகள் மீதும், உலகத்தில் உயர்வான நன்மை என்று பெரும்பான்மையோரால் கருதப்படும் ஒவ்வொன்றின் மீதும், ருஷ்யர்கள் பொதுவாகக் காட்டும் ஒரு துச்சமான உணர்ச்சியேயாகும். இந்த விசித்திரமான, பரவசமான உணர்ச்சியை, முதன் முதலாக ஸ்லாபோடா அரண்மனையிலேயே பீயர் உணர்ந்தார்; மக்கள் எல்லாரும் கஷ்டத்தோடு சம்பாத்தித்து காத்துவரும் அந்த செல்வத்தைப் பற்றியும், அதிகாரத்தைப் பற்றியும், வாழ்க்கையைப் பற்றியும் அவருக்கு திடீரென்று அங்கே ஒரு உணர்ச்சி தோன்றியது; அவையெல்லாம் உண்மையிலேயே பெறுமானம் உள்ளவைகளாக இருக்குமானால், அந்த பெறுமானமெல்லாம், அவற்றை தியாகம் செய்வதிலுள்ள மகிழ்ச்சியிலேயே இருக்கிறது என்று அவர் உணர்ந்தார்.

இதே உணர்ச்சிதான் பட்டாளத்தில் புதிதாய் சேருகிற ஒருவனை, அவன் கையிலுள்ள காசுகளையெல்லாம் முழுவதும் செலவிட்டு குடிக்கும்படி செய்கிறது; ஒரு குடிகாரனை, தனக்கு நஷ்டம் ஏற்படும் என்பது தெரிந்தும், காரணமில்லாமல் கண்ணாடி களையும், நிலைக் கண்ணாடிகளையும் உடைக்கும்படி செய்கிறது: அதாவது, சாதாரணமாக பார்க்கும்போது, பைத்தியக்காரன் என்று சொல்லக் கூடிய விதத்தில் ஒருவனை காரியங்கள் செய்யும்படி இந்த உணர்ச்சி தூண்டுகிறது; அவனுடைய சொந்த அதிகாரத்தையும் பலத்தையும் காட்டுவதாக இவை இருக்கலாம்; ஆனால், அவனுக்கு மேலாக மனித கட்டுப்பாடுகளுக்கு உட்படாத ஒரு வாழ்க்கை பிரமாணம் இருப்பதாக அவை உறுதி செய்கின்றன.

ஸ்லாபோடா அரண்மனையில் இந்த உணர்ச்சியை முதல் தடவையாக பீயர் அனுபவித்ததிலிருந்து, தொடர்ச்சியாக அதன் மயக்கத்திலேயே அவர் இருந்தார். ஆனால், இப்பொழுதுதான் அதனுடைய பூரா பலனையும் அவர் கண்டார். தவிரவும் பீயருக்கு அவருடைய நோக்கத்திற்கு ஆதரவு ஏற்பட்டது; அதோடு அந்த வழியில் ஏற்கெனவே அவர் செய்த காரியங்களினால் இப்பொழுது அந்த வழியை துறக்க முடியாமல் அவருக்குத் தடையும் ஏற்பட்டது. இச்சமயம் அவர் மற்றவர்களைப் போல மாஸ்கோவை விட்டு போவதென்றால், அவர் வீட்டை விட்டு ஓடி வந்தது, அவருடைய விவசாய கோட்டு, கைத்துப்பாக்கி, அவர் மாஸ்கோவிலேயே தங்கி இருக்கப் போவதாக ராஸ்டோவ்களிடம் சொல்லியது ஆகியவை எல்லாம் அர்த்தமற்றவையாகிவிடும்; அதோடு பரிகாசமாகவும் இழிவாகவும் தோன்றும்; இம்மாதிரி ஏற்படுவதை பீயரின் தன்மான உணர்ச்சி ஒருக்காலும் சகிக்காது.

எப்பொழுதும் போலவே பீயரின் சரீர நிலைமை, அவருடைய மன நிலைமைக்கு ஒத்ததாய் இருந்தது. அவருக்கு பழக்கமில்லாத, மட்டமான உணவும், அவர் அக்காலத்தில் குடித்து வந்த வாட்காமதுவும், ஒயினோ, சுருட்டுகளோ கிடைக்காமல் இருந்ததும், அழுக்கு படிந்த ஒரே ஆடையை அணிந்து கொண்டிருந்ததும், படுக்கை இல்லாமல் ஒரு குறுகிய சோபாவில் இரண்டு இரவுகளாக தூக்க மில்லாமல் இருந்ததும், அவரை பைத்தியக்கார நிலைமைக்குக் கொண்டுவரக்கூடிய பரபரப்பை அடையும்படி செய்தன.

அப்பொழுது பிற்பகல் இரண்டு மணியாயிற்று. பிரஞ்சுக்காரர்கள் மாஸ்கோவிற்குள் ஏற்கெனவே பிரவேசித்து விட்டார்கள். பீயருக்கு இது தெரியும். உடனே காரியத்தில் அவர் இறங்காமல், தம்முடைய திட்டத்தைப் பற்றி அவர் யோசனை செய்ய ஆரம்பித்து அதைப்

பற்றிய விவரங்களை மனதில் சிந்தித்துக்கொண்டிருந்தார். நெப்போலியனை தாக்குவதைப் பற்றியோ, அல்லது நெப்போலியனுடைய மரணத்தைப் பற்றியோ, அவருடைய மனோராஜ்யத்தில் தெளிவாக அவர் காணவில்லை. அதற்குப் பதிலாக, அசாதாரணமான தெளிவோடும், சோகமான மகிழ்ச்சியோடும், தம்முடைய சொந்த அழிவையும், தீரமான தைரியத்தையும் மனக் கண் முன்பு கண்டு கொண்டிருந்தார்.

'ஆம், தனிமையாக, எல்லாருடைய நன்மைக்காக நான் அதைச் செய்யவேண்டும், அல்லது நாசமாகவேண்டும்' என்று அவர் நினைத்தார். 'ஆம், நான் அவரிடம் நெருங்குவேன்... அதன் பின்னால் திடீரென்று... கைத்துப்பாக்கியா அல்லது குத்துவாளா? ஆனால், எதுவாய் இருந்தாலும் ஒன்றுதான். 'நான் அல்ல, கடவுளே உன்னை தண்டிக்கிறார்' என்று நான் சொல்லுவேன்' என அவர் நினைத்தார். நெப்போலியனை கொல்லும்போது எம்மாதிரி அவர் பேசுவார் என்பதை அந்த விதமாக மனோராஜ்யம் செய்தார். 'நல்லது, இப்பொழுது என்னைப் பிடித்து மரண தண்டனை கொடுங்கள்'. இந்த மாதிரியாக அவர் தலையை வணங்கி தமக்குத்தாமே ஒரு துக்கமான, ஆனால் உறுதியான தோற்றத்தோடு பேசிக்கொண்டிருந்தார்.

அந்த அறையின் மத்தியில் நின்று பீயர் இம்மாதிரியாக பேசிக்கொண்டிருந்தபோது, அந்தப் படிப்பு அறையின் கதவு, திடீரென்று திறந்தது. அந்த வாசலில் மக்கார் அலெக்ஜீவிச்சின் உருவம் தோன்றியது. வழக்கமாக சங்கோஜமாய் உள்ள அவர், இப்பொழுது முழுவதும் மாறிப் போயிருந்தார்.

அவருடைய கவுன் பொத்தான் மாட்டப்படாமல் இருந்தது. அவருடைய முகம் சிவப்பாகவும், சுழிப்புகளுடனும் காணப் பட்டது. அவர் நன்றாக குடித்திருக்கிறார் என்று தோன்றியது. பீயரை முதலில் பார்த்ததும் அவர் மனம் குழம்பினார். ஆனால், பீயரின் முகத்தில் தோன்றிய சங்கோஜத்தைக் கண்டதும் அவர் தைரியம் கொண்டு, தமது மெல்லிய கால்களால் தள்ளாடி நடந்து அறைக்குள் நகர்ந்து வந்தார்.

'அவர்கள் பயந்துபோனார்கள்' என்று அந்தரங்கமாக கரகரப்பான தொனியில் பேசினார். 'நான் பணியமாட்டேன்; நான் சொல்லுகிறேன்... நான் சொல்லுவது சரிதானே, ஐயா?'

அவர் ஒரு வினாடி யோசித்தார். மேஜை மீதிருந்த கைத் துப்பாக்கியை பார்த்ததும், எதிர்பாராத வேகத்தில் அதை கையில் எடுத்துக்கொண்டு வெளியே தாழ்வாரம் வழியாக ஓடினார்.

கெராசிமும் வேலைக்காரனும் அலெக்ஜீவிச்சுக்குப் பின்னால் ஓடி, ஆளோடியில் அவரை நிறுத்தி, அவர் கையில் இருந்த கைத்துப்பாக்கியை பிடுங்க முயற்சி செய்தார்கள். ஆளோடிக்கு வந்த பீயர், பரிதாபத்தோடும் வெறுப்போடும் அந்த பாதி பைத்தியக்கார முதியவரை பார்த்துக்கொண்டிருந்தார். அலெக்ஜீவிச் முகம் சுளித்து கையில் துப்பாக்கியை விடாமல் பற்றிக்கொண்டு, தமது மண்டையில் தோன்றிய ஏதோ ஒரு விசித்திரமான மனோராஜ்யத்தில் பலமாக கூச்சலிட்டார்.

'ஆயுதங்களை எடுங்கள்! அவர்களை அழியுங்கள்! இல்லை, நீங்கள் அதைப் பெற முடியாது' என்று அவர் ஊளையிட்டார்.

'அது போதும்; தயவு செய்யும், அது போதும். இரக்கம் காட்டும். தயவு செய்து அதை கொடுத்துவிடும்! தயவு செய்யும், ஐயா...' என்று கெராசிம் கூறி, மீண்டும் அறைக்குள் அவரைக் கொண்டு போவதற்கு அவருடைய முழங்கைகளை ஜாக்கிரதையாகப் பற்றி முயற்சி செய்தார்.

'நீ யார்? போனபார்ட்டா?...' என்று அலெக்ஜீவிச் கத்தினார்.

'அது சரியல்ல, ஐயா. தயவு செய்து உமது அறைக்கு வந்து இளைப்பாறிக்கொள்ளும். அந்த கைத்துப்பாக்கியை என்னிடம் கொடுத்து விடும்.'

'ஓடிப் போ, இழிவான அடிமையே! என்னைத் தொடாதே! இதைப் பார்த்தாயா?' என்று கூச்சலிட்டு, தமது கைத்துப்பாக்கியை காட்டினார். 'அவர்களை அழியுங்கள்.'

'அவரைப் பிடி' என்று மெதுவான குரலில் வேலைக்காரனிடம் கெராசிம் சொன்னார்.

அவர்கள் மக்கார் அலெக்ஜீவிச்சின் கைகளைப் பற்றி, அவருடைய அறை வாசலுக்கு இழுத்தார்கள்.

அந்த ஆளோடியில் குடிகாரனுடைய முரட்டுத்தனமான சப்தமும், போராடும் சப்தமும் நிறைந்து நின்றன.

திடீரென்று ஒரு புதிய சப்தம், காதைத் துளைக்கும் ஒரு பெண்ணின் கூக்குரல் முற்ற மண்டபத்திலிருந்து கிளம்பியது. சமையல்காரி ஆளோடிக்குள் ஓடி வந்தாள்.

'அவர்கள் வந்துவிட்டார்கள்! கருணையுள்ள கடவுளே! ஓ பிரபுவே, அவர்கள் நாலு பேர் இருக்கிறார்கள்! குதிரை வீரர்கள்' என்று அவள் கூச்சலிட்டாள்.

கெராசிமும் வேலைக்காரனும் அலெக்ஜீவிச்சை விட்டு விட்டார்கள். அமைதியாய் இருந்த அந்த தாழ்வாரத்தில் இப்பொழுது முன் கதவை பலர் தட்டும் சப்தம் கேட்டது.

11

28

தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றுகிற வரையில் தாம் யார் என்பதையோ, தமக்கு பிரஞ்சு மொழி தெரியும் என்பதையோ வெளியிடக் கூடாது என்று பீயர் தீர்மானித்திருந்தார். ஆகவே, பிரஞ்சுக்காரர்கள் வீட்டிற்குள் நுழைந்ததும், தம்மை மறைத்துக் கொள்ள வேண்டும் என்று பாதி திறந்திருந்த அந்த தாழ்வாரக் கதவுக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்தார். ஆனால், பிரஞ்சுக்காரர்கள் நுழைந்த பின்பும், பீயர் மறைந்துகொள்ளவில்லை. ஒரு தடுக்க முடியாத ஆச்சரியம் அவரை அங்கே நிற்கும்படி செய்தது.

அங்கே இரண்டு பேர்கள் வந்தார்கள். ஒருவர் அதிகாரி. அவர் உயரமாகவும், லட்சணமாகவும் ராணுவத் தோரணையில் இருந்தார். மற்றொருவன் ஒரு சிப்பாய்; குட்டையாகவும், ஒல்லியாகவும், கன்னங்கள் ஒட்டியும், மந்தமான தோற்றத்துடன் இருந்தான். அந்த அதிகாரி ஒரு தடி மீது சாய்ந்துக்கொண்டு, லேசாக நொண்டிக் கொண்டு முதலில் வந்தார். சில அடிகள் எடுத்து வைத்ததும் அவர் நின்றார். அந்த வீடு வசிப்பதற்கு சௌகர்யமானது என்று அவருக்குக் காணப்பட்டதாக தோன்றியது. உடனே வாசலில் நின்று கொண்டிருந்த சிப்பாய்களைப் பார்த்து, உரக்க குரலில் குதிரைகளைக் கட்டும்படி உத்தரவிட்டார். அதை செய்து முடித்ததும், அந்த அதிகாரி தமது முழங்கையை உயர்த்தி, மீசையை முறுக்கி விட்டுக்கொண்டு, தமது தொப்பியில் கையை வைத்து மரியாதை செய்தார்.

'எல்லாருக்கும் காலை வந்தனம்!' என்று அவர் மகிழ்ச்சியோடு சொல்லி, புன்முறுவலோடு சுற்றிலும் பார்த்தார்.

ஒருவரும் பதில் சொல்லவில்லை.

'நீர்நான் இங்கே எஜமானரா?' என்று அந்த அதிகாரி கெராசிமை கேட்டார்.

பீதியும் கேள்விக் குறியும் கொண்ட தோற்றத்தோடு அந்த அதிகாரியை கெராசிம் நோக்கினார்.

'விடுதிகள், விடுதிகள், தங்கும் இடங்கள்' என்று அந்த அதிகாரி சொல்லிவிட்டு, தயவும் இனிய சுபாவமும் கொண்ட புன் முறுவலோடு அந்த சிறிய மனிதரை நோக்கினார். 'பிரஞ்சுக்காரர்கள் நல்ல மனிதர்கள். எதற்காக இப்படி கோபமாய் இருக்கிறாய்? நாம் சண்டை போட்டுக்கொள்ள வேண்டாம், பழைய பேர்வழியே'

என்று அவர் சொல்லி, பீதியுற்று மௌனமாய் இருந்த கெராசி மின் தோளைத் தட்டினார். 'நல்லது, இந்த வீட்டில் பிரஞ்சு பேசுகிறவர்கள் ஒருவரும் இல்லையா?' என்று அவர் மீண்டும் பிரஞ்சுமொழியிலேயே கேட்டு சுற்றிலும் பார்த்தபோது பீயரின் கண்களை சந்தித்தார். அந்த வாசலில் இருந்து பீயர் அப்புறமாகப் போனார்.

மீண்டும் அந்த அதிகாரி கெராசிமை நோக்கி அந்த வீட்டிலுள்ள அறைகளை தமக்குக் காட்டும்படி கேட்டார்.

'எஜமான், இங்கே இல்லை - ஒன்றும் புரியவில்லை... நான், நீர்...' என்று கெராசிம் தமது வார்த்தைகளை புரியக்கூடிய விதத்தில் சின்னாபின்னப்படுத்திக் கூறினார்.

இன்னமும் இளநகை காட்டிக்கொண்டிருந்த அந்த பிரஞ்சு அதிகாரி கெராசிமின் முகத்திற்கு முன்பாக தமது கைகளை விரித்துக் காட்டினார். அதாவது, தமக்கும் அவர் சொல்லுவது புரியவில்லை என்பதைக் காட்டினார். பின்னால் நொண்டி நொண்டி நடந்து கொண்டு பீயர் நின்றுகொண்டிருந்த வாசலுக்குப் போனார். அங்கிருந்து போய் தம்மை மறைத்துக்கொள்ள வேண்டும் என்று பீயர் விரும்பினார். என்றாலும், அந்த வினாடியில் சமையல் அறையின் வாசலில், தமது கையில் கைத்துப்பாக்கியோடு அலெக்ஜீவிச் தோன்றியதை அவர் கண்டார். பைத்தியக் காரனுக்குரிய தந்திரத்தோடு அலெக்ஜீவிச் அந்த பிரஞ்சுக்காரரைப் பார்த்துவிட்டு, கைத்துப்பாக்கியை உயர்த்தி குறி பார்த்தார்.

'அவர்களை அழியுங்கள்' என்று அந்த குடிகாரர் ஊளையிட்டு துப்பாக்கியின் குதிரையை அமுக்குவதற்கு முயற்சித்தார். அந்த ஊளையைக் கேட்டதும் அந்த அதிகாரி திரும்பிப் பார்த்தார். அதே வினாடியில் அலெக்ஜீவிச் மீது பீயர் பாய்ந்தார். துப்பாக்கியை பீயர் பிடித்து, அதை மேல் நோக்கி தட்டிய சமயத்தில் அவன் குதிரை மீது அலெக்ஜீவிச் தமது விரல்களால் அழுத்தினார். உடனே காது செவிடு படும்படியான ஒரு சப்தம் கேட்டது; எல்லாரும் புகையினால் மூடப்பட்டார்கள். அந்த பிரஞ்சுக்காரர் முகம் வெளிறி வாசலை நோக்கி ஓடினார்.

அந்த கைத்துப்பாக்கியை பிடுங்கி கீழே வீசிய பின்பு, பீயர் அந்த அதிகாரியிடம் ஓடினார். தமக்கு பிரஞ்சு மொழி தெரியும் என்பதை காட்டக்கூடாது என்று அவர் தீர்மானித்திருந்ததை மறந்து, அந்த அதிகாரியிடம் பிரஞ்சு மொழியில் பேசினார்.

'உமக்கு காயம் ஏற்படவில்லையே?' என்று கேட்டார்.

'எனக்கு ஏற்படவில்லை' என்று அந்த பிரஞ்சு அதிகாரி பதில் சொல்லி, தம்மை சோதித்து பார்த்துக்கொண்டார். 'இந்த தடவை அதிருஷ்டவசமாக நான் தப்பினேன்' என்று அவர் கூறி, சுவரில் ஏற்பட்டிருந்த சேதத்தை சுட்டிக் காட்டினார். 'அந்த மனிதன் யார்?' என்று அவர் கேட்டு, கடுமையோடு பீயரை நோக்கினார்.

'ஓ, நடந்த விஷயத்திற்காக நான் உண்மையிலேயே மனக்கஷ்டம் அடைகிறேன்' என்று பீயர் வேகமாய் சொன்னார். தாம் செய்ய உத்தேசித்திருக்கும் தமது நோக்கத்தை அச்சமயம் மறந்தார். 'அவர் ஒரு அதிருஷ்டம் கெட்ட பைத்தியக்காரர். அவர் என்ன செய்கிறார் என்பதை அவர் அறியார்.'

அலெக்ஜீவிச்சிடம் அந்த அதிகாரி நெருங்கி, அவருடைய கழுத்துப் பட்டையால் அவரை பற்றினார்.

திறந்த வாயோடு சுவரோடு சாய்ந்து நின்ற அலெக்ஜீவிச், கீழே விழப் போகிறவரைப் போல அசைந்தாடினார்.

'கொள்ளைக்காரனே, இதற்கு நீ தண்டனையை அனுபவிப்பாய்' என்று அந்த பிரஞ்சுக்காரர் சொல்லி அவரை விட்டுவிட்டார். 'வெற்றிக்குப் பின்னால் பிரஞ்சுக்காரர்களாகிய நாங்கள் கருணையோடு இருப்போம். ஆனால், துரோகிகளை நாங்கள் மன்னிக்க மாட்டோம்' என்று அவர் ஒரு சோகமான பெருந்தன்மை பார்வையோடு கூறிவிட்டு தமது முஷ்டியை காட்டினார்.

அந்த குடிகார உதவாக்கரையைப் பற்றி கவனிக்க வேண்டாம் என்று அந்த அதிகாரியை இணங்கும்படி செய்வதற்காக அவரிடம் பிரஞ்சு மொழியிலேயே பீயர் பேசிக்கொண்டிருந்தார். அந்த பிரஞ்சுக்காரர் அதே மாதிரியான சோகத் தோற்றத்தோடு மௌனமாக கேட்டுக்கொண்டிருந்தார். திடீரென்று ஒரு புன்னகையோடு பீயரை திரும்பிப் பார்த்தார். சில வினாடிகள் மௌனமாக அவரை பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய லட்சணமான முகத்தில் அற்புதமான கனிவு தோன்ற பீயரிடம் தமது கையை நீட்டினார்.

'நீர் எனது உயிரைக் காப்பாற்றினீர். நீர் ஒரு பிரஞ்சுக்காரர்' என்று அவர் சொன்னார்.

ஒரு பிரஞ்சுக்காரர் அம்மாதிரிதான் நினைப்பார். ஏனெனில், ஒரு பிரஞ்சுக்காரர்தான் அம்மாதிரி ஒரு பெரிய காரியத்தை செய்து கேப்டன் திருவாளர் ராம்பல்லினுடைய உயிரை காப்பாற்றுவதற்கு, உண்மையிலேயே அந்த பெரிய செய்கையை செய்வதற்கு முடியும் என்று பிரஞ்சுக்காரர்கள் நினைப்பது வழக்கம். ஆனால், அந்த முடிவு எவ்வளவு சந்தேகம் இல்லாததாய் இருந்தபோதிலும், அந்த முடிவின் மீது அந்த அதிகாரியினுடைய நம்பிக்கை அமைந்திருந்த

போதிலும், உண்மை விஷயத்தை அவர் அறிந்து கொள்ள வேண்டியது அவசியம் என்று பீயர் நினைத்தார்.

'நான் ஒரு ருஷ்யன்' என்று உடனே அவர் சொன்னார்.

'சரி, சரி, சரி. அதையெல்லாம் மற்றவர்களுக்குச் சொல்லும்' என்று அந்த அதிகாரி கூறி, தமது விரலை மூக்கிற்கு முன்பாக ஆட்டி புன்சிரிப்பு காட்டினார். 'அதைப் பற்றியெல்லாம் நீர் இப்பொழுது எனக்கு சொல்லவேண்டும். ஒரு சுய தேசத்தவரை சந்திப்பதற்காக நான் மகிழ்ச்சி கொள்ளுகிறேன். நல்லது, இந்த மனிதரை இப்பொழுது நாம் என்ன செய்யலாம்?' என்று ஒரு சகோதரரிடம் பேசுவதைப் போல பீயரிடம் அவர் பேசினார்.

பீயர் பிரஞ்சுக்காரராக இல்லாமல் இருந்த போதிலும், மனித குலத்தில் மிகச் சிறந்த சாதிப் பெயரை (பிரஞ்சுக்காரர் என்ற பெயரை) அவர் பெற்றுவிட்ட பின்பு, அவரால் அதை துறக்க முடியாது என்பது போல அந்த அதிகாரியின் பார்வையும் தொனியும் இருந்தன. அவர் கேட்ட கடைசி கேள்விக்கு பீயர் மீண்டும் விளக்கம் சொன்னார். அலெக்ஜீவிச் என்பவர் யார் என்பதையும், அவர்கள் வருவதற்கு சற்று முன்புதான் அந்த குடிகார உதவாக்கரை கைத் துப்பாக்கியை பற்றியதாகவும், அவரிடமிருந்து அந்த கைத்துப்பாக்கியைப் பிடுங்குவதற்கு அவகாசம் இல்லையென்றும், ஆகவே அந்த காரியத்திற்காக தண்டனை எதுவும் கொடுக்க வேண்டாம் என்றும் அந்த அதிகாரியை கேட்டுக்கொண்டார்.

அந்த பிரஞ்சுக்காரர் தமது மார்பை விரித்து தமது கையை கம்பீரமாக ஆட்டினார்.

'நீர் எனது உயிரைக் காப்பாற்றினீர். நீர் ஒரு பிரஞ்சுக்காரர். அவருக்கு மன்னிப்பு கொடுக்கவேண்டும் என்று நீர் கேட்கிறீர் அல்லவா? அப்படியே நான் கொடுக்கிறேன். அந்த மனிதரை அழைத்துப் போங்கள்' என்று அவர் வேகமாகவும், உற்சாகமாகவும் கூறினார். தமது உயிரைக் காப்பாற்றியதற்காக ஒரு பிரஞ்சுக்காரராக உயர்த்தப்பட்ட பீயரின் கையை பற்றிக்கொண்டு அறைக்குள் அவரோடு போனார்.

முற்றத்தில் நின்ற சிப்பாய்கள் வெடிகுண்டு சப்தத்தைக் கேட்டு ஆளோடிக்கு ஓடிவந்து என்ன நடந்தது என்று கேட்டார்கள். குற்றம் செய்தவர்களை தண்டிக்க தாங்கள் தயாராய் இருப்பதாக அவர்கள் தெரிவித்தார்கள். ஆனால், அந்த அதிகாரி கடுமையோடு அவர்களை நிறுத்தி வைத்தார்.

'தேவையானபோது உங்களை நான் அழைக்கிறேன்' என்று அவர் சொன்னார்.

அந்த சிப்பாய்கள் வெளியே போனார்கள். அந்த அதிகாரியுடன் வந்த சிப்பாய்ச் சேவகன், இதற்கிடையில் சமையல் அறைக்குப் போய்விட்டு அந்த அதிகாரியிடம் வந்தான்.

'கேப்டன், இங்கே சமையல் அறையில் சூப் இருக்கிறது. இறைச்சியும் இருக்கிறது. அவற்றை நான் கொண்டு வரலாமா?' என்று கேட்டான்.

'ஆம், அவற்றோடு கொஞ்சம் ஒயினையும் கொண்டு வா.'



அந்த பிரஞ்சு அதிகாரி பீயருடன் அறைக்குள் சென்றதும், தாம் பிரஞ்சுக்காரர் அல்ல என்பதையும், தாம் அங்கிருந்து போக விரும்புவதையும் அவரிடம் சொல்ல வேண்டியது தமது கடமை என்று பீயர் நினைத்தார். ஆனால், அவைகளை காதில் போட்டுக் கொள்ள அந்த அதிகாரி மறுத்து விட்டார். தமது உயிரை காப்பாற்றியதற்காக பீயரிடம் பணிவோடும், சௌஜன்யத்தோடும், இனிமையான சுபாவத்தோடும், உண்மையிலேயே நன்றியோடும் அவர் நடந்து கொண்டதால், அவருடைய வேண்டுகோளை மறுப்பதற்கு பீயரால் முடியவில்லை. ஆகவே, அவர்கள் நுழைந்த முதல் அறையில் அவரோடு பீயரும் அமர்ந்தார். தாம் பிரஞ்சுக்காரர் அல்ல என்பதை பீயர் அழுத்தமாக சொல்லியபோது, மிகச் சிறப்பான அந்த சாதிப்பெயரை பீயர் எதற்காக மறுக்கிறார் என்பதை, அந்த கேப்டனால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே அவர் தமது தோள்களை குலுக்கினார்; தாம் ஒரு ருஷ்யர் என்ற பெயரால்தான் இருக்கவேண்டுமென்று பீயர் விரும்புவதாய் இருந்தால், அப்படியே இருக்கட்டும் என்றும், ஆனால், எது எப்படி இருந்தாலும், தம்முடைய உயிரைக் காப்பாற்றியதற்காக அவர் எப்பொழுதும் பீயருக்கு நன்றி உடையவராய் இருப்பார் என்றும் அந்த அதிகாரி சொன்னார்.

இந்த மனிதருக்கு மற்றவர்களுடைய உணர்ச்சிகளை அறியக் கூடிய திறமை சிறிதாவது இருந்தால், பீயருடைய உணர்ச்சிகளை அவர் அறிந்திருந்தால், பீயர் அவரை விட்டுப் போயிருப்பார். ஆனால், தம்மைத் தவிர வேறு எதையும் அறிய முடியாத மடமை அவருக்கு இருந்தபடியால், பீயரால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

'ஒரு பிரஞ்சுக்காரராகவோ, அல்லது மாறு வேஷம் போட்டிருக்கும் ஒரு ருஷ்ய இளவரசராகவோ, நீர் இருக்க வேண்டும்' என்று அவருடைய அழுக்குப் படிந்த சிவந்த உடையையும், அவர் விரலில் காணப்பட்ட மோதிரத்தையும் பார்த்த அந்த அதிகாரி சொன்னார். 'உம்மால்தான் எனது உயிர் தப்பியது. ஆகவே, எனது நட்பை நீர் ஏற்றுக்கொள்ளும். உதவியையோ, அல்லது அவமரியாதையையோ ஒரு பிரஞ்சுக்காரன் எப்பொழுதும் மறப்பதில்லை. எனது நட்பை நீர் ஏற்றுக்கொள்ளும். இவ்வளவுதான் நான் சொல்லக்கூடியது.'

அந்த அதிகாரியின் குரலில், அவருடைய முகத்தோற்றத்தில், அவருடைய அசைவுகளில் மிகுந்த இனிய சுபாவமும் கண்ணியமும் காணப்பட்டன. ஆகவே, அந்த பிரஞ்சுக்காரரின் இளநகையைப் பார்த்து, பீயர் தம்மை அறியாமலேயே இளநகை கொண்டு, தம்மிடம் நீட்டப்பட்ட அந்த அதிகாரியின் கையை அவர் அழுத்தினார்.

'கேப்டன் ராம்பல், 13 - வது பட்டாளத்தைச் சேர்ந்தவர், செப்டம்பர் 7-ந் தேதியன்று (செப்டம்பர் 7-ந் தேதி என்பது புதிய தேதி. பழைய தேதிப்படி அது ஆகஸ்டு 26-ந் தேதியாகும். அன்று தான் பாராடினோ போர் நடந்தது.) நடந்த காரியத்திற்காக ஷெவாலியர் பதக்கம் பெற்றவர்' என்று அவர் தம்மைத் தாமே பீயருக்கு அறிமுகப்படுத்தினார். அவருடைய மீசைக்குக் கீழாகவுள்ள உதடுகள், ஒரு திருப்தியான, அடக்க முடியாத புன்னகையோடு சுழித்தன. 'இப்பொழுது அந்தப் பைத்தியக் காரனின் தோட்டா என்னுடைய உடம்பில் நுழைந்து, நான் ஒரு டோலியில் படுத்துக்கொண்டிருக்காமல், இனிமையோடு உரையாடிக் கொண்டிருக்கிறேன்; அம்மாதிரி நான் உரையாடும் படியான பெருமையை பெற்ற உம்மைப்பற்றி, தயவு செய்து எனக்கு நீர் சொல்ல மாட்டீரா?'

தமது பெயரை சொல்ல முடியாது என்று பீயர் பதில் அளித்தார். மற்றொரு பெயரை உற்பத்தி செய்யவும், தமது பெயரை மறைப்பதற்காக ஏதாவது ஒரு காரணத்தை சொல்லுவதற்கும் பீயர் நாணத்தோடு முயற்சி செய்தார். ஆனால், அந்த பிரஞ்சுக்காரர் அவசரமாக அவரை இடைமறித்தார்.

'ஓ, தயவு செய்யும். உமது காரணங்கள் எனக்குப் புரிகிறது. நீர் ஒரு அதிகாரி... ஒரு வேளை மிக உயர்ந்த அதிகாரியாய் இருக்கலாம். எங்களுக்கு விரோதமாக ஆயுதம் எடுத்து நீர் போர் செய்திருக்கலாம். அதைப்பற்றி எல்லாம் எனக்குக் கவலையில்லை. எனது உயிரை நீர்

காப்பாற்றினீர்; அது ஒன்றே எனக்குப் போதும். நான் உமக்கு சேவை செய்ய காத்திருக்கிறேன். நீர் பிரபுக்கள் வம்சத்தைச் சேர்ந்தவர் என்று நினைக்கிறேன்' என்று அவருடைய தொனியில் ஒரு கேள்விக் குறியோடு பேச்சை முடித்தார். பீயர் தமது தலையை குனிந்தார். 'உமக்கு இஷ்டமிருக்குமானால், உமது ஞானஸ்நான பெயரைச் சொல்லலாம். நான் கேட்பதெல்லாம் அது ஒன்றுதான். திருவாளர் பீயர் என்று நீர் சொல்லுகிறீர்... ரொம்ப சிலாக்கியம். அது ஒன்றைத்தான் நான் அறிய விரும்புகிறேன்.'

இறைச்சியையும் முட்டை அடையையும் கொண்டு வந்து வைத்த பின்பு, ஒரு தேநீர் சாமோவாரையும், வாட்கா மதுவையும் கொண்டுவந்து வைத்தார்கள். எங்கோ ஒரு ருஷ்ய பாதாள அறையிலிருந்து எடுத்து வந்த ஒயினையும் மேஜை மீது வைத்தார்கள். தம்முடன் உணவு அருந்தும்படி பீயரை ராம்பல் கேட்டுக்கொண்டார். ஒரு ஆரோக்கியமான பசியோடு இருக்கும் மனிதர் உண்கிற மாதிரி ஆசையோடும், வேகமாகவும் உண்ண ஆரம்பித்தார். தமது பலமான பற்களால் உணவை வேகமாக சவைத்துக் கொண்டு, அடிக்கடி தமது உதடுகளை நக்கி, 'ரொம்ப சிலாக்கியமானது, திவ்யமானது' என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவருடைய முகம் சிவந்து, வியர்த்துக் காணப்பட்டது. பீயரும் பசியோடு இருந்தபடியால் மகிழ்ச்சியோடு அவருடன் உணவு அருந்தினார். வில்லைச் சேவகனான மாரெல் என்பவன், ஒரு வெந்நீருள்ள பாத்திரத்தில் ஒரு புட்டி கிளாரெட் என்ற சிவப்பு பிரஞ்சு ஒயினை வைத்துக் கொண்டு வந்தான். சமையல் அறையிலிருந்து கிவாஸ் என்ற மதுவிலும் ஒரு புட்டியை கொண்டு வந்தான். அந்த மதுவை ஏற்கெனவே பிரஞ்சுக்காரர்கள் அறிவார்கள். அதற்கு ஒரு தனிப்பெயரும் கொடுத்திருந்தார்கள். அதாவது, அதை 'பன்றியின் லெமனேட்' என்று அழைத்தார்கள். ஆனால் ரை தானியத்திலிருந்து தயாரிக்கப்படும். அந்த கிவாஸ் மதுவைப்பற்றி மாரெல் சிலாக்கியமாகப் பேசினான். ஆனால், கேப்டனிடம் மாஸ்கோ வழியாக வரும் போது கைப்பற்றிய ஒயின் இருந்தபடியால், கிவாஸ் மதுவை மாரெலுக்கு கொடுத்துவிட்டார். அந்த கிளாரெட் ஒயின் புட்டியை ஒரு மேஜைக் கைக் குட்டையால் கழுத்து வரையில் மூடி, அதிலிருந்து தமக்கும் பீயருக்கும் ஒயினை விட்டார். அவருடைய தணிந்த பசியும் ஒயினும் சேர்ந்து, அந்த கேப்டனை அதிக உற்சாகமடையும்படி செய்தன. அதனால் விடாமல் அவர் பேசிக்கொண்டே இருந்தார்.

'ஆம், எனது அன்புள்ள திருவாளர் பீயரே, அந்த பைத்தியக்காரனிடமிருந்து என்னை நீர் காப்பாற்றியதற்காக உமக்கு

ஒரு சிறந்த பரிசுத்த மெழுகு வத்தியை நான் கொடுக்க வேண்டும்... என்னுடைய உடம்பில் ஏற்கெனவே ஏராளமான தோட்டாக்கள் இருக்கின்றன; நீரே பாரும். வாக்ராமில், இந்த இடத்தில் ஒரு தோட்ட அடித்தது. (தமது பக்கவாட்டை அவர் தொட்டுக் காட்டினார்). ஸ்மாலென்ஸ்கில், இரண்டாவது தோட்டா அடித்தது. (அவருடைய கன்னத்திலுள்ள தழும்பை அவர் காட்டினார்). இந்த கால்பிரயாணம் செய்ய விரும்பவில்லை என்பதை நீரே பார்க்கலாம். மாஸ்காவா (பாராடினோவை பிரஞ்சுக்காரர்கள் மாஸ்காவா என்று சொல்லி வந்தார்கள்) என்ற இடத்தில் 7-ந் தேதி நடந்த மகா பெரிய போரில், இந்த காலில் அடிப்பட்டது. அட கடவுளே, அது ரொம்ப பிரமாதமான போர். அங்கு நடந்த நெருப்பு மழை, கண் கொள்ளா காட்சி. எங்களுக்கு அங்கே நீங்கள் செய்து வைத்த வேலை, ரொம்ப ரொம்ப கடினமானது. அதைப்பற்றி நீங்கள் பெருமை கொள்ளலாம். எனக்கு இப்பொழுது இருக்கும் இருமல், அங்கே ஏற்பட்டதுதான். என்றாலும், அம்மாதிரி ஒரு போரில் மீண்டும் கலந்து கொள்ளுவது என்றால், நாளையே நான் தயாராய் இருப்பேன். அந்தப் போரை நேரில் பார்க்காதவர்களுக்காக நான் இரங்குகிறேன்.'

'நான் அங்கே இருந்தேன்' என்று பீயர் சொன்னார்.

'அப்படியா! உண்மையாகவா? அப்படியானால், ரொம்ப விசேஷம். நிச்சயமாக நீங்கள் தீரமான எதிரிகள். அந்த மகா பெரிய அரண்கள் ரொம்ப நன்றாக எதிர்த்து நின்றன. அந்த இடத்தில் எங்களுக்கு ஏராளமக நஷ்டத்தை உண்டுபண்ணி விட்டீர்கள். அங்கே நான் மூன்று தடவைகள் போனேன். மூன்று தடவைகளில் அங்கிருந்த பீரங்கிகளை நெருங்கினோம். மூன்று தடவைகளிலும், காகித பொம்மைகளைப் போல, எங்களை தூக்கி எறிந்து விட்டார்கள். திருவாளர் பீயரே, அது ரொம்ப அழகாய் இருந்தது. அட கடவ்ுளே, உங்கள் கைக் குண்டு வீரர்கள் ரொம்ப சிலாக்கியமானவர்கள். ஆறு தடவைகளில் அவர்கள் தங்கள் அணி வரிசையை நெருக்கி அமைத்துக் கொண்டு, ஏதோ கண்காட்சிக்குப் போவதைப் போல முன்னேறினார்கள். சிலாக்கியமான பேர்வழிகள்! எங்களுடைய நேப்பிள்ஸ் மன்னர் இருக்கிறாரே, அவர் உள்ளதை உள்ளபடியே அறியக்கூடியவர். அவர் கூட அவர்களைப் பார்த்து, 'தீரர்களே' என்று கூச்சலிட்டார். ஹா, ஹா! ஆகவே, நீர் கூட எங்களைப் போல ராணுவத்தைச் சேர்ந்தவர்தான்' என்று புன்சிரிப்போடு கூறி, ஒரு வினாடி யோசித்தார். 'அவ்வளவுக்கு அவ்வளவு நல்லதுதான், அவ்வளவுக்கு அவ்வளவு நல்லதுதான், திருவாளர் பீயரே! போரில் பயங்கரமாய்

இருப்பார்கள். ஆனால், சீமாட்டிகளிடம் மரியாதையாக நடப்பார்கள் (கண்ணடித்து புன்சிரிப்பு காட்டினார்). அதுதான் பிரஞ்சுக்காரர்கள். திருவாளர் பீயரே, அப்படித்தானே?' அந்த கேப்டன் வெள்ளை மனதோடு, நல்ல சுபாவத்தோடு தம்முடைய நிலைமையைக் கண்டு மிகுந்த திருப்தி கொண்டிருந்த படியால், பீயரும் அவரைப் பார்த்து கண்ணடித்தார். 'சீமாட்டிகளிடம் மரியாதையாக நடப்பார்கள்' என்ற வார்த்தைகள் கேப்டனின் சிந்தனையை மாஸ்கோவின் தற்கால நிலைமைக்குத் திருப்பியது.

'மற்றொரு விஷயம். தயவு செய்து எனக்குச் சொல்லும். பெண்கள் எல்லாரும் மாஸ்கோவை விட்டு போய் விட்டார்கள் என்பது உண்மையா? என்ன விசித்திரமான போக்கு! அவர்கள் எதற்காக பயப்பட வேண்டும்?'

'ருஷ்யர்கள் பாரிஸுக்குள் நுழைந்தால், அதை விட்டு பிரஞ்சு சீமாட்டிகள் வெளியே போக மாட்டார்களா?' என்று பீயர் கேட்டார்.

'ஹா, ஹா, ஹா!' என்று அந்த பிரஞ்சுக்காரர் மகிழ்ச்சியோடு உற்சாகமாக கூச்சலிட்டு பீயரை தோளில் தட்டிக் கொடுத்தார். 'எப்பேர்ப்பட்ட வார்த்தை பேசினீர்! பாரிஸ்?... ஆனால், பாரிஸ், பாரிஸ்...'

'பாரிஸ்... உலகத்தின் தலைநகர்' என்று அந்த வாக்கியத்தை பீயர் முடித்தார்.

அந்த கேப்டன் பீயரை நோக்கினார். பேசிக்கொண்டிருக்கும் போதே, மத்தியில் திடீரென்று நிறுத்தி தமது சிரிக்கும் இனிமையான கண்களால் கூர்மையாக நோக்குவது அவருக்கு ஒரு வழக்கம்.

'நல்லது, நீ மட்டும், நீர் ஒரு ருஷ்யர் என்று சொல்லாமல் இருந்தால், நீர் ஒரு பாரிஸ்காரர் என்பதாக நான் பந்தயம் கட்டுவேன். உம்மிடம் அது இருக்கிறது... அந்த 'அது' என்பது என்னதென்று எனக்குத் தெரியவில்லை...' என்று பாராட்டி விட்டு, அவர் மீண்டும் மௌனமாக பீயரை நோக்கினார்.

'நான் பாரிஸில் இருந்திருக்கிறேன். பல வருஷங்கள் அங்கே தங்கி இருந்திருக்கிறேன்' என்றார் பீயர்.

'ஓ, ஆம். அது தெளிவாகத் தெரிகிறது. பாரிஸ்!... பாரிஸை அறியாத ஒருவன், ஒரு காட்டுமிராண்டி ஒரு பாரிஸ்காரனை ஆறு மைல்களுக்கு அப்பால் இருந்தே நீர் கண்டு கொள்ளலாம். பாரிஸ்தான் டால்மா, டச்சினாயிஸ், பாட்டியர், சார்பான், சாலைகள்' என்று சொல்லி வந்தவர் தமது பேச்சு ஆரம்பித்தை விட பலவீனமாகி வருவதைக் கண்டு வேகமாகப் பேச ஆரம்பித்தார்:

'உலகத்தில் ஒரே ஒரு பாரிஸ்தான் இருக்கிறது. நீர் பாரிஸுக்குப் போய் இருந்தும் இன்னமும் ருஷ்யராகவே இருக்கிறீர். நல்லது, அதற்காக உம்மீதுள்ள மதிப்பு எனக்குக் குறைந்து போய்விடாது.'

தாம் குடித்த ஒயினினால் ஏற்பட்ட கிரக்கமும், பல நாட்கள் மனக்கஷ்டங்களினால் கழிந்ததும் சேர்ந்து, அந்த உற்சாகமும் நல்ல சுபாவமும் உள்ள மனிதரின் பேச்சில் தம்மை அறியாமலேயே மகிழ்ச்சி கொள்ளும்படி பீயரைச் செய்தன.

'உங்கள் சீமாட்டிகளைப் பற்றி பேசுவோம். அவர்கள் அழகானவர்கள் என்று நான் கேள்விப்படுகிறேன். பிரஞ்சு ராணுவம் மாஸ்கோவில் இருக்கும்போது, இந்த சீமாட்டிகள் இம்மாதிரியாக சமவெளியில் போய் தங்களை மறைத்துக் கொள்ளுவது எவ்வளவு மோசமான விஷயமாய் இருக்கிறது. எப்பேர்ப்பட்ட சந்தர்ப்பதை அந்த மங்கைகள் நழுவ விட்டு விட்டார்கள். உங்களுடைய விவசாயிகள் - அது வேறு விஷயம். ஆனால், நாகரீகம் அடைந்த நீங்கள் எங்களைப் பற்றி இன்னும் நன்றாக அறிந்திருக்க வேண்டும். நாங்கள் வீயன்னா, பெர்லின், மாட்ரிட், நேப்பிள்ஸ், ரோம், வார்சா ஆகிய உலகத்துத் தலைநகரங்களையெல்லாம் கைப்பற்றினோம்... எங்கள் மீது பயம் இருக்கிறது, என்றாலும் எங்கள் மீது அன்பும் கொள்ளுகிறார்கள். சிநேகத்திற்கு நாங்கள் மிகவும் சிறந்தவர்கள். மேலும் எங்கள் சக்கரவர்த்தி' என்று அவர் பேசிய போது, பீயர் இடைமறித்தார்.

'சக்கரவர்த்தி' என்று பீயர் திருப்பிச் சொன்னார். அவருடைய முகம் திடீரென்று துக்கமாகவும், சங்கோஜமாகவும் மாறியது. 'சக்கரவர்த்தி...?'

'சக்கரவர்த்தியா? தாராளம், தயவு, நீதி, ஒழுங்கு, மேதை - இவையெல்லாம் அடங்கியவர்தான் சக்கரவர்த்தி. ராம்பலாகிய நான் உமக்கு இம்மாதிரி சொல்லுகிறேன்... நான் எட்டு வருஷங்களுக்கு முன்பாக அவருடைய விரோதியாய் இருந்தேன். என்னுடைய தந்தை ஒரு வெளியேறிய கோமகன்... ஆனால், அந்த சக்கரவர்த்தி என்னை வெற்றி கொண்டு விட்டார். என்னை அவர் கைப்பற்றிக் கொண்டார். பிரான்ஸ் மீது அவர் பொழிந்துள்ள பெருமையையும், மகத்துவத்தையும் பார்த்த பின்பு, என்னால் எதிர்த்து நிற்க முடியவில்லை. எங்களுக்கெல்லாம் புகழ் மாலைகளை தேடிக் கொடுக்கவே அவர் விரும்புகிறார் என்பதை நான் அறிந்த பின்பு, 'அவர்தான் ஒரு மன்னர்' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். அதன் பின்னால், என்னை அவருக்கு அர்ப்பணம் செய்து விட்டேன். இதுதான் விஷயம். ஓ, ஆம். எனது

அன்பானவரே, கடந்த யுகங்களிலும் சரி, இனி வரப்போகும் யுகங்களிலும் சரி, அவர்தான் எல்லாரையும் விட மிகப் பெரிய மனிதர்.'

'அவர் மாஸ்கோவில்தான் இருக்கிறாரா?' என்று பீயர் தடுமாற்றத்தோடு, ஒரு குற்றமுள்ள தோற்றத்தோடு கேட்டார்.

அவருடைய குற்றமுள்ள தோற்றத்தை அந்த பிரஞ்சுக்காரர் பார்த்து புன்னகை கொண்டார்.

'இல்லை, நாளையன்றுதான் அவர் பிரவேசமாகிறார்' என்று பதில் சொல்லிவிட்டு, மேலும் பேசினார்.

வெளி வாசலில் கேட்ட பல குரல்களினாலும், அவர்கள் இருக்கும் அறைக்கு மாரெல் வந்ததாலும், அவர்களுடைய உரையாடல் தடைப்பட்டது. கேப்டனின் குதிரைகள் கட்டப் பட்டிருக்கும் முற்றத்தில், தங்களுடைய குதிரைகளையும் கட்ட வேண்டும் என்று உர்ட்டெம்பர்க் குதிரை வீரர்கள் வந்து சொல்லுவதாக மாரெல் கூறினான். அந்த குதிரை வீரர்களிடம் பிரஞ்சு மொழியில் பேசியதாலும், அவர்கள் அதை புரிந்து கொள்ள முடியாததாலும்தான் இந்த தொல்லை ஏற்பட்டது.

அவர்களுடைய பிரதான சார்ஜெண்டை கேப்டன் அழைத்தார். அவர்கள் எந்த பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், அவர்களுடைய தலைமை அதிகாரி யார் என்றும், ஏற்கெனவே குடியேறிய ஒரு இடத்தில் வந்து தங்களுக்கும் இடம் வேண்டும் என்று கேட்க அவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது என்றும், அந்த சார்ஜெண்டைப் பார்த்து கடுமையான தொனியில் கேட்டார். அந்த ஜெர்மனியருக்கு பிரஞ்சு மொழி அதிகமாய் தெரியாத படியால், முதல் இரண்டு கேள்விகளுக்கும் பதிலாக தம்முடைய பட்டாளத்தின் பெயரையும், பிரதான அதிகாரியின் பெயரையும் கூறினார். ஆனால், மூன்றாவது கேள்வியை அவர் புரிந்து கொள்ள முடியாததால், தம்முடைய ஜெர்மன் மொழியில் பிரஞ்சு மொழியைக் கலந்து பேசினார். அந்த பட்டாளத்தின் விடுதி அதிகாரியாக தாம் இருப்பதாகவும், வீடுகளை யெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக கைப்பற்றும்படி தமது கமாண்டர் உத்தரவிட்டிருப்பதாகவும் அவர் சொன்னார். பீயருக்கு ஜெர்மன் மொழி தெரியுமாகையால், அவர் சொல்லியதை கேப்டனுக்கு மொழி பெயர்த்துக் கூறினார். கேப்டன் கூறிய பதிலை அந்த உர்ட்டெம்பர்க் குதிரை வீரருக்கு ஜெர்மன் மொழியில் மொழி பெயர்த்து சொன்னார். தமக்குக் கூறிய விஷயத்தை அறிந்து கொண்டதும், அந்த ஜெர்மனியர் அதற்கு இணங்கி தமது வீரர்களை

வேறு இடத்திற்கு அழைத்துச் சென்றார்... முற்ற மண்டபத்திற்கு கேப்டன் சென்று உரத்த குரலில் பல உத்தரவுகளைப் பிறப்பித்தார்.

அவர் மீண்டும் அறைக்குத் திரும்பியபோது, பீயர் தமது கைகளில் தலையை வைத்துக் கொண்டு, முன்னால் இருந்த இடத்திலேயே இருந்தார். அவருடைய முகம் துன்பத்தைக் காட்டியது. உண்மையிலேயே அந்த வினாடியில் அவர் மனக் கஷ்டப்பட்டுக் கொண்டு இருந்தார். அவரை தனியாக விட்டு அந்த கேப்டன் வெளியே போனபோது, திடீரென்று அவர் இருக்கும் நிலைமையை உணர்ந்தார். மாஸ்கோவை கைப்பற்றியதற்காகவோ, அல்லது அதிருஷ்டமுள்ள அந்த வெற்றியாளர்கள் அங்கே எஜமானர்களாக அமர்ந்து அவருக்கு தயவு காட்டிக் கொண்டு இருப்பதற்காகவோ அவர் மனக்கஷ்டப்படவில்லை. அவை யெல்லாம் மனவருத்தப்படக் கூடியவையாய் இருந்தபோதிலும், அந்த வினாடியில் அவரைத் துன்புறுத்தி வந்தவை அவையல்ல; தம்முடைய சொந்த பலவீனத்தின் நினைப்புத்தான் அவரைத் துன்புறுத்தி வந்தது. அவர் குடித்த சில கோப்பைகள் ஒயினும், அந்த நல்ல சுபாவமுள்ள மனிதரின் உரையாடலையும், அவருடைய ஒருமுகப்பட்ட வியாகூல மனோபாவத்தை அழித்து விட்டன. சென்ற சில தினங்களாக இந்த மனோபாவத்தில்தான் அவர் இருந்தார்; அவருடைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு இந்த மனோபாவம் அவசியமானதாய் இருந்தது. கைத்துப்பாக்கியும், குத்துவாளும், விவசாயியின் கோட்டும் தயாராய் இருந்தன. மறு நாளன்று நெப்போலியன் அந்த பட்டணத்தில் பிரவேசிக்கிறார். அந்த கொடியோனை அழிக்க வேண்டியது ஒரு அவசியமும் பெருமையுமான காரியம் என்று பீயர் இன்னமும் கருதினார். ஆனால், அந்த காரியத்தை அவரால் செய்ய முடியாது என்று இப்பொழுது அவர் உணர்ந்தார். காரணம் என்ன என்பது அவருக்குத் தெரியவில்லை. ஆனால், அவருடைய நோக்கத்தை நிறைவேற்ற முடியாது என்று அவருக்கு ஒரு துர்சகுனம் தோன்றியது. தமக்குத் தோன்றும் தம்முடைய பலவீனத்திற்கு எதிராக அவர் போராடினார். ஆனால், அதில் அவர் வெற்றி பெற முடியாது என்று அவர் தெளிவில்லாத விதமாக உணர்ந்தார். பழிக்குப் பழி வாங்க வேண்டும், கொல்ல வேண்டும், தம்மையே தியாகம் செய்ய வேண்டும் என்பவை சம்பந்தமாக அவருடைய முந்தைய வியாகூல மனோநிலையானது, அவர் சந்தித்த முதல் மனிதருடன் ஏற்பட்ட தொடர்பினால், தூசியைப் போல கலைந்து போயிற்று.

ஒரு ராகத்தை சீட்டியடித்துக் கொண்டும், லேசாக கிந்திக் கொண்டும் அந்த அறைக்குக் கேப்டன் திரும்பி வந்தார்.

முன்பெல்லாம் பீயருக்கு குஷியாய் இருந்த அந்த பிரஞ்சுக்காரரின் வம்பளப்பு இப்பொழுது வெறுப்பாய் தோன்றியது. அவர் சீட்டியடிக்கும் ராகமும், அவருடைய நடையும், மீசையை அவர் முறுக்கி விடும் தோரணையும் இப்பொழு தெல்லாம் அருவருப்பாய் காணப்பட்டன. 'நான் உடனே போய் விடுவேன். நான் அவரிடம் இனி ஒரு வார்த்தை கூட பேச மாட்டேன்' என்று பீயர் நினைத்தார். அவர் இம்மாதிரி நினைத்த போதிலும், பழைய இடத்திலேயே இன்னமும் அவர் உட்கார்த்திருந்தார். ஒரு விசித்திரமான பலவீன உணர்ச்சி அந்த இடத்திலேயே அவரை கட்டிப் போட்டு விட்டது. அங்கிருந்து எழுந்து போய்விட அவர் விரும்பினார். ஆனால், அவரால் அம்மாதிரி செய்ய முடியவில்லை.

கேப்டனோ மிகுந்த உல்லாசமாய் இருந்தார். அந்த அறையில் இரண்டு தடவைகள் மேலும் கீழும் நடந்தார். அவருடைய கண்கள் ஜொலித்தன. அவர் ஏதோ ஒரு குஷியான விஷயத்தை நினைத்தவரைப் போல புன்முறுவல் கொண்டார். அவருடைய மீசை துடித்தது.

'அந்த உர்ட்டெம்பர்க் படையின் கர்னல் ரம்மியமானவர்' என்று திடீரென்று அவர் சொன்னார். 'அவர் ஒரு ஜெர்மனியர். என்றாலும், ஒரு அருமையான பேர்வழி... ஆனால், அவர் ஒரு ஜெர்மனியர்' என்று சொல்லி அவர் பீயரை நோக்கி அமர்ந்தார். 'மற்றொரு விஷயம். உமக்கு ஜெர்மன் மொழியும் தெரியுமோ?'

பீயர் மௌனமாக அவரைப் பார்த்தார்.

'தங்குமிடம் என்பதை ஜெர்மன் மொழியில் என்ன பெயர்?'

'தங்குமிடமா?' என்று பீயர் திருப்பிக் கேட்டார். 'தங்குமிடம் என்பதற்கு 'உன்டர்குன்ட்' என்பதுதான் ஜெர்மன் வார்த்தை.'

'எப்படி அதை நீர் உச்சரிக்கிறீர்?' என்று அந்த கேப்டன் வேகமாகவும் சந்தேகமாகவும் கேட்டார்.

'உன்டர்குன்ட்' என்று பீயர் திரும்பவும் சொன்னார்.

'ஆன்டெர்காப்' என்று கேப்டன் சொல்லி விட்டு, தமது மகிழ்ச்சிக் கண்களால் பீயரை சில வினாடிகள் நோக்கினார். 'இந்த ஜெர்மனியர்கள் முதல்தரமான முட்டாள்கள். நீர் அப்படி நினைக்கவில்லையா, திருவாளர் பீயரே?'

'நல்லது, நாம் இன்னும் ஒரு பாட்டில் இந்த மாஸ்கோ கிளாரெட்டை சாப்பிடுவோமா? இன்னொரு பாட்டிலை வெது வெதுப்பாக்கி மாரெல் நமக்குக் கொடுப்பான்!' என்று அவர் மகிழ்ச்சியோடு கூறினார்.

மெழுகு வத்திகளையும், ஒரு பாட்டில் ஒயினையும் மாரெல் கொண்டு வந்தான். மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் பீயரை கேப்டன் பார்த்தார். தமது நண்பரின் மனக்கஷ்டமான தோற்றம் அவர் உள்ளத்தில் பதிந்தது. உண்மையான வருத்தமும் அனுதாபமும் தமது முகத்தில் தோன்ற பீயரிடம் ராம்பல் சென்று குனிந்தார்.

'இப்பொழுது என்ன இவ்வளவு துக்கம்?' என்று அவர் சொல்லி, பீயரின் கையை தொட்டார். 'உமக்கு மனம் நோகும்படி நான் செய்து விட்டேனா? இல்லை, உண்மையில் என் மீது உமக்கு ஏதாவது கோபம் இருக்கிறதா?' என்று அவர் பீயரைக் கேட்டார். 'ஒரு வேளை இப்பொழுது இங்கே உள்ள நிலைமைகளைப் பார்த்து வருந்துகிறீரோ?'

பீயர் பதில் சொல்லவில்லை. ஆனால், நட்போடு அந்த பிரஞ்சுக்காரரின் கண்களை நோக்கினார். அந்த கண்களில் காணப்பட்ட அனுதாபம் அவருக்கு இனிமையாய் இருந்தது.

'உண்மையாகச் சொல்லுகிறேன். நான் உமக்கு எவ்வளவு கடமைப் பட்டிருக்கிறேன் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும்; நண்பர் என்ற பாசம் உம் மீது எனக்கு ஏற்படுகிறது. நான் ஏதாவது உமக்குச் செய்ய முடியுமா? அப்படியானால் எனக்கு உத்தரவு கொடும். வாழ்வதாய் இருந்தாலும் சரி, சாவதாய் இருந்தாலும் சரி, என்னுடைய நெஞ்சில் கையை வைத்து நான் இதைச் சொல்லுகிறேன்' என்று அவர் கூறிவிட்டு, தமது மார்பைத் தட்டினார்.

'உமக்கு வந்தனம்' என்று பீயர் கூறினார்.

விடுதி என்ற வார்த்தைக்கு ஜெர்மன் மொழியில் 'உன்டர் குன்ட்' என்று சொல்ல வேண்டும் என்பதை அறிந்தபோது, அந்த கேப்டன் எவ்வளவு உன்னிப்பாகப் பார்த்தாரோ, அதே மாதிரி இப்பொழுதும் உன்னிப்பாக பீயரைப் பார்த்தார். அவருடைய முகம் திடீரென்று பிரகாசம் அடைந்தது.

'நல்லது, அப்படியானால் நமது சிநேகிதத்திற்காக நான் குடிக்கிறேன்' என்று அவர் கூறி, உல்லாசத்தோடு இரண்டு கோப்பைகளில் ஒயினை ஊற்றினார்.

ஒரு கோப்பையை பீயர் எடுத்து காலி செய்தார். ராம்பலும் தம்முடைய கோப்பையை காலி செய்து விட்டு, மீண்டும் பீயரின் கையை அழுத்தி விட்டு, அந்த மேஜை மீது தமது முழங் கைகளில் சாய்ந்து கொண்டு சிந்தனா தோற்றத்தில் இருந்தார்.

'ஆம், எனது அன்புள்ள நண்பரே, விதியின் விசித்திரம் அம்மாதிரி இருக்கிறது. நான் ராணுவத்தில் சேர்ந்து போனபார்ட்டின்

சேவையில் (அப்படித்தான் அவரை நாங்கள் அழைத்து வந்தோம்) குதிரை வீரர்களின் ஒரு கேப்டனாக வருவேன் என்று யாராவது முன்னால் சொல்லியருக்க முடியுமா? என்றாலும், இங்கே - மாஸ்கோவில் நான் அவரோடு இருக்கிறேன். எனது அன்பானவரே, நான் உமக்கு ஒன்று சொல்ல வேண்டும்' என்று அவர், ஒரு நீளமான கதையைச் சொல்ல ஆரம்பிக்கிறவரைப் போல, சோர்வான, நிதானமான தொனியில் பேச ஆரம்பித்தார். 'என்னுடைய குடும்பத்தின் பெயர், பிரான்ஸில் ஒரு புராதனமான பெயராகும்.'

ஒரு பிரஞ்சுக்காரருக்குரிய சரளமான, விகற்பமற்ற, ஒளிவு மறைவு இல்லாத சுபாவத்தோடு, அவர் தம்முடைய முன்னோர்களைப் பற்றியும், தம்முடைய குழந்தைப் பருவம், வாலிபப் பருவம், பெரியவரான பருவம் ஆகியவைகளைப் பற்றிய சரித்திரத்தையும், தம்முடைய பந்துக்களைப் பற்றியும், பொருளாதார, குடும்ப விஷயங்களைப் பற்றியும் சொன்னார். அவர் சொல்லிய கதையில், 'அவருடைய பிரியமான தாயார்' சம்பந்தப்பட்ட விவரங்களே முக்கியமானவையாய் இருந்தன.

'ஆனால், அவை யெல்லாம் வாழ்க்கையின் பின்னணியேயாகும். உண்மையான விஷயம் என்பது காதல் - காதல்! நான் சொல்லுவது சரிதானே, திருவாளர் பீயரே?' என்று வர வர உற்சாகம் பெருகி கேட்டார். 'இன்னொரு கோப்பை வேண்டுமா?'

பீயர் மீண்டும் தமது கோப்பையை காலி செய்து விட்டு மூன்றாவது தடவையாக கோப்பையில் ஒயினை விட்டார்.

'ஓ, பெண்கள், பெண்கள்' என்று கேப்டன் சொன்னார். தமது பிரகாசமான கண்களால் பியரை நோக்கி, காதலைப் பற்றியும், தமது காதல் லீலைகளைப் பற்றியும் பேச ஆரம்பித்தார்.

அந்த அதிகாரியின் லட்சணமான, திருப்தியான முகத்தைப் பார்க்கிற போதும், பெண்களைப் பற்றி உற்சாகத்தோடு அவர் பேசுகிறதை பார்க்கிற போதும், அம்மாதிரி காதல் லீலைகள் அவரிடம் ஏராளமாய் இருந்திருக்கும் என்பதை ஒருவர் சுலபமாகக் கண்டு கொள்ளலாம். ராம்பல் சொல்லிய காதல் கதைகள் எல்லாம், பிரஞ்சுக்காரர்கள் விசேஷ மனோகரமும் காதல் கீதமும் இருப்பதாக நினைக்கக்கூடிய, அந்த மிருக இச்சை சுபாவத்தைக் கொண்டதாய் இருந்தன. என்றாலும், அவர் மிகுந்த சிரத்தையோடு தமது கதையை சொல்லிய விதத்தைப் பார்த்தால், அவர் ஒருவருக்குத் தான் அந்தக் காதலின் மனோகரங்கள் எல்லாம் தெரிந்திருந்ததைப் போல காணப்பட்டது. பெண்களைப் பற்றி அவ்வளவு நயமாக அவர் பேசியபடியால் பீயர் ஆவலோடு கேட்டுக்கொண்டிருந்தார்.

பிரஞ்சுக்காரர்கள் 'லே ஆமர்' என்று சொல்லும் காதலானது, பீயர் தமது மனைவியிடம் ஒரு காலத்தில் விரும்பிய கீழ்த்தரமான மிருக இச்சையல்ல; அல்லது நட்டாஷாவைப் பற்றி தமக்குத் தாமே அவர் மயக்கம் செய்து கொண்டிருக்கும் மனோகரமான காதலும் அல்ல என்று தெளிவாகத் தோன்றுகிறது. (இந்த இரண்டு விதமான காதல்களையும் ஒரே விதமாக ராம்பல் வெறுத்தார்: முதலாவது காதலை, வண்டிக்காரர்களின் காதல் என்றும், இரண்டாவது காதலை, அறிவில்லாதவர்களின் காதல் என்றும் அவர் கருதினார்). பிரஞ்சுக்காரர்கள் போற்றி வரும் அந்த 'லே ஆமர்' காதலில் பின் கண்டவை அடங்கி இருக்க வேண்டும்: அதாவது, ஒரு பெண்ணிடம் உள்ள சம்பந்தம் மிக முக்கியமாக இயற்கைக்கு விரோதமாய் இருக்க வேண்டும்; அந்தக் காதலும் பொருத்தமற்ற பற்பல விதமான சந்தர்ப்பங்கள் ஒன்றுகூடும்போது நிகழ வேண்டும்; அவைதான் அந்தக் காதல் உணர்ச்சிக்குப் பிரதானமான கவர்ச்சியைக் கொடுக்கின்றன.

இந்த விதமாக தமது 'லே ஆமர்' காதலைப் பற்றி அந்த கேப்டன் விவரிக்க ஆரம்பித்தார். ஒரு சீமாட்டியைப் பற்றி மனம் உருகி அவர் பேசினார். அந்த சீமாட்டிக்கு 35 வயதிருக்கும். கண்டோரை கலக்கும் அழகைக் கொண்ட அந்த சீமாட்டிக்கு, மனோகரமான, கபடமற்ற 17 வயது குமாரி இருந்தாள். அந்த இருவர் மீதும் கேப்டன் காதல் கொண்டார். தாயாரும் மகளும் போட்டி போட்டுக் கொண்டு தங்களுடைய தாராளத்தைக் காட்டி வந்தார்கள். கடைசியாக அந்தப் போராட்டத்தில், மகளுக்காக தாயார் தன்னையே தியாகம் செய்து, தன்னுடைய காதலருக்கே மகளை திருமணம் செய்து வைத்தாள். இந்த விஷயத்தை கேப்டன் சொல்லியபோது, அந்தக் காரியம் வெகு காலத்திற்கு முன்பு நடந்ததாய் இருந்த போதிலும், இப்பொழுதும் அது அவரை பரபரப்படையும்படி செய்தது. பின்னால் மற்றொரு சம்பவத்தை எடுத்துக் கூறினார். அந்தக் கதையில், ஒரு பெண்ணின் புருஷன் அவளுக்கு காதலனாகவும், தாம் கணவராகவும் நடந்து வந்த அனுபவங்களை சொன்னார். ஜெர்மனியில் இம்மாதிரியான பல விசித்திர அனுபவங்கள் ஏற்பட்டதைக் கூறினார். அந்த ஜெர்மனியில்தான் விடுதியை 'உன்டர் குன்ட்' என்று அழைக்கிறார்கள்; அங்கேதான் கணவர்கள் முட்டை கோஸ் ஊறுகாய்களை சாப்பிடுகிறார்கள்; இளம் பெண்கள் நிறமில்லாமல் காணப்படுகிறார்கள் என்று அவர் கூறினார்.

கடைசியாக அந்த கேப்டன் இன்னமும் தம் மனதில் புதுமையாக பதிந்திருந்த, போலந்தில் தாம் நடத்திய லீலையைப் பற்றி சொன்னார். முகம் ஒளிர் விட்டுக்கொண்டும், வேகமான கை

அசைப்புகளோடும் அவர் அதைக் கூறினார். ஒரு போலந்துக்காரரை உயிர் தப்பும்படி அவர் செய்தார். (கேப்டனுடைய கதைகளில் உயிரைக் காப்பாற்றும் சம்பவங்கள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன). அந்த போலந்துக்காரர் மனோகரமான தமது மனைவியை (பாரிஸ் மனப்பான்மை கொண்டவளை) கேப்டனிடம் ஒப்படைத்து விட்டு, பிரஞ்சு ராணுவ சேவையில் சேர்ந்தார். அந்த கேப்டன் அவளோடு சந்தோஷமாக வாழ்ந்து வரும்போது, அந்த மனோகரமான போலந்து சீமாட்டி தனது புருஷனை கைவிட்டு கேப்டனோடு வந்துவிட விரும்பினாள். ஆனால், கண்ணியத்தினால் தூண்டப்பட்ட கேப்டன், அந்த சீமாட்டியை அவளுடைய புருஷனிடம் ஒப்படைத்து விட்டு, பின்வருமாறு சொன்னார்: 'உம்முடைய உயிரை முன்பு காப்பாற்றினேன். இப்பொழுது உம்முடைய கௌரவத்தைக் காப்பாற்றுகிறேன்'. இந்த விதமாக கேப்டன் சொல்லியபோது, தமது கண்களை துடைத்துக் கொண்டார். இம்மாதிரியான, மனதை உருக்கக்கூடிய பழைய நினைவுகளை சொல்லும்போது, அவருக்கு ஏற்படக்கூடிய பலவீனத்தை உலுப்பித் தள்ளுகிறவரைப் போல தமது உடம்பை குலுக்கிக் கொண்டார்.

கேப்டன் சொல்லிய கதைகளையெல்லாம் கவனித்து வந்த பீயர் - இரவு வெகு நேரம் ஆன பின்பு அடிக்கடி ஏற்படுவதைப் போலவும், குடி மயக்கத்திலும் - அவற்றையெல்லாம் புரிந்து கொண்டார். கேப்டன் சொல்லுவதைக் கேட்டு வந்த பீயருக்கு அதே சமயத்தில் தம்முடைய சொந்த நினைப்புகளும் மனதில் ஓடிக்கொண்டிருந்தன. அதற்கான காரணத்தை அவர் அறியார். ஆனால், திடீரென்று அவருடைய மனதில் இவை தோன்றின: காதல் கதைகளை அவர் கவனித்து கேட்டபோது நட்டாஷா மீதுள்ள அவருடைய காதல் எதிர்பாராத விதமாக அவருடைய உள்ளத்தில் தோன்றியது. அந்தக் காதலைப் பற்றிய சித்திரங்களை அவருடைய மனோராஜ்யத்தில் அவர் நினைத்து ராம்பலினுடைய கதைகளோடு மனதில் ஒப்பிட்டுப் பார்த்தார். காதலுக்கும் கடமைக்கும் உள்ள போராட்டத்தைப் பற்றிய கதையை பீயர் கேட்டுக் கொண்டிருந்த போது, அவருடைய கண்களின் முன்பாக, அவர் கடைசியாக சுக்காரேவ் தண்ணீர் கோபுரத்திற்குப் பக்கத்தில் சந்தித்த அவருடைய காதல் உருவகத்தைப் பற்றிய ஒவ்வொரு விவரமும் தெளிவாய் தோன்றின. அந்த சந்திப்பு சமயத்தில் அந்த சந்திப்பு அவருடைய மனதில் எந்த உணர்ச்சியையும் பதிய வைக்கவில்லை - அதைப் பற்றி அவர் ஒரு தடவைகூட நினைத்துப் பார்த்ததில்லை. ஆனால், அந்த சந்திப்பில் ஏதோ மிக முக்கியமானதும் கவித்துவம்

வாய்ந்ததுமான ஒன்று இருப்பதைப் போல இப்பொழுது அவருக்குத் தோன்றியது.

'பீட்டர் கிரைலாவிச், இங்கே வாரும்! நாங்கள் உம்மை அடையாளம் கண்டு கொண்டோம்' என்று அவள் பேசிய வார்த்தைகளை இப்பொழுது அவர் கேட்பது போல தோன்றியது; அவளுடைய கண்களையும், புன்முறுவலையும், அவளுடைய பிரயாண தொப்பியையும், தொப்பிக்கு வெளியாக நீண்டிருந்த ஒரு சுருளை தலைமுடியையும் அவர் இப்பொழுது தமது கண்களுக்கு முன்பாக பார்ப்பது போல தோன்றியது... இவற்றிலெல்லாம், மனம் உருகக்கூடிய, மனம் இரங்கக்கூடிய ஏதோ ஒன்று இருப்பதாக அவருக்குத் தோன்றியது.

அந்த மனோகரமான போலந்து சீமாட்டியைப் பற்றிய கதையை சொல்லி முடித்த பின்பு, அந்த கேப்டன் பீயரை நோக்கினார். காதலுக்காக தம்மைத் தியாகம் செய்யக்கூடிய இம்மாதிரியான உணர்ச்சியை பீயர் அனுபவித்திருக்கிறாரா என்றும், சட்ட பூர்வமான ஒரு கணவருக்குரிய பெருமையை பீயர் உணர்ந்திருக்கிறாரா என்றும் கேட்டார்.

இதைக் கேட்டதும் பீயர் தமது தலையை நிமிர்த்தினார். அவருடைய உள்ளத்தில் நிரம்பியிருந்த உணர்ச்சிகளை வெளிப்படுத்த வேண்டும் என்று விரும்பினார். பெண்கள் மீது காதல் கொள்ளுவதைப் பற்றிய தம்முடைய கருத்து வேறு விதமானது என்பதை அவர் விளக்கிச் சொல்ல ஆரம்பித்தார். அவருடைய வாழ்க்கை பூராவிலும் ஒரே ஒரு பெண் மீதுதான் அவர் காதல் கொண்டிருந்தார் என்றும், இன்னமும் காதல் கொண்டிருக்கிறார் என்றும், ஆனால் அவளை அடைய முடியாது என்றும் பீயர் சொன்னார்.

'அட கடவுளே!' என்றார் கேப்டன்.

வெகு காலமாக அந்த பெண்ணை அவர் காதலித்து வருவதாகவும், ஆனால் அந்த பெண் வயதில் மிகச் சிறியவளாய் இருந்தபடியால், அவளைப் பற்றி நினைக்கவே தைரியம் கொள்ளாமல் இருந்ததாகவும், தவிரவும் தாம் சட்ட பூர்வமான திருமணம் இல்லாமல் பிறந்தவரானபடியால், தமக்கு தந்தையின் பெயர் முன்னால் இல்லாமல் இருந்ததாகவும் பீயர் சொன்னார். பின்னால், சட்ட பூர்வமாக தாம் ஒருவருடைய புத்திரராகவும், அவருடைய பெயரை மேற்கொள்ளுவதுமான நிலைமை ஏற்பட்டு, தமக்கு ஏராளமான செல்வமும் கிடைத்த பின்பு, தம்மால் அவளை நினைப்பதற்கு துணிவில்லை என்று சொன்னார்; ஏனெனில், மிக

அதிகமாக அவளைக் காதலித்து, உலகத்திலுள்ள எல்லாவற்றையும் விட, முக்கியமாக தம்மையும் விட உயர்வாக அவளை அவர் வைத்திருந்தபடியால், அவரால் அவளைப் பற்றி நினைப்பதற்கு தைரியம் ஏற்படவில்லை.

இந்த இடத்தில் தாம் பேசுவதை கேப்டன் புரிந்துகொள்ள முடிகிறதா என்று பீயர் கேட்டார்.

தமக்கு அது புரியா விட்டாலும், மேலும் சொல்லிக்கொண்டு போகும்படி பீயரை கேட்பதைப் போல அந்த கேப்டன் சைகை காட்டினார்.

'இதுதான் மானசீகக் காதல்; ஆகாயக் கோட்டை' என்று அவர் தமக்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

அவர் ஒயின் குடித்ததினாலோ, அல்லது உள்ளதைச் சொல்ல வேண்டும் என்ற உந்துதலினாலோ, அல்லது தமது சரித்திரத்தில் வரக்கூடிய யாரையும் இந்த மனிதர் அறிந்ததும் இல்லை, அறியப்போவதும் இல்லை என்ற நினைப்பினாலோ, அல்லது இவையெல்லாம் சேர்ந்தோ, ஏதோ ஒரு காரணத்தினால் பீயரின் நாக்கு தடையிலிருந்து விடுபட்டு விட்டது. ஆகவே, கனத்த குரலில், அவருடைய பிரகாசமான கண்களிலுள்ள பார்வையை தூரத்தில் ஒன்றின்மேல் பதித்து, தம்முடைய வாழ்க்கையைப் பற்றிய பூரா சரித்திரத்தையும் பீயர் சொன்னார்: அவருடைய திருமணம், அவருடைய சிறந்த நண்பர் மீது நட்டாஷா கொண்டிருந்த காதல், அவள் அவருக்கு செய்த துரோகம், அவளுடன் தமக்குள்ள சாதாரணமான உறவுகள் ஆகியவற்றைப் பற்றி சொன்னார். ராம்பலினுடைய கேள்விகளுக்கு அவர் மேலும் எதில் சொல்லியபோது, முன்னால் தாம் மறைத்தவைகளையெல்லாம் சொல்லிவிட்டார் - அவருடைய அந்தஸ்து, அவருடைய முழுப் பெயர் எல்லாவற்றையும் கூறினார்.

பீயரின் கதையில் மற்ற எல்லாவற்றையும் விட ஒரு விஷயம் தான் அந்த கேப்டனின் மனதில் பலமாய் பதிந்தது. அதாவது, அவர் பெருத்த பணக்காரராய் இருந்தும், மாஸ்கோவில் இரண்டு மாளிகைகள் அவருக்கு இருந்தும், அவர் எல்லாவற்றையும் துறந்து விட்டு, பட்டணத்தை விட்டும் போகாமல், தமது பெயரையும் அந்தஸ்தையும் மறைத்து, அங்கேயே தங்கி இருந்ததுதான் அந்த விஷயமாகும்.

இரவு வெகுநேரம் ஆன பின்பு, அவர்கள் இருவரும் ஒன்றாக வெளியே தெருவுக்குப் போனார்கள். இரவு வெது வெதுப்பாகவும் மூடுபனி இல்லாமல் தெளிவாகவும் இருந்தது. வீட்டிற்கு இடது

பக்கமாக பால்ரோவ்கா என்ற இடத்தில் ஒரு நெருப்பு ஜுவாலை தோன்றியது. மாஸ்கோவில் ஆரம்பமான நெருப்புகளில் அதுதான் முதலாவதானது. வலது பக்கத்தில் உயிரே வானத்தில் அர்த்த சந்திரன் காணப்பட்டது. அதற்கு எதிராக, பிரகாசமான அந்த வால் நட்சத்திரம் தெரிந்துகொண்டிருந்தது. பீயரின் உள்ளத்தில் தோன்றிய காதலோடு அந்த வால் நட்சத்திரம் சம்பந்தப்பட்டது. வெளிவாசலில் கெராசிமும், சமையல்காரனும், இரண்டு பிரஞ்சுக்காரர்களும் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களுடைய சிரிப்பும், இரண்டு மொழிகளில் பரஸ்பரம் புரிந்துகொள்ளாமல் பேசிக்கொண்டிருந்ததும் கேட்டுக்கொண்டிருந்தன. பட்டணத்தில் தோன்றிய அந்த நெருப்பு ஜுவாலையை அவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அவ்வளவு பெரிய பட்டணத்தில் தூரத்தில் தெரிந்த அந்த சிறிய நெருப்பானது ஒன்றும் பயங்கரமாய் இல்லை.

உயரத்தில் நட்சத்திரங்கள் நிறைந்த அந்த வானத்தையும், அந்த சந்திரனையும், அந்த வால் நட்சத்திரத்தையும், நெருப்பிலிருந்து கிளம்பிய அந்த ஜுவாலையையும் பீயர் பார்த்தபோது, அவருக்கு ஒரு மகிழ்ச்சியான பரபரப்பு தோன்றியது. 'இதோ இங்கே வந்துவிட்டது. அது எவ்வளவு நன்றாய் இருக்கிறது. இதைவிட அதிகமாக ஒருவருக்கு என்ன வேண்டும்?' என்று அவர் நினைத்தார். தமது நோக்கத்தைப் பற்றி அவர் திடீரென்று நினைத்துக் கொண்டதும், அவருக்கு மயக்கம் ஏற்பட்டது. மூர்ச்சை ஏற்படுவதைப் போல உணர்ந்தார். உடனே தாம் கீழே விழுந்துவிடாமல் இருப்பதற்காக அங்கிருந்த வேலி மீது சாய்ந்தார்.

தம்முடைய புதிய நண்பரிடம் விடைபெற்றுக் கொள்ளாமல் வெளி வாசலில் இருந்து தடுமாற்றத்தோடு தமது அறைக்குத் திரும்பி சோபா மீது படுத்தார். உடனே ஆழ்ந்து தூங்கிவிட்டார்.

# 11

## 30

செப்டெம்பர் 2-ந் தேதியன்று முதலாவது ஏற்பட்ட நெருப்பின் ஜுவாலையை, மாஸ்கோவிலிருந்து வெவ்வேறு ரஸ்தாக்களில் போய்க் கொண்டிருந்த மாஸ்கோ வாசிகளும், பின்வாங்கி போய்க்கொண்டிருந்த துருப்புகளும் கவனித்தார்கள். ஆனால், அவர்களின் உணர்ச்சிகள் மட்டும் வெவ்வேறு விதமாய் இருந்தன.

மிட்டைஷி என்ற இடம் மாஸ்கோவிலிருந்து பதினாலு மைல் தூரத்தில் இருக்கிறது. ராஸ்டோவின் கோஷ்டியார் அன்றிரவு அங்கே தங்கினார்கள். அவர்கள் செப்டெம்பர் முதல் தேதியன்று வெகுநேரம் கழித்து புறப்பட்ட படியாலும், வண்டிகளாலும் துருப்புகளாலும் ரஸ்தா அடைபட்டிருந்தபடியாலும், பல சாமான்களை மறந்து வைத்துவிட்டு வந்ததால் அவற்றை எடுத்து வருவதற்காக சேவகர்களை மீண்டும் வீட்டிற்கு அனுப்பிய படியாலும், மூன்று மைலுக்கு அப்பாலுள்ள ஒரு இடத்தில் தங்குவதென்று தீர்மானித்தார்கள். மறு நாள் காலையில் தாமதமாகவே அவர்கள் எழுந்திருந்தபடியால், மீண்டும் அவர்கள் புறப்படுவது தாமதமான படியால், பெரிய மிட்டைஷி என்ற இடம் வரையில்தான் அன்று போக முடிந்தது. அன்று இரவு 10 மணிக்கு ராஸ்டோவின் குடும்பத்தாரும், அவர்களுடன் பிரயாணம் செய்துவந்த காயம்பட்டவர்களும், அந்த பெரிய கிராமத்தில் முற்றங்களிலும் குடிசைகளிலும் தங்கினார்கள். ராஸ்டோவ்களின் வேலைக்காரர்களும், வண்டிக்காரர்களும், காயமடைந்த அதிகாரிகளின் வில்லைச் சேவகர்களும், தங்கள் எஜமானர்களுக்கு வேண்டியவைகளை கவனித்துவிட்டு, இராச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு, குதிரைகளுக்கு தீனிபோட்டு விட்டு வெளியே முற்ற மண்டபங்களுக்கு வந்தார்கள்.

பக்கத்து குடிசையில் ராயேவ்ஸ்கியின் உதவியாளர் கை முறிபட்டு படுத்திருந்தார். அவருக்கு ஏற்பட்ட வலியால், விடாமல் பரிதாபகரமாக முனங்கிக் கொண்டிருந்தார். அந்த இலையுதிர் காலத்து இரவில் உள்ள இருட்டில், அந்த முனக்கங்கள் பயங்கரமாய் தோன்றின. ராஸ்டோவ்களைப் போலவே, முதல் நாள் இரவு அதே முற்றத்தில் அவரும் தங்கினார். அவர் அம்மாதிரி முனங்கி வந்தபடியால், தன்னால் இரவில் கண்களைக்கூட மூட முடியவில்லை யென்று கோமகள் சொன்னாள். ஆகவே, மிட்டைஷி என்ற இடத்தில், அந்த காயமடைந்தவரை விட்டு தூரமாக இருப்பதற்காக, ஒரு மோசமான குடிசையில் தங்கினாள்.

அந்த இரவின் இருட்டில், வேலைக்காரர்களில் ஒருவன் அங்கு நின்ற உயரமான கோச் வண்டிக்கு மேலாக, மற்றொரு நெருப்பின் சிறிய ஜுவாலையை கண்டான். முதல் ஜுவாலை வெகு நேரமாக எல்லாருக்கும் தெரிந்து வந்தபடியால், அது சின்ன மிட்டைஷில் ஏற்பட்ட தீதான் என்பதை எல்லாரும் அறிவார்கள். மாமோனாவ் கோசாக்குகள்தான். அந்த நெருப்பை வைத்தவர்கள்.

'ஆனால் இங்கே பாருங்கள், சகோதரர்களே. இன்னும் மற்றொரு இடத்தில் நெருப்பு தெரிகிறது' என்று ஒரு வில்லைச் சேவகன் கூறினான்.

எல்லாருடைய கவனமும் அந்த ஜுவாலையை நோக்கி திரும்பியது.

'மாமோனாவ் கோசாக்குகள் அந்த சின்ன மிட்டைஷிக்கு நெருப்பு வைத்து விட்டதாக அவர்கள் சொன்னார்கள்.'

'ஆனால், அது மிட்டைஷி அல்ல. அந்த நெருப்பு இன்னும் அதிக தூரத்தில் தோன்றுகிறது.'

'இங்கே பாருங்கள், அது மாஸ்கோவாகத்தான் இருக்க வேண்டும்.'

நெருப்பைப் பார்த்துக்கொண்டிருந்த இருவர், அந்த கோச் வண்டிக்கு அப்புறமாக சென்று, அதன் படிகளில் அமர்ந்தார்கள்.

'அந்த நெருப்பு இடது பக்கமாக இருக்கிறது. மிட்டைஷி இதோ இந்தப் பக்கத்தில் இருக்கிறது. இந்த நெருப்பு அதற்கு மற்றொரு பக்கத்தில் இருக்கிறது.'

இன்னும் பல மனிதர்கள் அந்த இருவருடன் வந்து சேர்ந்தார்கள்.

'இதோ பாருங்கள், அது எம்மாதிரி ஜுவாலை விட்டு எரிகிறது. அந்த நெருப்பு மாஸ்கோவில் தான் தோன்றுகிறது. சுஷ்செவ்ஸ்கி என்ற பகுதியிலோ, அல்லது ராகோஜ்ஸ்கி என்ற பகுதியிலோ, அது இருக்கவேண்டும்' என்று ஒருவன் சொன்னான்.

இந்த பேச்சுக்கு ஒருவரும் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் அவர்கள் எல்லாரும், அங்கே பரவிக்கொண்டிருந்த இரண்டாவது நெருப்பை மௌனமாக பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

முதிய டேனியல் டெரன்டிச் என்ற கோமகனின் வேலைக்காரன் அந்த கூட்டத்திற்கு வந்து மைஷ்காவைப் பார்த்து கூச்சலிட்டான்.

'நீ இங்கே எதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய், அட உதவாக்கரையே? கோமகன் உன்னை அழைக்கலாம். அங்கே ஒருவருமில்லை; அங்கே போ. துணிகளையெல்லாம் சேர்த்துக் கட்டு'.

'நான் கொஞ்சம் தண்ணீர் எடுத்து வருவதற்காகத்தான் வெளியே வந்தேன்' என்று மைஷ்கா சொன்னான்.

'டேனியல் டெரன்டிச், நீர் என்ன நினைக்கிறீர்? அந்த ஜுவாலை மாஸ்கோவில் எரிவதைப்போல தோன்றவில்லையா?' என்று ஒரு சேவகன் சொன்னான்.

டேனியர் டெரன்டிச் பதில் எதுவும் சொல்லவில்லை. வெகு நேரம் அவர்கள் எல்லாரும் மௌனமாக இருந்தார்கள். அந்த ஜுவாலைப் பரவி, மேலே எழும்பியும் கீழே தணிந்தும், இன்னமும் மேலும் மேலும் போய்க்கொண்டே இருந்தது.

'கடவுள் கருணை புரிவாராக... இப்பொழுது உஷ்ணமாகவும் காற்று அடித்துக்கொண்டும் இருக்கிறது' என்று மற்றொரு குரல் சொல்லியது.

'இதோ பாருங்கள், அது என்ன செய்கிறது என்று பாருங்கள். ஓ கடவுளே, இந்த காக்காய்கள் கூட பறந்து ஓடுவது தெரிகின்றது. கடவுளே, பாவிகளாகிய எங்கள் மீது கருணை வைப்பீராக.'

'அவர்கள் அந்த தீயை அணைத்துவிடுவார்கள், பயப்பட வேண்டாம்.'

'யார் அதை அணைப்பது?' என்று இதுவரை மௌனமாய் இருந்த டேனியல் டெரன்டிச் சொன்னான். அவனுடைய குரல் அமைதியாகவும், உறுதியாகவும் இருந்தது. 'சகோதரர்களே, அது தான் மாஸ்கோ. மாதா மாஸ்கோ. அந்த வெள்ளை...' என்று அவன் பேசிய பொழுது, அவனுடைய குரல் தடுமாறியது. அவன் கிழவனைப் போல விம்மி விம்மி அழுதான்.

அவர்கள் பார்த்துக்கொண்டிருந்த அந்த நெருப்பு ஜுவாலையின் முக்கியத்துவத்தை அறிவதற்காகத்தான் அவர்கள் காத்துக் கொண்டிருந்ததைப்போல காணப்பட்டது. உடனே பெரு மூச்சுக்கள் கேட்டன. பிரார்த்தனைகளும், கோமகனின் முதிய சேவகனின் விம்மல்களும் கேட்டன.

# 11

## 31

அந்த சேவகன் குடிசைக்குத் திரும்பி வந்து, கோமகனிடம் மாஸ்கோ எரிந்து கொண்டிருப்பதாகக் கூறினான். கோமகன் உடை - கவுனை அணிந்துகொண்டு, பார்ப்பதற்காக வெளியே போனார். சோனியாவும், திருமதி ஷாஸும், தாங்கள் இன்னமும் வெளி ஆடைகளை களையாமல் இருந்தபடியால், கோமகனுடன் வெளியே போனார்கள். நட்டாஷாவும், கோமகளும் அறையிலேயே தங்கியிருந்தார்கள். அந்தக் குடும்பத்தோடு பெட்டியா இப்பொழுது இல்லை. அவன் தனது பட்டாளத்தோடு டிரோயிட்ஸா என்ற இடத்திற்குப் போய்விட்டான்.

மாஸ்கோ தீப்பிடித்து எரிகிறது என்பதைக் கேள்விப்பட்ட கோமகள் கதற ஆரம்பித்தாள். நட்டாஷா முகம் வெளிறி, குத்திட்ட பார்வையோடு - தெய்வச் சிலைகளுக்கு அடியில் பெஞ்சில் அமர்ந்திருந்தாள். அந்த இடத்திற்கு வந்ததும் - அங்கே நான் தெய்வச்

சிலைகளை நட்டாஷா வைத்திருந்தாள் - அவளுடைய தந்தை பேசுகிறவைகளை அவள் கொஞ்சமும் கவனிக்கவில்லை. மூன்று வீடுகளுக்கு அப்பால், விடாமல் அந்த உதவியாளர் முனங்கிக் கொண்டிருப்பதை, அவள் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

'ஓ, எவ்வளவு பயங்கரமானது' என்று, முற்றத்தில் குளிரினால் அவதிப்பட்ட சோனியா, பீதியோடு திரும்பி வந்து சொன்னாள். 'மாஸ்கோ முழுவதும் எரிந்துவிடுமென்று எனக்குத் தோன்றுகிறது. அவ்வளவு பயங்கரமான ஜுவாலை அங்கே தெரிகிறது, நட்டாஷா; நீ போய் பார். இப்பொழுது இங்கே, ஜன்னலிலிருந்து கூட, நாம் அதைப் பார்க்கலாம்' என்று, நட்டாஷாவின் மனதை மாற்றுவதற்காக விரும்புகிறவள் போல அவளிடம் கூறினாள்.

அவள் என்ன சொல்லுகிறாள் என்பதை அறியாதவள் போல, அவளை நட்டாஷா உற்றுப் பார்த்தாள். மீண்டும் அங்கே மூலையிலிருந்த அடுப்பை குத்திட்ட கண்களோடு பார்த்தாள். இம்மாதிரி கதி கலங்கிய நிலையில் அன்று காலையிலிருந்து அவள் இருந்து வந்தாள். அன்று காலையில் காரணம் என்ன என்பது தனக்குத் தெரியாமல், கோமகள் ஆச்சரியமும் எரிச்சலும் கொள்ளும்படியாக, ஒரு காரியத்தை சோனியா செய்தாள். அதாவது, இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஏற்பட்ட காயத்தைப் பற்றியும், அவர் தங்கள் கூட்டத்துடனேயே தங்கியிருப்பதைப் பற்றியும், நட்டாஷாவிடம் சோனியா சொன்னாள். அம்மாதிரி சொல்லியதற்காக, கோமகன் அன்று சோனியாவிடம் காட்டிய கோபத்தைப்போல, அவள் வேறு யாரிடமும் காட்டியதில்லை. சோனியா கதறி அழுது, தன்னை மன்னிக்கும்படி கேட்டாள். இப்பொழுது அதற்கு பிராயச்சித்தம் செய்ய முயற்சிப்பவள் போல, தனது மைத்துனியான நட்டாஷாவை இடைவிடாமல் கவனித்து வந்தாள்.

'இதோ பார், நட்டாஷா; அது எவ்வளவு பயங்கரமாக எரிந்து கொண்டிருக்கிறது!...' என்று அவள் சொன்னாள்.

'எது எரிந்துகொண்டிருக்கிறது?' என்று நட்டாஷா கேட்டாள். 'ஓ, ஆம், மாஸ்கோ.'

சோனியாவின் மனதைப் புண்படுத்தாமல் இருக்கவும், அவளிடமிருந்து தப்பித்துக் கொள்ளவும் நினைத்து, அவள் ஜன்னலைப் பார்த்து திரும்பினாள். அவள் ஜன்னலுக்கு வெளியே பார்த்த விதமானது, அவள் எதையும் பார்க்க முடியாத விதத்தில் இருந்தது. மீண்டும் அமர்ந்து பழைய மனோபாவத்தோடு காணப்பட்டாள்.

'ஆனால், நீ அதைப் பார்க்கவில்லை.'

'ஆம், உண்மையில் நான் பார்த்தேன்' என்று நட்டாஷா சொன்னாள். அவள் சொல்லிய தொனியானது, அவளை தனியாக விட்டுவிட்டு போய்விடவேண்டுமென்று கேட்பது போல இருந்தது.

மாஸ்கோவோ, அல்லது மாஸ்கோ தீப்பற்றி எரிவதோ, அல்லது வேறு எதுவுமோ நட்டாஷாவுக்கு அச்சமயத்தில் முக்கியமாக தோன்றாது என்பதை, கோமகளும் சோனியாவும் அறிந்து கொண்டார்கள்.

கோமகன் திரும்பி வந்து, அங்கிருந்த தடுப்பிற்குப் பக்கத்தில் கீழே படுத்தார். தனது குமாரியிடம் கோமகள் சென்று, அவளுடைய தலையை தனது புறங்கையால் தொட்டாள். நட்டாஷா அசௌக்கியமாக இருந்தபோது, அவள் அப்படி செய்வதுதான் வழக்கம். பின்னால், நட்டாஷாவுக்கு ஜுரம் இருக்கிறதா என்பதை அறிவதற்காக தனது உதடுகளால் அவளுடைய நெற்றியை தொட்டாள். கடைசியாக அவளை முத்தமிட்டுக் கொண்டாள்.

'உனக்குக் குளிர் பிடித்திருக்கிறது. உன் உடம்பெல்லாம் நடுங்கிக்கொண்டிருக்கிறது. நீ படுத்திருப்பது நல்லது' என்று கோமகள் சொன்னாள்.

'படுக்க வேண்டுமா? ரொம்ப சரி, அப்படியே செய்கிறேன். நான் உடனே படுத்துக்கொள்கிறேன்' என்று நட்டாஷா சொன்னாள்.

இளவரசர் ஆண்ட்ரூ படுகாயம் அடைந்திருப்பதாகவும், அவரும் தங்களோடுதான் பிரயாணம் செய்து வருகிறார் என்றும், அன்று காலையில் நட்டாஷாவிடம் சொல்லியபோது, அவள் முதலில் பல கேள்விகளை கேட்டாள்: அவர் எங்கே போய்க்கொண்டிருக்கிறார்? அவர் எப்படி காயம் அடைந்தார்? அது அபாயமான காயமா? தன்னால் அவரை பார்க்க முடியுமா? ஆனால் அவரைப் பார்க்க முடியாது என்றும், அவர் படுகாயம் அடைந்திருப்பதாகவும், எனினும் அவருடைய உயிருக்கு ஆபத்து இல்லையென்றும் அவளிடம் சொல்லிய பின்பு அவள் கேள்வி கேட்பதையோ, பேசுவதையோ விட்டுவிட்டாள். அவர்கள் சொல்லுவதில் அவளுக்கு நம்பிக்கையில்லை. அவள் என்ன பேசினாலும், திரும்பத் திரும்ப அவர்கள் அந்த பதிலையே சொல்லிக்கொண்டிருப்பார்கள் என்று அவளுக்கு நிச்சயமாயிற்று. வழி முழுவதும் வண்டியில் ஒரு மூலையில் அசையாமல் உட்கார்ந்த இருந்தாள். கண்கள் விரியத் திறந்து இருந்தன. அந்த கண்களில் தோன்றிய தோற்றத்தை கோமகள் நன்றாய் அறிவாளாகையால்

அவள் பீதி கொள்வது வழக்கம். இப்பொழுதும் அதேமாதிரி நிலைமையில், அவள் அங்கே வந்ததிலிருந்து அதே பெஞ்சில் உட்கார்ந்துகெண்டிருந்தாள். அவள் எதையோ தனது மனதில் திட்டம் செய்துகொண்டிருந்தாள். அந்த திட்டத்தைப் பற்றி அவள் ஏற்கெனவே தீர்மானித்து விட்டதாகவோ, அல்லது தீர்மானித்துக் கொண்டிருப்பதாகவோ தோன்றியது. கோமகளுக்கு இது தெரியும். ஆனால், அது என்ன திட்டம் என்பது அவளுக்குத் தெரியாது. ஆகவே, அவளுக்கு பீதியும், மன வேதனையும் ஏற்பட்டன.

'நட்டாஷா, என் கண்ணே, பிரயாண உடையை களைந்து விடு. என்னுடைய படுக்கையில் படுத்துக்கொள்.'

கோமகளுக்காக மட்டுந்தான் ஒரு கட்டிலில் படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. திருமதி ஷாஸும், இரண்டு பெண்களும், தரையில் வைக்கோல் மீது படுத்துக்கொள்ள ஏற்பாடு செய்திருந்தார்கள்.

'இல்லை, அம்மா, நான் தரையில் படுத்துக்கொள்கிறேன்' என்று நட்டாஷா எரிச்சலோடு பதில் சொல்லிவிட்டு, ஜன்னல் பக்கமாக சென்று, அதன் கதவைத் திறந்தாள். அந்த திறந்த ஜன்னல் வழியாக அந்த உதவியாளர் முனக்கங்கள் மிகத் தெளிவாகக் கேட்டன. அவளுடைய தலையை வெளியே நீட்டினாள். வெளியே இரவில் கால நிலையானது குளிராய் இருந்தது. அவளுடைய ஒல்லிய கழுத்தானது ஜன்னல் சட்டத்தில் சாய்ந்து, விம்மல்களினாலும், படபடப்புகளினாலும் நடுங்கிக் கொண்டிருந்ததை கோமகள் பார்த்தாள். அங்கே முனங்கிக்கொண்டிருந்தது இளவரசர் ஆண்ட்ரூ அல்ல என்பதை நட்டாஷா அறிவாள். இளவரசர் ஆண்ட்ரூ, அந்த முற்றத்திலேயே - தங்களோடு அந்த ஆளோடிக்கு அடுத்தாற் போலுள்ள குடிசையில் இருக்கிறார் என்பதையும் அவள் அறிவாள். ஆனால் இந்த பயங்கரமான, இடைவிடாத முனக்கமானது, அவளை விம்மும்படி செய்தது. கோமகளும் சோனியாவும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

'கீழே படுத்துக்கொள், என் கண்ணே. என் கண்மணியே, கீழே படுத்துக்கொள்' என்று கோமகள் கூறி, மெதுவாக நட்டாஷாவின் தோள்களைத் தொட்டாள். 'இங்கே வா, கீழே படுத்துக்கொள்.'

'ஓ, ஆம்... நான் உடனே படுத்துக் கொள்கிறேன்' என்று நட்டாஷா சொல்லிவிட்டு, வேகமாக தனது வெளி ஆடைகளை களைய ஆரம்பித்தாள். தனது பாவாடையின் நாடாவை பிடித்து இழுத்தாள்.

தன்னுடைய வெளி உடைகளை களைந்து எறிந்துவிட்டு, ஜாக்கெட்டை அணிந்து கொண்டு, தரையில் விரிக்கப்பட்டிருந்த படுக்கையில் சம்மணம் போட்டு அமர்ந்தாள். தனது குட்டையான ஜடையை முன்னால் இழுத்து, மீண்டும் ஜாடை போட ஆரம்பித்தாள். அவளுடைய நீண்ட, மெல்லிய, அனுபவம் மிகுந்த விரல்கள், வேகமாக ஜடையை அவிழ்த்துக்கொண்டும், மீண்டும் போட்டுக் கொண்டும், ஜடையை சுருட்டி கட்டிக்கொண்டும் இருந்தன. அவளுடைய சுபாவப்படி, தலையை இப்பக்கமும், அப்பக்கமும் ஆட்டிக் கொண்டிருந்தாள். ஆனால் அவளுடைய கண்கள் ஜுரம் கண்டவை போல விரிந்து, அவளுக்கு முன்னால் உள்ளதை குத்திட்டு நோக்கிக் கொண்டிருந்தன. படுப்பதற்கு முன்பு செய்ய வேண்டிய வேலைகளை முடித்துக் கொண்ட பின்பு, மெதுவாக அந்த வைக்கோல் மீது விரிக்கப்பட்டிருந்த விரிப்பு மீது, கதவிற்குப் பக்கத்தில் படுத்தாள்.

'நட்டாஷா, நீ மத்தியில் படுப்பது நல்லது' என்றாள் சோனியா.

'நான் இங்கேயே படுத்துக் கொள்கிறேன்' என்று நட்டாஷா முனங்கினாள். 'நீ கீழே படு' என்று கோபமாக கூறிவிட்டு, தனது முகத்தை தலையணையில் மறைத்துக் கொண்டாள்.

கோமகளும், திருமதி ஷாஸும், சோனியாவும் வேகமாக வெளி ஆடைகளை களைந்துவிட்டுப் படுத்துக்கொண்டார்கள். தெய்வச் சிலைகளுக்க முன்பாக இந்த ஒரு சிறு விளக்குதான் அந்த அறைக்கு வெளிச்சமாயிருந்தது. ஆனால், முற்றத்தில் 1 1/2 மைலுக்கு அப்பாலுள்ள சின்ன மிட்டைஷி என்ற இடத்தில் ஏற்பட்ட நெருப்பின் வெளிச்சம் வீசிக்கொண்டிருந்தது. மாமோனாவ் கோசாக்குகள் தெருவுக்கு அப்புறமாக ஏற்படுத்தியிருந்த கள்ளுக்கடையிலிருந்து மக்கள் போடும் கூச்சல் கேட்டுக்கொண்டிருந்தது. அந்த உதவியாளரின் இடைவிடாத முனக்கங்கள் இன்னமும் கேட்டுக் கொண்டிருந்தன.

வெகு நேரம் வரையில் அந்த அறைக்குள்ளும், அறைக்கு வெளியிலிருந்தும் வந்துகொண்டிருந்த சப்தங்களை, நட்டாஷா கவனமாய் கேட்டுக்கொண்டிருந்தாள். ஆனால், அவள் அசைய வில்லை. முதலில் அவளுடைய தாயார் பிரார்த்தனை செய்வதையும், பெருமூச்சு விடுவதையும், அவளுடைய கட்டில் கிரீச்சிடுவதையும் கேட்டாள். பின்னால், திருமதி ஷாஸின் பழக்கமான சீட்டியடிக்கும் குறட்டையையும், சோனியாவின் மென்மையான மூச்சு விடுதலையும் கேட்டாள். அதன் பின்னால், கோமகள் நட்டாஷாவை அழைத்தாள். நட்டாஷா பதில் சொல்லவில்லை.

'அம்மா, அவள் தூங்கி விட்டாள் என்று நினைக்கிறேன்' என்று சோனியா மெதுவாகக் கூறினாள்.

சிறிது நிசப்தத்திற்குப் பின்னால், கோமகள் மீண்டும் பேசினாள். ஆனால் ஒருவரும் இச்சமயம் பதில் சொல்லவில்லை.

அதன் பின்னால், தனது தாயாரின் ஒரே மாதிரியான மூச்சு விடும் சப்தத்தை நட்டாஷா கேட்டாள். நட்டாஷா அசையவில்லை. அவளுடைய சிறிய திறந்த பாதம், அவளுடைய மெத்தையிலிருந்து வெளியே நீண்டு இருந்தபடியால், அந்த வெறுந் தரையில் வர வர அது குளிர ஆரம்பித்தது.

எல்லார் மீதும் வெற்றி பெற்று விட்டதைப் போல, சுவரில் ஒரு கீரலில் இருந்து ஒரு சுவர் கோழி சூள் கொட்டிக் கொண்டிருந்தது. தூரத்தில் ஒரு சேவல் கூவியது. அதற்குப் பதிலாக, சமீபத்தில் ஒரு சேவல் கூவியது. கள்ளுக்கடையில் இருந்து வந்த சப்தம் மறைந்து போயிற்று... அந்த உதவியாளரின் முனக்கம் மட்டும் தான் கேட்டுக்கொண்டிருந்தது. நட்டாஷா எழுந்து உட்கார்ந்தாள்.

'சோனியா, நீ தூங்கி விட்டாயா? என்று அவள் மெதுவாக அழைத்தாள்.

ஒருவரும் பதில் சொல்லவில்லை. நட்டாஷா மெதுவாகவும், ஜாக்கிரதையோடும் எழுந்து தனக்கு சிலுவைக் குறி காட்டி அந்த குளிர்ந்த, அசுத்தமான தரையில், தன்னுடைய மெலிந்த துவண்டு கொடுக்கும் வெறும் பாதத்தை மெதுவாக வைத்தாள். தரையிலுள்ள பலகைகள் கிரீச்சிட்டன. ஒரு அடிக்கு மேல் மற்றொரு அடியாக ஜாக்கிரதையோடு எடுத்து வைத்து, ஒரு பூனைக் குட்டியைப் போல வாசலுக்கு ஓடி, வாசல் கதவிலிருந்த குளிர்ந்துபோன கைப்பிடியைப் பற்றினாள்.

பாரமான ஏதோ ஒன்று ஒழுங்காக அந்த அறையின் சுவர்களை தட்டிக்கொண்டிருப்பதைப் போல அவளுக்குத் தோன்றியது. அது தான், அவளுடைய சொந்த உள்ளம். பயத்தினாலும் பீதியினாலும் அது ஆழ்ந்துகொண்டிருந்தது. ஆனால், அன்பு என்பது அதில் வழிந்து ஓடியது.

அவள் கதவைத் திறந்தாள்; வெளியே போனாள்; குளிர்ந்து போயிருந்த அந்த ஓதமான ஆளோடியின் அடியெடுத்து வைத்தாள். அவள் உடம்பில் தாக்கிய குளிரானது அவளுக்கு ஒரு பலத்தைக் கொடுத்தது. அவளுடைய வெறும் காலால் தூங்கிக் கொண்டிருந்த ஒரு மனிதன் மீது தடுமாறவே, அவனைத் தாண்டிக் கொண்டு இளவரசர் ஆண்ட்ரூ தங்கியிருந்த குடிசைக்கு போகும் கதவைத் திறந்தாள். அங்கே இருளாய் இருந்தது. ஒரு மூலையில் ஒரு பெஞ்சு

மீது படுக்கைக்குப் பக்கத்தில் ஒரு மெழுகு வத்தி எரிந்து கொண்டும், அதனுடைய நீளமான திரி புகைந்து கொண்டும் இருந்தது.

அன்று காலையில் இளவரசர் ஆண்ட்ரூ காயமடைந்திருக்கிறார் என்றும், அவரும் அங்கே தான் இருக்கிறார் என்றும் அவளிடம் சொல்லியதிலிருந்து, அவரை பார்ப்பது என்று நட்டாஷா தீர்மானித்தாள். எதற்காக அம்மாதிரி தீர்மானித்தாள் என்பது அவளுக்குத் தெரியாது. அவருடைய சந்திப்பு மனதிற்கு மிகவும் வருத்தமாய் இருக்கும் என்பதை அவள் அறிவாள். என்றாலும், அவரைப் பார்க்க வேண்டியது அவசியம் என்று அவளுக்குத் தோன்றியது.

அன்று பகல் முழுவதும் அன்றிரவு அவரைப் பார்க்கலாம் என்ற நம்பிக்கையிலேயே இருந்தாள். ஆனால், இப்பொழுது அந்த நேரம் வந்ததும், அவள் பார்க்கப் போகும் காட்சியைப் பற்றி, அவளுடைய மனதில் பீதி நிறைந்திருந்தது. அவர் எப்படி முடமானார்? அவருடைய உடலில் இப்பொழுது தங்கியிருப்பது என்ன? இடைவிடாமல் முனங்கிக்கொண்டிருக்கும் அந்த உதவியாளரைப் போலவேதான் அவரும் இருக்கிறாரா? ஆம், அவரும் அம்மாதிரியே இருக்கலாம்... அவளுடைய மனோராஜ்யத்தில் அந்த பயங்கரமான முனங்குதலின் உருவகமாக அவர் காணப்பட்டார். தெளிவான உருவமில்லாத ஒன்று அந்த மூலையில் காணப்பட்டதும், அந்த மெத்தைக்குக் கீழாக அவருடைய உயர்த்திய முழங்கால்களை தோள்கள் என்று அவள் தவறாக நினைத்துக் கொண்டாள். ஒரு பயங்கரமாக உடல் அங்கே இருக்குமென்று அவள் கற்பனை செய்தாள். உடனே பீதியுற்று அசையாமல் நின்றாள். ஆனால், ஒரு தடுக்கமுடியாத உத்வேகம் அவளை முன்னால் இழுத்தது. ஜாக்கிரதையாக ஒன்றன் பின் ஒன்றாக அடியெடுத்து வைத்து, மூட்டை முடிச்சுக்கள் உள்ள அந்த அறையின் மத்தியில் போய்ச் சேர்ந்தாள். டிமோக்கின் ஒரு மூலையில் இன்னும் இருவர்களோடு தெய்வச்சிலைகளுக்குக் கீழாக படுத்திருந்தார். டிமோக்கின் பெஞ்சு மீதும், டாக்டரும் வேலைக்காரனும் தரையிலும் படுத்திருந்தார்கள்.

அந்த வேலைக்காரன் எழுந்து உட்கார்ந்து, மெதுவாக ஏதோ சொன்னான். தம்முடைய காயமடைந்த காலில் ஏற்பட்ட வலியினால் டிமோக்கின் விழித்துக் கொண்டிருந்தார். வெள்ளை ரவிக்கையும், ஜாக்கெட்டும், இராக்குல்லாயும் தரித்துக்கொண்டு விசித்திரமாகத் தோன்றிய அந்தப் பெண்ணை, விரிந்த கண்களோடு டிமோக்கின் நோக்கினார். அந்த வேலைக்காரன் தூக்கக் கலக்கத்தோடு, 'உனக்கு என்ன வேண்டும்? என்ன விஷயம்?' என்று

நட்டாஷாவை பீதியுற்ற குரலில் கேட்டான். அவன் அம்மாதிரி கேட்டதினால், நட்டாஷா வேகமாக அந்த மூலையில் படுத்திருந்த உருவத்திற்குப் பக்கத்தில் போய்ச் சேர்ந்தாள். அந்த உருவம் மனித உடல் மாதிரி தோன்றாமல் பயங்கரமாய் இருந்தபடியால், அதைப் பார்த்தாக வேண்டுமென்று உறுதி கொண்டாள். அந்த வேலைக்காரனை கடந்து அவள் சென்ற போது, மெழுகு வத்தியில் புகைந்து கொண்டிருந்த திரியின் கரியானது எரிந்து கீழே விழுந்தது. உடனே இளவரசர் ஆண்ட்ரூவின் உருவம் அவளுக்கு தெளிவாக தோன்றியது. மெத்தைக்கு வெளியே, அவர் எப்பொழுதும் கையை நீட்டி படுப்பதை அவள் பார்த்திருப்பதைப் போல, இப்பொழுதும் கையை நீட்டி படுத்திருந்தார்.

அவர் எப்பொழுதும் போலவே காணப்பட்டார். அவருடைய முகத்தில் தோன்றிய - ஜுரத்தால் ஏற்பட்ட நிறமும், அவளைப் பார்த்து திரும்பிய அவருடைய பரவசம் கொண்ட ஜொலிக்கின்ற கண்களும், முக்கியமாக ஒரு குழந்தையைப் போன்ற மெல்லிய அவருடைய கழுத்தும், அவருடைய சட்டையின் கழுத்துப் பட்டி விலகியதினால் அது தெளிவாகத் தோன்றிய காட்சியும், அவளுக்கு ஒன்றும் அறியாத ஒரு குழந்தையின் தோற்றத்தைப் போன்ற ஒரு தோற்றத்தை அளித்தது. அந்தக் காட்சியை அவரிடம் அவள் எப்பொழுதும் பார்த்ததில்லை. அவள் அவரிடம் நெருங்கினாள். வாலிபத்திற்குரிய வேகமான, குழைவான ஆசையோடு அவர் முன்பு முழங்கால் படியிட்டாள்.

அவர் அவளுக்கு புன்னகை காட்டி, தமது கையை அவளிடம் நீட்டினார்.

## 11

## 32

பாராடினோ போர்க் களத்திலிருந்த ஆஸ்பத்திரியில் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு சுயநினைவு வந்து, இப்பொழுது, ஏழு தினங்கள் ஆகின்றன. அவருடைய ஜுர நிலைமையும், அவருடைய குடலில் ஏற்பட்டிருந்த காயத்தினால் அது புண்ணாகி இருந்ததும் டாக்டர்களுக்கு நம்பிக்கையை கொடுக்கவில்லை. ஆனால், ஏழாவது தினத்தன்று அவர் மகிழ்ச்சியோடு ஒரு துண்டு ரொட்டியும், கொஞ்சம் தேநீரும் சாப்பிட்டார். அவருடைய ஜுரம் குறைந்திருந்ததை டாக்டர் கவனித்தார். அன்று காலையில்தான் அவருக்கு சுய உணர்வு வந்தது.

மாஸ்கோவை விட்டு புறப்பட்ட பின்பு முதல் இரவன்று சீதோஷ்ண நிலைமை வெது வெதுப்பாய் இருந்தபடியால் வண்டியிலேயே அவர் தங்கி இருந்தார். மிட்டைஷி என்ற இடத்தில் வண்டியை விட்டு தம்மை வெளியே எடுத்து கொஞ்சம் தேநீர் கொடுக்கும்படி அவரே கேட்டுக்கொண்டார். அவரை வெளியே எடுத்து குடிசைக்குள் கொண்டு போகும்போது, அவருக்கு ஏற்பட்ட வலியினால் அவர் பலமாக கூச்சலிட்டு, அதனால் மீண்டும் தமது உணர்வை இழந்தார். அவரை அவருடைய முகாம் - படுக்கையில் படுக்க வைத்தபோது, அவர் வெகு நேரம் அசைவற்று கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தார். பின்னால், கண்களைத் திறந்து மெதுவான குரலில் 'தேநீர் எங்கே?' என்று கேட்டார். அம்மாதிரியான சிறிய காரியங்களைக் கூட அவர் நினைவு கொண்டிருந்தது டாக்டரைக்கூட ஆச்சர்யப்படும்படி செய்தது. அவர் இளவரசர் ஆண்ட்ரூவின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். அது அபிவிருத்தி அடைந்திருந்தது. அதைக் கண்டு அந்த டாக்டர் ஆச்சர்யமும் அதிருப்தியும் கொண்டார். ஏனெனில், அவருடைய நோயாளி அப்பொழுது சாகாவிட்டால், அதிக வேதனையோடு சிறிது காலம் கழித்து சாகவேண்டி இருக்கும் என்பதை, அந்த டாக்டர் தமது அனுபவத்தினால் அறிந்திருந்தார். இளவரசர் ஆண்ட்ரூவின் பட்டாளத்தைச் சேர்ந்த சிவப்பு மூக்கையுடைய மேஜர் டிமோக்கின் மாஸ்கோவில் அவருடன் வந்து சேர்ந்தார். அவரும் பாராடினோ போரில் காலில் காயமடைந்தபடியால் அவருடனேயே எடுத்து வரப்பட்டார். அவர்களோடு ஒரு டாக்டரும், இளவரசர் ஆண்ட்ரூவின் வேலைக்காரனும், அவருடைய வண்டிக்காரனும், இரண்டு வில்லைச் சேவகர்களும் வந்து கொண்டிருந்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அவர்கள் சிறிது தேநீர் கொடுத்தார்கள். அவர் அதை ஆவலோடு குடித்தார். எதையோ நினைத்துப் பார்க்கவும், புரிந்துகொள்ளவும் முயற்சிப்பவரைப்போல, தமக்கு எதிரேயுள்ள கதவை ஜுரம் கொண்ட கண்களினால் நோக்கினார்.

'எனக்கு இனிமேல் வேண்டியதில்லை. இங்கே டிமோக்கின் இருக்கிறாரா?' என்று கேட்டார்.

டிமோக்கின் பெஞ்சு வழியாக நகர்ந்து அவரிடம் சென்றார்.

'நான் இங்கே இருக்கிறேன், மேன்மை தங்கியவரே.'

'உமது காயம் எப்படி இருக்கிறது?'

'என்னுடையதா, ஐயா? எல்லாம் சரியாய் இருக்கிறது. ஆனால், உம்மைப் பற்றி என்ன?'

இளவரசர் ஆண்ட்ரூ எதையோ நினைவு கூர முயற்சிப்பவரைப் போல சிந்தித்துப் பார்த்தார்.

'எனக்கு யாராவது ஒரு புத்தகம் கொண்டு வர முடியாதா?' என்று அவர் கேட்டார்.

'என்ன புத்தகம்?'

'சுவிசேஷப் புத்தகம். என்னிடம் இப்பொழுது ஒன்றும் இல்லை.'

அவருக்கு அதைக் கொண்டு வந்து கொடுப்பதாக டாக்டர் கூறிவிட்டு, அவருடைய சௌக்கியத்தைப் பற்றி கேட்க ஆரம்பித்தார். டாக்டர் கேட்ட எல்லா கேள்விகளுக்கும் தயக்கத்துடனும், ஆனால் பகுத்தறிவுடனும் இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார். அவருக்கு மிகுந்த வலியும் அசௌகரியமும் இருந்தபடியால், தமது இடுப்பிற்குக் கீழே ஒரு தலையணையை வைக்கும்படி சொன்னார். டாக்டரும் வேலைக்காரனும் அவரை மூடியிருந்த மேல் சட்டையை எடுத்தார்கள். காயம்பட்ட இடத்தில் சதை அழுகிக்கொண்டு வந்தபடியால், அதிலிருந்து வந்த துர்வாசனையினால், அவர்களுடைய முகங்கள் சுளித்தன. அந்த பயங்கரமான காயம்பட்ட இடத்தை சோதனை செய்ய ஆரம்பித்தார். ஏதோ ஒன்றைப் பற்றி டாக்டர் மிகுந்த அதிருப்தி கொண்டிருந்தபடியால், கட்டுகளை மாற்றிக் கட்டினார். காயமடைந்திருந்த அவரைக் கொஞ்சம் திருப்பியபோது அவர் மீண்டும் வலியினால் முனங்கி, சுவாதீனம் இழந்து வேதனையினால் ஜன்னி பிடித்தவரைப் போல உளற ஆரம்பித்தார். அவர் அந்த புத்தகத்தைக் கொண்டு வந்து தமக்குக் கீழே வைக்கும்படி கேட்டுக்கொண்டே இருந்தார்.

'இதனால் உங்களுக்கு என்ன தொந்தரவு ஏற்பட்டு விடும்? என்னிடம் அந்த புத்தகம் இல்லை. எனக்காக ஒன்றைக் கொண்டு வந்து, எனக்குக் கீழே ஒரு வினாடி வையுங்கள்' என்று ஒரு பரிதாபகரமான குரலில் கேட்டுக் கொண்டார்.

தமது கைகளை கழுவுவதற்காக அந்த டாக்டர் ஆளோடிக்குச் சென்றார்.

'உங்களுக்கெல்லாம் மனச்சாட்சி என்பதே கிடையாது' என்று தமது கையில் தண்ணீரை விட்டுக் கொண்டிருந்த வேலைக்காரனை பார்த்து டாக்டர் சொன்னார். 'ஒரே ஒரு வினாடிதான் நான் உன்னைப் பார்க்காமல் இருந்தேன்... அது எப்பேர்ப்பட்ட வலியாய் இருக்கும், உனக்குத் தெரியுமா? அதை எப்படித்தான் அவர் சகிக்க முடியுமோ, எனக்குத் தெரியவில்லை.'

'அவருடைய முதுகிற்கு அடியில் நாம் ஏதோ வைத்தோம் என்று தான் நான் நினைக்கிறேன்; கிறிஸ்து சாட்சியாகச் சொல்லுகிறேன்' என்று அந்த வேலைக்காரன் கூறினான்.

மிட்டைஷியில் தங்கியபோது தம்மை வண்டியிலிருந்து எடுத்து குடிசைக்குக் கொண்டு போகும்படி இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிய போதுதான் அவர் எங்கே இருக்கிறார் என்பதையும், அவருக்கு என்ன நேர்ந்திருக்கிறது என்பதையும், அவர் எப்படி காயமடைந்தார் என்பதையும் முதன் முதலாக அறிந்தார். குடிசைக்குக் கொண்டு போகும்போது வலியினால் அவர் உணர்வை இழந்த போதிலும், பின்னால் மீண்டும் உணர்வுபெற்றார். அவர் தேநீர் அருந்திக் கொண்டிருந்த போது, தமக்கு நேரிட்டவைகளை யெல்லாம் மீண்டும் ஒரு தடவை நினைத்துப் பார்த்தார். ஆஸ்பத்திரி முகாமில் அவர் இருந்தபோது, அவர் விரும்பாத ஒரு மனிதரின் துன்பங்களைப் பார்த்து அவருக்குத் தோன்றிய புதிய சிந்தனைகளும், அவற்றால் மகிழ்ச்சி ஏற்படும் என்ற நம்பிக்கையும், அவருடைய நினைப்பில் இப்பொழுது தெளிவாகத் தோன்றின. அந்த நினைப்புகள் இப்பொழுது மங்கலாகவும், தெளிவற்றவையாகவும் தோன்றிய போதிலும், அவருடைய உள்ளத்தை அவை இப்பொழுது ஆட்கொண்டு விட்டன. மகிழ்ச்சியைப் பெறுவதற்குத் தம்மிடம் ஒரு புதிய வழி இருப்பதை அவர் நினைவு கூர்ந்தார். அந்த மகிழ்ச்சிக்கும், சுவிசேஷங்களுக்கும் ஏதோ தொடர்பிருப்பதாகவும் அவர் உணர்ந்தார். அதனால் தான் சுவிசேஷப் புத்தகம் வேண்டும் என்று அவர் கேட்டார். அசௌகர்யமான நிலைமையில் அவரை வைத்து அவரைத் திருப்பிப் போட்டதால், அவர் மீண்டும் உணர்வை இழந்தார். மூன்றாவது தடவையாக அவர் உணர்வு பெற்ற போது, அச்சமயம் இரவில் பூரணமான அமைதி நிலவிக் கொண்டிருந்தது. அவருக்குப் பக்கத்தில் இருந்த ஒவ்வொருவரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். ஆளோடிக்கு அப்பால் இருந்து ஒரு சுவர் கோழி கிரீச்சிட்டுக் கொண்டிருந்தது. தெருவில் யாரோ ஒருவர் கூச்சலிட்டுக் கொண்டும், பாடிக் கொண்டும் இருந்தார். கரப்பான்கள் மேஜை மீதும், தெய்வச் சிலைகள் மீதும், சுவர்கள் மீதும் ஓடிக்கொண்டிருந்தன. ஒரு பெரிய ஈ ஒன்று அவருடைய படுக்கையின் தலைப்பில் வந்து அமர்ந்து அங்கிருந்த மெழுகு வத்தியை சுற்றிக் கொண்டிருந்தது. அந்த மெழுகு வத்தியின் திரி கரிந்து காளான் மாதிரி உருக்கொண்டிருந்தது.

அவருடைய மனம் சாதாரண நிலைமையில் இல்லை. ஒரு ஆரோக்கியமான மனிதன் ஏக காலத்தில் எத்தனையோ

காரியங்களைப் பற்றி யோசிக்கவும் உணரவும் நினைவு கொள்ளவும் முடியும்; என்றாலும், அந்த நினைப்புத் தொடர்களிலோ, சம்பவங்களிலோ, எதையாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அதன் மீது தனது முழுக் கவனத்தையும் செலுத்துவதற்கு வேண்டிய சக்தியும் விருப்பமும் அவனுக்குண்டு. ஒரு ஆரோக்கியமான மனிதன் ஆழ்ந்த சிந்தனையில் இருக்கும்போது யாராவது ஒருவர் அங்கே திடீரென்று வந்துவிட்டால், உடனே தனது சிந்தனையிலிருந்து விடுபட்டு அந்த மனிதருக்கு உபசாரமாக ஒன்றிரண்டு வார்த்தைகள் கூற முடியும்; ஆனால், உடனே மீண்டும் தனது பழைய சிந்தனைக்கு போக முடியும். இம்மாதிரி விஷயத்தில் இளவரசர் ஆண்ட்ரூவின் மனமானது சாதாரண நிலைமையில் இல்லை. அவருடைய உள்ளத்தின் சக்திகள் எல்லாம், முன்னால் எப்பொழுதும் இருந்ததை விட அதிகத் தெளிவோடும் வேகத்தோடும் இயங்கி வந்தன. ஆனால், அவை அவருடைய விருப்பத்தோடு தொடர்பில்லாமல் இயங்கி வந்தன. ஒன்றுக்கொன்று நேர் விரோதமான சிந்தனைகளும் காட்சிகளும் ஏககாலத்தில் அவருக்குத் தோன்றின. சில வேலைகளில் அவருடைய மூளை திடீரென்று வேகமாகவும், தெளிவோடும் வேலை செய்ய ஆரம்பித்து, அவர் ஆரோக்கியமாய் இருந்த காலத்தில் சென்றிராத ஆழத்திற்குப் போய்ச் சேரும். ஆனால், திடீரென்று அந்த வேலையிலிருந்து அது விலகி ஒரு எதிர்பாராத சிந்தனைக்குத் திரும்பும். அந்த சிந்தனையிலிருந்து மீண்டும் அந்த மனதை திருப்புவதற்கான பலம் அவருக்கு அச்சமயம் இல்லை.

'ஆம், எனக்கு ஒரு புதிய மகிழ்ச்சி ஞானோதயத்தில் தோன்றி இருக்கிறது. அது ஒருவராலும் பறிக்க முடியாதது' என்று அவர் பாதி இருளடைந்திருந்த அந்த அமைதியான குடிசையில் படுத்துச் சிந்தித்துக் கொண்டும், ஜுரம் கொண்ட விரிந்த கண்களால் தமக்கு நேராக குத்திட்டுப் பார்த்துக்கொண்டும் இருந்தார். மனிதன் மீது பிடிப்புள்ள இந்த இகலோக சக்திகளுக்கும், செல்வாக்குகளுக்கும் அப்புறமாக, அந்த மகிழ்ச்சி இருக்கிறது - உள்ளத்தை மட்டுமே பற்றிய ஒரு மகிழ்ச்சி; அன்பினால் ஏற்படும் ஒரு மகிழ்ச்சி. ஒவ்வொரு மனிதரும் அதை அறிந்துகொள்ள முடியும்; ஆனால், கடவுள் ஒருவரால்தான் அதைக் கொடுக்க முடியும். ஆனால், கடவுள் அதைப்பற்றி எப்படி கட்டளையிடுகிறார்? மனித குமாரன் ஏன்...?'

திடீரென்று அந்த சிந்தனைத் தொடர் அறுந்தது. இளவரசர் ஆண்ட்ரூவுக்கு (அது உண்மையானதா, அல்லது மயக்கமானதா என்பது புரியாமலேயே) ஒரு மெதுவான, குசுகுசுப்பான குரல்

ஒழுங்காக விடாமல் திரும்பத் திரும்ப 'பிட்டி - பிட்டி - பிட்டி' என்றும், அதன் பின்னால் 'டி - டி' என்றும், அதன் பின்னால் மீண்டும் 'பிட்டி - பிட்டி - பிட்டி' என்றும், 'டி - டி' என்றும் கேட்டன. அதே சமயத்தில் அவருடைய முகத்திற்கு மேலாக, அநேகமாக நடுமத்தியில், ஒரு விசித்திரமான ஆகாயக் கூண்டு ஒன்று ஊசிகளினாலோ, அல்லது சுள்ளிகளினாலோ அமைக்கப்பட்டு, அது மெதுவான சங்கீதக் குரலுக்கு ஒத்ததாக வளர்ந்து கொண்டு போவது போல தோன்றியது. தாம் ஜாக்கிரதையாக படுத்திருப்பதிலிருந்து அசையக் கூடாது என்றும் (அம்மாதிரி அசைவது அவருக்கு முடியாத காரியம்), அப்படி இருந்தால்தான் அந்த ஆகாயக் கூண்டு உடையாமல் இருக்கும் என்றும் அவர் நினைத்தார். என்றாலும், அந்த கூண்டு அழிந்து கொண்டும், மீண்டும் அந்த சங்கீதத்தின் தாளத்திற்குத் தக்கபடி மெதுவாக உயர்ந்து கொண்டும் இருந்தது. 'அது வளருகிறது, வளருகிறது, பரவுகிறது, மீண்டும் வளருகிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ தமக்குள் கூறிக் கொண்டார். இந்த குசுகுசுப்பான ஓசையை அவர் கேட்டுக் கொண்டிருந்தபோது, ஊசிகளினாலாகிய அந்த ஆகாயக் கூண்டின் அமைப்பையும் அழிவையும் அவர் உணர்ந்து கொண்டிருந்தபோது மற்றொன்றையும் அவர் பார்த்தார். அதாவது, அந்த மெழுகு வத்தியைச் சுற்றி ஒரு சிவப்பு வட்டம் இடையிடையே தோன்றுவதை அவர் பார்த்தார். கரப்பான்களின் சலசலப்பையும், தமது தலையணை மீதும் தம்முடைய முகத்தின் மீதும் பறந்து வந்து உட்கார்ந்திருந்த அந்த ஈயினுடைய ரீங்காரத்தையும் அவர் கேட்டார். அந்த ஈ அவருடைய முகத்தை ஒவ்வொரு தடவையும் தொடும்போது, அவருக்கு ஒரு எரிச்சலான உணர்ச்சியைக் கொடுத்தது. என்றாலும், அந்த ஆகாயக் கூண்டு எந்த இடத்தில் உயர்ந்து கொண்டிருக்கிறதோ, அதே இடத்தை அந்த ஈ வந்து தாக்கிய போதிலும், அந்த ஆகாயக் கூண்டை அந்த ஈயினால் அழிக்க முடியாமல் இருப்பதைக் கண்டு அவர் ஆச்சரியம் கொண்டார். இதைத் தவிர, முக்கியமான மற்றொரு விஷயமும் இருக்கிறது. அதாவது, கதவிற்குப் பக்கத்தில் ஏதோ ஒன்று வெள்ளையாக, ஸ்பிங்ஸ் போன்ற அசையாத உருவச் சிலையாக காணப்பட்டதும், அவருடைய மனதை அழுத்தி வந்தது.

'ஒரு வேளை மேஜை மீதிருக்கும் எனது சட்டையாக அது இருக்கலாமோ? இதோ எனது கால்கள் இருக்கின்றன. அதுதான் வாசல். ஏன் இம்மாதிரியாக வளர்ந்துகொண்டும், பரவிக் கொண்டும், 'பிட்டி - பிட்டி - பிட்டி' என்றும், 'டி - டி' என்றும், 'பிட்டி - பிட்டி - பிட்டி' என்றும் சொல்லிக் கொண்டிருக்க

வேண்டும்...? அவ்வளவு போதும். தயவு செய்து போய்விடு' என்று இளவரசர் ஆண்ட்ரூ யாரோ ஒருவரை வருத்தத்தோடு இரங்கிக் கேட்பதைப் போல சொன்னார். திடீரென்று அவருடைய உணர்ச்சிகளும், சிந்தனைகளும் உள்ளத்தின் மேல் பரப்பிற்கு தெளிவோடும், வேகத்தோடும் வந்தன.

'ஆம் - அன்பு' என்று அவர் மிகத் தெளிவாக மீண்டும் சிந்தித்தார். ஆனால், அந்த அன்பு என்பது, ஏதோ ஒன்றை விரும்புவதற்காக ஏற்படும் அன்பல்ல; ஒரு நோக்கத்திற்காக, ஒரு காரணத்திற்காக ஏற்படும் அன்பல்ல; நான் மரணப் படுக்கையில் இருக்கும்போது, என்னுடைய விரோதியை நான் பார்த்தபோது, அவன்மீது நான் அன்பு கொள்ளுவதை, முதல் தடவையாக நான் அனுபவித்தேன். அந்த அன்பையே அன்பு என்று நான் சொல்லுகிறேன். நான் அனுபவித்த அந்த அன்புதான் ஆத்மாவின் சாரமாகும். அந்த அன்பிற்கு ஆசை என்பது எதுவும் கிடையாது. இப்பொழுது மீண்டும் நான் அந்த பேரானந்தத்தை உணருகிறேன். அக்கம்பக்கத்தில் உள்ளவர்களை ஒருவர் நேசிப்பதும், விரோதிகளை ஒருவர் நேசிப்பதும், ஒவ்வொன்றையும் ஒருவர் நேசிப்பதும், கடவுளை அவர் அருள் காட்டியுள்ள எல்லாவற்றோடு நேசிப்பது போலாகும். உங்களுக்கு மிகவும் அன்பாகவுள்ள ஒருவரை மனித அன்போடு நேசிப்பது சாத்தியமான காரியம்; ஆனால், ஒரு எதிரியை நேசிப்பது என்பது தெய்வீக அன்பால்தான் செய்ய முடியும். அதனால் தான் என்னுடைய எதிரியாகிய அந்த மனிதனை நான் நேசிப்பதாக உணர்ந்தபோது, நான் அந்த விதமான மகிழ்ச்சியை அனுபவித்தேன். அவனுக்கு என்ன கதி நேரிட்டது? அவன் உயிரோடு இருக்கிறானா...?'

'மனித அன்போடு ஒருவர் நேசிக்கும் காலத்தில், அன்பிலிருந்து துவேஷத்திற்கு ஒருவர் மாறக்கூடும். ஆனால், தெய்வீக அன்பு அம்மாதிரி மாற முடியாது. இல்லை, மரணமானாலும் சரி, வேறு எதுவானாலும் சரி, அதை அழிக்க முடியாது. அதுதான் ஆத்மாவின் சாரம். என்றாலும், எனது வாழ்க்கையில் எத்தனை பேரை நான் வெறுத்திருக்கிறேன்? அவர்கள் எல்லாரையும் விட நான் அவள் மீதுதான் அதிகமான விருப்பும் வெறுப்பும் கொண்டேன்.' இச்சமயம் அவர் மிகத் தெளிவாக நட்டாஷாவின் சித்திரத்தை உருவகம் கொண்டார். அவருக்குக் களிப்பைக் கொடுத்து வந்த அவளுடைய வசீகரங்களைப் பற்றி மட்டும், முன்பெல்லாம் அவர் நினைத்துப் பார்த்ததைப் போல, இப்பொழுது அவர் நினைக்க வில்லை; இப்பொழுது முதல் தடவையாக அவளுடைய ஆத்மாவின் சித்திரத்தை அவர் உருவகப்படுத்தி பார்த்தார்.

அவளுடைய உணர்ச்சிகளையும் அவளுடைய கஷ்டங்களையும், அவமானத்தையும், வியாகூலத்தையும் அவர் புரிந்துகொண்டார். தாம் அவளை மறுத்ததால் ஏற்பட்ட எல்லா கொடுமைகளையும், அவளுடன் மனஸ்தாபம் கொண்டதால் ஏற்பட்ட கொடுமையை யும் அவர் முதல் தடவையாக உணர்ந்தார். 'இன்னும் ஒரு தடவை அவளைப் பார்ப்பதற்கு என்னால் முடியுமானால், இன்னும் ஒரே ஒரு தடவை அவளுடைய அந்தக் கண்களை நோக்கி நான் சொல்ல முடியுமானால்...'

'பிட்டி - பிட்டி - பிட்டி' என்றும், 'டி - டி' என்றும், 'பிட்டி - பிட்டி - பிட்டி' என்றும், அந்த ஈ சிறகடித்தது... அவருடைய சிந்தனை திடீரென்று மற்றொரு உலகத்திற்குப் போயிற்று. நிஜமும் மயக்கமும் கலந்த அந்த உலகத்தில் விசித்திரமானது ஒன்று நடந்துகொண்டிருந்தது. அந்த உலகத்தில் மீண்டும் அந்த கூண்டு ஸ்தாபிதமாயிற்று. ஆனால், கீழே விழவில்லை. ஏதோ ஒன்று பரவிக்கொண்டிருந்தது. சிவப்பு ஒளி வட்டத்தைக் கொண்ட அந்த மெழுகு வத்தி இன்னமும் எரிந்துகொண்டிருந்தது. சட்டையைப் போன்ற ஒரு ஸ்பிங்ஸ் உருவம் வாசலுக்குப் பக்கத்தில் படுத்திருந்தது. இவற்றோடு ஏதோ ஒன்று வெண்மையான ஸ்பிங்ஸ் தோன்றி கதவிற்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தது. அந்த ஸ்பிங்ஸ் உருவத்திற்கு, அப்பொழுதுதான் அவர் நினைத்துக் கொண்டிருந்த நட்டாஷாவினுடைய வெளிறிய முகமும், பிரகாசமான கண்களும் இருந்தன.

'ஓ, இந்த தொடர்ச்சியான ஜன்னி நிலைமை எவ்வளவு கஷ்டமாய் இருக்கிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்து, தமது மனோராஜ்யத்திலிருந்து அந்த முகத்தை விரட்டுவதற்காக முயற்சி செய்தார். ஆனால், அந்த முகமானது உண்மையின் வேகத்தோடு அவருடைய தோற்றத்திற்கு முன்பாக விளங்கி, நெருங்கி வந்துகொண்டிருந்தது. அந்த சுத்தமான சிந்தனா உலகத்திற்கு மீண்டும் திரும்ப இளவரசர் ஆண்ட்ரூ விரும்பினார். அவரால் முடியவில்லை. அந்த ஜன்னியானது மீண்டும் அவரை தம்முடைய உலகத்திற்கு இழுத்துக் கொண்டு போயிற்று. அந்த மெதுவான, தணிவான தொனி, தாளந்தவறாத தன்னுடைய குரலை விடாமல் காட்டிக்கொண்டிந்தது. ஏதோ ஒன்று அவரை அழுத்தி பரவி நின்றது. அந்த விசித்திரமான முகம் அவருக்கு முன்னால் தோன்றியது. தம்முடைய உணர்வை மீண்டும் பெறுவதற்காக, தமது பலம் பூராவையும் இளவரசர் ஆண்ட்ரூ திரட்டினார்; சிறிது அசைந்தார். திடீரென்று அவருடைய காதுகளில் ஏதோ ஒன்று ஒலித்து, அவருடைய கண்கள் பஞ்சடைத்து தண்ணீருக்குள் மூழ்கியவரைப்

போல அவர் தமது உணர்வை இழந்தார். அவர் மீண்டும் உணர்வு பெற்றபோது, நட்டாஷா, அந்த புதிய ஞானோதயத்தினால் அவருக்கு விளங்கிய தெய்வீக அன்பினால் எல்லாரையும் விட அதிகமாக அன்பு கொள்ள வேண்டும் என்று அவர் ஏக்கத்தோடு காத்திருந்த அதே உயிருள்ள நட்டாஷா, அவருக்கு முன்னால் முழங்கால் படியிட்டிருந்ததைக் கண்டார். அவள் உண்மையான, உயிருள்ள நட்டாஷா என்பதை அவர் அறிந்து கொண்டதும் ஆச்சரியப்படவில்லை. ஆனால், அமைதியான மகிழ்ச்சி கொண்டார். நட்டாஷா அவளுடைய முழங்கால்களில் அசைவற்று (அவளால் அசைய முடியவில்லை) தன்னுடைய பீதியுற்ற கண்களை அவர் மீது பதித்து, தனது விம்மல்களை அடக்கிக் கொண்டு இருந்தாள். அவளுடைய முகம் வெளிறிப் போயும், கடினமாகவும் இருந்தது. அவளுடைய முகத்தின் அடிப்பாகத்தில் தான் ஏதோ ஒன்று துடித்துக் கொண்டிருந்தது.

இளவரசர் ஆண்ட்ரூ மனச்சுமை குறைந்தவரைப்போல பெரு மூச்சுவிட்டு, புன்னகை காட்டி தமது கையை நீட்டினார்.

'நீயா? எப்பேர்ப்பட்ட அதிருஷ்டம்!' என்று அவர் சொன்னார்.

வேகமாக, ஆனால் ஜாக்கிரதையாக தனது முழங்கால்களால் நட்டாஷா அவரிடம் நெருங்கி, அவருடைய கையை கவனத்தோடு பற்றி, தனது தலையை அதில் சாய்த்து, லேசாக தனது உதடுகளால் முத்தமிட ஆரம்பித்தாள்.

'என்னை மன்னியுங்கள்' என்று அவள் மெதுவாகக் கூறி, தனது தலையை உயர்த்தி அவரை நோக்கினாள். 'என்னை மன்னியுங்கள்!'

'நான் உன்னை காதலிக்கிறேன்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'மன்னிக்க வேண்டும்...'

'எதை மன்னிப்பது?' என்று அவர் கேட்டார்.

'நான் என்ன செய்தேனோ, அதற்காக என்னை மன்னிக்க வேண்டும்' என்று தயக்கத்தோடு, மெதுவான, இடையிடையே நிறுத்திய குரலோடு சொல்லி விட்டு, தனது உதடுகளால் இன்னும் வேகமாக அவருடைய கையை முத்தவிட ஆரம்பித்தாள்.

'நான் உன்னிடம் அதிகமான அன்பு கொண்டிருக்கிறேன். முன்னை விட அதிகமான அன்பு கொண்டிருக்கிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லி, அவருடைய கண்களை பார்ப்பதற்காக தமது கையால் அவளுடைய முகத்தை நிமிர்த்தினார்.

அந்த கண்கள் மகிழ்ச்சியான நீர் நிறைந்து, தயக்கத்தோடும், ஆசையோடும், மகிழ்ச்சியான காதலோடும் காணப்பட்டன.

நட்டாஷாவின் மெலிந்த வெளிறிய முகம், வீங்கிய உதடுகளோடு அழகில்லாமல் இருந்தது - திகில் உண்டாக்குகிறமாதிரி இருந்தது. ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ அதைப் பார்க்கவில்லை. அவளுடைய பிரகாசமான கண்களையே பார்த்தார். அவை அழகாய் இருந்தன. அவர்களுக்குப் பின்னால் பேச்சுக் குரல்கள் கேட்டன.

வேலைக்காரனான பீட்டர் இப்பொழுது நன்றாய் விழிப்படைந்து டாக்டரை எழுப்பினரன். காலில் இருந்த வலியினால் தூங்காமல் இருந்த டிமோக்கின் அங்கு நடப்பவைகளையெல்லாம் கவனித்துக் கொண்டு, அந்த பெஞ்சின் மீது தமது வெறும் உடம்பை போர்வையால் நன்றாக மூடிக்கொண்டு படுத்திருந்தார்.

'இது என்ன இது?' என்று படுக்கையிலிருந்து எழுந்து டாக்டர் சொன்னார். 'திருமதியே, தயவு செய்து போய்விடு.'

தனது குமாரியை காணாததால் தேடிப் பார்த்து வரும்படி கோமகளால் அனுப்பப்பட்ட ஒரு வேலைக்காரி அச்சமயம் வந்து கதவைத் தட்டினாள்.

தூக்கத்தில் நடப்பவர்களை தூக்கத்திலிருந்து எழுப்புவதைப் போல, நட்டாஷா விழிப்படைந்து அந்த அறையை விட்டு வெளியே போனாள். தனது குடிசைக்குத் திரும்பி, தனது படுக்கையில் படுத்து விம்மி அழுதுகொண்டிருந்தாள்.

அன்று முதல், ராஸ்டோவ்களின் மீதமுள்ள பிரயாண காலத்தில் இரவில் எங்கெங்கு தங்கினார்களோ, அங்கெல்லாம் காயமடைந்த பால்கோன்ஸ்கியை விட்டு நட்டாஷா பிரியவே இல்லை. அம்மாதிரி ஒரு இளம் பெண்ணிடம் அவ்வளவு உறுதியையோ, அல்லது காயமடைந்த ஒருவருக்கு செய்யும் சிசுருட்சையில் அவ்வளவு சாமர்த்தியத்தையோ, தாம் கண்டதில்லை என்று டாக்டரே ஒப்புக்கொண்டார்.

பிரயாண காலத்தில் இளவரசர் ஆண்ட்ரூ மரணமாகக்கூடும் என்று டாக்டர் சொல்லியிருந்தார். ஆகவே, பிரயாண காலத்தில் தனது குமாரியின் கைகளில், இளவரசர் ஆண்ட்ரூ மரணமடைவதாய் இருந்தால் அது எவ்வளவு பயங்கரமாய் இருக்கும் என்று கோமகளுக்குத் தோன்றியது. என்றாலும், நட்டாஷா செய்ததை அவளால் தடுக்க முடியவில்லை. நட்டாஷாவுக்கும் இளவரசர் ஆண்ட்ரூவுக்கும் இப்பொழுது அன்னியோன்னியம் ஸ்தாபிக்கப் பட்டு விட்டதால், அவர் மீண்டும் பிழைத்தெழுந்தால் பழைய நிச்சயார்த்தம் புதுப்பிக்கப் படுமா என்ற எண்ணம் மீண்டும் பலருக்குத் தோன்றியது. ஆனால், ஒருவராவது - நட்டாஷாவும்

இளவரசர் ஆண்ட்ரூவும் உள்பட - இதைப் பற்றி பேசியதில்லை. வாழ்வையும் சாவையும் பற்றிய இந்த பிரச்னை, பால்கோன்ஸ்கி மீது மட்டும் தொங்கி நிற்கவில்லை; ருஷ்யா முழுவதின் மீதுமே அது தொங்கி நின்றபடியால், மற்ற எல்லா சிந்தனைகளையும் அது விலக்கி வைத்துவிட்டது.



செப்டெம்பர் 3-ந் தேதியன்று காலையில், பீயர் நேரம் கழித்து விழித்தார். அவருடைய தலை வலித்துக் கொண்டிருந்தது. அவர் ஆடைகளை களையாமல் படுத்துக்கொண்டபடியால், அவர் உடலில் இருந்த உடைகள் எரிச்சலைக் கொடுக்கும் படியாக இருந்தன. முதல் நாளன்று ஏதோ வெட்கப்படக்கூடிய ஒரு காரியத்தை செய்துவிட்டதைப் போல, அவருடைய மனதில் ஒரு மங்கலான நினைப்பு தோன்றிக் கொண்டிருந்தது. கேப்டன் ராம்பலுடன் முதல் நாளன்று அவர் செய்த உரையாடலையே, அவருக்கு வெட்கப்படக் கூடிய காரியமாக தோன்றியது.

காலையில் 11 மணியாயிற்று. என்றாலும், வெளியே இருட்டாய் இருந்தது. பீயர் எழுந்து தமது கண்களை கசக்கிக் கொண்டு, மேஜை மீது இருந்த கைத்துப்பாக்கியைப் பார்த்தார். மேஜை மீது கெராசிம் அதைக் கொண்டு வந்து வைத்திருந்தார். அதைப் பார்த்த பின்புதான், அவர் எங்கே இருக்கிறார் என்பதையும் அன்று அவர் செய்ய வேண்டிய வேலை என்ன என்பதையும் அவர் நினைவு கூர்ந்தார்.

'இப்பொழுது ரொம்ப நேரமாய் விட்டதா?' என்று அவர் நினைத்தார். 'இல்லை, ஒருவேளை அவர் நடுப்பகலுக்கு முன்பாக மாஸ்கோவிற்குள் பிரவேசிக்காமல் இருக்கலாம்.'

தாம் செய்ய வேண்டிய வேலையைப் பற்றி சிந்தனை செய்ய பீயர் விரும்பாமல் நடவடிக்கையில் இறங்க ஆரம்பித்தார்.

தம்முடைய உடைகளை யெல்லாம் சரி செய்துகொண்டு, கைத்துப்பாக்கியை கையில் எடுத்துக்கொண்டு வெளியே போக புறப்பட்டார். அப்பொழுதுதான் முதல் தடவையாக அவருக்கு ஒன்று தோன்றியது. அதாவது கையில் துப்பாக்கியோடு தெருக்களில் அவர் போகக்கூடாது. அவ்வளவு பெரிய கைத்துப்பாக்கியை அவருடைய வெளிச் சட்டையில் மறைத்து வைக்கவும் முடியாது, மற்றவர்கள் பார்க்க முடியாமல் அவருடைய

பெல்ட்டிலோ, அல்லது கைக்கு அடியிலோ அவரால் கொண்டு போகவும் முடியாது. தவிரவும், அதிலிருந்த தோட்டா சுடப்பட்டிருக்கிறது. திரும்பவும் அதில் குண்டை கெட்டிப்பதற்கு அவகாசம்இல்லை. 'பரவாயில்லை, குத்துவாள் மட்டும் போதும்' என்று அவர் தமக்குள் சொல்லிக் கொண்டார். தமது நோக்கத்தைப் பற்றி அவர் திட்டமிட்டபோது, பல தடவைகளில் ஒரு விஷயம் அவருடைய ஞாபகத்திற்கு வந்தது. அதாவது, 1809 - ஆம் வருஷத்தில் நெப்போலியனை கொல்லுவதற்காக முயற்சி செய்த மாணவனின் முக்கியமான தவறு என்னவென்றால், அவன் குத்துவாளை உபயோகிக்க முயற்சித்ததேயாகும். இதை பல தடவைகளில் பீயர் நினைத்திருக்கிறார். ஆனால், அவருடைய முக்கியமான நோக்கம் அவருடைய திட்டத்தை நிறைவேற்றுவது அல்லவென்றும், அவருடைய நோக்கத்தை நிறைவேற்றாமல் விடப்போவதில்லை என்பதை காட்டுவதேயென்றும் தோன்றியது. அதற்காக அவரால் செய்யக்கூடிய காரியங்களையெல்லாம் செய்வார் என்பதை நிரூபிக்க விரும்புவதைப்போல, ஒரு பச்சை உறையில் இருந்த மழுங்கிப்போன குத்துவாளை அவசரமாக எடுத்து, தம்முடைய உள் சட்டையில் மறைத்துக்கொண்டார். அந்த குத்துவாளை சுக்காரரேவ் மார்க்கெட்டில் கைத்துப்பாக்கியோடு அவர் விலைக்கு வாங்கினார்.

தமது கோட்டிற்கு மேலாக ஒரு இடுப்பு பட்டியை கட்டிய பின்பு, தமது தொப்பியை தலையில் கொஞ்சம் கீழே இழுத்து வைத்துக்கொண்டு, சப்தம் போடாமலும், கேப்டனை சந்திக்காமலும் இருப்பதற்காக, தாழ்வாரம் வழியாக சென்று வெளியே தெருவிற்குப் போனார்.

முதல் நாளன்று மாலையில் அசிரத்தையோடு அவர் பார்த்த, மாஸ்கோவில் ஏற்பட்ட அந்த நெருப்பானது, அன்றிரவில் பெரிதாக பரவிவிட்டது. பல இடங்களில் நெருப்பு பற்றி எரிந்து கொண்டிருந்தது. ஆற்றுக்கு அக்கரையிலுள்ள வண்டித் தெருவிலிருந்து கட்டிடங்களும், மார்க்கெட்டிலும் பாவார்ஸ்கோய் என்ற இடத்திலுமுள்ள கட்டிடங்களும், மாஸ்க்வா நதியிலிருந்த மரத்தொட்டிகளும், நெருப்புப் பிடித்து எரிந்துகொண்டிருந்தன.

பக்கத்துத் தெருக்குள் வழியாக பாவார்ஸ்கோய் என்ற இடத்திற்கு பீயர் சென்று அங்கிருந்து அர்பாட் என்ற இடத்திலுள்ள செயின்ட் நிக்கலஸ் என்ற மாதா கோயிலுக்குச் சென்றார். அங்கே தான் அவருடைய நோக்கத்தை நிறைவேற்ற வேண்டுமென்று, வெகு காலத்திற்கு முன்பே அவர் தீர்மானித்திருந்தார். அநேகமாக எல்லா வீடுகளின் வெளிவாசல் கதவுகளும் பூட்டப்பட்டிருந்தன; ஜன்னல்கள் எல்லாம் அடைக்கப்பட்டிருந்தன; தெருக்களும்,

சந்துகளும் ஆள் நடமாட்டமில்லாமல் இருந்தன. காற்றெல்லாம் புகையால் நிறைந்து, தீப்பற்றி எரியும் வாசனை வீசிக் கொண்டிருந்தது. இடையிடையே கவலையும் பீதியும் கொண்ட முகங்களோடு தோன்றிய ருஷ்யர்களை சந்தித்தார். பிரஞ்சுக்காரர்கள் ராணுவ முறுக்கில் நடுத்தெருக்களில் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். ருஷ்யர்கள், பிரஞ்சுக்காரர்கள் ஆகிய இரு வகுப்பாருமே, பீயரை ஆச்சரியத்தோடு நோக்கினார்கள். அவருடைய உயரமும், பருமனும், அவருடைய முகத்தில் காணப்பட்ட ஒரு விசித்திரமான வியாகூல தோற்றமும் கொண்ட அவருடைய முழு உருவத்தையும் ருஷ்யர்கள் பார்த்தபோது, அவர் எந்த வகுப்பைச் சேர்ந்தவராய் இருப்பார் என்பதை புரிந்து கொள்ள முடியாமல், அவரை வெறித்துப் பார்த்தார்கள். மற்ற ருஷ்யர்கள் எல்லாரும் பிரஞ்சுக்காரர்களை பீதியுடனோ, அல்லது ஆவலுடனோ பார்க்கும்போது, பீயர் மட்டும் பிரஞ்சுக்காரர்களை கொஞ்சம்கூட லட்சியம் செய்யாமல் நடந்து போவதைக் கண்டு, தங்கள் கண்களில் ஆச்சரியம் தோன்ற பிரஞ்சுக்காரர்கள் அவரை நோக்கினார்கள். ஒரு வீட்டின் வெளிவாசலில் மூன்று பிரஞ்சுக்காரர்கள் நின்று கொண்டு சில ருஷ்யர்களுக்கு எதையோ விளக்கிக் கொண்டிருந்தார்கள். அவைகளை ருஷ்யர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆகவே, பிரஞ்சுக்காரர்கள் பீயரை நிறுத்தி, அவருக்கு பிரஞ்சு மொழி தெரியுமா என்று கேட்டார்கள்.

பீயர் தமது தலையை ஆட்டி விட்டு, மேலே நடந்து போனார். மற்றொரு தெரு வழியாக அவர் போய்க்கொண்டிருந்தபோது, ஒரு பச்சை வெடி மருந்து வண்டிக்குப் பக்கத்தில் ஒரு சிப்பாய் நின்று கொண்டிருந்தான். அவன் பீயரைப் பார்த்து கூச்சலிட்டான். ஆனால், பீயர் அதை கவனிக்காமல் போய்க்கொண்டிருந்தார். அவன் மேலும் மேலும் கூச்சலிட்டு, தனது துப்பாக்கியை எடுத்தான். அவன் துப்பாக்கியை எடுத்த சப்தத்தை கேட்ட பின்புதான் அந்தத் தெருவின் மற்றொரு புறமாக போக வேண்டும் என்பதை பீயர் அறிந்து கொண்டார். அவர் தம்மைச் சுற்றிலும் நடப்பவைகளை காதினால் கேட்பதுமில்லை; கண்ணினால் பார்ப்பதுமில்லை. அவர் தமது உறுதியை தமக்குள்ளாகவே பீதியோடும் அவசரத்தோடும் பற்றிக் கொண்டு போய்க்கொண்டிருந்தார். ஏதோ தமக்கு விரோதமான, பயங்கரமான ஒன்று என்பதாக, அந்த உறுதியை அவர் எண்ணினார். முதல் நாள் இரவு நடந்த அனுபவத்திற்குப் பின்னால், அதை ஒரு வேளை இழந்துவிட நேரிடுமோ என்று அவர் கவலை கொண்டிருந்தார். ஆனால், அவர் விரும்பிய இடத்திற்கு அவருடைய உறுதியோடு அவர் போய்ச் சேர முடியாது போயிற்று.

தவிரவும், அவர் போகிற வழியில் அவருக்குத் தடையாக எதுவும் இல்லாமல் இருந்தபோதிலும், அவருடைய நோக்கத்தை இப்பொழுது அவரால் நிறைவேற்றி வைக்க முடியாது. ஏனெனில், நெப்போலியன் சுமார் 4 மணி நேரங்களுக்கு முன்பாகவே, டாராகாமைலாவ் என்ற சுற்றுப்புறத்திலிருந்து கிரெம்லினுக்கு போவதற்காக அர்பாட்டைக் கடந்து போனார். பீயர் போய்க்கொண்டிருந்த அந்த நேரத்தில் நெப்போலியன் ஒருவியாகூலமான சிந்தனையோடு கிரெம்லினில் சக்கரவர்த்தியின் அறையில் அமர்ந்திருந்தார். பட்டணத்தில் ஏற்பட்டிருந்த நெருப்புகளை உடனே அணைப்பதற்கும், கொள்ளைகளை தடுப்பதற்கும், பிரஜைகளுக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்வதற்கும், விரிவான உத்தரவுகளை அவர் பிறப்பித்துக் கொண்டிருந்தார். ஆனால், இந்த விஷயம் பீயருக்குத் தெரியாது. தாம் செய்ய வேண்டிய வேலையிலேயே அவருடைய மனம் முழுவதும் லயித்திருந்தது. காரியத்தை செய்ய வேண்டிய நேரம் வந்தபோது தாம் பலவீனமடைந்து தமது காரியத்தை கைவிட்டு, தமது சுயமதிப்பையும் இழந்துவிட நேரிடுமோ என்ற உணர்ச்சியினால் பீயர் வருந்திக் கொண்டிருந்தார். அதாவது, ஒரு காரியத்தை செய்வதில் கஷ்டமில்லாமல் இருந்தபோதிலும், சிலருடைய சுபாவங்களுக்கு விரோதமாக அந்த காரியம் இருக்குமானால், அதை அவர்களால் செய்து முடிக்க முடியாது. என்றாலும், பிடிவாதமாக அதைச் செய்ய முயற்சிப்பதைப்போல பீயருடைய செய்கை இருந்தது.

தம்மைச் சுற்றிலும் நடப்பவைகளை காணவோ, கேட்கவோ முடியாத நிலைமையில் பீயர் இருந்தபோதிலும், அவருடைய உள்ளுணர்ச்சியினால் அவர் சரியான தெரு வழியாகவே போய்க்கொண்டிருந்தார்; பாவார்ஸ்கோய் என்ற இடத்திற்கு போகக்கூடிய பக்கத்துத் தெருக்கள் வழியாக அவர் போனபோது வழி தவறிவிட வில்லை.

அந்தத் தெருவை அவர் நெருங்கியதும், புகையானது மேலும் மேலும் அடர்த்தியாகக் காணப்பட்டது. நெருப்பினுடைய உஷ்ணத்தைக்கூட அவர் உணர முடிந்தது. இடையிடையே தீ ஜுவாலையின் சுருண்ட நாக்குகள், கூரைகளுக்கு அடியிலிருந்து கிளம்பியது காணப்பட்டன. தெருக்களில் ஏராளமான ஜனங்களை அவர் சந்தித்தார். அவர்கள் எல்லாரும் மிகுந்த பரபரப்புக் கொண்டிருந்தார்கள். தம்மைச் சுற்றிலும் ஏதோ அசாதாரணமான காரியம் நடந்துகொண்டிருப்பதாக பீயர் உணர்ந்தபோதிலும்; தாம் நெருப்பிடம் நெருங்கிக் கொண்டிருப்பதை அவர் உணரவில்லை.

ஒரு பக்கத்தில் பாவார்ஸ்கோயும், மற்றொரு பக்கத்தில் இளவரசர் குருஜைன்ஸ்கியின் வீட்டுத் தோட்டமும் உள்ள ஒரு வெட்ட வெளியில் இருந்த காலடிப்பாதையில் அவர் போய்க்கொண்டிருந்த போது, திடீரென்று அவருக்கு சமீபத்தில் ஒரு பெண் பரிதாபகரமாக அழுவதைக் கேட்டார். ஒரு கனவிலிருந்து விழிப்புவரைப்போல அவர் திடீரென்று நின்று, தமது தலையை உயர்த்திப் பார்த்தார்.

அந்தக் காலடிப் பாதைக்குப் பக்கத்தில் இருந்த புல்வெளியில் பலவிதமான வீட்டுச் சாமான்கள் குவிந்து கிடந்தன. இறகுப் படுக்கைகள், சாமோவார்கள், தெய்வச் சிலைகள், பெட்டிகள் எல்லாம் கிடந்தன. பெட்டிகளுக்குப் பக்கத்தில் ஒரு மெலிந்த பெண் தரையில் உட்கார்ந்திருந்தாள். அவள் வாலிபமானவள் அல்ல. அவளுடைய மேல் பற்கள் நீண்டு கொண்டிருந்தன. ஒரு கருப்பு மேல் அங்கியையும், குல்லாவையும் தரித்திருந்தாள். அந்த பெண் முன்னும் பின்னும் ஆடிக்கொண்டு, எதையோ முனங்கிக்கொண்டு விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள். 10 வயது, 12 வயதுள்ள இரண்டு பெண்கள், அழுக்கடைந்த குட்டையான கவுன்களையும் மேல் அங்கிகளையும் அணிந்துகொண்டு, தங்கள் தாயாரை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வெளிறிய, பீதியுற்ற முகங்களில், கதிகலங்கிய தோற்றம் காணப்பட்டது. சிறிய குழந்தையான பையனுக்கு ஏழு வயதிருக்கும். அவன் ஒரு வெளிச்சட்டையை அணிந்துகொண்டு, அவனுக்குப் பொருத்தமில்லாத ஒரு தொப்பியோடு, அவனுடைய முதிய தாதியின் கைகளில் இருந்து அழுதுகொண்டிருந்தான். ஒரு அழுக்கடைந்த, காலில் ஒன்றுமில்லாத ஒரு வேலைக்காரி, பக்கத்தில் ஒரு பெட்டி மீது உட்கார்ந்திருந்தாள். வெளிறிய நிறத்தோடுகூடிய அவளுடைய ஜடையை அவிழ்த்து விட்டு அதை நேராக இழுத்து விட்டுக் கொண்டும், எரிந்துபோன ஜடையின் நுனியை முகர்ந்து பார்த்துக் கொண்டும் இருந்தாள். அந்த பெண்ணின் கணவர் ஒரு சிவில் அதிகாரியின் சீருடையிலிருந்தார். குட்டையாகவும், உருண்ட தோள்களோடும், கிருதாக்களோடும் இருந்தார். தம்முடைய தலைமுடியை ஒழுங்காக வாரிவிட்டு, அதன் மீது ஒரு தொப்பியை தரித்திருந்தார். அவருடைய முகத்தில் எந்தவிதமான சலனமும் இல்லாமல், ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பெட்டிகளை எடுத்து வைத்து, அவற்றிலிருந்து சில உடைகளை வெளியே எடுத்தார்.

அந்த பெண் பீயரைப் பார்த்ததும், அவர் காலடிகளில் விழுந்தாள்.

'அன்பான மக்களே, நல்ல கிறிஸ்தவர்களே, என்னைக் காப்பாற்றுங்கள்; எனக்கு உதவி செய்யுங்கள். அன்பான நண்பர்களே... யாராவது எங்களுக்கு உதவி செய்யுங்கள்... என்னுடைய பெண்... என்னுடைய குமாரி, என்னுடைய இளைய குமாரி பின்னால் தங்கி விட்டாள். அவள் எரிந்து போனாள்! ஓ! இதற்காகத்தானா நான் உன்னை வளர்த்தேன்?... ஓ!' என்று விம்மல்களோடு அவள் முனங்கிக்கொண்டிருந்தாள்.

'மேரி மிக்காலேவ்னா, நீ அம்மாதிரி செய்யாதே' என்று அவளுடைய கணவர் அவளிடம் மெதுவான குரலில் கூறினார். அந்த அந்நியருக்கு முன்பாக தம்முடைய காரியத்தை சரியான தென்று சொல்லும் நோக்கத்தோடு கூறியதாகத் தோன்றியது. 'ஒருவேளை அவளை சகோதரி எடுத்துக்கொண்டு போயிருக்கலாம். இல்லையென்றால், வேறு எங்கே அவள் இரு ்க முடியும்?' என்று அவர் சொன்னார்.

'பிசாசு, துஷ்டன்' என்று அந்த பெண் கோபமாகக் கூறிவிட்டு, திடீரென்று அழுவதை நிறுத்தினாள். 'உமக்கு உள்ளம் என்பதே இல்லை. உம்முடைய குழந்தைக்காக நீர் கொஞ்சங்கூட உணர்ச்சி கொள்ளவில்லை. மற்றொரு மனிதர் அந்த பெண்ணை நெருப்பிலிருந்து காப்பாற்றி இருக்க முடியும். ஆனால், இது ஒரு பிசாசு. இவர் மனிதரும் அல்ல; தந்தையும் அல்ல. கௌரவமுள்ள ஐயாவே, நீர் ஒரு கனவான்' என்று அவள், தன்னுடைய விம்மல்களுக்கிடையே, பீயரைப் பார்த்து வேகமாய் பேசினாள். 'பக்கத்தில் நெருப்புப் பிடித்தது. உடனே வேலைக்காரி கூச்சலிட்டாள். எங்களுடைய சாமான்களை எடுத்துக் கொள்ள நாங்கள் விரும்பினோம். நாங்கள் அப்படி அப்படியே ஓடினோம்... இவைதான் நாங்கள் கொண்டு வந்த சாமான்கள்... தெய்வச் சிலைகள், என்னுடைய விவாகப் படுக்கை ஆகியவை. மற்றவை எல்லாவற்றையும் நாங்கள் இழந்து விட்டோம். குழந்தைகளை நாங்கள் எடுத்துக்கொண்டோம். ஆனால், கேட்டியை ஒருவரும் எடுத்துக் கொள்ளாமல் மறந்து விட்டோம். ஓ! ஓ கடவுளே...' என்று கூறி மீண்டும் அவள் விம்மி அழ ஆரம்பித்தாள். 'என் குழந்தையே, என் செல்வமே! எரிந்து போயிற்று, எரிந்து போயிற்று!'

'எந்த இடத்தில் அந்த குழந்தையை விட்டு விட்டீர்கள்?' என்று பீயர் கேட்டார்.

அவருடைய பரபரப்பான முகத்தில் காணப்பட்ட தோற்றத்தை அந்த பெண் பார்த்ததும், இந்த மனிதர் தனக்கு உதவி செய்வார் என்று அவள் நினைத்தாள்.

'ஓ, அன்புள்ள ஐயா' என்று அவள் கதறி, அவருடைய கால்களை பற்றிக்கொண்டாள். 'எனது நன்மையாளரே, எனது உள்ளத்திற்கு அமைதியை கொடும்... அனைஸ்கா, ஏ கேடுகெட்ட பெண்ணே, நீ இவருடன் போய், அவருக்கு வழிகாட்டு' என்று தன்னுடைய வேலைக்காரியைப் பார்த்து கூச்சலிட்டாள். அவள் கோபமாக தன்னுடைய வாயைத் திறந்து பேசியபடியால், அவளுடைய நீண்ட பல் இன்னும் அதிகமாகத் தெரிந்தது.

'எனக்கு வழி காட்டு; எனக்கு வழி காட்டு. நான்... நான் அதைச் செய்கிறேன்' என்று பீயர் அவசரமாகச் சொன்னார்.

அந்த அழுக்கடைந்த வேலைக்காரி ஒரு பெட்டிக்குப் பின்னாலிருந்து முன்னால் வந்து, தனது ஜடையை கட்டிக்கொண்டு பெருமூச்சு விட்டு, தன்னுடைய குட்டையான வெறுங்காலோடு அந்த வழியாக நடந்தாள். மூர்ச்சையான பின்பு உணர்வு பெற்றவரைப் போல பீயர் உணர்ந்தார். அவர் தமது தலையை மேலாக நிமிர்த்தினார். வாழ்க்கையின் ஒளி, அவருடைய கண்களில் பிரகாசித்தது. வேகமான நடையில் அந்த வேலைக்காரியைப் பின் பற்றி, ஒரு இடத்தில் அவளை முந்தி பாவார்ஸ்கோய் என்ற இடத்திற்கு வந்தார். அந்த தெரு முழுவதும் கருப்புப் புகை மேகங்கள் இருந்தன. நெருப்பு ஜுவாலையின் நாக்குகள், இங்குமங்கும் அந்த புகைக்கு வெளியே தோன்றிக் கொண்டிருந்தன. அந்த நெருப்பிற்கு முன்னால், ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். அந்த தெருவின் மத்தியில் ஒரு பிரஞ்சு ஜெனரல் நின்றுகொண்டு, தம்மை சுற்றியிருந்தவர்களிடம் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார். அந்த ஜெனரல் நின்ற இடத்திற்கு வேலைக்காரியோடு பீயர் போய்க்கொண்டிருந்த போது, பிரஞ்சு சிப்பாய்கள் அவரை நிறுத்தினார்கள்.

'நீர் இந்த வழியாகப் போகக்கூடாது' என்று ஒரு குரல் ஒலித்தது.

'அந்த வழியாகப் போவோம், மாமா. பக்கத்து தெரு வழியாக, நிக்குலின்ஸ் வழியாக நாம் போவோம்' என்று அந்தப் பெண் கூறினாள்.

அந்தப் பெண்ணுடன் சமமாக நடந்து போவதற்காக பீயர் இடையிடையே குதித்து ஓடிக்கொண்டிருந்தார். அவள் அந்த தெருவின் குறுக்காக ஓடி, இடது பக்கமிருந்த பக்கத்து தெருவிற்கு திரும்பி, மூன்று வீடுகள் கழித்து வலது பக்கத்தில் ஒரு முற்றத்திற்குள் திரும்பினாள்.

'இங்கே தான். இங்கே பக்கத்தில் தான்' என்று அவள் சொல்லி விட்டு அந்த முற்றத்தில் குறுக்காக ஓடி, மர வேலியில் இருந்த ஒரு

வெளி வாசல் கதவைத் திறந்தாள். அங்கே நின்று, அங்கிருந்த ஒரு வீட்டின் பக்கவாட்டை அவருக்குச் சுட்டிக் காட்டினாள். அது மரத்தினால் கட்டப்பட்டிருந்தது. அந்த பாகம் பிரகாசமாகவும், உக்கிரமாகவும் எரிந்துகொண்டிருந்தது. அதன் ஒரு பக்கம் கீழே விழுந்து விட்டது. மற்றொரு பக்கத்தில் நெருப்பு எரிந்துகொண்டிருந்தது. ஜன்னல்கள் வழியாகவும் கூரைக்கு அடியிலிருந்தும் பிரகாசமான ஜுவாலைகள் வெளியே வந்துகொண்டிருந்தன.

அந்த வேலியில் கதவு வழியாக பீயர் போனதும், உஷ்ணமான காற்று அவரை சூழ்ந்துகொண்டது. தம்மையறியாமலேயே அவர் நின்றார்.

'அந்த வீடு எது? உன்னுடைய வீடு எது?' என்று கேட்டார்.

'ஊ ஊ' என்று அந்தப் பெண் கதறி, பக்கவாட்டைச் சுட்டிக் காட்டினாள். 'அதுதான் எங்களுடைய விடுதி. எங்கள் பொக்கிஷத்தை கொளுத்தி சாகடித்து விட்டார்கள். கேட்டி, எனது விலையற்ற சின்னஞ்சிறு குழந்தையே! ஊ!' என்று அனைஸ்கா அந்த நெருப்பைப் பார்த்ததும், தன்னுடைய உணர்ச்சிகளை தானும் வெளிப்படுத்த வேண்டியது அவசியம் என்று நினைத்துப் புலம்பினாள்.

அந்த பக்கவாட்டிற்கு பீயர் ஓடினார். ஆனால், உஷ்ணம் மிகக் கடுமையாக இருந்தபடியால், தம்மையறியாமலேயே சுற்றி வளைந்து சென்று, அங்கிருந்த பெரிய வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அந்த வீட்டில் ஒரு பாகம் மட்டும் தான் எரிந்து கொண்டிருந்தது. அந்த வீட்டில் கூரைக்குக் கீழே பிரஞ்சுக்காரர்களின் கூட்டம் ஒன்று கூடியிருந்தது. இவர்கள் யார் என்பதையும், இவர்கள் எதை வெளியே இழுத்துக்கொண்டு இருக்கிறார்கள் என்பதையும், முதலில் பீயர் உணரவில்லை. ஆனால், தமக்கு முன்பாக ஒரு பிரஞ்சுக்காரன் ஒரு விவசாயியை தனது உடைவாளின் மட்டையால் அடித்து, அவனிடமிருந்து நரித்தோல் கோட்டை பிடுங்குவதற்கு முயற்சி செய்வதைப் பார்த்த பின்புதான், அங்கே கொள்ளை நடந்து கொண்டிருக்கிறது என்பதை லேசாகப் புரிந்துகொண்டார். அதைப் பற்றி அதிகமாக ஆலோசிக்க அவருக்கு அவகாசம் இல்லை.

வெடித்து கீழே விழுந்துகொண்டிருந்த சுவர்களுடையவும், கூரைகளுடையவும் சப்தங்களும், தீ ஜுவாலைகளின் சீற்றங்களினால் ஏற்படும் சப்தங்களும், பரபரப்படைந்து மக்கள் போட்ட கூச்சல்களும், ஆடிக்கொண்டிருந்த புகையானது இருண்ட கருப்பு மேகங்களாக திரண்டு கொண்டிருந்த காட்சியும், அவை

தீப்பொறிகளால் மின்னி மேலே போய்க்கொண்டிருந்த காட்சியும், இங்கும் அங்கும் முதலில் சிவப்பாகவும், பின்னால் தங்க நிறத்திலும் சுவர்களில் நெருப்பு பரவிக்கொண்டிருந்த காட்சியும், அங்குள்ள புகையும், உஷ்ணமும், அவசரமான நடவடிக்கைகளும், ஒரு பெரிய நெருப்பினால் ஏற்படக்கூடிய பரபரப்பான உணர்ச்சிகளை பீயருக்கு உண்டு பன்னின. அது ஒரு விசித்திரமான, பலமான உணர்ச்சியை அவருக்கு உண்டு பண்ணியது. ஏனெனில், அந்த நெருப்பு காட்சியை அவர் பார்த்ததும், அவருடைய மனதை அழுத்திக்கொண்டிருந்த எண்ணங்களிலிருந்து திடீரென்று விடுபட்டவரைப்போல அவர் உணர்ந்தார். வாலிபமாகவும், மகிழ்ச்சியாகவும், எதற்கும் தயாராகவும், உறுதியாகவும் இருப்பது போல அவர் உணர ஆரம்பித்தார். அந்த விடுதியின் மற்றொரு பக்கத்திற்கு அவர் ஓடி, அங்கே இன்னமும் விழாமல் நின்றுகொண்டிருந்த பகுதிக்குள் நுழையப் போகிற சமயத்தில், அவருடைய தலைக்கு மேலாக பல குரல்கள் கூச்சலிடுவதைக் கேட்டார். திடீரென்று ஒரு வெடிப்பு சப்தத்தோடு வட்டமான ஒன்று அவருக்கு மிகவும் சமீபத்தில் தடாரென்று விழுந்தது.

பீயர் மேலே பார்த்தார். ஒரு பெரிய வீட்டில், ஜன்னல்களுக்குப் பக்கத்தில், பல பிரஞ்சுக்காரர்கள் நின்றுகொண்டு, உலோகச் சாமான்கள் அடங்கிய ஒரு பெட்டியை மேலேயிருந்து கீழே வீசினார்கள். கீழே நின்றுகொண்டிருந்த பிரஞ்சுக்காரர்கள் அந்த பெட்டியை நெருங்கினார்கள்.

‘இந்த ஆசாமிக்கு என்ன வேண்டுமாம்?’ என்று அவர்களில் ஒருவன் பீயரைப் பற்றிக் கூச்சலிட்டான்.

‘அந்த வீட்டிற்குள் ஒரு குழந்தை இருக்கிறது. நீங்கள் ஒரு குழந்தையைப் பார்க்கவில்லையா?’ என்று பீயர் கேட்டார்.

‘இவர் எதைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிறார்? போமய்யா போம்’ என்று பல குரல்கள் கூறின. அங்கிருந்த பெட்டியிலுள்ள உலோகச் சாமான்கள் ஏதாவது வேண்டுமென்று பீயர் கேட்பாரோ என பயமடைந்தவனாக ஒரு சிப்பாய் பீயரை நோக்கி பயமுறுத்தலோடு நெருங்கினான்.

‘ஒரு குழந்தையா?’ என்று ஒரு பிரஞ்சுக்காரன் மேலேயிருந்து கூச்சலிட்டான். ‘அந்தத் தோட்டத்தில் ஏதோ ஒன்று கதறிக்கொண்டிருந்ததை நானும்கூட கேட்டேன். ஒருவேளை அதுதான் அந்த ஆசாமி தேடிக்கொண்டிருக்கும் அவருடைய குஞ்சாக இருக்கலாம். என்ன இருந்தாலும் ஒருவர் மனிதத் தன்மையோடு இருக்க வேண்டும். உனக்கே தெரியும்...’

'அது எங்கே இருக்கிறது? எங்கே?' என்று பீயர் கேட்டார்.

'அங்கே! அங்கே!' என்று மேலே ஜன்னலுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த பிரஞ்சுக்காரன் கூச்சலிட்டு, அந்த வீட்டிற்குப் பின்னாலுள்ள தோட்டத்தை சுட்டிக்காட்டினான். 'கொஞ்சம் பொறும், நான் கீழே வருகிறேன்.'

இரண்டொரு நிமிஷங்களுக்குப் பின்னால், கருப்பு கண்களையும், கன்னத்தில் ஒரு மச்சத்தையும் கொண்ட அந்த பிரஞ்சுக்காரன், உண்மையாகவே ஜன்னலிலிருந்து கீழே தரையில் குதித்து, பீயரை தோளில் தட்டிக்கொடுத்து அவரோடு தோட்டத்திற்கு ஓடினான்.

'சீக்கிரமாக வாருங்கள். உங்களைத்தானே. அங்கே உஷ்ணம் அதிகமாகிறது' என்று தனது தோழர்களைப் பார்த்து கூச்சலிட்டுக் கொண்டே ஓடினான். வீட்டிற்குப் பின்னால் ஒரு நடைப்பாதையை அவர்கள் அடைந்ததும், பீயரை அந்த பிரஞ்சுக்காரன் கைப்பற்றி இழுத்து, அங்கே மத்தியிலிருந்த ஒரு வட்டமான வெட்டவெளியில் ஒரு ஆசனத்திற்குக் கீழே, சிவப்பு உடையணிந்து படுத்திருந்த ஒரு மூன்று வயது பெண் குழந்தையை சுட்டிக்காட்டினான்.

'உன்னுடைய குழந்தை அதோ இருக்கிறது. ஓ அது ஒரு பெண்ணா? ரொம்ப விசேஷம்' என்று அந்த பிரஞ்சுக்காரன் கூறினான். 'போய் வருகிறேன், பருத்தவரே. நாம் மனித குணத்தோடு இருக்க வேண்டும். நாம் என்றாவது ஒருநாள் இறக்க வேண்டியவர்கள். உமக்கே தெரியும்' என்று கன்னத்தில் மச்சமுள்ள அந்த பிரஞ்சுக்காரன் கூறிவிட்டு, தனது தோழர்களிடம் திரும்பி ஓடிவிட்டான்.

மகிழ்ச்சியினால் மூச்சு விடமுடியாமல், பீயர் அந்த சிறிய பெண்ணை நோக்கி ஓடினார். அதை தம்முடைய கைகளில் எடுக்கப் போகிற சமயத்தில், அந்த வியாதிகொண்ட, கழுத்து வீங்கிய, தன்னுடைய தாயைப் போலவே அழகற்றிருந்த அந்த குழந்தை கதறிக்கொண்டு ஓட ஆரம்பித்தது. என்றாலும், பீயர் அதைப்பற்றி கையில் எடுத்துக்கொண்டார். அது கோபமாகவும், மூர்க்கத் தனத்துடனும், தனது சிறிய கைகளால் பீயரின் கைகளை தள்ளிவிட முயற்சித்து, தனது கோழை வழியும் வாயினால் அவரை கடிக்கவும் முயற்சி செய்தது. முதலில் பீயருக்கு ஆபாசமான ஒரு சிறிய மிருகத்தைத் தொடும்போது ஏற்படக்கூடிய விதமான வெறுப்பும் பயங்கரமும் தோன்றின. ஆனால், அந்த குழந்தையை கீழே வீசி எறியாமல் இருக்க தமது மனதைத் திடப்படுத்திக் கொண்டு, அந்த குழந்தையோடு அங்கிருந்த பெரிய வீட்டிற்குள் ஓடினார். தாம் வந்த

வழியாக திரும்பவும் போவது என்பது இப்பொழுது சாத்தியமில்லை. அனைஸ்கா என்ற அந்த வேலைக்காரியும் அங்கே காணப்படவில்லை. பரிதாபமும் வெறுப்பும் கொண்ட உணர்ச்சியோடு, மிகுந்த கஷ்டத்தோடு விம்மிக்கொண்டிருக்கும் அந்த குழந்தையை, எவ்வளவு மெதுவாக அணைத்துக்கொள்ள முடியுமோ அம்மாதிரி அணைத்துக்கொண்டு, வெளியே போவதற்கு மற்றொரு வழியை கண்டுபிடிக்க அந்த தோட்டத்தின் குறுக்கே ஓடினார்.

## 11

34

பல முற்றங்களின் வழியாகவும், தெருக்களின் வழியாகவும் ஓடிய பின்பு, சிறிய குழந்தையோடு பீயர் திரும்பவும் பாவார்ஸ்கோய் மூலையிலுள்ள குருஜைன்ஸ்கி தோட்டத்திற்கு வந்து சேர்ந்தார். குழந்தையை தேடிப் பார்ப்பதற் காக அங்கிருந்து தான் அவர் புறப்பட்டார். அந்த இடம் இப்பொழுது வீடுகளிலிருந்து வெளிப்படுத்தப்பட்ட சாமான்களாலும், மக்களாலும் நிறைந்திருந்தபடியால், அந்த இடத்தை முதலில் பீயரால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. நெருப்பிலிருந்து தப்புவதற்காக, தங்கள் உடைமைகளோடு அங்கு வந்து புகல் அடைந்திருந்த ருஷ்ய குடும்பங்களோடு, பல பிரஞ்சு ராணுவக்காரர்களும் வெவ்வேறு விதமான உடைகளில் அங்கே இருந்தார்கள். அவர்களை பீயர் லட்சியம் செய்யவில்லை. அந்த பெண் குழந்தையை அவளுடைய தாயாரிடம் ஒப்படைத்து விட்டு, வேறு யாரையாவது காப்பாற்றப் போகலாம் என்ற நினைப்புடன், அந்த சிவில் அதிகாரியின் குடும்பத்தை அவசரமாகத் தேடினார். இன்னும் ஏராளமாகச் செய்யவேண்டிய காரியங்கள் இருப்பதாகவும், அவற்றை சீக்கிரமாகச் செய்யவேண்டும் என்றும் பீயர் நினைத்தார். ஓடியதனால் ஏற்பட்ட உஷ்ணத்தினால் சிவந்து, அந்த வினாடியில் எப்பொழுதையும் விட அதிக பலமாக வாலிப உணர்ச்சியையும் துடிதுடிப்பையும், உறுதியையும் அவர் உணர்ந்தார். அந்த உணர்ச்சிகள், குழந்தையை காப்பாற்றுவதற்காக அவர் ஓடியபோது அவருக்கு ஏற்பட்டன. அந்த குழந்தை இப்பொழுது அமைதியாக இருந்தது. தனது சிறிய கைகளால் பீயரின் கோட்டைப் பற்றிக்கொண்டு, அவருடைய கையில் அமர்ந்து, ஒரு சிறிய காட்டு பிராணியைப்போல, சுற்றிலும் உள்ளவைகளை நோட்டமிட்டுக் கெண்டிருந்தது. ஒரு மெல்லிய புன்னகையோடு இடையிடையே அவர் அந்த குழந்தையை நோக்கி வந்தார். அந்த பீதியுற்ற,

வியாதியுற்ற சின்னஞ் சிறு முகத்தில் ஏதோ ஒரு பரிதாபகரமான, கபடமற்ற ஒன்றை பார்ப்பதுபோல, பீயருடைய மனோராஜ்யம் ஓடியது.

அந்த சிவில் அதிகாரியையோ, அவருடைய மனைவியையோ, அவர் விட்டுப்போன இடத்தில் அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்த கூட்டத்திற்கு இடையில் வேகமாய் நடந்து, அவர் சந்தித்த பற்பல முகங்களையும் உன்னிப்பாய் கவனித்தார். தற்செயலாக ஒரு ஜார்ஜியன், அல்லது அர்மீனிய குடும்பத்தை அவர் கவனித்தார். அந்த குடும்பத்தில் கீழ் நாட்டு முகவெட்டையுடைய ஒரு லட்சணமான முதியவர், ஒரு புதிய துணியால் மூடப்பட்ட ஆட்டுத்தோல் கோட்டையும், புதிய ஜோடுகளையும் அணிந்திருந்தார். அதேமாதிரி முகவெட்டை உடைய ஒரு முதிய பெண்ணும், வாலிபப் பெண்ணும் இருந்தார்கள். அந்த இளம் நங்கையை பார்த்தவுடன், அவள் கீழ்நாட்டு அழகின் சிகரமாக பீயருக்குத் தோன்றினாள். தெளிவாக வில்லைப் போன்று வளைந்த கருப்புப் புருவங்களோடு, அசாதாரணமான, மிருதுவான, பிரகாசமான, நீளமான, அழகான அவளுடைய முகம் சலனமற்று விளங்கியது. அந்த வெட்ட வெளியில் பரந்து கிடந்த சாமான்களோடும், நெருங்கி நின்ற கூட்டத்தோடும் அவள் வெல்வெட் மேலங்கியை அணிந்து, பிரகாசமான பூப்போட்ட ஒரு சால்வையை தலையில் போட்டுக் கொண்டிருந்ததானது, ஒரு மிருதுவான பிரதேசத்துச் செடியை, வெண்மையான பனி மீது வீசி எறிந்ததைப்போல இருந்தது. அந்த முதிய பெண்ணுக்கு சிறிது பின்புறமாக, சில மூட்டைகளின் மீது அவள் அமர்ந்திருந்தாள். அவளுடைய நீண்ட கண்ணிமை ரோமங்களுக்கு அடியில் இருந்த அவளுடைய பெரிய, வாதுமையைப் போன்ற கண்கள், அசையாமல் தனக்கு முன்பாக உள்ள பூமியையே நோக்கிக் கொண்டிருந்தன. அவள் தனது அழகைப்பற்றி அறிந்திருப்பது போலவும், அதனால் அவள் பீதிகொண்டிருப்பதைப்போலவும் காணப்பட்டாள். அவளுடைய முகம் பீயரின் மனதைக் கவர்ந்தது. அதனால் அங்கிருந்த வேலி ஓரமாக அவர் வேகமாக போய்க்கொண்டிருந்தபோது, அந்த இள நங்கையை பார்ப்பதற்காக அவர் பல தடவை திரும்பினார். அந்த வேலியின் முடிவை அவர் அடைந்ததும், இன்னமும் அவரால் அவர் தேடியவர்களை கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவே, அங்கே நின்று சுற்றிலும் பார்த்தார்.

கையில் குழந்தையுடன் அவர் விளங்கியதால், அவருடைய உருவம் முன்னைவிட அதிகமாக எல்லோருடைய கவனத்தையும்

இழுப்பதாக இருந்தது. ருஷ்யர்கள் ஆணும் பெண்ணுமாக ஒரு கூட்டம் அவரைச் சுற்றிக் கூடியது.

'யாராவது ஒருவரைத் தவற விட்டு விட்டீரா, எனது அருமையான நண்பரே? நீர் பிரபு வம்சத்தைச் சேர்ந்தவரல்லவா? இது யாருடைய குழந்தை?' என்று அவர்கள் கேட்டார்கள்.

ஒரு கருப்பு மேலங்கியை அணிந்து, தனது மற்ற குழந்தைகளோடு அங்கே அமர்ந்திருந்த ஒரு பெண்ணினுடைய குழந்தை தான் இது என்று சொல்லி, அவள் எங்கே போனாள் என்பதை யாராவது அறிவார்களா என்று கேட்டார்.

'ஏன், அன்பெராவினுடைய குழந்தையாகத்தான் அது இருக்க வேண்டும்' என்று ஒரு முதிய உதவி குரு, அங்கிருந்த அம்மைத் தழும்பு கொண்ட விவசாய பெண்ணைப் பார்த்துச் சொன்னார். 'கடவுளே, கிருபை செய்வீராக; கடவுளே, கிருபை செய்வீராக' என்று அவருக்கு வழக்கமான பிரார்த்தனைக் குரலில் சொன்னார்.

'அன்பெராவ் குழந்தையா? இல்லை, அவர்கள் காலையிலேயே போய்விட்டார்கள். மேரி மிக்காலேவ்னாவினுடைய குழந்தை யாகவோ, அல்லது ஜவானாவினுடைய குழந்தையாகவோ இருக்கலாம்' என்ற அந்த பெண் சொன்னாள்.

அவள் 'ஒரு பெண்' என்று சொல்லுகிறார். ஆனால், மேரி மிக்காலேவ்னா ஒரு சீமாட்டியாயிற்றே?' என்று ஒரு வீட்டு அடிமை கூறினான்.

'உனக்கு அவளைத் தெரியுமா? அவள் ஒல்லியாய் இருந்தாள். பல் நீளமாய் இருந்தது' என்று பீயர் கேட்டார்.

'அவள்தான் மேரி மிக்காலேவ்னா! அந்த ஓநாய்கள் இங்கே வந்தபோது, அவர்கள் தோட்டத்திற்குள்ளே போனார்கள்' என்று அந்த பெண், பிரஞ்சு சிப்பாய்களைச் சுட்டிக் காட்டி கூறினாள்.

'ஓ, கடவுளே, கிருபை செய்வீராக' என்று அந்த உதவி குரு கூறினார்.

'அந்த வழியாக நீர் போம். அங்கே அவர்கள் இருக்கிறார்கள். அது அவளேதான். அவள் புலம்பிக்கொண்டும், கதறிக்கொண்டும் இருக்கிறாள். அது அவளேதான். இங்கே இந்த வழியாகப் போம்' என்று அந்த பெண் கூறினாள்.

அந்த பெண் சொல்லுவதை பீயர் கேட்டுக்கொண்டிருக்க வில்லை. சில அடிகளுக்கு அப்பால் நடந்துகொண்டிருந்ததை உன்னிப்பாக சில வினாடிகளாக அவர் கவனித்துக்கொண்டிருந்தார். அந்த அர்மீனிய குடும்பத்தையும், அவர்களிடம் நெருங்கிய

இரண்டு பிரஞ்சு சிப்பாய்களையும் அவர் பார்த்துக்கொண்டிருந்தார். அந்த இருவரில் ஒருவன் குள்ளமாக, சுறுசுறுப்பாக இருந்தான். அவன் ஒரு நீல நிறக் கோட்டு அணிந்து, இடுப்பில் ஒரு கயிற்றால் கட்டியிருந்தான். இரவுத் தொப்பியொன்று அவன் தலையில் இருந்தது. அவன் கால்களில் ஒன்றுமில்லை. மற்றொருவனுடைய தோற்றம் பீயரின் கவனத்தை முக்கியமாக கவர்ந்தது. அவன் ஒல்லியாக, உயரமாக, உருண்ட தோள்களோடு, அழகான தலைமுடியோடு காணப்பட்டான். அவனுடைய அசைவுகள் மெதுவாக இருந்தன. அவனுடைய முகம், ஒரு முட்டாளுடைய முகம் போல் இருந்தது. பெண்கள் அணியும் ஒரு கம்பளி கவுனை அவன் அணிந்து, நீல நிற கால் சட்டைகளோடு, கிழிந்த ஜோடுகளோடு காணப்பட்டான். நீல நிறக் கோட்டு அணிந்து காலில் ஒன்றுமில்லாமல் இருந்த அந்த பிரஞ்சுக்காரன், அந்த அர்மீனியர்களிடம் நெருங்கி ஏதோ சொல்லி விட்டு, உடனே அந்த முதியவரின் கால்களை பற்றினான். அந்த முதியவர் அந்த வினாடியே தமது ஜோடிகளை கழற்ற ஆரம்பித்தார். கம்பளி கவுன் அணிந்திருந்த மற்றொருவன் அந்த அழகிய அர்மீனிய நங்கை முன்பாக நின்று, தனது கைகளை ஜேபிகளில் போட்டுக்கொண்டு, அசையாமல் மௌனமாக அந்தப் பெண்ணை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான்.

'இங்கே பார். இந்தக் குழந்தையை எடுத்துக்கொள்' என்று அந்த பெண்ணிடம் வேகமாக, கண்டிப்பாகக் கூறி, அந்த சிறிய பெண்ணை அவளிடம் பீயர் கொடுக்கப்போனார். 'இந்த சிறுமியை அவர்களிடம் சேர்த்து விடு, அவர்களிடம் சேர்த்து விடு' என்று கூச்சலிட்டார். அந்த சிறுமி அதற்குள்ளாக கதற ஆரம்பித்தபடியால், அதை தரையில் விட்டு விட்டு அந்த பிரஞ்சுக்காரர்களையும், அர்மீனிய குடும்பத்தையும் மீண்டும் நோக்கினார்.

அந்த முதியவர் வெறும் காலோடு உட்கார்ந்திருந்தார். அந்த குள்ளமான பிரஞ்சுக்காரன் இரண்டு ஜோடுகளையும் கைப்பற்றி ஒன்றோடு ஒன்றை தட்டிக்கொண்டிருந்தான். அந்த முதியவர், தமது விம்மல்களுக்கு இடையில், எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். இதை பீயர் லேசாக கவனித்தார். ஆனால், அவருடைய கவனம் முழுவதும் கம்பளி கவுன் அணிந்திருந்த அந்தப் பிரஞ்சுக்காரன் மீதே இருந்தது. அவன் இதற்கிடையில் மெதுவாக நகர்ந்து, அந்த வாலிப நங்கையிடம் நெருங்கி, ஜேபிகளிலிருந்து தனது கைகளை எடுத்து அவளுடைய கழுத்தை பற்றினான்.

அந்த அழகிய அர்மீனிய நங்கை இன்னமும் அசையாமல் பழைய நிலைமையிலேயே, தனது நீண்ட இமை ரோமங்கள் கீழே

தொங்க இருந்துகொண்டிருந்தாள். அந்த சிப்பாய் தன்னிடம் என்ன செய்கிறான் என்பதை பார்க்கவோ, அல்லது உணரவோ முடியாதவளைப்போல காணப்பட்டாள்.

பிரஞ்சுக்காரனுக்கும் தமக்கும் இடையிலுள்ள தூரத்தைக் கடப்பதற்கு பீயர் ஓடிக்கொண்டிருந்தபோது, கம்பளிக் கோட்டு அணிந்திருந்த அந்த நெட்டையான கொள்ளைக்காரன், அந்த வாலிப அர்மீனிய நங்கையின் கழுத்திலிருந்த கழுத்து மாலையை பற்றி இழுத்துக்கொண்டிருந்தான். அந்த நங்கை தனது பிடரியை பற்றிக்கொண்டு, காது செவிடுபடும்படி கதறினாள்.

'அந்த பெண்ணை விட்டு விடு' என்று பீயர் கரகரப்பான கோபமான குரலில் கூவி, அந்த சிப்பாயின் உருண்ட தோள்களைப் பற்றி, அவனை அப்புறமாகத் தள்ளினார்.

அந்த சிப்பாய் கீழே விழுந்து மீண்டும் எழுந்து அதை விட்டு ஓடினான். ஆனால், அவனுடைய தோழன் ஜோடுகளை கீழே எறிந்து விட்டு உடைவாளை உருவி பயமுறுத்த பீயரிடம் நெருங்கினான்.

'இங்கே பார், இந்த அசட்டுத்தனங்களெல்லாம் வேண்டாம்.'

பீயர் அச்சமயம் மிகுந்த கோபமாய் இருந்தபடியால், அவருடைய பலம் பத்து மடங்காகப் பெருகியது. வெறுங்காலோடு இருந்த அந்த பிரஞ்சுக்காரன் மீது அவர் பாய்ந்து, அவன் தனது உடைவாளை உயர்த்துவதற்கு முன்பாக அவனைக் கீழே தள்ளி, தமது முஷ்டியால் அவனைக் குத்திச் சமட்டினார். சுற்றி நின்ற கூட்டத்தினர் சபாஷ் கூச்சல்கள் போட்டார்கள். அதே சமயத்தில், பராக்காரர்களான பிரஞ்சு உலான் குதிரை வீரர்கள், முனையைச் சுற்றி அங்கே வந்தார்கள். அந்த உலான்கள் பெரும் நடையில் பீயரும் பிரஞ்சுக்காரனும் இருந்த இடத்திற்கு வந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். அதற்குப் பின்னால் நடந்தவை எதுவும் பீயருக்கு நினைவில் இல்லை. அவர் யாரையோ அடித்ததும், அவர் அடிக்கப்பட்டதும், கடைசியாக அவருடைய கைகள் கட்டப்பட்டதும், பிரஞ்சு சிப்பாய்கள் அவரைக் கூடி நின்று அவரைச் சோதனையிட்டதும்தான் அவருக்கு நினைவில் இருந்தன.

'லெப்டினன்ட், அவரிடம் ஒரு குத்துவாள் இருக்கிறது' என்ற வார்த்தைகளைத்தான், முதன் முதலாக அவர் அறிந்தார்.

'ஆ, ஒரு ஆயுதமா?' என்று அந்த அதிகாரி சொல்லி, அவரோடு கைது செய்யப்பட்ட அந்த வெறுங்கால் சிப்பாயைப் பார்த்துத் திரும்பினார். 'ரொம்ப சரி, நீ அதைப் பற்றி சொல்ல வேண்டியவைகளையெல்லாம் ராணுவ கோர்ட்டில் சொல்லிக்

கொள்ளலாம்.' அவர் பீயரிடம் திரும்பினார். 'நீர் பிரஞ்சு மொழி பேசுவீரா?'

பீயர் ரத்தம் போன்ற சிவந்த கண்களுடன் தம்மை சுற்றிலும் பார்த்தார். பதில் பேசவில்லை. அவருடைய முகம் பயங்கரமாய் தோன்றி இருக்கலாம். ஏனெனில், அந்த அதிகாரி மெதுவாக ஏதோ சொல்லியவுடன் நாலு உலான்கள் வரிசையிலிருந்து பிரிந்து வந்து பீயரின் இரு புறமும் நின்றனர்.

'நீர் பிரஞ்சு பேசுவீரா?' என்று பீயரிடமிருந்து சிறிது தூரம் தள்ளி நின்ற அந்த அதிகாரி மீண்டும் கேட்டார். 'துவிபாஷகரை அழையுங்கள்.'

சிவிலியன் உடைகளோடு ஒரு குள்ளமான ருஷ்யன் வரிசையிலிருந்து வெளியே வந்தான். அவனுடைய உடைகளி லிருந்தும், அவன் பேசும் விதத்திலிருந்தும், மாஸ்கோ கடைகளில் உள்ள பிரஞ்சு விற்பனையாளர்களில் அவன் ஒருவன் என்பதை பீயர் உடனே கண்டு கொண்டார்.

'அவர் பாமரர் மாதிரி தோன்றவில்லை' என்று பீயரை நன்றாக உற்றுப் பார்த்த பின்பு அந்த துவிபாஷகன் கூறினான்.

'ஆ, அவர் ஒரு கொள்ளி வைப்பவர் என்பது போலவே காணப்படுகிறார்' என்று அந்த அதிகாரி கூறினார். 'அவர் யார் என்று அவரைக் கேளும்.'

'நீர் யார்? தலைவருக்கு நீர் பதில் சொல்லியாக வேண்டும்' என்று அந்த துவிபாஷகன் கொச்சையாக ருஷ்ய மொழியில் பேசினான்.

'நான் யார் என்பதை உங்களுக்குச் சொல்ல முடியாது. நான் உங்களுடைய கைதி; என்னை அழைத்துச் செல்லுங்கள்' என்று பீயர் திடீரென்று பிரஞ்சு மொழியில் பதிலளித்தார்.

'ஆ, ஆ' என்று முகம் சுளித்து அந்த அதிகாரி முனங்கினார். 'ரொம்ப சரி, நடவுங்கள்.'

உலான்களைச் சுற்றி ஒரு கூட்டம் கூடியது. அம்மைத் தழும்புள்ள விவசாய பெண் அந்தச் சிறுமியுடன் பீயருக்குப் பக்கத்தில் நின்றாள். பாரா வீரர்கள் புறப்பட்டதும் அவளும் முன்னால் நகர்ந்தாள்.

'அட பாவமே, உம்மை எங்கே அழைத்துச் செல்லுகிறார்கள். என் அன்பே? அந்தச் சிறுமி, இந்தச் சிறுமி, அவர்களுடைய குழந்தையாய் இல்லை என்றால், நான் என்ன செய்ய வேண்டும்?' என்று அந்த பெண் கேட்டாள்.

'அந்த பெண் என்ன வேண்டும் என்று சொல்லுகிறார்?' என்று அந்த அதிகாரி கேட்டார்.

போதை ஏறியவர்போல பீயர் இருந்தார். அவர் காப்பாற்றிய அந்த சிறுமியைப் பார்த்ததும், அவருடைய பெருமிதம் இன்னும் அதிகமாயிற்று.

'அவள் என்ன வேண்டும் என்று கேட்கிறாளா?' என்று அவர் முனங்கினார். 'என்னுடைய பெண்ணை அவள் கொண்டு வந்திருக்கிறாள். இப்பொழுதுதான் அதை நெருப்பிலிருந்து காப்பாற்றினேன்' என்று சொன்னார். 'போய் வருகிறேன்.' இந்த அர்த்தமற்ற பொய் அவரிடமிருந்து எப்படி பிறந்தது என்பதை அவர் அறியவில்லை. உறுதியான, வெற்றியான நடையோடு அந்த பிரஞ்சு சிப்பாய்களுக்கு மத்தியில் அவர் போய்க்கொண்டிருந்தார்.

'கொள்ளையடிப்பதை நிறுத்துவதற்காகவும், நெருப்பு வைப்பவர்களை முக்கியமாக பிடிப்பதற்காகவும் டுராஸ்நெல்லின் உத்தரவுப் படி மாஸ்கோவின் பற்பல தெருக்களுக்கு பிரஞ்சு பாராக்காரர்களை அனுப்பினார்கள். வேண்டுமென்று தீ வைப்பதுதான் மாஸ்கோவில் நெருப்பு பரவுவதற்கு காரணம் என்று பொதுவாக ஒரு கருத்து பிரஞ்சு உயர் வட்டார அதிகாரிகளிடம் அன்று பரவியது. அம்மாதிரி அனுப்பப்பட்ட பாரா கூட்டம் ஒன்றுதான் பீயரை அன்று கைது செய்தது. பீயரோடு அந்த பாரா கூட்டம் பல தெருக்கள் வழியாக போனபோது, மேலும் ஐந்து ருஷ்யர்களை சந்தேகத்தின்பேரில் கைது செய்தது; ஒரு சிறிய கடைக்காரர், இரண்டு வேத மாணவர்கள், ஒரு விவசாயி, ஒரு வீட்டு அடிமை, இவர்களைத் தவிர, பல கொள்ளைக்காரர்களையும் அந்த பாரா கூட்டம் கைது செய்தது. பற்பலவிதமான இந்த சந்தேகப் பேர்வழிகளின் கூட்டத்தில் பீயரைத்தான் மிக அதிகமாக சந்தேகப்படக்கூடிய ஆசாமி என்று கருதினார்கள். ஜுபாவ் கொத்தளத்திலுள்ள ஒரு பெரிய வீட்டை, காப்பாளர்களின் விடுதியாக ஏற்படுத்தி இருந்தார்கள். இரவில் தங்குவதற்காக, கைது செய்யப்பட்டவர்களையெல்லாம் அங்கே கொண்டு வந்தார்கள். பீயரை மட்டும் தனியாக கடுமையான பந்தோபஸ்தேடு வைத்திருந்தார்கள்.

★

## விளக்க உரைகள்

**11**
**3**

"சார்கோஸா." சார்கோஸ என்ற பட்டணத்தை 1808 ஆம் வருஷத்தில் ஜூன் மாதத்திலிருந்து ஆகஸ்டு மாதம் வரையில் ஸ்பெயின்காரர்கள் அரண் அமைத்துக் காப்பாற்றினார்கள். டிசம்பர் மாதத்தில் மீண்டும் முற்றுகை ஏற்பட்டபோது, மறுபடியும் ஒரு மாதம் படையெடுப்பை எதிர்த்தடித்து வந்தார்கள். அந்தப் பட்டணத்திற்குள் பிரஞ்சுக்காரர்கள் நுழைந்து பின்பும்கூட, ஒவ்வொரு வீட்டிலும் ஏற்பட்ட துணிகரமான எதிர்ப்பை சமாளிக்க வேண்டியதாய் இருந்தது. ஆனால் அந்தப் பட்டணத்தை கைப்பற்றுவதற்கு மேலும் ஒரு மாதமாயிற்று.

**11**
**5**

"மூன்று குன்றுகளில் பிரஞ்சுக்காரர்களுடன் போர் புரிவதற்காக மக்கள் கூடியிருந்தார்கள்." ராஸ்டாப் சைனுடைய பிரகடனம் பின்வருமாறு சொல்லியது : "உங்களுக்கு எந்த ஆயுதம் கிடைக்கிறதோ, அதை எடுத்துக்கொண்டு குதிரை மீதோ, கால் நடையாக நடந்தோ மூன்று நாட்களுக்கு வேண்டிய ரொட்டிகளை மட்டும் எடுத்துக்கொண்டு, மாதா கோயில்களிலிருந்து சிலுவைகளையும் கொடிகளையும் தாங்கிக்கொண்டு, மூன்ற குன்றுகளுக்கு வந்து கூடுங்கள். நான் உயிரோடு இருப்பேன். நாம் ஒன்று சேர்ந்து அந்தக் கொடியோனை அழிப்போம்."

மூன்று குன்றுகள் என்ற ஜில்லா மாஸ்க்வா என்ற நதிக்கு வடக்கே மாஸ்கோவிற்கு மேற்குப் பக்கத்திலள்ள சுற்றுப்புற இடமாகும். இங்கே கூடுவதற்கு நிச்சயிக்கப்பட்டிருந்த தேதி செப்டம்பர் முதல் தேதியாகும். அன்றுதான் ஆயுதங்கள் வேண்டியவர்களுக்கு ஆயுத கிடங்கிலிருந்து ஆயுதங்கள் கொடுக்கப்பட்டன. ராஸ்டாப்சைனின் டம்பப் பேச்சுக்களை சிலர் உண்மையென்று நம்பி மூன்று குன்றுகள் என்ற இடத்தில் வந்து கூடினார்கள். தலைமைக் குருவும், ராஸ்டாப்சைனும் அங்கே வந்து சேருவார்கள் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள். அந்த இருவரின் எவரும் வராதபடியால், பின்னால் மக்கள் கலைந்து போனார்கள். ஆகஸ்ட் 30-ந் தேதியன்று தாம் ராஸ்டாப்சைனுடைய வீட்டில் இருந்ததாக எஸ். என். கிளைங்கா என்பவர் சொல்லுகிறார். அவர்

அங்கே பேசிக்கொண்டிருந்தபோதுதான் அந்தப் பிரகடனத்தை எழுதி, உடனே அச்சடித்துவிடும்படி உத்தரவிட்டதாகக் கிளைங்கா கூறுகிறார். அச்சமயம் கிளைங்காவிடம் அவர் பின்வருமாறு கூறினார் : ''மூன்று குன்றுகளில் எதுவும் நடக்கப் போவதில்லை. ஆனால் மாஸ்கோவை எதிரி கைப்பற்றினால் நமது விவசாயிகள் என்ன செய்ய வேண்டும் என்பதை இந்தப் பிரகடனம் அவர்களுக்குச் சொல்லும்.''

**11 / 6**

ஏசுவின் சங்கம் என்ற ஸ்தாபனத்தை 1773 ஆம் வருஷத்தில் போப்பாண்டவர் அழித்துவிட்டார். அந்தச் சங்கம் ருஷ்யாவிலும் ப்ரஷ்யாவிலும் மட்டும் சில வருஷங்கள் நடந்துவந்தது. மகா பெரிய காத்தரைன் சக்கரவர்த்தினி அதைப் பாதுகாத்து வந்தாள். 1801-ஆம் வருஷத்தில் ருஷ்யாவில் அதை மீண்டும் அமைத்தார்கள்: 1813-ஆம் வருஷத்தில் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்தும் மாஸ்கோவிலிருந்தும் அதை விரட்டினார்கள். 1820-ஆம் வருஷத்தில் ருஷ்யாவிலிருந்தே அதை வெளியேற்றிவிட்டார்கள்.

**11 / 22**

இந்தக் காகிதப்பணம் 1768-ஆம் வருஷத்தில் ருஷ்யாவில் செலாவணிக்கு வந்தது. நெப்போலியனுடைய யுத்தங்களினால் ருஷ்யச் செலாவணி மிகுந்த பாதகமடைந்து மேலும் கீழும் போய்க் கொண்டிருந்தது. 1841-ல் அதைச் சீர்திருத்தி நிலையாக அமையும்படிச் செய்தார்கள். கிரிமியன் யுத்தத்தில் அது மீண்டும் கீழே போக ஆரம்பித்தது.

**11 / 26**

ருஷ்யாவைப் பற்றி பிரஞ்சுக்காரர்களுக்கு உள்ள அறியாமையை ஆசிரியர் காட்ட விரும்புகிறார். 1367-ஆம் வருஷத்தில் கிரெம்லின் கட்டப்பட்டது. அது ஒரு கோட்டையென்று முராட் சொல்லுகிறார். புராதன காலத்தில் அதைக் கோட்டையாக உபயோகிப்பது ஒருவேளை சாத்தியமாய் இருந்திருக்கலாம். ஆனால், பீரங்கிக் குண்டுகளை எதிர்த்து நிற்கும் சக்தி அதற்குக் கிடையாது. கிரெம்லினை பாதுகாப்புத்தளமாக அமைக்கும்படி நெப்போலியன் உத்தரவு இடுவதாக, 13-வது புத்தகத்தில் ஆசிரியர் மீண்டும் குறிப்பிடுகிறார். இது அவரைக் கேலி செய்வதாகும். 1812-ஆம்

வருஷத்தில் கிரெம்லினுடைய சுவர்கள் கோட்டைச் சுவர்களாக இருக்கவில்லை அதற்குள்ளிருக்கும் அரண்மனைகளுக்கும், மாதா கோவில்களுக்கும், நீதி ஸ்தலங்களுக்கும், சர்க்கார் கட்டிடங்களுக்கும், கிரெம்லின் சுவர்கள் எல்லைக்கோடுகளாக மட்டுமே விளங்கின.

**11 29**

பாரிஸினுடைய கவர்ச்சிகளைக் கேப்டன் ராம்பல் என்பவர் வருணிக்கும்போது யோசனையில்லாமல் பிரபல சோக நடிகரான டால்மாவையும் (அவர் நெப்போலியனுக்குப் பிரியமானவர்), நடிகை டச்சேநாயிசையும், சிரிப்பு நடிகர் பாட்டியரையும், பாரிஸின் உயர்தரக் கல்வி ஸ்தாபனமான சார்பானையும், பாரிஸிலுள்ள சாலை ரஸ்தாக்களையும் கலந்து குறிப்பிடுகிறார்.

**11 31**

டிரோயிட்ஸா என்ற இடம் மாஸ்கோவிற்கு வடகிழக்கில் நாற்பது மைல் தூரத்தில் இருக்கிறது. அந்த இடத்தில்தான் செர்கிலா - டிரோயிட்ஸ்கி சந்நியாசி மடம் இருக்கிறது.

**11 32**

விஞ்ஞான முன்னேற்றமானது போரின் பயங்கரங்களை அதிகமாகும்படி செய்திருக்கிறது. ஆனால் காயம்பட்ட இடத்தில் சதை அழுகாமல் இருக்கக் கண்டுபிடித்த கிருமி நாசினி சத்திர சிகிச்சையானது, முன்காலத்தில் இருந்த மிக மோசமான பயங்கரத்தை நீக்கிவிட்டது. ஒரு வைத்தியராகவும், ஒரு எழுத்தாளராகவும் இருந்த செக்கால் என்பவர் பின்வருமாறு கூறினார் : ''இளவரசர் ஆண்ட்ரூ போன்ற ஒரு ராணுவ அதிகாரி, காயம்பட்ட இடத்தில் சதை அழுகியதால் மரணமடைந்தார். நான் அச்சமயம் இருந்திருந்தால் அவரைக் காப்பாற்றி இருப்பேன்.'' *1812*-ஆம் வருஷத்தில் வைத்திய அறிவு எவ்வளவு மோசமான நிலைமையில் இருந்தது என்பதை இது காட்டுகிறது.

★

# 12

## 1

இந்த சமயத்தில் பீட்டர்ஸ்பர்க்கின் உயர் வட்டாரங்களில், இதற்கு முன்னால் இல்லாத அவ்வளவு உக்கிரத்தோடு, ஒரு சிக்கலான போராட்டம் நடந்து கொண்டிருந்தது. பிரஞ்சுக்காரர்களை ஆதரிக்கும் ரும்யாண்ட்சேவ் கட்சி ஒரு பக்கமும், மரியா பெடாராவ்னா, ஜாரேவிச் ஆகியவர்களை ஆதரிக்கும் கட்சி மற்றொரு பக்கமுமாக இருந்தன. வழக்கம்போல ராஜசபையின் ஆரவாரங்களினால் இந்த போட்டாம் அமுங்கிக் கிடந்தது. ஆனால், பீட்டர்ஸ்பர்க்கின் அமைதியான, சொகுசான வாழ்க்கையானது, உண்மையான வாழ்க்கையின் தோற்றங்களைப் பற்றியதாகவே இருந்தபடியால், அவையெல்லாம் தங்களுடைய பழைய வழிகளிலேயே போய்க்கொண்டிருந்தன. ருஷ்ய மக்கள் எந்தவிதமான கஷ்டமான நிலைமையிலும், அபாயத்திலும் இருக்கிறார்கள் என்பதை அவர்கள் உணர்ந்துகொள்வது கஷ்டமாயிருந்தது. மிகுந்த சிரமப்பட்டால்தான் அவர்களால் உணர முடியும் என்பது போல காணப்பட்டது. முன் போலவே வரவேற்புகளும், நடனக் கச்சேரிகளும், பிரஞ்சு நாடகங்களும், ராஜசபை நடவடிக்கைகளும், சேவகத்தில் இருப்பவர்களின் சூழ்ச்சிகளும் நடந்துகொண்டிருந்தன. மிக உயர்ந்த வட்டாரங்களில் மட்டுந்தான். அப்பொழுது உள்ள நாட்டின் உண்மையான நிலைமையும், கஷ்டங்களையும், மனதில் நினைத்துப் பார்க்கும்படி முயற்சிகள் நடந்துகொண்டிருந்தன. இரண்டு சக்கரவர்த்தினிகளும்* (சக்கரவர்த்தினி மரியா பெடாராவ்னா என்பவள், காலஞ்சென்ற பால் சக்கரவர்த்தியின் மனைவியாவாள். சக்கரவர்த்தினி எலிஜபெத் அலெக்ஸிவ்னா என்பவள், முதலாவது அலெக்ஸாண்டரின் மனைவியாவாள். அவள் பாடன் தேசத்து இளவரசி. திருமணம் ஆனபின் ருஷ்ய தேசாபிமானத்தைப் பெற்றவள்.) இந்த கஷ்டமான சந்தர்ப்பங்களில் எவ்வளவு தூரம் வித்தியாசமாக நடந்து கொள்கிறார்கள் என்பதைப் பற்றிய கதைகள் பரவிக் கொண்டிருந்தன. தர்ம ஸ்தாபனங்கள், கல்வி ஸ்தாபனங்கள் ஆகிய தன்னுடைய பராமரிப்பிலிருக்கும் ஸ்தாபனங்களைப் பற்றி சக்கரவர்த்தினி மரியா உத்தரவுகள் பிறப்பித்தாள். அதாவது, இந்த ஸ்தாபனங்களையெல்லாம் காஜான் என்ற இடத்திற்கு அப்புறப்படுத்த வேண்டுமென்று உத்தரவிட்டாள். அதனால் அந்த ஸ்தாபனங்களைச் சேர்ந்த பொருள்கள் எல்லாம் கட்டி தயாராக்கப்பட்டன. சக்கரவர்த்தினி எலிஜபெத்திடம் அவளுடைய உத்தரவுகள் என்ன என்பதைப் பற்றி கேட்டபோது, அவளுக்குள்ள

ருஷ்ய தேசாபிமான குண விசேஷத்தோடு அவள் பதில் அளித்தாள். அதாவது, அரசாங்க ஸ்தாபனங்களைப் பற்றி தான் எதுவும் உத்தரவு கொடுக்கமுடியாதென்றும், அவற்றை கவனிக்க வேண்டியது சக்கரவர்த்தியின் வேலையென்றும், தன்னைப் பொறுத்த வரையில், பீட்டர்ஸ்பர்க்கை விட்டு எல்லாரும் போன பின்பு கடைசியாகவே தான் போக இருப்பதாகவும் சொன்னாள். பாராடினோவில் போர் நடந்த அதே தினத்தில், ஆகஸ்டு 26-ந் தேதியன்று, அன்னா பாவ்லாவ்னாவின் இல்லத்தில் ஒரு வரவேற்பு நடந்தது. சக்கரவர்த்திக்கு பரிசுத்தமுள்ள செர்கியஸ் தெய்வச்சிலையோடு, ஒரு கடிதத்தையும் பிஷப் அனுப்பியிருந்தார். அந்தக் கடிதத்தை வாசிப்பதுதான் அந்த வரவேற்பில் பிரதான விஷயமாயிருந்தது. அந்தக் கடிதம் குருமார்களின் தேசாபிமான உணர்ச்சிக்கு ஒரு எடுத்துக் காட்டாக இருப்பதாக அவர்கள் கருதி னார்கள். இளவரசர் வாசைலி வாசித்துக் காட்டுவதில் பிரசித்தி பெற்றவர். அவர் தான் அந்தக் கடிதத்தை அன்று வாசிப்பநாக இருந்தது. (சக்கரவர்த்தினியின் மாளிகையில் அவர் அடிக்கடி வாசித்துக் காட்டுவது வழக்கம்) வார்த்தைகளை கொட்டி முழக்குவதில்தான், அவற்றின் அர்த்தங்களுக்கு சம்பந்தமில்லாமல் உரத்த தொனியிலும், மெல்லிய தொனியிலும், மாறி மாறி பரிதாபகரமான கதறல்களுக்கும், மென்மையான முணுமுணுப்பிற்கும் இடையில், பலமாகவும் மெதுவாகவும் வாசிப்பதில்தான், அவருடைய வாசிப்புத் திறன் அடங்கியிருந்தது என்று கருதப்பட்டது. ஆகவே, ஒரு வார்த்தையை அவர் பரிதாபகரமான கதறல்களோடு சொல்லுவார். ஆனால் அதற்கு அடுத்த வார்த்தையை மனோகரமான மெல்லிய குரலில் சொல்லுவது அவருக்கு வழக்கம். அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்புகளில், எப்பொழுதும் இருப்பதைப் போலவே, இந்த வாசிப்பும் ஒரு அரசியல் முக்கியத்துவத்தை கொண்டிருந்தது. அன்று வரவேற்பிற்கு பல முக்கியமான பிரபலஸ்தர்களை அவள் எதிர் பார்த்தாள். பிரஞ்சு நாடகங்களுக்கு போவதற்காக அவர்கள் வெட்கம் அடையும்படி செய்து, ஒரு தேசாபிமான உணர்ச்சியை அவர்களிடம் கிளப்பிவிட வேண்டுமென்பது அவளுடைய உத்தேசமாயிருந்தது. பலர் ஏற்கெனவே வந்து விட்டார்கள். என்றாலும், தனது வரவேற்பு அறையில் இருக்கவேண்டுமென்று தான் விரும்பிய எல்லாரும் இன்றும் வந்து சேராதபடியால், வாசிப்பை இன்னமும் ஆரம்பிக்க விடவில்லை. அதற்குப் பதிலாக, பொதுவான உரையாடல்களை முடுக்கி விட்டுக்கொண்டிருந்தாள்.

பீட்டர்ஸ்பர்க்கில் கோமகள் பெஜூகாவாவின் அசௌக்கியம் தான் அன்று முக்கிய செய்தியாக அடிபட்டது. சில தினங்களுக்கு

முன்னால் எதிர்பாராத விதமாக அவள் அசௌக்கியமடைந்தாள். கூட்டங்களில் முக்கிய ஆபரணமாக விளங்கம் அவள், சமீப காலத்தில் பல கூட்டங்களில் காணப்படவில்லை. யாரையும் அவள் பார்க்க விடுவதில்லை என்று சொல்லப்பட்டது. பீட்டர்ஸ்பர்க்கிலிருந்த பிரபலமான டாக்டர்கள், முன்பெல்லாம் அவளுக்கு சிகிச்சை செய்து வந்தார்கள். இப்பொழுது அவர்களையெல்லாம் விலக்கி விட்டு, புதிய முறையில், வழக்கத்திற்கு விரோதமான வழியில் வைத்தியம் செய்யும் ஒரு இத்தாலி டாக்டரிடம், சிகிச்சை பெற்று வருவதாக சொல்லப் பட்டது.

வசீகரமுள்ள அந்த கோமகளுக்கு ஏற்பட்ட வியாதியானது, எதனால் ஏற்பட்டதென்பதை அவர்கள் எல்லோரும் அறிவார்கள். இரண்டு கணவர்களை ஏக காலத்தில் திருமணம் செய்வதால் ஏற்படக்கூடிய அசௌகரியங்களே அந்த வியாதிக்குக் காரணம். அந்த அசௌகரியத்தை நீக்குவதும், அந்த இத்தாலிய வைத்தியரின் சிகிச்சையில் அடங்கியிருந்தது. ஆனால், அன்னா பாவ்லாவ்னாவின் பிரசன்னத்தில் இதைப் பற்றி நினைப்பதற்கு யாரும் துணிவு கொள்ளவில்லை; அல்லது தங்களுக்கு அது தெரியும் என்பதை காட்டிக்கொள்ளவும் அவர்களுக்கு துணிவில்லை.

'பாவம், அந்த கோமகள் மிகுந்த அசௌக்கியமாய் இருப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள். அது இருதய வியாதி என்று டாக்டர் கூறுகிறார்.'

'இருதய வியாதியா? ஓ, அது ஒரு பயங்கரமான வியாதி!'

'அந்த இருதய வியாதி ஏற்பட்டதினால் போட்டிக்காரர்கள் இருவருக்குள்ளும் சமரசம் ஏற்பட்டிருப்பதாக அவர்கள் கூறுகிறார்கள்...!' என்று இருதயம் என்ற வார்த்தை அழுத்தத்தோடு கூறினார்கள்.

'முதிய பிரபு பரிதாபகரமாக இருப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள். அந்த வியாதி அபாயமானது என்பதை அந்த டாக்டர் அவரிடம் சொல்லியதும், அவர் ஒரு சிறு குழந்தையைப் போல கதறினாராம்.'

'ஓ, எவ்வளவு வசீகரமானவள்! அவளை இழப்பதென்றால், அது ஒரு பயங்கரமான நஷ்டமாயிருக்கும்.'

'நீங்கள், பாவம் அந்த கோமகளைப் பற்றித் தானே பேசுகிறீர்கள்?' என்று அச்சமயம் அங்கே வந்த அன்னா பாவ்லாவ்னா கேட்டாள். 'நிலைமையை அறிந்து வருவதற்காக நான் ஆள் அனுப்பினேன். இப்பொழுது அவள் கொஞ்சம் சௌக்கியமாய் இருப்பதாக அறிகிறேன். ஓ, இந்த உலகத்தில் அவள்தான் நிச்சயமாக மிகுந்த

மனோகரமான பெண்' என்று தன்னுடைய உற்சாகத்தைப் பற்றி புன்னகை கொண்டு அவள் பேசினாள். 'நாங்கள் இருவரும் வெவ்வேறு விதமான அபிப்பிராயங்களைக் கொண்டவர்கள். இருந்தாலும்அவளுக்குரிய எனது மதிப்பைக் கொடுப்பதற்கு அது இடையூறாக இருக்காது. அவள் ரொம்ப துரதிர்ஷ்டமானவள்.'

இம்மாதிரி அன்னா பாவ்லாவ்னா பேசியதிலிருந்து, கோமகளின் வியாதியைப் பற்றிய ரகசியத்தை சிறிது வெளியே காட்டுவதாக சிலர் நினைத்தார்கள். உடனே ஒரு யோசனையற்ற வாலிபர் தமது கருத்தைக் கூறினார். அதாவது, பிரபல டாக்டர்களையெல்லாம் அழைத்துக் காட்டாமல், ஒரு போலி டாக்டரை அழைத்துக் காட்டுவது ஆச்சரியமாக இருக்கிறதென்றும், அந்த போலி ஆசாமி ஆபத்தான மருந்துகளை கொடுக்கலாமென்றும் அவர்கூறினார்.

'என்னை விட உமக்கு நன்றாக விஷயம் தெரிந்திருக்கலாம்' என்று அன்னா பாவ்லாவ்னா திடீரென்று விஷமத்தனமாக அந்த அனுபவமற்ற வாலிபருக்கு பதில் சொன்னாள். 'ஆனால், அந்த டாக்டர் நன்றாக கற்றுத் தேர்ந்தவர் என்றும், கெட்டிக்காரர் என்றும், நம்பிக்கையாளர்களிடமிருந்து நான் அறிகிறேன். ஸ்பெயின் ராணிக்குக்கூட அவர்தான் வைத்தியராக இருக்கிறார்.'

இந்த விதமாக அந்த வாலிபரை மடக்கிய பின்பு, மற்றொரு கோஷ்டியைப் பார்த்து திரும்பிப் போனாள். அங்கே பிலைபின் ஆஸ்திரியர்களைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார். அவருடைய முகமெல்லாம் சுருக்கங்கள் நிறைந்திருந்தன. அவற்றையெல்லாம் அகற்றி விட்டு, மீண்டும் தம்முடைய கேலி வாக்கியங்களில் ஒன்றை சொல்லுவதற்குத் தயாராகிக் கொண்டிருந்தார்.

'அது ரொம்ப மகிழ்ச்சிகரமானது என்று நான் நினைக்கிறேன்' என்று அவர் சொன்னார். பெட்ராப்பாலின் வீரராகிய விட்ஜென்ஸ்டைன் (அச்சமயம் பீட்டர்ஸ்பர்க்கில் அம்மாதிரி தான் அவர் அழைக்கப்பட்டார்) என்பவர், பிரஞ்சுக்காரர்களிடமிருந்து பிடிப்பட்ட ஆஸ்திரிய விருதுகளோடு, ஒரு ராஜதந்திர குறிப்பை வீயன்னாவுக்கு அனுப்பியதைப் பற்றி அவர் கூறிக்கொண்டிருந்தார்.

'என்ன? அது என்ன?' என்று, அந்த வாக்கியத்தைக் கேட்பதற்காக அமைதியை ஏற்படுத்திய பின்பு, அன்னா பாவ்லாவ்னா கேட்டாள். அதை அவள் முன்பே கேட்டிருந்தாள்.

அந்த ராஜதந்திர குறிப்பைப் பற்றி தாம் தயார் செய்த அந்த கேலி வாக்கியத்தை பிலைபின் மீண்டும் கூறினார்.

'தவறிப் போய் தவறான பாதையில் கண்பிடிக்கப்பட்ட, நட்புரிமை கொண்ட இந்த ஆஸ்திரிய விருதுகளை சக்கரவர்த்தி திருப்பி அனுப்புகிறார்' என்று பிலைபின் கூறினார். அவருடைய நெற்றிச் சுருக்கங்கள் மறைந்து மீண்டும் மிருதுவாயின.

'மனோகரமானது, மனோகரமானது!' என்று இளவரசர் வாசைலி கூறினார்.

'ஒருவேளை வார்சாவுக்குப் போகிற பாதையாக அது இருக்கலாம்' என்று எதிர்பாராத விதமாக பலமாக இளவரசர் ஹிப்பாலைட் கூறினார். அவர் என்ன அர்த்தத்தில் கூழுறினார் என்பதை புரிந்து கொள்ளாமல், ஒவ்வொருவரும் அவரை நோக்கினார்கள். இளவரசர் ஹிப்பாலைட், தாமே ஆச்சரியம் கொண்டவரைப் போல, தம்மைச் சுற்றிலும் பார்த்துக்கொண்டார். தாம் பேசிய வார்த்தைகளுக்கு உண்டான அர்த்தம், மற்றவர்களுக்குத் தெரிந்ததை விட அவருக்கு அதிகமாக தெரியாது. அவருடைய ராஜதந்திர சேவையில், அம்மாதிரி பல தடவைகள் அவர் திடீரென்று பேசியவைகளை தமாஷாகவே எல்லாரும் கருதினார்கள். ஒவ்வொரு தடவையிலும் அவர் அச்சமயம் தமது மனதிற்கு முதலில் தோன்றியவைகளையே கூறி வந்தார். 'அந்த விஷயம் ஒருவேளை நன்றாக முடியலாம். அப்படியில்லையென்றால், அதை எப்படி சரியாக அமைக்க வேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள்' என்று அவர் நினைத்தார். உண்மையிலேயே அச்சமயம் ஏற்பட்ட தர்மசங்கடமான நிசப்தத்தில், போதுமான நாட்டுப்பற்று இன்னமும் பெறாத அந்த பேர்வழி அங்கே வந்தார். அவரை தேசாபிமானியாக்கி விடலாமென்று நினைத்து, அவருடைய வரவுக்காகத்தான் அன்னாபாவ்லாவ்னா காத்துக் கொண்டிருந்தாள். அவள் புன்சிரிப்போடு ஹிப்பாலைட்டைப் பார்த்து, தனது விரலால் எச்சரிக்கை செய்து இளவரசர் வாசைலியை மேஜைக்குப் பக்கத்தில் வரும்படி அழைத்தாள். இரண்டு மெழுகு வத்திகளை அங்கே வைத்த பின்பு, அந்த கையெழுத்துப் பிரதியை வாசிக்கும்படி அவள் கேட்டுக்கொண்டாள். எல்லாரும் மௌனமாய் இருந்தார்கள்.

'மிகுந்த கருணையுள்ள மன்னரே, சக்கரவர்த்தியே!' என்று இளவரசர் வாசைலி கடுமையான குரலில் ஆரம்பித்து, அதற்கு விரோதமாக சொல்லக்கூடியவர்கள் யாராவது அங்கே இருக்கிறார்களா என்பதை அறிந்துகொள்ள விரும்புகிறவரைப் போல, அங்கிருந்த கூட்டத்தை சுற்றிலும் பார்த்தார். ஆனால், ஒருவரும் எதுவும் சொல்லவில்லை. 'மாஸ்கோ, நம்முடைய புராதனமான தலைநகர்; புதிய ஜெருசலம், அதனுடைய கிறிஸ்துவை வரவேற்கிறது - 'அதனுடைய' என்ற வார்த்தையை திடீரென்று அழுத்தமாக பேசினார் - தன்னுடைய ஆசையான குமாரர்களை ஒரு தாயார் எப்படி தன்னுடைய கைகளால் தழுவிக் கொள்ளுவாளோ, அதே மாதிரி வரவேற்கிறது. இப்பொழுது சூழ்ந்து

கொண்டிருக்கும் மூடுபனிக்கு அப்பால், உம்முடைய ஆட்சியின் பிரகாசமான மகிமையை அது உணர்ந்து, 'அவருடைய வரவு ஆசீர்வதிக்கப்படுவதாக!' என்று களிப்போடு பாடுகிறது.'

இளவரசர் வாசைலி இந்த கடைசி வார்த்தைகளை கண்ணீர் கலந்த தொனியில் கூறினார்.

பிலைபின் தம்முடைய நகங்களை கூர்மையாக கவனித்துக் கொண்டிருந்தார். அங்கிருந்தவர்கள் எந்த விதத்தில் தங்களை குறைகூற முடியும் என்று கேட்பவர்களைப்போல காணப் பட்டார்கள். அடுத்தாற்போல, வரப்போகிற வார்த்தைகளை ஒரு கிழவி நற்கருணை பிரார்த்தனையில் எம்மாதிரி முணுமுணுப் பாளோ, அதே மாதிரி அன்னா பாவ்லாவ்னா முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். அந்த தைரியமுள்ள, அகம்பாவமுள்ள காலியத்...'

இளவரசர் வாசைலி மேலும் தொடர்ந்து வாசித்தார்.

'அந்த தைரியமுள்ள, அகம்பாவமுள்ள காலியத், பிரான்ஸின் எல்லையிலிருந்து ருஷ்ய ராஜ்யத்திற்குள் மரணத்தை விளைவிக்கும் பயங்கரங்களைக் கொண்டு வரட்டும்; தாழ்மையுள்ள 'நம்பிக்கை' என்ற ருஷ்ய டேவிட் கொடுக்கும் அடியானது, அந்த ரத்த வெறி கொண்ட கர்வக்காரனின் மண்டையை வேகமாக உடைத்து விடும். கடவுளின் காப்பாவரான, பரிசுத்தமுள்ள செர்கியஸின் இந்த உருவச்சிலையை, மாட்சிமை தங்கிய சக்கரவர்த்திக்கு சமர்ப்பிக்கிறோம். உமது கருணை பொருந்திய பிரசன்னத்தைப் பார்த்து மகிழ்ச்சி அடைவதற்கு முடியாமல், என்னடைய உடல் பலவீனமாய் இருப்பதாக நான் வருந்துகிறேன். நியாயமாய் நடந்து வரும் நமது மக்களை உயர்த்தவும், மாட்சிமை தங்கிய உமது விருப்பங்களை கருணையோடு நிறைவேற்றவும் நான் தேவலோகத்திற்கு எனது ஆர்வமுள்ள பிரார்த்தனைகளை செய்துகொண்டிருக்கிறேன்.'

'எப்பேர்ப்பட்ட வேகம்! எப்பேர்ப்பட்ட வசனம்!' என்ற தொனிகள் கடிதத்தை வாசித்தவரைப் பற்றியும், கடிதத்தை எழுதியவரைப் பற்றியும் கேட்டன.

அந்த கடிதத்தை கேட்ட பின்பு பரபரப்படைந்த அன்னா பாவ்லாவ்னாவின் விருந்தாளிகள் வெகு நேரம் வரையில் பேசிக்கொண்டிருந்தார்கள். தந்தை நாட்டின் நிலைமையைப் பற்றியும், இன்னும் சில தினங்களில் நடக்கப் போகும் போரைப் பற்றிய பலவிதமான அபிப்பிராயங்களையும் அவர்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

'நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்' என்று அன்னா பாவ்லாவ்னா சொன்னாள். 'நாளைய தினம் சக்கரவர்த்தியின் பிறந்த நாள். நாளை நமக்கு சில செய்திகள் வரும். இந்த மாதிரி எனக்கு ஒரு சாதகமான அனுமானம் தோன்றுகிறது.'

# 12

## 2

அன்னா பாவ்லாவ்னாவின் அனுமானம் என்ற உள்ளுணர்வு உண்மையில் நிறைவேறி விட்டது. சக்கரவர்த்தியின் பிறந்த தினத்திற்காக மறுநாளன்று அரண்மனை மாதா கோயில்கள் பூஜை நடந்துகொண்டிருந்தது. அச்சமயம் அங்கிருந்த இளவரசர் வால்கோன்ஸ்கியை வெளியே அழைத்து, குட்டுஜோவிடமிருந்து வந்திருந்த அறிக்கையைக் கொடுத்தார்கள். அந்த அறிக்கையை போர் நடந்த தினத்தன்று டாட்டாரி நாவாவிலிருந்து குட்டுஜோவ் எழுதியிருந்தார். ருஷ்யர்கள் ஒரு அடிகூட பின்வாங்கவில்லை என்றும், நமது நஷ்டத்தை விட பிரஞ்சுக்காரர்களின் நஷ்டங்கள் மிகவும் ஏராளமானவை என்றும், போர் முனையிலிருந்து பூரா விவரங்களும் கிடைப்பதற்கு முன்பாக இதை அவசரமாக எழுதுவதாகவும் குட்டுஜோவ் குறிப்பிட்டிருந் தார். ஆகவே, ஒரு வெற்றி கிடைத்திருக்க வேண்டும் என்று இதிலிருந்து ஏற்படுகிறது. உடனே மாதா கோயிலை விட்டு வெளியே வராமலேயே, ஆண்டவன் செய்த உதவிக்காக ஆண்டவனுக்கும் அந்த வெற்றிக்குமாக பிரார்த்தனைகள் நடைபெற்றன.

அன்னா பாவ்லாவ்னாவின் உள்ளுணர்ச்சி சரியானது என்று ஸ்தாபிக்கப்பட்டு விட்டது. அன்று காலை முழுவதும் பட்டணத்தில் ஒரு மகிழ்ச்சியான திருநாள் மனோபாவம் நிலவியது. அந்த வெற்றி பூரணமானதாய் இருக்கும் என்று ஒவ்வொருவரும் நம்பினார்கள். நெப்போலியனை கைது செய்து விட்டதைப் பற்றியும், அவரை பட்டத்திலிருந்து விலக்குவதைப் பற்றியும், பிரான்ஸுக்கு ஒரு புதிய மன்னரை தேர்ந்தெடுப்பதைப் பற்றியும்கூட சிலர் பேசினார்கள்.

போர்க்களத்திற்கும் அவர்கள் இருந்த இடத்திற்குமுள்ள தூரத்தினாலும், ராஜசபை வாழ்க்கையிலுள்ள நிலைமை களினாலும் சம்பவங்களை அதன் உண்மையான பலத்தோடு சிந்தித்துப் பார்ப்பது மிகுந்த கஷ்டமாய் இருந்தது. சில குறிப்பிட்ட காரியங்களைச் சுற்றி பொதுவான சம்பவங்கள், தாங்களாகவே

பிரிந்து அமைந்து கொள்ளுகின்றன. ஆகவே, வெற்றி கிடைத்ததினால் ஏற்பட்ட மகிழ்ச்சியோடு கூட, சக்கரவர்த்தியின் பிறந்த நாளன்று, அந்தச் செய்தி கிடைத்தது என்ற மகிழ்ச்சியும் சேர்ந்து, ராஜசபை தூதர்களின் சந்தோஷம் அமைந்தது. வெற்றிகரமாக அமைக்கப்பட்ட ஒரு ஆச்சரியத்தைப் போல அது விளங்கியது. குட்டுஜோவின் அறிக்கையில் ருஷ்ய நஷ்டங்களைப் பற்றி குறிப்பிடப்பட்டிருந்தது. மாண்டவர்களின் பெயர் ஜாபிதாவில் துக்கோவ், பாக்ரேஷன், குட்டாய்சாவ் ஆகியவர்களின் பெயர்களும் காணப்பட்டன. இந்த துக்கமாக விஷயம் பீட்டர்ஸ்பர்க் உலகத்தில் மீண்டும் ஒரு காரியத்தைச் சுற்றியே இயங்கி நின்றது. அதாவது, குட்டாய்சாவின் மரணமாகும். அவரை ஒவ்வொருவருக்கும் தெரியும்; சக்கரவர்த்திக்கும் அவர் மீது பிரியம் உண்டு; வாலிபமானவர்; சுவாரஸ்யமானவர். அன்றைய தினத்தில் ஒவ்வொருவருக்கும் பின்கண்ட வார்த்தைகள் ஒலித்துக்கொண்டிருந்தன:

‘எப்பேர்ப்பட்ட அற்புதமான ஒற்றுமை நிகழ்ச்சிகள்! பூஜை நடந்துகொண்டிருந்தபோதல்லவா செய்தி வந்தது! ஆனால், குட்டாய்சாவை இழந்தது, எப்பேர்ப்பட்ட நஷ்டம்! அதற்காக நான் எவ்வளவு வருத்தப்படுகிறேன் தெரியுமா?’

‘குட்டுஜோவைப் பற்றி நான் உங்களுக்கு என்ன சொன்னேன்?’ என்று இளவரசர் வாசைலி ஒரு தீர்க்கதரிசியின் பெருமையோடு இப்பொழுது பேசினார். ‘நெப்போலியனை தோற்கடிப்பதற்கு அவர் ஒருவர்தான் திறமை வாய்ந்தவர் என்று நான் எப்பொழுதுமே சொல்லி வந்திருக்கிறேன்.’

ஆனால், மறுநாளன்று ராணுவத்திலிருந்து செய்தி எதுவும் வரவில்லை. அதனால் பொது மக்களின் மனோபாவத்தில் கவலை அதிகரித்தது. நிலைமை எதுவும் தெரியாமல் இருப்பதால், சக்கரவர்த்தி மனவேதனை கொண்டார். அவர் மனவேதனை கொண்டதனால், ராஜசபை தூதர்களும் மனவேதனை கொண்டார்கள்.

‘சக்கரவர்த்தியின் நிலைமையைப் பற்றி சிந்தித்துப் பாருங்கள்’ என்று அவர்கள் கூறினார்கள். முதல் நாளன்று குட்டுஜோவை உயர்வாக பேசியது போல் பேசாமல், சக்கரவர்த்திக்கு ஏற்பட்ட கவலைக்கு அவர்தான் காரணம் என்று அவரைக் கண்டித்தார்கள். தாம் ஆதரித்து வந்த குட்டுஜோவைப் பற்றி அன்று இளவரசர் வாசைலி டம்பம் அடித்துக்கொள்ளவில்லை. சேனாதிபதியின் பெயர்பிரஸ்தாபிக்கப்படும்போது அவர் மௌனமாய் இருந்து வந்தார். தவிரவும், அன்று மாலையில் பீட்டர்ஸ்பர்க் உயர்

வட்டரத்தை கவலையிலும் மனக்குழப்பத்திலும் வைப்பதற்கு, ஏதோ சதிசெய்வதைப் போன்று ஒரு பயங்கரமான செய்தி வந்தது. அதாவது, கோமகள் ஹெலன் பெஜுகாவா, அவளுக்கு ஏற்பட்டிருந்த கடுமையான வியாதியினால், திடீரென்று இறந்து போனாள். பெரிய கூட்டங்களிலும், உத்தியோக முறையிலும், இருதய நோயினால் தான் கோமகள் பெஜுகாவா மாண்டுபோனாள் என்று ஒவ்வொரு வரும் சொல்லி வந்தார்கள். ஆனால், அந்தரங்கமாக தனித்துப் பேசும்போது வேறு சில விவரங்களைக் கூறினார்கள். ஸ்பெயின் ராணியினுடைய வைத்தியர், ஏதோ ஒரு காரியத்திற்காக சிறிய அளவுகளில் உட்கொள்ளும்படி, ஒரு மருந்தை ஹெலனுக்குக் கொடுத்திருந்தாராம். முதிய கோமகன் அவள் மீது சந்தேகம் கொண்டதனாலும், அவளுடைய கணவருக்கு (அந்த கேடு கெட்ட துஷ்டரான பீயர்) அவள் எழுதிய கடிதத்திற்கு பதில் வராததினாலும் அவள் மனவேதனை கொண்டு, திடீரென்று அந்த மருந்தை அதிக அளவில் உட்கொண்டாள். அவளுக்கு உதவி எதுவும் செய்வதற்கு முன்பாக, மிகுந்த வேதனை அடைந்து அவள் மாண்டு போனாள். இளவரசர் வாசைலியும், அந்த முதிய கோமகனும், அந்த இத்தாலிய டாக்டரிடம் போய் கேட்டார்களாம். ஹெலன் எழுதிய பல கடிதங்களை அவர் காட்டியதாகவும், அதன் மீது அந்த விஷயத்தை அவர்கள் கைவிட்டு விட்டதாகவும் சொல்லப் பட்டது.

மூன்று வியாகூலமான விஷயங்கள் மீது பொதுவாக பேச்சுகள் சுற்றி நின்றன: சக்கரவர்த்திக்கு யுத்தச் செய்தி எதுவும் வராமல் இருந்தது; குட்டாய்சாவின் மரணம்; ஹெலன் காலமான விஷயம்.

குட்டுஜோவின் அறிக்கைக்குப் பின்னால், மூன்றாவது நாளன்று ஒரு கிராமாந்தர கனவ்ான் மாஸ்கோவிலிருந்து வந்து சேர்ந்தார். மாஸ்கோவை பிரஞ்சுக்காரர்களிடம் சரணடையும்படி விட்டு விட்ட செய்தி, உடனே பட்டணம் முழுவதும் பரவியது. இது ஒரு பயங்கரமான செய்தி! சக்கரவர்த்திக்கு எப்பேர்ப்பட்ட நிலைமை! குட்டுஜோவ் ஒரு துரோகி! இளவரசர் வாசைலியின் குமாரியான ஹெலனுடைய மரணத்திற்காக துக்கம் விசாரிக்க வந்தவர்களிடம் குட்டுஜோவைப் பற்றி அவர் பேசி வந்தார். முன்பெல்லாம் பாராட்டி வந்த அவர் (அவருக்கு ஏற்பட்டுள்ள துக்கத்தினால் அவர் முன்னால் பேசியதை மறந்து விட்டது மன்னிக்கக்கூடியதேயாகும்.) இப்பொழுது அந்த குருடரான, ஒழுக்கங்கெட்ட முதியவரான குட்டுஜோவிடமிருந்து வேறு எதையும் எதிர்பார்ப்பது அசாத்தியம் என்று கூறினார்.

'இப்பேர்ப்பட்ட ஒருவரிடம், ருஷ்யாவின் தலைவிதியை ஒப்படைத்திருப்பதைக் கண்டு, நான் மலைப்புக் கொள்ளுகிறேன்.'

மாஸ்கோவைப் பற்றிய செய்தி உத்தியோக முறையில் இல்லாத வரையில், அதைப் பற்றி சந்தேகப்படுவது சாத்தியமாய் இருந்தது. ஆனால், மறுநாளன்று கோமகன் ராஸ்டாப்சைனிட மிருந்து பின்கண்ட அறிக்கை கிடைத்தது:

'இளவரசர் குட்டுஜோவினுடைய உதவியாளர் எனக்கு ஒரு கடிதம் கொண்டு வந்தார். அதில், ராணுவத்திற்கு ரயாஜான் ரஸ்தாவிற்குப் போகும் வழியை காட்டுவதற்கு, போலீஸ் அதிகாரிகளை ஏற்பாடு செய்யும்படி இளவரசர் குட்டுஜோவ் கேட்டிருக்கிறார். மிகுந்த மன வருத்தத்துடன் மாஸ்கோவை கைவிடுவதாக அந்தக் கடிதத்தில் அவர் எழுதியிருக்கிறார். மாட்சிமை தங்கியவரே, குட்டுஜோவின் நடத்தை, தலைநகரின் விதியையும், உமது ஏகாதிபத்தியத்தின் விதியையும் தீர்மானிப்பதாய் இருக்கிறது. ருஷ்யாவின் பெருமையெல்லாம் ஒருமித்து அடங்கி இருக்கும் அந்த பட்டணத்தை, உமது முன்னோர்களுடைய சாம்பல்களை வைத்திருக்கும் அந்த பட்டணத்தைக் கைவிடுவதைக் கேட்கும்போது, ருஷ்யா பதறிப்போய்விடும். ராணுவத்தைப் பின்பற்றி நான் போகிறேன். எல்லாவற்றையும் மாஸ்கோவிலிருந்து அப்புறப்படுத்தி விட்டேன். எனது தந்தை நாட்டிற்கு ஏற்பட்டிருக்கும் தலைவிதியைப் பார்த்து அழுவது ஒன்றுதான் எனக்கு இன்னும் மீதியாய் இருக்கிறது.'

இந்த அறிக்கையைப் பெற்றதும், அடியில் கண்ட திருமுகத்தை சக்கரவர்த்தி எழுதி, அதை இளவரசர் வால்கோன்ஸ்கி மூலம் குட்டுஜோவுக்கு அனுப்பினார்:

'இளவரசர் மைக்கேல் இலாரியோனாவிச்சுக்கு! ஆகஸ்டு 29-ந் தேதியிலிருந்து எந்த விதமான அறிக்கையும் உம்மிடமிருந்து எனக்குக் கிடைக்கவில்லை. என்றாலும், செப்டெம்பர் 1-ந் தேதி யன்று மாஸ்கோவின் சேனாதிபதியிடமிருந்து யாராஸ்வால் வழியாக எனக்கு அந்த துக்ககரமான செய்தி கிடைத்தது. அதாவது, ராணுவத்தோடு நீர் மாஸ்கோ பட்டணத்தை கைவிடுவதென்று தீர்மானித்திருப்பதாக அறிகிறேன். இந்தச் செய்தி என்னை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதை நீரே யூகித்துக் கொள்ளலாம். அதோடு, உம்முடைய மௌனம் எனது ஆச்சரித்தை அதிகரிக்கிறது. உதவியாளர் - ஜெனரல் இளவரசர் வால்கோன்ஸ்கி மூலம் இந்தக் கடிதத்தை நான் அனுப்புகிறேன். இந்த வியாகூலமான முடிவை நீர் செய்ததற்கான காரணங்களையும், ராணுவத்தின் நிலைமையையும் பற்றி உம்மிடமிருந்து அறிந்து வருவதற்காக நான் அவரை அனுப்புகிறேன்.'

# 12

## 3

மாஸ்கோவை கைவிட்டு ஒன்பது தினங்களுக்குப் பின்னால், அதைப் பற்றிய உத்தியோக பூர்வமான அறிக்கையோடு குட்டுஜோவிடமிருந்து ஒரு தூதர் பீட்டர்ஸ்பர்க் வந்து சேர்ந்தார். அந்த தூதரின் பெயர் மிச்சாட். அவர் ஒரு பிரஞ்சுக்காரர். அவருக்கு ருஷ்ய மொழி தெரியாது. ஆனால், அவரே சொல்லிக் கொள்ளுவதைப் போல, உள்ளத்திலும் ஆத்மாவிலும் அவர் ஒரு ருஷ்யர்.

ஸ்டோன் ஐலண்ட் என்ற இடத்திலுள்ள தமது மாளிகையின் படிப்பு அறையில், அந்த தூதருக்கு சக்கரவர்த்தி உடனே பேட்டியளித்தார். போருக்கு முன்பாக மாஸ்கோவை மிச்சாட் பார்த்ததே இல்லை; ருஷ்ய மொழியும் அவருக்குத் தெரியாது. என்றாலும் (அவரே எழுதுகிறபடி), மிகுந்த கருணையுள்ள சக்கரவர்த்தியிடம் அவர் ஆஜராகி, மாஸ்கோ தகனத்தைப் பற்றிய செய்தியையும், அந்த மாஸ்கோவின் நெருப்பினால் தமது பாதையெல்லாம் பிரகாசமாய் இருந்த செய்தியையும் சொல்லியபோது, அவர் மிகவும் மனம் கலங்கிப் போனார்.

ருஷ்யர்களுக்கு துக்கத்தைக் கொடுத்த காரணத்தைத் தவிர, வேறொரு காரணத்தினால் ஒருவேளை திருவாளர் மிச்சாடுக்கு மன வருத்தம் தோன்றியிருக்கலாம்; என்றாலும், சக்கரவர்த்தியின் படிப்பு அறைக்குள் அவர் நுழைந்தபோது அவருடைய முகம் அவ்வளவு துக்கரமாய் காணப்பட்டது; அதனால் உடனே அவரைப் பார்த்து சக்கரவர்த்தி கேட்டார்:

'கர்னலே, எனக்கு துக்கமான செய்தியை நீர் கொண்டு வந்திருக்கிறீரா?'

'ரொம்ப துக்கமானது, மாட்சிமை தங்கியவரே' என்று ஒரு பெருமூச்சோடு மிச்சாட் பதிலளித்து தமது பார்வையை கவிழ்த்துக்கொண்டார். 'அதுதான் மாஸ்கோவை கைவிட்ட செய்தி.'

'என்னுடைய பூர்வீகமான தலைநகரை, போர் செய்யாமலா கைவிட்டார்கள்?' என்று சக்கரவர்த்தி வேகமாகக் கேட்டார். அவருடைய முகம் உடனே சிவந்தது.

குட்டுஜோவ் தம்மிடம் கொடுத்திருந்த அறிக்கையை மரியாதையோடு சக்கரவர்த்தியிடம் மிச்சாட் சமர்ப்பித்தார். மாஸ்கோவிற்கு முன்பாக போர் புரிவது அசாத்தியம் என்றும், ஆகவே, ராணுவத்தையும் மாஸ்கோவையும் இழப்பதா, அல்லது

மாஸ்கோவை மட்டும் இழப்பதா என்ற பிரச்னையில் முடிவு செய்ய வேண்டியிருந்தது என்றும், இந்த நிலைமையில் மாஸ்கோவை மட்டுமே இழப்பது என்று தாம் முடிவு செய்ததாகவும் அந்த அறிக்கையில் குட்டுஜோவ் கூறியிருந்தார்.

சக்கரவர்த்தி மிச்சாடைப் பார்க்காமல் மௌனத்தோடு கவனித்து கேட்டுக்கொண்டிருந்தார்.

'எதிரி பட்டணத்திற்குள் பிரவேசித்து விட்டானா?' என்று அவர் கேட்டார்.

'ஆம், மாட்சிமை தங்கியவரே. இப்பொழுது மாஸ்கோ சாம்பலாய் விட்டது. அது முழுவதும் நெருப்புப் பிடித்து எரிந்துகொண்டிருந்தபோதுதான், நான் அதை விட்டுப் புறப்பட்டேன்' என்று ஒரு முடிவான தொனியில் மிச்சாட் பேசினார். ஆனால், சக்கரவர்த்தியை அவர் நோக்கியபோது, தாம் சொல்லியதற்காக பீதி கொண்டார்.

சக்கரவர்த்தி வேகமாகவும் விரைவாகவும் மூச்சுவிட ஆரம்பித்தார்; அவருடைய கீழ் உதடு நடுங்கியது; உடனே அவருடைய அழகிய நீல நிறக் கண்களில் கண்ணீர் தேங்கியது.

ஆனால், இவையெல்லாம் ஒரு வினாடிதான் நீடித்திருந்தன. தம்முடைய இளகிய சுபாவத்திற்காக தம்மையே கடிந்து கொள்ளுபவரைப் போல, அவர் திடீரென்று முகம் சுளித்தார். தமது தலையை உயர்த்தி உறுதியான தொனியில் மிச்சாடைப் பார்த்துப் பேசினார்:

'கர்னலே நடந்தவைகளையெல்லாம் பார்த்தால், நம்மிடமிருந்து ஏராளமான தியாகங்களை அந்த பரம்பொருள் விரும்புவதாக எனக்குத் தோன்றுகிறது... அந்த பரம்பொருளின் விருப்பத்திற்கு எல்லா விஷயங்களிலும் பணிந்து கொடுக்க நான் தயாராய் இருக்கிறேன். ஆனால், மிச்சாட், எனக்கு ஒரு விஷயத்தைச் சொல்லும். எனது புராதனமான தலைநகரை போர் செய்யாமல் கைவிட்டதை ராணுவம் பார்த்த பின்பு, நீர் அதை விட்டு வந்தபோது அந்த ராணுவம் எந்த நிலைமையில் இருந்தது? ராணுவத்திடம் அதிருப்தி ஏதாவது காணப்பட்டதை நீர் கவனிக்கவில்லையா?...'

கருணையுள்ள அந்த சக்கரவர்த்தி மீண்டும் அமைதி அடைந்ததைக் கண்ட மிச்சாட் தாமும் அமைதி அடைந்தார். ஆனால், சக்கரவர்த்தியின் நேரடியான, பொருத்தமான கேள்விக்கு பதில் அளிக்க அவர் உடனே தயாராய் இல்லை. அந்த கேள்விக்கு ஒரு நேரடியான பதிலையே கொடுக்க வேண்டும்.

'மாட்சிமை தங்கியவரே, ஒரு விசுவாசமுள்ள சிப்பாய்க்கு பொருத்தமான விதத்தில் வெளிப்படையாக நான் பேசுவதற்கு என்னை அனுமதிப்பீரா?' என்று கொஞ்சம் அவகாசம் பெறுவதற்காக அவர் கேட்டார்.

'கர்னலே, நான் எப்பொழுதுமே அதைத்தான் விரும்புகிறேன்' என்று சக்கரவர்த்தி பதில் அளித்தார். 'என்னிடமிருந்து எதையும் மறைக்க வேண்டாம். விஷயங்கள் எப்படி இருக்கின்றனவோ, அப்படியே நான் அறிய விரும்புகிறேன்.'

'மாட்சிமை தங்கியவரே, ' என்று மிச்சாட் ஒரு நாசூக்கான, வெளியே தெரியாத புன்னகை தமது உதடுகளில் தவழ பதில் அளித்தார். ஒரு பொருத்தமான பதிலை அவர் தயார் செய்து விட்டார். 'மாட்சிமை தங்கியவரே, நான் ராணுவத்தை விட்டபோது, அதனுடைய தலைவர்களிலிருந்து கடைசியில் உள்ள சிப்பாய் வரையில், ஒருவர்கூட பாக்கியில்லாமல் எல்லாருமே, மிகுந்த துணிகரத்தோடும், மனவேதனை கொண்ட பீதியோடும்இருப்பதைக் கண்டேன்...'

'அது எப்படி?' என்று சக்கரவர்த்தி கடுமையாக முகம் சுளித்து இடைமறித்தார். 'துர்அதிருஷ்டத்தினால் என்னுடைய ருஷ்யர்களை தைரியத்தை இழக்கும்படி செய்துவிட முடியுமா?... ஒருக்காலும் முடியாது.'

தாம் தயாராய் வைத்துக்கொண்டிருந்த வாக்கியத்தைச் சொல்லுவதற்காக, இந்த பேச்சைத்தான் மிச்சாட் எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்.

'மாட்சிமை தங்கியவரே' என்று மரியாதையுடன் அவர் பேச ஆரம்பித்தார். 'மாட்சிமை தங்கிய நீர், உமக்குள்ள நல்ல குணத்தினால் எதிரிகளோடு சமாதானம் செய்துகொண்டு விடுவீரோ என்ற நினைப்பினால்தான், அவர்கள் பீதியுற்றிருக்கிறார்கள். மாட்சிமை தங்கிய உம்மிடம் எவ்வளவு பக்தியோடு இருக்கிறார்கள் என்பதைக் காட்டுவதற்காக போர் புரிந்து தங்கள் உயிரை தியாகம் செய்வதற்கு அவர்கள் கொதித்துக்கொண்டிருக்கிறார்கள்...' என்று ருஷ்ய சமுதாயத்தின் இந்த பிரதிநிதி பேசினார்.

'ஆ' என்று மனம் தேர்ந்தவராக சக்கரவர்த்தி சொன்னார். அவருடைய கண்களில் ஒரு கருணை ஒளி வீச, அவர் மிச்சாடின் தோளில் தட்டிக் கொடுத்தார். 'இப்பொழுது என்னுடைய மனம் அமைதி அடைந்தது, கர்னலே.'

அவர் தமது தலையை கீழே தொங்க விட்டு, சிறிது நேரம் மௌனமாய் இருந்தார்.

'நல்லது, அப்படியானால் நீர் மீண்டும் ராணுவத்திற்கு திரும்பிப் போம்' என்று தமது உடம்பை முழுவதும் நிமிர்த்தி, மிச்சாடைப் பார்த்து கருணையும் கம்பீரமும் கொண்ட தோரணையில் கூறினார். 'என்னுடைய வீரர்களிடமும், நீர் எங்கே போனாலும் அங்கிருக்கும் என்னுடைய நல்ல பிரஜைகளிடமும் நீர் கூறுவீராக. அதாவது, சிப்பாய் ஒருவர் கூட இல்லாமல் போய்விட்டால், என்னுடைய அன்பு மிக்க பிரபுக்களையும், அருமையான விவசாயிகளையும் ஒன்று திரட்டி, அவர்களுக்கு நான் தலைமை வகித்து, அந்த விதமாக என்னுடைய ஏகாதிபத்தியத்தின் கடைசி பலத்தை உபயோகித்து நான் போர் செய்வேன் என்பதை நீர் சொல்லுவீராக. அம்மாதிரி பலங்கள் எதிரிகள் யூகிப்பதை விட என்னிடம் எவ்வளவோ அதிகமாய் இருக்கின்றன' என்று வரவர அதிகமாய் பரபரப்படைந்து சக்கரவர்த்தி பேசினார். 'ஆனால், அப்படி நடக்க வேண்டும் என்று பரம்பொருள் எப்பொழுதாவது உத்தரவிடுமானால்...' என்று சக்கரவர்த்தி கூறி, தம்முடைய அழகான, உணர்ச்சியினால் பிரகாசமான கண்களை மேலே வானத்தைப் பார்த்து உயர்த்தினார். 'அதாவது, என்னுடைய மூதாதையர்கள் அமர்ந்திருந்த சிம்மாசனத்தில் என்னுடைய சந்ததியார்கள் இருக்கக் கூடாது என்று ஏற்படுமானால், என்னிடமுள்ள சகல பலத்தையும் நான் உபயோகித்த பின்பு, நான் இதுவரையில் (இங்கே தமது மார்பைக் காட்டினார்.) தாடி வளர்ப்பேன். என்னுடைய ஏழையிலும் ஏழையான விவசாயியோடு நான் போய்ச் சேர்ந்து உருளைக் கிழங்கைத் தின்பேன். அம்மாதிரி செய்வேனே யொழிய, என்னுடைய நாட்டிற்கும், என்னுடைய அன்பான மக்களுக்கும் அவமானம் ஏற்படுகிற விதத்தில், நான் எந்த உடன்படிக்கையிலும் கையெழுத்திட மாட்டேன். என்னுடைய மக்களுடைய தியாகங்கள் எப்பேர்ப்பட்டவை என்பதை நான் அறிவேன்.'

பரபரட்டைந்த தொனியில் இந்த வார்த்தைகளை பேசிய பின்பு, சக்கரவர்த்தி திடீரென்று திரும்பினார். தம்முடைய கண்களில் தோன்றிய கண்ணீரை மிச்சாடிடமிருந்து மறைப்பதற்காக அவர் திரும்பியதுபோல் இருந்தது. அம்மாதிரி திரும்பியவர், அந்த படிப்பு அறையின் கோடி வரையில் சென்றார். அங்கே சில வினாடிகள் நின்று விட்டு, மீண்டும் மிச்சாடிடம் திரும்பி வந்தார். முழங்கைக்குக் கீழாக மிச்சாடின் கரத்தைப் பற்றி பலமாக ஆட்டினார். சக்கரவர்த்தியின் அமைதியான, அழகான முகம் சிவந்து அவருடைய கண்கள் கோபத்தினாலும் உறுதியினாலும் பிரகாசித்தன.

'கர்னல் மிச்சாட், இங்கே இப்பொழுது நான் உம்மிடம் பேசியதை மறக்க வேண்டாம். நெப்போலியனோ, அல்லது நானோ... (சக்கரவர்த்தி இங்கே தமது மார்பைத் தொட்டார்.) பின்னால் ஒரு காலத்தில் மகிழ்ச்சியோடு இவற்றை நினைத்துப் பார்க்க நேரிடலாம். நாங்கள் இருவரும் இனி சேர்ந்து ஆட்சி செய்ய முடியாது. நான் அவரை அறிந்து கொண்டேன். அவரால் இனிமேல் என்னை ஏமாற்ற முடியாது...'

சக்கரவர்த்தி முகம் சுளித்து சிறிது சிந்தித்தார்.

சக்கரவர்த்தியின் கண்களில் தோன்றிய உறுதியையும், அவருடைய வார்த்தைகளையும் அறிந்த பின்பு, அந்த பவித்திரமான வினாடியில் மிச்சாட் - தாம் ஒரு அந்நியராய் இருந்தாலும், உள்ளத்திலும் ஆத்மாவிலும் ஒரு ருஷ்யராய் இருக்கும் அவர் - பரவசமடைந்து போனார். (அம்மாதிரி அவர் பிற்காலங்களில் சொல்லுவதுண்டு.) ஆகவே, பின்கண்ட வார்த்தைகளினால், தம்முடைய உணர்ச்சிகளையும், தாம் பிரதிநிதியாக இருப்பதாகக் கருதி வந்த அந்த ருஷ்ய மக்களுடைய உணர்ச்சிகளையும் அவர் வெளியிட்டார்.

'மாட்சிமை தங்கியவரே, இந்த வினாடியில் ருஷ்ய சமுதாயத்தின் பெருமைக்கும், ஐரோப்பாவின் கதி மோட்சத்திற்குமான ஒப்பந்தத்தில், மாட்சிமை தங்கிய நீர் கையெழுத்திட்டதாக நான் கருதுகிறேன்.'

சக்கரவர்த்தி தமது தலையை ஆட்டி, அவருக்கு விடை கொடுத்தார்.




ருஷ்யாவில் பாதி இடத்தை எதிரி கைப்பற்றிய பின்பு, அங்கிருந்த குடிகள் தூரத்திலுள்ள மாகாணங்களுக்கு ஓடிய பின்பு, தந்தை நாட்டை காப்பாற்றுவதற்காக ஒன்றன் மேல் ஒன்றாக வரி விதிக்கப்பட்டு வந்தபோது, எல்லா ருஷ்யர்களுமே, தாழ்மையான நிலைமைகளில் இருப்பவர்களிலிருந்து உயர்வான நிலைமைகளில் இருப்பவர்கள் வரையில் எல்லாருமே, தங்கள் தந்தை நாட்டை காப்பாற்றுவதற்காக, தியாகங்களை மட்டுமே முழுவதும் செய்து வந்தார்கள் என்றும், அல்லது நாட்டிற்கு ஏற்பட்ட வீழ்ச்சியைக் கண்டு அழுது கொண்டிருந்தார்கள் என்றும், அந்த காலத்தில் வசிக்காத நாம் மனோராஜ்யம் செய்வது இயற்கையானதேயாகும். அந்த காலத்தைப் பற்றிய வருணனைகளிலோ, அல்லது கதைகளிலோ ஒன்றுகூட விதிவிலக்கில்லாமல்,

சொந்தத் தியாகங்களையும், தேசாபிமான பக்தியையும், ஏக்கத்தையும், துக்கத்தையும், ருஷ்யாவின் வீரத்தையும் பற்றியே சொல்லப் படுகின்றன. ஆனால், உண்மை அப்படியல்ல. அந்த காலத்திலுள்ள பொதுவான சரித்திர சம்பந்தமானவைகளையே நாம் பார்க்கிறபடியாலும், மக்கள் கொண்டிருந்த சொந்த லாபங்களை நாம் கவனிக்காத படியாலும், நமக்கு அம்மாதிரி தோன்றுகிறது. ஆனால், உண்மையில் அந்த சொந்த லாபங்கள்தான் பொதுவான நன்மைகளுக்கு மேலாக உயர்ந்து நின்றன. அவைதான் பொதுவான நன்மைகளை உணர முடியாமலோ, கவனிக்க முடியாமலோ எப்பொழுதுமே செய்து வந்தன. மக்களின் அநேகர் அக்காலத்தில் பொதுவான முன்னேற்றத்தில் கவனம் செலுத்தவே இல்லை. தங்களுடைய சொந்த லாபத்தை முன் வைத்தே அவர்கள் நடந்து வந்தார்கள். அவர்கள்தான் அக்காலத்தில் சரித்திரத்தில் முக்கியமானவர்களாய் விளங்கினார்கள்.

சம்பவங்களின் பொதுவான போக்கை அறிய முயற்சித்தவர்களும், தங்களுடைய தியாகத்தினாலும் வீரத்தினாலும் அவற்றில் கலந்துகொள்ள முயற்சித்தவர்களும், சமூகத்தில் மிகுந்த உபயோகமற்றவர்களாக இருந்தார்கள். ஒவ்வொன்றையும் அவர்கள் தலைகீழாகப் பார்த்தார்கள். பொது நன்மைக்காக அவர்கள் செய்தவையெல்லாம் உபயோகமற்றவையாகவும், அறிவற்றவை யாகவும் வந்து முடிந்தன - உதாரணமாக, பீயரும் மாமோனாவும் திரட்டிய பட்டாளங்கள் ருஷ்ய கிராமங்களை கொள்ளையடித்தன; காயமடைந்தவர்களின் உபயோகத்திற்காக வாலிப சீமாட்டிகள் தயாரித்து வந்த 'லிண்ட்' (பஞ்சு), காயமடைந்தவர்களிடம் வந்து சேரவே இல்லை. ருஷ்யாவின் அக்கால நிலைமையைப் பற்றி தங்களுடைய உணர்ச்சிகளை வெளிப்படுத்தவும், பகுத்தறிவோடு விவாதம் செய்யும் விரும்பியவர்கள்கூட, தங்களை அறியாமலேயே தங்களுடைய உரையாடல்களில் சிறிது பாசாங்கையும் பொய்யையும் கலந்து வந்தார்கள்; அல்லது ஒருவரையும் குற்றம் சொல்ல முடியாத காரியங்களுக்காக சிலர் மீது அனாவசியமான கண்டனத்தையும் கோபத்தையும் காட்டி வந்தார்கள். ஞான மரத்தின் பழத்தை தின்னக் கூடாது என்ற தடையுத்தரவு சரித்திர சம்பவங்களில் தான் முக்கியமாக அமுலில் இருக்கிறது. தன்னை அறியாமல் செய்கிற காரியம்தான் பழத்தை (பலனை) கொடுக்கிறது; ஒரு சரித்திர சம்பவத்தில் கலந்து கொள்ளும் ஒருவன், அதன் முக்கியத்துவத்தை எப்பொழுதுமே அறிந்துகொள்வதில்லை. அவன் அதை அறிந்துகொள்ள முயற்சிப்பானானால், அவனுடைய முயற்சிகள் பழம் (பலன்) அளிக்காமல் போகின்றன.

அந்தக் காலத்தில் ருஷ்யாவில் நடந்த சம்பவங்களில் ஒரு மனிதன் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக சம்பந்தப்பட்டிருந்தானோ, அவ்வளவுக்கு அவ்வளவு குறைவாக அவற்றின் முக்கியத்துவத்தை அவன் அறிந்திருந்தான். பீட்டர்ஸ்பர்க்கிலும், மாஸ்கோவிலிருந்து தூரமாயுள்ள மாகாணங்களிலும், சீமாட்டிகளும் கன்வான்களம் பாதுகாப்புப் படை யூனிபாரங்களை அணிந்து, ருஷ்யாவுக்காகவும், அதனுடைய புராதன தலைநகரத்திற்காகவும் அழுது கொண்டும், சுயநல தியாகங்களைப் பற்றி பேசிக்கொண்டும், இம்மாதிரியான வேறு காரியங்களில் ஈடுபட்டுக்கொண்டும் இருந்தார்கள்; ஆனால், மாஸ்கோவைக் கடந்து பின்வாங்கிய ராணுவத்தில், மாஸ்கோவைப் பற்றிய பேச்சோ, நினைப்போ கிடையாது; மாஸ்கோ வழியாக அந்த ராணுவம் பின்வாங்கிக் கொண்டிருந்த போது, மாஸ்கோ எரிவதைப் பார்த்த அந்த ராணுவத்திலுள்ள யாரும் அதற்காக பிரஞ்சுக் காரர்களிடம் பழி வாங்க வேண்டும் என்று பிரமாணம் செய்ய வில்லை; அவர்கள் தங்களுக்கு அடுத்த படியாக எப்பொழுது சம்பளம் கிடைக்கும் என்பதைப் பற்றியும், அடுத்தாற்போல் எந்த ஊரில் தங்கவேண்டி இருக்கும் என்பதைப் பற்றியும், மாட்ரியோஷ்கா என்ற மதுக்கடைக்காரியைப் பற்றியும் இன்னும் இது போன்ற விஷயங்களைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந் தார்கள்.

நிக்கலஸ் ராஸ்டோவ் சேவகத்தில் இருக்கும்போது போர் வந்துவிட்டபடியால், தமது நாட்டின் பாதுகாப்பிற்காக நெருங்கிய தொடர்ச்சியான விதத்தில் அதில் சம்பந்தம் கொண்டு வேலை செய்து வந்தார். தற்செயலாக அவர் செய்து வந்தாரேயொழிய சுய நல தியாகத்தை நோக்கமாகக் கொண்டு அவர் செய்யவில்லை; ஆகவே, ருஷ்யாவில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப் பற்றி ஏக்கம் கொள்ளவோ, அல்லது அதைரியப்பட்டு மூளையை சிரமப்படுத்தவோ செய்யாமல் கவனித்து வந்தார். ருஷ்யாவின் நிலைமையைப் பற்றி அவர் என்ன நினைக்கிறார் என்று அவரிடம் யாராவது கேட்டிருந்தால், அதைப் பற்றி சிந்திக்க வேண்டியது தமது வேலையல்ல என்று கூறியிருப்பார்; குட்டுஜோவும் மற்றவர்களும் அதைச் செய்வதற்காக இருக்கிறார்கள் என்று சொல்லி இருப்பார்; பட்டாளங்களில் ஏற்பட்ட நஷ்டங்களை ஈடு செய்து பூரண பலத்தோடு வைத்திக்க வேண்டும் என்று தாம் கேள்விப் படுவதாகவும், யுத்தம் ஒருவேளை நீடித்து நடக்கலாம் என்றும், விஷயங்கள் அம்மாதிரி இருந்தால், இன்னும் இரண்டு வருஷ காலத்தில் ஒரு பட்டாளத்திற்கு தாம் கமாண்டராக வரக்கூடும் என்றும் அவர் சொல்லியிருப்பார்.

இம்மாதிரியான நோக்கத்தில் அவர் விஷயங்களை கவனித்து வந்தார். ஆகவே, தமது படை பிரிவிற்கு குதிரைகள் வாங்க வேண்டியதற்காக, அவரை வாரோநெஜ் என்ற இடத்திற்கு அனுப்பப் போவதாக கேள்விப்பட்டதும், வரப்போகிற போரில் தாம் கலந்து கொள்ள முடியாமல் போகிறதே என்பதற்காக அவர் வருத்தம் கொள்ளவில்லை; மிகுந்த மகிழ்ச்சியோடு அந்த வேலையை ஒப்புக்கொண்டார் - அந்த மகிழ்ச்சியை அவர் மறைக்கவில்லை; அவருடைய தோழர்களும் அதை முழுவதும் அறிந்துகொண்டார்கள்.

பாராடினோ போருக்கு சில தினங்களுக்கு முன்பாக, அவசியமான பணத்தையும் உத்தரவுகளையும் நிக்கலஸ் பெற்றார். சில குதிரை வீரர்களை முன்னதாக அனுப்பிவிட்டு, தபால் குதிரைகளோடு வாரோநெஜ்ஜுக்கு பிரயாண மானார்.

படையெடுப்பிலும், போரிலும், அந்த சூழ்நிலையிலும் பல மாதங்கள் தொடர்ச்சியாக இருந்து அனுபவப்பட்டவர்களால் தான், நிக்கலஸுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை புரிந்து கொள்ள முடியும். ஆகவே, ராணுவத்தின் குதிரைத் தீனி சேகரிக்கும் பிரதேசங்களையும், உணவுப் பொருள் வண்டிகளையும், ஆஸ்பத்திரிகளையும் கடந்து நிக்கலஸ் வெளியே வந்தபோது, அவர் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார். சிப்பாய்களையும் வண்டிகளையும், கூடார வாழ்க்கையின் ஆபாசங் களையும் விட்டு விடுதலையடைந்து அவர் வந்தபோது, விவசாயிகளும், விவசாயப் பெண்களும் அடங்கிய கிராமங் களையும், பிரபுக்களின் கிராமாந்தர வீடுகளையும், ஆடுமாடு மேய்ந்துகொண்டிருந்த வயல்களையும், ஸ்டேஷன் மாஸ்டர்கள் தூங்கிக்கொண்டிருந்த தபால் வீடுகளையும் அவர் கண்டார். அவற்றைப் பார்த்ததும், அப்பொழுதுதான் முதல் தடவையாக பார்ப்பதைப் போல, அவர் மகிழ்ச்சி கொண்டார். வாலிபமான, ஆரோக்கியமான பெண்கள், பல அதிகாரிகள் புடைசூழ்ந்து நிற்காமல் தனியாக இருப்பதைப் பார்த்ததும், அவர் மிகுந்த மகிழ்ச்சியும் ஆச்சரியமும் கொண்டார். வழியே போய்க் கொண்டிருக்கும் ஒரு ராணுவ அதிகாரி தங்களுடன் தமாஷ் பேசுவதைக் கண்டு அந்த பெண்களும் மகிழ்ச்சியும் பெருமையும் கொண்டார்கள்.

மிகுந்த உற்சாகத்தோடு வாரோநெஜ்ஜில் உள்ள ஒரு ஹோட்டலுக்கு நிக்கலஸ் இரவில் வந்து சேர்ந்தார். வெகு காலமாக தமது முகாம் வாழ்க்கையில் அனுபவித்திராத சாமான்களை யெல்லாம் கொண்டு வரும்படி உத்தரவிட்டார். மறுநாளன்று சுத்தமாக க்ஷவரம் செய்து, தாம் வெகு காலமாக அணியாத பவனி

யூனிபாரத்தை அணிந்து கொண்டார். அதன் பின்னால் அதிகாரிகளை பார்ப்பதற்காக புறப்பட்டார்.

பாதுகாப்புப் பட்டாளத்தின் கமாண்டர் ஒரு முதிய சிவிலியனாக இருந்தார். தமக்குக் கிடைத்திருக்கும் ராணுவ பதவியையும், அந்தஸ்தையும் கண்டு அவர் திருப்தி அடைந்து இருப்பவர் போல காணப்பட்டார். அவர் கண்டிப்பான தோரணையில் நிக்கலஸை வரவேற்றார். (ராணுவத்தின் குண விசேஷம் அதுதான் என்று அவர் மனோராஜ்யம் செய்து கொண்டிருந்தார்.) தாம் ஒரு முக்கியஸ்தர் என்ற பாவனையிலும், பொதுவாக நடைபெறும் காரியங்களை ஒப்புக்கொள்ளவோ, மறுக்கவோ தமக்கு பூரண அதிகாரம் இருப்பதைப் போன்ற பாவனையிலும் அவர் நிக்கலஸிடம் கேள்விகள் கேட்டுக்கொண்டிருந்தார். நிக்கலஸ் மிகுந்த குஷியாக இருந்தபடியால், அவருடைய பேச்சு வேடிக்கையாய் தோன்றியது.

பாதுகாப்புப் படையின் கமாண்டரிடமிருந்து அவர் கவர்னரிடம் போனார். அவர் ஒல்லியாகவும் சுறுசுறுப்பாகவும் சுமுகமான, எளிமையான தோற்றத்தோடும் காணப்பட்டார். குதிரைகளை வாங்கக்கூடிய பண்ணைகளைப் பற்றி அவர் நிக்கலஸுக்கு சொன்னார். நகரத்திள்ள ஒரு குதிரை வியாபாரியையும் பார்க்கும்படி சொன்னார். அதோடு, 14 மைல்களுக்கு அப்புறமுள்ள ஒரு மிராசுதாரிடம் நல்ல குதிரைகள் இருப்பதாகவும், நிக்கலஸுக்கு ஒவ்வொரு விதத்திலும் உதவி செய்ய தயாராய் இருப்பதாகவும் கவர்னர் கூறினார்.

'நீர் கோமகன் இலியா ராஸ்டோவின் குமாரர்தானே? எனது மனைவியும் உமது தாயாரும் நல்ல சிநேகிதிகள். வியாழக் கிழமைகள் தோறும் நண்பர்களுக்கு நாங்கள் வரவேற்பு அளிப்பதுண்டு. இன்று வியாழக்கிழமை. ஆகவே, தயவு செய்து சௌஜன்யமான முறையில் எங்கள் வீட்டிற்கு இன்று வரும்படி நான் அழைக்கிறேன்' என்று கவர்னர் சொன்னார். அதன் பின்னால் அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

கவர்னரை விட்டு வந்ததும், தபால் குதிரைகளை அமர்த்திக் கொண்டு, சப்ளை அதிகாரியையும் தம்மோடு அழைத்துக்கொண்டு, 14 மைல்களுக்கு அப்பால் இருந்த மிராசுதாரிடம் வேகமாய் சென்றார். வாரோநெஜ்ஜில் அவர் தங்கியிருந்த காலத்தின் முற்பகுதியில் ஒவ்வொன்றும் இன்பமாகவும் சுலபமாகவும் தோன்றியது. அதாவது, ஒரு மகிழ்ச்சியான மனநிலையில் உள்ளவருக்கு வழக்கமாக ஒவ்வொன்றும் சுலபமாகவும் நன்றாகவும் நடப்பதைப்போல் இருந்தது.

நிக்கலஸ் தேடிச் சென்ற அந்த மிராசுதார் ஒரு பிரம்மச்சாரி முன்னால் குதிரைப் படையில் இருந்தவர்; குதிரைகளைப் பற்றி நன்றாய் அறிந்தவர்; நல்ல வேட்டைக்காரர். நூறு வருஷங்களுக்கு மேலான பிராந்தியும், பழைமையான ஹங்கேரியின் ஒயினும் அவரிடம் இருந்தன. சுருட்டுக் குடிப்பதற்காக அவருக்குத் தனியாக அறை இருந்தது. அவரிடம் சிலாக்கியமான பல குதிரைகள் இருந்தன.

அதிகமாய் எதுவும் பேசாமல் 17 குதிரைகளை ஆராயிரம் ரூபிள் கொடுத்து நிக்கலஸ் வாங்கினார். மாதிரிக்காகத்தான் இவைகளை வாங்குவதாகக் கூறினார். அங்கே டின்னர் சாப்பிட்டார். ஹங்கேரியின் ஒயினை தாராளமாகக் குடித்தார். பின்னால், அதற்குள் நெருங்கிய நண்பராகி விட்ட அந்த மிராசுதாரை தழுவி முத்தமிட்டு விடைபெற்றுக்கொண்டு, அந்த மகா மோசமான தெருக்களில் வேகமாய் வண்டியில் திரும்பினார். கவர்னருடைய வரவேற்பு கச்சேரிக்கு சரியான காலத்தில் போய் சேர வேண்டும் என்பதற்காக, வேகமாக வண்டியை விடும்படி வண்டியோட்டியிடம் சொல்லிக்கொண்டே வந்தார். அச்சமயம் அவர் உல்லாசமான மனோபாவத்தில் இருந்தார்.

அவர் திரும்பி வந்து குளிர்ந்த தண்ணீரில் குளித்து விட்டு, தமது உடம்பில் வாசனைகளைப் பூசி ஆடைகள் அணிந்து கொண்டு, கவர்னர் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அவர் வரும்போது நேரமாய் விட்டது. என்றாலும், போகாமலே இருப்பதை விட, நேரங்கழித்தாவது போவது சிலாக்கியமானது' என்ற வாக்கியத்தை உதடுகளில் முணு முணுத்துக்கொண்டிருந்தார்.

அந்த வரவேற்பு ஒரு நாட்டியக் கச்சேரி அல்ல; நடனம் நடக்கும் என்று அறிவிக்கப்படவுமில்லை. ஆனால், காத்தரைன் பெட்ரோவ்னா சில நடன கீதங்களை கிளாவிகார்டு வாத்தியத்தில் வாசிப்பாள் என்பதை ஒவ்வொருவரும் அறிவார்கள். ஆகவே, அங்கே நடனம் இருக்கும் என்று நினைத்து, நடனக் கச்சேரிக்கு வருவதைப் போலவே எல்லாரும் வந்தார்கள்.

வெளி மாகாண வாழ்க்கை 1812 - ல் வழக்கம் போலவே நடந்து வந்தது. ஆனால், ஒரு வித்தியாசம்; அதாவது, மாஸ்கோவிலிருந்து பல பணக்கார குடும்பங்கள் வெளியேறி வந்தபடியால், நகரங்களில் எல்லாம் பரபரப்பு அதிகமாய் இருந்தது; அந்த சமயத்தில் ருஷ்யாவில் நடந்த ஒவ்வொன்றிலும் ஒரு விசேஷமான துணிச்சல் காணப்பட்டது. அதாவது, என்ன வந்தாலும் சரி என்ற துணிச்சல் காணப்பட்டது; கூட்டங்களில் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது கால நிலையைப் பற்றியும், அறிமுகங்களைப் பற்றியும் வழக்கமாக

பேசுவதற்குப் பதிலாக, இப்பொழுதெல்லாம் மாஸ்கோவைப் பற்றியும், ராணுவத்தைப் பற்றியும் நெப்போலியனைப் பற்றியும் பேசி வந்தார்கள்.

கவர்னர் வீட்டில் அன்று கூடியிருந்த கூட்டமானது வாரோநெஜ்ஜிலேயே மிகுந்த சிலாக்கியமான கூட்டமாய் இருந்தது.

அங்கே பல சீமாட்டிகள் வந்திருந்தார்கள். மாஸ்கோவில் நிக்கலஸுக்கு அறிமுகமான சில சீமாட்டிகளும் அங்கே இருந்தார்கள். நல்ல சுபாவம் கொண்ட, நல்ல முறையில் வளர்க்கப்பட்ட, செயின்ட் ஜார்ஜ் பதக்கத்தைப் பெற்ற அந்த குதிரைப் படை அதிகாரியான கோமகன் ராஸ்டோவுடன் ஒப்பிடுவதற்கு, அங்கிருந்த ஆண்களில் ஒருவர்கூட இல்லை. அந்த ஆண்களில் பிரஞ்சு ராணுவத்தைச் சேர்ந்த கைதியான ஒரு இத்தாலியரும் இருந்தார். அந்த கைதி அங்கே இருந்ததால், ருஷ்ய வீரர் என்ற முறையில் தம்முடைய முக்கியத்துவம் அதிகரித்தாக நிக்கலஸ் உணர்ந்தார். அந்த இத்தாலியருடைய நிலைமை ஒரு யுத்தச் சின்னமாகவே தோன்றியது. அங்கிருந்த ஒவ்வொருவரும் அந்த இத்தாலியரை அவ்விதமாகவே கருதினார்கள் என்று நிக்கலஸ் நினைத்தார். என்றாலும், அந்த இத்தாலியரை மரியாதையோடு, ஆனால் கண்ணித்தோடும் அடக்கத்தோடும் அவர் நடத்தினார்.

குதிரைப்பட்ட யூனிபாரத்தில் நிக்கலஸ் அந்த அறைக்குள் நுழைந்தார். அங்கே அவர் நுழைந்ததும், அவர் மீதுள்ள நறுமணமும் ஒயின் வாடையும் அந்த அறையில் பரவின. அவர் தமது வாய்க் குள்ளேயே, 'போகாமலே இருப்பதை விட நேரங்கழித்தாவது போவது சிலாக்கியமானது' என்று கூறிக்கொண்டார். அதே மாதிரி அங்கிருந்த மற்றவர்களும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவரைச் சுற்றி அங்கிருந்தவர்கள் கூடிக்கொண்டார்கள். எல்லா கண்களும் அவர் மீதே பதிந்திருந்தன. அந்த மாகாணத்தில் அவர் தமக்குரிய அந்தஸ்தில் அமர்ந்திருப்பதாகக் கருதினார். அதாவது, எல்லாரும் விரும்பக்கூடிய ஒரு செல்வப் பிள்ளையாக அவர் காணப்பட்டார் நீண்ட கால கஷ்டங்களுக்குப் பின்னால், இம்மாதிரியான ஒரு மனோகரமான நிலைமையானது, அவருக்கு தலைமைக் கிரக்கும்படி செய்தது. குதிரைகளை மாற்றும் தபால் ஸ்டேஷன்களிலும், சத்திரங்களிலும், அந்த மிராசுதாரின் சுருட்டு குடிக்கும் அறையிலும், இவர் தங்களைக் கவனிப்பதைக் கண்டு வேலைக்காரிகள் எல்லாரும் பெருமை கொண்டார்கள். இங்கே, இந்த கவர்னரின் கச்சேரியில் கூட, கணக்கற்ற கல்யாணமானவர் களும் கல்யாணமாகாதவர்களுமான அழகான இளம் பெண்கள்,

இவருடைய கவனத்தைப் பெறுவதற்காக ஆத்திரத்தோடு காத்துக் கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. பெண்களும், இளம் பெண்களும் அவரோடு சல்லாபம் செய்தார்கள். இந்த துணிகரமான வாலிப குதிரை வீரருக்கு திருமணம் செய்து வைத்து, குடும்ப வாழ்க்கையில் அமரும்படி செய்வதற்காக, முதல் நாளிலிருந்தே அங்கிருந்த வயதானவர்கள் சிரத்தைக் கொள்ள ஆரம்பித்தார்கள். அம்மாதிரி சிரத்தைக் கொண்டவர்களில் கவர்னரின் மனைவியும் ஒருவள். தனது நெருங்கிய பந்து என்ற முறையில், ராஸ்டோவை வரவேற்று உபசரித்து, அவரை நிக்கலஸ் என்றே அழைத்து வந்தாள்.

காத்தரைன் பெட்ரோவ்னா சில நடன கீதங்களை வாசிக்க ஆரம்பித்தாள். நடனம் ஆரம்பமாயிற்று. அந்த நடனத்தில் நிக்கலஸ் கலந்து, தமது லாகவத்தால் அந்த மாகாண உயர் வட்டாரத்தின் மனதைக் கவர்ந்தார். சரளமாக அவர் நடனமாடியதைக் கண்டு அவர்கள் எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது. அவர் நடனமாடிய விதத்தைக் கண்டு அவருக்கே ஆச்சரியமாக இருந்தது. அம்மாதிரி அவர் மாஸ்கோவில் எப்பொழுதும் நடனமாடியதில்லை. அங்கே அம்மாதிரி நடனம் ஆடியிருந்தால், அதை முறையற்றதென்றும், மோசமான முறையென்றும் சொல்லியிருப்பார்கள். ஆனால், இங்கு அவர்கள் எல்லோரையும் ஆச்சரியப்படுத்துவதற்காக, வழக்கத்திற்கு விரோதமாக எதையாவது தாம் செய்ய கடமைப்பட்டிருப்பதாக அவர் உணர்ந்தார். மாகாணங்களில் அம்மாதிரி நடனங்கள் புதிதாகையால், மாஸ்கோவில் அது ஒரு ஒழுங்கான முறையென்று அவர்கள் நினைத்துக்கொண்டார்கள்.

அன்று இரவு முழுவதும் நீலக்கண்களைக் கொண்ட, புஷ்டியான, கண்ணுக்கினிய ஒரு அழகி மீதே நிக்கலஸ் தமது சிரத்தையை காட்டி வந்தார். அவள் மாகாண அதிகாரி ஒருவரின் மனைவி. மகிழ்ச்சியோடு இருக்கும்போது, வாலிபர்கள் எல்லோருமே பிறருடைய மனைவிகள் எல்லாரும் தங்களுக்காகவே இருக்கிறார்கள் என்று, ஒரு அறியாத்தனமான எண்ணத்தில் இருப்பது வழக்கம். அதே மாதிரி ராஸ்டோவும் அன்று நடந்துகொண்டார். அந்த அழகியை விட்டு அவர் பிரியவே இல்லை. அவளுடைய கணவரிடம் மிகுந்த அன்னியோன்னிய பாவத்தில் நடந்துகொண்டார். அந்த சீமாட்டியும், நிக்கலஸும் எவ்வளவு சௌஜன்யமாக நடந்து கொள்ள முடியும் என்பதைப் பற்றி, அவளுடைய கணவருக்கும் நிக்கலஸுக்கும் ஒருவிதமான சம்மதம் ஏற்பட்டிருப்பதைப்போல அவர் நடந்துகொண்டார். ஆனால், இந்த கருத்தை அந்த கணவர் ஒப்புக்கொண்டதாகத்

தெரியவில்லை. அவர் ராஸ்டோவிடம் எரிச்சலோடு கடுகடுப்பாக நடந்துகொள்ள முயற்சித்தார். ஆனால், ராஸ்டோவினுடைய நல்ல சுபாவம் கொண்ட வெகுளித்தனமானது மிதமிஞ்சி காணப் பட்டதால், அந்த கணவர்கூட சில சமயங்களில் தம்மை யறியாமலேயே ராஸ்டோவுக்கு இணங்கியிருப்பதாக காட்டிக் கொண்டார். நடன கச்சேரி முடிகிற சமயம் நெருங்க நெருங்க, அந்த அழகியின் முகம் வர வர அதிகமாக சிவந்தும், அந்த கணவரின் முகம் வரவர அதிகமாக வியாகூலத்துடனும் கடுமையுடனும் காணப்பட்டன. அதாவது, அவர்கள் இருவருக்கும் ஒரு குறிப்பிட்ட அளவு உற்சாகத்தைக் கொடுத்திருப்பதைப் போலவும், அந்த உற்சாகத்தில் மனைவியின் பங்கு எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு கணவனின் பங்கு குறைவது போலவும் காணப்பட்டன.

# 12

## 5

நம்முடைய நாற்காலியில் லேசாக முன்னால் சாய்ந்து, அந்த அழகான சீமாட்டியிடம் குனிந்து, புன்முறுவலோடு ஆகாயம் அளாவ அவளைப் புகழ்ந்து கொண்டிருந்தார். அவருடைய புன்முறுவல் அவருடைய முகத்தை விட்டு நீங்கவேயில்லை.

பிடிப்பாக மாட்டியிருந்த சவாரி கால்சட்டைகளோடு உல்லாசமாக தமது கால்களை மாற்றி வைத்துக்கொண்டார். வாசனையின் மணம் அங்கே பரவியது. தம்முடன் இருந்த தோழியைப் பாராட்டினார். தம்முடைய கால்களில் அணிந்திருந்த உயரமான ஜோடுகளைக் கண்டு திருப்தி கொண்டார். வாரோநெஜ் என்ற இந்த இடத்திலுள்ள ஒரு சீமாட்டியுடன் தாம் ஓடிப்போக விரும்புவதாக அந்த அழகியிடம் கூறினார்.

'எந்த சீமாட்டி?'

'ஒரு மனோகரமான சீமாட்டி, தெய்வீகமானவள். அவளுடைய கண்கள் (இச்சமயம் தம்முடன் இருந்தவளின் கண்களை நிக்கலஸ் பார்த்தார்.) நீலநிறமாயிருக்கும். அவளுடைய வாய் பவழம்போலவும், தந்தம் போலவும் இருக்கும். அவளுடைய உருவம் (இச்சமயம் அவளுடைய தோள்களை நோக்கினார்.) டயானாவுடையதைப் போல இருக்கும்...'

இச்சமயம் கணவர் அங்கே வந்து, எதைப் பற்றி அவள் பேசிக்கொண்டிருக்கிறாள் என்று, தமது மனைவியை எரிச்சலோடு கேட்டார்.

'ஆ, நிக்கைட்டா ஐவானிச்' என்று நிக்கலஸ் கூறி, மரியாதையோடு எழுந்து தாங்கள் பேசிக்கொண்டிருந்த தமாஷாவை அவர் கேட்க விரும்புகிறாரா என்று கேட்டு, ஒரு அழகிய சீமாட்டியோடு ஓடிப்போவதற்கு தமக்குள்ள உத்தேசத்தை எடுத்துச் சொன்னார்.

அந்த கணவர் வியாகூலத்தோடு புன்னகை கொண்டார். ஆனால், மனைவி மகிழ்ச்சியோடு இருந்தாள். கவர்னருடைய இனிய சுபாவமுள்ள மனைவி, அதிருப்தியான தோற்றத்தோடு அங்கே வந்தாள்.

'அன்னா இக்னாட்டியேவ்னா உம்மை பார்க்க விரும்புகிறாள், நிக்கலஸ்' என்று அவள் சொன்னாள். நிக்கலஸுக்கு அந்த வார்த்தையை அவள் உச்சரித்த விதத்திலிருந்து அன்னா இக்னாட்டியேவ்னா மிகுந்த முக்கியமான பேர்வழி என்பதை நிக்கலஸ் அறிந்து கொண்டார். 'இப்படி வாரும், நிக்கலஸ்! அம்மாதிரி உம்மை அழைக்கும்படி எனக்கு நீர் அனுமதி கொடுத்தீர் என்பது ஞாபகம் இருக்கிறதா?'

'ஓ, ஆம், அத்தையே. அவள் யார்?'

'அன்னா இக்னபாட்டியேவ்னா மால்வைட்சேவா. தன்னுடைய மருமகளை நீர் எப்படி காப்பாற்றினீர் என்பதை அவள் மருமகளிடமிருந்து அறிவாள்... உம்மால் யூகிக்க முடியுமா.'

'நான் ஏராளமான பேர்களை காப்பாற்றி இருக்கிறேன்' என்றார் நிக்கலஸ்.

'அவளுடைய மருமகள், இளவரசி பால்கோன்ஸ்கயா. அவள் இங்கே வாரோநெஜ்ஜில் அவளுடைய அத்தையோடு இருக்கிறாள். ஓகோ! எம்மாதிரி தான் நீர் நாணமடைந்து முகம் சிவந்து போகிறீர்? ஏன்...?'

'கொஞ்சங்கூட இல்லை! அம்மாதிரி சொல்ல வேண்டாம், அத்தையே.'

'ரொம்ப சரி, ரொம்ப சரி...ஓ, நீர் எப்பேர்ப்பட்ட ஆசாமியாக இருக்கிறீர்!'

கவர்னருடைய மனைவி அவரை ஒரு உயரமான, பருமனான முதிய சீமாட்டியிடம் அழைத்துச் சென்றாள். அவள் ஒரு நீல நிற தலையணியை அணிந்திருந்தாள். அச்சமயம்தான் அந்நகரிலுள்ள பிரபலஸ்தர்களோடு சீட்டு விளையாடி முடித்திருந்தாள். அவள்தான் மால்வைன்ட்சேவா; இளவரசி மேரிக்கு அவளுடைய தாய் வழியில் அத்தை; ஒரு பெரிய பணக்காரி. குழந்தை எதுவுமில்லாத விதவை. வாரோநெஜ்ஜிலேயே எப்பொழுதும்

வசித்து வருகிறாள். ராஸ்டோவ் அவளிடம் போனபோது, அவள் நின்று கொண்டு சீட்டு விளையாட்டு கணக்குகளை தீர்த்துக் கொண்டிருந்தாள். அவரைப் பார்த்து கடுமையாக கண்களை இடுக்கி நோக்கினாள். தம்மிடமிருந்து சீட்டு விளையாட்டில் பணத்தைப் பறித்துக் கொண்ட ஒரு ஜெனரலை குறை கூறிக்கொண்டிருந்தாள்.

'மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். எனது அன்பானவரே' என்று அவள் சொல்லிவிட்டு, தனது கையை நிக்கலஸிடம் நீட்டினாள். 'தயவு செய்து என்னை வந்து பார்க்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.'

இளவரசி மேரியைப் பற்றியும், அவளுடைய தந்தையைப் பற்றியும் சில வார்த்தைகள் பேசினாள். அவளுடைய தந்தையை அவளுக்குப் பிடிக்காது. இளவரசர் ஆண்ட்ரூவையும் அவளுக்குப் பிடிக்காது. இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றி ஏதாவது தெரியுமா என்று நிக்கலஸைக் கேட்டாள். அதன் பின்னால் மறுபடியும் தன்னை வந்து பார்க்கும்படி சொல்லிவிட்டு, அந்த முக்கியமான முதிய சீமாட்டி நிக்கலஸுக்கு விடை கொடுத்தாள்.

மீண்டும் வருவதாக நிக்கலஸ் வாக்குறுதி கொடுத்து, மீண்டும் நாணி முகம் சிவந்து அவளுக்கு தலைவணங்கினார். இளவரசி மேரியை குறிப்பிட்டபோது, அவருக்கு ஒரு வெட்கமும், ஒரு மாதிரியான பயமும் தோன்றின. அவற்றின் காரணம் என்னவென்பது அவருக்குத் தெரியாது.

மால்வைன்ட்சேவாவிடமிருந்து பிரிந்த பின்பு, மீண்டும் நடனத்திற்கு திரும்பி வரவேண்டுமென்று நிக்கலஸ் விரும்பினார். ஆனால், கவர்னருடைய அந்த சிறிய மனைவி, தன்னுடைய புஷ்டியான கையை அவருடைய கைச்சட்டை மீது வைத்து, அவரோடு தான் பேச விரும்புவதாகக் கூறினாள். அவரை உட்காரும் அறைக்கு அழைத்துச் சென்றாள். அங்கிருந்தவர்கள் இவர்களுக்கு இடையூறாக இருக்கக் கூடாது என்பதற்காக அங்கிருந்து எழுந்து போனார்கள்.

'உமக்குத் தெரியுமா, எனது அன்பான சிறுவரே?' என்று அந்த கவர்னரின் மனைவி, அவளுடைய இனிய குஞ்சு முகத்தில் ஒரு சிந்தனை தோற்றத்தோடு கூறினாள். 'அது உமக்கு உண்மையிலேயே பொருத்தமான ஜோடியாய் இருக்கும். உமக்காக நான் ஏற்பாடு செய்யலாமா?'

'யாரைப் பற்றி நீ குறிப்பிடுகிறாய், அத்தையே?' என்று நிக்கலஸ் கேட்டார்.

'இளவரசியோடு உம்மை ஜோடி சேர்க்க நான் விரும்புகிறேன். காத்தரைன் பெட்ரோவ்னா உமக்கு லில்லியை திருமணம் செய்ய வேண்டுமென்று பேசுகிறாள். நான் அது வேண்டாமென்று சொல்லுகிறேன். அந்த இளவரசியை திருமணம் செய்வதே எனது விருப்பம். அதை நான் ஏற்பாடு செய்யலாமா? அப்படி நான் செய்தால், என்மீது உமது தாயார் மிகுந்த மகிழ்ச்சி கொள்வாள் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். அந்த பெண் உண்மையிலேயே எவ்வளவு மனோகரமானவள் தெரியுமா? அவள் அப்படியெல்லாம் அழகற்றவள் அல்ல.'

'இல்லவே இல்லை' என்று நிக்கலஸ் கூறினார். ஒரு ராணுவக்காரனின் கௌவரத்தை அனுசரித்து நான் யார் மீதும் கட்டாயமாக என்னை நுழைத்துக்கொள்ளவோ, அல்லது எதையும் மறுக்கவோ மாட்டேன், அத்தையே' என்று, தாம் என்ன சொல்லுகிறார் என்பதை சிந்தித்துப் பார்ப்பதற்கு முன்பாகவே அவர் பேசினார்.

'ரொம்ப சரி, ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும். இது வெறும் வேடிக்கையல்ல.'

'நிச்சயமாக, இது வேடிக்கையில்லை.'

'ஆம், ஆம்' என்று கவர்னரின் மனைவி தனக்குத் தானே பேசிக்கொள்பவளைப் போல கூறினாள். 'ஆனால், எனது அன்புள்ள சிறுவரே, அந்த அழகியிடம் நீர் அதிக சகவாசம் கொண்டிருக்கிறீரே. உண்மையாகவே அவளுடைய கணவருக்காக வருத்தப்பட வேண்டியது தான்.'

'ஓ, இல்லை, அவரோடு நாங்கள் மிகுந்த நட்போடு இருக்கிறோம்' என்று நிக்கலஸ் சொன்னார்.

அவருடைய மனம் கபடமற்றதாய் இருந்தபடியால், அவருக்கு மகிழ்ச்சியாய் இருந்த ஒரு நேரப்போக்கு, மற்றவர்களுக்கும் அதே மாதிரி மகிழ்ச்சியாய் இருக்க முடியாது என்பது அவருக்குப் புரியவில்லை.

'எப்பேர்ப்பட்ட அசட்டுத்தனங்களையெல்லாம் கவர்னருடைய மனைவியிடம் நான் சொல்லிக்கொண்டிருக்கிறேன்' என்று இராச்சாப்பாட்டின்போது நிக்கலஸ் திடீரென்று நினைத்தார். 'அவள் உண்மையிலேயே ஜோடி சேர்க்க ஆரம்பித்து விடுவாள்... அப்படியானால், சோனியா...?' கவர்னருடைய மனைவியிடம் விடை பெற்றுப் போகும்போது, அவள் மீண்டும் புன்முறுவலோடு 'நல்லது, ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்' என்று அவரைத் தனியாக அழைத்துச் சொன்னாள்.

'ஆனால், அத்தையே, இங்கே பார். உண்மையை உன்னிடம் சொல்லவேண்டுமானால்...'

'அது என்ன விஷயம், எனது அன்பே? இங்கே வாரும். இப்படி நாம் உட்காருவோம்' என்று அவள் சொன்னாள்.

தம்முடைய அந்தரங்கமான நினைப்புகளை அவளிடம் சொல்ல வேண்டிய அவசியத்தையும் ஆசையையும் நிக்கலஸ் திடீரென்று உணர்ந்தார். (அந்த ஆசைகளை அவர் அவருடைய தாயாரிடமோ, சகோதரியிடமோ, அல்லது நண்பனிடமோ சொல்லி இருக்கமாட்டார்) என்றாலும், இந்த பெண்ணிடம், அவருக்கு முற்றிலும் புதிதான பெண்ணிடம் சொல்லவேண்டுமென்று ஆசை கொண்டார். இம்மாதிரியாக காரணம் சொல்ல முடியாதபடி பட்டவர்த்தனமாகவும் தாமே வலியவும் சொல்லும்படி அவரைத் தூண்டிய உத்வேகத்தினால் அவருக்கு மிகுந்த முக்கியமான பலன்கள் ஏற்பட்டன. என்றாலும், அவற்றைப் பற்றி அவர் பின்னால் நினைத்துப் பார்த்தபோது - அம்மாதிரி விஷயங்களில் ஒவ்வொருவருக்கும் அம்மாதிரியே தோன்றும் - அந்த உத்வேகமானது அச்சமயம் அவரை பற்றிக் கொண்ட ஒரு அசட்டுத்தனமான விசித்திரப் போக்கு என்று தோன்றியது. என்றாலும், பட்டவர்த்தனமாக அவர் சொல்லியதும், அதோடு வேறு சில சிறிய சம்பவங்களும் சேர்ந்து அவருக்கும், அவருடைய குடும்பத்தைச் சேர்ந்த எல்லாருக்கும் பிரமாதமான நன்மைகளை உண்டுபண்ணின.

'இங்கே பார், அத்தையே, நான் ஒரு பணக்காரியை திருமணம் செய்யவேண்டுமென்று, என்னுடைய தாயார் வெகு காலமாக பிரியம் கொண்டிருக்கிறாள். ஆனால், பணத்திற்காக திருமணம் செய்ய வேண்டும் என்ற அந்த எண்ணமே எனக்கு வெறுப்பாய் இருக்கிறது.'

'ஓ, ஆம், எனக்குப் புரிகிறது' என்று கவர்னரின் மனைவி சொன்னாள்.

'ஆனால், இளவரசி பால்கோன்ஸ்கயா - அது வேறு விஷயம். நான் உன்னிடம் உண்மையைச் சொல்லுகிறேன். முதலாவதாக அவள் மீது எனக்கு மிகுந்த பிரியம் இருக்கிறது. அவளிடம் இழுக்கப்படுவதைப் போல நான் உணருகிறேன். அந்த விசித்திரமான சூழ்நிலையில் நான் அவளை சந்தித்த பின்பு, 'இதுதான் விதி' என்று எனக்கு அடிக்கடி தோன்றுகிறது. முக்கியமாக எனது தாயார் வெகு காலமாக அந்த நினைப்பையே நினைத்து வந்தாள் என்பதை ஞாபகத்தில் வைத்து யோசித்துப் பார்த்தால்... நான் அவளை அதற்கு முன்பாக சந்தித்ததில்லை; எப்படியோ

நாங்கள் சந்திக்காமலேயே போய்விட்டது. என்னுடைய சகோதரி நட்டாஷா, அவளுடைய சகோதரருக்கு நிச்சயார்த்தம் ஆகி இருக்கிற வரையில், அவளை நான் திருமணம் செய்ய வேண்டும் என்ற பேச்சுக்கே இடமில்லை. ஆனால், நட்டாஷா அந்த நிச்சயதார்த்தத்தை முறித்த பின்பு, நான் அவளை சந்திக்க வேண்டும் என்று ஏற்பட்டிருந்தது... அதன் பின்னால், மற்ற காரியங்கள்... இப்பொழுது நீயே பார்... இந்த விஷயத்தை உன்னைத் தவிர நான் வேறு யாரிடமும் சொல்லியதும் இல்லை; சொல்லப்போவதும் இல்லை.'

கவர்னருடைய மனைவி மகிழ்ச்சியோடு அவருடைய முழங்கையை அழுத்தினாள்.

'என்னுடைய மைத்துனியான சோனியாவை நீ அறிவாய் அல்லவா? நான் அவளைக் காதலிக்கிறேன். அவளை கலியாணம் செய்து கொள்வதாக வாக்குறுதி கொடுத்தேன். அம்மாதிரியே செய்வேன்... ஆகவே, அதைப் பற்றி பேசுவதற்கு இடமில்லை என்பதை நீயே பார் - ' என்று நிக்கலஸ் நாணி முகம் சிவந்து ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல் பேசினார்.

'எனது அன்புள்ள சிறுவரே, இப்படியா அந்த விஷயங்களை நாம் நோக்குவது? சோனியாவுக்கு எதுவுமில்லை என்பது உமக்கே தெரியும். அப்பாவினுடைய காரியங்கள் எல்லாம் ரொம்ப மோசமாயிருக்கின்றன என்று நீரே சொல்லுகிறீர். அப்படியானால், உம்முடைய தாயாரைப் பற்றி என்ன நினைக்கிறீர்? அப்பாவினுடைய காரியங்களே அவளைக் கொன்றுவிடும். அது ஒரு முக்கியமான விஷயம். அப்படியானால் சோனியாவுக்கு உள்ளம் என்பது ஒன்று இருக்குமானால், அந்த வாழ்க்கை எப்பேர்ப்பட்ட வாழ்க்கையாக இருக்கும்? உமது தாயார் திக்கற்ற நிலையில் இருக்கும்போது, உமது சொத்துக்கள் எல்லாம் போன பின்பு... இல்லை, எனது அன்பே, நீரும் சோனியாவும் அதைப் புரிந்து கொள்ள வேண்டும்.'

நிக்கலஸ் மௌனமாய் இருந்தார். இம்மாதிரியான வாதங்களைக் கேட்பதற்கு அவருக்கு இதமாயிருந்தது.

'எப்படியிருந்தாலும், அத்தையே, அது சாத்தியமானதல்ல' என்று அவர், சிறிது யோசனைக்குப் பின்னால், ஒரு பெருமூச்சோடு கூறினார். 'தவிரவும், இளவரசி என்னை திருமணம் செய்து கொள்வாளா? மேலும் அவள் இப்பொழுது துக்கம் காக்கிறாள். இச்சமயத்தில் இதைப் பற்றி ஒருவரால் எப்படி நினைக்க முடியும்?'

'ஆனால், இப்பொழுது உடனே நான் உங்களை திருமணம் செய்து வைக்கப் போகிறேன் என்று நீர் நினைக்கிறீரா? எப்பொழுதும் சரியான முறையிலேயே காரியங்களை செய்ய வேண்டும்' என்று கவர்னரின் மனைவி பதில் அளித்தாள்.

'எப்பேர்ப்பட்ட ஜோடி சேர்ப்பவளாய் நீ இருக்கிறாய், அத்தையே!...' என்று நிக்கலஸ் கூறி, அவளுடைய பருத்த, சிறிய கையை முத்தமிட்டார்.

# 12

## 6

ராஸ்டோவை சந்தித்த பின்னால், இளவரசி மேரி மாஸ்கோ வந்து சேர்ந்தாள். அங்கே அவளுடைய மருமகனும், வாத்தியாரும், இளவரசர் ஆண்ட்ரூவின் கடிதத்தோடு காத்திருந்தார்கள். வாரோநெஜ் என்ற இடத்திலுள்ள தமது அத்தை மால்வைன்ட்சேவாவிடம் போகும்படி, அக்கடிதத்தில் இளவரசர் ஆண்ட்ரூ குறிப்பிட்டிருந்தார். அங்கே எப்படிப் போகவேண்டும் என்ற வழிகளையும்குறிப்பிட்டிருந்தார். அவளுடைய தந்தை அசௌக்கியமான காலத்தில் அவளுக்கு மனதில் ஏற்பட்ட சோதனையான நினைப்புகளைப் போன்ற நினைப்புகள், அவளுடைய தந்தையின் மரணத்திற்குப் பின்னால், முக்கியமாக அவள் ராஸ்டோவை சந்தித்த பின்னால், அவள் மனதில் தோன்றி வருத்திக் கொண்டிருந்தன. ஆனால், பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்வதிலும், அவளுடைய சகோதரரைப் பற்றிய கவலையிலும், புதிதாக ஒரு வீட்டிற்குப் போய்ச்சேர்ந்து அங்குள்ள பழக்கமில்லாத மனிதர்களை சந்திக்க வேண்டும் என்ற நினைப்பிலும், அவளுடைய மருமகனுடைய கல்வியைப் பற்றி சிந்திப்பதிலும் அவள் ஈடுபட்டிருந்தபடியால், அந்த நினைப்புகளும் அடங்கியிருந்தன. அவள் முன்னால் துக்கமாயிருந்தாள். இப்பொழுது, அமைதியான சூழ்நிலையில் ஒரு மாதம் கழிந்த பின்பு, அவளுடைய தந்தையின் மரணத்தைப் பற்றி வரவர அதிகமாக துக்கம் கொண்டாள். ருஷ்யாவினுடைய அழிவும், அந்த மரணத்தோடு சேர்ந்து அவ்ளுடைய மனதில் தோன்றிக் கொண்டிருந்தன. அவளுடைய சகோதரர் ஒருவர் தான், அவளுக்கு இப்பொழுது அன்னியோன்னியமாய் இருக்கக்கூடிய ஒரே நபராய் இருக்கிறார். அப்பேர்ப்பட்டவர் ஆபத்தான இடங்களில் இருந்து வருவதினால், அவளுடைய மனதில் கவலை ஏற்பட்டு அவளை விடாமல் வாட்டி வந்தது. அவளுடைய மருமகனுக்கு படிப்பு

சொல்லிக் கொடுப்பதற்கு தனக்குத் திறமையில்லையென்று அவள் எப்பொழுதும் உணர்ந்தபடியால், அதைக் கண்டும் மனதில் கவலை கொண்டிருந்தாள். ஆனால், அவளுடைய உள்ளத்தின் ஆழத்தில் அவளுக்கு ஒரு அமைதி ஏற்பட்டு இருந்தது. அதாவது, ராஸ்டோவை அவள் சந்தித்த பின்பு, அவளுடைய மனதில் மீண்டும் தோன்றிய கனவுகளாலும் நம்பிக்கைகளாலும் அக்கவலை அடக்கப்பட்டு விட்டதாக அவள் மனதில் தோன்றி, அதனால் ஏற்பட்ட ஒரு அமைதியை அவள் அனுபவித்து வந்தாள்.

தன்னுடைய வீட்டில் நடத்திய வரவேற்பு கச்சேரிக்கு மறுநாள் கவர்னரின் மனைவி, மால்வைன்ட்சேவாவைப் பார்ப்பதற்கு வந்தாள். தான் நினைத்து வந்த திட்டத்தைப் பற்றி அவளிடம் பேசினாள். இப்பொழுதுள்ள நிலைமையில் முறைப்படி நிச்சயதார்த்தம் செய்வது என்பது நினைக்க முடியாத விஷய மென்றும், என்றாலும் அவர்கள் இருவரையும் ஒன்று சேரும்படி செய்து, ஒருவரையொருவர் நன்றாய் அறிந்து கொள்ளும்படி செய்வது அவசியம் என்றும் கவர்னரின் மனைவி கூறினாள். மால்வைன்ட்சேவா அந்த யோசனையை அங்கீகரித்தாள். மேரியின் பிரசன்னத்திலேயே ராஸ்டோவைப் பற்றி கவர்னரின் மனைவி புகழ்ந்து கூறினாள். இளவரசி மேரியின் பெயரை பிரஸ்தாபித்ததும், அவர் எம்மாதிரி நாணி முகம் சிவந்தார் என்பதையும் அவள் கூறினாள். ஆனால், இளவரசி மேரிக்கு ஒரு வருத்தமான உணர்ச்சி ஏற்பட்டதே ஒழிய, மகிழ்ச்சியான உணர்ச்சி ஏற்படவில்லை. அவளுடைய மன அமைதி குலைந்து, அவளுடைய ஆசைகளும், சந்தேகங்களும், நம்பிக்கைகளும், தன்னைத் தானே குறை கூறிக்கொள்ளுதலும் மீண்டும் தலை தூக்கின.

ராஸ்டோவ் தன்னை வந்து பார்ப்பதற்கு இன்னும் இரண்டு தினங்கள் இருந்தன. அந்த இரண்டு தினங்களில், இளவரசி மேரி அவரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியே, விடாமல் சிந்தித்துக்கொண்டிருந்தாள். முதலில் அவளுடைய அத்தையை ராஸ்டோவ் பார்க்க வரும்பொழுது அவள் வரவேற்பு அறைக்கு வரக்கூடாதென்றும், அவள் துக்கம் காத்துக் கொண்டிருப்பதால், விருந்தினர்களை வரவேற்பது உசிதமல்ல வென்றும் நினைத்தாள். ஆனால், அம்மாதிரி செய்வது, அவர் அவளுக்கு செய்த உதவிக்குப் பதிலாக அகௌரவமாய் நடந்துகொண்டதாய் இருக்குமென்று பின்னால் அவள் நினைத்தாள். தன்னுடைய அத்தைக்கும், கவர்னரின் மனைவிக்கும், தன்னைப் பற்றியும் ராஸ்டோவைப் பற்றியும் உள்ள நோக்கம் அவளுடைய மனதில் தோன்றியது. அவர்களுடைய பார்வைகளும்,

வார்த்தைகளும், இந்த சந்தேகத்தை உறுதி செய்வதாய் இருந்தன. ஆனால், இம்மாதிரி அவர்களைப் பற்றி நினைப்பது, தன்னுடைய பாவ சுபாவத்தினால் தான் ஏற்படுகிறது என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள். அவள் இன்னமும் துக்கம் காத்துக் கொண்டிருப்பதால், அம்மாதிரியான நிச்சயதார்த்தப் பேச்சை பேசுவது அவளுக்கும், அவளுடைய தந்தைக்கும், அவமரியாதை செய்வதாய் இருக்குமென்பதை அவர்கள் அறிவார்கள் என்று நினைத்தாள். ஒருவேளை அவரைப் பார்ப்பதற்காக அவள் கீழே இறங்கிப் போவதாய் இருந்தால், அவர் அவளிடம் என்ன செய்வார், அவள் அவரிடம் என்ன பேசுவாள் என்பதைப் பற்றி இளவரசி மேரி மனோராஜ்யம் செய்தாள். இந்த மனோராஜ்யத்தில் அவள் நினைக்கும் வார்த்தைகள், சில வேளைகளில் அனாவசியமாக கனிவற்றவையாகவும், சில வேளைகளில் அதிகப்படியானவை யாகவும் அவளுக்குத் தோன்றின. அவரை அவள் பார்த்ததும் அவளுக்கு ஏற்பட்டிருந்த குழப்பமானது அவளை அமுக்கி, அவளுடைய நினைப்புகளை காட்டிக் கொடுத்து விடுமோ என்ற பயம், எல்லாவற்றிற்கும் மேலாக அவளுக்குத் தோன்றியது.

ஞாயிற்றுக்கிழமையன்று மாதா கோயில் பிரார்த்தனைக்குப் பின்னால், கோமகன் ராஸ்டோவ் வந்திருக்கிறார் என்று, சேவகன் வரவேற்பு அறையில் வந்து அறிவித்தான். இளவரசி மேரியின் முகத்தில் குழப்பம் எதுவும் காணப்படவில்லை. ஆனால், அவளுடைய கன்னங்கள் லேசாக சிவந்தன. அவளுடைய கண்கள் ஒரு புதிய பிரகாசத்தோடு ஒளி வீசின.

'அத்தையே, நீ அவரை சந்தித்திருக்கிறாய் அல்லவா?' என்று ஒரு அமைதியான குரலில் இளவரசி மேரி கேட்டாள். எவ்வளவு அமைதியுடனும், இயற்கையாகவும் அவள் எப்படி இருக்கிறாள் என்பதை, அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ராஸ்டோவ் அறையில் நுழைந்ததும், ஒரு வினாடி இளவரசி மேரி தனது கண்களை கீழ் நோக்கினாள். தன்னுடைய அத்தைக்கு அவர் வணக்கம் செலுத்த வேண்டும் என்பதற்காக, அவகாசம் கொடுப்பதைப் போல அவளுடைய செய்கை இருந்தது. நிக்கலஸ் அவளைப் பார்த்து திரும்பியதும், தனது தலையை அவள் நிமிர்த்தி, பிரகாசமான கண்களோடு அவருடைய முகத்தை நோக்கினாள். பூரணமான கண்ணியத்தோடும், ஒயிலோடும், மகிழ்ச்சிப் புன்னகையோடும் பாதி எழுந்து, தன்னுடைய மெல்லிய கையை அவரிடம் நீட்டினாள். முதல் தடவையாக அவளுடைய குரலில் பெண்மையின் கனிவு தொனிக்க அவள் பேசுவதற்கு ஆரம்பித்தாள். வரவேற்பு அறையில் அமர்ந்திருந்த குமாரி பௌரியன், தயக்கம்

கொண்ட ஆச்சரியத்தோடு இளவரசி மேரியை நோக்கினாள். தானே ஒரு கைதேர்ந்த சாகசக்காரியாக இருந்தபோதிலும், தன்மீது கவர்ச்சி கொள்ள விரும்பி தான் ஒருவரை சந்திக்கும்போது, இதை விட நன்றாக தன்னால் நடந்துகொண்டிருக்க முடியாதென்று அவள் நினைத்தாள்.

'அவள் அணிந்திருந்த கருப்பு உடைகள் அவளுக்கு விசேஷமாக அழகு கொடுக்கிறதா; அல்லது என்னையறியாமலேயே அவளுடைய அழகு சிறந்திருக்கிறதா என்பது எனக்குத் தெரியவில்லை. இவற்றிற்கெல்லாம் மேலாக, அவளுடைய சாமர்த்தியமும், ஒயிலும், எவ்வளவு சிறந்ததாய் இருக்கின்றன!' என்று குமாரி பௌரியன் நினைத்தாள்.

அந்த வினாடியில் இளவரசி மேரி சிந்தித்துப் பார்க்கக்கூடிய நிலைமையில் இருந்தால், தன்னிடம் ஏற்பட்டுள்ள மாறுதலைக் கண்டு, குமாரி பௌரியனை விட அவளே அதிகமான ஆச்சரியம் அடைந்திருப்பாள். அந்த அன்பான காதல் முகத்தை அவள் பார்த்த வினாடியிலிருந்து, ஒரு புதிய வாழ்க்கை வேகம் அவளை பற்றி, அவளுடைய சொந்த விருப்பம் எதுவும் இல்லாமல் அவளை பேசும்படி கட்டாயப்படுத்தியது. ராஸ்டோவ் அறைக்குள் வந்ததிலிருந்து அவளுடைய முகம் திடீரென்று மாறியது. ஒரு அழகான சித்திர வேலை செய்யப்பட்ட, வர்ணம் தீட்டிய விளக்கு, அதில் ஒளியில்லாத சமயத்தில் அந்த சித்திர வேலைகளும், வர்ண வேலைகளும், வெளியே தெரியாமல் இருள்டைந்து விகாரமாக, அர்த்த மற்றவையாக காணப்படும். அந்த விளக்கில் திடீரென்று ஒளி ஏற்பட்டதும், அதன் சித்திர வேலைகளும், வர்ண வேலைகளும் பிரகாசமாகத் தெரியும். அதேமாதிரி அவளுடைய முகம் மாறியது. முதல் தடவையாக அவள் வாழ்ந்து வந்த அந்த பரிசுத்தமான ஆத்மார்த்தீக மன வேதனைகள் எல்லாம் திடீரென்று மேலே தளத்திற்கு வந்து தோன்றின. உள்ளூர அவள் அனுபவித்த கஷ்டங்களும், அவளைப் பற்றிய அவளுடைய அதிருப்தியும், அவளுடைய துன்பங்களும், நன்மைக்காக அவள் பாடுபட்டவை களும், அவளுடைய பணிந்து போகும் சுபாவமும், அன்பும், சுயநலத் தியாகமும், இவையெல்லாம் அவளுடைய அந்த பிரகாசமான கண்களிலும், அவளுடைய மெல்லிய புன்னகை யிலும், அவளுடைய மிருதுவான முகத்திலுள்ள ஒவ்வொரு அசைப்பிலும் காணப்பட்டன.

அவளுடைய வாழ்க்கை முழுவதையும் தாம் அறிந்திருந்தது போல இவற்றை யெல்லாம் ராஸ்டோவ் தெளிவாகக் கண்டார். தமக்கு முன்பாக அவர் காணும் அந்த உருவம், முன் பார்த்த

உருவத்தை விட மாறுபட்டதாகவும், சிலாக்கியமானதாகவும், எல்லாவற்றிற்கும் மேலாக தம்மை விட, மேன்மையானதாகவும் இருப்பதாக அவர் உணர்ந்தார்.

அவர்களுடைய உரையாடல்கள் சாதாரணமாகவும் முக்கிய மற்றவையாகவும் இருந்தன. யுத்தத்தைப் பற்றி அவர்கள் பேசினார்கள். ஒவ்வொருவரையும் போலவே போரைப் பற்றி தங்களுடைய வருத்தத்தை தங்களையறியாமலேயே மிகைப் படுத்திக் கூறினார்கள். அந்தப் பேச்சை மாற்றுவதற்காக, கடைசியாக அவர்கள் சந்தித்ததைப் பற்றி நிக்கலஸ் பேசினார். கவர்னருடைய அன்பான மனைவியைப் பற்றியும், நிக்கலஸின் உறவினர்களைப் பற்றியும் இளவரசி மேரியின் உறவினர்களைப் பற்றியும் அவர்கள் பேசினார்கள்.

தன்னுடைய சகோதரரைப் பற்றி அவள் பேசவில்லை. ஆண்ட்ரூவின் பெயரை அவளுடைய அத்தை பிரஸ்தாபித்ததும், அந்த உரையாடலை இளவரசி மேரி வேறு வழியில் திருப்பி விட்டாள். ருஷ்யாவின் துன்பங்களைப் பற்றி ஏதோ ஒரு துக்கத்தோடு பேசுவதாக பாவனை செய்யலாம்; ஆனால், அவளுடைய சகோதரர் அவளுடைய உள்ளத்தில் நெருங்கி நிற்பவராய் இருக்கிறபடியால் அவரைப் பற்றி ஏனோ தானோ வென்று அவளால் பேச முடியாதென்று காட்டுவதைப் போல இருந்தது. இதை நிக்கலஸ் கவனித்தார். இளவரசி மேரியின் குணத்தைப் பற்றிய ஒவ்வொரு தோற்றத்தையும், அவருக்கு வழக்கமில்லாத கவனத்தோடு கவனித்து வந்தார். அப்படி கவனித்தபோது, அவையெல்லாம் அவளை ஒரு அபூர்வமான, பிரமாதமான பெண்ணாக அவர் நினைத்து வந்ததை உறுதி செய்தன. இளவரசியைப் பற்றி நிக்கலஸிடம் யாராவது பேசும்போது, அவர் முகம் சிவந்து நாணுவதுண்டு. அதே மாதிரி அவரைப் பற்றி பேசும்போதும், இளவரசி நாணி முகம் சிவப்பதுண்டு. அவளைப் பற்றி நினைத்தாலும் கூட, அவருக்கு நாணமும் முகம் சிவப்பதும் ஏற்படுவதுண்டு. ஆனால், அவளுடைய பிரசன்னத்தில் அவர் மிகுந்த செளஜன்யமாக இருந்தார். அவர் என்ன பேசவேண்டு மென்று நினைத்து வந்தாரோ, அவற்றையெல்லாம் அவர் சொல்லவேயில்லை. அந்த வினாடியில் எது பொருத்தமானது என்று அவருக்குத் தோன்றியதோ, அவற்றையே அவர் பேசினார்.

உரையாடல்கள் சிறிது ஓய்ந்தபோது, குழந்தைகள் இருக்கும் இடத்தில் வழக்கமாக நடப்பதைப் போல, இளவரசர் ஆண்ட்ரூவின் சிறிய குமாரனை நிக்கலஸ் கையில் பற்றி அவனை தடவிக் கொடுத்தார். தம்முடைய முழங்கால்களில் அவனைத் தூக்கி

வைத்து, அவன் ஒரு குதிரைப் படை வீரனாக வர விரும்புகிறானா என்று கேட்டு, இளவரசி மேரியைப் பார்த்தார். அமைதியான, மகிழ்ச்சியான, சங்கோஜமான பார்வையோடு, தான் காதல் கொண்டுள்ள மனிதரிடம், தான் விரும்பும் அந்த சிறுவன் இருப்பதை இளவரசி மேரி நோக்கினாள். அந்தப் பார்வையை நிக்கலஸூம் கவனித்தார். அதை அறிந்து கொண்டவரைப் போல மகிழ்ச்சியினால் முகம் சிவந்து, விளையாடுவதைப் போல அந்த சிறுவனை முத்தமிட ஆரம்பித்தார்.

அவள் துக்கம் காத்துக்கொண்டிருந்தபடியால், உயர் வட்டாரங்களில் உல்லாச கூட்டங்களுக்குப் போவதில்லை. ஆகவே, மீண்டும் அவளை அங்கே பார்க்க வருவது முறையாய் இருக்காதென்று அவர் நினைத்தார். ஆனால், கவர்னரின் மனைவி ஜோடி சேர்க்கும் வேலையை செய்து கொண்டே இருந்தாள். இளவரசி மேரி புகழ்ச்சியாக நிக்கலஸைப் பற்றி சொன்ன விஷயங்களை நிக்கலஸிடமும், நிக்கலஸ் சொல்லிய புகழ்ச்சியான விஷயங்களை இளவரசி மேரியிடமும் சொல்லி, அவரை திருமணம் செய்து கொள்ள இளவரசி மேரியிடம் கேட்கும்படி நிக்கலஸை வற்புறுத்தி வந்தாள். இந்த காரியத்திற்காக, ரோம சபை பிரார்த்தனைக்கு முன்பாக பிஷப்பின் வீட்டில் அவர்கள் இருவரும் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்தாள்.

அம்மாதிரி இளவரசி மேரியிடம் தாம் சொல்ல முடியாதென்றும், ஆனால், அவளை சந்திப்பதாகவும் கவர்னரின் மனைவியிடம் ராஸ்டோவ் கூறினார்.

டில்சிட்டில் ஏற்பட்டதைப் போல, ஒவ்வொருவரும் சரியென்று சொல்லக்கூடிய விஷயத்தை தாம் சந்தேகப்படாமல் ஒப்புக் கொண்டதைப் போல இப்பொழுதும் செய்தார். தாம் சரியென்று நினைக்கக்கூடிய வழியில் தமது வாழ்க்கையை அமைப்பதற்கும், சூழ்நிலைகளுக்கு கீழ்ப்படிவதற்கும் இடையில், உண்மை சிரத்தையோடு போராட்டம் நடத்திப் பார்த்தார். கடைசியில் தம்மை எங்கே அழைத்துப் போகிறது என்று தெரியாமல், தூக்கிச் செல்லும் வேகத்திற்கு இணங்கி, சூழ்நிலைகளுக்குக் கீழ்ப்படிவதென்று தீர்மானித்தார். சோனியாவிடம் வாக்குறுதி கொடுத்த பின்பு, இளவரசி மேரியிடம் தமது காதலை தெரிவிப்பது ஒரு இழிவான காரியம் என்பதை அவர் அறிவார். எக்காலமும் ஒரு இழிவான காரியத்தை செய்வதற்கு அவர் உடன்படமாட்டார் என்பதையும் அறிவார். அதோடு, இப்பொழுது அவரை வழிகாட்டி நடத்தும் அந்த சூழ்நிலைகளுக்கு பணிந்து போவதால், அல்லது அவருடைய உள்ளத்தின் ஆழத்தில் தோன்றும் உணர்ச்சிக்கு பணிந்து போவதால், அவர் எவ்விதமான தவறும் செய்யவில்லையென்பதை உணர்ந்தார்.

மேலும், தமது வாழ்க்கையிலேயே எப்பொழுதும் செய்திராத மிக முக்கியமான ஒரு காரியத்தை அவர் செய்வதாகவும் உணர்ந்தார்.

இளவரசி மேரியை சந்தித்ததற்கு பின்பு, வெளிப் பார்வையில் அவருடைய வாழ்க்கை முன்போல் நடந்து கொண்டிருப்பதாக தோன்றியபோதிலும், அவருக்கு முன்னால் மகிழ்ச்சி கொடுத்து வந்த வேடிக்கைகளில் எல்லாம் இப்பொழுது அவருக்கு கவர்ச்சியில்லை. அடிக்கடி அவளைப் பற்றியே நினைத்து வந்தார். மேல் வட்டாரங்களில் அவர் சந்தித்த இளஞ் சீமாட்டிகளைப் பற்றி எம்மாதிரி அவர் நினைத்து வந்தாரோ, அம்மாதிரி அவளைப் பற்றி அவர் எப்பொழுதும் நினைத்ததில்லை; அல்லது, சோனியாவைப் பற்றி எப்படி வெகு காலமாக மிகுந்த பரவசத்தோடு நினைத்து வந்தாரோ, அம்மாதிரி அவளைப் பற்றி நினைத்ததில்லை. இந்த வாலிப சீமாட்டிகளையெல்லாம் பற்றி யோக்கியமான நினைப்புள்ள வாலிபர்கள் எம்மாதிரி நினைப்பார்களோ, அதே மாதிரி தான் அவரும் நினைத்து வந்தார். அதாவது, ஒருவேளை அவள் தனது மனைவி ஆகக்கூடும் என்றும், திருமணத்திற்குப் பின்னால் அவள் இம்மாதிரி இருப்பாள் என்றும் மனோராஜ்யம் செய்வதுண்டு; வெண்மையான உடை அணிந்து தமது மனைவி தேநீர் அருந்துவதும், வண்டியில் போவதும், சின்னஞ்சிறு குழந்தைகள் அம்மாவென்றும் அப்பாவென்றும் அழைப்பதும், இம்மாதிரியாக மகிழ்ச்சியைக் கொடுக்கும் எதிர்கால சித்திரங்களைப் பற்றி நினைக்கும்போது அவருக்கு மகிழ்ச்சி ஏற்படுவதுண்டு. ஆனால், இளவரசி மேரியைப் பற்றி அவர் நினைக்கும்போது, அவளை அவருக்கு நிச்சயதார்த்தம் செய்து வைக்க வேண்டும் என்று அவர்கள் முயற்சி செய்துவரும் இந்த நிலையில் கூட இளவரசி மேரியுடன் தமது எதிர்கால குடும்ப வாழ்க்கையைப் பற்றி, அம்மாதிரி அவர் மனதில் சித்திரம் கொள்ள முடியவில்லை. அவர் சித்திரம் கொள்ள முயற்சித்தால், அவருடைய சித்திரங்கள் எல்லாம் பொருத்தமற்றவையாகவும், பொய்யானவையாகவும் அவருக்குத் தோன்றி, ஒரு பீதியை அவருக்கு உண்டு பண்ணின.

## 12

### 7

பாராடினோ போரில் நமது பக்கத்தில் கொல்லப் பட்டவர்களாலும், காயமடைந்தவர்களாலும் ஏற்பட்ட நஷ்டத்தைப் பற்றி பயங்கரமான செய்தியும், மாஸ்கோவை இழந்து விட்டதான அதைவிட பயங்கரமான செய்தியும்,

செப்டெம்பர் மாத மத்தியில் வாரோநெஜ்ஜுக்கு வந்து சேர்ந்தன. தனது சகோதரருக்கு ஏற்பட்ட காயத்தைப் பற்றி, இளவரசி மேரி கெஜட்டிலிருந்துதான் அறிந்து கொண்டாள். (அம்மாதிரியேதான் நிக்கலஸும் கேள்விப் பட்டார். என்றாலும், அவளை அதன் பின்னால் நிக்கலஸ் பார்க்கவில்லை.) தனது சகோதரரைப் பற்றி நிச்சயமான செய்தி எதுவும் இல்லாததால், அவரைத் தேடி கண்டு பிடிப்பதற்காக இளவரசி மேரி புறப்படத் தயாரானாள்.

பாராடினோ போரைப் பற்றியும், மாஸ்கோவைக் கைவிட்டதைப் பற்றியும் ராஸ்டோவ் கேள்விப்பட்டதும், அதற்காக ஏக்கங்கொள்ளவோ, கோபமடையவோ, பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்று உறுதி கொள்ளவோ, அல்லது அம்மாதிரியான உணர்ச்சி எதுவும் கொள்ளவோ இல்லை. ஆனால், அவற்றை கேள்விப்பட்டதும், வாரோநெஜ்ஜில் உள்ள எல்லாம் அவருக்கு உற்சாகமற்றவையாகவும், தொல்லையானவையாகவும் காணப் பட்டன. இன்னதென்று சொல்ல முடியாத ஒரு அவமானமும், தர்மசங்கடமான நிலைமையும் அவருக்குத் தோன்றின. அவர் கேட்கும் உரையாடல்கள் எல்லாம், சிரத்தை இல்லாமல் பேசப் படுகிறவை என்று அவருக்குத் தோன்றின. இந்த செய்திகளைப் பற்றியெல்லாம் எம்மாதிரி நினைப்பது என்பது அவருக்குப் புரியவில்லை. ராணுவத்திற்குப் போன பின்பு தான், ஒவ்வொன்றும் தெளிவாக தெரியுமென்று அவர் உணர்ந்தார். ஆகவே, குதிரைகள் வாங்கும் வேலையை செய்து முடிக்க அவர் அவசரப்பட்டார். அனாவசியமாக தமது சேவகனிடமும், சப்ளை அதிகாரியிடமும் கோபம் காட்டி வந்தார்.

ருஷ்ய வெற்றிக்காக நன்றியை தெரிவிக்கும் பொருட்டு மாதா கோயிலில் நடந்து பிரார்த்தனையில் நிக்கலஸும் பிரசன்னமாயிருந்தார். அந்த ஊரை விட்டு புறப்படுவதற்கு சில தினங்களுக்கு முன்னால் இது நடந்தது. அவர் கவர்னருக்கு சிறிது பின்னால் நின்றுகொண்டிருந்தார். அந்த பிரார்த்தனை முழுவதிலும், ராணுவ தோரணையோடு அவர் காணப்பட்டார். பற்பல விதமான விஷயங்களைப் பற்றி அவர் மனதில் சிந்தித்துக் கொண்டிருந்தார். பிரார்த்தனை முடிந்ததும், கவர்னரின் மனைவி ஜாடை காட்டி அவரை அழைத்தாள்.

'நீர் இளவரசியைப் பார்த்தீரா?' என்று அவள் தனது தலையால் எதிர் வரிசையில் பிரார்த்தனைக் கோஷ்டிக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த ஒரு சீமாட்டியைச் சுட்டிக்காட்டி கேட்டாள்.

நிக்கலஸ் உடனே இளவரசி மேரியை அடையாளம் கண்டு கொண்டார். அவளுடைய தலையில் அணிந்திருந்த தொப்பிக்கு

அடியில் காணப்பட்ட அவளுடைய முகத்தின் பக்கவாட்டிலிருந்து அவர் அடையாளம் கண்டுகொள்ளவில்லை; அக்கறையும், தயக்கமும் இரக்கமும் கொண்ட அவளுடைய முகத்தோற்றத்திலிருந்தே அவர் அடையாளம் கண்டு கொண்டார். அந்த உணர்ச்சிகள் உடனே அவரை ஆட்கொண்டன. இளவரசி மேரி சிந்தனையில் ஆழ்ந்து, அந்த மாதா கோயிலை விட்டு புறப்படுவதற்கு முன்பாக, கடைசி தடவையாக சிலுவைக் குறிக் காட்டிக்கொண்டாள்.

அவளுடைய முகத்தை ஆச்சரியத்தோடு நிக்கலஸ் நோக்கினார். அந்த முகம் அவர் முன்னால் பார்த்த அதே முகந்தான். அந்த முகத்தில் முன்னால் அவர் கண்ட பண்பும், உள்ளுணர்ச்சியும், ஆத்மார்த்தீக போக்கும் இப்பொழுதும் காணப்பட்டன. ஆனால், இவை இப்பொழுது ஒரு புதிய ஒளியில் தோன்றின. துக்கமும், பிரார்த்தனையும், நம்பிக்கையும் கொண்ட ஒரு பரிதாபகரமான தோற்றம் அவள் முகத்தில் காணப்பட்டது. இதற்கு முன்பு செய்ததைப் போலவே, கவர்னருடைய மனைவியின் தூண்டுதலுக்காக காத்துக் கொண்டிருக்காமல், அங்கே மாதா கோயிலில் அவளோடு பேசுவது முறையாகுமா, அல்லவா என்பதையும் யோசிக்காமல், ராஸ்டோவ் நேராக இளவரசி மேரியிடம் போனார். அவளுக்கு ஏற்பட்டுள்ள வருத்தத்தைப் பற்றி தாம் கேள்விப்பட்டதாகவும், அதற்காக தம்முடைய முழு மனதோடு அனுதாபம் காட்டுவதாகவும் அவர் கூறினார். அவருடைய குரலைக் கேட்டதும், அவளுடைய முகத்தில் தெளிவாக ஒரு ஒளி பிரகாசமடைந்து, அவளுடைய துக்கத்தையும் மகிழ்ச்சியையும் நன்றாக ஒளிர் விட்டுக் காட்டியது.

'ஒருவிஷயத்தைப் பற்றி உன்னிடம் சொல்ல விரும்புகிறேன், இளவரசியே' என்று ராஸ்டோவ் சொன்னார். 'அதாவது, உன்னுடைய சகோதரர் இளவரசர் ஆண்ட்ரூ ஒரு கர்னல் ஆனபடியால், அவர் உயிரோடு இல்லையென்றால் உடனே அந்த விஷயத்தைக் கெஜட்டில் பிரசுரிப்பார்கள்.'

அவர் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார் என்பதை கிரகித்துக் கொள்ளாமலே இளவரசி அவரை நோக்கினாள். அவருடைய முகத்தில் காணப்பட்ட வருத்தம் கலந்த அனுதாபத்தினால் அவள் மகிழ்ச்சி கொண்டாள்.

'பீரங்கி குண்டுகளின் சிராய்களினால் காயம் ஏற்பட்ட பல பேர்களுடைய விஷயங்கள் எனக்குத் தெரியும். ஒன்று உடனே மரணமாவதாய் இருக்கவேண்டும்; அல்லது அந்த காயம் அற்பமான

தாய் இருக்கவேண்டும். எதற்கும் எல்லாம் இனிமையாக முடியுமென்று நாம் நம்பவேண்டும். எனக்கு நிச்சயமாக...'

இளவரசி மேரி இடைமறித்தாள்.

'ஓ, அது மிகவும் பயங்கரமாய் இருக்கும்...' என்று அவள் ஆரம்பித்தாள். ஆனால், அவளுக்கு ஏற்பட்ட படபடப்பினால், அந்த வாக்கியத்தை அவள் முடிக்கவில்லை. அவருடைய முன்னிலையில் ஒவ்வொன்றையும் அவள் ஒயிலோடு செய்வதே வழக்கம். அந்த ஒயிலோடு அவள் தலையைக் குனிந்து அவருக்கு வணக்கம் சொல்லிவிட்டு, அவளுடைய அத்தைக்குப் பின்னால் வெளியே போனாள்.

அன்று மாலை நிக்கலஸ் வெளியே போகவில்லை. குதிரைக்காரர்களிடம் கணக்குத் தீர்ப்பதற்காக வீட்டிலேயே தங்கினார். அந்த வேலை முடிந்ததும், வெளியே எங்கும் போவதற்கு இல்லாமல் நேரம் அதிகமாய்விட்டது. ஆனால், படுக்கைக்குப் போவதற்கான நேரமும் வரவில்லை. ஆகவே, அந்த அறையில் வெகு நேரம் வரையில் தமது வாழ்க்கையைப் பற்றி சிந்தித்துக் கொண்டு, மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார். அம்மாதிரி அவர் செய்வது ரொம்ப அபூர்வம்.

ஸ்மாலென்ஸ்க் மாகாணத்தில் அவர் அவளைச் சந்தித்தபோது, அவருடைய மனதில் ஒரு மனோகரமான சித்திரத்தை இளவரசி மேரி ஏற்படுத்தியிருந்தாள். அம்மாதிரியான ஒரு அசாதாரணமான சந்தர்ப்பத்தில் அவர் அவளைச் சந்தித்தபோது, அவருடைய தாயார் ஒரு காலத்தில் அவள் அவருக்கு சரியான பொருத்தமாயிருப்பாள் என்று கூறியது நினைவிற்கு வந்தபடியால், விசேஷ கவனத்தோடு அவர் அவளை உன்னிப்பாய் பார்த்தார். வாரோநெஜ்ஜில் அவளை அவர் மீண்டும் சந்தித்தபோது, அவருடைய மனதில் உருவான சித்திரமானது, இனிமையானது மட்டுமல்லமல், மிகுந்த சக்தி வாய்ந்ததாயும் இருந்தது. இந்த சமயத்தில் அவர் கவனித்த அவளுடைய தனிப்பட்ட தார்மீக அழகு நிக்கலஸ் மனதில் நன்றாகப் பதிந்தது. என்றாலும், அவர் அதை விட்டு புறப்பட்டுப் போவதற்குத் தயாரானார். அவளை மீண்டும் சந்திப்பதற்கு வழியில்லாமல் போய்விடுமே என்ற வருத்தம் அவருடைய மனதில் அப்பொழுது தோன்றவில்லை. ஆனால், அன்று மாதா கோயிலில் அவளைச் சந்தித்த பின்பு, அவருடைய மன அமைதி குலையும் விதத்தில் அவருடைய மனதில் மிகுந்த ஆழமாக அந்த உணர்ச்சி பதிந்திருப்பதாக அவர் உணர்ந்தார். அந்த வெளிறிய, சோகமான, பண்பட்ட முகமும், அந்த பிரகாசமான பார்வையும், அவளுடைய அமைதியான, அழகான அசைவுகளும், முக்கியமாக

அந்த அசைவுகளிலெல்லாம் தோன்றிக் கொண்டிருந்த அந்த ஆழமான, மிருதுவான சோகமும், அவருடைய மனதை பரபரப்படையும்படி செய்து, அவருடைய அனுதாபத்தைத் தூண்டிவிட்டன. உயர்ந்த ஆத்மார்த்தீக வாழ்க்கையைப் பற்றிய தோற்றத்தை ஆண்களிடம் காண்பதற்கு ராஸ்டோவால் சகிக்க முடியாது. (அதனால்தான் இளவரசர் ஆண்ட்ரூவை அவர் விரும்பவில்லை.) அம்மாதிரியான ஆத்மார்த்தீக தோற்றத்தை தத்துவம் என்றும், கனவு என்றும் அவர் இகழ்ச்சி செய்வதுண்டு. ஆனால், இளவரசி மேரியிடம் தோன்றிய அதே சோகம், அவருக்குப் புரியாத, முழு ஆத்மார்த்தீக உலகத்தின் ஆழத்தையும் அவருக்குக் காட்டி, அவர் தடுக்க முடியாத விதத்தில் அவரைக் கவர்ந்து இழுத்தது.

'அவள் ஒரு ஆச்சரியமான பெண்ணாய் இருக்க வேண்டும். உண்மையிலேயே அவள் ஒரு தேவதை' என்று அவர் தமக்குள் சொல்லிக்கொண்டார். 'நான் ஏன் சுதந்திரமாய் இருக்கவில்லை? சோனியாவோடு நான் ஏன் அவ்வளவு அவசரமாக நடந்து கொண்டேன்?' அவர் தம்மையறியாமலேயே அவர்கள் இருவரையும் ஒப்பிட்டுப் பார்த்தார். ஒருவளிடம் ஆத்மீக உணர்ச்சி இல்லவேயில்லை; மற்றவளிடம் அது ஏராளமாயிருக்கிறது. தம்மிடம் அந்த உணர்ச்சி இல்லாதபடியால், அதைப் பற்றி மிகுந்த உயர்வாக அவர் மதிப்பிட்டார். தாம் சுதந்திரமாய் இருப்பதாய் இருந்தால் என்ன நடக்கும் என்பதை மனக்கண் முன்பு பார்ப்பதற்கு அவர் முயற்சித்தார். தம்மை திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று தாம் எப்படி அவளிடம் கேட்பாரென்றும், தமது மனைவியாக அவள் எம்மாதிரி விளங்குவாள் என்றும் அவர் நினைத்துப் பார்த்தார். ஆனால், இல்லை; அம்மாதிரி தாம் மனோ ராஜ்யம் செய்யக் கூடாது என்று அவர் மலைப்பு கொண்டார். அவருடைய மனதில் தெளிவான சித்திரம் எதுவும் தோன்ற வில்லை. வெகு காலத்திற்கு முன்பாக சோனியாவோடு வாழ்க்கை நடத்துவது பற்றி அவர் மனோராஜ்யம் செய்திருந்தார். அவையெல்லாம் அவருக்கு தெளிவாகவும், சுலபமாகவும் இருந்தன. ஏனென்றால், அவற்றையெல்லாம் பற்றி அவர் நன்றாக சிந்தித்து முடிவு செய்திருந்தார். அதோடு, சோனியாவைப் பற்றிய எல்லா விஷயங்களையும் அவர் அறிவார். ஆனால், இளவரசி மேரியைப் பற்றி அம்மாதிரி அவர் அறியாதபடியால், அவரால் அதைப் போல ஒரு மனோராஜ்ய சித்திரம் கொள்ளுவதற்கு முடியவில்லை; ஆகவே, அவள் மீது அவர் காதல் மட்டும் கொண்டிருக்கிறார்.

சோனியாவைப் பற்றிய சிந்தனைகளில் விளையாட்டுத் தனமும், மகிழ்ச்சியும் அவருக்குத் தோன்றின. ஆனால், இளவரசி மேரியைப் பற்றிய அவருடைய கனவு, எப்பொழுதும் கஷ்டமானதாகவும், சிறிது பீதியைக் கொடுப்பதாகவும் அவருக்கு இருந்தது.

'அவள் எப்படித்தான் பிரார்த்தனை செய்கிறாள்' என்று அவர் நினைத்தார். 'அவளுடைய முழு ஆத்மாவும், பிரார்த்தனையில் கலந்து நிற்கிறது என்பது தெளிவாய் தெரிகிறது. ஆம், அம்மாதிரி பிரார்த்தனைகள்தான் மலைகளையும் அசைக்கின்றன. அவளுடைய பிரார்த்தனைக்குப் பலன் கிடைக்குமென்பது எனக்கு நிச்சயம். எனக்கு எது தேவையோ, அதற்காக நானும் ஏன் பிரார்த்தனை செய்யக்கூடாது?' என்று திடீரென்று அவர் நினைத்தார். 'எனக்கு என்ன வேண்டும்? சுதந்திரமாய் இருக்க வேண்டும். சோனியாவிடமிருந்து விடுதலை வேண்டும்... அவள் சொல்லுவது சரி' என்று அவர் கவர்னரின் மனைவி சொல்லியவை களை நினைவு கூர்ந்தபோது நினைத்தார்: 'சோனியாவை திருமணம் செய்து கொள்ளுவதால், துன்பத்தைத் தவிர வேறு எதுவும் கிடையாது. அம்மாவுக்கு துக்கம் ஏற்படும்... பண விவகாரங்கள் கஷ்டமாகும்... எல்லாம் ஊழல்கள்... பயங்கரமான ஊழல்கள். தவிரவும், நான் அவள் மீது காதல் கொள்ளவில்லை - நான் காதல் கொள்ளவேண்டும் என்பதில்லை. ஓ, கடவுளே! இந்த பயங்கரமான, தப்ப முடியாத நிலைமையிலிருந்து என்னைக் காப்பாற்று' என்று அவர் சொல்லி, திடீரென்று பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார். 'ஆம், பிரார்த்தனைகள் மலைகளையும் அசைத்து விடும். ஆனால், நம்பிக்கையோடு அதைச் செய்ய வேண்டும். நட்டாஷாவும் நானும் குழந்தைகளாய் இருந்தபோது செய்த மாதிரி செய்யக்கூடாது. இந்த உறை பனியெல்லாம் சர்க்கரையாக மாறிவிட வேண்டுமென்று பிரார்த்தனை செய்துவிட்டு, உடனே வெளியே ஓடிப்போய் அம்மாதிரி மாறிவிட்டதா என்று பார்ப்போம், அம்மாதிரி பிரார்த்தனை அல்ல இது. சின்ன விஷயங்களுக்காக இப்போது நாம் பிரார்த்தனை செய்யவில்லை' என்று அவர் தமது சுங்கானை கீழே வைக்கும்போது நினைத்தார். தமது கைகளைக் கட்டிக்கொண்டு, தெய்வச்சிலைக்கு முன்பாக அமர்ந்தார். இளவரசி மேரியின் நினைவுகளால் உள்ளம் கனிந்த அவர், இதற்கு முன்பாக வெகுகாலமாய் செய்திராத விதத்தில், பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார். அவருடைய கண்களில் கண்ணீர் நிறைந்தது. அவருடைய தொண்டை அடைத்தது. இச்சமயத்தில் சில காகிதங்களோடு லாவ்ருஷ்கா கதவைத் திறந்து கொண்டு அறைக்குள் வந்தான்.

'மடையா! கதவைத் தட்டாமல் ஏன் உள்ளே வந்தாய்?' என்று தமது தோரணையை உடனே மாற்றிக்கொண்டு அவர் கூச்சலிட்டார்.

'கவர்னரிடமிருந்து இவை வந்திருக்கின்றன. ஒரு தூதன் கொண்டு வந்து கொடுத்தான். இதில் உமக்கு ஒரு கடிதமும் இருக்கிறது' என்று லாவ்ருஷ்கா தூக்கக் குரலில் பதில் சொன்னான்.

'நல்லது, ரொம்ப சரி, வந்தனங்கள். நீ போகலாம்.'

நிக்கலஸ் அதிலிருந்த இரண்டு கடிதங்களையும் கையில் எடுத்தார். ஒன்று அவருடைய தாயாரிடமிருந்தும், மற்றொன்று சோனியாவிடமிருந்தும் வந்திருந்தன. கையெழுத்திலிருந்து அவற்றை அறிந்துகொண்டார். முதலில் சோனியாவின் கடிதத்தைத் திறந்தார். அவர் சில வரிகள்தான் வாசித்திருப்பார், அதற்குள்ளாக அவருடைய முகம் வெளிறி, பயத்தினாலும் மகிழ்ச்சியினாலும் அவருடைய கண்கள் விரிந்தன.

'இல்லை, அது சாத்தியமேயில்லை' என்று உரக்கக் கூவினார்.

உட்காருவதற்கு அவரால் முடியவில்லை. அந்த கடிதத்தைக் கையில் வைத்து வாசித்துக்கொண்டே, அந்த அறையில் மேலும் கீழும் நடந்தார்.

அந்தக் கடிதத்தை முதலில் பார்த்தார். பின்னால் வாசித்தார். மறுபடியும் வாசித்தார். அந்த அறையின் மத்தியில் நின்றுகொண்டு, தோள்களை உயர்த்தி, திறந்த வாயோடும், குத்திட்ட கண்களோடும் வெறித்துப் பார்த்து, தமது கைகளை நீட்டினார். கடவுள் தமது குறையை தீர்க்க வேண்டுமென்று தாம் அப்பொழுதுதான் செய்த பிரார்த்தனை உடனே கைக் கூடுவதாய் இருந்தது. ஆனால், அது அசாதாரணமான, எதிர்பாராத நிகழ்ச்சியைப்போல நிக்கலஸுக்கு மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவ்வளவு சீக்கிரமாக அவர் விரும்பிய காரியம் நடைபெறுவதாய் இருப்பதால், கடவுளிடமிருந்து அவ்வளவு துரிதமாக அது வந்திருக்க முடியாதென்றும், தற்செயலாகவே நேர்ந்திருக்கிறதென்றும் நினைத்தார்.

இந்த எதிர்பாராத, ஆனால் முற்றிலும் தானே விரும்பி எழுதிய சோனியாவின் கடிதம் என்று நினைத்த அந்தக் கடிதம், அவர் தப்பிப் போக முடியாமல் கட்டுப்படுத்தி வைக்கப்பட்டிருந்த முடிச்சிலிருந்து நிக்கலஸ் விடுதலை பெறும்படி செய்தது. மாஸ்கோவிலுள்ள ராஸ்டோவ்களின் உடமைகள் எல்லாம் இழந்து போய்விட்டன என்று அவள் எழுதியிருந்தாள். இளவரசி பால்கோன்ஸ்கயாவை நிக்கலஸ் திருமணம் செய்ய வேண்டு மென்று இடைவிடாமல் கோமகள் வற்புறுத்தி வருவதாலும், சமீப

காலமாக அவர் மௌனமாவும் கனிவற்ற விதமாகவும் இருந்து வருவதாலும், அவருடைய வாக்குறுதியிலிருந்து அவரை விடுவித்து, அவரை பூரண சுதந்திரத்தோடு நடக்கும்படி செய்ய வேண்டுமென்று தான் தீர்மானித்திருப்பதாக அந்தக் கடிதத்தில் அவள் எழுதியிருந்தாள்.

'குடும்பத்தில் ஒரு விசாரம் ஏற்படுவதற்கோ, அல்லது அபிப்பிராய பேதம் ஏற்படுவதற்கோ, நான் காரணமாய் இருக்கக்கூடும் என்பதை நினைக்கும்போது, எனக்கு அது மிகுந்த வேதனையைக் கொடுக்கும். ஏனெனில், அந்தக் குடும்பம் எனக்கு எவ்வளவோ நன்மைகளை செய்திருக்கிறது. நான் யார் மீது அன்பு கொள்ளுகிறேனோ, அந்த அன்பெல்லாம் அவர்களுடைய மகிழ்ச்சிக்காகவே ஒழிய, வேறு எந்த விதமான நோக்கமும் என்னுடைய அன்பிற்குக் கிடையாது. ஆகவே, நிக்கலஸ், உம்முடைய வாக்குறுதியிலிருந்து உம்மை நான் விடுவித்து விட்டதாகக் கருதிக் கொள்ளும்படி உம்மை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். தவிரவும், இன்னொரு உறுதியும் உமக்குக் கூற விரும்புகிறேன். எது எப்படியிருந்தாலும், என்னைவிட வேறு யாராலும் அதிகமாய் உம்மை காதலிக்க முடியாத - உமது சோனியா!'

இரண்டு கடிதங்களும் டிரோயிட்ஸாவிலிருந்து எழுதப் பட்டுள்ளன. கோமகள் எழுதியிருந்த இரண்டாவது கடிதத்தில், மாஸ்கோவில் கடைசி தினங்களில் நடந்த விஷயங்களைப் பற்றியும் அவர்களுடைய உடமைகள் எல்லாம் நாசமான விவரங்கள் ஆகியவற்றைப் பற்றியும் எழுதியிருந்தாள். இளவரசர் ஆண்ட்ரூவும் காயமடைந்து, தங்களோடு பிராயாண கூட்டத்தில் உள்ள ஒருவராய் இருக்கிறார் என்றும், அந்த கடிதத்தில் கோமகள் குறிப்பிட்டிருந்தாள். அவருடைய நிலைமை கவலைப்படக் கூடியதாய் இருந்தாலும், தற்சமயம் அதிக நம்பிக்கைக்கு இடமிருப்பதாக டாக்டர்கள் சொல்லுவதாகவும், சோனியாவும் நட்டாஷாவும் அவருக்கு சிசுரூஷை செய்து வருவதாகவும் கோமகள் எழுதியிருந்தாள்.

தம்முடைய தாயாரின் கடிதத்தை எடுத்துக்கொண்டு, இளவரசி மேரியைப் பார்ப்பதற்காக மறுநாள் நிக்கலஸ் சென்றார். நட்டாஷா அவருக்கு சிசுரூஷை செய்து வருவதற்கு அர்த்தம் என்ன என்பதைப் பற்றி, நிக்கலஸோ, அல்லது இளவரசி மேரியோ ஒரு வார்த்தைகூட பேசவில்லை. ஆனால், இந்த கடிதத்தின் மூலம் அவர்களின் பந்துக்களைப் போல அன்னியோன்னியமாக இளவரசியிடம் நிக்கலஸ் பழக ஆரம்பித்தார்.

யாராஸ்லாவ் என்ற இடத்திற்கு இளவரசி மேரி மறுநாள் பிரயாணம் செய்தாள். அவளை வழி அனுப்பிவிட்டு சில தினங்களுக்குப் பின்னால், தமது பட்டாளத்தில் சேருவதற்காக ராஸ்டோவ் அதை விட்டுப் புறப்பட்டார்.



நிக்கலஸின் பிரார்த்தனைக்கு இணங்குவதைப் போல, டிரோயிட்ஸாவிலிருந்து சோனியா எழுதிய கடிதத்திற்கு காரணம் பின்வருமாறு: ஒரு பணக்காரப் பெண்ணை நிக்கலஸ் திருமணம் செய்யவேண்டுமென்று, வெகு காலமாக முதிய கோமகளின் உள்ளத்தில் இருந்த விருப்பமானது, இப்பொழுது வர வர அதிகமாயிற்று; இந்த காரியத்திற்கு சோனியா தான் பிரதான முட்டுக் கட்டையாக இருக்கிறாள் என்பதை அவள் அறிவாள். ஆகவே, கோமகளின் வீட்டில் சோனியாவின் வாழ்க்கை வர வர கடினமாயிற்று. பாகுசாராவாவில் இளவரசி மேரியை சந்தித்ததாக நிக்கலஸிடமிருந்து கடிதம் வந்ததற்குப் பின்பு, இந்த சூழ்நிலை இன்னும் அதிக கடினமாயிற்று. சோனியாவை இழிவு படுத்தி கொடூரமாக குற்றஞ்சாட்டி பேசுவதற்கு சந்தர்ப்பங்கள் கிடைக்கும் போதெல்லாம், கோமகள் விடுவதில்லை.

மாஸ்கோவை விட்டு புறப்படுவதற்கு சில தினங்களுக்கு முன்னால், அந்த பிரயாணத்திற்காக ஏற்பட்டிருந்த பரபரப்புகளுக்கு மத்தியில், சோனியாவை கோமகள் அழைத்தாள். அவளைக் கண்டித்து, அவளிடம் தான் எதிர்பார்க்கும் காரியங்களை செய்யும்படி கோமகள் கேட்கவில்லை; அதற்கு பதிலாக, கண்களில் கண்ணீர் நிறைந்து நிற்க, அந்த குடும்பம் சோனியாவுக்கு செய்த நன்மைகளுக்கு பிரதியாக, அவள் தன்னை தியாகம் செய்து, நிக்கலஸுடன் ஏற்பட்டிருந்த நிச்சயதார்த்தத்தை முறித்து விட வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டாள்.

'எனக்கு நீ இந்த வாக்குறுதியை கொடுக்கிற வரையில், என்னுடைய மனம் அமைதியோடு இருக்காது.'

சோனியா விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். அவள் கண்ணீர் வடித்து, தான் எதை வேண்டுமானாலும் செய்வதாகவும், எதற்கும் தயாராக இருப்பதாகவும் கூறினாள். ஆனால், உண்மையில் எந்த வாக்குறுதியும் கொடுக்கவில்லை. தன்னிடம் கேட்கும் அந்த வாக்குறுதிக்கு இணங்குவதற்கு அவளால் முடியவில்லை. தன்னை இதுவரை வளர்த்துக் காப்பாற்றி வந்த அந்த குடும்பத்திற்காக,

தன்னைத் தியாகம் செய்ய வேண்டும். மற்றவர்களுக்காகத் தன்னைத் தியாகம் செய்துகொள்ளுவது தான் சோனியாவின் சுபாவம். அந்த வீட்டில் அவளுக்குள்ள நிலைமையானது, தன்னுடைய தகுதியை தியாகத்தினால் மட்டுமே காட்ட முடியும் என்று இருந்ததால், அவளுக்கு இம்மாதிரி சுபாவம் ஏற்பட்டது. இம்மாதிரி செய்வதற்கும் அவள் பிரியம் கொண்டாள். ஆனால், அவள் முன்னால் செய்த சுயநலத் தியாக காரியங்களினால், தன்னுடைய மதிப்பு உயர்ந்ததாக மற்றவர்களுக்கும் தனக்கும் தெரியும்படியாய் இருந்தது. அம்மாதிரி அவள் செய்ததற்கு ஒரே ஒரு காரணந்தான். உலகத்தில் வேறு யாரையும்விட, நிக்கலஸை அவள் அதிகமாக நேசித்ததால், அவருடைய தகுதிக்கு ஒத்தவளாக தான் இருக்க வேண்டும் என்பதற்காகவே அம்மாதிரி தியாகங்களைச் செய்தாள். ஆனால், எதற்காக இது வரை அவள் தியாகம் செய்து வந்தாளோ, தன்னுடைய வாழ்க்கையின் முழு நோக்கமும் என்னவென்று அவள் நினைத்து வந்தாளோ, அதையே தியாகம் செய்யும்படி இப்பொழுது அவளிடம் கேட்கிறார்கள். ஆகவே, தன்னை இம்மாதிரி சித்திரவதை செய்வதற்காகவே அவர்கள் வளர்த்து வந்ததாக, தன்னுடைய நன்மையாளர்கள் மீது முதல் தடவையாக அவள் மனக்கசப்பு கொண்டாள்: நட்டாஷாவுக்கு இம்மாதிரி நிலைமை எதுவும் ஏற்பட்டதில்லையாகையால், அவளைக் கண்டு சோனியா பொறாமை கொண்டாள். தன்னைத் தியாகம் செய்யும்படி நட்டாஷாவுக்கு எப்பொழுதும் ஏற்பட்டதில்லை என்றும், அவளுக்காக மற்றவர்களையே தியாகம் செய்யும்படி அவள் செய்து வந்திருக்கிறாள் என்றும், என்றாலும் எல்லாருக்கும் நட்டாஷா கண்மணியாக இருக்கிறாள் என்றும் அவள் நினைத்தபோது, அவளுக்குப் பொறாமை ஏற்பட்டது. நிக்கலஸ் மீது அவள் கொண்டிருந்த பரிசுத்தமான, அமைதியான காதலிலிருந்து, முதல் தடவையாக ஆசையுணர்ச்சி வளர ஆரம்பித்திருப்பதை அவள் உணர்ந்தாள். அந்த உணர்ச்சியானது கொள்கையையும், மதத்தையும், அல்லது தர்மத்தையும் விட பலமானதாய் இருந்தது. இந்த உணர்ச்சிக்கு அடிமைப்பட்ட சோனியா, ஒருவருடைய தயவினால் வாழ்க்கையை நடத்தவேண்டி இருந்தபடியால், ரகசியமான குணத்தை தானாக பெற்றிருந்த சோனியா, பொதுவான வார்த்தைகளில் தெளிவற்ற விதமாக கோமகளுக்கு பதில் சொல்லிய பின்பு, அவளை சந்திக்காமல் தவிர்த்து வந்தாள். நிக்கலஸை சந்திக்கிற வரையில் பொறுத்திருக்க வேண்டும் என்று அவள் தீர்மானித்தாள்; அவருடைய வாக்குறுதியிலிருந்து அவரை விடுவிப்பதற்காக அல்ல; நிரந்தரமாக தன்னோடு அவரை இணைப்பதற்காகவே சந்திக்க விரும்பினாள்.

மாஸ்கோவில் கடைசி நாட்களில் தோன்றிய பரபரப்பும் பீதியும் சோனியாவை அமுக்கி வந்த வியாகூல நினைப்புகளை நசுக்கி விட்டன. தனக்கு ஏற்பட்ட சுறுசுறுப்பான வேலைகளினால் அந்த நினைப்புகளிலிருந்து தப்புவதற்கு வழி ஏற்பட்டதைக் கண்டு அவள் மகிழ்ச்சி கொண்டாள். இளவரசர் ஆண்ட்ரூ தங்களுடைய வீட்டில் இருப்பதாக அவள் கேள்விப்பட்டதும், அவருக்காகவும், நட்டாஷாவுக்காகவும் அவள் உண்மையான இரக்கம் கொண்டிருந்த போதிலும் அவளுக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்பட்டது. அதாவது, நிக்கலஸை விட்டு தான் பிரிந்திருக்க கடவுள் விரும்பவில்லை என்ற ஒரு மூட நம்பிக்கையும், மகிழ்ச்சியும் கொண்ட உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. இளவரசர் ஆண்ட்ரூவைத் தவிர வேறு யாரையும் நட்டாஷா காதலிக்கவில்லை என்பதையும், அவரைக் காதலிப்பதை அவள் விடமாட்டாள் என்பதையும் சோனியா அறிவாள். அம்மாதிரியான ஒரு பயங்கரமான சூழ்நிலையில் அவர்கள் மீண்டும் ஒன்று கூடும்படி ஏற்பட்டிருக்கிறபடியால், அவர்கள் மறுபடியும் ஒருவர் மீது ஒருவர் காதல் கொள்ளுவார்கள் என்பதையும் அவள் அறிவாள். அப்படியானால், இளவரசி மேரியை நிக்கலஸ் திருமணம் செய்ய முடியாது. ஏனெனில், அது மதச் சட்டத்திற்கு விரோதமாய் இருக்கும். மாஸ்கோவிலிருந்த கடைசி நாட்களிலும் அவர்களுடைய பிரயாணத்தின் ஆரம்ப நாட்களிலும், எத்தனையோ பயங்கரங்கள் ஏற்பட்டிருந்தும்கூட, கடவுள் தன்னுடைய சொந்த விவகாரங்களில் தலையிட்டு நன்மை செய்வதாக சோனியாவுக்கு ஏற்பட்டிருந்த இந்த உணர்ச்சியானது, அவளுக்கு மகிழ்ச்சியை கொடுத்தது.

டிரோயிட்ஸா வந்ததும், அங்குள்ள சன்னியாசி மடத்தில் ராஸ்டோவ்கள் ஒரு நாள் முழுவதும் தங்கினார்கள்.

அங்கே அவர்களுக்கு மூன்று பெரிய அறைகளை கொடுத்தார்கள். ஒரு அறையில் இளவரசர் ஆண்ட்ரூ தங்கினார்; அவர் அன்று மிகுந்த சௌக்கியமடைந்தவராகக் காணப்பட்டார். அவருடன் நட்டாஷாவும் உட்கார்ந்திருந்தாள். அடுத்த அறையில் அந்த மடத்தின் பிரதான குருவோடு, கோமகனும் கோமகளும் மரியாதையோடு சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். அந்த பிரதான குரு, தமக்கு முன்னால் பழக்கமானவர்கள் என்ற முறையிலும், அந்த மடத்தின் நன்மையாளர்கள் என்ற முறையிலும் அவர்களைப் பார்க்க வந்திருந்தார். சோனியாவும் அங்கே இருந்தாள். ஆனால், அடுத்த அறையில் இளவரசர் ஆண்ட்ரூவும் நட்டாஷாவும் என்ன பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிவதற்குத் துடித்துக் கொண்டிருந்தாள். அவர்கள் பேசும் குரல் வாசல் வழியாக

அவளுக்குக் கேட்டுக்கொண்டிருந்தது. அந்த வாசல் கதவை திறந்து கொண்டு நட்டாஷா வெளியே வந்தாள். அவளுடைய முகம் பரபரப்படைந்திருந்தது. அங்கிருந்த குருவை அவள் பார்க்கவில்லை. அவளை வரவேற்பதற்காக அவர் எழுந்து, தம்முடைய அகலமான கைச்சட்டையை மேலே மடக்கி விட்டார். ஆனால், சோனியாவிடம் நட்டாஷா சென்று, அவளுடைய கையை பற்றினாள்.

'நட்டாஷா, இது என்ன இது? இங்கே வா' என்று கோமகள் கூறினாள்.

ஆசீர்வாதங்களை பெறுவதற்காக, நட்டாஷா அந்த சன்னியாசியிடம் சென்றாள். கடவுளிடமும், அவருடைய மகாத்மாவிடமும் (அந்த சன்னியாசி மடத்தை ஸ்தாபித்த மகாத்மா செர்க்கியஸைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார்) அவளுக்கு அவசியம் நேரும்போது உதவி பெறுவதற்காக பிரார்த்தனை செய்ய வேண்டுமென்று அந்த சன்னியாசி உபதேசம் செய்தார்.

அந்த சன்னியாசி அங்கிருந்து விடைபெற்று சென்றதும், நட்டாஷா தனது தோழியின் கையை பற்றி, யாருமே இல்லாத அடுத்த அறைக்குச் சென்றாள்.

'சோனியா, அவர் பிழைப்பாரா?' என்று அவள் கேட்டாள். 'சோனியா, நான் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறேன், எவ்வளவு மனச்சோர்வு கொண்டிருக்கிறேன் தெரியுமா?... சோனியா, எனது அன்பே, ஒவ்வொன்றும் எப்படி இருக்கவேண்டுமோ, அம்மாதிரியே இருக்கிறது. அவர் மட்டும் பிழைத்து விடுவாரானால்! அவர் பிழைக்க முடியாது. ஏனென்றால்... ஏனென்றால்...' என்று நட்டாஷா சொல்லி, விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள்.

'ஆம், எனக்குத் தெரியும். கடவுளுக்கு நன்றி. அவர் பிழைத்துக்கொள்வார்' என்று சோனியா முணுமுணுத்தாள்.

தன்னுடைய தோழியின் பயத்தோடும், துக்கத்தோடும், தான் ஒருவரிடமும் சொல்லாமல் வைத்திருக்கும் தன்னுடைய சொந்த உணர்ச்சிகளோடும் சோனியா இருந்தபடியால், அவளுடைய தோழியின் பரபரப்பில் அவள் எதுவும் குறைந்தவளாய் இல்லை. விம்மிக்கொண்டு நட்டாஷாவை முத்தமிட்டு சமாதானம் செய்தாள். 'அவர் மட்டும் பிழைக்க முடியுமானால்' என்று அவள் சிந்தித்தாள். அழுத பின்பும் பேசிய பின்பும் கண்ணீரை துடைத்துக் கொண்டு, இரு சிநேகிதிகளும் இளவரசர் ஆண்ட்ரூ இருந்த அறையின் வாசலுக்குப் போனார்கள். அங்கே ஜாக்கிரதையோடு நட்டாஷா

கதவைத் திறந்து உள்ளே பார்த்தாள். பாதித் திறந்த கதவிற்குப் பக்கத்தில், அவளுக்குப் பின்னால் சோனியா நின்று கொண்டிருந்தாள்.

இளவரசர் ஆண்ட்ரூ மூன்று தலையணைகள் மீது சாய்ந்து உயரமாய் படுத்திருந்தார். அவருடைய வெளிறிய முகம் அமைதியாக இருந்தது. அவருடைய கண்கள் மூடியிருந்தன. அவருடைய சுவாசம் ஒழுங்காய் வந்து கொண்டிருந்தது.

'ஓ, நட்டாஷா' என்று சோனியா திடீரென்று கூச்சலிட்டு, தனது தோழியின் கையை பற்றி, அந்த வாசலிலிருந்து பின் வாங்கினாள்.

'என்ன? என்ன அது?' என்று நட்டாஷா கேட்டாள்.

'அது தான், அது தான்...' என்று சோனியா சொன்னாள். அவளுடைய முகம் வெள்ளையாய் இருந்தது. உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன.

மெதுவாக கதவை அடைத்து விட்டு, சோனியா என்ன சொல்லுகிறாள் என்பதை தெரிந்துகொள்ள முடியாமல், சோனியாவோடு ஜன்னலுக்குப் பக்கமாக நட்டாஷா சென்றாள்.

'உனக்கு ஞாபகம் இருக்கிறதா?' என்று ஒரு கவலையும் பீதியும் கொண்ட தோற்றத்தோடு சோனியா கேட்டாள். 'உனக்காக கிறிஸ்மஸ் சமயத்தில் ஆட்ராட்னோவில் நான் கண்ணாடியில் பார்த்தது உனக்கு நினைவு இருக்கிறதா? நான் என்ன கண்டேன் என்பது உனக்கு ஞாபகம் இருக்கிறதா?'

'ஆம், ஆம்' என்று நட்டாஷா கூறி தனது கண்களை விரியத்திறந்தாள். இளவரசர் ஆண்ட்ரூ படுத்திருந்ததைப் பார்த்ததாக ஏதோ சோனியா சொன்னாள் என்பது அவளுக்கு லேசாக ஞாபகத்திற்கு வந்தது.

'உனக்கு ஞாபகமிருக்கிறதா?' என்று சோனியா மேலும் கேட்டாள்.

'நான் அப்பொழுது அதைப் பார்த்து உன்னிடமும், துனியாஷாவிடமும், மற்றும் ஒவ்வொருவரிடமும் சொன்னேன். அவர் ஒரு படுக்கையில் படுத்திருந்ததை நான் கண்டேன்' என்று அவள் சொல்லும்போது, ஒவ்வொரு விவரத்திற்கும் கையை ஆட்டி விரலை உயர்த்தி பேசிக்கொண்டிருந்தாள். 'அவளுடைய கண்கள் மூடியிருந்தன. இதே மாதிரி ஒரு சிவப்பு நிற மெத்தையினால் மூடப்பட்டிருந்தார். அவருடைய கைகள் மடக்கி வைக்கப் பட்டிருந்தன' என்று அவள் சொன்னாள். இப்பொழுது அவள் பார்த்த ஒவ்வொரு விவரமும் அவள் கண்ணாடியில் பார்த்தவை களைப்போலவே சரியாக இருப்பதாக அவள் நம்பிக்கை கொண்டாள்.

உண்மையில் அவள் எதையுமே கண்ணாடியில் பார்க்கவில்லை. அவளுடைய மனதில் அச்சமயம் அவளுக்குத் தோன்றியதையே அவள் சொன்னாள். அவள் மனோராஜ்யம் செய்த அந்த விஷயங்கள், உண்மையாக நடந்தவைகளைப்போல, மற்ற பழைய நினைப்புகளைப் போலவே அவளுக்கு மனதில் இப்பொழுது தோன்றின. அப்பொழுது அவள் கூறியதை மட்டும், அதாவது அவர் அவளைப் பார்க்க திரும்பினார் என்றும், புன்னகை காட்டினார் என்றும், ஏதோ சிவப்பான ஒன்றினால் அவர் மூடப்பட்டிருக்கிறார் என்றும் அவள் கூறியதை மட்டும் அவள் ஞாபகத்தில் வைத்திருந்தாள் என்பதில்லை; அவர் சிவப்பு மெத்தையினால் மூடப்பட்டிருந்தார் என்றும் அவருடைய கண்கள் மூடியிருந்தன என்றும், அவள் அப்பொழுது பார்த்து சொல்லியதாக இப்பொழுது பூரணமாக நம்பினாள்.

'ஆம், ஆம். அது உண்மையில் சிவப்பு நிறந்தான்' என்று, அந்த சிவப்பு என்ற வார்த்தையை உபயோகித்ததை இப்பொழுது நினைவு கூர்பவளைப் போல நட்டாஷா கூச்சலிட்டாள். அந்த அதிசயமான, அசாதாரணமான ஜோஸியம் பலிப்பதைப் போல இதில் கண்டாள்.

'ஆனால், அதற்கு என்ன அர்த்தம்?' என்று சிந்தனையோடு கேட்டாள்.

'ஓ, எனக்குத் தெரியாது. இவையெல்லாம் மிகுந்த அதிசயமாய் இருக்கின்றன' என்று சோனியா தனது தலையை கைகளால் பற்றிக் கொண்டு கூறினாள்.

சில நிமிஷங்களுக்குப் பின்னால், இளவரசர் ஆண்ட்ரூ மணி அடித்தார். நட்டாஷா அவரிடம் போனாள். மிகுந்த பரபரப்பும் அனுதாபமும் ஏற்பட்டிருப்பது போல சோனியா உணர்ந்திருந்தால் ஜன்னலுக்குப் பக்கத்தில் நின்று அந்த விசித்திரமான நினைப்பு களைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தாள்.

ராணுவத்தில் உள்ளவர்களுக்கு கடிதங்கள் அனுப்புவதற்கு அன்று ஒரு வாய்ப்பு கிடைத்தது. ஆகவே, தனது குமாரருக்கு கோமகள் கடிதம் எழுதினாள்.

'சோனியா' என்று, அந்தப் பக்கம் போய்க்கொண்டிருந்த தனது மருமகளைக் கண்டதும், கடிதத்திலிருந்த தனது பார்வையை உயர்த்தி கோமகள் அழைத்தாள். 'சோனியா, நீ நிக்கலஸுக்கு கடிதம் எழுத மாட்டாயா?' அவளுடைய தொனி மிருதுவாகவும் நடுக்கத்துடனும் காணப்பட்டது. அவளுடைய களைப்படைந்த கண்கள், அவளுடைய கண்ணாடிகளுக்கு மேலாகப் பார்த்தன. அந்த வார்த்தைகளினால் கோமகள் என்ன விரும்புகிறாள் என்பதை

சோனியா அறிந்துகொண்டாள். அந்த கண்கள் இரங்கிக் கேட்டன; அம்மாதிரி கேட்பதற்காக வெட்கம் அடைவது போல் காணப்பட்டன; முடியாது என்ற மறுப்பு வந்து விடுமோ என்று பீதியுற்று காணப்பட்டன; அம்மாதிரி மறுப்பு வந்து விட்டால், அதற்காக தாட்சண்யமற்ற வெறுப்பைக் காட்டுவதற்கு அவை தயாராக இருப்பவை போன்று காணப்பட்டன.

சோனியா கோமகளிடம் சென்று, முழங்கால் படியிட்டு அவள் கைகளை முத்தமிட்டாள்.

'ஆம், அம்மா, நான் எழுதுகிறேன்' என்று அவள் சொன்னாள்.

அன்று முழுவதும் நடந்தவைகளினால், முக்கியமாக அவளுக்குத் தோன்றிய அந்தக் காட்சி அதிசயமான வழியில் நிறைவேறி வருவதாகத் தோன்றியதினால், சோனியா கனிவும் பரபரப்பும் கொண்டிருந்தாள். இளவரசர் ஆண்ட்ரூவுடன் நட்டாஷா மீண்டும் உறவுகொள்ள ஆரம்பித்திருப்பதானது, இளவரசி மேரியை நிக்கலஸ் திருமணம் செய்ய முடியாமல் தடுத்துவிடும் என்பதை அவள் அறிவாள்; ஆகவே, அவள் வாழவும், வாழ விரும்பியும் வந்த அந்த சுயநலத் தியாக உணர்ச்சியானது, மீண்டும் திரும்பி தன்னிடம் வருவதை அவள் மகிழ்ச்சியோடு உணர்ந்தாள். எனவே, ஒரு பெரிய பெருந்தன்மையான செய்கையை செய்யப்போவதைப் போன்ற மகிழ்ச்சியான உணர்ச்சியோடு, அவள் அந்த உள்ளத்தைத் தொடும் கடிதத்தை எழுதினாள். அந்தக் கடிதத்தை எழுதும் போது, பல தடவைகள் அவளுடைய வெல்வட்டைப் போன்ற கருப்புக் கண்களை கண்ணீர் மறைத்தது. அந்தக் கடிதந்தான் நிக்கலஸை அவ்வளவு தூரம் மலைக்கும்படி செய்தது.

# 12

## 9

பீயர் கைது செய்த அதிகாரிகளும், சிப்பாய்களும் அவர்மீது விரோத பாவத்தோடு இருந்தாலும், மரியாதையாக அவரை நடத்தினார்கள். அவரைக் காப்பாளர் விடுதியில் வைத்திருந்தார்கள். அவர் யார் என்பதை அவர்கள் அறிய முடியாமல், ஒருவேளை மிகுந்த முக்கியமான ஒருவராய் இருக்கலாமோ என்ற சந்தேகத்தில் அவர்கள் இருந்தபடியால், அவரிடம் எம்மாதிரி நடந்து கொள்ளுவது என்று புரியாமல் இருந்தார்கள். ஆனால், நேருக்கு நேராக அவருடன் சண்டை போடும்படி ஏற்பட்டதால், அவர்கள் விரோத பாவத்துடன் இருந்தார்கள்.

ஆனால், அன்றைய பாராக்காரர்கள் மறுநாள் காலையில் மாறிய படியால், புதிதாக வரும் பாராக்காரர்களான அதிகாரிகளுக்கும், சிப்பாய்களுக்கும் தம்மைப் பற்றிய எவ்விதமான சிரத்தையும் இருக்காதென்று பீயர் நினைத்தார். இந்த பிரம்மாண்டமான பருத்த மனிதர், ஒரு விவசாய கோட் அணிந்துகொண்டு, கொள்ளைக் காரனோடும் ரோந்துக்காரர்களோடும் மிக தைரியத்தோடு போராடியவர் என்பதையும், ஒரு குழந்தையை காப்பாற்றுவதற்காக அவ்வளவு பவித்திரமாக பேசியவர் என்பதையும், உண்மையில் அந்தப் புதிய பாராக்காரர்கள் அறிந்துகொள்ளவில்லை. (அவருடைய கைதி இலக்கம் 17.) கைதியாக்கப்பட்ட ஒரு ருஷ்யர் என்றும், 17 - ம் நெம்பர் கைதி என்றும், மேலிடத்து உத்தரவுகளின் படி ஏதோ காரணத்திற்காக கைது செய்யப்பட்டு அங்கு வைக்கப்பட்டிருக்கிறார் என்றும் மட்டுமே அவர்கள் நினைத்தார்கள். அவர்களுக்குப் புதிதாக பீயரைப் பற்றி ஏதாவது குறிப்பிடத்தக்க விதமாகத் தோன்றி இருக்குமானால், அவை இவை தான். அவருடைய கலங்காத ஒருமுகமான சிந்தனா சக்தியையும், புத்திசாலித் தனத்தையும், அவர் பிரஞ்சு மொழியைப் பேசுகிற விதத்தையும் கண்டு அவர்கள் ஆச்சரியம் கொண்டார்கள். அவர் பேசிய பிரஞ்சு மொழி பிரமாதமாக இருக்கிறதென்று நினைத்தார்கள். இப்படியெல்லாம் இருந்தபோதிலும், அவரை மற்ற கைது செய்யப் பட்டவர்களோடுதான் அன்று சேர்த்து வைத்தார்கள். அவர் முன்னால் இருந்த் தனி அறையானது ஒரு அதிகாரிக்கு வேண்டியதாய் இருந்தபடியால், இம்மாதிரி ஏற்பாடு செய்தார்கள்.

பீயரோடு சேர்த்து வைக்கப்பட்டுள்ள ருஷ்யர்கள் எல்லாரும் கீழ்த்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள். பீயர் ஒரு பிரபு என்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள். ஆகவே, அவருடைய சகவாசத்தை அவர்கள் தவிர்த்தார்கள். முக்கியமாக அவர் பிரஞ்சு மொழியைப் பேசியதால், அவரிடமிருந்து விலகி நின்றார்கள். தம்மைப் பற்றி அவர்கள் கேலியாகப் பேசுவதைக் கேட்டு பீயர் மனம் வருந்தினார்.

அந்த கைதிகள் எல்லாரையும் (ஒருவேளை அவரையும் சேர்த்து) நெருப்பு வைத்ததாக குற்றஞ் சாட்டி விசாரணை செய்யப் போவதாக, அன்று மாலை பீயர் கேள்விப் பட்டார். மூன்றாவது நாளன்று, மற்றவர்களோடு அவரையும் ஒரு வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே தான் வெள்ளை மீசையுள்ள ஒரு பிரஞ்சு ஜெனரல், இரண்டு கர்னல்களோடும், மற்ற பிரஞ்சுக்காரர்களோடும் இருந்தார். அவர்களுடைய சட்டைக் கைகளின் விளிம்பில் அலங்காரமான பட்டிகள் தைக்கப்பட்டிருந்தன. தெளிவான,

துல்லியமான முறையில் கேள்விகள் கேட்டார்கள். கைதிகளிடம் அம்மாதிரி கேட்பதுதான் வழக்கம். மனித குணத்தில் உள்ள பலவீனங்களுக்கு அப்பாற்பட்டதாக அந்தக் கேள்விகள் கருதப்பட்டன. மற்றவர்களைப் போலவே பீயரையும் அவர் யார் என்றும், அவர் எங்கிருந்தார் என்றும், அவருடைய நோக்கம் என்னவென்றும் கேள்விகள் கேட்டார்கள்.

இம்மாதிரி விசாரணையில், பொதுவாக கேட்கப்படுவதைப் போல, முக்கியமான விஷயத்தின் சாரத்தை விட்டு விட்டு, அந்த சாரம் வெளியே தெரிவதற்கு சாத்தியமில்லாதபடி செய்து விடக்கூடிய கேள்விகளையே கேட்பார்கள். அவர்கள் எம்மாதிரியான பதில்களை குற்றஞ் சாட்டப்பட்டவர்களிடமிருந்து எதிர் பார்க்கிறார்களோ, அவர்களைத் தண்டிப்பதற்கு எம்மாதிரி பதில்கள் வேண்டும் என்று நினைக்கிறார்களோ, அவற்றைப் பெறுவதற்கான முறையிலேயே அவர்கள் கேள்விகள் கேட்பார்கள். அந்த நோக்கத்திற்கு எதிராக பீயர் ஏதாவது சொல்ல ஆரம்பித்தால், அவருடைய பதில்கள் குறிக்கப்படாமல் விட்டுவிடப்படும். குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் எம்மாதிரி அச்சமயத்தில் உணர்வார்களோ, அதே மாதிரி பீயரும் உணர்ந்தார்; அம்மாதிரி கேள்விகளை அவரிடம் கேட்பதற்கு என்ன காரணம் என்று தெரியாமல் குழம்பினார். எதோ ஒரு விதமான மரியாதைக்காகத்தான் இம்மாதிரியான விசாரணைகளை நடத்துகிறார்கள் என்று பீயர் நினைத்தார். அங்கே விசாரணைக்கு அமர்ந்திருப்பவர்களின் கையில் தான் அவர் இருக்கிறார் என்றும், பலாத்காரத்தினால் தான் அவரை அங்கே கொண்டு வந்திருக்கிறார்கள் என்றும், அந்த பலாத்காரந்தான் அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதிலை பெறக்கூடிய உரிமையை அவர்களுக்குக் கொடுத்திருக்கிறது என்றும், அந்த விசாரணை யெல்லாம் அவரை குற்றவாளியென்று தீர்மானிப்பதற்கான ஒரே நோக்கத்தோடதான் நடக்கின்றனவென்றும் அவர் அறிந்து கொண்டார். ஆகவே, அவர்களுக்கு அவரை குற்றவாளியென்று தீர்மானிக்க விருப்பம் இருந்தபடியால், அதற்கு வேண்டிய அதிகாரம் அவர்களிடம் இருந்தபடியால், இம்மாதிரியான விசாரணையெல்லாம் அவசியமே இல்லையென்று தோன்றியது. அவர் என்ன மாதிரி பதில் சொன்னாலும், அந்த பதில் அவரை தண்டிப்பதிலேயே வந்து முடியும் என்பது தெளிவாய் தெரிந்தது. அவரை கைது செய்யும் பொழுது அவர் என்ன செய்து கொண்டிருந்தார் என்று அவரிடம் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. நெருப்பிலிருந்து ஒரு குழந்தையை காப்பாற்றி அதன்

பெற்றோர்களிடம் கொடுத்துக் கொண்டிருந்தேன் என்று துக்ககரமான முறையில் பீயர் பதில் சொன்னார். அவர் அந்தக் கொள்ளைக்காரனிடம் ஏன் சண்டை போட்டார் என்று கேள்வி கேட்கப்பட்டது. தாம் ஒரு பெண்ணை காப்பாற்ற முயற்சித்ததாகவும், அவமானப்படுத்தப்படும் ஒரு பெண்ணை காப்பாற்ற வேண்டியது ஒவ்வொரு மனிதனின் கடமையென்றும் அவர் சொல்லி வந்தபோது அவரை இடைமறித்தார்கள். ஏனெனில், கேட்கப்பட்ட கேள்விக்கு அந்த பதில்கள் பொருத்தமாய் இல்லை என்று சொன்னார்கள். எரிந்துகொண்டிருந்த ஒரு வீட்டின் முற்றத்தில் அவரை பார்த்ததாக சில சாட்சிகள் சொன்னார்கள். அங்கே எதற்காக பீயர் போனார் என்று கேட்டார்கள். மாஸ்கோவில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப் பார்த்து வருவதற்காகவே அவர் வெளியே புறப்பட்டதாகக் கூறினார். மீண்டும் அவரை அவர்கள் இடைமறித்தார்கள். எங்கே அவர் போனார் என்று அவர்கள் கேட்கவில்லையென்றும், தீப்பற்றி எரியும் வீட்டிற்கு முன்னால் அவர் ஏன் நின்றார் என்பதைப் பற்றியே கேட்பதாகவும் கூறினார்கள். மீண்டும் அவர் யார் என்று முதலில் கேட்ட கேள்வியைக் கேட்டார்கள். அதற்கு பதில் சொல்ல பீயர் முன்னால் மறுத்ததைப் போலவே இப்பொழுதும் மறுத்து விட்டார்.

'அதை எழுதிக்கொள்ளுங்கள். அது ரொம்ப மோசமானது... அது ரொம்ப மோசமானது' என்று வெள்ளை மீசையுடனும், சிவந்த முகத்துடனும் இருந்த அந்த ஜெனரல் கண்டிப்போடு கூறினார்.

நான்காவது நாளன்று ஜுபாவ்ஸ்கி கொத்தளத்தில் தீப்பற்ற ஆரம்பித்தது.

பீயரையும், மற்றும் 13 பேர்களையும், கிரிமியன் பாலத்திற்குப் பக்கத்தில் உள்ள ஒரு வியாபாரியின் வீட்டைச் சேர்ந்த வண்டி கொட்டகைக்கு அழைத்துச் சென்றார்கள். போகிற வழியில் தெருக்களில் புகையால் பீயருக்கு மூச்சு முட்டியது. மாஸ்கோ முழுவதும் புகை கவிந்திருப்பது போல பீயருக்குத் தோன்றியது. எல்லா பக்கங்களிலும் நெருப்பு எரிவது காணப்பட்டது. அச்சமயத்தில் மாஸ்கோ நெருப்பு பற்றி எரியும் முக்கியத்துவத்தை அவரால் உணர முடியவில்லை. ஆகவே, பீதியோடு அந்த நெருப்புகளை நோக்கினார்.

அந்த கிரிமியன் பாலத்திற்கு பக்கத்திலிருந்து வண்டிக் கொட்டகையில் நாலு நாட்கள் இருந்தார். அச்சமயத்தில் அங்கே பிரஞ்சு சிப்பாய்கள் பேசிக்கொண்டதிலிருந்து, அங்கு அடைபட்டிருப்பவர்கள் எல்லாரும் மார்ஷலின் தீர்ப்பை

எதிர்பார்த்திருப்பதாகவும், எப்பொழுது வேண்டுமானாலும் அது வருமென்று அவர் அறிந்தார். அந்த மார்ஷல் என்பவர் யார் என்பதை, சிப்பாய்களிடமிருந்து அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. அந்த மார்ஷல் மேலிடத்து, அதிசயமான சக்திக்கு பிரதிநிதியாக இருக்கிறார் என்று தோன்றியது.

செப்டெம்பர் மாதம் 8-ந் தேதிக்கு முன்பாக, அதாவது இரண்டாவது விசாரணைக்காக கொண்டு போவதற்கு முன்பாக இருந்த அந்த நாட்கள்தான், பீயருக்கு மிக மிக கஷ்டமாய் இருந்தன.



செப்டெம்பர் 8-ந் தேதியன்று ஒரு அதிகாரி - அங்கிருந்த பாராக்காரர்கள் அவருக்குக் காட்டிய மரியாதையிலிருந்து, அவர் மிக முக்கியமான ஒருவர் என்று தோன்றியது - கைதிகள் வைக்கப்பட்டிருந்த அந்த வண்டி கொட்டகைக்குள் வந்தார். அந்த அதிகாரி, சேனாதிபதியின் தலைமை செயலகத்தைச் சேர்ந்த ஒருவராய் இருக்கலாமென்று தோன்றியது. அவர் கையில் ஒரு காகிதம் வைத்துக் கொண்டிருந்தார். அங்கிருந்த எல்லா ருஷ்யர்களையும் பெயர் சொல்லி அவர் அழைத்தார். 'பெயரை சொல்லாத மனிதர்' என்று பீயரை குறிப்பிட்டு அழைத்தார். அந்த கைதிகளை அலட்சியமாகவும் சிரத்தை இல்லாமலும் அவர் பார்த்து, அவர்களை மார்ஷலிடம் அழைத்துச் செல்லும் முன்பாக, நல்ல உடைகளை அணிவித்து சுத்தமாக அழைத்துச் செல்லும்படி அவர் உத்தரவிட்டார். ஒரு மனி நேரத்திற்குப் பின்னால், சிப்பாய்களின் ஒரு கூட்டம் அங்கே வந்து பீயரையும், அவருடன் இருந்த 13 பேர்களையும், விர்ஜின் பீல்டு என்ற இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். கால நிலை நன்றாய் இருந்தது. மழைக்கப்புறம் வெயில் அடித்துக்கொண்டிந்தது. காற்று அசாதாரணமாக தெளிவாய் இருந்தது. ஜுபாவ்ஸ்கி கொத்தளத்தில் இருந்த காப்பாளர் விடுதியிலிருந்து பீயரை கொண்டு போனபோது, புகைக் கூட்டம் தணிந்து சூழ்ந்திருந்ததைப் போல அன்று இல்லை. அந்த புகைக் கூட்டமெல்லாம் அந்த தெளிவான காற்றில் சுருளை சுருளையாக மேலே சென்றுவிட்டன. நெருப்பு ஜுவாலைகளும் இப்பொழுது காணப்படவில்லை. ஆனால், புகை மட்டும் எல்லாம் பக்கங்களிலிருந்தும் மேலே கிளம்பிக்கொண்டிருந்தது. பீயர் பார்க்க முடிகிற வரையில் மாஸ்கோ முழ்வதும் எரிந்து கருகிப் போனதாக காணப்பட்டது. எல்லா பக்கங்களிலும் எரிந்து சாம்பலான வெட்ட

வெளிகள் காணப்பட்டன. வீட்டிலுள்ள அடுப்புகளும், புகை போக்கிகளும் மட்டுமே நின்றுகொண்டிருந்தன. சில இடங்களில் செங்கல் சுவர்கள் தீயினால் கறுப்படைந்து நின்றுகொண்டிருந்தன. அந்தப் பாழடைந்த இடங்களைப் பீயர் பார்த்தார். ஆனால், அவையெல்லாம் எந்தப் பகுதியைச் சேர்ந்தவை என்பதை அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. இங்கேயும் அங்கேயும் எரிந்து கருகாத சில மாதா கோயில்களை அவர் பார்த்தார். தீயினால் அழியாமல் நின்று கொண்டிருந்த கிரெம்லின், தூரத்தில் வெள்ளையாக அதன் கோபுரங்களோடு தோன்றிக்கொண்டிருந்தது. மகா பெரிய ஐவானுடைய மணிக் கோபுரமும் தூரத்தில் தெரிந்தது. கன்னி மாதாவின் புதிய சன்னியாசினி மடத்தின் விதானங்கள் பிரகாசமாக விளங்கிக்கொண்டிருந்தன. அதில் அடிபடும் மணிகளின் ஓசை தெளிவாகக் கேட்டுக்கொண்டிருந்தது. அந்த மணியோசைகளிலிந்து அன்று ஞாயிற்றுக்கிழமை என்பதையும், கன்னி மாதாவுக்கு அன்று ஜனனத் திருநாள் என்பதையும் அவர் அறிந்து கெண்டார். ஆனால், இந்த உற்சவத்தைக் கொண்டாடு வதற்கு ஒருவரையும் அங்கே காணவில்லை. எல்லாப் பக்கங்களிலும் எரிந்து கருகிய பாழ்பட்டவைகளே காணப்பட்டன. தெருக்களில் காணப்பட்ட ஒன்றிரண்டு ருஷ்யர்கள் கூட, கிழிந்த ஆடைகளை அணிந்து கொண்டு பீதியுள்ளவர்களாகத் தோன்றினார்கள். பிரஞ்சுக்காரர்களைப் பார்த்தபோது அவர்கள் ஒளிந்துகொள்ள முயற்சித்தார்கள். ருஷ்யாவின் உறைவிடம் பாழ்பட்டு நாசமாக்கப்பட்டு விட்டது என்பது தெளிவான விஷயம். நாசமாக்கப்பட்ட அந்த ருஷ்யாவின் வாழ்க்கை முறையின் மீது, அதற்கு முற்றும் மாறான பிரஞ்சுக்காரர்களின் முறையானது பலமாய் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாக, பீயர் தம்மை அறியாமலேயே உணர்ந்தார். தம்மையும் மற்ற குற்றவாளிகளையும் அழைத்துச் செல்லும் அந்த சிப்பாய்களின் சந்தோஷமான, உற்சாகமான முறையிலும், ஒழுங்கான வரிசையில் நடந்து செல்லும் அவர்களது பார்வைகளிலும் அவர் இதைக் கண்டார். அவர்கள் போகிற வழியில் ஒரு சிப்பாயினால் ஓட்டிச் செல்லப்படும் ஒரு வண்டியை அவர்கள் சந்தித்தபோது, அந்த வண்டிக்குள்ளிருந்த முக்கியமான பிரஞ்சு அதிகாரியின் பார்வைகளிலும் அவர் இதை உணர்ந்தார். அந்த இடத்தின் இடது பக்கத்தில் அவர் கேட்டுக் கொண்டிருந்த உற்சாகமான ராணுவ சங்கீத தொனிகளிலும் அவர் இதை உணர்ந்தார். அன்று காலையில் ஒரு பிரஞ்சு அதிகாரி வந்து வாசித்த கைதிகளின் பட்டியலிருந்தும் அவர் இதை முக்கியமாக உணர்ந்து அறிந்து கொண்டார். பீயரை ஒரு சிப்பாய் கூட்டம், முதலில் ஒரு இடத்திற்கும், பின்னால் மற்றொரு இடத்திற்கும் டஜன் கணக்கான

மற்றவர்களோடு அழைத்துச் சென்றபடியால், தம்மை அவர்கள் மறந்திருக்கக் கூடும் என்றும், அல்லது அந்த கூட்டத்தில் தம்மைக் கண்டு பிடிப்பது அவர்களுக்கு சிரமமாய் இருக்கும் என்றும் அவருக்குத் தோன்றியது. ஆனால், இல்லை. அவரிடம் கேள்வி கேட்கப்பட்டபோது, முன் போலவே 'பெயரைச் சொல்லாத மனிதர்' என்ற வார்த்தைகளே அவரை குறிப்பிடுவதாக இப் பொழுதும் அமைந்திருந்தன. அம்மாதிரி பட்டப் பெயர் கொடுத் திருப்பது பீயருக்குப் பயங்கரமாய் தோன்றியது. அவர்கள் எங்கேயோ அவரை அழைத்துச் சென்றார்கள். அவர்களுக்கு வேண்டியவர்கள் பீயர் கூட்டத்தார்தான் என்ற தயக்கமில்லாத நிச்சயம் அவர்களுடைய முகங்களில் காணப்பட்டது. அதைப் போலவே, தகுதியான இடத்திற்குத்தான் அவர்களை அழைத்துச் செல்லுவதான நிச்சயமும் அவர்களுடைய முகங்களில் காணப்பட்டது. ஒரு யந்திரத்தின் சக்கரங்களுக்கு அடியில் விழுந்த ஒரு அற்பமான சுள்ளியைப் போன்று தாம் இருப்பதாகப் பீயர் நினைத்தார். அந்த யந்திரம் எப்படி வேலை செய்கிறது என்பதை அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், அந்த யந்திரம் பூரண ஒழுங்கோடு வேலை செய்து வந்தது.

அவரையும், மற்ற கைதிகளையும், விர்ஜின் பீல்டின் வலது பக்கத்திலுள்ள ஒரு பெரிய வெள்ளை வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். அதைச் சுற்றி பிரம்மாண்டமான தோட்டம் இருந்தது. சன்னியாசினி மடத்திற்கு சமீபமாக அது இருந்தது. அது இளவரசர் ஷெர்பட்டாவினுடைய வீடு. சாதாரண நாட்களில் பீயர் அந்த வீட்டிற்கு அடிக்கடி வந்திருக்கிறார். சிப்பாய்கள் பேசிக் கொண்ட திலிருந்து அந்த வீட்டில் இப்பொழுது மார்ஷல் டாவூட் இருப்பதாக அறிந்துகொண்டார்.

முன் வாசலுக்கு அவர்கள் அழைத்துச் சென்றதும், வீட்டிற்குள்ளே ஒவ்வொருவராக அழைத்துச் செல்லப்பட்டார்கள். 6 - வது பேர்வழியாக பீயர் உள்ளே சென்றார். ஒரு கண்ணாடி கூடத்தின் வழியாகவும், முன் அறை வழியாகவும், ஒரு ஹால் வழியாகவும் அவருக்குப் பழக்கமான இடங்களில் வழியாக வெல்லாம் பீயர் ஒரு நீளமான படிப்பு அறைக்குக் கொண்டு போகப்பட்டார். அங்கே வாசலில் ஒரு உதவியாளர் நின்று கொண்டிருந்தார்.

மூக்குக் கண்ணாடி அணிந்து, அந்த அறையின் ஒரு கோடியில் ஒரு மேஜை மீது டாவூட் உற்று பார்த்துக்கொண்டிருந்தார். அவருக்கு சமீபம் வரையில் பீயர் சென்றார். ஆனால், தமக்கு முன்னாலிருந்த ஒரு காகிதத்தை டாவூட் படித்துக் கொண்டிருந்தபடியால், அவர்

நிமிர்ந்து பார்க்கவில்லை. தமது கண்களை உயர்த்தாமலேயே, மெதுவான குரலில் 'நீர் யார்?' என்று கேட்டார்.

பீயர் மௌனமாக இருந்தார். ஏனெனில், ஒரு வார்த்தை கூட பேசுவதற்கு அவரால் முடியவில்லை. டாவூட் என்பவர் ஒரு பிரஞ்சு ஜெனரல் மட்டுமல்ல, ஒரு பிரபலமான சித்திரவதைக்காரர் என்பதையும் பீயர் அறிந்திருந்தார். அங்கே ஒரு கண்டிப்பான பள்ளிக் கூட வாத்தியார் தம்முடைய கேள்விக்குப் பதிலை எதிர்பார்த்து காத்திருப்பதைப் போன்ற நிலைமையில் உட்கார்ந்திருந்த அவருடைய கனிவற்ற முகத்தை பீயர் பார்த்ததும் அவருக்கு ஒன்று தோன்றியது. பதில் சொல்லுவதற்கு தாம் தாமதிப்பதினால் தம்முடைய உயிருக்கு ஆபத்து ஏற்படலாமென்று அவருக்குத் தோன்றியது. ஆனால், என்ன சொல்லுவது என்பது அவருக்குத் தெரியவில்லை. முதல் விசாரணையில் சொல்லிய பதிலை, இப்பொழுதும் சொல்ல அவர் துணிவு கொள்ளவில்லை. என்றாலும், தமது அந்தஸ்தையும், பதவியையும் வெளிப் படுத்துவது, அபாயகரமாகவும் தர்மசங்கடமாகவும் இருக்குமென்று அவர் நினைத்தார். ஆகவே, அவர் மௌனமாக இருந்தார். ஆனால், என்ன செய்வது என்று அவர் தீர்மானிக்கும் முன்பாக, டாவூட் தமது தலையை உயர்த்தி, தமது மூக்குக் கண்ணாடியை நெற்றிக்கு மேலே தள்ளி, கண்களை இடுக்கி உன்னிப்பாய் அவரைப் பார்த்தார்.

'எனக்கு அந்த மனிதரை தெரியும்' என்று கனிவற்ற, நிதானமான குரலில் பீயரை பயமுறுத்துவது போல கூறினார்.

பீயரின் முதுகில் ஓடிக்கொண்டிருந்த பீதியானது, அவருடைய தலையை ஒரு இடுக்கியைப் போல பற்றிக்கொண்டது.

'என்னை உமக்கு தெரிந்திருக்க முடியாது, ஜெனரலே. நான் உம்மை பார்த்ததே இல்லை...'

'அவர் ஒரு ருஷ்ய ஒற்றர்' என்று டாவூட் இடை மறித்து, அங்கிருந்த மற்றொரு ஜெனரலிடம் பேசினார். அவரை இது வரை பீயர் கவனிக்கவில்லை.

டாவூட் அப்புறமாக திரும்பிக்கொண்டார். ஒரு எதிர் பாராத வேகம் தமது குரலில் தொனிக்க, பீயர் வேகமாய் பேச ஆரம்பித்தார்.

'இல்லை, பிரபுவே' என்று டாவூட் ஒரு கோமகன் என்பது அவருடைய நினைப்பிற்கு வந்ததும் பீயர் சொன்னார். 'இல்லை, பிரபுவே, என்னை உமக்குத் தெரிந்திருக்க முடியாது. நான் ஒரு தற்காப்புப் படை அதிகாரி. மாஸ்கோவை விட்டு வெளியேறாமல் தங்கிவிட்டேன்.'

'உமது பெயர் என்ன?' என்று டாவூட் கேட்டார்.

'பெஜுகாவ்'

'நீர் பொய் சொல்லவில்லை என்பதற்கு ஆதாரம் என்ன?'

'பிரபுவே' என்று பீயர் ஆரம்பித்தார். அவர் கோபமாக பேசவில்லை. தயவான முறையிலேயே அவருடைய குரல் இருந்தது.

டாவூட் தலை நிமிர்ந்து அவரை உன்னிப்பாக நோக்கினார். சில வினாடிகள் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த பார்வை தான் பீயரை காப்பாற்றியது. யுத்தத்தினால் ஏற்பட்ட நிலைமைகளும், சட்டங்களும் ஒரு பக்கமிருக்க, அந்தப் பார்வையானது அந்த இரண்டு மனிதர்களுக் குள்ளும் மனித உறவை ஏற்படுத்தியது. அந்த வினாடியில் ஏராளமான காரியங்கள் மங்கலாக அவர்கள் இருவருடைய உள்ளங்களிலும் ஓடிக் கொண்டிருந்தன. அவர்கள் இருவரும் மனித குலத்தின் குழந்தைகள் என்பதையும், அவர்கள் இருவரும் சகோதரர்கள் என்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள்.

முதல் தடவையாக பீயரை ஏறிட்டு நோக்கிய டாவூட்டுக்கு, அவர் மேஜை மீது பார்த்துக் கொண்டிருந்த கடிதங்களில் மனித குல விஷயங்களும், உயிர்களும் புள்ளி விவரங்களாகவே தோன்றின; பீயர் ஏதோ சந்தர்ப்பத்தில் தோன்றியவர் என்று கருதி, தாம் ஒரு கெட்ட காரியத்தை செய்து விட்டதாக மனச் சாட்சியை உறுத்தும்படியான நினைப்பு எதுவும் இல்லாமல், அவரை சுட்டுக்கெல்ல டாவூட் உத்தரவிட்டிருக்கலாம். ஆனால், இப்பொழுது பீயரிடம் ஒரு மனித உயிரை டாவூட் கண்டார். ஒரு வினாடி சிந்தித்தார்.

'நீர் உண்மையைச் சொல்லுகிறீர் என்பதை எனக்கு எப்படி நிரூபிப்பீர்?' என்று டாவூட் கனிவற்ற விதமாக கேட்டார்.

ராம்பலைப் பற்றி பீயருக்கு ஞாபகம் வந்தது. அவருடைய படையின் பெயரையும், அவர் வசித்து வரும் வீட்டின் தெருவையும் பீயர் குறிப்பிட்டார்.

'ஆனால், நீர் என்ன சொல்லுகிறீரோ, அம்மாதிரி நீர் காணப்படவில்லையே?' என்று டாவூட் கேட்டார்.

தான் சொல்லியவைகளுக்கு ஆதாரங்கள் கொடுப்பதற்காக, பீயர் பதறிய தொனியோடு திக்கி திக்கிப் பேசினார்.

அந்த வினாடியில் ஒரு உதவியாளர் உள்ளே வந்து, டாவூட்டிடம் ஏதோ சொன்னார்.

அந்த செய்தியைக் கேட்டதும், டாலூட்டின் முகம் பிரகாசமடைந்தது. தமது யூனிபாரத்தின் பொத்தான்களை முழுவதும் மாட்டினார். பீயரை முற்றிலும் அவர் மறந்து விட்டதைப் போல காணப்பட்டார்.

பீயரைப் பற்றி அந்த உதவியாளர் அவருக்கு ஞாபக மூட்டியபோது தமது தலையை பீயரைப் பார்த்து அசைத்து, முகம் சுளித்து, அவரை அழைத்துக்கொண்டு போகும்படி உத்தரவிட்டார். ஆனால், அவரை எங்கே அழைத்துக்கொண்டு போவார்கள் என்பதைப் பற்றி பீயருக்கு ஒன்றும் தெரியவில்லை. மீண்டும் அந்த வண்டிக் கொட்டகைக்கா, அல்லது அவர்கள் வெர்ஜின் பீல்டை கடந்து வந்தபோது, அங்கே அவருடன் இருந்தவர்கள் காட்டிய தூக்கு மேடைக்கா என்பது பீயருக்குத் தெரியவில்லை.

அவர் தமது தலையை திருப்பிப் பார்த்தார். அந்த உதவியாளர் டாலூட்டிடம் வேறு ஏதோ ஒன்றை கேட்டார்.

'ஆம், நிச்சயமாக' என்று டாலூட் பதில் அளித்தார். ஆனால், இந்த 'ஆம்' என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்பது பீயருக்குத் தெரியவில்லை.

தாம் எம்மாதிரி, எந்த வழியாக, எவ்வளவு தூரம் வந்தார் என்பதை, பீயரால் பின்னால் நினைவு கூற முடியவில்லை. அவருடைய சக்திகள் எல்லாம் விறைத்துப் போய்விட்டன. அவர் கதிகலங்கிப் போயிருந்தார். தம்மைச் சுற்றி நடப்பவைகளை அவரால் கவனிக்க முடியவில்லை. மற்றவர்கள் நடந்தபோது, அவருடைய கால்களும் நடந்தன; மற்றவர்கள் நின்றபோது, அவருடைய கால்களும் நின்றன. அச்சமயத்தில் அவர் மனதில் தோன்றிய ஒரே எண்ணம் இது தான்; தமக்கு மரண தண்டனை கொடுத்தது உண்மையில் யார்? முதலில் அவரை விசாரித்த அந்த விசாரணைக் கூட்டம் கொடுக்கவில்லை. அந்த விசாரணைக் கூட்டத்திலுள்ள ஒருவர் கூட அம்மாதிரி கொடுக்க வேண்டுமென்பவராகக் காணப்படவில்லை. ஆகவே, அவர்கள் கொடுத்திருக்க மாட்டார்கள். டாலூட்டும் கொடுத்திருக்கமாட்டார். ஏனெனில், அவர் மனித உணர்ச்சியோடு அவரைப் பார்த்தார். அடுத்த வினாடியில் தாம் தவறு செய்ததாக டாலூட் ஒரு வேளை உணர்ந்து கொண்டிருக்கலாம். அந்த சமயத்தில் தான் ஒரு உதவியாளர் அங்கே வந்து அவரிடம் ஏதோ சொன்னார். அந்த உதவியாளர் அச்சமயம் அங்கே வராமல் இருந்திருக்கலாம். என்றாலும் எந்த விதமான கெட்ட நினைப்போடும் அவர் அங்கே வரவில்லை. அப்படியானால், அவருக்கு மரண தண்டனை கொடுத்து, அவரைக் கொன்று, அவருடைய வாழ்க்கையை பறிப்பது யார்? அவருடைய

பழைய நினைவுகளையும், பழைய ஆசைகளையும், நம்பிக்கைகளையும், சிந்தனைகளையும் கொண்டுள்ள அந்த பீயருக்கு மரண தண்டனை கொடுத்து நிறைவேற்றுவது யார்? இதை யார் செய்கிறார்கள்? யாரும் இதை செய்ய வில்லையென்று பீயர் உணர்ந்தார்.

அது ஒரு அரசாங்க முறை - சந்தர்ப்பங்கள் எல்லாம் ஒன்று கூடும்போது நடக்கக் கூடிய காரியம்.

ஏதோ ஒருவித முறைதான் பீயராகிய அவரைக் கொன்று, அவருடைய மற்றும் ஒவ்வொரு காரியங்களையும் அவரிடமிருந்து பறித்து, அவரை நாசமாக்குகிறது.



இளவரசர் ஷெர்பட்டாவினுடைய வீட்டிலிருந்து கைதிகளை விர்ஜின் பீல்ட் வழியாக சன்னியாசினி மடத்திற்கு இடது பக்கமாக அழைத்துச் சென்றார்கள். அங்கே ஒரு தோட்டமிருந்தது. அந்த தோட்டத்தில் ஒரு கம்பம் நாட்டப்பட்டிருந்தது. அந்த கம்பத்திற்கு அப்புறமாக பூமியில் புதிதாக குழி வெட்டியிருந்தார்கள். அந்த கம்பத்திற்கு பக்கத்திலும், அந்த குழியைச் சுற்றிலும், அரைவட்டமாக கூட்டம் நின்று கொண்டிருந்தது. அந்தக் கூட்டத்தில் சில ருஷ்யர்கள் தான் இருந்தார்கள். மற்றவர்கள் எல்லாரும், அப்பொழுது பாரா வேலையில் இல்லாத நெப்போலியனுடைய சிப்பாய்களாகும். ஜெர்மனியர்களும், இத்தாலியர்களும், பிரஞ்சுக்காரர்களுமான அவர்கள், வெவ்வேறு விதமான யூனிபாரங்களை அணிந்து கொண்டிருந்தார்கள். அந்த கம்பத்திற்கு வலது பக்கமும், இடது பக்கமும், பிரஞ்சு துருப்புகள் நீல நிற யூனிபாரங்களையும், சிகப்பு வாகு வலயங்களையும் அணிந்து, உயரமான தொப்பிகளையும் உயரமான ஜோடுகளையும் அணிந்து, வரிசை வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள்.

கைதிகளை பட்டியல் பிரகாரம் வரிசையாக நிறுத்தி வைத்தார்கள். அந்த வரிசையில் ஆறாவதாக பீயர் நின்றார். அந்த வரிசையிலிருந்து தான் கைதிகளை அந்த கம்பத்திற்கு அழைத்துச் சென்றார்கள். திடீரென்று இரண்டு பக்கங்களிலும் டமாரங்கள் முழங்கின. அந்த சப்தத்தைக் கேட்டதும், தம்முடைய ஆத்மாவின் ஒரு பகுதியை பிடுங்கிவிட்டதைப் போல பீயர் உணர்ந்தார். அவருக்கு சிந்திக்கும் சக்தியோ, உணரும் சக்தியோ எதுவும் இல்லாமல் போய்விட்டது. அவரால் காதால் கேட்கவும், கண்ணால்

பார்க்கவும்தான் முடிந்தது. அவருக்கு ஒரே ஒரு விருப்பந்தான் இருந்தது. அதாவது, அப்பொழுது நேர வேண்டியிருந்த அந்த பயங்கரமான காரியம், துரிதமாக நிறைவேறிவிட வேண்டும் என்பதே அந்த விருப்பம். தம்முடைய சகோதர கைதிகளை சுற்றிப் பார்த்து, அவர்களை கவனமாக நோக்கினார்.

முதலில் நின்ற இருவரும் தலை முடி மொட்டையடிக்கப்பட்ட தண்டனையடைந்த குற்றவாளிகளாக காணப்பட்டார்கள். ஒருவன் உயரமாகவும் ஒல்லியாகவும் இருந்தான். மற்றொருவன் அழுத்தமான வருணம் கொண்டவனாகவும், நிறைய தலைமுடி உடையவனாகவும், புஷ்டியானவனாகவும், தட்டையான மூக்கை உடையவனாகவும் காணப்பட்டான். மூன்றாவது ஆசாமி வீட்டு வேலை செய்யும் ஒரு அடிமை. அவனுக்கு சுமார் 45 வயதிருக்கும்; தலை முடி நரைத்திருந்தது; உடம்பு புஷ்டியாக காணப்பட்டது. நாலாவது ஆசாமி ஒரு விவசாயி. லட்சணமாகவும், அகன்ற, மெல்லிய - பழுப்பான வர்ணமுள்ள தாடியோடும், கருப்புக் கண்களோடும் விளங்கினான். ஐந்தாவது ஆசாமி ஒரு தொழிலாளி. ஒல்லியாகவும், மஞ்சள் நிறமுள்ள முகத்தோடும், தொளதொளப்பான மேற் சட்டையுடனும் காணப்பட்டான். அவன் சுமார் 18 வயதுள்ள ஒரு வாலிபன்.

கைதிகளை தனித்தனியாக சுட வேண்டுமா, அல்லது ஜோடி ஜோடியாக சுட வேண்டுமா என்று பிரஞ்சுக்காரர்கள் பேசிக் கொண்டிருந்ததை பீயர் கேட்டார். 'ஜோடி ஜோடியாக' என்று அங்கிருந்த பிரஞ்சு அதிகாரி அமைதியான, கண்டிப்பான குரலில் உத்தரவிட்டார். சிப்பாய்களின் வரிசைகளில் பரபரப்பு ஏற்பட்டது. அவர்கள் எல்லாரும் அவசரப்பட்டுக் கொண்டிருந்தார்கள் என்பது நன்றாய் தெரிந்தது. அதாவது, தங்களுக்குத் தெரிந்த ஒரு காரியத்தை செய்து முடிப்பதற்காக அவசரப்படுகிறவர்களைப் போல அவர்கள் காணப்படவில்லை; ஆனால் தங்கள் யோசனைக்கு எட்டாத, மனதிற்கு பிடித்தமில்லாத ஒரு காரியத்தை செய்து தீர வேண்டியதாய் இருக்கிறதே என்ற நினைப்போடு அவர்கள் இருப்பதாக காணப்பட்டார்கள்.

கழுத்துப் பட்டி அணிந்து கொண்டிருந்த ஒரு பிரஞ்சு அதிகாரி, அந்த கைதிகளின் வரிசைக்குப் பக்கத்தில் வந்து, அவர்களுக்கு கொடுத்துள்ள தண்டனையைப் பற்றி பிரஞ்சு மொழியிலும், ருஷ்ய மொழியிலும் வாசித்துக் காட்டினார்.

பின்னால், இரண்டு ஜோடி பிரஞ்சுக்காரர்கள் அந்த தண்டனை அடைந்த குற்றவாளிகளிடம் வந்தார்கள். அந்த அதிகாரியின் உத்தரவுப்படி முதலில் நின்ற இரண்டு பேர்களை அழைத்துக்

கொண்டு போனார்கள். அந்த குற்றவாளிகள் அங்கிருந்த கம்பத்திற்கு போனதும் நின்றார்கள். சாக்குகள் கொண்டு வரப்பட்டன. காயமடைந்த ஒரு மிருகம், தன்னை நெருங்கிக் கொண்டிருக்கும் வேட்டைக்காரனை பார்ப்பது போல, அவர்கள் சுற்றிலும் வாய் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் விடாமல் சிலுவைக் குறி காட்டிக் கொண்டிருந்தான். மற்றொருவன் தனது முதுகை சொறிந்து கொண்டு, புன்னகை காட்டுவதைப்போல உதட்டை அசைத்தான். வேகமாக அவர்களுடைய கண்களை சிப்பாய்கள் கட்டிவிட்டு, தலைக்கு மேலாக சாக்குகளை போட்டு மூடி, அவர்களை அந்த கம்பத்தோடு கட்டினார்கள்.

குறி பார்த்து சுடுகிற 12 சிப்பாய்கள், அங்கிருந்த வரிசைகளிலிருந்து விலகி, தங்கள் துப்பாக்கிகளோடு உறுதியான நடையோடு நடந்து அந்த கம்பத்திற்கு 8 அடி தூரத்தில் வந்து நின்றார்கள். என்ன நடக்கப் போகிறது என்பதை பார்ப்பதை தவிர்ப்பதற்காக, பீயர் மற்றொரு பக்கம் திரும்பிக் கொண்டார். திடீரென்று துப்பாக்கி சுடும் சப்தம் கேட்டது. மிகுந்த பயங்கரமாக, இடியை விட பலமாக அது கேட்டதாக பீயருக்குத் தோன்றியது. அவர் திரும்பிப் பார்த்தார். அங்கே சிறிது புகை காணப்பட்டது. அங்கு வெட்டப்பட்டிருந்த குழிக்குப் பக்கத்தில் பிரஞ்சுக்காரர்கள், வெளிறிய முகங்களோடும், நடுங்கிய கைகளோடும், எதையோ செய்து கொண்டிருந்தார்கள். மேலும் இரண்டு கைதிகள் கம்பத்திற்கு கொண்டு போகப்பட்டார்கள். முன்னால் செய்த அதே முறையில், இந்த கைதிகளும் அங்கு வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த வர்களை வீணாக நோக்கினார்கள். தங்களை காப்பாற்றும்படி கேட்பது போன்ற பார்வை, அவர்களுடைய முகங்களில் தோன்றின. தங்களுக்கு என்ன நடக்கப் போகிறது என்கபதை அவர்கள் அறியமுடியாமலோ, அல்லது நம்ப முடியாமலோ இருப்பதாக காணப்பட்டார்கள். அவர்களால் அதை நம்ப முடியவில்லை. ஏனெனில், அவர்களுடைய உயிர்கள் அவர்களுக்கு எவ்வளவு முக்கியமானவை என்பதை அவர்கள் மட்டுமே அறிய முடியுமாகையால், அவர்களுடைய உயிர்களை அவர்களிடமிருந்து பறிக்க முடியும் என்பதை அவர்களால் அறியவோ, நம்பவோ முடியவில்லை.

மீண்டும் அதைப் பார்ப்பதற்கு பீயர் விரும்பவில்லை. ஆகவே, தமது தலையை மீண்டும் திருப்பிக்கொண்டார். மீண்டும் ஒரு பயங்கரமான வெடியைப் போன்ற சப்தம் பீயரின் காதுகளை வந்து தாக்கியது. அதே சமயத்தில் புகையையும், ரத்தத்தையும் அவர் பார்த்தார். அந்த பிரஞ்சுக்காரர்கள் வெளிறிய, பீதியுற்ற

முகங்களோடு, மீண்டும் அந்த கம்பத்திற்குப் பக்கத்தில், தங்களுடைய நடுங்கிய கைகளால் ஒருவருக்கொருவர் இடையூறாக எதையோ செய்து கொண்டிருந்தார்கள். வேகமாக மூச்சு விட்டுக்கொண்டு, அங்கே என்ன நடக்கிறது என்பதை அறிய விரும்புகிறவரைப் போல, பீயர் சுற்றிலும் பார்த்தார். அவருடைய பார்வையை சந்தித்த மற்றவர்களுடைய பார்வைகளிலும், அதே கேள்வியே காணப்பட்டது.

அங்கிருந்த ருஷ்யர்கள், பிரஞ்சு சிப்பாய்கள், அதிகாரிகள் ஆகிய எல்லாருடைய முகங்களிலும், தமது உள்ளத்தில் இருப்பதைப் போன்ற ஒரே மாதிரியான பீதியையும், பயங்கரத்தையும், போராட்டத்தையும் அவர் கண்டார். 'ஆனால், இதையெல்லாம் யார் செய்கிறார்கள்? அவர்களுக்கு என்னைப் போலவே சங்கடப் படுகிறார்கள். அப்படியானால், இதைச் செய்வது யார்? யார்?' என்று அவருடைய மனதில் ஒரு வினாடி சிந்தனை ஒளி வீசியது.

'எண்பத்தி ஆறாவது (86) பிரிவைச் சேர்ந்த குறி பார்த்து சுடுகிறவர்கள் முன்னால் வருக' என்று யாரோ ஒருவர் கூச்சலிட்டார். பீயருக்குப் பக்கத்திலிருந்த அந்த ஐந்தாவது கைதியை தனியாக அழைத்துச் சென்றார்கள். தாம் காப்பாற்றப்பட்டதை பீயரால் அறிந்து கொள்ள முடியவில்லை. தம்மையும், தம்முடன் இருந்த மற்றவர்களையும், அந்த மரண தண்டனை நிறைவேற்றப்படுவதை பார்ப்பதற்காகவே, அங்கே அழைத்து வந்திருக்கிறார்கள் என்பதை அவர் அறிந்து கொள்ளவில்லை. ஆகவே, வரவர வளர்ந்து வரும் பயங்கர நினைப்போடு, எந்த விதமான விடுதலை உணர்ச்சியோ, மகிழ்ச்சி உணர்ச்சியோ இல்லாமல், அங்கே நடப்பதை நோக்கிக் கொண்டிருந்தார். அந்த ஐந்தாவது மனிதன் தான் தொளதொளப்பான மேற்சட்டையைப் போட்டுக் கொண்டிருந்த தொழிலாளி. அவன் மீது அவர்கள் கையை வைத்ததும், பீதியோடு அவன் துள்ளி பீயரை பற்றிக்கொண்டான். (பீயர் உடல் பதறி, அவனிடமிருந்து தம்மை விடுவித்துக் கொண்டார்) அந்த வாலிபனால் நடக்க முடியவில்லை. அவனை கைகளுக்கு அடியில் தாங்கி, இழுத்துக்கொண்டு போனார்கள். அவன் கதறினான். அவனை கம்பத்திற்குப் பக்கத்தில் கொண்டு போனதும், ஏதோ ஒன்றை திடீரென்று அறிந்து கொண்டவனைப் போல அவன் அமைதியானான். கதறுவது உபயோகமற்றது என்பதை அவன் அறிந்து கொண்டானா, அல்லது தன்னை அவர்கள் கொல்லுவது என்பது மனதினாலும் நினைக்க முடியாத காரியம் என்று அவன் நினைத்தானா என்பது தெரியவில்லை. எப்படியிருந்தாலும் அந்த கம்பத்திற்கு பக்கத்தில், மற்றவர்களைப் போல தனது கண்களை கட்டுவதற்காக எதிர்பார்த்து

காத்துக் கொண்டிருந்தான். ஒரு காயமடைந்த மிருகத்தைப் போல, தனது பிரகாசமான கண்களால் சுற்றிலும் நோக்கினான்.

தமது பார்வையை திருப்பிக் கொள்ளவோ, அல்லது கண்களை மூடிக் கொள்ளவோ பீயரால் இப்பொழுது முடியவில்லை. அங்கிருந்த கூட்டத்தினரைப் போலவே, அவருடைய பரபரப்பும், ஆவலும், இந்த ஐந்தாவது கொலை சமயத்தில் உச்ச நிலைக்குப் போயின. மற்றவர்களைப் போலவே, இந்த ஐந்தாவது மனிதனும் அமைதியாக காணப்பட்டான். தன்னுடைய தொளதொளப்பான மேற்சட்டையை அவன் இறுக்கிப் போட்டுக்கொண்டான். தன்னுடைய வெறும் காலை, மற்றொரு காலால் தேய்த்துக் கொண்டான்.

அவனுடைய கண்களை அவர்கள் கட்ட ஆரம்பித்தபோது, அந்த முடிச்சு அவனுடைய பின் தலையில் வலியை கொடுத்தபடியால், அதைக் கொஞ்சம் சரி செய்து கொண்டான். பின்னால், அவனை அந்த ரத்தம் தோய்ந்த கம்பத்தோடு அவர்கள் நிறுத்தி வைத்தபோது, அவன் பின்னால் சாய்ந்தான். அந்த நிலை அவனக்கு சௌகரியமாக இல்லாதபடியால், நிமிர்ந்து நின்று தனது கால்களை சரி செய்து கொண்டு, மீண்டும் சௌகரியமாக பின்னால் சாய்ந்து கொண்டான். அவனிடமிருந்து பீயர் தனது கண்களை எடுக்காதபடியால், அவனுடைய அசைவுகள் ஒவ்வொன்றையும் அவர் கவனித்து வந்தார்.

உத்தரவு கொடுக்கப்பட்டதென்று தோன்றியது. ஏனெனில், எட்டு துப்பாக்கிகளின் வெடி சப்தம் கேட்டது. ஆனால், பீயர் பின்னால் எவ்வளவு தான் முயன்று பார்த்தாலும், அப்பொழுது துப்பாக்கி சப்தம் கேட்டதாக அவருடைய நினைவுக்கு தோன்றவேயில்லை. ஆனால், அந்த தொழிலாளி, அவனை கட்டியிருந்த கயிறுகளில் திடீரென்று சாய்ந்து விழுந்ததை அவர் பார்த்தார்; அவனுடைய உடம்பில் இரண்டு இடங்களிலிருந்து ரத்தம் வருவதைக் கண்டார். அவனுடைய கனத்தை தாங்க முடியாமல், அந்த கயிறுகள் நெகிழ்ந்ததையும் அவர் கண்டார்; அவன் கீழே விழுந்ததையும், அவனுடைய தலை இயற்கைக்கு விரோதமாக கீழே தொங்கிக் கொண்டிருந்ததையும், அவனுடைய ஒரு கால் அவனுக்கு அடியில் மடங்கியிருந்ததையும், அவர் கண்டார். உடனே அந்த கம்பத்திற்கு பீயர் ஓடினார். ஒருவரும் அவரை தடுக்கவில்லை. பீதியுற்ற தோற்றத்தோடு கூடிய சிலர், அந்த தொழிலாளியை சுற்றி நின்று எதையோ செய்து கொண்டிருந் தார்கள். ஒரு வயதான, அடர்ந்த மீசையுள்ள பிரஞ்சுக்காரர், அவருடைய கீழ் நாடி நடுங்கிக் கொண்டிருக்க, அந்த கயிறுகளை

அவிழ்த்து விட்டார். அந்த உடம்பு கீழே சாய்ந்து விழுந்தது. சிப்பாய்கள் அதை தாறுமாறாக அந்த கம்பத்திலிருந்து இழுத்துச் சென்று, அங்கு வெட்டப்பட்டிருந்த குழியில் தள்ளினார்கள்.

அவர்கள் எல்லாரும் குற்றவாளிகள் என்று தெளிவாகவும் நிச்சயமாகவும் அவர்களுக்குத் தோன்றியபடியால், அவர்கள் செய்த குற்றங்களைப் பற்றி சின்னங்களை துரிதமாக அவர்கள் மறைத்தாக வேண்டும்.

அந்த குழியை பீயர் நோக்கினார். அந்த வாலிப தொழிலாளியின் உடல், அவனுடைய முழங்கால்கள் தலையோடு நெருங்கி இருக்கிற விதத்தில் அங்கே கிடந்தது. ஒரு தோளை விட மற்றொரு தோள் உயரமாய் இருந்தது. அந்த தோள் ஒழுங்காகவும், வலிப்புக் கொண்ட முறையிலும் உயர்ந்து கொண்டும், தாழ்ந்து கொண்டும் இருந்தது. ஆனால், அதற்குள்ளாக அந்த உடல் மீது மண்ணைப் போட ஆரம்பித்து விட்டார்கள். மனக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஒரு சிப்பாய், கரகரப்பான தொனியிலும், கோபமாகவும் பீயரை நோக்கி, பின்னால் போகும்படி கத்தினான். அவன் சொல்லுவதை பீயரால் உணர்ந்து கொள்ள முடியாததால், அவர் அந்தக் கம்பத்தின் பக்கத்திலேயே நின்றார். அதன் பின்னால் அவரை வேறு ஒருவரும் விரட்டவில்லை.

அந்த குழியெல்லாம் மூடப்பட்ட பின்பு, அந்த அதிகாரி உத்தரவு கொடுத்தார். பீயரை மீண்டும் அவருடைய இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அந்த கம்பத்திற்கு இரு புறங்களிலும் வரிசையாக நின்ற துருப்புகள் பாதி திரும்பி, அந்த கம்பத்தை கடந்து நிதானமாக சென்றார்கள். குறி பார்த்து சுடக்கூடிய 24 சிப்பாய்களும், தங்களுடைய காலி துப்பாக்கிகளோடு அந்த வட்டத்தின் மத்தியிலிருந்து அந்த சிப்பாய் வரிசைகள் புறப்பட்டு போன போது, அவற்றோடு போய் சேர்ந்து கொள்வதற்காக ஓடினார்கள்.

அந்த வட்டத்திலிருந்து ஜோடி ஜோடியாக ஓடிய அந்த சுட்டவர்களை, இப்பொழுது பீயர் வெறித்த கண்களோடு நோக்கினார். ஒருவனைத் தவிர மற்ற எல்லாரும் சிப்பாய் வரிசைகளில் சேர்ந்து கொண்டார்கள். வாலிப சிப்பாயாகிய அந்த ஒருவனுடைய முகம், சவத்தைப் போல வெளுத்திருந்தது. தனது தொப்பியை அவன் பின்னால் தள்ளி விட்டுக் கொண்டு, தன்னுடைய துப்பாக்கியை பூமியில் நிறுத்தி, அவன் எந்த இடத்திலிருந்து சுட்டானோ, அங்கேயே, அந்த குழிக்கு பக்கத்திலேயே இன்னமும் நின்று கொண்டிருந்தான். ஒரு குடிகாரனைப் போல, இப்படியும் அப்படியுமாக அவன் ஆடிக் கொண்டிருந்தான். கீழே விழுந்து விடாமல் இருப்பதற்காக,

கால்களை முன்னும் பின்னும் வைத்தான். ஒரு முதிய அதிகாரி அந்த சிப்பாய்களின் வரிசையிலிருந்து ஓடி வந்து, அவனுடைய முழங்கையைப் பற்றி, மீண்டும் அவனுடைய வரிசைக்கு இழுத்துச் சென்றார். அங்கு கூடி நின்ற ருஷ்யர்களும், பிரஞ்சுக்காரர்களும் அடங்கிய அந்த கூட்டம் கலைய ஆரம்பித்தது. அவர்கள் எல்லாரும் தங்கள் தலைகளை தொங்க விட்டுக் கொண்டு, மௌனமாக அதை விட்டுப் போனார்கள்.

'நெருப்பு வைப்பவர்களுக்கு இது ஒரு நல்ல பாடமாக இருக்கும்' என்று ஒரு பிரஞ்சுக்காரன் சொன்னான்.

அப்படி பேசியவனை பீயர் திரும்பிப் பார்த்தார். அங்கே நடந்த காரியத்தைப் பார்த்த பின்பு, அதிலிருந்து விடுதலை பெறுவதற்காக முயற்சித்து, அதைப் பெற முடியாமல் தவிர்த்த சிப்பாய்தான் அம்மாதிரி பேசியவன் என்பதை பீயர் கண்டார். அந்த சிப்பாய், தான் என்ன பேசுவதற்கு ஆரம்பித்தானோ, அதை முடிக்காமல் தனது கையை நம்பிக்கையற்ற விதமாய் ஆட்டிக்கொண்டு அங்கிருந்து போய் விட்டான்.

# 12

12

மரண தண்டனையை நிறைவேற்றிய பின்பு, மற்ற கைதிகளிலிருந்து பீயரை தனியாக பிரித்து, ஒரு அசுத்தமான பாழடைந்த சிறிய மாதா கோயிலில் கைதியாக வைத்திருந்தார்கள். அன்று மாலையில் ஒரு அதிகாரி இரண்டு சிப்பாய்களோடு அங்கே வந்து, அவரை மன்னித்து விட்டதாகவும், யுத்த கைதிகளோடு அவரை பாசறையில் கொண்டு வைக்கப் போவதாகவும் கூறினார். அவர் என்ன சொன்னார் என்பதை அறிந்து கொள்ளாமலேயே, பீயர் எழுந்து சிப்பாய்களோடு சென்றார். அவரை அந்த மைதானத்தின் கோடிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே கரிந்து போன பலகைகளாலும், உத்தரங்களாலும், சில கொட்டகைகளை ஏற்படுத்தி இருந்தார்கள். அவற்றில் ஒன்றுக்கு பீயரை அழைத்துச் சென்றார்கள். அங்கிருந்த இருட்டில் சுமார் 20 பேர் பீயரை சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் யார் என்பதையோ, எதற்காக அங்கே இருக்கிறார்கள் என்பதையோ, அவரிடம் என்ன எதிர் பார்க்கிறார்கள் என்பதையோ அறியாமலேயே, அவர் அவர்களைப் பார்த்தார். அவர்கள் சொல்லுவதை யெல்லாம் அவர் கேட்டார். ஆனார், அந்த வார்த்தைகளின் பொருள் மட்டும் அவருக்குப் புரியவில்லை. அவற்றின் பொருள் என்ன என்பதை

அறிந்து கொள்ள அவர் முயற்சி செய்யவும் இல்லை. அவரிடம் கேட்ட கேள்விகளுக்கு அவர் பதில் சொன்னார். ஆனால், தம்முடைய பதில்களை யார் கவனிக்கிறார்கள் என்பதையோ, அவர்களால் புரிந்து கொள்ள முடிகிறதா என்பதையோ பற்றி அவர் சிந்திக்கவில்லை. அவர்களுடைய முகங்களையும் உருவங்களையும் அவர் பார்த்தார். அவைகளும் அவருக்கு அதே மாதிரியாக பொருளற்றவையாகவே தோன்றின.

கொலை செய்ய விரும்பாத மனிதர்களால் கொலை செய்யப் பட்ட அந்த பயங்கர கொலைகளை பார்த்த வினாடியிலிருந்து, அவருடைய வாழ்க்கையின் உயிர் நிலை அவரிடமிருந்து பறித்துக்கொள்ளப்பட்டதாக அவர் உணர்ந்தார். அந்த உயிர் விசை தான், எல்லாம் உயிருள்ளதாக தோன்றும்படி செய்து வந்தது. அதன் மீது தான் எல்லாம் பொறுத்து நின்றன. இப்பொழுது அந்த உயிர் விசை அவரிடமிருந்து பறிக்கப்பட்டதால், எல்லாம் அர்த்தமற்ற குப்பைகளாக சரிந்து விழுந்தது போல அவருக்குத் தோன்றின. பிரபஞ்சத்தின் ஒழுங்கு முறையிலும், மனித குலத்திலும், தம்முடைய சொந்த ஆத்மாவிடத்திலும், கடவுளிடத்திலும் இருந்த அவருடைய நம்பிக்கை அழிந்து போயிற்று. இம்மாதிரி அவர் முன்பு அனுபவித்து இருக்கிறார். என்றாலும், இப்பொழுது உள்ளதைப்போல எப்பொழுதும் அவருக்கு அவ்வளவு பலமாக அந்த உணர்ச்சி ஏற்பட்டதில்லை. இம்மாதிரியான சந்தேகங்கள் முன்பு அவருக்கு ஏற்பட்ட போதெல்லாம் அவருடைய தவறான செய்கைகளின் பலனாகவே அவை ஏற்பட்டன. அவருடைய ஏக்கத்திலிருந்து விடுதலை பெற வேண்டுமானால், அவருக்கு ஏற்பட்ட அந்த சந்தேகங்களிலிருந்து நிவர்த்தி பெற வேண்டுமானால், அவருக்குள்ளாகவே தான் அவர் கணடு பிடிக்க வேண்டும் என்று அவருடைய உள்ளத்தின் ஆழத்தில் அவர் உணர்ந்து வந்தார். ஆனால், இப்பொழுது பிரபஞ்சமே நொறுங்கி அவருடைய கண்களின் முன்பாக விழுந்து விட்டதாக அவர் உணர்ந்தார்: உபயோகமற்ற இடிபாடுகள்தான் அங்கே மீதமாய் இருக்கின்றன என்றும், இதற்கு அவருடைய தவறு எதுவும் காரணம் அல்லவென்றும் அவர் உணர்ந்தார். வாழ்க்கையின் பொருளில் மீண்டும் அவருக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்வது அவருடைய சக்தியில் இல்லை என்பதையும் அவர் உணர்ந்தார்.

அந்த இருளில் அவரைச் சுற்றி பலர் நின்று கொண்டிருந்தார்கள். அவரைப் பற்றிய ஏதோ ஒன்றின் மீது அவர்களுக்கு மிகுந்த சிரத்தை இருந்ததாக தோன்றியது. அவர்கள் அவரிடம் எதையோ சொல்லிக் கொண்டும், கேட்டுக் கொண்டும் இருந்தார்கள். பின்னால் அவர்கள்

அவரை எங்கோ அழைத்துச் சென்றார்கள். கடைசியாக அந்த கொட்டகையின் ஒரு மூலையில் சிலர் கூடி சிரித்துக் கொண்டும் பேசிக் கொண்டும் இருந்த இடத்திற்கு அவர் கொண்டு போகப்பட்டார்.

'நல்லது, அப்படியானால், தோழர்களே...அதோ அவர் இளவரசர்தான்; அவர் தான்...' என்று அந்த கொட்டகையின் மற்றொரு பக்கத்திலிருந்து ஒரு குரல் சொல்லிக் கொண்டிருந்தது. 'அவர் தான்' என்ற வார்த்தையை அந்த குரல் அழுத்தமாக சொல்லியது.

சுவருக்குப் பக்கத்தில் கிடந்த வைக்கோல் குவியல் மீது மௌனமாகவும், அசைவற்றும், சில சமயங்களில் கண்களை திறந்து கொண்டும், சில சமயங்களில் மூடிக்கொண்டும் பீயர் அமர்ந்திருந்தார். அவர் கண்களை மூடியதும் அந்த வாலிப தொழிலாளியின பயங்கர முகம் அவர் மனக்கண் முன்பு தோன்றும். அந்த முகத்தில் கபடம் இல்லாமல் இருந்தபடியால், அது அதிக பயங்கரமானதாய் தென்பட்டது. அங்கே கொலை செய்தவர்களின் முகங்களும், அவர்களுக்கு ஏற்பட்டிருந்த மனக்குழப்பத்தினால், அதிக பயங்கரமாகத் தோன்றின. அவர் மீண்டும் தமது கண்களைத் திறந்து, தம்மைச் சுற்றிலும் இருந்த இருளை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அவருக்குப் பக்கத்தில் ஒரு சிறிய மனிதன் குனிந்து உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்த மனிதன் செய்யும் ஒவ்வொரு அசைப்பின் போதும் அவனுடைய வியர்வை நெடி அவருக்கு வந்து கொண்டிருந்தபடியால் தான், அங்கே ஒருவன் இருக்கிறான் என்பதை அவர் அறிந்து கொண்டார். அந்த இருளில் அவன் தன்னுடைய கால்களில் எதையோ செய்து கொண்டிருந்தான். பீயரால் அவனுடைய முகத்தை பார்க்க முடியவில்லை. என்றாலும், அவன் இவரை விடாமல் பார்த்துக் கொண்டிருப்பதாக அவர் உணர்ந்தார். பின்னால், இருளில் பார்த்து பழக்கப்பட்ட பின்பு, தன் கால்களில் கட்டப்பட்டுள்ள கால் பட்டிகளை அவன் அவிழ்த்துக் கொண்டிருப்பதை அவர் கண்டார். அவன் அதை அவிழ்க்கும் விதமானது, பீயருக்கு அதில் சிரத்தையை உண்டு பண்ணியது.

அவன் தன்னுடைய கால் பட்டியின் மீது கட்டப்பட்டிருந்த கயிற்றை அவிழ்த்த பின்பு, அந்த கால் பட்டியை கவனமாக சுருட்டிவைத்து விட்டு, மற்றொரு காலில் உள்ளதை அவிழ்க்க ஆரம்பித்தான். அச்சமயம் பீயரை நோக்கினான். முதலாவது கயிற்றை அவனுடைய ஒரு கை அவிழ்த்து விட்டபோது, மற்றொரு கை அந்த இரண்டாவது காலில் இருந்த கால் பட்டியை அவிழ்த்துக்

கொண்டிருந்தது. இந்த விதமாக அந்த கால் பட்டியை ஒவ்வொரு கையும் மாற்றி மாற்றி அவிழ்த்த பின்பு, அவற்றை அவனுடைய தலைக்கு மேலாக இருந்த ஒரு கொம்பில் மாட்டி வைத்தான். பின்னால் அவன் ஒரு கத்தியை எடுத்து எதையோ வெட்டி விட்டு, மீண்டும் அந்த கத்தியை மடக்கி தனது தலையணைக்கு கீழே வைத்துக்கொண்டான். அவன் இப்பொழுது சௌகரியமாக உட்கார்ந்து தனது கைகளை முட்டுகளில் கட்டிக்கொண்டு, குத்திட்ட பார்வையோடு பீயரை நோக்கினான். இந்த வேலைகளை அவன் திறமையாக செய்ததினாலும், அவனுடைய சாமான்களை ஒரு மூலையில் ஒழுங்காக வைத்திருந்ததினாலும், ஏதோ ஒரு இன்பமான, இதமான உணர்ச்சி பீயருக்கு ஏற்பட்டது. அவன் மீது வைத்த கண்களை எடுக்காமலேயே அவர் பார்த்துக் கொண்டிருந்தார்.

'நீர் மிகுதியான துன்பங்களை அனுபவித்திருப்பீர் என்று தோன்றுகிறது, ஐயா?' என்று அந்த சிறிய மனிதன் திடீரென்று கூறினான்.

அவனுடைய இழுத்து இழுத்துப் பேசும் குரலில், மிகுந்த கபடமற்ற தன்மையும் அன்பும் காணப்பட்டன. அதற்கு பதில் கூற பீயர் முயற்சித்தார். ஆனால், அவருடைய நாடி நடுங்கிக் கொண்டிருந்தது. அவருடைய கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது. அவருடைய குழப்பத்தை வெளியே தெரியும்படி விடாமல் அந்த சிறிய மனிதன் முன் மாதிரியே இனிமையான தொனியில் உடனே பேச ஆரம்பித்தான்:

'வாலிபரே, ஒன்றும் வருத்தப்பட வேண்டாம்' என்று அவன் சொன்னான். ருஷ்ய விவசாய பெண்கள் ஆதரவாகவும், கனிவோடும், இழுத்து இழுத்துப் பேசுவதைப் போல அவனுடைய பேச்சு இருந்தது. 'வருத்தப்பட வேண்டாம், நண்பரே. 'ஒரு மணி நேரம் கஷ்டப்பட்டு ஒரு யுகம் வாழவேண்டும்'; அப்படித்தான விஷயம் இருக்கிறது, எனது அன்பானவரே. இங்கே நாம் எந்த விதமான குற்றமும் செய்யாமல் வாழ்கிறோம். கடவுளுக்கு நன்றி. இந்த மக்களிலும் நல்லவர்களும் இருக்கிறார்கள், கெட்டவர்களும் இருக்கிறார்கள்' எனறு அவன் சொன்னான். இன்னமும் பேசிக்கொண்டே தன்னுடைய முட்டுகளில் ஊன்றி லாவகமாக திரும்பி எழுந்தான். அவன் இருமிக்கொண்டே அந்த கொட்டகையின் மற்றொரு பகுதிக்குப் போனான்.

'ஏ, அயோக்கியனே, நீ மீண்டும் வந்து விட்டாயா? அதற்கு ஞாபக சக்தி இருக்கிறது... இப்பொழுது அது போதும்' என்று அந்த கனிவான குரல், கொட்டகையின் மற்றொரு கோடியில் பேசுவது பீயருக்குக் கேட்டது.

அந்த சிப்பாய், அவன் மீது தாவிக் கொண்டிருந்த அந்த சிறிய நாயை தள்ளி விட்டு, திரும்பவும் தன்னுடைய இடத்திற்கு வந்து கீழே அமர்ந்தான். அவனுடைய கையில் ஒரு கந்தலில் ஏதோ சுற்றப்பட்டிருந்தது.

'இங்கே பாரும். இதைக் கொஞ்சம் சாப்பிடும், ஐயா' என்று அவன், முன்னால் பேசியதைப் போலவே மரியாதையான தொனியில் பேசி, அந்த கந்தலை அவிழ்த்து சில வெந்த உருளைக் கிழங்குகளை பீயருக்குக் கொடுத்தான். 'டின்னருக்கு எங்களுக்கு சூப் கிடைத்தது. உருளைக் கிழங்குகள் பிரமாதமாய் இருந்தன.'

அன்று முழுவதும் பீயர் எதுவும் சாப்பிடவில்லை. அந்த உருளைக் கிழங்கின் மணமானது அவருக்கு மிகுந்த இனிமையாய் இருந்தது. அந்த சிப்பாய்க்கு வந்தனம் கூறிவிட்டு அதை உண்ண ஆரம்பித்தார்.

'நல்லது, அவை நன்றாய் இருக்கின்றனவா?' என்று அந்த சிப்பாய் ஒரு புன்னகையோடு கேட்டான். 'நீர் இந்த விதமாக சாப்பிட வேணடும்.'

அவன் ஒரு உருளைக் கிழங்கை எடுத்து, தன்னுடைய கத்தியை விரித்து அந்த உருளைக்கிழங்கை தன்னுடைய உள்ளங்கையில் வைத்து இரண்டாக வெட்டி, அதன் மீது சிறிது உப்பை தூவி பீயருக்குக் கொடுத்தான்.

''உருளைக் கிழங்குகள் பிரமாதம்!'' என்று அவன் மீண்டும் கூறினான். ''இதே மாதிரி இன்னும் கொஞ்சம் சாப்பிடும்!''

இதைவிட சுவையானது எதையும் தான் இதற்கு முன் என்றுமே சாப்பிட்டதில்லை என்று பீயர் நினைத்தார்.

''ஓ, நான் நன்றாகவே இருக்கிறேன், '' என்றார் அவர், ''ஆனால், பாவம் அந்த ஆட்களை அவர்கள் ஏன் சுட்டுக் கொன்றார்கள்? கடைசியாகச் சுட்டுக் கொல்லப்பட்டவனுக்கு இருபது வயதுகூட இருக்காது போலிருக்கிறதே?''

''த்சொ, த்...!'' என்று ஆரம்பித்த அந்த சிறிய மனிதன், ''ஆ எத்தகைய பாவம்...எத்தகைய பாவம்!'' என்று படபடவென்று கூறினான். அவன் வாயில் வார்த்தைகள் எப்போதும் தயாராகக் காத்துக் கொண்டிருப்பது போலவும், அவை தாமாகவே பீரிக்கொண்டு வெளியே வருவது போலவும், மேலும் தொடர்ந்து பேசினான்: ''நீர் மாஸ்கோவில் எப்படித் தங்கியிருக்க நேர்ந்தது, ஐயா?''

''இவ்வளவு சீக்கிரமாக அவர்கள் வந்துவிடுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. நான் தற்செயலாகத்தான் தங்கினேன்'' என்று பீயர் பதிலளித்தார்.

''உம்மை அவர்கள் எப்படி கைது செய்தார்கள், அன்பான வாலிபரே? வீட்டில் கைது செய்தார்களா?''

''இல்லை, நெருப்புப் பற்றி எரிந்துகொண்டிருந்ததைப் பார்க்கச் சென்றேன். அங்கே அவர்கள் என்னைக் கைது செய்து, கொள்ளி வைக்கிறவன் என்று என்மீது விசாரணை நடத்தினார்கள்!''

''எங்கே சட்டமிருக்கிறதோ அங்கே அநீதியுமிருக்கும்!'' என்று அந்தச் சிறிய மனிதன் குறுக்கிட்டுக் கூறினான்.

''நீர் இங்கே நீண்டகாலமாகவே இருந்து வருகிறீரா?'' என்று கடைசி உருளைக் கிழங்கை சுவைத்துச் சாப்பிட்டுக்கொண்டே பீயர் கேட்டார்.

''நானா? சென்ற ஞாயிற்றுக்கிழமைதான் அவர்கள் என்னை மாஸ்கோவிலுள்ள ஒரு வைத்திய மனையிலிருந்து இங்கே கொண்டு வந்தார்கள்.''

''அப்படியானால் நீர் ஒரு சிப்பாயா?''

''ஆம், நாங்கள் ஆஸ்பராக் பட்டாளத்தைச் சேர்ந்த சிப்பாய்கள். நான் ஜுரத்தால் செத்துக்கொண்டிருந்தேன். எங்களிடம் எதுவுமே தெரிவிக்கப்படவில்லை. நாங்கள் இருபது பேர் அங்கே படுத்துக்கிடந்தோம். இதெல்லாம் என்ன என்பது பற்றி எங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை, ஊகிக்கவும் முடியவில்லை!''

''நீர் இங்கே வந்ததற்கு வருத்தப்படுகிறீரா?'' என்று பீயர் வினவினார்.

''எப்படி ஒருவர் வருத்தப்படாமலிருக்க முடியும். இளைஞரே? என் பெயர் பிளாட்டோன். குடும்பப் பெயர் காராட்டேவ், '' என்றான் அவன். பீயர் தன்னை அழைப்பதில் சிரமம் இருக்கக் கூடாது என்று அவன் விரும்பியது தெரிந்தது. ''பட்டாளத்தில் என்னை ''சின்ன வல்லூறு'' என்றும் அழைப்பார்கள். யாரும் எப்படி விசனப்படாமலிருக்க முடியும்?'' மாஸ்கோ - நகரங்களின் தாய். இதையெல்லாம் ஒருவர் பார்த்துவிட்டு எவ்வாறு சஞ்சலப்படாமலிருப்பது? ஆனால், ''புழு கோவிசுக்கீரையை அரித்துத் தின்றாலும் முடிவில் சாகத் தான் செய்கிறது'' என்று பெரியவர்கள் எங்களிடம் சொல்வதுண்டு என்றான் அவன்.

''என்ன? நீர் என்ன சொன்னீர்?'' என்று பீயர் கேட்டார்.

''யார்? நானா?'' என்றான் காராட்டேவ். ''காரியங்கள் நாம் திட்டமிட்டபடி நடப்பதில்லை. கடவுள் சித்தப்படிதான் நடக்கின்றன என்று சொன்னேன்'' என்று அவன் பதிலளித்தான், தான் முன்னர் சொன்னதையே திரும்ப சொல்லிக்கொண்டிருப்ப தாக நினைத்துக்கொண்டே, உடனே அவன் மீண்டும் தொடர்ந்தான்!

''நல்லது, உமக்குக் குடும்ப சொத்து இருக்கிறதா, ஐயா? வீடு இருக்கிறதா? நல்ல வசதியான நிலையிலிருக்கிறீரா? மனையாட்டி இருக்கிறாளா? உமது வயதான பெற்றோர்கள் இன்னும் உயிரோடிக்கிறார்களா?'' என்று அவன் கேட்டான்.

பீயர் எதையும் பார்க்கமுடியாதபடி ஒரே இருட்டாக இருந்தாலும், சிப்பாய் இந்தக் கேள்விகளைக் கேட்கும்போது அவனது உதடுகளில் ஒரு அடக்கமான அன்புப் புன்னகை பரிணமித்ததை அவர் உணர்ந்தார். பீயருக்குப் பெற்றோர்கள் இல்லை, குறிப்பாக அவருக்குத் தாயில்லை என்பது பற்றி அவன் மன வேதனைப்பட்டதாகத் தோன்றிற்று.

''ஆலோசனைக்கு மனைவியும் உபசரிப்புக்கு மாமியாரும் இருந்தாலும், சொந்தத் தாயைப் போல அருமையிலும் அருமையாக வேறு யாரும் இருக்க முடியாது!'' என்றான் அவன். ''நல்லது, உமக்குக் குழந்தை குட்டிகள் உண்டா?'' என்று அவன் மேலும் கேட்டான்.

மீண்டும் பீயரின் ''இல்லை'' என்ற பதில் அவனைத் துயரத்திலாழ்த்தியதாகத் தோன்றிற்று. அவன் சொன்னான்.

''பரவாயில்லை! நீங்களெல்லாம் இன்னும் இளைஞர்கள்தானே, கடவுள் உங்களுக்குக் குழந்தைகள் உண்டாக அருள் புரிவார். இவையெல்லாவற்றையும்விட முக்கியம் அமைதியோடு வாழ்வதுதான்...''

''ஆனால் இப்போது எப்படியிருந்தால்தான் என்ன, '' என்று பீயரால் சொல்லாமலிருக்க முடியவில்லை.

''ஆ, என் அன்புத் தோழரே!'' என்று காராட்டேவ் மறுமொழி பகர்ந்தான். ''சிறையையோ அல்லது பிச்சைக்காரனின் பையையோ ஒரு போதும் மறுக்காதீர்!''

அவன் இன்னும் சௌகர்யமாக உட்கார்ந்துகொண்டு இருமினான். இதிலிருந்து அவன் ஒரு நீண்ட கதை சொல்வதற்குத் தயாராகிறான் என்பது தெளிவாயிற்று.

''நல்லது, என் அன்புத் தோழரே, நான் அப்போது வீட்டில்தான் வசித்து வந்தேன், '' என்று அவன் ஆரம்பித்தான். ''எங்களுக்கு வசதியான வீடு வாசல்கள் இருந்தன. ஏராளமான நிலங்கள் இருந்தன. விவசாயிகளாகிய நாங்கள் நன்றாகவே வாழ்ந்தோம். எங்கள் வீட்டிற்காக கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும். அப்போதெல்லாம் தகப்பனாரும் நாங்களும் அறுவடைக்குச் சென்றால், நாங்கள் ஏழு பேர் இருப்போம். நாங்கள் சுகமாகவே வாழ்ந்தோம். உண்மை விவசாயிகளாகவே இருந்தோம். அப்படி யிருக்கும் போதுதான் ஒரு சமயம்...''

இங்கே பிளாட்டோன் காராட்டேவ் வேறு யாரோ ஒருவருடைய காட்டிற்குத் தான் விறகுவெட்டச் சென்றதையும், காவற்காரனால் பிடிபட்டதையும், விசாரித்து கசையடி கொடுக்கப்பட்டதையும், பிறகு சிப்பாயாக சேவை செய்வதற்கு அனுப்பப்பட்டதையும் பற்றியெல்லாம் ஒரு நீண்ட கதை கூறினான்.

''நல்லது, வாலிபரே, '' ஒரு புன்னகை அவனது குரலில் தொனியை மாற்றிற்று, ''நாங்கள் இந்த சம்பவத்தை ஒரு துரதிர்ஷ்டம் என்றுதான் நினைத்தோம. ஆனால் உண்மையில் அது அதிர்ஷ்டமாக மாறிற்று! நான் மட்டும் அந்தக் குற்றம் செய்திருக்கவில்லையென்றால், என் சகோதரன் ஒரு சிப்பாயாக செல்ல நேர்ந்திருக்கும். ஆனால் எனக்கு இளையவனான என் சகோதரன் பிள்ளைக்குட்டிக்காரன். அவனுக்கு சின்னஞ் சிறுசுகளாக ஐந்து குழந்தைகள் உண்டு; எனக்கோ மனைவி ஒருத்திதான். எங்களுக்கு ஒரு சின்னப் பெண் இருந்தாள். ஆனால் நான் சிப்பாயாகப் போவதற்கு முன்பே கடவுள் அவளை எடுத்துக்கொண்டு விட்டார். விடுமுறையில் நான் வீட்டிற்கு வந்தேன். அப்போது அங்கே எப்படியிருந்தது என்பதைச் சொல்கிறேன். என் வீட்டார் முன்னைவிட நன்கு வாழ்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். முற்றத்தில் கால்நடைகள் நிரம்பியிருந்தன. இல்லத்தில் பெண்கள் குழுமியிருந்தார்கள். இரண்டு சகோதரர்கள் வெளியூர்களில் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். எல்லாருக்கும் இளையவனான மைக்கேல் மட்டும்தான் வீட்டிலிருந்தான். தகப்பனார் சொல்கிறார், ''எனக்கு என் குழந்தைகள் எல்லாரும் ஒரே மாதிரியானவர்கள்தான்; எந்த விரல் கடிபட்டாலும் வலிக்கத்தானே செய்யும். ஆனால் பிளாட்டோன் சிப்பாயாக சொல்லாதிருந்திருந்தால் மைக்கேல் போகவேண்டியிருந்திருக்கும்'' அவர் எங்கள் எல்லாரையும் தம்மிடம் அழைத்தார். நீர் நம்புவீரோ இல்லையோ, எங்களை தெய்வச் சிலையின் முன் நிறுத்தினார். ''மைக்கேல், '' என்கிறார் அவர். ''இங்கே வந்து அவனது பாதத்தில் விழுந்து வணங்கு; உன்னைத்தான், இளம் பெண்ணே நீயும் வந்து வணங்கு; பேரக் குழந்தைகளே, நீங்களும் வந்து அவன் முன்னால் வணங்குங்கள்! என்ன நான் சொல்வது புரிகிறதா?'' என்று கூறுகிறார் அவர். இப்படித்தான் விஷயம் இருக்கிறது, என் அன்புள்ள தோழரே. விதி ஒரு தலைக்காக அலைகிறது. ஆனால் நாம் எப்போதுமே, ''அது நல்லதல்ல - அது சரியல்ல!'' என்று குற்றங் கூறுகிறோம். நமது அதிர்ஷ்டம் இழுவை வலையிலுள்ள தண்ணீர் போன்றது: நாம் இதை இழுக்கும்போது புடைக்கிறது. ஆனால், வெளியே கொண்டுவரும்போது காலியாகிவிடுகிறது! உள்ள விஷயம் இதுதான்.

பிளாட்டோன் இப்போது வைக்கோலின் மீது போய் உட்கார்ந்தான். சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு அவன் எழுந்தான்.

''நல்லது, உமக்குத் தூக்க மயக்கமாக இருக்குமென்று நினைக்கிறேன், '' என்று கூறிவிட்டு அவன் வேகவேகமாகச் சிலுவைக் குறியிட்டுக் கொண்டு, ஜெபிக்க ஆரம்பித்தான்:

''ஏசு கிறிஸ்து பெருமானே, புனித மகாத்மாவாம் நிகோலஸே, பிராலா, லாவ்ராவே! ஏசுகிறிஸ்து பெருமானே, புனித மகாத்மாவாம் நிகோலஸே, பிராலா, லாவ்ராவே (பிலாரஸ், லாவ்ரஸ் என்போர் சகோதரர்கள், டயோகிலிஷியன் கீழ் உயிர்த்தியாகிகளாகி ருஷ்ய - கிரேக்க மத பீடத்தால் மகாத்மாக்களாக மதிக்கப்படுபவர்கள். விவாசயிகள் அவர்களைக் குதிரைகளைக் காக்கும் மகாத்மாக்களாகக் கருதுகிறார்கள்; அவர்களது பெயர்களைத் தவறாக உச்சரிக்கிறார்கள்.) ஏசுபெருமான் எங்கள்மீது கருணை வைத்து எங்களைக் காப்பாற்றுவாராக!'' என்று அவன் முடித்தான். பிறகு தரையில் விழுந்து வணங்கி எழுந்தான். பெருமூச்சுவிட்டான், மீண்டும் வைக்கோல் குவியலில் அமர்ந்தான். ''அதுதான் விஷயம். ஓ பரமபிதாவே, என்னை ஒரு கல்லைப்போலப் படுக்கவைத்து ஒரு ரொட்டியைப் போல எழுப்புங்கள்'' என்று அவன் வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டே தனது கோட்டை மேலே இழுத்து விட்டுக்கொண்டு, கீழே படுத்தான்.

''நீர் சொல்லிக்கொண்டிருந்தது என்ன ஜெபம்?'' என்று பீயர் கேட்டார்.

''நானா?'' என்று பிளாட்டோன் அரைத் தூக்கத்தில் முணுமுணுத்தான். ''நான் என்ன சொல்லிக்கொண்டிருந்தேன்? நான் ஜெபம் செய்து கொண்டிருந்தேன். நீர் ஜெபம் செய்வதில்லையா?''

''ஏன் செய்யாமலென்ன, '' என்றார் பீயர். ''அது சரி, நீர் என்னவோ பிராலா, லாவ்ரா என்று சொன்னீரே அது என்ன?''

''அவசியம் சொல்கிறேன்!'' என்று பிளாட்டோன் சட்டென்று பதிலளித்தான். ''அவையெல்லாம் குதிரைகளின் ஞானிகள். மிருகங்களிடமும் நாம் அனுதாபம் காட்ட வேண்டுமல்லவா. ஏ, அயோக்கியனே, பெட்டை நாய் குட்டியே, சுருண்டு படுத்து கதகதப்பாக்கிக்கொண்டாயா!'' என்றான் காராட்டேவ் தனது காலடியில் படுத்துக்கிடந்த நாயைத் தடவிக் கொடுத்தவாறு. பிறகு அவன் மீண்டும்புரண்டு படுத்து உடனே தூங்கிப் போய்விட்டான்.

வெளியே எங்கோ தூரத்திலிருந்து அழுகுரல்களும், அலறல்களும் வந்துகொண்டிருந்தன. கொட்டகையின் இடுக்குகள் வழியாக தீக்கொழுந்துகள் தெரிந்தன. ஆனால் உள்ளேயோ அந்தகாரமும் நிசப்தமும் நிலவின. பீயர் நீண்ட நேரம் வரை

தூங்கவில்லை; கண்களைத் திறந்தவாறே இருட்டில் படுத்துக் கிடந்தார்; தனக்குப் பக்கத்தில் நித்திரை செய்துகொண்டிருந்த பிளாட்டோவின் லயம் தப்பாத குறட்டையை கவனித்துக் கொண்டிருந்தார். உடைந்து நொறுங்கிப்போய்விட்டதாக தாம் கருதிய உலகம் மீண்டும் புது வனப்போடு, புதிய, அசைக்க முடியாத அஸ்திவாரங்களோடு தம் ஆன்மாவில் கிளர்ந்தெழுந்து கொண்டிருப்பதை அவர் உணர்ந்தார்.

# 12

## 13

பீயர் வைக்கப்பட்டிருந்த அந்தக் கொட்டகையில் இருபத்தி மூன்று சிப்பாய்களும், மூன்று ராணுவ அதிகாரிகளும், இரண்டு உத்தியோகஸ்தர் களும் அடைக்கப்பட்டிருந்தனர். அங்கேயே பீயர் நான்கு வாரங்கள் வரை இருந்தார்.

பீயர் அவர்களைப் பின்னால் நினைத்துப் பார்த்தபோது அவர்களெல்லாம் அவருக்குத் தெளிவற்ற உருவங்களாகவே தோன்றின. ஆனால் பிளாட்டோன் காராட்டேவ் மட்டும் இதற்கு விதிவிலக்காக இருந்தான். அவன் எப்போதும் உயிர்ப்புள்ள, விலை மதிப்பற்ற ஒரு நினைவாக, அன்பும் நிஷ்களங்கமும் மிளிரும் ருஷ்யப் பண்பின் ஒரு உருவகமாக அவரது மனதில் குடி கொண்டிருந்தான். ஏதோ ஒருவித களங்கமின்மை அவனிடம் இருப்பதாக பீயர் எடுத்த எடுப்பிலேயே அவனைப்பற்றி கருத்து கொண்டிருந்தார். அந்த கருத்து அவர் தமது நண்பனை மறுநாள் காலையில் பார்த்தபொழுது முற்றிலும் உறுதியாயிற்று; ஒரு பிரஞ்சு மேற்கோட்டு, அதனைச் சுற்றிலும் ஒரு கயிறு, ஒரு சிப்பாயின் தொப்பி, மரப்பட்டை செருப்புகள் ஆகிய இந்தக் கோலத் தோடிருந்த பிளாட்டோனின் முழு உருவமும் களங்கமற்று இருந்தது. அவனது சிரசு களங்கமற்றிருந்தது. அவனது முதுகு, மார்பு, புஜங்கள், ஏன் எதையோ ஆலிங்கனம் செய்வதற்கு எப்போதும் தயாராய் இருப்பதுபோல அவன் விரித்துக் கொண்டிருக்கும் கரங்கள்கூட களங்கமற்றிருந்தன. அவனது இனிய புன்னகை, அவனது மென்மையான, பெரிய பழுப்புநிறக் கண்கள் ஆகியவையும் களங்கமற்றிருந்தன.

பிளாட்டோன் காராட்டேவ் ஒரு வயதான சிப்பாய்போல தனது சண்டை அனுபவங்களைக் கதை கதையாகக் கூறுவதைக் கேட்டால் அவனுக்கு ஐம்பது வயதாவது இருக்கும் என்ற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கும். உண்மையில் அவனுக்கே அவன் வயது தெரியாது. அதை நிர்ணயமாகக் கூறவும் அவன் முடியாதவனாக

இருந்தான். ஆனால் அவன் அடிக்கடி சிரிக்கும்போது இடைவெளியில்லாமல் இரண்டு அரை வட்டங்களாக வெளியே தெரியும் அவனது பிரகாசமான, பெரிய வெண்ணிறப் பற்கள் ஆரோக்கியமாக இருந்தன. அவனது தாடியிலோ அல்லது தலையிலோ ஒரு நரை மயிர்கூட காணப்படவில்லை. அவனது முழு திரேகமும் நெகிழ்ச்சியான ஒரு தோற்றத்தை, அதிலும் விசேஷமாக உறுதியும் திடமும் கொண்ட ஒரு தோற்றத்தை அளித்தது.

அவனது முகத்தில் அலைஅலையாக மெல்லிய சுருக்கங்கள் இழையோடிருந்தாலும் அது இளமையோடும் களங்கமற்றும் காட்சியளித்தது. அவனது குரல் இன்ப நாதம்போல் இனிமையாக இருந்தது. ஆனால் அவனது பேச்சின் முக்கியச் சிறப்பு என்னவென்றால் அதில் காணப்பட்ட ஒளிவு மறைவின்மையும், இணக்கமும்தான. அவன் தான் என்ன சொன்னோம், என்ன சொல்லப் போகிறோம் என்பதை ஆழ்ந்து சிந்திப்பதில்லை. எனவே, அவனது சரளமான நேர்மையான பேச்சுக்கு வெல்ல முடியாத ஒரு வசீகரண சக்தியிருந்தது.

அவன் சிறைப்பட்டிருந்த ஆரம்ப நாட்களில் களைப்பு என்றால் என்ன, நோய் என்றால் என்னவென்றே அவனுக்குத் தெரியாதோ என்பதுபோல அவனது உடல் வலிவும் உற்சாகமும் இருந்தன. அவன் ஒவ்வொரு நாள் இரவும் நித்திரைக்குப் போகுமுன் சொல்வான்: ''ஆண்டவரே, என்னைக் கல்லைப்போல் படுக்கவைத்து ரொட்டியைப்போல் எழுப்புங்கள்!'' பிறகு ஒவ்வொரு நாள் காலையிலும் எழுந்ததும் சொல்வான்: ''நான் சுருண்டு படுத்து நித்திரை போனேன், தூக்கத்தை உதறி விழித்தெழுந்தேன்.'' உண்மைதான், கல்லைப்போல் நித்திரை போவதற்கே அவன் படுத்தான்; தூக்கத்திலிருந்து எழுந்ததும் நேரே விளையாடுவதற்குச் சித்தமாக இருக்கும் குழந்தைபோல ஒரு விநாடியும் தாமதமின்றி ஏதாவது ஒரு வேலை செய்யத் தயாராவதற்கே அவன் விழித்தான். அவனால் எந்த வேலையும் செய்ய முடியும், மிக பிரமாதமாக அல்ல, அதே சமயம் மோசமாகவுமல்ல, அவன் ரொட்டி சுட்டான், உணவு சமைத்தான், துணி தைத்தான், மரம் இழைத்தான், பூட்சுகளை செப்பனிட்டான். அவன் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருந்தான். பிறரோடு உரையாடுவதை அவன் விரும்பினான். ஆனால் அந்த உரையாடலை இரவில்தான் நடத்தினான். பாட்டுகள் பாடுவதுங் கூட அப்படிதான். தான் பாடுவதை மற்றவர்கள் கவனிக்கிறார்கள் என்பதை அறியும் ஒரு தேர்ந்த பாடகன்போல் அவன் பாடமாட்டான். அதற்குப் பதில் பறவைகள் போல் பாடினான்.

அப்படிப் பாடும்போது நீட்டி நிமிர்ந்து படுப்பவர்கள் போலவும், காலாறுவதற்கு நடப்பவர்கள் போலவும் விட்டுவிட்டு ஒலிகளை எழுப்பினான். அந்த ஒலிகள் எப்போதும் உச்ச ஸ்தாயியிலும், மென்மையாகவும், சோக மயமாகவும், கிட்டத்தட்ட பெண் களுடையது போலவுமிருந்தன. அத்தகைய சந்தர்ப்பங்களில் அவனது முகம் மிகவும் கடுமையாக இருந்தது.

கைதாகி தாடி வளர்க்க ஆரம்பித்திருந்த அவன் தன் மீது திணிக்கப்பட்ட எல்லாவற்றையும் - தனக்கு அந்நியமானதும், ராணுவ சம்பந்தப்பட்டதுமான ஒவ்வொன்றையும - உதறி எறிந்துவிட்டு தனது பழைய விவசாய பழக்க வழக்கங்களுக்குத் திரும்பினான்.

''ராஜாவில் உள்ள ஒரு சிப்பாய் - கால் சட்டைக்கு வெளியே உள்ள ஒரு குடுத்துணி, '' (விவசாயிகள் தங்கள் சட்டைகளின் விளிம்புகள் கால் சட்டைகளுக்கு வெளியே தொங்கும்படி அணிந்து, அவற்றின்மீது இடுப்பைச் சுற்றி கச்சை கட்டிக் கொள்வார்கள். சிப்பாயோ தன் சட்டை விளிம்பை கால் சட்டைக்குள் சொருகிக்கொள்வான்.) என்று அவன் கூறுவான்.

அவன் தனது சிப்பாய் வாழ்க்கை பற்றி குறைபட்டுக் கொள்ளாவிட்டாலும் அதைப்பற்றி அவன் பேச விரும்புவதில்லை. தனது ராணுவ சேவை காலம் முழுவதிலும் ஒரு தடவைகூட கசையடி பட்டதில்லை என்பதை அவன் அடிக்கடி பிரஸ்தாபிப்பான். அவன் தன்னைப்பற்றி ஏதாவது சொல்ல முற்பட்டால் அது பொதுவாக அவனது ''கிறிஸ்துவ'' (ருஷ்ய மொழியில் கிறிஸ்துவ என்னும் சொல்லும், விவசாயிகள் என்னும் சொல்லும் ஒரே மாதிரியானவை; ஒன்று மற்றொன்றிலிருந்து வந்தவை. காராட்டேவின உச்சரிப்பு அவற்றைப் பாகுபடுத்திக் காட்டிற்று.) வாழ்க்கை பற்றிய சில பழைய, அரிய நினைவுகளாகத்தான் இருக்கும். அவனது பேச்சில் ஏராளமான பழமொழிகள் நிரம்பியிருக்கும். அவை பெரும்பாலும் சிப்பாய்கள் உபயோகிக்கும் கொச்சையான, ஆபாசமான பழமொழிகளாக இருக்காது. அதற்குப் பதில் நாடோடி வழக்கிலிருக்கும் பழமொழிகளாக இருக்கும். அவற்றை சந்தர்ப்பமின்றிப் பயன்படுத்தும் போது மிகவும் அற்பமானதாகத் தோன்றும். ஆனால் உரிய இடத்தில் உபயோகிக்கையில் அவை திடீரென்று முக்கியத்துவம் பெற்று ஆழ்ந்த கருத்துள்ளதாக விளங்கும்.

அவன் அடிக்கடி தான் ஏற்கெனவே சொன்னவற்றிற்கு முற்றிலும் நேர்மாறானதைச் சொல்வான். ஆனால் இரண்டும் சரியாக இருக்கும். அவன் நிறைய பேசுவதை விரும்பினான். பேச்சின்

இதமான சொற்களையும் நாடோடிப் பழமொழிகளையும் கலந்து நன்கு பேசினான். அவன் உபயோகித்த பழமொழிகள் அவனது சொந்தக் கற்பனை என்றே பீயர் நினைத்தார். எனினும் அவனது பேச்சின் பிரதான கவர்ச்சி இதுவல்ல. அதுவேறு: அதாவது, சர்வ சாதாரண சம்பவங்களும் - சில சமயங்களில் பீயரே கவனிக்காமல் நடந்தது போன்றவைகள் - காராட்டேவின் பேச்சில் கம்பீரத் தன்மை பெற்றன. இதுவே அவனது பேச்சிலிருந்த முக்கிய கவர்ச்சி. மாலை நேரங்களில் சிப்பாய்களில் ஒருவன் நாடோடிக் கதைகள் சொல்வான். இவை எப்போதும் ஒரே மாதிரியாகவே இருக்கும். எனினும் இவற்றைக் கேட்பதில் அவனுக்குப் பிரியம். ஆனால் இவற்றைவிட யதார்த்த வாழ்க்கை பற்றி கதைகள் கேட்பதை அவன் இன்னும் அதிகமாக விரும்பினான். இத்தகைய கதைகள் கேட்கும்போது அவன் மகிழ்ச்சியோடு முறுவல் பூப்பான், அவ்வப்போது குறுக்கிட்டு ஏதாவது ஒரு வார்த்தை கூறுவான். அல்லது சொல்லப்பட்ட கதையின் நீதி போதனை தனக்குத் தெளிவாவதற்காகக் கேள்வி கேட்பான். காராட்டேவுக்கு பற்றுதல்களோ, நட்புறவுகளோ அல்லது காதலோ கிடையாது. பீயர் அவற்றைப் புரிந்து கொண்டுள்ளபடி. எனினும் வாழ்க்கை மூலம் அவனுக்குத் தொடர்பு ஏற்பட்ட ஒவ்வொன்றையும், குறிப்பாக மனிதனை - எந்த ஒரு குறிப்பிட்ட மனிதன் என்று இல்லாமல் அவனோடு இருகக நேர்ந்த சகலரையும் - அவன் அன்போடு நேசித்தான், அவர்களோடு வாழ்ந்தான், அவன் தனது நாயை, தனது தோழர்களை, பிரஞ்சுக்காரர்களை, தனக்கு அருகாமையிலுள்ள பீயரை நேசித்தான். ஆனால், காராட்டேவ் தன்னிடம் அன்போடு இரக்கம் காட்டினாலும் (இதன் மூலம் அவன் தன்னை அறியாமலேயே பீயரின் ஆன்மீக வாழ்வுக்கு அதன் உரிய பங்கை ஈந்தான்) தன்னிடமிருந்து பிரிந்து செல்வது பற்றி அவன் ஒரு விநாடியும் வேதனைப்பட மாட்டான் என்பதை பீயர் உணர்ந்தார். அவ்வாறே காராட்டேவின் பிரிவைப்பற்றி தானும் துயரப்படப் போவதில்லை என்பதையும் அவர் புரிந்துகொள்ள ஆரம்பித்தார்.

இதர எல்லாக் கைதிகளுக்கும் பிளாட்டோன் காராட்டேவ் மிகவும் சாதாரணமான ஒரு சிப்பாயாகவே காட்சியளித்தான். அவர்கள் அவனை ''சின்ன வல்லூறு'' என்றோ அல்லது ''அப்பாவி'' என்றோ அழைத்தார்கள். அவனை வேடிக்கையாகக் கேலி செய்தார்கள். சிற்றேவல் செய்ய அனுப்பினார்கள். ஆனால் பீயருக்கு முதல் நாள் இரவு அவன் எப்படித் தோன்றினானோ அப்படியேதான் ஆழம் காண முடியாதவனாக, களங்க மில்லாதவனாக, எளிமை, உண்மை ஆகியவற்றின் உருவகமாக எப்போதும் தோன்றினான்.

பிளாட்டோன் காராட்டேவுக்குத் தன் பிரார்த்தனைகளைத் தவிர மனப்பாடமாக வேறு எதுவும் தெரியாது. அவன் பேச ஆரம்பிக்கும்போது எப்படி முடிக்கப் போகிறோம் என்பது அவனுக்கே தெரியாதோ என்பது போலத் தோன்றினான்.

சில சமயங்களில் பீயர் அவனது சொற்களின் அர்த்தத்தால் கவரப்பட்டு அவற்றை மறுபடியும் கூறும்படி கேட்பார். ஆனால், ஒரு விநாடிக்கு, முன் கூறியதையேகூட பிளாட்டோனால் நினைவுபடுத்திச் சொல்ல முடியாது. இதேபோலத்தான் அவனுக்குப் பிடித்தமான பாட்டில் வரும் உள்ளூரான், பூவரசுமரம், எனது உள்ளம் வெறுப்படைந்திருக்கிறது என்பது போன்ற சொற்களையும் அவனால் ஒருபோதும் பீயருக்குத் திரும்பக் கூற முடியாது. அதிலும் அவன் பாடாமல் வசன நடையாகக் கூறினானேயானால் அதிலிருந்து ஒரு அர்த்தத்தையும் புரிந்து கொள்ள முடியாது. வார்த்தைகளை அவற்றை உபயோகிக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைகளிலிருந்து தான் அவற்றின் பொருளைப் புரிந்து கொள்வான். மற்றபடி தனியாக அவற்றின் அர்த்தத்தை தெரிந்துகொள்ளமாட்டான. அது அவனால் இயலாது. அவனது ஒவ்வொரு வார்த்தையும் செயலும் அவனுக்கே தெரியாத ஒரு கிரியையின் அதாவது அவனது வாழ்க்கையின் ஒரு வெளியீடாக இருந்தது. எனினும் தனது வாழ்க்கையை தனித்துப் பார்க்கும்போது அது அவனுக்கு அர்த்தமற்றதாக இருந்தது. முழுமையின் ஒரு பகுதியாக இருக்கும்போதுதான் அது அர்த்தமுள்ளதாக இருந்தது. இந்த முழுமையை அவன் எப்போதும் உணர்ந்தவனாக இருந்தான். அவனது சொற்களும் செயல்களும் மலரிலிருந்து மணம் கமழ்வதுபோல இன்றியமையாமலும், சீராகவும், சுயமாகவும் அவனிடமிருந்து பெருக்கெடுத்தன. எந்த ஒரு சொல்லையும் அல்லது செயலையும் தனித்து எடுத்துப் பார்த்து அவற்றின் மதிப்பையோ அல்லது முக்கியத்துவத்தையோ அவனால் புரிந்துகொள்ள முடியாது.

## 12

### 14

இளவரசி மேரி தனது சகோதரர் யாரோஸ்லாவின் ராஸ்டோவ்களோடு இருக்கிறார் என்பதை நிக்கலஸ் மூலம் அறிந்ததும் உடனே அங்கே புறப்படுவதற்கு ஆயத்தமானாள். அவளது அத்தை தடுத்தும் கேட்கவில்லை. தான்மட்டும் போகாமல் தன்னுடன் தனது மருமகனையும் அழைத்துச் செல்லத் தீர்மானித்தாள். யாரோஸ்லாவுக்குச் செல்வது கஷ்டமா அல்லது சுலபமா, சாத்தியமா அல்லது அசாத்தியமா என்று அவள்

கேட்கவில்லை, அதை அறிந்துகொள்ள அவள் விரும்பவில்லை. அநேகமாக செத்துக்கொண்டிருக்கும் தன் சகோதரர் பக்கத்தில் தான் இருப்பது மட்டுமின்றி, அவரது மகனை அவரிடம் அழைத்துச் செல்வதற்கு முடிந்த தனைத்தும் செய்வதும் தனது கடமை என்று அவள் நினைத்தாள். எனவே, அவள் புறப்படுவதற்குத் தயாரானாள். அவளுக்கு ஒரு சிறு சந்தேகம் ஏற்பட்டது. இளவரசர் ஆண்ட்ரூவே ஏன் நேரடியாக செய்தி அனுப்பவில்லை? ஒருவேளை கடிதம் எழுத முடியாதபடி அவர் மிகவும் பலஹீனமாக இருக்கலாம் அல்லது இந்த நீண்ட பயணம் அவளுக்கும் தன் மகனுக்கும் மிகவும் கஷ்டமானது, அபாயகரமானது என்று அவர் நினைத்திருக்கலாம். இவ்விதம் இளவரசி மேரி தன்னை சமாதானம் செய்து கொண்டாள்.

ஒருசில தினங்களில் இளரவசி மேரி புறப்படுவதற்குத் தயாராகிவிட்டாள். குடும்பத்திற்குச் சொந்தமான பெரிய கோச் வண்டியும் ஒரு சாமான் வண்டியும்தான் இப்போது அவளது பிரயாண சாதனங்கள். இந்தக் கோச்வண்டியில் முன்பொரு தடவை அவள் வோரோனெஸுக்கு பயணம் செய்திருக்கிறாள். அவளுடன் தற்போது குமாரி பௌரியன், குட்டி நிக்கலஸ், அவனுடைய ஆசிரியர், அவளது வயதான தாதி, மூன்று வேலைக்காரப் பெண்கள், டிக்கோன், அவளது அத்தை அனுப்பிவைத்த உதவியாள் ஆகியோர் பிரயாணம் செய்தனர்.

மாஸ்கோ வழியாகச் செல்லும் வழக்கமான மார்க்கத்தை நினைத்துக்கூட பார்க்க முடியாது. எனவே, இளவரசி மேரி லிபெட்ஸ்க், ராயஜான், விளாடிமீர், ஷுயா முதலிய ஊர்களின் வழியாகச் செல்லும் சுற்று மார்க்கத்தைத்தான் மேற்கொள்ளும்படி நேர்ந்தது. இந்த மார்க்கம் நீண்ட தூரமுள்ளதாகவும், ஒவ்வொரு இடத்திலும் தபாற் குதிரைகள் கிடைக்காததால் மிகவும் கஷ்டம் நிறைந்ததாகவும், பிரெஞ்சுக்காரர்கள் தென்படுவதாகக் கூறப்படும் ரயாஜான் அருகே அபாயமுள்ளதாகவும் கூட இருந்தது.

இந்தக் கஷ்டமான பயணத்தின்போது இளவரசி மேரி காட்டிய ஆற்றலையும் திட சித்தத்தையும் கண்டு குமாரி பௌரியனும், வேலைக்காரிகளும் ஆச்சரியமடைந்துவிட்டனர். அவள் இரவில் நேரம் கழித்துப் படுக்கைக்குச் சென்றாள். காலையில் மற்ற எவருக்கும் முன்னால் எழுந்தாள். எந்த இன்னல் இடுக்கண் களையும் கண்டு அவள் அஞ்சவில்லை. அவளது ஊக்கமும் திறமும் மற்ற சக பிரயாணிகளையும் ஆட்கொள்ளவே, அவர்கள் இரண்டாவது வாரத்தின் இறுதியில் யாரோஸ்லாவை நெருங்கினர்.

வாரோனெச்சில் அவள் தங்கிய கடைசி நாட்கள் அவளது வாழ்க்கையிலேயே மிகவும் மகிழ்ச்சி நிறைந்த நாட்களாகும். ராஸ்டோவ்மீது அவள் கொண்ட காதல் அவளை வேதனைப்

படுத்தவோ அல்லது மனக் கலக்கமடையச் செய்யவோ இல்லை. அதற்கு பதில் அது அவளது முழு ஆன்மாவையும் நிரப்பிக் கொண்டு, அவளுள் ஒரு பிரிக்க முடியாத பகுதியாகிவிட்டது. அவள் அதை எதிர்த்து இப்போதெல்லாம் போராடுவதில்லை. நான் நேசிக்கிறோம், நேசிக்கப்படுகிறோம் என்று சமீப காலமாக அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. எனினும் இதை ஒருபோதும் தனக்குள் வார்த்தைகள் மூலம் சொல்லிக் கொண்டதில்லை. தனது சகோதரர் ராஸ்டோவ்களோடு தங்கியிருக்கிறார் என்பதைச் சொல்வதற்கு சென்ற தடவை நிக்கலஸ் வந்திருந்தபோது இந்த நம்பிக்கை மேலும் உறுதியாயிற்று. இளவரசர் ஆண்ட்ரூ பிழைத்தெழுந்தால் நட்டாஷாவுடன் அவரது உறவுகள் மீண்டும் ஆரம்பமாகலாம் என்பது பற்றி நிக்கலஸ் ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை. எனினும் இந்த விஷயம் அவருக்குத் தெரியும் என்பதையும் இதைப்பற்றித்தான் அவர் யோசித்துக் கொண்டிருக்கிறார் என்பதையும் அவரது முகத்தில் அவள் கண்டாள்.

இவ்வாறு அவர் இளவரசர் ஆண்ட்ரூ பற்றி மனம் திறந்து கூறாவிட்டாலும், அவளுடன் அவருக்கிருந்த அன்பும் விநயமும் மென்மையும் கொண்ட உறவு மாறாமல் அப்படியே இருந்தது மட்டுமின்றி, அவர்களுக்குக் கிடையேயுள்ள குடும்பத் தொடர்பு தமது நட்பைத் தாராளமாக வெளியிடுவதற்கு அநுமதித்தது பற்றி அவர் மகிழ்ச்சியடையவும் செய்தார் என்று சில சமயங்களில் இளவரசி மேரிக்குத் தோன்றிற்று. தன் வாழ்க்கையிலேயே முதல் தடவையாக, அதிலும் ஒரே தடவைதான் காதலித்தோம் என்பது அவளுக்குத் தெரியும். தான் காதலிக்கப்படுகிறோம் என்பதையும் அவள் உணர்ந்தாள். இதற்காக மகிழ்ச்சி அடையவும் செய்தாள்.

ஆனால் அவளது ஆன்மீக இயல்பின் ஒரு பகுதியாக விளங்கிய இந்த மகிழ்ச்சி அவள் தன் சகோதரருக்காக முழு வேகத்தோடு துயரப்படுவதைத் தடுக்கவில்லை; அதற்குப் பதில் அந்த ஆன்மீக அமைதி அவள் தன் சகோதரர் விஷயத்தில் தன் உணர்ச்சிகளைப் பரிபூரணமாக வெளிப்படுத்துவதை மேலும் சாத்தியமாக்கிற்று. அவள் வாரோனெச்சை விட்டுப் புறப்பட்டபோது இந்த உணர்ச்சி உச்சக் கட்டத்திலிருந்தது. அவளை வழியனுப்பி வைத்தவர்கள் அவளது கவலைதோய்ந்த முகத்தைப் பார்த்து வழியில் அவள் நோய்வாய்ப்படத்தான் போகிறாள் என்று நிச்சயமாக நம்பினார்கள். ஆனால், பிரயாணத்தின் கஷ்டங்களும், அதில் அவள் செலுத்திய கவனமும் சிறிது காலத்திற்கு அவளை அவளது மனவேதனையிலிருந்து காப்பாற்றி, அவளுக்குப் பலத்தை அளித்தன.

சாதாரணமாக பிரயாணம் செய்யும்போது எப்போதும் நடப்பது போல, இளவரசி மேரி பயணத்தைப் பற்றித்தான் நினைத்தாளே

தவிர அதன் குறிக்கோளை மறந்துவிட்டாள். ஆனால் அவள் யாரோஸ்லாவை நெருங்கியதும் அங்கே தனக்காக என்ன செய்தி காத்திருக்கிறதோ - பல நாட்களுக்குப் பிறகல்ல, அன்று மாலையே - என்னும் எண்ணம் மீண்டும் தலைதூக்கி அவளைத் துயரத்தின்எல்லைக்கே இட்டுச் சென்றது.

யாரோஸ்லாவில் ராஸ்டோவ்கள் எங்கே தங்கியிருக்கிறார்கள், இளவரசர் ஆண்ட்ரூவின் நிலை எப்படியிருக்கிறது என்பதைக் கண்டறிய முன்னதாகவே ஒரு தூதன் அனுப்பப்பட்டிருந்தான். அவன் தனக்கிடப்பட்ட பணியை முடித்துக்கொண்டு திரும்பி வந்துகொண்டிருந்தபோது தனது எஜமானியின் பெரிய ''கோச்'' வண்டியை நகரவாயிலில் சந்தித்தான். அப்போது ஜன்னலின் வழியாகத் தன்னை ஆவலோடு நோக்கிய இளவரசியின் முகம் பயங்கரமாக வெளிறிப்போயிருப்பதைக் கண்டு திடுக்கிட்டு விட்டான்.

''நான் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு வந்திருக்கிறேன் மாட்சிமை தங்கிய இளவரசி அவர்களே! ராஸ்டோவ்கள் வணிகர் புரோனிக்கோவின் இல்லத்தில் தங்கியிருக்கிறார்கள். அந்த வீடு இங்கிருந்து ரொம்ப தூரத்தில் இல்லை. வால்காவுக்கு அக்கரையில் சதுக்கத்தில் இருக்கிறது.'' என்றான் தூதன்.

இளவரசி மேரி முக்கியமாக அறிந்துகொள்ள விரும்பியது தனது சகோதரர் எப்படியிருக்கிறார் என்பதைப் பற்றித்தான். அதைக் குறித்து தூதன் ஏன் ஒன்றும் சொல்லவில்லை என்பதைப் புரிந்துகொள்ள முடியாதவளாக அவனை பயபிராந்தியோடு நோக்கினாள்.

''இளவரசர் எப்படியிருக்கிறார்?'' அவள் கேட்டாள்.

''மாட்சிமைதங்கிய கோமகன் அதே வீட்டில் அவர்களோடே தங்கியிருக்கிறார்.''

''அப்படியானால் அவர் உயிரோடிருக்கிறார்'' என்று நினைத்தாள் இளவரசி மேரி. தாழ்ந்த குரலில் அவள் தொடர்ந்து கேட்டாள்: ''அவர் எப்படியிருக்கிறார்?''

''இன்னும் அப்படியேதான் இருக்கிறார் என்று வேலைக்காரர்கள் கூறுகிறார்கள்!''

''இன்னும் அப்படியேதான் இருக்கிறார்'' என்பதற்கு என்ன அர்த்தம் என்று இளவரசி மேரி கேட்கவில்லை. ஆனால் தன் முன்னால் உட்கார்ந்து நகரத்தை குதூகலமாக வேடிக்கை பார்த்தவாறு வந்துகொண்டிருந்த ஏழு வயது நிரம்பிய குட்டி நிக்கலஸை யாரும் கவனிக்காதபடி கண நேரம் பார்த்துவிட்டுத்

தலையைக் குனிந்துகொண்டாள். ஆடி அசைந்து கடகடவென்று சென்றுகொண்டிருந்த அந்தப் பெரிய வண்டி நிற்கும் வரை அவள் மீண்டும் தன் தலையைத் தூக்கவே இல்லை. வண்டி நின்றதும் அதன் இறங்கு படிகள் கீழே தாழ்த்தப்படும் ஒலி கேட்டது.

வண்டியின் கதவு திறக்கப்பட்டது. இடதுபுறத்தில் தண்ணீர் - ஒரு பெரிய நதி - இருந்தது; வலது புறத்தில் முகமண்டபம் இருந்தது. வாசலில் வேலைக்காரர்களும், கருகருவென்றிருந்த கூந்தலை ஒரு பெரிய பின்னலாகப் போட்டுக்கொண்டிருந்த ஒரு பெண்ணும் நின்றுகொண்டிருந்தனர். கொழுகொழுவென்றிருந்த அந்தப் பெண் இனிமையற்ற முறையில் முறுவலித்ததுபோல் இளவரசி மேரிக்குத் தோன்றிற்று. (அந்தப் பெண்தான் சோனியா) இளவரசி மேரி படிகளில் ஏறி ஓடினாள். ''இந்தப் பக்கம், இந்தப் பக்கம்!'' என்றாள் அந்தப் பெண் அதே செயற்கையான புன்சிரிப்போடு. கூடத்தில் இளவரசி கிழக்கத்திய பாணியிலிருந்த ஒரு வயதான அம்மாளைச் சந்தித்தாள். அந்த அம்மாள் அவளை எதிர்கொண்டழைக்க உணர்ச்சி வயப்பட்ட தோற்றத்தோடு விரைந்து வந்துகொண்டிருந்தாள். அவள்தான் கோமகள். அவள் இளவரசி மேரியைக் கட்டித் தழுவி முத்தமிட்டாள்.

''மோன் என் பேன்ட்!'' என்று அவள் முணுமுணுத்தாள், ''ஜிவவ்ஸ் எய்மே எட் வவ்ஸ் கொன்னாய்ஸ் டெபூய்ஸ் லாங்டெம்ப்ஸ்.'' (ஏன் குழந்தாய்? உன்னை நான் நேசிக்கிறேன். உன்னை நீண்டகாலமாக அறிவேன்.)

இளவரசி மேரி தன் பதட்டத்துக்கிடையேயும் அவள்தான் கோமகள் என்பதையும் அவளிடம் ஏதாவது கூறுவது அவசியம் என்பதையும் உணர்ந்தாள். உடனே எப்படிச் செய்தோம் என்று தனக்கே தெரியாமல் ஒருசில இங்கிதமான பிரஞ்சு சொற்களைத் தேடிப் பிடித்து அந்த அம்மாள் பேசி அதே மெல்லிய குரலில் பதிலளித்துவிட்டுக் கேட்டாள்:

''அவர் எப்படி இருக்கிறார்?''

''அவருக்கு ஆபத்து ஒன்றுமில்லை என்று டாக்டர் கூறுகிறார்'' என்றாள் கோமகள். ஆனால் அவள் பேசும்போது ஒரு பெருமூச்சோடு கண்களை உயர்த்தினாள். அவளது செய்கை அவளது சொற்களுக்கு முரணாக இருந்தது.

''அவர் எங்கே இருக்கிறார்? நான் பார்க்க முடியுமா? - நான்?'' என்று இளவரசி கேட்டாள்.

''கொஞ்சம் பொறு இளவரசியே, கொஞ்சம் பொறு என் அன்பே. இவன் அவருடைய மகனா?'' என்றாள் கோமகள், டெசால்லஸுடன் உள்ளே வந்துகொண்டிருந்த குட்டி

நிக்கலஸ்ஸைப் பார்த்துவிட்டு. ''இது பெரிய வீடு, இதில் எல்லோருக்கும் இடமிருக்கிறது. ஓ, எவ்வளவு அழகான பையன்!''

கோமகள் இளவரசி மேரியை வரவேற்பு அறைக்கு அழைத்துச் சென்றாள். அங்கே சோனியாவும் குமாரி பௌரியனும் பேசிக்கொண்டிருந்தனர். கோமகள் பையனை அன்போடு கட்டித் தழுவி முத்தமிட்டாள். இதற்கிடையே முதிய கோமகன் அங்கே வந்து இளவரசியை வரவேற்றார். இளவரசி மேரி அவரைச் சென்ற தடவை பார்த்ததற்கு இப்போது மிகவும் மாறிப்போயிருந்தார். அன்று அவர் சுறுசுறுப்பும், உற்சாகமும், சுயநம்பிக்கையு முள்ளவராக இருந்தார். இன்று பார்ப்பதற்குப் பரிதாபகரமாக, ஏதோ கிலியடைந்த மனிதர் போல் காணப்பட்டார். இளவரசி மேரியோடு பேசிக்கொண்டிருக்கும்போதே, தான் செய்தது சரிதானா என்று ஒவ்வொருவரையும் கேட்பதுபோல அடிக்கடி சுற்றுமுற்றும் பார்த்தவாறு இருந்தார். மாஸ்கோவும் அவரது சொத்தும் அழிந்த பிறகு தமது பழைய வழக்கங்களையே விட்டுவிட்டார்; தமது முக்கியத்துவத்தைப் பற்றிய உணர்வையே இழந்துவிட்டவர்போல் காணப்பட்டார்; அதோடு வாழ்க்கையில் தமக்கு இனியும் இடமில்லையோ என்று கூட நினைக்க ஆரம்பித்தார்.

அந்த விநாடியில் இளவரசிக்கிருந்த ஒரே ஒரு விருப்பம் தனது சகோதரரை உடனடியாகப் பார்க்கவேண்டும் என்பதுதான். அப்படியிருக்கும்போது அவர்கள் தன்னை உபசரிக்க முயற்சித்ததும், தனது மருமகனைப் பாராட்டப் புறப்பட்டதும் அவளுக்கு சங்கடமாக இருந்தது. எனினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தன்னைச் சுற்றி நடப்பதையெல்லாம் பேசாமல் கவனித்துக்கொண்டிருந்தாள். சற்று நேரத்திற்கு இந்தப் புதிய சூழ்நிலைக்குத் தன்னை உட்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்தாள். இது தனக்கு கஷ்டமான காரியம் என்றாலும் தவிர்க்கமுடியாதது என்பதைத் தெரிந்துகொண்டாள். எனவே அங்குள்ளவர்களைப் பற்றி அவள் எரிச்சல் ஒன்றும் கொள்ளவில்லை.

''இவள்தான் என் மருமகள், '' என்றாள் கோமகள், சோனியாவை அறிமுகப்படுத்தியவாறே - ''அவளை உனக்குத் தெரியாதா, இளவரசி?''

இளவரசி மேரி சோனியாவின் பக்கம் திரும்பினாள். அவளைப் பற்றி தனக்குள் எழுந்த பகைமை உணர்ச்சியை அடக்குவதற்கு முயற்சித்துக் கொண்டே அவளை முத்தமிட்டாள். ஆனால் தன்னைச் சுற்றியுள்ள ஒவ்வொருவருடைய மனநிலையும் தன் மனநிலையிலிருந்து வெகுதூரம் மாறுபட்டதாகவுள்ளது என்பதைக கண்டு உள்ளம் குமைந்தாள்.

''அவர் எங்கே இருக்கிறார்?'' என்று மீண்டும அவள் எல்லோரையும் பார்த்துக் கேட்டாள்.

''அவர் கீழேயிருக்கிறார். நட்டாஷா அவருடன் இருக்கிறாள்'' என்று சோனியா முகம் சிவக்க பதிலளித்தாள். ''நாங்கள் தகவல் சொல்லி அனுப்பியிருக்கிறோம். நீ களைப்பாக இருப்பாய் என்று நினைக்கிறேன் இளவரசி!''

மேரியின் கண்களில் வேதனையால் நீர் முட்டி நின்றது. முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக்கொண்டாள். தன் சகோதரரிடம் எப்படிப் போவது என்பதைக் கோமகளிடம் மீண்டும் கேட்பதாக இருந்தாள். ஆனால் அதற்குள்ளாக மிதந்து வருவது போன்ற மெல்லிய, விரைவான காலடியோசை கதவு நிலையில் கேட்டது. இளவரசி சுற்றுமுற்றும் பார்த்தபோது நட்டாஷா வந்துகொண்டிருப்பதைக் கண்டாள். அவள் அநேகமாக ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தாள் - இதே நட்டாஷாவைத்தான் மேரி சில காலத்திற்கு முன்னர் மாஸ்கோவில் சந்தித்தபோது அவளை அவ்வளவாக விரும்பவில்லை.

ஆனால், இப்போது நட்டாஷாவின் முகத்தை இளவரசி பார்த்ததுமே தன் துயரத்தில் பங்குகொள்ள ஒரு உண்மையான தோழி, ஒரு சிநேகிதி இங்கு தனக்குக் கிடைத்திருக்கிறாள் என்பதைத் தெரிந்துகொண்டாள். எனவே, அவளிடம் ஓடிச் சென்று அவளைக் கட்டித்தழுவி, அவளது தோளில் முகத்தைப் புதைத்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள்.

இளவரசர் ஆண்ட்ரூவின் தலைமாட்டில் உட்கார்ந்திருந்த நட்டாஷா இளவரசி மேரி வந்திருக்கிறாள் என்று கேள்விப் பட்டதுமே ஓசை படாமல் அறையைவிட்டு வெளியேறி, அவளிடம் விரைந்தோடி வந்தாள். அவள் வேக நடை போட்டு வந்ததுதான் இளவரசி மேரிக்கு அவள் ஏதோ மிதந்து வந்தது போலிருந்தது.

நட்டாஷா வரவேற்பு அறைக்குள் ஓடிவந்தபோது அவளது கிளர்ச்சியுற்ற முகத்தில் ஒரே ஒரு பாவம்தான் - அன்பின் பாவம்தான் - குடிகொண்டிருந்தது. அவருக்கு இளவரசர் ஆண்ட்ரூ மீதும், மேரி மீதும், தான் நேசிக்கும் மனிதருக்கு மிகவும் நெருக்கமான சகலரின் மீதும் எல்லையற்ற அன்பு பொலிந்தது; மற்றவர்களுக்காக இரக்கமும் வேதனையும் கசிந்தது; அவர்களுக்கு உதவி செய்வதில் தன்னை முழுக்க முழுக்க அர்ப்பணித்துக் கொள்ள வேண்டு மென்னும் எழுச்சிமிக்க ஆர்வம் குமிழிட்டது. அந்த விநாடியில் நட்டாஷாவின் உள்ளத்தில் தன்னைப் பற்றிய எண்ணமோ அல்லது இளவரசர் ஆண்ட்ரூவோடு தனக்குள்ள உறவுகளைப் பற்றிய எண்ணமோ இல்லை என்பது தெளிவு.

நுண்ணறிவுப் படைத்த மேரி நட்டாஷாவின் வதனத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே இவற்றையெல்லாம் புரிந்துகொண்டு அவளது தோளில் தன் முகத்தைப் புதைத்து இன்பங்கலந்த வேதனையோடு அழுதாள்.

'சரி வா மேரி, அவரிடம் போவோம், ' என்று கூறி நட்டாஷா அவளை அவரது அறையை நோக்கி அழைத்துச் சென்றாள்.

வழியில் மேரி தனது தலையை உயர்த்தினாள். கண்களைத் துடைத்துக் கொண்டாள். நட்டாஷா பக்கம் பார்வையைத் திருப்பினாள். அவளிடமிருந்து தன்னால் எல்லாவற்றையும் புரிந்துகொள்ள முடியும் என்று உணர்ந்தார்.

'அவருக்கு...' என்று கேள்வி கேட்க ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக்கொண்டாள்.

வார்த்தைகளால் கேள்வி கேட்பதோ அல்லது பதிலளிப்பதோ சாத்தியமற்றது என்பதை அவள் உணர்ந்தாள். இதைவிட நட்டாஷாவின் முகமும் கண்களும் அவளுக்கு எல்லாவற்றையும் தெளிவாகவும் ஆழமாகவும் சொல்வதுபோலிந்தன.

நட்டாஷா அவளையே குத்திட்டுப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஆனால், தனக்குத் தெரிந்ததனைத்தையும் சொல்லலாமா அல்லது வேண்டாமா என்று அச்சமும் தயக்கமும் கொண்டவள்போல் தென்பட்டாள்; மேலும், தன் இதய ஆழத்தையே ஊடுருவும் அந்தப் பிரகாசம் பொருந்திய கண்களின் முன்னால், தான் பார்த்த எல்லா உண்மைகளையும் கூறாமலிருப்பது சாத்தியமில்லை என்பதை உணர்பவளாகக் காணப்பட்டாள். திடீரென்று நட்டாஷாவின் உதடுகள் நடுங்கின. அவளது வாயைச் சுற்றிலும் அழகற்ற சுருக்கங்கள் நெளிந்தன. அவள் தன் கரங்களால் முகத்தை மூடிக்கொண்டு விம்மியழுதாள்.

இளவரசி மேரிக்கு விஷயம் புரிந்துவிட்டது.

எனினும் அவள் இன்னும் நம்பிக்கைக் கொண்டவளாக அவளுக்கே நம்பிக்கையில்லாத வார்த்தைகளில் கேட்டாள்:

'அவருடைய காயம் எப்படி இருக்கிறது? பொதுவாக அவரது நிலைமை எவ்விதமிருக்கிறது?'

'நீ, நீயே... பார்க்கப் போகிறாய்' என்று மட்டுமே நட்டாஷாவால் சொல்ல முடிந்தது.

கீழ்த்தளத்தில் ஆண்ட்ரூவின் அறைக்கருகே அவர்கள் அழுகை ஓயும் வரை சற்று நேரம் அமர்ந்திருந்தனர். அப்போதுதானே அமைதியான முகங்களுடன் அவர்கள் இளவரசரிடம் செல்ல முடியும்.

'அவரது நோய் முழுவதும் எப்படிப் போயிற்று? அவரது நிலைமை நீண்ட நாட்களாகவே மோசமாக இருக்கிறதா? இது எப்போது நிகழ்ந்தது?' இளவரசி மேரி வினவினாள்.

நட்டாஷா அவளுக்குப் பதிலளிக்கையில், முதலில் ஜுரத்தாலும் வலியாலும் அவருக்கு அபாயமிருந்தது. ஆனால், டிராய்ட்சாவில் அந்த அபாயம் விலகிப்போயிற்று. டாக்டர் பிளவையைப்பற்றி மட்டுமே பயப்பட்டார். அந்த ஆபத்தும் நீங்கிப்போயிற்று. நாங்கள் யாரோஸ்லாவை அடைந்தபோது புண் சீழ்ப்பிடிக்க ஆரம்பித்தது. (சீழ்ப்பிடித்தல் முதலிய பல விஷயங்கள் நட்டாஷாவுக்குத் தெரியும்) சீழ்ப் பிடிப்பது சாதாரணமாக நடக்கக்கூடியதுதான் என்று டாக்டர் கூறினர். பிறகு காய்ச்சல் அடிக்க ஆரம்பித்தது. ஆனால், காய்ச்சல் ஒன்றும் கடுமையாக இல்லை என்று டாக்டர் தெரிவித்தார் என்றாள்.

'ஆனால், இரண்டு தினங்களுக்கு முன்னர் இது திடீரென்று நிகழ்ந்தது', என்று கூறினாள் நட்டாஷா பொங்கிவரும் தனது அழுகையை அடக்கிக் கொண்டே. 'இது ஏன் நேர்ந்தது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், நீயே அவர் எப்படி இருக்கிறார் என்பதை இப்போது பார்க்கப் போகிறாய்.'

'அவர் பலஹீனமா இருக்கிறாரா? மெலிந்திருக்கிறாரா?' என்று இளவரசி கேட்டாள்.

'அப்படி ஒன்றுமில்லை. ஆயினும் அவர் நிலைமை மோசமாக இருக்கிறது. அதை நீயே பார்ப்பாய். ஓ, மேரி, அவர் நன்றாகவே இருக்கிறார். ஆனால், அவர் வாழ முடியாது. ஏனென்றால்...'

## 12

## 15

நட்டாஷா இளவரசர் ஆண்ட்ரூ தங்கியிருந்த அறையின் கதவை வழக்கமான முறையில் திறந்து இளவரசி மேரியைத் தனக்கு முன்னால் உள்ளே செல்லும்படி விட்டாள். அப்போது இளவரசி தன் தொண்டையில் விம்மல்கள் முட்டுவதை உணர்ந்தாள். கஷ்டத்தோடு தன்னைத் தயார் படுத்திக்கொண்டு வந்திருந்த அவள் இப்போது அமைதியோடிருக்க முயற்சித்தாள். எனினும் கண்களில் நீர் மல்காமல் அவரை நேரிட்டுப் பார்க்க முடியாது என்பதை அவள் அறிவாள்.

'இரண்டு தினங்களுக்கு முன்னர் இது திடீரென்று நிகழ்ந்தது' என்று நட்டாஷா கூறிய சொற்களுக்கு என்ன அர்த்தம் என்பதை

இளவரசி புரிந்துகொண்டாள். இளவரசரின் நோய் திடீரென்று தணிந்துவிட்டது என்றால் அந்தத் தணிவும் பணிவும் மரணத்தை அவர் நெருங்கிக் கொண்டிருக்கிறார் என்பதற்கான அறிகுறிகள். இதுதான் நட்டாஷா கூறிய சொற்களுக்கு அர்த்தம். இதை மேரி புரிந்துகொண்டாள். அவள் அறைக்குள் காலடி எடுத்து வைக்கு முன்பே சிறு வயதில் தனக்கு நினைவிருக்கிற ஆண்ட்ரூவின் முகத்தைக் கற்பனை செய்து பார்த்தாள். அது மென்மையும, அமைதியும், இரக்கமும் வாய்ந்த முகமாக அவள் மனதில் பதிந்திருந்தது. அந்த முகத்தை அவர் அபூர்வமாகவே வெளிக்காட்டினார். எனவே, அது அவளது உணர்ச்சிகளை வெகுவாகத் தொட்டிருந்தது. தனது தந்தை மரணப்படுக்கையிலிருந்தபோது செய்ததுபோலவே தனது சகோதரரும் தன்னிடம் இதமான, அன்பான வார்த்தைகளைப் பேசுவார், அதைத் தன்னால் தாங்க முடியாது. எனவே, அவர் அவளது உணர்ச்சிகளை வெகுவாகத தொட்டிருந்தது. தனது தந்தை மரணப்படுக்கையிலிருந்தபோது செய்ததுபோலவே தனது சகோதரரும் தன்னிடம் இதமான, அன்பான வார்த்தைகளைப் பேசுவார், அதைத் தன்னால் தாங்க முடியாது. எனவே, அவர் முன்னிலையிலேயே தேம்பித் தேம்பி அழுவோம் என்று அவள் நிச்சயமாக நம்பினாள். இது இப்போதோ அல்லது பிறகோ நடக்கத்தான் போகிறது. இந்த நினைப்போடு அவள் உள்ளே நுழைந்தாள். அவரது உருவம் அவளுக்குத் தெளிவடைய அடைய அவளது தொண்டையில் விம்மல்கள் மென்மேலும் அதிகரித்தன. அவளது குறுகிய பார்வையுள்ள கண்கள் அவரது முகச்சாயல்கள் அடையாளம் கண்டுகொள்ள முயன்றன. பிறகு அவரது முகத்தைப் பார்த்தாள். அவரது கூரிய பார்வை அவள் மேல் பட்டது.

அவர் அணிலின் மென்மயிரினாலான மேலங்கி அணிந்து சுற்றிலும் தலையணைகள் வைத்து சார்மணைக் கட்டிலில் படுத்திருந்தார். அவர் மெலிந்து வெளிறிப் போயிருந்தார். சதை வற்றி எலும்பும் தோலுமாக, இருந்த ஒரு கையில் ஒரு கைக்குட்டையைப் பிடித்திருந்தார். இன்னொரு கையால், தான் வளர்த்திருந்த மிருதுவான மீசை மீது விரல்களை மெதுவாக ஓடவிட்டுத் தடவி விட்டுக்கொண்டிருந்தார். அவர்களிருவரும் உள்ளே பிரவேசித்தபோது அவர்களையே அவர் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவரது முகத்தைப் பார்த்ததும், கண்களைச் சந்தித்ததும் இளவரசி மேரியின் நடை திடீரென்று தளர்ந்தது, தனது கண்ணீர் வற்றிவிட்டதையும், விம்மல்கள் நின்றுவிட்டதையும் உணர்ந்தாள்.

அவரது முகமும் கண்களும் வெளிப்படுத்திய பாவத்தைக் கண்ணுற்றதும் தான் ஏதோ குற்றம் செய்துவிட்டவள் போல் உணர்ந்தாள், அச்சமடைந்தவள் போல் காணப்பட்டாள்.

'என்மீது என்ன குற்றமிருக்கிறது?' என்று அவள் தனக்குத்தானே கேட்டுக்கொண்டாள். 'என்ன குற்றமா? நீ உயிரோடிக்கிறாய். எனவே, உயிரோடிருப்பவர்களைப் பற்றிச் சிந்திக்கிறாய். ஆனால், நானோ...' அவரது உற்சாகமற்ற, கடுமையான பார்வை பதிலளித்தது.

அவர் தனது சகோதரியையும் நட்டாஷாவையும் மெதுவாக நோட்டமிட்டபோது, வெளிப்புறமாக அன்றி உட்புறமாக நோக்குவது போல் தோன்றிய அந்த ஆழ்ந்த பார்வையில் அநேகமாக ஒரு பகைமை உணர்ச்சி மிதவையிட்டது.

அவர் தனது சகோதரியை முத்தமிட்டார். அப்போது அவளது கரத்தைத் தன் கரத்தால் பிடித்துக்கொண்டார். இப்படிச் செய்வதுதான் எப்போதும் அவர்களது வழக்கம்.

'எவ்விதமிருக்கிறாய், மேரி? இங்கே எப்படி வந்தாய்?' என்றார் அவர். அவரது பார்வையைப் போலவே குரலிலும் அமைதியும் பற்றின்மையும் கலவையிட்டன.

அவர் வேதனையால் அலறியிருந்தால்கூட அந்த அலறல் இப்போது அவரது தொனி மேரியின் உள்ளத்தில் விளைவித்துள்ள இவ்வளவு பீதியை உண்டு பண்ணியிருக்காது.

'குட்டி நிக்கலஸையும் அழைத்து வந்திருக்கிறாயா?' என்று அதே மெதுவான, அமைதியான முறையில், அதை நினைவு படுத்திக்கொள்ளும் முயற்சியோடு அவர் வினவினார்.

'நீர் எப்படி இருக்கிறீர்?' என்றாள் மேரி. தான் என்ன சொன்னோம் என்பதைக் குறித்து அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

'அதுவா, என் அன்பே, அதை நீ டாக்டரிடம் கேட்க வேண்டும்' என்று அவர் பதிலளித்தார். அன்போடு நடந்துகொள்ள அவர் மீண்டும் முயற்சித்தது தெரிந்தது. வெறும் உதட்டளவில் அவர் சொன்னார். (அவரது சொற்கள் அவரது எண்ணங்களைப் பிரதிபலிக்கவில்லை என்பது தெளிவு):

'மெர்சி, செரி அமியி, டிட்ரே வெனியு' ('இங்கே வந்ததற்கு வந்தனம் என் அன்பே,')

இளவரசி மேரி அவரது கையை அழுத்தினாள். அந்த அழுத்தல் அவரைச சற்றே வெளிப்படையாக சிணுங்கும்படி செய்தது. அவர் மௌனமாக இருந்தார். அவளுக்கு என்ன சொல்வது என்று

தெரியவில்லை. இரண்டு தினங்களுக்கு முன்னர் அவருக்கு என்ன நேர்ந்தது என்பதை இப்போது அவர் புரிந்துகொண்டாள். அவரது சொற்களில், அவரது குரலில், முக்கியமாக அமைதியான, ஏறத்தாழ பகைமையுள்ள அந்தப பார்வையில் இந்த உலகைச் சேர்ந்த எல்லாவற்றிலிருந்தும் ஒதுங்கி நிற்கும் ஒரு போக்கை உயிரோடிருப்பவர்கள் மீது ஒரு அச்சத்தைக் காண முடிந்தது. உயிரோடிக்கும் எதைப் பற்றியும் முயற்சியோடுதான் அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால், அவர் புரிந்துகொள்ளத் தவறியதற்குக் காரணம் அப்படிப் புரிந்துகொள்ளும் சக்தி அவருக்கில்லை என்பதாலல்ல. அதற்குப் பதில் அவர் வேறு ஏதோ ஒன்றை - உயிரோடிருப்பவர்கள் புரிந்துகொள்ளாத, புரிந்துகொள்ள முடியாத ஒன்றை - புரிந்துகொண்டதுதான் காரணம். இது அவர் மனம் முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

'பார்த்தாயா, விதி நம்மை எவ்வளவு விசித்திரமாக ஒன்று சேர்த்திருக்கிறது' என்றார் அவர், மௌனத்தைக் கலைத்து, பிறகு நட்டாஷாவைச் சுட்டிக் காட்டித் தொடர்ந்து கூறினார். ''அவள்தான் எந்த நேரமும் என்னைக் கவனித்துக்கொள்கிறார்.'

இளவரசி மேரிக்கு அவர் சொன்னது காதில் விழுந்தது. இத்தகைய விஷயத்தை அவரால் எவ்விதம் சொல்ல முடிந்தது என்பது அவளுக்குப் புரியவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ கூருணர்ச்சியும் அன்புமுள்ளவர். அப்படிப்பட்டவர் தான் யாரைக் காதலிக்கிறாரோ, யார் அவரைக் காதலிக்கிறாளோ அவள் முன்னர் எவ்விதம் இதைச் சொல்ல முடிந்தது? உயிரோடிருப்போம் என்ற நம்பிக்கை மட்டும் அவருக்கிருந்திருந்தால் அந்த வார்த்தைகளை அன்பற்ற, வெறுப்புக்கலந்த குரலில் கூறியிருக்க மாட்டார். தான் இறந்து கொண்டிருக்கிறோம் என்பது அவருக்குத் தெரியாதிருந் திருந்தால் எப்படி அவர் அவளிடம் இரக்கம் காட்டத் தவறியிருப்பார்? எப்படி அவள் முன்னிலையில் அவ்விதம் பேசியிருப்பார்? இதற்கெல்லாம் ஒரே ஒரு சமாதானம் தான் கூற முடியும்: அதாவது வேறு ஏதோ ஒரு முக்கியமான விஷயம் அவருக்குப் புலப்பட்டுவிட்ட காரணத்தால் மற்றவற்றில் பற்றின்றிக் காணப்பட்டார் என்பதுதான் அந்த சமாதானம்.

உரையாடல் உற்சாகமற்றும், சம்பந்தர் சம்பந்தமில்லாமலும், இடையிடையே உடைந்தும் தொடர்ந்தது.

'மேரி ரயாஜான் வழியாக வந்திருக்கிறாள்', என்றாள் நட்டாஷா.

அவள் தன் சகோதரியை மேரி என்று அழைத்ததை இளவரசர் ஆண்ட்ரூ கவனிக்கவில்லை. நட்டாஷாவே கூட அவ்வாறு அவர் முன்னால் அவளைப் பெயரிட்டு அழைத்த பிறகுதான் கவனித்தாள்.

'உண்மையாகவா?' என்று அவர் கேட்டார்.

'மாஸ்கோ நகரம் பூராவும் எரிந்து பஸ்பமாகி விட்டதாக அவளிடம் கூறியிருக்கிறார்கள். அதோடு...'

நட்டாஷா பேச்சை நிறுத்தினாள். பேச்சைத் தொடர்வது அசாத்தியமாக இருந்தது. அவர் பேச்சைக் கேட்க முயன்ற போதிலும் அது அவரால் இயலவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது.

'உண்மைதான், அது எரிந்துபோய்விட்டது. என்று சொல்கிறார்கள்', என்றார் அவர். 'இது மிகவும் இரங்கத்தக்க ஒரு விஷயம்.' மீசையைத் தன் விரல்களால் தடவி விட்டுக்கொண்டே எதிரே சூன்யத்தோடு வெறித்துப் பார்த்தார்.

'அப்படியானால் கோமகன் நிக்கலஸை நீ சந்தித்து விட்டாயா, மேரி?' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று. அவர்களுடன் இதமாகப் பேச வேண்டுமென்று அவர் விரும்பியது தெரிந்தது. 'உன்னைத் தனக்கு மிகவும் பிடித்திருப்பதாக அவர் இங்கே எழுதியுள்ளார்' என்று அவர் சர்வ சாதாரணமாக, அமைதியாகத் தொடர்ந்தார். உயிரோடிருப்பவர்களுக்குத் தனது சொற்கள் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையெல்லாம் அவர் புரிந்துகொள்ள முடியாதவராக இருந்தார். 'நீயும் அவரை விரும்பினால் அவரைக் கல்யாணம் செய்துகொள்வது உனக்கு நல்லதாக இருக்கும்', என்று அவர் சற்று வேகமாகவே மேலும் தொடர்ந்து கூறினார், நீண்ட காலமாகவே தான் தேடிக்கொண்டிருந்த வார்த்தைகள் கிடைத்துவிட்டது போன்ற ஒரு மகிழ்ச்சியோடு.

இளவரசி மேரி அவரது வார்த்தைகளையெல்லாம் கேட்டாள். ஆனால், அவளைப் பொறுத்த வரையில் அந்த வார்த்தைகள் அவர் உயிரோடிருக்கும் ஒவ்வொன்றிலிருந்தும் தற்போது எவ்வளவுதூரம் விலகி நிற்கிறார் என்பதைக் காட்டுவதற்கான ஒரு நிரூபணமாக இருந்ததே தவிர, மற்றபடி அவை அவளுக்கு அர்த்தமற்றதாக விளங்கின.

'என்னைப்பற்றி ஏன் பேசுகிறீர்' என்று அவள் அமைதியாகக் கூறி நட்டாஷா பக்கம் கண்ணோட்டமிட்டாள்.

இதை உணர்ந்த நட்டாஷா அவளை ஏறிட்டுப் பார்க்கவில்லை. மூன்று பேரும் மீண்டும் மௌனமாயினர்.

'ஆண்ட்ரூ, நீர்...' என்று இளவரசி மேரி திடீரென்று பேச்சைத் தொடங்கினாள். அவளது குரல் நடுங்கிற்று. 'நீர் குட்டி நிக்கலஸைப் பார்க்க விரும்புகிறீரா? அவன் எந்த நேரமும் உம்மைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறான்!'

இளவரசர் ஆண்ட்ரூ சற்று வெளிப்படையாக முறுவல் பூத்தார், அதுவும் முதல் தடவையாக. ஆனால், அவரது முகத்தை மிக நன்கு அறிந்த இளவரசி மேரி அவர் மகிழ்ச்சியோடோ அல்லது தனது மகன் என்னும் பாசத்தோடோ முறுவலிக்கவில்லை, அதற்குப் பதில் ஏளனத்தோடு புன்னகை புரிகிறார் என்பதை பீதியோடு கவனித்தாள். தன்னை உற்சாகப் படுத்துவதற்குக் கடைசி சாதனம் என்று அவள் நம்பியதை உபயோகப் படுத்த முயற்சிக்கிறாள் என்று இளவரசர் எண்ணியதே அவரது ஏளன புன்னகைக்குக் காரணம்.

'ஆம், அவனை நான் பார்ப்பதற்கு மிகவும் மகிழ்ச்சி அடைவேன். அவன் சுகமாக இருக்கிறானா?'

குட்டி நிக்கலஸ் இளவரசர் ஆண்ட்ரூவின் அறைக்கு அழைத்து வரப் பட்டபோது அவன் தன் தந்தையை பயபிராந்தி கொண்ட கண்களோடு நோக்கினான். ஆனால், அழவில்லை. ஏனென்றால் வேறு யாரும் அங்கு அழுதுகொண்டிருக்கவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ அவனை முத்தமிட்டார். அவனிடம் என்ன சொல்வது என்று அவருக்குத் தெரியவில்லை.

குட்டி நிக்கலஸ் அங்கிருந்து அழைத்துச் செல்லப்பட்ட பிறகு, இளவரசி மேரி திரும்பவும் தன் சகோதரரிடம் சென்று அவரை முத்தமிட்டாள். இதற்கு மேலும் தன் கண்ணீரை அடக்க முடியாதவளாக ''கோ'' வென்று கதறி அழ ஆரம்பித்தாள்.

அவர் அவளை உன்னிப்போடு பார்த்தார்.

''நிக்கலஸுக்காகவா அழுகிறாய்?'' என்று கேட்டார்.

இளவரசி மேரி அழுதுகொண்டே தலையை ஆட்டினாள்.

''மேரி, உனக்கு வேதம் தெரியும்...'' ஆனால், அவர் பேச்சை முடிக்காமல் நிறுத்திக்கொண்டார்.

''நீர் என்ன சொன்னீர்?''

''ஒன்றுமில்லை. நீ இங்கே அழக்கூடாது'' என்றார் அவர், அதே உற்சாகமற்ற முகபாவத்தோடு அவளைப் பார்த்துக்கொண்டே.

இளவரசி மேரி அழ ஆரம்பித்ததும், குட்டி நிக்கலஸ் தந்தையின்றி விடப்படுவானே என்பதை நினைத்துத்தான் அவள் அழுகிறாள் என்பதை அவர் புரிந்துகொண்டார். பெரு முயற்சியோடு வாழ்க்கைக்குத் திரும்பி அவர்களது கண்ணோட்டத் திலிருந்து விஷயங்களைப் பார்க்க முயற்சித்தார்.

''ஆம், அவர்களுக்கு இது துக்ககரமானதாகத்தான் தோன்றும்!'' என்று அவர் நினைத்தார். ''ஆனால், இது எவ்வளவு சுலபமானது.''

''ஆகாசக் கோழிகள் விதை விதைப்பதில்லை, அறுவடை செய்வதுமில்லை. எனினும் நமது பரம பிதா அவற்றைப் போஷிக்கிறார்'', என்று அவர் தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். இளவரசி மேரியிடமும் தெரிவிக்க வேண்டுமென்று விரும்பினார்; ''இல்லை, வேண்டாம். இதை அவர்கள் தங்கள் சொந்த வழியில் அர்த்தம் செய்துகொள்வார்கள். புரிந்துகொள்ள மாட்டார்கள்! அவர்கள் வெகு உயர்வாக மதிக்கும் உணர்ச்சிகள் - நமக்கு மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தோன்றும் நமது எல்லா உணர்ச்சிகளும், எண்ணங்களும், அவசியமில்லாதவை என்பதை அவர்களால் புரிந்து கொள்ள முடியாது. நாம் ஒருவரையொருவர் புரிந்துகொள்ள முடியாது'', என்று அவர் மௌனமாக இருந்து விட்டார்.

## 12

## 16

இளவரசர் ஆண்ட்ரூவின் மகனுக்கு ஏழு வயதாகிறது. அவனால் படிக்க முடியாது. எந்த விஷயமும் தெரியாது. அன்றைய தினத்திற்குப் பிறகு அவன் அறிவும் அனுபவமும் ஆய்வுத் திறனும் பெற்றுப் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டான். ஆனால், அவன் பிற்காலத்தில் பெற்ற ஆற்றல்களனைத்தையும் இந்த வயதிலேயே பெற்றிருந்திருப்பானேயானால் கூட தனது தந்தைக்கும் மேரிக்கும் நட்டாஷாவுக்குமிடையே நடைபெற்ற காட்சியின் அர்த்தத்தை இப்போது விட தெளிவாகவோ அல்லது ஆழமாகவோ அவனால் புரிந்துகொண்டிருக்க முடியாது. இதை அவன் பூரணமாக உணர்ந்துகொண்டான். அவன் அழாமல் அறையை விட்டுக் கிளம்பி, தன்னுடன் வெளியே வந்த நட்டாஷாவிடம் மௌனமாகச் சென்றான். அவளைத் தன் அழகிய, சிந்தனை தோய்ந்த கண்களால் கூச்சத்தோடு நோக்கினான். பிறகு அவனது சிவந்த மேலுதடு நடுங்கிற்று. தலையை அவள்மீது சாய்ந்துக்கொண்டு அழ ஆரம்பித்தான்.

இதன் பின்னர், தன்னை அன்புடன் சீராட்டிய டெசல்லஸையும் கோமகளையும் தவிர்த்தான். ஒன்று தனிமையில் உட்கார்ந்தான். அல்லது அச்சத்தோடு இளவரசி மேரியிடம் சென்றான், அல்லது தன் அத்தையையும் விடக்கூட தனக்குப் பிடித்திருந்த நட்டாஷாவிடம் சென்றான். அவர்களிருவரிடமும் அமைதியோடும் லஜ்ஜை யோடும் ஒட்டிக்கொண்டான்.

இளவரசி மேரி இளவரசர் ஆண்ட்ரூவின் அறையிலிருந்து வெளியே வந்தாள். நட்டாஷாவின் முகம் தனக்கு என்ன தெரிவித்தது என்பதை இப்போது முற்றிலும் புரிந்து கொண்டாள். அவரது உயிரைக் காப்பாற்றும் நம்பிக்கை பற்றி நட்டாஷாவிடம் ஒன்றும் பேசவில்லை. அவளோடு முறை வைத்து அவரது கட்டில் அருகில் அமர்ந்து அவரைக் கவனித்துக் கொண்டாள். இப்போது அழுவதை நிறுத்தி விட்டாள். ஆனால், இறந்துகொண்டிருந்த மனிதருக்குமேல் இப்போது தெளிவாக வட்டமிட்டுக் கொண்டிருந்த அந்த நித்தியத் துவத்தையும் எல்லையற்றதையும் இடைவிடாமல் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள்.

இளவரசர் ஆண்ட்ரூ தாம் சாகப்போகிறோம் என்பதைத் தெரிந்திருந்தது மட்டுமின்றி, தாம் செத்துக்கொண்டிருக்கிறோம் என்பதையும், ஏற்கெனவே பாதி செத்துவிட்டோம் என்பதையும் உணர்ந்திருந்தார். உலகம் சம்பந்தப்பட்ட சகலவற்றின் மீதும் தமக்குப் பற்றுதல் போய்விட்டதையும், தம் உயிரைப்பற்றி ஒரு விசித்திரமான அலட்சியம் ஏற்பட்டிருப்பதையும் அவர் அறிந்திருந்தார். எது தன்னை நோக்கி வந்து கொண்டிருக்கிறதோ அதை அவசரமின்றி, பதட்டமின்றி எதிர் பார்த்துக்கொண்டிருந்தார். அந்த தயா தாட்சண்யமற்றது, நித்தியமானது, தொலைதூரமானது, அறிவுக்கெட்டாதது - அதன் பிரசன்னத்தைத் தன் வாழ்நாள் முழுதும் அவர் தொடர்ந்து உணர்ந்திருந்தார் - இப்போது அவரை நெருங்கிவிட்டது. உயிர்மீது அவருக்கிருந்த விசித்திரமான அலட்சியம் காரணமாக அது அவருக்குப் புரிந்துகொள்ளக் கூடியதாகவும், புலப்படக் கூடியதாகவுமிருந்தது...

இதற்கு முன்னர் அவர் சாவைப்பற்றி பயந்ததுண்டு. மனதைப் பயங்கரமாக வேதனைப்படுத்தும் மரண பயத்தை அவர் இரண்டுமுறை அனுபவித்திருக்கிறார். ஆனால், இப்போது அவருக்கு அந்த பயமே இல்லை.

அவர் தன் முன்னால் வெடிகுண்டு பம்பரம்போல் சுழன்றபோதுதான் சாவைப்பற்றி முதல் தடவையாக உணர்ந்தார். உழுத வயல்களையும், புதர்களையும், ஆகாயத்தையும் நோக்கினார். மரணத்துடன் நேருக்கு நேர் நிற்கிறோம் என்பதைத் தெரிந்துகொண்டார். காயமடைந்த பிறகு அவருக்குச் சுய நினைவு வந்ததும், வாழ்க்கைத் தளையில் கட்டுண்டிருந்து விடுதலை பெற்றது போல அமரத்துவமான, தங்கு தடையற்ற அன்பு என்னும் மலர் அவரது ஆன்மாவில் மலர்ந்ததும் அவர் மரணத்தைப்பற்றி அஞ்சுவதையும் அதைப்பற்றி நினைப்பதையும் விட்டுவிட்டார்.

அவர் காயமடைந்த பிறகு, தனிமையிலும் வேதனையிலும், அரை மயக்க நிலையிலும் காலத்தைக் கழித்தபோது, அமரத்துவமான அன்பு என்னும் கோட்பாட்டை அவர் எந்த அளவுக்கு ஆழமாக ஊடுருவிப் பார்த்தாரோ, அந்த அளவுக்குத் தம்மை உலக வாழ்க்கையிலிருந்து தனிமைப் படுத்திக்கொண்டார். இது அவரை அறியாமலேயே நடைபெற்றது. எல்லாவற்றையும் எல்லாரையும் நேசிப்பது என்பதும், அன்பின் பொருட்டு எப்போதும் தியாகம் செய்வது என்பதும் ஒரு குறிப்பிட்டவர் மீது அன்பு காட்டுவது என்றோ, இந்த உலக வாழ்க்கையை வாழ்வது என்றோ அர்த்தமல்ல. அந்த அன்பு என்னும் கோட்பாட்டில் அவர் எவ்வளவு அதிகமாக ஈடுபாடு கொண்டாரோ, அவ்வளவு அதிகமாக வாழ்க்கையைத் துறந்தார். வாழ்க்கைக்கும் மரணத்துக்குமிடையே நிற்கும் பயங்கரத் தடையை - அத்தகைய அன்பு இல்லாதபோது - பரிபூரணமாக அறிந்தார். இந்த நாட்களில், தாம் சாக வேண்டியிருக்கும் என்பதை எண்ணிப்பார்த்தபோது பின்வருமாறு தமக்குள் சொல்லிக் கொண்டார்: ''நல்லது, அதனால் என்ன? எல்லாம் நன்மைக்குத்தான்!''

ஆனால், மைடிஸ்சியில் கழிந்த அந்த இரவுக்குப் பிறகு, தான் மிகவும் விரும்பியவள் தன் முன்னால் வந்திருப்பதை அரை மயக்க நிலையில் பார்த்ததும் அவளது கரத்தை முத்தமிட்டு ஆனந்தக் கண்ணீர் விட்டதும் ஒரு குறிப்பிட்ட பெண்மீது அன்பு அவருக்குத் தெரியாமலேயே மீண்டும் அவரது இதயத்தில் படர்ந்து, அவரைத் திரும்பவும் வாழ்க்கையோடு பிணைத்தது. இன்பகரமான, கிளர்ச்சியூட்டும் எண்ணங்கள் அவரது மனதை ஆட்கொள்ள ஆரம்பித்தன. ஆம்புலன்ஸ் நிலையத்தில் குரோகினைச் சந்தித்த போது ஏற்பட்ட உணர்ச்சியை இப்போது அவரால் திரும்பப் பெற முடியவில்லை. ஆனால், குரோகின் உயிரோடிருக்கிறாரா இல்லையா என்னும் கேள்வி அவரை சித்திரவதை செய்தது. இக் கேள்வியை எவரிடமும் கேட்க அவர் துணியவில்லை.

அவரது நோய் அதன் இயல்பான போக்கில் சென்றது. ஆனால், நட்டாஷா குறிப்பிட்டாளே ''இது திடீரென்று நிகழ்ந்தது'' என்று அது மேரி வருவதற்கு இரண்டு தினங்களுக்கு முன்னர்தான் நடைபெற்றது. அதுதான் வாழ்க்கைக்கும் மரணத்திற்குமிடையே நடைபெற்ற கடைசி ஆன்மீகப் போராட்டமாகும். இதில் மரணம்தான் வென்றது. நட்டாஷாவின் மீது காதல் கொண்டு, சாவிற்கு முன்னால் அச்சத்தின்மீது கடைசித் தாக்குதல் தொடுத்ததன்மூலம் - அது இறுதியாக முறியடிக்கப்பட்டாலும் - அவர் இன்னும் வாழ்க்கையை மதித்தார் என்னும் உண்மை எதிர்பாராத விதமாகப் புலனாயிற்று.

அன்று மாலை நேரம். வழக்கம்போல் சாப்பாட்டிற்குப் பிறகு அவருக்கு இலேசாகக் காந்தலடித்தது. அவரது எண்ணங்கள் அசாதாரணமான தெளிவோடு இருந்தன. மேஜைக்கருகில் சோனியா அமர்ந்திருந்தாள். அவர் கண்ணயர ஆரம்பித்தார். திடீரென்று ஒரு இன்ப உணர்ச்சி அவரை ஆட்கொண்டது.

''ஆ, அவள் வந்துவிட்டாள்!'' என்று அவர் நினைத்தார்.

உண்மைதான்: சோனியா இடத்தில் நட்டாஷா உட்கார்ந் திருந்தாள். அவள் அப்போதுதான் ஓசைப்படாமல் உள்ளே வந்து அமர்ந்திருந்தாள்.

அவள் அவரைக் கவனித்துக்கொள்ள ஆரம்பித்ததிலிருந்து அவள் தன்னருகே இருக்கும் இந்த உணர்வு எப்போதும் அவருக்கு இருந்து வந்தது. அவள் மெழுகு வத்தி வெளிச்சத்தை அவரிடமிருந்து மறைத்தவாறு பக்கவாட்டில் போட்டிருந்த ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து காலுறை ஒன்றைப் பின்னிக்கொண்டிருந்தாள். காலுறைகள் பின்னும் வயதான நர்சுகளைப் போல யாரும் நோயாளிகளை அத்தனை நன்றாகக் கவனித்துக்கொள்ள மாட்டார்களென்றும், காலுறைகள் பின்னுவதில் நோவை ஆற்றும் ஏதோ ஒன்றிருக்கிறது என்றும் இளவரசர் ஆண்ட்ரூ தற்செயலாக குறிப்பிட்டதைத் தொடர்ந்தே அவள் காலுறைகள் பின்னக் கற்றுக்கொண்டாள். அவளது விரைவாக இயங்கும் மெல்லிய கரங்களில் பின்னல் ஊசிகள் ''க்ளிக் க்ளிக்'' எனறு இலேசாக ஓசை எழுப்பின. அவளது சிந்தனை தோய்ந்த, வாடி வதங்கிய முகத்தோற்றத்தை அவரால் தெளிவாகப் பார்க்க முடிந்தது. அவள் நகர்ந்து கொடுத்தாள். நூற்கண்டு முழங்கால்களிலிருந்து உருண்டோடிற்று. அவள் திடுக்கிட்டு அவரைக் கண்ணோட்ட மிட்டாள். மெழுகுவர்த்தியைக் கையால் மறைத்துக்கொண்டு, ஜாக்கிரதையாகவும் லாவகமாகவும் குனிந்து நூற்கண்டை எடுத்து பழைய நிலையில் உட்கார்ந்துகொண்டாள்.

அவர் அவளை அசையாதபடி நோக்கினார். அவள் குனிந்து எழுந்ததும் ஒரு ஆழ்ந்த மூச்சுவிட விரும்பியதையும், ஆனால் அப்படிச் செய்யாமல் எச்சரிக்கையாக மூச்சுவிட்டதையும் அவர் கவனித்தார்.

டிராய்ட்சா மடாலயத்தில் அவர்கள் கடந்த காலத்தைப் பற்றி பேசியுள்ளார்கள். தான் மட்டும் உயிரோடிருந்தால் தங்களிருவரையும் மீண்டும் ஒன்று சேர்த்த தனது காயத்துக்காக எப்போதும் கடவுளுக்கு நன்றியுள்ளவனாக இருப்பேன் என்று அவர் அவளிடம் தெரிவித்தார். ஆனால் அதற்குப் பிறகு அவர்கள் எதிர்காலத்தைப் பற்றி ஒருபோதும் பேசியதே இல்லை.

"அப்படி இருக்குமா அல்லது இருக்கமுடியாதா?" என்று அவர் அவளைப் பார்த்தவாறும், உருக்கு ஊசிகளின் மெல்லிய "க்ளிக்" ஒலியை கவனித்தவாறும் இப்போது நினைத்தார். "நான் சாவதற்காகத்தான் விதி இவ்வளவு விசித்திரமாக அவளை என்னிடம் கொண்டு வந்திருக்குமா?... நான் என் வாழ்க்கையின் உண்மை எனக்குப் புலப்பட்டிருக்கக் கூடுமா? இந்த உலகில் வேறெதைக் காட்டிலும் அதிகமாக அவளை நான் நேசிக்கிறேன்! ஆனால் அவளை நான் நேசித்தால் நான் என்ன செய்யவேண்டும்?" இவ்வாறு அவர் எண்ணமிட்டுக்கொண்டே தம்மையறியாமலேயே சிணுங்கினார். இது தமது வேதனைகளின்போது அவர் பெற்ற பழக்கமாகும்.

இந்த சிணுங்கல் ஒலியைக் கேட்டதும், நட்டாஷா காலுறைப் பின்னலை அப்படியே கீழே வைத்துவிட்டு அவர் பக்கமாகப் பார்த்தாள். திடீரென்று அவரது கண்கள் மின்னுவதைக் கவனித்துவிட்ட அவள் மெதுவாக அவரிடம் நடந்து சென்று அவரைக் குனிந்து பார்த்தாள்.

"நீர் இன்னும் தூங்கவில்லையா?"

"இல்லை, நான் உன்னை வெகு நேரமாகப் பார்த்துக்கொண்டிருக் கிறேன். நீ உள்ளே வருகிறாய் என்பதை உணர்ந்தேன். நீ அளிப்பது போன்ற அந்த மென்மையான ஆறுதல் உணர்ச்சியை எனக்கு வேறு யாரும் அளிப்பதில்லை... நான் ஆனந்தத்தால் அழ விரும்புகிறேன்."

நட்டாஷா அவரை மேலும் நெருங்கினாள். அவளது முகம் களிஉவகையோடு பிரகாசித்தது.

"நட்டாஷா, உன்னை நான் மிக அதிகமாக நேசிக்கிறேன். உலகில் வேறெதைக் காட்டிலும் அதிகமாக விரும்புகிறேன்."

"நான் மட்டும்?" - அவள் ஒரு விநாடி வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டாள். "ஏன் மிக அதிகமாக நேசிக்கிறேன் என்கிறீர்?" என்று அவள் கேட்டாள்.

"ஏன் மிக அதிகமாக என்று கேட்கிறாயா?...நல்லது, நீ என்ன நினைக்கிறாய், உன் மனதில், உன் முழு உள்ளத்தில் நீ என்ன உணர்கிறாய் - நான் உயிரோடிருப்பேனா? நீ என்ன எண்ணுகிறாய்?"

"நிச்சயமாக, அதில் எனக்குச் சந்தேகமில்லை!" என்று நட்டாஷா அவரது இரு கரங்களையும் உணர்ச்சிப் பெருக்கோடு பிடித்துக் கொண்டு அநேகமாகக் கத்தியேவிட்டாள்.

அவர் சற்று நேரம் மௌனமாக இருந்தார்.

''அப்படி நடந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!'' என்று அவர் கூறியவாறே அவளது கரத்தை எடுத்து முத்தமிட்டார்.

நட்டாஷாவுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. அவள் உணர்ச்சி வசப்பட்டாள். ஆனால், இது நல்லதல்ல, அவர் அமைதியோடிருக்க வேண்டும் என்பதை அவள் உடனே உணர்ந்தாள்.

''ஆனால், நீர் இன்னும் தூங்காமலிருக்கிறீரே'' என்று அவள் தன் களிப்பை அடக்கிக்கொண்டே கூறினாள். ''தயவு செய்து... தூங்குவதற்கு முயற்சி செய்யும்!''

அவர் அவளது கையை அழுத்தினார், பின்னர் விட்டு விட்டார். அவள் மெழுகுவத்தியண்டை சென்று மீண்டும் பழையமாதிரி உட்கார்ந்து கொண்டாள். அவரை இரண்டு முறை திரும்பிப் பார்த்தாள். அவர் தன்னை நோக்கிப் புன்னகை புரிந்து கொண்டிருப்பதைக் கண்டாள். பிறகு காலுறையைப் பின்னும் வேலையில் ஈடுபட்டாள். அதை முடிக்கும்வரை திரும்பிப் பார்ப்பதில்லை என்று தீர்மானித்துக் கொண்டாள்.

சீக்கிரமே அவர் உண்மையிலேயே கண்களை மூடி அயர்ந்து நித்திரை செய்தார். அவர் நீண்ட நேரம் தூங்கவில்லை. இருந்து இருந்தாற் போலிருந்தது ''குப்''பென்று, வியர்வை கப்ப அவர் திடுக்கிட்டு விழித்துக் கொண்டார்.

இப்போது அவர் மனதை சர்வசதாவும் நிரம்பிக் கொண்டிருந்த வாழ்வா, சாவா என்னும் விஷயத்தைப் பற்றி அதிலும் முக்கியமாக சாவைப் பற்றி தூங்கும்போது கூட நினைத்துக் கொண்டிருந்தார். மரணத்தைத் தாம் சமீபித்துவிட்டதை அவர் உணர்ந்தார்.

''அன்பு? அன்பு என்றால் என்ன?'' என்று அவர் யோசித்தார்.

''அன்பு மரணத்தைத் தடுக்கிறது. அன்பே வாழ்க்கை. நான் அன்பு செலுத்துவதால்தான் எல்லாவற்றையும் புரிந்துகொள்கிறேன். எல்லாம் இருப்பதும், வாழ்வதும் நான் அன்பு செலுத்துவதால்தான். அன்புதான் கடவுள். நான் சாகிறேனென்றால் அன்பின் ஒரு துணுக்கான நான் அந்தப் பொதுவான, அமரத்துவமான மூலத்திற்குத் திரும்பிச் செல்லவேண்டும் என்றுதான் அதற்கு அர்த்தம்! இந்த எண்ணங்கள் அவருக்கு ஆறுதலளிப்பதாகத் தோன்றின. ஆனால், அவை வெறும் எண்ணங்கள்தானே. அவற்றில் ஏதோ குறைபாடு இருந்தது. அவை தெளிவாக இல்லை. அவை தனி மனிதர் பற்றிய ஒரு சார்புடைய எண்ணங்களாகவும், மூளையின் கற்பனைகளாகவு மிருந்தன. பழைய மனவெழுச்சியும் நிச்சயமின்மையும் வேறு தலை தூக்கின. அவர் அயர்ந்து தூங்கிவிட்டார்.

அவர் உண்மையில் எந்த அறையில் இருந்தாரோ அதே அறையில் படுத்திருப்பதுபோல் கனவு கண்டார். ஆனால் இப்போது அவர் பூரண சுகத்தோடும், காயமின்றியுமிருந்தார். சாமானியமான, முக்கியமல்லாத பலர் அவர் முன் தோன்றினர். அவர் அவர்களுடன் பேசினார். ஏதோ அற்பமான விஷயங்களைப் பற்றியெல்லாம் விவாதித்தார். அவர்கள் போவதற்குத் தயாராகிக் கொண்டிருந் தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ இவையெல்லாம் பயனற்றவை களென்பதையும், இவற்றைவிட முக்கியமான கவலைகள் தமக்கிருக்கின்றன என்பதையும் அரைகுறையாக உணர்ந்தார். எனினும், தமது வெறும் வாசாலகம் மூலம் அவர்களை வியப்பிலாழ்த்தியவாறு தொடர்ந்து பேசிக்கொண்டே இருந்தார். அவர் அறியாமலே படிப்படியாக இந்த நபர்களெல்லாம் மறையத் தொடங்கினர். மூடியிருந்த கதவு விஷயம் ஒ்றுதான் இப்போது மற்றெல்லாவற்றையும் பின்னுக்குத் தள்ளிவ் ட்டு முன்னணியில் நின்றது. அவர் எழுந்து கதவை மூடித் தாழ்ப்பாளிடப் போனார். தாழ்ப்பாளிடுவதற்கு அவர் உரிய நேரத்தில் சென்றாரா, இல்லையா என்பதைப் பொறுத்துத்தான் எல்லாமே இருந்தது. அவர் போகவே செய்தார், விரைந்து செல்ல முயற்சியும் செய்தார். ஆனால், அவரது கால்கள் நகர மறுத்துவிட்டன. அவர் மிகப் பிரயாசையோடு தன் சக்தி முழுவதையும் பயன்படுத்திய போதிலும்கூட தன்னால் உரிய நேரத்தில் சென்று தாழ்ப்பாளிட முடியாது என்பதைத் தெரிந்து கொண்டார். தீவிர வேதனைப்படுத்தும் ஒரு பயம் அவரைக் கௌவிக் கொண்டது. அந்த பயம்தான் மரண பயம் என்பது. அது கதவுக்குப் பின்புறம் நின்றிருந்தது. ஆனால், அவர் அப்போதுதான் கதவை நோக்கித் தட்டுத் தடுமாறிச் சென்று கொண்டிருக்கையில் அந்த பயங்கரமான ஏதோ ஒன்று அதற்குள்ளாகக் கதவை எதிர்ப்புறத்திலிருந்து தள்ளி உள்ளே நுழைய முனைந்து கொண்டிருந்தது. மனித ஜீவனல்லாத ஒன்று - மரணம் - உள்ளே திடும்பிரவேசமாக நுழைய முயன்று கொண்டிருந்தது. அது உள்ளே வராதபடி தடுத்தாக வேண்டும். அவர் கதவை எட்டிப் பிடித்து, கடைசிப் பிரயத்தனமாக அதை முட்டுத் தாங்கி நிற்க முயற்சி செய்தார். - அதைத் தாழ்ப்பாளிடுவது இப்போது அசாத்தியமானதாக இருந்தது - ஆனால், அவரது முயற்சி பலஹீனமாகவும் பயனற்றும் போயிற்று. அந்த பயங்கரத்தால் பின்னாலிருந்து தள்ளப்பட்ட கதவு திறந்து மீண்டும் மூடிக்கொண்டது.

அது திரும்பவும் வெளியேயிருந்து தள்ளிற்று. மனித சக்திக்கும் அப்பாற்பட்ட அவரது இறுதி முயற்சிகள் வியர்த்தமாயின. கதவின் இரண்டு பாதிகளும் ஓசையின்றித் திறந்துகொண்டன. அது உள்ளே நுழைந்தது, அதுதான் மரணம். இளவரசர் ஆண்ட்ரூ செத்துப் போனார்.

ஆனால், அவர் இறந்துபோன க்ஷணத்திலேயே, தாம் தூங்கிக் கொண்டிருக்கிறோம் என்பது அவரது நினைவுக்கு வந்தது. எனவே, இறந்துபோன அந்த விநாடியிலேயே ஒரு முயற்சி செய்து அவர் விழித்துக்கொண்டார்.

'ஆம், அது மரணம்தான். நான் செத்தேன் - விழித்தெழுந்தேன். ஆம், மரணம் ஒரு விழிப்புத்தான்!' உடனே அவரது உள்ளத்தில் ஒளி வீசிற்று. இதுவரை அந்தத் தெரியாத ஒன்றை மறைத்துக் கொண்டிருந்த மூடிக்கொண்டிருந்த திரை அவரது ஆன்மீகப் பார்வையிலிருந்து விலகிற்று. அதுவரை தன்னுள் சிறைப்படுத்தப் பட்டிருந்த சக்திகள் விடுதலை செய்யப்பட்டு விட்டதுபோல் அவர் உணர்ந்தார். அந்த விசித்திரமான அலட்சியம் அவரை விட்டு மீண்டும் அகலவில்லை.

வியர்வை அரும்ப விழித்துக்கொண்ட அவர் மெத்தையில் புரண்டு படுத்தார். நட்டாஷா அவரிடம் சென்று என்ன விஷயம் என்று கேட்டாள். அவர் பதில் பேசவில்லை. அதற்குப் பதில் ஒன்றும் புரியாதவரைப் போல அவளை விநோதமாகப் பார்த்தார்.

இதுதான் இளவரசி மேரி வந்து சேருவதற்கு இரண்டு தினங்களுக்கு முன்னர் அவருக்கு நேர்ந்ததாகும். அந்த தினம் முதல், டாக்டர் கருத்துத் தெரிவித்ததுபோல, அவரது காய்ச்சல் உக்கிரமான கட்டத்தை அடைந்தது. ஆனால், டாக்டர் கூறியதைப்பற்றி நட்டாஷா அக்கறை கொள்ள வில்லை. அவளே அந்த பயங்கர சின்னங்களைத் திட்டவட்டமாகப் பார்த்தாள். இதைப்பற்றி அவளுக்கு இனி கிஞ்சிற்றும் ஐயமில்லை.

அன்றைய தினம் முதல் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு வாழ்க்கையிலிருந்தும் அதேபோல தூக்கத்திலிருந்தும் ஒரு விழிப்பு ஏற்பட்டது. வாழ்க்கையின் காலத்தோடு ஒப்பிடுகையில் அதிலிருந்து ஏற்பட்ட விழிப்பு கனவின் காலத்தோடு ஒப்பிடுகையில் தூக்கத்திலிருந்து ஏற்பட்ட விழிப்பை விட அவருக்கு மெதுவாகத் தோன்றவில்லை.

இந்த ஒப்பு நோக்கப்பட்ட மெதுவான விழிப்பில் அச்சம் தரக்கூடியதோ அல்லது மூர்க்கமானதோ எதுவுமில்லை.

அவரது கடைசி நாட்களும் காலமும் சாதாரணமான, எளிய முறையிலேயே கழிந்தன. அவரை விட்டு அகலாத இளவரசி மேரி, நட்டாஷா ஆகிய இருவருமே இதை உணர்ந்தனர். அவர்கள் அழவோ நடுக்கம் கொள்ளவோ இல்லை. இந்த இறுதி நாட்களில் தாங்கள் அவருக்குச் சிசுருட்சை செய்யவில்லை. (அவர் இனியும் இங்கில்லை, அவர்களை விட்டுப் போய்விட்டார்). அதற்குப் பதில் அவரைப் பெரும்பாலும் நினைவுபடுத்திய அவரது உடலுக்கே

சிசுருட்சை செய்தோம் என்பதை அவர்களே அறிந்திருந்தனர். இதை அவர்கள் தீர்க்கமாக உணர்ந்திருந்ததால் மரணத்தின் வெளிப்படையான பயங்கரம் அவர்களை ஒன்றும் செய்யவில்லை. அவர்கள் தங்களது வேதனையைக் கிண்டிக் கிளறிவிடுவது அவசியம் என்று கருதவில்லை. அவரது முன்னிலையிலோ அல்லது வெளியேயோ அவர்கள் கண்ணீர் விடவில்லை. அவரைப் பற்றி அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளவுமில்லை. தாங்கள் புரிந்துகொண்டதை வார்த்தைகளில் வெளியிட முடியாது என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர்.

அவர் படிப்படியாக அமைதியாக, மேலும் மேலும் அடங்கிக்கொண்டிருக்கிறார், தங்களிடமிருந்து பிரிந்து சென்றுகொண்டிருக்கிறார் என்பதை அவர்கள் கண்டனர். இது இப்படித்தான் நடக்கும் என்பதையும் அதுதான் சரியானது என்பதையும் அவர்களிருவருமே அறிவர்.

அவர் தமது குற்றங்களை யெல்லாம் ஒப்புக்கொண்டு பாவ மன்னிப்புப் பெற்றுக்கொண்டார். அவரிடமிருந்து விடைபெற ஒவ்வொருவரும் வந்தனர். அவரது மகனை அவரிடம் கொண்டுவந்தபோது பையனின் உதடுகளில் முத்தமிட்டு விட்டு வேறு பக்கம் திரும்பிக்கொண்டார். இவ்விதம் அவர் செய்தது மனக்கஷ்டத்தாலோ, துயரத்தாலோ அல்ல. (இளவரசி மேரியும் நட்டாஷாவும் இதைப் புரிந்துகொண்டனர்). அதற்குப் பதில் பையனுக்குத் தேவைப்படுவதெல்லாம் இவ்வளவுதான் என்று, அவர் நினைத்ததாலேயே இவ்வாறு செய்தார். ஆனால், பையனை ஆசீர்வதிக்கும்படி அவரிடம் கூறப்பட்டபோது அவ்விதமே ஆசீர்வதித்தார். பிறகுதான் இன்னும் செய்யவேண்டியது ஏதாவது இருக்கிறதா என்று கேட்பதுபோல சுற்றுமுற்றும் பார்த்தார்.

உயிர் பிரியும்போது அவரது உடல் கடைசி முறையாகக் குலுங்கிற்று, அப்போது இளவரசி மேரியும், நட்டாஷாவும் அங்கிருந்தனர்.

'எல்லாம் முடிந்து விட்டதா?' என்றார் இளவரசி மேரி. அவர்கள் முன்னாலேயே அவரது உடல் சில்லிட்டுச் சில நிமிடங்கள் அசைவற்றுக் கிடந்தபோது, நட்டாஷா சென்று, ஜீவனிழந்து போன கண்களை நோக்கினாள். அவற்றை மூடுவதற்கு விரைந்தாள். அப்படியே மூடவும் செய்தாள். ஆனால், அவற்றை முத்தமிடவில்லை. அதற்குப் பதில் அவளுக்கு அவரைப் பெரிதும் நினைவூட்டிய அவரது சடலத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

'அவர் எங்கே போய் விட்டார்? இப்போது எங்கே இருக்கிறார்?...'

சடலம் குளிப்பாட்டி உடை உடுத்தப்பட்டு மேஜை மீதிருந்த சவப்பெட்டியில் கிடத்தப்பட்டபோது அவருக்கு இறுதி வணக்கம் தெரிவிக்க ஒவ்வொருவரும் வந்தனர். அவர்களெல்லோரும் அழுதனர்.

குட்டி நிக்கலஸின் உள்ளம் வேதனை மிகுந்த குழப்பத்தால் வெடித்துப் போய்விடும் போலிருந்ததால் அவன் அழுதான். கோமகளும், சோனியாவும் நட்டாஷாவின் நிலைக்கு இரக்கப்பட்டும், இளவரசர் ஆண்ட்ரூவின் மறைவுக்காகவும் அழுதனர். முதிய கோமகனோ சீக்கிரமே தானும் இதே பயங்கர அடிச்சுவட்டில் செல்லவேண்டி வருமே என்பதை நினைத்து அழுதார்.

நட்டாஷாவும், இளவரசி மேரியும்கூட இப்போது அழுதனர். ஆனால் தனிப்பட்ட முறையில் தங்களுக்கு ஏற்பட்ட துயரம் காரணமாக அவர்கள் அழவில்லை; மாறாக, தங்கள் முன்னிலையில் நடந்தேறிய மரணத்தின் சிக்கலற்ற, கம்பீரமான இரகசியத்தைப் புரிந்துகொண்டதனால் அவர்களது உள்ளங்களை ஆட்கொண்ட ஒரு பவித்திரமான, மென்மையான உணர்ச்சியோடு அவர்கள் அழுதனர்.



## விளக்க உரைகள்

**12 — 1**

விட்ஜென்ஸ்டைன் என்பவர் ஆஸ்திரிய விருதுகளை பிரஞ்சுக்காரர்களிடமிருந்து கைப் பற்றினார். அவுடிநாட் தலைமையில் பிரஞ்சு படைப்பகுதிகளின் மீது ஜூன் மாதம் 18, 19 தேதிகளில் கிலியாஸ்டைட்சி என்ற இடத்தில் நடத்திய தாக்குதல்களில் அந்த விருதுகளைக் கைப்பற்றினார்கள். ஆஸ்திரிய துருப்புகள் நெப்போலியனோடு சேர்ந்து யுத்தம் செய்துகொண்டிருந்தன. சிறிது காலத்திற்கு முன்னால்தான் ஆஸ்திரியா ரஷ்யாவுடன் நேச ஒப்பந்தம் செய்தது. அதை மீறி ஆஸ்திரியா நடந்ததையே இந்தக் குறிப்புச் சுட்டிக்காட்டுகிறது.

**12 — 2**

குட்டுஜோவ் அறிக்கை அனுப்பிய மூன்றாவது தினத்தில் ஒரு கிராமாந்திர கனவான் மாஸ்கோவி லிருந்து வந்தார். பிரஞ்சுக்காரர்களிடம் மாஸ்கோ சரணடைந்தது பற்றிய செய்தி அதன் பின்னால் பரவியது.

**12 — 7**

எதற்காகப் பிரார்த்தனை செய்துகொண்டிருந் தாரோ, அந்தக் காரியம் நிறைவேறிவிட்டது என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். தமது சொந்த அனுபவங்களை தம்முடைய நாவல்களில் ஆசிரியர் உபயோகித்து வருவதற்கு இது ஒரு ஆதாரம். அவருடைய 23-வது வயதில் காக்கசஸ் பிரதேசத்தில் அவர் ராணுவத்தில் இருந்தபோது, ஒரு சீட்டு விளையாட்டில் அவர் தமது கையிலிருந்த ரொக்கப் பணம் முழுவதையும் இழந்தார். மேற்கொண்டு வேண்டிய பணத்திற்கு ஐநூறு ரூபிள்களுக்கு ஒரு பிராமிசரி நோட்டையும் கொடுத்தார். அந்த நோட்டிற்குப் பணம் கொடுக்கவேண்டிய காலம் வந்தது. அச்சமயமும் அவரிடம் கையில் பணம் இல்லை. தமது கமாண்டரிடம் தம்மைப்பற்றி புகார் செய்யப்படுமானால், தம்முடைய நிலைமை எப்படி இருக்கும் என்பதை நினைத்து அவர் அதைரியம் கொண்டார். இதைக் குறிப்பிட்டு தமது அத்தையான டாட்டியானாவுக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு சொல்லியிருந்தார் :

''மாலையில் நான் பிரார்த்தனை செய்தபோது - வெகு உருக்கமான இந்த கஷ்டத்திலிருந்து தப்புவிக்கும்படிக் கடவுளைப் பிரார்த்தித்தேன். ஆனால் நான் படுக்கப்போகும்போது இதிலிருந்து எப்படி தப்ப முடியும் என்று நினைத்தேன். அந்தக் கடனை அடைப்பதற்கு வேண்டியது எதுவும் நடக்கப் போவதில்லை என்று நினைத்தேன். 'கடவுளே, என்னைக் காப்பாற்றும்' என்று பிரார்த்தித்துக்கொண்டு படுத்துத் தூங்கிவிட்டேன்.''

மறுநாள் அவருடைய சகோதரரான நிக்கலஸிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ஆசிரியருக்கு மிகவும் வேண்டியவரான ஒரு நண்பர் அந்தப் பிராமிசரி நோட்டை வைத்திருந்தவரிடமிருந்து அதை வாங்கி நிக்கலஸிடம் கொண்டுவந்து கொடுத்து, அதை அவருக்குப் பரிசாக அனுப்புமாறு கூறியதாக அக்கடிதத்தில் எழுதப் பட்டிருந்தது.

இரண்டு சம்பவங்களும் ஒரே மாதிரியாக இருக்கிறபடியால், மேலே குறிப்பிடப்பட்ட சம்பவத்தையே அவர் இந்த நாவலில் கையாண்டு இருக்கிறார் என்று தெரிகிறது.

யாராஸ்லாய் என்ற இடத்திற்கு இளவரசி மேரி பிரயாணப்பட்டு போகும்போது அவளை நிக்கலஸ் வழி அனுப்பினார் என்று ஒரு இடத்தில் வருகிறது. தெற்கிலுள்ள வாரோநெஜ் என்ற இடத்திற்கும், வடக்கிலுள்ள யாராஸ்லாவ் என்ற இடத்திற்கும் 500 மைல் தூரமுண்டு. ஏனென்றால் பிரெஞ்சுக்காரர்களிடம் மாஸ்கோ இருந்தபடியால், மாஸ்கோ வழியாக இளவரசி மேரி பிரயாணம் செய்யமுடியாது.



# 13

## 1

மனிதனின் மனம் சம்பவங்களுக்கான காரணங்களை அவற்றின் முழுமையோடு புரிந்து கொள்ள முடியாது. எனினும் அந்தக் காரணங்களை கண்டுபிடிக்க வேண்டுமென்ற ஆர்வம் அவன் உள்ளத்தில் பொதிந்துள்ளது. சூழ்நிலைகளின் வெவ்வேறான தன்மையையும் சிக்கலையும் கருதாமல் எது ஒன்றையும் தனியே எடுத்துப் பார்த்தால் அது காரணமாகத் தோன்றலாம். மனிதன் தனது அறிவுக்குப் புலப்படக்கூடிய முதலாவது யூகத்தைப் பிடித்துக்கொண்டு 'இதோ இதுதான் காரணம்!' என்று கூறுகிறான். வரலாற்று சம்பவங்களில் (இவற்றில் மனிதனின் நடவடிக்கைகள் ஆராய்ச்சிக்குரிய விஷயமாக இருக்கும்) முதன்மையானதும் மிகவும் பூர்வீகமானது மான யூகம் கடவுள்களின் சித்தத்தைப் பற்றியதாக இருக்கும், அதன் பின்னர் மிக உயர்ந்த நிலையிலிருப்போரின் - அதாவது சரித்திரப் புருஷர்களின் - சித்தத்தைப் பற்றியதாக இருக்கும். ஆனால், எந்த ஒரு வரலாற்று சம்பவத்தின் சாரத்தையும் - அந்த சம்பவம் அதில் பங்கு கொள்ளும் வெகுஜனப் பகுதியினரின் நடவடிக்கையாக இருக்கும் - நாம் ஊடுருவிப் பார்த்தால் சரித்திரப் புருஷர்களின் சித்தம் வெகுஜனங்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தவில்லை என்பதையும் அதற்குப் பதில் அந்த சித்தம்தான் நெடுகிலும் கட்டுப்படுத்தப்பட்டு வந்திருக்கிறது என்பதையும் தெரிந்து கொள்ளலாம். நாம் வரலாற்று சம்பவங்களின் அர்த்தத்தை இப்படிப் புரிந்துகொள்கிறோமா அல்லது 'அப்படிப் புரிந்துகொள்கிறோமா என்பது முக்கியமல்லாத விஷயமாகத் தோன்றலாம். எனினும், பூமி அசையாமல் அப்படியே நிற்கிறது என்றும், கிரகங்கள்தான் அதனைச் சுற்றுகின்றன என்றும் கூறியவர்களுக்கும் பூமியை எது தாங்கி நிற்கிறது என்று தங்களுக்கு தெரியாது என்றும், ஆனால், அதையும் இதர கிரகங்களையும் இயக்கும் விதிகள் இருப்பது தங்களுக்குத் தெரியுமென்றும் கூறியவர்களுக்குமிடையே என்ன வித்தியாசமிருந்ததோ அதே வித்தியாசம் நெப்போலியன் விரும்பியதால்தான் மேற்கத்திய மக்கள் கிழக்கின் மீது படையெடுத்தார்கள் என்று சொல்லும் மனிதனுக்கும் இப்படியெல்லாம் நடக்கவேண்டுமென்றிருந்ததால் தான் இது நடந்தது என்று கூறும் மனிதனுக்குமிடையே இருக்கவே செய்கிறது. எல்லா காரணங்களுக்குமான ஒரு காரணத்தைத் தவிர ஒரு வரலாற்றுச் சம்பவத்துக்குக் காரணம் கிடையாது, காரணம் இருக்க முடியாது. ஆனால் சம்பவங்களை இயக்கக்கூடிய விதிகள் இருக்கின்றன. இவற்றில் சில நமக்குத் தெரிந்தவை. மற்றவை நாம்

புரிந்துகொள்ள முடியாதவை. எவ்விதம் பூமி அசையாதது என்றும் கருத்தோட்டத்தை மனிதர்கள் கைவிட்டபோதுதான் கிரகங்களின் இயக்க விதிகளைக் கண்டுபிடிக்க முடிந்ததோ, அவ்விதமே யாரோ ஒரு தனி மனிதனின் சித்தத்தில் காரணத்தைத் தேடும் முயற்சியைக் கைவிட்டால்தான் இந்த விதிகளை நாம் கண்டுபிடிக்க முடியும்.

பாராடினோ போருக்கும், எதிரிகள் மாஸ்கோவைப் பிடித்துக் கொண்டதற்கும், அந்நகர் நெருப்பால் அழிந்துபோனதற்கும் அடுத்தபடியாக *1812* - ம் வருட யுத்தத்தில் மிக முக்கியமான சம்பவம் ருஷ்ய சைன்யம் ரயாஜானிலிருந்து கலுகா ரஸ்தாவுக்கும் டாராவ்டினோ முகாமுக்கும் சென்றதுதான் என்று - இது கிராஸ்னாயா பாக்ரா நதியைக் கடந்து மேற்கொள்ளப்பட்ட பக்கவாட்டு நடவடிக்கை என்று அழைக்கப்படுகிறது - சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர். அந்தத் திறமைமிக்க சாதனையின் பெருமையை பல்வேறு மனிதர்கள் மீது ஏற்றிக் கூறுகின்றனர். அவர்களில் யார் அந்தப் பெருமைக்குரியவர்கள் என்று தங்களுக்குள் மாறுபடுகின்றனர். அந்நிய சரித்திர ஆசிரியர்கள்கூட, பிரஞ்சு சரித்திர ஆசிரியர்கள் உள்பட, பக்கவாட்டு நடவடிக்கை பற்றிப் பேசும்போது ருஷ்ய கமாண்டர்களின் சாகசத்தை ஒப்புக் கொள்கின்றனர். ஆனால் இந்த பக்கவாட்டு நடவடிக்கை நெப்போலியனை அழித்து ருஷ்யாவைக் காப்பாற்றிய யாரோ ஒரு தனி மனிதனின் ஆழ்ந்த அறிவுள்ள திட்டம் என்று ராணுவ ஆசிரியர்களும், அவர்களைப் பின்பற்றி மற்றவர்களும் ஏன் கருதுகிறார்கள் என்று புரியவில்லை. ஒரு ராணுவம் தாக்கப்படாம லிருக்கையில் அதற்குச் சிறந்த இடம் எங்கு ஆகாராதிகள் மிகுதியாக கிடைக்கின்றனவோ அதுதான் என்பதைத் தீர்மானிப்பதற்கு நிரம்ப புத்திக்கூர்மை தேவையில்லை; *1812* - ல் மாஸ்கோவிலிருந்து பின்வாங்கிய ருஷ்ய சைன்யத்துக்கு மிகவும் சிலாக்கியமான இடம் கலுகா ரஸ்தாதான் என்பதை மந்த புத்தி படைத்த பதின்மூன்று வயது சிறுவன்கூட ஊகித்துக்கொண்டிருக்க முடியும். அப்படியிருக்க, இந்தப் பக்கவாட்டு நடவடிக்கைத் திட்டத்தில் எங்கே ஆழ்ந்த அறிவும், திறனும் பொதிந்துள்ளதோ தெரியவில்லை. ஆக, இந்த சாதனை, மிகுந்த புத்தி நுட்பம் படைத்தது என்று சரித்திர ஆசிரியர்கள் என்ன காரணம் கொண்டு முடிவுக்கு வருகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடியாமலிருக்கிறது. அதிலும், இந்தப் பக்கவாட்டு நடவடிக்கைக்கு முன்னரோ, பின்னரோ, அல்லது அதனை உடனடியாகத் தொடர்ந்தோ வேறு சம்பவங்கள் நிகழ்ந்திருந்தால் அவை ருஷ்யர்களுக்கு நாசகரமானதாகவும், பிரஞ்சுக்காரர்களுக்கு நன்மை பயப்பதாகவும் இருந்திருக்கக்கூடும். அவ்விதமிருக்க, இந்த சாகசச் செயல் பிரஞ்சுக்காரர்களை அழித்து

ரஷ்யாவைக் காப்பாற்றும் நோக்கத்தோடு திட்டமிட்டு செய்தது என்று அவர்கள் ஏன் கருதுகிறார்கள் என்பதை விளங்கிக்கொள்வது இன்னும் கஷ்டமாக இருக்கிறது. அந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்ட காலம் முதல் உண்மையிலேயே ருஷ்ய சைன்யத்தின் நிலைமை அபிவிருத்தியடைய தொடங்கியிருந்தால் அதற்கு அந்த நடவடிக்கைதான் காரணம் என்று முடிவு செய்து விடக்கூடாது.

அந்த பக்கவாட்டு நடவடிக்கை ருஷ்ய ராணுவத்திற்கு எத்தகைய அனுகூலமும் விளைவிக்கத் தவறியிருக்கக்கூடும் என்பது மட்டுமின்றி, வேறு சந்தர்ப்பங்களில் அதன் அழிவுக்கே கூட வழி வகுத்திருக்கவும் கூடும். மாஸ்கோ எரிந்து சாம்பலாகாதிருந்தால் என்ன நடந்திருக்கும்? முராட்டுக்கு ருஷ்ய ராணுவம் இருக்குமிடம் தெரிந்திருந்தால் என்ன நடந்திருக்கும்? நெப்போலியன் செயலற்று இல்லாமலிருந்திருந்தால் என்ன நடந்திருக்கும்? பெனிக்ஸனும், பார்க்ளேயும் யோசனை கூறியபடி ருஷ்ய ராணுவம் கிராஸ்னாயா பாக்ராவில் ( பாக்ரா என்பது மாஸ்க்வா நதியின் ஒரு சிறு கிளை ஆறு)போர் புரிந்திருந்தால் என்ன நடந்திருக்கும்? பாக்ராவுக்கு அப்பால் ருஷ்யர்கள் முன்னேறி வந்து கொண்டிருந்தபோது பிரஞ்சுக்காரர்கள் அவர்களைத் தாக்கியிருந்தால் என்ன நடந்திருக்கும்? ஸ்மாலென்ஸ்க் தாக்குதலில் பயன்படுத்திய படைபலத்தில் பத்தில் ஒரு பகுதியைக் கொண்டுகூட டாராவ்டினோவை நெருங்கியதும் நெப்போலியன் ருஷ்யர்களைத் தாக்கியிருந்தால் என்ன நடந்திருக்கும்? பிரஞ்சுக்காரர்கள் பீட்டர்ஸ்பர்க் நோக்கி முன்னேறியிருந்தால் என்ன நடந்திருக்கும்?.. இந்த சம்பவங்களில் எது நடந்திருந்தாலும் வெற்றியை ஈட்டித் தந்த பக்கவாட்டு நடவடிக்கை விநாசகரமாக முடிந்திருக்கக்கூடும்.

இதுபோக, மிகவும் புரிந்துகொள்ள முடியாத மூன்றாவது விஷயம் என்னவெனில், இந்தப் பக்கவாட்டு நடவடிக்கை மேற்கொண்ட பெருமை எந்தத் தனி ஒரு மனிதனையும் சேர முடியாது. இதை யாரும் முன்கூட்டியே யோசனை செய்யவில்லை. வாஸ்தவத்தில், பிலியிலிருந்து நடைபெற்ற வாபஸ்போல, இந்தத் திட்டம் எவர் மனதிலும் முழுமையாக உருவாகவில்லை, அதற்குப் பதில் - விநாடிக்கு விநாடி, அடிக்கு அடி, நிகழ்ச்சிக்கு நிகழ்ச்சி - மிகவும் வேறுபட்ட, முடிவுற்ற, ஏராளமான சந்தர்ப்ப சூழ்நிலைகளிலிருந்து இது உருவாயிற்று. அதிலும் இது நிறைவேற்றப்பட்டு கடந்தகால நிகழ்ச்சியான பிறகுதான் இதன் முழுமையைக் காண முடிந்தது என்னும் உண்மையை சரித்திர ஆசிரியர்கள் வேண்டுமென்றே பார்க்காமல் தவிர்த்து வருவதுதான்.

டிலியில் நடைபெற்ற யுத்தக் கவுன்சில் கூட்டத்தில், நைஜினி ரஸ்தா வழியாக நேரடியாக வாபசாக வேண்டும் என்னும் எண்ணம்தான் ரஷ்ய கமாண்டர்களின் உள்ளங்களில் மேலோங்கி நின்றது. கவுன்சிலில் பெரும்பாலோர் இத்தகைய வாபஸுக்கு ஆதரவாக வாக்களித்ததும், இவையெல்லாவற்றிற்கும் மேலாக பிரதம சேனாதிபதிக்கும் கமிசேரியட் இலாகாவுக்குப் பொறுப்பாக இருந்த லான்ஸ்காயுக்குமிடையே நடைபெற்ற பிரசித்தி பெற்ற உரையாடலும் இதற்கு அத்தாட்சியாகும். ராணுவ சப்ளைகள் பெரும்பாலும் டுலா, ரயாஜான் மாகாணங்களில் ஓகா நெடுகிலும் குவித்து வைக்கப்பட்டுள்ளன என்றும், எனவே அவர்கள் நைஜினி ரஸ்தா வழியாக வாபசானால் ராணுவம் தனது சப்ளைகளிலிருந்து அகன்ற ஓகா நதியால் துண்டிக்கப்படும் என்றும், குளிர்காலத்தில் இந்நதியைக் கடக்க முடியாது (ஏனென்றால் அப்போது நதி இலேசாக பனிக்கட்டியால் மூடப்பட்டிருக்கும்.) என்றும் பிரதம சேனாதிபதியிடம் லான்ஸ்காய் தெரிவித்தார். அவரது பேச்சு, முதலில் மிகச் சரியானது என்று தோன்றிய திட்டத்தை - அதாவது நைஜினி - நோவ்காராட் ரஸ்தா வழியாக நேரடியாக வாபசாக வேண்டும் என்னும் திட்டத்தை - கைவிடுவது அவசியம் என்பதை முதன் முதலாக எடுத்துக் காட்டிற்று. சைன்யம் ரயாஜான் ரஸ்தா வழியாகத் தனது சப்ளைகளையொட்டி தெற்கு நோக்கித் திரும்பிற்று. இதன் விளைவாக ஏற்பட்ட பிரஞ்சுக்காரர்களின் அசமந்தமும் (அவர்களுக்கு ருஷ்ய சைன்யம் எங்கே இருக்கிறது என்பதுகூட தெரியாமல் போய்விட்டது) டுலாவிலுள்ள ஆயுதக் கிடங்கு பாதுகாக்கப்படவேண்டுமே என்ற கவலையும், அதிலும் முக்கியமாக தனது சப்ளைகளையொட்டியே செல்வதினால் உள்ள அனுகூலங்களும் ஆகிய இவைகளெல்லாம் சேர்ந்து ராணுவத்தை இன்னும் தெற்கே, டுலா ரஸ்தா நோக்கித் திரும்பும்படி செய்தது. இவ்விதம் நிர்ப்பந்தம் காரணமாக பாக்ராவுக்குப் பால் டுலா ரஸ்தாவை வந்தடைந்ததும் பாடோல்ஸ்க் என்னுமிடத்தில் முகாமிடவே ரஷ்யக் கமாண்டர்கள் உத்தேசித்திருந்தனர். அவர்களுக்கு டாராவ்டினோவைப் பற்றிய எண்ணமே இல்லை; ஆனால் பல சந்தர்ப்ப சூழ்நிலைகளும், சிறிதுகாலம் ருஷ்யர்களுடன் தொடர்பற்றிருந்த பிரஞ்சுத் துருப்புகள் மீண்டும் தோன்றியதும், சண்டையிடுவதற்கான திட்டங்களும், இவை யெல்லாவற்றிற்கும் மேலாக கலுகா மாகாணத்தில் ஏராளமான உணவுப் பொருள்கள் அகப்பட்டதும் ஆகிய இவைகளெல்லாம் நமது ராணுவத்தை இன்னும் தெற்கே திரும்பி டுலாவிலிருந்து கலுகா ரஸ்தாவுக்கும், அங்கிருந்து டாராவ்டினோ வுக்கும் செல்லும்படி கட்டாயப்படுத்தின. டாராவ்டினோ, சப்ளைகள்

நிறைந்திருந்த ரஸ்தாக்களுக்கு இடையே அமைந்திருந்தது. மாஸ்கோவைக் கைவிடுவது என்று எப்போது முடிவு செய்யப்பட்டது என்பதை எவ்விதம் சொல்ல முடியாதோ, அவ்விதமே டாராவ்டினோவுக்குச் செல்ல எப்போது, யாரால் தீர்மானிக்கப்பட்டது என்பதையும் துல்லியமாகக் கூற முடியாது. கணக்கற்ற பல்வேறு காரணங்களின் விளைவாக ராணுவம் அங்கு போய்ச் சேர்ந்த பிறகு தான் பலர் இந்த நடவடிக்கையைத் தாங்கள் விரும்பியிருந்ததாகவும், அதன் விளைவை முன்கூட்டியே அறிந்திருந்ததாகவும் கூறத் தலைப்பட்டனர்.

## 13

## 2

புகழ்பெற்ற பக்கவாட்டு நடவடிக்கையில் அடங்கியிருந்ததெல்லாம் இதுதான்: பிரஞ்சுக்காரர்களின் முன்னேற்றம் நின்றதும், படையெடுப்பாளர்களிடமிருந்து நேரே பின்புறமாகத் தொடர்ந்து வாபசாகிக் கொண்டிருந்த ருஷ்ய ராணுவம் தன்னை எதிரிகள் பின்பற்றி வரவில்லை என்பதைத் தெரிந்ததும் அந்த நேரடிப் பாதையிலிருந்து விலகி சப்ளைகள் நிறைந்திருந்த மாவட்டம் நோக்கி இயல்பாகவே ஈர்க்கப்பட்டது.

அறிவு நுட்பம் படைத்த கமாண்டர்கள் ருஷ்ய ராணுவத்தை வழிநடத்திச் சென்றார்கள் என்று நாம் கற்பனை செய்து கொள்வதற்குப் பதிலாக, தலைவர்களே இல்லாத ராணுவமாக அதை நாம் மனத்திரையில் சித்திரித்துப் பார்த்தால் அந்த ராணுவம் என்ன செய்திருக்கும்? எங்கு அதிகமாக உணவுப் பொருள்கள் கிடைக்கின்றனவோ, எங்கு தேசம் மிகவும் வளமாக இருக்கிறதோ அந்த திசையில் பிறை வடிவத்தில் மாஸ்கோவை நோக்கித் திரும்பிச் செல்லும் நடவடிக்கையை மேற்கொள்வதைத் தவிர அது வேறெதையும் செய்திருக்காது.

நைஜினியிலிருந்து ரயாஜான், டுலா, கலுகா ரஸ்தாக்களுக்குச் செல்லும் அந்த நடவடிக்கை மிகவும் இயற்கையானதாக இருந்தது. அதனால்தான் ருஷ்யக் கொள்ளைக்காரர்கள் கூட அந்த திசையில் சென்றனர். மேலும், அந்த மார்க்கத்திலேயே தமது ராணுவத்தை வழி நடத்திச் செல்லும்படி பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து குட்டுஜோவுக்குக் கோரிக்கைகளும் வந்தன. குட்டுஜோவ் டாராவ்டினோவிலிருந்த போது சக்கரவர்த்தியிடமிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் ரயாஜான் ரஸ்தா வழியாக ராணுவத்தை நடத்திச் சென்றதற்காக கண்டனம் தெரிவிக்கப்பட்டிருந்தது. குட்டுஜோவ் ஏற்கெனவே

டரூடினோவுக்கருகில் எந்த இடத்திற்கு வந்திருந்தாரோ அதே இடத்தையே சக்கரவர்த்தியின் கடிதமும் சுட்டிக்காட்டியிருந்தது.

முழுப் போர் நடவடிக்கைகளும் பாராடினோ சண்டையும் அளித்த உத்வேகத்தின் திசை வழியில் பந்துபோல் உருண்டு சென்றுவிட்ட ருஷ்ய ராணுவம் - அந்த உத்வேகத்தின் சக்தி தீர்ந்துபோனதும் புதிதாக உத்வேகம் பெறவில்லை - தனக்கு இயல்பான நிலையை மேற்கொண்டது.

குட்டுஜோவின் தகைமை அவரது புத்திநுட்பமிக்க போர் முறைத்திறமையில் அடங்கியிருக்கவில்லை. அதற்குப் பதில் நடந்துள்ள விஷயத்தின் முக்கியத்துவத்தை அவர் மட்டுமே புரிந்து கொண்டதில்தான் அடங்கியிருந்தது. அப்போது அவர் மட்டும்தான் பிரஞ்சு ராணுவம் செயலற்று இருந்ததின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டிருந்தார்; அவர் மட்டும்தான் பாராடினோ சண்டை ஒரு வெற்றி என்று தொடர்ந்து அறுதியிட்டு உறுதியோடு கூறிவந்தார்; இன்னும் அவர்மட்டும்தான் - பிரதம சேனாதிபதி என்கிற வகையில் எதிரிகள் மீது தாக்குதல் தொடுக்க அவர் ஆவல் கொண்டிருக்க முடியும் - பயனற்ற சண்டைகளில் ருஷ்ய ராணுவம் ஈடுபடாதபடி தடுக்க தன் முழுச் சக்தியையும் உபயோகித்தார்.

பாராடினோவில் காயமடைந்த மிருகம், வேட்டைக்காரன் அதனை விட்டு விட்டு ஓடிச் சென்ற இடத்திலேயே கிடந்தது; ஆனால், அது இன்னும் உயிரோடிருக்கிறதா, பலத்தோடு இருந்துகொண்டே வெறும் பாசாங்கு செய்கிறதா என்பது வேட்டைக்காரனுக்குத் தெரியாது. திடீரென்று அந்த மிருகம் முனகும் சப்தம் கேட்டது.

காயமடைந்த மிருகத்தின் (பிரஞ்சு ராணுவம்) அவல நிலையைக் காட்டிக் கொடுத்த அந்த முனகல்தான் வலிய சமாதானப் பேச்சுவார்த்தைகள் நடத்த லாரிஸ்டோனை குட்டுஜோவின் முகாமுக்கு அனுப்பியதாகும்.

நெப்போலியனுக்குத் தன் மனதில் உதித்ததெல்லாம் சரியானதாகவே இருக்கும் என்ற எண்ணம் எப்போதுமே உண்டு. அதன்படி தனக்கு எடுத்த எடுப்பில் தோன்றிய வார்த்தைகளை, அவை அர்த்தமற்று இருந்தபோதிலும், குட்டுஜோவுக்கு எழுதினார்.

உயர்திரு. இளவரசர் குட்டுஜோவ் அவர்களே (நெப்போலியன் எழுதினார்), எனது உதவி தளகர்த்தர்களில் ஒருவரை உங்களிடம் பல முக்கியமான விஷயங்களைப் பற்றி விவாதிப்பதற்கு அனுப்பி வைத்துள்ளேன். அவர் கூறும் விஷயங்களுக்குக் கோமகனார் செவிசாய்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிலும்

முக்கியமாக, உங்களிடம் நான் நீண்டகாலமாக வைத்துள்ள பெருமதிப்பை அவர் வெளியிடும்போது அதை ஏற்குமாறு வேண்டிக்கொள்கிறேன். இதைத் தவிர இந்தக் கடிதம் எழுதுவதற்கு வேறு நோக்கம் கிடையாது. ஆண்டவன் உங்களைத் தமது தூய்மையும், கருணையுமிக்க பாதுகாப்பின் கீழ் வைத்துக் கொள்ள வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

*மாஸ்கோ, அக்டோபர் 30, 1812*

நெப்போலியன்.

குட்டுஜோவ் இதற்குப் பின்வருமாறு பதிலளித்தார்: 'எத்தகைய ஒரு ஒப்பந்தத்தையும் செய்து கொள்வதற்கு முன் முயற்சியெடுத்தவன் என்று நான் கருதப்பட்டால் பின் சந்ததியாரால் நான் சபிக்கப்படுவேன். என் நாட்டின் இன்றைய மனோநிலை அப்படியிருக்கிறது? ஆயினும், தமது துருப்புகள் தாக்குதலில் இறங்கிவிடாதபடி தடுப்பதற்குத் தொடர்ந்து தமது சக்தியையெல்லாம் உபயோகித்து வந்தார்.

பிரஞ்சுத் துருப்புகள் மாஸ்கோவில் கொள்ளையடித்துக் கொண்டும், ருஷ்யத் துருப்புகள் டாராவ்டினோவில் அமைதியாக முகாமிட்டுக் கொண்டுமிருந்த மாதத்தில் இந்த இரண்டு ராணுவங்களின் பலத்தில் ஒரு மாறுதல் - மன உறுதியிலும் எண்ணிக்கையிலும் - உருவாயிற்று. இதன் விளைவாக ருஷ்ய தரப்பின் கை ஓங்கிற்று. பிரஞ்சு சைன்யத்தின் நிலையும் எண்ணிக்கையும் ருஷ்யர்களுக்குத் தெரியாது என்றாலும், இந்த மாறுதல் நிகழ்ந்ததும் தாமதமின்றி உடனே தாக்குதலை ஆரம்பிப்பது அவசியம் என்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன. அந்த அறிகுறிகளாவன: லாரிஸ் டோனின் தூது; டாராவ்டினோவில் வேண்டிய மட்டும் கிடைத்த உணவுப் பொருள்கள்; பிரஞ்சுக் காரர்களிடையே சோம்பலும் குழப்பமும் நிலவுவதாக நாலாப் பக்கங்களிலுமிருந்து வந்துகொண்டிருந்த செய்திகள்; நமது பட்டாளங்களில் தங்குதடையின்றி வந்து குவிந்து கொண்டிருந்த புதிய படை வீரர்கள்; நேர்த்தியான காலநிலை; ருஷ்யப் போர் வீரர்கள் அனுபவித்த நீண்ட ஓய்வு; தாங்கள் எதற்காக அங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறோமோ அதைச் செய்ய வேண்டுமென்ற பொறுமையற்ற ஒரு துடிப்பு - இந்தத் துடிப்பு ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கும் ஒரு சைன்யத்தில் காணப்படுவது சகஜம்; நீண்டகாலமாக தங்கள் பார்வையிலிருந்து மறைந்து போன பிரஞ்சு ராணுவம் என்னதான் செய்து கொண்டிருக்கிறது என்பதை அறிய வேண்டுமென்ற ஆவல்; பிரஞ்சுக்காரர்களை மிக நெருங்கி கண்காணித்துக்கொண்டு நமது காவல் நிலையங்களை இப்போது

பாவ்டினோவில் அமைத்துக் கொண்டுள்ள துணிவு; பிரஞ்சுக்காரர்கள் மீது விவசாயிகளும் கொரில்லாப் படைகளும் கூலபமாக வெற்றிகள் பெற்றதாகக் கிடைத்த செய்திகள், அதனால் எழுந்த பொறாமை; பிரஞ்சுக்காரர்கள் மாஸ்கோவில் இருக்கும் வரை அவர்களைப் பழிவாங்கவேண்மென்று ஒவ்வொரு ருஷ்யனின் உள்ளத்திலும் கனன்றுகொண்டிருந்த வன்மம்; (இவை எல்லாவற்றிற்கும் மேலாக) இரண்டு சைன்யங்களுக்கு மிடையே இருந்த பலம் மாறிவிட்டது. இப்போது நிலைமை நமக்குத் தான் அனுகூலமாக இருக்கிறது என்று ஒவ்வொரு போர்வீரன் மனதிலும் குடிகொண்டிருந்த ஒரு மங்கலான உணர்வு, உண்மையிலேயே இரு தரப்புகளுக்குமிடையே இருந்த பலத்தில் ஒரு கணிசமான மாறுதல் ஏற்பட்டிருக்கத்தான் செய்தது; எனவே, முன்னேற்றம் தவிர்க்க முடியாததாகி விட்டது.

எவ்விதம் நிமிட முள் ஒரு சுற்றுச் சுற்றி முடிந்ததும் கடிகாரம் மணி அடிக்க ஆரம்பிக்கிறதோ அவ்விதமே இந்த மாற்றம் ஏற்பட்டதும் உடனே மேல் வட்டாரங்களில் சுறுசுறுப்பும் விறுவிறுப்பும் பரபரப்பும் அதிகரித்தன.

## 13

### 3

ருஷ்ய ராணுவம் குட்டுஜோவாலும், அவருக்கு கீழுள்ள அதிகாரிகளாலும், அதோடு பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து சக்கரவர்த்தி யாலும் தலைமை தாங்கி நடத்தப்பட்டது. மாஸ்கோ கைவிடப் பட்ட செய்தி பீட்டர்ஸ்பர்க்குக்கு எட்டுமுன்பே முழுப் போர் நடவடிக்கை பற்றியும் ஒரு விரிவான திட்டம் தயாரிக்கப்பட்டு, குட்டுஜோவுக்கு வழிகாட்டியாக இருப்பதற்காக அவருக்கு அனுப்பி வைக்கப்பட்டது. மாஸ்கோ இன்னும் நம் கையில்தான் இருக்கிறது என்னும் எண்ணத்திலேயே இந்தத் திட்டம் தயாரிக்கப் பட்டிருந்தாலும், ராணுவ அதிகாரிகள் அதை அங்கீகரித்ததோடு, செயலுக்கு ஒரு அடிப்படையாகவும் அதை ஏற்றுக் கொண்டனர். தொலை தூரத்திலிருந்து கொண்டு தயாரித்து அனுப்பப்படும் திட்டங்கள் எப்போதுமே நிறைவேற்றுவதற்குக் கஷ்டமாக இருக்கும் என்று மட்டுமே குட்டுஜோவ் பதிலெழுதினார். இதன்பேரில் இவ்விதம் எதிர்படக்கூடிய கஷ்டங்களைச் சமாளிப்பதற்குப் புதிய தாக்கீதுகள் அனுப்பட்டன; அத்தோடு குட்டுஜோவின் நடவடிக்கைகளைக் கண்காணிக்கவும் அவற்றைப் பற்றி அறிக்கை செய்யவும் புதிய ஆட்களும் அனுப்பப்பட்டார்கள்.

இதல்லாமல், ருஷ்ய ராணுவத்தின் முழு நிர்வாக யந்திரமுமே இப்போது திருத்தி அமைக்கப்பட்டது. பாக்ரேஷன் கொல்லப் பட்டுப் போனதாலும், பார்க்ளே சினமடைந்து வெளியேறி விட்டதாலும் காலியான ஸ்தானங்கள் பூர்த்தி செய்யப்பட வேண்டியிருந்தன. ஏ யை பி யின் இடத்திலும், பி யை டி யின் இடத்திலும் அல்லது இதற்கு மாறாக டி யை ஏயின் இடத்திலும் இவ்வாறாக நியமித்தால் நன்றாக இருக்குமா என்னும் பிரச்சினை மிக ஆழமாக ஆராயப்பட்டது - இதில் ஏ அல்லது பி யின் திருப்திக்கு மேலாக ஏதோ அடங்கியிருப்பது போல.

குட்டுஜோவுக்கும் அவரது ராணுவக் காரியாலயத் தலைமை அதிகாரிக்குமிடையே உள்ள பகைமை, சக்கரவர்த்தியின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பிரதிநிதிகளின் வருகை, மேலே கூறிய பதவி மாற்றங்கள் ஆகிய இவற்றின் விளைவாக ராணுவ அதிகாரிகளிடையே ஒரு விசித்திரமான கட்சி கட்டும் விளையாட்டு நடைபெற்றுக்கொண்டிருந்தது. பல்வேறாக கோஷ்டிகள் சேர்த்துக்கொண்டு ஏ, பி - யைக் கவிழ்ப்பதிலும், டி, சி - யைக் கவிழ்ப்பதிலும் இவ்வாறாக ஒருவரையொருவர் கவிழ்ப்பதிலும் அவர்கள் ஈடுபட்டிருந்தனர். இந்த சதிகளிலெல்லாம் யுத்தத்தை எப்படி நடத்துவது என்பதே சதிக்குரிய விஷயமாக இருந்தது. இவர்களெல்லாருமே தாங்கள்தான் யுத்தத்தை நடத்திக் கொண்டிருப்பதாக நம்பிக்கொண்டிருந்தார்கள். ஆனால், இந்த யுத்த விவகாரம் அவர்களுக்குச் சம்பந்தமில்லாமலேயே எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடந்துகொண்டிருந்தது. அதாவது அவர்கள் திட்டமிட்டபடி நடக்காமல் வெகுஜனங்களின் பிரதான போக்கையொட்டி நடந்துகொண்டிருந்தது. மேல் வட்டாரங்களில் மட்டும்தான் இந்தத் திட்டங்கள், குறுக்கீடுகள், கூட்டாலோசனை கள் எல்லாம் என்ன நடக்கவேண்டியுள்ளது என்பதன் ஒரு பிரதிபலிப்பாகத் தோன்றின.

இளவரசர் மைக்கேல் இலாரியோனாவிச்! (என்று சக்கரவர்த்தி ஒரு கடிதம் எழுதினார். இந்தக் கடிதம் டாருடினோ யுத்தத்திற்குப் பிறகே குட்டுஜோவுக்குக் கிடைத்தது) செப்டம்பர் 2 - ம் தேதி முதல் மாஸ்கோ எதிரிகளின் கையில் இருந்து வருகிறது. நீர் கடைசியாக 20 - ம் தேதியிட்டு அறிக்கை அனுப்பியிருக்கிறீர். இந்த இடைப்பட்ட காலம் முழுவதிலும் விரோதிக் கெதிராகவோ அல்லது பண்டைய தலைநகரை மீட்பதற்காகவோ எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படாதது மட்டுமல்ல, உமது கடைசியான அறிக்கைப்படி நீர் மேற்கொண்டும் பின்வாங்கவும் செய்திருக்கிறீர். செர்புகோவ் ஏற்கெனவே பகைவனது படைப் பிரிவு ஒன்றால் ஆக்கிரமித்துக்

கொள்ளப்பட்டிருக்கிறது. புகழ்பெற்ற ஆயுதசாலை அமைந்துள்ளதும், நமது ராணுவத்திற்கு அத்தியாவசியமானதுமான டுலா அபாயத்திலிருக்கிறது. ஜெனரல் வின்ட்சிங்கெரோட் அனுப்பியுள்ள அறிக்கைகளிலிருந்து பத்தாயிரம்பேர் கொண்ட ஒரு எதிரிப் பட்டாளம் பீட்டர்ஸ்பர்க் ரஸ்தாவின் முன்னேறி வருகிறது. ஆயிரக்கணக்கானோர் கொண்ட இன்னொரு பட்டாளம் டிமிட்ராவை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. மூன்றாவதொன்று விளாடிமீர் ரஸ்தாவில் முன்னேறியிருக்கிறது. கணிசமான பலம் கொண்ட நான்காவது பட்டாளம் ஒன்று ரூஸாவுக்கும் மொழாய்ஸ்க்குமிடையே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. 25 - ம் தேதிவரை நெப்போலியன் மாஸ்கோவிலேயே இருந்திருக்கிறார். இவ்விதம் பகைவன் தனது படைகளைப் பெரிய பெரிய பட்டாளங்களாக ஆங்காங்கு பிரித்து அனுப்பியிருக்கும்போது, நெப்போலியன் தமது காவல் படையினருடன் மாஸ்கோவிலேயே தங்கியிருந்திருக்கும்போது நீர் வலிய தாக்குதல் தொடுக்க முடியாத அளவுக்கு உம்மை எதிர்த்து நிற்கும் விரோதிப் படைகள் கணிசமான பலம் பெற்றிருப்பது சாத்தியமா? அப்படியிருக்க முடியாது. அதற்குப் பதில், உம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள ஒரு சைன்யத்தைவிட மிகவும் பலஹீனமான படைப் பிரிவுகளோடு அல்லது அதிகம் போனால் ஒரு பட்டாளத்தோடுதான் எதிரி உம்மை பின் தொடர்ந்து வந்துகொண்டிருப்பதாக இருக்கவேண்டும். எனவே, நீர் இந்த சந்தர்ப்பங்களை நன்கு பயன்படுத்திக்கொண்டு ஒரு பலஹீனமான எதிரியை வெற்றிகரமாகத் தாக்கி நிர்மூலம் செய்திருக்கலாம் அல்லது குறைந்தபட்சம் அவனைப் பின் வாங்கும்படி நிர்ப்பந்தப்படுத்தி இப்போது அவன் ஆக்கிரமித்துக் கொண்டுள்ள மாகாணங்களில் ஒரு முக்கியமான பகுதியை நம் கையில் வைத்துக் கொண்டிருக்கலாம். இதன்மூலம் டுலாவுக்கும் இன்னும் உட்புறத்திலுள்ள இதர நகரங்களுக்கும் ஏற்படக்கூடிய அபாயத்தைத் தவிர்த்திருக்க முடியும். தற்போது பீட்டர்ஸ்பர்க்கில் அதிகத் துருப்புகள் இல்லை. இந்நிலையில் இந்தத் தலைநகரை நோக்கி எதிரி எந்த அளவிலேனும் படைகளை அனுப்ப முடிந்தால் அதற்கு நீர்தான் பொறுப்பு; ஏனெனில், உம்மிடம் ஒப்படைக்கப் பட்டுள்ள சைன்யத்தைக் கொண்டு உறுதியோடும் ஊக்கத்தோடும் செயல்பட்டு அதன்மூலம் இந்தப் புதிய அபாயத்தைத் தடுப்பதற்குப் போதிய வசதிகள் உம்மிடமிருக் கின்றன. மாஸ்கோவை இழந்ததற்காக சினமடைந்துள்ள நம் நாட்டிற்கு நீர் இன்னும் பதில் சொல்லியாக வேண்டியிருக்கிறுது என்பதையும் மறந்து விடவேண்டாம். உம்மை கௌரவிக்க வேண்டுமென்னும் விருப்பம் எமக்கிருக்கிறது என்பதை நீர் அறிவீர். அந்த விருப்பம்

இன்னும் எம்முள் குறையவில்லை. ஆனால், அதே நேரம் உமது விவேகம், ராணுவ ஆற்றல், உமது தலைமையிலுள்ள துருப்புகளின் அஞ்சாநெஞ்சும் இவற்றை வைத்துப் பார்க்கும்போது உம்மிடமிருந்து உற்சாகத்தையும் உறுதியையும் வெற்றியையும் எதிர்பார்க்க எமக்கும் ருஷ்யாவுக்கும் உரிமை உண்டு.

ஆனால், பீட்டர்ஸ்பர்க்கில் எந்தெந்த சக்திகளுக்கு என்ன பலமிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டிய இந்தக் கடிதம் வந்து சேருவதற்குள்ளாகவே குட்டுஜோவ் இனியும் தம் தலைமையிலுள்ள ராணுவத்தைத் தாக்குதலில் ஈடுபடாதபடி தடுத்து நிறுத்த முடியாது என்பதைக் கண்டு கொண்டார். அவ்வாறே ஒரு போர் நடக்கவும் செய்தது.

செப்டம்பர் 2 - ம் தேதி வேவு பார்க்கும் பணியில் ஈடுபட்டிருந்த சாபோவாலோவ் என்னும் கோசாக் ஒரு முயலைக் கொன்று, இன்னொன்றை காயப்படுத்தினான். காயமடைந்த முயலைப் பின்பற்றி அவன் காட்டுக்குள் வெகுதூரம் சென்றான். அப்படிச் சென்றவன், முராட் ராணுவத்தின் இடது பக்கவாட்டு எவ்வித முன்னெச்சரிக்கைகளுமின்றி அங்கு முகாமிட்டிருப்பதைக் கண்டான். அந்தக் கோசாக்தான் பிரெஞ்சுக் காரர்களிடம் பிடிபடவிருந்ததைத் தனது தோழர்களிடம் விளையாட்டாகக் கூறினான். இந்தக் கதையைக் கேட்டுக்கொண்டிருந்த ஒரு குதிரைப் படை அதிகாரி அதைத் தனது கமாண்டரிடம் தெரிவித்தான்.

உடனே கோசாக் அழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டான். கோசாக் அதிகாரிகள் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி சில குதிரைகளைக் கைப்பற்ற விரும்பினர். ஆனால், மேல் மட்ட அதிகாரிகளுடன் பரிச்சயமுள்ள உயர்தர அதிகாரி ஒருவர் இந்த சம்பவத்தை ராணுவக் காரியாலயத்திலுள்ள ஒரு ஜெனரலிடம் பிரஸ்தாபித்தார். காரியலாய நிலைமையோ சமீப காலத்தில் மிகவும் மோசமடைந்திருந்தது. சில தினங்களுக்கு முன்னர் தான் எர்மோலாவ் பெனிக்ஸனைச் சந்தித்து அவரது செல்வாக்கை உபயோகித்து தாக்குதல் தொடுப்பதற்கு பிரதம சேனாதிபதியை இணங்க வைக்கும்படி வேண்டிக் கொண்டிருந்தார்.

''உம்மை எனக்குத் தெரியாதிருந்திருந்தால் நீர் என்ன கேட்கிறீரோ அதை நீர் விரும்பவில்லை என்று நினைத்திருப்பேன். ஏனென்றால், நான் என்ன ஆலோசனை கூறினாலும் அதற்கு நேர்மாறானதைத்தான் இளவரசர் செய்வார் என்பது நிச்சயம்'', என்று பெனிக்ஸன் பதிலளித்தார்.

குதிரை ரோந்துப் படையினர் மூலம் ஊர்ஜிதம் செய்யப்பட்ட கோசாக்கின் தகவல், சம்பவங்கள் பக்குவடைந்துவிட்டன

என்பதற்கு இறுதி நிரூபணமாக விளங்கிற்று. உடனே இறுக்கமாக சுற்றப்பட்டிருந்த சுருள் நெகிழ்ந்து கடிகாரம் ''டிக்டிக்'' என்னும் ஒலியோடு ஓட ஆரம்பித்து, மணி அடித்தது. ஆற்றலும், அறிவும், அனுபவமும் படைத்தவராகவும், தமது மனிதர்களைப் பற்றி நன்கு அறிந்தவராகவும் கருதப்பட்ட போதிலும் குட்டுசோவ் - கோசாக்கின் தகவல்; சக்கரவர்த்திக்கு தனிப்பட்ட அறிக்கைகள் அனுப்பிக்கொண்டிருந்த பெனிக்ஸனின் குறிப்பு; சக்கரவர்த்தி கொண்டிருந்ததாக அவர் கருதிய விருப்பங்கள்; எல்லா ஜெனரல்களும் ஒரே மாதிரியான விருப்பத்தை வெளியிட்ட விஷயம் ஆகிய இவற்றையெல்லாம் கணக்கிலெடுத்துக் கொண்டு அவரால் இதற்கு மேலும் நடைபெற்றுத் தீரவேண்டிய நிகழ்ச்சிப் போக்கைத் தடுக்க முடியவில்லை. எனவே, பயனற்றது, தீங்கு பயக்கக்கூடியது என்று தாம் கருதிய காரியத்தையே செய்யும்படி உத்தரவிட்டார் - முடிந்துபோன விஷயத்திற்குத் தம் அங்கீகாரத்தை அளித்தார்.

# 13

## 4

பிரெஞ்சுக்காரர்களின் இடது பக்க வாட்டு பாதுகாப்பற்று இருக்கிறது என்னும் பெனிக்ஸனின் குறிப்பும் கோசாக்கின் தகவலும் தாக்குவதற்கு உத்தரவிடுவது அவசியம் என்பதற்கு வெறும் இறுதி அறிகுறிகளே தவிர வேறல்ல. அக்டோபர் 5 - ம் தேதி தாக்குதலைத் தொடுப்பது என்று நிர்ணயிக்கப்பட்டது.

அக்டோபர் 4 - ம் தேதி காலை போர்முனைத் திட்டங்களில் குட்டுஜோவ் கையெழுத்திட்டார். எர்மோலாவுக்கு அவற்றை டால் வாசித்துக் காண்பித்தார். மற்ற ஏற்பாடுகளில் கலந்து கொள்ளும் படியும் அவரைக் கேட்டுக்கொண்டார்.

''சரி - ஆகட்டும். ஆனால், இப்போது எனக்கு நேரமில்லை'' என்று எர்மோலாவ் பதிலளித்துவிட்டு குடிசையைவிட்டுக் கிளம்பினார். டால் தயாரித்திருந்த போர்முனைத் திட்டங்கள் மிக நன்றாக இருந்தன. ஆஸ்டர் லிட்ஜ் போர்முனைத் திட்டங்கள் போலவே இவையும் எழுதப்பட்டிருந்தன. ஆனால், இந்தத் தடவை ஜெர்மன் மொழியில் அல்ல:

''முதலாவது அணிவரிசை இதோ இங்கே முன்னேறும்'' - ''இரண்டாவது அணி வரிசை அதோ அங்கே முன்னேறும்'', இவ்வாறாக போர்முனைத் திட்டங்கள் தீட்டப்பட்டிருந்தன. காகிதத்தில் இந்த அணி வரிசைகளெல்லாம் குறித்த இடங்களில், குறிப்பிட்ட நேரத்தில் வந்து சேர்ந்து எதிரியை நிர்மூலமாக்கின.

போர்முனைத் திட்டங்கள் தயாரிப்பதில் வழக்கமாக நடப்பதுபோல ஒவ்வொரு விஷயமுமே நன்கு சிந்திக்கப்பட்டன. ஆனால், எப்போதுமே ஒரு அணி வரிசைகூடத் தனக்கு நிர்ணயிக்கப்பட்ட இடத்திற்குக் குறிப்பிட்ட நேரத்தில் வந்து சேருவதில்லை.

போர்முனைத் திட்டங்களின் பிரதிகள் தேவையான எண்ணிக்கையில் தயாரிக்கப்பட்டதும் ஒரு அதிகாரி அழைக்கப் பட்டு எர்மோலாவிடம் அவற்றை சேர்ப்பிக்கும்படி அனுப்பப் பட்டார். அவர் குதிரைப் படையைச் சேர்ந்த ஒரு இளம் அதிகாரி, குட்டுஜோவின் சேவகர். தம்மிடம் ஒரு முக்கியமான பணி ஒப்படைக்கப்பட்டது பற்றி மகிழ்ச்சி அடைந்த அவர் எர்மோலாவின் ஜாகைக்குச் சென்றார்.

''வெளியே போய்விட்டார்'' என்றார் எர்மோலாவின் சேவகர்.

இதன்பேரில் குதிரைப்படை அதிகாரி ஒரு ஜெனரலிடம் சென்றார். இந்த ஜெனரலுடன்தான் எர்மோலாவ் அடிக்கடி காணப்படுவார்.

''இங்கில்லை, ஜெனரலும் வெளியே போய்விட்டார்.''

அதிகாரி குதிரை மீதேறி வேறு யாரிடமோ சென்றார்.

''இல்லை, அவர் வெளியே போய்விட்டார்.''

''இந்தத் தாமதத்திற்கு என்னைப் பொறுப்பாக்காமல் இருக்க வேண்டுமே! சே, பெரும் தொல்லையாய்ப் போய்விட்டது!'' என்று அதிகாரி நினைத்தார். முகாம் பூராவும் சுற்றித் தேடிப் பார்த்தார். வேறு சில ஜெனரல்களுடன் சேர்ந்து எர்மோலாவ் குதிரை மீதேறிப் போனதைத் தான் பார்த்ததாக ஒருவன் கூறினான். மற்றவர்களோ இதற்குள் அவர் வீடு திரும்பியிருப்பார் என்று கூறினார்கள். அதிகாரி உணவுகூட அருந்தாமல் மாலை ஆறு மணிவரை தேடினார். எர்மோலாவ் எங்கும் காணப்படவில்லை. அவர் எங்கு இருப்பார் என்பதும் யாருக்கும் தெரியவில்லை. அதிகாரி தனது தோழன் ஒருவனின் ஜாகையில் அவசர அவசரமாக கொஞ்சம் ஆகாரத்தை முடித்துக்கொண்டு மிலாராடாவிச்சைக் காண முன்னணிப்படை முகாமுக்குச் சென்றார். மிலாராடாவிச்சும்கூட வெளியே போயிருந்தார். ஆயினும், அவர் ஜெனரல் கில்கின் ஜாகையில் நடைபெறும் ஒரு நடன நிகழ்ச்சிக்கு சென்றுள்ளார் என்றும், அநேகமாக எர்மோலாவும்கூட அங்கு இருக்கக்கூடும் என்றும் இங்கு அதிகாரியிடம் தெரிவிக்கப்பட்டது.

''அவரது ஜாகை எங்கே இருக்கிறது?''

''ஏன், அதோ அங்கே எச்கினோவில்தானிருக்கிறது'' என்று ஒரு கோசாக் அதிகாரி தொலைதூரத்திலிருந்த ஒரு கிராமாந்திர வீட்டைச் சுட்டிக்காட்டிக் கூறினார்.

''என்ன, நமது படை வரிசைக்கு வெளியேயா?''

''இரண்டு படைப் பிரிவுகளை அங்கே காவல் முகாம்களாக வைத்துள்ளார்கள். அவர்கள் ஏக களியாட்டம் போட்டு வருகிறார்கள்! இரண்டு இசைக்குழுவினரையும் மூன்று ஜோடி பாடகர்களையும் வைத்துள்ளார்கள்!''

அதிகாரி நமது படை வரிசைக்கப்பால் எச்கினோ நோக்கிக் குதிரையைத் தட்டிவிட்டார். தூரத்தில் சவாரி செய்து கொண்டிருக்கும் போதே படை வீரர்கள் நடனமாடிக்கொண்டே பாடும் பாட்டின் களிப்பான குரல்கள் அந்த வீட்டிலிருந்து வந்துகொண்டிருப்பதைக் கேட்டார்.

''புல்வெளியில்... புல்வெளியில்!'' என்னும் பாட்டின் அடியோடு விசில் சப்தமும் ஒரு டோர்பானின் (பலாலாய்காவை ஒத்த ஒரு உக்ரேனிய இசைக் கருவி.) ஒலியும் கேட்டன. அவ்வப்போது கூச்சல்கள் எழுந்து இவற்றை அமுக்கின. இந்த சப்தங்கள் அவரது உற்சாகத்தைத் தூண்டிவிட்டன. ஆனால் அதே சமயம் தனக்கிடப்பட்ட முக்கியமான கட்டளையை விரைவில் நிறைவேற்றாததற்காக தன்னைக் குற்றங் கூறுவார்களோ என்று பயந்தார். மணி இப்போது எட்டுக்கு மேலாகிவிட்டது. அவர் குதிரையைவிட்டு இறங்கி, ருஷ்ய - பிரஞ்சுப் படைகளுக்கு மத்தியில் சேதமுறாமல் முழுமையாக இருந்த அந்தப் பெரிய கிராமாந்திர வீட்டின் முக மண்டபத்திற்குள் நுழைந்தார். உணவு அறையிலும், கூடத்திலும் பணியாட்கள் ஒயினும் சிற்றுண்டிகளும் பரிமாறுவதில் சுறு சுறுப்பாக ஈடுபட்டிருந்தார்கள். பாடகர்கள் கோஷ்டி கோஷ்டியாக ஜன்னல்களுக்கு வெளியே நின்றிருந்தார்கள். அதிகாரி உள்ளே அனுமதிக்கப்பட்டார். உடனே அங்கு ராணுவத்தின் எல்லா தலைமை ஜெனரல்களையும் ஒன்றாகப் பார்த்தார். அவர்கள் மத்தியில் எர்மோலாவின் கம்பீரமான பெரிய உருவத்தையும் கண்டார். அவர்கள் தங்கள் கோட்டுகளுக்குப் பொத்தான்கள் போட்டுக்கொள்ளாமல், மகிழ்ச்சியும் உற்சாகமும் துள்ளும் முகங்களோடு, அரை வட்ட வடிவத்தில் நின்றுகொண்டு உரக்கச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அறையின் மத்தியில் சிவந்த முகம்கொண்ட ஒரு அழகிய, குள்ளமான ஜெனரல் களிவெறி யோடும் சுறுசுறுப்போடும் டிரபாக் நடனமாடிக்கெண்டிருந்தார்.

''ஹா, ஹா, ஹா! சபாஷ், நிக்கலஸ் ஐவனாவிச்! ஹா, ஹா, ஹா!''

இத்தகைய தருணத்தில் முக்கியமான உத்தரவுகளோடு வந்திருப்பதற்குத் தன்மீது இரட்டிப்புக் குற்றம் சாட்டினாலும் தகும் என்பதை அதிகாரி உணர்ந்தார். எனவே, சற்று நேரம் காத்திருக்கவும் அவர் தயாராக இருந்தார். ஆனால், அதற்குள் ஜெனரல்களில் ஒருவர்

அவரைக் கவனித்து விட்டார். அவர் என்ன விஷயமாக வந்திருக்கிறார் என்பதை அறிந்ததும் உடனே அதை எர்மோலா விடம் தெரிவித்தார்.

எர்மோலாவ் முகத்தைச் சுளித்துக்கொண்டு முன்னே வந்தார். அதிகாரி கூறியதனைத்தையும் கேட்டுவிட்டு ஒரு வார்த்தையும் பேசாமல் அவரிடமிருந்து தஸ்தாவேஜுகளைப் பெற்றுக் கொண்டார்.

''அவர் தற்செயலாக அங்கு சென்றார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' என்று ராணுவக் காரியாலயத்திலுள்ள நண்பரொருவர் அன்று மாலை எர்மோலாவைக் குறிப்பிட்டு குதிரைப்படை அதிகாரியிடம் கேட்டார். ''இது ஒரு சூழ்ச்சி. கோனோவ்நிட்சினை சங்கடத்தில் சிக்கவைப்பதற்காக இது செய்யப்பட்டுள்ளது. நாளை என்ன குழப்பம் நடக்கப்போகிறது என்பதை நீங்கள் பார்க்கப்போகிறீர்கள்''.

## 13

### 5

மறுநாள் காலையில், முதுமையடைந்த குட்டுஜோவ் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு, உடையணிந்து தமக்குச்சம்மத மில்லாத ஒரு போரை நடத்த வேண்டி யிருக்கிறதே என்னும் மகிழ்ச்சியற்ற உணர்வோடு தமது வண்டியில் ஏறி லெடசோவ்காவிலிருந்து (டாராவ்டி னோவிலிருந்து மூன்றரை மைல் தொலைவிலுள்ள ஒரு கிராமம்) தாக்குதல் தொடுக்கும் அணி வரிசைகள் வந்து சேரவேண்டிய இடத்திற்குப் புறப்பட்டார். கோழித் தூக்கம் போட்டவாறு வண்டியில் உட்கார்ந்திருந்தார். நொடிகளில் விழித்துக்கொண்டு, நடவடிக்கை ஆரம்பித்துவிட்டதற்கு அறி குறியாக வலதுபுறத்தில் ஏதாவது துப்பாக்கிச் சப்தம் கேட்கிறதா என்று கவனித்தார். ஆனால், இன்னும் எங்கும் அமைதியே நிலவிற்று. பனி படர்ந்த, உற்சாகமற்ற இலையுதிர்கால காலைப் பொழுது அப்போதுதான் விடிந்து கொண்டிருந்தது. டாராவ்டி னோவை நெருங்கியபோது குதிரைப்படை வீரர்கள் தங்கள் குதிரைகளுக்குத் தண்ணீர் காட்டுவதற்காக அவற்றைத் தாம் சென்றுகொண்டிருந்த ரஸ்தாவின் குறுக்கே அழைத்துச் செல்வதை குட்டுஜோவ் கவனித்தார். அவர்களை ஏற இறங்கப் பார்த்தார். வண்டியை நிறுத்தி அவர்கள் எந்தப் படைப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்று விசாரித்தார். அவர்கள் போர் முனையில் முன் வரிசையில் நின்று இதற்குள்ளாக சண்டையை ஆரம்பித்திருக்கவேண்டிய ஒரு அணி வரிசையைச்

சேர்ந்தவர்கள் என்பதைத் தெரிந்து கொண்டார். ''இதில் ஏதோ தவறு இருக்கலாம்'' என்று வயதான பிரதம சேனாதிபதி நினைத்தார். ஆனால், இன்னும் சற்று தூரம் சென்றதும் காலாட்படைகளின் ஆயுதங்கள் ஆங்காங்கு குவிந்துகிடப்பதையும், போர் வீரர்கள் அரைகுறையாக ஆடை அணிந்து ரைதானியத்தால் தயாரிக்கப்பட்ட கூழைக் குடித்துக் கொண்டிருப்பதையும் விறகு சுமந்து சென்று கொண்டிருப்பதையும் பார்த்தார். உடனே ஒரு அதிகாரிக்குச் சொல்லி அனுப்பினார். அந்த அதிகாரி தாக்குதலை ஆரம்பிக்கும்படி தனக்கு எந்த உத்தரவும் வரவில்லை என்று தெரிவித்தார்.

''என்ன! உத்தரவு வர...'' குட்டுஜோவ் ஆரம்பித்தார். ஆனால், உடனே தம்மைக்கட்டுப்படுத்திக் கொண்டு முதிர்ந்த அதிகாரி ஒருவருக்குச் சொல்லி அனுப்பினார். வண்டியிலிருந்து இறங்கி தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டும், பெருமூச்சு விட்டுக்கொண்டும் மௌனமாக இங்கு மங்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தார். அவர் சொல்லி அனுப்பிய ராணுவக் காரியாலய அதிகாரியான ஐக்கன் அங்கு வந்து சேர்ந்ததும் குட்டுஜோவின் முகம் கோபத்தால் சிவந்தது. இதற்குக் காரணம் தவறுக்கு அந்த அதிகாரிதான் பொறுப்பு என்பதாலல்ல. அதற்குப் பதில் தமது கோபத்தைக் கொட்டித் தீர்ப்பதற்குப் போதிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு இலக்காக அந்த அதிகாரி இருக்கிறாரே என்பதால்தான், திரேகமெல்லாம் வெடவெடவென்று நடுங்க குட்டுஜோவ் அடங்காச் சினங்கொண்டார். (இந்த சினத்தில் சில சமயங்களில் அவர் தரையில் விழுந்து புரள்வதும் உண்டு), ஐக்கன்மீது சீறிவிழுந்தார்;கைகளைக் காட்டி பயமுறுத்தினார்; கூச்சலிட்டார்; அவர்மீது வசைமாரி பொழிந்தார். இந்த சமயம் கேப்டன் புரோஸின் என்பவரும் அங்கு வந்து சேர்ந்தார். அவருக்கும் இப்போது நடந்துவிட்ட தவறுக்கும் சம்பந்தமே இல்லை. எனினும், அவருக்கும் ஐக்கனுக்கு நேர்ந்த கதிதான் நேர்ந்தது.

''நீ எப்படிப்பட்ட இன்னொரு போக்கிரியாக இருக்கிறாய்? உன்னையெல்லாம் சுட்டுத்தள்ளவேண்டும்! துஷ்டர்கள்!'' என்று குட்டுஜோவ் தமது கைகளை ஆட்டிக்கொண்டும் தள்ளாடிக் கொண்டும் இரைந்தார்.

அவருக்கு வேதனை தாள முடியவில்லை. அவர் சாமானிய மானவல்ல; பிரதம சேனாதிபதி; மாட்சிமை தங்கிய இளவரசர்; ருஷ்யாவில் இதுவரை வேறு எந்த மனிதரும் பெற்றிராத சக்தி படைத்தவர் என்று எல்லாராலும் கூறப்படுபவர். அப்படிப்பட்டவர் இப்போது இந்த நிலையில் வைக்கப்பட்டுள்ளார் என்றால் - ராணுவம் முழுவதின் நகைப்புக்கிடமாக்கப்பட்டிருக்கிறார்

என்றால், எப்படியிருக்கும்! ''நான் இவ்வளவு சீக்கிரம் காலையில் எழுந்து பிரார்த்தனை செய்திருக்க வேண்டியதில்லை. இரவு பூராவும் யோசித்துக்கொண்டு தூங்காமலிருந்திருக்க வேண்டிய தில்லை'' என்று அவர் தமக்குள் நினைத்துக்கொண்டார். ''நான் ஒரு அதிகாரியின் சிற்றாளாக இருந்தபோது யாரும் என்னைக் கேலி செய்யத் துணிந்திருக்க மாட்டார்கள்... ஆனால், இப்போது!'' கசையடி தண்டனைக்குள்ளானவர்போல் அவர் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார். அந்த வேதனையை கோபமும் துயரமுமிக்க கூச்சல்களால் அவரால் வெளிப்படுத்தாமலிருக்க முடியவில்லை. ஆனால், சீக்கிரமே இதற்கும் அவருக்கு சக்தியில்லாமல் போய்விட்டது. ஒருமுறை சுற்றுமுற்றும் தம்மைப் பார்த்துக் கொண்டார். அளவுக்கு மீறித் தகாத முறையில் பேசிவிட்டோம் என்பதை உணர்ந்தார். எனவே, அவர் வண்டியிலேறி மௌனமாக தம் ஜாகைக்குத் திரும்பினார்.

அவரது கோபம், ஒரு முறை அடங்கிப்போன பிறகு, திரும்பவும் வரவில்லை. நடந்துபோன விஷயத்திற்குக் கூறப்பட்ட சமாதானங்களையும் சுய விளக்கங்களையும் ஆற்றமாட்டாமல் கொட்ட கொட்ட விழித்துக்கொண்டு கேட்டுக்கொண்டிருந்தார். (எர்மோலாவ் மறு தினம்வரை அவரைப் பார்க்க வரவில்லை). நிறைவேற்றத் தவறிவிட்ட தாக்குதல் உத்தரவை அடுத்த நாள் நிறைவேற்ற வேண்டுமென்று பெனிக்ஸன், கோனோவ்னிட்சைன், டால் ஆகியோர் வற்புறுத்தினர். குட்டுஜோவ் மீண்டும் இதற்கு இணங்கும்படியாயிற்று.

## 13

### 6

அடுத்த நாள் மாலை துருப்புகள் தங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட இடங்களில் கூடி இரவில் முன்னேறின. அது இலையுதிர்கால இரவு. வானத்தில் கருஞ்சிவப்பு மேகங்கள் மண்டியிருந்தன. ஆனால், மழையில்லை. தரை ஈரமாக இருந்தது. ஆனால், சகதியாக இல்லை. துருப்புகள் ஓசை படாமல் முன்னேறின. எப்போதாவது பீரங்கிகளின் கிலுங்கல் சப்தம் மட்டுமே இலேசாகக் கேட்டது. படை வீரர்கள் உரக்கப் பேசக்கூடாது, புகை பிடிக்கக் கூடாது, நெருப்புப் பற்ற வைக்கக் கூடாது என்று தடைசெய்யப் பட்டிருந்தனர். குதிரைகளின் கனைப்பைக்கூட அவர்கள் தடுக்க முயன்றனர். நிறைவேற்ற மேற்கொண்ட காரியத்தின் இரகசியம் அதன் கவர்ச்சியை மேலும் அதிகரிக்கச் செய்தது. அவர்கள்

மகிழ்ச்சியோடு முன்னேறிக் கொண்டிருந்தனர். சில அணி வரிசையினர் தாங்கள் போய்ச் சேர வேண்டிய இடத்தை அடைந்துவிட்டதாகக் கருதி அங்கே நின்றனர்; ஆயுதங்களை ஒரு இடத்தில் குவித்து வைத்துவிட்டு ஈரத் தரையில் அமர்ந்தனர்; ஆனால், பெரும்பாலான படைப்பிரிவினர் இரவு பூராவும் முன்னேறி தாங்கள் வந்து சேர வேண்டாத இடங்களை அடைந்தனர்.

கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் மட்டும்தான் அவரது கோசாக்குகளுடன் (எல்லாப் படைப் பிரிவுகளிலும் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்தது) குறித்த இடத்திற்கு சரியான நேரத்திற்கு வந்து சேர்ந்தார். இந்தப் படைப் பிரிவு ஸ்ட்ரோமிலோவா கிராமத்திலிருந்து டிமிட்ரோவ்ஸ்க்குக்குச் செல்லும் பாதையில் ஒரு வனாந்திரத்தின் எல்லையில் வந்து முகாமிட்டது.

விடியப்போகும் சமயம். கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் அரைத்தூக்கத்திலிருந்தார். அப்போது பிரெஞ்சு ராணுவத்திலிருந்து ஓடிவந்து விட்ட ஒருவன் அவர் முன் கொண்டுவரப்பட்டான். அவர் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டார். அவன் போயோடோவ்ஸ்கி பட்டாளத்தைச் சேர்ந்த ஒரு போலிஷ் சார்ஜெண்ட் பிரெஞ்சு ராணுவத்திலிருந்து ஓடி வந்துவிட்டதற்கான காரணத்தை போலிஷ் மொழியில் அவன் விளக்கினான். அவன் அந்த பட்டாளத்திலேயே தைரியசாலியாம். நீண்டகாலத்திற்கு முன்பே ஒரு அதிகாரியாக ஆக்கப்பட்டிருக்க வேண்டுமாம். ஆனால், அப்படிச் செய்யாமல் அலட்சியப்படுத்தப்பட்டானாம். அதற்காகவே அவர்களைப் பழிக்குப் பழி வாங்க ஓடிவந்துவிட்டானாம். இவ்வாறு விளக்கம் கொடுத்தான். மேலும், முராட் இங்கிருந்து ஒரு வெர்ஸ்ட் தூரத்தில்தான் இரவைக் கழித்துக்கொண்டிருக்கிறார் என்றும், தன்னுடன் நூறு படைவீரர்களை அனுப்பினால் அவரை உயிரோடு பிடித்துத் தருவதாகவும் கூறினான். கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் தமது சக அதிகாரிகளைக் கலந்தாலோசித்தார். சார்ஜண்டின் திட்டம் கவர்ச்சிகரமாக இருந்தது. அதனை மறுக்க முடியவில்லை. ஒவ்வொருவரும் சார்ஜண்டுடன் செல்வதற்கு முன் வந்தனர். எல்லோருமே இதனை முயற்சித்துப் பார்க்கும் படி யோசனை கூறினர். பலத்த வாதப்பிரதிவாதங்களுக்குப் பிறகு மேஜர் - ஜெனரல் கிரிகோவ் இரண்டு படைப் பிரிவுகளுடன் போலிஷ் சார்ஜண்டுடன் செல்வதென்று முடிவாயிற்று.

''ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்'' என்றார் கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் புறப்படுவதற்குத் தயாராக இருந்த சார்ஜெண்டைப் பார்த்து, ''நீ பொய் சொல்வதாகத் தெரிந்தால் ஒரு நாயைப்போல உன்னைத் தூக்கில் போடுவேன்; ஆனால், நீ சொல்வது உண்மை என்று நிரூபணமானால் உனக்கு நூறு பொன்

நாணயங்கள் (செர்வோனெட்ஸ் (3 ரூபிளுக்கு சமம்) என்பதே இங்கு பொன் நாணயமென்று குறிக்கப்படுகிறது. அப்போது இதன் மதிப்பு 10, ஷில்லிங்குகளுக்குச் சற்று குறைவாக இருந்தது.) கிடைக்கும்.''

இதற்கு சார்ஜண்ட் பதில் ஒன்றுமளிக்காமல் மன உறுதிகொண்ட தோற்றத்தோடு குதிரையேறிக் கிரிகோவோடு புறப்பட்டான். இதற்குள் கிரிகோவின் ஆட்களும் சீக்கிரமே அங்கு ஒன்று திரண்டு அவர்களைப் பின் தொடர்ந்தனர். எல்லாருமாக காட்டுக்குள் மறைந்து போயினர். கிரிகோவை வழியனுப்பிவிட்டு கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் திரும்பினார். அவருக்குக் காலைக்குளிர் நடுக்கம் ஒருபுறம், தம் சொந்தப் பொறுப்பில் மேற்கொண்ட நடவடிக்கை பற்றி மனக்கிளர்ச்சி மற்றொருபுறம். மங்கிய வைகறை ஒளியிலும் அணைந்துகொண்டிருந்த நெகிடி நெருப்புகளுக்கு மத்தியிலும் அவர் எதிரிகளின் முகாமை துருவிப் பார்க்க ஆரம்பித்தார். அவருக்கு வலது பக்கத்திலுள்ள ஒரு திறந்த சரிவில் நமது அணி வரிசைகள் இதற்குள் தென்பட ஆரம்பித்திருக்க வேண்டும். அவர் அந்தத் திசையில் பார்வையைச் செலுத்தினார். அங்கிருந்து பார்த்தால் அணிவரிசைகள் தூரத்தில் வந்து கொண்டிருந்தால்கூட தெரியும். ஆனால், இப்போது அவைகள் தென்படவில்லை. பிரெஞ்சு முகாம் சுறுசுறுப்படைய ஆரம்பித்து விட்டதுபோல் கோமகனுக்குத் தோன்றிற்று. இதை கூரிய பார்வை படைத்த அவரது உதவியாளரும் ஊர்ஜிதம் செய்தார்.

''ஓ, உண்மையில் இப்போது மிகவும் காலம் கடந்துவிட்டது'' என்றார் கோமகன் ஆர்லோவ் முகாமைப் பார்த்தவாறே.

நாம் நம்பிக்கை வைத்த யாரேனும் ஒருவர் நம் முன்னால் இல்லாமலிருக்கும்போது வழக்கமாக நடப்பதுபோல, கோமகனுக்குத் திடீரென்று போலிஷ் சார்ஜெண்டைப் பற்றி பல சந்தேகங்கள் முளைத்தன. அவன் ஒரு வேஷக்காரனாக இருப்பானோ, அவன் சொன்னதெல்லாம் பொய்யாக இருக்குமோ, அவன் எங்கே நம் படைகளை அழைத்துச் செல்வானோ, அந்த இரண்டு படைப்பிரிவுகள் இன்றி முழு ருஷ்யத் தாக்குதலும் பாழாகிவிடுமே, கடல்போன்ற இத்தனை துருப்புகளுக்கு மத்தியில் ஒரு பிரதம சேனாதிபதியை எப்படிப் பிடிக்க முடியும்! இவ்வாறெல்லாம் அவரது எண்ணம் ஓடிற்று.

''கயவன் பொய்தான் சொல்லியிருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை'' என்றார் டெனைசாவ்.

''அவர்களை இப்போதுகூடத் திரும்ப அழைத்து வந்துவிடலாம்'' என்றார் அவரது உதவியாளர்களில் ஒருவர். எதிரியின் முகாமைப் பார்த்த போது ஆர்லோவைப் போலவே

அனைவருக்கும் இந்தத் துணிகர முயற்சியில் அவநம்பிக்கையே ஏற்பட்டது.

''அப்படியா! உண்மைதான்... நீங்களெல்லாம் என்ன நினைக்கிறீர்கள்? அவர்களைப் போகும்படி விட்டு விடுவோமா அல்லது வேண்டாமா?''

''அவர்களைத் திரும்ப அழைத்து வரும்படி உத்தரவு போட மாட்டீர்களா?''

''அவர்களைத் திரும்ப அழைத்து வரும்படி உத்தரவு போடவாருங்கள்!'' என்றார் கோமகன் தமது கடிகாரத்தைப் பார்த்தவாறு, திடீர் முடிவோடு. ''காலம் கடந்துவிடப்போகிறது. இப்போதே வெளிச்சமாகிவிட்டது.''

உடனே உதவியாளர் கிரிகோவை அழைத்துவரக் காட்டிற்குள் குதிரையைத் தட்டிவிட்டார். சீக்கிரமே கிரிகோவும் வந்து சேர்ந்தார். இவ்வாறு இந்தத் துணிகரமான முயற்சியைக் கைவிட்டது. இவ்வளவு நேரம் காலாட்படைகளின் வருகைக்காக வீணாகக் காத்திருந்தது, பகைவர்கள் மிக அருகாமையில் இருப்பது ஆகிய இவற்றால் மனக் கிளர்ச்சியற்ற கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் முன்னேற முடிவு செய்தார். இதே எண்ணப் போக்குத்தான் அவரது ஆட்கள் அனைவருக்கும் இருந்தது.

''புறப்படுங்கள்!'' என்று அவர் மெல்லிய குரலில் கட்டளை பிறப்பித்தார். போர்வீரர்கள் அணிவகுத்து நின்று சிலுவைக்குறி இட்டுக்கொண்டனர்... ''ஆண்டவனின் உதவியால் முன்னேறுங்கள்!''

''ஜயஜய'' என்னும் கோஷம் அந்தக் கானகமெங்கும் எதிரொலித்தது. கோசாக்குகள் ஈட்டிகளை ஏந்திக்கொண்டு ஒரு கோணிப் பையிலிருந்து வெளிக் கிளம்புவதுபோல ஒருவர்பின் ஒருவராக முன்னேறி ஓடையைக் கடந்து முகாமை நோக்கிப் பாய்ந்து சென்றனர்.

கோசாக்குகளைப் பார்த்துவிட்ட முதலாவது பிரெஞ்சுப் படை வீரன் அடி வயிறு எக்க அலறினான் - அப்போதுதான் நித்திரையிலிருந்து விழித்தெழுந்துகொண்டிருந்த முகாமிலிருந்த அனைவரும் சரிவர உடைகூட உடுத்தாமல் பீரங்கிகள், துப்பாக்கிகள், குதிரைகள் முதலியவற்றையெல்லாம் அப்படியப்படியே விட்டுவிட்டுத் தலைவிரிகோலமாக நாலா திசைகளிலும் ஓடினர்.

கோசாக்குகள் தங்களுக்குப் பின்னால் என்ன நடக்கிறது, சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதைப் பற்றிக் கவனிக்காமல்

பிரெஞ்சுக்காரர்களைத் துரத்திக்கொண்டு சென்றிருந்தால் முராட்டையும் மற்றும் அங்கிருந்த எல்லாரையும் பிடித்திருக்க முடியும். அதிகாரிகளும் அப்படித்தான் முடிவு செய்திருந்தார்கள். ஆனால் யுத்தக் கைதிகளும் ஏராளமான கொள்ளைப் பொருள்களும் கிடைத்த நிலைமையில் கோசாக்குகளை அங்கிருந்து நகரச்செய்வது சாத்தியமில்லாமலிருந்தது. அவர்களில் யாரும் உத்தரவுகளுக்குச் செவிமடுக்கவில்லை. ஸ்தலத்திலேயே ஆயிரத்து ஐநூறு போர்க் கைதிகள் பிடிப்பட்டார்கள். முப்பத்தி எட்டு பீரங்கிகள் அகப்பட்டன. இதைத் தவிர, பதாகைகள், (கோசாக்களுக்கு மிக முக்கியமாகத் தோன்றிய) குதிரைகள், சேணங்கள், குதிரைகள்மீது போர்த்தும் துணிகள் முதலியனவும் கிடைத்தன. இவற்றை யெல்லாம் பற்றி முடிவு செய்யவேண்டும். கிடைத்த கைதிகளையும் பீரங்கிகளையும் இன்னும் இதர பொருள்களையும் பங்கிட்டுக் கொள்ள வேண்டும் - அவர்கள் மத்தியில் கூச்சலும் ஏன் ஒரு சின்ன சண்டையும்கூட ஏற்படாமல் போகவில்லை - இதில்தான் கோசாக்குகள் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தார்கள்.

பிரெஞ்சுக்காரர்கள் தாங்கள் மேற்கொண்டு துரத்திக்கொண்டு வரப் படவில்லை என்பதை உணர்ந்ததும் நிதானத்துக்கு வர ஆரம்பித்தார்கள்; படைப் பிரிவுகளாக அணிவகுத்து சுட ஆரம்பித்தார்கள். ஏனைய பட்டாளங்களும் வருவதற்கு இன்னும் காத்துக்கொண்டிருந்த ஆர்லோவ் - . டெனைசாவ் மேலும் முன்னேறினார்.

இதற்கிடையே போர்முனைத் திட்டங்களின்படி, காலம் தவறிய அணிவரிசைகளின் காலாட்படைகள் பெனிக்ஸனின் தலைமையின் கீழும், டாலின் வழிகாட்டுதலின் கீழும் முறையாகப் புறப்பட்டதாயினும், வழக்கமாக நடப்பதுபோல எங்கோ போய்ச் சேர்ந்தனவே தவிர, தங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட இடங்களைப் போய் அடையவில்லை. மேலும், வழக்கமாக நடப்பது போல உற்சாகத்தோடு புறப்பட்ட படை வீரர்கள் நிற்க ஆரம்பித்தார்கள்; முணுமுணுப்புகள் எழுந்தன. ஒரு குழப்ப சூழ்நிலை நிலவிற்று, இறுதியில் பின்னோக்கிச் செல்லவும் முற்பட்டார்கள். ஜெனரல்களும் அவர்களது உதவியாளர்களும் குதிரைகளில் இங்குமங்குமாக பாய்ந்து சென்றார்கள், கோபத்தோடு கூச்சல் போட்டார்கள், சச்சரவிட்டார்கள், தாமதமாகிவிட்டது என்றும் தவறான இடத்திற்கு வந்துவிட்டதாகவும் கூறினார்கள், சிறிது தூஷணையிலும் ஈடுபட்டார்கள். பிறகு இவற்றையெல்லாம் விட்டுவிட்டு, வேறு எங்கோ செல்ல முன்னேறினார்கள். ''நாம் ஏதாவது ஒரு இடத்திற்குப் போய்ச்சேருவோம்'' என்றார்கள். உண்மைதான். அவர்கள் எங்கோ ஒரு இடத்தை அடையத்தான்

போய்ச்சேர்ந்தார்கள். ஆனால் தங்களது சரியான இடங்களையல்ல; சிலர் எப்படியோ தங்களது சரியான இடங்களுக்கே கூடப் போய்ச் சேர்ந்தார்கள். ஆனால் மிகவும் தாமதமாகிவிட்டதால் பயனற்றுப்போனதோடு, எதிரிகளின் துப்பாக்கிப் பிரயோகத்துக்கும் ஆளானார்கள். ஆஸ்டர்லிட்ஜில் வேராதர் ஆற்றிய அதே பாத்திரத்தை இந்தப் போரில் ஆற்றிய டால் சலியாது சளைக்காது அங்குமிங்குமாக குதிரையில் பாய்ந்து சென்று பார்த்ததில் எங்கும் எல்லாம் ஒரே தாறுமாறாக இருப்பதைக் கண்டார். இவ்வாறு பாகோவட்டின் படைப்பிரிவை ஒரு காட்டில் சந்தித்தார். அப்போது ஏற்கெனவே விடிந்து வெகு நேரமாகிவிட்டிருந்தது. இந்தப் படைப் பிரிவு வெகு நேரத்திற்கு முன்பேயே ஆர்லோவ் டெனைசாவின் பட்டாளத்தோடு சேர்ந்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யத் தவறியதால் டால் மனக்கிளர்ச்சியும் சஞ்சலமுமடைந்து இதற்கு யாராவது பொறுப்பாக இருக்கவேண்டும் என்று அனுமானித்து அந்தப் படை பிரிவின் கமாண்டரிடம் குதிரைமீது பாய்ச்சலில் சென்றார்; அவரைப் பெரிதும் கடிந்துகொண்டார்; இதற்கெல்லாம் அவரைச் சுட்டுத்தள்ளினாலும் தகும் என்றார். ஜெனரல் பாகோவட் ராணுவ சேவையில் நீண்டகாலமாக இருந்து வருபவர். பொதுவாக அமரிக்கையான சுபாவம் படைத்தவர். அப்படிப்பட்டவரே இப்போது கடுங்கோபமடைந்தது ஆச்சரியமாக இருந்தது. ஏற்கெனவே அவரும் தாமதத்தாலும் குழப்பத்தாலும் மனக்கிலேசமடைந்திருந்தார். இந்நிலையில் டால் வேறு கடிந்துகொள்ளவே தம் சுபாவத்துக்கு மாறாக சினமடைந்து வெறுப்போடு பேசினார்.

''யாரிடமிருந்தும் நான் பாடம் கற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. ஆனால் மற்றெவரையும் போலவே என் ஆட்களோடு சேர்ந்து போரிட்டு மடிவேன்'' என்று கூறியவாறே தனது ஒரே படைப்பிரிவுடன் அவர் முன்னேறினார்.

தமது மனக்கிளர்ச்சியில், ஒரே ஒரு படைப் பிரிவுடன் இப்போது போரில் ஈடுபட்டால் ஏதாவது பலனிருக்குமா, இருக்காதா என்பதைப் பற்றிக் கொஞ்சமும் சிந்திக்காமலேயே இந்த அஞ்சா நெஞ்ச ஜெனரல் எதிரியின் பீரங்கி முழக்கத்துக்கூடே தமது ஆட்களை நேரே வழி நடத்திச் சென்றார். அவரது இப்போதைய மனோ நிலையில் அவருக்கு வேண்டியதெல்லாம் அபாயமும், பீரங்கி குண்டுகளும், துப்பாக்கி ரவைகளும்தான். எதிரியின் முதலாவது துப்பாக்கி குண்டுகளில் ஒன்று அவரைக் கொன்றது. மற்ற குண்டுகள் அவரது ஆட்களில் பலரைக் கொன்றன.

13

7

இதற்கு மத்தியில் மற்றொரு அணி வரிசை பிரெஞ்சுக்காரர்களை முன்புறத்திலிருந்து தாக்குவதாக இருந்தது. ஆனால் குட்டுஜோவ் அந்த அணி வரிசையைப் பின்தொடர்ந்து வந்தார். தமது விருப்பத்திற்கு மாறாக மேற்கொள்ளப்பட்ட இந்தப் போரில் குழப்பத்தை தவிர வேறெதுவும் ஏற்படாது என்று அவருக்கு நன்கு தெரியும். எனவே தம்மால் முடிந்தவரை துருப்புகளைப் பின் நிறுத்திவைத்தார். அவர் முன்னேறவில்லை.

அவர் தமது சின்ன சாம்பல் நிறக் குதிரை மீதமர்ந்து மௌனமாகச் சென்றார். எதிரியைத் தாக்கவேண்டும் என்று கூறப்பட்ட யோசனைகளுக்கெல்லாம் வேண்டா வெறுப்பாக பதிலளித்து வந்தார்.

''தாக்குதல் என்னும் வார்த்தை எப்போதும் உங்கள் நாவிலிருக்கிறது. ஆனால் சிக்கலான போர்த் திட்டங்களை நம்மால் நிறைவேற்ற முடியவில்லை என்பதை நீங்கள் பார்க்க மறுக்கிறீர்கள்'' என்றார் முன்னேறித் தாக்குவதற்கு அனுமதி கோரிய மிலாடாராவிச்சைப் பார்த்து.

''இன்று காலை நம்மால் முராட்டைக் கைது செய்ய முடியவில்லை. குறித்த இடத்திற்குக் குறித்த நேரத்தில் போய்ச்சேர முடியவில்லை. எனவே இப்போது நம்மால் ஒன்றுமே செய்ய முடியாது!'' என்று அவர் இன்னும் வேறு யாருக்கோ பதிலளித்தார்.

பிரெஞ்சு பக்கவாட்டில் - கோசாக்குகளது தகவல்களின்படி இதற்கு முன்னர் அங்கு யாருமில்லை - தற்போது இரண்டு போலந்து பட்டாளங்கள் இருக்கின்றன என்று குட்டுஜோவுக்குத் தெரிவிக்கப் பட்டபோது தமக்குப் பின்னாலிருந்த எர்மோலாவை அவர் ஓரக்கண்ணால் பார்த்தார். முந்திய தினத்திலிருந்து எர்மேலாவுடன் அவர் பேசவில்லை.

''நீங்கள் பார்க்கிறீர்களல்லவா! அவர்கள் தாக்குதலை ஆரம்பிக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். அதற்காக எல்லாவிதமான யோசனைகளும் கூறுகிறார்கள். ஆனால் காரியத்தில் இறங்கும் போது எதுவும் தயாராக இல்லை. எதிரி முன்னெச்சரிக்கையாகி அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுத்துக்கொள்கிறான்.''

எர்மோலாவ் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் தன் கண்களைக் குறுக்கி இலேசாக புன்முறுவல் பூத்தார். அவர் தம்மைப் பொறுத்த வரையில் புயலடித்து ஓய்ந்துவிட்டது என்பதையும் இந்தக்

குறிப்போடு குட்டுஜோவ் திருப்தியடைந்திருப்பார் என்பதையும் புரிந்துகொண்டார்.

''என்னால் அவர் ஒரு சின்ன தமாஷை அனுபவிக்கிறார்'' என்று தன் பக்கத்திலிருந்து ராயவ்ஸ்கியை தன் முழங்கையால் இடித்து எர்மோலாவ் மெதுவாகக் கூறினார்.

பின்னர் எர்மோலாவ் குட்டுஜோவிடம் சென்று மரியாதையோடு கூறினார்:

''தாக்குவதற்குத் தாங்கள் உத்திரவு கொடுக்க இன்னும் காலம் கடந்துவிடவில்லை மேன்மை தங்கியவரே! - எதிரி இன்னும் போய்விடவில்லை. இல்லையென்றால் காப்பாளர்கள் இந்த அளவுக்குச் சிறிதளவும் புகையையாவது காணமாட்டார்கள்.''

குட்டுஜோவ் பதிலளிக்கவில்லை. ஆனால் முராட்டின் துருப்புகள் பின்வாங்கி ஓடுகின்றன என்று அவரிடம் தெரிவிக்கப் பட்டதும் முன்னேறுவதற்கு உத்திரவிட்டார். எனினும் ஒவ்வொரு நூறு அடி தூரத்திலும் முக்கால் மணி நேரம் தாமதித்தார்.

போர் முழுவதும் ஆர்லோவ் டெனைசாவின் கோசாக்குகள் செய்த சாதனைகளில்தான் அடங்கியிருந்தது; ராணுவத்தின் இதர பகுதிகளைப் பொறுத்தவரையில் வீணாக சில நூறு மனிதர்களை இழந்ததுதான் மிச்சம்.

இந்தப் போரின் விளைவாக குட்டுஜோவுக்கு ஒரு வைரப் பதக்கம் கிடைத்தது. பெனிக்ஸனுக்குச் சில வைரங்களும் ஒரு லட்சம் ரூபிளும் கிடைத்தன. மற்றவர்களுக்கும் அவர்களது வெவ்வேறு அந்தஸ்துகளுக்குத் தகுந்தாற் போல திருப்திகரமான சன்மானங்கள் கிடைத்தன. மேலும் இந்தப் போரைத் தொடர்ந்து ராணுவப் பதவிகளில் புதிய மாற்றங்கள் ஏற்பட்டன.

''இப்படித்தான் எங்கள் விஷயத்தில் எல்லாம் தலைகீழாக நடக்கிறது!'' என்றார்கள் ருஷ்ய அதிகாரிகளும், ஜெனரல்களும் டாராவ்டினோ யுத்தம் முடிந்ததும். அதாவது இதற்கு அர்த்தம் இதுதான்: எல்லாவற்றையும் தவறாகச் செய்யும் யாரோ ஒரு முட்டாள் இருக்கிறான். அவன் செய்ததை நாங்கள்தான் செய்தோம் என்று ஜனங்கள் பேசுகிறார்கள். ஆனால் இவ்விதம் பேசுபவர்கள் ஒன்று தாங்கள் என்ன பேசுகிறோம் என்பதே தெரியாதவர்களாக இருக்கவேண்டும் அல்லது தங்களைத் தாங்களே வேண்டுமென்றே ஏமாற்றிக் கொள்பவர்களாக இருக்க வேண்டும். எந்த யுத்தமும் - அது டாராவ்டினோவானாலும் சரி, பாராடினோவானாலும் சரி அல்லது ஆஸ்டர்லிட்ஜ் ஆனாலும் சரி - அதைத் திட்டமிட்டவர்கள் எதிர்பார்ப்பது போல் நடப்பதில்லை. இது ஒரு அத்தியாவசியமான நிலை.

கணக்கற்ற சுதந்திர சக்திகள் (வாழ்வா மரணமா என்னும் பிரச்னையைக் கொண்ட ஒரு யுத்தத்தில் விட மனிதன் வேறெங்கும் அதிக சுதந்திரமாக இருப்பதில்லை) போரின் போக்கு மீது செல்வாக்கு வகிக்கின்றன. அந்தப் போக்கு இப்படித்தான் இருக்கும் என்று முன்கூட்டியே அறிய முடியாது, மேலும் அது எந்த ஒரு சக்தியின் திசை வழியிலும் ஒரு போதும் ஒன்றித்துச் செல்ல முடியாது.

ஏக காலத்தில் வெவ்வேறான திசைகளில் வழிநடத்திச் செல்லும் பல சக்திகள் ஒரு குறிப்பிட்ட ஜனத்தொகுதியின் மீது செயல்பட்டால், அதன் இயக்கத்தின் திசைவழி அந்த சக்திகளில் எந்த ஒரு சக்தியோடும் ஒன்றித்துச் செல்ல முடியாது; அதற்குப் பதில் எப்போதும் நடுவாந்திரமானதாகவே இருக்கும் - பொறித்துறையில் இது சக்திகளின் மூலைவிட்ட இணைவகம் என்று கூறப்படுகிறது.

வரலாற்று ஆசிரியர்கள் தரும் விளக்கங்களில் அதிலும் முக்கியமாக பிரெஞ்சு சரித்திராசிரியர்களின் விளக்கங்களில் அவர்களது யுத்தங்களும், சண்டைகளும் முன்கூட்டியே தீட்டப்பட்ட திட்டங்களின்படி நடந்தன என்று கண்டிருந்தால், அந்த விளக்கங்கள் தவறானவை என்ற ஒரே முடிவுக்குத்தான் நாம் வரவேண்டும்.

டாராவ்டினோ யுத்தம் போர்த் திட்டங்களின்படி துருப்புகளை செயலில் இறங்க வழி நடத்திச் செல்லவேண்டும் என்று டால் மனதில் கொண்டிருந்த நோக்கத்தை நிறைவேற்றவில்லை; முராட்டைக் கைது செய்யவேண்டும் என்று கோமகன் ஆர்லோவ் - டெனைசாவ் கொண்டிருந்த நோக்கத்தையும் நிறைவேற்றவில்லை; எதிரிப் படைகள் பூராவையும் உடனடியாக அழிக்க வேண்டும் என்று பெனிக்ஸனும் இவர்களும் கொண்டிருந்த நோக்கத்தையும் நிறைவேற்றவில்லை; தனக்குப் புகழ் தேடிக்கொள்வதற்குச் செயலில் இறங்க விரும்பிய அதிகாரியின் நோக்கத்தையும் நிறைவேற்றவில்லை; தான் பெற்றதைவிட அதிகமான கொள்ளைப் பொருள்களைப் பெறவேண்டுமென்று விரும்பிய கோசாக்கின் நோக்கத்தையும் நிறைவேற்றவில்லை. ஆனால் அந்த யுத்தத்தின் நோக்கம் அந்த யுத்தத்தினால் உண்மையில் என்ன விளைவு ஏற்பட்டதோ அதுதான் என்றால், அன்றைய தினம் எல்லா ருஷ்யர்களும் என்ன விரும்பினார்களோ அதுதான் என்றால் - பிரெஞ்சுக்காரர்களை ருஷ்யாவை விட்டுத் துரத்தியடித்து அவர்களது ராணுவத்தை அழிக்க வேண்டுமென்று எல்லா ருஷ்யர்களும் விரும்பினார்கள் - டாராவ்டினோ யுத்தம்தான், அதன் பொருந்தாத்தன்மைகள் காரணமாக, போர் நடவடிக்கையின்

அப்போதைய கட்டத்தில் திட்டவட்டமாகத் தேவைப்பட்டது என்பது தெளிவு. இந்த யுத்தத்தினால் உண்மையில் என்ன விளைவு ஏற்பட்டதோ அதைவிட அனுகூலமான விளைவை சிந்தித்துப் பார்ப்பது கஷ்டம், ஏன் சாத்தியமில்லாததும்கூட. மிகுந்த குழப்பம் நிலவிய போதிலும், குறைந்த முயற்சியில், அற்பமான நஷ்டங்களோடு முழு போர் நடவடிக்கைக்குமான மிக முக்கிய பலன்கள் பெறப்பட்டன. பின்வாங்கலிலிருந்து முன்னேற்றத்திற்கு மாறியதும், பிரெஞ்சுக்காரர்களின் பலஹீனத்தை வெளிப் படுத்தியதும், நெப்போலியன் ராணுவம் ஓட்டமெடுக்க ஆரம்பிப்பதற்கு எதை எதிர்பார்த்துக் கொண்டிருந்ததோ அந்த அதிர்ச்சியைப் பிரயோகித்ததும்தான் மேலே குறிப்பிட்ட பலன்கள்.

13

8

மகத்தான மாஸ்கோ வெற்றிக்குப் பின்னால், நெப்போலியன் மாஸ்கோவில் நுழைந்தார். அந்த வெற்றியைப் பற்றிச் சந்தேகம் எதுவும் இருக்க முடியாது. ஏனெனில் யுத்தக்களம் பிரெஞ்சுக் காரர்களின் கையிலேயே இருந்தது. ருஷ்யர்கள் தங்களுடைய புராதனமான தலைநகரை கைவிட்டுப் பின்வாங்கினார்கள். ஏராளமான உணவுப் பொருள்களும், ஆயுதங்களும், வெடி மருந்துகளும், கணக்கிட முடியாத செல்வமும் மாஸ்கோவில் நிறைந் திருந்தபடியால் அவையெல்லாம் நெப்போலியனுடைய கைகளிலேயே இருந்தன. பிரெஞ்சுத் துருப்புகளின் பலத்தில் பாதி அளவு பலத்தோடு ருஷ்ய ராணுவம் இருந்தது. அந்த ராணுவம் எதிரியைத் தாக்குவதற்கு ஒரு முயற்சியும் செய்யாமல் ஒரு மாத காலம் இருந்தது. நெப்போலியனுடைய நிலைமை மிகப் பிரமாதமாக இருந்தது. அவர் ருஷ்ய ராணுவத்திற்கு இரண்டு மடங்கு அதிக பலமுள்ள தம்முடைய துருப்புகளைக் கொண்டு ருஷ்ய ராணுவத்தைத் தாக்கி அதை அழித்திருக்கலாம்; அல்லது தமக்குச் சாதகமாக ஒரு சமாதான உடன்படிக்கைப் பேச்சுவார்த்தை நடத்தியிருக்கலாம்; அல்லது அம்மாதிரி சமாதானத்திற்கு வர ருஷ்யா இணங்காவிட்டால் பீட்டர்ஸ்பர்க்கை பயமுறுத்துவதாக அதை நோக்கி முன்னேற ஏற்பாடு செய்திருக்கலாம். ஒரு வேளை அதில் தோல்வி ஏற்படலாம். ஸ்மாலென்ஸ்க் அல்லது வில்னாவிலிருந்தே திரும்பியிருக்கலாம். அல்லது மாஸ்கோவிலேயே தங்கியி ருக்கலாம். அதாவது அப்போது பிரரெஞ்சுக்காரருக்குக் கிடைத்த அந்த பிரமாதமான நிலைமையை தங்கள் கையில் வைத்துக்

கொள்வதற்கு எந்த விதமான விசேஷமான மேதையும் அவசியம் இல்லை. அம்மாதிரி செய்வதற்குச் சில எளிதான, சுலபமான வழிகளை மேற்கொள்ள வேண்டியதுதான் அவசியமாய் இருந்தது. அதாவது கொள்ளையடிப்பதற்குத் துருப்புகளை அனுமதிக்கக் கூடாது. துருப்புகளுக்கு வேண்டிய குளிர்கால உடைகளைத் தயாரித்துக் கொடுக்கவேண்டும். அந்தக் குளிர்கால உடைகளுக்கு வேண்டிய துணிகள் அந்த ராணுவம் பூராவுக்கும் போதுமானபடி மாஸ்கோவில் இருந்து வந்தன. மாஸ்கோவில் ஏராளமான உணவுப் பொருள்கள் இருந்து வந்தன என்று பிரெஞ்சு சரித்திர ஆசிரியர்கள் சொல்கிறார்கள். அப்படியானால் அந்த உணவுப் பொருள்களை ஒழுங்காகச் சேர்த்து சேமித்து வைத்திருந்தால் அந்த ராணுவம் முழுவதற்கும் ஆறு மாதங்களுக்குப் போதுமானவையாய் இருக்கும். என்றாலும் மேதைகளுக்கெல்லாம் மிகப் பெரிய மேதையான நெப்போலியன் அந்தப் பெரிய ராணுவத்தின் மீது பூரண ஆதிக்கம் கொண்டிருந்ததாக சரித்திரக்காரர்கள் கூறினாலும் அவர் இந்த நடவடிக்கைகளில் எதையும் செய்யவில்லை.

இம்மாதிரியான காரியங்கள் எதையும் அவர் செய்யாமல் இருந்தது மட்டுமல்ல, அதற்கு நேர்மாறாக தம்முன்னாலிருந்த வழிகளிலேயே மிகவும் முட்டாள்தனமானதும், நாசம் விளைவிக்கக் கூடியதுமான வழியைப் பின்பற்றுவதற்கு அவர் தம்முடைய அதிகாரத்தை உபயோகித்தார். நெப்போலியன் அந்த சமயத்தில் ஒரு காரியம் செய்திருக்கலாம். அதாவது குளிர்காலம் முடிகிற வரையில் மாஸ்கோவிலேயே தங்கி பின்னால் பீட்டர்ஸ்பர்க் மீது படையெடுத்திருக்கலாம்; அல்லது நைஜினி - நோவ்காராட் என்ற இடத்தின் மீது படையெடுத்திருக்கலாம். அல்லது வடக்குப்புறம் உள்ள பாதை வழியாகவோ, தெற்குப்புறமுள்ள பாதை வழியாகவோ (குட்டுஜோவ் பின்னால் உபயோகித்த பாதை) அவர் போயிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. அவர் செய்த காரியத்தை விட அதிக முட்டாள்தனமான, நாசகரமான வேறு காரியத்தை யாராலும் யூகிக்கக்கூட முடியாது. அவர் அக்டோபர் வரை மாஸ்கோவில் தங்கினார். தமது துருப்புகள் நகரைச் சூறையாட அனுமதித்தார். பிறகு - ஒரு பட்டாளத்தைப் பின்னால் விட்டுச் செல்லலாமா என்று தயங்கியவாறே - மாஸ்கோவை விட்டு வெளியேறினார். சண்டை செய்யாமலேயே குட்டுஜோவை நெருங்கினார். வலதுபுறம் திரும்பி மாலோ - யாரோஸ்லாவெட்ஸை அடைந்தார். மீண்டும் போர் புரிய முயற்சிக்காமலேயே குட்டுஜோவ் சென்ற ரஸ்தாவில் சென்றார். ஆனால் பாழடைந்த ஸ்மாம்லென்ஸ்க் ரஸ்தா வழியாக மோழாய்ஸ்க்குக்குச் செல்வதற்குப் பதிலாக அதைவிட்டு விலகிச்

சென்றார். இதைவிட அதிக மூடத்தனமானதும், ராணுவத்திற்கு நாசகரமானதும் வேறு எதுவுமிருக்க முடியாது. இந்த உண்மையை அதன் பின்விளைவுக்ள் நிரூபித்தன. நெப்போலியனின் நோக்கம் தமது ராணுவத்தை அழிப்பதுதான் என்றால், (ருஷ்ய சைனியத்திற்கு அதைச் செய்யும் தொல்லையில்லாமல்) அந்த நோக்கத்தைப் பூரணமாக நிறைவேற்றுவதற்கு மிகத்திறமையான ராணுவ நிபுணரால் கூட இத்தனை நடவடிக்கைகள் மேற்கொள்ளத் திட்டம் வகுத்துக் கொடுத்திருக்க முடியாது.

மேதை மனிதர் நெப்போலியன் அதைச் செய்தார்! ஆனால் அவர் விரும்பியதாலும், அவர் மிகவும் திறமையானவராகவும் மேதையாகவுமிருந்ததாலும்தான் தமது துருப்புகளை மாஸ்கோவுக்குக் கொண்டு வந்தார் என்று சொல்வது எப்படி நியாயமற்றதோ அதே மாதிரிதான் அவர் விரும்பியதாலோ அல்லது அவர் மிகவும் விவேகமற்றவராக இருந்ததாலோதான் தமது ராணுவத்தை அழித்தார் என்று சொல்வதும் நியாயமற்றது.

இந்த இரண்டு சந்தர்ப்பங்களிலும் எந்த ஒரு சிப்பாயின் தனிப்பட்ட நடவடிக்கைகளையும்விட அதிகம் சக்தி வாய்ந்திராத அவரது நடவடிக்கைகள் சம்பவத்தை வழிநடத்திச் சென்ற விதிகளோடு இணங்கிச் சென்றனவே தவிர வேறல்ல.

மாஸ்கோவில் நெப்போலியனின் சாமர்த்தியங்கள் பலவீனமடைந்து போயின என்று சரித்திர ஆசிரியர்கள் தவறாகக் கருத்துத் தெரிவிக்கிறார்கள். அவரது நடவடிக்கைகளுக்குரிய பலன்கள் கிடைக்காததைக் கொண்டுதான் அவர்கள் இவ்வாறு அபிப்பிராயப்படுகிறார்கள். அவர் இதற்கு முன்னரும், 1813 - லும் எவ்வாறு செய்தாரோ அவ்வாறேதான் இப்போதும் தமக்கும் தமது ராணுவத்திற்கும் நன்மை விளையத் தமது திறமை சக்தியனைத்தையும் உபயோகித்தார். அவர் எகிப்திலும், இத்தாலியிலும், ஆஸ்திரியாவிலும், பிரஷ்யாவிலும் மேற்கொண்ட பிரமிப்பூட்டும் நடவடிக்கைகளை விட இப்போதைய அவரது நடவடிக்கைகள் ஒன்றும் குறைந்து விடவில்லை. எகிப்தில் அவரது மேதை எவ்வளவு தூரம் உண்மையாக இருந்தது என்பது நமக்குத் தெரியாது - அங்கு அவரது மகத்துவத்தின் முன்னால் நாற்பது நூற்றாண்டுகள் தாழ்வாக மதிக்கப்பட்டன - ஏனெனில் அங்கு அவரது மகத்தான தீரச்செயல்களைப் பற்றிக் கூறியவர்களெல்லாம் பிரெஞ்சுக்காரர்கள்தான். இவ்வாறே ஆஸ்திரியாவிலோ அல்லது பிரஷ்யாவிலோ அவரது மேதை எவ்வாறு இருந்தது என்பதைப் பற்றியும் நம்மால் துல்லிதமாக மதிப்பிட முடியாது. ஏனெனில் இதற்கான தகவல்களையெல்லாம் நாம் பிரெஞ்சு அல்லது ஜெர்மன்

வட்டாரங்களிலிருந்துதான் பெறவேண்டியிருக்கிறது. எண்ணிக் கூடப் பார்க்க முடியாதபடி சண்டை செய்யாமலேயே பட்டாளம் பட்டாளமாக சரணடைந்தன என்றும், முற்றுகையில்லாமலேயே கோட்டைகள் வீழ்ச்சியடைந்தன என்றும் ஜெர்மன் யுத்தத்தைப் பற்றிக் கூறுகிறார்கள். இவைகள் ஜெர்மானியர்களை நெப்போலியனின் மேதையை ஒப்புக்கொள்ளச் செய்திருக்க வேண்டும். ஆனால் நாம் நமது வெட்கத்தை மறைப்பதற்காக அவரது மேதையை ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. இதற்காக நாம் கடவுளுக்கு நன்றி கூறுகிறோம். விஷயத்தை வெளிப்படையாகவும் தெளிவாகவும் காணும் உரிமைக்காக நாம் விலை கொடுத்து விட்டோம். அந்த உரிமையை நாம் கைவிட மாட்டோம்.

மற்ற இடங்களில் போலவே மாஸ்கோவிலும் அவரது நடவடிக்கைகள் பிரமிப்பூட்டுவதாகவும் மேதாவிலாசம் நிரம்பியதாகவுமிருந்தன. அவர் மாஸ்கோவில் நுழைந்தது முதல் வெளியேறிய வரை உத்தரவு மேல் உத்தரவு திட்டத்தின் மேல் திட்டம் பிறப்பித்தார். இத்தனைக்கும் அங்கு மக்கள் இல்லாம லிருந்தும், யாரும் தூது கோஷ்டியாக வராதிருந்தும், ஏன் மாஸ்கோவே எரிந்துபோயிருந்துங்கூட அவர் இவற்றைச் செய்தார். அதே சமயம் அவர் தமது ராணுவத்தின் சேம நலனையோ அல்லது எதிரியின் செயல்களையோ, அல்லது ருஷ்ய மக்களின் நல்வாழ்வையோ, அல்லது பாரிஸில் எப்படிக் காரியங்கள் நடக்கவேண்டுமென்பதற்குக் கட்டளைகள் பிறப்பிப்பதையோ, அல்லது எதிர்பார்க்கப்படும் சமாதான உடன்படிக்கையின் ஷரத்துகள் சம்பந்தமாக ராஜ தந்திர ரீதியில் யோசிப்பதையோ மறந்துவிடவுமில்லை.

## 13

### 9

ராணுவ விஷயங்களைப் பொறுத்த வரையில், நெப்போலியன் மாஸ்கோவிற்குள் பிரவேசித்த உடனேயே ருஷ்ய ராணுவத்தின் நடமாட்டங்களைக் கண் காணிக்கும்படி ஜெனரல் செபாஸ்டியானிக்குக் கண்டிப்பான உத்தரவுகள் போட்டார், பல்வேறு ரஸ்தாக்களிலும் படைப் பிரிவுகளை அனுப்பி வைத்தார், குட்டுஜோவ் எங்கேயிருக்கிறார் என்பதைக் கண்டுபிடிக்கும் பொறுப்பை முராட்டிடம் ஒப்படைத்தார். பிறகு கிரம்ளினின் பாதுகாப்பைப் பலப்படுத்துவதற்கு நுணுக்கமான யோசனைகளை

...றினார், ருஷ்யா முழுவதும் மேற்கொண்டு போர் நடவடிக்கைகள் மேற்கொள்வதற்கான ஒரு சிறந்த திட்டத்தைத் தயாரித்தார்.

ராஜதந்திர பிரச்சினைகளைப் பொறுத்தவரையில், நெப்போலியன் கேப்டன் யாகோவ்லேவை தம்மிடம் வரவழைத்தார். யாகோவ்லேவ் கொள்ளையடிக்கப்பட்டு கந்தைத் துணிகளோடு பரிதாபகரமாக காட்சியளித்தார். மாஸ்கோவை விட்டு வெளியேறுவதற்கு வழிவகை தெரியாது தவித்துக்கொண்டிருந்தார். அவரிடம் நெப்போலியன் தமது கொள்கை முழுவதையும், பெருந்தன்மையையும் ஆதியோடந்தமாக விவரித்தார். சக்கரவர்த்தி அலெக்சாண்டருக்கு ஒரு கடிதம் எழுதி அதில் ராஸ்டோப்சின் மாஸ்கோவில் காரியங்களை மோசமான முறையில் நடத்திவிட்டார் என்பதைத் தமது நண்பரும் சகோதரருமான அவருக்குத் தெரிவிக்க வேண்டியது தமது கடமை என்று குறிப்பிட்டு, யாகோவ்லேவை பீட்டர்ஸ்பர்க்குக்கு அனுப்பி வைத்தார்.

இவ்வாறே டூடோல்மினிடமும் தமது கருத்துக்களையும் தயாளத்தையும் எடுத்துக்கூறி அந்தக் கிழவனாரையும் பேச்சுவார்த்தைகள் நடந்த பீட்டர்ஸ்பர்க்குக்கு அனுப்பிவைத்தார்.

சட்ட விஷயங்களைப் பொறுத்தவரையில், நகரம் நீ வைக்கப்பட்ட உடனேயே, தீ வைத்தவர்களைக் கண்டுபிடித்து தண்டிக்க உத்திரவிட்டார். ராஸ்டோப்சினின் வீடுகளை தீ வைக்க உத்திரவிட்டதன்மூலம் அவன் தண்டிக்கப்பட்டான்.

நிர்வாக விஷயங்களைப் பொறுத்தவரையில், மாஸ்கோவுக்கு ஒரு அரசியலமைப்புச் சட்டம் வழங்கப்பட்டது. ஒரு நகராட்சி அமைக்கப் பட்டு பின்கண்ட பிரகடனம் விடுக்கப்பட்டது:

மாஸ்கோ நகரவாசிகளே!

உங்களுக்கு நேர்ந்தது துன்பங்கள் கொடூரமானவை. ஆனால் மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியும் மன்னர் பிரானும் இவற்றிற்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்புகிறார். ஒழுங்கீனத்தையும் குற்றத்தையும் அவர் எவ்வாறு தண்டிக்கிறார் என்பதை பல பயங்கரமான உதாரணங்கள் மூலம் நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். குழப்பத்துக்கு முடிவுகட்டி பொதுஜன பாதுகாப்பை மீண்டும் நிலைநாட்ட கண்டிப்பான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. உங்களுக்கு மத்தியிலிருந்தே பொறுக்கியெடுக்கப்பட்ட ஒரு நிர்வாகம் நகராட்சியை அல்லது நகர அரசாங்கத்தை அமைக்கும். அது உங்களையும், உங்கள் தேவைகளையும், உங்களது சேம நலனையும் பராமரிக்கும். அதன் உறுப்பினர்கள் புஜத்திற்குக் குறுக்கே ஒரு சிகப்பு நாடா அணிந்திருப்பார்கள், நகர மேயர் அத்துடன் ஒரு வெள்ளை

அரைக்கச்சையும் அணிந்திருப்பார். ஆனால் அலுவலில் இல்லாதபோது அவர்கள் இடது கையில் ஒரு சிகப்புப் பட்டை மட்டும் அணிந்திருப்பார்கள்.

நகரப் போலீஸ் பழைய முறையிலேயே அமைக்கப்பட்டுள்ளது. அதன் நடவடிக்கைகள் காரணமாக ஏற்கெனவே நல்ல அமைதியும் ஒழுங்கும் நிலவுகின்றன. சர்க்கார் இரண்டு கமிஷார் - ஜெனரல்களை அல்லது போலீஸ் தலைவர்களை நியமித்திருக்கிறது. அவ்வாறே நகரில் பல்வேறு வார்டுகளுக்கும் இருபது வார்ட் கமிஷார்களை அல்லது காப்டன்களை நியமித்திருக்கிறது. அவர்கள் இடதுகையில் வெள்ளைப்பட்டை அணிந்திருப்பார்கள். இதன் மூலம் அவர்களை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். பல்வேறு மதபிரிவுகளையும் சேர்ந்த பல சர்ச்சுகள் திறக்கப்பட்டுள்ளன. அவற்றில் தெய்வ வழிபாடு தங்கு தடையற்று நடைபெற்று வருகிறது. உங்களது சகப்பிரஜைகள் தினமும் தங்களது வீடுகளுக்குத் திரும்பி வருகிறார்கள். அவர்களுக்கேற்பட்ட துன்பங்கள் காரணமாக அவர்களுக்கு வேண்டிய உதவியும் பாதுகாப்பும் தரும்படி உத்தரவுகள் பிறபிக்கப்பட்டுள்ளன. இவைதான் ஒழுங்கை நிலைநாட்டவும் உங்களது நிலையை அபிவிருத்தி செய்யவும் சர்க்கார் எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கைகள். ஆனால் இந்த நோக்கத்தை நிறைவேற்ற நீங்களும் உங்கள் பங்கை ஆற்ற வேண்டும்; சாத்தியமானால் நீங்கள் அனுபவித்த துன்ப துயரங்களையெல்லாம் மறந்துவிடவேண்டும்; இப்போதைய விடக் குறைந்த குரூரமுள்ள விதியைப் பற்றி நீங்கள் நம்பிக்கைக் கொள்ள வேண்டும்; உங்கள் உயிர்களையோ அல்லது எஞ்சியிருக்கும் உங்கள் சொத்துக் களையோ கவர முயற்சிப்பவர்களுக்கு இழிவான மரணம் நிச்சயம் என்று நீங்கள் மனதிற்கொள்ளவேண்டும்; இறுதியாக இவை பாதுகாக்கப்படும் என்பதில் உங்களுக்குக் கொஞ்சமும் சந்தேகம் இருக்கக் கூடாது; ஏனென்றால் மன்னர்களிலேயே மாமன்னரின், மிக நேர்மையானவரின் சித்தம் அப்படி. சிப்பாய்களே, பிரஜைகளே, நீங்கள் எந்த தேசத்தைச் சேர்ந்தவராயினும் சரி பொதுஜன நம்பிக்கையை மீண்டும் ஏற்படுத்துங்கள், ஒரு அரசின் சேம நலனுக்கு அதுதான் ஆதாரம்; சகோதரர்கள் போல் வாழுங்கள்; பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளுங்கள், பாதுகாப்பளித்துக் கொள்ளுங்கள்; கெடுமதி கொண்டோரின் எண்ணங்களை முறியடிக்க ஒன்றுபடுங்கள், ராணுவ அதிகாரிகள், சிவில் அதிகாரிகளின் உத்தரவுகளுக்குக் கீழ்படிந்து நடந்து கொள்ளுங்கள்; உங்களது கண்ணீர் வழிவது சீக்கிரமே நின்று விடும்!

ராணுவத்திற்கு சப்ளைகளைப் பொறுத்தவரையில், எல்லா துருப்புகளும் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப்

பெறுவதற்காக முறை வைத்து கொள்ளைக்காரர்களாக மாஸ்கோவிற்குள் நுழைய வேண்டும். அப்போதுதான் ராணுவத்தின் எதிர்காலம் பாதுகாக்கப்படும் என்று நெப்போலியன் உத்திரவிட்டார்.

மதத்தைப் பொறுத்தவரையில், நெப்போலியன் மதகுருமார்கள் திரும்ப அழைத்துவரப்பட வேண்டுமென்றும், சர்ச்சுகளில் மீண்டும் வழிபாடுகள் தொடங்கப்பட வேண்டும் என்றும் கட்டளையிட்டார்.

வர்த்தகத்தையும் ராணுவத்திற்கு உணவுப் பொருள்களை சப்ளை செய்வதையும் பொறுத்த வரையில் கீழ்க்கண்ட விஷயம் எங்கும் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது:

அறிவிப்பு

அமைதியான மாஸ்கோவாசிகளே, கஷ்ட நஷ்டங்களால் நகரை விட்டு வெளியேறிய கைவினைஞர்களே, தொழிலாளர்களே, ஆதாரமற்ற பயத்தால் இன்னும் வயல்களுக்குத் திரும்பாமல் ஆங்காங்கு சிதறுண்டு கிடக்கும் உழவர்களே, நீங்கள் அனைவரும் அறிவதாவது: தலைநகரில் அமைதி ஏற்பட்டு வருகிறது. சகஜ நிலைமை திரும்பி வருகிறது. உங்கள் சகோதரர்கள் தாங்கள் கௌரவிக்கப்படுகிறோம் என்பதை உணர்ந்து தங்களது மறைவிடங்களிலிருந்து துணிச்சலாக வெளிக்கிளம்பி வருகிறார்கள். அவர்கள் மீதோ அல்லது அவர்களது சொத்துகள் மீதோ எத்தகைய பலத்காரம் பிரயோகிக்கப்பட்டாலும் அது உடனடியாக தண்டிக்கப்படுகிறது. மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியும் மன்னர்பிரானும் அவர்களைக் காப்பாற்றுகிறார், தமது உத்திரவுகளுக்குக் கீழ்ப்படியாதவர்களைத் தவிர உங்களில் வேறு யாரையும் அவர் தமது விரோதியாகப் பாவிக்கவில்லை. உங்களது துன்ப துயரங்களுக்கெல்லாம் முடிவு கட்டி, உங்களை மீண்டும் உங்கள் குடும்பங்களிலும் இல்லங்களிலும் சேர்ப்பிக்க விரும்புகிறார். எனவே அவரது கருணை மிகுந்த நோக்கங்களுக்கு செவிசாய்த்து எங்களிடம் பயமின்றி வாருங்கள், மாஸ்கோ நகரவாசிகளே, உங்கள் வீடுகளுக்கு நம்பிக்கையோடு திரும்புங்கள்! சீக்கிரமே உங்கள் தேவைகளை பூர்த்தி செய்வதற்கான வசதிகளை காண்பீர்கள். தொழிலாளிகளே, முயற்சியுள்ள கைவினைஞர்களே, உங்கள் வேலைக்கு, உங்கள் வீடுகளுக்கு உங்கள் தொழிற்சாலைகளுக்குத் திரும்புங்கள். அங்கே காப்பாளர்களின் பாதுகாப்பு உங்களுக்குக் காத்திருக்கிறது! உங்கள் வேலைக்கேற்ற முறையான கூலியை நீங்கள் பெறுவீர்கள். கடைசியாக, விவசாயிகளே உங்களையும் கேட்டுக்கொள்கிறோம்: நீங்கள் பயப்பிராந்தியோடு ஒளிந்து

கொண்டிருக்கும் காடுகளிலிருந்து வெளியே வாருங்கள், அச்சமின்றி உங்கள் குடிசைகளுக்குத் திரும்புங்கள், பூரண உத்திரவாதத்தோடு உங்களுக்குப் பாதுகாப்பளிக்கப்பட்டிருப்பதைக் காண்பீர்கள்! நகரில் மார்க்கெட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. அங்கே விவசாயிகள் தங்களது உபரி சப்ளைகளையும் விவசாய உற்பத்திப் பொருள்களையும் கொண்டுவரலாம். அவர்களுக்கு விற்பனை சுதந்திரமிருப்பதற்கு சர்க்கார் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டுள்ளது: (1) இன்றிலிருந்து விவசாயிகளும், உழவர்களும், மற்றும் மாஸ்கோவுக்கு அக்கம்பக்கத்தில் வசிப்பவர்களுக்கும் தங்களது எல்லா வகையான பொருள்களையும் எவ்வித அபாயமுமின்றி குறிப்பிட்ட இரண்டு மார்க்கெட்டு களுக்குக் கொண்டு வரலாம். இவற்றில் ஒன்று மோகாவாயா தெருவிலும் மற்றொன்று உணவுப் பொருள் மார்க்கெட்டிலும் இருக்கின்றன. (2) அப்படிக் கொண்டுவரும் பொருள்களை விற்போரும் வாங்குவோரும் ஒப்புக்கொள்ளும் விலையில் விற்கலாம்; விற்போருக்கு நியாயமான விலை கிடைக்கவில்லையென்றால் அவர்கள் தங்கள் பொருள்களைத் திரும்ப கிராமத்திற்கு எடுத்துச் செல்ல உரிமை உண்டு; அதை யாரும் எந்தக் காரணத்தைக் காட்டியும் தடுக்க முடியாது. (3) ஒவ்வொரு வாரமும் ஞாயிறும் புதனும் முக்கிய சந்தை தினங்களாக அறிவிக்கப் பட்டுள்ளது; சனிக்கிழமைகளிலும் செவ்வாய்க் கிழமைகளிலும் சந்தைக்கு வரும் வண்டிகளுக்குப் பாதுகாப்பளிப்பதற்காக வழி நெடுகிலும் போதுமான துருப்புகளை நிறுத்த ஏற்பாடு செய்யப்படும். (4) இதே போல விவசாயிகள் தங்கள் வண்டிகளோடும் குதிரைகளோடும் திரும்பிச் செல்லும்போதும் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்படும். (5) சகஜமான வர்த்தகம் மீண்டும் ஏற்பட உடனடியாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும்.

நகரிலும் கிராமங்களிலும் வசிப்பவர்களே, தொழிலாளர்களே, கைவினாஞர்களே, நீங்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்களாயினும் சக்கரவர்த்தியின், மன்னர்பிரானின் அன்பு சார்ந்த விருப்பங்களை நிறைவேற்றும் படியும், பொதுமக்களின் சேம நலனுக்காக அவரோடு ஒத்துழைக்கும்படியும் அறைகூவி அழைக்கப் படுகிறீர்கள்! உங்களது மரியாதையையும் நம்பிக்கையையும் அவரது திருவடிகளில் சமர்ப்பியுங்கள். எங்களோடு ஒத்துழைப் பதற்குத் தாமதம் செய்யாதீர்கள்!

துருப்புகளின் உற்சாகத்தையும் மக்களின் உற்சாகத்தையும் கிளர்த்துவதற்கு அடிக்கடி ராணுவ அணிவகுப்புகள் நடத்திப் பரிசுகள் வழங்கப்பட்டன. நகரவாசிகளுக்கு ஆறுதலளிப்பதற்கு

சக்கரவர்த்தி தெருக்களில் பவனி சென்றார்; எவ்வளவோ அரசாங்க அலுவல்கள் இருந்தபோதிலும் தமது உத்திரவு மூலம் அமைக்கப்பட்ட நாடக அரங்கங்களுக்குத் தாமே நேரில் வந்தார்.

முடிமன்னர்களின் மிகப் பெரிய பண்பான தர்ம சிந்தனையைப் பொறுத்தவரையில், நெப்போலியனும் தம் சக்திக்குட்பட்டதையெல்லாம் செய்தார். மெய்ஸன் டி மா மெரே என்னும் சொற்களை தர்ம ஸ்தாபனங்களில் பொறிக்கும்படி செய்தார். இதன் மூலம் ஒரு தந்தைக்குரிய அன்பை ஒரு மன்னனுக்குரிய கம்பீரமான கருணையோடு இணைத்தார். அனாதைப் பிள்ளைகள் ஆஸ்பத்திரிக்கு வருகை தந்தார். தம்மால் காப்பாற்றப்பட்ட அனாதைக் குழந்தைகள் தமது வெள்ளைக்கரர்களை முத்தமிட அனுமதித்தார். டூடோல்மினோடு அன்போடு சம்பாஷித்தார். பின்னர், தியர்ஸ் வாசாலகத்தோடு விவரிப்பது போல, தாம் தயாரித்த ருஷ்ய கள்ள நாணயத்தைக் கொண்டு நமது சிப்பாய்களுக்கு சம்பளம் வழங்கும்படி உத்திரவிட்டார்: ''தமக்குப் பிரெஞ்சு ராணுவத்திற்கும் உரித்தான ஒரு சட்டத்தின் மூலம் இந்த வழி துறைகளை உபயோகித்து தீ விபத்திற்குள்ளானவர்களுக்கு நிவாரணமளிக்கச் செய்தார். ஆனால் உணவு கிடைப்பது அரிதிலும் அரிதாக இருந்ததால் பெரும்பாலும் விரோதிகளாக இருந்த அந்நியர்களுக்குப் பணத்தைக் கொடுத்து வெளியிலிருந்து உணவு வாங்கிக்கொள்ளும்படி சொன்னார். இதற்காக காகித ரூபிள்களை அவர்களுக்கு விநியோகித்தார்!

ராணுவக் கட்டுப்பாடு பொறுத்தவரையில், ராணுவப் பொறுப்புகளை நிறைவேற்றாதவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்படும் என்று தொடர்ச்சியாக உத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டன. இவ்வாறே கொள்ளையடிப்பதை ஒடுக்குவதற்கும் உத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டன.

## 13
### 10

ஆனால் இதிலே விந்தை என்னவென்றால், இந்த எல்லா நடவடிக்கைகளும், முயற்சிகளும், திட்டங்களும் - இதே போன்ற சந்தர்ப்பங் களில் மற்றவர்கள் மேற்கொண்டவற்றைக் காட்டிலும் இவை அப்படி ஒன்றும் மோசமில்லை - விஷயத்தின் தன்மையை மாற்றவில்லை. அதற்குப் பதில் யந்திர நுட்பத்திலிருந்து தொடர்பற்றுப்போன ஒரு கடிகாரத்தின் முற்களைப் போல, அவை பல் சக்கரங்களுக்குச் சம்பந்தமில்லாமல் தன்முனைப்போடும் குறிக்கோளற்றும் சுழன்றன.

ராணுவ விவகாரத்தைப் பொறுத்தவரையில் - அதாவது போர் முனைத் திட்டத்தைப் பொறுத்தமட்டில் - ''அவரது மேதை இதை விட ஆழ்ந்த விவேகமுள்ள, திறமையுள்ள, வியக்கத்தக்க'' திட்டத்தை என்றும் வகுத்ததில்லை என்று தீயர்ஸ் குறிப்பிட்டு விட்டு, இந்த மேதா விலாசம் மிகுந்த திட்டம் அக்டோபர் 15-ம் தேதியோடு சம்பந்தப்பட்டதே தவிர அக்டோபர் 4-ம் தேதியோடு சம்பந்தப்பட்டதல்ல என்பதை நிரூபிக்க எம். பெயினோடு வாக்குவாதத்திலும் இறங்குகிறார் - ஆனால் உண்மையில் இந்தத் திட்டம் ஒன்றுமே நிறைவேற்றப்படவில்லை, நிறைவேற்றப்பட முடியாதது; ஏனென்றால் யதார்த்த நிலைக்கு அது கொஞ்சமும் பொருத்தமாக இருக்கவில்லை. கிரம்பிளின் அரண்களைப் பலப்படுத்துவதற்காக லா மாஸ்க்யூ (பேஸில் தி பீட்டிபைட் சர்ச்சை நெப்போலியன் இவ்வாறு அழைத்தார்) தரை மட்டமாக்கப்பட்ட போதிலும் பயனில்லை. கிரம்ளினில் சுரங்கக் கண்ணிகள் நடப்பட்டது தான் மாஸ்கோவை விட்டு வெளியேறியதும் கிரம்ளின் தகர்க்கப்பட வேண்டும் என்னும் நெப்போலியனின் விருப்பத்தைத் தான் பூர்த்தி செய்தது - இது தன்னைக் காயப்படுத்திய தரையை அடிக்க வேண்டும் என்று விரும்பும் ஒரு குழந்தையின் செயல் போல் இருந்தது. ருஷ்ய ராணுவத்தைத் துரத்திச் செல்ல வேண்டுமென்பதில் நெப்போலியன் மிகுந்த அக்கறை காட்டினார். ஆனால் இதனால் கேள்விப்படாத விளைவுதான் ஏற்பட்டது. பிரெஞ்சு ஜெனரல்கள் அறுபதினாயிரம் பேர் கொண்ட ருஷ்ய ராணுவத்தோடு தொடர்பற்றுப் போயினர். தீயர்ஸ் கூற்றுப்படி கடைசியில் முராட்டின் திறமையால்தான் - தெளிவாக சொல்வதானால் - ஷேதையால்தான் தொலைந்துபோன ஊசி தேடி எடுக்கப்பட்டது போல ஷ்ய ராணுவம் கண்டுபிடிக்கப்பட்டது.

ராஜதந்திரத்தைப் பொறுத்தவரையில், தனது பெருந்தன்மை பற்றியும், நியாய உணர்வு பற்றியும் டூடோல்மினிடமும் யாகோவ்லேவிடமும் (அவர்களது முக்கிய கவலையெல்லாம் ஒரு மேல் கோட் பெறுவதிலும் பிரயாண வசதி பெறுவதிலும்தான் இருந்தது) நெப்போலியன் எடுத்துக் கூறியதெல்லாம் வீண் வியர்த்தமாயின: அலெக்சாந்தர் இந்தத் தூதர்களை வரவேற்கவு மில்லை, அவர்களது தூது சமாச்சாரங்களுக்குப் பதிலளிக்கவு மில்லை.

சட்ட விஷயங்களைப் பொறுத்தவரையில் தீ மூட்டியவர்கள் என்று கருதப்பட்டவர்கள் சிரச்சேதம் செய்யப்பட்ட பிறகு, எஞ்சிய மாஸ்கோ எரியூட்டி பஸ்பமாக்கப்பட்டது.

நிர்வாக விஷயங்களைப் பொறுத்தவரையில், நகராட்சி அமைக்கப்பட்டதானது கொள்ளைகளைத் தடுக்கவில்லை. அதற்குப் பதில் நகராட்சியைச் சேர்ந்தவர்கள் சட்டம், அமைதியை நிலைநாட்டுகிறோம் என்ற பெயரால் மாஸ்கோவைச் சூறையாடவோ அல்லது தங்களது சொத்துக்கள் சூறையாடப் படாமல் பாதுகாக்கப்படவோ மட்டும்தான் அது பயன்பட்டது.

மதத்தைப் பொறுத்தவரையில் எகிப்தில் நெப்போலியன் ஒரு மசூதிக்கு வருகை தந்ததும் எப்படி விஷயங்கள் சுலபமாக முடிந்து விட்டனவோ அப்படி இங்கு பயன் ஒன்றும் ஏற்படவில்லை. மாஸ்கோவில் காணப்பட்ட இரண்டு அல்லது மூன்று மதகுருமார்கள் நெப்போலியனின் விருப்பத்தை நிறைவேற்றவே முயற்சி செய்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவர் வழிபாடு நடத்திக்கொண்டிருக்கும்போது ஒரு பிரெஞ்சு சிப்பாயால் முகத்தில் அறையப்பட்டார். இன்னொருவரைப் பற்றி ஒரு பிரெஞ்சு அதிகாரி பின்வருமாறு கூறினார்: ''நான் ஒரு மதகுருவை கண்டுபிடித்து அவரை வழிபாடு நடத்தும்படி அழைத்தேன். ஆனால் அவரோ மாதாக்கோவிலை நன்றாக சுத்தம் செய்து பூட்டுப்போட்டு பூட்டிவிட்டுப் போய்விட்டார். அன்றிரவு மீண்டும் கதவுகள் உடைத்துத் திறக்கப்பட்டன, பூட்டுகள் நொறுக்கப்பட்டன, புத்தகங்கள் கிழித்தெறியப்பட்டன, இன்னும் இதர ஒழுங்கீனங்கள் நிகழ்த்தப்பட்டன.''

வர்த்தகத்தைப் பொறுத்தவரையில், முயற்சியுள்ள தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் விடுக்கப்பட்ட பிரகடனம் பலனளிக்கவில்லை. தொழிலாளர்களில் யாரும் முயற்சியுள்ளவர்களாக இல்லை. விவசாயிகளோ நகரத்தை விட்டு வெகுதூரம் பிரகடனத்தோடு வரத்துணிந்த கமிஷார்களைப் பிடித்துக் கொன்றுவிட்டனர்.

மக்களுக்கும் துருப்புகளுக்கும் பொழுதுபோக்குக்காக நாடக அரங்கங்கள் நடத்தும் விஷயமும் கூட வெற்றிபெறவில்லை. கிரம்ளினிலும் போஸ்னியாகோவின் இல்லத்திலும் அமைக்கப்பட்ட நாடக அரங்கங்களும் மீண்டும் உடனே மூடப்பட்டன. இதற்குக் காரணம் நடிகர்களும் நடிகைகளும் கொள்ளையடிக்கப்பட்டதுதான்.

தருமப் பணியும்கூட விரும்பிய பலனை அளிக்கவில்லை. மாஸ்கோவில் வெள்ளம் போல் பெருக்கெடுத்த உண்மையான காகிதப் பணமும் போலிகாகிதப் பணமும் அவற்றின் மதிப்பை இழந்தன. கொள்ளையடிப்பதில் ஈடுபட்ட பிரெஞ்சுக்காரர்கள் தங்கத்தில்தான் அக்கறை காட்டினார்கள். துயருற்றவர்களுக்கு

நெப்போலியன் வழங்கிய காகிதப் பணம் மட்டுமின்றி, தங்கத்தோடு ஒப்பிடும்போது வெள்ளியும் கூட மதிப்பிழந்தது. ஆனால் அந்த சமயம் அதிகாரிகள் பிறப்பித்த உத்திரவுகள் எவ்வாறு சீந்துவாரற்றுப் போயின என்பதற்கு கொள்ளையைத் தடுத்து ஒழுங்கை நிலைநாட்ட நெப்போலியன் செய்த முயற்சி ஒரு வியப்பூட்டும் உதாரணமாகும்.

இது பற்றி ராணுவ அதிகாரிகள் கூறியதாவது:

சூறையாடுகளுக்கெதிராக உத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டிருந்த போதிலும், நகரில் அது தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இன்னும் ஒழுங்கும் அமைதியும் நிலைநாட்டப்படவில்லை. ஒரு வர்த்தகர்கூட சட்ட ரீதியாக வாணிபம் செய்யவில்லை. ராணுவத்திற்கு உணவுப் பொருள்களை விற்கும் சிறு வியாபாரிகள் மட்டும் வர்த்தகம் செய்ய முன் வந்துள்ளனர். அவர்களும் கொள்ளையடித்த பொருள்களைத்தான் விற்கின்றனர்.

எனது வார்டைச் சுற்றியுள்ள பகுதிகளை மூன்றவது படைப்பிரிவைச் சேர்ந்த சிப்பாய்கள் தொடர்ந்து கொள்ளையடித்து வருகின்றனர். அவர்கள் துர்ப்பாக்கியசாலிகளான மாஸ்கோவாசிகள் நிலவறைகளில் கொஞ்சநஞ்சம் ஒளித்து வைத்திருப்பதையும் அபகரித்துக்கொள்வதோடு நில்லாமல் அந்த அப்பாவிகளைத் தங்களது குத்துவாள்களால் மூர்க்கத்தனமாக காயப்படுத்தவும் செய்கின்றனர். இதை நானே நேரில் பல முறை பார்த்திருக்கிறேன்.

சிப்பாய்கள் கொள்ளையடிப்பதையும், சூறையாடுவதையும் தவிர வேறு புதிது ஒன்றுமில்லை - அக்டோபர் 9.

கொள்ளையடிப்பதும் சூறையாடுவதும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. எங்கள் மாவட்டத்தில் ஒரு திருட்டுக் கோஷ்டியினர் நடமாடுகின்றனர். ஒரு பலமான படை கொண்டு அவர்களைக் கைது செய்யவேண்டும் - அக்டோபர் 11.

சூறையாடுவதை நிறுத்த வேண்டும் என்று கண்டிப்பான உத்திரவுகள் பிறப்பித்திருந்தும், காப்பாளர்கள் கோஷ்டி கோஷ்டியாகச் சென்று கொள்ளையடித்துவிட்டு கிரம்ளினுக்குத் திரும்புவதைக் கண்டு சக்வரர்த்தி மிகவும் கோபமடைந்துள்ளார். பழைய காப்பாளர்களிடையே ஒழுங்கீனமும், கொள்ளையும் முன்னெப்போதும் விட நேற்ற மாலையும், இரவும், இன்றைய தினமும் தலைதூக்கியுள்ளன. தமக்குக் காவலாக இருப்பதற்கென்று பொறுக்கி எடுத்து நியமிக்கப்பட்ட சிப்பாய்கள் கட்டுப்பாட்டிற்கு மற்றவர்களுக்கு முன்னுதாரணமாகத் திகழ்வதற்குப் பதிலாக ராணுவ சப்ளைகள் வைக்கப்பட்டுள்ள பண்டக சாலைகளுக் குள்ளும், நிலவறைகளுக்குள்ளும் பலவந்தமாக நுழையுமளவுக்குக்

கீழ்ப்படியாதவர்களாக நடந்து கொள்வதைப் பார்த்து சக்கரவர்த்தி வருந்துகிறார். மற்றவர்கள் காவலாளிகளிடமும் அதிகாரிகளிடமும் ஒழுங்கீனமாக நடந்துகொண்டும், அவர்களைத் தூஷித்தும் அடித்தும் தங்களுக்கு இழிவைத் தேடிக்கொள்கிறார்கள்.

அரண்மனையின் பிரதம காப்பாளர் (கவர்னர் எழுதுகிறார்) பல முறை உத்திரவுகள் போட்டும் சிப்பாய்கள் முற்றங்களைத் தொடர்ந்து அசுத்தப்படுத்தி வருகிறார்கள் என்றும், சக்கரவர்த்தியின் ஜன்னல்களின் முன்னால்கூட அப்படிச் செய்கிறார்கள் என்றும் பலத்த புகார் செய்கிறார்.

ஒரு கால்நடை மந்தை மூர்க்கங்கொண்டு தன்னைப் பட்டினியிலிருந்து காப்பாற்றக்கூடிய தீவனத்தையே காலில் போட்டு மிதித்துத் துவைப்பது போல அந்த ராணுவம் மாஸ்கோவில் கூடுதலாகத் தங்கியிருந்த ஒவ்வொருநாளும் சிதைந்து அழிந்துகொண்டிருந்தது. ஆனால், அப்படியும் அது அங்கிருந்து கிளம்பவில்லை.

ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவில் போக்குவரத்து ரயில்கள் பிடிபட்டதாலும், டாராவ்டினோ யுத்தத்தாலும் திடீரென்று அதனை பயமும் பீதியும் கௌவிக்கொண்டபோதுதான் அது ஓட ஆரம்பித்தது. ஒரு ராணுவ அணிவகுப்பைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தபோது டாராவ்டினோ யுத்தம்பற்றி எதிர்பாராத விதமாக நெப்போலியனுக்குக் கிடைத்த செய்தி ருஷ்யர்களைத் தண்டிக்க வேண்டுமென்ற ஒரு விருப்பத்தை அவருள் கிளர்த்திற்று (இவ்வாறு தீயர்ஸ் கூறுகிறார்); மாஸ்கோவை விட்டுக் கிளம்புவதற்கு அவர் உத்திரவு பிறப்பித்தார். இதைத்தான் முழு ராணுவமும் வற்புறுத்திக்கொண்டிருந்தது.

மாஸ்கோவை விட்டு ஓட்டம் பிடித்த சிப்பாய்கள் தாங்கள் கொள்ளையடித்த சகலவற்றையும் தங்களுடன் எடுத்துச் சென்றனர். நெப்போலியனும்கூட தமது சொந்த பொக்கிஷத்தை எடுத்துச் சென்றார். ஆனால், ராணுவத்திற்குப் பெரும் தடங்கலாக இருந்த சாமான் ரயில்களைப் பார்த்ததும் அவர் திடுக்கிட்டுவிட்டார் (என்று தீயர்ஸ் கூறுகிறார்.) எனினும் முன்னர் மாஸ்கோவை நெருங்கியபோது ஒரு குறிப்பிட்ட மார்ஷலின் தேவைக்கதிகமான வாகனங்களையெல்லாம் எரித்துவிடும்படி உத்திரவிட்டதுபோல இப்போது அவர் செய்யவில்லை. இதற்கு அவரது யுத்த அனுபவமே காரணம். சிப்பாய்கள் ஏறிச் சென்ற வண்டிகளை அவர் வைத்த கண் வாங்காமல் பார்த்தார். உணவுப் பொருள்களையும், நோய் வாய்ப்பட்டவர்களையும், காயமடைந்தவர்களையும் ஏற்றிச்

செல்வதற்கு அந்த வாகனங்கள் பயன்பட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று அவர் குறிப்பிட்டார்.

ஒரு மிருகம் தான் அழிந்துகொண்டிருக்கிறோம் என்பதை உணர்கிறது; அதே சமயம் தான் என்ன செய்துகொண்டிருக்கிறோம் என்பது தெரியாமலிருக்கிறது. பிரெஞ்சு ராணுவம் முழுவதின் நிலையும் இப்படித்தானிருந்தது. பிரெஞ்சு ராணுவம் மாஸ்கோவில் பிரவேசித்த காலம் முதல் அது அழிந்த காலம்வரை அதனுடையவும் நெப்போலியனுடையவும் திறமையான போர்த் தந்திரத்தையும், நோக்கங்களையும் பற்றி ஆராய்வது படுகாயமடைந்து சாகும் தறுவாயிலுள்ள ஒரு மிருகத்தின் மரணாவஸ்தையான துள்ளல்களையும் உதறல்களையும் பற்றி ஆராய்வது போலாகும். பெரும்பாலும், காயம்பட்ட ஒரு மிருகம் சலசலப்பு ஒலி கேட்ட உடனேயே நேராக வேட்டைக்காரனின் துப்பாக்கி நோக்கிப் பாய்ந்து சென்று பிறகு பின்வாங்கித் தனது முடிவைத் தானே துரிதப்படுத்துகிறது. நெப்போலியனும் தனது ராணுவத்தின் நிர்ப்பந்தம் காரணமாக இதையே செய்தார். டாராவ்டினோ யுத்தத்தின் சலசலப்பு மிருகத்தை கிலிகொள்ளச் செய்தது. அது வேட்டைக்காரரின் துப்பாக்கி நோக்கிப் பாய்ந்து சென்றது, அவனை எட்டிற்று, பிறகு திரும்பிற்று, இறுதியாக எந்த ஒரு கொடிய விலங்கையும் போலவே-மிகவும் பிரதிகூலமானதும் அபாயகரமானதுமான பாதையில் பின்வாங்கி ஓடிவந்தது. அது மோப்பம் பிடிப்பதற்குப் பழக்கப்பட்ட பாதை.

மேலே குறிப்பிட்ட காலகட்டம் முழுவதிலும்-கப்பலில் முன்னணியில் வைக்கப்பட்டுள்ள பொம்மைதான் அக்கப்பலை வழி நடத்திச் செல்கிறது என்று ஒரு காட்டுமிராண்டிக்குத் தோன்றுவதுபோல - எல்லா நடவடிக்கைகளுக்கும் தலைவராக நமக்குக் காட்சியளித்த நெப்போலியன் வண்டிக்குள் சில கயிறுகளைப் பிடித்துக்கொண்டு, தான்தான் அதை ஓட்டுவதாக நினைக்கும் ஒரு குழந்தைபோல நடந்துகொண்டார்.

## 13

### 11

அக்டோபர் 6 - ம் தேதி அதிகாலையில் பீயர் கொட்டகையை விட்டு வெளியே சென்றவர் திரும்பி வந்தபோது தம்மைச் சுற்றித் துள்ளிக் குதித்த நீலமும் சாம்பலும் கலந்த நிறங்கொண்ட ஒரு நாயோடு விளையாடுவதற்குக் கதவருகே நின்றார். அதற்கு நீண்ட உடலும் கப்பைக் கால்களும் இருந்தன. அந்த சின்னஞ்சிறு நாய்

அவர்களது கொட்டகையிலேயே வசித்தது, இரவில் காராட்டேவின் பக்கத்தில் படுத்துறங்கிற்று; அது சில சமயங்களில் நகரத்திற்குச் சுற்றுலா செல்வது வழக்கம். ஆனால், எப்போதும் மீண்டும் திரும்பிவந்துவிடும். அநேகமாக அதற்கு எந்தக் காலத்திலும் ஒரு எஜமானன் இருந்திருக்க முடியாது. இப்போதும்கூட அது யாருக்கும் சொந்தமானதல்ல, அதற்குப் பெயரும் கிடையாது. பிரெஞ்சுக்காரர்கள் அதை அசோர் என்று அழைத்தார்கள்; கதை சொல்லும் சிப்பாய் பெம்கால்கா என்று அழைத்தான்; காராட்டேவும் மற்றவர்களும் அதை சாம்பல் நிறத்தான் என்று அழைத்தார்கள்... அல்லது சில சயமங்களில் குண்டு என்று அழைத்தார்கள். அந்த நீல - சாம்பல் நிற நாயோ தனக்கு எஜமான் இல்லாதது பற்றியோ, ஒரு பெயர் இல்லாதது பற்றியோ, எந்த ஜாதியைச் சேர்ந்தது என்பதுகூடத் தெரியாதது பற்றியோ அல்லது ஒரு குறிப்பிட்ட நிறம் இல்லாதது பற்றியோ கொஞ்சமும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அதன் மென்மயிர் அடர்ந்த வால் இறகுபோல உறுதியாக நின்றது. நான்கு கால்களையும் உபயோகிப்பது ஏதோ இழிவான காரியம் என்பதுபோல ஒரு பின்னங்காலை லாவகமாகத் தூக்கிக்கொண்டு, மற்ற மூன்று கால்களாலும் சுலபமாகவும் விரைவாகவும் ஓடும் வகையில் அதன் கப்பைக் கால்கள் நன்கு பயன்பட்டன. அந்த நாய்க்கு எல்லாமே மகிழ்ச்சியூட்டுவதாக இருந்தது. அது ஒரு சமயம் சந்தோஷம் தாங்காமல் குரைத்துக்கொண்டே தரையில் விழுந்து புரளும்; இன்னொரு சமயம் கம்பீரமாகச் சிந்தனை செய்து கொண்டே வெயில் காயும்; வேறொரு சமயம் ஒரு மரத்துண்டு அல்லது வைக்கோலுடன் துள்ளிக் குதித்து விளையாடும்.

இப்போதுபீயருக்கிருந்த ஆடையெல்லாம் கிழிந்து அழுக்கடைந்து போன ஒரு சட்டையும் (அவரது பழைய உடுப்புகளில் எஞ்சியிருந்தது இது ஒன்றுதான்). ஒரு சிப்பாயின் கால் சட்டைகளும். விவசாயியின் கோட்டும். தொப்பியும்தான். காராட்டேவின் யோசனையின்படி வெதுவெதுப்புக்காக கால் சட்டைக்கு மேல் கணுக்கால்களைச் சுற்றிக் கயிறுகட்டிக் கொண்டிருந்தார். அவரது குடும்பத்துக்கே உரித்தான திடகாத்திரமும் வலிமையுமிக்கத் தோற்றத்தை அவர் இன்னும் பெற்றிருந்தாலும் முன்னர்போல் அவர் தைரியமாக இல்லை, தாடியும் மீசையும் அவரது முகத்தின் கீழ்ப் பகுதியை மறைத்துக்கொண்டிருந்தன. தலைமயிர் சிக்குப் பிடித்து, பேன்கள் நிறைந்து தலையைச் சுற்றி ஒரு குல்லாயைப் போல மண்டிக் கிடந்தது. அவரது பார்வையில் உறுதியும், அமைதியும், எழுச்சி மிக்க விழிப்பும் குடி கொண்டிருந்தன. முன்பு அவரது கண்களில்கூடத் தெரியும்

சோர்வுக்குப் பதிலாக இப்போது செயலில் இறங்கவும் எதிர்க்கவும் தாயராக இருக்கும் ஒரு உற்சாகம் அவரிடம் காணப்பட்டது. அவரது பாதங்கள் எதுவும் அணியாமல் வெறுமையாக இருந்தன.

பியர் முதலில் அந்தக் காலை நேரத்தில் வாகனங்களும், குதிரை வீரர்களும் கடந்து செல்லும் வயலைப் பார்த்தார். பிறகு ஆற்றுக்கப்பால் தொலை தூரத்தைப் பார்த்தார். பிறகு உண்மையாகவே தம்மைக் கடிக்கப் போவதுபோல பாசாங்கு செய்துகொண்டிருந்த நாயைப் பார்த்தார். அதன் பின்னர் தமது வெறுமையான பாதங்களைப் பார்த்தார். அவற்றைப் பல நிலைகளில் வைத்துப் பார்த்து அகமகிழ்ந்தார்; தமது தடித்த அழுக்குப் படிந்த பெருவிரல்களை அசைத்தார். அவர் தமது வெறுமையான பாதங்களைப் பார்க்கும் ஒவ்வொரு சமயமும் சுய திருப்தி நிறைந்த ஒரு உற்சாகமான புன்னகை அவரது முகத்தில் அரும்பிற்று. அந்தப் பாதங்கள் கடந்த சில வாரங்களில் அவர் அனுபவித்தவற்றையும் கற்றுக் கொண்டவற்றையும் அவருக்கு நினைவூட்டின. இந்த நினைவுகள் அவருக்கு இன்பமூட்டின.

சில தினங்களாக காலநிலை அமைதியாகவும் தெளிவாகவு மிருந்தது; காலை நேரங்களில் மட்டும் இலேசாகப் பனி பெய்தது. ''வயதான மனைவிகளின் கோடைக்காலம்'' என்று இதற்குப் பெயர்.

சூரிய ஒளியில் காற்றோட்டம் வெதுவெதுப்பாக இருந்தது. அதுவும் காலைப் பனி இன்னும் காற்றில் கலந்து நின்ற நிலையில் அந்த வெதுவெதுப்பு ஒரு தனி இன்பமளிப்பதாக இருந்தது.

அருகிலும் தூரத்திலுமிருந்த ஒவ்வொன்றின்மீதும், இலையுதிர் காலத்தில் மட்டுமே காணப்படும் பளிங்கு போன்ற ஒரு மாயாஜால மினுமினுப்பு படர்ந்திருந்தது, குருவிக் குன்றுகளோடு சேர்ந்து கிராமம், மாதாக் கோவில், பெரிய வெள்ளை மாளிகை முதலியன தூரத்தில் தெரிந்தன, மொட்டை மரங்கள், மணல், வீடுகளின் செங்கற்கள் கூரைகள், மாதாக் கோவிலின் பச்சை வர்ண தூபி, தூரத்திலிருந்த வெள்ளை மாளிகையின் மூலைகள் முதலியவை யனைத்தும் நுணுக்கமான விவரங்களோடு அசாதாரணமான தெளிவோடு காணப்பட்டன. அருகில் பிரெஞ்சுக்காரர்கள் ஆக்கிரமித்துக்கொண்டிருந்த பாதி எரிந்துபோன ஒரு மாளிகையின் இடிபாடுகள் தென்பட்டன, அங்கிருந்த வேலிக்கருகே மண்டி வளர்ந்திருந்த ''லில்லாக்'' புதர்கள் இன்னும் பசுமையைக் காண்பித்துக்கொண்டிருந்தன,

ஒரு பிரெஞ்சு காப்போரல் (சின்ன காலாட்படை அதிகாரி) எங்கோ தனது சொந்த வீட்டில் இருப்பதுபோல பொத்தான் மாட்டிக்கொள்ளாத கோட்டோடும், தலையில் உச்சிக்

குல்லாயோடும், வாயில் ஒரு குட்டையான சுங்கானோடும் கொட்டகையின் ஒரு மூலைக்குப் பின்னாலிருந்து வந்து, ஒரு நேசபாவமான கண் சிமிட்டலோடு பீயரை அணுகினான்,

''என்ன வெதுவெதுப்பு, திருவாளர் கிரில்!'' (பீயருக்கு அவர்கள் வைத்த பெயர்) ''வசந்தருது மாதிரி இருக்கிறது, இல்லையா?''

கார்ப்போரால் கதவின்மீது சாய்ந்துகொண்டு பீயருக்குத் தனது சுங்கானை அளிக்க முன் வந்தான். ஆனால் பீயர் அவன் கொடுக்க முன் வந்த ஒவ்வொரு தடவையும் அதை மறுத்தே வந்திருக்கிறார்.

''இத்தகைய கால நிலையில் புறப்படுவது...'' என்று அவன் ஆரம்பித்தான்,

புறப்படுவதைப் பற்றி ஏதோ கூறுகிறீரே அது என்ன என்று பீயர் வினவினார், கிட்டத்தட்ட எல்லா துருப்புகளும் இங்கிருந்து கிளம்புவதாகவும். கைதிகளைப் பற்றியும் அன்றையதினம் ஏதாவது உத்திரவு வரக்கூடும் என்றும் அவன் தெரிவித்தான், பீயரோடு கொட்டகையில் இருந்த சிப்பாய்களில் சோகோலாவ் என்பவன் செத்துக் கொண்டிருந்தான், அவன் விஷயமாக ஏதாவது செய்யவேண்டுமென்று கார்ப்போரலிடம் பீயர் கூறினார், இதைப்பற்றி பீயர் கவலைப்பட வேண்டியதில்லை என்றும், ஏனென்றால் அவர்களிடம் ஒரு ஆம்புலன்சும் ஒரு நிரந்திர ஆஸ்பத்திரியும் இருக்கின்றனவென்றும், நோய்வாய்ப்பட்டவர்களுக்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படுமென்றும், என்ன நடக்கக்கூடும் என்பதை முன் கூட்டியே எதிர்பார்த்து அதற்கு வேண்டியவற்றை அதிகாரிகள் செய்திருக்கிறார்கள் என்றும் கார்ப்போரல் பதிலளித்தான்.

''மேலும். திருவாளர் கிரில், உமக்குத்தான் காப்டனைத் தெரியுமே, அவரிடம் நீர் ஒரு வார்த்தை சொன்னால் போதும், அவர் என்றும் எதையும் மறக்காத மனிதர், கேப்டன் சுற்றிவரும்போது அவரிடம் பேசும், அவர் உமக்காக எதையும் செய்வார்'',

(கார்ப்போரால் குறிப்பிட்ட காப்டன், பீயரோடு அடிக்கடி நீண்ட நேரம் அளவளாவக் கூடியவன் என்பது மட்டுமின்றி அவருக்கு எல்லா வகையான சலுகைகளும் அளிப்பவன்),

''என்ன, மகாத்மா தாமஸ்''. என்று அவர் ஒருநாள் என்னிடம் கூறினார், ''திருவாளர் கிரில் படித்த மனிதர். பிரெஞ்சு மொழி பேசுகிறார், அவர் ஒரு ருஷ்ய கனவான், பல கஷ்டங்கள் அனுபவித்தவர். எனினும், மனிதர். விவரம் தெரிந்தவர்... அவருக்கு ஏதாவது தேவைப்பட்டு என்னிடம் கேட்டால் நான் அதை மறுக்க மாட்டேன், கற்றவர்கள் கற்றவரை காமுறுவர்'', உமக்காகத்தான்

இதைக் கூறுகிறேன் திருவாளர் கிரில், அன்று நீர் மட்டும் இல்லாதிருந்தால் அந்த விஷயம் மோசமாக முடிந்திருக்கும்.

சிறிது நேரம் அளவளாவி உரையாடிக்கொண்டிருந்துவிட்டு கார்ப்போரல் போய்விட்டான். (அந்த விஷயம் என்று அவன் குறிப்பிட்ட சம்பவம் சில தினங்களுக்கு முன்னர் நடைபெற்றது - கைதிகளுக்கும் பிரெஞ்சு சிப்பாய்களுக்கிடையே சண்டை மூண்டது. பீயர் தலையிட்டு தமது தோழர்களை சமாதானப் படுத்தினார்,) காப்போரலோடு பீயர் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்ட சில கைதிகள் அந்தப் பிரெஞ்சுக்காரன் என்ன சொன்னான் என்று வினவினார்கள். மாஸ்கோவை விட்டுப் பிரெஞ்சு ராணுவம் வெளியேறப்போகிறது என்று தாம் கேள்விப்பட்டதை அவர் சொல்லிக் கொண்டிருந்தபோது, மெலிந்து விளறிப்போயிருந்த ஒரு பிரெஞ்சு சிப்பாய் கிழிந்த ஆடைகளோடு கொட்டகையின் கதவை நோக்கி வந்தான். அவன் வணக்கம் தெரிவிக்கும் தோரணையில் தன் விரல்களை விரைவாகவும் கூச்சத்தோடும் நெற்றிக்கு உயர்த்தி, தான் சட்டை தைக்கக் கொடுத்த பிளாட்டோச் கொட்டகையில் இருக்கிறானா என்று பீயரை வினவினான்.

ஒரு வாரத்திற்கு முன்னர் பிரெஞ்சுக்காரர்களுக்குச் செருப்புத் தோலும், லினனும் தரப்பட்டன. அவற்றை அவர்கள் கைதிகளிடம் கொடுத்துத் தங்களுக்குச் செருப்புகளும், சட்டைகளும் தைத்துத் தரும்படி கூறியிருந்தனர்.

'இதோ, தயாராக இருக்கிறது. அன்பானவரே!'' என்றான் காராட்டேவ், நேர்த்தியாக மடித்த ஒரு சட்டையோடு வந்துகொண்டே.

வெதுவெதுப்பான காலநிலை காரணமாகவும், வேலை செய்வதற்கு சௌகர்யமாக இருக்கும் பொருட்டும் காராட்டேவ் கால் சட்டையும், கிழிந்து அடுப்புக்கரிபோல் கருப்பாக இருந்த ஒரு சட்டையும் மட்டுமே அணிந்திருந்தான். அவனது தலைமயிர் தொழிலாளி பாணியில் ஒரு எலுமிச்சை நாரால் தூக்கிவாரிக் கட்டப் பட்டிருந்தது. அவனது தெளிவான முகம் மேலும் தெளிவாகவும், முன்னெப்போதும் விட மகிழ்ச்சியோடும் காணப்பட்டது.

''வாக்குறுதி செயலின் சொந்த சகோதரன். நான் வெள்ளிக்கிழமை கூறினேன். இதோ இப்போது தயாராக இருக்கிறது'' என்று பிளாட்டோன் புன்முறுவலோடு தான் தைத்த சட்டையை விரித்துக் காட்டினான்.

பிரெஞ்சுக்காரன் அமைதியற்று சுற்றும் முற்றும் பார்த்தான். பிறகு தனது தயக்கத்தை வெற்றிக்கொண்டு விட்டவன்போல தனது ராணுவ உடையை விரைவாகக் கழற்றிவிட்டு அந்த சட்டையை அணிந்துகொண்டான். அவனது மெலிந்த, வெளிறிய உடலின்மீது

எண்ணெய்ப் பசையுள்ள, நீண்ட, பூப்போட்ட பட்டு அரைக்கோட் மட்டுமே இருந்தது. சட்டை எதுவுமில்லை. எனவே, வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கும் கைதிகள் தன் கோலத்தைக் கண்டு சிரிப்பார்கள் என்ற அச்சத்தில் அவன் அவசர அவசரமாக சட்டைக்குள் தலையைத் திணித்துக்கொண்டான். கைதிகள் யாரும் ஒரு வார்த்தையும் பேசவில்லை.

''பாரும், சட்டை உமக்குப் பொருத்தமாக இருக்கிறது!'' என்று பிளாட்டோன் திரும்பத் திரும்பக் கூறியவண்ணம் அதை இழுத்து விட்டான்.

பிரெஞ்சுக்காரன் கண்களை உயர்த்தாமல் சட்டைக்குள் தன் தலையையும், கைகளையும் நுழைத்துக்கொண்டு, அதன் தையலை ஆராய்ந்தான்.

''என்ன, அன்புள்ளவரே, இது தையற்கடையல்ல. என்னிடம் முறையான கருவிகளுமில்லை; ஒரு பேனைக் கொல்ல வேண்டுமானால்கூட அதற்கு ஒரு கருவி வேண்டுமென்று சொல்வார்கள்'' என்றார் பிளாட்டோன் முகம் மலர புன்முறுவல் பூத்தக்கொண்டே, அவன் தன் வேலையில் திருப்தி அடைந்தவனாகக் காணப்பட்டான்.

''சட்டை நன்றாகவே இருக்கிறது, வந்தனம்'', என்றான் பிரெஞ்சுக்காரன் பிரெஞ்சு மொழியில். ''ஆனால், கொஞ்சம் லினன் மீதி இருக்க வேண்டுமே''.

'உமது உடலோடு பொருந்தி அமையும்போது இன்னும் நன்றாக இருக்கும்' என்றான். காராட்டேவ் தன் கைத்திறனை மேலும் வியந்து கொண்டே, 'உமக்கு நேர்த்தியாகவும் இன்பமாக வுமிருக்கும்.'

''வந்தனம், வந்தனம், அன்பானவரே... ஆனால், அந்த மிச்ச லினன்?'' என்றான் மீண்டும் பிரெஞ்சுக்காரன் முறுவலித்துக் கொண்டே. அவன் தனியாக ஒதுக்கி வைத்திருக்க ஒரு ரூபிள் நோட்டை எடுத்து காராட்டேவிடம் கொடுத்தான். ''ஆனால், மிச்சமிருக்கும் லினனை என்னிடம் தாரும்''.

பிரெஞ்சுக்காரன் என்ன கூறுகிறான் என்பதைப் புரிந்துகொள்ள பிளாட்டோன் விரும்பவில்லை என்பதைக் கண்டு பீயர் தலையிடாமல் பார்த்துக்கொண்டிருந்தார். காராட்டேவ் பிரெஞ்சுக் காரன் தந்த பணத்திற்காக அவனுக்கு நன்றி கூறிவிட்டு தன் கைத்திறனைத் தனக்குத் தானே வியந்துகொள்வதில் ஈடுபட்டான். பிரெஞ்சுக்காரனோ மீதித் துணியைத் தன்னிடம் திருப்பிக் கொடுக்கும்படி மீண்டும் வற்புறுத்தினான்; தான் சொன்னதை காராட்டேவுக்கு மொழிபெயர்த்துக் கூறும்படியும் பீயரைக் கேட்டுக்கொண்டான்.

''மிச்சத் துணி அவனுக்கு எதற்கு வேண்டுமாம்?'' என்றான் காராட்டேவ். ''அது இருந்தால் எங்களுக்குக் கால்பட்டி தயாரிக்க உதவும். சரி, பரவாயில்லை.''

காராட்டேவ் சட்டென்று மாறிய, வருத்தங்கொண்ட தோற்றத்தோடு, தன் சட்டைக்குள்ளிருந்து ஒருசிறிய துணி மூட்டையை வெளியே எடுத்து பிரெஞ்சுக்காரனைப் பார்க்காமலேயே அவனிடம் கொடுத்தான். ''அப்படி இது என்ன ஓவியமானது'' என்று காரட்டேவ் முணுமுணுத்து விட்டுப் போய்விட்டான். பிரெஞ்சுக்காரன் அந்த லினன் துணியைப் பார்த்தான். சிறிது நேரம் யோசித்தான். பிறகு பீயரின் பார்வை தன்னிடம் ஏதோ கூறுவது போல அவரை ஆழ்ந்து நோக்கினான். பின்னர் திடீரென்று முகம் மலர கீச்சுக் குரலில் இரைந்தான்:

''பிளாட்டோச்! ஏய், பிளாட்டோச்! இதை நீரே வைத்துக் கொள்ளும்!'' அந்தத் துணி மூட்டையை காராட்டோவிடம் கொடுத்துவிட்டு பிரெஞ்சுக்காரன் திரும்பிப் போய்விட்டான்.

''இதைப் பார்த்தீரா'' என்றான் காராட்டேவ், தன் தலையை ஆட்டிக் கொண்டே, ''அவர்கள் கிறிஸ்தவர்களல்ல என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்களுக்கும் ஆன்மாக்கள் இருக்கின்றன. 'உழைப்பவன் உள்ளம் களங்கமற்றது. அது இல்லாதவனுக்காக இறங்குகிறது' என்று அதனால் தான் பெரியவர்கள் சொல்கிறார்கள். அவனுக்கு உடுத்திக்கொள்ள சரிவர துணிமணிகளில்லை. என்றாலும் இதை திரும்பக் கொடுத்துவிட்டான்.''

காராட்டேவ் சிந்தனையோடு முறுவல் பூத்தான். அந்த சிறு துணி மூட்டையைப் பார்த்துக்கொண்டே சற்று நேரம் மௌனமாக இருந்தான்.

''இது நல்ல கால் பட்டிகள் செய்வதற்கு உதவும். அன்பு நண்பரே'' என்று அவன் கூறிவிட்டு திரும்ப கொட்டகைக்குள் போய்விட்டான்.

## 13

### 12

பீயர் கைதியாகி நான்கு வாரங்கள் கடந்தன. அவரைச் சிப்பாய்களின் கொட்டகையிலிருந்து அதிகாரிகளின் கொட்டகைக்கு மாற்ற பிரெஞ்சுக்காரர்கள் முன்வந்தபோதிலும் அவர் தாம் முதலில் வைக்கப்பட்ட கொட்டகையிலேயே தங்கியிருந்தார்.

அந்த எரிந்து, நாசமடைந்துபோன மாஸ்கோவில், ஒரு மனிதனால் எவ்வளவு தாங்க முடியுமோ

அதற்கும் மேலாகவே பீயர் கஷ்டங்களை அனுபவித்தார்; ஆனால், தமக்கே அதுவரை தெரியாதிருந்த உடல் வலுவாலும் ஆரோக்கியத்தாலும், அதிலும் முக்கியமாக அந்தக் கஷ்டங்கள் எப்போது ஆரம்பமாயின என்று சொல்ல முடியாதபடி படிப்படியாக ஏற்பட்டதாலும், அந்த நிலைமையை அவர் எளிதாக மட்டுமின்றி, மகிழ்ச்சியோடும் தாங்கிக்கொண்டார். இந்த சமயத்தில்தான் அவர் முன்பு வீணாகத் தேடிக்கொண்டிருந்த மன அமைதியையும் சாந்தத்தையும் பெற்றார். அந்த மன அமைதியையும் சாந்தத்தையும் பெறுவதற்கு அவர் வெகு காலமாக எத்தனையோ வழிகளில் முயன்றார். பாராடினோவில் தான் அவருக்கு அது மனதில் நன்றாய்ப் பதிந்தது. அதை தர்மம் செய்வதிலும், பிரீமேஸன் சங்கத்தில் சேர்ந்து சேவை செய்வதிலும், நகர வாழ்க்கையின் ஒழுக்கக் கேடுகளிலும், ஒயினிலும், ஆத்மபரித் தியாகம் புரியும் வீரச் செயல்களிலும், நட்டாஷாவிடம் காதல் கொள்வதிலும் கண்டுபிடிக்க முயன்றார்; இன்னும் பகுத்தறிவாராய்ச்சி மூலமும் கண்டுபிடிக்க முயன்றார். இந்த வேட்கைகளும், சோதனைகளும் வீண் வியார்த்தமாகவே முடிந்தன. ஆனால், இப்போது அதைப்பற்றி நினைக்காமலேயே அவருக்கு அந்த சாந்தமும் மன அமைதியும் கிடைத்தது. அது மரணத்தினால் ஏற்பட்ட பயங்கரத்தின் மூலமாகவும், கஷ்டங்களின் மூலமாகவும், காராட்டேவினிடமிருந்து அறிந்துகொண்ட விஷயங்கள் மூலமாகவுமே அவருக்குக் கிடைத்தது.

மரண தண்டனைகள் நிறைவேற்றப்பட்டபோது அவர் அனுபவித்த அந்த பீதிநிறைந்த விநாடிகள் அவர் இதற்கு முன்னர் மிக முக்கியமானவை என்று கருதியிருந்த எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் அவரது நினைவிலிருந்து அடியோடு அடித்துச் சென்றுவிட்டன. இப்போதெல்லாம் அவருக்கு ருஷ்யாவைப் பற்றியோ, அல்லது யுத்தத்தைப் பற்றியோ, அல்லது அரசியலைப் பற்றியோ, அல்லது நெப்போலியனைப் பற்றியோ நினைக்க வேண்டுமென்று தோன்றுவதில்லை. இவையெல்லாம் தமக்குச் சம்பந்தப்பட்டவையல்ல என்று அவருக்குத் தெளிவாகத் தெரிந்தது. இவற்றைப் பற்றி கருத்து கூற தம்மை யாரும் அழைக்காததால் தாம் கருத்து கூற முடியாது என்று நினைத்தார். ''ருஷ்யாவும் வஸந்த காலமும் ஒன்று இணைக்கப்படவில்லை'' என்று அவர் எண்ணினார். காராட்டேவின் அந்த வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லும்போது அவருக்கு விசித்திரமான விதத்தில் மன அமைதி ஏற்பட்டது. நெப்போலியனைக் கொல்லவேண்டுமென்ற அவரது உத்தேசமும் அவர் சுவிசேஷத்தில் கண்ட விசித்திரமும் இப்போது அவருக்கு அர்த்தமற்றவையாகவும், பரிகாசமானவையாகவும்

தோன்றின. அவர் மனைவி மீது அவருக்கு ஏற்பட்டிருந்த கோபமும், தமது பெயர் கெட்டுவிடக்கூடாது என்பதில் அவருக்கு ஏற்பட்டிருந்த கவலையும் இப்போது அற்பமானவை யாக மட்டுமின்றி வேடிக்கையாகவும் தோன்றின. எங்கோ அவருடைய மனைவி தனக்கு இஷ்டமானபடி வாழ்ந்தால் அதைப்பற்றி அவருக்கு என்ன கவலை? தங்களுடைய கைதியின் பெயர் பெஜுகாவ் என்பதை அவர்கள் கண்டுபிடித்து விட்டார்களா, இல்லையா என்பதைப் பற்றி யாருக்கு, முக்கியமாக அவருக்கு என்ன கவலை?

இப்போது பீயர், இளவரசர் ஆண்ட்ரூவோடு இதற்கு முன்னர் தாம் நடத்திய உரையாடலை அடிக்கடி நினைத்துக்கொண்டார்; ஆண்ட்ரூவின் கருத்துக்களை அவர் சற்று வேறு விதமாகப் புரிந்து கொண்டிருந்தாலும் அவை அவருக்கு முற்றிலும் உடன்பாடாகவே இருந்தன. மகிழ்ச்சி என்பது எதிர்மறையாகத்தான் இருக்க முடியும் என்று இளவரசர் ஆண்ட்ரூ எண்ணினார். அப்படியே சொல்லவும் செய்தார். ஆனால், அதை அவர் வெறுப்போடும் ஏளனத்தோடும் சொல்லியவிதம், நிஜமான சந்தோஷத்தை அடையவேண்டுமென்ற விருப்பம் நம்முள் புகுத்தப்பட்டிருப்பது நம்மை வேதனைப் படுத்தவும், என்றென்றைக்கும் திருப்தியில்லாமல் இருக்கச் செய்யவுமேதான் என்று உண்மையாகவே கூறியதுபோலிருந்தது. ஆனால், பீயர் இதை எவ்வித ஐயமின்றி நம்பினார். துன்பமில்லா திருத்தல், ஒருவரது தேவைகள் பூர்த்தியாதல், ஒருவருக்குத் தமது தொழிலை அதாவது வாழ்க்கை முறையைத் தெரிந்தெடுத்துக் கொள்ள சுதந்திரமிருத்தல் முதலியவை இப்போது சந்தேகத்துக்கிட மின்றி பீயருக்கு மனிதனின் மிக உயர்ந்த ஆனந்தமாகத் தோன்றின. அவர் சாப்பிட விரும்பும்போது சாப்பிடுவதையும், குடிக்க விரும்பும்போது குடிப்பதையும், தூங்க விரும்பும்போது தூங்குவதையும், குளிராக இருக்கும்போது வெதுவெதுப்பையும், பேசுவதற்கும் ஒரு மனிதக்குரலை கேட்பதற்கும் விரும்பும்போது ஒரு சக மனிதனோடு பேசுவதையும் முதல் தடவையாக இன்பமாகக் கருதினார். ஒருவரது தேவைகள் பூர்த்தியாதல் - நல்ல ஆகாரம், சுத்தம், சுதந்திரம் - பீயருக்குப் பரிபூரண ஆனந்தமாகப் பட்டது. இத்தனைக்கும் இந்தத் தேவைகள் இப்போது அவருக்கு மறுக்கப்பட்டிருந்தன. ஒரு தொழிலைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுதல், அதாவது தனது வாழ்க்கை முறையைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுதல் - இது அவரைப் பொறுத்தவரையில் இப்போது கட்டுப்படுத்தப் பட்டிருந்தது - ஒரு சுலபமான விஷயமாக அவருக்குத் தோன்றிற்று. இதில் அவர் ஒருஉண்மையை மறந்துவிட்டார். அதாவது, வாழ்க்கையில் அளவுக்கு மீறிய

இன்பங்கள் பெற்றிருப்பது ஒருவரது தேவைகளைப் பூர்த்தி செய்வதிலுள்ள ஆனந்தத்தை அழித்துவிடுகிறது; அதேபோல தொழிலைத் தெரிந்தெடுத்துக் கொள்வதில் அதிக சுதந்திரம் இருப்பது - அவரது சொத்து, அவரது கல்வி, அவரது சமூக நிலை அவரது சொந்த வாழ்க்கையில் அளித்திருப்பது போன்ற சுதந்திரம் - தொழிலைத் தெரிந்தெடுத்துக் கொள்வதைக் கஷ்டமாக்குவதோடு, ஒரு தொழிலை மேற்கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தையும் சாத்தியக்கூறையும் அழித்து விடுகிறது என்பதை அவர் மறந்து விட்டார்.

பீயரின் பகற் கனவுகளெல்லாம் இப்போது அவர் விடுதலையாகப் போகும் காலத்தைப் பற்றித் திரும்பின. எனினும், பின்னால், அவரது எஞ்சிய வாழ்நாள் முழுவதும், அந்த ஒரு மாதகால சிறைவாசத்தை, அந்த மீளாத, உறுதியான, களிப்பூட்டும் உணர்ச்சிகளை, அதிலும் முக்கியமாக, இந்த வாரங்களில் மட்டுமே அவர் அனுபவித்த அந்தப் பரிபூரணமான மன அமைதியை, உள் சுதந்திரத்தை நினைத்துக்கொண்டது மட்டுமின்றி, அவற்றைப்பற்றி அவ்வப்போது உற்சாகத்தோடு பேசவும் செய்தார்.

முதல்நாள் அவர் சீக்கிரமே எழுந்து அதிகாலையில் கொட்டகையை விட்டு வெளிக் கிளம்பி, இன்னும் இருட்டாக இருக்கையில் கன்னி மரியாளது புதிய கன்னிமாடத்தின் கும்மட்டங்களையும் சிலுவைகளையும், தூசிபடிந்த புல்லின்மீது காணப்பட்ட வெண்பனியையும், குருவிக் குன்றுகளையும், வளைந்து செல்லும் நதிக்கு அப்பால் தூரத்தில் கருஞ்சிவப்பில் மறையும் தோப்புகளடர்ந்த கரைகளையும் பார்த்தபோது; மாஸ்கோவிலிருந்து வயலுக்குக் குறுக்கே காகங்கள் பறந்துவரும் ஓசையைக் கேட்ட போது; பிறகு கிழக்கே ஒளிக் கதிர்கள் சுடர்விட்டு, ஒரு மேகத்திற்குப் பின்னாலிருந்து சூரியனின் விளிம்பு கம்பீரமாக எழுந்ததும் கும்மட்டங்கள். சிலுவைகள், வெண்பனி, தொலைதூரம், நதி முதலியவைகளனைத்தும் களிப்பூட்டும் ஒளியில் மினு மினுக்க ஆரம்பித்ததைக் கண்டபோது - பீயர் வாழ்க்கையில் இதற்குமுன் என்றும் அறிந்திராத ஒரு புதிய இன்பத்தையும் தெம்பையும் நுகர்ந்தார். இது அவரது சிறைக்காலம் முழுவதும் அவரிடம் குடிகொண்டிருந்தது மட்டுமின்றி, அவரது துன்பங்கள் அதிகரிக்க அதிகரிக்க அது மேலும் பலப்பட்டது.

இந்த விழிப்புணர்ச்சி,.எதற்கும் தயாராக இருக்கும் உணர்வு, அவர் கொட்டகைக்கு வந்து சேர்ந்ததும் அவரைப்பற்றி அவரது சகக் கைதிகளுக்கு உருவான உயர்ந்த அபிப்பிராயத்தால் மேலும் வலுப்பட்டது. அவரது மொழி ஞானம், பிரெஞ்சுக்காரர்கள்

அவரிடம் காட்டிய மரியாதை, அவரது எளிமை, தன்னிடமிருந்து கேட்கப்படும் எதையும் கொடுக்கும் அவரது மனப்பாங்கு (அதிகாரிகளுக்குத் தரப்படும் வாரம் மூன்று ரூபிள் படியை அவர் பெற்று வந்தார்), குடிசையின் சுவர்களில் வெறும் கைகளால் ஆணிகளை இறக்கி சிப்பாய்களிடம் வெளிப்படுத்திய அவரது வலிமை, தனது தோழர்களிடம் அவர் காட்டிய இனிமை, அமைதியாக அமர்ந்து எதுவும் செய்யாமல் சிந்தனை செய்யும் அவரது ஆற்றல் (இது அவர்களுக்குப் புரிய முடியாததாக இருந்தது) - ஆகிய இவையெல்லாம் சேர்ந்து அவரை அவர்களுக்கு ஒரு புதிரான, மேன்மை வாய்ந்த மனிதராகத் தோன்றும்படி செய்தன. அவர் வசித்த உலகில் எந்தக் குணப்பண்புகள் அவருக்குத் தீமை செய்வதாக இல்லாவிட்டாலும், முட்டுக்கட்டைப் போடுவதாக இருந்தனவோ - அவரது வல்லமை, வாழ்க்கையின் இன்பங்கள்மீது அவருக்கிருந்த வெறுப்பு, அவரது ஞாபக மறதி, எளிமை - அவையே இங்கே இந்த மக்களிடையே அநேகமாக ஒரு வீரரின் அந்தஸ்தை அவருக்கு அளித்தன. அவர்கள் தன்னிடம் வைத்துள்ள மதிப்பு தன்மீது பொறுப்புகளையும் சுமத்துகிறது என்பதை பீயர் உணர்ந்தார்.

## 13

13

அக்டோபர் 6 - ம் தேதிக்கும் 7 - ம் தேதிக்கும் இடையிலுள்ள இரவில் பிரெஞ்சுக்காரர்கள் மாஸ்கோவை காலி செய்ய ஆரம்பித்தார்கள். சமையல் கொட்டகைகளும், தங்கும் கொட்டகைகளும் பிரிக்கப்பட்டு வண்டிகளில் ஏற்றப்பட்டன. சாமான் வண்டிகளும் துருப்புகளும் புறப்பட ஆரம்பித்தன.

காலை 7 மணிக்கு தலையில் தொப்பிகளைத் தரித்து கைகளில் துப்பாக்கிகளை ஏந்தி ஏராளமாக சாமான் மூட்டைகளைச் சுமந்துகொண்டு பிரெஞ்சுக்காரர்களின் ஒரு கூட்டம் புறப் படுவதற்குத் தயாராக கொட்டகைகளுக்கு முன்பாக நின்றது. அவர்கள் பரப்பரப்பாக திட்டுதல்களோடு பேசிக்கொண்டிருந் தார்கள்.

கொட்டகைகளில் ஒவ்வொருவரும் உடையணிந்து பெல்ட்டை மாட்டி புறப்படுவதற்கு உத்தரவை எதிர்பார்த்துத் தயாராய் இருந்தார்கள். நோயாளியாக இருந்த சாகாலோவ் என்பவன் முகம் வெளிறி உடல் மெலிந்து கண்களைச் சுற்றி கருப்பு வளையங்கள் தெரிய, பிரயாண உடைகள் அணியாமல் தன்னுடைய இடத்தில் வெறும் கால்களோடு தனியாக அமர்ந்திருந்தான். பலமற்ற

அவனுடைய முகத்தில் அவனுடைய கண்கள் பிரதானமாயிருந்தன. அவனுடைய தோழர்கள் அவனை கவனிக்கவே இல்லை. அவர்களை அவன் கேள்விக் குறியோடு நோக்கினான். அமைதியாகவும் இடைவிடாமலும் அவன் முனகிக் கொண்டிருந்தான். அவனுக்கு வயிற்றுக் கடுப்பு ஏற்பட்டிருந்தது. அதன் காரணமாக அவன் புலம்பியதாகத் தெரியவில்லை. அதற்குப் பதில், எங்கே தன்னைத் தனியாக விட்டுவிட்டுப் போய் விடுவார்களோ என்ற அச்சத்தாலும் கவலையாலுமே அவன் புலம்பியதாகத் தோன்றிற்று.

பீயர் அந்த நோயாளியிடம் சென்று அவனுக்குப் பக்கத்தில் சம்மணம் போட்டு அமர்ந்தார். அவர் தம் இடுப்பைச் சுற்றி ஒரு கயிறு கட்டியிருந்தார். கால்களில் ஜோடுகள் அணிந்திருந்தார். ஒரு பிரெஞ்சுக்காரன் கழற்றி எறிந்து விட்டுப்போன செருப்பின் தோலிலிருந்து காராட்டேவ் அந்த ஜோடுகளைத் தயாரித்திருந்தான்.

''சாகாலோவ், அவர்களெல்லோரும் போகவில்லை என்பது உனக்குத் தெரியும். அவர்கள் இங்கே ஒரு ஆஸ்பத்திரி வைத்திருக்கிறார்கள். எங்கள் எல்லாரையும்விட நீ செளக்கியமாய் இருப்பாய்'' என்று பீயர் கூறினார்.

''ஓ கடவுளே! ஓ எனக்கு இதுவே மரணமாயிருக்கும்! ஓ, கடவுளே'' என்று அவன் பலத்த குரலில் முணுமுணுத்தான்.

''நான் போய் அவர்களிடம் மீண்டும் நேரிடையாகக் கேட்கிறேன்'' என்று பீயர் சொல்லிவிட்டு எழுந்து அந்தக் கொட்டகையின் வாசலுக்குப் போனார்.

பீயர் வாசலை அடைந்ததும் முந்தின நாள் அவருக்கு சுங்கான் கொடுத்த கார்ப்போரல் இரண்டு சிப்பாய்களுடன் அங்கு வந்தான். அந்தக் காரிப்போரலும் சிப்பாய்களும் பிரயாணத்துக்கான உடைகளும் தொப்பிகளும் அணிந்து முதுகில் மூட்டைகளையும் கட்டிக்கொண்டிருந்தார்கள். அந்தக் கோலத்தில் அவர்களது பழக்கமான முகங்களேகூட மாறுதலான தோற்றத்தோடு விளங்கின.

அந்தக் கார்ப்போரல் தனக்கிடப்பட்ட உத்திரவுப்படி கொட்டகையின் கதவை மூடுவதற்கு வந்திருந்தான். அங்கிருக்கும் கைதிகள் வெளியேற்றுவதற்கு முன்னதாக அவர்களை அவன் எண்ணியாகவேண்டும்.

''கார்ப்போரல், அந்த நோயாளி விஷயமாக அவர்கள் என்ன செய்யப்போகிறார்கள்?...'' என்று பீயர் ஆரம்பித்தார்.

பீயர் பேசிக்கொண்டிருக்கும்போதே இந்தக் கார்ப்போரல் தான் அறிந்தவன்தானா அல்லது வேறு யாராவது அந்நியனா என்று

சந்தேகம் கொள்ள ஆரம்பித்தார். ஏனென்றால் அந்த சமயம் அவன் அப்படி மாறிப் போயிருந்தான். தவிரவும், பீயர் பேசிக் கொண்டிருந்தபோது இரண்டு பக்கங்களிலிருந்து திடீரென்று டமாரங்கள் முழங்குவதைக் கேட்டார். பீயரின் வார்த்தைகளைக் கேட்ட கார்ப்போரல் முகம் சுளித்து, ஏதோ அர்த்தமற்ற தூஷணைகளை முணுமுணுத்துக்கொண்டே கதவைத் தடாரென்று மூடினார். கொட்டகைப் பாதி இருட்டாயிற்று. இரு பக்கங் களிலிருந்தும் கேட்ட டமாரங்களின் முழக்கம் அந்த நோயாளியின் புலம்பலை அமுக்கிவிட்டது.

''அதோ...மீண்டும் அதோ...'' என்று பீயர் தமக்குத்தாமே சொல்லிக் கொண்டார். அந்தக் கார்ப்போரலின் மாறிய முகத்தில், அவனது குரலின் தொனியில், அந்த டமாரங்களின் காது செவிடுபடும்படியான ஓசையில் மனிதர்கள் தங்களது விருப்பத்திற்கு விரோதமாகத் தங்களது சகோதர மனிதர்களைக் கொல்லும்படி நிர்ப்பந்திக்கும் அந்த விபரீத பயங்கர சக்தியை இனம் கண்டுகொண்டார் - மரண தண்டனைகளின் நிறைவேற்றத்தின்போது அந்த சக்தியின் பிரதிபலிப்பை அவர் கண்கூடாகப் பார்த்திருக்கிறார். அந்த சக்தியைக் கண்டு அஞ்சுவதோ அல்லது அதனிடமிருந்து தப்பியோட முயற்சிப்பதோ, அதன் கருவிகளாக செயல்படுவோர்களிடம் கெஞ்சுவதோ அல்லது அவர்களிடம் நியாயவாதம் பேசுவதோ பயனற்றதாகும். பீயர் இதை இப்போது அறிவார். ஒருவர் பொறுமையோடு அதை சகிக்கவேண்டும். அவர் மீண்டும் அந்த நோயாளியிடம் செல்லவில்லை. அவனைத் திரும்பிப் பார்க்கவுமில்லை. அதற்குப் பதில் அந்தக் கொட்டகையின் வாசலில் அவர் முகம் சுளித்தவாறு நின்றுகொண்டிருந்தார்.

கதவு திறக்கப்பட்டு கைதிகள் ஆட்டுமந்தை போல நெருக்கியடித்துக் கொண்டு வெளியே வந்தார்கள். பீயர் கூட்டத்தை விலக்கிக்கொண்டு முன்னே சென்றார். எந்தக் காப்டன் தனக்கு எதுவும் செய்வதற்குத் தயாராக இருப்பதாக கார்ப்போரல் உறுதியாகக் கூறினானோ, அந்தக் காப்டனை அணுகினார். அந்தக் காப்டனும் பிரயாண உடைகளிலேயே இருந்தார். பீயர் கார்ப்போரலின் வார்த்தைகளிலும் டமாரங்களின் ஓசையிலும் எதை இனம் கண்டுகொண்டாரோ அதையே காப்டனின் கனிவற்ற முகத்திலும் கண்டார்.

'மேலே செல்லுங்கள், மேலே செல்லுங்கள்!' என்று அந்தக் காப்டன் தம்மைக் கடந்து செல்லும் கைதிகளைக் கடுமையாகக் கோபப்பார்வை பார்த்துக் கொண்டே கூறினார்.

பீயர் தமது முயற்சி பலனளிக்காது என்று தெரிந்தும் அவரிடம் சென்றார்.

'என்ன விஷயம்?' என்று ஒரு கனிவற்றக் குரலில், பீயரை அடையாளம் தெரிந்து கொள்ளாதவர்போல அந்த அதிகாரி கேட்டார்.

பீயர் அவரிடம் நோயாளியைப் பற்றிக் கூறினார்.

'அவன் எப்படியாவது நடந்து வந்துவிடுவான், மேலே செல்லுங்கள், மேலே செல்லுங்கள்', என்று பீயரைப் பார்க்காமலேயே அந்தக் காப்டன் கூறினார்.

'ஆனால் அவன் கொண்டிருக்கிறானே' என்று பீயர் மீண்டும் ஆரம்பித்தார்.

'தயவு செய்யும்...' என்று அந்தக் காப்டன் கோபமாக முகம் சுளித்துக் கத்தினான்.

'டிராம் - டா - டா - டாம், டாம் - டாம்...' என்று அந்த டமாரங்கள் முழங்கின. இந்த விந்தையான சக்திதான் இந்த மனிதர்களைப் பரிபூரணமாக ஆட்டிப் படைத்து வருகிறது என்பதை பீயர் புரிந்துகொண்டார். எனவே, இதற்கு மேலாகப் பேசுவதில் பயனில்லை என்பதையும் அவர் தெரிந்துகொண்டார்.

யுத்தக் கைதிகளில் அதிகாரிகளாய் இருந்தவர்களை சிப்பாய்களிலிருந்து தனியாகப் பிரிந்து முன்னதாக நடக்கும்படி சொன்னார்கள். அதிகாரிகள் சுமார் 30 பேர் இருந்தார்கள். அவர்களில் பீயரும் ஒருவர். சிப்பாய் கைதிகள் சுமார் 300 பேர் இருந்தார்கள்.

மற்ற கொட்டகைகளிலிருந்து வந்த அதிகாரிகள் எல்லாரும் பீயருக்கு அறிமுகமில்லாதவர்களாக இருந்தார்கள். அவர்கள் அவரைவிட நன்றாக உடையணிந்திருந்தார்கள். அவர்கள் அவரையும் அவரது ஜோடுகளையும் அவநம்பிக்கையோடு ஒரு அந்நியரைப் பார்ப்பதுபோல் பார்த்தார்கள். அவருக்குச் சமீபத்தில் ஒரு தடித்த மேஜர் போய்க்கொண்டிந்தார். அவரது முகம் விளறி, உப்பிப்போய் கோபத்தோடு காட்சியளித்தது. அவர் காஜான் மேலங்கி அணிந்து அதைச் சுற்றி ஒரு சவுக்கத்தை இறுக்கமாகக் கட்டியிருந்தார். சகோதரக் கைதிகளின் மதிப்பை அவர் பெற்றிருந்தது தெரிந்தது. அவர் தமது ஒரு கையை மேலங்கியின் மார்பிற்குள் நுழைத்து அதில் புகையிலைப் பையைப் பிடித்திருந்தார். இன்னொரு கையில் தமது சுங்கானை கெட்டியாகப் பிடித்திருந்தார். அவர்மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஒவ்வொருவரையும் பார்த்து முனகிக்கொண்டும், முணுமுணுத்துக் கொண்டுமிருந்தார். ஏனென்றால் தாம் நெருக்கித் தள்ளப்

படுவதாகவும், அவசரப்பட்டுச் செல்வதற்கு இடமில்லாம லிருக்கும் போது அவர்களெல்லாம் அவசரப்படுவதாகவும் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லாமலிருக்கும்போது அவர்க ளெல்லாம் ஆச்சரியப்படுவதாகவும் அவர் நினைத்தார். மெலிந்த குள்ளமான மற்றொரு அதிகாரி இப்போது தங்களை எங்கே அழைத்துச் செல்கிறார்கள் என்பதைப் பற்றியும், அன்றைய தினம் தாங்கள் எவ்வளவு தூரம் நடக்கமுடியும் என்பதைப் பற்றியும் ஊகங்கள் வெளியிட்டவாறு ஒவ்வொருவரிடமும் பேசிக் கொண்டிருந்தார். கம்பளத்தாலான பூட்சுகளும் கமிஷார் உடையும் அணிந்திருந்த ஒரு அதிகாரி இப்பக்கமும் அப்பக்கமுமாக ஓடி மாஸ்கோவின் இடிபாடுகளை உற்று நோக்கி, எவையெல்லாம் எரிந்துபோயின என்று தமக்குத் தென்படுவதையும், அவை ஒவ்வொன்றும் அந்நகரின் எந்தப் பகுதி என்பதையும் உரக்கக் கூறிக்கொண்டிருந்தார். மூன்றாவது அதிகாரி ஒருவர் - அவரது உச்சரிப்பிலிருந்து அவர் போலந்துகாரர் என்பது தெரிந்தது - மாஸ்கோ நகரின் பகுதிகளைப்பற்றி கமிஷார் அதிகாரி கூறியவற்றை மறுத்து அவருடன் வாக்குவாதம் செய்துகொண்டிருந்தார்.

''நீங்கள் எதற்காக வீணாக சர்ச்சை செய்துகொண்டிருக்கிறீர்கள்?'' என்று அந்த மேஜர் கோபமாகக் கேட்டார். ''அது செயின்ட் சிக்கலஸ் கோவிலாய் இருந்தாலென்ன, அல்லது செயின்ட் பிளாஸியஸ் கோவிலாய் இருந்தாலென்ன? அவையெல்லாம் எரிந்துபோய்விட்டதை நீங்களே பார்க்கிறீர்கள். அதோடு அந்த விஷயம் முடிந்துவிட்டது... எதற்காக இப்படி நெருக்கித் தள்ளிக்கொண்டிருக்கிறீர்கள்? ரஸ்தா போதுமானபடி அகலமாக இல்லையா?'' என்று தம்மை நெருக்கவே செய்யாத, தமக்குப் பின்னாலிருந்த ஒரு மனிதரைத் திரும்பிப் பார்த்துவினவினார்.

''ஓ, ஓ, ஓ! அவர்கள் என்ன செய்துவிட்டார்கள் பார்த்தீர்களா?'' என்று எரிந்து கருகிப்போன இடிபாடுகளைப் பார்த்து இங்குமங்குமாகக் கைதிகள் பேசிக்கொண்டது கேட்டது. ''ஆற்றுக்கு அக்கரையிலும், ஜுபாவாவிலும், கிரெம்ளினிலும்... அதோ பாருங்கள்! பாதிகூட மிஞ்சவில்லை. ஆம், நான் முன்னமேயே சொன்னேன் - ஆற்றுக்கப்பால் வீடுகள் பூராவும் அழிந்துவிட்டன என்று. அப்படியேதான் நடந்திருக்கிறது.''

''நல்லது, அவை எரிந்து போய்விட்டதைப் பார்க்கிறீர்கள். பின்னர் அவற்றைப் பற்றிப் பேசி என்ன பயன்?'' என்று அந்த மேஜர் கேட்டார்.

காமோவ்னிக்கி என்னும் இடத்திலுள்ள மாதாக் கோவிலை (மாஸ்கோவில் எரிக்கப்படாமலிருந்த சில பகுதிகளில் இதுவும்

ஒன்று) கடந்து சென்றபோது கைதிகள் அனைவரும் திடீரென்று எதையோ பார்த்துத் திடுக்கிட்டுப் போயினர். அவர்களிடமிருந்து பீதியும் வெறுப்பும் கலந்த குரல்கள் கேட்டன.

''ஆ, துஷ்டர்கள்! காட்டுமிராண்டிகள்! ஆம்; செத்துதான் போனான், செத்துதான் போனான். அப்படித்தான் தெரிகிறது... மேலே எதையோ பூசியிருக்கிறார்கள்?''

இந்தப் பிரலாபக் குரல்கள் எழுவதற்குக் காரணமாக இருந்த அந்தப் பொருள் காணப்பட்ட மாதாக்கோவிலை பீயரும் நெருங்கினார். மாதா கோவிலைச் சுற்றியுள்ள வேலியில் ஏதோ ஒன்று சாத்திவைக்கப்பட்டிருந்தது அவருக்கு மங்கலாகத் தெரிந்தது. தம்மைவிட நன்றாகப் பார்த்த தமது தோழர்கள் சொன்னவற்றிலிருந்து அது வேலியின்மீது நேராக சாத்திவைக்கப்பட்டிருந்த ஒரு மனிதனின் பிணம் என்பதை அவர் அறிந்து கொண்டார். அந்தப் பிணத்தின் முகத்தில் கரி பூசப்பட்டிருந்தது.

''செல்லுங்கள்! அட சைத்தான்...மேலே செல்லுங்கள்! முப்பதாயிரம் பிசாசுகள்!...'' என்று அவர்களுக்குக் காவலாக வந்தவர்கள் திட்ட ஆரம்பித்தனர். உடனே பிரெஞ்சு சிப்பாய்கள் புதிய ஜபர்தஸ்தோடு தங்களது வாட்களைக் கொண்டு, செத்துப்போன மனிதனை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்த கைதிகளை அங்கிருந்து விரட்டினார்கள்.

## 13

### 14

காமோவ்னிக்கிக் குடியிருப்புப் பகுதியின் குறுக்குத் தெருக்கள் வழியாகக் கைதிகள் நடந்து சென்றார்கள். அவர்களைத் தொடர்ந்து அவர்களது பாராக்காரர்கள் மட்டுமே வந்தார்கள். பாராக்காரர்களுக்குப் பின்னால் அவர்களது சாமான் வண்டிகள் வந்தன. ஆனால், அவர்கள் சப்ளை–ஸ்டோர்களை அடைந்தபோது அங்கே முழுவதும் சாமான்கள் நிறைந்த பீரங்கி வண்டிகளையும் தனிப்பட்ட வண்டிகளையும் ஏராளமாகக் கண்டார்கள்.

அவர்களெல்லோரும் முன்னாலிருப்பவர்கள் கடந்து செல்வதற்காக பாலத்துக்கருகில் நின்றார்கள். பாலத்திலிருந்து அவர்கள் பார்த்தபோது ஆற்றின் ஓரமாக ஸ்டோன் பாலத்திற்கு அப்பால் நேயினுடைய துருப்புகள் முடிவற்ற வரிசையில் போய்க்கொண்டிருப்பதை கண்டார்கள். வலது பக்கத்தில், நெஸ்குச்சினிக்கருகில் காலுகா ரஸ்தா திரும்புகிற இடத்தில் துருப்புகளும் வண்டிகளும் தொலைதூரம் வரை வியாபித்து

முடிவேயில்லாமல் சென்றுகொண்டிருப்பதைப் பார்த்தார்கள். இந்தத் துருப்புகள் தான் பாஹார்நையின் படைப் பிரிவுகளாகும். அவை மற்றத் துருப்புகள் எல்லாவற்றையும்விட முன்னதாகப் புறப்பட்டுச் சென்றவைகள். பின்னால், ஆற்றின் ஓரமாக ஸ்டோன் பாலத்திற்கு அப்பால் நேயினுடைய துருப்புகளும் சாமான் வண்டிகளும் காணப்பட்டன.

கைதிகளை காவலுடன் அழைத்துச் செல்லும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருந்த டாவூட்டின் துருப்புகள் கிரிமியன் பாலத்தை கடந்து சென்றுகொண்டிருந்தன. அவற்றில் சில ஏற்கெனவே காலுகா ரஸ்தாவில் போய்க்கொண்டிருந்தன. ஆனால், பாஹார் நையின் சாமான் வண்டிகளின் பிற்பகுதி இன்னும் மாஸ்கோவிலிருந்து கிளம்பாத அளவுக்கு அவை நீண்டு வியாபித்திருந்தன. அந்த வண்டிகள் காலுகாவை அடைந்த போது ஏற்கெனவே நேய் ராணுவத்தின் முன்னணிப் படைப் பிரிவு மகா ஆர்டின்கா தெருவிலிருந்து வெளிப்பட்டுக்கொண்டிருந்தது.

கிரிமின் பாலத்தைக் கடந்ததும், கைதிகள் சில எட்டுகள் தூரம் முன்னேறி நின்றார்கள். பிறகு மீண்டும் முன்னேறினார்கள். எல்லா திசைகளிலிருந்தும் வண்டிகளும் மனிதர்களும் மென்மேலும் கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்து நெருக்கிக்கொண்டிருந்தார்கள். அந்த பாலத்திலிருந்து காலுகா ரஸ்தா சில நூறு எட்டுகள் தூரமே இருக்கும். அதைக் கடப்பதற்கே அவர்களுக்கு ஒரு மணி நேரத்திற்கு மேலாயிற்று. அதைக் கடந்த பிறகு அவர்கள் டிரான்ஸ்மோஸ்க்வா பகுதியும் காலுகா ரஸ்தாவும் சந்திக்கும் சதுக்கத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே கைதிகளின் நெரிசல் மிக அதிகமாக இருந்ததால், அந்த ரஸ்தா – சந்திப்பிலேயே அவர்கள் சில மணி நேரம் நின்றுகொண்டிருக்க வேண்டியதாயிற்று. எல்லாப் பக்கங்களிலிருந்தும் கடல் அலைகளின் இரைச்சல்போல வண்டிச் சக்கரங்கள் கடகடத்துச் செல்லும் ஒலியும், காலடிகளின் ஓசையும், கோபமும் தூஷணைகளும் நிரம்பிய இடையறாத கூச்சல்களும் கேட்டன. தீய்ந்து கருகிப்போன ஒரு வீட்டுச் சுவற்றின்மீது பீயர் சாய்ந்துகொண்டு அந்த சப்தங்களைக் கேட்டுக்கொண்டிருந்தார். அவை அவருக்குத் தாம் ஏற்கெனவே கேட்ட டமாரங்களின் ஒலிகளைப்போல் தோன்றின.

அதிகாரிகளான பல கைதிகள் தங்கள் முன்னாலுள்ள காட்சியை நன்கு பார்ப்பதற்காக, பீயர் சாய்ந்துகொண்டிருந்த பாதி எரிந்துபோன அந்த வீட்டின் சுவற்றின்மீது ஏறி நின்றார்கள்.

''என்ன கூட்டம்! அந்தக் கூட்டத்தைப் பாருங்கள்!... பீரங்கிகள் மீதுகூட அவர்கள் சாமான்களை ஏற்றியிருக்கிறார்கள்! அதோ, அங்கே பாருங்கள், அவையெல்லாம் விலையுயர்ந்த மென் ரோமச்

சாமான்கள்!'' என்று அதிகாரிகளான அந்தக் கைதிகள் ஆவலாதியோடு கூறினார்கள். ''அயோக்கியர்கள் எப்படிக் கொள்ளையடித்திருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள்... அதோ அங்கே! அந்த வண்டிக்குப் பின்னால் ஒருவன் என்ன வைத்திருக்கிறான் என்று பாருங்கள்... ஏன், அவைகளெல்லாம் எங்கோ தேவாலயத்திலிருந்து திருடிவந்த சாமான்கள். அட கடவுளே!... போக்கிரிகள்!... அதோ அவன் எவ்வளவு பெரிய மூட்டையைச் சுமந்து கொண்டு நடக்க முடியாமல் நடந்து வருகிறான் என்று பாருங்கள்! ஆண்டவனே, அவர்கள் அந்த வண்டிகளைக்கூட அல்லவா அபகரித்துக் கொண்டிருக்கிறார்கள்!... அதோ அவன் அந்தப் பெட்டிகளின்மீது உட்கார்ந்திருப்பதைப் பாருங்கள்... கடவுளே! அவர்கள் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது.''

அதுதான் சரி, நன்றாக அவன் மூஞ்சியில் குத்து—மூஞ்சியில் குத்து! இம்மாதிரி இருந்தால் சாயங்காலத்திற்குள் இங்கிருந்து நாம் போக முடியாது. அதோ, அதோ அங்கே பாருங்கள்... அவை நெப்போலியனுடையதாக இருக்கவேண்டும். எப்பேர்ப்பட்ட குதிரைகள்! கிரீடத்தோடு கூடிய சித்திர எழுத்துக்கள்! அது ஒரு நடமாடும் வீடுபோலிருக்கிறது...அந்தப் பயல் தன் பையை கீழே போட்டுவிட்டான். ஆனால், அதை அவன் பார்க்கவில்லை. அதோ அவர்கள் மீண்டும் சண்டைபோட ஆரம்பித்துவிட்டார்கள்... குழந்தையோடு ஒரு பெண் தென்படுகிறாள். அவளது தோற்றம் அப்படி ஒன்றும் மோசமில்லை! ஆம், நான் துணிந்து கூறுவேன் அப்படித்தான் அவர்கள் உங்களை விடப்போகிறார்கள்... அதோ பாருங்கள் அதற்கு முடிவே இல்லைபோலிருக்கிறது. அட கடவுளே, அவர்கள் ரஷ்ய சிறுக்கிகள்தான்! வண்டிகளில் அவர்கள் எவ்வளவு சொகுசாக உட்கார்ந்திருக்கிறார்கள் என்று பாருங்கள்!''

காமோவ்னிக்கி மாதாக் கோவிலுக்கருகில் நடந்தது போலவே இப்போது கைதிகளுக்கிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது? எதையோ காண்பதற்காக அவர்கள் ரஸ்தாவில் முண்டியடித்துச் சென்றார்கள். பீயர் எல்லாரையும்விட உயரமாக இருந்ததால் அப்படி அவர்களது ஆவலைத் தூண்டிய விஷயம் என்ன என்பதைச் சுலபமாகப் பார்த்தார். வெடி மருந்து வண்டிகளுக்கு மத்தியில் சென்றுகொண்டிருந்த மூன்று வண்டிகளில் பெண்கள் மிக நெருக்கமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் முகங்களில் பவுடர் பூசிக்கொண்டு, பகட்டான வண்ணங்கள் கொண்ட உடைகளணிந்திருந்தனர். அவர்கள் கீச்சுக் குரல்களில் எதையோ இரைந்து கொண்டிருந்தனர்.

பீயர் அந்த மர்மமான சக்தியை உணர்ந்து கொண்டது முதல் வேடிக்கைக்காக முகத்தில் கரி பூசிவைக்கப்பட்டிருந்த அந்தப்

பிணமோ, விரைந்தேகிச் சென்றுகொண்டிருந்த அந்தப் பெண்களோ, மாஸ்கோவின் எரிந்துபோன இடிபாடுகளோ அல்லது வேறு எதுவுமோ அவருக்கு ஆச்சரியமாகவோ அல்லது பயங்கரமாகவோ தோன்றவில்லை. இப்போது அவர் பார்த்தவையெல்லாம் அவரிடம் எந்தவிதமான பிரதிபலிப்பையும் ஏற்படுத்தவில்லை - அவருடைய உள்ளம் ஒரு கடுமையான போராட்டத்திற்குத் தயாராகிக்கொண்டிருப்பது போலவும், அந்நிலையில் அதை பலவீனப்படுத்தும் எதையும் தம் மனதில் பதித்துக்கொள்ள விரும்பாதது வந்துகொண்டிருப்பது தெரிந்தது.

பெண்களின் வண்டிகள் போய்விட்டன. அவற்றிற்குப் பின்னே மேலும் வண்டிகள், சிப்பாய்கள், சாமான் வண்டிகள், சிப்பாய்கள், பீரங்கி வண்டிகள், பிரயாண வண்டிகள், சிப்பாய்கள், வெடிமருந்து வண்டிகள், சிப்பாய்கள், அவ்வப்போது பெண்கள் என்று வரிசை வரிசையாக வந்துகொண்டிருப்பது தெரிந்தது.

பீயர் மக்களைத் தனிப்பட்ட நபர்களாகப் பார்க்கவில்லை. அதற்குப் பதில் அவர்களது செய்கைகளை மட்டுமே கவனித்தார்.

இந்த மக்களும் குதிரைகளும் ஏதோ கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்தியால் உந்தப்பட்டு வந்தவைகளாகத் தோன்றின. பீயர் அவர்களைக் கவனித்துக்கொண்டிருந்த ஒரு மணி நேரமாக அவர்களெல்லோரும் பல்வேறு தெருக்களிலிருந்து வந்து குவிந்து அங்கிருந்து விரைவில் போய்விடவேண்டும் என்ற ஒரே நோக்கம் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்கள் ஒருவரையொருவர் நெருக்கித் தள்ளிக்கொண்டிருந்தார்கள், கோபம் கொண்டு சண்டையிட்டுக்கொள்ள ஆரம்பித்தார்கள், வெள்ளைப் பற்கள் மினு மினுத்தன, புருவங்கள் நெரிந்தன, இங்குமங்குமாக ஒரேவித வசவுச் சொற்கள் பொழிந்தன, அன்று காலையில் டமாரங்கள் ஒலித்தபோது கார்ப்போரலின் முகத்தில் எத்தகைய உணர்ச்சியை பீயர் பார்த்தாரோ அதே வீறாப்பான உறுதியும் கொடுமையும் நிறைந்த உணர்ச்சி அவர்களெல்லோர் முகங்களிலும் காணப்பட்டது.

கைதிகளுக்குக் காவலாக வந்த துருப்புகளின் அதிகாரி தமது ஆட்களை ஒன்று திரட்டி, கூச்சலிட்டும் சண்டை போட்டும் சாமான் வண்டிகளுக்குக்கூட வழி ஏற்படுத்திக்கொண்டு சென்று, கைதிகளைச் சுற்றிச் சூழ்ந்து அவர்களைக் காலூகா ரஸ்தாவுக்குக் கொண்டுவந்து சேர்ப்பதற்குள் சாயங்காலம் ஆகிவிட்டது.

அவர்கள் அங்கிருந்து வெகு வேகமாக அணிவகுத்துச் சென்றார்கள். எங்கும் ஓய்வு எடுத்துக்கொள்ளவில்லை. சூரியன் அஸ்தமனமாகப் போகும் சமயத்தில்தான் அவர்கள் ஒரு இடத்தில் தங்கினார்கள். சாமான் வண்டிகளை ஒன்றையொன்று ஒட்டி

நெருக்கமாக நிறுத்தி வைத்தார்கள். பிறகு அன்றைய இரவு ஓய்வு எடுத்துக்கொள்வதற்காக தயாரிப்புகள் செய்ய ஆரம்பித்தார்கள். அவர்களனைவரும் கோபமும் அதிருப்தியும் கொண்டவர்களாகக் காணப்பட்டார்கள். திட்டுதல்களும் சபித்தல்களும், சச்சரவுகளும் எல்லாத் திசைகளிலும் வெகுநேரம்வரை கேட்டுக்கொண்டிருந்தன. காவல் துருப்புகளுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த ஒரு வண்டி இன்னொரு வண்டியின்மீது மோதி தனது ஏர்க்காலால் அதில் ஒரு துளை போட்டுவிட்டது. வெவ்வேறு திசைகளிலிருந்தும் பல சிப்பாய்கள் அந்த வண்டியை நோக்கி ஓடி வந்தார்கள். சிலர் அந்தக் குதிரைகளின் தலையில் அடித்து ஒரு பக்கமாகத் திருப்பி விட்டார்கள். மற்றவர்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டார்கள். ஒரு ஜெர்மானியனுக்குத் தலையில் வாளினால் கடுமையான காயம் ஏற்பட்டிருந்ததை பியர் கண்டார்.

அந்த இலையுதிர்காலத்து குளிர் இரவில் அவர்கள் வயல்களில் தங்கியிருந்தார்கள். பிரயாண ஆரம்பத்தில் அவசர அவசரமாக மேலே செல்ல வேண்டுமென்ற ஒரு துடிப்பு அவர்களுக்கு இருந்தது. ஆனால், இப்போது இவ்வளவு அவசரப்பட்டிருக்க வேண்டியதில்லை என்ற மகிழ்ச்சியற்ற ஒரே மாதிரியான உணர்வு அவர்களனைவருக்குமே ஏற்பட்டிருந்ததுபோல் காணப்பட்டது? அவர்கள் ஒரு இடத்தில் தங்கியபோது, தாங்கள் எங்கே செல்கிறோம் என்பது இன்னும் தங்களுக்கே தெரியாது என்பதையும், இந்தப் பிரயாணத்தில் மிகுந்த வேதனையும், கஷ்டங்களும் தங்களை எதிர் நோக்கியுள்ளன என்பதையும் புரிந்து கொண்டார்கள்.

இந்தத் தங்கலின்போது பாராக்காரர்கள் கைதிகளை ஆரம்பத்தில் நடத்தியதைவிட மோசமாக நடத்தினார்கள். இந்த இடத்தில்தான் அவர்களுக்கு முதன் முதலாக குதிரை மாமிசம் தரப்பட்டது.

மேலே அதிகாரிகளிலிருந்து கீழே சிப்பாய்கள்வரை எல்லாரும் கைதிகள் ஒவ்வொருவரிடமும் தங்களுக்குத் தனிப்பட்ட துவேஷம் இருப்பதுபோல் காண்பித்துக்கொண்டார்கள். இது அவர்கள் முன்னர் நடந்து கொண்ட நட்புறவான முறைக்கு முற்றிலும் முரணானதாகவும் சற்றும் எதிர்பாராததாகவுமிருந்தது.

இந்த துவேஷம் கைதிகளின் பெயர் பட்டியலைப் படித்துக் கணக்கிட்டபோது மேலும் அதிகரித்தது. ஏனென்றால் மாஸ்கோவை விட்டுப் புறப்பட்ட அவசர கோலத்தில், வயிற்றுவலி என்று பாசாங்கு செய்து ஒரு ருஷ்ய சிப்பாய் தப்பியோடிவிட்டான் என்பது இப்போது கண்டுபிடிக்கப்பட்டது. ஒரு ருஷ்ய சிப்பாய் ரஸ்தாவை விட்டு விலகிச் சென்றான் என்பதற்காக அவனை ஒரு பிரரெஞ்சுக்காரன் குரூரமாக அடித்ததை பியர் பார்த்தார். மேலும்,

ருஷ்ய சிப்பாய் தப்பியோடிவிட்டதற்காக ஒரு சின்ன அதிகாரியை ராணுவ நீதிமன்றத்தின் முன் விசாரணைக்குக் கொண்டுவரப் போவதாக தமது நண்பரான கேப்டன் மிரட்டியதையும் பீயர் கேட்டார். அந்தக் கைதி நோய்வாய்ப் பட்டிருந்தானென்றும் அவனால் நடக்க முடியாமலிருந்ததென்றும் சின்ன அதிகாரி சமாதானம் கூறினார். அம்மாதிரி நடக்க முடியாதவர்களைச் சுட்டுவிடவேண்டும் என்பதுதான் உத்திரவு என்று கேப்டன் அதற்குப் பதில் கூறினார். மரண தண்டனைகள் நிறைவேற்றப்பட்ட காலத்தில் தம்மை நசுக்கிய பயங்கர சக்தி தமது சிறைவாசத்தின்போது ஒன்றும் செய்யாமல் இப்போது மீண்டும் தம்மைப் பற்றிக் கொண்டதை அவர் உணர்ந்தார். அது பயங்கரமாக இருந்தது. ஆனால், அந்த பயங்கர சக்தி எந்த அளவுக்குத் தம்மை நசுக்க முயற்சி செய்ததோ அந்த அளவுக்கு அதற்கு சம்பந்தமில்லாமல், ஒரு வாழ்க்கையின் சக்தி தம் உள்ளத்தில் வளர்ந்து வலுப்பெற்று வருவதை அவர் உணர்ந்தார்.

அவர் ரைதானிய சூப்பையும் குதிரை மாமிசத்தையும் இரவு உணவாக அருந்திய பிறகு தமது தோழர்களுடன் அளவளாவி உரையாடிக்கொண்டிருந்தார்.

பீயரோ அவருடன் பேசிக்கொண்டிருந்தவர்களோ தாங்கள் மாஸ்கோவில் கண்டவற்றைப் பற்றியோ, பிரெஞ்சுக்காரர்கள் தங்களை மூர்க்கத்தனமாக நடத்தியது பற்றியோ அல்லது தங்களைச் சுடும்படி வந்துள்ள உத்தரவை தங்களிடமேயே அறிவித்தது பற்றியோ ஒன்றும் பேசிக்கொள்ளவில்லை. தங்களது நிலைமை மோசமடைந்து வருவதற்கு எதிர் பிரதிபலிப்பாக அவர்களனை வரும் உற்சாகமாகவும் மகிழ்ச்சியோடும் காணப்பட்டனர். அவர்கள் தங்கள் தங்கள் சொந்த அனுபவங்களைப் பற்றியும், யுத்தத்தின்போது தாங்கள் கண்ட வேடிக்கைகள் பற்றியும் பேசிக்கொண்டனர். ஆனால், இப்போதைய நிலைமை பற்றி எதுவும் பேசாமல் தவிர்த்தனர்.

ஆதவன் அஸ்தமனமாகி வெகு நேரம் ஆயிற்று. வானத்தில் இங்கு மங்குமாக நட்சத்திரங்கள் பிரகாசித்துக்கொண்டிருந்தன. அப்போதுதான் எழுந்துகொண்டிருந்த பூரணச் சந்திரனின் செந்தணல் போன்ற ஒளிக் கீற்றுகள் அடிவானத்துக்கு மேலே படர்ந்துகொண்டிருந்தன. அந்தப் பெரிய சிவப்புப் பந்து சாம்பல் வர்ண பனி மூட்டத்தில் விசித்திரமாகக் காணப்பட்டது. அதன் வெளிச்சம் வரவர அதிகரித்தது. மாலை நேரம் முடிந்து கொண்டிருந்தது. ஆனால், இன்னும் இரவு வரவில்லை. பீயர் எழுந்து தமது புதிய தோழர்களை விட்டுவிட்டு ரஸ்தாவின் மறுபக்கத்திற்குச் செல்வதற்கு கணப்பு மூட்டங்களிடையே நடந்து

போனார். அங்கேதான் சாதாரண சிப்பாய்களை வைத்திருப்பதாகச் சொன்னார்கள். அவர்களிடம் பேசுவதற்கு அவர் விரும்பினார். ஆனால், ரஸ்தாவில் ஒரு பிரெஞ்சுப் பாராக்காரன் அவரைத் தடுத்துநிறுத்தித் திரும்பிப் போகும்படி உத்தரவிட்டான்.

பியர் திரும்பிச் சென்றார். ஆனால், கணப்பு மூட்டங்களுக்குப் பக்கத்திலிருந்த தமது தோழர்களிடம் அவர் செல்லவில்லை. அதற்குப் பதில் அவிழ்த்துவிடப்பட்டிருந்த ஒரு வண்டியை நோக்கிச் சென்றார். அங்கே யாரும் காணப்படவில்லை. அந்த இடத்தில் வண்டிச்சக்கரத்திற்குப் பக்கத்தில் ஈரத் தரையில் கால்களை சம்மணம் போட்டுக்கொண்டு உட்கார்ந்தார். தலையைத் தொங்கப் போட்டவண்ணம் சிந்தனையில் ஆழ்ந்துபோய் வெகு நேரம்வரை ஆடாமல் அசையாமல் இருந்தார். பிறகு திடீரென்று தமக்கே உரிய முறையில் கள்ளங்கபடமற்று வாய்விட்டு 'கடகட'வென்று சிரித்தார். அவரது பலத்த சிரிப்பைக் கேட்டு வெவ்வேறு பக்கங்களில் இருந்தவர்களும் அவர் பக்கமாகத் திரும்பி அவர் ஏன் இப்படித் தமக்குத் தாமே சிரித்துக்கொள்கிறார் என்று வியப்போடு பார்த்தனர்.

''ஹா - ஹா - ஹா!'' பியர் சிரித்தார். பின்வருமாறு தமக்குத்தாமே சப்தம் போட்டு சொல்லிக்கொண்டார்: 'சிப்பாய் என்னை அங்கே போகவிடவில்லை. அவர்கள் என்னை கொண்டுபோய் அடைத்தனர். என்னைச் சிறைப்படுத்தினர். என்ன, என்னையா? என்னையா? எனது அழியாத ஆத்மாவையா? ஹா - ஹா - ஹா! ஹா - ஹா - ஹா!...' கண்களில் கண்ணீர் துளிர்க்கும்வரை அவர் சிரித்தார்.

இந்த விநோதமான பெரிய ஆசாமி ஏன் தமக்குத்தாமே சிரித்துக்கொள்கிறார் என்பதைக் காண்பதற்காக ஒரு மனிதன் எழுந்து வந்தான். பியர் சிரிப்பை நிறுத்தி எழுந்தார். கேள்விக் குறியோடு வந்த அந்த மனிதனிடமிருந்து தூரமாகப் போய் சுற்றுமுற்றும் பார்த்தார்.

சற்று முன்னர் வரை கணப்பு மூட்ட ஒலிகளாலும் ஏராளமான மனிதக் குரல்களாலும் எதிரொலித்துக்கொண்டிருந்த அந்த பிரம்மாண்டமான, முடிவற்ற முகாமில் இப்போது அமைதி நிலவ ஆரம்பித்தது. சிவந்த நெகிழ நெருப்புகள் படிப்படியாக வெளிறி அணைய ஆரம்பித்தன. மேலே வானத்தில் பூரணச் சந்திரன் பொலிந்துகொண்டிருந்தான். முகாமுக்கு அப்பால், இதற்கு முன் தெரியாமலிருந்த காடுகளும் வயல்களும் இப்போது தூரத்தில் தெரிந்தன. இன்னும் தொலைவில், அந்தக் காடுகளுக்கும் வயல்களுக்கும் அப்பால், பிரகாசமாக ஒளிர்விடும் எல்லையற்ற தூரம் யாரையும் மயக்குவதாக இருந்தது. பியர் வானத்தை

நோக்கினார். வெகு தூரத்திற்கப்பால் கண் சிமிட்டிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்களைப் பார்த்தார். ''அவையெல்லாம் நான்தான். அவையெல்லாமே என்னுள் இருக்கின்றன. எல்லாமே நான்தான்'' என்று பீயர் நினைத்தார். ''அவையெல்லாவற்றையும் பிடித்து பலகைகளால் அடைக்கப்பட்ட ஒரு கொட்டகையில் போட்டு மூடிவிட்டார்கள்!'' அவர் புன்னகை கொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சென்று தமது தோழர்களுக்குப் பக்கத்தில் தூங்குவதற்காகக் கீழே படுத்தார்.

## 13

## 15

அக்டோபரின் ஆரம்ப நாட்களில் சமாதானம் செய்து கொள்வதற்காக நெப்போலியனிடமிருந்து ஒரு கடிதத்தோடு மற்றொரு தூதர் குட்டுஜோவிடம் வந்தார். அந்த சமயம் நெப்போலியன் காலுகா ரஸ்தாவில் குட்டுஜோவின் முகாமுக்கு சமீபத்திலேயே இருந்தபோதிலும் அந்தக் கடிதம் தவறாக மாஸ்கோ தேதியிட்டிருந்தது. முன்பு லாரிங்டன் கொண்டு வந்த கடிதத்திற்கு எப்படிப் பதிலளித்தாரோ அப்படியோ இப்போதும் சமாதானம் செய்து கொள்ளும் பிரச்சினைக்கே இடமில்லை என்று குட்டுஜோவ் பதிலளித்தார்.

இதற்குப் பிறகு சீக்கிரமே, டாராவ்டினோவுக்கு இடது பக்கத்தில் செயல்பட்டுக்கொண்டிருந்த டாராகாவினுடைய கொரில்லாப் படையிடமிருந்து ஒரு செய்தி கிடைத்தது. பீரெளசியருடைய படைப் பிரிவு பார்மைன்ஸ்க் என்னுமிடத்தில் காணப் பட்டதாகவும், அதுவும் ஏனைய பிரெஞ்சு ராணுவத்திலிருந்து தனித்துக் காணப்பட்டதாகவும், எனவே அதைச் சுலபமாக அழித்துவிடலாம் என்றும் அந்தச் செய்தி கூறிற்று. சிப்பாய்களும் அதிகாரிகளும் உடனே நடவடிக்கையில் இறங்க வேண்டுமென்று மீண்டும் கோரினார். ராணுவ தலைமை பீடத்திலிருந்த ஜெனரல்களும் டாராவ்டினோவில் சுலபமாகக் கிட்டிய வெற்றி நினைவால் தூண்டப்பட்டு, டாராகாவின் யோசனையை நிறைவேற்றும்படி வற்புறுத்தினர். ஆனால், குட்டுஜோவோ எத்தகைய தாக்குதலுக்குமே அவசியமில்லை என்று கருதினார். கடைசியில் தவிர்க்க முடியாதபடி அவர்களுக்குள் ஒரு சமரசம் ஏற்பட்டது; அதன்படி பீரெளசியரைத் தாக்குவதற்கு பார் மைன்ஸ்க்குக்கு ஒரு சிறு படைப் பிரிவு அனுப்பி வைக்கப்பட்டது.

ஒரு விந்தையான உடனிகழ்ச்சியாக, மிகவும் கஷ்டமும் முக்கியமானதுமான இந்தப் பணி டாக்டூராவிடம் ஒப்படைக்கப்

பட்டது. டாக்டூராவ் அடக்கமும் பணிவுமுள்ளவர், உறுதியும் தெளிவுமற்றவர் என்று கருதப்படுபவர். அவர் போர் திட்டங்கள் தயாரித்துக்கொண்டிருந்தார் என்றோ, படைப் பிரிவுகளின் முன்னால் இங்குமங்குமாக ஓடியாடிக் கொண்டிருந்தார் என்றோ, பீரங்கிகள்மீது சிலுவைக் குறிகளைப் பொழிந்து கொண்டிருந்தார் என்றோ யாரும் அவரைப்பற்றி நம்மிடம் வர்ணனை செய்யவில்லை—எனினும் ருஷ்ய –பிரெஞ்சு யுத்தங்களில் ஆஸ்டர்லிட்ஜிலிருந்து *1813* - ம் ஆண்டுவரை எங்கெல்லாம் நிலைமை கடுமையாக இருந்ததோ அங்கெல்லாம் அவர் சேனைகள் நடத்திச் சென்றதைக் காண்கிறோம். ஆஸ்டர்லிட்ஜில் எல்லோரும் பின்வாங்கி ஓடிக்கொண்டிருந்தனர்; பலர் செத்துக் கொண்டி ருந்தனர்; பக்கவாட்டில் ஒரு ஜெனரல்கூட காணப் படவில்லை. அப்போது டாக்டூராவ்தான் ஆகெஸ்ட் அணையில் கடைசிவரை நிலைத்து இருந்து, படைகளை அணி திரட்டி முடிந்தவரை பாதுகாத்து நின்றார். ஜுரத்தால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த நிலையிலும் அவர் நெப்போலியனின் முழு ராணுவத்தையும் எதிர்த்து ஸ்மாலென்ஸ்க் நகரைப் பாதுகாப்பதற்காக இருபதாயிரம் பேர்களுடன் சென்றார். ஸ்மாலென்ஸ்க்கில், மாலக்கோவ் வாயிலில், ஜுர வேகத்தில் சற்று கண்ணயர்ந்தாரோ இல்லையோ அதற்குள் நகரம் பீரங்கியால் தாக்கப்படும் சப்தம் கேட்டு விழித்துக்கொண்டார் – அன்றைய தினம் பூராவும் ஸ்மாலென்ஸ்க் எதிரியின் தாக்குதலை சமாளித்து நின்றது. பாராடினோ போரில் பாக்ரேஷன் கொல்லப்பட்டபோது, நமது இடது பக்கவாட்டு ஆட்களில் பத்தில் ஒன்பது பங்குபேர் செத்து மடிந்துவிட்டபோது, எஞ்சியிருந்தவர்கள் மீதும் பிரெஞ்சுக்காரர்கள் தங்களது பீரங்கிப் படையை முழு பலத்தோடு திருப்பிவிட்டபோது அங்கு அனுப்பப்பட்டவர் இதே உறுதியும் தெளிவுமற்ற டாக்டூராவ்தான்– அதிலும் குட்டுஜோவ் முதலில் அங்கு வேறு யாரையோ அனுப்பி வைத்தார்; பிறகு அவசர அவசரமாக அந்தத் தவறைத் திருத்திக் கொண்டார். அடக்கமும் பணிவுமுள்ள டாக்டூராவ்தான் அங்கு சென்றார். பாராடினோவும் ருஷ்ய ராணுவத்திற்கு மிகுந்த புகழை ஈட்டித் தந்தது. எத்தனையோ வீரர்களைப்பற்றி நம்மிடம் சொற்பெருக்கும் கவிதை மழையும் பொழியப்பட்டுள்ளன. ஆனால், டாக்டூராவைப் பற்றித் தப்பித் தவறியும் ஒரு வார்த்தைகூட கூறப்பட்டதில்லை.

இப்போது பார்மென்ஸ்க்குக்கும் அங்கிருந்து மாலோ - யாரோஸ்லாவெட்ஸுக்கும் அனுப்பப்பட்டவர் கூட டாக்டு ராவ்தான். இங்குதான் பிரெஞ்சுக்காரர்களுடன் கடைசிச் சண்டை நடைபெற்று, பிரெஞ்சு ராணுவம் சிதைந்து சின்னபின்னமாக

ஆரம்பித்தது. அந்தப் போர் நடவடிக்கையில் சம்பந்தப்பட்டவர்கள் என்று பல வீரர்களும் மேதைகளும் நம்மிடம் அறிமுகப்படுத்தப் படுகிறார்கள். ஆனால், டாக்டூரோவைப் பற்றிப் பேச்சு மூச்சில்லை அல்லது ஒப்புக்கு ஒன்றிரண்டு கூறப்படுகிறது. அதுவும் சந்தேகத்துக்கிடமான முறையில் கூறப்படுகிறது. டாக்டூரோவைப் பற்றி சாதிக்கப்படும் இந்த மௌனமே அவரது மதிப்புக்கு, தலைமைக்கு ஒரு தெட்டத் தெளிவான சான்றாக விளங்குகிறது.

இயந்திரம் எப்படி இயங்குகிறது என்பதை அறியாத ஒருவன், ஒரு சிறாய் தற்செயலாக அதில் விழ, அப்படி விழுந்த அந்த சிறாய் இங்குமங்குமாக அல்லாடி இயந்திரத்தின் போக்கைத் தடைப்படுத்த, அதைப் பார்த்து இந்த சிறாய்தான் இயந்திரத்தின் மிக முக்கியமான உறுப்பு என்று நினைப்பது இயல்பு. இயந்திரத்தின் அமைப்புத் தெரியாத அவன், எல்லாவற்றையும் இணைத்து அமைதியாகச் சுழன்றுகொண்டிருக்கும் ஒரு சின்ன பல் சக்கரம்தான் அந்த இயந்திரத்தின் மிக முக்கிய உறுப்பே தவிர, இயந்திரத்திற்கு ஊறு செய்து அதன் ஓட்டத்தைத் தடைப்படுத்தும் சிறாய் அல்ல என்பதை நினைத்துப் பார்க்க முடியாது.

அக்டோபர் 10 - ம் தேதி டாக்டூராவ் பார்மைன்ஸ்க்குக்குப் பாதி தூரத்தில் அரிஸ்டோவோ என்னும் கிராமத்தில் தங்கி, தமக்குத் தரப்பட்ட உத்தரவை விசுவாசத்தோடு நிறைவேற்றத் தயார் செய்துகொண்டிருந்தார். அப்போது பிரெஞ்சு ராணுவம் முழுவதும், பீதியுற்ற நிலையில் போர் புரிவதற்காக முராட்டின் வியூகத்தை அடைந்தது; ஆனால், திடீரென்று எவ்விதக் காரணமுமில்லாமல் இடது பக்கம் திரும்பி புதிய காலுகா ரஸ்தா நோக்கித் திரும்பி பார்மைன்ஸ்க்குக்குள் பிரவேசிக்க ஆரம்பித்தது. அதுவரை அங்கு பீரௌசியர் மட்டும்தான் இருந்தார். அந்த சமயம் டாக்டூராவின் தலைமையின்கீழ் டோரகாவின் படைப்பிரிவைத் தவிர, பிக்னர், செஸ்லாவின் ஆகியோரது இரண்டு சிறிய கொரில்லாப் படைப் பிரிவுகளும் இருந்தன.

அக்டோபர் 11 - ம் தேதி சாயங்காலம் செஸ்லாவின் தாம் கைது செய்த ஒரு பிரெஞ்சு காப்பாளர்படை வீரனுடன் அரிஸ்டோவோ தலைமைக் காரியாலயத்துக்கு வந்து சேர்ந்தார். அன்றைய தினம் பார்மைன்ஸ்க்குக்குள் பிரவேசித்த துருப்புகள் முழு சைன்யத்தின் முன்னணிப் படை என்றும், நெப்போலியன் அங்குதான் இருக்கிறார் என்றும், நான்கு தினங்களுக்கு முன்னர் பிரெஞ்சு ராணுவம் பூராவும் மாஸ்கோவை விட்டுக் கிளம்பிவிட்டது என்றும் அந்தக் கைதி கூறினான். அதே தினம் மாலை போரோவ்ஸ்கிலிருந்து வந்த ஒரு வீட்டு அடிமை தான் ஒரு பெரிய ராணுவம் நகருக்குள் நுழைந்ததைப் பார்த்ததாகக் கூறினான். டாக்டூராவ் படைப்பிரிவைச்

சேர்ந்த சில கோசாக்குகளும் போரோவ்ஸ்க் செல்லும் ரஸ்தாவில் பிரெஞ்சு காப்பாளர் படைகள் அணிவகுத்துச் சென்று கொண்டிருந்ததைத் தாங்கள் பார்த்ததாகக் கூறினார்கள். இந்தத் தகவல்கள் எல்லாவற்றிலுமிருந்தும் ஒரு விஷயம் தெளிவாகத் தெரிந்தது. அதாவது அவர்கள் ஒரு படைப் பிரிவைத்தான் எதிர் நோக்க வேண்டியிருக்கும் என்று எதிர் பார்க்கப்பட்டதற்கு மாறாக, மாஸ்கோவிலிருந்து சற்றும் எதிர்பாராத திசையில் அதாவது காலூகா ரஸ்தா வழியாகப் புறப்பட்டு வந்த முழு பிரெஞ்சு ராணுவமே இப்போது அவர்கள் முன்னால் இருந்தது. டாக்டூராவுக்குத் தற்சமயம் என்ன செய்வது என்று தெரியாததால், அவர் எந்த நடவடிக்கை எடுக்கவும் தயாராக இல்லை. பார்மைன்ஸ்க்கைத் தாக்கும்படி அவருக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது என்பது உண்மைதான். ஆனால், அந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டபோது பார்மைன்ஸ்க்கில் பீரெளசியர் மட்டும்தான் இருந்தார்; இப்போதோ பிரெஞ்சு ராணுவம் முழுவதுமே அங்கிருந்தது. எர்மோலாவ் அப்போதைய நிலையை அனுசரித்து உசிதப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று விரும்பினார். ஆனால், டாக்டூராவ் குட்டுஜோவிடமிருந்து உத்தரவு வரவேண்டுமென்று வற்புறுத்தினார். இதன்பேரில் ராணுவ தலைமைப் பீடத்திற்கு செய்தி அனுப்புவது என்று முடிவாயிற்று.

இதற்காக ஒரு தகுதி வாய்ந்த அதிகாரி தெரிந்தெடுக்கப்பட்டார். அவர் பெயர் பால்காவைடினோவ். அவர் எல்லா விஷயங்களைப் பற்றியும் ராணுவ தலைமைப் பீடத்துக்கு வாய்மூலமாக எடுத்துக் கூறுவதோடு மட்டுமின்றி, ஒரு எழுத்து பூர்வமான அறிக்கையையும் அவர்களிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்று தீர்மானமாயிற்று. அதன்படியே அவர் அறிக்கையையும் வாய்மூலமான தகவல்களையும் பெற்றுக்கொண்டு நள்ளிரவு நெருங்கிக் கொண்டிருந்த வேளையில் ராணுவ தலைமை பீடத்தினர் தங்கியிருந்த இடத்திற்குக் குதிரையில் பாய்ந்து சென்றார். அவருடன் சில உதிரிக் குதிரைகளோடு ஒரு கோசாக்கும் சென்றான்.

## 13

## 16

அது வெது வெதுப்பான, இருண்ட இலையுதிர் காலத்து இரவாக இருந்தது. நான்கு தினங்களாகவே மழை பெய்து கொண்டிருந்தது. இரண்டு இடங்களில் குதிரைகளை மாற்றி, அடிவைத்தால் அடிபதியும் சேறும் சகதியும் நிறைந்த ரஸ்தாவில் ஒன்றரை மணி நேரத்தில் இருபது மைல்கள் சவாரி செய்து பால்காவைடினாவ் அன்று இரவு 1 மணிக்கு

விட்டாஷெவ்கா என்னுமிடத்தை அடைந்தார். ''ராணுவத்தின் தலைமை பீடம்'' என்னும் எழுத்துப் பலகை மிலாறுவேலியின்மீது தொங்கிக் கொண்டிருந்த ஒரு குடிசையின் முன்பாக அவர் குதிரையை நிறுத்தி இறங்கினார். கடிவாளங்களைக் கீழே போட்டுவிட்டு ஒரு இருண்ட ஆளோடியில் நுழைந்தார்.

''அலுவலிலிருக்கும் ஜெனரலை உடனே பார்க்கவேண்டும், அவசரம்! இது மிகவும் முக்கியமான விஷயம்!'' என்று அவர், அப்போதுதான் எழுந்து அந்த இருண்ட ஆளோடியில் மூக்கை உறிஞ்சிக்கொண்டிருந்த யாரோ ஒருவனைப் பார்த்துக் கூறினார்.

''சாயங்காலம் முதல் அவர் மிகுந்த அசௌக்யமாய் இருக்கிறார். அவர் இன்றுடன் மூன்று இரவுகளாகத் தூங்கவில்லை'' என்று மெதுவாக மன்றாடும் குரலில் அந்த வில்லைச் சேவகன் கூறினான். ''முதலில் நீங்கள் கேப்டனை எழுப்புங்கள்.''

''ஆனால் இது ரொம்பவும் முக்கியமான விஷயம். ஜெனரல் டாக்டூராவிடமிருந்து வந்திருக்கிறேன்'' என்று பால்காவைடினாவ் கூறினார். இருட்டில் தடவிக்கொண்டே சென்று திறந்திருந்த வாசலுக்குள் நுழைந்தார்.

அந்த வில்லைச் சேவகன் அவருக்கு முன்னதாகச் சென்று யாரையோ எழுப்பிக்கொண்டிருந்தான்.

''மேன்மை தங்கியவரே, மேன்மை தங்கியவரே! ஒரு தூதர் வந்திருக்கிறார்.''

''என்ன? என்ன சொல்கிறாய்? யாரிடமிருந்து வந்திருக்கிறார்?'' என்று ஒரு தூக்கக் குரல் கேட்டது.

''டாக்டூராவிடமிருந்தும், அலெக்ஸி பெட்ரோவிச்சிடமிருந்தும் வந்திருக்கிறேன். நெப்போலியன் இப்போது பார்மைன்ஸ்க் என்னுமிடத்தில் இருக்கிறார்'' என்றார் பால்காவைடினாவ். அந்த இருட்டில் யார் பேசுகிறார்கள் என்பதை அவரால் பார்க்க முடியவில்லை. ஆனால், குரலிலிருந்து அவர் கானாவ்னைட்ஸின் இல்லை என்பதை ஊகித்துக் கொண்டார்.

தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்ட அந்த மனிதர் கொட்டாவி விட்டு உடலை முறித்துவிட்டுக் கொண்டார்.

''அவரை எழுப்புவதற்கு எனக்கு விருப்பமில்லை'', என்று எதையோ தேடியவாறு அவர் கூறினார். ''அவர் மிகவும் உடல் நலமின்றி இருக்கிறார்'' ஒருவேளை இது ஒரு வதந்தியாகத்தான் இருக்கும்!

''இதோ கடிதம் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று பால்காவைடினாவ் கூறினார். ''அலுவலிலிருக்கும் ஜெனரலிடம் உடனே அதைச் சேர்ப்பிக்க வேண்டுமென்று எனக்கு உத்தரவு.''

''கொஞ்சம் பொறும். மெழுகு வத்தியை ஏற்றுகிறேன். ஏ, கேடு கெட்ட அயோக்கியப் பயலே, அதை எங்கே வைத்துத் தொலைத்தாய்?'' என்று சோம்பல் முறித்துக்கொண்டே அந்த உருவம் வில்லைச் சேவகனைப் பார்த்து கேட்டது. (அந்த உருவம் யாருமல்ல. கானாவ்னைட்ஸினின் உதவியாளரான ஷெர்பைனின் தான்). ''அகப்பட்டுவிட்டது. அகப்பட்டுவிட்டது!'' என்று அவர் மேலும் கூறினார்.

வில்லைச்சேவகன் நெருப்பு உண்டு பண்ணிக்கொண்டிருந்தான். ஷெர்பைனின் அந்த விளக்குத் தண்டில் எதையோ தேடிக் கொண்டிருந்தார்.

''ஓ, ஆபாசமான மிருகங்கள்!'' என்று அவர் வெறுப்போடு கூறினார்.

நெருப்பு உண்டுபண்ணியபோது ஏற்பட்ட தீப்பொறிகளில், விளக்குத் தண்டைப் பிடித்துக்கொண்டிருந்த ஷெர்பைனினின் இளமை ததும்பும் முகத்தையும், இன்னும் தூங்கிக்கொண்டிருந்த மற்றொரு மனிதருடைய முகத்தையும் பால்காவைடினாவ் பார்த்தார். அவர்தான் கானாவ்னைட்ஸின்.

பஞ்சில் உண்டுபண்ணப்பட்ட தீப்பொறிகள் மூலம் கந்தகக் குச்சிகள் முதலில் நீலநிறமாகவும் பின்னர் சிகப்பாகவும் எரிய ஆரம்பித்ததும் ஷெர்பைனின் விளக்குத் தண்டிலிருந்து மெழுகு வத்தியை அதில் பற்றவைத்தார். உடனே அதுவரை மெழுகு வத்தியை அரித்துத் தின்னுகொண்டிருந்த கரப்பான் பூச்சிகள் ஓட்டமெடுத்தன. விளக்கை ஏற்றியதும் ஷெர்பைனின் தூதரைப் பார்த்தார். பால்காவைடினோவின் உடம்பு பூராவும் சேறாகயிருந்தது; தமது சட்டைக் கையால் முகத்தைத் துடைத்து அங்கும் சேற்றைப் பூசிக்கொண்டிருந்தார்.

''கடிதம் யார் அனுப்பியது?'' என்று வினவியவாறே ஷெர்பைனின் உறையை வாங்கினார்.

''தகவல் நம்பகமானது'' என்றார் பால்காவைடினாவ். ''கைதிகள், கோசாக்குகள், வேவுகாரர்கள் முதலிய எல்லாரும் இதே தகவலைத்தான் கூறுகிறார்கள்.''

''இதில் நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை. அவரை எழுப்புவோம்'' என்று ஷெர்பைனின் கூறிவிட்டு எழுந்து, தலையில் இரவுக் குல்லாயோடு ஒரு பெரிய சட்டையைப் போர்த்திப் படுத்துக்கொண்டிருந்த மனிதரிடம் சென்றார். ''பீட்டர் பெட்ரோவிச்!'' என்று அவர் அழைத்தார். (கானாவ்னைட்ஸின் அசைந்து கொடுக்கவில்லை). ''ராணுவத்தின் தலைமை பீடத்திற்கு இந்தக் கடிதம் வந்திருக்கிறது!'' என்று அவர் புன்முறுவலோடு

கூறினார். இந்த வார்த்தைகள் நிச்சயமாக கானாவ்னைட்ஸினை எழுப்பும் என்பது அவருக்குத் தெரியும்.

உண்மைதான். குல்லா அணிந்திருந்த தலை உடனே உயர்ந்தது. ஜுரத்தால் சிவந்துபோன கன்னங்கள் கொண்ட கானாவ்னைட் ஸினுடைய அழகிய முகத்தில், தற்போதைய விவகாரங்களிலிருந்து விடுபட்டு தொலை தூரத்தில் கற்பனை உலகில் சஞ்சரிக்கும் ஒரு தோற்றம் ஒரு விநாடி நிலைத்து நின்றது. ஆனால், மறு விநாடி அவர் தம் உணர்வடைந்தார். அவரது முகத்தில் வழக்கமான அமைதியும், உறுதியும் குடிகொண்டன.

''நல்லது, என்ன விஷயம்? யாரிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது?'' என்று அவர் சட்டென்று ஆனால் அவசரப்படாமல் கேட்டார். வெளிச்சத்தைப் பார்த்து தெண்டத் தெண்ட விழித்தார்.

வந்த தூதர் வாய்மொழியாக விஷயத்தைக் கூறிக் கொண்டிருந்ததைக் கேட்டவாறே கானாவ்னைட்ஸின் கடிதத்தின் முத்திரையை உடைத்து அதைப் படித்தார். படித்தும் படிக்காததற் குள்ளேயே, உல்லன் மேஜோடுகள் அணிந்திருந்த தமது கால்களைத் தரையில் ஊன்றி பூட்சுகள் அணிந்துகொள்ள ஆரம்பித்தார். பிறகு இரவுக்குல்லாவை எடுத்துவிட்டு, கன்னப் பொட்டுகளுக்குமேல் தலைமயிரை சீவி விட்டுக்கொண்டு, தமது தொப்பியை அணிந்துகொண்டார்.

''இங்கே நீர் விரைவாக வந்தீரா? வாரும் நாம் மேன்மை தங்கியவரிடம் போவோம்.''

இப்போது கொண்டுவரப்பட்டுள்ள செய்தி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும், இந்த சமயத்தில் நேரத்தை வீணாக்கக்கூடாது என்பதையும் கானாவ்னைட்ஸின் உடனே புரிந்து கொண்டார். செய்தி நல்ல செய்தியா, அல்லது கெட்ட செய்தியா என்பதுபற்றி அவர் சிந்திக்கவோ அல்லது அதில் கருத்துச் செலுத்தவோ இல்லை. அதில் அவருக்குச் சிரத்தையுமில்லை. முழு யுத்த விவகாரமும் தமது புத்திசாலித்தனத்தாலோ அல்லது பகுத்தறிவாலோ நடக்கவில்லை என்றும், அதற்குப் பதில் வேறு ஏதோ ஒன்றால் நடக்கிறது என்றும் அவர் கருதினார். எல்லாம் நல்லவிதமாக முடியும் என்னும் வெளியில் சொல்ல முடியாத ஒரு ஆழமான உறுதி அவருள் குடிகொண்டிருந்தது. ஆனால், யாரும் அதை நம்பிக்கொண்டிருக்கக் கூடாது என்றும், அதைப்பற்றிப் பேசக்கூடாது என்றும், அதற்குப் பதில் தங்கள் காரியத்தில் மட்டுமே கண்ணாக இருக்க வேண்டும் என்றும் அவர் அபிப்பிராயப்பட்டார்.

அவ்விதமே தமது சக்தி முழுவதையும் ஈடுபடுத்தி தம் பணியை முறையோடு செய்யவும் செய்தார்.

டாக்டூராவைப் போலவே பீட்டர் பெட்ரோவிச்சும் ஏதோ ஒரு நியதிக்காகவே, பார்க்ளேக்களும், ராயேவ்ஸ்கிகளும், எர்மோலாவ்களும், பிளாட்டாவ்களும், மிலாராடாவிச்களும் நிறைந்த 1812 - ம் வருட வீரர்கள் பட்டியலில் சேர்க்கப்பட்டதாகத் தோன்றுகிறது. டாக்டூராவைப் போலவே அவரும் மிகவும் குறைந்த ஆற்றலும் விஷயஞானமும் படைத்தவர் என்று கருதப்பட்டவர். டாக்டூராவைப்போலவே அவரும் ஒரு போதும் போர்முனைத் திட்டங்கள் தீட்டியதில்லை. அதற்குப் பதில் எங்கெல்லாம் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறதோ அங்கெல்லாம் அவர் எப்போதும் காணப்பட்டார். அவர் அலுவலிலிருக்கும் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருந்ததால் எப்போதும் கதவைத் திறந்து வைத்துக் கொண்டே தூங்கினார்; தூதுவர் யார் வந்தாலும் தம்மை எழுப்பும்படி உத்திரவிட்டிருந்தார். போர் முனையில் அவர் எப்போதும் குண்டு மழையின் முன்னால் நின்றார். இதற்காக குட்டுஜோவ் அவரைக் கடிந்து கொண்டார். அவரைப் போர்முனைக்கு அனுப்புவதற்கு அஞ்சினார். டாக்டூராவைப் போலவே கானாவ்னைட்ஸினும் கவனிக்கப்படாமலும் கடபட என்று ஓசையில்லாமலும் இயந்திரத்தின் மிகவும் அத்தியாவசியமான உறுப்பாக இருக்கும் பல் சக்கரங்களில் ஒன்றாக விளங்கினார்.

அந்தக் குளிர்ந்த, இருண்ட இரவில் குடிசையைவிட்டு வெளியே வந்த போது கானாவ்னைட்ஸின் முகம் சுளித்தார் - அந்த முகச் சுளிப்புக்கு அவரது தலைவலி அதிகரித்தது ஒரு பகுதி காரணமாக இருந்தது. இந்த செய்தியைக் கேட்டு ராணுவத் தலைமை பீடத்திலுள்ள மேலிடக் கனவான்கள் எல்லோரும் எப்படிப் பரபரப்படைவார்கள்; அதிலும் முக்கியமாக, டாராவ்டினோ யுத்தத்திலிருந்து குட்டுஜோவிடம் பிணக்குக் கொண்டிருக்கும் பெனிக்ஸன் எப்படிப் பரபரப்படைவார்; இன்னும் அவர்கள் எவ்விதம் ஆளுக்கொரு யோசனை கூறுவார்கள், ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக் கொள்வார்கள், உத்தரவுகள் பிறப்பிப்பார்கள், பிறகு அவற்றை அழிப்பார்கள் என்னும் மகிழ்ச்சியற்ற எண்ணம் இன்னொரு பகுதி காரணமாக இருந்தது. இவையெல்லாம் அவருக்கு உடன்பாடில்லை. ஆனால் இதில் அவர் எதுவும் செய்ய இயலாதவராக இருந்தார்.

உண்மையில், இந்தச் செய்தியை டாலிடம் தெரிவித்தபோது அவர் உடனே தமது ஜாகையில் தங்கியுள்ள இன்னொரு

ஜெனரலிடம் தமது திட்டங்களை விவரிக்க ஆரம்பித்துவிட்டார். இவற்றை அலுப்பும் சலிப்பும் கொண்ட மௌனத்தோடு கேட்டுக்கொண்டிருந்த கானாவ்னைட்ஸின் தாங்கள் மேன்மை தாங்கியவரைப் பார்ப்பதற்குப் போக வேண்டும் என்பதை நினைவுப்படுத்திய பிறகுதான் டால் தமது பேச்சை நிறுத்தினார்.

# 13

## 17

எல்லா முதியவர்களையும் போலவே குட்டுஜோவும் இரவில் அதிகமாகத் தூங்குவதில்லை. எதிர்பாராத விதமாக அவர் அடிக்கடி பகலில் நித்திரை செய்வார். ஆனால் இரவில் ராணுவ உடுப்புகளைக் களையாமலேயே படுக்கையில் படுத்து எதையோ சிந்தித்தவாறு விழித்துக் கொண்டிருப்பார்.

இப்போதும் அப்படித்தான் அவர் தமது பெரிய, கனத்த, தழும்புகள் நிறைந்த தலையை உருண்டு திரண்ட தமது கையின் மீது வைத்துப் படுத்து, ஒரு கண்ணைத் திறந்தவாறு, சிந்தித்த வண்ணம் இருட்டை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்.

சக்கரவர்த்தியுடன் கடிதப் போக்குவரத்து நடத்தியவரும், ராணுவ தலைமை பீடத்தில் உள்ள மற்றெவரையும் விட அதிக செல்வாக்கு வாய்ந்தவருமான பெனிக்ஸன் தம்மைத் தவிர்க்க ஆரம்பித்ததால் தாமும் தமது துருப்புகளும் பயனற்ற வலுத்தாக்குதல் நடவடிக்கைகளில் குதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்காது என்று குட்டுஜோவ் மன நிம்மதியடைந்தார். டாராவ்டினோ போரின் படிப்பினையும், அதற்கு முந்தின தினம் நடைபெற்ற வேதனையளிக்கும் சம்பவங்களும் மற்றவர்களிடமும் ஏதாவது பிரதிபலிப்பை ஏற்படுத்தியிருக்க வேண்டுமென்று அவர் நினைத்தார்

''வலுத்தாக்குதல் தொடுப்பதன் மூலம் நமக்கு வீண் நஷ்டம்தான் ஏற்படும் என்பதை அவர்கள் புரிந்துகொள்ள வேண்டும். பொறுமையும், காலமும்தான் என்னுடைய வீரர்கள், என்னுடைய தீரர்கள்'' என்று அவர் எண்ணினார். ஆப்பிள் காயாக இருக்கும்போது அதைப் பறிக்கக் கூடாது என்பதை அவர் அறிவார். ஆப்பிள் பழுத்தால் அது தானாகவே விழும். ஆனால் பழுக்காததற்கு முன்பே ஆப்பிளைப் பறித்தால் அது கெட்டுப்போய்விடும். மரத்திற்கும் அதனால் தீங்கு ஏற்படும். நமது பற்களும்கூட புளிப்பால் கூசும். அனுபவம் நிறைந்த ஒரு வேட்டைக்காரனைப்

போல, அவர், மிருகம் காயமடைந்திருக்கிறது என்பதையும், அதுவும் ரஷ்யாவின் பலம் முழுவதும் எப்படிப்பட்ட காயத்தை உண்டு பண்ண முடியுமோ அப்படிப்பட்ட காயமடைந்திருக்கிறது என்பதையும் அறிவார். ஆனால், அந்தக் காயம் மரணத்தை விளைவிக்கக்கூடிய காயமா, இல்லையா என்பது இன்னும் முடிவாகாமலிருந்தது. இப்போது, லாரிஸ்டனும், பார்தேலெமியும் அனுப்பப்பட்டதிலிருந்தும், கொரில்லாக்கள் அனுப்பிய செய்திகளிலிருந்தும் காயம் மரண காயம்தான் என்ற நிச்சயம் குட்டுஜோவுக்குக் கிட்டத்தட்ட ஏற்பட்டது. எனினும் இதற்கு அவருக்கு மேற்கொண்டு ஆதாரங்கள் தேவைப்பட்டது. எனவே அந்த ஆதாரங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

''அந்த மிருகத்தை எவ்வளவு தூரம் காயப்படுத்தியிருக்கிறோம் எனப்தை அவர்கள் ஓடிப்போய் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். ஏன் பொறுத்திருந்து நாம் பார்க்கக்கூடாது! எப்போது பார்த்தாலும் ஓயாத ராணுவ நடவடிக்கைகளும், ஓயாத முன்னேற்றமும் தானா!'' என்று அவர் நினைத்தார். ''இவையெல்லாம் எதற்காக? தங்களுக்குப் புகழ் தேடிக் கொள்வதற்காகத் தான்! போர் செய்வதை ஏதோ ஒரு தமாஷா போல அவர்கள் நினைக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் குழந்தைகள் போலிருக் கிறார்கள். என்ன நடந்தது என்பது பற்றி அவர்களிடமிருந்து புத்திசாலித்தனமான விவரத்தைப் பெற முடியாது. ஏனென்றால் அவர்களெல்லாரும் தாங்கள் எவ்வளவு நன்றாய்ச் சண்டை செய்ய முடியும் என்பதைக் காட்டிக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனால், இப்போது தேவைப்படுவது அதுவல்ல!

''அவர்கள் எப்படிப்பட்ட அதிமேதாவித்தனமான போர்த் திட்டங்களை எனக்குச் சொல்கிறார்கள்! (பீட்டர்ஸ் பர்க்கிலிருந்து அனுப்பப்பட்ட திட்டம் அவருக்கு இப்போது ஞாபகத்துக்கு வந்தது). இரண்டு அல்லது மூன்று சாத்தியக்கூறுகள் நிகழலாம் என்று அவர்கள் எண்ணியதை நோக்கினால் ஒவ்வொன்றையும் அவர்கள் எதிர்பார்த்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. ஆனால் அம்மாதிரியான சாத்தியக்கூறுகளுக்குக் கணக்கு வழக்குக் கிடையாதே!

பாராடினோவில் விளைவிக்கப்பட்ட காயம் மரண காயமா அல்லது இல்லையா என்னும் முடிவாகாத விஷயம் ஒரு மாத காலமாகவே குட்டுஜோவின் தலைக்கு மேல் தொங்கிக் கொண்டிருந்தது. ஒருபுறம் பிரெஞ்சுக்காரர்கள் மாஸ்கோவை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டார்கள். இன்னொருபுறம், தாமும் ருஷ்யர்கள் அனைவரும் தங்கள் முழுபலத்தையும் சேர்த்துக்

கொடுத்த அடி மரண அடியாகத்தான் இருக்க வேண்டும் என்று குட்டுஜோவ் உறுதியாக நம்பினார். எனினும் அதற்கு ஆதாரங்கள் தேவைப்பட்டன; அவற்றிற்காக அவர் ஒரு மாதம் பூராவும் காத்திருந்தார்; எவ்வளவு நீண்டகாலம் காத்திருந்தாரோ அவ்வளவுக்கு அவர் பொறுமை இழந்தார். தூக்கம் பிடிக்காத அந்த இரவுகளில் படுக்கையில் படுத்தவாறு, மற்ற இளம் ஜெனரல்கள் எதைச் செய்தார்கள் என்பதற்காக அவர்களைக் கண்டித்தாரோ அதையே அவரும் செய்தார்; அதாவது, இளைஞர்களைப் போலவே, எல்லா வகையான சாத்தியக்கூறுகளைப் பற்றியும் கற்பனை செய்தார். ஆனால் ஒரு வித்தியாசம்: இரண்டு அல்லது மூன்று சாத்தியக்கூறுகளுக்குப் பதிலாக அவர் ஆயிரக்கணக்கான சாத்தியக்கூறுகளைக் கண்டார். ஆனால் அவற்றில் எதன் மீதும் அவர் நம்பிக்கை வைக்கவில்லை. அவர் எவ்வளவு அதிகமாக சிந்தித்தாரோ அத்தனைக்கு அதிகமான சாத்தியக்கூறுகள் அவர் முன்னால் தோன்றின. நெப்போலியனுடைய ராணுவம் முழுவதுமோ அல்லது பகுதிகளோ பலவிதமான நடவடிக்கைகளை எடுக்கலாம் என்று அவர் மனோராஜ்யம் செய்தார் - அதவாது பீட்டர்ஸ்பர்க்கு எதிராகவோ, தமக்கு எதிராகவோ அல்லது தம்மைத் தாண்டிச் செய்வதற்காகவே நடவடிக்கைகள் எடுக்கலாம் என்று நினைத்தார். நெப்போலியன் தம் வழியையோ பின்பற்றி மாஸ்கோவிலேயே தங்கியிருந்தது தம்மை எதிர்பார்த்துக் கொண்டிருக்கலாம் என்றுகூட எண்ணினார். (இந்த சாத்தியக் கூறைப் பற்றித்தான் அவர் எல்லாவற்றையும்விட அதிகமாக அஞ்சினார்). மெடின், யுக்னோவ் (மெடின், யுக்னோவ் என்னும் ஊர்கள் மாஜாய்ஸ்க் - ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவுக்குத் தெற்கே உள்ள ஒரு ரஸ்தாவில் காலுகாவுக்கு வடமேற்கே அமைந்துள்ளன. மாஜாய்ஸ்க் - ஸ்மாலென்ஸ்க் ரஸ்தா வழியாகத்தான் நெப்போலியன் மேற்குப் பக்கமாக பின்வாங்கினார்.) என்னும் ஊர்களின் வழியாக நெப்போலி யனுடைய ராணுவம் பின்னால் திரும்பலாம் என்றுகூட அவர் கற்பனை செய்தார். ஆனால் அப்போது நடந்த ஒரு விஷயத்தை அவரால் முன்னுணர்ந்து பார்க்க முடியவில்லை. அதாவது நெப்போலியனின் ராணுவம் மாஸ்கோவை விட்டுப் புறப்பட்ட முதல் பதினோரு நாட்களில் உன்மத்தமும் பீதியும் கொண்டு நெருக்கியடித்துக்கொண்டு சென்றது. இதுவே பிரெஞ்சுக்காரர்கள் பரிபூரணமாக அழிக்கப்படுவதை சாத்தியமாக்கிற்று. இதைக் குட்டுஜோவ் முன்கூட்டி கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. பிரௌசியருடைய படைப்பிரிவு பற்றி டாராகாவின் அறிக்கை, நெப்போலியனது ராணுவத்திற்கு ஏற்பட்டுள்ள கஷ்டம் பற்றி கொரில்லாக்களின்

தகவல், மாஸ்கோவை விட்டுப் புறப்படுவதற்குப் பிரெஞ்சுக் காரர்கள் தயாராகி வருகிறார்கள் என்னும் வதந்திகள் ஆகிய இவைகளனைத்தும் பிரெஞ்சு ராணுவம் முறியடிக்கப்பட்டுவிட்டது அது ஓட்டம்பிடிப்பதற்குத் தயாராகி வருகிறது என்னும் கருதத்தை உறுதிப்படுத்தின. ஆனால், இவைகள் வெறும் யூகங்கள் மட்டுமே. இந்த யூகங்கள் வாலிபர்களுக்கு முக்கியமானதாகத் தோன்றின. ஆனால் குட்டுஜோவுக்கு அப்படித் தோன்றவில்லை. அவரது அறுபது வருட அனுபவத்தில் வதந்திகளுக்கு எவ்வளவு தூரம் மதிப்புக் கொடுக்க வேண்டும் என்பதை அவர் அறிவார்; புத்திக்கூர்மை படைத்தவர்கள் ஏதாவது விரும்பினால் அந்த விருப்பத்தை உறுதிப்படுத்துவது மாதிரியான முறையில் எப்படிச் செய்திகளைக் கோவைப்படுத்திக் கொடுப்பார்கள் என்பதை அவர் அறிவார்; இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் தங்களுக்குப் பாதகமான செய்திகளையெல்லாம் அவர்கள் எப்படி விலக்கி விடுவார்கள் என்பதையும் அவர் அறிவார். மேலும், எந்த ஒரு விஷயம் நடக்க வேண்டுமென்று அவர் அதிகமாக விரும்புகிறாரோ, அதில் அவர் குறைவான நம்பிக்கையே வைப்பார். இந்தப் பிரச்சினைதான் அவரது சிந்தனை பூராவையும் ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. மற்றவையெல்லாம் அவருக்கு வாழ்க்கையின் வழக்கமான அலுவல்களாக மட்டுமே தோன்றின. இப்படிப்பட்ட அலுவல்களில் ராணுவத் தலைமை பீடத் திலுள்ளவர்களுடன் தாம் நடத்தும் உரையாடல்கள், டாராவ்டினோவிலிருந்து திருமதி டி ஸ்டாலுக்கு எழுதிய கடிதங்கள், நாவல்கள் வாசிப்பு, பரிசளிப்பு, பீட்டர்ஸ்பர்க்குடன் கடிதப் போக்குவரத்து முதலியவை அடங்கி யிருந்தன. ஆனால், பிரெஞ்சக்காரர்கள் நிர்மூலமாக்கப் படவேண்டும் என்பதே அவரது உள்ளத்தின் ஒரே ஒரு விருப்பமாக இருந்தது. அவர் ஒருவர்தான் பிரெஞ்சுக்காரர்களின் அழிவை முன்னுணர்ந்தவர்.

அக்டோபர் 11 - ம் தேதி இரவிலும் அவர் தமது கையை ஆதாரமாக வைத்து சாய்ந்துகொண்டு இதைப்பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

அடுத்த அறையில் ஏதோ ஒரு பரபரப்பு ஏற்பட்டது. டால், கானாவ்னைட்ஸின், பால்காவைடினாவ் ஆகியோரின் காலடி ஓசை கேட்டது.

''என்ன? யார் அங்கே? உள்ளே வாருங்கள், உள்ளே வாருங்கள்! என்ன செய்தி?'' என்று பீல்ட் மார்ஷல் குட்டுஜோவ் அவர்களை அழைத்தார்.

ஒரு சேகவன் மெழுகுவர்த்தியை ஏற்றிக்கொண்டிருந்தபோது, டால் செய்தியின் சாராம்சத்தைத் தெரிவித்தார்.

''யார் அந்தச் செய்தி கொண்டு வந்தது?'' என்று குட்டுஜோவ் கேட்டார். இதற்குள் மெழுகுவத்தி ஏற்றப்படவே, குட்டுஜோவின் பார்வையில் காணப்பட்ட கடுமை டாலைத் திகைக்க வைத்தது.

''செய்தியைப் பற்றி எந்தவிதமான சந்தேகமும் இருக்க முடியாது, மேன்மை தங்கியவரே.''

''அவனை உள்ளே அழையுங்கள். இங்கே அழையுங்கள்.''

குட்டுஜோவ் தமது ஒரு காலைப் படுக்கையில் தொங்கவிட்டுக் கொண்டும், மற்றொரு காலை மடக்கி அதன் மீது தமது பெரிய தொந்தியின் பாரத்தைச் சுமத்தியபடியும் எழுந்து உட்கார்ந்தார். தமது உள்ளம் ஈடுபாடு கொண்டிருந்த விஷயங்களை அந்தத் தூதுவனின் முகத்தில் காண விரும்புபவர்போல அவர் தமது ஒற்றைக்கண்ணை இடுக்கி அவனை மிகவும் கவனமாக ஆராய்ந்தார்.

''சொல்லும், என்னிடம் சொல்லும், நண்பரே'', என்று அவர் தமது தணிந்த, முதிய குரலில் கூறினார். அவரது சட்டை மார்பில் திறந்து கிடந்தது. அதை இழுத்து விட்டுக்கொண்டார். ''கிட்டே வாரும் - இன்னும் நெருங்கி வாரும். எனக்கு என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறீர்? என்ன? நெப்போலியன் மாஸ்கோவை விட்டுப் போய்விட்டாரா? உமக்கு நிச்சயமாகத் தெரியுமா? என்ன?''

பால்காவைடினாவ் தம்மிடம் தெரிவிக்கப்பட்ட விஷயங்களனைத்தையும் ஆரம்பத்திலிருந்து விவரமாகக் கூறினார்.

''விரைவாகப் பேசும், விரைவாகப் பேசும்! என்னைச் சித்திரவதை செய்யாதீர்!'' என்று குட்டுஜோவ் அவரை இடைமறித்துக் கூறினார்.

பால்காவைடினாவ் அவரிடம் எல்லாவற்றையும் கூறிவிட்டு அவருடைய உத்திரவுகளை எதிர்பார்த்து மௌனமாக இருந்தார். டால் எதையோ சொல்ல ஆரம்பித்தார். ஆனால் குட்டுஜோவ் அவரைப் பேசாதபடி தடுத்து நிறுத்தினார். அவர் ஏதோ சொல்ல முயற்சித்தார். ஆனால் அவரது முகம் திடீரென்று கறுத்து சுருங்கிற்று; அவர் டாலைப் பார்த்து தமது கையை ஆட்டி, அறையின் எதிர்திசையில், தெய்வப் படங்கள் தொங்கிய இருட்டு மூலைப்பக்கம் திரும்பினார்.

''ஓ ஆண்டவரே, என்னைப் படைத்தவரே, எங்கள் பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து விட்டீர்கள்...'' என்று கைகளைக் கூப்பி நடுங்கும் குரலில் கூறினார். ''ருஷ்யா பிழைத்தது! ஓ பிரபுவே! உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்!'' இவ்வாறு கூறிவிட்டு அவர் அழுதார்.

# 13

## 18

இந்த செய்தி கிடைத்ததிலிருந்து போர் முடியும் வரை அவரது நடவடிக்கை முழுவதும் அழிந்துகொண்டிருக்கும் எதிரியோடு பயனற்ற தாக்குதல்களிலோ, போர் நடவடிக்கைகளிலோ, அல்லது மோதல்களிலோ தமது துருப்புகள் ஈடுபடாதபடி, நயத்தோடும் பயத்தோடும் தந்திரத்தோடும் தடுத்து நிறுத்துவதிலேயே இருந்தது. டாக்டுராவ்மாலோ - யாராஸ்லாவெட்ஸ் என்னும் இடத்திற்குச் சென்றார். ஆனால் குட்டுஜோவ் பிரதான ராணுவத்தோடு தயங்கி நின்றுகொண்டிருந்தார். காலுகாவிற்கு அப்பாலும் பின்வாங்குவது சாத்தியம் என்று குட்டுஜோவுக்குத் தோன்றியதால் அந்த ஊரைக் காலி செய்யும்படி உத்தரவிட்டார்.

எல்லா இடங்களிலும் குட்டுஜோவ் பின்வாங்கினார். ஆனால் அவரது பின்வாங்கலுக்குக் காத்திராமலேயே பகைவன் எதிர் திசையில் ஓட்டம் பிடித்தான்.

நெப்போலியனுடைய சரித்திர ஆசிரியர்கள் டாராவ்டினோ விலும் மாலோ - யாராஸ்லாவெட்ஸிலும் அவரது சாமர்த்தியமான போர் நடவடிக்கைகளைப் பற்றி நமக்கு வர்ணிக்கிறார்கள்; இன்னும் நெப்போலியன் காலாகாலத்தில் தெற்கிலுள்ள செழிப்பான பிரதேசங்களுக்குள் ஊடுருவி இருந்தால் என்ன நடந்திருக்கும் என்பதைப் பற்றி யூகங்களும் தெரிவிக்கிறார்கள்.

ஆனால் நெப்போலியன் அம்மாதிரி தெற்கே முன்னேறிச் செல்வதை எதுவும் தடுக்கவில்லை என்பது ஒருபுறமிருக்க (ஏனெனில் ருஷ்ய ராணுவம் அவர் வழியை மறித்துக் கொண்டிருக்கவில்லை), அவரது ராணுவத்தை எதுவும் காப்பாற்றி யிருக்க முடியாது என்பதைச் சரித்திர ஆசிரியர்கள் மறந்து விடுகிறார்கள். ஏனென்றால் அந்த ராணுவம் ஏற்கெனவேயே தனது தவிர்க்கமுடியாத அழிவுக்கான கிருமிகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அத்தகைய ராணுவம் - மாஸ்கோவில் ஏராளமான சப்ளைகள் கிடைத்தும் அவற்றைப் பத்திரப்படுத்தாமல் காலில் போட்டு மிதித்துத்துவைத்த ராணுவம், ஸ்மாலென்ஸ்குக்கு வந்ததும் உணவுப் பொருள்களைச் சேமித்து வைக்காமல் அவற்றைச் சூறையாடிய ராணுவம் - எப்படி காலுகா மாநிலத்தில் மீண்டும் தன் வலிமையைப் பெற்றிருக்க முடியும்? அதுவும், மாஸ்கோவில் போலவே இங்கும் ருஷ்யர்கள் வசிக்கும்போது, அங்குபோலவே இங்கும் எதிர்ப்பு இருக்கும்போது இது எப்படி சாத்தியமாகியிருக்க முடியும்?

அந்த ராணுவம் எங்கேயும் மீண்டிருக்க முடியாது. பாராடினோ போர் முதலே, மாஸ்கோ கொள்ளையடிக்கப்பட்டது முதலே, தன் அழிவுக்கான மூலக்கூறுகளை அது தன்னுள் கொண்டிருந்தது.

ஒரு காலத்தில் ஒரு ராணுவத்தைச்சேர்ந்தவர்களாக இருந்தவர்கள் – நெப்போலியனும் அவரது சிப்பாய்கள் அனைவரும் - எங்கே போகிறோம் என்று தெரியாமலேயே ஓடினார்கள்; ஒவ்வொருவரும் இந்த நிலையிலிருந்து எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் தாங்கள் தப்பிக்கொள்வதிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தார்கள்; நிலைமை மிகவும் மோசமாக இருப்பதை எல்லோரும் உணர்ந்திருந்தார்கள்.

ஆகவே, மாலோ - யாராஸ்லாவெட்ஸில் நடைபெற்ற ராணுவக் கவுன்சில் கூட்டத்தில் ஆலோசனைகள் நடத்துகிறோம் என்ற பெயரால் ஜெனரல்கள் பல்வேறு அபிப்பிராயங்களைத் தெரிவித்தார்கள். ஆனால் சுபடமற்ற சிப்பாயான மௌட்டன் கடைசியாகப் பேசுகையில் இங்கிருந்து எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் போய்விடுவதுதான் இப்போது செய்யவேண்டிய காரியம் என்று எல்லோரது மனதிலுள்ளதையும் கூறியபோது அனைவரும் வாயடைத்துப்போயினர்; எல்லாரும் ஒப்புக்கொண்ட இந்த உண்மையான எதிர்த்து யாரும், நெப்போலியனும் கூட, எதுவும் சொல்ல முடியவில்லை.

ஆனால் இங்கிருந்து போய்விடுவது அவசியம் என்பதை அவர்களனைவரும் உணர்ந்தாலும், அப்படி ஓடத்தான் வேண்டும் என்பதை ஒப்புக்கொள்வது அவமானம் என்று கருதினார்கள். இந்த அவமானத்தை உதறியெறிவதற்கு அவர்களுக்கு ஒரு வெளி அதிர்ச்சி தேவைப்பட்டது. அந்த அதிர்ச்சியும் உரிய காலத்தில் வந்தது. அதுதான் ''சக்கரவர்த்தி வாழ்க!'' என்னும் கோஷம். (இது ருஷ்யத் துருப்புகள் எதிரியைத் தாக்கும்போது போடும் கோஷம்.)

மாலோ - யாராஸ்லாவெட்ஸில் ராணுவக் கவுன்சில் கூட்டம் நடைபெற்றதற்கு மறுநாள் நெப்போலியன் தமது ஜெனரல் களோடும், பாராக்காரர்களோடும் அதிகாலையில் வெளியே சவாரி புறப்பட்டார். பிரெஞ்சு சைன்யத்தையும், முன்னர் போர் நடந்த களத்தையும் இனி நடக்கப்போகும் களத்தையும் பார்வையிடுவது என்ற பெயரால், அப்போது கொள்ளை யடிப்பதற்காகக் காத்திருந்த சில கோசாக்குகள் சக்கரவர்த்தி மீது பாய்ந்து அநேகமாக அவரைப் பிடித்துவிட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். அப்போது அவர்கள் நெப்போலியனைப் பிடிக்க வில்லையென்றால், அதற்குக் காரணம் பிரெஞ்சு ராணுவத்தை எவை அழித்துக் கொண்டிருந்தனவோ அதே கொள்ளைப் பொருள்கள்தான். அந்தக் கொள்ளைப் பொருள்களால்தான் அவர் தப்பினார்.

டாராவ்டினோவில் போலவே இப்போதும் கோசாக்குகள் ஆட்களை விட்டுவிட்டு, கொள்ளைப் பொருள்களை நாடினர். நெப்போலியனைப் பற்றிக் கவலைப் படாமல் அவர்கள் கொள்ளைப் பொருள்களிலேயே குறியாக இருந்தார்கள். இதனால் தான் நெப்போலியன் தப்பித்துக் கொள்ள முடிந்தது.

இவ்விதம் அந்த சமவெளிப் புத்திரர்களான கோசாக்குகள் நெப்போலியனை அவரது ராணுவத்திற்கு மத்தியிலேயே இவ்வளவு சுலபமாக நெருங்க முடியுமானால், இனி மிக அருகாமையிலுள்ள பழக்கமான ரஸ்தாவில் வெகு வேகமாக ஓடுவதைத் தவிர பிரெஞ்சு ராணுவத்திற்கு வேறு வழியில்லை என்பது தெளிவாயிற்று. நாற்பது வருட தொந்தியோடு கூடிய நெப்போலியன் இதைப் புரிந்து கொண்டார். பழைய ஆற்றலும் துணிச்சலும் இப்போது அவரிட மில்லை. கோசாக்குகளின் தாக்குதலினால் பீதியடைந்துபோன அவர் மெளட்டன் கருத்தை உடனே ஒப்புக் கொண்டு ஸ்மாலென்ஸ்க் ரஸ்தா வழியாகப் பின்வாங்க உத்தரவிட்டார் என்று சரித்திர ஆசிரியர்கள் நமக்குக் கூறுகிறார்கள்.

நெப்போலியன் மெளட்டன் கருத்தை ஒப்புக்கொண்டதும், ராணுவம் வாபசானதும் நெப்போலியன்தான் அந்தப் பின் வாங்கலுக்குக் காரணமாக இருந்தார் என்பதை நிரூபிப்பதாகாது. அதற்குப் பதில் எந்த சக்திகள் அந்த ராணுவம் முழுவதையும் ஆட்டிப்படைத்து அதை மாஜாய்ஸ்க் ரஸ்தா வழியாக (அதாவது ஸ்மாலென்ஸ்க்) வழி நடத்திச் சென்றனவோ, அதே சக்திகள் அவரையும் ஆட்டிப்படைத்தன என்பதுதான் உண்மை.




நடைபோட்டுக்கொண்டிருக்கும் மனிதன் எப்போதும் அந்த நடைக்கு ஒரு லட்சியத்தை வகுத்துக்கொள்கிறான். ஆயிரம் வெர்ஸ்ட்டுகள் தூரம் போகவேண்டு மென்றால், அந்த ஆயிரம் வெர்ஸ்ட்டுகள் தூரம் போனதும் அங்கே தனக்கு ஏதோ ஒரு அனுகூலம் காத்து நிற்கிறது என்ற எண்ணம் அவனுக்கு இருக்கவேண்டும். யாருக்கும் தங்களுக்கு முன்னால் ஒரு சுவர்க்க பூமி இருக்கிறது என்ற நினைப்பு இருந்தால் தான் முன்னேறுவதற்கான பலம் அவர்களுக்கு இருக்க முடியும்.

இவ்விதம்தான் பிரெஞ்சுக்காரர்களுக்கு அவர்களது முன்னேற்றத்தின் போது மாஸ்கோ சுவர்க்க பூமியாக இருந்தது; இப்போது அவர்களது பின்வாங்கலின்போது அவர்களது சொந்த

நாடு சுவர்க்க பூமியாக விளங்கிற்று. ஆனால் அந்த சொந்த நாடு வெகு தொலைவில் இருந்தது. ஆயிரம் வெர்ஸ்ட்டுகள் தூரம் செல்வதற்குக் கிளம்பும் ஒரு மனிதன் அந்த இறுதி குறிக்கோளை ஒதுக்கி வைத்துவிட்டு ''இன்று நான் நாற்பது வெர்ஸ்ட்டுகள் தூரம் நடந்து ஒரு இடத்தில் இளைப்பாறி, அந்த இரவைக் கழிப்பேன்'' என்று சொல்லிக்கொள்வான். முதல்நாள் பயணத்தின்போது அந்த இளைப்பாறும் இடம் அவனது முடிவான லட்சியத்தை மறைத்து அவனது ஆசை அபிலாஷைகளையெல்லாம் ஆகர்ஷிக்கிறது. ஒரு தனி மனிதனுக்குப் பொருந்தக்கூடிய இந்த உணர்ச்சிகள் ஒரு கூட்டத்திற்கும் பொருந்தும்.

பழைய ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவில் பின்வாங்கிக் கொண்டிருந்த பிரெஞ்சுக்காரர்களுக்கு அவர்களது இறுதி லட்சியம் - அதாவது அவர்களது தாய்நாடு - தொலை தூரத்தில் இருந்து. எனவே, ஸ்மாலென்ஸ்க்தான் அவர்களது உடனடி லட்சியமாக இருந்தது. அவர்களது ஆசைகள் நம்பிக்கைகளெல்லாம் அந்த நகருக்குச் செல்வதிலேதான் இருந்தன. அவ்விதம் அவர்கள் ஸ்மாலென் ஸ்க்குக்குச் செல்லத் துடித்தார்கள் என்றால் அதற்குக் காரணம் என்ன? அங்கு நிறைய உணவுப் பொருள்களும் துருப்புகளும் தங்களுக்குக் காத்திருக்கும் என்று அவர்கள் நினைத்ததோ அல்லது அப்படி அவர்களுக்குச் சொல்லப் பட்டதோ இதற்குக் காரணமல்ல (உயர்தர அதிகாரிகளுக்கும் நெப்போலியனுக்கும்கூட அங்கு உணவுப் பொருள்கள் கிடைப்பது கஷ்டம் என்று தெரியும்); அதற்குப் பதில் அங்கு சென்றால்தான் மேற்கொண்டு வாபசைத் தொடர்வதற்கான தெம்பும், இப்போதைய கஷ்டங்களைத் தாங்கக்கூடிய மன உறுதியும் தங்களுக்குக் கிட்டும் என்று அவர்கள் எண்ணியதே இதற்குக் காரணம். ஆக, விஷயம் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொண்டு, லட்சிய பூமி நோக்கிச் செல்வது போல ஸ்மாலென்ஸ்க்கை நோக்கி விரைந்து சென்றார்கள்.

பிரெஞ்சுக்காரர்கள் பிரதான ரஸ்தாவுக்கு வந்து சேர்ந்ததும், தாங்கள் நிர்ணயித்திருந்த லட்சியம் நோக்கி, ஆச்சரியப்படத்தக்க ஆற்றலோடும், முன்பின் கேட்டிராத வேகத்தோடும் தலைவிரி கோலமாக ஓடினார்கள். ஒரு பொதுவான தூண்டுதல் பிரெஞ்சுக் காரர்களின் கூட்டம் முழுவதையும் ஒரே திரளாகப் பிணைத்து, அவர்களுக்கு ஓரளவு சக்தியை அளித்தது என்பது ஒருபுறமிருக்க, அவர்களை இணைத்துப் பிணைப்பதற்கு மற்றொன்றும் காரணமாக இருந்தது - அதுதான் அவர்களது பெரும் எண்ணிக்கை, மைய ஈர்ப்பு பௌதிக விதியின்படி அந்த பிரம்மாண்டமான திரள் தனிப்பட்ட

மனித அணுக்களைத் தன்னிடம் ஈர்த்துக்கொண்டது. ஆக, ஆயிரம் பல்லாயிரமாக இருந்த அவர்கள் ஒரு தேசமே நகர்ந்து செல்வது போல, நகர்ந்து சென்றார்கள்.

இந்த சொல்லொண்ணா துன்ப துயரங்களிலிருந்து விடுபடுவதற்கு ஒவ்வொருவரும் எப்படியாவது தாங்கள் கைதானால் போதும் என்று விரும்பினார்கள்; ஆனால் ஒரு புறம் தங்களது லட்சியமான ஸ்மாலென்ஸ்க்கைப் பற்றிய கவர்ச்சி அவர்களனைவரையும் ஒரே திசையில் இழுத்துச் சென்றது; இன்னொருபுறம் ஒரு படைப்பிரிவு ஒரு கம்பெனியிடம் சரணடைய முடியாமலிருந்தது. மேலும், கிடைக்கக்கூடிய ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்தி, தங்களது ராணுவத்திலிருந்து தப்பி வந்து, சிறிதளவு கண்ணியமான சாக்குப்போக்குக் கிடைத்தாலும் சரணடைவதற்குப் பிரெஞ்சுக்காரர்கள் தயாராக இருந்தார்கள். ஆனால், அத்தகைய சாக்குப்போக்குகள் எப்போதுமே கிடைக்கவில்லை. அவர்களது எண்ணிக்கையும், கூட்டமும், துரித ஓட்டமும் அவர்களுக்கு இத்தகைய சந்தர்ப்பங்கள் கிடைக்காதபடி செய்தன; தவிரவும் தங்கள் முழு பலத்தையும் கொண்டு ஓடிக்கொண்டிருக்கும் பிரெஞ்சுக்காரர்களைத் தடுத்து நிறுத்துவது கஷ்டமானதாக மட்டுமின்றி, அசாத்தியமானதாகவுமிருந்தது. ஒரு குறிப்பிட்ட வரம்புக்கு மேல் திரேகத்தின் எந்தத் தன்னிச்சையான சிதைவும் அழுகும் நிகழ்முறையைத் துரிதப்படுத்த முடியாது.

ஒரு பனிக்கட்டித் திரளை உடனே உருக்கிவிட முடியாது. அதை உருக்குவதற்கு ஒரு குறிப்பிட்ட நேரம் அவசியமாகும். அதற்குக் குறைந்த நேரத்தில் எவ்வளவு உஷ்ணத்தாலும் அதை உருக்க முடியாது. அதற்குப் பதில் எவ்வளவுக்கெவ்வளவு உஷ்ணம் அதிகமாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு எஞ்சியிருக்கும் பனிக்கட்டி கெட்டியாகிறது.

ருஷ்ய தளபதிகளில் குட்டுஜோவ் ஒருவர்தான் இதைப் புரிந்துகொண்டவர். பிரெஞ்சு ராணுவம் ஸ்மாலென்ஸ்க் ரஸ்தா வழியாகப் பின்வாங்கி ஓடிக்கொண்டிருக்கிறது என்பது நிச்சமானவுடன், கானாவ்னைட்ஸின் என்ன நடக்கும் என்று அக்டோபர் 11 - ம் தேதி இரவு முன்னுணர்ந்தாரோ அது நடக்க ஆரம்பித்தது. பெரிய அதிகாரிகள் அனைவரும் தங்களுக்குப் பெயரும் புகழும் சம்பாதித்துக்கொள்ளும் நோக்கத்தோடு, பிரெஞ்சு ராணுவத்தினரைத் துண்டிக்க, தோற்கடிக்க, கைது செய்ய விரும்பினர். எனவே, அவர்களெல்லாரும் உடனே நடவடிக்கையில் இறங்கவேண்டும் என்று ஆர்ப்பரித்தனர்.

குட்டுஜோவ் மட்டும்தான் தாக்குதல் நடக்காதபடி தடுப்பதற்குத் தமது அதிகாரம் முழுவதையும் பயன்படுத்தினார். (எந்தப் பிரதம சேனாதிபதிக்கும் இத்தகைய அதிகாரம் மிகவும் வரையறைக்குட்பட்டதே).

இப்போது நாம் சொல்கிற மாதிரி அப்போது அவரால் அவர்களிடம் சொல்ல முடியவில்லை; அதாவது ''நம் ஆட்களை இழந்தும், துரதிர்ஷ்டம் பிடித்த அந்த உதவாக்கரைகளை மனிதாபி மானமின்றிக் கொலை செய்தும் ஏன் சண்டை செய்யவேண்டும், ஏன் ரஸ்தாவை வழிமறிக்க வேண்டும்? மாஸ்கோவிலிருந்து வியாஜ்மா ரஸ்தாவில் எந்தவிதப் போருமின்றியே அவர்களது சைன்யத்தில் மூன்றிலொரு பகுதியினர் அழிந்திருக்கும்போது இதில் என்ன பயனிருக்கிறது?'' என்று அவரால் சொல்ல முடியவில்லை. அதற்குப்பதில் தமது முதிர்ந்த விவேகத்தைக் கொண்டு, பிரெஞ்சுக்காரர்கள் கண்ணியமான முறையில் வாபசாகிப் போகட்டும் என்று அவர்களுக்குப் புரியும் முறையில் அறிவுரை கூறினார். ஆனால் அவர்களோ அவரைக் கேலி செய்தார்கள். அவதூறு செய்தார்கள், போட்டிப் போட்டுக்கொண்டு அந்த செத்துக்கொண்டிருந்த மிருகத்தின் மீது பாய்ந்தார்கள்.

வியாம்மாவுக்கு அங்கே பிரெஞ்சுக்காரர்களுக்கு வெகு அண்மையிலிருந்த எர்மோலாவ், மிலாராடாவிச், பிளாட்டாவ் ஆகியோராலும், இன்னும் இதரர்களாலும் இரண்டு பிரெஞ்சுப் படைப் பிரிவுகளைத் துண்டித்து அவற்றை அழிக்க வேண்டுமென்ற தங்களது விருப்பத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. எனவே, தங்களது உத்தேசத்தைக் குட்டுஜோவுக்குத் தெரிவிக்கும் ரீதியில் ஒரு வெறும் கடுதாசியை உறைக்குள் போட்டு அவருக்கு அனுப்பிவைத்தார்கள்.

குட்டுஜோவ் துருப்புகளைக் கட்டுப்படுத்த எவ்வளவுதான் பாடுபட்டபோதிலும், நமது ஆட்கள் ரஸ்தாவை அடைக்க முயற்சித்து தாக்குதல் தொடுத்தார்கள். காலாட்படையினர் இசை நாதம் முழங்க, முரசங்கள் ஒலிக்க முன்னேறிச் சென்று எதிரிகளைக் கொன்றனர்; நமது படை வீரர்களும் ஆயிரக்கணக்கில் மாண்டனர் என்று நமக்குத் தெரிவிக்கப்படுகிறது.

ஆனால் அவர்களால் எந்தப் படைப்பிரிவையும் துண்டிக்கவோ அல்லது தோற்கடிக்கவோ முடியவில்லை. பிரெஞ்சு ராணுவம் அபாயத்தைக் கண்டு மேலும் உறுதியாக இணைந்து பிணைந்து, வழியில் படிப்படியாக எண்ணிக்கை குறைந்துகொண்டே, தனது மரணப்பாதையில் ஸ்மாலென்ஸ்க் நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

★

## விளக்க உரைகள்

**13**
1

**கி**ராஸ்நாயா பாக்ரா நதியைக் கடந்து பக்க வாட்டில் துருப்புகள் போனதாக ஒரு இடத்தில் வருகிறது. ரயாஜான் ரஸ்தா வழியாக மாஸ்கோவி லிருந்து புறப்பட்டு குட்டுஜோவ் போய்க் கொண்டிருந்தபோது மாஸ்க்வா என்ற நதியை அடைந்தார். பின்னால் வலது பக்கமாக திரும்பி பாக்ரா நதியின் கரை வழியாக சென்று பாடோல்ஸ்க் என்ற இடத்தில் துலா ரஸ்தாவை அடைந்தார். அங்கே நதியைக் கடந்து மேற்கு நோக்கிச் சென்று கிராஸ்காயா பாக்ரா கிராமத்தை நோக்கிப் போனார். பழைய காலுகா ரஸ்தாவில் அந்தக் கிராமம் இருக்கிறது. இந்த இடத்தில் போர் நடக்கவேண்டுமென்று முதலில் யோசிக்கப்பட்டது. ஆனால் இன்னும் சிறிது தூரம் பின்வாங்கி நருரா என்ற நதி டாருடினா என்ற ஊரில் போகிற இடத்தில் ஒரு பலமான இடத்தைத் தேர்ந்தெடுத்தார். அங்கேதான் அக்டோபர் 6-ஆம் தேதி யன்று முதன் முதலாக முராட்டோடு போர் நடந்தது.

மாஸ்கோவிலிருந்து ருஷ்ய ராணுவத்தைப் பின்பற்றி வந்த முராட் ஏமாந்து போனார். வலதுபக்கம் திரும்பிய குட்டுஜோவ் இரண்டு கோசாக்குப் பட்டாளங்களை ரயாஜான் சஸ்தா வழியாகப் பின்வாங்கிப் போகும்படி ஏற்பாடு செய்தார். அந்தப் பட்டாளங்களையே ரஷ்யாவின் முழு ராணுவம் என்று நினைத்து புரோநிட்ஜ் என்ற நகரம் வரையில் அவற்றிற்குப் பின்னாலேயே முராட் போனார். தமது தவறை அவர் உணர்ந்த பின்பு குட்டுஜோவ் எங்கே இருக்கிறார் என்பதைக் கண்டுபிடிக்க முனைந்தார். செப்டம்பர் 14-ந் தேதி வரையில் ருஷ்ய ராணுவம் எங்கே போயிருக்கிறது என்ற விஷயத்தை மாஸ்கோவிலிருந்த நெப்போலியன் அறியவில்லை. அதுவரை முராட்டால் கண்டு பிடிக்க முடியவில்லை.

**13**
13

**கே**ப்டன் யாக்காவ்லெவ் என்பவர் கொள்ளை யடிக்கப்பட்டதாகவும், கந்தலான ஆடைகளை அணிந்திருந்ததாகவும் ஒரு இடத்தில் வருகிறது. இந்தக் கேப்டன் யாக்காவ்லெவ் காப்பாளர் படையில் முன்பு கேப்டனாக இருந்தவர்; அலெக்ஸாண்டர் ஹெர்ஜென் என்பவரின் தந்தை. மாஸ்கோவில் மிகுந்த

பணக்கார தனவானாய் இருந்தார். அவருடைய வீடு எரிபட்டுப் போனபின்பு, அவர் அனாதையாக நேர்ந்தது. ஹெர்ஜென் என்பவர் மாஸ்கோவில் நெப்போலியன் நுழைந்தபோது, பிறந்து சில மாதங்களே ஆன ஒரு குழந்தையாய் இருந்தார். அவர் தமது தந்தையைப் பற்றி தம்முடைய ஞாபகக் குறிப்புகளில் எழுதி வைத்திருந்தார். அவருடைய தந்தைக்கு இத்தாலிய மொழி தெரிந்திருந்தபடியால், ஒரு இத்தாலிய அதிகாரி அவர் மீது சிரத்தைகொண்டு, அவருக்கும் அவருடைய குடும்பத்திற்கும் உணவு கொடுத்தாராம். அவரைப் பற்றி ஜெனரல் மார்ட்டியரிடம் பிரஸ்தாபித்தாராம். யாக்காவ்லெவ்வை பாரிஸ் நகரில் ஜெனரல் மார்ட்டியர் சந்தித்திருந்தபடியால், அவரைப் பற்றி நெப்போலியனிடம் ஜெனரல் மார்ட்டியர் கூறினார். மறுநாள் தம்மிடம் அவரை அழைத்து வரும்படி நெப்போலியன் உத்தரவிட்டார். அதேமாதிரி கிரெம்லினுள்ள சிம்மாசன அறையில் நெப்போலியனை யாக்காவ்லெவ் சந்தித்தார். அச்சமயம் அவர் ஒரு பழைய நீல நிறச் சட்டையை அணிந்திருந்தார். பல நாட்களாகச் சுத்தம் செய்யப்படாத ஜோடுகளை அணிந்திருந்தார். இரண்டு நாட்களாக ஷவரம் செய்யாமல் இருந்தார். மாஸ்கோவிலிருந்து பந்தோபஸ்தாக வெளியே போவதற்கு தமக்கு ஏற்பாடு செய்ய வெண்டுமென்று அவர் நெப்போலியனிடம் கேட்டுக் கொண்டாராம். நெப்போலியன் பின்வருமாறு பதில் சொன்னார் :

''வெளியே போவதற்கு அனுமதிகள் கொடுக்கக்கூடாதென்று நான் உத்தரவு போட்டிருக்கிறேன். நீர் எதற்காக வெளியே போக விரும்புகிறீர்? எதைக் கண்டு நீர் பயப்படுகிறீர்? கடைகளை யெல்லாம் திறக்கும்படி நான் உத்தரவிட்டிருக்கிறேன்.''

இதைப்பற்றி ஹெர்ஜென் என்பவர் தம்முடைய ஞாபகக் குறிப்பில் மேலும் சொல்லுகிறார்: ''திறந்த தெருவில், பிரஞ்சு சிப்பாய்கள் நடமாடும் இடத்தில், ஒரு ரஷ்ய கனவானும் அவருடைய குடும்பமும் வசிப்பது என்பது எவ்வளவு மோசமாய் இருக்கும் என்பதை எனது தந்தை சுட்டிக்காட்டினார். இதைக் கேட்ட நெப்போலியன் சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு திடீரென்று பின்வருமாறு கேட்டார்: ''நான் கொடுக்கும் கடிதத்தை ஜார் சக்கரவர்த்தியிடம் நீர் கொண்டு சேர்க்க முடியுமா? அந்த நிபந்தனை மீது உமக்கும் உமது குடும்பத்திற்கும் வெளியே போக அனுமதிக்கும்படி நான் உத்தரவு கொடுக்க முடியும்.''

யாக்காவ்லெவ், பீட்டர்ஸ்பர்க்கில் வந்து சேர்ந்ததும் அவரை நேராக அராக்சீவின் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். (ஸ்பெரான்ஸ்கியை வேலையிலிருந்து தள்ளிய பின்பு அலெக்சாண்டரின் பிரதான மந்திரியாக அராக்சீவ் நியமனம்

பெற்றார்.) அந்த கடிதத்தை ஜாரிடம் கொடுப்பதற்காக அராக்சீவ் எடுத்துக்கொண்டார். சுமார் ஒரு மாதகாலம் அராக்சீவ் வீட்டில் எனது தந்தை கைதியாக இருந்தார். நண்பர் யாரும் அவரைப் பார்ப்பதற்கு அனுமதிக்கப்படவில்லை. சிஷ்கோ ஒருவர்தான் அவரை வந்து பார்த்தார். மாஸ்கோ எரிந்ததைப்பற்றியும், பிரஞ்சுக்காரர்கள் அங்கே பிரவேசித்ததைப் பற்றியும், நெப்போலியனிடம் அவர் கண்ட பேட்டியைப் பற்றியும் உள்ள விவரங்களை அறிந்து வருவதற்காகச் சிஷ்கோவை ஜார் அனுப்பினார்.

**13** (16)

**வி**ல்லைச்சேவகன் விளக்கை ஏற்றினான் என்று ஒரு இடத்தில் வருகிறது. அக்காலத்தில் நெருப்பை உண்டுபண்ணுவதற்கு எந்த முறையை கையாண்டார்கள் என்பது இங்கே விவரமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒரு இரும்புத் துண்டை மற்றொன்றோடு உரசும்போது தீப்பொறிகள் பறக்கின்றன. இந்த பொறிகள் பஞ்சின்மீது விழும்போது, அது புகைய ஆரம்பிக்கிறது. கந்தகத்தில் தோய்த்த ஒரு குச்சியை அந்தப் பஞ்சில் வைக்கும்போது அது தீப்பிடிக்கிறது.

**13** (17)

**தி**ருமதி டி ஸ்டால் என்பவள் நெப்போலியனுக்கு ஒரு பரம விரோதி. அதனால் நெப்போலியன் விடாமல் அவளுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தார். *1812* ஆம் வருஷத்தில் அவள் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்தாள். அங்கே முதலாவது அலெக்சாண்டரால் நன்றாய் வரவேற்கப்பட்டாள், குட்டுஜோவ் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டதும், அவள்தான் முதலாவதாக அவரைப் பாராட்டி அவர் வெற்றி வீரராய்த் திகழுவார் என்று முன்னதாகக் கூறினாள்.

**13** (18)

**யு**த்தத் கவுன்சிலில் பிரஸ்தாபிக்கப்படும் மவுட்டன் என்பவர் ஜெனரல் மவுட்டனாகும். அவருடைய கருத்தை கடைசியாக நேப்போலியன் கேட்டார். அவர் நேரிடையாக உறுதியாகப் பதில் சொன்னார். அதாவது, அந்த நாட்டில் அதிகக் காலம் தங்கிவிட்டதாகவும், கொஞ்சங்கூடத் தயக்க மில்லாமல் உடனே அதைவிட்டு வெளியே போய்விடவேண்டுமென்றும் அவர் கூறினார். பின்னால் நெப்போலியன் எதுவும் பேசாமல் அந்தக் கவுன்சில் கூட்டத்தைக் கலைத்தார்.

★

# 14

# 1

பாராடினோ யுத்தமும், அதற்குப் பின்னால் ஏற்பட்ட மாஸ்கோ ஆக்கிரமிப்பும், அதன் பின்னால் எவ்விதமான போருமின்றிப் பிரெஞ்சுக் காரர்கள் ஓடியதும், சரித்திரத்தில் மிகுந்த அறிவு புகட்டக்கூடிய ஒரு விசித்திரமாகும்.

சமுதாயங்களுடையவும், ராஜ்யங்களுடையவும் ஒருவருக்கொருவர் விரோதமாக வெளிப்படையாக செய்யக்கூடிய காரியங்களை, யுத்தங்களின் மூலமாகக் காட்டுகிறார்கள் என்பதை எல்லா சரித்திர ஆசிரியர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அந்த யுத்தங்களில் கிடைக்கிற பெரிய வெற்றிகளோ, அல்லது சிறிய வெற்றிகளோ ஆகியவற்றைப் பொறுத்துத்தான் அந்த சமுதாயங்களுடையவும், ராஜ்யங்களுடையவும் அரசியம் பலமானது, கூடவோ குறையவோ ஏற்படுகிறது என்பதையும் அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

யாரோ ஒரு ராஜாவோ, அல்லது சக்கரவர்த்தியோ மற்றொருவருடன் மனஸ்தாபம் கொள்ளுவதால், ஒரு படையைத் திரட்டி அவருடைய எதிரியோடு போர் செய்வதும், அதில் மூவாயிரமோ, ஐயாயிரமோ, அல்லது பத்தாயிரமோ உள்ள வீரர்களைக் கொன்று வெற்றிபெற்று ஒரு ராஜாங்கத்தை அடிமைப்படுத்துவதும், பல லட்சக்கணக்கான மக்களின் சமுதாயத்தையே அடிமைப் படுத்துவதுமான சரித்திர விஷயம் விசித்திரமாகக் காணப்படலாம். நாம் அறிந்த வரையில் ஒரு ராணுவத்தின்மீது மற்றொரு ராணுவத்திற்குக் கிடைத்த குறைவான, அல்லது அதிகமான வெற்றிகளைப் பொறுத்தே, அந்த சமுதாயத்தின் பலம் குறைவதோ, கூடுவதோ இருக்கிறது என்பதை இது உறுதிப்படுத்துகிறது. ஒரு சமுதாயத்தில் நூற்றில் பல பங்கான ராணுவம் தோல்வியுறுவதால், அந்த சமுதாயம் முழுவதுமே எதற்காக அடிமைப்பட்டிருக்க வேண்டுமென்பது புத்திக்கு எட்டாததாக இருக்கிறது. ஒரு ராணுவம் வெற்றி பெறுகிறது; உடனே தோற்ற நாடுகளுக்குக் கெடுதியை கொடுக்கும்படியான உரிமைகள், வெற்றி பெற்ற நாட்டிற்கு அதிகரிக்கின்றன. ஒரு ராணுவம் தோல்வி அடைகிறது; உடனே அந்த தோல்விக்கு ஒத்ததான விதத்தில் அதிலுள்ள மக்கள் தங்களுடைய உரிமைகளை இழந்து விடுகிறார்கள். அந்த ராணுவம் படுதோல்வி அடைந்தால், அந்த சமுதாயமும் முழுவதும் அடிமைப்படுத்தப் படுகிறது.

சரித்திர பூர்வமாக புராதன காலத்திலிருந்து இந்தக் காலம் வரையில் இம்மாதிரிதான் நடந்து வருகிறது. நெப்போலியனுடைய

எல்லா யுத்தங்களும் இந்த விதியை உறுதி செய்வதாகக் காணப்படுகின்றன. ஆஸ்திரிய ராணுவம் எவ்வளவு தூரம் தோல்வி அடைந்ததோ, அதற்குத் தகுந்தபடி ஆஸ்திரியா தனது உரிமைகளை இழந்தது. அதே சமயத்தில் பிரெஞ்சுக்காரர்களின் உரிமைகளும் பலமும் கூடின. ஜெனாவிலும் ஆர்ஸ்டாட்டிலும் பிரெஞ்சுக் காரர்கள் பெற்ற வெற்றிகளானவை பிரஷ்யாவின் சுதந்திரத்தை அழித்துவிட்டன.

இப்படி இருக்கும்போது, 1812 - ஆம் வருஷத்தில் மாஸ்கோவிற்குப் பக்கத்தில் பிரெஞ்சுக்காரர்கள் ஒரு வெற்றியை அடைந்தார்கள். அப்புறம் வேறு போர்கள் எதுவும் இல்லாமல், மாஸ்கோ கைப்பற்றப்பட்டது. அதனால் ருஷ்யா அழிந்து விடவில்லை; ஆனால், ஆறு லட்சம் பேர்கள் கொண்ட பிரெஞ்சு ராணுவமும், நெப்போலியனுடைய பிரெஞ்சு சர்க்காருமே அழிந்தன. சரித்திரத்தின் விதிகளுக்கு இவற்றை உட்படுத்து வதற்காக, பாராடினோவில் உள்ள போர்க்களம் ருஷ்யர்களின் கையிலேயே இருந்ததாகவோ, அல்லது மாஸ்கோவைக் கைப்பற்றிய பின்பு நடந்த பல போர்களினால் நெப்போலி யனுடைய ராணுவத்தை அழித்ததாகவோ சொல்லுவது சாத்திய மில்லாத விஷயம்.

பாராடினோவில் பிரெஞ்சுக்காரர்கள் வெற்றி பெற்ற பின்பு, பெரிய போர் எதுவும் நடக்கவில்லை; அல்லது தீவிரமான சிரத்தையோடு எந்தப் போரும் நடக்கவில்லை. என்றாலும், பிரெஞ்சு ராணுவம் அழிந்து போயிற்று. இதற்கு என்ன அர்த்தம்? சீனாவின் சரித்திரத்திலிருந்து ஒரு உதாரணத்தை நாம் எடுத்துச் சொல்வோமானால், அந்த சம்பவமானது ஒரு சரித்திர அற்புதமல்ல என்று சொல்லலாம். (தங்களுடைய முறைகளுக்கு ஒத்ததல்லாத எதையாவது கூறும்போது, சரித்திர ஆசிரியர்கள் வழக்கமாக இந்த வழியைத்தான் பின்பற்றுவார்கள்.) சொற்ப பேர்கள் மட்டும் கலந்து கொண்டு நடந்த சிறிய போராட்டங்களாய் இருந்தால், அவற்றை அபூர்வமானவை என்று நாம் சொல்லலாம். ஆனால் இந்த சம்பவம் நமது தந்தையின் கண்களுக்கு முன்பாக நடந்த ஒரு சம்பவமாகும். அவர்களைப் பொறுத்த வரையில் அந்தப் பிரச்னையானது அவர்களுடைய தந்தை நாட்டின் ''வாழ்வதா, அல்லது சாவதா'' என்ற பிரச்னையாக இருந்தது. அதுவும் தவிர, எல்லா யுத்தங்களையும் விட மிகப் பிரமாதமான யுத்தமாக அது நடந்தது.

பாராடினோ போர் முடிந்து, பிரெஞ்சுக்காரர்களை வெளியேற்றிய சம்பவம் வரையில் நடந்த 1812 - ஆம் வருஷத்திய ராணுவ நடவடிக்கைகளைப் பார்த்தால், ஒரு போரில் வெற்றி பெறுவது ஒரு

நாட்டை வெற்றி பெற்றதாக ஏற்பட முடியாது என்பதை நிரூபிக்கிறது. ஒரு நாட்டை வெற்றி பெற்றதான அறிகுறியைக்கூட அது காட்டவில்லை. ஆகவே, மக்களின் விதியை நிர்ணயிப் பதானது, வெற்றி வீரர்களிடமோ, அல்லது ராணுவங்களிடமோ, அல்லது யுத்தங்களிலோ இல்லையென்றும், வேறு ஏதோ ஒன்றில் இருக்கிறதென்றும் நிரூபிக்கப்படுகிறது.

மாஸ்கோவைவிட்டுப் புறப்படுவதற்கு முன்பாக, பிரெஞ்சு ராணுவத்தின் நிலைமையைப்பற்றிப் பிரெஞ்சு சரித்திர ஆசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்த மகத்தான ராணுவத்தில் குதிரைப் படையையும், பீரங்கிப் படையையும், போக்குவரத்து வண்டிகளையும் தவிர - ஏனெனில் குதிரைகளுக்கோ, கால்நடை களுக்கோ தீனி அகப்படவில்லை - மற்றபடி எல்லாம் ஒழுங்காய் இருந்ததாக அவர்கள் கூறுகிறார்கள். தீனி அகப்படவில்லை என்ற துரதிர்ஷ்டத்திற்கு யாராலும் பரிகாரம் தேடமுடியாது. ஏனெனில், அந்த ஜில்லாவிலுள்ள விவசாயிகள் தங்களிடமிருந்த வைக்கோல் களைப் பிரெஞ்சுக்காரர்கள் அபகரிக்க விடவில்லை. அபகரிக்கக் கூடிய நிலைமை ஏற்படும்போது அந்த வைக்கோல்களை அவர்கள் நெருப்பு வைத்துக் கொளுத்தி விடுவார்கள்.

ஆகவே, அந்த வெற்றியானது வழக்கமாகக் கொடுக்கக்கூடிய பலன்களைக் கொடுக்கவில்லை. கார்ப், விளாஸ் ஆகிய இடங்களைச் சேர்ந்த விவசாயிகள், மாஸ்கோவைவிட்டு பிரெஞ்சுக்காரர்கள் காலி செய்த பின்பு, தங்களுடைய வண்டிகளை மாஸ்கோவிற்கு ஓட்டிக்கொண்டு போனார்கள். அங்கு அகப்படுகிற பொருள்களைக் கொள்ளையடிப்பதற்காக அவர்கள் போனார்கள். அவர்கள் பொதுவாக எந்த விதமான வீரத்தனமான உணர்ச்சி களையும் காட்டிக்கொள்ளவில்லை. என்றாலும், கணக்கற்ற அந்த விவசாயிகள் உயர்ந்த விலை கொடுப்பதற்காக சொல்லியபோதிலும், பிரெஞ்சுக்காரர்களுக்கு வைக்கோல்களை மாஸ்கோவிற்குக் கொண்டுவர மறுத்துவிட்டார்கள். அதற்குப் பதிலாக, அவற்றைத் தீ வைத்துக் கொளுத்தினார்கள்.

டூயல் சண்டை போடுவதற்காக இரண்டு பேர்கள் வாள்களை எடுத்துக்கொண்டு வருகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அந்த சண்டையில் தற்காப்பு வாள் வீச்சு சிறிது நேரம் நடக்கிறது. இருவரில் ஒருவர் தாம் காயம் அடைந்து விட்டதாக திடீரென்று உணருகிறார். இது வெறும் தமாஷ் அல்லவென்றும், தம்முடைய உயிரைப் பொறுத்த விஷயம் என்றும் அவர் எண்ணி, தமது கையிலுள்ள வாளைக் கீழே வீசிவிட்டு, தமது கையில் அகப்படுகிற குண்டாந்தடியை எடுத்துச் சுழற்றுகிறார். தம்முடைய நோக்கத்தை

அடைவதற்கு அந்தக் குண்டாந்தடிக்காரர் சிலாக்கியமான, சுலபமான வழியை புத்திசாலித்தனமாக கையாளுகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அதேசமயத்தில் பரம்பரை சம்பிரதாயங்களையும் கண்ணியத்தையும் நினைத்து, தம்முடைய செய்கையை மறைப்பதற்கு விரும்பி, தாம் வாள் போரில் அந்தப் போரின் விதிகளின் படியே வாளைக்கொண்டே வெற்றி பெற்றதாகக் கூறுகிறார். இம்மாதிரி டூயல் சண்டையினால் எவ்வளவு குழப்பங்களும் தெளிவற்ற தன்மையும் ஏற்படும் என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

முறைப்படி டூயல் சண்டை வேண்டுமென்று விரும்பியதுதான் பிரெஞ்சு ராணுவமாகும்; வாளைக் கீழே எறிந்துவிட்டு குண்டாந்தடியைத் தூக்கி சுழற்றியதுதான் ருஷ்ய மக்களாகும். டூயல் போரில் விதிகளின்படி இந்தக் காரியத்தை விளக்கிச் சொல்ல விரும்புகிறவர்கள்தான் அந்த சம்பவத்தை விளக்கிக் கூறிய சரித்திர ஆசிரியர்களாகும்.

ஸ்மாலென்ஸ்கைக் கொளுத்திய பின்பு ஒரு போர் ஆரம்பமாயிற்று. பழைய போர் சம்பிரதாயங்களை ஒட்டியதாக இல்லாமல் அந்தப் போர் இருந்தது. அவையாவன: கிராமங் களையும், பட்டணங்களையும் கொளுத்துதல்; போர்களுக்குப் பின்னால் பின்வாங்கிப் போதல்; பாராடினோவில் அடித்து விட்டு மேலும் பின்வாங்குதல்; மாஸ்கோவில் நெருப்பு ஏற்பட்டு அழிந்துபோதல்; கொள்ளைக்காரர்களைப் பிடித்தல்; போக்குவரத்து வண்டிகளைக் கைப்பற்றுதல்; கொரிலா முறையில் போர் செய்தல்; இவையெல்லாம் யுத்த சம்பிரதாய விதிகளுக்கு மாறுபட்ட வையாகும்.

நெப்போலியன் இதை உணர்ந்தார். மாஸ்கோவில் தற்காப்பு செய்துகொள்ளும் நிலைமையை அவர் மேற்கொண்டார். தமது எதிரியிடம் ஒரு குத்துவாள் இருப்பதற்குப் பதிலாக, தமது தலைக்குமேலே ஒரு பெரிய குண்டாந்தடியை அவன் உயர்த்திப் பிடித்துக்கொண்டிருப்பதைக் கண்டார். யுத்த விதிகளுக்கு புறம்பாக காரியங்கள் நடப்பதாக குட்டுஜோவிடமும், அலெக்ஸாண்டர் சக்கரவர்த்தியிடமும் புகார் செய்வதை அவர் நிறுத்தவேயில்லை - கொல்லுவதற்குக்கூட விதிகள் இருப்பது போல அவர் பேசினார். யுத்த விதிகளைப் பின்பற்றவில்லையென்று பிரெஞ்சுக்காரர்கள் புகார் சொல்லியபோதிலும், உயர் பதவிகளிலுள்ள சில ருஷ்யர்களுக்கு ஒரு குண்டாந்தடியை எடுத்து யுத்தம் செய்வது கண்ணியமல்லவென்று தோன்றியபோதிலும் அவர்கள் பாராமுகமாக இருந்து விட்டார்கள். மக்களின் யுத்தமாகிய அந்த

குண்டாந்தடியானது, மிகுந்த பயங்கரத்தோடும் கம்பீரமான பலத்தோடும், எந்த விதியையும் கவனிக்காமலும், யாருடைய நினைப்பையும் பொருட்படுத்தாமலும், வேறு எதைப்பற்றியும் சிந்தனை செய்யாமலும், அந்த குண்டாந்தடியானது மேலே கிளம்பி, கீழே வந்து அடித்துக்கொண்டே இருந்தது. தொடர்ச்சியாக அதன் வேலையை அது செய்து, பிரெஞ்சுக்காரர்களின் படையெடுப்பு முற்றிலும் அழிந்து போகிற வரையில், பிரெஞ்சுக்கார்களை அது அடித்துக்கொண்டே இருந்தது.

அந்தக் கலையின் விதிகளின்படி - *1813* - ஆம் வருஷத்தில் பிரெஞ்சுக்காரர்கள் செய்ததைப் போல - மக்கள் தங்களுடைய உடைவாளை கம்பீரமாகவும் மரியாதையாகவும் அந்த மகத்தான வெற்றி பெற்றவர்களுக்குச் சமர்ப்பிக்காமல் இருந்தது நல்லதாகும். நெருக்கடியான சமயத்தில், அம்மாதிரி சந்தர்ப்பங்களில் மற்றவர்கள் எம்மாதிரியான விதிகளை மேற்கொண்டார்கள் என்பதைக் கேட்காமல், சுலபமாகவும் எளிதாகவும் கையில் அகப்படுகிற குண்டாந்தடியைத் தூக்கி அடிப்பதும் நல்லதாகும். மனதிலுள்ள வெறுப்பும் பழிவாங்கும் உணர்ச்சியும் தீர்ந்து, அந்த இடங்களில் இகழ்ச்சியும் இரக்கமும் ஏற்படுகிற வரையில், அந்த குண்டாந்தடியால் அடித்துக்கொண்டே இருந்ததும் மக்களுக்கு நல்லதேயாகும்.

## 14

## 2

**யு**த்த விதிகள் என்று கூறப்படுபவைகளிலிருந்து விலகி நின்று செய்த அனுகூலமான காரியமாக ஒரு விஷயம் விளங்கியது. அதுதான் வெவ்வேறு இடங்களில் பரவி நின்று சிறு கூட்டங்கள் ஏராளமாக ஒன்று சேர்ந்திருக்கும் படைகளைத் தாக்குவதாகும். சொந்த நாட்டைக் காப்பாற்றவேண்டிய நிலைமை ஏற்படும்போதெல்லாம், அம்மாதிரி செய்கைகள் எப்பொழுதுமே யுத்தங்களில் தோன்றுவதுண்டு. இரண்டு கூட்டங்கள் ஒன்றுக்கொன்று எதிர் எதிராக நின்று, அம்மாதிரி நடவடிக்கைகளில் போர் செய்வதில்லை. சிறு சிறு கூட்டங்களாகப் பிரிந்து நின்று, தனித்தனியாகத் தாக்குவார்கள். எதிரிகள் அதிக பலமுள்ளவர்களாய் இருந்து திருப்பித் தாக்கினால், பின்வாங்கி ஓடிவிடுவார்கள். மீண்டும் வாய்ப்பு ஏற்படும்போது, மறுபடியும் தாக்குவார்கள். இம்மாதிரி வேலைகளை, கொரிலாக்கள் ஸ்பெயின் நாட்டில் செய்தார்கள்; காக்கஸஸ் பிரதேசத்தில் மலை நாட்டு மக்கள் செய்தார்கள்; *1812* - ஆம் வருஷத்தில் ருஷ்யர்களும் செய்தார்கள்.

இம்மாதிரி போர் முறையை, ''கொரிலா போர் முறை'' என்று அழைக்கிறார்கள். அம்மாதிரி சொல்லுவதால் அதன் அர்த்தத்தைப் முழுவதும் விளக்கி விட்டதாக மக்கள் நினைக்கிறார்கள். ஆனால் இந்தப் போர் முறையானது, மிகவும் திறமை வாய்ந்த ராணுவ தந்திரம் என்று சொல்லப்படும் ஒரு விதிக்கு உட்பட்டதல்ல; அதற்கு நேர் விரோதமானதாகும். தாக்குகிறவர்கள் தங்கள் ராணுவத்தைத் தங்களுடைய எதிரியினுடைய படைகளுக்கு அதிகமாக ஒரு இடத்தில் குவித்து வைத்திருக்க வேண்டுமென்று அந்த விதி சொல்லுகிறது.

கொரிலா போர் முறையானது, அந்த விதிக்கு நேர்மாறானதாக இருக்கிறது. (ஆனால் அந்தப் போர் முறையானது, எப்பொழுதும் வெற்றிகரமாய் இருப்பதாக சரித்திரம் காட்டுகிறது.)

ஒரு ராணுவத்தின் பலமானது அதனுடைய எண்ணிக்கையைப் பொறுத்து இருக்கிறதென்று ராணுவ சாஸ்திரம் நினைக்கிற படியால், இந்த முரண்பாடு தோன்றுகிறது. அதிக எண்ணிக்கை இருந்தால், ஒரு ராணுவம் அதிக பலமுள்ளதாய் இருக்குமென்று ராணுவ சாஸ்திரம் கூறுகிறது. பெரிய பட்டாளங்கள் இருக்கிற இடத்தில்தான், நியாயமும் இருக்குமென்று அது சொல்லுகிறது.

ராணுவ சாஸ்திரம் இம்மாதிரி சொல்லுவதானது, யந்திரங்களின் வேகத்தை அதன் கனத்தைப் பொறுத்து நிர்ணயிப்பதுபோல் இருக்கிறது: அசையும் பொருள்களின் வேகமானது அதன் கனத்தைப் பொறுத்து சமமாகவோ, சமம் இல்லாமலோ இருக்கும் என்று சொல்லுவதைப்போல் இருக்கிறது. ஆனால், வேகம் என்பது கனமும் விசையும் சேர்ந்து உற்பத்தி செய்யப்படுவதாகும்.

ராணுவ காரியங்களில் ஒரு ராணுவத்தின் பலமானது அதனுடைய எண்ணிக்கையும், வேறு ஏதோ ஒன்றும் சேர்ந்து உற்பத்தி செய்வதாகும்.

ஒரு ராணுவத்தின் எண்ணிக்கையைப் பொறுத்து அதன் பலன் இருப்பதில்லை என்பதைக் கணக்கற்ற சம்பவங்கள் காட்டுகின்றன.. சிறிய படைப்பிரிவுகள் பெரிய ராணுவங்களைத் தோற்கடிக்கின்றன என்பதற்கும் சரித்திரத்தில் ஏராளமான ஆதாரங்கள் காணப்படுகின்றன. இவற்றை யெல்லாம் பார்த்த பின்பு, இனம் தெரியாத வேறு ''ஏதோ ஒன்று'' இருப்பதை சரித்திர சாஸ்திரம் மறைமுகமாக ஒப்புக்கொள்ளுகிறது. அந்த ''ஏதோ ஒன்றை'' கண்டுபிடிக்கவும் முயற்சி செய்கிறது. அந்த ''ஏதோ ஒன்றை'' அணி வகுப்புகளின் அமைப்புகளிலுள்ள கணக்குகளிலும், உபயோகிக்கப் பட்ட தளவாடங்களிலும், பொதுவாக கமாண்டர்களின் மேதையிலும் கண்டுபிடிப்பதற்கு சரித்திர சாஸ்திரம் முயற்சி

செய்கிறது. இம்மாதிரி வெவ்வேறான பொருள்களை அந்த ''ஏதோ ஒன்''றிற்குச் சுமத்துவதானது சரித்திர உண்மைகளுக்கு ஒத்ததாக இல்லை.

என்றாலும், மேல் அதிகாரிகளால் யுத்த காலத்தில் பிறப்பிக்கப்பட்ட வியூகங்களைப் பற்றிய உத்தரவுகள் மிகச் சிறந்தவை என்ற தவறான கருத்தை நாம் துறக்கவேண்டியது அவசியமாய் இருக்கிறது. ''வீரர்களுக்கு'' அந்த கருத்து பெருமை தரக்கூடியதாய் இருந்தாலும், அதை நாம் துறப்போமானால் இனம் தெரியாத அந்த ''ஏதோ ஒன்றை'' கண்டுபிடித்து விடலாம்.

அந்த இனம் தெரியாத ''ஒன்று'' தான், ராணுவத்தின் உள்ளக்கிடக்கை அல்லது உற்சாகமாகும். ஒரு ராணுவத்தைச் சேர்ந்த எல்லா மனிதர்களும் ஒரு மேதையின் சேனாதிபத்தியத்தின் கீழ் போர் செய்கிறார்களா, அல்லவா என்பதை நினைக்காமல் குண்டாந்தடிகளால் போர் செய்கிறார்களா, அல்லது துப்பாக்கிகளால் போர் செய்கிறார்களா என்பதையும் கவனிக்காமல் யுத்தம் செய்யவும், ஆபத்துகளை எதிர்நோக்கவும் எவ்வளவுக்கெவ்வளவு கவனிக்காமல், தயாராயிருக்கிறார்களோ, அதைத்தான் அந்த இனம் தெரியாத சக்தி என்று கூறுகிறோம். யுத்தம் செய்யவேண்டுமென்று விரும்புகிறவர்கள் எப்பொழுதுமே அந்த யுத்தத்திற்கான சாதகமான நிலைமைகளை அமைத்துக்கொள்ளுவார்கள்.

ராணுவத்தின் உற்சாகம்தான் மூல பலமாக அமைகிறது. அந்த பலத்தை ராணுவத்தின் எண்ணிக்கையானது அதிகமாகப் பெருக்கி முடிவான பலத்தை உருவாக்குகிறது. இந்த இனம் தெரியாத மூல பலத்தை - ராணுவத்தின் உற்சாகத்தை - வரையறுத்து அதன் முக்கியத்துவத்தை காட்டுவது என்பது சாஸ்திரத்திற்கு ஒரு பிரச்னையாக இருக்கிறது.

இந்த பிரச்னையில் முடிவு காண வேண்டுமென்றால், அந்த இனம் தெரியாத 'ஒன்று'க்குப் பதிலாக, வேறொன்றை சொல்லுவதை விட்டுவிடவேண்டும். அதாவது, சேனாதிபதியின் உத்தரவுகள், உபயோகிக்கப்பட்ட தளவாடங்கள் ஆகியவைகளை, அந்த மூலபலத்தின் முக்கியத்துவத்தை அறியாமல், தவறாக கருதுவதை விட்டு விடவேண்டும். இந்த இனம் தெரியாத சக்தியை முழுவதும் உணரவேண்டும். அதாவது, அந்த சக்திதான் ஆபத்தை கவனிக்காமல் போர் செய்யும் விருப்பத்தை குறைவாகவோ, கூடுதலாகவோ கொடுக்கிறது என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும். அப்பொழுதுதான் சரித்திர சம்பவங்களை இந்த இனம்

தெரியாத பலத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியும். அதன் பின்னால்தான் இனம் தெரியாத பலத்தை வரையறுக்க முடியும்.

பத்து மனிதர்களோ, சில படைகளோ, பட்டாளங்களோ, பதினைந்து மனிதர்களையோ, சிறு படைகளையோ, பட்டாளங் களையோ எதிர்த்து சண்டை போட்டு வெற்றி பெறுகிறார்கள். அதாவது, கொன்றோ, கைதிகளாக பிடித்தோ வெற்றி பெறு கிறார்கள். தங்களில் நாலுபேரை இழந்து விடுகிறார்கள். அதனால் ஒரு பக்கத்தில் நாலுபேரை இழக்கிறார்கள். எதிர் கட்சியில் பதினைந்து பேரையும் இழக்கிறார்கள். ஆகவே, இந்த நாலுபேர் பதினைந்து பேர்களுக்கு சமானமாகிறார்கள். இந்த கணக்கானது இனம் தெரியாத பலத்தின் மதிப்பை நமக்குக் கொடுக்கவில்லை. ஆனால், அந்த இரண்டு விதமான இனம் தெரியாத பலத்தின் வீதாசாரத்தை நமக்குக் கொடுக்கிறது. யுத்தங்களையும் படையெடுப்புகளையும், யுத்த காலங்களையும் இம்மாதிரியாக வீதாசாரம் போடுவோமானால் பலவிதமான எண்ணிக்கைகள் நமக்குக் கிடைக்கும். அவற்றில் சில சட்டங்கள் அல்லது விதிகள் அமைந்திருக்கும். அவற்றை நாம் கண்டு பிடிக்க வேண்டும்.

எதிரியை தாக்கும்போது ஒரு ராணுவமானது பெருங் கூட்டமாகச் சேர்ந்து தாக்கவேண்டும் என்றும், பின் வாங்கும்போது சிறுசிறு கூட்டங்களாக பின்வாங்கவேண்டும் என்று ராணுவ தந்திர விதி சொல்லுகிறது. அப்படிச் சொல்லும்போது, ஒரு ராணுவத்தின் பலமானது அதனுடைய உற்சாகத்தை பொறுத்துத்தான் இருக்கிறது என்ற உண்மையை அந்த விதி தன்னை அறியாமலேயே உறுதி செய்கிறது. குண்டுகளுக்கு அடியில் வீரர்களை நடத்திச் செல்ல வேண்டுமானால், எதிர்ப்புகளை தடுக்கும்போது இருப்பதைவிட அதிகமான கட்டுப்பாடு அவசியமாகும். அந்த கட்டுப்பாடு பெருங் கூட்டமாக செல்லும்போதுதான் சாத்தியமாகும். ஆனால், இந்த விதியானது ராணுவத்தின் உற்சாகத்தை கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் விட்டுவிடுகிறது. அதனால், அந்த விதி எப்பொழுதுமே தவறானதாய் இருக்கிறது. தேசீய யுத்தங்களில் ஏற்படக்கூடிய காரியம் ஒன்று உண்டு. அதுதான் துருப்புகளின் உற்சாகம் கூடுவதும் குறைவதுமாகும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஏற்படக்கூடிய சம்பவங்களுக்கு இந்தவிதியானது நேர் விரோதமாக இருக்கிறது.

1812 - ஆம் வருஷத்தில் பிரெஞ்சக்காரர்கள் பின்வாங்கினார்கள். ராணுவ தந்திர விதியின்படி நடப்பதாய் இருந்தால் அவர்கள் தங்களை காப்பாற்றிக் கொள்ளுவதற்காக பற்பல பிரிவுகளாகப் பிரிந்து தங்களை அமைத்துக்கொண்டிருக்க வேண்டும். அப்படிச்

செய்யாமல் அவர்கள் பெருங்கூட்டமாக பின்வாங்கினார்கள். அந்த ராணுவத்தின் உற்சாகம் மிகவும் குறைந்துபோனபடியால், பெருங்கூட்டமாக சேர்ந்து இருப்பது ஒன்றுதான் அந்த ராணுவத்தை இணைத்து வைக்கக்கூடியதாக இருந்தது. ராணுவ தந்திர விதியின்படி செய்வதாய் இருந்தால், ருஷ்யர்கள் அவர்களை பெருங்கூட்டமாகச் சேர்ந்து தாக்கியிருக்கவேண்டும். ஆனால், உண்மையில் அவர்கள், பல சிறு பிரிவுகளாகப் பிரிந்து தாக்கினார்கள். ஏனென்றால், அவர்களுடைய உற்சாகம் அதிகமாய் வளர்ந்து இருந்தது. அதனால் உத்தரவுகளை எதிர்பார்க்காமலேயே தனி நபர்கள் பிரெஞ்சுக்காரர்களைத் தாக்கினார்கள். அம்மாதிரி செய்து ஆபத்துகளையும் கஷ்டங்களையும் தாங்கிக் கொள்ளுவதற்கு, அவர்களுக்கு எந்தவிதமான கட்டாயமும் அவசியமாக இருந்ததில்லை.

## 14

### 3

ஒழுங்கான போராக இல்லாமல், திடீர் திடீரென்று தாக்குதலாகிய கொரிலா போர் முறையானது, பிரெஞ்சுக்காரர்கள் ஸ்மாலென்ஸ்கிற்குள் வந்ததிலிருந்து ஆரம்பமாயிற்று.

இந்த கொரிலா போரை உத்தியோக பூர்வமாக அங்கீகரிப்பதற்கு முன்பாகவே, ஆயிரக்கணக்கான எதிரிகளைச் சேர்ந்த கொள்ளையடிப்பவர் களையும், குதிரைத்தீனியைத்தேடி அலைந்தவர்களையும், ராணுவத்தி லிருந்து ஓடியவர்களையும், கோசாக்குகளும், விவசாயிகளும் பிடித்து அழித்தார்கள். ஒரு பைத்தியம் பிடித்த நாயை மற்ற நாய்கள் எப்படி தாக்குமோ, அதே மாதிரி தாக்கி அழித்தார்கள். ராணுவ சாஸ்திரத்தின் விதிகள் எப்படி இருந்தபோதிலும், பிரெஞ்சுக்காரர்களை நாசமாக்கிய இந்த பயங்கரமான ஆயுதத்தின் உபயோகத்தை, முதல் முதலாக அவருடைய ருஷ்ய உணர்ச்சியுடன் டெனைஸ் டாவிடாவ் என்பவர்தான் கண்டு கொண்டார். இந்த கொரிலா போர் முறையை ஒழுங்குபடுத்தி அமைப்பதற்கான நடவடிக்கைகளை எடுத்த பெருமை அவரையே சேரும்.

ஆகஸ்டு 24-ந் தேதியன்று டாவிடாவின் முதலாவது கொரிலா படைப் பிரிவு அமைக்கப்பட்டது. அதன் பின்னால், மற்றப் படைப்பிரிவுகளை உத்தியோக பூர்வமாக அங்கீகரித்தார்கள். போர்க்காலம் நீடிக்க நீடிக்க, இந்த கொரிலாப் படைகள் எண்ணிக்கையிலும் அதிகமாகிக் கொண்டு வந்தன.

ராணுவ அமைப்பில் சேராத இந்த வீரர்கள், எதிரியின் பெரிய ராணுவத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக அழித்துவந்தார்கள். பட்டுப் போய்க் கொண்டிருக்கும் ஒரு மரமானது கீழே உதிர்ந்துவிழும் இலைகளை அவர்கள் சேகரிப்பது போல, பிரெஞ்சு ராணுவத்தைச் சேர்ந்த தனிப்பட்டவர்களை அழித்து வந்தார்கள். சில சமயங்களில் மரத்தையேகூட குலுக்கி இலைகளை சேகரிப்பார்கள். பிரெஞ்சுக்காரர்கள் அக்டோபர் மாதத்தில் ஸ்மாலென்ஸ்கை நோக்கி ஓடியபோது, அம்மாதிரி கொரிலா கூட்டங்கள் வெவ்வேறு அளவுகளைக் கொண்டவையாகவும், வெவ்வேறு அமைப்புகள் உள்ளவையாகவும் நூற்றுக்கணக்காய் இருந்தன. சில கூட்டங்கள் ராணுவத்தைப்போல, கால்படை, பீரங்கிப்படை, பரிவாரங்கள், வாழ்க்கைக்கு சௌகரியமாயுள்ள சாதனங்கள் ஆகியவைகளோடு இருந்தன. சில படைகள் கோசாக்கு குதிரை வீரர்களை மட்டும் கொண்டவையாக இருந்தன. சில படைகள் கால்நடையாக போகிறவர்களை மட்டும் கொண்டிருந்தன. விவசாயிகளையும் மிராசுதார்களையும் கொண்ட அநேக கூட்டங்கள் இருந்தன. அவர்கள் யார் என்பது கடைசி வரையில் தெரியாமலேயே போய்விட்டது? ஒரு பாதிரி நடத்திவந்த படையானது பல நூறு கைதிகளை ஒரே மாதத்தில் பிடித்தது. கிராமத் தலைவருடைய மனைவியாகிய வாசிலைஸா என்பவள் நூற்றுக்கணக்கான பிரெஞ்சுக்காரர்களின் தலைகளை சீவினாள்.

அந்தக் கொரிலா போரின் வேகமானது மிகுந்த கடுமையாக அக்டோபர் மாதக் கடைசியில் வளர்ந்து பெருகியது. அதனுடைய முதல் கட்டம் கழிந்துவிட்டது. அக்காலத்தில் ஒவ்வொரு நிமிஷமும் பிரெஞ்சுக்காரர்கள் தங்களைச் சூழ்ந்து கைப்பற்றிக்கொள்வார்கள் என்று பயந்து, காடுகளில் குதிரைகளிலிருந்தே இறங்காமல், தங்களை தொடர்ந்து வருவார்களோ என்று நினைத்துக்கொண்டே இருந்தார்கள். அக்காலங்களில் அவர்கள் காட்டிய தீரத்தைக் கண்டு, அவர்களுக்கே மலைப்பு ஏற்பட்டது. அக்டோபர் கடைசியில் இந்தப் போர் முனையானது ஒரு திட்டமான உருக்கொண்டது. பிரெஞ்சுக்காரர்களை எதிர்த்து என்னென்ன செய்யலாம், என்னென்ன செய்யக் கூடாது என்பதை, அவர்கள் எல்லாருமே இப்பொழுது தெளிவாய் அறிந்துகொண்டார்கள். படைப் பிரிவுகளின் கமாண்டர்கள் தங்களுடைய பரிவாரங்களோடு ராணுவ விதிகளின்படி, பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தூரத்தில் வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் மட்டுமே, கொரில்லாக்கள் சொல்லிய பல காரியங்கள் சாத்தியமற்றவை என்று நினைத்தார்கள். வெகு காலத்திற்கு முன்பே தங்கள் வேலைகள்

ஆரம்பித்த பல சிறிய கொரிலாக் கூட்டங்கள், ஏற்கெனவே பிரெஞ்சுக்காரர்களிடம் நெருங்கி கவனித்து வந்தபடியால், பெரிய படைப் பிரிவுகளைக் கொண்ட கமாண்டர்கள் செய்வதற்குப் பிரியம் இல்லாத பல காரியங்களை, இந்த சிறிய கூட்டங்கள் செய்து முடிக்க முடியும் என்று நம்பிக்கை கொண்டார்கள். பிரெஞ்சுக்காரர்களுக்கு மத்தியில் நுழைந்து அனுபவம் அடைந்த் கோசாக்குகளும், விவசாயிகளும், ஒவ்வொரு காரியமும் சாத்தியம் என்றே கருதி வந்தார்கள்.

ராணுவ அமைப்பில் சேராத டெனைசாவ், அக்டோபர் 22-ந் தேதியன்று, தமது கூட்டத்தோடு கொரிலா போரின் உற்சாகத்தில் உச்சநிலையில் இருந்தார். அன்று காலையிலிருந்து அவரும் அவர் கூட்டத்தாரும் சவாரிபோய்க்கொண்டிருந்தார்கள். நாள் முழுவதும் பிரதான ரஸ்தாவிற்கு பக்கத்திலிருந்த காடுகளில், அவர் ஒளிந்திருந்து பார்த்துக் கொண்டிருந்தார். அந்த ரஸ்தாவில் பிரெஞ்சுப் படையைச் சேர்ந்த சாமான் வண்டிகளும், ருஷ்ய கைதிகளும் பிரெஞ்சு ராணுவத்திலிருந்து தனியாகப் பிரிக்கப்பட்டு பந்தோபஸ்தோடு ஸ்மாலென்ஸ்கிற்கு போய்க்கொண்டிருப்பதைப் பார்த்தார். டோலாகாவும் ஒரு சிறிய கொரிலா பிரிவை நடத்தி வந்தார். டெனைசாவுக்கும், டோலாகாவுக்கும், சில பெரிய படைப்பிரிவுகளின் கமாண்டர்களுக்கும், மேலே சொல்லிய காவல் கோஷ்டியைப் பற்றி தெரியும். டெனைசாவ் சொன்ன மாதிரி, அவர்களுக்கு எல்லாம் அந்த கோஷ்டியின்மீது ஆசை பிறந்தது. ஒரு போலந்து கமாண்டரும், ஒரு ஜெர்மன் கமாண்டரும், அந்த பிரெஞ்சு கோஷ்டியை தாக்குவதற்காக, தங்களோடு வந்து சேரும்படி ஏக காலத்தில் டெனைசாவுக்கு அழைப்பு அனுப்பினார்கள்.

''இல்லை, சகோதரரே, நான் நேற்று பிறந்தவனல்ல!'' என்று அந்த அழைப்புகளைப் பார்த்ததும், டெனைசாவ் சொன்னார். அவ்வளவு பெரிய தீரரும் பிரசித்திப்பெற்ற ஜெனரலுமான ஒருவரிடம் சேவை செய்வதற்கு, தமக்கு மனப்பூர்வமாக ஆசையிருந்தபோதிலும், அம்மாதிரி அவர் செய்ய முடியவில்லையென்றும், ஏனெனில், அந்த போலந்து கமாண்டரின் சேவையில் அவர் இருப்பதாகவும், ஜெர்மன் கமாண்டருக்குப் பதில் எழுதினார். அதே மாதிரி, தாம் ஜெர்மன் கமாண்டரிடம் சேவையில் இருப்பதாக, போலந்து கமாண்டருக்குப் பதில் எழுதினார்.

இம்மாதிரியாக விஷயங்களை முடிப்பதென்று, மேல் அதிகாரிகளுக்கு தெரிவிக்காமல் தங்களுடைய சிறிய படைப் பிரிவுகளைக் கொண்டே, அந்த சாமான் வண்டி கூட்டத்தைக் கைப்பற்றி விட வேண்டுமென்று, டெனைசாவும் டோலாகாவும்

விரும்பினார்கள். அக்டோபர் 22-ந் தேதியன்று அந்த கூட்டமானது மிக்கூலினா என்ற கிராமத்திலிருந்து, ஷாம்ஷெவா என்ற கிராமத்திற்கு போய்க்கொண்டிருந்தது. மிகக்கூலினாவுக்கும் ஷாம்ஷெவாவுக்கும் மத்தியிலிருந்த ரஸ்தாவின் இடது பக்கத்தில் பெரிய காடுகள் இருந்தன. சில இடங்களில், அந்தக் காடுகள் ரஸ்தா வரையில் கூட நீண்டிருந்தன. சில இடங்களில், அந்தக் காடுகள் ரஸ்தாவிலிருந்து ஒரு வெர்ஸ்டோ, அதற்கு அதிகமாகவோ தூரத்திலிருந்தன. இந்தக் காடுகளில்தான் டெனைசாவும், அவருடைய கூட்டமும், நாள் முழுவதும் சவாரி போய்க்கொண்டிருந்தார்கள். சில இடங்களில், நடு காடுகளிலும், சில இடங்களில் காடுகளின் ஓரத்திலும் அவர்கள் சவாரி வந்தார்கள். ஆனால், அந்த பிரெஞ்சுக் கூட்டமானது, தங்கள் பார்வையிலிருந்து தப்பி விடாதபடி பார்த்துக்கொண்டே வந்தார்கள். மிக்கூலினாவிற்கு பக்கத்தில், ரஸ்தாவில் கொஞ்ச தூரத்திற்கு அந்த காடானது ரஸ்தா ஓரம் வரை நீண்டிருந்தது. அந்த இடத்தில் குதிரைகளின் சேணங்கள் ஏற்றப்பட்ட இரண்டு வண்டிகள், சகதியில் அகப்பட்டு அசைய முடியாமல் நின்றன. அந்த வண்டிகளில் உள்ள சேணங்கள் பூராவையும், அன்று காலையில்தான் டெனைசாவின் கோசாக்குகள் அபகரித்துக்கொண்டு வந்தார்கள். அது முதல் அன்று மாலை வரையில் பிரெஞ்சுக்காரர்களை தாக்காமல், அவர்கள் போவதை கவனித்துக்கொண்டே வந்தார்கள். ஷாம்ஷெவா கிராமத்திற்கு பிரெஞ்சுக்காரர்கள் போகிற வரையில், அவர்களுக்குப் பீதியை உண்டுபண்ணாமல், அமைதியாக அவர்களை விட்டுவிட வேண்டியது அவசியம் என்று டெனைசாவ் நினைத்தார். அன்று மாலையில் ஒரு காவல்காரரின் குடிசையில் கலந்து பேசுவதற்காக, டோலாகாவ் வந்து சேர்வது என்று தீர்மானமாகி இருந்தது. காட்டிலுள்ள அந்தக் காவல்காரரின் குடிசை, ஷாம்ஷெவாவிலிருந்து ஒரு வெர்ஸ்ட் தூரத்தில் இருந்தது. மறு நாள் காலையில் டெனைசாவும் டோலாகாவும் சேர்ந்து, புயல் காற்றைப்போல அந்தப் பிரெஞ்சுக்காரர்களை இரு பக்கங்களிலிருந்தும் தாக்கி, ஒரே அடியில் அவர்களைப் முழுவதும்க்கைது செய்துவிட வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்திருந்தார்கள்.

மிக்கூலினாவிலிருந்து இரண்டு வெர்ஸ்ட் தூரத்திலுள்ள, பின்னாலுள்ள அவர்களுடைய முகாமில், ஆறு கோசாக்குகளை நிறுத்தி வைத்திருந்தார்கள். அந்த வழியாக புதிதாகப் பிரெஞ்சுப் படை ஏதாவது தோன்றுமானால், அதை தங்களிடம் வந்து அறிவிக்க வேண்டுமென்று உத்தரவிட்டிருந்தார்கள்.

ஷாம்ஷெவாவிற்கு அப்புறமாக அந்த ரஸ்தாவை அதே மாதிரி கவனித்து வரவேண்டுமென்றும், அந்த இடத்திலிருந்து மற்ற பிரெஞ்சு துருப்புகள் எவ்வளவு தூரத்தில் இருக்கிறார்கள் என்பதை கவனிக்க வேண்டுமென்றும் டோலாகாவிடம் சொல்லப்பட்டிருந்தது. அந்தக் காவல்படைக் கூட்டத்தில் 1500 வீரர்கள் இருக்கிறார்கள் என்று மதிப்பிட்டிருந்தார்கள். டெனைசாவிடம் 200 பேர் இருந்தார்கள். டொலாகாவிடம் அதே மாதிரி இருக்கலாம். ஆனால், எதிரிகளின் படைக்கும், தமது படைக்கும் உள்ள தாரதம்மியத்தைக் கண்டு டெனைசாவ் கொஞ்சங்கூட கவலைப்படவில்லை. அவருக்கு இப்பொழுது வேண்டியதெல்லாம், இந்தக் காவல் படையினர் எந்த பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை அறிய வேண்டியதேயாகும். அதற்காக எதிரி படையிலிருந்து ஒருவனைக் கைப்பற்றவேண்டும். அன்று காலையில் சாமான் வண்டிகளை அவர்கள் தாக்கிய போது, அவசரமாக நடவடிக்கைகளை செய்தபடியால், அந்த வண்டிகளுடன் இருந்த பிரெஞ்சு வீரர்களையெல்லாம் கொன்று விட்டார்கள். ஒரே ஒரு சிறிய டமாரம் அடிக்கும் பையனை மட்டும் உயிரோடு பிடித்தார்கள். அவன் தன்னுடைய படையிலிருந்து பின் தங்கியவனான படியால், அந்த காவல் கூட்டத்தில் எத்தனை வீரர்கள் இருக்கிறார்கள் என்பதைப் பற்றியும், அந்த வீரர்களைப் பற்றிய விவரங்களையும் நிச்சயமாக சொல்ல முடியவில்லை.

அந்த படை முழுவதுமே விழிப்படையும்படி செய்யக் கூடாதென்றும், அம்மாதிரி செய்யக்கூடிய விதத்தில் இரண்டாவது தாக்குதலை நடத்துவது அபாயகரமானதென்றும் டெனைசாவ் நினைத்தார். ஆகவே, அவர் டைக்கன் ஷெர்பாட்டி என்ற தமது கோஷ்டியைச் சேர்ந்த ஒரு விவசாயியை, ஷாம்ஷெவா கிராமத்திற்கு அனுப்பினார். முன்னதாக அனுப்பப்பட்ட சப்ளை அதிகாரிகளில் ஒருவரையாவது பிடித்து வரும்படி அவனை அனுப்பினார்.

# 14

## 4

அன்று இலையுதிர் காலத்து மழை நாளாய் இருந்தது. வானமும் அடிவானமும் கலங்கிய நீரைப் போலக் காணப்பட்டன. சில வேளைகளில் ஒருவிதமான மூடுபனி கீழே இறங்கியது. திடீரென்று சாய்வான, பலமான மழையும் பெய்து வந்தது.

டெனைசாவ் ஒரு கம்பளி வெளிச் சட்டை அணிந்து, ஆட்டுத்தோல் குல்லாய் தரித்திருந்தார். மழை நீரும்

அதன்மீது வழிந்து ஓடியது. ஒரு ஒல்லியான உயர்ஜாதிக் குதிரை மீது ஏறி வந்துகொண்டிருந்தார். அந்தக் குதிரையானது தலையைத் திருப்பி, காதுகளைப் பின்னால் வைத்துக்கொண்டதைப் போலவே, அவரும் அந்தப் பெய்யும் மழையில் குறுகி உட்கார்ந்து தமக்கு முன்னால் உள்ளதை ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய மெலிந்த முகத்தில் குட்டையான நெருக்கமான கருப்பு தாடி இருந்தது. அவர் கோபமாக காணப்பட்டார்.

டெனைசாவுக்குப் பக்கத்தில் வந்துகொண்டிருந்த சக தொழிலாளர், ஒரு கோசாக் கேப்டனாகும். அவர் கம்பளி வெளிச்சட்டை அணிந்து, ஆட்டுத்தோல் குல்லாய் தரித்து, மழமழப்பான ஒரு பெரிய குதிரை மீது ஏறி வந்தார்.

கேப்டன் லாவாய்ஸ்கி ஒரு உயரமான மனிதர்; கம்பைப்போல நிமிர்ந்து காணப்பட்டார். வெளிறிய முகம், அழகான தலைமுடி, குறுகிய கண்கள்கொண்ட அவருடைய முகத்தில் அமைதியும் திருப்தியும் காணப்பட்டன. குதிரையினுடையவும், சவாரி செய்கிறவருடையவும் விசேஷம் எதில் அடங்கி இருக்கிறது என்பதை ஒருவர் சொல்லுவது அசாத்தியம். என்றாலும், அந்த கேப்டனையும் டெனைசாவையும் முதலில் பார்த்தபோது ஒன்று தோன்றியது. அதாவது, அந்த டெனைசாவ் நனைந்துபோய் அசௌகரியத்தோடு ஒரு குதிரை மீது உட்கார்ந்து இருக்கிற வரைப்போல காணப்பட்டார். ஆனால், அந்த கேப்டன் எப்பொழுதும் உள்ளதைப் போல சௌகரியமாக இருப்பதாகக் காணப்பட்டார். அதோடு குதிரை மீது ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கும் ஒரு மனிதரைப் போல அவர் காணப்படாமல், அவரும், அவர் குதிரையும் ஒன்றித்து இருப்பதைப் போல காணப்பட்டார். அதனால், அவருக்கு இரு மடங்கு பலம் இருப்பதைப் போலத் தோன்றினார்.

அவர்களுக்கு சிறிது முன்பாக ஒரு விவசாயி வழிகாட்டி போய்க்கொண்டிருந்தான். அவன் ஒரு விவசாயிக் கோட்டையும், வெள்ளையான பின்னல் தொப்பியையும் அணிந்திருந்தான்; முழுவதும் நனைந்து போய் இருந்தான்.

சிறிது பின்னால், பெரிய வாலையும், பிடரியையும், ரத்தம் சொட்டும் வாயையும் கொண்ட ஒரு சிறிய, மெலிந்த கிர்கிஜ் குதிரை மீது ஒரு வாலிப அதிகாரி, பிரெஞ்சு வெளிக்கோட்டை அணிந்துகொண்டு சவாரி வந்தார். அவருக்குப் பின்னால், ஒரு குதிரை வீரன் வந்து கொண்டிருந்தான். அவனோடு, அவனுக்குப் பின்னால் கிழிந்துபோன பிரெஞ்சு சீருடையை அணிந்துகொண்டு, ஒரு பையன் குதிரைமீது உட்கார்ந்திருந்தான். அவன் நீல நிறத்

தொப்பியை அணிந்திருந்தான். அந்தப் பையன் அந்தக் குதிரை வீரனை, தனது குளிர்ந்துபோன சிவப்பான கைகளால் பற்றிக் கொண்டிருந்தான். தன்னுடைய பார்வையை உயர்த்தி, ஆச்சரியத்தோடு சுற்றிப் பார்த்தான். இவன்தான் அன்று காலையில் கைது செய்யப்பட்ட பிரெஞ்சு டமாரம் அடிக்கும் பையன்.

அவர்களுக்குப் பின்னால் அந்த நெருக்கமான சேறு நிறைந்த காட்டு ரஸ்தாவில், குதிரை வீரர்கள் மூன்று பேர்களாகவும், நான்கு பேர்களாகவும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால், கோசாக்குகள் கம்பளி வெளிச்சட்டைகளோடும், பிரெஞ்சு வெளிச்சட்டைகளோடும் சிலர் தங்களுடைய தலைகள்மீது குதிரை ஜூல்களைப் போட்டுக்கொண்டும் வந்துகொண்டிருந்தார்கள். அந்தக் குதிரைகளும் மழையினால் நனைந்திருந்தபடியால், அவை கருஞ்சிவப்பா, அல்லது பழுப்பு நிறமா என்று சொல்ல முடியாமல், ஒரே கருப்பாகத் தோன்றின. அவைகளுடைய பிடரிகள் மழையினால் படிந்துபோய் இருந்தபடியால், பார்ப்பதற்கு மெலிந்தது போன்று ஆச்சரியமாகக் காணப்பட்டன. அவற்றிலிருந்து நீராவி கிளம்பிக்கொண்டிருந்தது. உடைகளும், சேணங்களும், கடிவாளங்களும் எல்லாம் நனைந்து பொருமி, தரையைப் போலவும், தரையில் உதிர்ந்து கிடந்த இலைகளைப் போலவும் காணப்பட்டன. மனிதர்கள் அசைவதற்கு முயற்சி செய்யாமல், ஒடுங்கி உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய உடம்பில் விழுந்துகொண்டிருந்த மழை நீரை வெதுவெதுப்பாக்குவதற்காக அம்மாதிரி இருந்தார்கள். புதிதாக மழை நீர் உடம்பிற்குள் போகாமல் இருப்பதற்காகவும் அம்மாதிரி இருந்தார்கள். பரவலாக வந்துகொணடிருந்த கோசாக் வரிசைகளோடு, இரண்டு வண்டிகளை பிரெஞ்சு குதிரைகள் இழுத்து வந்து கொண்டிருந்தன. இரண்டு சேணமிடப்பட்ட கோசாக்கு குதிரைகள் அவற்றுக்கு முன்னால் கட்டப்பட்டிருந்தன. அந்த வண்டிகள் மரத்தூர்கள் மீதும், கிளைகள் மீதும், அங்கங்கே கட்டியிருந்த தண்ணீர் மீதும் ஆடி அசைந்து வந்து கொண்டிருந்தன.

பாதையிலிருந்த குட்டையைத் தவிர்ப்பதற்காக, டெனைசாவின் குதிரை ஒரு பக்கமாக ஒதுங்கியது. அச்சமயம் அதன் மீது இருந்தவரின் முட்டு, மரத்தில் மோதியது.

''ஏ, பிசாசு'' என்று டெனைசாவ் கோபமாகக் கூச்சலிட்டு, தம்முடைய பற்களைக் காட்டி, தம்முடைய சவுக்கால் அந்தக் குதிரையை மூன்று தடவைகள் அடித்தார். அப்படி அடித்தபோது, அவர் மீதும், அவருடைய சகபாடிகள் மீதும், கீழேயிருந்த சேறு தெளித்தது.

டெனைசாவ் அன்று சுமுகமாய் இல்லை. மழையும், பசியும்தான் அதற்குக் காரணம். அவர்கள் யாரும் காலையிலிருந்து எதுவும் சாப்பிடவில்லை. தவிரவும், டோலாகாவிடமிருந்து இன்னமும் அவர்களுக்குச் செய்தி கிடைக்கவில்லை. ஒரு பிரெஞ்சுக்காரனை பிடித்து வரும்படி அவர்கள் அனுப்பிய ஆள் இன்னமும் திரும்பி வரவில்லை.

''அம்மாதிரியான, போக்குவரத்து வண்டிகளைத் தாக்குவதற்கான வாய்ப்பு, இன்று கிடைத்திருப்பதைப்போல இனி கிடைப்பது கஷ்டம். தனியாக ஒருவர் அவர்களைப் போய்த் தாக்குவது என்பது ஆபத்தானது. ஆனால், நாம் ஒத்திப் போடுவோமானால், மற்றொரு பெரிய கொரிலாப் பிரிவானது, அந்த இரையை அடித்துக்கொண்டு போய்விடும்'' என்று டெனைசாவ் நினைத்து, தமக்கு எதிரே பார்த்துக்கொண்டே இருந்தார். டோலாகாவிடமிருந்து ஒரு தூதன் வருவான் என்ற நம்பிக்கையில் அவர் பார்த்துக்கொண்டிருந்தார்.

காட்டிலுள்ள ஒரு பாதைக்கு அவர் வந்தபோது, வழியாக ஒரு இடத்தில் வலது பக்கத்தில் வெகுதூரம் பார்க்கக் கூடியதாய் இருந்தது. அங்கே டெனைசாவ் தமது குதிரையை நிறுத்தினார்.

''யாரோ ஒருவன் வந்து கொண்டிருக்கிறான்'' என்று அவர் சொன்னார்.

அந்த கோசாக் கேப்டன், அங்கே டெனைசாவ் காட்டிய திசையை நோக்கினார்.

''இரண்டு பேர் வருகிறார்கள். ஒருவர் அதிகாரி; மற்றவர் ஒரு கோசாக். அவர்தான் லெப்டினன்ட் கர்னல் என்று நினைக்க முடியாது'' என அந்த கோசாக் கேப்டன் சொன்னார்.

வந்து கொண்டிருந்த அந்த இருவரும், வருகிற வழியிலுள்ள ஒரு பள்ளத்தாக்கில் இறங்கினார்கள். அதன் பின்னால், அவர்களைக் கண்களுக்குத் தெரியவில்லை. சில நிமிஷங்களுக்குப் பின்னால் மீண்டும் அவர்கள் சமதளத்திற்கு மேலே வந்தார்கள். களைப்படைந்த பாய்ச்சலில் ஒரு குதிரைமீது தமது சாட்டையுடன் ஒரு அதிகாரி நனைந்துகொண்டும், அவருடைய கால் சட்டைகளை முழங்கால்வரை தூக்கி மடித்துக்கொண்டும் சவாரி வந்துகொண்டிருந்தார். அவருக்குப் பின்னால், அங்கபடியில் நின்றபடியே ஒரு கோசாக் துரித நடையில் சவாரி வந்தான். அந்த அதிகாரி ஒரு மிகவும் சிறிய வாலிபராக இருந்தார். அவருடைய சிவந்த முகம் அகலமாய் இருந்தது. கண்கள் கூர்மையாக, மகிழ்ச்சியாக இருந்தன. அவர் டெனைசாவிடம் சவாரி வந்து, அவரிடம் ஒரு நனைந்துபோன கடிதத்தை கொடுத்தார்.

''ஜெனரலிடமிருந்து நான் வருகிறேன். அந்தக் கடிதத்தை நனையாமல் கொண்டுவர முடியாததற்காக என்னை மன்னிப்பீராக'' என்று அந்த அதிகாரி சொன்னார்.

முகம் சுளித்து டெனைசாவ் அந்தக் கடிதத்தை வாங்கித் திறந்து பார்த்தார்.

''இதோ, அவர்கள் 'அது ஆபத்தானது; அது ஆபத்தானது' என்று நமக்கு சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்'' என அந்த அதிகாரி கோசாக் கேப்டனிடம் கூறிக்கொண்டிருந்தார். டெனைசாவ் அந்தக் கடிதத்தை வாசித்துக்கொண்டிருந்தார். ''காமாரோவும் நானும் - அவர் அந்த கோசக்கைச் சுட்டிக் காட்டினார் - தயாராய் இருந்தோம். நாங்கள் ஒவ்வொருவரும் 2 கைத்துப்பாக்கிகளை வைத்திருக்கிறோம்... ஆனால், இது என்ன?'' என்று அவர் அந்த பிரெஞ்சு டமாரப் பையனைப் பார்த்ததும் கேட்டார். ''ஒரு கைதியா? நீங்கள் ஏற்கெனவே நடவடிக்கையை ஆரம்பித்து விட்டீர்களா? நான் அவனிடம் பேசலாமா?''

''ராஸ்டோவ்! பெட்டியா!'' என்று அந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்த டெனைசாவ் கூச்சலிட்டார். ''நீ; யார் என்பதை ஏன் என்னிடம் சொல்லவில்லை?'' என்று கேட்டு, அந்தச் சிறுவனைப் பார்த்து புன்னகை கொண்டு, தமது கையை நீட்டினார்.

அந்த அதிகாரிதான் பெட்டியா ராஸ்டாவ்.

வழி முழுவதும், ஒரு வயது வந்த் மனிதருக்குத் தகுந்த முறையில், ஒரு அதிகாரிக்குத் தகுந்த முறையில், டெனைசாவுடன் எம்மாதிரிப் பழக வேண்டுமென்பதைப் பற்றி பெட்டியா யோசித்துக்கொண்டே வந்தார். முன்னாலுள்ள பழக்கத்தை குறைப்பிடாமலேயே இருக்கவேண்டுமென்று அவர் நினைத்தார். ஆனால், டெனைசாவ் அவரைப் பார்த்து புன்முறுவல் கொண்டதும், பெட்டியாவின் முகம் ஒளிர்விட்டது. மகிழ்ச்சியினால் நாணி முகம் சிவந்தார். உத்யோக முறையில் எப்படியிருக்க வேண்டுமென்று நாம் நினைத்து வந்தாரோ, அதை மறந்துவிட்டார். வியாஜ்மா பக்கத்தில் நடந்த போரில், தாம் கலந்துகொண்டதை அவர் சொல்ல ஆரம்பித்தார். ஒரு குதிரை வீரர் அங்கே எம்மாதிரி வீரத்தனமாக நடந்துகொண்டார் என்பதைப் பற்றியும் அவர் சொன்னார்.

''நல்லது, நான் உம்மைப் பார்ப்பதற்காக சந்தோஷம் அடைகிறேன்'' என்று டெனைசாவ் இடைமறித்துக் கூறினார். அவருடைய முகம் மீண்டும் கவலை தோன்றிய தோற்றத்தோடு காணப்பட்டது.

''மைக்கேல் போக் லைட்டிச்'' என்று அவர் அந்த கோசாக் கேப்டனைப் பார்த்துச் சொன்னார். ''மீண்டும் இந்தக் கடிதம் அந்த

ஜெர்மானியரிடம் இருந்து வந்திருக்கிறது''. பெட்டியாவை சுட்டிக்காட்டி, ''இவர் அவரிடம் சேவை செய்கிறார்'' என்று சொன்னார்.

''முன்பே தம்முடன் டெனைசாவ் சேர்ந்து போக்குவரத்து வண்டிகளைத் தாக்கவேண்டுமென்று ஒரு ஜெர்மன் ஜெனரல் கேட்டுக்கொண்டிருந்தார். அதையேதான் திரும்பவும் இந்தக் கடிதத்தில் அவர் கேட்கிறார்'' என்று டெனைசாவ் சொன்னார். ''நாம் நாளை செய்யாவிட்டால், அவர் நம்மிடமிருந்து இந்த இரையைப் பிடுங்கிக்கொள்வார்'' என்று டெனைசாவ் கூறினார். அந்த கோசாக் கேப்டனிடம் டெனைசாவ் பேசிக்கொண்டிருந்தபோது, பெட்டியாவுக்கு டெனைசாவின் கனிவில்லாத குரலானது, தம்முடைய கால் சட்டையை நனைந்திருந்தபடியால் ஏற்பட்டிருக்கும் என்று தோன்றியது. ஆகவே, அந்தக் கால் சட்டையைத் தம்முடைய பெரிய கோட்டிற்குக் கீழே இழுத்து விட்டுக்கொண்டார். அப்படிச் செய்யும்போது, ராணுவ தோரணையை விடாமல் காட்டிக்கொண்டிருந்தார்.

''மேன்மை தங்கியவரே, நீர் ஏதாவது உத்தரவு கொடுக்கிறீரா?'' என்று அவர் டெனைசாவிடம் கேட்டார். அப்படிக் கேட்டபோது, தம்முடைய கையை நெற்றியில் வைத்து சல்யூட் செய்தார். மீண்டும், ஒரு ஜெனரலுக்கும் உதவியாளருக்கும் உள்ள உறவைப் போல, அவர் நடிக்க ஆரம்பித்தார். ''அல்லது, நான் இங்கே மேன்மை தங்கியவருடன் இருக்கலாமா?''

''உத்தரவுகளா?'' என்று டெனைசாவ் சிந்தனையோடு திருப்பிச் சொன்னார். ''நாளைவரையில் நீர் இங்கே தங்கியிருக்க முடியுமா?''

''ஓ, தயவு செய்யுங்கள்... நான் உம்முடன் தங்கியிருக்கலாமா?'' என்று பெட்டியா கேட்டார்.

''ஆனால், அந்த ஜெனரல் உம்மிடம் என்ன சொன்னார்? உடனே திரும்பி வரவேண்டுமென்று சொன்னாரா?'' என்று டெனைசாவ் கேட்டார்.

பெட்டியா நாணி முகம் சிவந்தார்.

''அவர் எனக்கு ஒரு உத்தரவும் கொடுக்கவில்லை. உம்முடன் தங்கலாம் என்று நான் நினைக்கிறேன்'' என்று மீண்டும் கேள்விக் குறியோடு கேட்டார்.

''நல்லது, ரொம்ப சரி'' என்று டெனைசாவ் பதில் அளித்தார்.

காட்டுக்குள், காவல்காரன் குடிசைக்குப் பக்கத்தில், முன்னால் ஏற்பாடு செய்திருந்த இடத்திற்கு, ஒரு கோஷ்டி போகவேண்டுமென்று அவர் உத்தரவிட்டார். ஒரு உதவியாளரின்

கடமைகளைச் செய்துகொண்டிருந்த அந்த கிர்கிஜ் குதிரைமீது அமர்ந்திருந்த அதிகாரியிடம், டோலாகாவ் எங்கே இருக்கிறார் என்றும், அவர் அன்று மாலை வரமுடியுமா என்றும் பார்த்து வரும்படி அனுப்பினார். தாமும் தம்முடன் கோசாக் கேப்டனும், பெட்டியாவும், அந்தக் காட்டின் கோடி வரையில் போவது என்று உத்தேசித்திருந்தார். அந்தக் காட்டின் கோடி ஷாம்ஷெவா என்ற இடம் வரையில் நீண்டிருந்தது. அங்கே தங்கியிருந்த பிரெஞ்சு முகாமைப் பார்க்க விரும்பினார். அதைத்தான் மறுநாள் அவர்கள் தாக்குவதாக திட்டம் போட்டிருந்தார்கள்.

''நல்லது, பழைய பேர்வழியே'' என்று அவர் அந்த விவசாய வழிகாட்டியிடம் பேசினார். ''ஷாம்ஷெவாவுக்கு எங்களை வழிகாட்டி அழைத்துச் செல்வாயாக.''

டெனைசாவும், பெட்டியாவும், கோசாக் கேப்டனும் சில கோசாக்குகளுடனும், கைதியை வைத்துக்கொண்டிருந்த குதிரை வீரருடனும், இடது பக்கமாக இருந்த கணவாயைத் தாண்டி, அந்தக் காட்டின் ஓரத்திற்கு சவாரி போனார்கள்.



மழை நின்றது. மூடு பனி விழுந்திருந்தது. மழைத் துளிகள் மரங்களிலிருந்து உதிர்ந்துகொண்டிருந்தன. டெனைசாவ், கோசாக் கேப்டன், பெட்டியா ஆகியோர் மௌனமாக சவாரி போனார்கள். அப்போது பின்னல் தொப்பி அணிந்திருந்த விவசாயி அவர்களுக்கு வழி காட்டிக் கொண்டு போனான். அவன் மரப்பட்டை ஜோடுகள் அணிந்திருந்தான். அங்கிருந்த மரவேர்கள் மீதும், நனைந்துபோன இலைகள் மீதும் நடந்து, அந்தக் காட்டின் ஓரத்திற்கு அவர்களை சப்தம் இல்லாமல் அழைத்துச் சென்றான்.

ஒரு மேட்டின்மீது அவன் ஏறி, அங்கே நின்று தன்னைச் சுற்றிப் பார்த்தான். பின்னால், மரங்கள் அடர்த்தியில்லாமல் இருந்த ஒரு இடத்திற்குப் போனான். ஒரு பெரிய ஓக் மரத்திடம் போனவுடன், அவன் அங்கே நின்று அவர்களை வரும்படி விசித்திரமாக கையைக் காட்டினான்.

டெனைசாவும் பெட்டியாவும் அவனிடம் போனார்கள். அந்த விவசாயி நின்றுகொண்டிருந்த இடத்திலிருந்து, அவர்களால் பிரெஞ்சுக்காரர்களைப் பார்க்க முடிந்தது. அந்தக் காட்டிற்கு அப்புறமாக ஒரு பள்ளச் சரிவில் ரை தானிய வயல் இருந்தது. வலது பக்கத்தில் ஒரு செங்குத்தான கணவாய்க்கு அப்புறமாக, ஒரு சிறிய

கிராமம் இருந்தது. ஒரு மிராசுதாரரின் வீடு அழிந்த கூரையோடு காணப்பட்டது. அந்தக் கிராமத்தில், அந்த வீட்டில், அந்தத் தோட்டத்தில், கிணற்றுக்குப் பக்கத்தில் குளத்துக்குப் பக்கத்தில், இன்னும் உயரமாய் காணப்பட்ட தரையில், எல்லா இடங்களின் மீதும், பாலத்திலிருந்து அந்தக் கிராமத்திற்கு போகும் அந்த ரஸ்தா முழுவதிலும், கூட்டம் கூட்டமாக மனிதர்கள் அந்தப் பிரகாசமான மூடு பனியின் வழியாகக் காணப்பட்டார்கள். அவர்கள் காணப் பட்ட இடம் சமார் 500 கெஜ தூரம் இருக்கும். ருஷ்யர்கள் அல்லாத அவர்கள், அவர்களுடைய குதிரைகளைப் பார்த்து கூச்சலிட்டுக் கொண்டு, அந்தக் குன்றில் ஏறுவதற்காக குதிரைகளை விரட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒருவரையொருவர் அழைப்பது கூடத் தெளிவாகக் கேட்டது.

''அந்தக் கைதியை இங்கே கொண்டு வா'' என்று டெனைசாவ் தாழ்ந்த குரலில் கூறினார். ஆனால், தமது பார்வையை அந்தப் பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து அவர் எடுக்கவில்லை.

ஒரு கோசாக் குதிரையிலிருந்து இறங்கி, அந்தப் பையனை கீழே இறக்கிவிட்டு டெனைசாவிடம் கொண்டுவந்தான். அந்தப் பிரெஞ்சு துருப்புகளைச் சுட்டிக்காட்டி, அவர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று டெனைசாவ் அவனிடம் கேட்டார். அந்தச் சிறுவன் தன்னுடைய குளிர்ந்த கைகளை ஜேபிகளில் நுழைத்துக்கொண்டு, தனது புருவங்களை உயர்த்தி, டெனைசாவை நோக்கினான். அவனுக்குத் தெரிந்த விஷயங்களையெல்லாம் சொல்ல வேண்டுமென்று ஆசை இருந்தபோதிலும், அவன் குழப்பமான பதில்களைச் சொல்லிக்கொண்டிருந்தான். அதாவது, டெனைசாவ் என்ன கேட்டாலும், அதற்கு 'ஆமாம்' என்று சொல்லிக் கொண்டிருந்தான். டெனைசாவ் முகம் சுளித்து அவனிடமிருந்து திரும்பிக் கொண்டார். பின்னால், கோசாக்கின் கேப்டனைப் பார்த்து தம்முடைய யூகங்களைச் சொன்னார்.

பெட்டியா வேகமாகத் தனது தலையைத் திருப்பினார். அந்த டமாரப் பையனையும், டெனைசாவையும், அந்தக் கோசாக் கேப்டனையும், அந்தக் கிராமத்திலும் அந்த ரஸ்தாக்களிலும் இருந்த பிரெஞ்சுக்காரர்களையும் பார்த்தார்; முக்கியமான எதையும் பார்க்காமல் விட்டுவிடக் கூடாதே என்ற நினைப்பில் பார்த்தார்.

''டோலாகாவ் வந்தாலும் சரி; வராவிட்டாலும் சரி நாம் அவர்களை பிடிக்கவேண்டும்'' என்று டெனைசாவ் தமது கண்களில் மகிழ்ச்சி பிரகாசம் தோன்ற கூறினார்.

''இந்த இடம் ரொம்ப பொருத்தமான இடம்'' என்று அந்தக் கோசாக்கேப்டன் கூறினார்.

''அந்த சதுப்பு நிலத்திற்குப் பக்கத்திலுள்ள இடத்திற்கு நம்முடைய காலாட்படையை அனுப்புவோம்'' என்று டெனைசாவ் மேலும் சொன்னார்.

''அவர்கள் அந்தத் தோட்டத்திற்கு தவழ்ந்து போவார்கள். பின்னால் அங்கிருந்த கோசாக்குகளோடு நீங்கள் பரந்து போகலாம்'' என்று கிராமத்திற்கு அப்பாலிருந்த அந்தக் காட்டில் ஒரு இடத்தைச் சுட்டிக்காட்டினார். ''நானும் என்னுடைய குதிரைப்படை வீரர்களும் அங்கே வருகிறோம். ஒரு துப்பாக்கி வேட்டு போட்டதும்...''

''அந்த பள்ளத்தாக்கை கடக்கமுடியாது. அங்கே ஒரு சதுப்பு நிலம் இருக்கிறது. குதிரைகள் அதில் அமிழ்ந்துவிடும். இடதுபக்கமாகச் சுற்றிக் கொண்டு நாம் போகவேண்டும்...'' என்று அந்தக் கோசாக் கேப்டன் சொன்னார்.

மெதுவான குரலில் அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது, அந்தக் குளத்திற்கு பக்கத்திலிருந்து பள்ளமான பூமியிலிருந்து ஒரு துப்பாக்கிச் சப்தம் கேட்டது. அதன் பின்னால் வெள்ளைப் புகை வெளியே தெரிந்தது. பின்னால் மற்றொரு துப்பாக்கி சப்தம் கேட்டது. நூற்றுக்கணக்கான மகிழ்ச்சியுள்ள பிரெஞ்சுக்காரர்களின் குரல்களும் அந்த பள்ளத்தாக்கிலிருந்து வந்தன. ஒரு வினாடி டெனைசாவும் கோசாக் கேப்டனும் பின்வாங்கினார்கள். அவர்கள் அங்கே வெகு சமீபமாக இருந்ததால் தங்களைப் பார்த்தே அந்த சுடுதல்களும் கூச்சல்களும் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைத்தார்கள். ஆனால் அவை அவர்களைப் பற்றியது அல்ல. அவர்களுக்கு சிறிது தூரத்தில் கீழே ஒரு சிவப்பு துணியைக் கட்டிக்கொண்டு ஒருவன் சதுப்பு நிலத்தில் ஓடுவதைக் கண்டார்கள். அந்தப் பிரஞ்சுக்காரர்கள் அவனைப் பார்த்துதான் கூச்சலிட்டு சுட்டுக்கொண்டிருந்தார்கள் என்று தோன்றியது.

''என்ன, அவன் நமது டைக்கன்'' என்று கோசாக் கேப்டன் கூறினான்.

''அவனேதான், அவனேதான்''.

''அந்த அயோக்கியப் பயல்'' என்று டெனைசாவ் கூறினார்.

''அவன் தப்பி ஓடி விடுவான்'' என்று அந்த கோசாக் கேப்டன் தம்முடைய கண்களை இறுக்கிப் பார்த்துக்கொண்டு கூறினான்.

அவர்கள் டைக்கன் என்று அழைத்த அவன் அங்கிருந்த ஓடைக்கு ஓடிச்சென்று அதன் உள்ளே குதித்ததால், அந்த வேகத்தில் அதிலிருந்து தண்ணீர் மேலே சிதறியது. ஒரு நிமிஷம் அவனைக் காணவில்லை. பின்னால் அவன் உடம்பெல்லாம் நனைந்து

குளத்திலிருந்து வெளியே வந்து அங்கிருந்து ஓடினான். அவனை விரட்டிக் கொண்டிருந்த பிரெஞ்சுக்காரர்கள் மேலும் விரட்டாமல் நின்றுவிட்டார்கள்.

''கெட்டிக்காரன்'' என்று அந்தக் கோசாக் கேப்டன் கூறினார்.

''எப்பேர்ப்பட்ட மிருகம்'' என்று டெனைசாவ் தம்முடைய பழைய எரிச்சலான தோற்றத்தோடு கூறினார். ''அவன் இதுவரை என்ன செய்து கொண்டிருந்தான்?''

''அவன் யார்?'' என்று பெட்டியா கேட்டார்.

''அவன் நம்முடைய, குறிதவறாமல் சுடக்கூடிய சிப்பாய். அவனை ஒரு பிரெஞ்சுக்காரனை பிடித்து வரும்படி நான் அனுப்பினேன்.''

''ஓ, ஆம்'' என்று பெட்டியா சொல்லி, டெனைசாவின் முதல் வார்த்தைகளைக் கேட்டதும், தலையை ஆட்டி, தாம் எல்லாவற்றையும் அறிந்துகொண்டதைப் போலக் காட்டினார். ஆனால் உண்மையில் அவருக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது.

டைக்கன் ஷெர்பாட்டி என்பவன் அவர்களுடைய கூட்டத்தில் மிகுந்த அத்தியாவசியமான ஒருவன். பாக்ரோவ்ஸ்க் என்ற இடத்தைச் சேர்ந்த ஒரு விவசாயி. அந்த ஊர் காட் என்ற நதிக்குப் பக்கத்தில் இருந்தது. அவருடைய வேலைகளை ஆரம்பித்த காலத்தில் பாக்ரோவ்ஸ்க் என்ற ஊருக்கு டெனைசாவ் வந்தார். வழக்கம்போல அந்த ஊரைச் சேர்ந்த கிராமத் தலைவனை அழைத்தார். பிரெஞ்சுக்காரர்களைப்பற்றி அவனுக்கு என்ன தெரியும் என்று கேட்டார். அவன் எல்லா கிராமத் தலைவர்களும் சொல்லுகிற பதிலைப்போல, தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, தான் பிரெஞ்சுக்காரர்களைப் பார்க்கவோ, கேட்கவோ இல்லையென்று சொன்னான். டெனைசாவ் தம்முடைய உத்தேசத்தைப்பற்றி அவனிடம் சொன்னான். அதாவது, பிரெஞ்சுக்காரர்களைக் கொல்வதே தமது நோக்கம் என்றும், அந்தப் பிரெஞ்சுக்காரர்கள் வழி தவறி அங்கே வரவில்லையா என்றும் கேட்டார். அச்சமயம் அந்தக் கிராமத் தலைவனும் கொள்ளைக்காரர்கள் அந்தக் கிராமத்திற்கு வந்ததாகச் சொன்னான். ஆனால் டைக்கன் என்பவன் இந்த விஷயத்தைக் கவனித்து வருகிறான் என்றும் சொன்னான். டெனைசாவ் அவனை அழைத்து வரும்படி சொன்னார். அவனிடம் அவனுடைய செய்கைகளுக்காக அவனைப் புகழ்ந்து அந்தக் கிராமத் தலைவர்களின் முன்னிலையில் ஜார் சக்கரவர்த்தியிடம் அவனுக்குள் விசுவாசத்தையும், நாட்டினிடம் உள்ள விசுவாசத்தையும் பாராட்டினார். தந்தை நாட்டில் உள்ள மக்கள் எல்லோரும் பிரெஞ்சுக்காரர்கள் மீது துவேஷம் கொள்ளவேண்டும் என்று சொன்னார்.

''நாங்கள் பிரஞ்சுக்காரர்களுக்கு எவ்விதமான தீங்கும் செய்வதில்லை'' என்று டெனைசாவின் வார்த்தைகளைக் கேட்டுப் பீதி அடைந்து டைக்கன் சொன்னான். நாங்கள் அவர்களிடம் தமாஷ் செய்து கொண்டுதான் இருந்தோம். உமக்கே தெரியும். நாங்கள் அந்தக் கொள்ளைக்காரர்களில் சுமார் 20 பேர்களைக் கொன்றிருப்போம். அதைத் தவிர எவ்விதமான கெடுதலும் நாங்கள் செய்யவில்லை...''

பாக்ரோவ்ஸ்க் என்ற ஊரைவிட்டு மறுநாள் டெனைசாவ் புறப்பட்டபோது, அந்த விவசாயியை மறந்தே போனார். அச்சமயத்தில் அந்த விவசாயி அவருடைய கோஷ்டியில் வந்து சேர்ந்திருக்கிறான் என்றும், அதிலேயே தங்கியிருக்கும்படி அவன் கேட்டுக் கொள்ளுகிறான் என்றும் டெனைசாவிடம் கூறினார்கள். அம்மாதிரியே அவன் இருக்கும்படி டெனைசாவ் உத்திரவிட்டார். அந்த கோஷ்டிக்கு வேண்டிய எடுபிடி வேலைகளை முதலில் டைக்கன் கவனித்து வந்தான். அதாவது, கணப்பு மூட்டங்கள் போடுவது, தண்ணீர் கொண்டு வருவது, செத்த குதிரைகளின் தோல்களை உரிப்பது, இம்மாதிரியான வேலைகளைச் செய்து வந்தான். ஆனால், அவனுக்கு அந்த கோஷ்டியினுடைய யுத்த காரியங்களில் மிகுந்த பிரியமிருக்கிறது என்பதைச் சீக்கிரமாகக் காட்டினான். இரவு நேரங்களில் அவன் எதிரிகளைக் கொள்ளையடிப்பதற்காகப் போவான். அவன் எப்போதுமே பிரெஞ்சுக்காரர்களின் துணிகளையும் ஆயுதங்களையும் கொண்டுவருவான். அவனிடம் சொல்லிய சமயங்களில் பிரெஞ்சுக்காரர்களை உயிரோடும் பிடித்து வருவான். டெனைசாவ் அவனை கஷ்டமான வேலைகளை செய்ய வேண்டாம் என்று சொல்லி தம்மோடு தாம் எங்கே போனாலும் அவனை அழைத்துச் சென்றார். கோசாக் படையில் அவனையும் சேர்த்துக் கொண்டார்.

குதிரை சவாரி செய்வதில் டைக்கனுக்கு விருப்பம் இல்லை. அவன் எப்பொழுதும் கால் நடையில்தான் போவான். அதிலும் அவன் குதிரைகளுக்குப் பின்தங்கியது இல்லை. அவன் ஓர் துப்பாக்கியைத் தமாஷுக்காகக் கையில் வைத்துக் கொள்வான். ஒரு வேல் கம்பையும் ஒரு கோடரியையும் வைத்திருப்பான். ஓநாய்கள் தங்களுடைய பற்களை எம்மாதிரி உபயோகப்படுத்துமோ அதே மாதிரி லாவகமாக கனமான எலும்புகளை முறிக்கவோ, அல்லது ஒரு ஈயைக்கொல்லவோ அந்தக் கோடரியை அவன் உபயோகிக்க முடியும்; ஒரு கைநீள தூரத்திற்கு அப்புறம் உள்ள கட்டைகளைக்கூட அவன் ரொம்பக் குறிப்பாகப் பிளந்து தள்ளுவான்; அல்லது சிறிய கரண்டிகளை அந்தக் கோடரியின் நுனியினால் செய்து காட்டுவான். டெனைசாவின் கோஷ்டியில்

அவன் அலாதியான, முக்கியமான பதிவியில் இருந்தான். அதாவது, கஷ்டமான ஆபாசமான வேலைகளைச் செய்யவேண்டி வந்தால் – சேறிலிருந்து ஒரு வண்டியைத் தோள் கொடுத்துத் தள்ளவேண்டியிருந்தால், அல்லது சதுப்பு நிலைத்திலிருந்து குதிரையை அதன் வாலினால் பற்றி இழுக்கவேண்டியிருந்தால், அல்லது செத்தகுதிரையின் தோலை உரிப்பதாய் இருந்தால், அல்லது பிரெஞ்சுக்காரர்களிடம் போய்வர வேண்டியிருந்தால், அவன் ஒரு நாளைக்கு 30 மைல் தூரம் நடக்கவேண்டியிருந்தால்– அந்த மாதிரி வேலைகளைச் செய்யவேண்டியிருக்கும் போதெல்லாம், ஒவ்வொருவரும் டைக்கனை சுட்டிக்காட்டிச் சிரிப்பார்கள்.

''அது அந்தப் பிசாசுக்குக் கஷ்டமாக இருக்காது. அவன் ஒரு குதிரையைப் போல பலம் கொண்டவனாய் இருக்கிறான்'' என்று அவனைப் பற்றிச் சொல்லுவார்கள்.

ஒருதடவை ஒருபிரெஞ்சுக்காரனைப் பிடிப்பதற்காக போனபோது அவனிடம் உள்ள கைத்துப்பாக்கியால் டைக்கனை முதுகிலிருந்த சதை பாகத்தில் அவன் சுட்டான். அந்த காயத்தைக் குணப்படுத்த உள்ளுக்கும் வெளியிலும் வாட்கா மதுவை டைக்கன் உபயோகித்தான். அந்த படைப்பிரிவு முழுவதும் அந்த காயத்தைப் பற்றியே அவனிடம் தமாஷ்செய்து கொண்டிருக்கும். அந்த தமாஷில் டைக்கனும் கலந்துகொள்ளுவான்.

''தோழனே, இனி அப்படிச் செய்ய மாட்டாயே? உனக்கு நல்ல சூடு கிடைத்ததா?'' என்று கோசாக்குகள் அவனைப் பார்த்து கேலி செய்வார்கள். நான் மிகுந்த கோபமாக இருக்கிறதைப்போல பாசாங்கு செய்து பிரெஞ்சுக்காரர்கள் மீது தமாஷாக சாபங்கள் இடுவான். அச்சமயம் வேண்டுமென்றே அவன் உடலை வளைத்து முகத்தை சுளிப்பான். இந்த சம்பவம் நடந்ததற்குப் பின்னால், அவனுக்குக் கோபம் ஏற்பட்டதன் பலனாக அவன் கைதிகளைப் பிடித்து வருவது அபூர்வமாயிற்று.

அந்த கோஷ்டியில் அவன்தான் மிகுந்த தைரியமாகவும் உபயோக முள்ளவனாகவும் இருந்தான். எதிரிகளைத் தாக்குவதற்காக அவனுக்குத் தோன்றியதைப்போல அதிகமான சந்தர்ப்பங்கள் வேறு யாருக்கும் தோன்றியதில்லை. அல்லது அவன் கைது செய்தோ, கொன்றோ உள்ள பிரெஞ்சுக்காரர்களின் தொகை அளவு வேறு யாரும் செய்ததில்லை. ஆகவே, அவனை கோசாக்குகள் எல்லாரும், குதிரை வீரர்கள் எல்லாரும் ஒரு கோமாளியாக ஆக்கினார்கள். அவன் அந்த பாத்திரத்தை சந்தோஷத்தோடு ஒப்புக் கொண்டான். இப்போது டெனைசாவ் அவனை ஷாம்ஷெவா என்ற இடத்திற்கு ஒரு இரவில்

அனுப்பி, ஒரு பிரெஞ்சுக்காரனை பிடித்து வரும்படி சொன்னார். ஒரே ஒரு பிரெஞ்சுக்காரனை மட்டும் பிடித்துவர அவன் திருப்தி கொள்ளாமல் இருந்தானா, அல்லது இரவெல்லாம் நன்றாகத் தூங்கிவிட்டு, காலையில்தான் அந்தப் பிரஞ்சுக்காரர்களுக்குப் பக்கத்தில் உள்ள புதர்களில் நுழைந்தானா என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. அந்த இடத்தில்தான் அவனை டெனைசாவ் மேலே இருந்து கண்டுபிடித்தார்.



கோசாக் கேப்டனுடன் மறுநாளைய தாக்குதலைப்பற்றி சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். பிரெஞ்சுக்காரர்கள் வெகு சமீபமாக இருந்ததைப் பார்த்ததும், அந்தத் தாக்குதலை செய்ய வேண்டுமென்று நிச்சயமாகத் தீர்மானம் செய்துவிட்டு, தமது குதிரையைத் திருப்பி டெனைசாவ் திரும்பிப் போனார்.

''இப்பொழுது, எனது வாலிபரே, நாம் போய் உலர்ந்த உடைகளை கட்டிக்கொள்ளுவோம்'' என்று பெட்டியாவிடம் அவர் சொன்னார்.

காவல் வீட்டை நெருங்கியதும் டெனைசாவ் குதிரையை நிறுத்தி, அந்த காட்டிற்குள்ளாக பார்த்தார். அந்த மரங்களுக்கு இடையே நீளமான கால்களுடனும், நீளமான கைகளுடனும், ஒரு குட்டையான சட்டை தரித்து, மரப்படை ஜோடுகளும் காஜான் தொப்பியும் தரித்து ஒரு மனிதன் அவர்களைப் பார்த்து வந்துகொண்டிருந்தான். அவனுடைய தோளில் ஒரு துப்பாக்கி தொங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய இடுப்பு பெல்டில் ஒரு கைகோடரி செருகி வைக்கப்பட்டிருந்து. அவன் டெனைசாவைப் பார்த்ததும், வேகமாக எதையோ புதரில் எறிந்தான். நனைந்து போயிருந்த அவனுடைய தொப்பியைக் கழற்றி விட்டு, அவனுடைய கமாண்டரிடம் நெருங்கி வந்தான். அவன்தான் டைக்கன். அவனுடைய சுருக்கம் விழுந்த தழும்புகள் கொண்ட முகமும், இடுங்கிய கண்களும், மகிழ்ச்சியான தோற்றத்தைக் காட்டிக்கொண்டு இருந்தன. தனது தலையை உயரமாக நிமிர்த்தி, ஒரு சிரிப்பை அடக்குவதுபோல டெனைசாவைப் பார்த்தான்.

''நல்லது, நீ எங்கே மறைந்து போனாய்?'' என்று டெனைசாவ் கேட்டார்.

''நான் எங்கே மறைந்துபோனேனா? பிரெஞ்சுக்காரர்களைப் பிடிப்பதற்காக நான் போனேன்'' என்று வேகமாக, தைரியமாக, மெதுவாக, ஆனால் இனிமையாக டைக்கன் பதில் அளித்தான்.

''நீ எதற்காக அங்கே பகலில் போனாய்? நீ ஒரு கழுதை. நல்லது, நீ ஏன் ஒரு பிரஞ்சுக்காரனை கொண்டு வரவில்லை?''

''ஓ, நாம் ஒருவனைப் பிடித்தது உண்மை'' என்றான் டைக்கன்.

''அவன் எங்கே?''

''அதிகாலையில் அவனை முதல் காரியமாக நான் பிடித்தேன். நீரே பாரும்'' என்று டைக்கன் சொல்லி, அவனுடைய கால்களை விரித்துக் காட்டினான். ''அவனைக் காட்டிற்குள் கொண்டு போனேன். அவன் உபயோகமில்லையென்று எனக்குத் தோன்றியது. ஆகவே, மற்றொருவனை பிடித்து வரவேண்டுமென்று நான் நினைத்தேன்.''

''நீ பார்த்தாயா?...எப்பேர்ப்பட்ட அயோக்கியன்–நான் நினைத்தபடியேதான் இருக்கிறது'' என்று கோசாக் கேப்டனிடம் டெனைசாவ் கூறினார். ''நீ ஏன் அவனை கொண்டு வரவில்லை?''

''அவனை கொண்டு வருவதால் என்ன பிரயோசனம்'' என்று டைக்கன் அவசரமாகவும் கோபமாகவும் இடைமறித்தான். ''அவன் உமக்கு பிடித்தமானவன் அல்ல. எப்பேர்ப்பட்டவன் உமக்கு வேண்டுமென்று எனக்குத் தெரியாதா?''

''நீ எப்பேர்ப்பட்ட மிருகமாயிருக்கிறாய்?...நல்லது.''

''நான் மற்றொருவனைப் பிடிப்பதற்காக சென்றேன்'' என்று டைக்கன் மேலும் தொடர்ந்தான். ''நான் இம்மாதிரியாக அந்தக் காட்டிற்குள் ஊர்ந்து சென்று படுத்திருந்தேன். (அவன் திடீரென்று லாவகமாக குப்புறப்படுத்து தான் எம்மாதிரி செய்தான் என்பதை காட்டினான்) ஒருவன் அங்கே வந்தான். உடனே இம்மாதிரியாக அவனைப் பிடித்தேன். (அவன் உடனே குதித்தெழுந்தான்) 'என்னுடைய கர்னலிடம் வா' என்று அவனை அழைத்தேன். அவன் ஊளையிட ஆரம்பித்தான். திடீரென்று அங்கே நாலு பேர் தோன்றினார்கள். அவர்கள் தங்களுடைய சிறிய உடைவாள்களோடு என்மீது பாய்ந்து வந்தார்கள். ஆங்கே, நான் எனது கோடரியை எடுத்துக்கொண்டு, அவர்களைப் பார்த்து, நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள்?'' என்றும், 'கிறிஸ்து உங்களுடன் இருப்பாராக' என்றும் சொன்னேன்'' என்று டைக்கன் கூச்சலிட்டு, கோபமான சப்தத்தோடு தனது கைகளை ஆட்டி, மார்பை விரித்துக் காட்டினான்.

''ஆம், நீ எம்மாதிரியாக அந்தக் குட்டைகளில் ஓடினாய் என்பதை நாங்கள் குன்றின் உச்சியிலிருந்து பார்த்துக்

கொண்டிருந்தோம்'' என்று அந்தக் கோசாக் கேப்டன் தம்முடைய பிரகாசமான கண்களை இடுக்கிக் கொண்டு சொன்னார்.

பெட்டியா சிரிக்க விரும்பினார். ஆனால் மற்றவர்கள் எல்லாரும் சிரிக்காமல் இருப்பதை கவனித்தார். அவர் வேகமாகத் தமது பார்வையை டைக்கனிடமிருந்து திருப்பி, கோசாக் கேப்டனையும் டெனைசாவையும் நோக்கினார். இதற்கெல்லாம் என்ன அர்த்தம் என்பது அவருக்குப் புரியவில்லை.

''நீ முட்டாள் மாதிரி நடக்காதே'' என்று டெனைசாவ் கோபமாக இருமிக்கொண்டு கூறினார். ''நீ ஏன் அந்த முதலாவது பேர்வழியை கொண்டு வரவில்லை?''

டைக்கன் ஒரு கையால் தனது முதுகையும், மற்றொரு கையால் தனது தலையையும் சொறிந்தான். திடீரென்று அவனுடைய முகம் முழுவதும் விரிந்து, அசட்டுத்தனமாக பல்லைக் காட்டினான். அவனுடைய பல்வரிசையில் ஒன்று காணப்படவில்லை. (அதனால்தான் அவனை ஷெர்பாட்டி–ஒரு பல் இல்லாதவன் என்று அழைத்தார்கள்) டெனைசாவ் புன்னகைகொண்டார். பெட்டியா பலமாக மகிழ்ச்சியோடு சிரித்தார். அந்த சிரிப்பில் டைக்கனும் சேர்ந்து கொண்டான்.

''ஓ, அவன் ஒன்றுக்கும் உபயோகமில்லாத ஒரு சிப்பாய்'' என்றான் டைக்கன். ''அவனுடைய ஆடைகள் எல்லாம் மோசமானவை. அவனை எப்படி நான் இங்கே கொண்டு வருவேன்? மேன்மை தங்கியவரே, அது உம்மை அவமரியாதை செய்வதாயிருக்கும். அவனே, தான் ஒரு ஜெனரலின் மகன் என்றும், தான் வரமுடியாதென்றும் சொன்னான்.''

''நீ ஒரு மிருகம்'' என்றார் டெனைசாவ். ''நான் அவனை கேள்விக் கேட்க விரும்பினேன்.''

''நான் அவனை கேள்வி கேட்டேன்'' என்றான் டைக்கன். ''அவனுக்கு அதிகமாக எதுவும் தெரியாது என்று சொன்னான். அவன் மாதிரி ஏராளமான பேர்கள் இருப்பதாகவும், எல்லாரும் சிப்பாய்கள் என்ற பேரில் இருப்பதைத் தவிர, வேறு ஒன்றும் தெரியாதவர்கள் என்றும் அவன் சொன்னான். அவர்களைப் பார்த்து பலமாய் கூச்சலிட்டால் போதும் என்றும், உடனே அவர்கள் எல்லாரையும் அம்மாதிரியாக கைப்பற்றி விடலாமென்றும் அவன் சொன்னான்'' என்று டைக்கன் கூறி முடித்தான். மகிழ்ச்சியோடும் உறுதியோடும் டெனைசாவின் கண்களைப் பார்த்தான்.

''உனக்கு 100 கசையடிகள் கொடுப்பேன். அதுதான் உன்னை முட்டாள் தனத்திலிருந்து காப்பாற்றும்'' என்று டெனைசாவ் கடுமையாக பேசினார்.

''நீர் ஏன் கோபமாய் இருக்கிறீர்?'' என்று டைக்கன் ஆட்சேபனையோடு கேட்டான். ''நான் உமது பிரெஞ்சுக்காரர்களை பார்த்ததேயில்லை என்று நீர் நினைக்கிறீரா? இருட்டுகிற வரையில் பொறுத்திரும். எத்தனை பேர்களை வேண்டுமானாலும், யாரை வேண்டுமானாலும் உமக்குக் கொண்டு வருகிறேன். மூன்று பேர் வேண்டுமானாலும் கொண்டு வருகிறேன்.''

''நல்லது, நாம் போகலாம்'' என்று டெனைசாவ் சொல்லி, அந்தக் காவல் வீட்டிற்கு போகிற வழி முழுவதும் கோபமாய் முகம் சுளித்து மௌனமாக சவாரி போனார்.

டைக்கன் பின்னால் போனான். கோசாக்குகள் அவனை கேலி செய்வதையும், அவனோடு சேர்ந்து சிரிப்பதையும், அவன் சில ஜோடுகளை புதர்களுக்குள் எறிந்ததைப் பற்றி கேட்டுக்கொண்டு வந்ததையும் பெட்டியா கவனித்தார்.

டைக்கனுடைய வார்த்தையைக் கேட்டு பெட்டியாவுக்கு ஏற்பட்ட சிரிப்பு அடங்கியதும், அவனுக்கு ஏற்பட்டடிருந்த புன்னகை மாறியதும், இந்த டைக்கன் ஒருவனை கொன்றுவிட்டான் என்பதை பெட்டியா உணர்ந்தார். அவருடைய மனம் குழப்பமடைந்தது. அவர் அங்கே கைதியாயிருந்த டமாரப் பையன் திரும்பி பார்த்ததும், அவருடைய உள்ளத்தில் ஏதோ ஒரு வலி ஏற்பட்டது. ஆனால் இந்த மனக் குழப்பம் ஒரு வினாடிதான் நீடித்திருந்தது. அவர் தம்முடைய தலையை நிமிர்த்தி வைத்துக்கொண்டு, தாம் தைரியமாக இருக்கவேண்டிய அவசியத்தை உணர்ந்தார். அந்தக் கோசாக் கேப்டனை மறுநாளன்று நடக்கப்போகும் நடவடிக்கைகளைப் பற்றி கேட்கவேண்டியது அவசியம் என்றும், தாம் சேர்ந்திருக்கும் கோஷ்டியின் தகுதிக்குத் தக்கபடி தாம் இருக்கவேண்டியது அவசியமென்றும் அவர் நினைத்தார்.

விசாரித்து வருவதற்காக டெனைசாவ் அனுப்பிய அந்த அதிகாரி, வழியிலேயே டெனைசாவை சந்தித்தார். டோலாகாவ் சீக்கிரமாகத் திரும்பி வருவார் என்றும், அவர் சௌக்கியமாய் இருக்கிறார் என்றும் அந்த அதிகாரி சொன்னார்.

டெனைசாவ் உடனே மகிழ்ச்சி கொண்டார். பெட்டியாவை தம்மிடம் அழைத்து, ''நல்லது, உன்னைப் பற்றி எனக்குச் சொல்லு'' என்று கூறினார்.



தம்முடைய வீட்டுக்காரர்கள் மாஸ்கோவிலிருந்து புறப்பட்ட பின்பு, பெட்டியா மீண்டும் தம்முடைய பட்டாளத்தில் சேர்ந்து கொண்டார். ஒரு பெரிய கொரிலாப்படைப் பிரிவை, சேனாதிபத்தியம் பண்ணி வந்த ஜெனரலிடம் உதவியாளராக அமர்ந்தார். அவர் அந்த வேலையில் சேர்ந்தது முதல் முக்கியமாக வியாஜ்மா போரில் அவர் கலந்து கொண்டது முதல் தாம் வளர்ந்து விட்டதை அறிந்து அவர் எப்போதும் உற்சாகமாய் இருந்தார். உண்மையில் வீரத்தனமாகச் செய்யக்கூடிய எதையும் நழுவ விட்டு விடக்கூடாது என்று நிரந்தரமாக உற்சாகமும் அவசரமும் கொண்டிருந்தார். ராணுவத்தில் அவர் பெற்ற அனுபவத்தையும், அவர் கண்டவைகளையும் பார்த்த பின்பு, அவருடைய மகிழ்ச்சி மிக அதிகமாக உயர்ந்தது. ஆனால் அதே சமயத்தில் உண்மையான வீரச் செயல்கள், அவர் எந்த இடத்தில் இல்லையோ அதே இடத்தில் தான் நடப்பதாக அவருக்கு எப்போதும் தோன்றி வந்தது. ஆகவே தாம் இல்லாத இடம் என்று ஒன்று இருக்கக்கூடாது என்பதற்காக, எப்போதும் அவசரப்பட்டுக் கொண்டேயிருந்தார்.

அக்டோபர் 21-ந் தேதியன்று டெனைசாவின் படைப்பிரிவுக்கு ஒருவரை அனுப்பவேண்டுமென்று அவருடைய ஜெனரல் சொன்னார். தம்மை அனுப்பும்படி ஜெனரலால் அதை மறுக்க முடியவில்லை. அவரை அனுப்பும் போது, வியாஜ்மா போரில் பெட்டியா எவ்வளவு பைத்தியக்காரத்தனமாய் நடந்தார் என்பதை அவருக்கு ஞாபக மூட்டினார். ரஸ்தா வழியாக அவர் போவேண்டிய இடத்திற்கு போகவேண்டும் என்று அவர் சொன்னார். ஆனால் அவரோ பிரெஞ்சு துருப்புகள் குண்டு மழை பொழிந்து கொண்டிருந்த முன்னணிக்கு குதிரை மீது சென்றார். அந்த இடத்தில் தம்முடைய கைத்துப்பாக்கியை அவர் இரு தடவைகள் உபயோகித்தார். ஆகவே டெனைசாவ் என்ன செய்தாலும் அவருடைய போராட்டத்தில் பெட்டியா கலந்து கொள்ளக்கூடாது என்று அந்த ஜெனரல் இப்பொழுது தெளிவாகச் சொல்லி அனுப்பினார். அதனால்தான் அவர் அங்கே தங்கலாமா என்று டெனைசாவ் அவரைக் கேட்டதும், பெட்டியா குழப்பமடைந்து நாணி முகம் சிவந்தார். அந்தக் காட்டிற்கு வெளியே போவதற்கு முன்பாக, அவன் தமக்கு கொடுத்திருக்கும் உத்தரவுகளைக் கண்டிப்பாகப் பின்பற்றி உடனே திரும்பவேண்டுமென்று

நினைத்தார். ஆனால் பிரெஞ்சுக்காரர்களையும் டைக்கனையும் அவர் பார்த்ததும், அன்று இரவு எப்படியாவது ஒரு தாக்குதல் இருக்கும் என்பதை அவர் அறிந்ததும், ஒரு தீர்மானத்திற்கு வந்தார். அதாவது, வாலிபர்கள் எப்படி வேகமாக தங்களுடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்வார்களோ, அதேபோல அவரும் மாற்றிக்கொண்டார். அவருடைய ஜெனரலை மிகுதியாக இதுவரை மதித்து இருந்தார். அந்த ஜெனரல் இப்போது ஒரு உபயோகமற்ற ஜெர்மானியர் என்றும், டெனைசாவும், கோசாக் கேப்டனும் டைக்கனும்தான் உண்மையான வீரர்கள் என்றும் அவர் நினைத்தார். ஆகவே அந்த மாதிரி கஷ்டமான சந்தர்ப்பத்தில் அவர்களை விட்டு போவது, ஒரு வெட்கக் கேடான காரியமாய் இருக்குமென்று அவருக்குத் தோன்றியது.

டெனைசாவும் பெட்டியாவும் கோசாக் கேப்டனும் காவல் வீட்டிற்கு வரும்போது, அந்தி நேரம் வந்துவிட்டது. அந்தி மயங்கும் அந்த வெளிச்சத்தில் சேணமிடப்பட்ட குதிரைகளைப் பார்க்க முடிந்தது. கோசாக்குகளும் குதிரைப்படை வீரர்களும் அந்த இடைவெளியில் அவர்கள் அமைத்த விடுதிகளில் அமர்ந்து, அங்கிருந்த காட்டினுடைய பள்ளத்தாக்கில் நெருப்பு மூட்டங்கள் போட்டுக்கொண்டிருந்ததைக் கண்டார்கள். அந்த நெருப்பிலிருந்து வரும் புகையைப் பிரெஞ்சுக்காரர்களால் பார்க்க முடியாது. அந்தக் காவல் வீட்டின் ஆளோடியில் ஒரு கோசாக் தன்னுடைய கைச்சட்டையை மடக்கி விட்டுக் கொண்டு, மாமிசத்தை வெட்டிக் கொண்டிருந்தான். டெனைசாவின் கூட்டத்தில் இருந்த மூன்று அதிகாரிகள், அந்த அறையில் ஒரு வாசல் கதவை மேஜைக்காகக் கொண்டு வந்தார்கள். பெட்டியா தம்முடைய நனைந்துபோன உடைகளைக் கழற்றி, அவற்றைக் காய வைக்கும்படி கொடுத்துவிட்டு, அந்த டின்னர் மேஜை அமைப்பதில் அங்கிருந்த அதிகாரிகளுக்கு உதவி செய்ய ஆரம்பித்தார்.

பத்து நிமிஷங்களில் அந்த மேஜை தயாராயிற்று. அதன் மீது ஒரு துணியை விரித்தார்கள். அந்த மேஜை மீது வாட்கா மதுவும், ரம் ஒரு புட்டியும் வெள்ளை ரொட்டியும், வறுக்கப்பட்ட இறைச்சியும் உப்பும் இருந்தன.

அந்த மேஜைக்கு முன்னால் அதிகாரிகளோடு அமர்ந்து, தமது கைகளால் அந்தக் கொழுத்த உப்பு மாமிசத்தைப் பிய்த்தார். அதிலிருந்து கொழுப்பு கீழே வழிந்தது. எல்லோர் மீதும் அன்பு கொள்ளும் பரவசமான குழந்தைத் தன்மையில் பெட்டியா இருந்தார். ஆகவே மற்றவர்களும் அதே மாதிரி அன்பு கொண்டிருக்கிறார்கள் என்று அவர் நம்பினார்.

''அப்படியானால் நீர் என்ன நினைக்கிறீர் வாசைலி டிமிட்ரிச்?'' என்று அவர் டெனைசாவைப் பார்த்துக் கேட்டார். ''நான் உம்முடன் ஒருநாள் இங்கே தங்கலாமா?'' என்று அவர் கேட்டுவிட்டு, அவருடைய பதிலுக்கு எதிர்பார்த்திராமல், தம்முடைய கேள்விக்குத் தாமே பதில் சொல்லிக் கொண்டார். ''கண்டுபிடிக்கும்படி என்னிடம் சொல்லியதை நீர் அறிவீர். நல்லது, நான் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறேன். என்னை அதற்கு போகும்படி அனுமதி கொடும்; முக்கியமான அந்தக் காரியத்தைச் செய்யும்படி அனுமதி கோடும்...எனக்குப் பரிசு எதுவும் வேண்டியதில்லை. ஆனால் எனக்குத் தேவையானதெல்லாம்...''

பெட்டியா தம்முடைய பற்களைக் கடித்துக்கொண்டு, சுற்றிலும் பார்த்து தலையை பின்னால் சாய்த்து கைகளை ஆட்டினார்.

''முக்கியமான அந்த விஷயத்தில் உன்னை விடவேண்டும்...'' என்று டெனைசாவ் ஒரு புன்முறுவலோடு அவர் சொல்லியதை திருப்பிச் சொன்னார்.

''தயவு செய்து எதையாவது நான் நடத்திச் செல்லும்படி எனக்கு அனுமதி கொடும். அதனால் உண்மையிலேயே நான் நடத்திச் செல்வதாய் இருக்கட்டும்... உமக்கு அதைப்பற்றி என்ன?... ஓ, உமக்கு ஒரு கத்தி வேண்டுமா? என்று பக்கத்திலிருந்த ஒரு அதிசாரி அந்த மாமிசத்தை துண்டு போட விரும்பியதைக் கண்டு கேட்டார்.

அவர் தம்முடைய மடக்குக் கத்தியை அவரிடம் கொடுத்தார். அந்த அதிகாரி அந்தக் கத்தியைப் புகழ்ந்தார்.

''தயவு செய்து அதை நீர் வைத்துக்கொள்ளும், அம்மாதிரி என்னிடம் இன்னும் பல இருக்கின்றன'' என்று பெட்டியா நாணி முகம் சிவந்து சொன்னார், ''கடவுளே, நான் மறந்து விட்டேன்'' என்று அவர் திடீரென்று கூச்சலிட்டார். ''என்னிடம் சில திராட்சைப் பழங்கள் இருக்கின்றன. விதை இல்லாத திராட்சை பழங்கள். எங்களிடம் புதிதாக ஒரு வியாபாரி வந்திருக்கிறான். அவனிடம் அம்மாதிரியான அபூர்வமான சாமான்கள் எல்லாம் இருக்கின்றன. நான் அதில் 10 பவுண்ட் வாங்கினேன். அம்மாதிரி இனிப்பான சாமான்களை சாப்பிடுவது எனக்கு வழக்கம். நீர் கொஞ்சம் சாப்பிடுகிறீரா?'' என்று பெட்டியா சொல்லிவிட்டு, அந்த ஆளோடியில் ஓடி அவருடைய கோஸாக்கிடம் சென்று, சில பைகளைக் கொண்டுவந்தார். அவற்றில் சுமார் ஐந்து பவுண்ட் திராட்சைப் பழங்கள் இருந்தன. ''கொஞ்சம் சாப்பிடுங்கள் கனவான்களே, கொஞ்சம் சாப்பிடுங்கள்''

''உமக்கு ஒரு காபி ஜாடி வேண்டுமல்லவா'' என்று அவர் கோசாக் கேப்டனைக் கேட்டார். ''மிகுந்த நல்ல சரக்காக என்னுடைய

வியாபாரியிடம் வந்தது. நான் விலைக்கு வாங்கினேன், அவனிடம் அம்மாதிரி அபூர்வமான சாமான்கள் எல்லாம் இருக்கின்றன. அவன் ரொம்ப நாணயமானவன். அதுதான் அவனிடத்தில் முக்கியமான விஷயம். நான்கு உமக்கு நிச்சயமாக அனுப்புகிறேன். ஒருவேளை உமக்கு சக்கிமுக்கி கற்கள் வேண்டியிருக்கலாம். உம்முடைய கற்கள் கெட்டுப்போய்விட்டன. சிலவேளைகளில் அம்மாதிரி ஏற்படுவதுண்டு. என்னிடம் சில இருக்கின்றன. நூறு கற்கள் இதோ இருக்கின்றன. (அவர் ஒரு பையைக் காட்டினார்), நான் மிக மலிவாக வாங்கினேன். உமக்கு வேண்டியதை எடுத்துக் கொள்ளலாம். முழுவதும் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம்...''

பின்னால் திடீரென்று தாம் அதிகமாகப் பேசிவிட்டதாக மனம் குழம்பி பெட்டியா நாணி முகம் சிவந்து பேசுவதை நிறுத்தினார்.

தாம் அறிவீனமாக எதையாவது செய்து விட்டோமா என்பதை யோசித்துப் பார்த்தார். அன்று நடந்த காரியங்களையெல்லாம் அவர் நினைவுகூர்ந்த போது, அந்த பிரஞ்சு டமாரப் பையனின் ஞாபகம் அவருக்கு வந்தது. ''நாம், இங்கே இருக்கிற நாம் மிகுந்த சௌக்கியமாய் இருக்கிறோம். ஆனால் அவனைப்பற்றி என்ன? அவனை அவர்கள் எங்கே வைத்திருக்கிறார்கள்? அவனுக்கு சாப்பாடுபோட்டார்களா? அவனுடைய மனம் புண்படும்படி அவர்கள் செய்தார்களா?'' என்று அவர் நினைத்தார். ஆனால் அவர் சக்கிமுக்கி கல்லைப்பற்றி அதிகமாகப் பேசிவிட்டதால், மேலே பேசுவதற்கு பீதி கொண்டார்.

''நான் ஒரு வேளை கேட்கலாம். ஆனால் அவர்கள் அவன் ஒரு பையன் தானே, அதனால்தான் அந்தப் பையன்மீது இரக்கப் கொள்ளுகிறான் என்று ஒருவேளை சொல்லலாம். நாளைய தினம் நான் ஒரு பையனா என்பதை அவர்களுக்கு நான் காட்டுவேன். அப்படி நான் கேட்டால் அது விசித்திரமாக இருக்குமா? நல்லது, பாதகமில்லை'' என்று பெட்டியா நினைத்து, உடனே நாணி முகம் சிவந்து, ஆவலோடு அந்த அதிகாரிகளைப் பார்த்தார், அவர்கள் கேலி செய்யும் தோரணையில் இருக்கிறார்களா என்பதை அறிந்து கொள்ள நோக்கிவிட்டு பேசினார்.

''கைதியாகப் பிடிக்கப்பட்டிருக்கும் அந்தப் பையனை உள்ளே அழைத்து, அவனுக்கு உண்பதற்கு ஏதாவது கொடுக்கலாமா?... ஒரு வேளை...''

''ஆமாம், பாவம் ஒரு சிறிய பையன்'' என்றுடெனைசாவ் சொன்னார். இம்மாதிரி பெட்டியா பேசியதில் வெட்கப் படக்கூடியது எதுவும் இல்லாதது போல அவர் காணப்பட்டார்.

''அவனை உள்ளே அழையுங்கள். அவனுடைய பெயர் வின்செண்ட் பாஸ். அவனைக்கொண்டு வாருங்கள்''.

''நானே அவனை அழைக்கிறேன்''.

''ஆமாம்; ஆமாம். அவனை அழைத்து வாரும். பாவம் சின்னபையன்'' என்று டெனைசாவ் மீண்டும் சொன்னார்.

டெனைசாவ் இதைச் சொல்லும் போது, பெட்டியா வாசலில் நின்று கொண்டிருந்தார். அவன் அந்த அதிகாரிகளைக் கடந்து, டெனைசாவிடம் நெருங்கிச் சென்றார். அவர் சொன்னார்.

''எனது அருமையான பழைய நண்பரே, நாம் உம்மை முத்தமிட்டுக் கொள்கிறோன். ஓ, எவ்வளவு சிறந்தவர், எவ்வளவு சிலாக்கியமானவர்!''

டெனைசாயை முத்தமிட்டுவிட்டு, அந்தக் குடிசையிலிருந்து பெட்டியா வெளியே ஓடினார்.

''பாஸ்! வின்செண்ட்!'' என்று வெளிக் கதவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு பெட்டியா கூச்சலிட்டார்.

''உமக்கு யார் வேண்டும் , ஐயா?'' என்ற ஒரு குரல் இருட்டில் கேட்டது.

தமக்கு அன்று கைதியான அந்த பிரஞ்சு சிறுவன் வேண்டுமென்று பெட்டியா பதில் சொன்னார்.

''ஆ, வெஸனியா'' என்று ஒரு கோசாக் கேட்டான்.

அந்தப் பையன் பெயர் வின்செண்ட். அதை அந்தக் கோசாக்குகள் வெஸனி என்று இதற்குள்ளாக மாற்றிவிட்டார்கள். வெஸனியிலிருந்து வெஸனியா என்று விவசாயிகளும் சிப்பாய்களும் அந்தப் பெயரை மாற்றினார்கள். இந்த இரண்டு மாறுதல்களிலும் துளிர் காலத்தைக் குறிப்பிடும் 'வெஸ்னா' என்ற வார்த்தை இருப்பதானது, அந்த வாலிபனுடைய தோற்றத்திற்கு பொருத்தமாய் இருந்தது.

''அவன் அங்கே கணப்பு மூட்டத்தில் குளிர் காய்ந்து கொண்டிருக் கிறான். ஓ, வெஸனியா, வெஸனியா, வெஸனி'' என்று கூப்பிடுகிற குரல்களும், சிரிப்பு சப்தங்களும் இருட்டில் கேட்டன.

''அவன் ஒரு புத்திசாலியான பையன்'' என்று பெட்டியாவுக்கு அருகில் நின்றுகொண்டிருந்த ஒரு குதிரை வீரன் சொன்னான். ''சிறிது நேரத்திற்கு முன்னால்தான் அவனுக்கு உண்பதற்கு நாங்கள் சிறிது கொடுத்தோம். அவன் அகோரப் பசியோடு இருந்தான்.''

அந்த சேற்றில் ஓடி வருகிற காலடிச் சப்தம் இருட்டில் கேட்டது. அந்த டமாரப் பையன் வாசலுக்குப் பக்கத்தில் வந்தான்.

''ஆ, நீதானா? உனக்கு உண்பதற்கு ஏதாவது வேண்டுமா? நீ ஒன்றும் பயப்படவேண்டாம், உன்னை அவர்கள் ஒன்றும் வருத்த மாட்டார்கள்'' என்று பெட்டியா சங்கோஜத்தோடு கூறி, அன்புடன் அந்தப் பையனின் கரத்தைத் தொட்டார்.

''உள்ளே வா, உள்ளே வா.''

''வந்தனம், ஐயா'' என்று அந்த டமாரப் பையன், ஒரு நடுங்கும் குரலில் குழந்தைத்தனமான தொனியில் பேசினான். அவன் தன்னுடைய அழுக்கடைந்த பாதத்தை வாசலில் தேய்த்துக் கொண்டிருந்தன.

அந்த டமாரப் பையனிடம் அநேக விஷயங்களைச் சொல்ல வேண்டுமென்று பெட்டியா விரும்பினார். ஆனால் அம்மாதிரி சொல்வதற்கு அவருக்குத் துணிவு ஏற்படவில்லை. அந்த ஆளோடியில் சஞ்சல மனதோடு அவனுக்குப் பக்கத்தில் பெட்டியா நின்றுகொண்டிருந்தார். அந்த இருட்டில் அந்தப் பையனின் கையைப் பற்றி அழுத்தினார்.

''உள்ளே வா, உள்ளே வா'' என்று அவர் மெதுவான குரலில் சொன்னார்: ''ஓ, அவனுக்கு என்ன செய்ய முடியும்?'' என்று அவர் நினைத்தார். கதவைத் திறந்த அந்தப் பையன் முதலாவதாக உள்ளே போகும்படி விட்டார்.

அந்தப் பையன் குடிசைக்குள் நுழைந்ததும் பெட்டியா அவனிடமிருந்து சிறிது தூரத்தில் அமர்ந்தார். அவனிடம் சிரத்தைக் காட்டுவது தம்முடைய மதிப்புக்குக் குறைவானது என்று கருதினார். ஆனால் அவருடைய ஜேபியிலிருந்த பணத்தை விரல்களினால் தடவிக்கொண்டிருந்தார். அந்தப் பணத்தில் அந்த டமாரப் பையனுக்குக் கொஞ்சம் கொடுத்தால், அது கோமாளித்தனமாய் இருக்குமோ என்று அவர் நினைத்தார்.

## 14

## 8

டோலாகாவின் விஜயத்தினால் அந்த டமாரப் பையனிடம் பெட்டியாவுக்கு இருந்த கவனம் திரும்பியது. அந்த டமாரப் பையனுக்குச் சிறிது இறைச்சியையும், வாட்கா மதுவையும் டைனசாவ் கொடுத்தார். அவனுக்கு ஒரு ருஷ்ய கோட்டையும் அவர் கொடுத்தார். தம்முடைய கோஷ்டியிலேயே அவனை வைத்திருக்க வேண்டுமென்று, மற்ற கைதிகளோடு அவனை அனுப்பக்கூடாது என்றும் அவர் நினைத்தார். டோலாகாவுடைய அசாதாரணமான

வீரத்தைப் பற்றியும், அவர் பிரெஞ்சுக்காரர்களுக்குச் செய்த கொடூரத்தைப் பற்றியும் ராணுவத்தில் பல கதைகள் சொல்லப்படுவதை பெட்டியா கேட்டிருக்கிறார். ஆகவே அந்தக் குடிசையில் அவர் நுழைந்தது முதல், பெட்டியா அவர் மீது வைத்த கண்களை எடுக்கவில்லை. தம்முடைய மனதை பலப்படுத்திக் கொண்டு தம்முடைய தலையை நிமிர்த்தி வைத்துக் கொண்டிருந்தார். அந்தக் கூட்டத்திற்கு தகுதியுள்ள விதமாக தாம் இருக்க வேண்டுமென்பதற்காக அப்படி அவர் செய்தார்.

டோலாகாவின் தோற்றம் எளிமையாய் இருந்ததானது பெட்டியாவுக்கு மலைப்பைக் கொடுத்தது.

டெனைசாவ் ஒரு கோசாக் கோட்டை அணிந்து, தாடி வளர்ந்திருந்தார். அதிசயங்கள் செய்யும் நிக்கலஸின் உருவப் பதக்கத்தை தமது மார்பில் மாட்டியிருந்தார். அவருடைய பேசும் முறையும், அவர் ஒவ்வொன்றையும் செய்யும் முறையும், அவருடைய அசாதாரணமான நிலைமையைக் காட்டிக் கொண்டிருந்தன. ஆனால் மாஸ்கோவில் பாரசீக உடையிலிருந்த டோலாகாவ், இப்போது காப்பாளர் படையின் அதிகாரிக்குள்ள உடையில் காணப்பட்டார். அவர் நன்றாய் க்ஷவரம் செய்து, ஒரு காப்பாளரின் கோட்டை அணிந்து, அதில் செயின்ட் ஜார்ஜ் பதக்கத்தை பொத்தானில் மாட்டியிருந்தார். ஒரு தொப்பியை நேராகத் தமது தலையில் வைத்திருந்தார். அவர் உள்ளே வந்ததும் தம்முடைய நனைந்துபோன மேல் சட்டையை எடுத்து அந்த அறையின் ஒரு மூலையில் வைத்தார். யாருக்கும் வந்தனம் சொல்லாமல் நேராக டெனைசாவிடம் சென்று, அப்போதுள்ள வேலையைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தார். டெனைசாவ் அவரிடம் போக்குவரத்து வண்டிகளை தாக்கவேண்டியதைப் பற்றிய திட்டங்களைச் சொன்னார். பெட்டியா கொண்டுவந்த செய்தியைப் பற்றியும் சொன்னார். அந்த இரண்டு ஜெனரல்களுக்கும் தாம் அனுப்பிப் பதில்களையும் சொன்னார். அதன் பின்னால் பிரஞ்சுப் படைப் பிரிவுகளைப் பற்றி தமக்குத் தெரிந்த விவரங்களை எல்லாம் அவரிடம் சொன்னார்.

''அப்படியானால், விஷயம் அப்படி இருக்கிறது. ஆனால் அந்தத் துருப்புகளின் பெயர்களும் அவர்களுடைய எண்ணிக்கையும் நமக்குத் தெரிய வேண்டும்'' என்று டோலாகாவ் சொன்னார். ''நாம் அங்கு போக வேண்டியது அவசியமாய் இருக்கும். அவர்கள் அங்கே எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் என்பதை நிச்சயமாய் தெரியாமல் நாம் காரியத்தை ஆரம்பித்து விடமுடியாது. துல்லியமாக காரியங்களை நடத்தவே நான் விரும்புகிறேன். இங்கே

இப்போது இங்கு இருக்கிற கனவான்களில் யாராவது ஒருவர் என்னுடன் பிரெஞ்சு முகாமிற்கு வரப் பிரியப்படுகிறரா? நான் தனியாக ஒரு யூனிபாரம் வைத்திருக்கிறேன்.''

''நான், நான்... நான் உம்முடன் வருவேன்'' என்று பெட்டியா கூச்சலிட்டார்.

''நீர் போவதற்கு எந்தவிதமான அவசியமும் இல்லை'' என்று டெனைசாவ் டோலாகாவைப் பார்த்துச் சொன்னார். அவரைப் பொறுத்தவரையில் எந்தக் காரணத்தைக் கொண்டும் அவரைப் போகவிடமாட்டேன்.''

''எனக்குப் போவதற்குப் பிரியமாய் இருக்கிறது. நான் ஏன் போகக் கூடாது? என்று பெட்டியா கேட்டார்.''

''ஏனென்றால் அது உபயோகமற்றது.''

''நல்லது, நீர் என்னை மனிக்க வேண்டும்...ஏனென்றால்... எனக்கு நான் போவேன். நீர் என்னை அழைத்துக்கொண்டு போகவேண்டும். அப்படிச் செய்ய மாட்டீரா?'' என்று அவர் டோலாகாவை திரும்பக் கேட்டார்.

''ஏன் கூடாது?'' என்று டோலாகாவ் பாராமுகமாக பதில் அளித்துவிட்டு, அந்தப் பிரெஞ்சு டமாரப் பையனை உன்னிப்பாகக் கவனித்தார்.

''இந்தச் சிறுவன் உம்மிடம் வெகுகாலமாக இருக்கிறானா?'' என்று டெனைசாவைக் கேட்டார்.

''அவனை இன்றுதான் பிடித்தோம். அவனக்கு ஒன்றும் தெரியவில்லை. அவனை என்னுடன் வைத்திருக்கிறேன்.''

''ஆமாம், மற்றவர்களை நீர் எங்கே வைத்திருக்கிறீர்?'' என்று டோலாகாவ் கேட்டார்.

''எங்கேயா? அவர்களை நான் அனுப்பி விட்டேன். அதற்காக ஒரு ரசீது பெற்றுக்கொண்டேன்'' என்று டெனைசாவ் திடீரென்று முகம் சிவந்து கூச்சலிட்டார். ''நான் ஒரு மனிதனைக்கூட கொல்ல வில்லை யென்பதை தைரியமாக சொல்ல முடியும். முப்பது பேரையோ, அல்லது முன்னூறு பேரையோ காவல் வீரர்களோடு நகரத்திற்கு அனுப்புவது உமக்கு கஷ்டமாகவா இருக்கும்? ஒரு சிப்பாயின் கௌரவத்தை மாசுபடுத்துவதற்கு பதிலாக–நான் வெளிப்படையாக பேசுகிறேன்–அப்படி செய்வது கஷ்டமல்ல.'

''அம்மாதிரி இதமாகப் பேசுவது இந்த 16 வயது உள்ள கோமகனுக்கு பொருத்தமாய் இருக்கலாம்'' என்று டோலாகாவ் ஒரு கனிவற்ற கேலியோடு கூறினார். ''ஆனால் உம்மைப் பொறுத்த

வரையில் நீர் அதை கைவிட்டுவிட வேண்டிய காலம் வந்து விட்டது.''

''என்ன? நான் எதையும் சொல்லவில்லையே. நான் உம்மோடு கட்டாயம் வரப்போகிறேன் என்றுதானே சொல்லுகிறேன்'' என்று பெட்டியா நாணத்தோடு கூறினார்.

''உம்மைப் பொறுத்தவரையில் என்னைப் பொறுத்தவரையிலும் இந்தவிதமான பேச்சுகளை நாம் விட்டு விடலாம்'' என்று டோலாகாவ் மேலும் தொடர்ந்தார். டெனைசாவுக்கு எரிச்சல் கொடுக்கக்கூடிய இந்த விஷயத்தைப்பற்றிய பேசுவதில் அவர் முக்கியமாக மகிழ்ச்சியடைந்தார். ''நீர் ஏன் இந்தப் பையனை இங்கே நிறுத்தி வைத்திருக்கிறீர்?'' என்று தமது தலையை ஆட்டிக்கொண்டு கேட்டார். ''ஏனென்றால் அவனைப் பிடித்த தற்காக நீர் வருந்துகிறீர். உம்முடைய ரசீதுகள் என்ன என்பது எங்களுக்குத் தெரியாதா? நீர் நூறு கைதிகளை அனுப்புகிறீர்; ஆனால் முப்பது பேர்கள் மட்டும்தான் அந்த இடத்திற்கு போய் சேருகிறார்கள். மீதமுள்ளவர்கள் இன்று பட்டினியால் வாடவோ, அல்லது கொல்லப்பட்டோ போகிறார்கள். ஆகவே எல்லோரையும் அனுப்பாமல் இருப்பது நல்லது அல்லவா?''

அந்தக் கோசாக் கேட்பன் தம்முடைய கண்களை இடுக்கிக்கொண்டு, அவர் கூறுவதை அங்கீகரிப்பதைப் போல தலையை ஆட்டினார்.

''விஷயம் அதுவல்ல நான் அந்த விஷயத்தைப் பற்றி விவாதம் செய்யப் போவதில்லை. என்னுடைய மனசாட்சிக்கு பாரமாக நான் அதை எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. அவர்கள் மாண்டு போவார்கள் என்று நீர் சொல்கிறீர். ரொம்ப சரி. ஆனால் என்னுடைய செய்கையினால் அவர்கள் மாளவில்லை.''

டோலாகாவ் சிரிக்க ஆரம்பித்தார்.

''இருபது தடவைகளாக என்னைக் கைது செய்ய வேண்டாமென்று அவர்களுக்கு யார் சொன்னார்கள்? ஆனால் அவர்கள் என்னை பிடித்தார்களானால் ஒரு மரத்தில் கட்டி தூக்கு போடுவார்கள். வீரக் கருணைபொருந்திய உம்மையும் அம்மாதிரியே செய்வார்கள்.'' அவர் சிறிது நிறுத்தினார். ''எப்படியிருந்தாலும், நாம் வேலையில் இறங்க வேண்டும். அந்தக் கோசாக்கிடம் சொல்லி என்னுடைய பையைக் கொண்டுவரச் சொல்லும். அதற்குள்ளாக இரண்டு பிரெஞ்சு யூனிபாரங்கள் உள்ளன. நல்லது, நீர் என்னுடன் வருகிறீரா?'' என்று பெட்டியாவைப் பார்த்து அவர் கேட்டார்.

''நானோ? ஆமாம், ஆமாம், நிச்சயமாக'' என்று பெட்டியா கூறி, கண்ணீர் நிறைந்து நிற்க நாணி முகம் சிவந்து டெனைசாவை நோக்கினார்.

கைதிகளை என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி டெனைசாவுடன் டோலாகாவ் விவாதம் செய்து கொண்டிருந்தபோது, பெட்டியா மீண்டும் மனக் குழப்பம் அடைந்தார். அவர்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள் என்பதை அவரால் பூரணமாக அறிந்துகொள்ள முடியவில்லை. ''வயது வந்தவர்கள். பிரபலமானவர்கள் ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமென்று நினைத்தால், அது அவசியமானதாகவும், சரியானதாகவும் இருக்கும்'' என்று பெட்டியா நினைத்தார். ''எல்லாவற்றிற்கும் மேலாக நான் அவருக்கு கீழ்ப்படிவேன் என்றும், எனக்கு அவர் உத்தரவிடலாமென்றும் டெனைசாவ் நினைக்கக்கூடாது. நான் நிச்சயமாக டோலாகாவோடு பிரரெஞ்சு முகாமிற்கு போவேன். அவரால் போக முடியுமானால், என்னாலும் போக முடியும்.''

டெனைசாவ் எவ்வளவுதான் இரங்கி கேட்டுக்கொண்டாலும் பெட்டியா கவனிக்கவில்லை; தமக்கும் ஒவ்வொன்றையும் சரியாய் செய்யத் தெரியுமென்றும் தம்முடைய உயிருக்கு ஆபத்து வருவதைப் பற்றி தாம் எப்போதும் கவலைப்பட்டது இல்லையென்றும் அவர் சொன்னார்.

''எதிரிகள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் என்பது நமக்கு நிச்சயமாகத் தெரியாவிட்டால்... நூற்றுக்கணக்கான உயிர்கள் அதைப் பொறுத்துத் தான் இருக்கிறது. நாமோ இருவர்தான் இருக்கிறோம். தவிரவும் நான் போகவேண்டுமென்று மிகவும் விரும்புகிறேன். நிச்சயமாக நான் போவேன். ஆகவே என்னைத் தடுக்க வேண்டாம். என்னைத் தடுத்தால் காரியங்கள் இன்னும் மோசமாகும்.'' என்று அவர் சொன்னார்.

# 14

## 9

பிரெஞ்சு வெளிச்சட்டைகளையும் குல்லாய்களையும் தரித்த பின்பு, பெட்டியாவும் டோலாகாவும் அந்தக் காட்டிலிருந்த வெட்ட வெளிக்குப் போனார்கள். அந்த இடத்திலிருந்துதான் டெனைசாவ் பிரெஞ்சு முகாமை வேவு பார்த்தார். நல்ல இருட்டில் அந்த காட்டிலிருந்து வெளிப்பட்டு கீழே உள்ள பள்ளத்திற்கு அவர்கள் இறங்கினார்கள். அந்த பள்ளத்திற்கு அடியில் போனதும், அவருடன்

வந்துகொண்டிருந்த கோசாக்குகளை அங்கேயே தங்கியிருக்குமாறு சொல்லிவிட்டு, அந்தப் பாதை வழியாக பாலத்திற்கு வேகமாக சவாரி போனார். பெட்டியா மிகுந்த பரபரப்போடு அவருக்குப் பக்கத்தில் சவாரிபோய்க் கொண்டிருந்தார்.

''நம்மை அவர்கள் பிடித்தாலும், என்னை உயிரோடு அவர்களால் கைப்பற்ற முடியாது. ஏனெனில் என்னிடம் ஒரு சிறு கைத்துப்பாக்கி இருக்கிறது'' என்று பெட்டியா மெதுவான குரலில் சொன்னார்.

''ருஷ்ய மொழியில் நீர் பேச வேண்டாம்'' என்று வேகமாக மெதுவான குரலில் டோலாகாவ் சொன்னார். அந்த இருட்டில் அவர்களை ஒரு பாராக்காரன் ''யார் அங்கே போவது?'' என்று அறைகூவினான். அவன் துப்பாக்கியை எடுக்கும் சப்தமும் கேட்டது.

பெட்டியாவின் முகத்தில் ரத்தம் ஏறியது. அவர் தம்முடைய கைத்துப்பாக்கியைப் பற்றினார்.

''நாங்கள் 6 - வது பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள்'' என்று டோலாகாவ் பிரெஞ்சு மொழியில் பதில் சொன்னார். அவருடைய குதிரையை விரட்டவோ, அல்லது மெதுவாக போகும்படி செய்யவோ இல்லை.

அந்தப் பாலத்தில் கருப்பாக ஒரு காவல்காரன் நின்று கொண்டிருக்கிற உருவம் தோன்றியது.

''அடையாளப் பெயர் என்ன?'' என்று அவன் பிரெஞ்சு மொழியில் கேட்டான்.

டோலாகாவ் தமது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்திழுத்துமெதுவாக முன்னேறினார்.

''கர்னல் கெர்ராட் இங்கே இருக்கிறாரா?'' என்று அவர் பிரெஞ்சு மொழியில் கேட்டார்.

''அடையாளப் பெயர் என்ன?'' என்று மீண்டும் அந்தக் காவல்காரன் கேட்டு விட்டு, பதில் சொல்லாமல் வழியை மறித்தான்.

''ஒரு அதிகாரி சுற்றி வரும்போது காவல் வீரர்கள் அடையாள மொழியைக் கேட்பதில்லை... கர்னல் இங்கே இருக்கிறாரா? என்று நான் உன்னைக் கேட்கிறேன்'' என டோலாகாவ் வேகமாகவும் கோபமாகவும் சொல்லி, தமது குதிரையை அந்தக் காவல்காரனை நோக்கி விட்டார்.

அந்தக் காவல்காரனின் பதிலுக்காகக் காத்துக்கொண்டிருக்காமல், டோலாகாவ் நேராக அந்தச் சரிவில் தமது குதிரையை விட்டார். காவல்காரன் பக்கத்தில் விலகிக்கொண்டான். ரஸ்தாவைக் கடந்து

வருகிற ஒருவனின் உருவத்தைப் பார்த்ததும் டோலாகாவ் அவனை நிறுத்தி, ''கமாண்டரும் அதிகாரிகளும் எங்கே இருக்கிறார்கள்'' என்று கேட்டார். அந்த மனிதன் ஒரு சிப்பாய். அவனுடைய முதுகில் ஒரு மூட்டையைத் தொங்க விட்டிருந்தான். அவன் டோலாகாவின் குதிரைக்குப் பக்கமாக வந்து, அதை தன் கையால் தொட்டான். சிநேகபாவமான முறையில், ''அந்த கமாண்டரும் அதிகாரிகளும் குன்றின் மேலே, பண்ணையில் முற்றத்திற்கு வலது பக்கத்தில், அந்த மிராசுதாரின் வீட்டில் இருக்கிறார்கள்'' என்று கூறினான்.

அந்த ரஸ்தா வழியாக மேலே போனார்கள். இரு பக்கங்களிலும் பிரெஞ்சுக்காரர்கள் கணப்பு மூட்டங்களைச் சுற்றி உட்கார்ந்து சம்பாஷித்து கொண்டிருப்பதை கேட்டார்கள். டோலாகாவ் அந்த மிராசுதாருடைய வீட்டின் முற்றத்திற்குள் போனார். உள்ளே போனதும் குதிரையை விட்டு கீழே இறங்கி, அங்கிருந்த பெரிய கணப்பு மூட்டத்தை நோக்கிப்போனார். அதைச் சுற்றிப் பலர் கூடியமர்ந்து, சப்தமிட்டு பேசிக்கொண்டிருந்தார்கள். ஒரு சிறிய சட்டியில் அந்தத் தீயின் ஒரு பக்கத்தில் ஏதோ கொதித்துக் கொண்டிருந்தது. ஒரு உயர்வான தொப்பியை வைத்துக்கொண்டு, நீல நிற வெளிச் சட்டையை அணிந்திருந்த ஒரு சிப்பாயின் முகம், அந்த வெளிச்சத்தில் பிரகாசமாய் தெரிந்தது, அவன் சட்டிக்குப் பக்கத்தில் முழங்காலில் அமர்ந்து, அதனுள் இருப்பதை ஒரு துப்பாக்கி சலாகையால் கிளறிக் கொண்டிருந்தான்.

''ஓ, அவன் மிகுந்த கடினமான பேர்வழி'' என்று அந்த நெருப்புக்கு மற்றொரு பக்கத்தில் மறைவில் அமர்ந்திருந்த அதிகாரிகளில் ஒருவர் கூறினார்.

''மேலே புறப்பட்டுப் போகும்படி அவர்களை அவர் செய்து விடுவார்'' என்று மற்றொருவர் சொல்லி சிரித்தார்.

டோலாகாவுடையவும் பெட்டியாவுடையவும் காலடிகளைக் கேட்டுத் தங்கள் குதிரைகளை அந்தக் கணப்பு மூட்டத்தை நோக்கி நடத்தி வந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் அங்கே பேசிக்கொண்டிருந்த இருவரும் மௌனமானார்கள்.

''வணக்கம், கனவான்களே'' என்று தெளிவாகவும் உரக்கவும் டோலாகாவ் கூறினார்.

அந்த நெருப்பிற்கு அப்புறமாக இருளில் உட்கார்ந்திருந்த அதிகாரிகளிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. உயரமான கழுத்தையுடைய ஒரு அதிகாரி அந்த நெருப்பைச் சுற்றி டோலாகாவிடம் வந்தார்.

''கிளிமென்ட், நீர் தானா?'' என்று அவர் கேட்டார். ''எங்கே...?'' ஆனால் தம்முடைய தவறை உணர்ந்து கொண்டதும், அவர் பேச்சை

நிறுத்தினார். முகத்தை சுளித்து ஒரு அந்நியரைப் போல டோலாகாவுக்கு வணக்கம் கூறினார். என்ன வேண்டுமென்று கேட்டார்.

தாமும் தம்முடைய தோழரும் தங்களுடைய பட்டாளத்தோடு, சேர்ந்து கொள்ளுவதற்கு முயற்சி செய்வதாகவும், ஆறாவது பட்டாளம் எங்கே இருக்கிறது என்பதை அவர்களில் யாராவது அறிவார்களா என்றும் டோலாகாவ் கேட்டார். ஆனால் அங்கிருந்தவர்கள் யாருக்கும் எதுவும் தெரியாது. அந்த அதிகாரிகள் டோலாகாவையும், தம்மையும் சந்தேகத்தோடும் விரோதத்தோடும் பார்ப்பதாக பெட்டியா நினைத்தார். சில வினாடிகள் எல்லோரும் மௌனமாக இருந்தார்கள்.

''மாலை சூப் கிடைக்கும் என்று நீர் நிஎனப்பீரானால், நீர் தாமதமாக வந்து விட்டீர்'' என்று, அ।,த நெருப்பிற்குப் பின்னாலிருந்து சிரிப்பை அடக்கிக் கொண்டு ஒரு குரல் கூறியது.

தங்களுக்கு பசியில்லையென்றும், அந்த இரவிலேயே இன்னும் மேலே போக விரும்புவதாகவும் டோலாகாவ் சொன்னார்.

அவர் தம்மிடமுள்ள குதிரைகளை அந்தப் பாத்திரத்தை கலக்கிக் கொண்டிருந்த சிப்பாயிடம் ஒப்புவித்துவிட்டு– அந்த நெருப்பிற்குப் பக்கத்தில் நீண்ட கழுத்துள்ள அதிகாரிக்கு அருகாமையில் சம்மணம் போட்டு உட்கார்ந்தார். அந்த அதிகாரி டோலாகாவிடமிருந்து தமது பார்வையை எடுக்கவில்லை. அவர் மீண்டும் டோலாகாவ் எந்த பட்டாளத்தைச் சேர்ந்தவர் என்று கேட்டார். அவர் கேட்டதை தாம் காதில் வாங்கிக்கொள்ளாததுபோல், டோலாகாவ் பதில் சொல்லாமல் இருந்தார். ஆனால் ஒரு சிறிய பிரெஞ்சு சுங்கானை தமது ஜேபியிலிருந்து எடுத்து பற்றவைத்துக்கொண்டு இன்னும் எவ்வளவு தூரம் போனால் கோசாக்கினுடைய தொந்தரவில்லாமல் இருக்கும் என்று அந்த அதிகாரிகளை கேட்க ஆரம்பித்தார். அந்தத் திருடர்கள் எல்லா இடங்களிலும் இருக்கிறார்கள் என்று நெருப்பிற்கு பின்னால் இருந்த அந்த அதிகாரி கூறினார்.

பட்டாளத்தின் வரிசையிலிருந்து பிரிந்து போன தம்மையும், தமது தோழரையும் போன்றவர்களுக்குத்தான் கோசாக்குகளிடமிருந்து ஆபத்து ஏற்படும் என்று டோலாகாவ் கூறினார். ஆனால் பெரிய படைப்பிரிவுகளை அவர்கள் தாக்கத் துணிய மாட்டார்கள் என்று நினைக்கிறேன் என்று அவர் கேள்விக்குறியோடு பேசினார். ஒருவரும் பதில் சொல்லவில்லை.

''நல்லது, இப்போது அவர் வந்துவிடுவார் என்று அந்த நெருப்பிற்கு பக்கத்தில் நின்று கொண்டிருந்த பெட்டியா

இவர்களுடைய பேச்சை கவனித்துக் கொண்டிருந்த போது நினைத்தார்.

ஆனால் டோலாகாவ் தாம் விட்டுவிட்ட உரையாடலை மீண்டும் தொடர்ந்தார். அந்தப் பட்டாளத்தில் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்றும், எத்தனை பட்டாளங்கள் இருக்கிறார்கள் என்றும், எத்தனைக்கைதிகள் இருக்கிறார்கள் என்றும் நேரியடையாகக் கேட்க ஆரம்பித்தார். அந்தப் படைப்பிரிவோடு இருக்கிற ருஷ்ய - கைதிகளைப்பற்றிக் கேட்டபோது டோலாகாவ் சொன்னார்.

''இந்தப் பிரேதங்களை இழுத்துக்கொண்டு போவது என்பது ஒரு அருவருப்பான வேலை. இந்தக் குப்பைகளை சுட்டுத் தள்ளுவது நன்றாய் இருக்கும்'' என்று சொல்லிவிட்டு பலமாக சிரித்தார். பெட்டியாவுக்கு இது ஆச்சரியமாக இருந்தது. உடனே தங்களுடைய வேஷங்களை பிரெஞ்சுக்காரர்கள் கண்டு பிடித்துவிடுவார்கள்ட என்று பெட்டியா நினைத்தார். தம்மையறியாமலேயே அந்தக் கணப்பு மூட்டத்திலிருந்து ஒரு அடி பின் வாங்கினார்.

டோலாகாவின் சிரிப்பிற்கு ஒருவரும் பதில் சொல்லவில்லை. அங்கே ஒரு வெளிக்கோட்டை போர்த்திக்கொண்டு படுத்திருந்த பிரெஞ்சு அதிகாரியை அவர்களை பார்க்கவில்லை. அவர் எழுந்து தம்முடைய தோழரிடம் எதையோ மெதுவான குரலில் பேசினார். டோலாகாவ் எழுந்து தம்முடைய குதிரைகளை ஒப்புவித்த சிப்பாயை அழைத்தார்.

''அவர்கள் தமது குதிரைகளைக் கொண்டு வருவார்களா? மாட்டார்களா?'' என்று பெட்டியா நினைத்தார். திடீரென்று ஏற்பட்ட உள்ளுணர்ச்சியோடு டோலாகாவிடம் நெருங்கினார்.

குதிரைகள் கொண்டு வரப்பட்டன.

''வணக்கம், கனவான்களே'' என்று டோலாகாவ் சொன்னார்.

''நல் இரவு'' என்று சொல்ல பெட்டியா விரும்பினார். ஆனால் ஒரு வார்த்தைகூட பேச முடியவில்லை. அந்த அதிகாரிகள் எல்லாரும் ஒன்றாய் கூடி, மெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். டோலாகாவுடைய குதிரை நேராக நிற்காமல் இருந்தபடியால், டோலாகாவ் அதன் மீது ஏறுவதற்குச் சிறிய நேரமாயிற்று. பின்னால் அந்த முற்றத்திலிருந்து கால்நடை வேகத்தில் வெளியே போனார். பெட்டியா அவருக்குப் பக்கத்தில் சவாரி போனார். தங்களுக்குப் பின்னால் பிரெஞ்சுக்காரர்கள் யாராவது ஓடி வருகிறார்களா என்பதைப் பார்ப்பதற்காக, சுற்றிலும் நோக்க பெட்டியா விரும்பினார். ஆனால் அதற்கு அவர் தைரியம் கொள்ளவில்லை.

வெளியே ரஸ்தாவுக்கு வந்ததும், அந்த வெட்ட வெளியிலே குறுக்காக டோலாகாவ் மீண்டும் சவாரி செய்யவில்லை. கிராமம் வழியாகவே போனார். ஒரு இடத்தில் அவர் குதிரையை நிறுத்தி கவனித்துக் கேட்டார். ''உமக்குக் கேட்கிறதா?'' என்று அவர் கேட்டார். ருஷ்ய குரல்கள் கேட்பதை பெட்டியா அறிந்தார். அங்கிருந்து கணப்பு மூட்டங்களைச் சுற்றி ஷ்ய கைதிகள் உட்கார்ந்து கொண்டிருந்த உருவங்கள் தோன்றின. பாலத்திற்கு அவர்கள் இறங்கியதும், பெட்டியாவும் டோலாகாவும் அந்தக் காவல்காரர்களைக் கடந்து சென்றார்கள். அவன் ஒரு வார்த்தைகூட பேசாமல், வியாகூலத்தோடு மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தான். பின்னால் அவர்கள் அங்கிருந்த பள்ளத்தாக்கில் இறங்கினார்கள். அங்கேதான் கோசாக்குகள் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

''நல்லது, வந்தனம். நாளை அதிகாலையில் முதல் குண்டு பிரயோகிக்க வேண்டுமென்று டெனைசாவிடம் சொல்லுங்கள்'' என்று டோலாகாவ் சொல்லி, அங்கிருந்து புறப்பட்டுப் போகத் திரும்பினார். ஆனால் பெட்டியா அவரைப் பிடித்துக்கொண்டார்.

''உண்மையாகவா? நீர் எப்பேர்ப்பட்ட வீரர். எவ்வளவு சிலாக்கியமானது; எவ்வளவு சிறந்தது. நான் உம்மீது எவ்வளவு பிரியம் கொண்டிருக்கிறேன் தெரியுமா?'' என்று அவர் கூச்சலிட்டார்.

''ரொம்ப சரி, ரொம்ப சரி'' என்று டோலாகாவ் சொன்னார். ஆனால் பெட்டியா அவரைப் போக விடவில்லை. அந்த இருட்டில் பெட்டியா தம்மிடம் நெருங்கி வந்து தம்மை முத்தமிட விரும்புகிறார் என்பதை டோலாகாவ் பார்த்தார், டோலாகாவ் அவரை முத்தமிட்டார். சிரித்துக் கொண்டு தமது குதிரையைத் திருப்பி, அந்த இருட்டில் மறைந்து போனார்.

## 14
## 10

**கா**வல்காரன் வீட்டிற்குத் திரும்பிய பின்பு, ஆளோடியில் டெனைசாவை பெட்டியா கண்டார். பெட்டியாவின் வரவை எதிர்பார்த்து டெனைசாவ் கவலையும், பரபரப்பும் கொண்டிருந்தார். பெட்டியாவை போகும்படி விட்டதற்காகத் தம்மையே வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார்.

''கடவுளுக்கு நன்றி'' என்று அவர் கூச்சலிட்டார். ''ஆமாம், கடவுளுக்கு நன்றி'' என்று திரும்பவும் சொன்னார். பெட்டியாவின் பரபரப்பான விஷயங்களைக் கேட்டதும், அவர் அம்மாதிரி திருப்பிச் சொன்னார். ''ஆனால் உம்மைப் பிசாசு பிடிக்க. உம்மால்

நான் தூங்க முடியவில்லை. நல்லது, கடவுளுக்கு நன்றி. இப்போது படுத்துக்கொள்ளும், விடிவதற்குள் நாம் இன்னும் ஒரு தூக்கம் தூங்கலாம்.''

''ஆனால்... இல்லை'' என்று பெட்டியா சொன்னார். ''எனக்குத் தூங்குவதற்கு விருப்பம் இல்லை. அதைத் தவிர நான் தூங்கி விட்டால்... அவ்வளவு தான். விஷயம் அதோடு முடிந்துவிடும் என்பது எனக்குத் தெரியும். தவிர, ஒரு போருக்கு முன்பாக தூங்காமல் இருக்கும் பழக்கமும் எனக்கு உண்டு.''

அவர் அந்தக் குடிசையில் அமர்ந்து, மகிழ்ச்சியோடு தாம் போய்வந்த விவரங்களையும் மறுநாள் என்ன நடக்கும் என்பதைப் பற்றியும் அவர் தெளிவாகச் சிந்தித்துக்கொண்டிருந்தார். டெனைசாவ் தூங்கிவிட்டதைப் பார்த்ததும், அவர் எழுந்து வெளியே போனார்.

வெளியே மிகுந்த இருட்டாக இருந்தது. மழை நின்றுவிட்டது; என்றாலும் மழைத்துளிகள் மரங்களிலிருந்து விழுந்து கொண்டிருந்தன. அந்தக் காவல்காரன் வீட்டிற்குப் பக்கத்தில் கோசாக்குகளின் குடிசைகளும், அங்கே கட்டப்பட்டிருந்த குதிரைகளின் உருவங்களும் கருப்பாகத் தோன்றின. அந்த வீட்டிற்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த இரண்டு வண்டிகளின் கருப்பு உருவங்களும் காணப்பட்டன. அவைகளுக்குப் பின்னால் கட்டப்பட்டிருந்த குதிரைகளும் தெரிந்தன. அந்தப் பள்ளத்தாக்கில் தெரிந்த கணப்பு மூட்டத்தின் நெருப்பு சிவப்பாகப் பிரகாசித்தது. கோசாக்குகளும் குதிரை வீரர்களும் எல்லோரும் தூங்கிவிடவில்லை. இங்குமங்கும் குதிரைகள் தீனிகளை சவைத்துக்கொண்டு இருக்கும் சப்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன. மெதுவான குரலில் மனிதர்கள் பேசுவதும் கேட்டுக்கொண்டிருந்தன.

பெட்டியா வெளியே வந்து, அந்த இருளை உற்றுப் பார்த்துவிட்டு அங்கிருந்த வண்டிகளை நோக்கிப் போனார். அந்த வண்டிகளுக்கு அடியில் யாரோ ஒருவர் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார். அவைகளைச் சுற்றி சேணமிடப்பட்ட குதிரைகள் நின்றுகொண்டு, ஓட்ஸ் தானியங்களை சவைத்துக்கொண்டிருந்தன. அந்த இருளில் பெட்டியா தம்முடைய குதிரையை அடையாளம் கண்டு கொண்டார். அதை டகாராபாக் என்று (தெற்கு காக்கஸஸ் பிரதேசத்திலுள்ள ஒரு ஜில்லா) அழைத்துக் கொண்டாலும், அந்தக் குதிரை உக்ரேனியா ஜாதியைச் சேர்ந்தது. அதனிடம் போனார்.

''நல்லது, காராபாக்! நாளை நாம் சிறிது சேவை செய்வோம்'' என்று அவர் சொல்லி, அதனுடைய முகத்தைப் பற்றி முத்தமிட்டார்.

''நீர் ஏன் தூங்கவில்லை, ஐயா?'' என்று அந்த வண்டிக்கு அடியில் உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு கோசாக் கேட்டான்.

''இல்லை, ஆ... லிக்காச்சியோவ் - உன்னுடைய பெயர் அதுதானே? நான் இப்போதுான் திரும்ப வந்தேன் என்பது உனக்குத் தெரியுமா? பிரெஞ்சுக்காரர்கள் முகாமிற்குள் நாங்கள் போய் இருந்தோம்.''

அவர் சவாரி போய் வந்த விஷயத்தையும், அவருடைய நோக்கத்தையும், ஏனோதானோ என்று இருப்பதைவிட அவர் தம்முடைய உயிரை கொடுப்பது நல்லது என்று நினைப்பதற்கான காரணத்தையும், அந்த கோசாக்குக்கு விரிவாகச் சொன்னார்.

''நல்லது, நீர் கொஞ்சம் தூங்கவேண்டும்'' என்று அந்தக் கோசாச் சொன்னான்.

''இல்லை, எனக்கு இது பழக்கம்தான்'' என்றார் பெட்டியா, ''உன்னுடைய கைத்துப்பாக்கியிலுள்ள சிக்கிமுக்கி கெட்டுப் போகவில்லையா? என்னிடம் சில இருக்கின்றன. உனக்கு ஏதாவது வேண்டுமா? உனக்கு வேண்டுமானால் கொஞ்சம் தருகிறேன்.''

அந்தக் கோசாக் பெட்டியாவை, நன்றாகப் பார்ப்பதற்காக, அந்த வண்டிக்கு அடியில் சிறிது குனிந்து தலையை நீட்டினான்.

''நான் ஒவ்வொரு விஷயத்தையும் துல்லிதமாகச் செய்வதற்கு பழகிப் போனேன். சில பேர் வழிகள், எப்படியாவது செய்வோமென்று தங்களை தயார் செய்து கொள்ளாமல் செய்கிறார்கள். பின்னால் அதற்காக வருந்துகிறார்கள். அம்மாதிரி செய்வதை நான் விரும்பவில்லை.''

''ஆமாம், அப்படித்தான்'' என்று கோசாச் சொன்னான்.

''ஓ, ஆமாம், மற்றொரு விஷயம். தயவு செய்து, என்னுடைய அருமையான பேர்வழியே, என்னுடைய உடைவாளை கொஞ்சம் தீட்டிக் கொடுக்க மாட்டாயா? அது மழுங்கி... (அந்த உடைவாள் எப்போதும் தீட்டப்பட்டதே கிடையாது. ஆனால் பொய் சொல்லுவதற்கு பெட்டியா அஞ்சினார்) நீ செய்வாயா?''

''நிச்சயமாக, நான் செய்கிறேன்.''

லிக்காச்சியோவ் எழுந்து தன்னுடைய மூட்டைக்குள் தேடிப்பார்த்தான். உடனே ஒரு கல்லில் இரும்பைத் தீட்டுவது போன்ற சப்தத்தை பெட்டியா கேட்டார். அவர் அந்த வண்டியில் ஏறி, அதன் ஓரத்தில் உட்கார்ந்தார். அந்தக் கோசாக் அவருடைய வாளை அந்த வண்டிக்கு அடியிலிருந்து தீட்டிக்கொண்டிருந்தான்.

''இதோ பார், நமது வாலிபர்கள் எல்லாரும் தூங்குகிறார்களா?'' என்று பெட்டியா கேட்டார்.

''சிலர் தூங்குகிறார்கள். சிலர் நம்மைப்போல தூங்காமல் இருக்கிறார்கள்.''

''நல்லது, அந்த பையன் எங்கே''

''வெஸ்ஸனியாவா? ஓ, அவன் அந்த ஆளோடியில் படுத்திருக்கிறான். அவனுக்கு ஏற்பட்ட பயத்திற்கு அப்புறம் நன்றாக தூங்கிக்கொண்டிருக்கிறான். அவன் இப்போது சந்தோஷமாய் இருக்கிறான்.''

பெட்டியா வெகு நேரம் மௌனமாக இருந்த பின்பு அங்கு கேட்கும் சப்தங்களை கவனமாய் உற்றுக் கேட்டார். அங்கே அந்த இருளில் காலடி ஓசைகள் கேட்டன. ஒரு கருப்பு உருவம் தோன்றியது.

''நீர் எதை தீட்டிக்கொண்டிருக்கிறீர்?'' என்று அந்த வண்டிக்கு பக்கத்தில் வந்து ஒருவன் கேட்டான்.

''ஏன்? இந்தக் கனவானுடைய உடைவாள்.''

''அது ரொம்ப சரி'' என்று ஒரு குதிரை வீரனைப்போல பெட்டியாவுக்குத் தோன்றியவன் சொன்னான்.

''அந்தக் கோப்பை இங்கே இருக்கிறதா?''

''அந்த சக்கரத்திற்கு அருகில் இருக்கிறது?''

அந்தக் குதிரை வீரன் கோப்பையை எடுத்துக்கொண்டான்.

''சீக்கிரமாக விடிந்துவிடும்'' என்று அவன் கொட்டாவி விட்டுச் சொல்லிக்கொண்டு அங்கிருந்து போனான்.

ஒரு காட்டில் டெனைசாவின் கொரில்லா கோஷ்டியோடு ரஸ்தாவிலிருந்து ஒரு வெர்ஸ்ட் தூரத்தில் தான் இருப்பதாக பெட்டியா அறிந்திருப்பார். பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து பிடுங்கி ஒரு வண்டி மீது அவர் உட்கார்ந்துகொண்டிருந்தார். அந்த வண்டிக்குப் பக்கத்தில் குதிரைகள் கட்டப்பட்டிருந்தன. அந்த வண்டிக்கு கீழேதான் லிக்காச்சியோவ் உட்கார்ந்து அவருடைய வாளை தீட்டிக்கொண்டிருந்தான். வலது பக்கத்தில் கருப்பாகத் தோன்றிய வீடுதான், காவல்காரனின் வீடு. இடது பக்கத்தில் சிவப்பாகத் தோன்றிய தோற்றம் தான், கணப்பு மூட்டங்கள் அணைந்து கொண்டிருந்தபோது தெரிந்த காட்சியாகும். அங்கே கோப்பையை எடுக்க வந்த குதிரை வீரனுக்கு தாகமாய் இருந்தது. ஆனால் பெட்டியாவுக்கு இவையெல்லாம் ஒன்றும் தோன்றவில்லை. அல்லது இவற்றை அறிந்து கொள்ள விருப்பமும் இல்லை. அவர் ஏதோ ஒரு மனோராஜ்ய உலகில் இருந்து கொண்டிருந்தார். அந்த மனோராஜ்ய உலகத்தில் எதுவும் உண்மையானதாகக் காணப்படவில்லை, கருப்பாக தோன்றிய

அந்தக் காட்சி ஒரு வேளை காவல்காரனின் வீடாக இருக்கலாம்; அல்லது பூமியின் ஆழத்திற்கு போகக்கூடிய ஒரு குகையாகவும் இருக்கலாம். சிவப்பாகத் தோன்றிய தோற்றமானது நெருப்பாய் இருக்கலாம் அல்லது ஒரு பிரம்மாண்டமான ஒரு பூதத்தின் கண்ணாகவும் இருக்கலாம். அவர் அந்த வண்டியின் மீது உண்மை யிலேயே ஒரு வேளை உட்கார்ந்துகொண்டிருக்கலாம். ஆனால் அவர் அம்மாதிரி வண்டியின் மீது அமராமல், ஒரு உயர்ந்த பயங்கரமான கோபுரத்தின் மீது அமர்ந்திருந்தாலும் இருக்கலாம். அவர் கீழே விழுந்தால், அந்த கோபுரத்தின் உச்சியிலிருந்து தரைக்கு வந்து சேருவதற்கு, ஒரு முழுநாள் ஆனாலும் ஆகலாம்; அல்லது ஒரு மாதம் ஆனாலும் ஆகலாம். அல்லது தரைக்கு வந்து சேராமலேயே விழுந்துகொண்டே இருந்தாலும் இருக்கலாம். ஒருவேளை வண்டிக்கு அடியில் உட்கார்ந்திருந்த அந்தக் கோசாக் லிக்காச்சி யோவாய் இருந்தாலும் இருக்கலாம். ஆனால் அவன் அன்பும், தைரியமும், மிகுந்த ஆச்சரியமாகவும், சிலாக்கியமாகவும் ஆன மனிதனாய் இருந்தாலும் இருக்கலாம். அவனைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. தண்ணீர் வேண்டுமென்று வந்து திரும்பி பள்ளத்தாக்கிற்கு போன அந்த குதிரை வீரன் உண்மையானவனாக இருந்தாலும் இருக்கலாம். ஆனால் ஒருவேளை அவன் அப்படியே மறைந்து போனாலும் போயிருக்கலாம். அல்லது பூரணமாக மறைந்து சூனியத்தில் கலந்துபோனாலும் போயிருக்கலாம்.

பெட்டியாவினால் இப்போது பார்க்கும் எதைக் கண்டும் ஆச்சரியப்பட முடியவில்லை. அவர் ஒரு கற்பனை உலகத்தில் இருந்தார். அங்கே எது வேண்டுமானாலும் சாத்தியமாகக் காணப்படும்.

அவர் மேலே வானத்தைப் பார்த்தார். அந்த வானம் பூமியைப்போல மனோராஜ்யத்தில் தோன்றியது. வானம் தெளிவாகிக்கொண்டு வந்தது. மரங்களின் உச்சிகளில் மேகங்கள் வேகமாகப் போய்க்கொண்டிருந்தன. நட்சத்திரங்களை வெளியே தெரியும்படி, காட்டுவதற்காக அவை விலகுவதைப்போலத் தோன்றின. சில வேளைகளில் அவை கடந்து போய் விட்டதைப்போலக் காணப்படும். உடனே தெளிவான நீலவானம் வெளியே தோன்றும். சில வேளைகளில் கருப்பு வெளிகள் மேகங்களைப்போலத் தோன்றும். சில வேளைகளில் மேலும் மேலும் வானம் உயர்ந்துகொண்டே போவது போலக் காணப்படும். பின்னால் திடீரென்று கீழே தாழ்ந்து ஒருவர் தன்னுடைய கையினால் தொட்டு விடக்கூடிய அளவுக்கு இறங்கிவிட்டதைப் போலத் தோன்றும்.

பெட்டியாவின் கண்கள் மூட ஆரம்பித்தன. அவர் முன்னும் பின்னும் சாய்ந்து ஆடிக்கொண்டிருந்தார்.

மரங்களிலிருந்து தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்தது. அமைதியாகப் பேசுவது கேட்டுக் கொண்டிருந்தது. குதிரைகள் கனைத்துக்கொண்டு, ஒன்றையொன்று தள்ளிக் கொண்டிருந்தன. யாரோ ஒருவர் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார்.

''ஓஜெக் - ஜெக், ஓஜெக் - ஜெக்...'' என்று, அந்த உடைவாளை சாணைக்கல்லில் தீட்டும் ஒலிகள் கேட்டுக்கொண்டிருந்தன. உடனே எங்கோ ஒரு இனிமையான கோஷ்டி கானம் இனம் தெரியாத ஒரு துதிப்பாட்டை பாடுவதுபோல பெட்டியாவுக்கு கேட்டது. நட்டாஷாவைப் போல பெட்டியாவும் சங்கீதப் பிரிய முள்ளவர். நிக்கலஸைவிட அதிகமாக சங்கீதப் பிரியமுள்ளவர். ஆனால் அவர் சங்கீதத்தை முறையாகக் கற்றதில்லை. அதைப்பற்றி எப்பொழுதும் நினைத்ததும் இல்லை. ஆகவே, திடீரென்று எதிர்பாராத விதமாக அந்த ராகம் அவருடைய மனத்திற்கு தோன்றியதானது, கவர்ச்சிகரமாகவும் புத்துயிர் உள்ளதாகவும் இருப்பதுபோல அவருக்கு காணப்பட்டது. அந்த சங்கீதம் வரவர தெளிவாகக் கேட்க ஆரம்பித்தது. அந்த ராகமானது ஒவ்வொரு வாத்தியத்திலும் புகுந்து வெளியே வந்தது. அப்பொழுது வாசித்துக்கொண்டிருந்தது பல்லவியைப்போல பெட்டியாவுக்குத் தோன்றியது. என்றாலும் பல்லவி என்றால் என்ன என்பதே அவருக்குத் தெரியாது. ஒவ்வொரு வாத்தியமும் தனித்தனியாக தன்னுடைய தொனியை அந்த கோஷ்டி கானத்தில் காட்டிக் கொண்டிருந்தது. வயலின் மாதிரி ஒன்றும், கொம்பு மாதிரி ஒன்றும் ஓசை கேட்டது. ஆனால் அந்த ஓசைகள் வயலினை விடவும் கொம்பை விடவும் சிலாக்கியமாகவும் தெளிவாகவும் இருந்தன. அந்த தனி வாத்தியங்கள் ஒவ்வொன்றும் தனது இசையை முடிப்பதற்கு முன்பாக மற்றொரு வாத்தியம் அதே இசையை எடுத்து அதோடு கலந்தது. இம்மாதிரியாக தனித்தனியாக ஒவ்வொரு வாத்தியமும் வாசித்து முடித்த பின்பு எல்லாம் ஒன்று சேர்ந்து வாசித்தன. மீண்டும் அவை பிரிந்தும் ஒன்று சேர்ந்தும் இப்படியாக வாசித்துக்கொண்டிருந்தன. சில சமயம் மாதாகோயில் கீதத்தையும், சில சமயம் மகிழ்ச்சியைக் கொடுக்கும் கீதங்களையும் வாசித்துக் கொண்டிருந்தன.

''ஓ - ஏன், இது ஒரு கனவு'' என்று பெட்டியா சொல்லிக்கொண்டு முன்னால் சாய்ந்தார். ''என்னுடைய காதுகளில் அது ஒலிக்கிறது. ஒரு வேளை அது என்னுடைய சொந்த சங்கீதமாய் இருந்தாலும் இருக்கலாம். நல்லது. என்னுடைய சங்கீதமே, மேலும் வாசித்துக்கொண்டே இரு! இப்பொழுது!...''

அவர் தமது கண்களை மூடிக்கொண்டார். எல்லா பக்கங்களிலிருந்தும் தூரத்தில் இருந்து வரும் சப்தங்களைப் போன்று ஒலிகள் வந்து கொண்டிருந்தன. சில சமயம் அவை ஒன்று சேர்ந்தும், சில சமயங்களில் பிரிந்தும், மீண்டும் எல்லாம் ஒன்று சேர்ந்தும் ஒரு இனிய தேவ கீதமாக ஒலித்துக்கொண்டிருந்தன. ''ஓ, இது மகிழ்ச்சிகரமாய் இருக்கிறது. நான் விரும்பும் அளவில் நான் விரும்புகிறபடி இருக்கிறது'' என்று பெட்டியா தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். அவர் அந்த பிரம்மாண்டமான ஐந்திர, சம்மேளனத்தை நடத்த ஆரம்பித்தார்.

''இப்பொழுது மெதுவாக மெதுவாக மறைந்து போ'' என்று அவர் சொன்னார். அந்த ஒலிகள் அவர் சொல்லியபடி கேட்டன. ''இப்பொழுது முழுவதும், மிகவும் களிப்பாக, இன்னும் அதிகமாக, இன்னும் அதிக மகிழ்ச்சியோடு!'' எங்கிருந்தோ இனம் தெரியாத ஆழத்திலிருந்து மகிழ்ச்சி ஒலிகள் வரவர அதிகமாக கிளம்பி வந்தன. ''இப்பொழுது எல்லா ஒலிகளும் ஒன்று சேருமாக'' என்று பெட்டியா உத்தரவிட்டார். முதல் தடவையாக தூரத்தில் ஆண்களின் குரல்களையும், அதன் பின்னால் பெண்களின் குரல்களையும் அவர் கேட்டார். அந்தக் குரல்கள் இன்னிசையாக மகிழ்ச்சியோடு பலத்து வந்தன. அந்த இணையற்ற அழகை மகிழ்ச்சியோடும் வியப்போடும் பெட்டியா கவனித்துக் கேட்டார்.

மகிழ்ச்சியான அந்த முன்னேற்றத்தில் ஒரு பாட்டு கலந்து நின்றது. மரங்களிலிருந்து விழும் தண்ணீர் துளிகளின் ஒலியும், உடைவாளைத் தீட்டும் ''ஒஜெக்–ஜெக்–ஜெக்...'' என்கிற ஒலியும் கலந்து நின்றன. மீண்டும் குதிரைகள் ஒன்றையொன்று தள்ளிக்கொண்டும் கனைத்துக்கொண்டும் நின்றன. ஆனால், அந்த சப்தம் இந்த கோஷ்டி கானத்தைக்கலைக்காமல் அதோடு ஒன்றி நின்றன.

எவ்வளவு நேரம் இம்மாதிரி இருந்தது என்பது பெட்டியாவுக்குத் தெரியாது. ஆனால் அது முழுவதையும் அவர் அனுபவித்தார். அவர் அனுபவித்ததைக் கண்டு அவரே ஆச்சரியங்கொண்டார். ஆனால், அந்த மகிழ்ச்சியில் கலந்துகொள்ள வேறு யாரும் இல்லையே என்று வருந்தினார். இச்சமயம் லிக்காச்சியோவின் அன்பான குரலைக் கேட்டு அவர் விழித்தார்.

''மேன்மை தங்கியவரே, இதோ தயாராய் விட்டது. இதைக்கொண்டு ஒரு பிரெஞ்சுக்காரனை பிளந்து விடலாம்'' என்று அவன் சொன்னான்.

பெட்டியா விழித்தெழுந்தார்.

''இப்பொழுது விடிவெளிச்சம் வந்துவிட்டது. உண்மையிலேயே வெளிச்சம் வந்துவிட்டது'' என்று அவர் கூவினார்.

முன்பெல்லாம் கண்ணுக்குத் தெரியாமல் இருந்த குதிரைகள் எல்லாம் இப்பொழுது நன்றாகத் தெரிந்தன. மரக்கிளைகளின் வழியாக வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. பெட்டியா தம்மை உலுப்பிக்கொண்டு குதித்தெழுந்தார். தமது ஜேபியிலிருந்து ஒரு ரூபிளை எடுத்து அதை லிக்காச்சியோவிடம் கொடுத்தார். பின்னால் தமது உடைவாளை சுழற்றி வீசி சோதனை செய்து அதை உறையில் போட்டார். கோசாக்குகள் தங்கள் குதிரைகளை அவிழ்த்து அவைகளின் சேணங்களை இறுக்கிக் கட்டிக்கொண்டிருந்தார்கள்.

''இதோ கமாண்டர் வந்துவிட்டார்'' என்று லிக்காச்சியோவ் சொன்னான்.

காவல்காரனின் குடிசையிலிருந்து டெனைசாவ் வெளியே வந்து பெட்டியாவை அழைத்தார். எல்லோரும் தயாராகும்படி உத்தரவு கொடுத்தார்.

## 14

### 11

**வீ**ரர்கள் எல்லாரும் அந்தப் பாதி இருளில் தங்கள் குதிரைகளைக் கொண்டு வந்து, அந்தக் குதிரைகள் மீதிருந்த சேணங்களை இறுக்கிக் கட்டி படை வரிசைகளாக அமைத்தார்கள். டெனைசாவ் அந்தக் காவல்காரனின் வீட்டிற்குப் பக்கத்தில் நின்று, முடிவான உத்தரவுகளைக் கொடுத்துக் கொண்டிருந்தார். அந்தப் படைப் பிரிவின் காலாட் படையானது, ரஸ்தா வழியாகச் சென்று அதிகாலை மூடுபனியில் மரங்களுக்குப் பின்னால் மறைந்தது. நூற்றுக்கணக்கான பாதங்கள் அந்தச் சேற்றில் நடந்து போயின. அந்தக் கோசாக் கேப்டன் தம்முடைய வீரர்களுக்குச் சில உத்தரவுகளைக் கொடுத்தார். பெட்டியா தமது குதிரையின் கடிவாளத்தைப் பற்றிப் பிடித்து குதிரை மீது ஏறுவதற்கு உண்டான உத்தரவை ஆவலோடு பொறுமையில்லாமல் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவர் குளிர்ந்த ஜலத்தில் குளித்த படியால், அவர் முகம் சிவந்து காணப்பட்டது. குறிப்பாக அவருடைய கண்கள் பிரகாசமாக இருந்தன. குளிர்ச்சியின் நடுக்கம் அவருடைய முதுகில் தோன்றியது. அவருடைய உடல் முழுவதும்ப் பதறிக் கொண்டிருந்தது.

''நல்லது, எல்லாம் தயாராய் விட்டதா?'' என்று டெனைசாவ் கேட்டார். ''குதிரைகளைக் கொண்டு வாருங்கள்.''

குதிரைகள் கொண்டுவரப்பட்டன. அந்தக் கோசாக் மீது டெனைசாவ் கோபம் கொண்டார். ஏனெனில் சேணத்தை சரியாகக் கட்டாமல் விட்டிருந்தபடியால், அவனைக் கண்டித்தபின்பு குதிரை மீது ஏறினார். பெட்டியா அங்கபடியில் தமது காலை வைத்தார். அவர் வேகமாக அந்தக் குதிரையின் சேணத்தில் தாவி ஏறினார். அவருக்குப் பின்னால் அந்த இருட்டில் வந்து கொண்டிருந்த குதிரை வீரர்களைப் பார்ப்பதற்காகத் திரும்பினார். பின்னால் டெனைசாவிடம் போனார்.

''வாசைலி டிமிட்ரிச், என்னிடம் ஏதாவது ஒரு வேலையை ஒப்புவிக்க வேண்டும். தயவு செய்து... கடவுளுக்காக...'' என்று அவர் சொன்னார்.

பெட்டியா அங்கு இருப்பதையே மறந்து விட்டவர் போல டெனைசாவ் காணப்பட்டார். அவரைப் பார்ப்பதற்காகத் திரும்பினார்.

''உம்மிடம் ஒன்று கேட்கிறேன்'' என்று கடுமையாகச் சொன்னார். ''நான் சொல்கிறபடி நீர் கேட்கவேண்டும். உமது இஷ்டப்படி எங்காவது முன்னால் ஓடக்கூடாது.''

அதற்கு ('மலாக ஒரு வார்த்தை கூட பெட்டியாவிடம் பேசாமல், வழி முழுவதும் மௌனமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். அந்தக் காட்டின் ஓரத்திற்கு வந்ததும் வெளிச்சம் அதிகமாய் விட்டதை அந்த வயலில் கண்டார்கள். டெனைசாவ் கோசாவ் கேப்டனுடன் மெதுவான குரலில் பேசினார். கோசாக்குகள் பெட்டியாவையும் டெனைசாவையும் கடந்து முன்னால் போனார்கள். எல்லாரும் போனபின்பு டெனைசாவ் தமது குதிரையைத் தட்டி அந்தக் குன்றின் கீழே இறங்கினார். அந்தச் சரிவில் குதிரைகள் இறங்கி அங்கிருந்த கணவாய்க்கு ஓடின. டெனைசாவுக்குப் பக்கத்தில் பெட்டியா சவாரி வந்து கொண்டிருந்தார். அவருடைய உடலில் ஏற்பட்ட படபடப்பானது வரவர அதிகரித்து வந்தது. வரவர வெளிச்சம் அதிகமாக தோன்றிய போதிலும், மூடுபனியிருந்தபடியால் தூரத்தில் உள்ளவைகளைப் பார்க்க முடியாமல் அது மறைத்து வந்தது. பள்ளத்தாக்குக்கு வந்ததும் டெனைசாவ் திரும்பிப் பார்த்து, தமக்குப் பின்னால் உள்ள ஒரு கோசாக்கிடம் தலையை ஆட்டினார்.

''சமிக்ஞை கொடுத்து விடு'' என்று அவர் சொன்னார்.

அந்தக் கோசாக் தனது கையை உயர்த்தினார். உடனே ஒரு வெடி சப்தம் கேட்டது. ஒரு வினாடியில் அந்தக் குதிரைகள் எல்லாம்

முன்னோக்கி பாய்ந்து ஓடுவது கேட்டது. பற்பல இடங்களிலிருந்து சப்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன. அதன் பின்னால் பல வெடி சப்தங்கள் கேட்டன.

குதிரைகளுடைய குளம்பு சப்தங்களும், கூச்சல்களும் முதலில் கேட்டவுடன், பெட்டியா தமது குதிரையைத் தட்டி விட்டார். லகானைத் தொய்வாக விட்டு டெனைசாவின் கூச்சலைப் பொருட்படுத்தாமல் பாய்ச்சல் வேகத்தில் முன்னால் பாய்ந்தார். முதல் குண்டு சுடப்பட்டவுடன் பெட்டியாவுக்கு திடீரென்று அந்த நேரம் நடுப் பகலைப் போலப் பிரகாசமாகத் தோன்றியது. அவர் அப்போது பாலத்திற்கு பாய்ச்சலில் போனார். அவருக்கு முன்பாக ரஸ்தாவில் கோசாக்குகள் பாய்ச்சலில் போய்க்கொண்டிருந்தார்கள். அந்தப் பாலத்தில் பின் தங்கிய ஒரு கோசாக்கோடு அவர் மோதிக்கொண்டார். பின்னால் மேலே சவாரி விட்டார். அவருக்கு முன்னால் பிரெஞ்சுக்காரர்கள் என்று தோன்றிய சிப்பாய்கள், வலது பக்கத்திலிருந்து இடது பக்கமாக ரஸ்தாவைக் கடந்து ஓடிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் அந்த சகதியில் பெட்டியாவின் குதிரை கால்களுக்கு அடியில் விழுந்தான்.

ஒரு குடிசையைச் சுற்றி கோசாக்குகள் கூடி நின்று, எதையோ செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியிலிருந்து பயங்கரமான கூச்சல்கள் கிளம்பின. பெட்டியா தமது குதிரையைத் தட்டி விட்டார். அவர் அங்கே ஒரு பிரெஞ்சுக்காரன் தன்னை நோக்கி நீட்டப்பட்ட ஒரு ஈட்டியை கையில் பிடித்துக்கொண்டு, நடுங்கிய நாடியோடும் வெளிறிய முகத்தோடும் காணப்படுவதை அவர் முதல் முதலாகக் கண்டார்.

''ஜே, ஜே...வாலிபர்களே...'' என்று பெட்டியா கூச்சலிட்டார். தம்முடைய பரபரப்படைந்த குதிரையின் லகானை இழுத்துவிட்டு, அவர் அந்தக் கிராமத்தின் தெருவழியாக முன்னால் ஓடினார்.

அவருக்கு முன்னால் தூரத்தில் சுடப்படும் சப்தத்தை அவர் கேட்டார். கோசாக்குகளும் வீரர்களும், கந்தல்கள் அணிந்து கொண்டிருந்த ருஷ்ய கைதிகளும், அந்த தெருவிற்கு இரண்டு பக்கங்களிலிருந்தும் ஓடி வந்தார்கள். அவர்கள் எதையோ பலமாகத் தொடர்பில்லாமல் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு வீரனைப் போலத் தோன்றிய பிரெஞ்சுக்காரன் நீல நிறமான வெளிச்சட்டையை அணிந்துகொண்டு, தலையில் தொப்பி யில்லாமல், சிவப்பான முகத்தை சுளித்துக்கொண்டு, அந்தக் குதிரை வீரர்களிடமிருந்து தன்னைக் காப்பாற்றுவதற்காக, தன்னுடைய துப்பாக்கிச் சனியனை உபயோகித்துக் கொண்டிருந்தான். பெட்டியா அந்த இடத்திற்கு போகும்போது பிரெஞ்சுக்காரன்

அதற்கு முன்பாகவே கீழே விழுந்து விட்டான் ''மீண்டும் நான் தாமதமாய் விட்டேன்'' என்ற நினைப்பு பெட்டியாவின் உள்ளத்தில் மின்னியது. அதன் பின்னால் அவர் வேகமாக குண்டு சப்தம் வந்துகொண்டிருந்த இடத்தை நோக்கி சவாரி போனார். அந்த மிராசுதாருடைய வீட்டின் முற்றத்திலிருந்து சுட்ட சப்தங்கள் கேட்டன. அந்த இடத்திற்குத்தான் முந்தைய இரவில் டோலாகாவோடு அவர் போயிருந்தார். அங்கே அடர்த்தியாக வளர்ந்திருந்த புதர்கள் உள்ள ஒரு தோட்டத்தில் அதன் மரவேலிக்குப் பின்னால் இருந்துகொண்டு, அந்த பிரெஞ்சுக் காரர்கள் வெளிவாசலில் நிற்கும் கூட்டமான கோசாக்குகளைப் பார்த்து சுட்டுக் கொண்டிருந்தார்கள். அவர் அந்த வெளி வாசலை அடையும் போது, அங்கிருந்த புகையில் டோலாகாவை பார்த்தார். டோலாகாவின் முகம் வெளிறிய பச்சையாக இருந்தது. அவர் தம்முடைய வீரர்களுக்கு, ''சுற்றிப்போங்கள். காலாட்படைக்காகக் காத்திருங்கள்'' என்று கூறினார். அச்சமயம் பெட்டியா அவரிடம் போய்ச் சேர்ந்தார்.

''காத்திருக்க வேண்டுமா...ஜேஜே'' என்று பெட்டியா கூச்சலிட்டார். ஒரு வினாடி கூடத் தாமதிக்காமல், குண்டு சப்தம் வந்துகொண்டிருந்த அடர்ந்து புகையாய் இருந்த அந்த இடத்திற்கு போனார்.

சுடுகிற சப்தம் கேட்டது. சில தோட்டாக்கள் அவருக்கு பக்கத்தில் பாய்ந்து சென்றன. சில தோட்டாக்கள் எதன் மீதோ பாய்ந்தன. கோசாக்குகளும் டோலாகாவும் அந்த முற்றத்திலிருந்து வெளி வாசல் வழியாக, பெட்டியாவுக்குப் பின்னால் உள்ளே போனார்கள். அங்கே சூழ்ந்து நின்ற அடர்த்தியான புகையில் சில பிரெஞ்சுக் காரர்கள் தங்களுடைய துப்பாக்கிகளை கீழே போட்டுவிட்டு கோசாக்குகளை சந்திப்பதற்காக புதர்களிலிருந்து வெளியே ஓடி வந்தார்கள். மற்றும் பலர் அந்தக் குன்றிலிருந்து கீழே இருந்த குளத்தை நோக்கி ஓடினார்கள். அந்த வீட்டு முற்றத்தில் பெட்டியா குதிரைமீது அமர்ந்தபடி பாய்ச்சலில் சுற்றி வந்தார். அவர் கடிவாளத்தை கையில் பிடிக்காமல், கைகள் இரண்டையும் மேலே உயர்த்தி, வேகமாக விசித்திரமாக ஆட்டிக்கொண்டிருந்தார். அதனால் அவருடைய சேணத்தில் கொஞ்சம் கொஞ்சமாக வழுக்கிக் கொண்டிருந்தார். அவருடைய குதிரை அங்கிருந்த புகைந்து கொண்டிருந்த கணப்பு மூட்டத்திற்கு போனவுடன் திடீரென்று நின்றது. குதிரை திடீரென்று நின்ற வேகத்தில் ஈரமான பூமியில் பெட்டியா கீழே விழுந்தார். அவருடைய கைகளும் கால்களும் வேகமாக இழுத்துக் கொண்டிருந்தபோதிலும், அவருடைய தலை

அசைவற்றுக் கிடந்ததை கோசாக்குகள் பார்த்தார்கள். அவருடைய மண்டையை ஒரு குண்டு துளைத்திருந்தது.

உடைவாளின் நுனியில் ஒரு வெள்ளை கை குட்டையைக் கட்டி உயர்த்திக்கொண்டு வீட்டிற்குள்ளிருந்து ஒரு பிரெஞ்சு அதிகாரி வெளியே வந்தார். தாங்கள் எல்லாரும் பணிந்து விட்டதாக அறிவித்தார். அவரிடம் பேசிய பின்பு டோலாகாவ் குதிரையிலிருந்து கீழே இறங்கி பெட்டியாவிடம் போனார். அவர் கைகளை பரப்பி கீழே அசைவற்றுக் கிடந்தார்.

''போய் விட்டார்'' என்று முகத்தைச் சுளித்து அவர் சொன்னார். டெனைசாவைச் சந்திப்பதற்காக அவர் வெளிவாசலுக்குப் போனார். டெனைசாவ் அவரை நோக்கிக் குதிரையில் வந்துகொண்டிருந்தார்.

''கொல்லப்பட்டு விட்டாரா?'' என்று டெனைசாவ் கூச்சலிட்டார். தூரத்திலிருந்தே பெட்டியாவின் உடல் அசைவற்றுக் கிடந்ததை அவர் கண்டார்.

''ஆமாம், முடிந்து விட்டது'' என்று டோலாகாவ் சொன்னார். அந்த வார்த்தைகளைப் பேசுவதில் அவருக்கு மகிழ்ச்சி இருப்பது போலக் காணப்பட்டது. அவர் வேகமாக அங்கிருந்து பிரெஞ்சு கைதிகளிடம் சென்றார். அவர்களைக் கோசாக்குகள் சூழ்ந்துநின்று துரிதப்படுத்திக் கொண்டிருந்தார்கள். ''நாம் அவர்களைக் கைது செய்யப் போவதில்லை'' என்று டெனைசாவைப் பார்த்து கூச்சலிட்டார்.

டெனைசாவ் பதில் சொல்லவில்லை. அவர் பெட்டியாவிடம் சென்று, குதிரையிலிருந்து கீழேஇறங்கினார். தம்முடைய நடுங்கிய கைகளால் அங்கே ரத்தக் கறையிலும், சகதியிலும் தோய்ந்திருந்த பெட்டியாவின் முகத்தைத் திருப்பினார். அந்த முகம் அதற்குள்ளாக வெள்ளையாய் விட்டது.

''எனக்கு இனிப்பு சாப்பிடுவதில் மிகுந்த பிரியம். திராட்சைப்பழம், சிலாக்கியமான திராட்சைப் பழங்கள்... எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று பெட்டியா சொன்னா வார்த்தைகளை அவர் நினைவு கூர்ந்தார். ஒரு நாய் ஊளையிடுவதைப் போன்ற சப்தத்தைக் கேட்ட கோசாக்குகள், ஆச்சரியத்தோடு திரும்பிப் பார்த்தார்கள். அந்த சப்தத்தோடு டெனைசாவ் பெட்டியாவிடமிருந்து திரும்பி, அங்கிருந்த மர வேலிக்கும் நடந்து போய், தாம் கீழே விழுந்துவிடாமல் இருப்பதற்காக அந்த வேலியைப் பிடித்துக் கொண்டார்.

தம்மாலும் டோலாகாவாலும் விடுவிக்கப்பட்ட ருஷ்ய கைதிகளில் பீயர் பெஜுகாவும் இருந்தார்.

# 14

## 12

மாஸ்கோவிலிருந்து பின்வாங்கிக் கொண்டிருந்த பிரெஞ்சு ராணுவம், தங்களோடு பீயர் உள்பட்ட ருஷ்ய கைதிகளையும் அழைத்துச் சென்றார்கள். அந்த கைதிகளைப் பற்றி மாஸ்கோவை விட்டுப் புறப்பட்ட பின்பு, புதிதாக எவ்விதமான உத்தரவுகளும் பிறப்பிக்கப் படவில்லை. மாஸ்கோவிலிந்து புறப்பட்ட போது, எந்த படைப்பிரிவுகளோடும் சாமான் வண்டிகளோடும் அந்தக் கைதிகள் வந்து கொண்டிருந்தார்களோ, அதே கூட்டத்தோடு அக்டோபர் 22-ந் தேதியன்று அவர்கள் வரவில்லை. துருப்புகள் கொண்டு போய்க்கொண்டிருந்த சாமான் வண்டிகளில் ஒரு பாதி முன்னால் சென்றுவிட்டது. பின்னால் வந்த மற்றொரு பாதியைக் கோசாக்குகள் பிடித்துக் கொண்டார்கள். அவற்றில் பிஸ்கோத்து போன்ற உணவுப் பொருள்கள் இருந்தன. கைதிகளுக்கு முன்பாகக் காவலாக நடந்து போய்க்கொண்டிருந்த குதிரை வீரர்கள், இப்பொழுது காணப்படவில்லை; எல்லாரும் மறைந்து விட்டார்கள். கைதிகளுக்கு முன்பாக பீரங்கிப்படை முதல் சில நாட்கள் சென்றுகொண்டிருந்தது. இப்பொழுது அதற்குப் பதிலாக, மார்ஷல் ஜுநாட் என்பவரின் ஏராளமான சாமான் வண்டிகள், மேற்கு பாலியன்ஸ் படையின் காவலோடு சென்று கொண்டிருந்தன. கைதிகளுக்குப் பின்பாக குதிரைப்படையின் சாமான் வண்டித் தொடர் வந்துகொண்டிருந்தது.

வியாஜ்மாவிலிருந்து மேலே போய்க்கொண்டிருந்த பிரெஞ்சு ராணுவம், இப்பொழுது ஒரே வரிசையாகப் போய்க் கொண்டிருந்தது. முன்பெல்லாம் மூன்று வரிசைகளாக அவை சென்றுகொண்டிருந்தன. மாஸ்கோவை விட்டு புறப்பட்ட பின்பு ஏற்பட்ட ஒழுங்கற்ற நிலைமையானது, அவர்கள் முதன்முதலாக இரவில் தங்கியபோது தோன்றியது. இப்பொழுது அது உச்ச ஸ்தானத்திற்கு போய்விட்டதை பீயர் கவனித்தார்.

அவர்கள் போய்க்கொண்டிருந்த ரஸ்தாவிற்கு இருபக்கங்களிலும் ஏராளமான செத்த குதிரைகள் வரிசையாகக் கிடந்தன. களைப்பினால் பின்தங்கிய வீரர்கள் களைப்பு தீர்ந்ததும் தங்கள் படை அல்லாத வேறு படைகளோடு போவதும், பின்னால் களைப்பு ஏற்பட்டதும் மீண்டும் தங்கி நிற்பதுமாய் இருந்தார்கள்.

அந்தப் பிரயாணத்தின்போது பொய்யான ஆபத்து அறிவிப்புகள் பல தடவைகளில் கொடுக்கப்பட்டன. காவலாக சென்று கொண்டிருந்த சிப்பாய்கள் தங்கள் துப்பாக்கிகளை உயர்த்தி

சுட்டுக்கொண்டும், தலைதெறிக்க ஓடிக்கொண்டும், ஒருவர் மீது ஒருவர் இடித்துக்கொண்டும், அந்த சமயங்களில் இருந்தார்கள். பின்னால் மீண்டும் அவர்கள் ஒன்று சேர்ந்து, அனாவசியமாக பீதியை உண்டாக்கினதற்காக ஒருவரையொருவர் திட்டிக் கொண்டிருந்தார்கள்.

குதிரைப்படையின் சாமான் வண்டிகள் கைதி கூட்டங்கள், மார்ஷல் ஜுநாட்டின் சாமான் வண்டிகள் ஆகிய மூன்று கூட்டங்களும் தனியாக ஒன்றி அமைந்த ஒரு கூட்டத்தைப்போல சென்று கொண்டிருந்தார்கள். இந்தக் கூட்டம் கூட வேகமாக குறைந்து வந்தது.

பீரங்கிப் படையைச் சேர்ந்த சாமான் வண்டிகள் 120 இருந்தன. இப்பொழுது அந்த எண்ணிக்கை 60 - ஆக குறைந்துவிட்டது. மீதமுள்ளவை பிடிக்கப்பட்டோ, அல்லது கைவிடப்பட்டோ போயின. ஜுநாட்டின் வண்டிகளில் கூட சில கைவிடப்பட்டோ போயின. டாவூட்டின் படைப்பிரிவைச் சேர்ந்த ராணுவத்திலிருந்து விலகி ஓடியவர்கள், அந்த வண்டிகளில் மூன்று வண்டிகளைத் தாக்கி கொள்ளையடித்தார்கள். கைதிகளுக்காக ஏற்பட்டிருந்த காவல் வீரர்களைவிட அதிகமான வீரர்களை அந்த சாமான் வண்டித் தொடரைக் காப்பதற்காக ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று ஜெர்மானியர்கள் பேசிக்கொண்டதிலிருந்து பீயர் அறிந்தார். ஒரு ஜெர்மன் சிப்பாய், மார்ஷலுடைய வெள்ளிக்கரண்டி ஒன்றை திருடி வைத்திருந்ததற்காக மார்ஷலின் உத்தரவுப்படி சுட்டுக் கொல்லப்பட்டான் என்றும், அந்த ஜெர்மனியர்கள் பேசிக்கொண்டார்கள்.

கைதிக் கூட்டங்களிலும் அநேகர் தப்பியோடி விட்டார்கள். மாஸ்கோவை விட்டுப் புறப்பட்டபோது, 320 கைதிகள் இருந்தார்கள். இப்பொழுது 100 - க்கும் குறைவாகவே அவர்கள் இருக்கிறார்கள். குதிரைப் படையின் சேணங்களையும், ஜுநாட்டின் சாமான் வண்டிகளையும் பாதுகாப்பதைவிட, கைதிகளைப் பாதுகாப்பதுதான் காவல் வீரர்களுக்கு அதிக தொந்தரவான வேலையாய் இருந்தது. சேணங்களாலும், ஜுநாட்டின் கரண்டிகளாலும், ஏதாவது உபயோகமிருக்கலாம் என்று அந்த காவல் வீரர்கள் நினைத்தார்கள், ஆனால் குளிரினாலும் பசியினாலும் வாடிய சிப்பாய்கள், அதே மாதிரி குளிரினாலும் பசியினாலும் வாடி ரஸ்தாவில் பின் தங்குகின்ற கைதிகளை பாதுகாப்பது என்பது, அவர்களுக்கு புரியமுடியாத விஷயமாயிருந்தது. அந்த வேலை வெறுப்பைக் கொடுத்தது. கைதிகள் மெதுவாய் நடந்து பின் தங்கினால், அவர்களை

சுட்டுவிடும்படி ஏற்கெனவே உத்தரவிட்டிருந்தார்கள். காவல் வீரர்கள் தாங்களே பரிதாபகரமான நிலைமையில் இருந்தபடியால் கைதிகளிடம் இரக்கம் காட்டுவதற்கு பிரியப்படவில்லை. ஏனெனில், அம்மாதிரி செய்தால் தங்களுடைய நிலைமை இன்னும் அதிக கஷ்டமாகும் என்று நினைத்தார்கள். ஆகவே கைதிகள் கண்டிப்பாகவும் கடுகடுப்பாகவும் நடத்தினார்கள்.

டாராகாபுஜ்ஜில் கைதிகளை ஒரு குதிரை லாயத்தில் அடைத்து பூட்டிய பின்பு, காவல் வீரர்கள் தங்கள் ராணுவத்தைச் சேர்ந்த சாமான் வண்டிகளைக் கொள்ளையடிப்பதற்காக போனார்கள். பல சிப்பாய்க் கைதிகள் அந்த சுவரில் துவாரம் செய்து தப்பியோடினார்கள். ஆனால் அவர்களை பிரெஞ்சுக்காரர்கள் மீண்டும் பிடித்து சுட்டுக்கொன்றார்கள்.

அதிகாரி - கைதிகளையும், சாதாரண கைதிகளையும் பிரித்துக்கொண்டு போக வேண்டுமென்று அவர்கள் புறப்பட்டபோது ஏற்பாடாகியிருந்தது. அந்த ஏற்பாடெல்லாம் இப்பொழுது கைவிடப்பட்டன. நடந்து போக யாரால் முடியுமோ, அவர்களெல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்துகொண்டார்கள். மூன்றாவது நாள் ஒரு இடத்தில் தங்கி, மீண்டும் புறப்பட்டபோது காராட்டேவும், அவனுடைய சாம்பல் நீல வர்ணமுள்ள நாயும், பீயரோடு சேர்ந்து கொண்டார்கள். அந்த நாயானது இப்பொழுது காராட்டேவையே தன்னுடைய எஜமானனாகக் கருதியது.

மாஸ்கோவை விட்டுப் புறப்பட்ட பின்பு, மூன்றாவது நாளன்று காராட்டேவுக்கு மீண்டும் ஜுரம் வந்தது. மாஸ்கோ ஆஸ்பத்திரியில் அவனைப் பிடித்து இருந்த அதே ஜுரம் இப்பொழுது மீண்டும் வந்து விட்டது. வரவர அவன் பலவீனமாய் வந்தபோது, பீயர் அவனிடமிருந்து விலகியே இருந்தார். காராட்டேவ் பலவீனமாக ஆரம்பித்ததிலிருந்து, அவனிடம் போவதற்கு பீயருக்கு அவ்வளவு விருப்பமில்லை, அதற்குக் காரணம் என்னவென்பது பீயருக்குத் தெரியாது. இரவில் தங்குகிற இடங்களில் காராட்டேவ் கீழே படுத்து முனங்கிக்கொண்டிருப்பான். அவனுடைய உடம்பிலிருந்து வரும் நெடியானது, முன்னைவிட அதிக பலமானதாய் இருந்தது. ஆகவே பீயர் அவனை விட்டு விலகி நின்றார். அவனைப் பற்றி நினைப்பதேயில்லை.

பீயர் முன்னால் கொட்டகையில் கைதியாக இருந்தபோது ஒரு விஷயத்தை அறிந்தார். அதாவது, மனிதன் சந்தோஷமாக வாழ்வதற்காகத்தான் படைக்கப்பட்டிருக்கிறான் என்பதை அறிந்தார். அதை அவர் புத்தியினால் அறியவில்லை. தம்முடைய முழு உள்ளத்தாலும் வாழ்க்கையினாலும் அறிந்தார். அதாவது, அந்த

மகிழ்ச்சியானது ஒருவனுக்கு உள்ளே இருப்பதாகவும், சாதாரண மனித தேவைகளைப் பூர்த்தி செய்தில் அது இருப்பதாகவும், கஷ்டங்களினால் மனிதனுக்கு மகிழ்ச்சிக் குறைவு ஏற்படுவதில்லை யென்றும், அவசியத்திற்கு அதிகமானவைகளாலேயே மகிழ்ச்சிக் குறைவுகள் ஏற்படுகின்றன என்றும் அவர் அச்சமயத்தில் அறிந்தார். இப்பொழுது சென்ற மூன்று வாரங்களாக அவர் செய்துவரும் பிரயாணத்தில் மற்றொரு புதிய, மனதை சமாதனப்படுத்தக் கூடிய ஒன்றை அவர் கண்டறிந்தார். அதாவது, பயங்கரம் என்பது இந்த உலகத்தில் எதுவுமே இல்லை என்பதுதான் அவர் கண்ட உண்மையாகும். மனிதனால் மகிழ்ச்சியாகவும், பூர்ண சுதந்திரமாகவும் இருக்கக் கூடிய நிலைமை எதுவுமே இல்லாதபடியால், அவன் மகிழ்ச்சிக் குறைவாகவோ, சுதந்திரமாய் இல்லாமலோ இருப்பதாகவே நினைத்து வருந்தக் கூடிய நிலைமையும் எதுவுமில்லை யென்று அவர் தெரிந்துகொண்டார். கஷ்டங்களும் சுதந்திரமும் ஒரு எல்லைக்கு உட்பட்டவைகள் என்றும், அந்த எல்லைகள் ஒன்றுக்கொன்று ரொம்ப நெருங்கியிருப்பதாகவும் அவர் அறிந்துகொண்டார். தாம் குளிர்ந்த தரையில் தூங்கும்போது, ஒரு பக்கம் குளிர்ந்தும், மற்றொரு பக்கம் வெதுவெதுப்பாகவும் இருப்பதினால் என்ன கஷ்டத்தை அடைகிறாரோ, அதே மாதிரிதான் ரோஜாப்பூ படுக்கையில் படுத்திருக்கும் போதும், அந்த ரோஜாப்பூக்களில் ஒரு இதழ் மடங்கிக்கிடப்பதால் ஒருவன் கஷ்டப்படுகிறான் என்றும் அவர் அறிந்து கொண்டார். அவர் காலில் அணிந்திருந்த ஜோடுகள் துண்டு துண்டாய் போய்விட்டன. வெறும் காலோடுதான், பாதங்களில் ஏற்பட்ட புணக்ளோடுதான் நடந்து வருகிறார். அதனால் ஏற்படுகிற கஷ்டமும், இறுக்கமாக நடன ஜோடுகள் அணிந்து நடனமாடும் போது ஏற்படும் கஷ்டமும் ஒன்றுதான் என்பதை அவர் அறிந்துகொண்டார். தம்முடைய சொந்த விருப்பத்தினால்தான் தாம் செய்வதாக நினைத்து திருமணம் செய்துகொண்ட போது, அவருக்கு ஏற்பட்டிருந்த சுதந்திரம், இப்பொழுது இந்த குதிரை லாயத்தில் இரவில் அடைபட்டுக் கிடக்கும் சுதந்திரத்தைவிட அதிகமாய் இல்லையென்பதை அவர் உணர்ந்துகொண்டார். அந்த சிறைவாச கஷ்டங்களைப்பற்றி பின்னால் அவர் பேசியபோது, எல்லாக் கஷ்டங்களையும்விட அவருடைய புண் நிறைந்த வெறுங்காலால் நடக்க வேண்டிய கஷ்டந்தான், மிக மோசமானதாயிருந்ததென்று அவர் கூறினார். ஆனால் இந்தச் சமயத்தில் அவருக்கு அந்தக் கஷ்டம் தெரியவில்லை. குதிரையின் இறைச்சி வாய்க்கு ருசியாகவும், உடலுக்குப் பலத்தைக் கொடுப்பதாகவும் இருந்தது. உப்புக்குப் பதிலாக வெடி மருந்து கலவைக்கு அவசியமான வெடியுப்பை

உபயோகித்தார்கள். அதுவும் இனிமையாய்த்தானிருந்தது. அவர்கள் பிரயாணம் போன காலத்தில் குளிரும் அதிகமாயில்லை. பகலில் நடந்து போவதற்கு வெதுவெதுப்பாகவே இருந்தது. இரவு நேரங்களில் அவர்கள் தங்குமிடங்களில் குளிர் காய்வதற்கு முன்பு கணப்பு மூட்டங்கள் இருந்தன. மூட்டைப்பூச்சிகள் இரவு காலங்களில் கடித்துக்கொண்டிருந்தபடியால், அதனால் அவருடைய உடம்பு வெதுவெதுப்பாக இருக்கும்படி செய்தது, அந்த வெறுங்காலால் நடக்கவேண்டியிருந்தது ஒன்றுதான், அவரால் முதலில் தாங்க முடியாத கஷ்டமாயிருந்தது.

இரண்டாவது நாள் பிரயாணத்திற்குப் பின்னால், கனப்பு மூட்ட வெளிச்சத்தில் தமது காலை சோதித்துப் பார்த்தார். அந்த நிலைமையில் மேலே நடந்துபோவது அசாத்தியம் என்று நினைத்தார். ஆனால் ஒவ்வொருவரும் எழுந்து நடக்க ஆரம்பித்ததும், அவரும் நொண்டிக்கொண்டு நடந்து போனார். கொஞ்சம் உடம்பில் உஷ்ணம் ஏற்பட்டதும், அந்த வலி அவருக்குத் தெரியவில்லை. ஆனால் இரவு நேரங்களில் அந்த கால்களை அவர் பார்த்தபோது, முன்னைவிட அதிக கோரமாய் இருக்கும். அவர் அவற்றை கவனிக்காமலேயே மற்ற விஷயங்களைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருந்தார்.

இப்பொழுதுதான் ஒரு மனிதனிடம் உள்ள வாழ்க்கையின் பூர்ண பலத்தை பீயர் உணர்ந்தார். ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்குக் கவனத்தைத் திருப்புவதானது, சக்தியை வீணாக்காமல் சேமிப்பதாய் இருந்தது. அதாவது, ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேலாக நீராவி பெருகி விட்டால், அந்த அதிகமான நீராவியை வெளிப்படுத்துவதற்குள்ள ஒரு பந்தோபஸ்தான வால்வைப்போல அது இருக்கிறது என்பதை உணர்ந்தார்.

ஒன்றாக சேர்ந்து வராமல், பின்னாலேயே போய்க்கொண்டிருந்த கைதிகளை எப்படி அவர்கள் சுட்டுக்கொன்றார்கள் என்பதைப் பற்றி, அவர் பார்க்கவோ, அல்லது கேட்கவோ இல்லை. அம் மாதிரியாக அந்த பிரயாணத்தில் சுமார் 100 பேர்களுக்கு மேலாக அழிந்துபோனார்கள். காராட்டேவ் ஒவ்வொரு நாளும் பலவீனமாய் வந்தபடியால், அவனும் அதே கதியை சீக்கிரம் அடைந்து விடுவானென்று தோன்றியது. ஆனால் அவனைப் பற்றி பீயர் இப்பொழுது நினைப்பதில்லை. தம்மைப்பற்றியும் பீயர் நினைப்பதில்லை. இவருடைய நிலைமை கஷ்டமாக ஆக, அவருடைய எதிர்காலம் பயங்கரமாகத் தோன்றத் தோன்ற, அவற்றிற்குப் புறம்பாக சுயேச்சையாக ஒரு விஷயம் இருந்தது. அதுதான் அவருடைய மனதில் தோன்றி வந்த மகிழ்ச்சியான, இதம் கொடுக்கக்கூடிய நினைவுகளும் மனோராஜ்யங்களுமாகும்.

# 14

## 13

அக்டோபர் 22-ந் தேதியன்று நடுப்பகலில், சேறும் வழுக்கலும் நிறைந்த ரஸ்தாவில், குன்றின் மீது பீயர் போய்க்கொண்டிருந்தார். கரடு முரடான வழியையும், தமது கால்களையும் பார்த்துக் கொண்டே போனார். இடையிடையே தமக்குப் பழக்கமான, தம்மைச் சுற்றியுள்ள கூட்டத்தையும், தமது கால்களையும் மாறி மாறி பார்த்துக் கொள்ளுவார். அந்தக் கூட்டமும் அவருடைய கால்களும் ஒரே மாதிரி பழகியவையாகவும் சொந்தமானவையாகவும் தோன்றின. சாம்பல் நீல வர்ணத்தைக் கொண்ட குட்டையான கால்களையும் அந்த நாய், பாதையின் ஓரத்தில் மகிழ்ச்சியோடு ஓடிக்கொண்டிருந்தது. சில வேளைகளில் தன்னுடைய சுறுசுறுப்பையும் திருப்தியையும் காட்டுவதற்காக, ஒற்றைப்பின் காலை தூக்கிக்கொண்டு, மற்ற மூன்று கால்களால் தாவித் தாவி ஓடிக்கொண்டிருந்தது. பின்னால் மீண்டும் நாலு கால்களால் நடந்து, அங்கே பிரேதங்கள் மீது உட்கார்ந்திருக்கும் காக்கைகளை நோக்கிக் குலைத்துக்கொண்டு ஓடும். மாஸ்கோவில் இருந்ததை விட அந்த நாய் இப்பொழுது மகிழ்ச்சியோடும், வழுவழுப்பாகவும் இருந்தது. எங்கு பார்த்தாலும் மனிதரிலிருந்து குதிரைகள் வரை பல விதமான மாமிசங்கள் காணப்பட்டன. அவை அழுகிக்கொண்டிருந்தன. ரஸ்தாக்களின் ராணுவம் போய்க்கொண்டிருந்தபடியால், அந்தப் பிரேதங்களைத் தின்பதற்கு ஓநாய்கள் அங்கே வரமுடியவில்லை. ஆகவே, தனக்கு வேண்டிய அளவு அந்த நாய் இறைச்சியைத் தின்றுகொண்டே வந்தது.

காலையிலிருந்து மழை பெய்து கொண்டிருந்தது. மழை சீக்கிரமாக நின்றுவிடுவதைப்போல தோன்றியது. வானம் தெளிவாய் இருந்தது. இடையில் சிறிது நேரம் மழை ஓய்ந்து, பின்னால் முன்னைவிட அதிகமாக பெய்ய ஆரம்பித்தது. அந்த ரஸ்தாவில் தண்ணீர் தேங்கி, கால்வாய்களாக ஓடிக்கொண்டிருந்தது.

பீயர் இரண்டு பக்கங்களிலும் பார்த்துக்கொண்டு, ஒன்று இரண்டு மூன்று என்று எண்ணிக்கொண்டு, நடந்துகொண்டிருந்தார். தமது விரல்களை மடக்கி அந்த எண்ணிக்கைகளைக் கூட்டிக் கொண்டிருந்தார். அந்த மழையைப் பார்த்து மனதிற்குள்ளாகவே அவர் ''ரொம்ப சரி, இப்பொழுது நன்றாக பெய்; இன்னும் கடுமையாக பெய்'' என்று திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டே இருந்தார்.

அவர் எதைப் பற்றியும் சிந்திக்கவில்லையென்று அவருக்கு தோன்றியது, அ,னால் அவருக்கு உள்ளே அவருடைய உள்ளத்தின்

ஆழத்தில் முக்கியமான மனதிற்கு இதமான ஒரு விஷயம் இருந்து வந்தது. அந்த முக்கியமான விஷயந்தான், முதல் நாளன்று காராட்டேவிடம் அவர் பேசிய பின்பு அவருக்குத் தெளிவான ஆத்மார்த்தீக விஷயமாகும்.

முதல்நாள் அவர்கள் இரவில் தங்கிய இடத்தில் குளிராயிருந்த படியால் ஒரு கணப்பு மூட்டத்தின் பக்கத்தில் இருந்தபோது, அந்த கணப்பு மூட்டம் அணைந்து கொண்டிருந்தபடியால், நன்றாக எரிந்து கொண்டிருந்த மற்றொரு மூட்டத்திற்கு பீயர் எழுந்து போனார். அங்கே பிளாட்டோன் காராட்டேவ் உட்கார்ந்துகொண்டிருந்தான். அவனுடைய தலையையும் உடலையும், அவனுடைய வெளிக் கோட்டினால் மூடிக் கொண்டிருந்தான். அவனுக்குரிய வழக்கமான இனிமையான திறமையான முறையில், ஆனால் இப்பொழுது பலவீனமான தொனியில், அங்கிருந்த சிப்பாய்களுக்கு ஒரு கதையைச் சொல்லிக்கொண்டிருந்தான். பீயருக்கு அந்தக் கதை ஏற்கெனவே தெரிந்ததுதான். அப்பொழுது நள்ளிரவு கடந்து போயிருப்பதைக் கண்டார். அவனுடைய பரிதாபமான முகம் அந்தக் கணப்பு மூட்ட வெளிச்சத்தில் நன்றாய்த் தெரிந்தது. அவருடைய உள்ளத்தில் ஏதோ ஒன்று குத்தியது போல உணர்ந்தார். அந்த காராட்டேவிற்காக அவருக்குத் தோன்றிய பரிதாபமான உணர்ச்சியானது, இப்பொழுது அவருக்கு பீதியை உண்டு பண்ணியபடியால், அவர் திரும்பிப் போக விரும்பினார். ஆனால் அந்தப் பக்கத்தில் வேறு கணப்பு மூட்டம் இல்லாதபடியால், அவர் கீழே உட்கார்ந்தார். பிளாட்டோனை பார்க்காமலிருக்க முயற்சி செய்தார்.

''நல்லது, நீர் எப்படி இருக்கிறீர்?'' என்று அவர் கேட்டார்.

''நான் எப்படி இருக்கிறேனா? வியாதியைப் பார்த்து நாம் முணுமுணுத்தால் கடவுள் நமக்கு மரணத்தைக் கொடுக்கமாட்டார்'' என்று பிளாட்டோன் கூறிவிட்டு, தனது கதையை மேலே தொடர ஆரம்பித்தான்.

''ஆகவே, சகோதரரே'' என்று அவன் தொடர்ந்தான். அவனுடைய மெலிந்துபோன, வெளிறிப்போன முகத்தில் ஒரு புன்முறுவல் இருந்தது. அவனுடைய கண்களில் ஒரு குறிப்பான மகிழ்ச்சியின் ஒளி காணப்பட்டது. ''சகோதரரே, இப்பொழுது நீரே பாரும்...''

அந்த கதையைப் பற்றிப் பீயருக்கு வெகுகாலமாகத் தெரியும். பீயரிடம் மட்டும், தனியாக ஒரு விசேஷமான மகிழ்ச்சி உணர்ச்சியோடு அந்தக் கதையை ஆறு தடவைகளுக்கு மேலாக சொல்லியிருக்கிறான். தமக்கு அது தெரிந்த கதையாயிருந்தாலும்,

ஒரு புதிய கதையைக் கேட்பதைப் போல அதை பீயர் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தார். காராட்டேவ் தான் கதை சொல்லிக் கொண்டிருந்தபோது அவனுக்கு ஏற்பட்ட அமைதியான பரவசமானது, பீயரையும் பற்றிக்கொண்டது. கதை இதுதான்: - ''ஒரு முதிய வியாபாரி கடவுள் பக்தியோடு நல்ல விதமாக தனது வாழ்க்கையை குடும்பத்தோடு நடத்திவந்தான். அவன் நைஜ்னி சந்தைக்கு ஒரு பணக்கார வியாபாரியோடு போனான். அவர்கள் இருவரும் ஒரு ஒட்டலில் இரவில் தூங்கினார்கள். மறு நாள் காலையில் அவனுடன் வந்த அந்த வியாபாரியின் கழுத்து வெட்டப்பட்டிருந்தது. அவனிடமிருந்து பணமும் திருடப்பட்டிருந்தது. ஒரு ரத்தம் தோய்ந்த கத்தி முதிய வியாபாரியின் தலையணைக்குக் கீழ் காணப்பட்டது. அந்த முதிய வியாபாரியை குற்றஞ்சாட்டி விசாரித்து, அவனுக்கு சவுக்கடி கொடுத்து, அவனுடைய மூக்கை வெட்டி, அவனை சைபீரியாவுக்கு அனுப்பினார்கள். இவையெல்லாம் சட்ட முறைப்படித்தான் நடந்தது.'' இதுதான் கதை.

இந்த சமயத்தில்தான் பீயர் அவன் இருக்குமிடத்திற்கு வந்தார். ''ஆகவே சகோதரரே, பத்து வருஷங்கள் கழிந்தன'' என்று காராட்டேவ் தனது கதையை மேலும் சொன்னான். ''அந்த தண்டனையை அடைந்த முதியவன் கைதியாக குற்றமில்லாமல் வாழ்ந்து வந்தான். ஆனால் தனக்கு மரணத்தைக் கொடுக்கும்படி அவன் கடவுளை பிரார்த்தித்துக் கொண்டிருந்தான். ஒருநாள் இரவு இங்கே நாம் கூடியிருப்பதைப்போல சைபீரியாவிலிருந்த கைதிகள் எல்லாரும் கூடியிருந்தார்கள். அங்கே அந்த முதியவரும் இருந்தான். ஒவ்வொருவரும் தாங்கள் எதற்காக அங்கே தண்டனை அடைந்து வருகிறார்கள் என்றும், கடவுளுக்கு விரோதமாக அவர்கள் எப்படிப் பாவம் செய்தார்கள் என்றும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஒருவன் ஒரு உயிரை தான் பறித்ததாகவும், மற்றொருவன் இரண்டு உயிர்களைப் பறித்ததாகவும், மூன்றாவது பேர்வழி ஒரு வீட்டிற்கு நெருப்பு வைத்து கொளுத்தியதாகவும், நாலாவது பேர்வழி தான் சோம்பேறியாக சுற்றிக்கொண்டிருந்ததைத் தவிர, வேறு எந்தக் குற்றத்தையும் செய்யவில்லையென்றும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். கடைசியில் அந்த முதியவரைப் பார்த்து, 'நீ எதற்காக தண்டனை அடைந்தாய், தந்தையே?' என்று அவர்கள் கேட்டார்கள். 'எனது அன்புள்ள சகோதரர்களே என்று அவன் ஆரம்பித்தார். 'நான் என்னுடைய பாவத்திற்காகவும், மற்றவர்களுடைய பாவத்திற்காகவும் தண்டனை அடைந்தேன். நான் யாரையும் கொல்லவில்லை. பிறர் பொருளை அபகரிக்கவில்லை. ஆனால்

என்னுடைய எளிய சகோரர்களுக்கு நான் உதவி செய்தேன். நான் ஒரு வியாபாரியாக இருந்தேன். எனக்கு ஏராளமாக சொத்துக்கள் இருந்தன என்று அவன் எல்லாவற்றையும் ஒழுங்காக சொல்லிக்கொண்டிருந்தான். 'எனக்காக நான் வருந்தவில்லை. என்னை கடவுள் திருத்திவிட்டார். என்னுடைய வயதான மனைவிக்காகவும், குழந்தைகளுக்காகவும் நான் துக்கப்படுகிறேன்' என்று அந்த முதியவன் சொல்லி அழ ஆரம்பித்தான். அந்தக் கூட்டத்தில் அந்தப் பணக்கார வியாபாரியை எவன் கொன்றானோ அவனும் இருந்தான். 'தந்தையே, அந்தக் காரியம் எந்த இடத்தில் நடந்தது? எப்பொழுது, எந்த மாதத்தில் நடந்தது?' என்று அவன் கேட்டான். அதைப்பற்றிய விவரங்களையெல்லாம் அவன் கேட்டபின்பு, அவனுடைய உள்ளம் நோக ஆரம்பித்தது. ஆகவே அவன் அந்த முதியவரிடம் இம்மாதிரியாக வந்து அவனுடைய காலடிகளில் விழுந்தான். 'தந்தையே, எனக்காக நீர் துன்பங்களை அடைந்து வருகிறீர். வாலிபர்களே, உண்மையில் இந்த மனிதர் ஒரு காரணமுமில்லாமல் துன்புறுத்தப்படுகிறார் என்பது முற்றிலும் உண்மை, நான்தான் அந்தக் காரியத்தைச் செய்தேன். நான் செய்துவிட்டு, அந்தக் கத்தியை நீர் தூங்கிக்கொண்டிருந்தபோது, உம்முடைய தலையணைக்கு அடியில் வைத்தேன். தந்தையே, கிறிஸ்துவுக்காக என்னை மன்னித்துவிடும்'' என்று அவன் சொன்னான்.

காராட்டேவ் சிறிது நிறுத்தி, மகிழ்ச்சி புன்னகையோடு அந்த கணப்பு மூட்டத்தைப் பார்த்தான். விறகு கட்டைகளை ஒழுங்காக அடுக்கினான்.

''அந்த முதியவன் சொன்னான். 'கடவுள் உன்னை மன்னிப்பார். அவருக்கு முன்னால் நாம் எல்லாருமே பாவிகள்தான். என்னுடைய பாவங்களுக்காக நான் கஷ்டம் அனுபவிக்கிறேன்' என்று அந்த முதியவன் சொல்லி, மன வெறுப்போடு கண்ணீர்விட்டார். நல்லது நண்பர்களே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று காராட்டோவ் மேலும் பேசினான். அவனடைய முகம் ஒரு பரவசம் கொண்ட புன்னகையினால், மேலும் மேலும் பிரகாசமடைந்தது. இனிமேல்தான் அந்தக் கதையிலுள்ள மனோகரமான பாகத்தையும், அந்தக் கதையின் முழு அர்த்தத்தையும் அவன் சொல்லப் போவதுபோல காணப்பட்டான். ''அருமை நண்பர்களே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அந்தக் கொலைக்காரன் ஆறு உயிர்களைப் பறித்தேன் என்றும் இந்த முதியவனுக்காக மிகவும் வருந்துவதாகவும், தன்னுடைய குற்றத்திற்காக அவன் கஷ்டம் அடையவேண்டாமென்றம் அதிகாரிகளிடம் சொன்னான். அவன் சொல்லியதையெல்லாம் காகிதத்தில் எழுதி, அந்த வாக்கு மூலத்தை

ஒழுங்குப்படி அனுப்பினார்கள். விசாரணை இடம் வெகு தூரத்திலிருந்தது. அங்கே அதைப் பற்றி விசாரிக்கும்போது, வேறு பல விஷயங்களும் ஒன்றன்பின் ஒன்றாக வந்தபடியால், காலம் கடந்துகொண்டு போயிற்று. கடைசியாக அந்த விஷயம் ஜார் மன்னரிடம் போய்ச் சேர்ந்தது. அந்த வியாபாரியை விடுதலை செய்யும்படியும், அவனுக்கு ஏற்பட்ட கஷ்டத்தை ஈடுசெய்யும் படியும் ஜார் உத்தரவிட்டிருந்தார். அந்த உத்தரவு வந்து சேர்ந்ததும், அதிகாரிகள் அந்த முதியவனைத் தேடினார்கள். 'அவசியமில்லாமல் அநியாயமாகவும் தண்டனையை அனுபவித்து வரும் அந்த முதியவன் எங்கே? ஜார் சக்கரவர்த்தியிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது' என்று அவர்கள் சொல்லி, அவனைத் தேட ஆரம்பித்தார்கள்'' இந்த சமயத்தில் காராட்டேவின் தாடியானது நடுங்கியது. ''ஆனால் அவனைக் கடவுள் அதற்கு முன்பே மன்னித்துவிட்டார் அவன் இறந்துபோனான். அந்த விஷயம் அம்மாதிரி முடிந்தது. அன்பான நண்பரே'' என்று காராட்டேவ் தனது கதையை முடித்தான். வெகுநேரம் வரையில் ஒரு புன்னகையோடு மௌனமாக தனக்கு எதிராக பார்த்துக்கொண்டே இருந்தான்.

பீயருடைய உள்ளம் மகிழ்ச்சியினால் பெருகியது. அந்தக் கதையினால் இந்த மகிழ்ச்சி ஏற்படவில்லை; அந்தக் கதையிலுள்ள அபூர்வமான முக்கியத் துவத்தினாலேயே அந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்தக் கதையை சொல்லும்போது, காராட்டேவின் முகத்தை பிரகாசம் அடையும்படி செய்த அந்த பரவசமான மகிழ்ச்சியினாலும், அந்த மகிழ்ச்சியினால் ஏற்பட்ட அபூர்வமான முக்கியத்துவத்தினாலும், அவருடைய மனம் நிறைந்து நின்றது.



# 14

''உங்களுடைய இடங்களுக்குப் போங்கள்'' என்று திடீரென்று ஒரு குரல் கேட்டது.

ஏதோ ஒரு மகிழ்ச்சியான விஷயம் நடக்கப்போகிறதென்ற இனிமையான பரபரப்பு உணர்ச்சி, அந்த பிரயாணம் செய்துகொண்டிருந்த காவல் சிப்பாய் களிடமும், கைதிகளிடமும் பரவியது. நாலா பக்கங்களிலிருந்தும் உத்தரவுக் குரல்கள் கேட்டுக் கொண்டிருந்தன. இடது பக்கமாக அழகாக உடையணிந்த குதிரைப் படை வீரர்கள், நல்ல குதிரைகள்மீது கைதிகளை கடந்து போய்க் கொண்டிருந்தார்கள். அதிகாரபீடத்தில் இருக்கிறவர்கள் நெருங்கி

வரும்போது மக்களுக்கு முகத்தில் ஏற்படும் ஆவலைப்போன்ற உணர்ச்சியானது, எல்லாருடைய முகங்களிலும் காணப்பட்டது. கைதிகள் சேர்ந்து நின்றார்கள். அவர்களை ரஸ்தாவைவிட்டு அப்புறமாக ஒதுக்கித் தள்ளினார்கள். காவல் வீரர்கள் வரிசையாக அமைந்து நின்றார்கள்.

''சக்கரவர்த்தி! சக்கரவர்த்தி! மார்ஷல் கோமகன்!'' என்று குரல்கள் கேட்டன. அந்த குதிரைப் படைவீரர்கள் கடந்து போனதும், சாம்பல் வர்ணம் கொண்ட ஆறு குதிரைகளால் இழுக்கப்பட்ட ஒரு வண்டி வந்தது. முக்கோணமுள்ள தொப்பியை தரித்து, தம்முடைய வெள்ளையான, புஷ்டியான, லட்சணமான முகத்தில், ஒரு அமைதியான தோற்றம் காணப்பட அந்த வண்டிக்குள் அமர்ந்திருந்தவரை ஒரு வினாடி பீயர் கண்டார். அவர்தான் மார்ஷல்களில் ஒருவர். அவருடைய பார்வையானது பீயருடைய பெரிய எடுப்பான உருவத்தில் பதிந்தது. அவருடைய முகத்தில் ஒரு சுளிப்புத் தோன்ற, பீயரை விட்டு தமது பார்வையை திருப்பிக் கொண்டார். அவருடைய முகத்தில் ஒரு அனுதாபம் தோன்றியது போலவும், அவர் அதை மறைக்க விரும்பியதுபோலவும் பீயர் நினைத்தார்.

சப்ளை சாமான்களுக்கு பொறுப்பாயிருந்த ஜெனரல், அந்த வண்டிக்குப் பின்னால் அவருடைய முகம் சிவந்தும் பீதியுற்றும் விளங்க, தம்முடைய எலும்புபோலிருந்த குதிரையை சவுக்கினால் அடித்து, விரட்டிக்கொண்டு வேகமாய் வந்தார். பல அதிகாரிகள் ஒரு கூட்டமாய் சேர்ந்தார்கள். அவர்களைச் சுற்றிச் சிப்பாய்கள் கூடினார்கள். எல்லாருடைய முகங்களும் பரபரப்படைந்தும் கவலையுற்றும் காணப்பட்டன.

''அவர் என்ன சொன்னார்? அவர் என்ன சொன்னார்?'' என்று அவர்கள் கேட்பதை பீயர் கவனித்தார்.

அந்த மார்ஷல் போய்க்கொண்டிருந்தபோது கைதிகள் ஒரு கூட்டமாக ஒன்று சேர்த்தார்கள். அன்று காலையிலிருந்து அவர் பார்க்காத காராட்டேவை அப்பொழுது பார்த்தார். அவன் தன்னுடைய வெளிக்கோட்டை, அணிந்து, ஒரு பூவரசு மரத்தின்மீது சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனுடைய முகத்தில், முதல் நாளன்று அநியாயமாக துன்பம் அடைந்த ஒரு வியாபாரியின் கதையைச் சொல்லியபோது காணப்பட்ட மகிழ்ச்சித் தோற்றம் இப்பொழுதும் காணப்பட்டது. அதோடு ஒரு அமைதியான, பவித்திரமான தோற்றமும் காணப்பட்டது.

காராட்டேவ் தன்னுடைய உருண்டையான, அன்பான கண்களில் நீர் நிறைந்து நிற்க பீயரை நோக்கினான். அவரிடம் எதையோ

சொல்ல விரும்புவதைப் போலவும், ஆகவே அவரை சமீபத்தில் அழைப்பது போலவும், அவன் காணப்பட்டான். அனால் பீயருக்கு நிச்சயமான புத்தி ஏற்படவில்லை. அவனைப் பார்க்காததுபோல அவர் நடித்து, அந்த இடத்தை விட்டு அவசரமாகப் போனார்.

கைதிகளை மீண்டும் பிரயாணத்தில் அழைத்துச் சென்றபோது பீயர் திரும்பிப் பார்த்தார். அந்த ரஸ்தாவுக்குப் பக்கத்தில் இருந்த பூவரசு மரத்திற்கு அடியிலேயே, காராட்டேவ் இன்னமும் இருப்பதைப் பார்த்தார். அவனுக்குப் பக்கத்தில் இரண்டு பிரெஞ்சு சிப்பாய்கள் பேசிக்கொண்டு நின்றார்கள்.பீயர் மீண்டும் திரும்பிப் பார்க்கவில்லை. காலை நொண்டிக் கொண்டு குன்றின் மீது போனார்.

காராட்டேவ் எந்த இடத்தில் உட்கார்ந்திருந்தானோ, அங்கிருந்து ஒரு வெடி சப்தம் கேட்டது. பீயர் அதைத் தெளிவாகக் கேட்டார். ஸ்மாலென்ஸ்கிற்கு போய்ச் சேருவதற்கு இன்னும் எத்தனை இடங்களில் தங்கவேண்டியிருக்கும் என்று அவர் அச்சமயம் கணக்குப் போட்டுக்கொண்டிருந்தது இன்னமும் முடியவில்லை. அந்த வழியாக அந்த மார்ஷல் நடந்து போவதற்கு முன்பாகவே, அந்த கணக்கை அவர் ஆரம்பித்தார். மீண்டும் இப்பொழுது அதை போட்டுக் கொண்டிருந்தார். இரண்டு பிரெஞ்சு சிப்பாய்கள் பீயரைக் கடந்து ஓடினார்கள். அவர்களில் ஒருவனுடைய துப்பாக்கியின் வாயிலிருந்து புகை வந்துகொண்டிருந்தது. அவர்கள் இருவரும் முகம் வெளிறி காணப்பட்டார்கள். அவர்களில் ஒருவன் தயக்கத்தோடு பீயரை நோக்கினான். முன்னால் மரண தண்டனை நிறைவேற்றியபோது, ஒரு வாலிப சிப்பாயின் முகம் எம்மாதிரி காணப்பட்டதோ, அதே மாதிரி அந்த சிப்பாய்களுடைய முகங்களும் காணப்பட்டன. தம்மைப் பார்த்த சிப்பாயை பீயர் நோக்கினார். இரண்டு தினங்களுக்கு முன்னால் அவனுடைய சட்டையை கணப்பு மூட்டத்தில் அவன் உலர்த்திக் கொண்டிருந்தபோது, அது தீ பிடித்ததையும், அதைக் கண்டு மற்றவர்கள் அவனைப் பார்த்து நகைத்ததையும் அவர் நினைவு கூர்ந்தார்.

அவனுக்குப் பின்னால் காராட்டேவ் எந்த இடத்தில் உட்கார்ந்திருந்தானோ அங்கே நாய் ஊளை இட ஆரம்பித்தது. ''என்ன அறிவீனமான மிருகம்! எதற்காக அது ஊளையிடுகிறது?'' என்று பீயர் நினைத்தார்.

சிப்பாய்–கைதிகளான அவருடைய தோழர்கள் அவருக்குப் பக்கத்தில் நடந்து வந்தார்கள். துப்பாக்கி சுட்ட அந்த இடத்தையும், நாய் ஊளையிட்டுக்கொண்டிருந்த அந்த இடத்தையும் திரும்பிப்

பார்க்காமல், பீயர் செய்ததைப்போல அந்த சிப்பாய் - கைதிகளும் தவிர்த்தார்கள். ஆனால் அவர்கள் எல்லாருடைய முகங்களிலும் ஒரே மாதிரியான தோற்றம் காணப்பட்டது.

# 14

## 15

ஷாம்ஷெவா என்ற கிராமத்தில் கைதிகளும், சாமான் வண்டிகளும், மார்ஷலின் வண்டித் தொடர்களும் நின்றன. வீரர்கள் அங்கிருந்த கணப்பு மூட்டைகளைச் சுற்றி நின்றுகொண்டிருந்தார்கள். அந்தக் கணப்பு மூட்டத்தை நோக்கிப் பீயர் சென்றார். சிறிது வறுத்த குதிரை மாமிசத்தை உண்டு விட்டு, தமது முதுகை கணப்பு மூட்டம் பக்கமாகத் திரும்பி, கீழே படுத்தவுடனே தூங்கிவிட்டார். பாராடினோ போருக்குப் பின்னால் மஜாய்ஸ்க்கில் எம்மாதிரி அவர் தூங்கினாரோ, அதேமாதிரி மீண்டும் தூங்கினார்.

மீண்டும் உண்மையான சம்பவங்கள் கனவுகளோடு கலந்து தோன்றின. யாரோ ஒருவர், அவரோ, அல்லது மற்றொருவரோ, அவருடைய சிந்தனைகளைச் சொல்லுவதுபோல் இருந்தது. மஜாய்ஸ்க்கில் கனவில் அவர் கண்ட அதே சிந்தனைகள்தான் இப்பொழுதும் தோன்றின.

''வாழ்க்கைதான் எல்லாம். வாழ்க்கைதான் கடவுள். ஒவ்வொன்றும் மாறிக்கொண்டும் அசைந்து கொண்டும் இருக்கின்றன. அந்த அசைவுதான் கடவுள். வாழ்க்கை இருக்கிற வரையில் கடவுளின் பிரக்ஞையின் மகிழ்ச்சி இருக்கிறது. வாழ்க்கையை விரும்புவதானது, கடவுளை விரும்புவதாகும். துன்பங்கள் ஏற்படுகிற காலத்தில், அனாவசியமான துன்பங்கள் ஏற்படுகிற காலத்தில் இந்த வாழ்க்கையை விரும்புவதுதான், மற்ற எல்லாவற்றையும் விட கடினமானதும் புனிதமானதுமான செய்கையாகும்.''

''காராட்டேவ்!'' என்ற நினைப்பு பீயரின் உள்ளத்தில் தோன்றியது.

ஸ்விட்ஜர்லாந்து தேசத்தில் அவருக்கு பூகோளம் கற்பித்துக் கொடுத்த ஒரு அன்பான முதியவரை நீண்டகாலமாக மறந்திருந்தார். அவருடைய உருவம் திடீரென்று தெளிவாகப் பீயருக்கு இப்பொழுது தோன்றியது. ''கொஞ்சம் பொறு'' என்று அந்த முதியவர் சொல்லிவிட்டு ஒரு பூகோளத்தைப் பீயரிடம் காட்டினார். அந்த பூகோளம் உயிர்த் துடிப்போடு இருந்தது. அதன்மீது எந்தவிதமான அக்ஷரேகைகளும் காணப்படவில்லை. அதனுடைய

மேல் பரப்பு துளிகளால் நிறைந்திருந்தது. அந்தத் துளிகள் அடிக்கடி இடம் மாறிக்கொண்டிருந்தன. சில வேளைகளில் பல துளிகள் ஒன்று சேர்வதும், சில வேளைகளில் ஒரு துளி பல துளிகளாக பிரிவதுமாய் இருந்தன. ஒவ்வொரு துளியும் கூடியவரையில் விரிந்து மிகுதியான இடத்தை அடைத்துக்கொள்ள முயற்சித்தது. எல்லாத் துளிகளும் இதே மாதிரி செய்து வந்தபடியால் சிலசமயம் சில துளிகளை அழித்தும், சிலசமயம் ஒன்றோடொன்று கலந்தும் வந்தன.

''அதுதான் வாழ்க்கை'' என்று அந்த பழைய வாத்தியார் சொன்னார்.

''எவ்வளவு தெளிவாகவும், எவ்வளவு சுலபமாகவும் இருக்கிறது!'' என்று பீயர் நினைத்தார். ''இதை முன்னதாக அறிந்துகொள்ளாமல் நான் எப்படி இருந்தேன்?''

''கடவுள் அதன் மத்தியில் இருக்கிறார். ஒவ்வொரு சொட்டும் அவரை பெரியதாகக் காட்டுவதற்காக முயற்சி செய்கிறது. அது வளருகிறது, ஒன்று சேருகிறது, பின்னால் காட்சியிலிருந்து மறைகிறது, உள்ளே ஆழத்தில் அமிழ்கிறது, மீண்டும் மேலே கிளம்புகிறது. இப்போது காராட்டேவ் விரிவடைந்து மறைந்து விட்டான். உமக்குப் புரிகிறதா, எனது குழந்தையே?'' என்று அந்த வாத்தியார் கேட்டார்.

''உமக்குப் புரிகிறதா, நாசமாய்ப் போக?'' என்று ஒரு குரல் கேட்டது உடனே பீயர் விழித்துக்கொண்டார்.

அவர் எழுந்து உட்கார்ந்தார். அப்போதுதான் அந்தக் கணப்புமூட்டத்திற்குப்பக்கத்தில் அமர்ந்திருந்த ஒரு ருஷ்யரை தள்ளிவிட்டு பிரெஞ்சுக்காரன் சம்மணம் போட்டு அமர்ந்து ஒரு கம்பியில் சொருகிய மாமிசத்தை அந்த நெருப்பில் வாட்டிக் கொண்டிருந்தான். அவனுடைய சட்டைக் கைகளை மேலே மடக்கி விட்டிருந்தான். அவனுடைய புஷ்டியான ரோமம் வளர்ந்த சிவப்பான கைகளானது, அந்தக் கம்பியைச் சாமர்த்தியமாகச் சுற்றிக்கொண்டிருந்தது. அவனுடைய வியாகூலம் கொண்ட முகமானது, நெற்றியில் காணப்படும் சுருக்கங்களோடு, அந்த நெருப்பு ஜுவாலையில் தெளிவாகத் தெரிந்தது.

''அவனுக்கு எல்லாம் ஒன்றுதான்'' என்று அவன் முணுமுணுத்தான். தனக்குப் பின்னால் நின்ற ஒரு சிப்பாயை அவன் திரும்பிப் பார்த்தான் ''கொள்ளைக்காரனே, இதைவிட்டு ஓடு.''

தன் கையில் இருந்த கம்பியைச் சுற்றி மீண்டும் கவலையோடு பீயரை நோக்கினான். பீயர் தமது முகத்தைத் திருப்பி, இருளைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

இந்தப் பிரெஞ்சுக்காரன் தள்ளிவிட்ட அந்த ருஷ்ய சிப்பாய் நெருப்பிற்குப் பக்கத்தில் அமர்ந்து கையில் எதையோ வைத்து கட்டி முனங்கிக்கொண்டிருந்தான். அவனை நன்றாய் பார்த்தபோது, அங்கே அந்த நீல சாம்பல் வர்ணமுள்ள நாய், அந்த சிப்பாய்க்குப் பக்கத்தில் வாலை ஆட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பீயர் கண்டார்.

''ஓ, அதுவும் வந்துவிட்டதா? அப்படியானால், பிளாட்...'' என்று அவர் ஆரம்பித்தார். ஆனால் முடிக்கவில்லை.

திடீரென்று ஏககாலத்தில் பலவிதமான நினைப்புகள் அவருடைய மனோராஜ்யத்தில் தோன்றின - மரத்தினடியிலிருந்தபோது பிளாட்டோன் அவருக்குத் தோன்றிய விதமும், அந்த இடத்திலிருந்து துப்பாக்கிக் குண்டு கேட்ட சப்தமும், நாயின் ஊளையும், அவரைக் கடந்து ஓடிய இரண்டு பிரஞ்சுக்காரர்களின் குற்றமுள்ள முகங்களும், புகையைக் கக்கிக்கொண்டிருந்த துப்பாக்கியும், அவர்கள் தங்கியிருந்த அந்த இடத்தில் காராட்டேவின் விசித்திரமான மறைவும், இவையெல்லாம் அவருக்குத் தோன்றின. காராட்டேவை அவர்கள் கொன்றுவிட்டார்கள் என்ற விஷயம், அந்த வினாடியில் அவருக்குப் புலப்பட்டது. ஆனால் அதே சமயத்தில்—எதற்காக என்பது அவருக்குத் தெரியாது—ஒரு வசந்தகால மாலையில், தம்முடைய வீட்டின் வராந்தாவில், ஒரு அழகான போலீஷ் சீமாட்டியுடன் கீவ் என்ற இடத்தில் தாம் இருந்தது அவருக்கு ஞாபகத்திற்கு வந்தது. அன்றைய தினத்தில் நடந்த சம்பவங்களை ஒன்று சேர்க்காமல், அல்லது அவற்றிலிருந்து ஒரு முடிவுக்கும் வராமல், பீயர் தமது கண்களை மூடினார். அச்சமயம் அவருக்கு வசந்த காலத்தின் கிராமாந்தரக் காட்சியும், அவர் குளித்துக் கொண்டிருந்த காட்சியும், அந்த கண்ணீர் துளிகளும், துடித்துக்கொண்டிருந்த அந்த பூகோளமும் அவருக்குத் தோன்றின. அவர் திடீரென்று தண்ணீரில் மூழ்கினார். அந்த தண்ணீர் அவரை மூடிவிட்டது.

சூரிய உதயத்திற்கு முன்பாகக் கூச்சல்களினாலும், வேகமான துப்பாக்கிச் சுடுதல்களினாலும், அவர் விழித்து எழுந்தார். பிரெஞ்சு சிப்பாய்கள் அவரைக் கடந்து ஓடிக்கொண்டிருந்தார்கள்.

''கோசாக்குகள்'' என்று அவர்களில் ஒருவன் கூச்சலிட்டான். ஒரு வினாடிக்குப் பின்னால் பீயரை ஒரு ருஷ்யக் கூட்டம் சூழ்ந்துகொண்டது.

வெகுநேரம் வரையில் அவருக்கு என்ன நேர்ந்தது என்பதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவரைச் சுற்றி

அவருடைய தோழர்கள் மகிழ்ச்சியினால் அழுது கொண்டிருந்தார்கள்.

''சகோதரர்களே, அன்பானவர்களே, கண்மணிகளே'' என்று பழைய சிப்பாய்கள் அழுதுகொண்டு, அந்தக் கோசாக்குக்களையும் குதிரை வீரர்களையும் தழுவிக்கொண்டார்கள்.

குதிரை வீரர்களும் கோசாக்குகளும், அந்தக் கைதிகளைச் சுற்றிக் கூடி நின்றார்கள். ஒருவர் அவர்களுக்குத் துணிகளைக் கொடுத்தார். மற்றவர் பூட்ஸ்களைக் கொடுத்தார். இன்னொருவர் ரொட்டிகளைக் கொடுத்தார். பீயரும், அவர்களுக்கிடையில் அமர்ந்திருந்தபோது, விம்மி விம்மி அழுத்தார். அவரால் ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை. அவரிடம் நெருங்ய சிப்பாயை அவர் தழுவிக்கொண்டு முத்தமிட்டு அழுதார்.

டோலாகாவ் பாழடைந்த வீட்டின் வெளிவாசலில் நின்றுகொண்டு, ஆயுதமில்லாத பிரெஞ்சுக்காரர்கள் வெளியே போவதைப் பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது நடந்த விஷயத்தினால் பரபரப்படைந்திருந்த அந்த பிரெஞ்சுக்காரர்கள், தங்களுக்குள்ளாகவே உரத்தகுரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் டோலாகாவைக் கடந்து போனபோது, அவர் தமது பூட்ஸ்களை கையில் வைத்திருந்த சவுக்கினால் தட்டிக்கொண்டு அவர்களை கனிவற்ற தோற்றத்தோடு கவனித்துக்கொண்டிருந்தார். அவர் மௌனமாய் இருந்தார். அந்தப் பார்வையில் நல்லது எதுவும் காணப்படவில்லை. எதிர் வரிசையில் டோலாகாவின் கோசாக் அங்கே வெளியே போனவர்களை எண்ணிக்கொண்டும், ஒவ்வொரு 100 பேர் ஆனதும் ஒரு சாக்குக்கட்டியினால் அந்த வெளிவாசல் கதவில் அடையாளம் இட்டுக் கொண்டும் இருந்தான்.

''எத்தனை பேர்?'' என்று டோலாகாவ் அந்த கோசாக்கைக் கேட்டார்.

''இரண்டாவது நூறு'' என்று கோசாக் பதிலளித்தார்.

''மேலே போங்கள், மேலே போங்கள்'' என்று டோலாகாவ் சொல்லிக்கொண்டே இருந்தார். இந்தப் பேச்சை அவர் பிரெஞ்சுக்காரர்களிடம் இருந்து கற்றுக்கொண்டார். அந்தக் கைதிகளின் கண்களை அவருடைய கண்கள் பார்க்கும்போது, ஒரு கொடூரமான பார்வையை வீசியது. தலையில் எதுவுமில்லாமல் வியாகூலமான முகத்தோடு டெனைசாவ் சிலகோசாக்குகளுக்குப் பின்னால் போய்க்கொண்டிருந்தார். அவர்கள் தோட்டத்தில் வெட்டப்பட்டிருந்த ஒரு குழிக்கு பெட்டியா ராஸ்டோவின் உடலைத் தூக்கிக்கொண்டு போனார்கள்.

14

16

அக்டோபர் 28-ந் தேதிக்குப் பின்னால், உறை பனி விழுவதற்கு ஆரம்பித்ததற்குப் பின்னால், பிரெஞ்சுக்காரர்கள் திரும்பி ஓடுகிற காரியத்தில் இன்னும் துக்ககரமான போக்கு ஏற்பட்டது திரும்பி ஓடிக் கொண்டிருந்த வீரர்கள் குளிரினால் விறைத்துப் போனார்கள். சிலர் கணப்பு நெருப்புகளில் வாடினார்கள். கம்பளிச் சட்டைகளை நன்றாய் அணிந்து அமர்ந்திருந்தவர்களின் வண்டிகள் மேலும் மேலும் வந்துகொண்டே இருந்தன. அவர்கள் ராஜாக்களிடமும் கோமகன்களிடமும் சக்கரவர்த்தியால் திருடப் பட்ட சாமான்களைக் கொண்டுபோய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் பிரெஞ்சுக்காரர்களின் ஓட்டமும், அதனுடைய நாசமும் முன் போலவே நடந்து கொண்டிருந்தன.

மாஸ்கோவிலிருந்து வியாஜ்மாவுக்கு எழுபத்து மூன்றாயிரம் பேர்களைக் கொண்ட பிரெஞ்சு ராணுவம் புறப்பட்டது. காப்பாளர் ராணுவத்தில் உள்ள நபர்களை இந்தக் கணக்கில் சேர்க்கவில்லை. அவர்கள் அந்த போர் முழுவதிலும் கொள்ளையடிப்பதைத் தவிர வேறு எதுவும் செய்யவில்லை. மாஸ்கோவிலிருந்து புறப்பட்ட எழுபத்து மூன்றாயிரம் பேர்கள் முப்பத்தாறாயிரம் பேர்களாகக் குறைந்தார்கள். போர்க்களத்தில் ஐயாயிரத்திற்கு மேல் அவர்கள் சாகவில்லை. இம்மாதிரிக் கணக்கில் பின்னால் நடந்ததை யூகித்துக்கொள்ளலாம். மாஸ்கோவிலிருந்து வியாஜ்மாவுக்கு போவதற்குள் எவ்வளவு பேர் அழிந்தோ தப்பியோடியோ போனார்களோ, அதே மாதிரி வியாஜ்மாவிலிருந்து ஸ்மா லென்ஸ்க்கும், ஸ்மாலென்ஸ்க்கிலிருந்து பெரியோஜினாவுக்கும், பெரியோஜினாவிலிருந்து வில்னாவுக்கும், கணக்கில் குறைந்து கொண்டே போனார்கள். குளிரோ, ருஷ்யர்களின் துரத்தலோ, வேறு காரணங்களோ இந்த கணக்கைப் பாதிக்கவில்லை. வியாஜ்மாவி லிருந்து பிரெஞ்சு ராணுவம், மூன்று வரிசைகளாகப் போவதை நிறுத்தி, ஒரே கூட்டமாக நெருங்கி போய்க்கொண்டிருந்தார்கள். அம்மாதிரி தான் கடைசிவரையிலும் சென்றார்கள். ராணுவத்தின் நிலைமையைப் பற்றி உண்மையிலிருந்து எவ்வளவு தூரம் மாறுபட்டு ராணுவ அதிகாரிகள் அறிக்கைகளை அனுப்புவார்கள் என்பது நமக்குத் தெரியும். பெர்த்தியர் என்பவர் சக்கரவர்த்திக்கு ஒரு அறிக்கையை அனுப்பினார். அதில் பின்வருமாறு எழுதி இருந்தார்.

''கடந்த இரண்டு அல்லது மூன்று நாட்களில் ராணுவம் பிரயாணம் செய்து வந்தபோது, ராணுவத்தின் பற்பலப்

பிரிவுகளையும் நான் கவனித்து அறிந்தவைகளை மாட்சிமை தங்கிய உமக்குத் தெரிவிக்க வேண்டியது என்னுடைய கடமை என்று நினைக்கிறேன். அந்த ராணுவம் அநேகமாக கலைந்துபோய் இருந்தது. ராணுவத்தில் கால் பங்கு பேர்கள்கூட தங்களுடைய பட்டாளங்களோடு சேர்ந்து போகவுமில்லை. மற்றவர்கள் தங்கள் இஷ்டப்படி வெவ்வேறு திசைகளை நோக்கிப் போனார்கள். உணவுப் பொருள்களைக் கண்டுபிடிப்பதற்காகவும், கட்டுப்பாடுகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகவும், அவர்கள் அம்மாதிரி போனார்கள். அவர்கள் பொதுவாக ஸ்மாலென்ஸ்க்கில் தாங்கள் சிரமபரிகாரம் பண்ணலாம் என்று நினைத்தார்கள். கடந்த சில தினங்களில் நமது வீரர்களில் பலர் தங்களுடைய துப்பாக்கிகளையும், தோட்டாக்களையும் வீசி எறிந்துவிட்டார்கள். இம்மாதிரி நிலைமையில், உம்முடைய முடிவான திட்டங்கள் எதுவாய் இருந்தபோதிலும், மாட்சிமை தங்கியவரின் ராணுவத்தின் நன்மையைப் பொறுத்தவரையில், ராணுவமானது ஸ்மாலென்ஸ்க்கில் ஒழுங்குபட வேண்டியது அவசியமாய் இருந்தது. அப்படி ஒழுங்குபட வேண்டுமானால், அவசியமாய் இல்லாத குதிரைகளையும் சாமான்களையும், பீரங்கிக்கு வேண்டிய அவசியமில்லாத பொருள்களையும், நாம் அதிகமாக வைத்திருக்கக்கூடாது. சிப்பாய்கள் எல்லாரும் பசியாலும் களைப்பாலும் துன்பப்பட்டுப் போனார்கள். அவர்களுக்கு சரியான சப்ளைகளும், சில தினங்களுக்கு ஓய்வும் அவசியம். பல சிப்பாய்கள் வருகிற வழியிலோ, அல்லது தங்கும் முகாம்களிலோ மாண்டு போனார்கள். இம்மாதிரி நிலைமை வரவர மோசமாக இருந்து வருகிறது. உடனே தகுந்த பரிகாரத்தை துருப்புகளுக்குச் செய்தாலொழிய, அடுத்தாற்போல் ஏதாவது போர் வருமானால், அந்தச் சிப்பாய்களை நமது ஆதிக்கத்திற்குள் வைத்திருக்க முடியாது.''

நவம்பர் 9ம் தேதி ஸ்மாலென்ஸ்க்கிலிருந்து 30 மைல் தூரத்தில் தள்ளாடிக்கொண்டு ஸ்மாலென்ஸ்க் நகருக்குள்ளாக துருப்புகள் வந்து சேர்ந்தார்கள். அந்த இடம்தான் மோட்சபூமி என்று அவர்கள் நினைத்தார்கள். அங்கே வந்ததும் உணவிற்காக அலைந்தார்கள். ஒருவரையொருவர் கொன்றார்கள். ராணுவத்தின் சொந்தப் பொருள்களையே கொள்ளையடித்தார்கள். எல்லாவற்றையும் கொள்ளையடித்து முடிந்ததும் அவர்கள் மேலும் ஓடினார்கள்.

எங்கே போகிறோம், எதற்காகப் போகிறோம் என்பதை அறியாமலேயே அவர்கள் போனார்கள். அவர்களை நடத்திவந்த மேதையான அந்த நெப்போலியனுக்கும் அது தெரியாது. ஏனெனில் எந்தவிதமான உத்தரவுகளும் பிறப்பிக்கவில்லை. ஆனால்

நெப்போலியனும், அவரைச் சுற்றி இருந்தவர்களும், பழைய பழக்கங்களை இன்னும் விடவில்லை. தினந்தோறும் உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டும், கடிதங்களையும் அறிக்கைகளையும் அன்றன்றுள்ள ராணுவப் பிரகடனங்களையும் வெளியிட்டுக் கொண்டுமிருந்தார்கள். ஒருவரையொருவர் 'மாட்சிமை தங்கியவரே' என்றும், 'எனது பிரியமுள்ள மைத்துனரே' என்றும், 'எனது இளவரசரே' என்றும் இம்மாதிரியாக அழைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் எழுதிய இந்த உத்தரவுகளும், இந்த அறிக்கைகளும் காகிதத்தோடு நின்றன. அதில் எழுதப்பட்டவைகள் எதுவும் அமலுக்கு வரவில்லை. ஏனெனில் அவற்றை அமல் செய்ய முடியாது. ஒருவரையொருவர் அவர்கள் மாட்சிமை தங்கியவரென்றும், மேன்மை தங்கியவர் என்றும், மைத்துனர்கள் என்றும் அழைப்பதற்கு உரிமை பெற்றிருந்தாலும், அவர்கள் எல்லாரும் ஒன்றை உணர்ந்தார்கள். ஏராளமாக தாங்கள் தீங்கு செய்தவர்கள் என்றும், அந்த தீங்குகளுக்குப் பதிலாக இப்போது தண்டனை அனுபவித்துத்தான் ஆகவேண்டுமென்றும் அவர்கள் உணர்ந்தார்கள். அவர்கள் ராணுவத்தைப் பற்றியே தாங்கள் கவலை கொண்டிருப்பதாக பாசாங்கு செய்தாலும், ஒவ்வொரு வரும் தன்னைப் பற்றியும் எந்த விதமாக, அந்த இடத்திலிருந்து வேகமாக ஓடி தன்னைக் காப்பாற்றிக் கொள்ளமுடியும் என்பதைப் பற்றியுமே நினைத்துக்கொண்டிருந்தார்கள்.

## 14

## 17

**மா**ஸ்கோவிலிருந்து நீமன் வருகிற வரையில் ருஷ்ய பிரெஞ்சுத் துருப்புகளின் நடமாட்டமானது, ருஷ்யாவிலுள்ள கண்கட்டி விளையாட்டைப் போல இருந்தது. அந்த விளையாட்டில் கலந்து கொள்கிறவர்களில் இரண்டு பேர்களைக் கண்ணைக் கட்டிவிடுவார்கள். ஒருவன் கையில் மணியை வைத்துக் கொண்டு பயமில்லாமல் அடித்துக் கொண்டிருப்பான். தான் எங்கே இருக்கிறான் என்பதை தன்னைப் பிடிப்பவனுக்குக் காட்டுவதற்காக அம்மாதிரி செய்வான். ஆனால் அவன் எங்காவது எக்கசக்கமாக அகப்பட்டுக் கொண்டால், சப்தமில்லாமல் ஓடுவான். அவன் எங்கோ தப்பி ஓடுவதுபோல நினைத்துக்கொண்டு, பிடிக்க வருகிறவனிடம் நேராகப் போய் அவனிடம் அகப்பட்டுக் கொள்வதும் உண்டு.

ஆரம்பத்தில் அந்த துருப்புகள் காலூகா ரஸ்தாவில் வந்துகொண்டிருந்தபோது, நெப்போலியனுடைய துருப்புகள்

தாங்கள் எங்கே இருக்கிறார்கள் என்பதை தெரியும்படி செய்துகொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் ஸ்மாலென்ஸ்க் ரஸ்தாவை அடைந்ததும், நேராக எதிரியிடம் முட்டிக் கொண்டார்கள். தாங்கள் தப்பியோடுவதாக நினைத்துக்கொண்டே ருஷ்யர்களிடம் முட்டினார்கள்.

பிரெஞ்சுக்காரர்கள் திரும்பி ஓடுவது வெகு வேகமாய் இருந்தபடியால், ருஷ்யர்கள் அவர்களைத் துரத்திக்கொண்டு போவதும் வெகு வேகமாய் இருந்தது. அதனால் குதிரைகள் களைப்படைந்தன. குதிரைகள் மீது ஒற்றர்களை அனுப்பி பிரஞ்சுக்காரர்களின் இருப்பிடத்தைக் கண்டுபிடிப்பதும் கஷ்டமாய் இருந்தது. தவிரவும் அடிக்கடி ஒவ்வொரு ராணுவமும் தங்களுடைய இடத்தை வேகமாக மாற்றிக்கொண்டு இருந்தபடியால், ஒற்றர்கள் சேர்க்கின்ற விவரங்களையும் சீக்கிரமாக வந்து சொல்வதற்கு இல்லாமல் இருந்தது. எதிரிகள் முதல் நாளன்று ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருப்பதாகச் செய்தி வந்தால், அந்தச் செய்தி மறுநாளன்று அனுப்பப்பட்டு மூன்றாவது நாளன்று தான் கிடைக்கும். அதற்குள்ளாக அந்தத் துருப்புகள் இரண்டு நாட்கள் பயணம் மேலே போய்விடுவார்கள். அதனால் அவர்களுடைய நிலைமை மாறிவிடும்.

பிரெஞ்சு ராணுவம் ஓடிக்கொண்டும், ருஷ்ய ராணுவம் அதைத் துரத்திக்கொண்டும் இருந்தன.

ஸ்மாலென்ஸ்க்குக்கு அப்பால் பிரெஞ்சுக்காரர்களுக்கு வெவ்வேறு விதமான ரஸ்தாக்கள் இருந்தன. அவர்கள் அங்கே தங்கியிருந்த நான்கு நாட்களில் எதிரிகள் எங்கே இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்டிருப்பார்கள் என்றுதான் ஒருவர் நினைக்க முடியும். ஆகவே தங்களுக்குச் சாதகமான திட்டத்தை வகுத்து புதிதான முறைகளை அவர்கள் மேற்கொள்ளுவார்கள் என்றே ஒவ்வொருவரும் எதிர்பார்ப்பார்கள். ஆனால் நான்கு நாட்கள் அங்கே தங்கிய பின்பும் எந்தவிதமான திட்டங்களும் இல்லாமல் மீண்டும் அந்தக் கூட்டம் பழைய பாதை வழியாகவே ஓட ஆரம்பித்தது. வலது பக்கமாகவோ இடது பக்கமாகவோ அவர்கள் திரும்பவில்லை. நேராக முன்னால் இருந்த ரஸ்தாவில்–மிகவும் மோசமான ரஸ்தாவில்–கிராஸ்னோ, ஆர்ஷா வழியாகப் போனார்கள்.

எதிரி முன்னால் இல்லாமல் பின்னால்தான் இருக்கிறான் என்று எதிர் பார்த்து, பிரெஞ்சுக்காரர்கள் 24 மணி தூரத்தில் பரவலாக ஓடினார்கள். அவர்களுக்கெல்லாம் முன்பாக சக்கரவர்த்தியும், அவருக்குப் பின்னால் மன்னர்களும், அவர்களுக்குப் பின்னால்

கோமகன்களும் ஓடிக்கொண்டிருந்தார்கள். நெப்போலியன் வலது பக்கமாக நீப்பருக்கு மேலாக உள்ள ரஸ்தாவில் போவார் என்று ருஷ்ய ராணுவம் எதிர்பார்த்தது. ஏனெனில் அதன் வழியாகப் போவதுதான் பொருத்தமாய் இருக்குமென்று நினைத்தது. ஆகவே, ருஷ்ய ராணுவம் வலது பக்கமாகத் திரும்பி, கிராஸ்னோவுக்குப் பக்கத்தில் பிரதான ரஸ்தாவில் வந்து சேர்ந்தது. இங்கே அந்தக் கண்கட்டி விளையாட்டு மாதிரி பிரெஞ்சுக்காரர்கள் நம்முடைய முன்னோடி துருப்புகளைச் சந்திக்க நேரிட்டது. அவர்களுடைய விரோதியை எதிர்பாராத விதமாக சந்தித்ததும், பிரெஞ்சுக்காரர்கள் குழப்பம் அடைந்து பீதியுற்றார்கள். பீதியுற்று அங்கே சிறிது தங்கி நின்று, மீண்டும் தங்கள் ஓட்டத்தை ஆரம்பித்தார்கள். அப்படி ஓடியபோது பின்னால் உள்ள தங்களுடைய தோழர்களைக் கைவிட்டு ஓடினார்கள். அதன் பின்னால் மூன்று நாட்களில் பிரெஞ்சு ராணுவத்தைச் சேர்ந்த பல பிரிவுகள், முதலாவதாக முராட்டினுடைய பிரிவும், பின்னால் டாவூட்டினுடைய பிரிவும், அதன் பின்னால் நேயினுடைய பிரிவும் எதிர்பாராத விதமாக ருஷ்ய ராணுவத்தைச் சந்திக்க நேரிட்டன. அந்தப் பிரிவுகள் எல்லாம் ஒன்றையொன்று கைவிட்டு, தங்களுடைய ஏராளமான சாமான் மூட்டைகளை எல்லாம் கைவிட்டு, தங்களுடைய பீரங்கி படைகளையும் தங்களுடைய படைகளில் உள்ள பாதி வீரர்களையும் கைவிட்டு ஓடினார்கள். அவர்கள் இரவில் ருஷ்யர்களைக் கடந்து அரைவட்டமாக வலது பக்கம் திரும்பிப் போனார்கள்.

கடைசியாக வந்த நேஸ்மாலென்ஸ்க்கில் உள்ள சுவர்களைத் தகர்ப்பதில் முனைந்திருந்தார். அந்த சுவர்கள் யாருக்கும் இடையூறாக இல்லை. ஏனென்றால் பிரெஞ்சுக்காரர்கள் துரதிருஷ்டமான நிலைமையில் இருந்துங்கூட, அல்லது அந்த துரதிருஷ்டமான நிலைமைக்காகவோ தாங்கள் கீழே விழுந்த தரையைத் தண்டிக்க விரும்பினார்கள். நேயிடம் பத்தாயிரம் வீரர்கள் இருந்தார்கள். ஆர்ஷா என்ற இடத்தில் நெப்போலியனை அவர் வந்தடைந்தபோது, அவரிடம் ஆயிரம் வீரர்கள்தான் இருந்தார்கள். மீதம் உள்ளவர்களையும், அவருடைய பீரங்கிகளையும் கைவிட்டுவிட்டு, நீப்பர் நதியை ஒரு காட்டுப் பிரதேசத்தில் திருட்டுத்தனமாக இரவில் கடந்து வந்தார்.

ஆர்ஷாவிலிருந்து வில்னாவுக்கு மேலும் அந்த ரஸ்தாவில் ஓடினார்கள். இன்னமும் அந்தக் கண்காட்சி விளையாட்டுகளைப் போலவே எதிரியிடமிருந்து தப்பி ஓடிக்கொண்டிருந்தார்கள். பெரியோஜினா என்ற இடத்தில் மீண்டும் அவர்கள் நிலைகுலைந்து போனார்கள். அங்கே பலர் நதியில் மூழ்கினார்கள். பலர்

சரணடைந்தார்கள். ஆனால் ஆற்றைக் கடந்தவர்கள், மீண்டும் மேலே ஓடிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய மகாபெரிய தலைவரானவர் ஒரு ரோமக்கோட்டை அணிந்து ஒரு பனி வண்டியில் அமர்ந்து தனியாகப் பாய்ச்சலில் போய்க் கொண்டிருந்தார். அவர் தம்முடைய தோழர்களை கைவிட்டு விட்டார். அம்மாதிரியாக ஓடுவதற்கு முடிந்தவர்கள், மீதமுள்ளவர்களை சரணடையும்படியோ, சாகும்படியோ கைவிட்டு விட்டு, அதே மாதிரி ஓடினார்கள்.



பிரெஞ்சுக்காரர்கள் திரும்பி ஓடிக்கொண்டிருந்த இந்த விஷயத்தில் தங்களை எவ்வளவு தூரம் அழித்துக்கொள்ள முடியுமோ அவ்வளவுதூரம் அழித்துக் கொண்டார்கள். காலூகா ரஸ்தாவில் அவர்கள் திரும்பிய காலத்திலிருந்து அவர்களுடைய தலைவர் ராணுவத்தை விட்டு ஓடிய காலம்வரையில், அந்தக் கூட்டத்தின் நடமாட்டங்களுக்கு அர்த்தம் எதுவுமே கிடையாது. தனி ஒரு மனிதனுடைய விருப்பத்திற்கு உட்பட்டே பெருங் கூட்டங்களின் செய்கைகள் இருக்கின்றனவென்று சரித்திரக்காரர்கள் சொல்லி வந்தார்கள்; பின்வாங்கி ஓடிப்போகும் பிரெஞ்சுக் காரர்களின் செய்கையானது, அந்தக் கொள்கைக்குப் பொருத்த மானதாய் இல்லை; இம்மாதிரியாக இந்த பிரெஞ்சுப் படை யெடுப்பில் நடந்த பின்வாங்கி ஓடும் படலத்தைப் பற்றி ஒருவர் நினைக்கக்கூடும். ஆனால், இல்லை! பிரெஞ்சுப் படை யெடுப்பைப்பற்றி மலைமலையாக சரித்திரக்காரர்கள் புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். நெப்போலியனுடைய ஏற்பாடுகளைப் பற்றியும், ராணுவ நடவடிக்கைகளைப் பற்றியும், அவருடைய ராணுவத்தை நடத்தி வந்த மேதையான அவருடைய திட்டங்களைப் பற்றியும், அவருடைய மார்ஷல்கள் காட்டிய மேதையைப்பற்றியும் இந்தப்புத்தகங்களில் எழுதி இருக்கிறார்கள்.

மாலா-யாராஸ்லாவெட்ஸ் என்ற இடத்திலிருந்து நெப்போலியன் பின்வாங்கி ஓடியபோது, போதுமான உணவுப் பொருள்கள் கிடைக்கக் கூடிய ஜில்லா வழியாகப் போவதற்கு ஒரு பாதையிருந்த போதிலும், (அதே ரஸ்தாவில்தான் குட்டுஜோவ் பின்னால் அவரைத் துரத்திக்கொண்டு போனார்) அவர் இன்னொரு பாதை வழியாக, அதாவது ஒரு மோசமான பாதை வழியாகப் போனதானது, ரொம்ப ஆபத்தானதாய் இருந்தது. ஆனால் இதை புத்திசாலித்தனமான வேலையென்று சரித்திரக்காரர்கள் சொல்லு கிறார்கள். அதே மாதிரி ஸ்மாலென்ஸ்க்கிலிருந்து ஆர்ஷாவுக்கு

அவர் போனதைப் பற்றியும் சரித்திரக்காரர்கள் பிரமாதமாகச் சொல்லுகிறார்கள். அதன் பின்னால் கிராஸ்னோ என்ற இடத்தில் அவர் காட்டிய வீரத்தை அவர்கள் வருணிக்கிறார்கள். அங்கே அவர் போர் செய்வதற்கு தயாராய் இருந்ததாகவும், அந்தப் போரைத் தாமே நேராக நடத்தத் தயாராக இருந்ததாகவும், கையில் ஒரு கம்பை வைத்துக்கொண்டு அவர் அங்கே நடமாடிக்கொண்டு பின்வருமாறு சொன்னதாகவும் கூறுகிறார்கள்:

''நான் சக்கரவர்த்தியாக வெகுகாலம் இருந்திருக்கிறேன். இப்போது ஜெனரலாக நடந்துகொள்ள காலம் வந்துவிட்டது'' என்று சொன்னாராம். என்றாலும் அவர் உடனே அங்கிருந்து ஓடிவிட்டார். பின்னால் தங்கிய சிதறிய ராணுவத்தைக்கூட அவர்களுடைய நிலைமையை விதிக்கு விட்டுவிட்டு அவர் ஓடிவிட்டார்.

அதன் பின்னால் அவருடைய மார்ஷல்களுடைய உள்ளங்களின் பெருமையைப் பற்றி, முக்கியமாக நேயைப்பற்றி சரித்திரக்காரர்கள் சொல்லுகிறார்கள். அவருடைய உள்ளத்தின் பெருமை பின்வருமாறு இருந்ததாம். அதாவது, இரவில் காட்டைச் சுற்றிக்கொண்டு, நீப்பரைக் கடந்து தம்முடைய விருதுகளையும் பீரங்கிப் படைகளையும் தமது படையிலுள்ள நூற்றுக்கு தொண்ணூறு பேரையும் விட்டுவிட்டு ஆர்ஷாவுக்கு ஓடினாராம்.

கடைசியாக அந்தப் பெரிய சக்கரவர்த்தி தம்முடைய வீரமான ராணுவத்தை விட்டு முடிவாக ஓடியதைப் பற்றி சரித்திரக்காரர்கள் சொல்லுகிறார்கள். அந்தச் செய்கை பிரமாதமானது என்றும், அவருடைய மேதையை அது காட்டுகிறது என்றும் சொல்லுகிறார்கள். அந்த முடிவான ஓட்டத்தைப் பற்றிச் சாதாரண மொழியில் சொல்ல வேண்டுமானால், அதுதான் இழிவிலும் இழிவானது என்றும், ஒரு குழந்தை கூட அதைக்கண்டு வெட்கம் அடையும் என்றும் தான் சொல்லவேண்டும். என்றாலும் அந்தச் செய்கையானது சரித்திரக்காரர்கள் மொழியில் புகழப்படுகிறது.

சரித்திரக் காரணங்களை தங்களுக்குச் சாதகமாக இனிமேல் நீட்ட முடியாது என்ற நிலைமை ஏற்படும்போதும், நியாயமானது என்றும் சரியானது என்றும் மனித வர்க்கம் அழைக்கும் செய்கைகளுக்கு நேர்விரோதமான காரியங்கள் நடக்கும்போதும், அந்த இடத்திலிருந்து தப்பிக்கொள்வதற்கு ஒரு தந்திரத்தை சரித்திரக்காரர்கள் கையாளுகிறார்கள். அதாவது, அம்மாதிரி இடங்களில் 'பெருமை' என்ற வார்த்தையை அவர்கள் உபயோகிக்கிறார்கள். அந்த 'பெருமை' என்ற வார்த்தை நியாயம், அநியாயம் என்பவைகளை ஒதுக்கிவிடுவதாகக் காணப்படுகிறது. ஏனெனில் 'பெரிய' மனிதர்களுக்கு எதுவுமே தவறில்லை என்று

தோன்றுகிறது. எம்மாதிரியான அட்டூழியத்திற்காகவும் அந்த 'பெரிய' மனிதரை பழிக்கக்கூடாது என்று தோன்றுகிறது.

''அது பிரமாதம்'' என்று சரித்திர ஆசிரியர்கள் சொல்லும்போது, அதை நல்லதென்றோ கெட்டதென்றோ கூற முடியாது; ''பிரமாதம்'' என்று தான் சொல்லலாம். ''பிரமாதம் அல்ல'' என்று சொல்லமுடியாது. ''பிரமாதம்'' என்பது நல்லது; ''பிரமாதம் அல்ல'' என்பது கெட்டது. அந்த சரித்திர ஆசிரியர்களுடைய சிந்தனையில் ''பிரமாதம்'' என்பது ஏதோ சில விசேஷ பிராணிகளான ''வீரர்க''ளின் குண விசேஷமாகக் காணப்படுகிறது. தாம் அழைத்துவந்த தம்முடைய சகாக்களை அழியும்படி விட்டுவிட்டு வெதுவெதுப்பான ரோமக்கோட்டை அணிந்து நெப்போலியன் தமது வீட்டிற்குத் தப்பி ஓடும்போது அந்த நிலைமையைப் 'பிரமாதம்' என்று அவர் நினைத்தார்; அவருடைய ஆத்மா அமைதியடைந்தது.

''கம்பீரமான போக்கிலிருந்து (தம்மிடம் கம்பீரம் இருப்பதாக அவர் நினைத்தார்) பரிகாசமான போக்கை அடைவதற்கு ஒரே ஒரு படிதான் உண்டு'' என்று அவர் சொன்னார். ஐம்பது வருஷங்களாக உலகம் முழுவதும் இதைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறது: ''கம்பீரம்! பிரமாதம்! நெப்போலியன் பிரமாதம்!'' கம்பீரமான போக்கிலிருந்து பரிகாசமான போக்கை அடைவதற்கு ஒரே ஒரு படிதான் உண்டு!

நியாயம், அநியாயம் என்ற முறையோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியாத ஒரு பெருமையை ஒப்புக் கொள்ளுவதானது, ஒருவர் தம்முடைய ஒன்றுமில்லாத சூனியத்தையும், அளவிடமுடியாத அற்பத்தனத்தையும் ஒப்புக் கொள்ளுவதாகவே இருக்கும் என்பது ஒருவருக்கும் தோன்றவில்லை.

கிறிஸ்து நமக்கு கொடுத்துள்ள நல்லது, கெட்டது என்ற அளவு கோலின்படி பார்ப்போமானால், மனித வர்க்கத்தின் செய்கைகள் எதையும் அதற்குப் புறம்பானது என்று ஒப்புக்கொள்ள முடியாது. நேர்மையும் நன்மையும் உண்மையும் இல்லாத இடத்தில் 'பெருமை' என்பது இருக்க முடியாது.

# 14

## 19

1812 - ஆம் வருஷத்திய போரினுடைய கடைசிப் பாகத்தை படிக்கிற எந்த ருஷ்யன்தான் வருத்தமும், அதிப்தியும், குழப்பமும் அடையாமல் இருக்கமுடியும்? அந்த பிரெஞ்சுக்காரர்கள் எல்லாரையும் ஏன் பிடிக்கவில்லை, அல்லது ஏன் அழிக்க வில்லை என்று யார்தான் கேட்கவில்லை?

நம்முடைய மூன்று ராணுவங்களும் எதிரிகளை அதிக எண்ணிக்கையோடு வளைந்து கொண்டிருந்த போதும், நிலை குலைந்து பிரெஞ்சுக்காரர்கள் பசியினாலும் குளிரினாலும் வாடி கூட்டமாகச் சரணடைந்து கொண்டிருந்த போதும், பிரெஞ்சுக்காரர்களைத் தடுத்து நிறுத்தவேண்டுமென்பது தான் ருஷ்யர்களின் கொள்கைகளாய் இருந்த போதும், அவர்கள் படைகளை துண்டித்து, ஏன் எல்லாரையும் பிடிக்கவில்லை, என்று யார் தான் கேட்கவில்லை?

பிரெஞ்சு ராணுவத்தைவிட ருஷ்ய ராணுவம் பலவீனமாய் இருந்தபோது, பாராடினோவில் போர் தொடுத்தது. அந்த ராணுவம் இப்போது பிரெஞ்சுக்காரர்களை மூன்று பக்கங்களிலும் வளைத்துக்கொண்டபோது, அந்த ராணுவத்தைக் கைப்பற்ற வேண்டுமென்பதுதான் ருஷ்ய ராணுவத்தின் நோக்கமாக இருந்தபோது, ஏன் அந்த ராணுவத்தைக் கைப்பற்ற வில்லை? நாம் அவர்களை வளைத்துக்கொண்டபோது, அந்தப் பிரெஞ்சுக்காரர்கள் நம்மைவிட ஏராளமாக, எண்ணிக்கையில் அதிகமாக இருந்தார்கள் என்றும், நாம் அவர்களைத் தோற்கடிக்க முடியவில்லை என்றும் சொல்ல முடியுமா? அம்மாதிரி எப்படி நடக்கமுடியும்?

இந்தக் கேள்விக்குச் சரித்திரமானது (அல்லது அந்தப் பெயரால் அழைக்கப்படுவதானது) பதில் சொல்லுகிறது. அதாவது, குட்டுஜோவ், டார்மாஸாவ், சிச்சாகோவ் ஆகியவர்களோ, அல்லது இந்த மனிதரோ, அல்லது அந்த மனிதரோ இன்னின்ன நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வில்லை என்று சரித்திரம் பதில் சொல்லுகிறது.

ஆனால் அவர்கள் ஏன் அந்த நடவடிக்கைகள் செய்து முடிக்கவில்லை? முன்னேற்பாட்டின்படி உள்ள நோக்கத்தை அடைவதற்கான வேலைகளை அவர்கள் செய்யவில்லையென்று குற்றம் சொல்லப்படுமானால், அவர்களை ஏன் விசாரித்துத் தண்டிக்கவில்லை? குட்டுஜோவும், சிச்சாகோவும், இன்னும் மற்றவர்களும் அம்மாதிரி செய்யாமல் விட்டுப்போன காரியங்களுக்கு, பொறுப்பானவர்கள் என்று நாம் ஒப்புக் கொண்டால்கூட மற்றொரு விஷயம் நமது புத்திக்கு எட்டாததாய் இருக்கிறது. அதாவது, கிராஸ்னோவிலும் பெரியோஜினாவிலும் நமது துருப்புகள் எண்ணிக்கையில் அதிகமாய் இருந்தன. அப்படியானால், பிரெஞ்சு ராணுவத்தையும்; அதனுடைய மார்ஷல்களையும், மன்னர்களையும், சக்கரவர்த்தியையும் பிடிக்கவேண்டும் என்பது தான் நமது ராணுவத்தின் நோக்கமானால் அதை ஏன் அவர்கள் செய்யவில்லை?

இந்த விசித்திரமான காரியத்தைப் பற்றி ருஷ்ய சரித்திரக்காரர்கள் ஒரு காரணம் சொல்லுகிறார்கள். (அதாவது, ஒரு வலுத் தாக்குதலை குட்டுஜோவ் நிறுத்தினார் என்று சொல்லுகிறார்கள்) ஆனால் அந்தக் காரணங்களுக்கு ஆதாரம் இல்லை. ஏனெனில் வியாஜ்மாவிலும், டாரூடினாவிலும் வலுத்தாக்குதல் செய்த துருப்புகளை அவரால் நிறுத்திவைக்க முடியவில்லை என்பதை நாம் அறிவோம்.

பாராடினோவில் எதிரி பூரண வேகத்தோடு இருந்தும், ருஷ்ய ராணுவம் பலத்தில் குறைவாக இருந்தும், எதிரியின் தாக்குதலை எதிர்த்து நின்றது. கிராஸ்னோவிலும் பெரியோஜினாவிலும் ருஷ்ய ராணுவம் பலம் உள்ளதாய் இருந்தும், கலைந்து ஓடிக்கொண்டிருந்த பிரெஞ்சுத் துருப்புகளால் எப்படி தோற்கடிக்கப்பட்டது?

எதிரிப்படைகளைத் துண்டித்து நெப்போலியனையும், அவருடைய மார்ஷல்களையும் கைதுசெய்ய வேண்டுமென்பது ருஷ்ய துருப்புகளின் நோக்கமாய் இருந்தால் ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். (அந்த நோக்கமானது நடக்க முடியாததாய் போய்விட்டது. அதை அடைவதற்கு கையாண்ட முறைகள் வெட்கப்படக்கூடியவிதமாய் முறிந்து போயின.) இந்தப் போரிலுள்ள கடைசி பாகத்தில் பிரெஞ்சுக்காரர்கள் பல வெற்றிகள் அடைந்ததாகச் சொல்லுவது முற்றிலும் சரியாகும்; நமக்கு வெற்றி கிடைத்ததாக ருஷ்ய சரித்திரக்காரர்கள் சொல்லுவது முற்றிலும் தவறாகும்.

ருஷ்ய ராணுவ சரித்திர ஆசிரியர்களுக்கு நியாயவாதத்தில் கொஞ்சமாவது மதிப்பு இருக்குமானால், இந்த முடிவை அவர்கள் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். வீரத்தைப் பற்றியும், அபிமானத்தைப் பற்றியும் என்னதான் அவர்கள் சொல்லிக் கொண்டாலும், இந்த விஷயத்தை அவர்கள் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். அதாவது, மாஸ்கோவிலிருந்து பிரெஞ்சுக்காரர்கள் பின்வாங்கிப் போனபோது தொடர்ந்தாற்போல நெப்போலியனுக்கு பல வெற்றிகள் கிடைத்தன என்பதையும், தொடர்ந்தாற்போல குட்டுஜோவுக்கு பல தோல்விகள் கிடைத்தன என்பதையும் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.

தேசீய பெருமையை ஒரு பக்கத்தில் ஒதுக்கி வைத்துவிட்டு பார்ப்போமானால், அந்த முடிவை ஒப்புக்கொள்ளுவதில் ஒரு இடையூறு இருக்கிறது என்பதை ஒவ்வொருவரும் உணர்வார்கள். அதாவது, தொடர்ந்தாற்போல பிரெஞ்சுக்காரர்களுக்குக் கிடைத்த பல வெற்றிகள், அவர்களின் நாசத்தையே கொண்டு வந்துவிட்டன. ஆனால் தொடர்ந்தாற்போல ருஷ்யர்களுக்குக் கிடைத்த வெற்றிகள் எதிரிகளை பூரணமாக அழித்து நாட்டுக்கு விடுதலையையும் கொண்டுவந்து கொடுத்தன.

இந்த மாறுபாடான தோற்றத்திற்குக் காரணம் ஒரு விஷயத்தில் அடங்கி இருக்கிறது. அதாவது, 1812 - ஆம் வருஷத்தில் போரில் கடைசி கட்டத்தைப் பற்றி நோக்கத்தை சரித்திர ஆசிரியர்கள் மன்னர்களுடையவும், ஜெனரல்களுடையவும் கடிதங்களைப் படித்தும், ஞாபகக் குறிப்புகளையும் அறிக்கைகளையும் திட்டங்களையும் படித்தும் சிருஷ்டி செய்தார்கள். ஆனால் உண்மையில் எதிரிப் படைகளை துண்டித்து நெப்போலியனை அவருடைய மார்ஷல்களுடனும், துருப்புகளுடனும் கைப்பற்ற வேண்டும் என்ற நோக்கம் இருந்ததே இல்லை.

அம்மாதிரி ஒரு நோக்கம் எப்பொழுதும் இருந்ததில்லை; இருக்கவும் முடியாது. ஏனெனில், அந்த நோக்கம் புத்தியற்றதாய் இருக்கும். அதை நிறைவேற்றுவதும் முற்றிலும் அசாத்தியமானதாய் இருக்கும்.

நெப்போலியனுடைய சீர்குலைந்த ராணுவமானது தங்களால் முடிந்த வரையில் வேகமாக ருஷ்யாவிலிருந்து ஓடிக் கொண்டிருந்தது. ருஷ்யர்கள் எதை விரும்பினார்களோ, அதைத்தான் அது செய்து கொண்டிருந்தது. ஆகவே, அவர்களை பிடித்துக் கொள்ளுவது என்ற நோக்கம் புத்தியற்றதாய் இருக்கும். தங்களால் முடிந்த வரையில் வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் பிரெஞ்சுக் காரர்கள்மீது நடவடிக்கை எடுப்பதானது எந்த விதத்தில் உபயோகமானதாய் இருக்கும்?

இரண்டாவதாக, ஓடுவதிலேயே தங்களுடைய முழு வேகத்தையும் செலுத்திக் கொண்டிருக்கும் மனிதர்களை ஓடவிடாமல் இடைமறிப்பது என்பது புத்தியற்றதாய் இருக்கும்.

மூன்றாவதாக, ஓடிக்கொண்டிருக்கும் பிரெஞ்சு ராணுவத்தை அழிப்பதற்காக நமது ராணுவத்தை பலியிடுவது புத்தியற்றதாய் இருக்கும். ஏனெனில், அந்தப் பிரெஞ்சு ராணுவம் யாருடைய தூண்டுதலும் இல்லாமல் தன்னைத்தானே வெகு வேகமாக அழித்துக்கொண்டிருந்தது. அதனுடைய பாதை இடைமறிக்கப்படா விட்டாலும், டிசம்பர் மாதத்தில் ருஷ்ய எல்லையைக் கடந்து எத்தனை பேர்கள் போனார்களோ, அதற்கு அதிகமாகப் போய் இருக்க முடியாது. அதாவது, ஆரம்பத்தில் வந்த படைகளில் நூற்றில் ஒருவர் வீதம்தான் ருஷ்ய எல்லையைக் கடந்து திரும்பிப் போனார்கள்.

நான்காவதாக, சக்கரவர்த்தியையும், மன்னர்களையும், கோமகன்களையும் கைது செய்வது என்று நினைப்பது புத்தியற்றதாய் இருக்கும். ஏனெனில், அவர்களைக் கைது செய்து வைப்பது என்பது ருஷ்யர்களுக்கு பெரிய தர்மசங்கடமாய் இருக்கும். அம்மாதிரிதான் அக்காலத்தில் இருந்த சிறந்த

ராஜதந்திரிகளான ஜோசப் டி மேஸ்டிரியும் மற்றவர்களும் நினைத்தார்கள். கிராஸ்னோ வந்து சேரும் முன்பாக நமது படைகள் பாதியாகக் குறைந்து விட்டன. இம்மாதிரி நிலைமையில் பிரெஞ்சு ராணுவப் படைகளை பிடிக்கவேண்டும் என்று நினைப்பது புத்தியற்றதாய் இருக்கும். ஏனெனில், அந்த படைப் பிரிவுகளை பாதுகாத்துக்கொண்டு போவதற்கே ஒரு முழு பட்டாளம் வேண்டியிருக்கும். ஏற்கெனவே பிடித்த கைதிகள் பசியினால் மாண்டு கொண்டு வரும்போதும், நமது வீரர்களுக்கு போதுமான உணவு கிடைக்காமல் இருக்கும்போதும், அம்மாதிரி எதிரிகளைப் பிடிப்பதானது புத்தியற்றதாய் இருக்கும்.

ஒருவன் தோட்டத்தில் ஒரு பசு வந்து மேய்ந்து விட்டது. அதை தோட்டத்திலிருந்து வெளியே விரட்டும்போது வாசலைப்பார்க்க ஓடிக்கொண்டிருந்தது. ஓடிக்கொண்டிருந்த அந்த பசுவை மண்டையில் அடிக்க வேண்டும் என்று நினைத்து தோட்டக்காரன் வாசலுக்கு ஓட விரும்புகிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். அதேமாதிரிதான் பிரெஞ்சுப் படைகளைத் துண்டித்து நெப்போலியனைப் பிடிக்கவேண்டும் என்று போடப் பட்ட புத்திசாலித்தனமான திட்டங்களும் இருந்தன. தோட்டக்காரன் செய்ய விரும்பியதற்கு ஒரு காரணம் சொல்ல வேண்டுமானால், அவன் கோபமாய் இருந்தான் என்றுதான் சொல்லலாம். ஆனால் அந்தக் காரணத்தைக்கூட இந்தத் திட்டத்தைத் தயாரித்தவர்களுக்குச் சொல்ல முடியாது. ஏனெனில், இந்த திட்டத்தை தயாரித்தவர்கள் சொந்தமாக அடைந்த நஷ்டம் எதுவுமில்லை.

எதிரித் துருப்புக்ளையும் நெப்போலியனையும் துண்டித்துவிடுவது என்பது புத்தியற்ற காரியமாய் இருந்ததோடு அசாத்தியமானதாகவும் இருந்தது.

யுத்த களத்தில் மூன்று மைல் நீளமுள்ள துருப்புகளின் நடமாட்டங்களை முன்னால் செய்த திட்டங்களுக்கு ஒத்ததாக ஏற்படுத்த முடியாது என்பதை அனுபவத்திலிருந்து அறிந்து கொண்டிருக்கிறோம். ஆகவே சிச்சாகோவும் குட்டுஜோவும் விட்ஜென்ஸ்டைனும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் திட்டப்படி ஒன்றுகூட முடியும் என்பது அசாத்தியமான காரியமாகும். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து சில திட்டங்களை குட்டுஜோவ் பெற்றபோது வெகு தூரத்திலிருந்து போடப்படும் திட்டங்கள் விரும்பிய பலன்களைக் கொடுக்க முடியாது என்று நினைத்தார். ஆகவே இம்மாதிரி காரணங்களினால் எதிரித் துருப்புகளைத் துண்டிப்பது என்பது அசாத்தியமான காரியமாகும்.

நெப்போலியனுடைய துருப்புகள் பின்வாங்கிக் கொண்டிருந்த பிரம்மாண்டமான வேகத்தைத் தடுத்து நிறுத்த வேண்டுமானால்

ருஷ்யர்களிடம் அச்சமயம் இருந்த ராணுவத்தைவிட ஏராளமாக அதிகமான துருப்புகள் அவசியமாய் இருந்திருக்கும். ஆகவே துண்டிப்பது என்பது அசாத்தியமான காரியம் என்பதற்கு இது இரண்டாவது காரணம்.

மூன்றாவதாக, 'துண்டிப்பது என்ற ராணுவ பதத்திற்கு அர்த்தமே கிடையாது. ஆகையால் அப்படிச் செய்வது அசாத்தியமானது. ஒரு ரொட்டியைத் துண்டிக்கலாமே ஒழிய ஒரு ராணுவத்தைத் துண்டிக்க முடியாது. ஒரு ராணுவத்தைத் துண்டிப்பது என்பது, அதாவது அதனுடைய வழியை மறைத்து அடைத்து மறைப்பது என்பது முற்றிலும் அசாத்தியமான காரியம். ஏனெனில், கைதியாகாமல் தப்பித்துக்கொள்வதற்கு எப்பொழுதும் ஏராளமான வழிகள் இருக்கின்றன. அதைத் தவிர, இரவு நேரங்கள் இருக்கின்றன. இரவுகளில் எதையுமே பார்க்கமுடியாது. கிராஸ்னோவிலும் பெரியோஜினாவிலும் நடந்த காரியங்களிலிருந்து ராணுவ நிபுணர்கள் இதை அறிந்துகொண்டிருக்கலாம். கைதிகள் பிடிபடுவதற்கு சம்மதித்தால்தான் கைதிகளைப் பிடிக்கமுடியும். ஜெர்மனியர்கள் செய்ததைப் போல ராணுவ தந்திர விதிகளின்படி துருப்புகள் சரண் அடைந்தால்தான் அவர்களைக் கைதிகளாக பிடிக்கமுடியும். ஆனால் இம்மாதிரி சரணடைவது தங்களுக்கு உகந்தது என பிரெஞ்சுத் துருப்புகள் நினைக்கவில்லை. ஏனெனில், சரணடைந்தாலும், பின்னோக்கி ஓடினாலும், பசியினாலும் குளிரினாலும் சாவை எதிர்நோக்க வேண்டியதுதான் என்பதை அவர்கள் அறிவார்கள்.

நான்காவதாக, அந்த யோசனை அசாத்தியமானது என்பதற்குக் காரணம் இதுதான். என்னவென்றால் உலகம் தோன்றியது முதல் 1812 ஆம் வருஷத்தில் ஏற்பட்ட பயங்கரமான நிலைமைகளில் யுத்தம் என்பது நடந்ததேயில்லை. பிரெஞ்சுக்காரர்களைத் துரத்திச் சென்ற ருஷ்ய ராணுவம் தன்னால் சாத்தியமான்தையெல்லாம் செய்தது. அதற்குமேல் அதன் சக்தியை மீறி அது செய்திருக்குமானால், அது அழிந்து போயிருக்கும்.

டாரூடினாவிலிருந்து கிராஸ்னோவுக்கு வந்து சேருகிற வரையில் ஐம்பதாயிரம் பேர்களை ருஷ்ய ராணுவம் இழந்துவிட்டது. அந்த ஐம்பதாயிரம் பேர்களும் நோயினாலோ, வேகமாக வர முடியாததாலோ பின்தங்கி விட்டார்கள். ஒரு பெரிய பட்டணத்தின் ஜனத்தொகை அளவு அம்மாதிரி பின்தங்கியவர்கள் இருந்தார்கள். ஆகவே யுத்தம் எதுவும் இல்லாமலே ராணுவத்தில் பாதிப்பேர்கள் குறைந்து விட்டார்கள்.

அந்த யுத்தத்தின் இந்தக் கட்டத்தில்தான் துருப்புகளுக்கு பூட்ஸ்களும், ஆட்டுத்தோல் கோட்டுகளும், உணவுப்

பொருள்களும், வாட்கா மதுவும் பஞ்சமாய் இருந்தன. அந்தக் காலத்தில்தான் இரவுகளில் 15 டிகிரி உறைபனி குளிரில் வெட்டவெளியில் அவர்கள் தங்கி வந்தார்கள். அவர்களுக்கு ஓய்வு என்பது அந்த இரவு நேரங்களில்தான் இருந்தது. ஆகவே, அச்சமயங்களில் ராணுவக் கட்டுப்பாட்டு விதிகளை பிரயோகிக்க முடியாது. கட்டுப்பாடுகள் தளர்ந்தபோதுதான் மனிதர்கள் மரணத்தின் எல்லைக்குள் நெருங்குகிறார்கள். அம்மாதிரிக் கட்டுப்பாடு இல்லாமல் யுத்த களங்களில் சில மணி நேரங்கள்தான் இருக்க முடியும். ஆனால் இந்தக் கட்டத்திலோ மாதக்கணக்காக கட்டுப்பாடு இல்லாமல் இருந்து வந்தார்கள். இந்தக் கட்டத்தில்தான் பசியினாலும் குளிரினாலும் சாகாமல் இருக்க ஒவ்வொரு வினாடியும் போராடி வந்தார்கள். இந்தக் கட்டத்தில்தான் ராணுவத்தில் பாதிப்பேர் குறைந்து போனார்கள். இந்தக் கட்டத்தைப்பற்றி சரித்திர ஆசிரியர்கள் பேசும்போதுதான் விசித்திரமாக கூறுகிறார்கள். அதாவது, மிலாராடாவிச் இன்ன இடத்திற்கு பக்கவாட்டில் படையெடுத்து எப்படி போயிருக்க வேண்டும் என்றும், டார்மாஸாவ் எப்படி போயிருக்க வேண்டும் என்றும், சிச்சாகோவ் முழங்கால் அளவு பனியில் நடந்து சென்று எப்படி இன்னொரு இடத்திற்கு கடந்து சென்றிருக்க வேண்டும் என்றும், இன்னின்னார் பிரெஞ்சு ராணுவங்களை எம்மாதிரி துண்டித்துத் தோற்கடித்திருக்கவேண்டும் என்றும் இன்னும் பலவும் சொல்லுகிறார்கள்.

ருஷ்ய சமுதாயத்தின் பெருமைக்கு ஒத்தவிதமாக ஒரு முடிவை ஏற்படுத்துவதற்காக ருஷ்யர்கள் தங்களால் கூடியவைகளை யெல்லாம் செய்தார்கள். அவர்களில் பாதிப்பேர் இறந்து போனார்கள். ஆகவே, வீட்டிற்குள் வெதுவெதுப்பான அறைகளில் உட்கார்ந்துகொண்டு, அசாத்தியமான காரியத்தை ருஷ்ய துருப்புகள் செய்யவேண்டும் என்று சில ருஷ்யர்கள் சொல்லுவார்களானால், அதற்காக ருஷ்யத் துருப்புகளைக் குறைகூற முடியாது.

இந்த விதமான விசித்திரமான மாறுபாடுகளை, அதாவது உண்மையாக நடந்தவைகளுக்கும், சரித்திரத்தில் காணப்படுபவை களுக்கும் உள்ள மாறுபாடுகளை இப்பொழுது புரிந்துகொள்ளுவது கஷ்டமாய் இருக்கும். பற்பல ஜெனரல்களின் அழகான வார்த்தை களையும், உள் உணர்ச்சிகளையும் கொண்டே சரித்திரத்தை சரித்திர ஆசிரியர்கள் எழுதினார்களேயொழிய, நடந்த சம்பவங்களைப் பற்றிய சரித்திரத்தை அவர்கள் எழுதவில்லை. அதனால்தான் இந்த மாறுபாடுகள் தோன்றுகின்றன.

அவர்களுக்கு மிலாராடாவிச்சின் வார்த்தைகள் சுவாரஸ்யமாக காணப்படுகின்றன. அதைப்போலவே, இந்த ஜெனரலோ, அந்த

ஜெனரலோ பெற்ற பரிசுகளும், அவர்களுடைய யூகங்களும் சுவாரஸ்யமாகக் காணப்படுகின்றன. ஆனால் ஆஸ்பத்திரிகளிலோ, புதை குழிகளிலோ போய்ச் சேர்ந்த ஐம்பதினாயிரம் வீரர்களைப் பற்றிய பிரச்னை அவர்களுக்கு சுவாரஸ்யமாக காணப்படவில்லை. ஏனெனில், அந்தப் பிரச்னை அவர்களுடைய விசாரணைக்குள் வந்து சேரவில்லை.

அறிக்கைகளையும், பொதுவான திட்டங்களையும் ஒதுக்கி வைத்துவிட்டு, அந்த சம்பவங்களில் கலந்துகொண்ட லட்சக் கணக்கான மனிதர்களின் நடவடிக்கைகளைக் கவனித்தால், சுலபமாகத் தீரமுடியாது என்று காணப்படுகிற கேள்விகளுக் கெல்லாம் உடனே நிச்சயமான பதில் கிடைத்துவிடும்.

நெப்போலியனையும் அவருடைய ராணுவத்தையும் துண்டிக்கவேண்டும் என்ற நோக்கம் ஒரு டஜன் பேர்வழிகளுடைய மனோராஜ்யத்தில் இருந்ததே தவிர, மற்றபடி வேறெங்கும் எப்பொழுதும் இருந்ததில்லை.

தங்களுடைய நாட்டைப் படையெடுப்பிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்ற ஒரே நோக்கம்தான் மக்களுக்கு இருந்தது. பிரெஞ்சுக்காரர்கள் திரும்பி ஓட ஆரம்பித்ததும், அந்த நோக்கம் நிறைவேறிவிட்டது. ஆகவே, பிரெஞ்சுக்காரர்கள் ஓடுவதைத் தடுக்காமல் இருக்கவேண்டியது அவசியமாய் இருந்தது. இரண்டாவதாக, பிரெஞ்சுக்காரர்களை கொரில்லா சண்டைகளினால் அழித்து வந்ததினாலும் அந்த நோக்கம் நிறைவேறிற்று. மூன்றாவதாக, பிரெஞ்சுக்காரர்கள் ஓடுவதை நிறுத்துவார்களானால், அவர்கள்மீது தங்களுடைய முழு பலத்தையும் உபயோகிக்க ருஷ்ய ராணுவம் பின் தொடர்ந்து போய்க்கெண்டிருந்தாலும், அந்த நோக்கம் நிறைவேறிற்று.

ஓடிக்கொண்டிருக்கும் ஒரு பிராணிமீது ஒரு சவுக்கை உபயோகிப்பது போலவே, ருஷ்ய ராணுவம் நடந்து வந்தது. ஓடிக்கொண்டிருக்கும் அந்தப் பிராணியைத் தலையில் அடிப்பதைவிட அடிக்கப்போவதைப் போல பயமுறுத்தித் தலைக்கு மேலாக அந்த சவுக்கைக் காட்டிக்கொண்டிருப்பது தான் சிலாக்கியமானது என்பதை அனுபவமுள்ள வண்டிக்காரன் அறிவான்.

★

## விளக்க உரைகள்

**14 15** கனவுகளின் விசித்திரங்களைப் பற்றி ஆசிரியர் வாலிபராக இருந்தபோது அவருக்கு மிகுந்த சிரத்தை ஏற்பட்டது. கனவுகள் எவ்வளவு நீளமாகவும் எவ்வளவு சிக்கலாகவும் இருந்தபோதிலும், விழிக்கிற வினாடியில்தான் அவை ஏற்படுகின்றன என்றும், அச்சமயத்தில் வெளியிலுள்ள சப்தங்களும், வாசனைகளும், உணர்ச்சிகளுமே அவற்றை ஏற்படுத்துகின்றன என்றும் அவர் கருத்து கொண்டிருந்தார்.

**14 19** ஜோஸப் டிமேஸ்ட்ரீ (1754-1821) இந்தச் சாமர்த்தியமுள்ள புரட்சி எதிர்ப்பு எழுத்தாளர் பீட்டர்ஸ்பர்க்கில் சார்டினியாவில் ஸ்தானாதி பதியாக இருந்தார். அங்கே 15 வருஷங்கள் வாழ்ந்து வந்தார். மிகுந்த மதிப்பு பெற்றதோடு தாராள கொள்கைக்கும் புரட்சி கொள்கைக்கும் விரோதமாக தமது செல்வாக்கை உபயோகித்து வந்தார்.

★

# 15

## 1

செத்துக்கொண்டிருக்கும் ஒரு மிருகத்தைப் பார்க்கும்போது, மனிதனுக்கு ஒரு பயங்கரமான உணர்ச்சி தோன்றுகிறது. தன்னுடைய உடலைப்போன்ற ஒரு உடல் தன்னுடைய கண்களுக்கு முன்பாக அழிந்து போவதைப் போன்ற உணர்ச்சி அவனுக்குத் தோன்றுகிறது. ஆனால் தான் மிகுந்த பிரியம் கொண்ட அன்னியோன்னியமுள்ள ஒருவர் செத்துக் கொண்டிருப்பதை பார்ப்பதாய் இருந்தால், அந்த உயிர் பிரிந்து போவதால் ஏற்படக்கூடிய பயங்கரமான உணர்ச்சியோடு, ஒரு பிரிவினை உணர்ச்சியையும் ஒரு ஆத்மீக காயமும் தோன்றுகின்றன. அந்த ஆத்மீக காயமானது, உடலில் ஏற்படும் காயத்தைப்போல சில சமயம் குணமாகக் கூடியதாகவும், சிலசமயம் உயிருக்கு ஆபத்து கொடுக்கக் கூடியதாகவும் இருக்கும். ஆனால் எப்பொழுதும் அது வலித்துக்கொண்டும், யாராவது தொட்டால் எரிச்சலோடு சுருங்கிக்கொண்டும் இருக்கும்.

இளவரசர் ஆண்ட்ரூஸின் மரணத்திற்குப் பின்னால், நட்டாஷாவும் இளவரசி மேரியும் இம்மாதிரியே உணர்ந்து வந்தார்கள். அவர்களுக்கு முன்னால் பயமுறுத்தலோடு தொங்கிக் கொண்டிந்த சாவின் மேகத்திற்கு முன்பாக, அவர்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டு, உள்ளத்தில் சோர்வு கொண்டு வாழ்க்கையை நேருக்கு நேராகப் பார்ப்பதற்கு தைரியமில்லாமல் இருந்தார்கள். தங்களுக்கு ஏற்பட்டுள்ள திறந்த காயங்களை யாராவது முரட்டுத்தனமாக தொட்டு விடாமல் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தார்கள். தெருவில் ஒரு வண்டி வேகமாகப் போகும்போதும், டின்ன ருக்கு அழைப்புகள் வரும்போதும் எம்மாதிரியான ஆடைகளை வெளியே எடுத்து வைக்கவேண்டுமென்று வேலைக்காரி கேட்கும்போதும், அந்தச் செய்கைகள் அவர்களுடைய காயத்தை எரிச்சலாக்குகிறவையாகத் தோன்றின. முக்கியமாக, உண்மை சிரத்தையில்லாமல் யாராவது அனுதாபம் காட்டும்போது, அவர்களுடைய அதை அவமரியாதையாகவும், அவர்களுடைய அமைதியான வாழ்க்கையைக் குலைப்பதாகவும் அவர்கள் உணர்ந்தார்கள். எப்பொழுதும் அவர்களுடைய மனோ ராஜ்யத்தில் தேவாலய கோஷ்டி பிரார்த்தனை ஒலித்துக் கொண்டேயிருந்தது. ஒரு வினாடி தோன்றி மறைந்த எல்லையற்ற அதிசயமான காட்சிகளை மீண்டும் பார்க்கவிடாமல் தடுப்பதாக, இம்மாதிரி இடையூறுகளை அவர்கள் நினைத்தார்கள்.

அவர்கள் தனியாக இருவரும் சேர்ந்து இருக்கும் போதுதான், அம்மாதிரியான வலியிலிருந்தும் மனக்கசப்பிலிருந்தும் விடுபட்ட

வர்களாகக் காணப்பட்டார்கள். அவர்கள் இருவரும் ஒருவருக் கொருவர் பேசுவதும் மிகவும் சொற்பம்தான். அப்படிப் பேசும் போதும், பேசுகிற விஷயங்களும் முக்கியமற்ற சாதாரண விஷயங் களாகவே இருக்கும்.

எதிர்காலத்தைப் பற்றிய எந்த விதமான பிரஸ்தாபத்தையும் அவர்கள் தவிர்த்தார்கள். எதிர்காலத்தைப் பற்றி நினைப்பதானது, அவருடைய ஞாபகத்தை அவமதிப்பதைப்போல அவர்களுக்குத் தோன்றியது. இறந்துபோன அவரைப் பற்றி எதுவும் பேசாமல் இருப்பதற்கு, இன்னும் அதிக ஜாக்கிரதையோடும் இருந்தார்கள். அவர்கள் அடைந்த, அவர்கள் அனுபவித்த காரியங்களை வார்த்தை களினால் சொல்ல முடியாது என்பதுபோல அவர்களுக்குத் தோன்றின. அவருடைய வாழ்க்கையைப் பற்றி விவரங்களை ஏதாவது சொல்லுவதானது, அவர்களுடைய கண்களுக்கு முன்னால் நடந்து முடிந்த அந்த அதிசயத்தினுடைய கம்பீரத்துக்கும், புனிதத் தன்மைக்கும் இழுக்கு விளைவிப்பதைப்போல அவர்களுக்குத் தோன்றியது.

அந்த விஷயத்தைப் பற்றி குறிப்பிடக்கூடிய எதையும் பேசாமலும் செய்யாமலும் இருந்து வந்தார்கள். அந்த விஷயத்தில் எல்லைக்கோட்டுக்கு வெளியாகவே அவர்களுடைய பேச்சுக்களும் செய்கைகளும் நடந்து வந்தன. அதனால் அவர்கள் இருவரும் எதை உணர்ந்து வந்தார்களோ, அதை மிகுந்த பரிசுத்தத்தோடும், தெளிவோடும் அவர்கள் காணமுடிந்தது.

முழுவதும்ம்வும் கலப்பில்லாமலும் எப்படி மகிழ்ச்சி இருக்க முடியாதோ, அதே மாதிரி முழுவதும்ம்வும் கலப்பில்லாமலும் துக்கம் இருக்க முடியாது. தன்னுடைய நிலைமையைப் பற்றி முழுவதும் சுதந்திரமாக தானே தீர்மானித்துக் கொள்ள வேண்டிய நிலைமையில் மேரி இருந்தாள்; அதோடு தன்னுடைய மருமகனுடைய பாதுகாப் பாளியாகவும் அவள் இருந்து வந்தாள்; இந்த காரணங்களினால் கடந்த இரண்டு வாரங்களாக துக்கத்தில் மூழ்கியிருந்த இளவரசி மேரிதான், முதல் முதலாக அந்த துக்க உலகத்திலிருந்து வாழ்க் கைக்குத் திரும்பும்படியாயிருந்தது. அவளுடைய பந்துக்களிட மிருந்து கடிதங்கள் வந்தபடியால், அவற்றிற்கு பதில் எழுத வேண்டியதாய் இருந்தது. குஞ்சு நிக்கலஸ் இருந்த இடமானது ஓதமாக இருந்தபடியால், அவன் இரும ஆரம்பித்தான். அவர் களுடைய குடும்பச் சொத்துக்களைப் பற்றிய விவரங்களோடு யாராஸ்லாவுக்கு அல்பாட்டிச் வந்தார். அவர்கள் எல்லாரும் மாஸ்கோவிலுள்ள லாஜ்வைஜெங்கா தெருவிலிருக்கும் வீட்டிற்குத் திரும்பவேண்டுமென்று அவர் சொன்னார். சில்லறையாகப் பழுது

பார்க்கும் வேலையைத் தவிர, அந்த வீட்டிற்கு வேறு எவ்விதமான சேதமும் ஏற்படாமலிருந்தது. வாழ்க்கையானது அசையாமல் அப்படியே நிற்காது. ஆகவே வாழ்ந்து ஆகவேண்டியது அவசிய மாயிருந்தது. அதுவரையில் தனியாக, சிந்தனா உலகத்தில் மூழ்கி யிருந்த இளவரசி மேரிக்கு, அதைவிட்டு வெளியே வருவது கஷ்டமாயிருந்தது. அதுவும் தவிர, நட்டாஷாவை தனியாக விட்டுப் போவதற்கு அவளுக்கு வருத்தமாகவும் அவமானமாகவும் இருந்தது. என்றாலும், வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள காரியங்களை அவள் கவனித்து ஆகவேண்டியிருந்தபடியால், தனக்கு சம்மதம் இல்லாமலேயே அவற்றிற்கு இணங்கவேண்டியதாய் இருந்தது. அல்பாட்டிச் கொண்டு வந்த கணக்குகளை அவள் பார்த்தாள். தன்னுடைய மருமகளைப் பற்றி டெஸ்ஸலெஸ்ஸோடு ஆலோசனை செய்தாள். அதன் பின்னால், மாஸ்கோ பிரயாணத் திற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்யும்படி உத்தரவிட்டார்.

நட்டாஷா தனியாக இருந்தாள். பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை இளவரசி மேரி செய்ய ஆரம்பித்த பின்பு, அவளிடமிருந்தும் நட்டாஷா விலகியிருந்தாள்.

தன்னோடு நட்டாஷாவை மாஸ்கோவிற்கு அனுப்பும்படி கோமகளை இளவரசி மேரி கேட்டாள். தாய் தந்தை இருவரும் இந்த யோசனையை மகிழ்ச்சியோடு ஒப்புக்கொண்டார்கள். ஏனெனில், தங்களுடைய குமாரி நாள் தோறும் பலவீனமடைந்து வருவதைக் கண்ட அவர்கள், இடம் மாறுதலினால் அவளுக்கு சௌக்கியம் ஏற்படுமென்று நினைத்தார்கள். அதோடு, மாஸ்கோவிலுள்ள டாக்டர்களின் உதவியினால் அவளுக்கு உடல் நலமேற் படுமென்றும் நம்பினார்கள்.

''நான் ஒரு இடத்திற்கும் போகவில்லை'' என்று, இந்த விஷயத்தை நட்டாஷாவிடம் கூறியபோது, அவள் பதில் சொன்னாள். ''என்னை தனியாக விட்டு விடுங்கள்'' என்று சொல்லிவிட்டு, அவள் அந்த அறையை விட்டு வெளியே ஓடினாள். எரிச்சலினால் அவளுக்கு வந்த கண்ணீரை கஷ்டத்தோடு தடுத்து நிறுத்தினாள்.

இளவரசி மேரி தன்னுடைய துக்கத்தில், தன்னை கைவிட்டு விட்டதாக நட்டாஷா நினைத்தாள். அதன் பின்னால், அவள் தன்னுடைய அறையிலேயே பெரும்பாலும் இருப்பாள். மூலையில் கிடந்த ஒரு சோபாவின் மூலையில் அவள் சுருண்டு படுத்திருப்பாள். அவளுடைய மெல்லிய விரல்களில் எதையாவது ஒன்றை வைத்துக்கொண்டு, அதைக் கிழித்துக் கொண்டும் முறுக்கிக் கொண்டும் இருப்பாள். அவள் எதைப் பார்க்கிறாளோ, அதையே

உன்னிப்பாகக் குத்திட்ட கண்களோடு பார்த்துக்கொண்டிருப்பாள். இந்தத் தனிமையானது அவளுக்கு சோர்வைக்கொடுத்து வருத்தி வந்தது. ஆனால் அவளுக்கு அது அவசியமாயிருந்தது. யாராவது ஒருவர் உள்ளே வந்தால், உடனே அவள் வேகமாக எழுந்து, தான் உட்கார்ந்து இருக்கும் விதத்தையும், தனது தோற்றத்தையும் மாற்றிக் கொள்ளுவாள். ஏதாவது ஒரு புத்தகத்தையோ, அல்லது தையல் வேலையையோ எடுத்துக்கொண்டு, உள்ளே வந்தவர் வெளியே போவதற்காக ஆவலோடு காத்துக் கொண்டிருப்பாள்.

அவளால் தாங்க முடியாத விதத்தில் ஒரு கடுமையான ஆத்மீக கேள்வி அவளுடைய மனதை அழுத்தி வந்தது. அந்தக் கேள்விக்கு உடனே பதில் கிடைக்கப் போவதைப் போல அவள் எப்பொழுதும் உணர்ந்து வந்தாள்.

டிசம்பர் மாதக் கடைசியில் ஒரு நாளன்று, நட்டாஷா சோபாவின் மூலையில் கால்களை மடக்கி வைத்துக்கொண்டு தன்னுடைய இடுப்புப் பட்டித் துணியைக் கசக்கிக் கொண்டும், இழுத்துக் கொண்டும் அங்கிருந்த கதவின் மூலையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் முகம் வெளிறி மெலிந்து காணப்பட்டாள். கருப்பான உல்லன் கவுன் அணிந்திருந்தாள். அவளுடைய ஜடையானது கோணல் மாணலாக கொண்டை போடப் பட்டிருந்தது.

அவர் இந்த வாழ்க்கையிலிருந்து மற்றொரு பக்கத்திற்கு எந்த வழியாகப் போனாரோ, அந்த திசையை அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். வாழ்க்கையின் அந்த மற்றொரு பகுதியைப் பற்றி அவள் இதற்கு முன்பு எப்பொழுதும் சிந்தித்ததில்லை. அந்த விஷயமானது தூரத்தில் உள்ளது போலவும், நடக்காத காரியம் போலவும் அவளுக்கு முன்பெல்லாம் தோன்றி வந்தன. இப்பொழுது அந்த மற்றொரு பகுதியானது, அவளுக்கு சமீபமாக இருப்பது போலவும், இந்த வாழ்க்கையைவிட இன்னும் தெளிவாகப் புரியும்படியானதாக இருப்பது போலவும் தோன்றியது. இந்த வாழ்க்கையிலுள்ள ஒவ்வொன்றும் போலியானதாகவும், உபயோகமற்றதாகவும், அல்லது அகௌரவமானதாகவும், துன்பமானதாகவும் அவளுக்குத் தோன்றின.

அவர் எங்கிருந்தாரோ, அந்த இடத்தை அவள் நோக்கிக் கொண்டிருந்தாள். அவர் அங்கேயே இருக்கிறார் என்பதைத் தவிர, வேறு விதமாக அவளால் மனோராஜ்யம் செய்ய முடியவில்லை. மிட்டைஷி, டிரோயிட்ஸா, யாராஸ்லாவ் ஆகிய இடங்களில் அவர் எம்மாதிரி காணப்பட்டாரோ, அதே விதமாக மீண்டும் அவள் அவரைக் கண்டு வந்தாள்.

அவருடைய முகத்தை அவள் பார்த்தாள். அவருடைய குரலைக் கேட்டாள். அவர் பேசிய வார்த்தைகளையும் தான் பேசிய வார்த்தைகளையும் திருப்பிச் சொன்னாள். சில சமயங்களில் தாங்கள் என்ன பேசி இருப்போம் என்று யூகித்து அவற்றைச் சொல்லுவாள்.

வெல்வெட் மேலங்கி அணிந்து, நீளமான நாற்காலியில் மல்லாந்து படுத்து, தமது மெல்லிய வெளிறிய கைமீது தலையைச் சாய்ந்து, அங்கே படுத்துக்கொண்டிருந்தார். அவருடைய மார்பானது பயங்கரமாக ஆழ்ந்து போயிருந்தது. அவருடைய தோள்கள் உயர்ந்திருந்தன. அவருடைய இதழ்கள் இறுக்கி மூடியிருந்தன. கண்கள் ஜொலித்துக் கொண்டிருந்தன. அவருடைய வெளிறிய நெற்றியில் ஒரு மடிப்பானது வருவதும் போவதுமாக இருந்தது. அவருடைய ஒரு கால் வேகமாக வெளியே தெரியும்படி ஆடிக் கொண்டிருந்தது. அவர் பயங்கரமான வலியினால் அவஸ்தைப் படுகிறார் என்பதை நட்டாஷா அறிவாள். ''அந்த வலி எம்மாதிரி இருக்கும்? எதற்காக அவருக்கு அந்த வலி இருக்க வேண்டும்? அவர் எம்மாதிரி அதை உணருகிறார்? எம்மாதிரி அது அவரை வருத்தி வருகிறது?'' என்று நட்டாஷா நினைத்தாள். அவள் தம்மை கவனித்துக் கொண்டிருப்பதை அவர் அறிந்ததும், தமது பார்வையை உயர்த்தி, சிரத்தையோடு பேச ஆரம்பித்தார்:

''ஒரு விஷயம் மிகுந்த பயங்கரமானது. அதாவது, துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் ஒருவரோடு, மற்றொருவர் பந்தப்படுத்திக் கொள்ளுவது பயங்கரமாயிருக்கும். அது தொடர்ச்சியான சித்திரவதையாக இருக்கும்'' என்று அவர் சொன்னார். அவர் அவளை ஊடுருவிப் பார்த்தார். தான் என்ன சொல்ல வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கு முன்பாகவே நட்டாஷா பதில் சொல்லுவது வழக்கம். அதே மாதிரி இப்பொழுதும் சொன்னாள்: ''இப்படியே போய்க்கொண்டிருக்க முடியாது. இம்மாதிரி அது போகாது. நீர் சௌக்கியமடைந்து விடுவீர் - பூர்ணமாக சௌக்கியமடைந்து விடுவீர்.''

அந்தக் காட்சியை அவள் மீண்டும் இப்பொழுது பார்த்தாள். அச்சமயம் எம்மாதிரியான உணர்ச்சியை அவள் கொண்டிருந் தாளோ, அதே உணர்ச்சியை இப்பொழுது மீண்டும் பெற்றாள். அந்த வார்த்தைகளை அவர் பேசியபோது, அவரிடம் தோன்றிய சோகமான, கடினமான பார்வையை, அவள் இப்பொழுது மீண்டும் நினைத்துப் பார்த்தாள். அவர் அன்று பார்த்த பார்வையிலுள்ள கண்டனத்தையும், அதைரியத்தையும் இப்பொழுது அறிந்து கொண்டாள்.

''அவர் தொடர்ச்சியாக துன்பப்பட்டுக் கொண்டிருப்ப தென்றால், அது பயங்கரமானதாய் இருக்குமென்பதை நான்

ஒப்புக்கொண்டேன். ஏனெனில் அம்மாதிரி சொல்லவில்லையென்றால் அது அவருக்குப் பயங்கரமானதாய் இருந்திருக்கும். ஆனால் அதை அவர் வேறு விதமாக எடுத்துக் கொண்டார். எனக்கு அது பயங்கரமாய் இருக்குமென்று அவர் நினைத்தார். அச்சமயம் அவர் இன்னமும் உயிர் வாழ வேண்டும் என்றே விரும்பினார். சாவைக் கண்டு பயந்தார். நான் அதைப் புத்தியில்லாமலும் விகாரமாகவும் சொன்னேன். நான் என்ன நினைத்தேனோ, அதைச் சொல்லவில்லை, நான் வேறுவிதமாக நினைத்தேன். நான் என்ன நினைத்தேனோ, அதைச் சொல்வதாய் இருந்தால், இம்மாதிரி நான் சொல்லியிருக்க வேண்டும்: ''அவர் செத்துக்கொண்டு இருப்பதாய் இருந்தாலும், என் கண்முன்பாக தொடர்ச்சியாக அவர் செத்துக் கொண்டே இருப்பதாய் இருந்தாலும், இப்பொழுது நான் இருப்பதைவிட அப்பொழுது அதிக மகிழ்ச்சியாய் இருப்பேன்''. இப்பொழுதோ ஒன்றுமேயில்லை...ஒருவரும் இல்லை. அவருக்கு அது தெரியுமா? இல்லை அவருக்கு அது தெரியாது. இனி எப்பொழுதும் தெரிந்துகொள்ளவும் முடியாது. இப்பொழுது அதை சரி செய்வதற்கு ஒருக்காலும் முடியவே முடியாது.'' மீண்டும் அவர் அதே வார்த்தைகளை அவளுக்குச் சொல்லுவதாகத் தோன்றியது. ஆனால் அவளுடைய மனோராஜ்யத்தில் நட்டாஷா தனது பதிலை வேறு விதமாக கூறினாள். அவள் அவர் பேசுவதை நிறுத்தி, தான் பேசினாள்: ''உமக்கு பயங்கரமாய் இருக்கலாம். ஆனால் எனக்கு அப்படியல்ல. வாழ்க்கையில் எனக்கு உம்மைத் தவிர வேறு எதுவும் இல்லையென்று உமக்குத் தெரியும். உம்மோடு சேர்ந்து துன்பப்படுவதுதான், எனக்கு மிகப் பெரிய மகிழ்ச்சி என்பதையும் நீர் அறிவீர்'' – என்று சொல்லிவிட்டு, அவர் மரணமடைவதற்கு நாலு தினங்களுக்கு முன்பாக அந்த மறக்க முடியாத மாலை அன்று, எம்மாதிரி அவளுடைய கையைப் பற்றி அழுத்தினாரோ, அதே மாதிரி இப்பொழுதும் செய்ததாக மானோராஜ்யம் செய்தாள். அந்த நேரத்தில் அவள் சொல்லியிருக்கவேண்டிய கனிவான, அன்பான வார்த்தைகளை அப்பொழுது சொல்லாமல், இப்பொழுது மனோராஜ்யம் செய்தாள்: ''நான் உம்மைக் காதலிக்கிறேன்... உம்மைக் காதலிக்கிறேன்! நான் காதலிக்கிறேன். காதலிக்கிறேன்...'' என்று அவள் சொல்லி, நடுக்கத்தோடு தனது கைகளை அழுத்தி, பற்களைக் கடித்தாள்...

அவள் சோகத்தில் மூழ்கினாள். கண்களில் நீர் தேங்க ஆரம்பித்தது. திடீரென்று தான் யாரிடம் இதைப் பேசிக்கொண்டிருக்கிறோம் என்பதை தனக்குத்தானே கேட்டுக்கொண்டாள். மீண்டும் ஒவ்வொன்றும் குழப்பத்தினால் மூடப்பட்டது. மீண்டும் முகம் சுளித்து அவர் எங்கே இருந்தாரோ, அந்த இடத்தை நோக்கினாள்.

இப்பொழுது, அவள் அந்த ரகசியத்தை ஊடுருவிப் பார்ப்பதாக அவளுக்குத் தோன்றியது. புத்தியினால் அறியமுடியாது என்று அவளுக்குத் தோன்றிய விஷயம், இப்பொழுது அவளுக்குத் தெளிவாகிக்கொண்டு வருவதுபோலக் காணப்பட்டபோது கதவின் தாளை திறக்கிற சப்தம் பலமாக வேதனையோடு அவளுடைய காதுகளில் விழுந்தது. அவளுடைய வேலைக்காரியான டுனியாஷா திடீரென்று வேகமாக அந்த அறைக்குள் நுழைந்தாள். அவளுடைய முகத்தில் பீதியுற்ற தோற்றம் காணப்பட்டது. தன்னுடைய எஜமானியிடம் காட்டவேண்டிய வழக்கமான மரியாதையை அவள் மறந்துவிட்டாள்.

''உன்னுடைய அப்பாவிடம் தயவுசெய்து உடனே வருவாயாக'' என்று அவள் ஒரு விசித்திரமான, பரபரப்பான பார்வையோடு கூறினாள். ''ஒரு பெரிய துரதிர்ஷ்டம்... பீட்டர் இலினிச்சை பற்றியது... ஒரு கடிதம்'' என்று அவள் விம்மலோடு கூறி முடித்தாள்.

# 15

## 2

நட்டாஷா யாருடனும் கலக்காமல் தனியாக இருந்தாள். தன்னுடைய சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடம் தனிப்பட அவள் வெறுப்புணர்ச்சி காட்டி வந்தாள். அவளுடைய தந்தையும், தாயும், சோனியாவும் அவளுக்கு வெகு சமீபத்தில் இருந்து வந்தபடியாலும், அன்னியோன்னியமாக இருந்து சாதாரண விஷயங்களை பேசி வந்தபடியாலும், அவர்களுடைய வார்த்தைகளும் உணர்ச்சிகளும் அவள் தற்சமயம் இருந்துவரும் உலகத்திற்கு அவமதிப்பானவை போல அவளுக்குத் தோன்றின. ஆகவே, அவர்களிடம் அவர் பாராமுகமாய் இருந்ததோடு, அவர்களை வெறுப்போடு நோக்கி வந்தாள். பீட்டர் இலினிச்சைப் பற்றியும், ஒரு பெரிய துரதிருஷ்டத்தைப் பற்றியும் டுனியாஷா சொல்லிய வார்த்தைகளை அவள் காதில் கேட்டபோதிலும், அவற்றின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

''எப்பேர்ப்பட்ட துரதிருஷ்டம்? எம்மாதிரி துரதிருஷ்டம் அவர்களுக்கு ஏற்படமுடியும்? அவர்கள் இன்னமும் தங்களுடைய பழைய மாதிரியான அமைதியான, சாதாரணமான வாழ்க்கையில் இருந்து கொண்டிருக்கிறார்கள்!'' என்று நட்டாஷா நினைத்தாள்.

அவள் நடன அறைக்குள் நுழைந்தபோது, அவளுடைய தந்தை வேகமாக அவளுடைய தாயினுடைய அறையிலிருந்து வெளியே வந்தார். அவருடைய முகம் சுளித்திருந்தது. கண்ணீரால் முகம்

நனைந்திருந்தது. அவர் தம்முடைய விம்மல்களை அடக்கமுடியாமல், வெளியே ஓடி வந்தது போலக் காணப்பட்டார். அவர் நட்டாஷாவைப் பார்த்ததும், அதைரியத்தோடு தமது கைகளை ஆட்டிக்கொண்டு, முகம் சுளிக்க விம்மி விம்மி அழ ஆரம்பித்தார்.

''பெ...பெட்டியா...போ, போ, அவள்... உன்னை அழைக்கிறாள்...'' என்று ஒரு குழந்தையைப் போல அழுது கொண்டு, ஒரு நாற்காலியில் வேகமாக அமர்ந்து, தமது முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டார்.

திடீரென்று நட்டாஷாவை ஒரு மின்சார அதிர்ச்சி தாக்கியதுபோல இருந்தது. பயங்கரமான துன்பம் அவளுடைய இருதயத்தைப் பற்றியது. ஏதோ அவளுக்குள்ளே அறுந்து போனதைப்போல, பயங்கரமான வலி ஒன்று அவளுக்குத் தோன்றியது. அவள் செத்துக் கொண்டிருப்பதைப் போல உணர்ந்தாள். அந்த வலியானது உடனே அவளை வாழ்க்கையில் சம்பந்தப்பட விடாமல் தடுத்துக் கொண்டிருந்த தடையை திடீரென்று நீக்கிவிட்டதுபோலத் தோன்றியது. அவளுடைய தந்தையின் தோற்றமும், அவளுடைய தாயின் பயங்கரமான கதறல்களும் அந்த வாசல் வழியாக வெளியே வந்துகொண்டிருந்தன. திடீரென்று தன்னையும் தன் துக்கத்தையும் அவள் மறக்கும்படி இவை செய்தன.

அவள் தன்னுடைய தந்தையிடம் ஓடினாள். அவர் பலவீனமாக கைகளை ஆட்டிக்கொண்டு, அவளுடைய தாயாரின் அறையைச் சுட்டிக் காட்டினார். இளவரசி மேரி முகம் வெளிறி நாடி பதறிக்கொண்டிருக்க அந்த அறையில் இருந்து வெளியே வந்து நட்டாஷாவை கையில் பற்றி, அவளிடம் ஏதோ சொன்னாள். நட்டாஷா அவளைப் பார்க்கவுமில்லை, அவள் சொல்லியதை கேட்கவுமில்லை. அவள் வேகமாகப் போனாள். கதவுக்குப் பக்கத்தில் ஒரு வினாடி நின்றாள். அவளுக்குள் ஏதோ ஒரு போராட்டம் நடப்பதைப் போலத் தோன்றியது. திடீரென்று அவளுடைய தாயாரை நோக்கி ஓடினாள்.

கோமகள் ஒரு சோபாவில் படுத்திருந்தாள். அவள் படுத்திருந்த விதம் விசித்திரமாகவும், விகாரமாகவும் இருந்தது. அவள் தன்னுடைய தலையை நீட்டி, சுவரில் மோதிக் கொண்டிருந்தாள். சோனியாவும் வேலைக்காரிகளும் அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

''நட்டாஷா! நட்டாஷா!...'' என்று கோமகள் கதறினாள். ''அது உண்மையல்ல, அது உண்மையல்ல... அவர் பொய் சொல்லுகிறார்... நட்டாஷா'' என்று அவள் மீண்டும் கதறினாள். அவளைச் சுற்றி நின்றவர்களைத் தள்ளினாள். ''எல்லாரும் தள்ளிப்

போங்கள். அது உண்மையல்ல; அவன் கொல்லப்பட்டானாம்! ...ஆ, ஆ, ஆ ... அது உண்மையல்ல''.

நட்டாஷா தன்னுடைய முழங்காலை அந்த சோபாவில் வைத்து தன்னுடைய தாயாரிடம் குனிந்து அவளைத் தழுவினாள். திடீரென்று ஏற்பட்ட எதிர்பாராத பலத்தினால் அவள் தாயாரைத் தூக்கி அவளுடைய முகத்தை தன்னுடைய முகத்திற்கு நேராகத் திருப்பி கட்டிக்கொண்டாள்.

''அம்மா... கண்ணே... நான் இங்கே இருக்கிறேன், என்று கண்மணியான அம்மா'' என்று அவள் மெதுவான குரலில் ஒரு வினாடி கூட விடாமல் சொல்லிக் கொண்டேயிருந்தாள்.

அவள் அவளுடைய தாயை தனது பிடியிலிருந்து விடவில்லை; மிருதுவாக அவளுடன் போராடிக்கொண்டேயிருந்தாள். ஒரு தலையணையைக் கொண்டுவரும்படி சொன்னாள். வெந்நீர் கொண்டு வரும்படி சொன்னாள். அவள் தாயாரின் மேல் சட்டைகளைக் கிழித்துக் கழற்றினாள்.

''எனது அன்பான கண்மணியே, அம்மா, எனது பொக்கிஷமே'' என்று அவள் விடாமல் சொல்லிக்கொண்டேயிருந்தாள். அவளுடைய தலையையும், கைகளையும், முகத்தையும் முத்திக்கொண்டேயிருந்தாள். தன்னுடைய தடுக்க முடியாத கண்ணீர், நாசி மீதும், கன்னங்கள் மீதும் ஓடிக்கொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள்.

கோமகள் தன்னுடைய குமாரியின் கையை அழுத்தினாள்; கண்களை மூடிக்கொண்டாள். ஒரு வினாடி அமைதியாக இருந்தாள். திடீரென்று வழக்கத்திற்கு விரோதமான வேகத்துடன் எழுந்து உட்கார்ந்தாள். தன்னைச் சுற்றிலும் உணர்ச்சியில்லாமல் வெறித்துப் பார்த்தாள். நட்டாஷாவைப் பார்த்ததும், அவளுடைய தலையை முழு வேகத்தோடு அழுத்தினாள். பின்னால் தன்னுடைய குமாரியின் முகத்தைப் பார்த்தாள். அந்த முகத்தில் துன்பத்தினால் சுருக்கங்கள் ஏற்பட்டிருந்தன. வெகுநேரம் அந்த முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''நட்டாஷா, என் மீது உனக்குப் பிரியம் உண்டா?'' என்று ஒரு மெதுவான நம்பிக்கையான குரலில் அவள் கேடடாள். ''நட்டாஷா, நீ என்னை ஏமாற்ற மாட்டாயே? நீ எனக்கு முழு உண்மையையும் சொல்லவேண்டும்.''

நட்டாஷா தன்னுடைய கண்களில் நீர் நிறைந்து நிற்க அவளைப் பார்த்தாள். அந்தத் தோற்றத்தில் அன்பையும் மன்னிப்புக் கோருவதையும் தவிர வேறு எதுவும் காணப்படவில்லை.

''என்னுடைய கண்மணியான அம்மா'' என்று அவள் மீண்டும் சொன்னாள். தன்னுடைய அன்பின் சக்தியைக் கொண்டு, தன்னுடைய தாயாரை அழுத்தி வரும் துன்பத்தின் சுமையை குறைத்து தான் ஏற்றுக்கொள்ளுவதற்கான வழியைக் கண்டுபிடிக்க முயற்சி செய்தாள்.

உண்மையான நிலைமையோடு வீணாகப் போராடுவதில் களைத்துப் போன அவளுடைய தாயார், தன்னுடைய அருமையான பையன் வாலிப வயதில் இறந்து போன பின்பு, தான் உயிர் வாழ முடியுமென்று நம்பவில்லை. ஆகவே இந்தக் காரியார்த்த உலகத்திலிருந்து சொப்பான உலகத்திற்கு அவள் போனாள். அதாவது ஜன்னியில் பேசுவதைப் போலப் பேச ஆரம்பித்தாள்.

அன்றை தினம் எப்படிக் கழிந்தது என்பதை நட்டாஷாவால் பின்னால் நினைவுகூர முடியவில்லை. மறுநாள் பகலோ, இரவோ எப்படிக் கழிந்தது என்பதையும் அவளால் பின்னால் நினைவுக்குக் கொண்டுவர முடியவில்லை. அவள் தூங்கவில்லை, அவளுடைய தாயாரிடமிருந்து பிரிந்து போகவுமில்லை. அவளுடைய அமைதியான பிடிவாதமான அன்பானது, அந்த கோமகளை ஒவ்வொரு வினாடியும் சுற்றிக் காப்பாற்றி வந்தது போலக் காணப்பட்டது. அந்த அன்பானது அவளுக்கு விளக்கம் கூறவோ ஆறுதல் சொல்லவோ செய்யாமல் அவளை வாழ்க்கைக்கு இழுத்து வந்தது.

மூன்றாவது இரவில் கோமகள் சில நிமிடங்களுக்கு அமைதியாய் இருந்தாள். நட்டாஷா தன்னுடைய தலையை அவளுடைய சோபாவின் கையில் சாய்த்துக் கண்களை மூடினாள். அங்கே கட்டிலின் கிரீச் சப்தம் கேட்டதும் திடீரென்று கண்களைத் திறந்தாள். கோமகள் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து மெதுவாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''நீ வந்ததைக் கண்டு நான் எவ்வளவு மகிழ்ச்சியடைகிறேன். நீ ரொம்ப களைப்போடு இருக்கிறாய். உனக்கு தேநீர் வேண்டுமா?'' என்று கேட்டாள். நட்டாஷா அவளிடம் போனாள்.

''நீ இப்போது பார்வைக்கு ரொம்ப அழகாய் இருக்கிறாய். நல்ல ஆண் மகனாய் வளர்ந்து விட்டாய்'' என்று கோமகள் தன்னுடைய குமாரியின் கையைப் பற்றி மேலும் பேசினாள்.

''அம்மா, நீ என்ன சொல்லுகிறாய்?...''

''நட்டாஷா, அவன் உயிரோடு இல்லை; உயிரோடு இல்லை.''

அவள் தன்னுடைய குமாரியைத் தழுவிக்கொண்டு, முதல் தடவையாக அழ ஆரம்பித்தாள்.

15

3

தன்னுடைய பிரயாணத்தை இளவரசி மேரி ஒத்தி வைத்தாள். நட்டாஷாவுக்குப் பதிலாக தாங்கள் கோமகளுக்குப் பக்கத்தில் இருந்து, அவளுக்கு ஆறுதல் கூற சோனியாவும் கோமகனும் விரும்பினார்கள். ஆனால் அவர்களால் முடியவில்லை. நட்டாஷாவால்தான் அவளுடைய தாயாரின் வியாகூலத்தை தடுத்து வைக்க முடியும் என்று அவர்கள் நினைத்தார்கள். மூன்று வாரங்களுக்கு தொடர்ச்சியாக தன்னுடைய தாயாரின் பக்கத்தில் நட்டாஷா இருந்து வந்தாள். அவளுடைய அறையில் அவளுக்குப் பக்கத்தில் சோபாவில்படுத்துத் தூங்குவதும், அவளை உண்ணவும் குடிக்கவும் செய்வதும், அவளிடம் விடாமல் பேசிக்கொண்டிருப்பதுமாக இருந்தாள். ஏனெனில் அவளுடைய இடைவிடா கனிவான, இதமான தொனிகள் அவளுடைய தாயாரை மணம் தேறும்படி செய்துவந்தன.

தாயாருக்கு ஏற்பட்ட மனப் புண்ணானது குணமடையவில்லை. பெட்டியாவின் மரணமானது, அவளுடைய உயிரில் பாதியை பிளந்துகொண்டு போய் விட்டது. பெட்டியாவின் மரணச் செய்தி வருகிற சமயத்தில், அவள் 50 வயதான ஒரு ஊக்கமும் உணர்ச்சியும் கொண்ட பெண்ணாய் காணப்பட்டாள். அந்த மரணச் செய்தி வந்து ஒரு மாதத்திற்கு அப்புறம், அவள் எதிலும் சிரத்தையில்லாத, வாழ்க்கையில் விருப்பமில்லாத ஒரு கிழவியாக மாறினாள். கோமகளின் உயிரை அநேகமாகக் கொன்றுவிட்ட அந்த அடியானது, நட்டாஷாவுக்கு ஏற்பட்ட இந்த இரண்டாவது அடியானது, நட்டாஷாவுக்கு மீண்டும் வாழ்க்கையில் பற்று கொள்ளும்படி செய்தது.

ஆத்மார்த்தீக உடலுக்கு ஏற்படும் ஆத்மார்த்தீக காயமானது, ஸ்தூல சரீரத்திற்கு ஏற்படும் ஸ்தூலமான காயத்தைப் போன்றது. ஒரு ஆழ்ந்த காயமானது குணமடைந்து, அதன் மேல் முனைகள் ஒன்று சேர்ந்து ஒட்டிக் கொள்ளலாம். என்றாலும் விசித்திரமான விஷயம் என்னவென்றால், உடலுக்குள்ளேயே ஜீவசக்தி தோன்றினால்தான் ஆத்மார்த்தீக காயமோ அல்லது சரீர காயமோ குணமடைய முடியும்.

அந்த விதமாகத்தான் நட்டாஷாவின் காயம் குணமடைந்தது. தன்னுடைய வாழ்க்கை முடிந்து விட்டதாக அவள் நினைத்து வந்தாள். ஆனால் எதிர்பாராத விதமாக தன்னுடைய தாயாரிடம் தனக்குள்ள அன்பு ஒரு விஷயத்தை வெளிப்படுத்தியது. அதாவது, வாழ்க்கையின் சாரமான அந்த அன்பானது, இன்னும் அவளிடம்

வேகமாக இருப்பதை அவள் உணர்ந்தாள். அன்பு விழித்தெழுகிறது. உடனே இதே மாதிரி வாழ்க்கையும் விழித்தெழுகிறது.

இளவரசர் ஆண்ட்ரூவின் கடைசி நாட்கள், இளவரசி மேரியையும் நட்டாஷாவையும் ஒன்றாய்ப் பிணைத்தன. இந்தப் புதிய துக்கமானது அவர்களை ஒருவரோடொருவர் இன்னும் அதிகமாய் நெருங்கும்படி செய்தது. இளவரசி மேரி தன்னுடைய பிரயாணத்தை ஒத்திப்போட்டாள். மூன்று வாரங்களாக நட்டாஷாவை, வியாதியுற்ற ஒரு குழந்தையைப் போல இளவரசி மேரி கவனித்து வந்தாள். சென்ற சில வாரங்களாக தன்னுடைய தாயாரின் படுக்கை அறையில் இருந்து தாயாரை கவனித்து வந்தபடியால் நட்டாஷாவின் சரீர சுகம் பாதிக்கப்பட்டது.

ஒரு நாள் மாலை ஜுரத்தினால் நட்டாஷா நடுங்கிக் கொண்டிருப்பதை இளவரசி மேரி கவனித்தாள். உடனே அவளை அவளுடைய படுக்கை அறைக்கு அழைத்துச் சென்று, படுக்கையில் படுக்கும்படி செய்தாள். நட்டாஷா கீழே படுத்தாள். ஜன்னல் திரைகளையெல்லாம் இழுத்து விட்டு விட்டு, இளவரசி மேரி அங்கிருந்து வெளியே புறப்பட்டாள். அச்சமயம் அவளை நட்டாஷா அழைத்தாள்.

''நான் தூங்க விரும்பவில்லை, மேரி எனது பக்கத்தில் கொஞ்சம் உட்காரு''.

''நீ களைத்துப் போயிருக்கிறாய் - தூங்குவதற்கு முயற்சி செய்''.

''இல்லை, இல்லை, நீ எதற்காக என்னை அங்கிருந்து அழைத்து வந்தாய்? அவள் என்னைத் தேடிக்கொண்டிருப்பாள்''.

''அவள் இப்பொழுது மிகவும் நன்றாய் இருக்கிறாள். இன்று நன்றாக பேசினாள்'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

படுக்கையில் படுத்திருந்த நட்டாஷா, அந்த அறையிலுள்ள பாதி இருட்டு வெளிச்சத்தில் இளவரசி மேரியின் முகத்தைக் கவனித்தாள்.

''அவள் அவர் மாதிரியே இருக்கிறாளா'' என்று நட்டாஷா நினைத்தாள். ''ஆம், அவர் மாதிரியே இருக்கிறாள். என்றாலும் அவர் மாதிரி இல்லாமலும் இருக்கிறாள். அவள் முற்றிலும் தனியான விதமாக, விசித்திரமாக, புதிதாக ஒருவரும் அறிய முடியாத விதமாக இருக்கிறாள். அவள் என் மீது பிரியமாய் இருக்கிறாள். அவளுடைய உள்ளத்தில் என்ன இருக்கிறது? நன்மையானவைகள் எல்லாம் அவள் உள்ளத்தில் இருக்கின்றன. ஆனால் எப்படி? அவளுடைய மனம் எம்மாதிரி இருக்கிறது? அவள் என்னைப்பற்றி என்ன நினைக்கிறாள்? ஆம், அவள் ரொம்ப சிலாக்கியமானவள்!''

''மேரி'' என்று அவள், தயக்கத்தோடு இளவரசி மேரியின் கையை தன்னிடம் இழுத்துக் கொண்டு பேசினாள். ''மேரி, நீ நான் கெட்டவள் என்று நினைக்கக்கூடாது. இல்லையா? மேரி, கண்மணியே, உன் மீது நான் எவ்வளவு பிரியமாயிருக்கிறேன்! நாம் முற்றிலும் முழு நண்பர்களாயிருப்போம்.''

நட்டாஷா அவளைத் தவிர, அவளுடைய முகத்தையும் கைகளையும் முத்தமிட ஆரம்பித்தாள். இளவரசி மேரிக்கு வெட்கமாயிருந்தது. ஆனால் இம்மாதிரி அவளுடைய உணர்ச்சிகளைக் காட்டுவதைக் கண்டு அவள் மகிழ்ச்சி கொண்டாள்.

அந்த நாளிலிருந்து இளவரசி மேரிக்கும் நட்டாஷாவுக்கு ஒரு கனிவான, பரவசமான நட்பு ஏற்பட்டது. பெண்களுக்குள் மட்டும் எம்மாதிரி நட்பு ஏற்பட முடியுமோ, அதே மாதிரி நட்பு தோன்றியது. அவர்களிருவரும் ஒருவரையொருவர் விடாமல் முத்தமிட்டுக் கொண்டும், கனிவான வார்த்தைகளைப் பேசிக்கொண்டும், இருவரும் அநேகமாய் தனித்தே இருந்து வந்தார்கள். இருவரில் ஒருவள் எங்காவது போனால், உடனே மற்றவள் மன அமைதியற்று, அவளைத் தேடிப்போய்ச் சேர்ந்து கொள்ளுவாள். தனிமையாக இருப்பதைவிட இருவரும் சேர்ந்திருப்பதிலேயே அமைதி கொள்ளுவதாக அவர்கள் உணர்ந்தார்கள். சிநேகத்தைவிட அதிக பலமுள்ளதான ஒரு உணர்ச்சி அவர்களுக்குள் ஏற்பட்டது. அதாவது, ஒருவரோடு மற்றவர் சேர்ந்திருந்தால்தான் அவர்கள் வாழ முடியும் என்பதைப் போன்ற ஒரு உணர்ச்சி அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது.

சில வேளைகளில், மணிக்கணக்காக, அவர்கள் மௌனமாக இருப்பார்கள். சில வேளைகளில், படுக்கையில் படுத்துக்கொண்ட பின்பும்கூட, விடிகிற விரையில் பேசிக்கொண்டே இருப்பார்கள். அநேகமாக கடந்த காலத்தைப் பற்றியே அவர்கள் பேசுவார்கள். தனது குழந்தைப் பருவத்தைப் பற்றியும், தனது தாயாரைப் பற்றியும், தந்தையைப் பற்றியும், தன்னுடைய பகற் கனவுகளைப் பற்றியும் இளரவசி மேரி பேசினாள். முன்பெல்லாம் பக்தியிலும், பணிவிலும், கிறிஸ்துவ தரும சுயநலத் தியாகத்திலும் பற்றுக் கொள்ளாமல், அவற்றைப் புரிந்துகொள்ளாமல் அவற்றின் மீது நோட்டம் கொள்ளாமல் நட்டாஷா இருந்தாள். இப்பொழுது இளவரசி மேரியோடு அன்பினால் பிணைக்கப்பட்டிருப்பதாக அவள் கருதி வந்தபடியால், அவளுடைய கடந்த காலத்தைப் பற்றியும்கூட அன்பு கொள்ள ஆரம்பித்தாள். முன்பெல்லாம் அவளுக்கு புரியாததாக இருந்த வாழ்க்கையின் மற்றொரு பகுதியை, அவள் இப்பொழுது புரிந்துகொள்ள ஆரம்பித்தாள். பணிவையும், சுயநலத் தியாகத்தையும், தன்னுடைய சொந்த வாழ்க்கையில்

கொண்டு வருவதைப்பற்றி அவள் நினைக்கவில்லை. ஏனெனில், வேறு விதமான மகிழ்ச்சிகளிலேயே அவள் பழகிப்போயிருந்தாள். ஆனால் முன்னால் அவளுக்குப் புரியாத தருமங்கள் எல்லாம் இப்பொழுது மற்றொருவரிடம் இருப்பதை அவள் அறிந்து, அவற்றின் மீது அன்பு கொண்டாள். நட்டாஷாவின் குழந்தைப் பருவக் கதைகளையும் வாலிபப்பருவக் கதைகளையும் இளவரசி மேரி கவனித்துக் கேட்டபொழுது, இதுவரை அவளுக்குப் புரியாமல் இருந்த வாழ்க்கையின் மற்றொரு பகுதியை அவள் புதிதாக அறிந்து கொள்ள ஆரம்பித்தாள். அதாவது, வாழ்க்கையிலும், அதை அனுபவித்திலும் அவளுக்குச் சிரத்தை ஏற்பட்டது.

முன்போலவே அவர்கள் 'அவருடைய' பேச்சைப் பற்றி பிரஸ்தாபிப்பதேயில்லை. அவர்களுடைய உயரிய நினைப்புகளை வார்த்தைகளினால் வெளியிடுவது, அவருடைய கௌரவத்திற்கு ஒத்ததாக இருக்காதென்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் அவரைப்பற்றி பேசாமல் மௌனமாயிருந்து வந்ததின் மூலம், அவர்களை அறியாமலேயே மெதுவாக அவரை மறந்து வர ஆரம்பித்தார்கள்.

நட்டாஷா மெலிந்து வெளிறி பலம்குன்றி காணப்பட்டாள். எல்லாரும் அவளுடைய தேக சௌக்கியத்தைப் பற்றியே பேசினார்கள். இம்மாதிரி பேச்சு அவளுக்கு இனிமையாக இருந்தது. சில சமயங்களில் திடீரென்று அவளுக்கப் பீதி ஏற்படுவதுண்டு. அது மரணத்தைப் பற்றிய பீதி மட்டும் அல்ல; தன்னுடைய வியாதியைப் பற்றியும், பலவீனத்தைப் பற்றியும் அவற்றால் தன்னுடைய லட்சணங்கள் குறைவது பற்றியும் அவள் பீதி கொள்வதுண்டு. தன்னுடைய வெறும் கைகளைத் தன்னையறியாமலேயே அவள் பார்த்தபோது, அவை மெலிந்திருப்பதைப் பார்த்து ஆச்சரியம் கொண்டாள். காலை வேளையில் அவள் அவளுடைய முகத்தைக் கண்ணாடியில் பார்த்தபோது, அது நீளமாகவும் பரிதாபமாகவும் இருப்பதுபோல அவளுக்குத் தோன்றியது. அம்மாதிரிதான் இருக்க முடியுமென்று அவளுக்குத் தோன்றியது. என்றாலும், அது மிகவும் துக்கமாய் இருந்தது.

ஒரு நாள் வேகமாக மெத்தைப் படிகளில் ஏறிப் போனபோது, தனக்கு மூச்சு முட்டுவதைக் கவனித்தாள். உடனே கீழே போவதற்கு ஒரு காரணத்தைக் கண்டு பிடித்து, கீழே ஓடினாள். அதன் பின்னால் தன்னுடைய பலத்தை சோதிப்பதற்காக, மீண்டும் மெத்தைப் படிகளில் ஏறி ஓடினாள். அதனால் ஏற்பட்ட பலனை கவனித்தாள்.

மற்றொரு தடவை டுனியாஷாவை அவள் அழைத்தபோது, அவளுடைய குரல் நடுங்கியது. டுனியாஷா சமீபத்தில் வருவது

அவளுக்கு காதில் கேட்டபோதிலும், மீண்டும் அவள் அவளுடைய பாட்டுப் பாடும் ஆழ்ந்த குரலில் அழைத்தாள். அந்த குரல் எப்படி இருக்கிறதென்பதை உன்னிப்பாய் கவனித்தாள்.

ஒரு விஷயம் அவளுக்குத் தெரியாது. சொன்னாலும் அதை அவள் நம்பியிருக்க மாட்டாள். அவளுடைய உள்ளத்தை மூடி நிற்கும் இடத்தில் ஒன்றும் முளைக்காது என்று அவள் நினைத்து வந்தாள். அங்கே இப்பொழுது மிருதுவான, பசுமையான புற்கள் துளிர்விட்டு வளருவதைக் கண்டாள். அவை வேர் விட்டு, தங்களுடைய உயிர் துடிப்புள்ள பசுமையினால் அவளை அழுத்தி வந்த துன்பதை மூடி மறைத்து விடும் என்பதைக் கண்டாள். அந்த துன்பத்தை இனி ஒருவரும் பார்க்க முடியாதபடி அவை படர்ந்து விடும். அவளுக்கு ஏற்பட்ட காயமானது உள்ளிருந்தே குணமடைய ஆரம்பித்தது.

ஜனவரி மாதக் கடைசியில் மாஸ்கோவிற்கு இளவரசி மேரி புறப்பட்டாள். மாஸ்கோவிலுள்ள டாக்டர்களிடம் கலந்து ஆலோசிப்பதற்காக நட்டாஷாவும் அவளுடன் போகவேண்டும் என்று கோமகள் வற்புறுத்தினார்.

# 15

## 4

எதிரிகளைத் தாக்கி வெற்றி பெறுவதற்கும், அவர்களைத் துண்டாடுவதற்காகவும் துடித்துக் கொண்டிருந்த நமது துருப்புகளை குட்டுஜோவினால் வியாஜ்மாவில் நிறுத்தி வைக்க முடியவில்லை. அதன் பலனாக வியாஜ்மாவில் ஏற்பட்ட போருக்குப் பின்னால், பிரெஞ்சுக்காரர்கள் ஓடிக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பின் தொடர்ந்து ருஷ்யர்களும் போனார்கள். இந்த விதமாக வேறு போர் எதுவுமில்லாமல் கிராஸ்னோ வரையில் நடந்து கொண்டிருந்தது. பிரெஞ்சுக்காரர்கள் ஓடிப்போவது மிகுந்த வேகமாய் உள்ளதாய் இருந்தபடியால், ருஷ்ய ராணுவத்தால் அவர்களை நெருங்கி தொடர்ந்து போவதற்கு முடியாமல் இருந்தது. பீரங்கிப் படைகளையும் குதிரைப் படைகளையும் சேர்ந்த குதிரைகள் களைப்புற்றுப் போயின. தவிரவும் பிரெஞ்சுப் படையின் நடமாட்டங்களைப்பற்றி வந்துகொண்டிருந்த செய்திகள் எப்போதுமே நம்பிக்கையானவையாக இல்லை.

நாள் ஒன்றுக்கு 27 மைல் வீதம் போய்க் கொண்டிருந்தபடியால் ருஷ்ய ராணுவத்திலிருந்த வீரர்கள் மிகுந்த களைப்படைந்து போனார்கள். அதைவிட வேகமாக அவர்களால் போக முடியவில்லை.

ருஷ்ய ராணுவம் எவ்வளவு தூரம் களைப்படைந்து போய் இருக்கிறது என்பதைக் காட்டுவதற்கு ஒரு உதாரணம் போதுமானது. டாருடினா போருக்குப் பின்னால் ஐயாயிரம் வீரர்கள் காய மடைந்தும் மாண்டும் போனார்கள். நூறு பேர்களுக்கும் குறை வாகத்தான் கைதிகளாகப் பிடிபட்டார்கள். அந்த ருஷ்ய ராணுவம் அந்த இடத்தை விட்டுப் புறப்படும்போது, ஒரு லட்சம் வீரர்களைக் கொண்டதாய் இருந்தது. கிராஸ்னோவுக்கு அது வந்து சேரும்போது, அந்தப் படையில் ஐம்பதினாயிரம் பேர்தான் இருந்தார்கள்.

பிரெஞ்சுக்கார்கள் ஓடிக்கொண்டிருப்பதனால் அவர்களுக்கு எவ்வளவு நஷ்டம் ஏற்பட்டதோ, அதேமாதிரி அவர்களை வேகமாக விரட்டிக் கொண்டு போகும் ருஷ்ய ராணுவத்திற்கும் அதே விதமாக நஷ்டம் ஏற்பட்டு வந்தது. ஒரே ஒரு வித்தியாசம். அதாவது, ருஷ்ய ராணுவம் தானாகவே பின்னால் துரத்திக்கொண்டு சென்றது. தனக்குப் பின்னால் அதை ஒருவரும் விரட்டிக் கொண்டு வரவில்லை. ஆனால் பிரெஞ்சு ராணுவம் அம்மாதிரி இல்லை. அதை ருஷ்ய ராணுவம் விரட்டிக் கொண்டிருந்தது. அதனால் நோயாளிகளான பிரெஞ்சுக்காரர்கள் பின் தங்கும் போது எதிரிகளிடம் அகப்படும்படியாய் இருந்தது. ருஷ்யர்களுக்கோ என்றால் அவர்கள் தங்களுடைய துருப்புகளிலுள்ள நோயாளிகளானவர்களை தங்களுடைய மக்களிடமே விட்டு வந்தார்கள். நெப்போலியனுடைய ராணுவத்திற்கு ஏற்பட்ட நஷ்டத்திற்கு பிரதான காரணம், அதன் ஓட்டம் கடுமையாய் இருந்ததே ஆகும். இதற்கு ஆதாரமாக ருஷ்ய ராணுவத்திலும் அதே மாதிரி ஏற்பட்ட நஷ்டங்களைக் காட்டலாம்.

தம்மால் முடிந்தவரையில் பிரெஞ்சுக்காரர்கள் ஓடுவதைத் தடுக்காமல் அவர்களின் ஓட்டத்தை அதிகரிக்கும் விதத்திலும் தம்முடைய ராணுவத்தின் வேகத்தை குறைக்கிற விதத்திலும் டாருடினாலும் வியாஜ்மாவிலும் அவர் செய்ததைப் போல குட்டுஜோவ் இப்பொழுதும் செய்து வந்தார். ஆனால் பீட்டஸ்பர்க்கில் உள்ளவர்களும் ருஷ்ய ஜெனரல்களும் பிரெஞ்சு ராணுவத்தைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்று விரும்பினார்கள்.

இதைத் தவிர, ராணுவம் வேகமாக முன்னேறுவதினால் அதற்கு ஏற்படும் களைப்பும், அதனால் அது எண்ணிக்கையில் குறைந்து வருவதும் வெளிப்படையாகத் தெரிய ஆரம்பித்தன. முன்னேறு வதைத் தாமதப்படுத்த வேண்டுமென்று குட்டுஜோவ் விரும்பி யதற்கு இது ஒரு காரணம். ருஷ்ய ராணுவத்தின் நோக்கமானது பிரெஞ்சுக்காரர்களை விரட்டிக் கொண்டு போவதேயாகும். பிரெஞ்சுக்காரர்கள் எந்த ரஸ்தா வழியாகப் போவார்கள் என்பது

முன்னதாகத் தெரியாமல் இருந்தது. நமது துருப்புகள் அவர்களை நெருங்கிப் போய்க் கொண்டிருந்தபடியால், அதிகமான தூரத்தை அவை கடக்க வேண்டியதாய் இருந்தது. சிறிது தூரத்திற்குப் பின்னால் போய்க் கொண்டு இருந்தால்தான், பிரெஞ்சுக்காரர்களைப் போல வளைந்து வளைந்து போகாமல் குறுக்கு வழியாகப் போக முடியும். நமது ஜெனரல்கள் சொல்லிய சாமர்த்தியமான ராணுவ ஏற்பாடுகள் எல்லாம் நமது ராணுவத்திற்கு புதிதான வேலை களையும் நீளமான பிரயாணங்களையுமே கொடுப்பதாய் இருக்கும். ஆனால் பிரயாண நீளத்தை குறைப்பது ஒன்றுதான் நியாயமான நோக்கமாய்க் காணப்பட்டது. அந்த நோக்கத்தைக் கொண்டு குட்டு ஜோவ் அந்த ராணுவ நடமாட்டம் முழுவதையும் மாஸ்கோவி லிருந்து வில்னா வரையில் நடத்தி வந்தார். இதை தற்செயலாகவோ இடையிடையோ நடத்தி வரவில்லை. தொடர்ச்சியாக ஒரு இடத்தில் கூட தவறாதபடி அவர் நடத்தி வந்தார்.

குட்டுஜோவ் ஒரு விஷயத்தை உணர்ந்து அறிந்தார். அவர் தர்க்கங்களினாலோ, அல்லது ராணுவ சாஸ்திரங்களினாலோ இதை அறியவில்லை. அவர் முழுவதும் ருஷ்யராய் இருந்தபடியால், அந்த உணர்ச்சியினால் அதை அறிந்தார். மற்ற ருஷ்ய சிப்பாய்கள் எம்மாதிரி அறிவார்களோ, அதே மாதிரி அவரும் அறிந்தார். அதாவது பிரெஞ்சுக்காரர்கள் தோற்கடிக்கப் பட்டார்கள் என்பதையும், பிரெஞ்சுக்காரர்கள் ஓடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும், அவர்களை விரட்டியடிக்க வேண்டுமென்பதையும், ஒவ்வொரு ருஷ்ய சிப்பாயும் உணர்ந்ததைப்போல அவரும் உணர்ந்தார். ஆனால் அதே சமயத்தில் சிப்பாய்களைப் போலவே அவருமே அந்தப் பிரயாணத்தினால் ஏற்படுகிற கஷ்டங்களை உணர்ந்தார். அந்தக்கால நிலையில் அவ்வளவு வேகமாக பிரயாணம் செய்தது, இதற்கு முன்னால் எங்குமே காணப்படாத விதமாய் இருந்தது.

ருஷ்ய ராணுவத்திலுள்ள ஜெனரல்களும், முக்கியமாக தாங்கள் பிரபலமாக வேண்டுமென்று விரும்பிய வெளிநாட்டு ஜெனரல்களுக்கு, எல்லாருக்கும் மலைப்பைக் கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு, ஒரு மன்னரையோ, அல்லது கோமகனையோ கைதுசெய்ய வேண்டுமென்ற நினைப்புள்ள அந்த ஜெனரல்களுக்கு, இப்போது ஒரு நினைப்புத் தோன்றியது. அதாவது, அந்த சமயத்தில், போர் செய்வது என்பது பயங்கரமாகவும் புத்தியற்றதாகவும் இருக்கக்கூடிய இந்த சமயத்தில், யாரிடமாவது சண்டை போட்டு வெற்றி பெறுவதற்கு இதுதான் சரியான காலமென்று தோன்றியது.

குட்டுஜோவ், ஒவ்வொருவரும் தம்மிடம் வந்து ராணுவ நடவடிக்கைகளைப் பற்றிச் சொல்லும்போது, தமது தோள்களைக்

குலுக்கிக்கொள்வார். அச்சமயம் சிப்பாய்கள் சரியான உடைகள் இல்லாமலும், பசியாலும் வருந்தி வந்தார்கள். ஒரு மாதத்திற் குள்ளாக ஒரு போர் கூடச் செய்யாமல் எண்ணிக்கையில் பாதியாக அவர்கள் குறைந்து போனார்கள். பிரெஞ்சுக்காரர்கள் தொடர்ந்து ஓடிக் கொண்டிருப்பார்களானால், அவர்களை விரட்டிக் கொண்டு ருஷ்யாவின் எல்லையை அடைவதற்கு இன்னும் வெகு தூரம் போக வேண்டியதிருக்கும். அவர்கள் இதுவரை கடந்து வந்த தூத்தைவிட எவ்வளவோ அதிகமாக போகவேண்டியதிருக்கும். அப்பேர்ப்பட்ட சிப்பாய்களைக் கொண்டு புதிதாக ராணுவ நடவடிக்கைகளை நடத்த வேண்டும் என்று சிலர் சொல்லுவதை கேட்கும்போதுதான் குட்டு ஜோவ் தமது தோள்களை குலுக்குவார்.

ராணுவ நடவடிக்கைகளினாலும், எதிரிகளைத் தோற்கடிப் பதனாலும், எதிரிகளைத் துண்டுபடுத்துவதினாலும் தாங்கள் பிரபலமாக வேண்டுமென்று விரும்பிய அந்த ஜெனரல்கள், அந்தப் பிரெஞ்சு ராணுவத்தை ருஷ்ய ராணுவம் எப்போது நெருங்கினாலும் சில காரியங்கள் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தி வந்தார்கள்.

கிராஸ்னோவில் அம்மாதிரியே நடந்தது. ருஷ்ய ராணுவத்தின் மூன்று பகுதிகளில் ஒன்றே அங்கே கண்டு பிடிக்கலாம் என்று அவர்கள் நினைத்தார்கள். அதற்கு பதிலாக அவர்கள் நெப்போலியனையும், அவருடன் இருந்த பதினாராயிரம் வீரர்களையும் சந்தித்தார்கள். அவர்களிடம் போர் செய்ய வேண்டாமென்றும் அந்தப் போரினால் நமது துருப்புகளுக்கு ஏற்படும் நஷ்டத்தை தவிர்க்க வேண்டுமென்று குட்டுஜோவ் எவ்வளவுதான் முயற்சி செய்த போதிலும், கிராஸ்னோவில் நிலை குலைந்த பிரெஞ்சு சிப்பாய்கள், களைப்படைந்த ருஷ்யர்கள் மூன்று நாட்கள் படுகொலை செய்து வந்தார்கள். அப்போது நடந்த போர் முறையைப் பற்றி டால் என்பவர் பின்வருமாறு எழுதினார். அதாவது, ''முதலாவது பிரிவு இன்னின்ன விதமாக மேலே மார்ச் செய்ய வேண்டும்'' என்று எழுதினார். ஆனால் வழக்கம்போல ஏற்கெனவே செய்த திட்டப்படி எதுவும் நடக்கவில்லை. உர்ட்டெம்பர்க்கின் இளவரசரான யுஜென் என்பவர் ஒரு குன்றின் மீது நின்றுகொண்டு கீழே ஓடிக் கொண்டிருந்த பிரெஞ்சுக் கூட்டங்களை பார்த்துச் சுடுவதற்கு உத்தரவிட்டார். அவர் தமக்கு உதவியாக மேலும் துருப்பு வேண்டுமென்று கேட்டனுப்பினார். ஆனால் அந்த உதவித் துருப்புகள் வந்து சேரவில்லை. பிரெஞ்சுக்காரர்கள் ருஷ்யர்களைத் தவிர்த்து விட்டு, அந்தக் காட்டில் அந்த இரவில் மறைந்து, அவர்களால் கூடிய வரையில் தொடர்ந்து ஓடிக் கொண்டே இருந்தார்கள்.

மிலாராடாவிச் என்பவர், தமது படைக்கு வேண்டிய சப்ளை விஷயத்தைப் பற்றி தமக்கு எதுவும் கவலையில்லை என்று சொன்னார். அவசியமான சமயத்தில் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. தம்மை யாரும் குறைகூற முடியாது என்றும், அவர் தான் பயம் என்பதையே அறியாத ஒருவீரர் என்றும் அவர் தம்மைச் சொல்லிக் கொண்டார். பிரெஞ்சுக்காரர்களோடு சமாதானம் பேச வேண்டுமென்று விரும்பியவர். அவர்தான் பிரெஞ்சுக்காரர்களை சரணடையும்படி கேட்டு, தூதர்களை அனுப்பினார். அம்மாதிரி அவர் காலத்தை வீணாக்கினாரேயொழிய, அவருக்குக் கொடுக்கப் பட்ட உத்தரவுப்படி அவர் எதுவும் செய்யவில்லை.

''வாலிபர்களே, அந்தப் படையை உங்களுக்குக் கொடுக் கிறேன்'' என்று அவர் சொல்லி, பிரெஞ்சுக்காரர்களை தம்முடைய குதிரைப்படை வீரர்களுக்குச் சுட்டிக் காட்டினார்.

அந்தக் குதிரைப்படை வீரர்கள் உடனே தா ச் சக்கரங்களாலும் உடைவாள்களாலும் குதிரைகளைத் தட்டிவ் ட்டு துரிதப்படுத் தினார்கள். ஆனால் அந்தக் குதிரைகளால் வேகமாக ஓட முடிய வில்லை. பசியினாலும் குளிரினாலும் அடிபட்ட அந்தப் பிரெஞ்சுக் கூட்டத்தை நோக்கி அவை பொய்க் கொண்டிருந்தன. அந்தக் கூட்ட மானது உடனே தங்களுடைய ஆயுதங்களைக் கீழே எறிந்து விட்டு சரண் அடைந்தது, அம்மாதிரி சரண் அடைவதற்கு வெகுகாலமாக அது ஆவலோடு காத்துக் கொண்டிருந்தது.

கிராஸ்னோவில் அவர்கள் இருபத்தாறாயிரம் கைதிகளையும், நூற்றுக் கணக்கான பீரங்கிகளையும், ஒரு மார்ஷலின் கைத்தடியையும் கைப்பற்றினார்கள். அந்தக் காரியத்திற்கு யார் காரணம் என்பதைப் பற்றி அவர்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டார்கள். அந்தக் காரியம் நிறைவேறியதைப் பற்றி அவர்கள் மகிழ்ச்சி கொண்டார்கள். நெப்போலியனை சிறை பிடிக்காததற்காக அவர்கள் மிகவும் வருந்தினார்கள். ஒரு மார்ஷலையாவது அல்லது அவரைப்போன்ற ஒருவரையாவது பிடிக்க முடியாமல் போய் விட்டதே என்பதற்காக, ஒருவரையொருவர் குறை கூறிக் கொண்டார்கள். முக்கியமாக, அம்மாதிரி செய்யாமல் இருந்த தற்காக குட்டு ஜோவைக் குறை கூறினார்கள்.

இந்த மனிதர்கள் தங்களுடைய மனக் கிளர்ச்சிகளினால் தலை கிரங்கியவர்கள், அவசியம் என்ற மிகுந்த வியாகூலமான சட்டத்திற்கு இவர்கள் எல்லாரும் கண்ணற்ற ஆயுதங்களாகும். என்றாலும், இவர்கள் தங்களை வீரர்கள் என்றும், ஒரு சிலாக்கியமான, கண்ணியமும் கௌரவமும் உள்ள ஒன்றை சாதித்துக் கொண்டிருப்பதாகவும் நினைத்து வந்தார்கள். அவர்கள்

குட்டுஜோவைக் குறை கூறினார்கள். நெப்போலியனை இவர்கள் தோற்கடிக்க விடதமல் போர் ஆரம்பத்திலிருந்து குட்டுஜோவ்தான் தடுத்து வந்ததாகக் கூறினார்கள்; பெண்களின் கூட்டத்தில் அவர் சௌக்கியமாக இருந்து வருவதால், முன்னோக்கிப் போவதற்கு பிரியமில்லாமல் குட்டுஜோவ் இருந்ததாகக் கூறினார்கள்; கிராஸ்னோவில் நெப்போலியன் இருப்பதாக அறிந்ததும் குட்டுஜோவ் நிலை தவறி நமது துருப்புகளை முன்னேற விடாமல் தடுத்து விட்டதாக கூறினார்கள்; நெப்போலியனுடன் குட்டுஜோவ் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கலாம் என்றும், நெப்போலியன் அவருக்கு லஞ்சம் கொடுத்திருக்கலாம் என்றும், இன்னும் பலவிதமாகவும் பேசினார்கள்.

குட்டுஜோவ் வாழ்ந்து வந்த காலத்தில் உயிரோடு இருந்தவர்கள்தான் ஏதோ உள்ளக் கிளர்ச்சி கொண்டு இம்மாதிரி பேசினார்கள் என்பது இல்லை; பின்னால் வந்த சந்ததிகளும் நெப்போலியனை 'பிரமாதம்' என்று வருணித்து வந்தார்கள். அதே சமயத்தில் குட்டுஜோவை வெளி நாட்டார்கள் ஒரு தந்திரமான, உறுதியில்லாத, முதிய ராஜசபை தூதர் என்று வருணித்தார்கள்; அதே சமயத்தில் ருஷ்யர்கள் தெளிவற்ற விதமாக ஏதோ ஒரு பொம்மையைப் போல அவர் இருந்ததாக வருணித்தார்கள்; அதே சமயத்தில் அவருக்கு ருஷ்யப் பெயர் இருந்தபடியால், அதனால் அவர் உபயோகமாக இருந்ததாகவும் வருணித்தார்கள்.

# 15

## 5

குட்டுஜோவ் குளறுபடி செய்து விட்டாரென்று பகிரங்கமாக 1812-ஆம் வருஷத்திலும், 1813 ஆம் வருஷத்திலும் குற்றஞ்சாட்டி வந்தார்கள். சக்கரவர்த்தி அவர் மீது அதிருப்திக் கொண்டிருந்தார். உயர்தர அதிகார பீடத்தில் உத்தரவின் மீது சமீபத்தில் எழுதப்பட்ட ஒரு சரித்திர புத்தகத்தில் குட்டுஜோவை தாக்கி எழுதியிருந்தார்கள். அவர் ராஜ சபையைச் சேர்ந்த ஒரு தந்திரமான பொய்யரென்றும், நெப்போலியனின் பெயரைக் கேட்டு நடுங்கிப்போனாரென்றும், கிராஸ்னோவிலும் பெரியோஜினாவிலும் அவர் செய்த குளறுபடியினால்தான், பிரெஞ்சுக்காரர்களைப் பூர்ணமாக தோற்கடித்து ருஷ்ய ராணுவம் பெற வேண்டிய பெருமையை இழந்து விட்டாரென்றும், அந்தப் புத்தகத்தில் எழுதியிருந்தார்கள். பெரிய மனிதர்கள் என்று ரஷ்யர்களால் நினைக்கப்படாதவர்களின் விதி அதுவாய் இருந்தது; பரம்பொருளின் விருப்பத்தை அறிந்து, தங்களுடைய சொந்த

விருப்பங்களை அவற்றிற்கு உட்படுத்திய அபூர்வமான, எப்பொழுதும் தனித்திருக்கும் பேர்வழிகளின் விதி அதுவாய் இருந்தது. பரம்பொருளின் விருப்பத்தை அறிந்து அவர்கள் நடந்ததால், பொதுமக்கள் தங்களுடைய துவேஷத்தினாலும் இகழ்ச்சியினாலும் அவர்களைத் தண்டித்தார்கள்.

சரித்திரத்தில் மிகுந்த அற்பமான ஆயுதமாக விளங்கிய நெப்போலியனை, எந்த இடத்திலும், நாடு கடத்தப்பட்ட இடத்திலும்கூட, மனித கண்ணியத்தைக் காட்டாமலிருந்த அந்த நெப்போலியனை உற்சாகத்தோடு புகழ்ந்து, அவர் மகா பெரியவரென்று ருஷ்ய சரித்திரக்காரர்கள் எழுதியது, விசித்திர மாகவும் கொடூரமாகவும் இருக்கிறது, அவரை 'பிரமாதம்' என்றும் சொன்னார்கள். ஆனால் குட்டுஜோவ் - ஆரம்பத்திலிருந்து 1812 ஆம் வருஷத்தில் அவருடைய வேலைகள் முடிவடைகிறவரையில்-ஒரு தடவை கூட பாராடினோவிலிருந்து வில்னா வரையில் சுயநலத் தியாகத்தை செய்து காட்டவில்லையென்றும், அப்பொழுது நடந்து கொண்டிருந்தவைகளில். எதிர்கால முக்கியத்துவம் எம்மாதிரி இருக்கும் என்பதை, அறிந்தவராயில்லையென்றும், அந்த சரித்திரக்காரர்களால் சொல்லப்பட்டார். குட்டுஜோவ் அவர்களுக்கு ஒரு நிச்சயமில்லாத பரிதாபகரமான ஆசாமியாகவே தோன்றினார். 1812-ஆம் வருஷத்தைப் பற்றியும், அச்சமயம் குட்டுஜோவ் செய்த நடவடிக்கைகளைப் பற்றியும் அவர்கள் பேசும்போதெல்லாம், சிறிது வெட்கத்துடனேயே பேசுவதாகக் காணப்பட்டார்கள்.

என்றாலும் ஒரே நோக்கத்தோடு விடாமல் தமது வேலைகளைச் செய்து வந்த வேறு ஒரு சரித்திர முக்கியஸ்தரை கண்டுபிடிப்பது கஷ்டமாகும். அதேமாதிரி மக்களுடைய விருப்பத்திற்கும் பெருமைக்கும் தக்கதான வேறொரு நோக்கத்தை யூகிப்பதும் கஷ்டமாகும். 1812-ஆம் வருஷத்தில் குட்டுஜோவ் எந்த நோக்கத் தோடு வேலை செய்தாரோ அது பூரணமாக கைகூடியது. அதே மாதிரி ஒரு நோக்கத்தைப்பூரணமாக அடைந்த வேறு ஒருவரை சரித்திரத்தில் காண்பதும் கஷ்டமாய் இருக்கும்.

'நாற்பது நூற்றாண்டுகள் பைராமிட்டிலிருந்து தம்மை நோக்குவதாக' குட்டுஜோவ் எப்பொழுதும் பேசியதில்லை; அல்லது தந்தை நாட்டிற்காக தம்முடைய தியாகங்களைப் பற்றியும் அவர் பேசுவதில்லை; அல்லது தாம் எதை செய்து முடித்தார் என்பதைப் பற்றியோ, எதை செய்து முடிக்கப் போகிறார் என்பதைப் பற்றியோ அவர் பேசுவதில்லை. பொதுவாக தம்மைப் பற்றி அவர் எதுவுமே சொல்லுவதில்லை. எந்த விதமான தோரணையையும் மேற்கொள்வதில்லை. எப்பொழுதுமே ஒரு சாதாரண மனிதராகவே அவர் காணப்பட்டார்; சாதாரணமான, எளிமையான காரணங்

களையே அவர் பேசி வந்தார். அவர் தமது குமாரிகளுக்கும், திருமதி டி.ஸ்டாலுக்கும் கடிதங்கள் எழுதி வந்தார். நாவல்களை படித்து வந்தார். அழகான பெண்களுடன் பழகுவதில் பிரியம் கொண்டிருந்தார். ஜெனரல்களுடனும் அதிகாரிகளுடனும் சிப்பாய்களுடனும் தமாஷாகப் பழகி வந்தார். எதையாவது ஒன்றை நிரூபிப்பதற்கு யாராவது அவரிடம் முயற்சி செய்தால், அவர் அதை மறுப்பதேயில்லை. யாவுஜாபாலாத்திற்குப் பக்கத்திலிருந்த குட்டுஜோவிடம் கோமகன் ராஸ்டாப்சைன் நெருங்கி, மாஸ்கோவின் அழிவிற்கு அவர்தான் காரணம் என்று குற்றஞ்சாட்டி, அவரைப் பார்த்து ''போர் செய்யாமல் மாஸ்கோவை கைவிடப் போவதில்லையென்று நீர் கொடுத்த வாக்குறுதி என்னவாயிற்று?'' என்று கேட்டார். அச்சமயம் குட்டுஜோவ், ''போர் இல்லாமல் மாஸ்கோவை நான் கைவிடமாட்டேன்'' என்று பதிலளித்தார். ஆனால் அதற்கு முன்பாகவே மாஸ்கோ கைவிடப்பட்டிருந்தது. சக்கரவர்த்தியிடமிருந்து அராக்கீவ் வந்து, எர்மொலாவை பீரங்கிப் படையின் தலைவராக நியமித்திருக்க வேண்டுமென்று சொன்னார். அச்சமயம் குட்டுஜோவ், ''ஆம், நானும் அதைத்தான் இப்பொழுது நினைத்துக்கொண்டிருக்கிறேன்'' என்று பதில் சொன்னார். ஆனால் ஒரு வினாடிக்கு முன்பாக அதற்கு நேர்மாறாக அவர் பேசினார். அதைப் பற்றி அவருக்கு என்ன கவலை? அப்பொழுது நடந்து கொண்டிருப்பவைகளின் பிரதானமான முக்கியத்துவத்தை அவர் ஒருவர்தான் அந்த புத்தியில்லாத கூட்டத்தில் அறிந்தவராய் இருந்தார். ஆகவே மாஸ்கோவுக்கு ஏற்பட்ட விபத்துக்கு அவர் மீது ராஸ்டாப்சைன் குற்றஞ்சாட்டினாலோ, அல்லது வேறு யார் மீதாவதோ குற்றஞ்சாட்டினாலோ அதைப் பற்றி அவருக்கு என்ன கவலை? அதே மாதிரி பீரங்கிப் படைக்கு யாரைத் தலைவராக நியமித்தாலும் அதைப் பற்றி அவருக்கு சிரத்தை இல்லை.

இந்த விஷயங்களில் மட்டுமல்ல, தொடர்ச்சியாகவே அந்த முதியவர் அம்மாதிரியே இருந்து வந்தார். அதாவது, அந்தந்த சமயங்களில் அவர் மனதில் தோன்றிய அர்த்தமற்ற வார்த்தைகளை அவர் சொல்லி வந்தார். ஏனெனில், அவருடைய வாழ்க்கையிலிருந்து அவர் பெற்ற அனுபவத்தினால் அவர் ஒரு முடிவுக்கு வந்திருந்தார். அதாவது, நினைப்புகளும் அவற்றை வெளியிடும் வார்த்தைகளும் மக்களின் மனதை திருப்புகிறவை அல்ல என்று அவர் நம்பிக்கை கொண்டிந்தார்.

தம்முடைய வார்த்தைப் பற்றி சிரத்தையில்லாத அந்த மனிதர், அந்த யுத்த காலம் பூராவிலும் அவருடைய தனித்து நின்ற நோக்கத்திற்கு விரோதமாக ஒரு வார்த்தை கூட அவர் பேசியதில்லை. கஷ்டமான சந்தர்ப்பங்களில் அவருடைய

உண்மையான நினைப்புகளை அவர் அடிக்கடி கூறியதுண்டு. ஆனால் அம்மாதிரி கூறும்போதெல்லாம், தாம் கூறுவதை அவர்களால் புரிந்து கொள்ளமுடியாது என்ற மனக்கசப்போடுதான் அவர் சொல்லி வந்தார். பாராடினோ போரிலிருந்துதான் அவரைச் சுற்றி இருந்தவர்களுக்கும் அவருக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட ஆரம்பித்தது. அவர் ஒருவர்தான் ''பாராடினோ போரில் நமக்கு வெற்றி கிடைத்தது'' என்று சொன்னார். அதையே திருப்பித் திருப்பி பல தடவைகளில் சொல்லி வந்தார். அவர் மரணமாகிய வரையில் அவர் அனுப்பி வந்த யாதாஸ்துக்களில் அதையே திருப்பித் திருப்பி சொல்லி வந்தார். அவர் ஒருவர்தான் ''மாஸ்கோவை இழந்து விடுவதால் ருஷ்யாவை இழந்து விடுவதாகாது'' என்று சொல்லி வந்தார். லாரிங்டன் என்பவர் எதிரிகளுடன் சமாதானம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறியபோது, அவர் ''சமாதானம் என்பதே கிடையாது. ஏனெனில் அதுதான் மக்களின் விருப்பம்'' என்று சொன்னார். பிரெஞ்சுக்கார்கள் பின்வாங்கி ஓடியபோது அவர் ஒருவர் தான் பின்வருமாறு சொன்னார்: ''நம்முடைய ராணுவ நடவடிக்கைகள் எல்லாம் இப்பொழுது உபயோக மற்றவை. நாம் விரும்புவதற்கு மேலாகவே, ஒவ்வொரு காரியமும் இப்பொழுது கைகூடி வருகிறது. எதிரிகள் திரும்பிப் போவதற்கு ஒரு தங்கப் பாலத்தைக் கொடுப்பது ஒன்றுதான் நாம் செய்ய வேண்டிய வேலை. அவர்களே அவர்களை அழித்துக்கொள்ளட்டும். டாரூடினாவிலோ, வியாஜ்மாவிலோ, கிராஸ்னோவிலோ போர் நடந்திருக்க வேண்டிய அவசியமேயில்லை. எதிரிகளை விரட்டிக்கொண்டு ருஷ்ய எல்லைக்கு போய்ச் சேருவதற்கு, சில படைகள் நமக்கு அவசியம் வேண்டும். ஆகவே, பத்துப் பிரெஞ்சுக்காரர்களை அழிப்பதாய் இருந்தாலும் கூட, ஒரு ருஷ்யனை இழப்பதற்கு நான் விடமாட்டேன்.'' இவரை ஒரு ராஜசபை தூதர் என்றும் சக்கரவர்த்தியைத் திருப்தி செய்வதற்காக அராக்சீவிடம் போய் சொன்னார் என்றும் நமக்குச் சொல்லப்படுகிறது. ஆனால் இவர்தான், இவர் ஒருவர்தான் சக்கரவர்த்தியின் அதிருப்தியைப்பெறுகிற விதத்தில் வில்னாவில் ஒன்று சொன்னார். அதாவது, ''இந்த யுத்தத்தை நமது எல்லைக்கு அப்புறம் நீடித்துக்கொண்டு போவது என்பது உபயோகமற்றதோடு, தீங்காகவும் இருக்கும்'' என்று கூறினார்.

சம்பவங்களின் அர்த்தத்தை அவர் அறிந்து கொண்டிருந்தார் என்பதை வார்த்தைகளினால் மட்டுமே நிரூபிக்க முடியாது. அவருடைய செய்கைகள் எல்லாம் கொஞ்சங்கூட மாறுதல் இல்லாமல் மூவகைக் காரியங்களைக் கொண்ட ஒரே நோக்கத்தை நோக்கி செய்பவைகளாகவே இருந்தன. (1) பிரெஞ்சுக்காரர்களுடன் போர் புரிவதற்கு பலத்தை யெல்லாம் ஒன்று சேர்ப்பது; (2)

அவர்களைத் தோற்கடிப்பது; (3) அவர் ருஷ்யாவிலிருந்து விரட்டி, நமது மக்களுடையவும் நமது ராணுவத்தினுடையவும் துன்பங்களை கூடிய வரையில் குறைப்பது.

இம்மாதிரி காலம் கடத்தி வரும் குட்டுஜோவின் கொள்கை யானது, ''பொறுமை, காலம்'' என்பதேயாகும். முடிவான ஒரு செய்கையில் இறங்குவதற்கு நேர்விரோதியான இவர் பாராடி னோவில் போர் தொடுத்தார். அதற்கு வேண்டிய ஏற் பாடுகளை அதற்குமுன் கண்டறியாத விதத்தில் பொறுமையாகத் தயார் செய்தார். இந்த குட்டுஜோவ் ஆஸ்டர் லிட்ஜில் போர் ஆரம்பித்தற்கு முன்பாகவே, அது தோற்றுவிடும் என்று கூறினார். மற்ற எல்லாரும் சொல்லியதற்கு நேர்விரோதமாக தாம் தனியாக நின்று, தாம் மரணமாகிற வரையில் பாராடினோ போர் ஒரு வெற்றி என்று சொல்லி வந்தார். அந்தப் போர் தோல்வியுற்றது என்று ஜெனரல்கள் கூறிய போதிலும், வெற்றிபெற்ற பின்பு துருப்புகள் பின் வாங்குவது என்பது இதுவரை கேள்விப்படாத விஷயமாய் இருந்தாலும், அவர் அம்மாதிரியே சொல்லி வந்தார். அதன் பின்னால் நடந்த அந்த பின்வாங்குதல் முழுவதிலும் போர் செய்யவே கூடாது என்று அவர் ஒருவர்தான் சொல்லி வந்தார். மீண்டும் புதிதாக ஒரு யுத்தம் என்பது கூடாது என்றும், ருஷ்ய எல்லைகளைக் கடந்து வெளியே போகக்கூடாது என்றும் அவர் ஒருவர்தான் சொல்லி வந்தார்.

அந்த சம்பவங்களின் முக்கியத்துவத்தை இப்பொழுது புரிந்து கொள்ளுவது சுலபமாய் இருக்கும். அதாவது, ஒரு டஜன் பேர்வழிகளின் மண்டையில் மட்டும் இந்த சில கொள்கைகளை, மக்களும் கொண்டிருந்தார்கள் என்று நாம் தவறாக நினைக்காமல் இருந்தால், அம்மாதிரி புரிந்து கொள்ளுவது சுலபமாய் இருக்கும். ஏனெனில் அந்த சம்பவங்களும், அவற்றால் ஏற்பட்ட பலன்களும் இப்பொழுது நமது கண்கள் முன்னால் நிற்கின்றன.

பொதுவான அபிப்பிராயத்திற்கு விரோதமாக அந்த சம்பவங்களைப் பற்றிய மக்களின் கருத்தை அவ்வளவு உண்மை யாக அறிந்து ஒருதடவை கூட அதற்கு விரோதமாக நடக்காமல் அந்த முதிய மனிதரால் எப்படிச் செய்ய முடிந்தது? அப்பொழுது நடந்துவந்த சம்பவங்களின் உண்மையான அர்த்தத்தை ஊடுருவிப் பார்க்கக்கூடிய அசாதாரணமான சக்தியானது, அவருக்கு அவரிடம் பூரணமாக நிரம்பியிருந்த தேசீய உணர்ச்சியிலிருந்தே கிடைத்தது.

இந்த உணர்ச்சி அவரிடம் இருக்கிறது என்பதை மக்கள் உணராததினால்தான், ஜார் சக்கரவர்த்தியின் விருப்பத்திற்கு எதிராக அந்த தேசீய யுத்தத்தை நடத்துவதற்கு, அவரைத் தேர்ந்தெடுத்

தார்கள். அந்த உணர்ச்சி தான் அவரை மனித சமூகத்தின் உயர்ந்த பீடத்தில் அமர்த்தியது. அங்கே சேனாதிபதியாக அவர் அமர்ந்து தமது அதிகாரங்களையெல்லாம் மக்களை அழிப்பதில் செலவிடாமல், அவர்களைக் காப்பாற்றி அவர்கள் மீது இரக்கங் கொள்ளுவதில் செலவிட்டார்.

அந்த எளிமையான, தன்னடக்கமான ஆகவே உண்மையில் உயர்ந்ததான ஒரு உருவத்தை, ஐரோப்பாவில் மனிதர்களை ஆளுகிறவர் என்று சரித்திம் உற்பத்தி செய்த ஒரு பொய்யான வீரரோடு ஒப்பிட முடியாது.

ஒரு சேவகனுக்கு எந்த மனிதரும் பெரியவராகத் தோன்றாது. ஏனெனில், அவர் பெரியவருக்குள்ள குணங்கள் என்று நினைக்கிறவை அற்பமானவைகளாகவே இருக்கும்.

## 15

### 6

நவம்பர் மாதம் 5-ந் தேதிதான் கிராஸ்னோ போர் என்று அழைக்கப்படும் போரின் முதலாவது நாளாகும். மிகுந்த வாக்குவாதங்கள் ஏற்பட்ட பின்பு, தங்கள் தங்களுடைய இடங்களுக்குப் போகாமல், ஜெனரல்கள் தவறுகள் செய்த பின்பு, நேர்மாறான உத்தரவுகளோடு உதவி யாளர்களை அனுப்பிய பின்பு, அன்று மாலையில் எதிரி ஒவ்வொரு இடத்திலிருந்தும் ஓடிக்கொண்டிக்கிறான் என்றும், ஆகவே எந்தவிதமான போரும் நடக்க முடியாதென்றும் தெளிவாகத் தெரிந்தது. அதன் பின்னால் குட்டுஜோவ் தாம் தங்கியிருந்த கிராஸ்னோவிலிருந்து புறப்பட்டு, டோப்ரோவுக்கு போனார். அந்த இடத்திற்கு அன்று அவருடைய தலைமைக் காரியாலயம் மாற்றப்பட்டிருந்தது.

அன்று பகல் முழுவதும் தெளிவாக இருந்தது. உறைபனி பெய்து கொண்டிருந்தது. தம்முடைய கொழுத்த சிறிய வெள்ளைக்குதிரை மீது டோப்ரோவுக்கு குட்டுஜோவ் சவாரி போனார். அவருக்குப் பின்னால் அதிருப்தி அடைந்த ஜெனரல்களைக்கொண்ட பிரம்மாண்டமான பரிவாரமானது, மெதுவான குரலில் தங்களுக்குள் பேசிக்கொண்டு போனார்கள். அன்று பிடிபட்ட பிரெஞ்சுக் கைதிகள் (ஏழாயிரம் பேர்) அந்த ரஸ்தா முழுவதும் கனப்பு மூட்டங்களுக்கு முன்னால் கூடியிருந்து குளிர் காய்ந்து கொண்டிருந்தார்கள். டோப்ரோவுக்கு சமீபத்தில் ஏராளமான கைதிகள் பேசிக்கொண்டும், சரியான உடைகள் இல்லாதபடியால் தங்களுக்கு அகப்பட்டதைக்கொண்டு மூடிக்கொண்டும், பிரெஞ்சுப்

பீரங்கிகளுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்கள். சேனாதிபதி நெருங்கியதும் அவர்களுடைய பேச்சு நின்றது. எல்லாருடைய கண்களும் குட்டுஜோவ் மீது திரும்பின. சிவப்பு நாடாவை சுற்றிய ஒரு வெள்ளைத் தொப்பியை அவர் தரித்துக் கொண்டிருந்தார், உள்ளே துணி வைத்துத் தைக்கப்பட்ட அவருடைய வெளிக் கோட்டானது. அவருடைய தோள்களில் துருத்திக்கொண்டிந்தது. தம்முடைய வெள்ளைக் குதிரைமீது அவர் மெதுவாகப் போய்க்கொண்டிருந்தார். அந்த பீரங்கிகளையும், கைதிகளையும் எங்கே பிடித்தார்கள் என்பதைப்பற்றி, ஒரு ஜெனரல் அவரிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

குட்டுஜோவ் எதையோ நினைத்துக்கொண்டிருப்பவர்போல காணப்பட்டார். அந்த ஜெனரல் சொல்லி வந்ததை அவர் கவனிக்க்வில்லை. தமது கண்களை இடுக்கிக்கொண்டு, அங்கே பரிதாபகரமாக நின்றுகொண்டிருந்த கைதிகளை உன்னிப்பாய் குத்திட்டுப் பார்த்தார். அவருடைய தோற்றத்தில் அதிருப்தி காணப்பட்டது. அந்தக் கைதிகள் எல்லாருமே பனியினால் மூக்கு களிலும் கன்னங்களிலும் புண்பட்டவர்களாய் காணப்பட்டார்கள். எல்லாருடைய கண்களும் சிவந்து வீங்கி, கண் நோயினால் பீடிக்கப்பட்டடிருந்தன.

ஒரு பிரெஞ்சுக் கூட்டம் ரஸ்தாவிற்கு சமீபத்தில் நின்று கொண்டிருந்தது. அவர்களில் ஒருவனுடைய முகத்தில் புண் நிறைந் திருந்தது. அவனும் மற்றொருவனும் சேர்ந்து, பச்சை மாமிசத்தை தங்கள் கைகளால் பிய்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சவாரி வருகிறவர்களைப் பார்த்தபோது, அவர்களுடைய பார்வையானது கோரமாகவும் மிருகத்தனமாகவும் இருந்தது. கெடுதலான நோக்கமும் அவர்களுடைய பார்வையில் தோன்றியது. குட்டு ஜோவை ஒரு தடவை பார்த்த பின்பு, முகத்தில் புண் நிறைந்திருந்த அந்த பிரெஞ்சுக்காரன் தனது முகத்தைத் திருப்பி, மீண்டும் தான் செய்து வந்த வேலையைத் தொடர்ந்து செய்தான்.

அந்த இரண்டு வீரர்களையும் குட்டுஜோவ் உன்னிப்பாக நீண்டநேரம் நோக்கினார். தமது முகத்தை சுளித்து, கண்களை இடுக்கி, சிந்தனையோடு தமது தலையை ஆட்டினார். மற்றொரு இடத்தில் ஒரு ருஷ்ய சிப்பாய், ஒரு பிரெஞ்சுக்காரனிடம் எதையோ சிநேகப்பாவத்தோடு சொல்லிச் சிரித்து, அவன் தோளைத் தட்டிக்கொடுத்துக் கொண்டிருப்பதை அவர் பார்த்தார். குட்டுஜோவின் முகத்தின் பழைய மாதிரியான தோற்றமே காணப்பட்டது. அவர் மீண்டும் தமது தலையை ஆட்டினார்.

''நீர் என்ன சொல்லிக்கொண்டிருந்தீர்?'' என்று அவர், தம்மிடம் முன்னால் பேசிக்கொண்டிந்த ஜெனரலிடம் கேட்டார். அந்த

ஜெனரல் பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து பிரோபிராஜென்ஸ்க் என்ற பட்டாளத்தைச் சேர்ந்தவர்களால் கைப்பற்றப்பட்ட சில விருது களை சேனாதிபதிக்கு சுட்டிக் காட்டினார்.

''ஓ! விருதுகளா!'' என்று குட்டுஜோவ் கூறினார். அவருடைய மனதில் முன்னால் ஓடிக்கொண்டிருந்த சிந்தனையிலிருந்து கஷ்டத்தோடு தமது மனதை திருப்புவதற்கு முயற்சி செய்ததாகக் காணப்பட்டார்.

அவர் பராக்கு புத்தியோடு தம்மைச் சுற்றிலும் பார்த்தார். எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான கண்கள் அவரை நோக்கி, அவரிடமிருந்து ஒரு வார்த்தையை எதிர்பார்த்துக் கொண்டிந்தன.

பிரோபிராஜென்ஸ்க் பட்டாளத்திற்கு முன்பாக அவர் நின்றார் ஆழ்ந்த பெருமூச்சுவிட்டு தமது கண்களை மூடினார். அந்த விருதுகளைத் தாங்கிக்கொண்டிருந்த சிப்பாய்களை, அந்த விருதுகளோடு வந்து சேனாதிபதியை சுற்றி நிற்கும்படி பரிவாரத்தைச் சேர்ந்த ஒருவர் கூறினார். சில வினாடிகள் குட்டுஜோவ் மௌனமாக இருந்தார். பின்னால் தம்முடைய பதவிக்காக செய்யவேண்டியிருந்த கடமையை தயக்கத்தோடு ஒப்புக் கொண்டார். தனது தலையை உயர்த்திப் பேச ஆரம்பித்தார். அதிகாரிகள் ஏராளமாக அவரைச் சுற்றிக் கூடினார்கள். அந்தக் கூட்டத்திலிருந்த அதிகாரிகளை உன்னிப்போடு பார்த்தார். அவர்களில் பலரை அவர் அடையாளம் தெரிந்து கொண்டார்.

''நான் உங்களுக்கு எல்லாம் வந்தனம் சொல்லுகிறேன்'' என்று அவர் அந்த சிப்பாய்களைப் பார்த்து சொல்லிவிட்டு, மீண்டும் அதிகாரிகளையும் பார்த்துச் சொன்னார். அவரைச் சுற்றி அமைதி நிலவியிந்தபடியால், அவர் மெதுவாக சொல்லிய வார்த்தைகள் தெளிவாகக் கேட்டன. ''உங்கள் எல்லாருக்கும், உங்களுடைய கடினமான, விசுவாசமான சேவைக்காக வந்தனம் சொல்லுகிறேன். வெற்றி பூரணமானதாய்விட்டது. ருஷ்யா உங்களை ஒருக்காலும் மறக்காது. எக்காலமும் உங்களுக்குப் பெருமை ஏற்படுவதாக.''

அவர் பேசுவதை நிறுத்தி தம்மைச் சுற்றிலும் பார்த்தார்.

''அதை தணித்துப் பிடி, தணித்துப் பிடி,'' என்று, அங்கே கையில் வைத்துக் கொண்டிருந்த பிரெஞ்சு கழுகுக்கொடியை, ஒரு சிப்பாய் பிரோ பிராஜென்ஸ்க் கொடிகளுக்கு முன்பாகத் தற்செயலாக தாழ்த்தியபோது கூறினார். ''இன்னும் தணி, இன்னுத் தணி. அப்படித்தான், ஜே! ஜே! வாலிபர்களே'' என்று அவர், அங்கிருந்த வீரர்களைப் பார்த்துப் பேசினார்.

'ஜே, ஜே' என்ற கர்ஜனைகள் ஆயிரக்கணக்காகக் கேட்டன.

சிப்பாய்கள் கோஷமிட்டுக்கொண்டிருந்தபோது, குட்டுஜோவ் தமது சேணத்தில் இருந்தபடியே முன்னால் சாய்ந்து தலை வணங்கினார். அவருடைய கண்ணில் ஒரு அமைதியான, கேலியான ஒளி பிரகாசித்தது.

''இதோ பாருங்கள், சகோதரர்களே...'' என்று அவர், அங்கே கோஷங்கள் முடிந்ததும் பேசினார்...திடீரென்று அவருடைய குரலும், அவருடைய முகத்தோற்றமும் மாறின. இப்பொழுது ஒரு சேனாதிபதியாக அவர் பேசவில்லை. தமது தோழர்களுக்கு முக்கியமான ஒரு விஷயத்தைச் சொல்லப்போகும் சாதாரண முதிய மனிதராக அவர் காணப்பட்டார்.

அங்கு கூடியிருந்த அதிகாரிகளின் கூட்டத்திலும் சிப்பாய்களின் கூட்டத்திலும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அவர் கூறப்போவதை நன்றாகக் கேட்க வேண்டும் என்பதற்காக அவர்கள் நெருங்கினார்கள்.

''இங்கே போங்கள், சகோதரர்களே. உங்களுக்கு மிகுந்த கஷ்டம் என்பதை நான் அறிவேன். என்றாலும், அதைத் தவிர்க்க முடியாது. எல்லாவற்றையும் தாங்கிக்கொள்ளுங்கள். அது வெகு காலம் நீடிக்காது. நமது நாட்டிற்கு வந்துள்ள பேர்வழிகளை, நாம் சீக்கிரம் அனுப்பி விட்டு, அதற்குப்பின்னால் நாம் ஓய்வு கொள்ளலாம். உங்களுடைய சேவைகளை ஜார் சக்கரவர்த்தி ஒருபோதும் மறக்கமாட்டார். உங்களுக்கு கஷ்டமானதுதான் என்றாலும், நீங்கள் உங்கள் நாட்டிலேயே இருக்கிறீர்கள். அவர்களைப் பாருங்கள்; அவர்கள் என்ன கதிக்கு வந்திருக்கிறார்கள் என்று அவர்களைப் பாருங்கள்'' என்று அங்கிருந்த கைதிகளை சுட்டிக்காட்டி சொன்னார். ''நாம் நாட்டிலுள்ள பரம ஏழைகளான பிச்சைக் காரர்களைவிட, அவர்கள் மோசமான நிலைமையில் இருக்கிறார்கள். அவர்கள் பலமாய் இருந்த காலத்தில், நாம் எதற்கும் பின்வாங்கவில்லை. ஆனால், இப்பொழுது அவர்களிடம் நாம் இரக்கம் கொள்ள வேண்டும். அவர்களும் மனிதர்கள்தானே? அப்படியல்லவா, வாலிபர்களே?''

அவர் சுற்றிலும் பார்த்தார். மரியாதையுடனும் ஆச்சரியத் துடனும் அவரை நோக்கிக் கொண்டிந்த பார்வைகளில் அவர் கூறிய விஷயத்தல் அனுதாபம் இருப்பதைக் கண்டார். அவருடைய முகம் வர வர பிரகாசமாயிற்று. ஒரு முதியவருடைய அமைதியான புன்முறுவலானது அவருடைய உதடுகளை விரித்தன. அவருடைய கண்களைச் சுற்றி சுருக்கங்கள் ஏற்பட்டன. அவர் பேசுவதை நிறுத்தினார். ஏதோ குழப்பம் அடைந்தவரைப்போல தமது தலையை கீழே தாழ்த்தினார்.

''ஆனால், எது எப்படியானாலும், அவர்களை யார் இங்கே அழைத்தார்கள்? அவர்களுக்கு வேண்டியதுதான்...'' என்று அவர் கூவிவிட்டு திடீரென்று தமது தலையை உயர்த்தினார்.

தமது சவுக்கைச் சுழற்றி, அவர் குதிரையைப் பாய்ச்சலில் விட்டார். அந்தப் போர்க் காலத்தில் அப்பொழுதுதான் முதல் தடவையாக அம்மாதிரி செய்தார்: அவர் போவதைப் பார்த்து அங்கிருந்த சிப்பாய்கள் மகிழ்ச்சியோடு சிரித்து, 'ஜே' கோஷங்கள் செய்தார்கள்.

குட்டுஜோவின் வார்த்தைகளை துருப்புகளால் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்த பீல்டு மார்ஷலின் பேச்சுக்களை ஒருவராலும் திருப்பிச் சொல்ல முடியாது. அவர் முதலில் மிகுந்த சிந்தனையோடு ஆரம்பித்தது, பின்னால் மெதுவாக ஒரு முதியவரின் சாதாரண உரையாடலாக அதை மாற்றி விட்டார். ஆனால் அந்தப் பேச்சிலிருந்து மனப்பூர்வமான சிரத்தையும், மகத்தான வெற்றியுணர்ச்சியோடு எதிரியிடம் காட்டப்பட்ட இரக்கத்தையும், நம்முடைய கொள்கையின் நியாயத்தையும் அந்த முதிய மனிதரின் இனிய சுபாவம் கொண்ட வார்த்தைகள் அப்படியே காட்டின. அந்த உணர்ச்சியை சிப்பாய்கள் அறிந்துகொண்டது மட்டுமல்ல, அவர்களுடைய உள்ளத்திலே அது உறைந்தும் வந்தது. அதனுடைய வேகந்தான், அவர்களுடைய மகிழ்ச்சியான நீண்ட நேரம் கர்ஜனை செய்த கோஷங்களில் வெளிப்பட்டது.. அதன் பின்னால் ஒரு ஜெனரல் குட்டுஜோவிடம் வந்து, அவருடைய வண்டியைக் கொண்டுவரச் சொல்லலாமா என்று கேட்டார். அதற்கு குட்டுஜோவ் பதில் சொல்லுவதற்குப் பதிலாக, எதிர்பாராதவிதமாக விம்மிவிம்மி அழ ஆரம்பித்தார். அவருடைய மனம் அவ்வளவுதான் இளகிப் போயிருந்தது என்பதையே அது காட்டியது.

## 15

### 7

நவம்பர் 8-ந் தேதியன்று இரவில் தங்குமிடத்திற்கு துருப்புகள் வரும்போது, ஏற்கெனவே அந்தி சாய்ந்து விட்டது. கிராஸ்னோ போரில் அன்றுதான் கடைசி நாள். அன்று பகல் முழுவதும் கால நிலை அமைதியாகவும், உறைபனி குளிரோடும் காணப்பட்டது. இடையிடையே பனி லேசாகப் பெய்து கொண்டிருந்தது. மாலை நேத்தில் தெளிவு தோன்ற ஆரம்பித்தது. பனி பெய்து கொண்டிருந்தபோது அதன் வழியாக கறுப்பு நீலத்தோற்றத்தோடு நட்சத்திரங்கள் நிறைந்திந்த வானம் தெரிந்து கொண்டிருந்தது. உறைபனியானது வரவர அதிகமாயிற்று.

டாரூடினாவிலிருந்து புறப்பட்ட மூவாயிரம் பேர்கள் கொண்ட ஒரு காலாட்படையானது, இப்பொழுது தொள்ளாயிரம் பேர்களைக் கொண்டதாகத்தான் இருந்தது. அன்று இரவில் தங்க வேண்டிய இடத்திற்கு அது தான் முதலாவதாக வந்தது. அந்த இடம் பிரதானமான ரஸ்தாவிலுள்ள ஒரு கிராமமாகும். சப்ளை அதிகாரிகள் அந்தப் பட்டாளத்தைச் சந்தித்தபோது குடிசைகளெல்லாம் நோயாளிகளாலும், மாண்டுபோன பிரெஞ்சுக்காரர்களாலும், குதிரைப் படை வீரர்களாலும், பரிவார அங்கத்தினர்களாலும் நிரம்பியிருக்கின்றன என்று சொன்னார்கள். பட்டாளத்தில் கமாண்டருக்கு மட்டும் ஒரே ஒரு குடிசை இருப்பதாக சொன்னார்கள்.

அந்தக் கமாண்டர் அந்தக் குடிசைக்கு சவாரி போனார். அந்தப் பட்டாளத்தினர் அந்த கிராமத்தின் வழியாக சென்று, கடைசி குடிசைகளுக்கு முன்பாக தங்களுடைய ஆயுதங்களை அடுக்கி வைத்தார்கள்.

ஏராளமான கரங்களையுடைய ஒரு பிரம்மாண்டமான மிருகத்தைப் போல, அந்தப் பட்டாளம் தங்குவதற்கும் உண்பதற்கும் ஏற்பாடு செய்ய ஆரம்பித்தது. பட்டாளத்தில் உள்ள சிலர் முழங்கால் அளவு பனியில் நடந்து கிராமத்தின் வலது பக்கத்திலிருந்த பூவரசு மரக்காட்டிற்குள்ளாக போனார்கள். உடனே அங்கே கோடரிகளாலும், உடைவாள்களாலும் மரங்களின் கிளைகளை வெட்டும் சப்தமும், மகிழ்ச்சியான குரல்களும் கேட்டன. பட்டாளத்தின் மற்றொரு பகுதியினர், அங்கிருந்த வண்டிகளிலிருந்து சமையல் பாத்திரங்களையும், பிஸ்கோத்துக்களையும் வெளியில் எடுக்கவும், குதிரைகளுக்கு தீனி போடவும் ஆரம்பித்தார்கள். பட்டாளத்தின் மூன்றாவது பகுதியினர், அந்த கிராமத்திலுள்ள பல பகுதிகளுக்கும் சென்று, பரிவார அதிகாரிகளுக்கு தங்குமிடங்களைக் கண்டுபிடிப்பதற்குப் போனார்கள். குடிசைகளில் கிடந்த பிரெஞ்சு பிரேதங்களை வெளியில் எடுத்துப் போட்டார்கள். பலகைகளையும் விறகுகளையும் கூரைகளையும் இழுத்து கணப்பு மூட்டங்களுக்கு உபயோகித்தார்கள். சிலர் மரதட்டிகளை பிடுங்கி தங்குமிடங்களை அமைத்தார்கள்.

மகிழ்ச்சியான கோஷங்களோடு சுமார் 15 பேர் ஒரு கொட்டகையிலுள்ள மரத் தட்டியைக் கீழே தள்ள ஆரம்பித்தார்கள். அதன் கூரை ஏற்கெனவே பிரிக்கப்பட்டிருந்தது.

''சரி, இப்பொழுது எல்லாருமாகச்சேர்ந்து இதை தள்ளுவோம்'' என்று பல குரல்கள் கூறின. உடனே பனியால் நனைந்து உறைபனியில் கிரீச்சிட்ட அந்த பிரம்மாண்டமான மரத்

தட்டியானது, அந்த இருட்டில் சாய்வது போலத் தெரிந்தது. அடித்தளத்தில் வரவர அதிகமான கீரல்கள் ஏற்பட்டு கடைசியாக அந்த மரத்தட்டி சுவரானது அதைத் தள்ளிக் கொண்டிருந்த மனிதர்களோடு கீழே விழுந்தது. பலமான, காட்டுத்தனமான சிரிப்புகளும், மகிழ்ச்சிக் கூச்சல்களும் அங்கிருந்து கிளம்பின.

''எல்லாருமாக இப்பொழுது இரண்டு இரண்டு பேர் வீதம் பிடித்துக் கொள்ளுவோம். அங்கே ஒரு கை பிடியுங்கள். அப்படித்தான் நீங்கள் எங்கே தள்ளிக்கொண்டிருக்கிறீர்கள்?

''இப்பொழுது எல்லோரும் ஒன்று சேர்ந்து தள்ளுங்கள். ஆனால், சிறுவர்களே ஒரு நிமிஷம் பொறுங்கள். ஒரு பாட்டுப் பாடுங்கள்''.

எல்லாரும் மௌனமாக நின்றார்கள். ஒரு மெதுவான, இனிமையான வெல்வட் போன்ற குரலானது பாட ஆரம்பித்தது. மூன்றாவது அடியைப் பாடி அந்தக் குரல் மெதுவாக மறையும் போது, இருபது குரல்கள் ஒன்று சேர்ந்து கூச்சலிட்டன. ''உ உ உ உ உ அதுதான். எல்லாரும் ஒன்று சேர்ந்து தள்ளுங்கள், சிறுவர்களே...'' அவர்கள் ஒன்று சேர்ந்து செய்த முயற்சிகளால், அந்த பலகை சுவரைத் தள்ள முடியவில்லை. அதற்குப் பின்னால் ஏற்பட்ட அமைதியான நிலைமையில் அந்த மனிதர்கள் வேகமாக மூச்சுவிடுவது நன்றாய் கேட்டது.

''இங்கே பாருங்கள், ஆறாவது கம்பெனியை சேர்ந்தவர்களே! நீங்கள் பிசாசுகள்தான்! ஒரு கை கொடுங்கள்... கொடுப்பீர்களா? எங்களுடைய உதவி உங்களுக்கு ஒருநாள் வேண்டியதிருக்கும்''.

ஆறாவது கம்பெனியைச் சேர்ந்த சுமார் இருபது பேர்கள் கிராமத்துக்குள் போய்க் கெண்டிருந்தார்கள். அவர்கள் உடனே இவர்களுக்கு உதவியாக வந்து, அந்த பலகைச் சுவரைத் தள்ளினார்கள், அது 35 அடி நீளமும், 7 அடி உயரமும் இருந்தது. அதை கிராமத் தெரு வழியாக ஆடி அசைந்துகொண்டு, பெருமூச்சுவிடும் மனிதர்கள் தங்கள் தோள்களால் தள்ளிக்கொண்டு போனார்கள்.

''மேலே போங்கள்... கீழே விழுகிறதா? எதற்காக நீங்கள் நிற்கிறீர்கள்? அப்படித்தான்...''

மகிழ்ச்சியோடு கூடிய அர்த்தமற்ற வசவுகள் தாராளமாக அங்கே வெளிவந்து கொண்டிருந்தன.

''நீங்கள் என்ன செய்ய நினைக்கிறீர்கள்'' என்று ஒரு சார்ஜென்ட் மேஜருடைய அதிகாரத்தொனி அந்த பலகைச் சுவரைத் தள்ளிக் கொண்டிருந்தவர்களுக்குக் கேட்டது. ''இங்கே கனவான்கள் இருக்கிறார்கள். ஜெனரல்கூட அந்தக் குடிசையில்தான் இருக்கிறார். கேடு கெட்டவர்களே, பிசாசுகளே, மிருகங்களே, நான் உங்களுக்குச் சரியாகக் கொடுக்கிறேன்'' என்று அவர் கூச்சலிட்டு, அவரிடம்

அகப்பட்ட முதல் மனிதனின் முதுகில் ஒரு குத்து விட்டார். ''சப்தம் போடாமல் உங்களால் செய்ய முடியாதா''?

அந்த மனிதர்கள் மௌனமானார்கள். அடிபட்ட சிப்பாய் முனங்கிக் கொண்டு தனது முகத்தைத் துடைத்தான். அந்த மரப்பலகை மீது அவன் விழுந்ததனால் அவனுடைய முகத்தில் பல இடங்களில் கீரல் ஏற்பட்டு ஏற்கெனவே இரத்தம் வந்து கொண்டிருந்தது.

''இங்கே பாருங்கள், அந்த பிசாசு எம்மாதிரியாக நம்மைத் தாக்குகிறது? என்னுடைய முகத்தையெல்லாம் அது இரத்தமாக்கி விட்டது'' என்று அவன் ஒரு பீதியுள்ள, மெதுவான குரலில் அந்த சார்ஜென்ட் - மேஜர் போன பின்பு சொன்னான்.

''உனக்கு அது பிடிக்கவில்லையா?'' என்று ஒரு குரல் சிரிப்போடு ஒலித்தது. அந்த மனிதர்கள் தங்களுடைய குரலைத் தாழ்த்திக் கொண்டு, அந்த சுவரை மேலே நகர்த்திக்கொண்டு போனார்கள்.

அந்த கிராமத்திலிருந்து அவர்கள் வெளியேறியதும், மீண்டும் உரக்கப் பேச ஆரம்பித்தார்கள். அவர்களுடைய பேச்சுக்களுக்கு இடையில், முன் மாதிரியே அர்த்தமற்ற வசவுகளையும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அந்த மனிதர்கள் கடந்துபோன ஒரு குடிசையில் பிரதான அதிகாரிகள் கூடியிருந்தார்கள். அவர்கள் தேநீர் பருகிக்கொண்டு, அன்றைய நடவடிக்கைகளை பற்றியும், மறு நாள் செய்ய வேண்டிய நடவடிக்கைகளைப் பற்றியும் பரபரப்போடு பேசிச்கொண்டிருந் தார்கள். இடது பக்கத்தில் ஒரு பக்கவாட்டு பிரவேசம் செய்து, உதவி-மன்னர் முராட்டினுடைய படையைத் துண்டித்து, அவரைக் கைது செய்யவேண்டுமென்று உத்தேசித்திருந்தார்கள்.

அந்த மரப்பலகையை அந்த சிப்பாய்கள் இழுத்துக்கொண்டு போய்ச் சேர்க்கிற சமயத்தில், கணப்பு மூட்டங்கள் சமையல் செய்வதற்காக எல்லா இடங்களிலும் பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தன. நெருப்பில் அகப்பட்ட கட்டைகள் வெடித்தன. பனி உருகிக் கொண்டிருந்தது. அங்கு நடமாடிக்கொண்டிருந்த சிப்பாய்களின் நிழல்கள் தெரிந்து கொண்டிருந்தன. சிப்பாய்களின் நடமாட்டங்களால் கால்மிதிபட்ட பனி தணிந்துபோய் இருந்தது.

சுற்றிலும் கோடரிகளும் அரிவாள்களும் சிதறிக்கிடந்தன. உத்தரவுகளைப் பெறாமலேயே, எல்லா காரியங்களும் செய்து முடிக்கப்பட்டன. இரவிற்கு வேண்டிய கட்டைகள் கொண்டு வரப்பட்டன. அதிகாரிகளுக்கு வேண்டிய விடுதிகள் போடப் பட்டன. சமையல் பாத்திரங்கள் கொதித்துக் கொண்டிருந்தன.

துப்பாக்கிகளும் தளவாடங்களும் வரிசையாக அடுக்கி வைக்கப் பட்டன.

மரத்தட்டிச் சுவரை கொண்டு வந்து எட்டாவது கம்பெனி சிப்பாய்கள், அதை வடக்கு திசையில் ஒரு தடுப்பாக உபயோகித்தார்கள். துப்பாக்கி ஸ்டாண்டுகளை அதற்கு அண்டை கொடுத்து அதை நிறுத்தி வைத்தார்கள். அதற்கு முன்பாக கணப்பு மூட்டத்தைப் போட்டார்கள். டமாரங்களை அடித்து ஆஜர் பட்டியை வாசித்த பின்பு, இராச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு கணப்பு மூட்டங்களைச் சுற்றி அமர்ந்தார்கள். சிலர் தங்கள் ஜோடுகளை பழுது பார்த்தார்கள். சிலர் தங்களுடைய சுங்கான்களை குடித்துக்கொண்டிருந்தார்கள். சிலர் தங்களுடைய உடைகளை களைந்து, நிர்வாணமாக நின்று தங்களுடைய சட்டைகளில் இருந்த பேன்களை பொசுக்கிக் கொண்டிருந்தார்கள்.

## 15

### 8

ருஷ்ய சிப்பாய்கள், அந்தச் சமயத்தில், வெதுவெதுப்பைக் கொடுக்கும் ஜோடுகளும், ஆட்டுத் தோல் கோட்டுகளும், தங்குவதற்கு இடமுமின்றி உண்ண உணவுமின்றி பூஜ்யத்திற்கு கீழாக 18 டிகிரி குளிரில் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த படியால், அவர்கள் படுமோசமாக காணப் பட்டிருப்பார்கள் என்று ஒருவர் நினைப்பது சகஜம்.

அதற்கு மாறாக, அந்த ராணுவமானது மிகுந்த சௌக்கியமான நிலைமையில் இருந்ததைவிட அதிகமான மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் காணப்பட்டது. அதற்கு என்ன காரணமென்றால், உற்சாகம் இல்லாதவர்களையும், பலம் இல்லாதவர்களையும், ஒவ்வொரு நாளும் ராணுவத்திலிருந்து கழித்து வந்ததேயாகும். சரீர பலத்திலோ, ஆத்மீக பலத்திலோ குறைந்தவர்களை பின்னால் கழித்துவிட்டபடியால், உடல் வலிமையும், மன வலிமையும் கொண்ட சிறந்த வீரர்களே, ராணுவத்தில் இப்பொழுது தங்கி நின்றார்கள்.

8-வது கம்பெனியின் மர வேலிக்குள்ளாகக் கூடி நின்ற வீரர்கள், வேறு எங்கும் இந்ததைவிட அதிகமாக இருந்தார்கள், அவர்களோடு இரண்டு சார்ஜண்ட்-மேஜர்களும் இருந்தார்கள். அவர்களுடைய கணப்பு மூட்டங்களும் மற்ற எல்லா மூட்டங்களையும் விட பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தன; அந்தக் கணப்பு மூட்டங்களின் பக்கத்தில் அமர வேண்டுமென்று யாராவது கேட்டால், அதற்காக அவர்கள் விறகு கொண்டுவர வேண்டுமென்று சொன்னார்கள்.

''ஏ, மாக்கீவ்; உனக்கு என்ன வந்து விட்டது, நாயின் மகனே? நீ எங்காவது தொலைந்து போனாயா, அல்லது ஓநாய்கள் உன்னைத் தின்று விட்டனவா? இன்னும் சில விறகுகளைக் கொண்டு வா'' என்று செந்நிறமான தலை ரோமத்தையும், சிவந்த முகத்தையும் உடைய ஒருவன் கத்தினான். அங்கே புகைந்து கொண்டிருந்த படியால், கண்களை இடுக்கிப் பார்த்தான். ஆனால் அவன் அந்த நெருப்பின் பக்கத்திலிருந்து விலகவில்லை. ''ஏ, காக்காய். நீ போய்க் கொஞ்சம் விறகு கொண்டுவா'' என்று மற்றொரு சிப்பாயிடம் அவன் சொன்னான்.

அந்த செந்நிற ரோமத்தையுடைய மனிதன், சார்ஜண்டும் அல்ல, அல்லது ஒரு சிறிய அதிகாரியுமல்ல. ஆனால் அவன் நல்ல உடல்வலிவு பெற்றிருந்தபடியால், தன்னைவிட பலம் குறைந்தவர்களை அதிகாரம் செய்து கொண்டிருந்தான். 'காக்காய்' என்று அவன் அழைத்த அந்த சிப்பாய், ஒரு ஒல்லியான, சிறிய மனிதனாய் இருந்தான். அவனுடைய மூக்கு கூர்மையாய் இருந்தது. அவன் உடனே பணிவாக எழுந்து, அங்கிருந்து போக ஆரம்பித்தான். அதே சமயத்தில் அந்தக் கணப்பு மூட்டத்தின் வெளிச்சத்தில் ஒரு ஒல்லியான, லட்சணமான வாலிப சிப்பாய் ஒரு கட்டு விறகைக் கொண்டு வருவது தெரிந்தது.

''அதை இங்கே கொண்டுவர, ரொம்ப சிலாக்கியம்!''

அந்த விறகைப் பிளந்து, அந்த நெருப்பில் போட்டார்கள். வாயினால் ஊதினார்கள். தங்களுடைய பெரிய கோட்டைக் கொண்டு, அதை விசிறி ஜ்வாலை விட்டு எரியும்படி செய்தார்கள்; அங்கிருந்த மனிதர்கள் இன்னமும் நெருங்கி அமர்ந்து, தங்களுடைய சுங்கான்களை பற்ற வைத்தார்கள். அந்த விறகைக் கொண்டு வந்த லட்சணமான வாலிப சிப்பாய், அவனுடைய கைகளைக் கட்டிக் கொண்டு, தன்னுடைய காலில் ஏற்பட்ட விறைப்பைப் போக்குவதற்காக காலை வேகமாகப் பூமியில் மிதித்துக் கொண்டிருந்தான்.

''என் தாயே, இந்த மூடுபனியானது குளிராய் இருந்தபோதிலும், தெளிவாய் இருக்கிறது. நான் ஒரு துப்பாக்கி வீரனாய் இருக்கிறதும் நல்லதாயிற்று'' என்று அவன் பாட ஆரம்பித்தான். ஒவ்வொரு வார்த்தைக்கிடையிலும், அவன் இருமுவதைப் போலப் பாசாங்கு பண்ணினான்.

''இதோ பார், உன்னுடைய ஜோட்டின் தோல் பிரிந்துவிடும்'' என்று செந்நிற தலை ரோமத்தையுடைய மனிதன், பாடிக்கொண்டிருந்தவனுடைய ஜோட்டிலிருந்த தோல் தொங்குவதைக் கண்டு கூச்சலிட்டான். ''நாட்டியம் ஆடுவதற்கு நீ எப்பேர்ப்பட்ட பேர்வழி.''

அந்த நாட்டியம் ஆடியவன் உடனே நாட்டியத்தை நிறுத்தி, தனது ஜோட்டிலிருந்து தொங்கிய அந்தத் தோலை எடுத்து நெருப்பில் வீசினான்.

''ரொம்ப சரி, நண்பரே'' என்று அவன் சொல்லிவிட்டு, கீழே அமர்ந்தான். தன்னுடைய மூட்டையிலிருந்து ஒரு நீளமான பிரெஞ்சு துணியை எடுத்து, அதை தன்னுடைய பாதத்தைச் சுற்றிக் கட்டினான். ''இந்த நீராவிதான் அவற்றைக் கெடுத்து விடுகிறது'' என்று அவன் சொல்லிவிட்டு தன்னுடைய பாதங்களை நெருப்பிற்கு நேராக நீட்டினான்.

''சீக்கிரமாக அவர்கள் நமக்கு போதிய சாமான்களைக் கொடுக்கப் போகிறார்கள். நாம் அவர்களைத் தோற்கடித்த பின்னால், நமக்கு இரட்டைப் பங்குகள் கொடுக்கப் போவதாகச் சொல்லுகிறார்கள்''.

''அந்த நாயின் மகனான பெட்ரோவ், இன்னும் பின்தங்கிக்கொண்டே இருக்கிறான்'' என்று ஒ( ; சார்ஜண்ட்-மேஜர் சொன்னார்.

''நான் வெகுகாலமாக அவன்மீது ஒரு கண் வைத்திருக்கிறேன்'' என்று மற்றொருவன் சொன்னான்.

''நல்லது, அவன் பாவம், அப்பாவி சிப்பாய்...''

''ஆனால், 3-வது கம்பெனியில் நேற்று 9 பேர்கள் காணப்படவில்லையென்று சொல்லுகிறார்கள்''.

''ஆமாம், அதெல்லாம் ரொம்ப சரி, ஆனால் ஒருவனுடைய பாதம் விறைத்துப் போய்விட்டால், அவனால் எப்படி நடக்க முடியும்?''

''என்ன? அசட்டுத்தனமாகப் பேசாதே'' என்று ஒரு சார்ஜண்ட்-மேஜர் சொன்னார்.

''நீயும் அதேமாதிரி செய்ய விரும்புகிறாயா?'' என்று ஒரு முதியவ சிப்பாய் கேட்டான். அவன் கால் விறைத்துப் போவதைப் பற்றிப் பேசியவனைக் கண்டிப்பதுபோல நோக்கினான்.

''நல்லது, உனக்குத் தெரியும்'' என்று 'காக்காய்' என அழைக்கப்பட்ட கூர்மையான நாசியையுடையவன் உறுதியற்ற குரலில் பேசினான். பின்னால் அந்தக் கணப்பு மூட்டத்தின் பக்கத்திலிருந்து எழுந்தான். ''பருமனாய் இருக்கிறவன் ஒல்லியாய் ஆகிறான். ஆனால் ஒல்லியாய் இருக்கிறவன் செத்துப் போகிறான். இப்போது என்னைப் பார், என்னிடம் பலம் என்பது இல்லை'' என்று அவன் திடீரென்று உறுதியோடு கூறி, அந்த சார்ஜண்ட்-மேஜரைப் பார்த்தான். ''என்னை ஆஸ்பத்திரிக்கு அனுப்பும்படி அவரிடம் சொல்லும். என் உடம்பெல்லாம்

வலிக்கிறது. எப்படியிருந்தாலும் என்னால் இந்தப் பிரயாணத்தில் சேர்ந்து வர முடியாது.''

''அவ்வளவு போதும், அவ்வளவு போதும்'' என்று சார்ஜண்ட்-மேஜர் அமைதியாகப் பதில் சொன்னார்.

அந்த சிப்பாய் அதற்குமேல் பேசவில்லை. அங்கே மற்றவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள்.

''இன்று அந்தப் பிரெஞ்சுக்காரர்களில் எத்தனை பேர்களைக் கைப்பற்றினார்கள் தெரியுமா? ஆனால் உண்மையில் அவர்களில் ஒருவனிடம் கூட உண்மையான ஜோடு என்பது இல்லை'' என்று ஒரு சிப்பாய் புதிதாக ஒரு விஷயத்தை ஆரம்பித்துச் சொன்னான்.

''அவர்கள் எல்லாரும் பெயரளவில்தான் இருக்கிறார்கள்.''

''அந்தக் கோசாக்குகள், அவர்களுடைய ஜோடுகளை எடுத்துக் கொள்கிறார்கள். அவர்கள் அந்தக் குடிசையைக் கர்னலுக்காக காலி செய்து, அங்கிருந்தவர்களை அப்புறப்படுத்தினார்கள். அதைப் பார்ப்பதற்குப் பரிதாபமாய் இருக்கிறது'' என்று நடனமாடியவன் சொன்னான். ''அவர்களின் உடல்களை புரட்டியபோது ஒருவன் உயிரோடு இருந்ததாகத் தோன்றியது. அவன் அவனுடைய மொழியில் எதையோ பேசினான். இதை நீங்கள் நம்புவீர்களா?''

''அவர்கள் எல்லாரும் சுத்தமான மக்கள், வாலிபர்களே'' என்று முதலாவது மனிதன் பேசினான். ''அவன் வெள்ளையாய் இருக்கிறான். பூவரசு மரத்தின் பட்டையைப் போல, வெள்ளையாய் இக்கிறான். அவர்களில் சிலர் சிறந்த பேர்வழிகளாய் இருக்கிறார்கள். அவர்கள் பிரபுக்கள் என்று தோன்றுகிறது.''

''நல்லது, நீ என்ன நினைக்கிறாய்? அவர்கள் எல்லா வகுப்புகளிலிருந்தும் சிப்பாய்களைச் சேகரித்திருக்கிறார்கள்.''

''ஆனால், அவக்ரளால் நாம் பேசுவதைப் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்று அந்த நடனக்காரன், ஒரு ஆச்சரியமான புன்னகையோடு சொன்னான். ''அவன் யாருடைய பிரஜை என்று நான் கேட்டேன். ஆனால் அவன் அவனுடைய மொழியில் எதையோ சொன்னான். ஒரு விசித்திரமான கூட்டம்!''

''ஆனால் நண்பர்களே, அது விசித்திரமாய்த்தான் இருக்கிறது'' என்று அவர்களுடைய வெள்ளை நிறத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டவன் சொன்னான், ''அவர்களில் இறந்தவர்களைப் புதைத்தபோது, மஜாய்ஸ்க் விவசாயிகள் அவர்களைப் பற்றிச் சொன்னார்கள். அங்கே போர் நடந்தது என்பது உனக்குத் தெரியும். அந்த இறந்து போனவர்களின் உடல், அங்கே ஒரு மாதம் கிடந்திருந்தது. அப்படியிருந்தும் அந்த இறந்து போனவர்களின்

உடல்கள் காகிதத்தைப் போல வெள்ளையாகவும் சுத்தமாகவும் இருந்ததாக அவர்கள் சொல்லுகிறார்கள். வெடி மருந்து வாசனை கூட இல்லாமல் அங்கே இருந்ததாம்.''

''ஒருவேளை குளிரினால் இருக்குமோ?'' என்று கேட்டான்.

''நீ ரொம்ப புத்திசாலியான ஆசாமி. குளிரினால் இருக்குமாம்! அப்போது உஷ்ணமான காலமாய் இருந்தது. அது குளிர் காலமாய் இருந்தால், நம்முடைய சிப்பாய்களின் பிரேதங்கள் கூடக் கெட்டுப் போய் இருக்காது அல்லவா? ஆனால் நம்முடைய பிரேதங்கள் அழுகிப் புழுத்துப் போயிருந்ததாகவும், தம்முடைய பிரேதங்களை, அகற்றும்போது, முகத்தை கைக்குட்டையால் மூடிக் கொண்டும் தலையைத் திருப்பிக் கொண்டும் அவர்கள் செய்தார்கள் என்று சொல்லுகிறார்கள் என்றும் அவன் சொன்னான். அந்த வேலையை செய்வதற்கு ரொம்பக் கஷ்டமாய் இருந்ததாம். ஆனால், அந்த பிரெஞ்சுக்காரரின் பிரேதங்கள் எல்லாம் காகிதத்தைப்போல வெள்ளையாய் இருந்ததாம். எவ்விதமான கெட்டவாசனையும் இல்லையாம்.''

எல்லாரும் மௌனமாய் இருந்தார்கள்.

''ஒருவேளை அவர்கள் உண்ணும் உணவினால் இருக்கலாம்'' என்று அந்த சார்ஜண்ட்-மேஜர் சொன்னார்.

''அவர்கள் பிரபுக்களைப் போல உண்டு வந்தார்கள்''

அவர் சொல்லியதை ஒருவரும் மறுக்கவில்லை.

''மஜாய்ஸ்க்குப் பக்கத்தில் அந்த போர் நடந்த இடத்திற்குப் பக்கத்திலுள்ள அந்த விவசாயி ஒன்று சொன்னான். அந்தப் பக்கத்திலுள்ள சுமார் பத்து கிராமங்களிலிருந்து எல்லா மனிதர்களையும் அழைத்து இருபது நாட்களாக பிரேதங்களை வண்டிகளில் ஏற்றி அகற்ற ஏற்பாடு செய்திருந்தார்களாம். அப்படி யிருந்தும் அந்தப் பிரேதங்களை அகற்றும் வேலை முடிவடைய வில்லையாம். ஓநாய்களைப் பொறுத்த வரையில்...'' என்று அவன் சொன்னான்.

''அதுதான் உண்மையான போர்'' என்று ஒரு முதியவ சிப்பாய் சொன்னான். ''அந்தப் போர் ஒன்றுதான் நினைத்து பெருமைப்படக் கூடியது. அதற்குப் பின்னால் மற்றவையெல்லாம் வெறும் வேதனையான விஷயம்தான்.''

''அப்பனே, உனக்குத் தெரியுமா? நேற்று முன் தினம் அந்தப் பிரெஞ்சுக்காரர்களை நாங்கள் சந்தித்தோம். அவர்கள் தங்களுடைய துப்பாக்கிகளைக் கீழே வீசிவிட்டு, முழங்கால் படியிடுகிற வரையில், எங்களை அவர்களுக்குப்பக்கத்தில் நெருங்க விட

வில்லை. 'மன்னியுங்கள்' என்று அவர்கள் சொல்லுகிறார்கள், அது ஒரே ஒரு விஷயம். அவர்கள் நெப்போலியனை பிளாட்டாவ் இரண்டு தடவை கைது செய்ததாகச் சொன்னார்கள். ஆனால் சரியான மந்திரம் அவனுக்குத் தெரியாது. அவன் பிடித்துக் கொண்டே இருக்கிறான். அதனால் பிரயோசனம் இல்லை. நெப்போலியன் ஒரு பறவையாக மாறி பறந்து போய் விட்டான். அவனைக் கொல்லுவதற்கு வழியும் இல்லை.''

''நீ ஒரு முதல் தரமான புளுகன், கிஸியோவ். நீ சொல்வதைப் பார்த்தால், நீ ஒரு முதல் தரமான புளுகன் என்பது நிச்சயமாகிறது.''

''பொய்யனா? நிச்சயமாகவா? அதுதான் அசல் உண்மை!''

''அவன் என் கையில் அகப்பட்டிருப்பானானால், அவனை ஒரு கம்பத்தில் கட்டி, பூமிக்குள்ளே புதைத்திருப்பேன். எத்தனை பேர்களை அவன் நாசமாக்கி விட்டான்!''

''நல்லது, எப்படியிருந்தாலும் நாம் அதை முடிக்கப் போகிறோம். அவன் இனிமேல் இங்கே வரமாட்டான்'' என்று அந்த முதிய சிப்பாய், கொட்டாவி விட்டுக் கொண்டே கூறினான்.

அந்த உரையாடல் வர வர வேகம் குறைந்தது, அங்கிருந்த சிப்பாய்கள் ஒவ்வொருவராகத் தூங்குவதற்கு கீழே படுத்தார்கள்.

''அந்த நட்சத்திரத்தைப் பாருங்கள், அவை பிரகாசிப்பது எவ்வளவு ஆச்சரியமாய் இருக்கிறது. பெண்கள் தங்களுடைய வஸ்திரத்தை விரித்ததைத்போல நீ நினைக்கலாம்'' என்று அவர்களில் ஒருவன் அந்த 'பால் வழி' என்ற நட்சத்திரக் கூட்டங்களைப் பார்த்தபோது கூறினான்.

''அடுத்த வருஷம் விளைச்சல் நன்றாய் இருக்குமென்பதைக் காட்டுவதற்கு அது ஒரு அடையாளம்.''

''இன்னும் கொஞ்சம் விறகு நமக்கு வேண்டும்.''

''நீ உன்னுடைய முதுகை காட்டி வெதுவெதுப்பாக்கிக் கொள்கிறாய். அதனால் உன்னுடைய வயிறு விறைத்துப் போகிறது, அது விசித்திரமாய் இருக்கிறது.''

''அட கடவுளே''.

''நீ எதற்காகத் தள்ளுகிறாய்? இந்த நெருப்பு உனக்கு மட்டும்தானா? இதோ பார், அவன் எப்படி காலையும் கையையும் பரப்பிப் போட்டிக்கிறான், பார்''?

அங்கே ஏற்பட்ட அமைதியில் தூங்கிக் கொண்டிருந்தவர்களின் குறட்டை கேட்டுக்கொண்டிருந்தது. மற்றவர்கள் திரும்பிப் படுத்து தங்களுக்கு வெதுவெதுப்பை உண்டு பண்ணிக் கொண்டு ஒவ்வொரு வார்த்தை பேசி வந்தார்கள். 100 அடிகளுக்கு அப்பாலிருந்த ஒரு

கணப்பு மூட்டத்தின் பக்கத்திலிந்து மகிழ்ச்சியான சிரிப்புக் குரல் வந்தது.

'' 5-வது கம்பெனியைச் சேர்ந்த அவர்கள் கத்திக் கொண்டிருக்கிறார்கள். பாருங்கள். அவர்கள் எப்பேர்ப்பட்ட ஆசாமிகள்!'' என்று ஒரு சிப்பாய் கூறினான்.

அங்கிருந்தவர்களில் ஒருவன் எழுந்து அந்த ஐந்தாவது கம்பெனியைச் சேர்ந்த கூட்டத்திற்கு போனான்.

''அவர்கள் எப்பேர்ப்பட்ட தமாஷை அனுபவித்துக் கொண்டிருக் கிறார்கள்!'' என்று போனவன் திரும்ப வந்து சொன்னான். இரண்டு பிரெஞ்சுக்காரர்கள் வந்து சேந்தார்கள். ஒருவன் முழுவதும் விறைத்துப் போனான். மற்றொருவன் வெறும் ஜம்பக்காரனாய் இருக்கிறான். அவன் பாட்டுகள் பாடிக்கொண்டிக்கிறான்...''

''ஓ, நான் அங்கே போய் பார்க்கப் போகிறேன்.''

அங்கிருந்தவர்களில் பலர் அந்த ஐந்தாவது கம்பெனியைச் சேர்ந்த கூட்டத்திற்குப் போனார்கள்.



அந்த காட்டின் ஓரத்தில் ஐந்தாவது கம்பெனியைச் சேர்ந்தவர்கள் முகாம் போட்டிருந்தார்கள். பனியின் மத்தியில் ஒரு பெரிய கணப்பு மூட்டம் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. உறைபனிகளோடு விளங்கிக்கொண்டிருந்த மரக் கிளைகளை அந்த வெளிச்சம் பிகாசப்படுத்திக் கொண்டிருந்தது.

நள்ளிரவில் அந்த காட்டிலுள்ள பனியில் காலடி ஓசைகளையும், காய்ந்து போன மரக்கிளைகளை முறிப்பதின் ஓசைகளையும் அவர்கள் கேட்டார்கள்.

''வாலிபர்களே, அது ஒரு கரடி'' என்று அவர்களில் ஒருவன் சொன்னான்.

அவர்கள் தங்கள் தலையை நிமிர்த்தி கவனித்துக் கேட்டார்கள். அந்தக் காட்டிலிந்து அந்த பிரகாசமான வெளிச்சத்தை நோக்கி, விசித்திரமான உடை அணிந்த இரண்டு மனிதர்கள், ஒருவரை யொருவர் பற்றிக் கொண்டு முன்னே வந்தார்கள்.

அவர்கள் அந்த காட்டில் ஒளிந்து கொண்டிருந்த இரண்டு பிரெஞ்சுக்காரர்கள். நமது சிப்பாய்களுக்கு புரியாத ஒரு மொழியை கரகரப்பான குரலில் எதையோ சொல்லிக் கொண்டு, கணப்பு மூட்டத்திற்கு பக்கத்தில் அவர்கள் வந்தர்கள். அவர்களில் ஒருவன்

மற்றவனை விட உயரமாயிருந்தான். அதிகாரிகளின் தொப்பியை அவன் அணிந்திருந்தான். மிகுந்த களைப்படைந்தவனாக காணப்பட்டான். கணப்பு மூட்டத்திடம் நெருங்கியதும், அவன் உட்கார முயன்றான். ஆனால் கீழே விழுந்தான். மற்றொருவன் குட்டையாக தடித்தவனான தலையில் ஒரு சால்வையை சுற்றிக் கொண்டிருந்தான். அவன் தனது தோழனை நிமிர்த்தி வைத்து, எதையோ சொல்லி, தனது வாயைக் காட்டினான். அங்கிருந்த சிப்பாய்கள் அந்த பிரெஞ்சுக்காரர்களை சூழ்ந்து, அந்த நோயாளி படுப்பதற்காக ஒரு பெரிய கோட்டை கீழே விரிந்தார்கள். கோதுமை கஞ்சியையும், வாட்கா மதுவையும் அவர்கள் இருவருக்கும் கொண்டு வந்துகொடுத்தார்கள்.

களைப்படைந்துபோன அந்த பிரெஞ்சு அதிகாரிதான் ராம்பல். அவனுடன் இருந்த சால்வையை தலையில் சுற்றிக் கொண்டிருந்தவன், அவருடைய சேவகனான மாரெல்.

மாரெல் சிறிது வாட்கா மதுவையும் கஞ்சியையும் குடித்த பின்பு, திடீரென்று அவன் மகிழ்ச்சி கொண்டு, அந்த சிப்பாய்களுக்குப் புரியாத மொழியில் விடாமல் பேசிக்கொண்டிருந்தான். உணவு வேண்டாமென்று ராம்பல் மறுத்து விட்டு, தம்முடைய முழங்கையில் சார்ந்து, கணப்பு மூட்டத்திற்கு பக்கத்தில் மௌன மாக படுத்திருந்தார். அங்கிருந்த ருஷ்ய சிப்பாய்களை தமது சிவந்த வெறிச்சிட்ட கண்களால் நோக்கிக் கொண்டிருந்தார். இடை யிடையே ஒரு நீண்ட முணக்கம் செய்து விட்டு, பின்னால் மீண்டும் மௌனமாகி விடுவார். அவருடைய தோள்களை சுட்டிக் காட்டி ராம்பல் ஒரு அதிகாரியென்றும், அவருக்கு வெதுவெதுப்பை உண்டு பண்ண வேண்டுமென்றும், அந்த சிப்பாய்களுக்கு சொல்லுவதற்கு மாரெல் முயற்சி செய்து கொண்டிந்தான். அங்கு வந்த ஒ ருஷ்ய அதிகாரி, தம்முடைய கர்னலுக்கு ஒரு ஆளை அனுப்பி, அந்த பிரெஞ்சு அதிகாரியை வெதுவெதுப்பிற்காக, குடிசைக்குள் அழைத்து வரலாமா என்று கேட்டு வரச் சொன்னார். போய் வந்த தூதன் அந்த அதிகாரியை அழைத்து வரும்படி கர்னல் சொல்லியதாயக் கூறினான்.

ஆகவே ராம்பலை அங்கே போகும்படி சொன்னார்கள். ராம்பல் எழுந்து நடக்க முயற்சி செய்தார். அவரால் முடியாமல் தடுமாறினார். அச்சமயம் அங்கிருந்த ஒரு சிப்பாய் அவரைப் பிடித்திருக்காவிட்டால், அவர் கீழே விழுந்திருப்பார்.

''நீர் அம்மாதிரி மீண்டும் செய்யமாட்டீர், இல்லையா?'' என்று சிப்பாய்களின் ஒருவன், கண் சிமிட்டி ராம்பலைப் பார்த்து கேலியாகச் சொன்னான்.

''ஓ, முட்டாள். நீயேன் குப்பைப் பேச்சுகளை பேசுகிறாய்? நீ ஒரு அயோக்கியன். உண்மையான விவசாயி!'' என்று, அந்த கேலி செய்த சிப்பாயைப் பார்த்து, எல்லா இடங்களிலிருந்தும் கண்டனக் குரல்கள் கேட்டன.

அவர்கள் ராம்பலைச் சுற்றி நின்று, அவரைத் தூக்கினார்கள். இரண்டு சிப்பாய்கள் ஒருவருக்கொருவர் கைகளை இணைத்து, அதில் அவரை உட்கார வைத்து, குடிசைக்குக் கொண்டு போனார்கள். அப்படிப் போகும்போது, அவர்களுடைய கழுத்துக் களை அவர் வளைத்துக்கொண்டு புலம்ப ஆரம்பித்தார்.

''ஓ நீங்கள் எவ்வளவு சிறந்த பேர்வழிகள்! எனது அன்பான, இனிமையான நண்பர்களே, இவர்கள்தான் மனிதர்கள். ஓ, எனது வீரமுள்ள, அன்பான நண்பர்களே'' என்று அவர் கூறி, ஒரு சிப்பாயினுடைய தோளில் ஒரு குழந்தையைப்போல தமது தலையைச் சாய்ந்தார்.

இதற்கிடையில் நெருப்பு மூட்டத்திற்குப் பக்கத்தில், ஒரு நல்ல இடத்தில் மாரெல் அமர்ந்து கொண்டிருந்தான். அவனைச் சுற்றி சிப்பாய்கள் இருந்தார்கள்.

ஒரு குட்டையான உடல் கட்டுள்ள பிரெஞ்சுக்காரனான மாரெல் கண் நோயினால் அவதிப்பட்டுக்கொண்டிருந்தான். பெண்களின் வெளிச்சட்டைகளில் ஒன்றை அணிந்துகொண்டு, தன்னுடைய தொப்பிக்கு மேலாக பெண்கள் கட்டுவதுபோல ஒரு சால்வையைச் சுற்றிக்கொண்டிருந்தான். அவன் குடி மயக்கத்தில் இருந்தபடியால், தன்னுடைய கரகரப்பான குரலில் ஒரு பிரெஞ்சுப் பாட்டைப் பாடிக் கொண்டு, தனது கையை பக்கத்தில் இருந்த சிப்பாய்மீது போட்டுக்கொண்டிருந்தான். ஆனால் சிப்பாய்கள் ஜாக்கிரதையோடு அவனை கவனித்து வந்தார்கள்.

''சரிதான், இப்பொழுது அதைப் பற்றி எனக்கு சொல்லிக்கொடு, நான் கற்றுக்கொள்வேன். அது எப்படி?'' என்று மாரெல் தழுவிக்கொண்டிருந்த அந்த மனிதன் சொன்னான். அவனும் ஒரு பாடகன், கோமாளி.

''நாலாவது ஹென்றியான தீரமுள்ள மன்னன் நீடூழி வாழ்க! அந்த பிசாசு'' என்று ஒரு பிரெஞ்சுப் பாட்டை அவன் பாடினான்.

''விவாரிக்கா! விப் செருவாறு! செடியா பிளியாக்கா!'' என்று அந்த சிப்பாய் மாரெலைப் பின்பற்றித் தன் கையை ஆட்டிக்கொண்டு உளறினான். ஆனால் மாரெல் பாடிய ராகத்தை விடாமல் பாடினான்.

''பலே பேஷ்! ஹ, ஹ, ஹ!'' என்று மகிழ்ச்சிச் சிரிப்புக்கள் நாலா திசைகளிலிருந்தும் வந்தன.

மாரெலும் தன் முகத்தை சுளித்துக்கொண்டு சிரித்தான்.

''நல்லது, மேலே பாடு; மேலே பாடு''

''குடிப்பதற்கும் போரிடுவதற்கும் உல்லாச வீரனாய் இருப்பதற்கும் உள்ள முக்குணங்கள் அவனிடம் இருந்தன.''

''ரொம்ப அழகாய் இருக்கிறது. நல்லது, ஜாலேட்டேவ், இப்பொழுது பாடு.''

மிகுந்த சிரமத்தோடு ஜாலேட்டேவ், ''கீ-இ இ இ'' என்று குரலை நீட்டினான். ''லெ-ட்ரிட்-டா-லா-டி-டி-டி-பா, இ-டி-ட்ரா-வா-கா-லா'' என்று தொடர்ந்து பாடினான்.

''பலே பேஷ்! பிரெஞ்சுக்காரன் மாதிரியே இருக்கிறது. ஓ, ஹோ, ஹோ, உனக்கு சாப்பிடுவதற்கு இன்னும் ஏதாவது வேண்டுமா?''

''இன்னும் கொஞ்சம் கஞ்சி கொடுங்கள். பட்டினியாக கிடந்த பின்பு, வயிறை நிரப்புவதற்கு வெகு நேரம் பிடிக்கும்.

அவர்கள் இன்னும் கொஞ்சம் கஞ்சி கொடுத்தார்கள். அந்த மூன்றாவது கஞ்சித்தட்டை காலி செய்வதற்கு மாரெல் சிரித்துக்கொண்டே ஆரம்பித்தான். அவனைக் கவனித்துக் கொண்டிருந்த வாலிபச் சிப்பாய்கள் எல்லாரும் மகிழ்ச்சியோடு புன்னகை காட்டினார்கள். இம்மாதிரி அசட்டுத்தனமாக தமாஷ் செய்வது தங்களுடைய கௌரவத்திற்கு ஒத்ததல்ல என்று நினைத்த வயதான சிப்பாய்கள், அந்த கணப்பு மூட்டத்தின் மற்றொரு பக்கத்தில் இன்னும் படுத்திருந்தார்கள். ஆனால் இடையிடையே அவர்களில் யாராவது ஒருவன், முழங்கையை ஊன்றி சிறிது உயர்ந்து, மாரெலை நோக்கி புன் முறுவல் காட்டுவான்.

''அவர்களும் மனிதர்கள்தான்'' என்று அவர்களில் ஒருவன் தன்னுடைய கோட்டை மேலே மூடிக்கொள்ளும் போது சொன்னான். ''கசப்பான மரமாயிருந்தாலும், அதனுடைய வேர்களில்தான் அது வளர முடியும்.''

''ஓ கடவுளே, ஓ கடவுளே! நட்சத்திரங்கள் எவ்வளவு பிரகாசமாய் தோன்றிக்கொண்டிருக்கின்றன. பிரமாதமாயிருக்கிறது! அதிலிருந்து உறைபனி கடுமையாக ஏற்படும் என்பது நிச்சயம்...''

அவர்கள் எல்லாரும் மௌனமானார்கள். தங்களை ஒருவரும் கவனிக்கவில்லை என்று நினைத்த நட்சத்திரங்கள், அந்த இருண்ட வானத்தில் விளையாட ஆரம்பித்தன. திடீரென்று பிரகாசமாவதும், பின்னால் மறைவதும், அதன் பின்னால் நடுங்குவதுமான அவைகள் காணப்பட்டன. அவையெல்லாம் ஏதோ ஒரு மகிழ்ச்சியான ரகசியமான விஷயத்தை ஒன்றுக்கொன்று மெதுவாக சொல்லிக் கொள்ளுவது போல காணப்பட்டன.

# 15

## 10

ஒரே மாதிரியான கணக்கில் பிரெஞ்சு ராணுவம் கரைந்து கொண்டே வந்தது. பெரியோஜினாவைப் பற்றி ஏராளமாக எழுதப்பட்டிருக்கிறது. அதைப் பிரெஞ்சு ராணுவம் கடந்தபோது, அதனுடைய அழிவுக்கு அது ஒரு படியாக அமைந்தது. ஆனால், அதுதான் அதனுடைய அழிவிற்கு மூல காரணம் என்று சொல்ல முடியாது. பிரெஞ்சுக்காரர்களின் சார்பில் பெரியோஜினாவைப் பற்றி ஏராளமாக எழுதப்பட்டும், இப்பொழுதும் எழுதிக் கொண்டும் இருக்கிறார்களென்றால், அதற்கு ஒரே ஒரு காரணந்தான் உண்டு. அதாவது, அந்த ஆற்றுக்கு குறுக்காய் உள்ள உடைந்துபோன பாலத்தில், ஒரே இடத்தில் அந்த ராணுவம் நஷ்டமடைய நேரிட்டதாகும். தொடர்ந்து அந்த ராணுவம் பல தடவைகளில் விபத்துக்களில் அகப்பட்டு வந்த போதிலும், திடீரென்று அந்த விபத்துக்களெல்லாம் ஒன்று கூடி, தங்கள் கைவரிசையை ஏக காலத்தில் அந்த பாலத்தில் காட்டிய படியால், அந்த துக்ககரமான காட்சியானது ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிந்துபோய் இருந்தது. ருஷ்யர்களின் சார்பில் அதை ஏன் முக்கியமாக நினைத்தார்கள் என்பதைப் பார்ப்போம். யுத்த களத்திற்கு வெகு தூரத்திலுள்ள பீட்டர்ஸ்பர்க்கில் பூயல் என்பவர் மீண்டும் ஒரு திட்டத்தைத் தயாரித்திருந்தார். பெரியோஜினா ஆற்றுக்குப் பக்கத்தில், ஒரு ராணுவ தந்திர வலையினால் நெப்போலியனைப் பிடித்துவிட, அந்தத் திட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒவ்வொருவரும் திட்டத்தின்படியே காரியங்கள் நடைபெறும் என்று உறுதியாக இருந்தபடியால், அந்த பிரெஞ்சு ராணுவம் பெரியோஜினா நதியை கடந்ததினால்தான் அழிந்து போயிற்று என்று வற்புறுத்த ஆரம்பித்தார்கள். உண்மையில் பீரங்கிகளிலோ, மனித பலத்திலோ பெரியோஜினா நதியைக் கடந்ததினால் பிரெஞ்சுக்காரர்களுக்கு ஏற்பட்ட நஷ்டமானது, கிராஸ்னோவில் ஏற்பட்ட மகா பெரிய நஷ்டத்தைவிட எவ்வளவோ குறைவாகத் தானிருந்தது. இவற்றை புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.

பெரியோஜினா நதியை கடந்ததிலுள்ள ஒரே முக்கியத்துவமான ஒரு விஷயத்தில் அடங்கியிருக்கிறது. அதாவது, எதிரி பின்வாங்கிப் போவதை துண்டித்து விடமுடியும் என்ற திட்டங்கள் எல்லாம், உபயோகமற்றவை என்பதை அது தெளிவாகவும் சந்தேக மில்லாமலும் நிரூபித்து விட்டது. அதே மாதிரி, பின்வாங்கிப் போகும் எதிரிக்குப் பின்னால் சும்மா தொடர்ந்து செல்வது

ஒன்றுதான், அப்பொழுது மேற்கொள்ளவேண்டிய நடவடிக்கை என்று குட்டுஜோவும், ராணுவத்தில் பெரும் பகுதியினரும் சொல்லிவந்தது மிகுந்த பொருத்தமான யோசனை என்பதையும் அது நிரூபிக்கிறது. பிரெஞ்சு கூட்டமானது வரவர அதிகமான வேகத்தோடு ஓடிக் கொண்டிருந்தது. தன்னுடைய எல்லையை போய் அடைய வேண்டும் என்பதில் அதனுடைய பலம் முழுவதும் செலவிடப்பட்டு வந்தது. ஒரு காயமடைந்த பிராணியைப் போல அது ஓடிக் கொண்டிருந்தபடியால், அதனுடைய வழியில் போய் நிற்பது என்பது அசாத்தியமானது. இந்த உண்மையை, நதிகளைக் கடப்பதற்கு அந்த ராணுவம் செய்த ஏற்பாடுகளை விட, நதியைக் கடக்கும்போது பாலங்களில் உண்மையாக நடந்த காரியங்கள் நிரூபிக்கின்றன. பாலங்கள் முறிந்து விழுந்தபோது, ஆயுதங்கள் இல்லாத சிப்பாய்களும், மாஸ்கோவிலிருந்து வந்தவர்களும், பிரெஞ்சுப் போக்குவரத்து வாகனங்களிலிருந்த பெண்களும், குழந்தைகளும் கவலையினால் பீடிக்கப்பட்டவர்களாய், படகுகளில் கூட்டமாய் ஏறி நதியைக் கடந்தார்களேயொழிய, சரண் அடையவில்லை.

அந்த பரபரப்பானது நியாயமானது. ஓடிக் கொண்டிக் கிறவர்களின் நிலைமையும், துரத்திக் கொண்டிக்கிறவர்களின் நிலைமையும், ஒரே மாதிரியாக மோசமாகவே இருந்தன. அவர்கள் தங்களுடைய மக்களோடு இருந்திருந்தால், தங்களுடைய கூட்டத் தாரிடமிருந்து ஒவ்வொருவரும் உதவியை நம்பியிருக்கலாம். ஆனால் சரணடைந்தவர்கள் அதே மாதிரியான பரிதாபகரமான நிலைமையில் இருந்தபோதிலும், வாழ்க்கையின் அவசியமான தேவைகளைக் கேட்பதற்கு, அவர்களுக்கு அவ்வளவு தூரம் உரிமையில்லாமல் இருந்தது. கைதியாக அகப்பட்ட பிரெஞ்சுக்காரர்களில் பாதிப் பேர்கள் வரையில் பசியினாலும், குளிரினாலும் மாண்டு போனார்கள். அவர்களைக் காப்பாற்ற வேண்டுமென்று ருஷ்யர்கள் நினைத்தபோதிலும், ஒன்றும் செய்ய முடியவில்லை. அவர்களை என்ன செய்வது என்பது ருஷ்யர்களுக்குத் தெரியவில்லை. இந்த ராணுவ சேதமானது பிரெஞ்சுக்காரர்களுக்கும் தெரியும். இதைத் தவிர்க்க வேறு எதுவும் செய்ய முடியாதென்பதும் அவர்களுக்குத் தெரியும். பிரெஞ்சுக் காரர்களிடம் மிகுந்த இரக்கம் கொண்ட ருஷ்ய கமாண்டர்களும், ருஷ்ய ராணுவத்திலுள்ள பிரெஞ்சுக்காரர்களும் கூட, அந்தக் கைதிகளுக்கு எவ்விதமான உதவியையும் செய்ய முடியாத நிலைமையில் இருந்தார்கள். ருஷ்ய ராணுவத்திற்கு ஏற்பட்ட அதே கஷ்டங்கள் தான் பிரெஞ்சு ராணுவத்திற்கும் ஏற்பட்டன. என்றாலும், பிரெஞ்சுக்காரர்கள் அந்தக் கஷ்டங்களினால் அழிந்து

போனார்கள். நம்முடைய பசியால் வாடும், நமக்கு அவசியமான சிப்பாய்களிடமிருந்து ரொட்டியையும் ஆடைகளையும் எடுத்து, பிரெஞ்சுக்காரர்களுக்குக் கொடுப்பது என்பது அசாத்தியமான காரியம். பிரெஞ்சு கைதிகள் தீங்கு செய்ய முடியாதவர்களாய் இருந்தபோதிலும், அவர்கள்மீது குற்றமோ வெறுப்போ இல்லாமல் இருந்தபோதிலும், அச்சமயத்தில் அவர்கள் ருஷ்யாவுக்கு அவசிய மில்லாதவர்களாய் இருந்தார்கள். அப்படியிருந்தும் சில ருஷ்யர்கள் அவர்களுக்கு உதவி செய்தார்கள். அம்மாதிரி செய்தவர்கள் விதிவிலக்கானவர்கள்.

பிரெஞ்சுக்காரர்களுக்குப் பின்னால் அழிவு என்பது நிச்சயமாக இருந்தது; ஆனால் நம்பிக்கை என்பது அவர்களுக்கு முன்னால்தான் இருந்தது. அவர்களுடைய சாதனங்கள் எல்லாம் அழிந்து போயின. கூட்டமாக அவர்கள் சேர்ந்து ஓடுவது ஒன்றில்தான், அவர்களுடைய கதிமோட்சம் இருந்தது. அந்த ஒன்றின் மீதுதான் பிரெஞ்சுக்காரர்கள் தங்களுடைய முழு கவனத்தையும் செலுத்தினார்கள்.

அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக ஓடுகிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக பின்தங்கியவர்கள் துன்பங்கள் வளர்ந்தன. முக்கியமாக பெரியோஜினாவின் சம்பவத்திற்குப் பின்னால் (அந்த இடத்தில்தான் பீட்டர்ஸ்பர்க்கில் திட்டத்தினால் ஏற்பட்ட பலனாக), ருஷ்யர்களுக்கு விசேஷமான நம்பிக்கை ஏற்பட்டன. ருஷ்ய கமாண்டர்களுக்கு ஆத்திரம் அதிகமாக வளர்ந்தது. அவர்கள் தங்களையே ஒருவருக்கொருவர் குறை கூறிக்கொண்டும், எல்லாவற்றிற்கும் மேலாக குட்டுஜோவைக் குறை கூறிக்கொண்டும் இருந்தார்கள். பீட்டர்ஸ்பர்க்கின் பெரியோஜினா திட்டமானது தோற்றுப் போனதற்கு காரணமாக குட்டுஜோவைத்தான் சொல்லுவார்கள் என்றும் எதிர்பார்த்து இருந்தார்கள். அதனால் அதிகமான அதிருப்தியும், இகழ்ச்சியும், கேலியும் வரவர அதிகமாக வளர்ந்தன. கேலியும், இகழ்ச்சியும் மரியாதையோடு சொல்லப்பட்டபடியால், எந்த விதமாக தம் மீது குறை கூற முடியுமென்று குட்டுஜோவ் கேட்பதற்கு சாத்திய மில்லாமலிருந்தது. அவரிடம் அவர்கள் சிரத்தையோடு பேசுவதில்லை. அவரிடம் வந்து அறிக்கையிடும்போதோ, அல்லது அவருடைய அனுமதி கோரும்போதோ, அம்மாதிரியாக செய்ய வேண்டியதாய் இருக்கிறதே என்று வருத்தப்படுகிறவர்கள் போலக் காணப்பட்டார்கள். அவக்குப் பின்னால் கண் சிமிட்டுவார்கள். அவரை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தவறாக நடக்கும்படி முயற்சிப்பார்கள்.

ஏனென்றால், அவரை அவர்களால் புரிந்துகொள்ள முடிய வில்லை. அந்த முதியவரிடம் பேசுவது உபயோகமற்றது என்று

அவர்கள் எல்லாரும் நினைத்துக்கொண்டார்கள். தங்களுடைய திட்டங்களின் பெரும் மதிப்பை அவரால் உணர்ந்து கொள்ள முடியாதென்றும், அவருக்கு வழக்கமான வாக்கியங்களால் அவர் பதில் சொல்லுவார் என்றும் அவர்கள் நினைத்தார்கள். தங்கப்பாலமென்றும், கந்தலை அணிந்து கொண்டிருக்கும் ஒரு கூட்டத்தைக் கொண்டு எல்லையைக் கடக்க முடியாதென்றும், இம்மாதிரியான வாக்கியங்களை அவர் சொல்லுவாரென்றும் அவர்கள் நினைத்தார்கள். இவற்றையெல்லாம் அவர்கள் முன்பே கேட்டிருக்கிறார்கள். உணவுப் பொருள்கள் வரும்வரை காத்திருக்க வேண்டும் என்றோ, அல்லது துருப்புகளுக்கு ஜோடுகள் வரும் வரையில் காத்திருக்க வேண்டுமென்றோ அவர் சொல்லுவதெல்லாம், ரொம்ப சுலபமாக புரிந்து கொள்ளக் கூடிய விஷயங்கள்; ஆனால் அவர்கள் சொல்லுகிற விஷயங்களோ ரொம்ப சிக்கலான சாமர்த்தியமான விஷயங்கள்; ஆகவே அவற்றைப் புரிந்துகொள்ள முடியாமல், அவர் கிழவராகவும் புத்தியில்லாதவராகவும் இருக்கிறார் என்றும், தாங்கள் உயர் பீடத்தில் இல்லாவிட்டாலும், தாங்கள்தான் மேதைகளான கமாண்டர்களென்றும் அவர்கள் நினைத்தார்கள்.

மிகுந்த புத்திசாலியான கடற்படை தளபதியும், பீட்டர்ஸ்பர்க் வீரருமான விட்ஜென்ஸ்டைன் என்பவருடைய ராணுவம், தங்கள் ராணுவத்தோடு சேர்ந்த பின்பு, இம்மாதிரியான மனோபாவமும் பேச்சுகளும் பரிவாரங்களில் உச்ச நிலையை அடைந்தன. குட்டுஜோவ் இதைக் கவனித்தார். இதைக் கண்டு அவர் பெருமூச்சு விட்டு, தமது தோள்களைக் குலுக்கினார். பெரியோஜினா சம்பவத்திற்கு பின்னால், ஒரே ஒரு தடவைதான் அவர் கோபம்கொண்டு பெனிக்செனுக்கு பின்வரும் கடிதத்தை எழுதினார். (பெனிக்சென் சக்கரவர்த்திக்கு தனியாக எழுதினார்) குட்டுஜோவ் எழுதிய கடிதமானது:

''மேன்மை தங்கிய உமக்கு உடம்பு அசௌகரியமாயிருப்பதால், இந்த குறிப்பு உமக்கு கிடைத்ததும், தயவுசெய்து காலுகாவிற்கு புறப்பட்டுச் செல்லும். அங்கே மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியிடமிருந்து மேல் உத்தரவுகளை நீர் எதிர்பார்ப்பீராக.''

பெனிக்சென் புறப்பட்டுச் சென்ற பின்பு, ஜாரேவிச் கான்ஸ்டன்டைன் பாவ்லாவிச் என்ற கிராண்ட் டியூக் ராணுவத்தில் வந்து சேர்ந்தார். அந்த படையெடுப்பு ஆரம்பத்தில் அவர் ராணுவத்தில் கலந்திருந்தார். பின்னால், குட்டுஜோவினால் ராணுவத்திலிருந்து அவர் அகற்றப்பட்டார். இப்பொழுது மீண்டும் ராணுவத்திற்கு வந்து சேர்ந்த பின்பு, நமது துருப்புகளின் வெற்றிகள் மோசமாய் இருக்கின்றன என்றும், அவர்கள் முன்னேறுவது

மெதுவாய் இருக்கிறதென்றும், சக்கரவர்த்தி மனவருத்தம் அடைந்திருப்பதாக குட்டுஜோவிடம் கூறினார். இன்னும் சில நாட்களில் சக்கரவர்த்தியே அந்த ராணுவத்தில் வந்து சேரப் போவதாகவும் கூறினார்.

முதியவரான குட்டுஜோவ் ராஜ சபையிலும், ராணுவ விவகாரங்களிலும் மிகுந்த அனுபவம் அடைந்தவர். சென்ற ஆகஸ்டு மாதத்தில் சக்கரவர்த்தியின் விருப்பத்திற்கு விரோதமாக, இதே குட்டுஜோவ்தான் சேனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதே குட்டுஜோவ்தான் பட்டத்து இளவரசரான கிராண்ட் டியூக்கை ராணுவத்திலிருந்து அகற்றினார். சக்கரவர்த்தியின் விருப்பத்திற்கு விரோதமாக, தம்முடைய சொந்த அதிகாரத்தை உபயோகித்து, மாஸ்கோவைக் கைவிடவேண்டுமென்று தீர்மானித்தார். அந்த குட்டுஜோவ், அதே குட்டுஜோவ், இப்பொழுது தமது காலம் முடிவடைந்துவிட்டது என்பதையும், தாம் செய்ய வேண்டிய காரியங்கள் எல்லாம் முடிந்துவிட்டன என்பதையும், தமக்கு உள்ள அதிகாரங்கள் இப்பொழுது இல்லையென்பதையும் உடனே அறிந்து கொண்டார். இந்த விஷயங்களை ராஜ சபையில் மனப்போக்கில் இருந்து மட்டுந்தான் அவர் அறிந்துகொண்டார் என்பதில்லை; ராணுவ காரியத்தில் தாம் செய்ய வேண்டிய வேலை முடிந்துவிட்டபடியால், தமது நோக்கம் நிறைவேறி விட்டது என்பதை அவர் ஒரு பக்கம் உணர்ந்தார். தளர்ந்து போன தம்முடைய உடல் வலிமையை அவர் உணர்ந்து, அதற்கு ஓய்வு கொடுக்க வேண்டிய அவசியத்தையும் மற்றொரு பக்கத்தில் அவர் அறிந்தார்.

''அருமையான வில்னா'' என்று அவர் அழைத்து வந்த அந்த வில்னாவுக்குள், நவம்பர் 29-ந் தேதியன்று குட்டுஜோவ் பிரவேசித்தார். அவருடைய உத்தியோக காலத்தில் இதுவரை இரண்டு தடவைகள் அவர் வில்னாவின் கவர்னராக வேலை பார்த்திருக்கிறார். யுத்தத்தினால் அந்த நகரம் எவ்விதமான சேதமும் அடையவில்லை. அந்தப் பணம் செழித்த பட்டணத்தில் பழைய நண்பர்களையும் சங்கங்களையும் மீண்டும் அவர் சந்தித்தார். அவற்றோடு, அவருடைய வாழ்க்கையில் வெகு காலவாக அவருக்கு கிடைக்காமலிருந்த சொகுசான வாழ்க்கையையும் அவர் அங்கே பெற்றார். திடீரென்று அவால் சாத்தியமானவரையில் ராணுவத்தைப் பற்றியும், ராஜ்யத்தைப் பற்றியும் உள்ள கவலைகளை நீக்கிவிட்டு அவருக்கு முன்பு பழக்கமான அந்த அமைதியான வாழ்க்கையில் அவர் மூழ்கினார். அப்பொழுது சரித்திரத்தில் நடந்து கொண்டிருக்கும் காரியங்களைப் பற்றியும், நடக்க வேண்டி யிருக்கும் காரியங்களைப் பற்றியும், எவ்விதமான கவலையும் இல்லாதவரைப் போலக் காணப்பட்டார்.

ராஜ்யங்களை உடைப்பதிலும், துண்டு படுத்துவதிலும், சிச்சாகோவ் என்பவர் மிகுந்த ஆர்வம் பெற்றவர். கிரீஸிலும், பின்னால் வார்சாவிலும் யுத்தம் நடத்த வேண்டும் என்று அவர்தான் முதலில் சொன்னார். ஆனால் அவரை எந்த இடத்திற்கு அனுப்புகிறார்களோ, அங்கே போவதற்கு அவர் எப்பொழுதுமே விரும்புவதில்லை. சக்கரவர்த்தியோடு தைரியமாக பேசக்கூடியவரென்று அவர் பேர் பெற்றவர். 1811 ஆம் வருஷத்தில் துருக்கியுடன் சமாதானம் செய்யும்படி, குட்டுஜோவுக்குப் புறம்பாக அவரை அனுப்பினார்கள். அவர் போவதற்கு முன்பாகவே, ஒரு சமாதான உடன் படிக்கை அங்கேயே ஏற்பட்டுவிட்டது. அந்த சமாதான உடன்படிக்கையை ஏற்படுத்திய பெருமை உண்மையில் குட்டுஜோவையே சேர வேண்டுமென்று அவர் சக்கரர்த்தியிடம் சொன்னார். ஆகவே அதற்காக குட்டுஜோவ் தம்மிடம் கடமைப்பட்டிருக்கிறார் என்று சிச்சாகோவ் நினைத்து வந்தார். அந்த சிச்சாகோவ்தான் முதல் முதலாக குட்டுஜோவ் தங்கியிருக்கப் போகும் அரண்மன்னயில் சந்தித்தார். கடற்படை யூனிபாரத்தில் உடையணிந்து, தொப்பியை தமது கையில் பிடித்துக்கொண்டு, ராணுவ படை வீட்டின் அறிக்கையையும், அந்த நகரத்தின் சாவிகளையும் குட்டுஜோவிடம் கொடுத்தார். அந்த தள்ளாத முதியவரிடம் வாலிபர்கள் காட்டக்கூடிய மரியாதையோடு கூடிய இகழ்ச்சியானது, பூர்ணமான தன்மையில் சிச்சாகோவிடம் காணப்பட்டது. குட்டுஜோவைப் பற்றி எம்மாதிரியாக குற்றம் குறைகள் கூறுகிறார்கள் என்பதை சிச்சாகோவ் அறிவார்.

அவரிடம் பேசிக்கொண்டிருக்கும்போது, பாரைஸ்ஸாவில் அவரிடமிருந்து அபகரித்த பீங்கான் சாமான் வண்டிகள், திரும்பவும் அவரிடம் ஒப்படைக்கப்படுமென்று தற்செயலாக குட்டுஜோவ் கூறினார்.

''அப்படியானால், எனக்கு சாப்பிடுவதற்கு பிளேட்டுகள் இல்லையென்று நீர் நினைக்கிறீரா? டின்னர் கச்சேரிகளை நீர் கொடுக்க விரும்பினால் கூட, அவற்றிற்கான பீங்கான சாமான்கள் ஒவ்வொன்றையும் நான் கொடுக்க முடியும்'' என்று வேகத்தோடு சிச்சாகோவ் பதில் கூறினார். தம்முடைய தார்மீக நேர்மையை தாம் பேசிய ஒவ்வொரு வார்த்தையிலும் காட்டுவதற்கு அவர் முயற்சித்தபடியால், குட்டுஜோவும் அதேமாதிரி ஆசையோடு இருப்பார் என்று அவர் மனோராஜ்யம் செய்தார்.

குட்டுஜோவ் தமது தோள்களை குலுக்கிக்கொணடு, நாசூக்கான புன்னகையோடு கூறினார்: ''நான் என்ன சொன்னேனோ, அதைத் தான், அதை மட்டுமே தான், நான் நினைத்துச் சொன்னேன்.''

சக்கரவர்த்தியின் விருப்பத்திற்கு விரோதமாக ராணுவத்தின் பெரும் பகுதியை வில்னாவில் குட்டுஜோவ் நிறுத்தி வைத்திருந்தார். அந்த நகரத்தில் அவர் தங்கியிந்த காலத்தில், அவர் மிக மிக அதிகமான மந்தத்தோடும், உடம்பு அசௌக்கியத்தோடும் இருந்ததாக, அவரைச் சுற்றியிருந்தவர்கள் கூறினார்கள். ராணுவ காரியங்களை வேண்டா வெறுப்பாக அவர் கவனித்து வந்தார். எல்லாவற்றையும் தம்முடைய ஜெனரல்களிடமே விட்டுவிட்டு, சக்கரவர்த்தியின் வருகைக்காக எதிர்பார்த்து, வியர்த்தமான வாழ்க்கையை நடத்தி வந்தார்.

கோமகன் டால்ஸ்டாய், இளவரசர் வால்கோன்ஸ்கி, அராக்சீவ் இன்னும் மற்றவர்கள் அடங்கிய பரிவாரத்தோடு, டிசம்பர் மாதம் 7-ந் தேதியன்று பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து சக்கரவர்த்தி புறப்பட்டு, 11-ந் தேதி வில்னாவை வந்து அடைந்தார். தாம் பிரயாணம் செய்து வந்த உறைபனி வண்டியிலேயே, தமது அரண்மனைக்கு நேராகப் போனார். உறைபனி கடுமையாக இருந்தபோதிலும், நூற்றுக் கணக்கான ஜெனரல்களும், பரிவாரங்களும், ராணுவ அணிவகுப்பு யூனிபாரங்களை அணிந்து, அந்த அரண்மனைக்கு முன்பாக நின்று கொண்டிருந்தார்கள், அதைத் தவிர ராணுவ மரியாதை செய்வதற்காக, செமியோனாவ் பட்டாளத்தைச் சேர்ந்த ஒரு படைப்பிரிவும் அங்கே நின்று கொண்டிருந்தது.

வாயில் நுரை தள்ளிக்கொண்டு இருந்த மூன்று குதிரைகள் பூட்டிய ஒரு உறைபனி வண்டியில் தூதர் ஒருவர் வேகமாக வந்து சேர்ந்தார். ''பின்னால் வருகிறார்கள்'' என்று அவர் கூச்சலிட்டார். கானாவ்நைட்சின் என்பவர் உடனே குட்டுஜோவிடம் சொல்லு வதற்கு முன் அறைக்கு விரைந்தார். குட்டுஜோவ் சேவகனின் விடுதியில் காத்துக்கொண்டிருந்தார்.

யூனிபாரம் அணிந்து, தமது மார்பையெல்லாம் பதக்கங்களால் மறைத்து, வயிற்றைச் சுற்றி ஒரு பட்டியைக் கட்டிக் கொண்டு, பெரிய பருத்த உருவத்தோடு கூடிய அந்த முதியவர் முற்ற மண்டபத்திற்கு வந்து சேர்ந்தார். தமது தொப்பியைத் தலையில் சாய்ந்து தரித்திருந்தார். கையுறைகளை கையில் வைத்துக்கொண்டு, பக்கவாட்டில் படிகளில் இறங்கி, மிகுந்த கஷ்டத்தோடு தெருவிற்கு வந்து சேர்ந்தார். சக்கரவர்த்திக்காக தயாரித்திருந்த அறிக்கையை தமது கையில் வைத்திருந்தார்.

இங்குமங்கும் ஓடுவதும், குசுகுசுவென்று பேசுவதுமாக அங்கே காணப்பட்டன. மற்றொரு உறைபனி வண்டி வேகமாக பறந்து வந்தது. அந்த வண்டியை நோக்கி எல்லாருடைய கண்களும் திரும்பின. அந்த வண்டியில் சக்கரவர்த்தியும், வால்கோன்ஸ்கியும் அமர்ந்திருப்பதைத் தூரத்திலேயே காண முடிந்தது.

ஐம்பது வருஷ பழக்கத்தினால், இந்தக் காரியங்களெல்லாம் அந்த முதிய ஜெனரலுக்கு பரபரப்பைக் கொடுத்தன. தமது உடைகளை அவசரமாக அவர் தடவி விட்டுக்கொண்டு, தமது தொப்பியைச் சரியாக வைத்துக் கொண்டு நிமிர்ந்து நின்று கொண்டிருந்தார். சக்கரவர்த்தி அந்த உறைபனி வண்டியிலிருந்து இறங்கி அதே வினாடியில் தமது கண்களை உயர்த்தி அவரைப் பார்த்து, அவரிடம் தமது அறிக்கையை சமர்ப்பித்து, தமது மிருதுவான, தயவான குரலில் பேச ஆரம்பித்தார்.

குட்டுஜோவை தலையிலிருந்து பாதம் வரையில் வேகமாக சக்கரவர்த்தி நோட்டமிட்டுவிட்டு, ஒரு வினாடி முகம் சுளித்து உடனே தம்மைச் சமாளித்துக்கொண்டு, அந்த முதியவரிடம் தமது கைகளை நீட்டிக்கொண்டு சென்றார். அவரைத் தழுவிக்கெண்டார். இந்த ஆலிங்கனம் கூட, அவருடைய உள்ளத்தில் வெகு காலமாக இருந்துவந்த உணர்ச்சியினால் குட்டுஜோவிடம் ஒரு உணர்ச்சியைத் தோற்றுவித்தது. உடனே அவர் விம்மினார்.

அதிகாரிகளுக்கும், செமியோனாவ் காப்பாளர்களுக்கும் சக்கரவர்த்தி வந்தனம் சொல்லி விட்டு, மீண்டும் அந்த முதியவரின் கையை அழுத்திக் கொண்டு, அவரோடு அரண்மனைக்குள் போனார்.

சேனாதிபதியோடு சக்கரவர்த்தி தனிமையாக இருந்தபோது ருஷ்ய ராணுவம் பிரெஞ்சுக்காரர்களைத் துரத்திக் கொண்டு போவதில் மிகுந்த தாமதம் ஏற்படுவதைக் கண்டு, தமக்குள்ள அதிருப்தியை சக்கரவர்த்தி தெரிவித்தார். கிராஸ்னோவிலும் பெரியோஜினாவிலும் ஏற்பட்ட தவறுகளுக்காகவும், தமது அதிருப்தியைத் தெரிவித்தார். வெளி நாட்டில் தம்முடைய படையெடுப்பு உத்தேசங்களைப் பற்றியும் அவர் தெரிவித்தார். குட்டுஜோவ் எந்த விதமான பதிலோ, அபிப்பிராயமோ தெரிவிக்க வில்லை. ஏழு வருஷங்களுக்கு முன்னால் ஆஸ்டர்லிட்ஜ் போர்க்களத்தில் சக்கவர்த்தியின் உத்தரவுகளை பெறும்போது அவருடைய முகத்தில் காணப்பட்ட பணிவான, கருத்து எதுவுமில்லாத தோற்றமானது, அவருடைய முகத்தில் இப் பொழுதும் தோன்றியது.

படிப்பு அறையிலிருந்து கவிழ்ந்த தலையோடு குட்டுஜோவ் வெளியே வந்தார். அவர் நடன அறையைக் கடந்து வந்தபோது, அவரைப் பார்த்து ஒரு குரல் பேசுவது கேட்டது.

''கலங்காத மேன்மை தங்கியவரே.''

குட்டுஜோவ் தமது தலையை உயர்த்தி, வெகு நேரமாக கோமகன் டால்ஸ்டாயின் கண்களைப் பார்த்தார். அங்கே அவர் ஒரு வெள்ளித் தட்டை அவருக்கு முன்பாக நீட்டிக் கொண்டிருந்தார். அதில் ஒரு

சிறிய பொருள் காணப்பட்டது. தாம் என்ன செய்யவேண்டும் என்பதை குட்டுஜோவால் அறிய முடியாதது போலக் காணப்பட்டார்.

திடீரென்று அவருக்கு நினைவு கூர்ந்ததைப்போலத் தோன்றினார். அவருடைய தடித்த முகத்தில் ஒரு மெல்லிய புன்னகை பளிச்சிட்டது. அவர் தாழ்வாக தலை வணங்கி, மரியாதையோடு அந்த வெள்ளித்தட்டிலிருந்த பொருளை எடுத்துக் கொண்டார். அதுதான் செயிண்ட் ஜார்ஜின் முதல் வகுப்பு பதக்கமாகும். (செயின்ட் ஜார்ஜ் பதக்கமானது, 1769-ம் வருஷத்தில் மகாபெரிய காத்தரைன் சக்கரவர்த்தினியால் ஏற்பாடு செய்யப்பட்டது. யுத்தத்தில் வீர தீரங்களைக் காட்டியவருக்கு அது கொடுக்கப்பட்டது. அந்தப் பதக்கத்தில் முதல் வகுப்பானது மிக உயர்ந்த கௌரவம் கொண்டது. அதைக் கொடுப்பதே அபூர்வம். அந்தப் பதக்கத்தில் ஒரு நட்சத்திரமும் சிலுவையும் சேர்ந்திருக்கும்.)

# 15

## 11

மறுநாளன்று பீல்ட் மார்ஷல் ஒரு டின்னர் கச்சேரியையும், நடனக் கச்சேரியையும் ஏற்பாடு செய்தார். அவற்றில் சக்கரவர்த்தி பிரசன்னமாயிருந்து கௌரவித்தார். செயின்ட் ஜார்ஜ் பதக்கத்தின் முதலாவது வகுப்பு பதக்கம் குட்டுஜோவுக்கு கொடுக்கப்பட்டது; மரியாதைகளில் உயர் வான மரியாதையை சக்கரவர்த்தி அவருக்குக் காட்டினார்; என்றாலும், அவரிடம் சக்கரவர்த்திக்குள்ள அதிருப்தியை எல்லாரும் அறிவார்கள். வழக்கமான மரியாதைகள் எல்லாம் அனுசரிக்கப்பட்டன. சக்கரவர்த்தி தான் முதலில் அதை ஆரம்பித்தார். என்றாலும், அந்த முதிய மனிதர் மீதுதான் எல்லாப் பழிகளையும் சுமத்தவேண்டுமென்றும், அவர் ஒன்றுக்கும் உபயோகமில்லாதவர் என்றும் ஒவ்வொருவரும் நினைத்தார்கள். காத்தரைன் காலத்து வழக்கப்படி, எதிரிகளிடமிருந்து கைப்பற்றப் பட்ட விருதுகளை, சக்கரவர்த்தி நடன அறைக்குள் பிரவேசிக்கும் போது, அவருடைய காலடியில் சமர்ப்பிக்க வேண்டுமென்று குட்டுஜோவ் ஏற்பாடு செய்தார். அதைக் கண்டதும் சக்கரவர்த்தி முகம் சுளித்து, எதையோ சொன்னார். அவர் சொன்ன வார்த்தைகளில், ''முதிய கோமாளி'' என்ற வார்த்தைகள் மட்டுந்தான் சிலருக்கு காதில் கேட்டன.

குட்டுஜோவிடம் சக்கரவர்த்திக்கு ஏற்பட்ட அதிருப்தி, முக்கியமாக வில்னாவில்தான் அதிகமாயிற்று. வரப்போகும் போர்த் திட்டத்தின் முக்கியத்துவத்தைப் பற்றி குட்டுஜோவாவால்

அறியவோ, அறிந்து கொள்ளவோ முடியாததினால்தான், அந்த அதிருப்தி அதிகமாயிற்று.

மறுநாள் காலையில் சக்கரவர்த்தி தம்மைச் சுற்றியிருந் தவர்களிடம் கூறினார்: ''நீங்கள் ருஷ்யாவைக் காப்பாற்றியது மட்டுமல்ல; ஐரோப்பாவையே காப்பாற்றினீர்கள்'' என்று சொன்னார். அதிலிருந்து யுத்தம் இன்னும் முடிவடையவில்லை என்பதை அவர்கள் அறிந்துகொண்டார்கள்.

இதை குட்டுஜோவ் மட்டும்தான் அறிந்துகொள்ள முடியவில்லை. புதிதாக ஏதாவது ஏற்படுகிற யுத்தத்தினால் நிலை மையை அபிவிருத்தி அடையும்படி செய்ய முடியாதென்றும், அதனால் ருஷ்யாவின் பெருமை உயர்ந்துவிடாதென்றும், ருஷ்யா இப்போது அடைந்துள்ள மகத்தான பெருமையை அது கெடுத்து விடுமென்றும், குட்டுஜோவ் பகிரங்கமாக சொல்லி வந்தார். புதிதாக துருப்புகளை சேர்ப்பது முடியாதென்றும், ஏராளமான கஷ்டங்களை ஏற்கெனவே மக்கள் அனுபவித்து விட்டார்களென்றும், ஆகவே புது முயற்சிகளில் தோல்வியே ஏற்படுமென்றும் இம்மாதிரியான விஷயங்களைச் சக்கரவர்த்திக்கு நிரூபிக்க அவர் முயற்சி செய்து வந்தார்.

பீல்ட் மார்ஷலுடைய மனப்போக்கு இம்மாதிரியாக இருப்ப தால், வரப்போகும் யுத்தத்திற்கு அவர் எதிராகவும், இடையூறாகவும் இருப்பாரென்று அவரைப்பற்றி நினைத்தது இயற்கையேயாகும்.

அந்த முதியவரோடு மனக்கஷ்டமான தகராறுகளை தவிர்க்க வேண்டுமானால், ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, ஆஸ்டர்லிட்ஜில் அவருக்கு செய்ததைப்போல, ருஷ்ய யுத்தத்தின் ஆரம்பத்தில் பார்க்ளேக்கு செய்ததைப் போல, அதிகாரத்தை மீண்டும் சக்கரவர்த்திக்கு மாற்றிவிடுவது ஒன்றுதான், அந்த வழி. அம்மாதிரி செய்தால்தான், அந்த முதிய மனிதரின் அதிகாரத்தைப் பிடுங்கவும், அதனால் அவருக்கு மன வருத்தம் ஏற்படாமல் செய்யவும் சாத்தியமாகும்.

இந்த நோக்கத்தோடு அவருடைய பரிவாரங்களை கொஞ்சம் கொஞ்சமாக மாற்றி அமைத்து, அந்தப் பரிவாரங்களின் உண்மையான பலத்தை சக்கரவர்த்திக்கு மாற்றினார்கள். டால், கானாவ்னைட்சின், எர்மோலாவ் ஆகியவர்கள் புதிய நியமனங் களைப் பெற்றார்கள். பீல்ட் மார்ஷலுடைய பலவீனத்தையும், அசௌக்கியத்தைப் பற்றியும் ஒவ்வொருவரும் பலமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

அவருடைய பதவியைப் பிடுங்கி மற்றொருவருக்கு கொடுக்க வேண்டுமானால், அவருடைய ஆரோக்கியம் குறைவானதாகத்தான்

இருந்தாக வேண்டும். என்றாலும், உண்மையில் அவருடைய ஆரோக்கியம் மோசமாகத்தான் இருந்தது.

அவர் துருக்கியிலிருந்து திரும்பி, பீட்டர்ஸ்பர்க்கில் ராணுவத்திற்கு ஆட்களைச் சேர்ப்பதற்காக பொக்கிஷ இலாகாவிற்கு வந்ததைப்போலவும், பின்னால் அவருடைய சேவை அவசியமாய் இருந்தபோது, மீண்டும் அவரை ராணுவத்திற்கு அனுப்பியது போலவும், இயற்கையாகவும் சுலபமாகவும் படிப்படியாகவும் அவருக்கு மாறுதலை உண்டு பண்ணினார்கள். அதாவது, அவர் செய்ய வேண்டிய வேலை முடிந்துவிட்ட படியால், அவருடைய இடத்திற்கு ஒரு புதிதான, அவசியமான ஒருவரை நியமித்தார்கள்.

தேசீய முக்கியத்துவத்தினால், ஒவ்வொரு ருஷ்யரின் உள்ளத்தையும் அந்த் 1812-ஆம் வருஷத்து யுத்தம் கவர்ந்திருந்தது. இப்பொழுது அந்த யுத்தமானது, ஐரோப்பிய முக்கியத்துவத்தோடு விளங்க வேண்டியதாய் இருந்தது.

மேற்கிலிருந்து கிழக்கே மக்கள் பெயர்ந்து வந்ததற்கு பதிலாக, கிழக்கிலிருந்து மேற்கே பெயர்ந்து போகவேண்டியதாய் மாறியது, இந்தப் புதிய யுத்தத்திற்கு மற்றொரு தலைவர் அவசியமாயிருந்தது. அதாவது, குட்டுஜோவுக்கு நேர் எதிரான கொள்கைகளையும் குணங்களையும் கொண்டவராகவும், நேர் எதிரான நோக்கங்களையும் கொண்டவராகவும் உள்ள ஒரு தலைவர் அவசியமாயிருந்தது.

கிழக்கிலிருந்து மேற்கே மக்கள் போவதற்கும், ருஷ்ய நாட்டின் தேசிய எல்லைகளை மாற்றியமைப்பதற்கும், முதலாவது அலெக்ஸாண்டர் அவசியமாயிருந்தார். ருஷ்யாவை ரட்சித்து, அதன் பெருமையைக் காப்பாற்றுவதற்கு குட்டுஜோவ் எவ்வளவு அவசியமாயிருந்தாரோ, அதே மாதிரி, புதிய வேலைகளுக்கு முதலாவது அலெக்ஸாண்டர் அவசியமாயிருந்தார்.

ஐரோப்பா என்றால் என்ன, சமபலம் என்றால் என்ன, நெப்போலியன் என்றால் என்ன என்பவைகளை குட்டுஜோவ் அறிந்திருக்கவில்லை. அவரால் அதை அறியவும் முடியாது. எதிரியை நாசமாக்கிய பின்பு ருஷ்யாவை விடுதலை செய்து, அதற்கு பெரிய மகத்துவம் ஏற்படும்படி செய்த பின்பு, ஒரு ருஷ்யர் என்ற முறையில், ருஷ்ய மக்களின் பிரதிநிதியான அவர் செய்யக்கூடிய வேலை எதுவுமில்லை. தேசிய யுத்தத்தின் பிரதிநிதியாய் இந்த அவர் செய்யக்கூடிய வேலை இனி எதுவும் இல்லாதபடியால், அடுத்தபடியாக அவர் காலமாவதைத் தவிர வேறு எதுவுமில்லை. அதே மாதிரி குட்டுஜோவ் காலமானார்.

# 15

## 12

கைதியாக இருந்தபோது பீயர் அனுபவித்த சரீர - மனக்கஷ்டங்களின் பூரண வேகத்தை, அவர் விடுதலையான பின்புதான் அனுபவிக்க நேர்ந்தது. அவர் விடுதலையான பின்பு ஓரெல் என்ற இடத்திற்கு வந்தார். அங்கிருந்து மூன்றாவது நாளன்று கீவ் என்ற இடத்திற்குப் போவதற்கு அவர் தயாரான போது, அவர் அசௌக்கியமடைந்து மூன்று மாதங்கள் படுக்கையில் கிடந்தார். பித்த ஜுரமென்று டாக்டர்கள் சொன்னார்கள். அவரிடமிருந்து இரத்தத்தை வெளிப்படுத்தியும், மருந்துகளைக் குடிக்கும்படியும் டாக்டர்கள் செய்துவந்த போதிலும் கடைசியாக அவர் குணமடைந்தார்.

அவர் விடுதலையானதிலிருந்து அவர் நோயில் படுத்த வரையில் என்ன காரியங்கள் நடந்தன என்பதைப் பற்றி, பீயரின் மனதில் தெளிவாக எதுவுமில்லை. மந்தமான காலநிலையும், ஒரு சமயம் மழையும், மற்றொரு சமயம் பனியும் பெய்து வந்ததும், அவருடைய உடம்பு அசௌக்கியமாய் இருந்ததும், அவருடைய கால்களிலும் பக்கங்களிலும் ஏற்பட்டிருந்த வலிகளும் அவருக்கு நினைவில் இருந்தன. மக்களுடைய துரதிர்ஷ்டங்களையும் கஷ்டங்களையும் பற்றிய ஒரு பொதுவான கருத்து, அவருடைய நினைவில் இருந்தது. அதிகாரிகளுடையவும் ஜெனரல்களுடையவும் ஆவலான கேள்விகளினால் அவர் தொந்தரவு அடைந்ததும், அவர் நினைவில் இருந்தது. ஒரு வண்டியையும் குதிரைகளையும் பெறுவதற்கு எவ்வளவு க்ஷ்டப்படவேண்டியிருந்தது என்பதும், அவருடைய நினைவில் இருந்தது. அந்தக் காலங்களில் எல்லாம் சிந்தனை செய்யவும், உணர்ச்சி கொள்ளவும் அவரால் முடியாமலிருந்ததைப் பற்றியும், அவருடைய நினைவில் இருந்தது. அவர் விடுதலையான தினத்தில் பெட்டியா ராஸ்டோவின் உடலைப் பார்த்தார். அதே தினத்தில், பாராடினோ போருக்குப் பின்னால் காயமடைந்து, ஒன்றரை மாதங்களாக ராஸ்டோவ்களுடன் வசித்து, சமீபத்தில் யாராஸ்லாவ் என்ற இடத்தில் ராஸ்டோவ்களின் வீட்டில் இளவரசர் ஆண்ட்ரூ காலமானதையும் கேள்விப்பட்டார். டெனைசாவ்தான் இந்தச் செய்தியை அவருக்குச் சொன்னார். ஹெலனுடைய மரணத்தை பீயர் முன்பே அறிந்திருக்கலாம் என்று நினைத்து, அதையும் டெனைசாவ் பிரஸ்தாபித்தார். இவையெல்லாம் அந்தக் காலத்தில் பீயருக்கு விசித்திரமாய்த் தோன்றின. அவற்றின் முக்கியத்துவத்தை அவரால் அறிய முடியவில்லையென்று அவர் உணர்ந்தார். அச்சமயத்தில், மனிதர்கள் ஒருவரையொருவர் கொன்று

கொண்டிருக்கும் இடங்களிலிருந்து எவ்வளவு சீக்கிரமாக வெளியேற முடியுமோ, அவ்வளவு சீக்கிரமாகப் போகவேண்டும் என்பதிலேயே அவர் ஆவல் கொண்டிருந்தார். அமைதியான ஒரு இடத்திற்குச் சென்று, தமது உடலைத் தேற்றி ஓய்வு பெற்று, தாம் அறிந்துகொண்ட விசித்திரமான புதிய விஷயங்களை எல்லாம் பற்றிச் சிந்திக்கவேண்டுமென்று அவர் விரும்பினார். ஆனால், ஓரெலை அவர் அடைந்ததும், அசௌக்கியமான படுக்கையில் படுத்தார். அவர் சௌக்கியம் அடைந்த பின்பு, அவருடைய வேலைக்காரர்களில் இருவரான டெரன்டியும் வாஸ்காவும் அவருக்கு வேண்டியவைகளைக் கவனித்துக் கொண்டிருப்பதை அறிந்தார். அவர்கள் மாஸ்கோவிலிருந்து வந்திருந்தார்கள். அவர்களோடு அவ்வுருடைய எலட்ஸ் என்ற எஸ்டேட்டில் வசித்து வந்த அவருடைய மைத்துனியான மூத்த இளவரசியும், அவருடைய விடுதலையையும், அசௌக்கியத்தையும் கேள்விப் பட்டு அவரைக் கவனிப்பதற்காக அங்கே வந்தாள்.

அவர் சௌக்கியமடைந்து கொண்டிருந்த போதுதான், கடந்த சில மாதங்களாக அவர் பழகிப் போயிருந்த பழைய நினைப்புகள், மெதுவாக கொஞ்சம் கொஞ்சமாக அவரை விட்டு நீங்க ஆரம்பித்தன. அவரை யாரும் எங்கேயும் போகும்படி சொல்ல மாட்டார்கள் என்பதையும், அவரிடம் இருந்து அவருடைய வெது வெதுப்பான படுக்கையையும் யாரும் பிடுங்கிக் கொள்ள மாட்டார்கள் என்பதையும், அவருக்கு டின்னரோ, தேநீரோ இராச்சாப்பாடோ நிச்சயமாக கிடைக்கும் என்பதையும், கொஞ்சம் கொஞ்சமாக அவர் உணர ஆரம்பித்தார். ஆனால், வெகுகாலம் வரையில் அவருடைய கனவுகளில் அவர் கைதியாக இருப்பதாகவே கண்டு வந்தார். அதே மாதிரி அவருடைய விடுதலைக்குப் பின்னால், இளவரசர் ஆண்ட்ரூவின் மரணத்தைப் பற்றியும், அவருடைய மனைவியின் மரணத்தைப் பற்றியும், பிரெஞ்சுத் துருப்புகளின் அழிவைப் பற்றியும், அவர் கேள்விப்பட்ட செய்திகளை கொஞ்சம் கொஞ்சமாக புரிந்து கொள்ள ஆரம்பித்தார்.

மகிழ்ச்சியான விடுதலை உணர்ச்சியானது - இயற்கையாக மனிதனுக்கு ஏற்படக்கூடிய மாற்ற முடியாத சுதந்திர உணர்ச்சி மாஸ்கோவிற்கு வெளியே அவர் முதலில் தங்கியபோது உணர்ந்தார். சௌக்கியம் அடைந்து வந்தபோது, பீயரின் உள்ளத்தை நிரப்பியது. வெளிநிலைமைகளுக்கு கொஞ்சங்கூட சம்பந்தமில்லாமல் காணப்படும் இந்த உள் சுதந்திரத்தை அறிந்ததும் அவர் ஆச்சரிய மடைந்தார். அந்த உள் சுதந்திரமானது, இப்பொழுது அவருடைய வெளி சுதந்திரத்திற்கு ஒரு துணையாக இருந்தது. பழக்கமானவர்கள் யாருமில்லாத ஒரு புதிய நகரில் அவர் மட்டும் தனியாக இருந்தார்.

அவர் என்ன செய்ய வேண்டுமென்று யாரும் அவரிடம் சொல்லவில்லை. அவரை யாரும் எங்கும் அனுப்பவில்லை. அவருக்கு வேண்டியவை யெல்லாம் கிடைத்து வந்தன. அவருக்கு இடைவிடாத துன்பமாயிருந்த அவருடைய மனைவியின் நினைப்பானது, இப்போது துன்பத்தைக் கொடுக்கவில்லை. ஏனெனில் அவள் உயிரோடு இல்லை.

''ஓ, எவ்வளவு நன்றாய் இருக்கிறது! எவ்வளவு சிலாக்கியமாய் இருக்கிறது!'' என்று அவர் தமக்குப் பக்கத்தில் ஒரு சுத்தமான மேஜையைக் கொண்டு வந்து போட்ட போது நினைத்தார். அந்த மேஜை மீது மிகுந்த மணமான மாமிச ரசம் இருக்கும். அவர் சுத்தமான படுக்கையில் இரவு படுக்கும் போதும், அதே மாதிரி நினைப்பார். பிரெஞ்சுக்காரர்கள் போய்விட்டார்கள் என்பதையும், தமது மனைவி உயிரோடு இல்லை என்பதையும் அவர் நினைக்கும் போதும் அம்மாதிரி எண்ணம் அவருக்கு தோன்றுவதுண்டு. ''ஓ, எவ்வளவு நன்றாய் இருக்கிறது! எவ்வளவு சிலாக்கியமாய் இருக்கிறது!''

ஆனால் அவருடைய பழைய வழக்கத்தினால் அவர் தம்மையே கேட்டுக் கொள்வார்: ''நல்லது, அப்புறம் என்ன? நான் என்ன செய்யப்போகிறேன்?'' என்று கேட்டு, அப்புறம் தாமே பதிலும் கூறிக் கொள்வார். ''நல்லது, நான் வாழ்க்கையை நடத்துவேன். ஆ, எவ்வளவு சிலாக்கியமாய் இருக்கிறது!''

அதே கேள்விதான் முன்பெல்லாம் அவரை வருத்தி வந்தது. வாழ்க்கையின் நோக்கத்தைப் பற்றி அவர் அறிவதற்கு இடைவிடாமல் முயற்சி செய்து, அந்தக் கேள்வியினால் வருத்தி வந்தார். இப்போது அந்த வருத்தமெல்லாம் அவருக்குக் காணப்படவில்லை. வாழ்க்கையின் நோக்கம் என்ன என்பதைப் பற்றிய ஆராய்ச்சியானது தற்காலிகமாக மட்டும் மறைந்திருக்கவில்லை; அது இப்போது உயிரோடு இல்லையென்றும், மீண்டும் தன்னிடம் அது வராதென்றும் அவர் நினைத்தார். ஆகவே, ''வாழ்க்கையின் நோக்கமென்ன?'' என்ற அந்தக் கேள்வி மறைந்து போனதினால், அந்த மறைவானது அவருக்குப் பூர்ணமான, மகிழ்ச்சியான விடுதலை உணர்ச்சியைக் கொடுத்தது, அந்த உணர்ச்சிதான் இச்சமயத்தில் அவருக்கு மகிழ்ச்சியாக அமைந்திருக்கிறது.

வாழ்க்கையின் நோக்கத்தை அவரால் பார்க்க முடியவில்லை. ஏனெனில், அவருக்கு இப்போது ஒரு நம்பிக்கை ஏற்பட்டிக்கிறயது. ஆட்சி வகைகளின் மீதோ, வார்த்தைகளின் மீதோ, கொள்கைகளின் மீதோ அந்த நம்பிக்கை ஏற்படவில்லை. ஆனால் அந்த நம்பிக்கையானது, நிரந்தரமாக எங்கும் நிறைந்து நிற்கும் அந்தக் கடவுள் மீது

ஏற்பட்ட நம்பிக்கையாகும், முன்பெல்லாம் தாமே ஏற்படுத்திக் கொண்ட நோக்கங்களில், அந்தக் கடவுளைப் பார்க்க அவர் முயற்சி செய்தார். அந்த நோக்கங்களைக் கண்டு பிடிப்பது என்பது, கடவுளை அறிய முயற்சி செய்வதேயாகும். அவர் கைதியாக இருந்தபோது. அவருடைய தாதி வெகு காலத்திற்கு முன்பு சொல்லிய விஷயம். அவருக்குத் திடீரென்று தோன்றியது. வார்த்தைகளினாலோ, தர்க்கங்களினாலோ அதை அவர் அறிந்து கொள்ளவில்லை. நேரடியாக அவருக்கு ஏற்பட்ட உணர்ச்சியினாலேயே அவர் அறிந்து கொண்டார். அவருடைய தாதி வெகு காலத்திற்கு முன்பாக, ''கடவுள் இங்கேவும்இருக்கிறார்; எல்லா இடங்களிலும் இருக்கிறார்'' என்று சொன்னாள். அதைத்தான் அவர் நேரடியாக உணர்ந்தார். சர்வலோகத்தையும் சிருஷ்டித்த சிற்பி என்று பிரீமேசன்களால் சொல்லப்படும் கடவுளை விட, காராட்டேவிடம் கண்ட கடவுள், அவருக்குப்பிரமாதமாகவும் எல்லையற்றதாகவும், ஆழங்காண முடியாததாகவும் அவர் கைதியாய் இருந்தபோது அறிந்து கொண்டார். தூரத்தில் இருப்பது ஒன்றைக் காண்பதற்காக கண்களை இடுக்கி ஒருவன் பார்த்தபின்பு, அவன் விரும்பிய பொருள் அவனுடைய காலடியிலேயே கிடக்கிறது என்பதைக் கண்டால் அவன் எம்மாதிரி உணர்ச்சி கொள்வானோ, அதே மாதிரி உணர்ச்சியை பீயரும் பெற்றார். அதுவரை அவருடைய வாழ்க்கை முழுவதிலும் தம்மைச் சுற்றி இருந்தவர்களுக்கு மேலாக அவர் தேடிக்கொண்டிருந்தார். அம்மாதிரி கண்களை அவர் சிரமப்படுத்தாமல் தமக்கு எதிராக அவர் பார்த்திருக்க வேண்டும்.

கடந்த காலத்தில் அந்த எல்லையற்ற, அறியமுடியாத பெரிய வஸ்துவை அவரால் காணமுடியவில்லை. எங்கோ ஒரு இடத்தில் அது இருக்க வேண்டும் என்று அவர் உணர்ந்து வந்தபடியால், அதைத் தேடிக் கொண்டிருந்தார். சமீபத்திலிருந்த ஒவ்வொன்றிலும் மனதிலும் அறியக் கூடிய ஒவ்வொன்றிலும் அவர் சாதாரணமான, அற்பமான, புத்தியற்ற விஷயங்களையே கண்டு வந்தார். தம்முடைய மனதை தூரதிருஷ்டியில் பழக்கிய பின்பு அவர் தொலை தூரத்தைப் பார்த்தபோது அங்கே உலக சம்பந்தமான அற்ப விஷயங்கள் தூரத்தில் மூடுபனியில் மறைந்திருப்பதைப் போலக் கண்டார். அவை தெளிவாக அவருக்குத் தெரியாததால் அவைதான் பிரமாதமானவை என்றும், எல்லையற்றவை என்றும் அவருக்குத் தோன்றின. அப்படித்தான் அவருக்கு ஐரோப்பிய வாழ்க்கையும், அரசியல் விஷயங்களும், பிரீமேசன் செய்கைகளும், தத்துவங்களும் நன்கொடைகளும் தோன்றின. அப்பொழுதும்கூட, சில சமயங்களில் அந்தத் தொலை தூரத்தை அவருடைய மனமானது ஊடுருவிப் பார்த்தபோது அவருக்கு அங்கே அற்பத்தனங்களும்,

உலக ஆசைகளும், புத்தியற்றவைகளும் தோன்றின. ஆனால் இப்பொழுது அவர் மகா பெரிய நிரந்தரமான எல்லையற்ற பொருளானது ஒவ்வொன்றிலும் இருப்பதைப் பார்ப்பதற்குக் கற்றுக்கொண்டார். ஆகவே, அதைப் பார்த்து, அதை நினைத்து அனுபவிப்பதற்காக தமது மனதிலிருந்த தூரதிருஷ்டிக் கண்ணாடியை வீசி எறிந்தார். அதைக் கொண்டு தான் மனிதர்களின் தலைகளுக்கு மேலாக அவர் அதுவரை பார்த்து வந்தார். அதை வீசிஎறிந்த பின்பு, இப்பொழுது அவர் மகிழ்ச்சியோடு, தம்மைச் சுற்றி நடந்து வரும் இடைவிடாத மாறுதலும், நிரந்தரமாக மகா பெரியதாய் இருப்பதும், ஆழங்காணமுடியாத எல்லையற்ற விதமாய் இருப்பதுமான வாழ்க்கையைக் கண்டு அனுபவித்தார். அவர் அதை நெருங்கிப் பார்க்க அவருக்கு அமைதியும் மகிழ்ச்சியும் அதிகமாய் ஏற்பட்டன. ''எதற்காக?'' என்ற அந்த பயங்கரமான கேள்வி முன்பெல்லாம் அவருடைய மனதைத் துன்புறுத்தி வந்தது. இப்பொழுது அதை காணவே இல்லை. ''எதற்காக''? என்ற அந்தக் கேள்விக்கு ஒரு சுலபமான பதில் அவருடைய ஆத்மாவில் எப்பொழுதும் தயாராய் இருந்தது. அதாவது: ''ஏனென்றால், ஒரு கடவுள் இருக்கிறார். அவருடைய விருப்பம் இல்லாமல், மனிதனின் தலையிலிருந்து ஒரு ரோமம் கூட கீழே விழுவதில்லை''.

## 15

### 13

வெளிப் பார்வையில் பீயர் மாறவே யில்லை. அவர் முன்னால் எப்படி இருந்தாரோ, அதே மாதிரிதான் பார்வைக்குத் தோன்றினார். முன்னார் இருந்தது போலவே அவர் பராக்கு புத்தியுடன் காணப்பட்டார். தமது கண்முன்பாகக் காணப்படுகிற விஷயங்களைத் தவிர, வேறு ஏதோ அவருக்கு சொந்தமான ஒரு தனி விஷயத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றி வந்தார். முன்னால் அவர் இருந்ததற்கும், இப்போது அவர் இருப்பதற்கும் ஒரே ஒரு வித்தியாசம் உண்டு. அதாவது, அவருக்கு முன்னாலுள்ள ஒரு விஷயத்தைப் பற்றியோ, அல்லது அவரிடம் சொல்லப்படும் ஒரு விஷயத்தைப் பற்றியோ அவரால் கிரகிக்க முடியவில்லையென்றால், அவர் தமது நெற்றியைச் சுளித்து, எதோ வெகு தூரத்திலுள்ள ஒன்றைப் பார்ப்பதற்கு, கஷ்டத்தோடு முயற்சி செய்பவரைப்போல முன்னாலெல்லாம் காணப்பட்டு வந்தார், இப்பொழுது இன்னமும் அவரிடம் சொல்லப்பட்ட விஷயங்களை அவர் மறந்து, அவருடைய கண்களுக்கு முன்னால் காணப்

படுவதை இன்னமும் அவர்பார்க்காமலேயே இருந்து வருகிறார். ஆனால் இப்பொழுதுதெல்லாம் ஒரு கேலியான புன்முறுவலோடு அவர்முன்னால் காணப்படுவதையும் அவரிடம் சொல்லப் படுவதையும் கவனித்து வந்தாலும், அவர் முன்பைவிட முற்றிலும் மாறாக பார்த்தும் கேட்டும் வருவதாக காணப்பட்டார். முன்பெல்லாம் அவர் கனிந்த உள்ளத்தோடு இருந்தாலும், சோகத்தோடு இருப்பதாகக் காணப்பட்டார். அதனால் மக்கள் அவரை தவிர்க்க விரும்பினார்கள். இப்பொழுதெல்லாம் வாழ்க்கையின் மகிழ்ச்சியைப் பற்றிய ஒரு புன்னகை, அவருடைய உதடுகளில் எப்பொழுது தவழ்ந்து கொண்டே இருக்கும். மற்றவர்கள் மீது ஒரு அனுதாபம் அவருடைய கண்களில் பிரகாசித்துக் கொண்டிருக்கும். தம்மைப்போல அவர்களும் திருப்தியோடு இருக்கிறார்களா என்ற கேள்விக் குறியோடு அவருடைய பார்வை விளங்கும். அவருடைய பிரசன்னத்தில் மக்கள் மகிழ்ச்சி கொள்ள ஆரம்பித்தார்கள்.

முன்பெல்லாம் அவர் மிக அதிகமாகப் பேசுவார். அவர் பேசும்போது பரபரப்பு கொள்ளுவார். மற்றவர்கள் பேசுவதை அவர் கேட்பது அபூர்வம். இப்பொழுதுதெல்லாம் அவர் பேச்சுகளில் பரபரப்பு கொள்வது அபூர்வம். மக்கள் சொல்வதைக் கவனித்து கேட்பார். ஆகவே தங்களுடைய அந்தரங்கமான ரகசியங்களை மக்கள் அவரிடம் சொல்லி வந்தார்கள்.

மூத்த இளவரசி எப்பொழுது பீயரிடம் பிரியம் கொண்டிருந்த தில்லை. அவருடைய பராமரிப்பில் தான் இருக்க வேண்டுமென்ற நிலை ஏற்பட்டது முதல், அதாவது, முதிய கோமகனின் மரணத்திற்குப் பின்பு, அவர்மீது குறிப்பாக விரோதம் காட்டி வந்தாள். ஆனால் இப்பொழுது ஓரெலில் அவள் சிறிது காலம் தங்கிய பின்பு (அவருடைய நன்றிகெட்ட தனத்திற்குப் பதிலாக அவருக்கு சிஷ்ருசை செய்ய வேண்டியது தமது கடமை என்பதை அவருக்கு காட்ட வேண்டுமென்று நினைத்தே வந்தாள்), அவள் அவர் மீது மிகுந்த பிரியம் கொள்ள ஆரம்பித்தாள். இதைக் கண்டு அவளுக்கே ஆச்சரியமாகவும் எரிச்சலாகவும் இருந்தது. பீயர் அவளுடைய தயவை பெறுவதற்காக எதையும் செய்யவில்லை. ஆனால் அவளை சிரத்தையோடு அவர் கவனித்து வந்தார். முன்பெல்லாம் பராமுகமாகவும் கேலியாகவும் தம்மை அவர் நடத்திவருவதாக அவள் நினைத்து வந்தாள். அதனால் மற்றவர்களிடம் அவள் நடந்து கொள்வதைப்போலவே அவரிடமும் தன்னை உள்ளே மறைத்துக் கொண்டு, தன்னுடைய சண்டை போடும் குணத்தையே காட்டி வந்தாள். ஆனால்

இப்பொழுது அவளுடைய இருதயத்திலுள்ள பரிசுத்தமான எண்ணங்களை அறிந்து கொள்ள அவர் முயற்சிப்பதாக அவளுக்குத் தோன்றியது. இதை முதலில் அவள் நம்பவில்லை. ஆனால் நம்பிய பின்பு, அவள் நன்றியுடன் தன்னுள்ளே மறைத்து வைத்த இனிமை யான குணங்களை அவர் தெரிந்து கொள்ளும்படி நடந்து வந்தாள்.

எவ்வளவு தந்திரமான மனிதனாக இருந்தாலும் பீயரைப்போல அவளுடைய உள்ளத்தில் அவ்வளவு தூரம் நம்பிக்கையைப் பெறும்படி, வெற்றியோடு நடந்திருக்க முடியாது. ஆகவே அவளுடைய இளமைப்பருவத்தின் சிறந்த காலங்களில் நடந்த காரியங்களை நினைவூட்டி அவளிடம் அனுதாபம் காட்டி வந்தார். இருந்தாலும், பீயருடைய தந்திரமானது ஒரேயொரு விஷயத்தில் தான் அடங்கியிருந்தது, அதாவது மனக் கசப்படைந்த கடுமையான உள்ளங்கொண்ட அந்தப் பெருமை மிக்க இளவரசியிடம் உள்ள மனித குணங்களை வெளிப்படுத்தி, அவற்றில் மகிழ்ச்சி கொள்ளுவதையே அவர் செய்து வந்தார்.

''ஆம், அவர் கெட்டவர்களுடைய சகவாசங்கள் இல்லாமல், என்னைப் போன்றவர்களுடைய, சகவாசத்திலிருக்கும்போது, மிக மிக அன்பான மனிதராய் இருக்கிறாய்'' என்று இளவரசி நினைத்தாள்.

அவருடைய வேலைக்காரர்களான டெரன்டியும் வாஸ்காவும் கூட, பீயரிடம் ஏற்பட்டுள்ள மாறுதலைக் கவனித்தார்கள். அவர் கபடம் எதுவுமில்லாமல் மிகுந்த சாதாரணமானவராக ஆகி விட்டார் என்று நினைத்தார்கள். எஜமானரின் வெளியுடைகளைக் களைந்த பின்பு, தனது எஜமானருடைய ஜோடுகளை ஒரு கையில் பற்றிக் கொண்டு, அந்த உடைகளைக் கையின்மீது தொங்க விட்டுக் கொண்டு, அவருக்கு நள்ளிரவு வணக்கம் சொல்லிய பின்பு, அவர் பேச ஆரம்பிக்க மாட்டாரா என்ற நோக்கத்தோடு டெரன்டி அங்கே தயங்கி நிற்பது வழக்கம். ஏதோ பேசவேண்டுமென்று டெரன்டி விரும்புவதாக பீயருக்குத் தோன்றும்போது, அவனை அங்கேயே நிறுத்தி வைப்பார்.

''நல்லது. எனக்குச் சொல்லு... உனக்கு எப்படி உணவு கிடைத்தது?'' என்று அவர் கேட்பார்.

உடனே டெரன்டி மாஸ்கோவின் அழிவைப் பற்றியும், முதிய கோமகனைப் பற்றியும் பேச ஆரம்பித்து, வெகு நேரமாக அந்த உடைகளை கைகளிலேயே தொங்க விட்டுக்கொண்டு பேசிக் கொண்டிருப்பான், அல்லது பீயர் சொல்லும் கதைகளைக் கேட்டுக் கொண்டிருப்பான். அதன் பின்னால் தனது எஜமானருடன் தனக்கு ஒரு இனிமையான அன்னியோன்னியம் ஏற்பட்டிருப்பதாக நினைத்து, அவர் மீது அன்பு கொண்டு அந்த இடத்தை விட்டு ஹாலுக்குப் போவான்.

பீயரைத் தினந்தோறும் டாக்டர் வந்து கவனித்து வந்தார். டாக்டர் என்ற முறையில், கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் மனித குலத்திற்கு அவருடைய ஒவ்வொரு வினாடியும், விலை மதிக்க முடியாதது என்பது போலக் காட்டிக்கொள்வது அவருடைய கடமையென்று நினைப்பார். என்றாலும், அந்த டாக்டர் பீயரிடம் வந்தால், மணிக்கணக்கான அங்கே உட்கார்ந்து, அவருக்குப் பிரியமான பழைய சம்பவங்களையும், பொதுவாக அவருடைய நோயாளிகளின் குணவிசேஷங்களையும், முக்கியமாகச் சீமாட்டிகளின் போக்குகளையும் பற்றிச் சொல்லிக்கொண்டிருப்பார்.

''அவருடன் பேசிக்கொண்டிருப்பதென்றால் அது ஒரு மகிழ்ச்சியாக இருக்கிறது. அவர் நமது பிரதேசத்து ஆட்களைப் போல இல்லை'' என்று அவர் சொல்வதுண்டு.

ஓரெலில் பிரெஞ்சு ராணுவத்திலிருந்து பிடிபட்ட ஏராளமான கைதிகள் இருந்தார்கள். அவர்களில் ஒருவரான ஒரு வாலிப இத்தாலியரை பீயரிடம் அந்த டாக்டர் அழைத்து வந்தார்.

அந்த அதிகாரி அடிக்கடி பீயரை வந்து சந்திப்பதுண்டு. அந்த அதிகாரி பீயரிடம் காட்டும் கனிவைக் குறிப்பிட்டு, இளவரசி அவரைக் கேலி செய்வதுண்டு.

பீயரைப் பார்ப்பதற்கும், அவருடன் பேசுவதற்கும், தம்முடைய கடந்த காலத்தைப் பற்றி சொல்லுவதற்கும், தம்முடைய ஊரிலுள்ள தமது வாழ்க்கையும் தமது காதலையும் சொல்லுவதற்கும், பிரெஞ்சுக்காரர்கள் மீது, முக்கியமாக நெப்போலியன் மீது அவருக்குள்ள கோபத்தை வெளியே காட்டுவதற்கும், அவர் வரும்போது மட்டுந்தான் அந்த இத்தாலியர் மகிழ்ச்சியுடன் இருப்பதாகக் காணப்படுவார்

''ருஷ்யர்கள் எல்லாரும் குறைந்தபட்சம் உம்மைப்போலவே இருப்பார்களானால், அம்மாதிரியான ஒரு சமுதாயத்தோடு யுத்தம் செய்வது தெய்வ நிந்தனையாகும்'' என்று அவர் பீயருக்குச் சொன்னார். ''பிரெஞ்சுக்காரரிடம் நீர் எவ்வளவோ துன்பம் அடைந்துங் கூட, அவர்களிடம் வெறுப்புணர்ச்சியைக்கூட நீர் காட்டுவதில்லை''.

அந்த இத்தாலியருடைய நல்ல சுபாவங்களை மட்டும் கிளப்பிவிட்டு, அதனால் பீயர் மகிழ்ச்சி அடைந்து வந்தார். இந்த செய்கையானது அந்த இத்தாலியரை பீயரிடம், ஆர்வத்தோடு கூடிய அன்பு கொள்ளும்படி செய்தது.

ஓரேலில் பியர் தங்கியிருந்த காலத்தில் கடைசி தினங்களில் அவருடைய பிரீமேசன் நண்பரான கோமகன் வில்லார்ஸ்கி அவரைப் பார்க்க வந்தார். அவர்தான் பீயரை 1807-ஆம் வருஷத்தில்

பிரீமேசன் சங்கத்தில் சேர்த்தார். ஒரு ருஷ்ய பணக்காரியை வில்லார்ஸ்கி திருமணம் செய்திருந்தார், அவருடைய மனைவிக்கு ஒரெல் மாகாணத்தில் ஒரு பெரிய எஸ்டேட் இருந்தது. அவர் அந்த நகரத்தில் சப்ளை இலாகாவில் தற்காலிகமாக ஒரு உத்தியோகத்தைப் பார்த்து வந்தார்.

ஓரெலில் பெஜுகாவ் இருக்கிறார் என்பதை கேள்விப்பட்டதும், அவர் பீயரைப் பார்ப்பதற்காக வந்தார். அவர்களிருவரும் எப்பொழுதும் அன்னியோன்னியமாய் இருந்ததில்லை. என்றாலும், ஒரு வனாந்திரத்தில் மக்கள் சந்திக்கும்போது எப்படி ஒருவருக்கொருவர் அக்கறை காட்டுவார்களோ, அதே மாதிரியான நட்பையும் அன்னியோன்னியத்தையும் அவர் காட்டினார். ஓரெலில் வசிப்பது வில்லார்ஸ்கிக்குப் பெரிய மந்தமாக இருந்தது. ஆகவே தம்முடைய வட்டாரத்தைச் சேர்ந்த ஒருவரை, அதோடு தமக்க சிரத்தையுள்ள விஷயங்களில் அவருக்கும் சிரத்தை இருப்பதாக கருதப்படும் ஒருவரை சந்திப்பதில், அவர் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார்.

ஆனால் தற்கால நிலைமையிலிருந்து பீயர் வெகுதூரம் பின்தங்கியிருக்கிறார் என்பதையும், அவர் தற்பெருமையிலும் பராமுகத்திலும் மூழ்கியிருக்கிறார் என்பதையும் கண்ட வில்லார் ஸ்கிக்கு ஆச்சரியமாக இருந்தது.

''ஏன் இப்படி சிரத்தை இல்லாமல் காலம் கழித்துக் கொண்டிருக்கிறீர், எனது அன்பான நண்பரே?'' என்று அவர் கேட்டார்.

அவையெல்லாம் எப்படியிருந்த போதிலும், பீயருடன் முன்பு அவர் சந்தித்தபோது இருந்ததைவிட, இப்பொழுது சந்திப்பது அதிக மகிழ்ச்சியுள்ளதாக அவருக்குத் தோன்றியது. ஆகவே ஒவ்வொரு நாளும் அவரைப் பார்ப்பதற்காக வருவார் ஆனால் பீயரை பொறுத்தவரையில் அவரைப் பார்க்கும்போதும், அவர் சொல்லு வதைக் கேட்கும்போதும், தாமும் அதே மாதிரி சிறிது காலத்திற்கு முன்னால் வரையில் இருந்ததாக நினைத்தபோது, அவருக்கு விசித்திரமாய் இருந்தது.

வில்லார்ஸ்கி ஒரு விவாகமான மனிதர், குடும்பஸ்தர். தம்முடைய உத்தியோக வேலைகளிலும், மனைவியின் சொத்து விஷயங்களிலும் தம்முடைய குடும்ப காரியங்களிலும், மிகந்த சுறுசுறுப்புள்ளவராக இருந்தார். இவையெல்லாம் வாழ்க்கைக்கு இடையூறானவை என்ற அவர் கருதினார். இவற்றின் நோக்கம் தம்முடையவும் தம்முடைய குடும்பத்தினுடையவும் நன்மை ஒன்றிலே குறியாய் இருப்பதால் இவை வெறுக்கத்தக்கவை என்று நினைத்தார். ராணுவம், ராஜாங்க நிர்வாகம், அரசியல், பிரீமேசன்

ஆகியவை சம்பந்தமான விஷயங்களில் அவர் இன்னமும் தொடர்ச்சியாக அக்கறை காட்டிவந்தார். பீயர் அவருடைய கொள்கைகளை மாற்றுவதற்கோ, அல்லது அவரை கண்டிக்கவோ முயற்சி செய்யவில்லை. அவருக்க இப்பொழுது சுபாவமாக அமைந்துவிட்ட அமைதியான மகிழ்ச்சியுடனும், தமாஷான புன் சிரிப்புடனும், இந்தப் பழக்கமான, ஆனால் விசித்திரமான அதிசயத்தை கவனித்து வந்தார்.

வில்லார்ஸ்கியிடமும், இளவரசியிடமும், டாக்டரிடமும், அவரை இப்பொழுது சந்திக்கும் மற்றவர்களிடமும் அவர் கொண்டுள்ள உறவில் ஒரு புதிய விசேஷம் காணப்பட்டது. ஆதனால் எல்லாருடைய நல்லெண்ணத்தையும் அவர் பெற்றோர். அதுதான், வார்த்தைகளினால் ஒருவருடைய அபிப்பிராய முடிவுகளை மாற்றுவது அசாத்தியம் என்பதாகும். அதுதான் ஒவ்வொருவரும் தங்களுடைய சொந்தக் கருத்தின்படி உணரவும், சிந்திக்கவும், பார்க்கவும் முடியும் என்பதை ஒப்புக் கொள்ளுவதாகும். தனிப்பட்ட நபர் ஒவ்வொருவருக்கும் அலாதியாகவுள்ள இந்தப் போக்கானது, முன்பெல்லாம் பீயருக்கு பரபரப்பையும் எரிச்சலையும் கொடுத்து வந்தது. இப்பொழுது அது மற்றவர்கள் மீது அனுதாபம் கொண்டு சிரத்தை கொள்ளுவதற்கு அஸ்திவாரமாக மாறிவிட்டது. மனிதர்களுடைய கருத்துக்களிலும் வாழ்க்கையிலும் காணப்படும் வித்தியாசங்களும் நேர்விரோதமான மாறுபாடுகளும், ஒருவருக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசங்களும், பீயருக்கு இப்பொழுது மகிழ்ச்சியைக் கொடுத்தன. அச்சமயங்களில் அவர் மகிழ்ச்சியோடு புன்சிரிப்பு காட்டுவதுண்டு.

காரியார்த்த விஷயங்களில் பீயர் இப்பொழுது தமக்குள்ளேயே ஒரு ஆகர்ஷணம் இருப்பதாக திடீரென்று உணர ஆரம்பித்தார். முன்பெல்லாம் இந்த உணர்ச்சி அவருக்கு இருந்ததில்லை. அவர் மிகப் பெரிய பணக்காரர் என்ற முறையில் பலர் அவரிடம் பணம் கேட்பதுண்டு. அச்சமயங்களில் எல்லாம் முன்னால் அவருக்கு ஒரு மனக்குழப்பமும் பரபரப்பும் ஏற்படுவதுண்டு. ''கொடுப்பதா? வேண்டாமா?'' என்று அவர் தம்மையே கேட்பதுண்டு. ''என்னிடம் பணம் இருக்கிறது. அவனுக்கு அது தேவையாய் இருக்கிறது. ஆனால் மற்றொருவனுக்கு அவனையிட அதிகமாகத் தேவை இருக்கிறது. அந்த இருவர்களில் யாருடைய தேவை அதிகமானது? ஒரு வேளை அவர்கள் இருவருமே ஏமாற்றுக்காரர்களாய் இருப்பார்களா?'' என்று அவர் சிந்திப்பதுண்டு. முன்னாட்களில் எல்லாம் இம்மாதிரியான யூகங்களிலிருந்து தப்புவதற்கு வழி கண்டுபிடிக்க முடியாமல் இருந்தார். அதனால் அவரிடம் கேட்பவர்கள் எல்லாருக்கும் அவரிடம் இருந்ததைக் கொடுத்து

வந்தார். இதே மாதிரி அவருடைய சொத்துக்களைப் பற்றியும் முன்பெல்லாம் அவருக்கு மனக்குழப்பம் இருந்து வந்தது. ஒருவர் ஒரு யோசனையைச் சொல்லுவார், மற்றொருவர் இன்னொரு யோசனையைச் சொல்லுவார்.

இப்பொழுது இம்மாதிரி விஷயங்களில் அவருக்கு சந்தேகமோ குழப்பமோ இல்லை என்பதைக் காண அவருக்கே ஆச்சரியமாய் இருந்தது. அவருக்கள்ளேயே ஒரு நீதிபதி இருந்து அவருக்கத் தெரியாத ஒரு விதியின் படி எந்தக் காரியத்தைச் செய்யவேண்டும், எதைச் செய்யக்கூடாது என்பதை தீர்மானித்து வந்தார்.

பண விஷயங்களில் முன்போலவே அசிரத்தையாக அவர் இருந்தாலும், எதைச் செய்யலாம், எதைச் செய்யக்கூடாது என்பதை நிச்சயமாக அவர் அறிந்து வந்தார். அவருக்குள் ஏற்பட்டிருக்கிற அந்த நீதிபதியிடம் முதல் காரியமாகக் தீர்ப்புக்கு வந்த விஷயம், ஒரு பிரெஞ்சு கைதியைப் பற்றியதாகும். அவர் ஒரு கர்னல். அவரிடம் வந்து, அவருடைய வீரத்தனங்களைப் பற்றியெல்லாம் பேசிய பின்பு, கடைசியாக தமது மனைவியையும் குழந்தைகளையும் அனுப்புவதற்கு நாலாயிரம் பிராங்குகள் வேண்டுமென்று கோரினார். கொஞ்சங்கூட முயற்சியோ கஷ்டமோயின்றி பீயர் மறுத்து விட்டார். கடக்க முடியாத கஷ்டமாக முன்பெல்லாம் தோன்றி வந்த அம்மாதிரி விஷயம், எவ்வளவு சுலப மாகவும் எளிதாகவும் முடிந்து விட்டது என்பதை அவர் பின்னால் நினைத்தபோது ஆச்சரியம் கொண்டார். அதேசமயத்தில், அந்தக் கர்னலுக்குப் பணம் கொடுக்க முடியாது என்று கூறிய அதே சமயத்தில், இத்தாலிய அதிகாரிக்கு தாம் ஒரெலை விட்டு புறப் பட்டுப் போகும்போது, கொஞ்சம் பணம் கொடுப்பதற்கு தந்திரம் செய்யவேண்டும் என்று தீர்மானித்தார். அந்த இத்தாலிய அதி காரிக்குப் பணம் அவசியமாய் இருந்தது. காரியார்த்த விஷயங்களில் அவருடைய அபிப்பிராயங்கள் உருப்பெற்று அமைந்துவிட்டன என்பதைக் காட்டுவதற்கு, மற்றொரு உதாரணம் ஏற்பட்டது. அதுதான் அவருடைய மனைவியின் கடன்களை அடைக்க வேண்டி யதைப் பற்றியும், மாஸ்கோவிலும் அதற்கு அருகாமையிலும் உள்ள அவருடைய வீடுகளைத் திரும்பக் கட்ட வேண்டும் என்பதைப் பற்றியும் அவர் செய்த தீர்மானமாகும்.

ஓரெலில் அவருடைய தலைமை மேனேஜர் அவரிடம் வந்து, அவருடைய வருமானம் குறைந்து போனதைக் கூறினார். மாஸ்கோ எரிந்து போனதினால், அந்த தலைமை மேனேஜரின் கணக்குப்படி, பீயருக்கு இருபது லட்சம் ரூபிள்கள் நஷ்டம் என்று தோன்றியது.

இந்த நஷ்டங்களைக் கண்டு பீயருக்கு மனவருத்தம் ஏற்படக்கூடாது என்பதற்காக மற்றொரு வழியை அந்த தலைமை

மேனேஜர் பீயரிடம் சொன்னார். அதாவது, அவருடைய மனைவியின் கடன்களை அவர் அடைக்க வேண்டும் என்று கட்டுப் பட்டிருக்கவில்லை என்றும், அதனால் அவர் அந்தக் கடன்களை கொடுப்பதற்ககு மறுத்துவிடலாம் என்றும், மாஸ்கோவிலும் அதற்குப் பக்கத்திலும் உள்ள வீடுகளை மீண்டும் பழுது பார்க்க வேண்டாம் என்றும், அவற்றிலிருந்து வரும்படி எதுவும் கிடையாது என்றும், அவற்றை பராமரிப்பது என்றால் வருஷத்திற்கு எண்பதாயிரம் ரூபிள்கள் செலவாகிறது என்றும் அவர் சொன்னார். இம்மாதிரி செய்தால், அவருடைய வருமானம் அதிகமாகும் என்றும் அவர் கூறினார்.

''ஆம், அது உண்மைதான்'' என்று பீயர் மகிழ்ச்சிப் புன்னகை யோடு பேசினார். ''அவையெல்லாம் என்று அவசியமில்லைதான், இந்த அழிவுகளினால் நான் அதிக பணக்காரனாகிவிட்டேன்.''

ஆனால், ஜனவரி மாதத்தில் மாஸ்கோவிலிருந்து சாவேலிச் என்பவர் வந்தார். மாஸ்கோவிலும், அதைச் சுற்றிலும் உள்ள பீயருக்குச் சொந்தமான வீடுகளைப் பழுது பார்ப்பதற்கு எவ்வளவு செலவாகும் என்பதற்கு, ஒரு கட்டிடச் சிற்பி தயாரித்த பட்டியலைக் கொண்டுவந்து கொடுத்தார். அந்த விஷயம் தீர்மானமான விஷயத்தைப்போல அவருடைய பேச்சு இருந்தது. அதே சமயத்தில் அவருடைய மனைவியின் கடன்களைப்பற்றி, இளவரசர் வாசைலியிடமிருந்தும், பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள வேறு சில அறிமுக மானவர்களிடமிருந்தும், அவருக்குக் கடிதங்கள் வந்தன. தமக்கு திருப்தியைக் கொடுத்த தலைமை மேனேஜரின் யோசனைகள் தவறானவை என்று பியர் தீர்மானித்தார். பீட்டர்ஸ்பர்க்கிற்கு சென்று தம்முடைய மனைவியின் கடன்களை அடைக்கவேண்டும் என்றும், மாஸ்கோ வீடுகளைப் பழுதுபார்க்க வேண்டும் என்றும் அவர் தீர்மானித்தார். இப்படிச் செய்ய வேண்டியதற்கு அவசியம் என்ன என்பது அவருக்குத் தெரியாது. ஆனால் அப்படிச் செய்ய வேண்டியது அவசியம் என்பதை நிச்சயமாக உணர்ந்தார். அவருடைய வருமானம் கால் பங்காகக் குறைந்துவிடும் என்றாலும், அப்படிச் செய்ய வேண்டியதுதான் என்று அவர் உணர்ந்தார்.

வில்லார்ஸ்கி மாஸ்கோ போவதாய் இருந்தார். ஆகவே, அவர்கள் இருவரும் ஒன்றாய் பிரயாணம் செய்வதென்று தீர்மானித்தார்கள்.

ஒரெலில் உடல் நலத்திற்காக பீயர் தங்கியிருந்த காலம் முழுவதிலும், வாழ்க்கையையும் சுதந்திரத்தையும் மகிழ்ச்சியையும் அனுபவிப்பது போன்ற ஒரு உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. அவர் பிரயாணம் செய்ய ஆரம்பித்ததும் வெளியுலகத்தில் நூற்றுக் கணக்கான புதிய முகங்களை அவர் பார்த்த போது, அந்த உணர்ச்சி இன்னும் அதிக பலமாயிற்று. அந்த பிரயாணம் முழுவதிலும்,

ரஜாவிலிருக்கும் ஒரு பள்ளிச் சிறுவனைப் போல அவர் உணர்ச்சி கொண்டார். வண்டிக்காரன், தபால் வீட்டிலுள்ள ஓவர்சியர்கள், தெருக்களிலும் கிராமங்களிலும் இருந்த விவசாயிகள் ஆகிய எல்லாருமே, அந்த பிரயாணத்தில் அவருக்கு ஒரு புதிய முக்கியத்துவமாகத் தோன்றினார்கள். ஐரோப்பாவோடு ஒப்பிடும்போது ருஷ்யா அறியாமையிலும் தரித்திரத்திலும் உழன்று வருவதாக வில்லார்ஸ்கி அந்த பிரயாணத்தில் புலம்பி வந்தார். அவருடைய வார்த்தைகளும் பிரசன்னமும், பீயருடைய மகிழ்ச்சியை அதிகரித்து வந்தன. மரித்துப் போனதாக வில்லார்ஸ்கிக்குத் தோன்றும் இடங்களில், பீயருக்கு ஒரு அசாதாரணமான சக்தி இருப்பதாகக் காணப்பட்டது. இந்த இணையற்ற விசித்திரமான மக்களின் வாழ்க்கையை அந்தப் சக்திதான் அந்த பரந்த வெளியில் பனிகளுக்கு இடையில் காப்பாற்றி வருவதாக அவருக்குத் தோன்றியது. அவர் வில்லார்ஸ்கி சொல்லியதை மறுக்கவில்லை; அவர் சொல்லியதை ஒப்புக்கொள்ளுவதைப்போல கூட காணப்பட்டார். அம்மாதிரி ஒப்புக்கொள்ளுவதுதான் பிரயோஜனமற்ற வாதங்களை தவிர்ப்பதற்கு சுலபமான வழி என்ற தோன்றியது. வில்லார்ஸ்கி சொல்லி வந்ததை மகிழ்ச்சியோடு புன்சிரிப்பு கொண்டு கேட்டு வந்தார்.

## 15

### 14

ஒரு எறும்புக் கூட்டைக் கலைத்த பின்பு, அவையெல்லாம் எங்கே எதற்காக அவசரமாய் போய்க் கொண்டிருக்கின்றன என்பதை விளக்குவது கஷ்டமாயிருக்கும். அந்தக் கலைந்த கூட்டிலிருந்து குப்பைகளையும், முட்டைகளையும், செத்த எறும்புகளையும் சில இழுத்துக்கொண்டு போகும். சில எறும்புகள் மீண்டும் கூட்டிற்குத் திரும்பும். அவை ஒன்றையொன்று இடித்துக்கொண்டு, ஒன்றையொன்று முந்திக்கொண்டு, ஒன்றுடன் ஒன்று சண்டை போட்டுக்கொண்டு ஏன் போகின்றன என்பதை விளக்கவது கஷ்டமான காரியம். அதே மாதிரி, பிரெஞ்சுக்காரர்கள் காலிசெய்து விட்டுப்போன பின்பு, முன்னால் மாஸ்கோவாக இருந்த இடத்திற்கு, இப்பொழுது எதற்காக ருஷ்யர்கள் அதை நோக்கி திரள் திரளாகப் போகிறார்கள் என்பதை விளக்கிச் சொல்லுவதும் கஷ்டமாயிருக்கும். அந்த அழிந்து போன எறும்புக்கூட்டை நாம் பார்ப்போமானால், அதைச் சுற்றிக்கூடி நிற்கும் எறும்புகளின் பிடிவாதத்தையும் உற்சாகத்தையும் காணலாம். அந்தக் கூட்டை அழித்து விட்டபோதிலும், அந்த எறும்புகளுக்கு அழிக்க முடியாத, சொல்ல முடியாத ஒரு

சக்தியிருப்பதையும், அந்தக் கூட்டத்திற்கு உண்மையாக பலம் அதுதான் என்பதையும், அந்த பலம் இன்னமும் இருக்கிறது என்பதையும் நாம் காண முடியும். அதேமாதிரி அக்டோபர் மாதத்தில் மாஸ்கோவில் அரசாங்கமோ, மாதா கோயில்களோ, பிரார்த்தனை ஸ்தலங்களோ, செல்வங்களோ, வீடுகளோ காணப்படவில்லை, என்றாலும், அந்த மாஸ்கோ ஆகஸ்டில் பார்த்த அதே மாஸ்கோவாகத் தான் இருந்தது. அழிக்க முடியாத, செல்லமுடியாத, ஒரு பலமான சக்தியைத் தவிர, மற்றவை யெல்லாம் அங்கே அழிந்து விட்டன.

மாஸ்கோவிற்கு அதை எதிரிகள் காலி செய்த பின்பு, கூட்டங் கூட்டமாக நாலா பக்கங்களிலிருந்து வந்து சேர்ந்த மக்களின் நோக்கம் பலவிதமாகவும் சுய நன்மையைக் கொண்டதாகவும் இருந்தன. முதலில் பெரும்பாலும் அவையெல்லாம் காட்டு மிராண்டித் தனமாகவும், மிருகத்தனமாகவும் இருந்தன. ஒரேயொரு நோக்கந் தான் எல்லாருக்கும் பொதுவானதாக இருந்தது. ஒரு காலத்தில் மாஸ்கோ என்று அழைக்கப்பட்ட இடத்திற்குப் போய்ச் சேர்ந்து, தங்களுடைய வேலைகளை அங்கே செய்யவேண்டும் என்ற ஆசை ஒன்றுதான் அதுவாகும்.

ஒரு வாரத்திற்குள்ளாக மாஸ்கோவில் 15,000 குடிகளும் இரண்டு வாரங்களுக்குள்ளாக 25,000 குடிகளுமாக இம்மாதிரி பெருகிக் கொண்டு போனார்கள். 1813-ம் வருஷத்தில் இலையுதிர் காலத்தில் அந்த எண்ணிக்கை வரவர வளர்ந்து, 1812-ம் வருஷத்தில் இருந்ததை விட அதிகமாக பெருகியது.

வின்ட்ஜின்கெரோடினுடைய படைப் பிரிவைச் சேர்ந்த கோசாக்குகளும், பக்கத்து கிராமங்களிலிருந்த விவசாயிகளும், மாஸ்கோவிலிருந்து வெளியே ஓடி சுற்றுப்பக்கங்களில் ஒளிந்து கொண்டிருந்த மாஸ்கோ வாசிகளுக்குந்தான், முதன் முதலாக மாஸ்கோவிற்குள் நுழைந்த ருஷ்யர்களாகும். மாஸ்கோவைக் கொள்ளையடித்திருப்பதை அங்கு நுழைந்த ருஷ்யர்கள் பார்த்ததும், தாங்களும் கொள்ளை அடிக்க ஆரம்பித்தார்கள். பிரெஞ்சுக் காரர்கள் ஆரம்பித்த அந்த வேலையை அவர்கள் தொடர்ந்து செய்தார்கள். நூற்றுக்கணக்கான விவசாயிகளின் வண்டிகள் மாஸ்கோவிற்குள் வந்தன. மாஸ்கோவில் பாழடைந்த வீடுகளிலும் தெருக்களிலும் அகப்பட்ட சாமான்களை, அந்த வண்டிகளில் ஏற்றிக்கொண்டு கிராமங்களுக்குப் போனார்கள். தங்கள் கைகளில் அகப்பட்டதை சுருட்டிக்கொண்டு, கோசாக்குகள் தங்கள் முகாமிற்குத் திரும்பி னார்கள். மற்ற வீடுகளில் அகப்பட்ட சாமான்களை தங்களுடைய சாமான்கள் என்று பாசாங்கு செய்து, அவற்றைத் தங்கள் வீடுகளுக்கு முதலில் வந்த குடித்தனக்காரர்கள் எடுத்துக்கொண்டு போனார்கள்.

முதலில் வந்த கொள்ளைக்காரர்களுக்குப் பின்னால், இரண்டாவதாகவும் மூன்றாவதாகவும் ஏராளமான கொள்ளைக்காரர்கள்

வந்தபடியால், வரவர அவர்களுடைய எண்ணிக்கை அதிகமாயின. ஆதனால் கொள்ளை அடிப்பது வரவர கஷ்டமானதாய் இருந்தது. அந்த வேலைகள் கட்டுப்பாடான உருவங்களைப் பெற்றன.

மாஸ்கோவில் பிரெஞ்சுக்காரர்கள் நுழைந்தபோது, மக்கள் அதை விட்டு வெளியேறி இருந்தபோதிலும், வாழ்க்கைக்கு வேண்டிய ஸ்தாபனங்களும், வர்த்தக கைத்தொழில் ஸ்தாபனங்களும், அரசாங்க மத ஸ்தாபனங்களும் அங்கே இருப்பதைக் கண்டார்கள்; அவையெல்லாம் உயிரற்றவையாய் இருந்தாலும், அவை அங்கே இருந்தன. கடைத் தெருக்களும், கடைகளும், கிட்டங்கிகளும், மார்க்கட் கடைகளும், தானியக் களஞ்சியங்களும், அநேகமாக பொருள்களோடு அங்கே இருந்தன. தொழிற்சாலைகளும், அரண்மனைகளும், சுகவாச பொருள்களைக் கொண்ட பணக்காரர்களின் வீடுகளும் ஆஸ்பத்திரிகளும், சிறைச் சாலைகளும், அரசாங்க காரியாலயங்களும், மாதா கோயில்களும் அங்கே இருந்தன. பிரெஞ்சுக்காரர்கள் அங்கே தங்கும் காலம் நீடித்தபோது, பட்டண வாழ்க்கைக்கான இவையெல்லாம் அழிந்து போயின. கடைசியாக எல்லாம் ஒரே குழப்பமாகமாறி உயிரற்ற கொள்ளையடிக்கும் இடமாக விளங்கியது.

பிரஞ்சுக்காரர்களின் கொள்ளைகள் அதிகமாக ஆக மாஸ்கோவின் செல்வமும் அதைக் கொள்ளையடித்தவர்களின் பலமும் அழிந்து வந்தன. ஆனால் பட்டண வாழ்க்கையை மீண்டும் ஆரம்பிக்கும் போது ருஷ்யர்கள் செய்து வந்த கொள்ளையானது நேர் விரோதமான பலனைக் கொடுத்தது, அந்தக் கொள்ளை நீடித்தபோது, அந்தக் கொள்ளையில் கலந்து கொள்ளும் மக்களின் எண்ணிக்கை அதிகமானபோது, அந்தப் பட்டணத்தின் செல்வமும், அதன் ஒழுங்கான வாழ்க்கையும் வேகமான மீண்டும் ஸ்தாபிக்கப் பட்டன.

கொள்ளைக்காரர்களைத் தவிர வேறு பல விதமான மக்களும் மாஸ்கோவுக்கு வந்தார்கள். சிலர் வேடிக்கை பார்க்க வந்தார்கள். சிலர் உத்தியோ வேலையாகவும், சிலர் சுயநலத்தோடும் வந்தார்கள். வீட்டுக்காரர்களும், மதக் குருக்களும் பற்பல விதமான அதிகாரி களும், வர்த்தகர்களும், சிற்பிகளும், விவசாயிகளும், இருதயத்திற்கு ரத்தம் பாய்ந்து ஓடுவதைப் போல மாஸ்கோவுக்குள் சரமாரியாக வந்து சேர்ந்தார்கள்.

கொள்ளைப் பொருள்களைக் கொண்டு போவதற்காக வெறும் வண்டிகளோடு வந்த விவசாயிகளை ஒரு வாரத்திற்கெல்லாம் அதிகாரிகள் தடுத்து நிறுத்தினார்கள். பட்டணத்திலுள்ள [illegible] களை, அவர்களுடைய வண்டிகளில் ஏற்றிச் செல்லு[illegible] தார்கள். தங்களுடைய தோழர்களுக்கு ஏற்[illegible] பட்ட மற்ற விவசாயிகள், தங்களு[illegible]

தானியத்தையும், ஓட் தானியத்தையும், வைக்கோலையும் ஏற்றி வந்தார்கள். முன் காலத்தில் செய்து வந்ததைப்போல, ஒரவருக் கொருவர் போட்டி போட்டுக்கொண்டு விலையைக் குறைத்து விற்றுவந்தார்கள். தச்சர்கள், தங்களுக்க உயர்ந்த சம்பளம் கிடைக்கும் என்ற நோக்கத்தோடு கூட்டங் கூட்டமாக ஒவ்வொரு நாளும் மாஸ்கோவுக்கு வந்து கொண்டிருந்தார்கள். அதனால் கட்டைகளை வெட்டி புதிய வீடுகள் எங்கும் தோன்றி வந்தன. எரிந்துபோன வீடுகளைப் பழுது பார்த்தார்கள். வியாபாரிகள் சிறு சிறு இடங்களில் தங்கி வியாபாரம் செய்து வந்தார்கள். சாப்பாட்டு விடுதிகளும், கள்ளுக் கடைகளும், அரை குறையாக எரிந்த வீடுகளில் ஆரம்பமாயின. எரிந்து போகாமல் தப்பித்த மாதா கோயில்களில், தங்கள் பூஜைகளை குருக்கள்மார்கள் ஆரம்பித்தார்கள். மாதா கோயில்களில் களவு போன சாமான் களுக்காக, பலர் நன்கொடைகள் கொடுத்தார்கள். அரசாங்க காரியாலயங்களில் உள்ள குமாஸ்தாக்கள், தங்களுடைய மேஜைகளை சிறிய அறைகளில் போட்டுக் கொண்டு, தங்கள் வேலைகளை ஆரம்பித்தார்கள். பெரிய அதிகாரிகளும் போலீஸாரும், பிரெஞ்சுக்காரர்கள் விட்டுவிட்டுப் போன பொருள் களை விநியோகம் செய்ய ஏற்பாடுகள் செய்தார்கள், வீட்டுக் காரர்கள் திரும்பி வந்தபோது, சில வீடுகளில் மற்ற வீட்டுப் பொருள்கள் குவிந்து கிடப்பதைக் கண்டார்கள். அவைகளை யெல்லாம் கிரெம்லினுக்கு கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும் என்று சொல்லியதை அவர்கள் ஆட்சேபித்தார்கள், வேறு சிலர் வேறு விதமாக ஆட்சேபித்தார்கள். அதாவது, பல வீடுகளிலிருந்து பொருள்களை எடுத்து பிரெஞ்சுக்காரர்கள் சில வீடுகளில் கொண்டு போய்ச் சேர்த்ததாகவும், ஆகவே, அவரவர் வீடுகளில் கண்ட பொருள்களை அவரவரே வைத்துக்கொள்ளும்படி விடுவது அநியாயம் என்றும் அவர்கள் சொன்னார்கள். எல்லாரும் சேர்ந்து போலீஸாரைத் திட்டினார்கள். அவர்களுக்கு லஞ்சம் கொடுத் தார்கள். அரசாங்கப் பொருள்கள் அழிந்து போனதைப் பத்து மடங்கு அதிகமாகக் காட்டி, பட்டியல்கள் தயாரித்தார்கள். உதவி கோரி ஏராளமான மனுக்கள் வந்து குவிந்தன. கோமகன் ராஸ்டாப்சைன் மீண்டும் தமது பிரகடனங்களை பிரசுரிக்க ஆரம்பித்தார்.

# 15

## 15

ஜனவரி மாத கடையிசில் பீயர் மாஸ்கோவிற்குச் சென்று தம்முடைய வீட்டிலுள்ள எரிந்து போகாத பகுதியில் தங்கினார். கோமகன் ரஸ்டோவையும் அவருக்கு அறிமுகமான வேறு சிலரையும் அவர் போய்ப் பார்த்தார். இரண்டு தினங்

களுக்குப் பின்னால், அவர் பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போக விரும்பினார். ஒவ்வொருவரும் வெற்றியைக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். அந்த நாசமாய் போன, ஆனால் மீண்டும் புத்துயிர் கொண்டுவரும் அந்தப் பட்டணத்தில், ஒவ்வொன்றும் உற்சாகம் பொங்குவதாய் காணப்பட்டது. பீயரைப் பார்ப்பதற்கு ஒவ்வொருவரும், மகிழ்ச்சி கொண்டார்கள். பீயரைச் சந்திப்பதற்கு ஒவ்வொருவரும் ஆசை கொண்டார்கள். அவர் என்னென்ன காரியங்களையெல்லாம் கண்டார் என்று ஒவ்வொருவரும் அவரைக் கேள்வி கேட்டுவந்தார்கள். பொதுவாக, அவர்கள் எல்லார் மீதும் பீயர் சுமுகமான மனப்பான்மை கொண்டார். ஆனால், எந்த வழியிலும் தம்மைக் கட்டுப்படுத்திவிடக்கூடாது என்ற எச்சரிக்கையோடு, அவர் ஜாக்கிரதையாக இருந்தார். அவர் எங்கே வசிக்கப்போகிறார், அவர் மீண்டும் வீட்டைக் கட்டப் போகிறாரா, அவர் பீட்டர்ஸ்பர்க்கிற்கு எப்பொழுது போகப் போகிறார், அங்கே ஒருவரிடம் ஒரு மூட்டையைக் கொடுத்துவிட முடியுமா, என்ற இம் மாதிரியான முக்கியமும் முக்கியமில்லாதவையுமான கேள்விகளை அவரிடம் கேட்டு வந்தார்கள். இந்தக் கேள்விகளுக்கெல்லாம் அவர், ''ஆம், ஒருவேளை இருக்கலாம்''. ''அப்படித்தான் நான் நினைக்கிறேன்'' என்று பதில் சொல்லி வந்தார்.

காஸ்டிராமா என்ற இடத்தில் ராஸ்டோவ்கள் இருப்பதாக அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆனால், நட்டாஷாவின் நினைப்பு அவருக்கு வெகு அபூர்வமாகவே தோன்றி வந்தது. எப்பொழுதாவது அவளுடைய நினைப்பு அவருக்கு ஏற்படுமானால், அது வெகு காலத்திற்கு முன்பு நடந்த ஒரு மனோகரமான நினைப்பைப் போலவே அவருக்குத் தோன்றும். அவர் சமூக கடமைகளிலிருந்து விடுபட்டவராக உணர்ந்தார். அதுமட்டுமல்ல, தம்முடைய மனதிற்குள் தாமாகக் கிளப்பிவிட்டிருந்த உணர்ச்சியிலிருந்தும் அவர் விடுபட்டிருப்பதாக உணர்ந்தார்.

அவர் மாஸ்கோ வந்து சேர்ந்த மூன்றாவது நாளன்று, இளவரசி மேரி மாஸ்கோவில் இருப்பதாக டிரூபெட்ஸ்கோய் மூலமாக அறிந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அடைந்த கஷ்டங்கள், அவருடைய மரணம் ஆகியவையெல்லாம், அடிக்கடி பீயரின் எண்ணங்களில் தோன்றுவதுண்டு. இப்பொழுது இளவரசியின் பெயரைக் கேட்டதும், அவையெல்லாம் மீண்டும் தெளிவாக அவருக்குத் தோன்றின. டின்னர் சாப்பிட்டுக்கொண்டிருந்த போது, மாஸ்கோவில் இளவரசி மேரி அவளுடைய சொந்த வீட்டில் வசிப்பதாகக் கேள்விப்பட்டார். வாஜ்வைஜெயங்கா தெருவிலுள்ள பகுதியானது எரிபடாமல் தப்பித்திருந்தது. அங்கேதான் அவளுடைய [illegible] வீடு இருந்தது. அன்று மாலையே அவளைப் [illegible] போனார்.

அவளுடைய வீட்டிற்குப் போகிற வழியில், இளவரசர் ஆண்டரூவைப் பற்றியும், அவர்களுடைய சிநேகத்தைப் பற்றியும், அவர்கள் இருவரும் பல தடவைகளில் சந்தித்துப் பேசியவை களைப் பற்றியும், முக்கியமாக பாராடினோவில் கடைசியாக அவர் சந்தித்துப் பேசியவைகளைப் பற்றியும், பீயர் நினைத்துக்கொண்டே போனார்.

''அச்சமயம் அவர் மனக்கசப்போடு இருந்தார். அதே மனக்கசப்போடு தான் அவர் இறக்கும்போதும் இருந்தாரா? அவர் இறப்பதற்கு முன்பாக, வாழ்க்கையின் அர்த்தம் என்ன என்பது, அவருக்கு ஞானோதயத்தில் தோன்றாமல் போயிருக்குமா !'' என்று பீயர் நினைத்தார். காராட்டேவையும் அவனுடைய மரணத்தையும் அவர் நினைவு கூர்ந்தார். தம்மையறியாமலேயே காராட்டே வையும், இளவரசர் ஆண்ட்ரூவையும் அவர் ஒப்பிட்டுப் பார்த்தார். இருவரும் மிகுந்த வித்தியாசமானவர்கள் என்றாலும், அவர்கள் இருவரும் வாழ்ந்ததிலும் மாண்டதிலும் ஒரே மாதிரியாக இருந்தார்கள். அவர்கள் இருவர் மீதும் அவருக்கு ஏற்பட்ட அன்பும் ஒரே மாதிரியாக இருந்தது.

முதிய இளவரசரின் வீட்டிற்கு மிகுந்த சிந்தனையான தோற்றத் தோடு பீயர் போய்க்கொண்டிருந்தார். அந்த வீடு நெருப்பிலிருந்து தப்பி விட்டது. என்றாலும், சில சேதங்கள் ஏற்பட்டதாகக் காணப் பட்டது. ஆனால், பொதுவான தோற்றம் மாறாமல் இருந்தது. பழைய முதிய சேவகன் கண்டிப்பான தோற்றத்தோடு பீயரைச் சந்தித்தான். முதிய இளவரசர் இல்லாமல் இருந்தபோதிலும், அந்த வீட்டிலுள்ள காரியாதிகளின் ஒழுங்கெல்லாம் கொஞ்சங்கூட மாறுபடவில்லை என்பதைக் காட்டுவது போல, அவனுடைய தோற்றம் இருந்தது. இளவரசி தன்னுடைய சொந்த அறைகளில் இருப்பதாகவும், ஞாயிற்றுக்கிழமைகளில்தான் வெளியார்களை அவள் பார்ப்பாள் என்றும் அவன் சொன்னான்.

''நான் வந்திருப்பதாக நீ சொல்லு. ஒருவேளை என்னை அவள் சந்திக்க விரும்பலாம்.'' என்று பீயர் சொன்னார்.

''நல்லது, ஐயா, தயவுசெய்து உள்ளே அறைக்கு வாருங்கள்'' என்று அவள் கூறினாள்.

சில நிமிஷங்களுக்குப் பின்னால் டெஸ்ஸலெஸுடன் அந்த சேவகன் திரும்பினான். பீயரைப் பார்ப்பதற்கு இளவரசி மிகுந்த மகிழ்ச்சிகொள்ளுவாள் என்றும், மெத்தையிலுள்ள அவளுடைய அறைக்கு உடனே அழைத்து வரும்படி சொன்னாள் என்றும் டெஸ்ஸலெஸ் சொன்னார்.

தணிவான ஒரு அறையில் ஒரே ஒரு மெழுகுவர்த்தி எரிந்து கொண்டிருந்தது. இளவரசியும், கறுப்பு உடையணிந்த மற்றொரு

வளும் அங்கே இருந்தார்கள். இளவரசி எப்பொழுதும் சீமாட்டிகளான தோழிகளோடு இருப்பது வழக்கம் என்பதை பீயர் நினைவு கூர்ந்தார். ஆனால் அவர்கள் யார், எப்படி இருப்பார்கள் என்பதை, அவர் எப்பொழுதும் அறிந்ததில்லை. இவளும் அவளுடைய தோழிகளின் ஒருவளாய் இருக்கவேண்டுமென்று அவர் நினைத்து, அந்தக் கறுப்பு உடையில் இருந்த சீமாட்டியை நோக்கினார்.

இளவரசி வேகமாய் எழுந்து வந்து அவரிடம் தன்னுடைய கையை நீட்டினாள். தன்னுடைய கையை அவர் முத்தமிட்ட பின்பு, அவருடைய முகம் மாறிப்போயிருந்ததை அவள் கவனித்தாள். ''ஆம், இந்த விதமாகத்தான் நாம் மீண்டும் சந்திக்கிறோம். அவர் எப்பொழுதும், கடைசி நிமிஷத்தில் கூட உம்மைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்'' என்று அவள் சொன்னாள், உடனே தனது பார்வையை தன்னுடைய தோழியின் பக்கம் நாணத்தோடு திருப்பினாள். பீயருக்கு அது ஒரு வினாடி ஆச்சரியமாய் இருந்தது.

''நீர் சௌக்கியமாய் வந்து சேர்ந்ததைப் பற்றி, நான் மிகுந்த சந்தோஷம் அடைகிறேன். வெகு காலத்திற்குப் பின்னால், இது தான் முதலாவாகக் கிடைத்த நல்ல செய்தியாகும்.''

மீண்டும் இளவரசி மேரி தன்னுடைய தோழியின் பக்கம் நோக்கினாள், இன்னும் அதிகமான சங்கோஜத்தோடு அவள் காணப்பட்டாள். ஏதோ சொல்லுவதற்கு ஆரம்பித்தபோது, பீயர் இடைமறித்துப் பேசினார்.

''எனக்கு அவரைப் பற்றிய செய்தி எதுவுமே தெரியாது'' என்று அவர் சென்னார். ''அவர் போர் முனையில் கொல்லப்பட்டார் என்ற நான் நினைத்தேன். அவரைப் பற்றி நான் கேள்விப்பட்டவைகள் எல்லாம், நேரான செய்திகள் அல்ல. பிறரிடமிருந்து கேள்விப்பட்டவைகளேயாகும். அவர் ராஸ்டோவ்களோடு இருந்தார் என்பதுதான் எனக்குத் தெரியும்... என்ன அதிசயமான சந்திப்பு !''

பரபரப்போடு வேகமாக பீயர் பேசினார். அந்த தோழியை ஒரு தடவை அவர் நோக்கினார். அவளுடைய இனிய பார்வை தம் மீது பதிந்திருப்பதையும், தாம் சொல்லுவதை கவனமாய்க் கேட்டுக்கொண்டிருப்பதையும் அவர் கண்டார். ஒருவர் பேசிக்கொண்டிருக்கும்போது அடிக்கடி ஏற்படுவதைப்போல, அந்தக் கறுப்பு உடையணிந்த தோழியானவள் நல்லவள் என்றும், அன்பானவள் என்றும், சிலாக்கியமானவள் என்றும், தான் இளவரசி மேரியோடு தாராளமாய்ப் பேசுவதற்கு இடையூறு செய்யாதவள் என்றும், அவருக்கு ஒரு உணர்ச்சி ஏற்பட்டது.

அவர் ராஸ்டோவ்களின் பெயரைக் குறிப்பிட்டதும், இளவரசி மேரியின் முகம் இன்னும் அதிகமான சங்கோஜத்தைக் காட்டியது. அவள் பீயரின் முகத்திலிருந்து தனது பார்வையை வேகமாக கறுப்பு உடையிலிருந்த அந்தச் சீமாட்டியிடம் திருப்பினாள்.

''உண்மையிலேயே நீர் அவளை அடையாளம் கண்டுகொள்ள வில்லையா ?''

பீயர் மீண்டும் அந்த தோழியின் வெளிறிப்போன, மிருதுவான முகத்தையும், அவளுடைய கறுப்புக் கண்களையும், விசித்திரமான வாயையும் பார்த்தார். அவருக்கு ஏதோ நெருங்கிய அருமையான ஒன்று, வெகு காலமாக மறந்துபோன ஒன்று, இனிமையிலும் இனிமையான ஒன்று அவரை உன்னிப்போடு அந்தக் கறுப்புக் கண்கள் மூலமாகப் பார்ப்பதாக அறிந்தார்.

''ஆனால், இல்லை, அப்படி இருக்க முடியாது. இந்தக் கடுமையான, மெலிந்த வெளிறிய முகம், வயதாவதுபோல் காணப்படுகிறது. அது அவளாய் இருக்க முடியாது. அவளை அது ஞாபகமூட்டுகிறது, அவ்வளவுதான்'' என்று அவர் நினைத்தார். அந்த வினாடியில் இளவரசி மேரி 'நட்டாஷா' என்று சொன்னாள். மிகுந்த கஷ்டத்தோடு, மிகுந்த முயற்சியோடு, துருப்பிடித்துப்போன ஒரு கதவு திறக்கப்படுவதுபோல, ஒரு புன்னகை அந்த உன்னிப்பான கண்களில் தோன்றியது. அந்த திறக்கப்பட்ட வாசலிலிருந்து இனி மையான ஒரு இளங்காற்று வீசியது. பீயர் வெகு காலமாக மறந்து போயிருந்த, அதைப் பற்றி நினைக்கவே செய்யாத, முக்கியமாக அந்த வினாடியில் அவர் நினைக்கவே செய்யாத அந்த மகிழ்ச்சியை, அந்த மெல்லிய காற்று கொடுத்தது. அந்தக் காற்றானது அவரைப் பற்றி, அவரை முழுவதும் மூடியது. அவள் புன்னகை காட்டியதும், அதன் பின்னால் சந்தேகமே அவருக்கு இல்லை. அதுதான் நட்டாஷா அவர் அன்பு கொண்டுள்ள நட்டாஷா.

அந்த வினாடியில் பீயர் தம்மையறியாமலேயே, அவளுக்கும், இளவரசி மேரிக்கும், எல்லாவற்றிக்கும் மேலாகத் தமக்கும், தாமே ஒரு அறியாத ரகசியத்தை வெளிப்படுத்திவிட்டார். மகிழ்ச்சியோடு அவர் முகம் சிவந்து காணப்பட்டார். என்றாலும், வேதனைகொண்ட வருத்தம் அதில் தோன்றியது. தம்முடைய பரபரப்பை மறைக்க முயற்சி செய்தார். ஆனால் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக அவர் மறைக்க முயற்சி செய்தாரோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிக தெளிவாக-வார்த்தைகளால் இன்னும் தெளிவாகச் சொல்ல முடியாத விதத்தில்-அவர்தமது ரகசியத்தை, அதாவது தாம் அவளைக் காதலிக்கிறார் என்ற ரகசியத்தை, அவளுக்கும் இளவரசி மேரிக்கும் காட்டி விட்டார்.

''இல்லை, ஆச்சரியத்தினால் அது ஏற்பட்டது'' என்று பீயர் நினைத்தார். அவர் உரையாடலைத் தொர்ந்து நடத்துவதற்கு இளவரசி மேரியுடன் முயற்சித்தபோது, மீண்டும் அவர் நட்டாஷாவை நோக்கினார். உடனே இன்னும் ஆழமாக அவருடைய முகம் சிவந்து காணப்பட்டது. இன்னும் பலமான பரபரப்பானது மகிழ்ச்சியோடும் பயத்தோடும் கலந்து அவருடைய உள்ளத்தைப் பற்றியது. அவருடைய பேச்சுத் தடுமாறியது. அவர் பாதிப் பேசிக்கொண்டிருக்கும்போது நிறுத்திவிட்டார்.

நட்டாஷாவைக் கவனிப்பதற்கு பீயர் ஏன் தவறிவிட்டார் என்றால், அவளை அங்கே அவர் எதிர்பார்க்கவில்லை. அதைத் தவிர, கடைசியாக அவர் அவளைப் பார்த்த பின்பு, அவளிடம் ஏராளமான மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. அவள் மெலிந்து வெளிறிப்போய் காணப்பட்டாள். ஆனால் அவளை அடையாளம் கண்டுகொள்ளாமல் இருந்ததற்கு அது காரணம் அல்ல. வாழ்க்கையின் மகிழ்ச்சியைக் காட்டக்கூடிய ஒரு புன்னகை, அவளுடைய கண்களில் எப்பொழுதும் முன்பெல்லாம் பிரகாசித்துக்கொண்டிருக்கும்; இப்பொழுது அவர் அந்த அறைக்குள் முதலில் நுழைந்ததும் அவளைப் பார்த்தபோது, அந்தப் புன்னகையின் நிழலைக்கூட அவளிடம் காணமுடியவில்லை; அவளுடைய கண்கள் இனிமையோடு கூடிய கவனத் தோடும், சோகத்தோடு கூடிய கேள்விக் குறியோடும் காணப்பட்டன; இது தான் அவர் அடையாளம் காணமுடியாமல் போனதற்கு காரணமாகும்.

பீயரின் மனக் குழப்பம் நட்டாஷாவிடம் மனக்குழப்பமாக பிரதிபலிக்க வில்லை; ஆனால் அவளுடைய முகமெல்லாம் ஒளிர்விட்டு பிரகாசிக்கும்படி செய்த மகிழ்ச்சியாக அது பிரதிபலித்தது.

# 15

## 16

''அவள் என்னுடன் இருப்பதற்காக வந்திருக்கிறாள்'' என்று இளவரசி மேரி சொன்னாள். ''கோமகனும் கோமகளும் சில தினங்களில் இங்கே வருவார்கள். கோமகள் ரொம்ப மோசமான நிலைமையில் இருக்கிறாள். ஒரு வைத்தியரிடம் ஆலோசனை செய்வதற்காக நட்டாஷா இங்கே வந்திருக்கிறாள். என்னுடன் அவளை வரும்படி அவர்கள் கட்டாயப்படுத்தினார்கள்''.

''ஆம், துக்கத்தில் அகப்படாத ஒரு குடும்பமாவது இருக்கிறதா?'' என்று பீயர் நட்டாஷாவைப் பார்த்து கேட்டார் ''நாங்கள் விடுதலையடைந்த அதே தினத்தில்தான் அந்த சம்பவம்

நடந்தது. நான் அவனைப் பார்த்தேன். அவன் எப்பேர்ப்பட்ட மனோகரமான பையன்!''

நட்டாஷா அவரை நோக்கினாள். அவக்குப் பதில் சொல்லுவதைப் போல, அவளுடைய கண்கள் பிரிந்து ஒளிர்விட்டன.

''ஆறுதலாகச் சொல்லுவதற்கு, ஒருவர் எதைத்தான் சொல்லவோ, நினைக்கவோ முடியும்?'' என்று பீயர் கூறினார். ''ஒன்றுமில்லை, அம்மாதிரியாக ஒரு சிலாக்கியமான, உயிர்த்துடிப்பு நிறைந்த ஒரு பையன் எதற்காக மடிய வேண்டும்?''

''ஆம், இந்த நாட்களில் நம்பிக்கை என்பது இல்லாமல் வாழ்வது மிகுந்த கஷ்டமாயிருக்கிறது...'' என்று இளவரசி மேரி கூறினாள்.

''ஆம், ஆம், அதுதான் முற்றிலும் உண்மை'' என்று பீயர் அவசரமான இடைமறித்துச் சொன்னார்.

''ஏன் அது உண்மையாய் இருக்க வேண்டும்?'' என்று நட்டாஷா கேட்டுவிட்டு, பீயரின் கண்களை உன்னிப்பாகக் கவனித்தாள்.

''ஏன் என்று எப்படி நீ கேட்ட முடியும்?'' என்று இளவரசி மேரி சொன்னாள். ''என்ன வரப்போகிறது என்பதைப்பற்றிய சிந்தனை மட்டுமே...''

இளவரசி மேரி பேசி முடிப்பதற்கு முன்பாக, பீயரை கேள்விக்குறியோடு நட்டாஷா நோக்கினாள்.

''ஏன் என்றால், நம்மை ஆண்டுகொண்டு ஒரு கடவுள் இருக்கிறார் என்பதை நம்புகிறவர்களால்தான், அவளுடைய உன்னுடைய கஷ்டங்களைப் போன்ற கஷ்டங்களைத் தாங்கிக் கொள்ள முடியும்'' என்று பீயர் கூறினார்.

நட்டாஷா பேசுவதற்காக வாயைத் திறந்தாள். ஆனால் உடனே மூடிக்கொண்டாள். பீயர் அவளிடமிருந்து அவரசமாக முகத்தைத் திருப்பி இளவரசியைப் பார்த்து, தம்முடைய நண்பரின் கடைசி காலத்தைப்பற்றி கேள்விகள் கேட்டார்.

பீயருடைய குழப்பமெல்லாம் இப்பொழுது அநேகமாக மறைந்து விட்டன. ஆனால் அவருடைய சுதந்திரமும் முழுவதும் போய்விட்டதாக, அதே சமயத்தில் அவர் உணர்ந்தார். அவருடைய ஒவ்வொரு வார்த்தையையும் ஒவ்வொரு செய்கையையும் கவனித்து முடிவு கூறுவதற்கு, ஒரு நீதிபதி இப்பொழுது இருப்பதாகவும், அந்த நீதிபதியின் தீர்ப்புத்தான் உலகத்திலுள்ள மற்ற எல்லாவற்றையும்விட அவருக்கு முக்கியமானதாக இருப்பதாகவும் அவர் உணர்ந்தார். அவர் பேசிக்கொண்டிருந்தபோது, அவருடைய வார்த்தைகள் நட்டாஷாவுக்கு எம்மாதிரி தோன்றும் என்பதை சிந்தித்துக்கொண்டிருந்தார். அவளை திருப்தி செய்யவேண்டும்

என்ற நோக்கத்தோடு அவர் பேசவில்லை. ஆனால், அவர் என்ன பேசினாலும், அவளுடைய நோக்கத்திலிருந்து அது எம்மாதிரி இருக்கும் என்பதை நினைத்துப் பார்த்தார்.

இளவரசர் ஆண்ட்ரூவைப்பற்றிய விஷயங்களில் எப்பொழுதும் தயக்கத்துடன் காணப்படும் இளவரசி மேரி, அதே மாதிரித் தயக்கத்தோடு எம்மாதிரியான நிலைமையில் இளவரசர் ஆண்ட்ரூவை அவள் பார்த்தாள் என்பதை சொல்ல ஆரம்பித்தாள். பீயருடைய முகம் உணர்ச்சியினால் உதறிக்கொண்டிருந்தது. அவருடைய கேள்விகளும், அவருடைய அமைதியற்ற தோற்றமும், கொஞ்சங்கொஞ்சமாக பூரா விவரங்களையும் அவள் சொல்லும்படி செய்தன. அவற்றையெல்லாம் அவள் நினைத்துப் பார்க்கவே பயந்து கொண்டிருந்தாள்.

''ஆம், ஆம். அப்படியானால்...?'' என்று பீயர் கேட்டுக்கொண்டேயிருந்தார். அவருடைய முழு உடம்பையும், அவள் இருக்கும் திசையில் சற்று சாய்த்து, அவளுடைய பேச்சுகளை ஆவலோடு அவர் கேட்டுக்கொண்டிருந்தார். ''ஆம், ஆம். ஆகவே அவர் அமைதிபெற்று, குழைந்து போனாரா ? அவர் எப்போழுதுமே அவருடைய முழு உள்ளத்தோடு ஒன்றைத் தேடிக்கொண்டிருந்தார். அதாவது, முற்றிலும் நல்லவராக இருக்கும் வழியை அவர் தேடிக்கொண்டிருந்தார். ஆகவே, மரணத்தைப் பற்றி அவர் பயம் கொண்டிருக்க முடியாது. அவரிடம் ஏதாவது குற்றமிருக்குமானால், அது அவர் செய்ததாக இருக்க முடியாது. ஆகவே, அவர் மனம் குழைந்துபோனாரா?... உன்னை மீண்டும் அவர் பார்த்தது, எவ்வளவு மகிழ்ச்சியான விஷயமாய் இருந்திருக்கும்!'' என்று அவர் திடீரென்று நட்டாஷாவை நோக்கி, அவளுடைய கண்ணீர் நிறைந்த கண்களை பார்த்து சொன்னார்.

நட்டாஷாவின் முகம் சுளித்தது. அவள் முகம் சுளித்து ஒரு வினாடி கவிழ்ந்துகொண்டாள். பேசுவதா, வேண்டாமா என்பதைப் பற்றி ஒரு வினாடி அவள் தயங்கினாள்.

''ஆம், அது ஒரு மகிழ்ச்சியான விஷயம்'' என்று அவள் தன்னுடைய அமைதியான ஆழ்ந்த குரலில் சொன்னாள். ''என்னைப் பொறுத்த வரையில், அது நிச்சயமாக ஒரு மகிழ்ச்சியான விஷயம்''. அவள் தயங்கினாள். ''அவர்...அவர்...நான் எந்த வினாடி அந்த அறைக்குள் போனேனோ, அதே வினாடியில் அவரும் அதைத்தான் விரும்பிக்கொண்டிருந்தார்.

நட்டாஷாவின் குரல் தடைபட்டது. அவள் நாணிமுகம் சிவந்து, தன்னுடைய கைகளைக் கோர்த்து, முட்டுகளில் வைத்து

அழுத்தினாள், மிகுந்த சிரமத்தோடு தன்னைச் சமாளித்துக்கொண்டு, தலையை நிமிர்த்தி வேகமாகப் பேச ஆரம்பித்தாள்.

''மாஸ்கோவிலிருந்து நாங்கள் புறப்படும்போது, அதைப் பற்றி ஒன்றுமே எங்களுக்குத் தெரியாது. அவரைப் பற்றி விசாரிக்க நான் தைரியங்கொள்ளவில்லை. பின்னால், அவரும் எங்களுடன்தான் பிரயாணம் செய்து வருவதாக திடீரென்று சோனியா கூறினாள். அவர் எம்மாதிரியான நிலைமையில் இருந்தார் என்பது எனக்குத் தெரியாது. அதை யூகம் செய்யவும் என்னால் முடியவில்லை. அவரைப் பார்க்க வேண்டுமென்றும், அவருடன் இருக்க வேண்டுமென்றும் ஒரே ஆசைதான் எனக்கு அப்பொழுது இருந்தது'' என்ற அவள் உடல் நடுங்கி வேகமாய் மூச்சுவிட்டுக்கொண்டு சொன்னாள்.

மற்றவர்கள் தன்னை இடைமறிக்க விடாதபடி, அவள் இதுவரை ஒருவரிடமும் சொல்லாத விஷயங்களை சொல்லிக்கொண்டே போனாள். அதாவது, அவர்களுடைய பிரயாணத்தில் அந்த மூன்று வாரங்களிலும், நடந்த காரியங்களைப்பற்றியும், யாராஸ்லாவ் என்ற இடத்தில் தங்கியிருந்தபோது நடந்தவைகளைப் பற்றியும் அவள் சொன்னாள்.

திறந்த வாயுடனும், நீர் நிறைந்த தமது கண்களால் அவள் மீது குத்திட்ட பார்வையுடனும், பீயர் அவள் சொல்லுவதை கவனித்துக் கேட்டுவந்தார். அவர் கேட்டு வந்தபோது, இளவரசர் ஆண்ட்ரூவை பற்றியோ, அவருடைய மரணத்தைப் பற்றியோ, அல்லது அவள் சொல்லிக்கொண்டிருப்பதைப் பற்றியோ அவர் சிந்திக்கவில்லை. அவள் சொல்லுவதை அவர் கேட்டு வந்தார். அவள் பேசிக் கொண்டிருக்கும்போது அடையும் கஷ்டத்திற்காக, அவளிடம் இரக்கம் கொண்டார்.

தனது கண்ணீரை வெளியேவிடாமல் தடுப்பதற்காக முயற்சிசெய்து, முகத்தைச் சுளித்துக்கொண்டிருந்த இளவரசி மேரி, நட்டாஷாவுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தாள். தன்னுடைய சகோதரருடையவும் நட்டாஷாவுடையவும் காதலைப் பற்றிய கதையை, அந்த கடைசி நாட்களில் நடந்த விவரங்களை, அப்பொழுதுதான் அவள் முதல் தடவையாகக் கேட்டாள்.

அந்தத் துன்பமான, என்றாலும் மகிழ்ச்சியான கதையை, சொல்லுவதற்கு, நட்டாஷா விரும்பியதைப் போலக் காணப்பட்டாள்.

தன்னுடைய உள்ளத்தில் இருந்த அந்தரங்கமான அன்னியோன்னியங்களைப் பற்றிய விவரங்களோடு அவள் பேசினாள். அந்தப் பேச்சை அவளால் ஒருபொழுதும் முடிக்க

முடியாது என்று தோன்றியது. அவள் சொல்லியவைகளை, இரண்டு தடவைகளுக்கு மேலாகத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

வாசலுக்கு வெளியே டெஸ்ஸலெஸ் நின்று ''நள்ளிரவு வணக்கம் சொல்லுவதற்காக, குஞ்சு நிக்கலஸ், உள்ளே வரலாமா?'' என்று கேட்டார்.

''நல்லது, அவ்வளவுதான்-எல்லாம் அவ்வளவுதான்'' என்று நட்டாஷா கூறினாள்.

நிக்கலஸ் உள்ளே நுழையும்போது, அவள் வேகமாக எழுந்து, அந்த வாசலை மறைத்துக்கொண்டிருந்த திரையை நோக்கி, அநேகமாக ஓடுவதைப் போல போனாள். அங்கிருந்த திரை அந்த வாசல் கதவை மறைத்திருந்தபடியால், அதில் அவள் முட்டிக்கொண்டாள். துக்கத்தினாலோ, அல்லது வலியினாலோ முணங்கிக்கொண்டு, அவள் அந்த அறையைவிட்டு வேளியே ஓடினாள்.

அவள் எந்த வாசல் வழியாக மறைந்தாளோ, அந்த வாசலை பியர் நோக்கினார். திடீரென்று, இந்த உலகத்தில் அவர் தனியாக இருப்பதைப் போன்ற உணர்ச்சி, எதனால் அவருக்கு ஏற்பட்ட தென்பதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை.

அவருடைய சிந்தனையிலிருந்து அவரை எழுப்பும் விதத்தில் அந்த அறைக்குள் வந்த தனது மருமகனைப் பார்க்கும்படி இளவரசி மேரி சொன்னாள்.

குஞ்சு நிக்கலஸின் முகமானது, அவனுடைய தந்தையின் சாயலைக் கொண்டிருந்தது. கனிவான உணர்ச்சி கொண்ட அந்த வினாடியில், அந்த சாயலானது பியரின் மனத்தை உருக்கியது. அவர் அந்த பையனை முத்த மிட்டுவிட்டு, வேகமாக எழுந்து தனது கைகுட்டையை எடுத்துக் கொண்டு ஜன்னலுக்குப் பக்கமாக போனார். இளவரசி மேரியிடமிருந்து விடை பெற்றுக்கொள்ள அவர் விரும்பினார். ஆனால் அவள் அதற்கு இடம் கொடுக்கவில்லை.

''இல்லை, நட்டாஷாவும் நானும் சில வேளைகளில் இரவு இரண்டு மணிவரையில் தூங்குவதில்லை. ஆகவே, தயவு செய்து நீர் போகவேண்டாம். இராச்சாப்பாட்டை கொண்டுவரும்படி நான் சொல்லுகிறேன். நீர் கீழே போம். இதோ நாங்களும் அங்கே வருகிறோம்.''

அந்த அறையை விட்டு பியர் போவதற்கு முன்பாக, இளவரசி மேரி அவரிடம் சொன்னாள் : ''அவரைப் பற்றி அம் மாதிரியாக அவள் பேசியது இதுதான் முதல் தடவை.''

15

17

17

பிரகாசமாக் விளக்குப் போடப் பட்டிருந்த பெரிய டின்னர் அறைக்குப் பீயரை அழைத்துச் சென்றார்கள். சில நிமிஷங்களுக்குப் பின்னால், காலடி ஓசைகள் அவருக்குக் கேட்டன. இளவரசி மேரியும் நட்டாஷாவும் அந்த அறைக்குள் வந்தார்கள். நட்டாஷாவின் முகத்தில் கடுமையும் சிந்தனையும் கொண்ட தோற்றம் இருந்தபோதிலும், அவள் அமைதியாக இருந்தாள். ஒரு முக்கியமான, மனதை உறுத்திக்கொண்டிருக்கும் விஷயத்தைப் பற்றிப் பேசியபின்பு எம்மாதிரி ஒரு சங்கோஜமான உணர்ச்சி இருக்குமோ, அதே உணர்ச்சியை அந்த மூவரும் அப்போது அனுபவித்துக் கொண்டிருந் தார்கள். அந்தப் பழைய உரையாடலுக்கு மீண்டும் திரும்புவது என்பது அசாத்தியமானது; ஆனால் அற்ப விஷயங்களைப் பற்றிப் பேசுவது என்பது பொருத்தமில்லாதது; என்றாலும், பேச வேண்டுமென்ற ஆசை அங்கே இருந்தபடியால், மௌனமாய் இருப்பது என்பது இயற்கைக்கு விரோதமானதாகக் காணப்பட்டது. அவர்கள் மௌனமாக மேஜைக்குச் சென்றார்கள். அங்கிருந்த சேவகர்கள் அவர்கள் அமருவதற்காக நாற்காலிகளைப் பின்னால் இழுத்து, மறுபடியும் முன்னால் தள்ளினார்கள். பீயர் தம்முடைய மேஜை கைக்குட்டையை விரித்தார். அங்கிருந்த அமைதியை கலைப்பதற்குத் தீர்மானித்து, அவர் நட்டாஷாவையும் இளவரசி மேரியையும் பார்த்தார். அவர்கள் இருவரும் அதே முடிவோடு இருப்பதாகக் காணப்பட்டார்கள். அவர்களுடைய கண்கள் மகிழ்ச்சியினால் பிரகாசித்துக் கொண்டிருந்தன; வாழ்க்கையில் துக்கத்தோடு இன்பமும் இருப்பதை ஒப்புக்கொள்ளுவதைப் போல அவை தோன்றின.

''கோமகனே, நீர் வாட்கா சாப்பிடுவீர், அல்லவா?'' என்று இளவரசி மேரி கேட்டாள். இந்த வார்த்தைகள் திடீரென்று பழங்கால நிழல்களை அப்படியே ஒதுக்கித் தள்ளின. ''இப்போது நீர் உம்மைப்பற்றி எங்களுக்குச் சொல்லவேண்டும். உம்மைப்பற்றி நடக்க முடியாத அதிசயங்களை எல்லாம் நாங்கள் கேள்விப் படுகிறோம்'' என்று அவள் சொன்னாள்.

''ஆமாம்'' என்று பீயர், ஒரு கேலியான புன்முறுவலோடு பதிலளித்தார். அம்மாதிரி புன்முறுவல் இப்போது அவருக்குப் பழக்கமாகிவிட்டது. ''நான் கனவிலும்கூட கண்டிராத என்னைப் பற்றிய அதிசயங்களை என்னிடமே சொல்லுகிறார்கள். மேரி

அப்ராமாம்னா என்னைத் தன்னுடைய வீட்டிற்கு வரவழைத்து, என்னென்ன நடந்தன என்பதையும், என்னென்ன நடந்திருக்க வேண்டும் என்பதையும் என்னிடம் சொல்லிக்கொண்டே இருந்தாள். ஸ்டீபன் ஸ்டெப்பானிச் என்பவர் என்னுடைய அனுபவங்களை நான் எப்படிச் சொல்லவேண்டுமென்பதை எனக்குச் சொல்லிக்கொடுத்தார். பொதுவாக, சுவாரஸ்யமான ஒரு மனிதராக ஆவது ரொம்ப சுலபம் என்பது இப்போது எனக்கு தெரிகிறது. (நான் இப்போது சுவாரஸ்யமான மனிதனாய் இருக்கிறேன்). மக்கள் என்னை அழைத்து என்னைப் பற்றியே எல்லாவற்றையும் என்னிடம் சொல்லுகிறார்கள்.''

நட்டாஷா புன்முறுவல் காட்டினாள். அவள் பேச விரும்பினாள்.

''நாங்கள் கேள்விப்படுவது என்னவென்றால்'' என்று இளவரசி மேரி இடைமறித்துச் சொன்னாள். ''மாஸ்கோவில் இருபது லட்சம் ரூபிள்கள் உமக்கு நஷ்டமாய்விட்டதாகச் சொல்லுகிறார்கள், அது உண்மையா?''

''அம்மாதிரி மூன்று மடங்கு அதிகமாக நான் முன்னால் பணக்காரனாய் இருந்தேன்'' என்று பீயர் சொன்னார்.

தமது மனைவியின் கடன்களை அடைப்பது என்று தீர் மானித்ததினாலும், தமது வீடுகளை மீண்டும் கட்டுவது என்று தீர்மானித்ததினாலும், அவருடைய நிலைமை இப்போது மாறி யிருக்கிறது. என்றாலும், பீயர் முன்னால் இருந்த அளவைவிட, மூன்று மடங்கு அதிகப் பணக்காரராக இருப்பதாகச் சொன்னார்.

''எனக்கு இப்போது நிச்சயமாகக் கிடைத்ததெல்லாம் சுதந்திரம் ஒன்றுதான்'' என்று அவர் சிரத்தையோடு பேச ஆரம்பித்தார். ஆனால் அவர் மேலே பேசவில்லை. அம்மாதிரிப் பேசுவது தற்பெருமை யாய் இருக்கும் என்று நினைத்தார்.

''நீர் வீடுகளைக் கட்டுகிறீரா?''

''ஆமாம், நான் கட்டவேண்டுமென்று சாவேலிச் சொல்கிறார்.''

''நீர் மாஸ்கோவில் தங்குவது என்று தீர்மானித்தபோது, உம்முடைய மனைவியான கோமகள் இறந்துபோனது உமக்குத் தெரியாதா?'' என்று இளவரசி மேரி கேட்டாள்.

சுதந்திரம் என்று அவர் பேசியதற்குப் பின்னால், அம்மாதிரி அவள் கேட்ட கேள்வியானது, அவர் நினைத்திராத அந்த விஷயத்தைச் சுட்டிக் காட்டுவதாய் இருக்கலாம் என்று அவள் நினைத்தபோது, உடனே நாணி முகம் சிவந்தாள்.

''இல்லை'' என்று பீயர் பதிலளித்தார். இளவரசி மேரி தம்முடைய வார்த்தைகளுக்குக் கொடுத்த தர்ம சங்கடமான அர்த்தத்தை, தாம் கவனிக்காததுபோலக் காணப்பட்டார். ''அதைப்

பற்றி நான் ஓரெலில் கேள்விப் பட்டேன். நான் அதைக் கேட்டு எவ்வளவு அதிர்ச்சியடைந்தேன் என்பதை உன்னால் யூகிக்க முடியாது. நாங்கள் இருவரும் ஒரு பிரமாதமான ஜோடி அல்ல'' என்று அவர் நட்டாஷாவை நோக்கி, அவருடைய முகத்தில் ஆச்சரியத்தைக் கண்டதும், வேகமாகச் சொன்னார். அவர் தம்முடைய மனைவியைப் பற்றி எப்படிப் பேசுகிறார் என்பதை அறிந்துகொள்வதற்கு ஆவலுள்ளவள் மாதிரி அவள் காணப் பட்டாள்; ''ஆனால், அவளுடைய மரணம் எனக்கு ஒரு பயங்கரமான அதிர்ச்சியைக் கொடுத்தது. இருவர் சண்டை போட்டால், எப்போதுமே அந்த இருவர் மீதும் குற்றம் இருக்கத்தான் செய்யும். ஒருவர் மரணமடைந்துவிட்டால், மற்றவரின் குற்றம் திடீரென்று பயங்கரமாய் மாறுகிறது. அதுவும் தவிர, எப்பேர்ப் பட்ட மரணம்... நண்பர்கள் யாரும் இல்லாமல், ஆறுதல் சொல்லுவதற்கு யாரும் இல்லாமல், அப்பேர்ப்பட்ட மரணம்!... நான் அவளுக்காக ரொம்ப ரொம்ப வருந்துகிறேன்'' என்று அவர் பேசி முடித்தார். நட்டாஷாவின் முகத்தில் அவர் கூறுவதை அங்கீகரிப்பதைப்போலக் காணப்பட்ட சந்தோஷத்தைக்கண்டு, அவர் மகிழ்ச்சி கொண்டார்.

''ஆமாம், இப்போது நீர் மறுபடியும் திருமணம் செய்யக்கூடிய ஒரு பிரம்மச்சாரியாகிவிட்டீர்'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

பீயரின் முகம் திடீரென்று சிவந்தது, வெகுநேரம் வரையில் நட்டாஷாவைப் பார்க்காமல் இருப்பதற்கு முயற்சித்தார். கடைசியாக அவள் இருந்த இடத்தை நோக்கி அவர் திரும்பியபோது, அவருடைய முகம் கடுமையாகவும் இகழ்ச்சியாகவும்கூடக் காணப்பட்டது.

''நீர் உண்மையிலேயே நெப்போலியனைப் பார்த்துப் பேசினீரா? அம்மாதிரி நாங்கள் கேள்விப்படுகிறோமே?'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

பீயர் சிரித்தார்.

''இல்லை; ஒரு தடவைகூட இல்லை. கைதிகளாகப் பிடிக்கப்பட்டால், அவர்கள் நெப்போலியனுடைய விருந்தாளிகள் என்று ஒவ்வொருவரும் மனோராஜ்யம் செய்வதுபோலத் தோன்றுகிறது. நான் அவரை எப்போதும் பார்க்காதது மட்டுமல்ல; அவரைப் பற்றி எதையும் நான் கேள்விப்படவும் இல்லை...நான் மிகுந்த தாழ்வான கூட்டத்தோடு இருந்தேன்.''

இராச்சாப்பாடு முடிந்தது. தம்முடைய சிறைவாசத்தைப் பற்றி முதலில் பேசுவதற்கு மறுத்த பீயர், பின்னால் கொஞ்சம் கொஞ்சமாக அதைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்.

''ஆனால் நீர் மாஸ்கோவில் தங்கியிருந்தது, நெப்போலியனைக் கொல்வதற்காகத்தான் என்பது உண்மையல்லவா?'' என்று ஒரு சிறிய புன்முறுவலோடு நட்டாஷா கேட்டாள். ''நாம் சுக்காரேவ் கோபுரத்திற்குப் பக்கத்தில் சந்தித்தது உமக்கு நினைவிருக்கிறதா? நான் அப்பொழுது அப்படித்தான் யூகித்தேன்.''

''அது உண்மைதான் என்று பீயர் ஒப்புக்கொண்டார். அதன் பின்னால் அதிலிருந்து மெதுவாக இளவரசி மேரி கேட்கிற கேள்விகளுக்கும், முக்கியமாக நட்டாஷாவின் கேள்விகளுக்கும், தம்முடைய சிறை வாழ்க்கையைப் பற்றிய, மாஸ்கோவில் தம் வேலைகளைப் பற்றிய விவரங்களைச் சொல்ல ஆரம்பித்தார்.

முதலில் தமாஷாக, லேசான கேலியோடு (இப்போது அவர் யாரிடம் பேசினாலும், அம்மாதிரியே பேசும் பழக்கம் ஏற்பட்டிருக்கிறது) பேச ஆரம்பித்தார். ஆனால் அவர் கண்ட பயங்கரங்களைப் பற்றியும், கஷ்டங்களைப் பற்றியும், அவர் விவரிக்க ஆரம்பித்தபோது, அவரையறியாமலேயே அவருக்கு உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. ஆகவே தாம் வாழ்ந்துவந்த வாழ்க்கையை மீண்டும் மனோராஜ்யத்தில் அனுபவிப்பது போன்ற உணர்ச்சியோடு அவர் பேச ஆரம்பித்தார்.

இளவரசி மேரி மெல்லிய புன்னகையோடு பீயரையும் நட்டாஷாவையும் மாறி மாறி பார்த்து வந்தாள். அந்த விவரங்கள் பூராவிலும், அவள் பீயரையும் அவருடைய நல்ல குணங் களையுமே கண்டாள். முழங்கைகளையூன்றி நட்டாஷா முன்னால் குனிந்து, அந்த விவரங்களுக்குத் தக்கபடி முகபாவங்களை மாற்றி, கொஞ்சம்கூட கவனக்குறைவு இல்லாமல், அக்கறையோடு பீயரை நோக்கிக் கொண்டிருந்தாள். அவர் சொல்லிய அனுபவங்களை யெல்லாம் அவள் அனுபவிப்பது போலக் காணப்பட்டாள். அவள் பார்வை மட்டுமல்ல; அவளுடைய ஆச்சரியக் குறிப்புகளும், அவள் போட்ட சிறிய கேள்விகளும், பீயர் எதைத் தெளிவாக்க விரும்பினாரோ, அதைச் சரியாக அறிந்து கொண்டதாகக் காட்டின. அவர் என்ன சொன்னாரோ, அதை அவள் அறிந்துகொள்வது மட்டு மல்ல; ஆனால் என்ன சொல்ல விரும்பினாரோ, எதை வார்த்தை களால் சொல்லமுடியாமல் இருந்தாரோ, அதையும் அவள் அறிந்து கொண்டதாகத் தெளிவாகத் தோன்றியது. அந்தக் குழந்தையைப் பற்றிய சம்பவத்தையும், அந்தப் பெண்களைக் காப்பாற்ற முயற்சி செய்தபோது அவர் கைது செய்யப்பட்ட சம்பவத்தையும் பற்றி அவர் சொல்லும்போது பின்வருமாறு கூறினார்:-

''அது பார்க்க சகிக்க முடியாத காட்சியாய் இருந்தது. குழந்தைகள் எல்லாம் கைவிடப்பட்டன. சில குழந்தைகள் நெருப்பில் அகப்பட்டுக் கொண்டன...ஒரு குழந்தையை எனது கண் முன்பாக

அபகரித்துக்கொண்டு போனார்கள். பெண்களிடமிருந்து நகைகளையும், காதுகளில் போட்டிருந்த காதணிகளையும் அபகரித்துக் கொண்டு போனார்கள்...'' என்று அவர் சொல்லியபோது, அவரது முகம் சிவந்து, மனம் குழம்பியது. ''அச்சமயத்தில் ஒரு காவல் படை அங்கே வந்தது. கொள்ளையடிக்காமல் இருந்த ஆண்கள் எல்லாரையும் கைது செய்தார்கள். அவர்களில் நானும் ஒருவன்.''

''நீர் எல்லாவற்றையும் எங்களிடம் சொல்லவில்லையென்பது எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. நீர் எதையோ செய்தீர் என்பது நிச்சயம்'' என்று நட்டாஷா கூறி சிறிது நிறுத்தி, ''மிகுந்த சிலாக்கியமான காரியங்களை நீர் செய்தீர் என்பது நிச்சயம்'' என்று சொன்னாள்.

பீயர் மேலும் தொடர்ந்து பேசினார். அந்த மரண தண்டனையைப் பற்றி அவர் பேசிய போது, அந்த பயங்கரமான விவரங்களையெல்லாம் மறைக்க விரும்பினார் ஆனால், நட்டாஷா எதையும் மறைக்கக்கூடாது என்று வற்புறுத்தினார்.

காராட்டேவைப் பற்றிப் பீயர் பேச ஆரம்பித்தார். பின்னால் சிறிது நிறுத்தினார். இச் சமயம் அவர் மேஜையை விட்டு எழுந்து, அந்த அறையில் உலாவிக் கொண்டிருந்தார். அவரை நட்டாஷா பார்த்துக் கொண்டே இருந்தாள். பின்னால் அவர் சொன்னார்:

''இல்லை, அந்தப் படிப்பு இல்லாத மனிதனிடம் நான் அறிந்துகொண்டதை, உன்னால் புரிந்துகொள்ள முடியாது.''

''ஆமாம், ஆமாம்; மேலே சொல்லும். அவன் எங்கே இருக்கிறான்?'' என்று நட்டாஷா கேட்டாள்.

''அவனை அநேகமாக என் கண் முன்பாகவே அவர்கள் கொன்று விட்டார்கள்.''

பீயருடைய குரல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவர்கள் பின் வாங்கிப் போய்க் கொண்டிருந்த கடைசி நாட்களைப் பற்றியும், காராட்டேவுடையை அசௌக்கியத்தைப் பற்றியும் மரணத்தைப் பற்றியும் அவர் சொல்லிக் கொண்டுபோனார்.

''அவர் தமது அனுபவங்களை அதன் பின்னால் சொன்னார். அவற்றைப் பற்றி இதுவரை அவர் சிந்தித்தது இல்லை. அவர் அடைந்த அனுபவங்கள் எல்லாமே இப்போது புதிய அர்த்தத்தில் காணப்படுவதாக அவருக்குத்தோன்றின. அவற்றையெல்லாம் இப்போது நட்டாஷாவுக்கு அவர் சொல்லிக்கொண்டிருந்தபோது, ஒரு பெண் கேட்டுக்கொண்டிருக்கும்போது ஒரு ஆணுக்கு எந்தவிதமான மகிழ்ச்சி ஏற்படுமோ, அதே மகிழ்ச்சி அவருக்கும் தோன்றியது. அதாவது, தந்திரமான பெண்கள் கொடுக்கும் மகிழ்ச்சியைப் போன்றதல்ல; அந்த தந்திரமான பெண்கள்

தங்களிடம் பிறர் பேசுவதைக் கேட்கும்போதே தங்களுடைய மனதில் அவற்றைச் சேமித்து வைப்பதற்காகவே அவர்கள் கேட்டு வருவார்கள். வாய்ப்பு வரும்போது அவற்றைத் திருப்பிச் சொல்லவும், அவற்றோடு தங்களுடைய உள்ளத்தின் தொழிற்சாலையில் உற்பத்தி செய்யும் வியாக்யானங்களையும் சேர்த்துச் சொல்லவுமே, பிறருடைய பேச்சுக்களைக் கேட்பது வழக்கம். பீயர் அடைந்த மகிழ்ச்சி அம்மாதிரியானது அல்ல. அவர் அடைந்த மகிழ்ச்சி உண்மையான பெண்கள் கொடுக்கும் மகிழ்ச்சியைப் போன்றது. ஒருவர் சொல்லும் விஷயங்களிலிருந்து அவரைப் பற்றிய சிறந்த விஷயங்களை கிரகித்துக்கொள்ள கூடிய திறமையைப் பெற்ற உண்மையான பெண்கள் எம்மாதிரி மகிழ்ச்சியைக் கொடுப்பார்களோ, அதே விதமான மகிழ்ச்சியை பீயர் அனுபவித்தார். இதைத்தான் அறியாமலேயே நட்டாஷா முழு கவனத்தோடு கேட்டு வந்தாள். அதாவது, பீயர் சொல்லிய ஒரு வார்த்தையைக்கூட அவருடைய குரலில் கண்ட ஒரு நடுக்கத்தைக்கூட, ஒரு பார்வையைக் கூட, அவருடைய முகத்தில் ஏற்பட்ட ஒரு சுளிப்பைக்கூட ஒரு அசைவைக்கூட விடாமல் கவனித்து வந்தாள். இன்னமும் அவர் சொல்லாமல் விட்ட வார்த்தைகளை, அவை ஆகாயத்தில் இருக்கும்போதே அவற்றை தன்னுடைய உள்ளத்தில் எடுத்துக்கொண்டு, பீயருடைய மனத்துன்பத்திற்கு காரணமான ரகசிய அர்த்தத்தைக் கண்டுபிடித்தாள்.

இளவரசி மேரி அவர் சொல்லிய விவரங்களை அறிந்து கொண்டாள். அவரிடம் அனுதாபம் காட்டினாள். ஆனால், இப்போது ஏதோ ஒரு புதிய விஷயம் அவளுக்குத் தோன்றிய படியால் அவளுடைய கவனம் முழுவதும் அதில் திரும்பியது. நட்டாஷாவுக்கும், பீயருக்கும் காதலும் மகிழ்ச்சியும் ஏற்படுவதற்கு வாய்ப்பு இருப்பதை அவள் கண்டாள். இந்த நினைப்பு முதலில் அவளுக்கு ஏற்பட்டபோது, அவளுடைய இருதயம் மகிழ்ச்சியால் நிரம்பியது.

காலை மூன்று மணி இருக்கும். வாசல் சேவகர்கள் மெழுகுவர்த்தியை மாற்றுவதற்கு, சோகமான, கடுமையான முகங்களோடு வந்தார்கள். ஆனால் அவர்களை ஒருவரும் கவனிக்கவில்லை.

பீயர் தமது கதையைக் கூறிமுடித்தார். நட்டாஷா கவனமாகவும் சிரத்தையோடும் பரபரப்படைந்து, பிரகாசமான கண்களோடு அவரைப் பார்த்துக்கொண்டேயிந்தாள். அதாவது, ஒரு வேளை, அவர் சொல்லாமல் விட்டிருக்கக்கூடிய விஷயங்களை அறிந்துகொள்ள முயற்சிப்பதைப்போல, அவளுடைய தோற்றம்

இருந்தது. வெட்கத்தினாலும் மகிழ்ச்சியான குழப்பத்தினாலும் இடையிடையே பீயர் அவளை நோக்கினார். அடுத்தபடியாக புதிதாக எந்த விஷயத்தைச் சொல்லலாம் என்று அவர் சிந்திக்க முயற்சி செய்தார். இளவரசி மேரி மௌனமாய் இருந்தாள். அப்போது காலை மூன்று மணியாய்விட்டது என்றும், படுக்கைக்கு போகும் நேரமாய்விட்டது என்றும் ஒருவருக்கும் தோன்றவில்லை.

''துரதிருஷ்டங்களைப் பற்றியும் துன்பங்களைப் பற்றியும் மக்கள் பேசுகிறார்கள். ஆனால் இந்த நிமிஷத்தில் என்னிடம் யாராவது 'நீர் கைதியாவதற்கு முன்பாக இருந்த நிலைமையில் இருக்க விரும்புகிறீரா, அல்லது மீண்டும் இந்தக் கஷ்டங்களை அனுபவிக்க விரும்புகிறீரா?' என்று கேட்டால், நான் என்னைக் கைதியாக்கும் படியும், குதிரை மாமிசத்தைத் தின்னும் படியும் விட்டுவிட வேண்டும் என்றுமே கேட்பேன். நம்முடைய பழக்கமான முறைகளிலிருந்து நாம் விலக நேர்ந்தால், எல்லாவற்றையும் இழந்துவிட்டதைப்போல நாம் மனோராஜ்யம் செய்கிறோம். ஆனால் அம்மாதிரி நிலைமை ஏற்பட்ட பின்புதான், புதிதான, நன்மையான காரியங்கள் ஆரம்பமாகின்றன. வாழ்க்கை இருக்கிற வரையில் மகிழ்ச்சியும் இருக்கிறது. நமக்கு முன்பாக அது ஏராளமாய் இருக்கிறது. இதை நான் உனக்குச் சொல்கிறேன்'' என்று நட்டாஷாவைத் திரும்பிப் பார்த்து அவர் சொன்னார்.

''ஆமாம், ஆமாம்'' என்று அவள் வேறு எதையோ நினைத்தவளாகப் பதில் சொன்னாள். ''நான் கூட ஆரம்பத்திலிருந்து மீண்டும் புதிதாக வாழ வேண்டுமென்று நினைக்கிறேன்.''

பீயர் உன்னிப்பாக அவளை நோக்கினார்.

''ஆமாம், அதற்குமேல் எனக்கு எதுவும் தேவையில்லை'' என்றாள் நட்டாஷா.

''அது உண்மையல்ல; அது உண்மையல்ல'' என்று பீயர் கூறினார். ''நான் உயிரோடு இருப்பதற்கும், வாழ விரும்புவதற்கும், என்னை யாரும் குற்றம் சொல்லமுடியாது. உனக்கும் அதே மாதிரிதான்.''

நட்டாஷா தனது தலையைக் குனிந்தாள். தனது கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழ ஆரம்பித்தாள்.

''இது என்ன, நட்டாஷா?'' என்று இளவரசி மேரி கேட்டாள்.

''ஒன்றும் இல்லை; ஒன்றும் இல்லை'', அவள் தன்னுடைய கண்ணீருக்கிடையில் பீயரை நோக்கி புன்முறுவல் காட்டினாள். ''நள்ளிரவு வணக்கம். படுக்கப்போவதற்கு நேரமாய் விட்டது.''

பீயர் எழுந்து விடைபெற்றுக்கொண்டார்.

படுக்கை அறையில் வழக்கம் போல இளவரசி மேரியும் நட்டாஷாவும் சந்தித்தார்கள். பீயர் அவர்களிடம் சொல்லியதைப்பற்றி அவர்கள் பேசினார்கள். பீயரைப் பற்றித் தன்னுடைய கருத்தை இளவரசி மேரியோ, அல்லது நட்டாஷாவோ கூறவில்லை.

''நல்லது, வணக்கம், மேரி'' என்று நட்டாஷா சொன்னாள். ''நம்முடைய உணர்ச்சிகளைப் புண்படுத்த வேண்டியிருக்கும் என்பதற்காக நாம் இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றிப் பேசாமல் இருப்பதால், நாம் அவரை மறந்து வருகிறோம் என்று எனக்குத் தோன்றுகிறது.

இளவரசி மேரி ஆழ்ந்த பெருமூச்சுவிட்டாள். நட்டாஷா சொல்வது முற்றிலும், சரியென்பதை ஒப்புக்கொள்வதைப்போல, அது இருந்தது. ஆனால், அந்த ஒப்புக்கொள்ளுதலை வார்த்தைகளால் அவள் சொல்லவில்லை.

''அப்படி மறந்துவிடுவது சாத்தியமா?'' என்று அவள் கேட்டாள்.

''அதைப்பற்றியெல்லாம் இன்று சொல்லியதால் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. அது கடினமாகவும், துன்பமாகவும் இருந்தாலும், எனக்கு திருப்தியைக் கொடுத்தது. மிகவும் நன்றாக இருந்தது'' என்று நட்டாஷா சொன்னாள். ''அவர் உண்மையாகவே அவர்மீது பிரியம் கொண்டிருந்தார் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன். அதனால்தான் நான் அவரிடம் சொன்னேன்...அது சரிதானே?'' என்று அவள் திடீரென்று முகம் சிவந்து கேட்டாள்.

''பீயரிடம் சொல்வதுதானே? ஓ, ஆமாம், அவர் அவ்வளவு எப்பேர்ப்பட்ட சிலாக்கியமான மனிதர்!'' என்று இளவரசி மேரி கூறினாள்.

''மேரி, உனக்குத் தெரியுமா?'' என்று நட்டாஷா, திடீரென்று ஒரு குறும்புத்தனமான புன்னகையோடு, கேட்டாள். இம்மாதிரியான புன்னகையை வெகுகாலமாக அவள் முகத்தில் இளவரசி மேரி பார்த்தது இல்லை. ''எப்படியோ அவர் சுத்தமாகவும் மிருதுவாகவும் கனிவாகவும் வளர்ந்துவிட்டார். அதாவது, ஒரு ருஷ்ய ஸ்நான அறையிலிருந்து அப்போதுதான் வெளியே வந்ததைப் போலக் காணப்படுகிறார். உனக்குப் புரிகிறதா? அதாவது தார்மீக ஸ்நான அறையிலிருந்து வெளிவந்தவராகக் காணப்படுகிறார். அது உண்மைதானே?''

''ஆமாம், அவர் பெரிதும் அபிவிருத்தியடைந்துவிட்டார்'' என்று இளவரசி மேரி கூறினாள்.

ஒரு குட்டையான கோட்டுடனும், தலைமுடியை வெட்டி விட்டுக் கொண்டும் அவர் அப்போதுதான் ஸ்நான அறை யிலிருந்து... அப்பா மாதிரி...வெளிவந்தவராகக் காணப்பட்டார்.

''இளவரசர் ஆண்ட்ரூ அவர்மீது பிரியமாய் இருந்ததுபோல் யாரிடமும் ஏன் இருக்கவில்லை என்பதை, இப்போதுதான் நான் அறிந்துகொள்கிறேன்'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

''ஆமாம், அவர் முற்றிலும் மாறானவர்; அம்மாதிரி ஒருவருக் கொருவர் முற்றிலும் மாறானவர்களாக இருக்கும்போதுதான், அவர்கள் நண்பர்களாய் இருக்கமுடியும் என்று சொல்லுகிறார்கள். அது உண்மையாய் இருக்க வேண்டும், உண்மையிலேயே அவர் ஆண்ட்ரூவை விட ஒவ்வொரு விதத்திலும் மாறுபட்டவராக இருக்கிறார்.''

''மேலும், அவர் மிகுந்த ஆச்சரியமானவர்.''

''நல்லது; நள்ளிரவு வணக்கம்'' என்று நட்டாஷா சொன்னாள்.

அதே மாதிரியான குறும்புப் புன்னகை, அவளுடைய முகத்தை விட்டுப் போக மறந்துவிட்டதைப் போல, அவளுடைய முகத்தில் வெகுநேரம் வரையில் காணப்பட்டது.

# 15

## 18

அன்று இரவு தூங்குவதற்கு பீயருக்கு வெகு நேரம் ஆயிற்று, அந்த அறையில் மேலும் கீழும் நடந்துகொண்டு, ஒரு கஷ்டமான பிரச்னையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். அவர் முகம் சுளித்து திடீரென்று தமது தோள்களைக் குலுக்கி கண்ணைச் சிமிட்டுவதும், பின்னால் மகிழ்ச்சியோடு புன்முறுவல் காட்டுவது மாக இருந்தார்.

அவர் இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றியும், நட்டாஷாவைப் பற்றியும், அவர்களுடைய காதலைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தார். அவளுடைய கடந்த காலத்தைப்பற்றி ஒரு வினாடி பொறாமை கொண்டார். உடனே அந்தப் பொறாமைக்காக தன்னையே கடிந்துகொண்டார். காலை ஆறு மணி ஆயிற்று. இன்னமும் அவர் தம்முடைய அறையில் மேலும் கீழும் நடந்துகொண்டிருந்தார்.

''நல்லது, அதைத் தவிர்க்க முடியாது என்றால், வேறு என்ன செய்ய முடியும்? வேறு என்ன செய்ய முடியும்? அப்படித்தான் செய்தாகவேண்டுமென்று தோன்றுகிறது'' என்று அவர் தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். பின்னால் வெளி உடைகளைக் களைந்துவிட்டு, படுக்கையில் அவசரமாகப் போய்ப்படுத்தார். அவருடைய மனமானது தயக்கத்திலிருந்தும், உறுதியற்ற நிலைமை யிலிருந்தும் விடுபட்டு, மகிழ்ச்சியும் பரபரப்பும் கொண்டிருந்தது.

''அம்மாதிரி மகிழ்ச்சியானது, விசித்திரமாகவும் நடக்க முடியாததாகவும் காணப்பட்ட போதிலும் நானும் அவளும் கணவனும் மனைவியும் ஆவதற்காக என்னால் செய்யக்கூடிய ஒவ்வொன்றையும் செய்தாகவேண்டும்'' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார். சில தினங்களுக்கு முன்னால் வெள்ளிக்கிழமையன்று பீட்டர்ஸ்பர்க்கிற்கு போவது என்று பீயர் தீர்மானித்திருந்தார். வியாழக்கிழமையன்று அவர் விழித்து எழுந்தபோது, பிரயாணத்திற்கு வேண்டிய சாமான்களைக் கட்டுவதற்காக சாவேலிச் அவரிடம் வந்தார்.

''என்ன, பீட்டர்ஸ் பர்க்கிற்கா? பீட்டரிஸ்பர்க் என்றால் என்ன? பீட்டர்ஸ் பர்க்கில் யார் இருக்கிறார்கள்?'' என்று அவர் தம்மை யறியாமலேயே தம்மைக் கேட்டுக்கொண்டார். ''ஓ, ஆமாம் இது நடப்பதற்கு வெகு காலத்திற்கு முன்பாக ஏதோ சில காரணத்திற்காக, பீட்டர்ஸ்பர்க் போவது என்றுதான் தீர்மானித்து இருந்தேன்'' என்று அவருக்கு நினைவு வந்தது. ''ஏன்? ஒரு வேளை நான் போகலாம் அவர் எவ்வளவு நல்ல மனிதராய் இருக்கிறார்! எவ்வளவு தூரம் கவனத்தோடு இருக்கிறார்! ஒவ்வொரு விஷயத்தையும் எவ்வளவு தூரம் ஞாபகம் வைத்துச் செய்கிறார்!'' என்று அவர் சாவேலிச்சின் முதிய முகத்தைப் பார்த்துக்கொண்டு நினைத்தார். ''அவருடைய முகத்தில் எவ்வளவு இனிமையான புன்முறுவல் காணப்படுகிறது!''

''நல்லது, சாவேலிச், நீர் இன்னமும் உமது சுதந்திரத்தை விரும்பவில்லையா?'' என்று பீயர் அவரைக் கேட்டார்.

''மேன்மை தங்கியவரே, எனக்கு சுதந்திரத்தினால் என்ன நன்மை ஏற்படப்போகிறது? காலம் சென்ற கோமகனிடம் நாங்கள் வேலை பார்த்து வந்தோம் – பரிசுத்த தேவலோகமானது அவருடையதாக இருப்பதாக–அதன் பின்னால் உம்மிடமும் வேலை பார்த்து வருகிறோம். நாங்கள் எவ்விதமான அசௌகரியமும் இல்லாமல், சௌக்கியமாய் இருக்கிறோம்.''

''அப்படியானால், உம்முடைய குழந்தைகளைப் பற்றி என்ன?''

''குழந்தைகளும் அதே மாதிரி வாழ்வார்கள். இம்மாதிரி எஜமானர்களிடம் ஒவ்வொருவரும் சந்தோஷமாக வாழ முடியும்.''

''ஆனால், என்னுடைய குழந்தைகளைப் பற்றி என்ன? நான் திடீரென்று திருமணம் செய்வதாய் வைத்துக்கொள்ளும்... ஒருவேளை அது நடக்கலாம்'' என்று அவர் தம்மையறியாத புன்சிரிப்போடு பேசினார்.

''மேன்மை தங்கியவரே, எனக்கு பேசுவதற்கு அனுமதி கொடுத்தால், நீர் அம்மாதிரி செய்வது நல்லது என்றுதான் சொல்லுவேன்.''

''ஆமாம், எவ்வளவு சுலபமாக சிந்திக்கிறார்!'' என்று பீயர் எண்ணினார். ''அது எவ்வளவு பயங்கரமானதென்றோ, எவ்வளவு

ஆபத்தான தென்றோ அவருக்குத் தெரியாது. சீக்கிரமாகவோ, அல்லது காலங்கழித்தோ, இருந்தாலும்... அது பயங்கரமானது.''

''அப்படியானால், உமது உத்தரவுகள் என்ன? நீர் நாளை புறப்படப் போகிறீரா?'' என்று சாவேலிச் கேட்டார்.

''இல்லை, நான் புறப்படுவதை கொஞ்சம் ஒத்தி வைக்கப்போகிறேன். உமக்குப் பின்னால் சொல்லுகிறேன். உமக்கு நான் கொடுத்த கஷ்டத்திற்காக என்னை மன்னிப்பீராக'' என்று பீயர் சொன்னார். சாவேலிச் புன் முறுவல் காட்டுவதைப் பார்த்து, அவர் நினைத்ததாவது: ''இப்போது எனக்கு பிட்டர்ஸ்பர்க்கில் சிரத்தை கிடையாது என்பதையும், முதலில் 'அந்த' விஷயம் நிச்சயமாக வேண்டம் என்பதையும் அவர் அறியாமல் இருப்பது எவ்வளவு விசித்திரமாய் இருக்கிறது! ஒரு வேளை அவருக்கு அது நன்றாகத் தெரிந்திருக்கலாம். தெரியாததுபோல அவர் பாசாங்கு செய்யலாம். நான் அவருடன் பேசி, அவருடைய கருத்தை அறிந்து கொள்ளலாமா? இல்லை மற்றொரு தடவை அதை வைத்துக் கொள்ளலாம்.''

காலை உணவைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது, அவருடைய மைத்துனியான இளவரசியிடம். அவர் முதல் நாளன்று இளவரசி மேரியைப் பார்க்கப்போயிருந்ததாகச் சொன்னார். ''அங்கே வேறுயாரை நான் சந்தித்தேன் என்று நீ நினைக்கிறாய்?... நட்டாஷா ராஸ்டோவா!''

அன்னா செமியோனாவ்னாவை அவள் பார்த்திருந்தாலும் கூட, அதை விட இந்த விஷயம் பெரிய முக்கியத்துவம் வாய்ந்ததாக இளவரசிக்குத் தோன்றவில்லை.

''உனக்கு அவளைத் தெரியுமா?'' என்று பீயர் கேட்டார்.

''நான் இளவரசியைப் பார்த்திருக்கிறேன். இளைய ராஸ்டோவுக்கு அவளைக் கல்யாணம் செய்வதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாக நான் கேள்விப்பட்டேன். ராஸ்டோவ் குடும்பம் இப்போது மிகுந்த கஷ்ட நிலைமையில் இருப்பதால் அம்மாதிரி திருமணம் நடந்தால், அது அவர்களுக்கு மிகவும் நன்மையாய் இருக்கும்.''

''இல்லை, நட்டாஷா ராஸ்டோவாவை உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

''அவளுடைய விவகாரத்தைப் பற்றி அந்தக் காலத்தில் நான் கேள்விப் பட்டேன். அது மிகவும் பரிதாபப்படக்கூடிய விஷயம்.''

''இல்லை, அவள் ஒன்றும் அறியாமல் இருந்திருக்க வேண்டும். அல்லது நடிப்பதாக இருக்க வேண்டும்'' என்று பீயர் நினைத்தார் ''அவரிடம் ஒன்றும் சொல்லாமல் இருப்பது நல்லது.

பீயருடைய பிரயாணத்திற்கு வேண்டிய சாமான்களை இளவரசி கூட தயார் செய்து வைத்திருந்தாள்.

''அவர்கள் எல்லாரும் எவ்வளவு பிரியமாய் இருக்கிறார்கள்!'' என்று பீயர் நினைத்தார். ''அவர்கள் இதைப் பற்றிச் சிரத்தை எடுத்துக் கொள்வதுதான் ஆச்சரியமான விஷயமாய் இருக்கிறது. ஏனெனில் அவர்களுக்கு இதைப்பற்றி சிரத்தை கொள்ளவேண்டிய அவசியமே இல்லை. என விஷயத்தில் மட்டும்தான், எல்லா சிரத்தையையும் அவர்கள் காட்டுகிறார்கள்''.

அதே தினத்தில் போலீஸ் தலைவர் பீயரிடம் வந்து, அரண்மனைக்கு ஒரு பிரதிநிதியை அனுப்பி, அவருடைய சாமான்களைப் பெற்றுவரும்படி சொன்னார்.

''இந்த மனிதர்கூட எவ்வளவு நல்லவராய் இருக்கிறார்! பார்வைக்கு லட்சணமான அதிகாரியாகவும், மிகுந்த பிரியமாகவும் இருக்கிறார்'' என்று பீயர் அந்தப் போலீஸ் தலைவரின் முகத்தைப் பார்த்தபோது நினைத்தார்.

''இம்மாதிரி அற்ப விஷயங்களுக்கு எல்லாம் கவலை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர் ஒழுக்கமற்றவர், லஞ்சம் வாங்குகிறார் என்று மக்கள் சொல்லுகிறார்கள். எப்பேர்ப்பட்ட அசட்டுத்தனம். தவிரவும், அவர் ஏன் லஞ்சம் வாங்கக் கூடாது? அம்மாதிரி வழியில்தான் அவர் வளர்ந்து வந்திருக்கிறார். ஒவ்வொருவரும் லஞ்சம் வாங்கிக் கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால் அவர் என்னைப் பார்க்கும்போது, எவ்வளவு அன்பான இனிமையான புன்னகையோடு பார்க்கிறார்.''

டின்னர் சாப்பிடுவதற்காக இளவரசி மேரியின் வீட்டிற்குப் பீயர் சென்றார்.

தெருக்கள் வழியாக அவருடைய வண்டியில் போய்க் கொண்டிருந்த போது, எரிந்துபோன வீடுகளைப் பார்த்துக் கொண்டே போனார். அந்த எரிந்து நாசமானவைகள்கூட அழகாகத் தோன்றுவதைப் பார்த்து அவர் ஆச்சரியமடைந்தார். புகைக் கூண்டுகளும், கீழே விழுந்த சுவர்களும், அந்த எரிந்துபோன பகுதிகளில் வரிசையாக ஒன்றையொன்று மறைத்துக்கொண்டு காட்சியளித்ததானது, அவருக்கு ரைன் பிரதேசத்தையும் ரோமா புரியிலுள்ள புராதன இடிபாடுகளையும் அவருக்கு ஞாபக மூட்டின. போகிற வழியில் அவர் சந்தித்த வண்டிக்காரர்களும், வண்டிகளிலிருந்த பிரயாணிகளும், புது வீடுகளைக் கட்டுவதற்காக மரங்களை அறுத்துக் கொண்டிருந்த தச்சர்களும், பெண் ஹாக்கர்களும், கடைக்காரர்களும், பிரகாசமான, மகிழ்ச்சியான பார்வையோடு அவரைப் பார்த்தார்கள். அந்தப் பார்வையானது, ''ஆ, இதோ இருக்கிறார்! அவர் என்ன செய்யப் போகிறார் என்பதைப் பார்க்கலாம்?'' என்று கூறுவதைப்போல இருந்தது.

இளவரசி மேரியின் வீட்டு வாசலுக்குள் நுழைந்ததும், அவர் முதல் நாளன்று இரவு அந்த இடத்திற்கு வந்தாரா, அங்கே நட்டாஷாவைப்

பார்த்துப் பேசினாரா என்ற சந்தேகம் பீயருக்குத் தோன்றியது. ''ஒருவேளை நான் அம்மாதிரி மனோராஜ்யம் செய்து கொண்டிருந் திருக்கலாம். நான் இப்போது உள்ளே போனால், அங்கே ஒருவரும் இல்லாமல் இருக்கலாம்.'' மேரியின் வீட்டிற்குப் பீயர் சென்றார்.

இதற்குள்ளாக உள்ளே, அறைக்குள் போனதும், அவர் தம்முடைய சுதந்திர உணர்ச்சியை இழந்ததின்மூலம், அங்கே அவள் இருக்கிறாள் என்பதை அவளுடைய பிரசன்னத்தை அவர் உணர்ந்தார். அதே மாதிரி கறுப்பு உடையில்தான் அவள் இருந்தாள். முதல் நாளன்று அவளுடைய தலை அலங்காரம் எப்படி இருந்ததோ, அதே மாதிரிதான் இப்போதும் இருந்தது. என்றாலும், இன்று முற்றிலும் மாறுபட்டவர்களாகக் காணப்பட்டாள். முதல் நாளன்று அவர் அங்கே நுழைந்தபோது இதே மாதிரி இருந்தி ருப்பாளானால், அவளை அவர் ஒரு வினாடியில் அடையாளம் கண்டு கொண்டிருப்பார்.

அவள் சிறு குழந்தையாய் இருந்தபோதும், பின்னால் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு நிச்சயார்த்தம் ஆன போதும் எம்மாதிரி பீயர் கண்டாரோ அதே மாதிரிதான் இப்போதும் காணப்பட்டாள். அவளுடைய கண்களில் ஒரு பிரகாசமான கேள்விக்குறி தோன்றியது. அவளுடைய முகத்தில் குறும்புத்தனமான, விசித்திரமான சிநேகபாவமான தோற்றம் காணப்பட்டது.

அவர்களோடு பீயர் டின்னர் சாப்பிட்டார். அன்று முழுவதும் அங்கே அவர் இருந்திருப்பார். ஆனால் இளவளசி மேரி மாலைப் பிரார்த்தனைக்குப் போவதாய் இருந்தபடியால் அந்த வீட்டை விட்டு அவளோடு வெளியே புறப்பட்டார்.

அடுத்த நாளன்று சீக்கிரமாகவே பீயர் அங்கே வந்து விட்டார். டின்னர் சாப்பிட்ட பின்பு, மாலை முழுவதும் அங்கேயே இருந்தார். இளவரசி மேரியும், நட்டாஷாவும் அவரைப் பார்ப்பதற்கு மிகுந்த மகிழ்ச்சி கொண்டிருந்தார்கள்; அந்த இடத்தில்தான் பீயரின் சிரத்தை முழுவதும்ப் இப்பொழுது பதிந்து இருந்தது; என்றாலும், மாலைக்குள்ளாக அவர்கள் எல்லாவற்றையும் பேசி முடித்து விட்டார்கள். ஆகவே, ஒரு சிறிய விஷயத்திலிருந்து இன்னொரு சிறிய விஷயத்துக்குப் போவதும், மீண்டும் பேசுவதற்கும் விஷயம் இல்லாமல் சும்மா இருப்பதுமாக இருந்தார்கள். அவர் வெகுநேரம் தங்கி விட்டபடியால், இளவரசி மேரியும், நட்டாஷாவும், அவர் எப்போது அதை விட்டுப் புறப்படுவார் என்பதைக் கேட்பதுபோல, ஒருவரையொருவர் கண்ஜாடை செய்து கொண்டார்கள். இதைப் பீயர் கவனித்தார். ஆனால், அவரால் போக முடியவில்லை. அவர் மனக் குழப்பம் அடைந்து, சங்கோஜம் கொண்டார். அவரால் எழுந்தி ருக்கவோ, விடை பெறவோ முடியாததால், அவர் அங்கு உட்கார்ந் திருந்தார்.

இதற்கு ஒரு முடிவு இல்லையென்பதைக் கண்ட இளவரசி மேரி, முதலில் எழுந்தாள். ஏதோ தலைவலி இருக்கிற மாதிரி சொல்லிக்கொண்டு, ''நள்ளிரவு வணக்கம்'' சொல்லி ஆரம்பித்தாள்.

''அப்படியானால், நீர் நாளைய தினம் பீட்டர்ஸ்பர்க்கிற்கு போகிறீரா?'' என்று அவள் கேட்டாள்.

''இல்லை, நாள் போகவில்லை'' என்று பீயர் வேகமாகப் பதில் சொன்னார். மனவருத்தம் அடைந்தவரைப் போன்ற ஆச்சரியத் தொனி அந்தப் பேச்சில் இருந்தது.

''ஆமாம்... இல்லை... பீட்டர்ஸ்பர்க்கிற்கா?... நாளை– இன்னும் நான் புறப்பட்டுப் போவதற்காக வழியனுப்புவதற்குத் தயாராய் இல்லை. ஒரு வேளை நான் ஏதாவது உங்களுக்குச் செய்யக் கூடியதாய் இருக்குமானால், நான் நாளையன்று இங்கே வருகிறேன்'' என்று அவர் சொன்னார். இளவரசி மேரியின் முன்பாக அவர் நின்று கொண்டு பேசியபோது, அவருடைய முகம் சிவந்தது. ஆனால் இன்னமும் அவர் புறப்படவில்லை.

நட்டாஷா அவருக்கு அவளுடைய கையை நீட்டினாள். அதன் பின்னால் அவள் வெளியே போனாள். இளவரசி மேரி வெளியே போவதற்குப் பதிலாக, அங்கிருந்த நாற்காலியில் மீண்டும் அமர்ந்தாள். அவள் கடுமையான உன்னிப்பான பார்வையோடு, அவளுடைய ஆழ்ந்த பிரகாசமான கண்களால் அவரை நோக்கினாள். அவளுடைய முகத்தில் முன்னால் காணப்பட்ட களைப்பு, இப்போது முற்றிலும் மறைந்து போயிற்று. ஆழ்ந்த நீளமான பெருமூச்சு விட்டு, அவள் ஒரு நீண்ட உரையாடலுக்குத் தயாரானதைப் போலக் காணப்பட்டாள்.

நட்டாஷா அந்த அறையை விட்டு வெளியே போனதும், பீயரின் மனக்குழப்பமும் சங்கோஜமும் திடீரென்று மறைந்து போயின. அவற்றிக்குப் பதிலாக ஒரு ஆவலோடு கூடிய பரபரப்பு அவருக்கு ஏற்பட்டது. அவர் வேகமாக இளவரசியின் ப்க்கத்தில் நாற்காலியை இழுத்துப் போட்டார்.

''ஆமாம், நான் உன்னிடம் சொல்வதற்கு விரும்பினேன்'' என்று அவருடைய பார்வை அவளிடம் எதையோ கேட்டதுபோல அவர் பதில் சொன்னார். ''இளவரசியே, நீதான் எனக்கு உதவி செய்ய வேண்டும். நான் என்ன செய்ய முடியும்? நான் நம்பியிருக்கலாமா? இளவரசியே, என் அருமையான சிநேகிதியே கவனித்துக் கேள். எனக்கு எல்லாம் தெரியும். நான் அவளுக்கு, அவ்வளவு தகுதியுள்ளவனும் அல்ல என்பதும் எனக்குத் தெரியும். அதைப் பற்றி இப்போது பேசுவது கூட அசாத்தியமென்பதையும் நான் அறிவேன். ஆனால் அவளுக்கு ஒரு சகோதரனைப்போல இருக்க நான் விரும்புகிறேன். இல்லை, அது அல்ல. எனக்கு முடியாது. என்னால் முடியாது...''

அவர் சிறிது நேரம் தயங்கினார். தம்முடைய முகத்தையும் கண்களையும் தமது கைகளினால் தேய்த்துக் கொண்டார்.

தம்மையடக்கிக் கொண்டு தொடர்ச்சியாகச் சொல்வதற்கு முயற்சி செய்பவரைப் போலக் காணப்பட்டார். ''அவளை எப்போது காதலிக்க ஆரம்பித்தேன் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அவளைக் காதலிக்கிறேன். அவளை மட்டுமே காதலிக் கிறேன்; மனமாற காதலிக்கிறேன். என்னுடைய உயிர் பூராவையும் வைத்துக் காதலிக்கிறேன். ஆகவே, அவள் இல்லாமல் நாள் வாழ முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. அவ்வளவு தூரம் அவளைக் காதலிக்கிறேன். அவள் என்னை திருமணம் செய்ய வேண்டுமென்று இப்போது நான் அவளிடம் கேட்கப் போவ தில்லை. ஆனால் அவள் எப்போதாவது எனது மனைவியாகக் கூடும் எனற் நினைப்பு இருக்கிறது. அந்த சந்தர்ப்பத்தை நான் நழுவ விடக்கூடாது. அப்படி நழுவ விட்டு விடுவேனோ என்ற நினைப்பானது பயங்கரமாய் இருக்கிறது. ஆகவே, நான் நம்பிக்கொண்டு இருக்கலாமா என்பதை என்னிடம் சொல்லு. நான் என்ன செய்ய வேண்டுமென்பதை, எனது அருமையான இளவரசியே, நீயே சொல்லு'' என்று அவர் சிறிது நேரம் தயங்கி விட்டு, மேலும் பேசினார். உடனே அவள் பதில் சொல்லாததால், அவர் அவளுடைய கையைத் தொட்டார்.

''என்னிடம் செர்ல்லியதைப் பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்'' என்று இளவரசி பதில் சொன்னாள். ''நான் உமக்குச் சொல்லக் கூடியது, இதுதான். இந்தச் சமயத்தில் அவளிடம் காதலைப் பற்றிப் பேசுவது உசிதமல்ல என்று நீர் சொல்வது சரிதான்...''

இளவரசி மேரி பேசுவதை நிறுத்தினாள். காதலைப் பற்றிப் பேசுவது அசாத்தியம் என்று அவள் சொல்வதற்கு விரும்பினாள்; ஆனால் நிறுத்திக் கொண்டாள். ஏனெனில், கடந்த இரண்டு தினங்களாக நட்டாஷாவிடம் திடீரென்று மாறுதல் ஏற்பட்டி ருப்பதை அவள் கண்டாள். ஆகவே பீயர் அவளிடம் காதலைப் பற்றிப் பேசினால், அவள் வருத்தம் அடைய மாட்டாள் என்றும், அதைத்தான் அவள் விரும்புகிறாள் என்றும் அவள் நினைத்தாள்.

''இந்தச் சமயத்தில் அவளிடம் இதைப் பற்றிப் பேசுவது நல்லதல்ல'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

''ஆனால், நான் என்ன செய்வது?''

''அதை என்னிடம் விட்டுவிடும். எனக்குத் தெரியும்...'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

இளவரசி மேரியின் கண்களை பீயர் பார்த்தார். ''நல்லது...? நல்லது...?'' என்று அவர் பதில் சொன்னார்.

''அவள் காதலிக்கிறாள்... அவள் உம்மைக் காதலிப்பாள் என்பதை நான் அறிவேன்'' என்று இளவரசி மேரி சொன்னாள்.

அவளுடைய வார்த்தை வெளிப்படுவதற்கு முன்பாக, பீயர் திடீரென்று குதித்தெழுந்து, ஒரு பீதியுற்ற தோற்றத்தோடு இளவரசி மேரியின் கையைப் பற்றிக் கொண்டார்.

''அம்மாதிரி நீ ஏதனால் நினைக்கிறாய்? நான் நம்பியிருக்கலாமென்று நீ நினைக்கிறாயா? நீ நினைப்பது...''

''ஆமாம், நான் அப்படித்தான் நினைக்கிறேன்'' என்று இளவரசி மேரி ஒரு புன்முறுவலோடு சொன்னாள். ''அவளுடைய பெற்றோருக்கு நீர் எழுதலாம். மற்ற வஷயங்களை என்னிடம் விட்டு விடும். அவளிடம் எப்போது என்னால் சொல்ல முடியுமோ, அப்போது நான் அவருக்குச் சொல்கிறேன். அம்மாதிரி நடக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அம்மாதிரி நடக்குமென்று என் உள்ளம் சொல்லுகிறது.''

''இல்லை, அப்படியிருக்க முடியாது. நான் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறேன். ஆனால் அப்படியிருக்க முடியாது... நான் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கிறேன். இல்லை, அப்படியிருக்க முடியாது'' என்று பீயர், இளவரசி மேரியின் கைகளை முத்தமிட்டபோது, சொல்லிக்கொண்டே இருந்தார்.

''நீர் பீட்டர்ஸ்பர்க்கிற்கு போம். அதுதான் நல்லது. நான் உமக்கு கடிதம் எழுதுகிறேன்'' என்று சொன்னாள்.

''பீட்டர்ஸ்பர்க்கிற்கா? அங்கேயா போகவேண்டும்? ரொம்ப நல்லது; நான் போகிறேன். ஆனால் நாளை நான் மறுபடியும் வரலாமல்லவா?''

அடுத்த நாளன்று விடை பெற்றுக் கொள்வதற்காக பீயர் வந்தார். நட்டாஷா முன் தினம் இருந்ததைவிட, கொஞ்சம் குறைவான பரபரப்போடு காணப்பட்டாள். அன்று அவர் அவளைப் பார்த்தபோது, தாம் மறைந்து போவதாகவும், அவளோ தாமோ இல்லாதது போலவும், ஆனந்தம் ஒன்றுதான் அங்கே இருப்பது போலவும் அவர் உணர்ந்தார். ''அது சாத்தியமா? இல்லை, அப்படி இருக்க முடியாது'' என்று, அவளுடைய ஒவ்வொரு பார்வையும் அசைப்பும் வார்த்தையும் அவருடைய உள்ளத்தை மகிழ்ச்சியினால் நிரப்பியபோது, அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவர் விடைபெற்றுக்கொண்டபோது, அவளுடைய மெல்லிய கையை எடுத்துச் சிறிது நேரம் அதிகமாகவே கையில் பிடித்துக் கொண்டிருந்தார்.

''இந்தக் கை, இந்த முகம், இந்தக் கண்கள், ஆகிய பெண்ணின் கவர்ச்சி பூராவும் கொண்ட இந்தப் பொக்கிஷமானது, இன்று எனக்கு

விசித்திரமாக இருந்தாலும், ஒரு நாளன்று எப்பொழுதும் எனக்கே சொந்தமானவையாக ஆகுமா? இல்லை, அது முடியாத காரியம்.''

''போய் வாரும், கோமகனே'' என்று அவள் உரத்த குரலில் சொன்னாள். ''நீர் திரும்ப வருவதை நான் மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்'' என்று மெதுவான குரலில் மேலும் சொன்னாள்.

இந்த சாதாரண வார்த்தைகளும், அவளுடைய பார்வையும், அவளுடைய முகத்தில் தோன்றிய தோற்றமும், இரண்டு மாதங்களாகப் பீயருக்கு இடைவிடாத, எல்லையற்ற நினைப்பு களாகவும், வியாக்கியானத்திற்குரிய பொருள்களாகவும், மகிழ்ச்சி யான சிந்தனைகளாகவும் இருந்து வந்தன. ''நீர் திரும்ப வருவதை நான் மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன் என்று அவள் சொன்னாள். ஆம், ஆம். அதை எப்படி அவள் சொன்னாள்? ஆம், நீர் திரும்ப வருவதை நான் மிகுந்த ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருப்பேன் என்று அவள் சொன்னாள். ஓ, நான் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கிறேன்! எனக்கு என்ன நேர்ந்து கொண்டிருக்கிறது? நான் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கிறேன்!'' என்று பீயர் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

## 15

### 19

ஹெலனை திருமணம் செய்து கொள்ளுவதற்காக அவளுடன் சல்லாபம் செய்து கொண்டிருந்த காலத்தில், பீயரின் மனதில் தோன்றிய கஷ்டங்கள் எதுவும் இப்பொழுது பீயரின் உள்ளத்தில் இல்லை.

அவர் என்ன சொன்னாரோ, அதைத் திரும்பச் சொல்லுவதற்கு வெட்கமடைய வில்லை. அல்லது ''ஓ, நான் அதையேன் சொல்லவில்லை?'' என்றோ அல்லது ''நான் உன்னைக் காதலிக் கிறேன் என்று நான் சொல்லும்படி என்னை எது செய்தது?'' என்றோ அவர் சொல்லுவ தில்லை. அதற்கு பதிலாக, நட்டாஷாவோ, அவரோ பேசிய ஒவ்வொரு வார்த்தையையும், அவருடைய முகத்தில் காணப்பட்ட தோற்றத்தையும், புன்னகையையும், அவர் இப்பொழுது மனக்கண் முன்பாகச் சித்திரம் செய்வதுண்டு. அவைகளோடு பதிதாக எதையும் சேர்க்கவோ, அல்லது குறைக்கவோ அவர் விரும்புவதில்லை. அதே விஷயங்களைத் திரும்பத் திரும்ப அவர் சொல்லிக்கொண்டே யிருப்பதைத்தான், இப்பொழுது விரும்பினார். தம்முடைய முயற்சி சரியா, அல்லது தப்பா என்பதைப் பற்றி அணுவளவுகூட அவருடைய மனதில் இப்பொழுது சந்தேகமில்லை. ஆனால், ஒரேயொரு பயங்கரமான சந்தேகந்தான் அவருடைய உள்ளத்தில் சில வேளைகளில்

ஏற்படுவதுண்டு: ''இதெல்லாம் கனவு அல்லவே? இளவரசி மேரி சொல்லியதில் தவறு இருக்காது அல்லவா? நான் அதிகமாகத் தற்பெருமையையும், சுயநம்பிக்கையும் கொண்டிருக்கிறேனா? இந்த விஷயங்கள் எல்லாவற்றையும் நான் நம்புகிறேன். திடீரென்று இளவரசி மேரி அவளிடம் சொல்லுவாள். அவள் நிச்சயமாக ஒரு புன்முறுவல் கொண்டு பின்வருமாறு கூறுவாள்: ''எவ்வளவு விசித்திரமாயிருக்கிறது! அவர் தம்மையே ஏமாற்றிக் கொண்டிருக்க வேண்டும். அவர் ஒரு மனிதர் என்பதை, ஒரு சாதாரண மனிதர் என்பதை அறியவில்லையா...? நான் முற்றிலும் மாறாகவும், உயர்வானவளாகவும் இருக்கிறேன்.''

ஒரேயொரு பயங்கரமான சந்தேகந்தான் பீயருக்கு அடிக்கடி கஷ்டத்தைக் கொடுத்து வந்தது. இப்பொழுது அவர் எந்த விதமான திட்டங்களையும் செய்யவில்லை. அவருக்கு முன்பாக உள்ள அந்த மகிழ்ச்சியானது மனதினால்கூட நினைக்க முடியாதபடி அவ்வளவு சிலாக்கியமானதாக இருப்பதால், அதை அவர் அடைந்து விட்டால், அதோடு எல்லா விஷயங்களும் முடிவான மாதிரிதான். ஒவ்வொரு விஷயமும் அதோடு முடிந்துவிடும் என்று நினைத்தார்.

ஒரு மகிழ்ச்சியான, எதிர்பாராத பரபரப்பு வெள்ளமானது, தம்மால் அம்மாதிரி உணர்ச்சி கொள்ள முடியாது என்று அவர் நினைத்த பரபரப்பானது, அவரைப் பற்றிக்கொண்டது. வாழ்க்கையின் முழு அர்த்தமும் - அவருக்கு மட்டுமல்ல, உலகம் பூராவுக்குமே - இப்பொழுது அவருடைய காதலிலும், அவள் அவரைக் காதலிப்பாள் என்ற சாத்தியத்திலும் தங்கி நிற்பதாக அவருக்குத் தோன்றியது. எல்லாருமே - தம்முடைய எதிர் கால மகிழ்ச்சியில் - அந்த ஒரே விஷயத்தில் சிரத்தைக் கொண்டிருப்பதாகச் சில சமயங்களில் அவருக்குத் தோன்றியது. சில சமயங்களில் மற்றவர்கள் எல்லாருமே தம்மைப்போலவே மகிழ்ச்சியோடு இருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவர்கள் எல்லாரும் தாங்கள் வேறு வேலைகளில் சுறுசுறுப்போடு இருப்பதாகப் பாசாங்கு செய்து, அந்த மகிழ்ச்சியை மறைப்பதாக அவர் நினைத்தார். ஒவ்வொரு வார்த்தையிலும், ஒவ்வொரு அசைப்பிலும், தம்முடைய மகிழ்ச்சியைக் குறிப்பிடுவதாக அவர் கண்டார். தம்முடைய மகிழ்ச்சியான பார்வைகளினாலும், புன்முறுவல்களினாலும் பலரை ஆச்சரியப்படும்படி அவர் செய்தார். அவையெல்லாம் அவருக்கும் அவர்களுக்கும் ஒரு அந்தரங்கமான உடன்பாடு ஏற்பட்டிருப்பதைப் போலக் காட்டின. தம்முடைய மகிழ்ச்சியைப் பற்றி மற்றவர்களுக்குத் தெரிந்திருக்க முடியாது என்று அவர் கண்டபோது, அவர்கள் மீது தமது முழு மனதோடு அனுதாபம் கொள்ளுவார். அவர்கள் எல்லாரும் ஈடுபட்டிருக்கும் வேலைகளானது, மிகவும் சாதாரணமான், கொஞ்சங்கூட சிந்திப்பதற்கு அருகதையற்றதான விஷயங்கள்

என்பதை, அவர்களுக்கு விளக்கிச் சொல்ல அவருக்கு விருப்ப மேற்படுவதுண்டு.

அவர் அரசாங்க சேவையில் சேர வேண்டும் என்று சொல்லும் போதோ, அல்லது ஒரு யுத்தத்தைப் பற்றியோ, பொதுவான அரசியல் விவகாரங்களைப் பற்றியோ விவாதம் செய்யும்போதோ, அவையெல்லாம் ஒரு குறிப்பிட்ட யூகத்தின் மீதுதான் செய்யப் படும். அதாவது, ஒவ்வொருவருடைய நன்மையும் இந்த சம்பவத் தையோ, அந்த சம்பவத்தையோ பொறுத்துத் தான் இருக்கிறது என்று சொல்லுவதுண்டு. அச் சமயங்களில் எல்லாம் அவர் ஒரு அமைதியான, இரக்கமான புன்முறுவலைக்காட்டி, அவருடைய விசித்திரமான பதில்களினால் எல்லாரையும் ஆச்சரியப்படும்படி செய்வார். அச் சமயங்களில் வாழ்க்கையின் உண்மையான அர்த் தத்தை அறிந்தவர்கள் என்று (அதாவது, அவர் எண்ணுகிறபடி) அவர் நினைக்கிற நபர்களையும், அந்த அர்த்தத்தை அறிந்திராத துர திர்ஷ்டம் பிடித்தவர்களையும், அவர் உள்ளத்தில் தோன்றிய அந்த உணர்ச்சியின் ஒளியைக் கொண்டு அவர் பார்த்து வந்தார். உடனே எவ்விதமான சிரமமும் இல்லாமல் அவர்கள் எல்லாரிடமும் நன்மையான காரியங்கள் முழுவதும் இருப்பதாகவும், அவர்கள்மீது அன்பு கொள்ள அவர்கள் தகுதியுள்ளவர்கள் என்றும் அவருக்குத் தோன்றியது.

அவருடைய் இறந்துபோன மனைவியைப் பற்றிய காரியா திகளை அவர் கவனித்தபோது, அவளுடைய நினைவானது அவரு டைய உள்ளத்தில் எந்த விதமான உணர்ச்சியையும் ஏற்படுத்த வில்லை. ஆனால் அவர் இப்பொழுது அறிந்துள்ள பேரானந்தத்தை அவளும் அறியாமல் போனாளே என்ற இரக்கந்தான் அவருக்குத் தோன்றியது. இளவரசர் வாசைலிக்கு ஒரு புதிய பதவியும் சில பதக்கங்களும் கிடைத்திருக்கின்றன. அவற்றைக் கண்டு அவர் பெருமை கொண்டிருந்தார். ஆனால் அந்த இளவரசர் வாசைலி ஒரு பரிதாபமான, அன்புள்ள கிழவராக, இரக்கப்படக்கூடிய மனிதராக பியருக்குத் தோன்றினார்.

இந்தப் பேரானந்த மூளைப் புரட்சியைப் பற்றிய காலத்தை, பிற்காலத்தில் பியர் அடிக்கடி நினைப்பதுண்டு. இந்தக் காலத்தில் மக்களைப் பற்றியும், சந்தர்ப்பங்களைப் பற்றியும் அவருக்கு ஏற்பட்ட அபிப்பிராயமானது, எப்பொழுதுமே உண்மையாக நிலைத்து நின்று வந்தது. அந்த கருத்தை அவர் பின்னால் தள்ளிவிடாதது மட்டுமல்ல; அதற்கு மாறாக, அவருக்கு ஏதாவது சந்தேகம் ஏற்படுமானால், அல்லது உள்ளத்தில் கருத்து வேற்றுமை ஏற்படுமானால், இந்த மூளைப்புரட்சி காலத்தில் அவர் கொண்டிருந்த நினைப்புகளை நினைத்துப் பார்ப்பார். அவை எப்பொழுதுமே சரியானவையாகவே நிரூபணமாய் வந்தன.

''அக் காலத்தில் நான் விசித்திரமாகவும், வேடிக்கையாகவும் காணப்பட்டிருப்பேன். ஆனால் நான் காணப்பட்டதைப்போல நான் அவ்வளவு தூரம் மூளைப்புரட்சி அடைந்திருக்கவில்லை. அதற்கு மாறாக, நான் மற்ற எந்த காலத்தையும் விட அதிகமான அறிவோடும் உள் விஷயங்களை அறியும் சக்தியோடும் இருந்தேன். வாழ்க்கையில் அறிந்துகொள்ள வேண்டிய தகுதியுள்ள எல்லாவற்றையும் நான் அறிந்திருந்தேன். ஏனென்றால், அச்சமயத்தில் நான்... மகிழ்ச்சியோடு இருந்தேன்'' என்று பீயர் நினைத்தார்.

ஒருவர் மீது பிரியம் கொள்ளும் முன்பாக, அவரிடம் நல்ல குணங்கள் இருக்கின்றனவா என்பதை பார்ப்பது, முன்பெல்லாம் பீயருக்கு வழக்கம். ஆனால், அவருடைய மூளைப்புரட்சிக் காலத்தில் அம்மாதிரியான நல்ல குணங்களை காண்பதற்காக அவர் காத்துக் கொண்டிருக்கவில்லை. அவருடைய உள்ளமானது இப்பொழுது அன்பால் நிறைந்து வழிந்து கொண்டிருந்தது. மக்கள் மீது காரணமில்லாமல் அன்பு கொள்வதற்கு அவர் ஆரம்பித்த படியால், அவர்கள் மீது அன்பு கொள்வதற்கு சந்தேகமில்லாத பல காரணங்கள் அவருக்குப் புலப்பட்டன.

## 15

## 20

**பீ**யர் புறப்பட்டுப்போன தினத்தன்று மாலையில், நட்டாஷா மகிழ்ச்சியான பரிகாசத்தோடு, இளவரசி மேரியிடம் சொன்னாள்: ''அவர் அம்மாதிரிதான் தோன்றுகிறார். ஆம், ஒரு ருஷ்ய ஸ்நான அறையிலிருந்து வெளியே வந்தவர் மாதிரி காணப்படுகிறார். அதாவது, தலைமுடியை வெட்டி விட்டுக் கொண்டு, ஒரு குட்டையான கோட்டை தரித்துக்கொண்டிருக்கிறார்''. இம்மாதிரி நட்டாஷா சொல்லிய போது, அவளை அறியாமல் மறைந்திருந்த ஒன்று, அதை இனி அடக்க முடியாத விதத்தில், அவளுடைய உள்ளத்தில் விழிப்புக் கொண்டது.

அவளுடைய முகம், நடை, பார்வை, குரல், எல்லாமே திடீரென்று மாறின. அவளே ஆச்சரியப்படும் விதத்தில், வாழ்க்கையின் வேகமும், மகிழ்ச்சியின் நம்பிக்கையும், மேல் தளத்திற்கு வந்து தோன்றி, அவற்றை திருப்தி செய்யவேண்டு மென்று கேட்டன. அவளுக்கு ஏற்பட்டவைகளையெல்லாம் அவள் மறந்துவிட்டதாக அன்று மாலையிலிருந்து காணப்பட்டாள். அவளுடைய நிலைமையைப்பற்றி இப்பொழுதெல்லாம் அவள் குறைப்பட்டுக் கொள்வதில்லை. கடந்த காலத்தைப்பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. எதிர்காலத்தைப் பற்றி சந்தோஷமாகத் திட்டங்களை தயாரிப்பதற்கு இப்பொழுதெல்லாம்

அவள் பயப்படுவதில்லை. பீயரைப் பற்றி அவள் பேசுவது அபூர்வம். ஆனால், இளவரசி மேரி அவரைப்பற்றி குறிப்பிட்டால் வெகுகாலமாக அணைந்துபோயிருந்த ஒளியானது, அவளுடைய கண்களில் மீண்டும் பிரகாசமடைந்து, அவளுடைய உதடுகள் வளைந்து, ஒரு அதிசயமான புன்சிரிப்பைத் தோற்றுவிக்கும்.

நட்டாஷாவிடம் ஏற்பட்ட இந்த மாறுதலானது, முதலில் இளவரசி மேரிக்கு ஆச்சரியமாய் இருந்தது. ஆனால் அதன் அர்த்தத்தை அவள் அறிந்துகொண்டதும், அவளுக்கு அது வருத்தத்தைக் கொடுத்தது. ''என்னுடைய சகோதரரை அவ்வளவு சீக்கிரமாக மறக்கும்படி, அவள் அவ்வளவு குறைவாக அவரைக் காதலித்திருக்க முடியுமா?'' என்று, அந்த மாறுதலைப் பற்றி அவள் யோசித்தபோது நினைத்தாள். ஆனால் நட்டாஷாவோடு அவள் இருக்கும்போது, அவள் மீது எரிச்சல் கொள்ளவோ, அவளைக் கண்டிக்கவோ இல்லை. வாழ்க்கையின் சக்தியானது புதிதாக விழிப்படைந்து நட்டாஷாவைப் பற்றியிருந்தது. அதை அவளால் அடக்க முடியவில்லை. அவள் எதிர்பார்க்கவும் இல்லை. ஆகவே, அவளுடைய பிரசன்னத்தில் இளவரசி மேரி இருக்கும்போது, தனது உள்ளத்தில்கூட அவளைக் கண்டிப்பதற்குத் தனக்கு உரிமையில்லை யென்று உணர்ந்தாள்.

இந்த புதிய உணர்ச்சியில் நட்டாஷா முழுவதும்வும், ஒளிவு மறைவு இல்லாமலும் மூழ்கி இருந்தாள். அவள் இப்பொழு தெல்லாம் துக்கமாய் இருப்பதில்லை என்ற உண்மையையும், சந்தோஷமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறாள் என்ற உண்மை யையும் மறைப்பதற்கு முயற்சிப்பதில்லை.

இரவில் பீயரிடம் பேசிவிட்டுத் தனது அறைக்கு இளவரசி மேரி திரும்பியபோது, வாசலுக்கு வெளியே அவளை நட்டாஷா சந்தித்தாள்.

''அவர் பேசிவிட்டாரா? ஆமா? அவர் பேசிவிட்டாரா?'' என்று அவள் திருப்பித் திருப்பிக் கேட்டாள்.

ஒரு மகிழ்ச்சியான, ஆனால் ஒரு இரக்கமான, தோற்றம் நட்டாஷாவின் முகத்தில் காணப்பட்டது. தனக்கு ஏற்பட்டுள்ள மகிழ்ச்சிக்காகத் தன்னை மன்னிக்கும்படி கேட்பதுபோல அது தோன்றியது.

''நான் வாசலுக்கு வெளியே இருந்து கேட்பதற்கு விரும்பினேன். ஆனால் நீ என்னிடம் சொல்லுவாய் என்பது எனக்குத் தெரியும்?''

இளவரசி மேரியை அவள் பார்த்த பார்வையானது, மனதைத் தொடக்கூடியதாகவும் புரிந்துகொள்ளக்கூடியதாகவும் இருப்பதாக இளவரசி மேரிக்குத் தோன்றியது. அவள் பரபரப்படைந் திருந்ததைக் கண்டு இளவரசி மேரி வருந்தினாள். நட்டாஷாவின் வார்த்தைகள் ஒரு வினாடி அவளுக்குத் துன்பத்தைக் கொடுத்தன.

அவளுடைய சகோதரரையும், அவளுடைய காதலையும் அவள் நினைவு கூர்ந்தாள்.

''ஆனால், இப்பொழுது என்ன செய்ய முடியும்? அவளால் தவிர்க்க முடியாது என்று இளவரசி நினைத்தாள்.

ஒரு சோகமான, கண்டிப்பானத் தோற்றத்தோடு பீயர் சொல்லியவற்றையெல்லாம் நட்டாஷாவுக்குக் கூறினாள். அவர் பீட்டர்ஸ்பர்க்கிற்கு போவதைக் கேள்விப்பட்டதும் அவள் ஆச்சரியமடைந்தாள்.

''பீட்டர்ஸ்பர்க்கிற்கா?'' என்று அவள், அதைப் புரிந்து கொள்ளாத வளைப்போல திரும்பக் கூறினாள்.

இளவரசி மேரியின் முகத்தின் காணப்பட்ட வருத்தமான தோற்றத்தை அவள் கவனித்ததும், அந்த வருத்தத்துக்கான காரணத்தை யூகித்து அறிந்து, திடீரென்று அழ ஆரம்பித்தாள்.

''மேரி, நான் என்ன செய்ய வேண்டுமென்று எனக்குச் சொல்லு. நான் கெட்டவளாக இருப்பதற்குப் பயப்படுகிறேன். நீ என்ன சொல்லுகிறாயோ, அம்மாதிரியே, நான் செய்வேன். எனக்குச் சொல்லு...'' என்று அவள் சொன்னாள்.

''நீ அவரைக் காதலிக்கிறாயா?''

''ஆம்'' என்று நட்டாஷா மெதுவாகக் கூறினாள்.

''அப்படியானால், எதற்காக நீ அழுகிறாய்? உனக்காக நான் மகிழ்ச்சியோடு இருக்கிறேன் என்று இளவரசி மேரி கூறினாள். அவளுடைய கண்ணீரைப் பார்த்ததும், நட்டாஷாவின் மகிழ்ச்சியை அவள் முற்றிலும் மன்னித்து விட்டாள்.

''இப்பொழுது எதுவும் நடக்க முடியாது-ஒரு தினத்தில் நடக்கலாம். நான் அவருடைய மனைவியாக வந்து, நீயும் நிக்கலஸை திருமணம் செய்துகொள்ளும்போது, எப்பேர்ப்பட்ட மகிழ்ச்சியாக அது இருக்கும் என்பதை சிந்தித்துப் பார்ப்பாயாக.''

''நட்டாஷா, அதைப்பற்றி பேச வேண்டாமென்று நான் உன்னிடம் சொல்லியிருக்கிறேன், உன்னைப்பற்றி நாம் பேசுவோம்.''

அவர்கள் சிறிது நேரம் மௌனமாயிருந்தார்கள்.

''ஆனால், எதற்காக பீட்டர்ஸ்பர்க்கிற்கு போகவேண்டும்?'' என்று நட்டாஷா திடீரென்று கேட்டாள். தன்னுடைய கேள்விக்கு உடனே தானாகவே வேகமாக பதிலும் சொன்னாள். ''ஆனால், இல்லை, இல்லை, அவர் போக வேண்டியதுதான்...ஆம், மேரி. அவர் போகவேண்டியதுதான்...''

★

## விளக்க உரைகள்

**15**
4

**ச**ர்ராபர்ட் தாமாஸ் வின்சன் (1774-1849) என்பவர் பெண்னின்கலார் யுத்தத்தில் போர்ச்சுக்கீசிய ராணுவத்திற்குப் பயிற்சி கொடுத்த பின்பு பிரிட்டிஷ் மிலிட்டரி கமிஷனராக 1812-14 ஆகிய வருஷங்களில் ருஷ்யத் தலைநகரில் இருந்து வந்தார்.

**15**
10

**கா**ல்ஸ்டன்டைன் பாவ்லாவிச் (1779-1831) என்பவர் முதலாவது அலெக்ஸாண்டர் சகோதரர். ஆஸ்திரியாவுக்குக் காப்பாளர் படை போனபோது தம்மை அவர் கண்டித்ததாக ஏற்கெனவே பேக் சொல்லியிருக்கிறார். ஆஸ்டர்லிட்ஜில் நடந்த நாசத்திற்கு அவர் ஓரளவு பொறுப்பாளியாவார். நெப்போலியனைத் தோற்கடிக்க முடியாதென்றும், அவருடன் சீக்கிரமாக சமாதானம் செய்து கொள்வது அவசியம் என்றும் டிரிலா முகாமில் அவர் பேசிய விவரம் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சொந்த முறையில் பாவ்லாவிச் தைரியம் மிகுந்தவர். ஆனால் வெகுளித் தனமும் திறமை இன்மையும் யுத்த விவகாரங்களிலும் ராஜ்ய விவகாரங்களிலும் அவரிடம் காணப்படும். ஒரு போலிஷ் சீமாட்டியை திருமணம் செய்த பின்பு பட்டத்திற்குரிய தமது உரிமையை அவர் துறந்தார். இந்த விஷயத்தைப் பகிரங்கமாக வெளிப்படுத்தாமல் இருந்ததால்தான் தமது இணை சகோதரராகிய நிக்கலஸை சக்கரவர்த்தியாக அலெக்ஸாண்டர் பிரகடனம் செய்வதில் தாமதம் ஏற்பட்டது. இந்தத் தாமதத்தினால்தான் டிசம்பர் காரர்களின் புரட்சியும் தோன்றியது.



# முதலாவது பின்னுரை

## 1

ஏழு வருஷங்கள் கழிந்துவிட்டன. ஐரோப்பாவின் சரித்திரமான புயலால் குமுறிய கடலானது, தனது கரைகளுக்குள் அடங்கி விட்டது அந்தக் கடல் அமைதியாய் விட்டதாகக் காணப்பட்டது. ஆனால், மனித குலத்தை ஆட்டிவந்த அந்த ஆச்சரியமான சக்திகள் (ஆட்டிவைப்பதற்கு உண்டான விதிகள் நமக்குத் தெரியாத படியால், அவை ஆச்சரியமாய் இருக்கின்றன), இன்னமும் வேலைசெய்து வந்தன.

சரித்திரக்கடலின் மேல் பரப்பானது அசைவற்றுக் காணப்பட்ட போதிலும், மனிதகுலத்தின் செய்கைகளான்வை காலத்தைப் போலவே நிற்காமல் நடந்து கொண்டேயிருந்தன. மக்கள் பற்பல கோஷ்டிகளாக அமைந்தும் கலைந்தும் வந்தார்கள். மன்னர்களை சிம்மாசனத்தில் ஏற்றுவதற்கும், சிம்மாசனத்தை விட்டுத் தள்ளுவதற்கும், மக்கள் குடி பெயரும்படி செய்வதற்கும் ஏற்பாடுகள் நடந்து வந்தன.

சரித்திரக் கடலானது முன்பு செய்யப்பட்டதைப்போல, திடீரென்று ஒரு கரையிலிருந்து மற்றொரு கரைக்கு அலைக்கழிக்கப் படவில்லை. அதனுடைய ஆழத்தில் அது குமுறிக் கொண்டிருந்தது. ஒரு கரையிலிருந்து மற்றொரு கரைக்கு அதனுடைய அலைகள் சரித்திரப் பிரசித்தி பெற்றவர்களை கொண்டுபோய்க் கொண்டிருக்கவில்லை. இப்பொழுது ஒரே இடத்திலேயே அவர்கள் சுழன்று வருவதாகக் காணப்பட்டது. ராணுவங்களுக்குத் தலைவர்களாக விளங்கிய சரித்திர பிரபலஸ்தர்கள், மக்களின் உணர்ச்சியைப் பிரதிபலிப்பது போன்று முன்பெல்லாம் யுத்தங்களுக்கும், படையெடுப்புகளுக்கும், சண்டைகளுக்கும் உத்தரவுகள் கொடுத்துவந்தார்கள். ஆனால், இப்பொழுது அவர்கள் மக்களின் குமுறலைப் பிரதிபலிப்பதற்காக, அரசியல் ராஜதந்திர வேலைகளிலும், சட்டங்களிலும், ஒப்பந்தங்களிலும் ஈடுபட்டிந்தார்கள்.

சரித்திர பிரபலஸ்தர்களின் இந்தச் செய்கையை, சரித்திரக்காரர்கள் ''பிற்போக்கு'' என்று அழைத்தார்கள்.

இந்தக் குறிப்பிட்ட காலத்தைப் பற்றிச் சரித்திரக்காரர்கள் சொல்லும் போதும், சரித்திர பிரபலஸ்தர்களைக் கடுமையாகக் கண்டித்தார்கள். ஏனெனில், அவர்களுடைய அபிப்பிராயத்தில், அந்த சரித்திர பிரபலஸ்தர்கள் தான் அந்த ''பிற்போக்''கை விளைவித்தார்கள் என்று நினைத்தார்கள். அந்தக் காலவரையில்

அல்லது பகுதியில் பிரபலமாக இருந்த எல்லாரையுமே, அலெக்ஸாண்டர், நெப்போலியன் முதல், திருமதி. டி ஸ்டால், பட்டியஸ், ஷெல்லிங், பிச்ட்டே, சாட்டாபிரியாண்ட் ஆகியவர்கள் வரையில் உள்ளவர்களை, அவர்கள் தங்களுடைய தீர்ப்பு ஸ்தானத்தில் அமர்ந்து, கடுமையோடு தீர்ப்புக் கூறுகிறார்கள்; அவர்களுக்குத் தோன்றுகிறபடி, முற்போக்கிற்கோ, அல்லது பிற்போக்கிற்கோ காரணமானவர்கள் என்று அவர்கள் கருதி, சிலரை விடுதலை செய்கிறார்கள்; சிலரைக் கண்டிக்கிறார்கள்.

அவர்களுடைய அபிப்பிராயப்படி, அந்த பிற்போக்கானது ருஷ்யாவிலும் தோன்றியதென்றும், அதற்கு முதலாவது குற்றவாளி முதலாவது அலெக்ஸாண்டர் என்றும் அவர்கள் சொன்னார்கள். அதே மனிதரைத்தான் அவருடைய ஆட்சிக்காலத்தின் ஆரம்பத்தில், தாராளக் கொள்கை இயக்கத்திற்கு முக்கிய கர்த்தாவென்றும், ருஷ்யாவைக் காப்பாற்றியதற்கு முக்கிய கர்த்தாவென்றும் அவர்கள் சொன்னார்கள்.

அவருடைய ஆட்சிகாலத்தின் அந்தப் பகுதியில்; அலெக்ஸாண்டர் தவறு செய்துவிட்டார் என்றுகூறி, அவர்மீது கல்லை வீசாதவர்கள் ருஷ்ய இலக்கியத்தில் கற்றுக்குட்டி கட்டுரையாளர் முதல், பிரபலமான சரித்திர ஆசிரியர் வரையில் இருந்தது கிடையாது.

''அவர் இந்த மாதிரியாகவும், அந்த மாதிரியாகவும் நடந்திக்க வேண்டும்; இந்த விஷயத்தில் அவர் நன்றாய் செய்திருக்கிறார்; அந்த விஷயத்தில் அவர் மோசமாக நடந்திருக்கிறார்; அவருடைய ஆட்சிக்கால ஆரம்பத்திலும், 1812-ம் வருஷத்தில் அவர் வெகு சிலாக்கியமாக நடந்திருக்கிறார்; ஆனால் போலந்துக்கு ஒரு அரசியல் சட்டம் கொடுத்ததிலும், பரிசுத்த உடன்படிக்கை ஏற்படுத்தியதிலும்; அராக்சீவிடம் அதிகாரத்தை ஒப்புவித்ததிலும், காலைட்சின்னையும் ரகசிய ஞானமார்க்கத்தையும் ஆதரித்ததிலும், பின்னால் ஷிஷ்கோவையும் பட்டியஸையும் ஆதரித்ததிலும் அவர் தவறாக நடந்துகொண்டார். ராணுவத்தில் தீவிரமாக கலந்து கொண்டதிலும், செமியோனாவ் பட்டாளத்தைக் கலைத்ததிலும் அவர் தவறாக நடந்துகொண்டார்.''

சரித்திரக்காரர்கள் எல்லாரும், மனித குலத்திற்கு எது நன்மையென்று அவர்களுக்குத் தோன்றுகிறதோ, அந்த அடிப்படைகளிலிருந்து அவர்கள் அலெக்ஸாண்டர் மீது சாட்டுகிற குற்றங்களைச் சொல்ல வேண்டுமானால், அவை ஒரு டஜன் பக்கங்களுக்கு வரும்.

இந்தக் கண்டனங்களுக்கெல்லாம் அர்த்தமென்ன?

அலெக்ஸாண்டருடைய ஆட்சியின் ஆரம்ப காலத்தில் அவர் காட்டிய தாராளக் கொள்கைகளையும், நெப்போலியனுடன் அவர் செய்த போராட்டங்களையும், 1812-ம் வருஷத்தில் அவர் காட்டிய உறுதியையும், 1813-ஆம் வருஷத்தில் அவர் செய்த படை யெடுப்பையும், சரித்திரக்காரர்கள் பாராட்டிப் புகழவில்லையா? அந்தச் சம்பவங்களுக்கு காரணமானவை அவருடைய பிறப்பும், படிப்பும், வாழ்க்கையும், அவருடைய சொந்த தோற்றமுமே யாகும். அதே மூலகாரணங்கள்தான் பரிசுத்த உடன்படிக்கை யையும், போலந்துக்கு சுய ஆட்சியையும், 1820-ஆம் வருஷத்திலும் அதற்குப் பின்னாலும் ஏற்பட்ட பிற்போக்கையும் கொடுத்தன. அப்படியல்லவா?

ஆகவே, இந்தக் கண்டனங்களுக்கு அடிப்படையான காரணங்கள் என்ன?

அலெக்ஸாண்டரைப் போன்ற சரித்திர உருவம், மனிதர்கள் பெறக் கூடிய அதிகாரத்தின் உச்சநிலையில் நிற்கும்போது, சரித்திரத்தின் பிரகாசமான ஒளியானது அவர்மீது வீசுகிறது. அவரைச் சுற்றிப்பலமான செல்வாக்குகளும், சூழ்ச்சிகளும், முகஸ்துதிகளும், அதிகாரத்தோடு ஒன்றி நிற்கும் பிரிக்க முடியாத மயக்கமும் இருக்கின்றன. ஐரோப்பாவில் என்ன நடந்தாலும், அதில் தமக்கும் பொறுப்பு இருப்பதாக ஒவ்வொரு வினாடியும் நினைக்கிறார்.

அம்மாதிரியான ஒரு உருவச் சித்திரம் வெறும் கற்பனையல்ல; உண்மையானவை. ஆகவே, மற்ற மனிதர்களைப் போலவே அவருக்கும், சொந்தமாக பழக்க வழக்கங்களும், ஆசைகளும், நல்ல காரியங்களின் மீதும். அழகின் மீதும், உண்மையின் மீதும் உணர்ச்சிகளும் இருக்கத்தான் செய்யும். இந்த உருவச் சித்திரமானது தர்மங்களில் குறைவற்றதாய் இருந்தபோதிலும், மனித சமூகத்திற்கு நன்மையானது எது என்று இப்பொழுது உள்ளவர்கள் நினைக்கிறார்களோ, அதே கருத்தை ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் அவர் கொண்டிந்ததில்லை. இப்பொழுதுள்ள ஒரு பேராசிரியர், தமது வாலிபப் பருவத்திலிருந்தே புத்தகங்களைப் படிப்பதிலிருந்தும், பிரசங்கங்களைக் கேட்பதிலிருந்தும், மனித குலத்திற்கு நன்மையானது எது என்று ஒரு கருத்து கொள்ளுகிறார். இதே கருத்தை ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் முதலாவது அலெக்ஸாண்டர் கொண்டிருந்ததில்லை;

மக்களுக்கு எது நன்மையானது என்ற அபிப்பிராயத்தில் முதலாவது அலெக்ஸாண்டர் 50 வருஷங்களுக்கு முன்னால் தவறாக இருந்தார் என்பதை நாம் ஒப்புக்கொண்டாலும்கூட, மற்றொரு விஷயத்தையும் ஒப்புக் கொண்டாக வேண்டும், அதாவது, மனித குலத்திற்கு எது நன்மையான தென்று சரித்திரக்காரர்கள்

நினைக்கிறார்களோ, முதலாவது அலெக்ஸாண்டர் மீது தீர்ப்புக்கூறும் அந்த சரித்திரக்காரர்களும் அவர்களுடைய அபிப்பிராயங்களில் தவறு செய்து இருக்கலாம் என்று ஐம்பது வருஷங்களுக்குப் பின்னால் நாம் நினைக்கக்கூடும். இம்மாதிரி நினைப்பது இயற்கையானது; தவிர்க்க முடியாதது. ஏனெனில் சரித்திரத்தின் போக்கை நாம் பார்க்கும்போது, ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு புதிய சரித்திரக்காரரும், மனித சமூகத்திற்கு எது நன்மையானது என்ற விஷயத்தில், கருத்துக்களில் மாறிக்கொண்டே வருவதை நாம் காணலாம். ஆகவே, 10 வருஷங்களுக்கு முன்னால் எது நன்மையானது என்று தோன்றியதோ, அதே காரியம் கெடுதலானது என்று 10 வருஷங்களுக்குப் பின்னால் தோன்றலாம். சரித்திரத்தில் ஒரே காலத்தில் ஒரே விஷயத்தை சிலர் நன்மையான தென்றும். சிலர் கெடுதலானது என்றும் சொல்லுவதும் ஒரு பக்கத்திலிருக்கிறது. அதாவது, போலந்துக்கு அரசியல் சட்டம் கொடுத்ததையும், பரிசுத்த உடன்படிக்கை ஏற்படுத்தியதையும், அலெக்ஸாண்டர் செய்த மிகுந்த சிலாக்கியமான காரியங்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள். அவற்றையே மிகுந்த மோசமான காரியங்கள் என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள்.

அலெக்ஸாண்டருடையவோ, நெப்போலியனுடையவோ செய்கைகளை நன்மையானவை என்றோ, அல்லது கெடுதலானவை என்றோ சொல்ல முடியாது. ஏனெனில், எதனால் அவை நன்மையானவை. அல்லது தீமையானவை என்று கூறுவது அசாத்தியம். அந்த செய்கைகள் சிலருக்கு அதிருப்தியாக இருக்குமானால், அதற்கு ஒரேயொரு காரணம் உண்டு. அந்த நபரின் அறிவில் எது நன்மையானது என்று புரிந்து கொள்ளுவது ஒரு அளவோடு இருப்பதால், அந்த செய்கைகள் திருப்தியைக் கொடுக்காமல் இருக்கலாம். மாஸ்கோவிலுள்ள என்னுடைய தந்தையின் வீட்டைப் பாதுகாப்பதோ, அல்லது ருஷ்ய ராணுவத்தில் பெருமையோ, அல்லது பீட்டர்ஸ்பர்க்கின் வளர்ச்சியோ, அல்லது போலந்தின் சுதந்திரமோ, அல்லது ருஷ்யாவின் பெருமையோ அல்லது ஐரோப்பாவின் சம-பலமோ, அல்லது ஒருவகையான 'முன்னேற்றம்' எனப்படும் ஐரோப்பியக் கலாச்சாரமோ, எனக்கு நன்மையாகவோ, அல்லது தீமையாகவோ தோன்றலாம். ஆனால், இவற்றைத் தவிர, ஒவ்வொரு சரித்திர பிரபலஸ்தரின் செய்கைகளும் எனக்கு அறிய முடியாத வேறு பல பொது காரணங்களால் நடக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும்.

விஞ்ஞானம் என்பது எல்லாவித மாறுபாடுகளையும் சமரசம் செய்து, நன்மை அல்லது தீமை ஆகியவைகளுக்கு ஒரு மாறமுடியாத வரையறையை ஏற்படுத்துகின்றதென்றும், அதைக்

கொண்டு சரித்திரப் பிரபலஸ்தர்களின் சரித்திர சம்பவங்களையும் மதிப்பிடுகிறதென்றும் நாம் வைத்துக்கொள்ளுவோம். அதாவது, ஒவ்வொரு காரியத்தையும் அலெக்ஸாண்டர் வேறு விதமாகச் செய்திருக்க வேண்டுமென்று நாம் வைத்துக் கொள்ளுவோம். இன்று அவரைக் குறை கூறும் நபர்கள், மனித சமூகத்தின் முடிவான லட்சியம் எது என்பதை அறிந்திருப்பவர்கள்போல கூறுகிறார்கள். அவர்களுடைய ஆலோசனையின்மீது இன்று குறை கூறும் அவர்களுடைய திட்டங்களின்படி அவர் காரியங்களை அமைக்கிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அதாவது, சமுதாயம், சுதந்திரம், சமத்துவம், முன்னேற்றம் ஆகியவை சம்பந்தமாக, அவர் நடவடிக்கைகள் எடுக்கிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அந்த காலத்தில் அவர்கள் சொல்லி, அவற்றையெல்லாம் நிறைவேற்றுவது சாத்தியமென்றும் வைத்துக்கொள்ளுவோம். அவற்றை அலெக்ஜாண்டர் நிறைவேற்றினார் என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்படி யானால், அந்தக் காலத்தில் அரசாங்கத்தினுடைய அக்காலத்திய கொள்கைகளை எதிர்த்தவர்களின் நடவடிக்கை களுக்கு (சரித்திரக்காரர்களின் அபிப்பிராயத்தில், நல்லவையாகவும் அனுகூலமானவையாகவும் தோன்றின) என்னகதி ஏற்பட்டிருக்கும்? அவர்களுடைய நடவடிக்கைகள் இருந்திருக் கவே முடியாது. அதனால் உயிரே இருந்திருக்காது. ஒன்றுமே இருந்திருக்காது.

மனித வாழ்க்கையைக் காரணத்தினால் ஆளமுடியுமென்பதை நாம் ஒப்புக்கொள்ளுவதாய் இருந்தால், வாழமுடியும் என்ற சாத்தியமானது அழிந்துபோய் விடுகிறது.

## 2

ஒரு குறிப்பிட்ட லட்சியத்தை அடைவதற்காக மனித குலத்தைப் பெரிய மனிதர்கள் நடத்திச் செல்வதாகச் சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அதாவது, ருஷ்யா, அல்லது பிரான்ஸின் பெருமைக்கோ, ஐரோப்பாவின் சம-பலத்திற்கோ புரட்சியின் கருத்துக்களைப் பரப்புவதற்கோ, பொதுவான முன்னேற்றத் திற்கோ, அல்லது இதைப் போன்ற பல காரியங்களுக்கோ பெரிய மனிதர்கள்தான் மனித குலத்தை நடத்திச் செல்வதாக சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அதை நாமும் ஒப்புக்கொள்ளு வோனால், 'வாய்ப்பு', என்றும், 'மேதை' என்றும் இரண்டு காரணங்களை நுழைக்காமல் சரித்திர உண்மைகளை விளக்கமுடியாது.

19-வது நூற்றாண்டின் ஆரம்பத்தில் தோன்றிய ஐரோப்பிய யுத்தங்களின் நோக்கம், ருஷ்யாவை விஸ்தரிப்பதுதான் என்பதாய் இருக்குமானால், அந்த நோக்கத்தை அதற்கு முன்னால் ஏற்பட்ட யுத்தங்கள் இல்லாமலேயே, படையெடுப்பு இல்லாமலேயே நிறைவேற்றி இருக்கலாம். பிரான்ஸை விஸ்தரிப்பதுதான் அந்த நோக்கம் என்பதாய் இருக்குமானால், அந்த நோக்கத்தைப் புரட்சி இல்லாமலேயே, ஏகாதிபத்தியம் இல்லாமலேயே நிறைவேற்றி இருக்கலாம். கருத்துக்களைப் பரப்புவதுதான் அந்த நோக்கம் என்பதாய் இருக்குமானால், அந்த நோக்கத்தை யுத்த முறை களைவிட சிலாக்கியமாக அச்சு ஆலயங்களினால் நிறைவேற்றி இருக்கலாம். நாகரிகத்தை வளர்ப்பதுதான் அந்த நோக்கம் என்பதாய் இருக்குமானால், அதற்கு வேறு வழிகள் இருப்பதை சுலபமாகக் காணலாம். செல்வத்தையும் மனித உயிர்களையும் அழித்து அதை அடைவதைவிட, நாகரீகத்தைப் பரப்புவதற்கு வேறு முக்கியமான, தகுதியான வழிகள் இருக்கின்றன.

வேறு வழியில் நடக்காமல் இந்தக் காரியங்கள் இம்மாதிரி ஏன் நடந்தன?

ஏனெனில், அம்மாதிரி நடக்கும்படியாக அவை இருந்தன. ''வாய்ப்பு என்பது நிலைமையை உற்பத்தி செய்தது; மேதை என்பது அதை உபயோகித்துக் கொண்டது'' என்று சரித்திரம் கூறுகிறது.

ஆனால் 'வாய்ப்பு' என்றால் என்ன? 'மேதை' என்றால் என்ன?

'வாய்ப்பு' என்றும், 'மேதை' என்றும் சொல்லப்படும் வார்த்தைகள் உண்மையில் நிலைத்திருப்பவைகளைச் சுட்டிக் காட்டுகிறவை அல்ல. ஆகவே, அவற்றின் பொருளை வரையறுக்க முடியாது. அற்புதங்களை அறிந்து கொள்ளக்கூடிய ஒரு குறிப்பிட்ட நிலைமையைத்தான் அந்த வார்த்தைகள் சுட்டிக்காட்டுகின்றன. ஒரு குறிப்பிட்ட சம்பவம் எதனால் நடைபெறுகிறது என்பது எனக்குத் தெரியாது; அதை அறிந்துகொள்ள முடியாது என்று நான் நினைக்கிறேன்; ஆகவே, அதை நான் அறிந்து கொள்ள முடிற்சி செய்யாமல், 'வாய்ப்பு' என்பதைப்பற்றி பேசிக் கொண்டிருக்கிறேன். சாதாரண மனிதரின் தகுதிக்கு மீறியதான சில காரியங்களை ஒரு சக்தி உண்டு பண்ணுவதை நான் பார்க்கிறேன்; ஏன் இவை நடைபெறுகின்றன என்பதை என்னால் அறியமுடிய வில்லை; அதனால் மேதை என்பதைப் பற்றி நான் பேசிக் கொண்டிருக்கிறேன்.

ஒரு ஆட்டை அதை மேய்ப்பவன் ஒவ்வொரு மாலையிலும் தனியாக அழைத்துச் சென்று அதற்கு உணவு போடுகிறான். மற்ற ஆடுகளைவிட அந்த ஆடு இரண்டு மடங்கு பெருத்து விடுகிறது.

அந்த ஆடு மற்ற ஆட்டுக் கூட்டத்திற்கு ஒரு மேதையாகக் காணப்படலாம். மற்ற ஆட்டு மந்தையோடு கலந்து கொள்ளாமல், ஒவ்வொரு மாலையிலும் அதற்கென்று தனியாக உள்ள ஓட்ஸ் தானியம் உள்ள இடத்திற்கு அது போவதானது, ஆச்சரியப்படக் கூடிய விதத்தில் மேதையும், அசாதாரணமான சந்தர்ப்பங்களும் கலந்த விஷயமாகக் காணப்படலாம். ஆனால் இந்த ஆடுதான், கொழுத்துப் பருத்திருந்த இந்த ஆடுதான் மாமிசத்திற்காகக் கொல்லப்படுகிறது.

தங்களுக்கு நேரிடுபவையெல்லாம் தங்களுடைய அசட்டுத்தனமான கொள்கைகளை அடைவதற்காகவே நேரிடுகின்றன என்று நினைப்பதை அவை விட்டு விட்டால் போதும்; தங்களுக்கு நேரிடுபவையெல்லாம் தங்களுடைய மந்தைக்கு வெளியாக உள்ள வேறொரு நோக்கத்திற்காக நடைபெறுவதாகவும் இருக்கலாம் என்பதை அவை ஒப்புக்கொண்டால் போதும். உடனே, அந்த கொழுக்க வைக்கப்பட்ட ஆட்டிற்கு நடந்த காரியங்களில் ஒரு ஒற்றுமையும் தொடர்பும் இருப்பதை அவை காணமுடியும். அந்த கொழுக்க வைக்கப்பட்ட ஆட்டிற்கு நடந்தவையெல்லாம் தற்செயலாக நடந்தவை அல்ல என்பதை மட்டிலுமாவது அவை அறிந்துகொள்ளும். ஆகவே, 'வாய்ப்பு' என்றும், 'மேதை' என்றும் சொல்லப்படும் காரணங்கள் அவற்றிற்கும் அவசியமே இல்லை.

நமக்கு உடனே தெரியக்கூடிய ஒரு நோக்கத்தைப் பற்றி பகுத்தறியக்கூடிய உரிமையை உதறிவிட்டு, முடிவான லட்சியம் என்பது நமது மந்தைக்கு வெளியாக இருக்கிறது என்பதை ஒப்புக்கொண்டால்தான் ஒரு குறிப்பிட்ட முடிவிற்கு நாம் வர முடியும். அதாவது, சரித்திர பிரபலஸ்தர்களின் வாழ்க்கையிலுள்ள அனுபவங்களின் தொடர்புகளைக் காணமுடியும். அவர்கள் ஏன் செய்கிறார்கள், எதற்காக செய்கிறார்கள் என்பதையும் நாம் அறியுமுடியும். அவை சாதாரண மனித குலத்தின் சக்திக்கு அப்பாற்பட்டவையாய் இருக்கின்றன. அதன் பின்னால் 'வாய்ப்பு' என்ற வார்த்தைக்கும் மேதை என்ற வார்த்தைக்கும் அவசியமில்லை என்பதை நாம் கண்டுகொள்ளளாம்.

ஐரோப்பிய இழுப்புகளுக்கு நோக்கம் என்ன என்பது நமக்குத் தெரியவில்லை என்பதை நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும். நடந்த விஷயங்கள் மட்டும்தான் நமக்குத் தெரியும். அதாவது, முதலில் பிரான்ஸிலும், பின்னால் இத்தாலியிலும், ஆப்பிரிக்காவிலும், பிரஷ்யாவிலும், ஆஸ்திரியாவிலும், ஸ்பெயினிலும், ருஷ்யாவிலும் நடந்த கொலைகளைப்பற்றி மட்டுமே நமக்குத் தெரியும். மேற்கிலிருந்து கிழக்கிலும்,

கிழக்கிலிருந்து மேற்கிலும் ஏற்பட்ட நடமாட்டங்கள்தான் இந்த சம்பவங்களுக்குச் சாரமாகவும் நோக்கமாகவும், அமைந்திருக்கின்றன என்பதும் நமக்குத் தெரியும். நெப்போலியனிடமோ, அலெக்ஸாண்டரிடமோ பிரமாதமான திறமையோ, மேதையோ இருக்கின்றன என்பதை நாம் கவனிக்கவேண்டிய அவசியமில்லை. அவர்களை மற்ற மனிதர்களைவிட புறம்பானவர்கள் என்று நாம் எடுத்துக் கொள்ளவும் முடியாது. இவர்களை உருவாக்கிய அந்தச் சிறிய சம்பவங்களுக்குக் காரணம் தேடுவதற்காக 'வாய்ப்பு' என்ற வார்த்தையை உபயோகித்து ஆக வேண்டும் என்ற கட்டாயமும் நமக்கு இல்லை. ஏனென்றால், அந்தச் சிறிய சம்பவங்கள் எல்லாம் தவிர்க்க முடியாதவை என்பது தெளிவான விஷயம்.

முடிவான நோக்கம் என்ன என்பது நமக்குத் தெரியாது. அதை நினைவில் வைத்துக்கொண்டு ஒரு விஷயத்தைத் தெளிவாகக் காணலாம். ஒரு செடி உற்பத்தி செய்யும் புஷ்பத்தையோ, விதையையோவிட மேலானதாக அதே செடி உற்பத்தி செய்யமுடியும் என்று ஒருவர் மனோராஜ்யம் செய்ய முடியாது. அதே மாதிரி நெப்போலியனையும், அலெக்ஸாண்டரையும் போல அவர்கள் நிறைவேற்ற வந்த காரியங்களை செய்து முடிப்பதற்கு அவர்களைப் போல வேறு இருவரைக் கண்டுபிடிக்க மனோராஜ்யம் செய்வதும் அசாத்தியமான காரியமாகும்.

## 3

18-வது நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஏற்பட்ட ஐரோப்பிய சம்பவங்களின் அடிப்படையான ஆதாரமான முக்கியத்துவம் ஒன்றில் அமைந்திருக்கிறது. அதுதான் ஐரோப்பிய மக்கள் கூட்டமாக முதலில் மேற்கிலிருந்து கிழக்கே போனதும், பின்னால் கிழக்கிலிருந்து மேற்கே வந்ததுமாகும். அந்த இயக்கம் ஆரம்பத்தில் மேற்கிலிருந்து கிழக்கே போவதாய் இருந்தது. மேற்கத்திய மக்கள் படையெடுப்பு போன்ற இயக்கத்தில் மாஸ்கோவுக்குப் போவதற்குச் சில காரியங்கள் அவசியமாய் இருந்தன. அவையானவன; (1) கிழக்கிலிருந்து, யுத்த சன்னதமான ஒரு ராணுவ கூட்டத்தோடு மோதுதல் ஏற்படுமானால், அதைச் சமாளிக்கக்கூடிய அளவில் ஒரு ராணுவக் கூட்டமாக அவர்கள் அமையவேண்டியதாய் இருந்தது; (2) அவர்கள் அதுவரை நிலைபெற்றிருந்த எல்லாவிதமான சம்பிரதாயங்களையும், பழக்க வழக்கங்களையும் கைவிடவேண்டியதாய் இருந்தது; (3) அந்தப் படையெடுப்பின் போது அவர்களுக்குத் தலைவனாக ஒருவன் வேண்டியிருந்தது. அந்தப் படையெடுப்பின்போது அவர்கள் செய்யவேண்டிய

ஏமாற்றங்கள், திருட்டுகள், கொலைகள் ஆகியவைகளுக்கு, அவர்களுக்கும் தனக்கும் நியாயம் கூறக்கூடிய ஒருவனாக அந்தத் தலைவன் அமையவேண்டும்.

பிரெஞ்சுப் புரட்சியினால் பழைய ராணுவம் சிதைந்து போயிற்று; அது பெரிதாக இருந்ததுமில்லை; பழைய பழக்க வழக்கங்களும் சம்பிரதாயங்களும் அழிந்து போயின; மெதுவாக பெரிய அளவில் புதிய பழக்க வழக்கங்களோடும் சம்பிரதாயங்களோடும் ஒரு பெரிய கூட்டம் ஏற்பட்டது; வரப்போகிற போருக்குத் தலைமை வகித்து செய்யப்போகிற காரியங்களுக்கு பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள ஒருவன் தோன்றினான்.

கொள்கைகளோ, பழக்க வழக்கங்களோ, சம்பிரதாயங்களோ ஒரு பெயரோ, ஒரு பிரெஞ்சுக்காரராகவோ இல்லாமல் ஒருவர் கிளம்பினார். சந்தர்ப்பங்களில் எல்லாம் விசித்திரமானதாக அது காணப்பட்டது. அதாவது, ஏராளமான பிரெஞ்சுக் கட்சிகள் இருந்தும், அந்த கட்சிகளில் சேராத ஒருவர் பிரதானமான ஸ்தானத்திற்கு முன்னால் வந்தார்.

அவருடைய தோழர்களின் அறியாமையும், அவருடைய எதிரிகளின் பலவீனமும் முக்கியத்துவம் இல்லாமையும், அவருடைய பகிரங்கமான பொய்களும், அவருடைய துணிச்சலான தன்னம்பிக்கை கொண்ட தன்மைகளும் இந்த மனிதரை ராணுவத்தின் தலையை ஸ்தானத்திற்கு உயர்த்தின. இத்தாலிக்கு அனுப்பப்பட்ட ராணுவத்தைச் சேர்ந்த சிப்பாய்களின் பெருமையான குணங்களும், அவருடைய எதிரிகள் யுத்தம் செய்யத் தயங்கியதும், அவருடைய சிறுபிள்ளைத்தனமான அடாபிடியும் தன்னம்பிக்கையும் அவக்கு ராணுவப் புகழைத் தேடிக்கொடுத்தன. 'சந்தர்ப்பங்கள்' என்று சொல்லப்படுபவைகள் அவரோடு ஒவ்வொரு இடத்திற்கும் போய்க்கொண்டே இருந்தன. பிரான்ஸை ஆண்டவர்களின் அதிருப்திக்கு அவர் உள்ளான விஷயம் அவருக்கு அனுகூலமாகவே திரும்பியது. முன்னாலேயே முடிவு செய்யப்பட்ட வழிகளிலிருந்து விலகி நடப்பதற்கு அவர் செய்த கொள்ள அனுமதிக்கப்படவில்லை; துருக்கியில் ஒரு உத்தியோகம் பெற அவர் செய்த முயற்சியும் பலிக்கவில்லை. இத்தாலியில் யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது பல தடவைகளில் அவர் அழியக்கூடிய விதத்தில் காரியங்கள் ஏற்பட்டபோதிலும் ஒவ்வொரு தடவையிலும் எதிர்பாராத விதத்தில் அவர் காப்பாற்றப்பட்டார். அவருடைய மதிப்பை அழித்திருக்கக்கூடிய ருஷ்ய ராணுவங்கள் பற்பல ராஜதந்திர காரணங்களினால், அவர் அங்கு இருந்த வரையில் அங்கு வந்து சேர முடியவில்லை.

இத்தாலியிலிருந்து அவர் திரும்பியதும் பாரிஸிலிருந்த அரசாங்கம் சீர்குலைந்து வருவதை அவர் கண்டார். அந்த அரசாங்கத்தில் இருந்த எல்லோரும் அழிய வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இந்த ஆபத்தான நிலைமையிலிருந்து தப்புவதற்கு ஒரு வாய்ப்பு தோன்றியது. அதுதான் எவ்வித நோக்கமோ, அறிவோ இல்லாமல் ஆப்பிரிக்காவுக்கு படையெடுத்துப் போனதாகும், 'வாய்ப்பு' என்று அழைக்கப்பட்டது, மீண்டும் அவருடன் தொடர்ந்து சென்றது. கைப்பற்ற முடியாது தீவாக விளங்கிய மால்டாவானது ஒரு குண்டு கூட போடாமல் சரண் அடைந்தது; அவருடைய துணிச்சலான திட்டங்கள் வெற்றி பெற்றன. ஒரு கப்பலைக் கூடப் போகவிடாமல் எதிரியின் கடற்படை தடுக்க ஆரம்பித்தது. ஆனால் அந்த ஏற்பாட்டிற்கு முன்பாகவே அவருடைய ராணுவம் முழுவதும் அதை ஏமாற்றிவிட்டு கடந்துபோயிற்று. ஆப்பிரிக்காவில் ஆயுதங்கள் இல்லாத பிரஜைகள் சகலவிதங்களிலும் துன்புறுத்தப்பட்டார்கள். அந்தக் கொடுமைகளைச் செய்த மனிதர்களும், முக்கியமாக அவர்களுடைய தலைவரும் அந்தச் செய்கைகளை பெருமையானவை என்றும், பிரமாதமானவை என்றும் சொல்லிக் கொண்டார்கள். சீசரும் மகாபெரிய அலெக்ஸாந்தரும் செய்த காரியங்களைப்போல அவை இருந்தபடியால், அவையும் நன்மையானவைகளே என்று கூறினார்கள்.

இதுதான் பெருமையும் மகத்துவமும் அடங்கிய லட்சியமாய் விளங்கியது. ஒருவர் என்ன செய்தாலும் அது தவறல்ல என்பது இதில் அடங்கி இருந்தது. அதுமட்டுமல்ல; ஒருவர் செய்யும் ஒவ்வொரு கொடுமையைப் பற்றியும் பெருமை கொள்ளுவதாய் அதோடு அதற்கு மனத்திற்கு எட்டாத சக்திக்குப் புறம்பான ஒரு முக்கியத்துவமும் கொடுக்கப்பட்டு வந்தது. அந்த லட்சியம்தான் இந்த மனிதரையும் அவருடைய சகாக்களையும் நடத்தி வந்தது. ஆப்பிரிக்காவில் அந்த லட்சியம் விரிவடைவதற்கான சாதனங்கள் காணப்பட்டன. அவர் என்ன செய்தாலும் அதில் வெற்றி பெற்றார். பிளேக் வியாதியானது அவரிடம் நெருங்கவில்லை. கைதிகளை படுகொலை செய்த குரூரத்தை அவரிடம் ஒரு குறையாக சொல்லப்பட வில்லை. அவருடைய சிறுபிள்ளைத்தனமான அடாவடித்தனத்தையம் அவமானத்தோடு அவசியமில்லாமல் ஆப்பிரிக்காவைவிட்டு வெளியேறியதையும், அவருடைய தோழர்களை ஆபத்தில் விட்டு விட்டு வந்ததையும், அவருடைய பெருமைகளாகவே பேசப்பட்டன. அதோடு, இரண்டு தடவைகள் எதிரிகளின் கடற்படையை அவர் ஏமாற்றி இருக்கிறார். வெற்றிகரமான இம்மாதிரி படுகொலைகளைச் செய்து

முடித்ததினால் தலை கிறங்கி இருந்த சமயத்தில் அவர் பாரிஸ் வந்து அடைந்தார் குடியரசு அரசாங்கம் குலைந்து கொண்டு வந்தது. ஒரு வருஷத்திற்கு முன்னால் அவருக்கு அழிவாக அது அமைந் திருக்கும். இப்பொழுதுஅதன் கடைசி காலத்தில் அது இருந்து வந்தது. எந்தக் கட்சியிலும் சேராத ஒரு புதுமனிதராக அவர் அங்கு வந்து சேர்ந்தபடியால், அவருடைய பெருமையை உயர்த்துவதற்கு அது உதவியாய் இருந்தது. அவருக்கு எந்தவிதமான திட்டமும் இல்லையானாலும் அவருடைய புதிய பதவியை மேற்கொள்ள அவர் முற்றிலும் தயாராய் இருந்தார்.

அவரிடம் எவ்விதமான திட்டமும் கிடையாது. ஒவ்வொன்றையும் கண்டு அவர் பயந்து கொண்டிருந்தார். ஆனால் கட்சிகள் அவரைப்பற்றிக் கொண்டு அவர் கலந்து கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டன.

இத்தாலியிலும் எகிப்திலும் வளரும்படி செய்த அவருடைய் பெருமையும் மகத்துவமும் கொண்ட லட்சியமும், அவருடைய பைத்தியக்காரத்தனமான தற்புகழ்ச்சியும், கொடுமைகளைச் செய்வதற்கு அவருக்குள்ள தைரியமும், பொய் சொல்லுவதற்கு அஞ்சாமல் இருந்ததும் ஆகிய குணங்களை அவர் பெற்றிருந்தார். ஆகவே, அவர் ஒருவர்தான் என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றி சொல்லக்கூடியவராகக் காணப்பட்டார்.

அவருக்காக காத்துக்கொண்டிருந்த ஒரு பதவிக்கு அவர் அவசியமாய் இருந்தார். ஆகவே, அவருடைய விருப்பம் எப்படி இருந்தபோதிலும், என்ன செய்வது என்று அவருக்குத் தெரியாமல் இருந்தபோதிலும், அவர் தவறுகள் செய்திருந்த போதிலும், அரசாங்கத்தைக் கைப்பற்றும் சதியாலோசனையில் அவர் இழுக்கப்பட்டார். அந்த சதியாலோசனை வெற்றி பெற்றது.

சட்டசபை கூட்டத்திற்குள் அவர் நுழைக்கப்பட்டார். தாம் தொலைந்ததாக அவர் நினைத்து பீதியுற்று அதைவிட்டுத் தப்பியோட விரும்பினார். மூர்ச்சை அடைந்ததுபோலப் பாசாங்கு செய்து அர்த்தமற்ற வார்த்தைகளை பேசினார். அந்த வார்த்தைகள் அவரை அழித்திருக்க முடியும். ஆனால் ஒரு காலத்தில் பெருமையோடும் நுண்ணறிவோடும் விளங்கிய பிரான்ஸின் ஆட்சியாளர்கள் இப்பொழுது தங்கள் காலம் முடிவடைந்து விட்டதாக நினைத்தார்கள். ஆகவே, அவரைவிட அதிகமாக அவர்கள் குழப்பம் அடைந்திருந்தார்கள். அதனால் தங்கள் அதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக அவரை அழிக்கும்படி செய்யக்கூடிய வார்த்தைகளை அவர்கள் சொல்லவில்லை.

'சந்தர்ப்பங்கள்', பல லட்சக்கணக்கான 'சந்தர்ப்பங்கள்' அவருக்கு அதிகாரத்தைக் கொடுத்தன. மனிதர்கள் எல்லாரும், தாங்கள் உறுதிகூறியதைப்போல, அந்த அதிகாரத்தை உறுதி செய்வதற்கு ஒத்துழைத்தார்கள். பிரான்ஸின் ஆட்சியாளர்களின் தன்மையை 'வாய்ப்பு' உருப்படுத்தியது. அவர்கள் இப்பொழுது அவருக்குப் பணிகிறார்கள். ருஷ்யாவிலுள்ள முதலாவது பாலின் தன்மையை 'வாய்ப்பு' தான் உருச் செய்தது. அவர் தமது அரசாங்கத்தை ஒப்புக்கொள்கிறார். அவக்கு விரோதமாக 'சந்தர்ப்ப'மானது சூழ்ச்சி செய்கிறது. அந்த சூழ்ச்சியானது தோல்வி அடைவதோடு மட்டுமல்லாமல், அவருடைய அதிகாரத்தையும் உறுதி செய்கிறது. 'வாய்ப்பு' என்பது எனின் கோமகனை அவர் கையில் அகப்படும்படி செய்தது. அதே வாய்ப்பு எதிர்பாராத விதமாக அந்தக் கோமகனைக் கொல்லும்படி அவரைச் செய்தது. அதன்மூலம் அவரிடம் பலம் இருந்த படியால் அவருக்கு உரிமையும் இருக்கிறது என்பதை, வேறு எதையும் விட மக்களுக்கு நன்றாக மனதில் பதியும்படி செய்தது. இங்கிலாந்திற்கு விரோதமாக படையெடுப்பதற்கு தமது முழு முயற்சியோடு அவர் வேலை செய்து வந்த போதிலும், 'சந்தர்ப்ப'மானது சூழ்ச்சி செய்து அவருடைய நோக்கத்தை நிறைவேறவிடாமல் தடுத்தது. (அம்மாதிரி அவர் செய்திருந்தால் அவர் அழிந்து போயிருப்பார்.) ஆனால், அவர் எதிர்பாராத விதமாக மாக் என்ற தளபதியையும் ஆஸ்திரியர்களையும் தாக்குகிறார், அவர்கள் போர் எதுவும் செய்யாமல் சரண் அடைகிறார்கள். 'சந்தர்ப்ப'மும் 'மேதை'யும் தான் அவருக்கு ஆஸ்டர்லிட்ஜில் வெற்றியைக் கொடுத்தன; 'சந்தர்ப்ப'த்தினால் எல்லா மனிதர்களும், பிரெஞ்சுக்காரர்கள் மட்டும் அல்லாமல் எல்லா ஐரோப்பிய மக்களும் (இங்கிலாந்தைத் தவிர, இதன் பின்னால் நடக்கப்போகிற காரியங்களில் இங்கிலாந்து கலந்து கொள்ளவில்லை) அவருடைய கொடுமைகளுக்காக அவரை வெறுத்து பீதி கொண்டிருந்ததற்கு மாறாக இப்பொழுது அவருடைய அதிகாரத்தை ஒப்புக்கொண்டார்கள்: அந்த அதிகாரத்தை அவரேதான் எடுத்துக்கொண்டார். பெருமையும் மகத்துவமுமான அவருடைய லட்சியத்தை அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். அந்த லட்சியம் சிலாக்கியமானதாகவும் நியாயமானதாகவும் அவர்கள் எல்லாருக்கும் தோன்றியது. வரப்போகிற போருக்குத் தங்களைத் தயார் செய்து கொள்ளுவதற்காகவும், தங்களுடைய சக்தியை அறிந்து கொள்ளுவதற்காகவும், மேற்கத்திய படைகள் கிழக்கு நோக்கி பல தடவைகள் போயின. 1805, 1806, 1809 ஆகிய வருஷங்களில் அவை அம்மாதிரி செய்து பலத்திலும் உருவத்திலும் பெருகின. 1811-ம்

வருஷத்தில் பிரான்ஸ் தேசத்தில் இருந்த கோஷ்டியானது மத்திய ஐரோப்பிய மக்களோடு சேர்ந்து ஒரு பெரிய கோஷ்டியாக அமைந்தது. அந்த கோஷ்டி வளர வளர அந்த கோஷ்டியின் தலைவராக விளங்கியவரின் பலமும் வளர்ந்தது. அம்மாதிரி வளர்வதானது படுத்துவதாய் இருந்தது. யுத்தத்திற்குத் தயார் செய்து வந்த பத்து வருஷ காலத்தில் ஐரோப்பாவில் உள்ள எல்லா மன்னர்களுடனும் அவர் உறவு ஏற்படுத்திக் கொண்டார். பெருமையும் மகத்துவமும் கொண்ட லட்சியம் என்று சொல்லப்பட்ட நெப்போலியனுடைய அர்த்தமற்ற லட்சியத்தை எதிர்ப்பதற்கு, உலக மன்னர்களுக்கு எந்த விதமான லட்சியமும் கிடைக்கவில்லை. அதனால் ஒருவர்பின் ஒருவராக அவருக்கு முன்னால் தங்களுடைய பலவீனத்தைக் காட்டுவதற்கு அவசப்பட்டார்கள். அந்த பெரிய மனிதரின் கருணையைப் பெறுவதற்காக தம்முடைய மனைவியை அவரிடம் பிரஷ்ய மன்னர் அனுப்பினார் அவருடைய படுக்கைக்கு சீசருடைய குமாரியை அனுப்புவது தமக்குப் பெரிய பாக்கியமென்று ஆஸ்திரிய சக்கரவர்த்தி நினைத்தார். எல்லா நாடுகளும் பரிசுத்தமானவை என்று கருதக்கூடியவைகளை எல்லாம் காப்பாற்ற வேண்டிய போப் ஆண்டவர், இந்த பெரிய மனிதரின் செல்வாக்கை வளர்ப்பதற்காக மதத்தை உபயோகித்தார். தாம் மேற்கொண்ட வேலையைச் செய்து முடிப்பதற்காக நெப்போலியன் எடுத்துக் கொண்ட முயற்சிகளைவிட அவரைச் சுற்றி இருந்தவர்கள் அதிகமாக முயற்சி எடுத்துக் கொண்டார்கள். நடந்து கொண்டிருப்பவைகளுக்கும், நடக்கப் போகிறவைகளுக்கும் பூரணபொறுப்பை அவர் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் அவர்கள் தயார் செய்து வந்தார்கள். அவர் செய்த ஒவ்வொரு காரியத்தையும், ஒவ்வொரு கொடுமையையும், ஒவ்வொரு பித்தலாட்டத்தையும், அது மிகப்பெரிய காரியமென்று அவரைச் சுற்றி இருந்தவர்கள் சொல்லாமல் இருந்ததில்லை. ஜனா, ஆர்ஸ்டாட் ஆகியவற்றைப் பற்றிய கொண்டாட்டங்களை அவருக்கு பொருத்தமான விதத்தில் ஜெர்மனியில் கொண்டாடினார்கள். அவர்மட்டும் பெரியவர் என்பதல்ல; அவருடைய மூதாதைகளும், அவருடைய சகோதரர்களும் அவருடைய வளர்ப்புப் புத்திரர்களும், அவருடைய மைத்துனர்களும் பெரியவர்கள் என்று எல்லாரும் நினைத்தார்கள். அவரிடமிருந்து கொஞ்ச நஞ்சம் விவேகத்தையும் அவரிடமிருந்து பறித்துவிட வேலைகள் செய்யப்பட்டு, அவர் மேற்கொள்ள வேண்டிய பயங்கரமான பாத்திரத்திற்கு அவரைத் தயார் செய்தார்கள். அவர் தயாரானபோது படைகளும் தயாரானது.

படையெடுப்பானது கிழக்கு நோக்கிச் சென்று, அதனுடைய லட்சியமான மாஸ்கோவை அடைந்தது. அந்தப் பட்டணம் கைவசம் ஆக்கப்பட்டது. ஆஸ்டர்லிட்ஜிலிருந்து வாக்ராம் வரையில் நடந்த முந்தைய யுத்தங்களில் எதிரி ராணுவங்களைவிட ருஷ்ய ராணுவத்திற்கு அதிகமான நஷ்டங்கள் ஏற்பட்டன. முன்னால் நிர்ணயிக்கப்பட்ட லட்சியத்திற்கு இதுவரை அவரை எவ்வித இடையூறும் இல்லாத வெற்றிமேல் வெற்றியாகச் சந்தர்ப்பங்கள் நடத்தி வந்தன. ஆனால் திடீரென்று அந்த சந்தர்ப்பங்கள் கணக்கற்ற சம்பவங்களின் பலனாக மாற ஆரம்பித்தன. பாராடினோவில் அவருக்கு ஏற்பட்ட ஜலதோஷம் முதல், மாஸ்கோவில் நெருப்புப்பிடித்து எரிந்த வரையில் நடந்த சம்பவங்களும், உறைபனிகளும் அந்த சந்தர்ப்பங்கள் மாறுவதற்கு காரணங்களாய் அமைந்தன. ஆகவே 'சந்தர்ப்பங்க'ளுக்கும் 'மேதை'க்கும் பதிலாக, முட்டாள்த்தனமும் அளவற்ற அற்பத்தனமும் காணப்பட்டன.

படையெடுத்து வந்தவர்கள் வந்த திசையை நோக்கித் திரும்பி மீண்டும் ஓடினார்கள். ஆகவே, சந்தர்ப்பங்கள் எல்லாம் இப்பொழுது நெப்போலியனுக்கு சாதகமாய் இல்லை; எல்லாம் விரோதமாகவே இருந்தன.

அந்த படையெடுப்புக்குப் போட்டியாக அதன் பின்னால் கிழக்கிலிருந்து மேற்கே ஒரு படையெடுப்பு ஏற்பட்டது. மேற்கிலிந்து கிழக்கே வந்த முந்தைய படையெடுப்பு மாதிரியே அபூர்வமான விதத்தில் இதுவும் காணப்பட்டது. 1805, 1807, 1809 ஆகிய வருஷங்களில் முன்னால் எதிரிகள் நடத்திய கிழக்கு நோக்கிய வேகத்தைப்போலவே, இப்பொழுதும் இந்தப் பெரிய மேற்கு நோக்கிய படையெடுப்பிற்கு, முன்னால் பெரிய வேகமானது நடத்திச் சென்றது. முன்போலவே இப்பொழுதும் பிரம்மாண்டமான அளவில் கூட்டுறவு ஏற்பட்டது. முன்போலவே மத்திய ஐரோப்பிய மக்களும் இந்தப் படையெடுப்பில் கலந்து கொண்டார்கள். முன்போலவே நடுவழியில் தயக்கம் ஏற்பட்டது. முன்போலவே லட்சியம் நெருங்க நெருங்க வேகமும் அதிகமாயிற்று.

பாரிஸ் என்ற முடிவான லட்சியத்தை அடைந்தார்கள். நெப்போலியனுடைய அரசாங்கமும் ராணுவமும் அழிந்து போயின. நெப்போலியனுக்கு இப்பொழுது எவ்விதமான முக்கியத்துவமும் இல்லை. அவருடைய காரியங்கள் எல்லாம் பரிதாபமாகவும், அற்பத்தனமாகவும் இருந்தன. ஆனால் மீண்டும் சொல்ல முடியாத விதத்தில் ஒரு 'வாய்ப்பு' தோன்றுகிறது. தங்களுடைய துன்பங்களுக்கெல்லாம் நெப்போலியன்தான்

காரணம் என்று நினைத்து, அவரை நேச நாடுகள் வெறுத்தன. ஆதிக்கத்தையும் அதிகாரத்தையும் இழந்து அவருடைய கொடுமைகளும் தந்திரங்களும் வெளிப்பட்ட அந்தச் சமயத்தில் அவர் பத்து வருஷங்களுக்கு முன்னால் காணப்பட்டதைப் போலவே அவர்களுக்குத் தோன்றியிருப்பார்; அதே மாதிரி ஒரு வருஷத்திற்குப் பின்னால் அவர் காணப்பட்டதைப் போல தோன்றி இருப்பார்– அதாவது, ஒரு கொள்ளைக்காரனைப் போலத் தோன்றியிருப்பார். ஆனால் ஒரு விசித்திரமான சந்தர்ப்பத்தினால் இது ஒருவக்கும் தோன்றவில்லை. அவருடைய பாத்திரம் இன்னமும் முடிவடையவில்லை. பத்து வருஷங்களுக்கு முன்பாகவும், ஒரு வருஷத்திற்குப் பின்னதாகவும் ஒரு கொள்ளைக்காரன் என்று கருதப்பட்ட அவரை ஒரு தீவுக்கு அனுப்பினார்கள். பிரான்ஸிலிருந்து இரண்டு நான்கு பிரயாண தூரத்தில் அந்த தீவு இருந்தது. ஆனால், என்ன காரணத்திற்காகவோ அவருடைய ராஜ்யமாக அந்தத் தீவு விளங்கியது. அவருக்கு வேண்டிய காப்பாளர்களும் கொடுக்கப்பட்டன. பல லட்சக்கணக்கான பணம் அவருக்குச் சேர்ந்தது.

## 4

சமுதாயங்களின் வெள்ளமானது வழக்கமான கால்வாய்களில் அமைந்து நிற்க ஆரம்பித்தது. பெரிய இயக்கத்தின் அலைகள் தணிந்தன. அமைதியான மேல்பரப்பில் சுழிகள் காணப்பட்டன. அந்தச் சுழிகளின் மீது ராஜதந்திரிகள் மிதந்து கொண்டிந்தார்கள். அவர்கள்தான் அந்த வெள்ளத்தைத் தணியும்படி செய்ததாக அவர்கள் மனோராஜ்யம் செய்தார்கள்.

ஆனால், அந்த அமைதியான சமுத்திரம் திடீரென்று மீண்டும் பொங்க ஆரம்பித்தது. தங்களுடைய அபிப்பிராய பேதங்கள்தான், அந்த புதிதான இயற்கையின் மாறுதலுக்குக் காரணம் என்று அவர்கள் நினைத்தார்கள். தங்களுடைய சக்கரவர்த்திகளுக்குள் யுத்தம் ஏற்படலாமென்று அவர்கள் எதிர்பார்த்தார்கள். ஏனெனில், நிலைமை தீராத பிரச்சனையாக அவர்களுக்குத் தோன்றியது. ஆனால், சமுத்திரம் பொங்கி, அலைகள் கிளம்புவதாக அவர்கள் உணர்ந்து அலைகளானவை, அவர்கள் எதிர்பார்த்த இடத்திலிருந்து வரவில்லை. அந்த அலைகளானவை முன்போலவே மீண்டும் பார்ஸிலிருந்து கிளம்பின. மீண்டும் திரும்பிய அந்த அலைகள், கடைசி தடவையாக மேற்கிலிருந்து குடிபெயரும் அலைகளாக அமைந்தன; தீர்க்க முடியாது என்று கருதப்பட்ட ராஜதந்திர கஷ்டங்களைத் தீர்த்து வைத்து, சரித்திரத்தின் அந்தப் பகுதியைச் சேர்ந்த ராணுவ நடமாட்டத்திற்கு முடிவு கண்டன.

பிரான்ஸை நாசமாக்கிய மனிதர், மீண்டும் பிரான்ஸுக்கு தனியாகத் திரும்பி வருகிறார். எந்த விதமான சதியாலோசனையும் சிப்பாய்களும் இன்றி அவர் திரும்பி வருகிறார். எந்த படைவீரனும் அவரைக் கைது செய்யலாம். ஆனால், விசித்திரப்படும் விதத்தில் ஒருவரும் அவரைக் கைது செய்யவில்லை. எல்லாரும் பரவசம் கொண்டு முதல் நாளன்று சபித்து வந்த அவரை, இன்னும் ஒரு மாதம் கழித்தும் சபிக்கப்போகும் அவரை, ஆர்வத்தோடு வரவேற்றார்கள்.

கடைசியாக செய்யவேண்டிய செய்கைக்கு, அந்த மனிதர் இன்னமும் அவசியமாய் இருக்கிறார்.

அந்த கடைசிச் செய்கை நிறைவேற்றப்பட்டது.

கடைசியாகச் செய்யவேண்டிய நடிப்பு செய்து முடிக்கப் பட்டது. அந்த நடிகரின் உடைகளைக் களைந்து, அவர்மீது பூசப்பட்டிருந்த பௌடர்களையும் வர்ணங்களையும் அழிக்கும்படி சொன்னார்கள். ஏனெனில், அவருடைய நடிப்பு இனி அவசியமில்லை.

சில வருஷங்கள் கடந்தன. பரிதாபகரமானவிதத்தில், தனிமையாக ஒரு தீவில் அவர் காலம் கழித்து வந்தார். தமது செய்கைகளைப் பற்றி நியாயம் கூற வேண்டிய அவசியமில்லாத சமயத்தில், பொய்களையும் சூழ்ச்சிகளையும் கொண்டு அவர் நியாயம் கூறிவந்தார். அவரிடம் மிகுந்த பலமிருப்பதாக மக்கள் தவறாக நினைத்து வந்தார்கள். அவருடைய நடவடிக்கைகளை கண் காணாத ஒருவர் நடத்தி வருவதாக அவர்கள் அறிகிற வரையில், அம்மாதிரியே நினைத்து வந்தார்கள். அந்த விஷயத்தை உலகத்திற்கு அவர் வெளிப்படுத்தி வந்தார்.

நாடகத்தில் மேனேஜர் நாடகத்தை முடித்த பின்பு, நடிகரின் நாடக உடைகளைக் களைந்து, சாதாரண உடையில் அவரை மேடையில் நமக்குக் காட்டுகிறார்.

''நீங்கள் இதுவரை எதை நம்பி வந்தீர்கள் என்பதை இப்பொழுது பாருங்கள். இவர்தான் அவர், இப்பொழுது நீங்கள் கண்டவற்றையெல்லாம் நான் நடத்தி வைத்தேனேயொழிய, அவர் அல்ல என்பதை உங்களால் கண்டுகொள்ள முடிகிறதா?''

ஆனால், அந்தக் காட்சியின் வேகத்தினால் மயங்கிப் போயிருந்த மக்களுக்கு, வெகுநேரம் கழித்த பின்புதான் அந்தை உணர்ந்துகொள்ள முடிகிறது.

முதலாவது அலெக்ஸாண்டரின் வாழ்க்கையில், இதைவிட அதிகமான ஒருமைப்பாட்டையும், தடுக்க முடியாதவைகளையும் காணலாம். அவர்தான் கிழக்கிலிருந்து மேற்கே படையெடுக்கும் எதிர் இயக்கத்திற்குத் தலைவராக இருந்தார்.

கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி போகும் அந்த இயக்கத்தின் தலைவாக நின்று, மற்றவர்களையெல்லாம் மங்கும்படி செய்த அவருக்கு என்ன தேவையாய் இருந்தது?

ஐரோப்பிய விவகாரங்களைப் பற்றிய நியாய உணர்ச்சியும் அனுதாபமுமே தேவையாய் இருந்தன; ஆனால் அந்த அனுதாபம் சில்லரை விஷயங்களினால் பாதிக்கப்படாததாய் இருக்க வேண்டும்; அவரோடு ஒத்துழைத்து வந்த மற்ற மன்னர்களுக்கு மேலாக, ஒரு தார்மீக உயர்வும் அவசியமாய் இருந்தது; ஒரு சாந்தமான கவர்ச்சியான முகத்தோற்றமும் அவசியமாய் இருந்தது; நெப்போலியனுக்கு விரோதமாக ஒரு சொந்தமான மன வருத்தமும் தேவையாய் இருந்தது. இவையெல்லாம் முதலாவது அலெக்ஸாண்டரிடம் இருந்தன. இவையெல்லாம் கணக்கற்ற சந்தர்ப்பங்களினால் அவருடைய வாழ்க்கையில் தயாரிக்கப் பட்டவை. அதாவது, அவருடைய படிப்பினாலும், ஆரம்ப காலத்தில் அவருக்கிருந்த தாராளப்போக்கினாலும், அவரைச் சுற்றியுள்ள ஆலோசகர்களாலும், ஆஸ்டர்லிட்ஜிலும், டில்சிட்டாலும், ஏர்பர்ட்டாலும் தயாரிக்கப்பட்டவை.

ருஷ்யாவின் மீது படையெடுப்பு நடந்தபோது ஏற்பட்ட தேசீய யுத்தத்தில், அவர் தீவிரமாக பங்கெடுத்துக்கொள்ளவில்லை. ஏனெனில், அவருடைய உதவி அச்சமயம் அவசியமில்லாமல் இருந்தது. ஆனால், ஒரு பொதுவான ஐரோப்பிய யுத்தம் ஏற்படுவதற்கு அவசியம் தோன்றியபோது, அவர் குறிப்பிட்ட நேரத்தில் தமது ஸ்தானத்தில் தோன்றி ஐரோப்பாவை ஒன்றுபடுத்தி, அதனுடைய லட்சியத்திற்கு அதை அழைத்துச் சென்றார்.

லட்சியத்தை அடைந்தாய் விட்டது. 1815-ஆம் வருஷத்தில் நடந்த முடிவான யுத்தத்திற்குப் பின்னால், சாத்தியமான எல்லா அதிகாரங்களும் அலெக்ஸாண்டருக்கு இருந்தன. ஆனால், அவற்றை அவர் எப்படி உபயோகித்தார்?

ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநாட்டியவராகவும் தமது வாலிப வயதிலிருந்தே தமது மக்களின் நன்மைக்காக மட்டுமே சிரத்தையெடுத்து வந்தவராகவும், தம்முடைய தாய் நாட்டில் தாராளக் கொள்கைகளை ஆரம்பித்து வைத்தவராகவும் முதலாவது அலெக்ஸாண்டர் விளங்கினார். இப்பொழுது அவருக்கு ஏராளமான அதிகாரங்கள் இருப்பதாகத் தோன்றியபடியால், தமது மக்களின் நன்மைக்காக அவற்றை உபயோகிப்பதற்கு சாத்தியங்களும் இருந்ததாகத் தோன்றின. அச்சமயம் நெப்போலியன் நாடு கடத்தப்பட்டிருந்தார். தம்மிடம் அதிகாரம் இருந்திருந்தால், மக்களை எப்படி மகிழ்ச்சியாக வைத்திருக்க முடியும் என்பதற்கான தி[illegible]

தயாரித்துக்கொண்டு இருந்தார். ஆனால் இச்சமயத்தில் முதலாவது அலெக்ஜாண்டர் தமது லட்சியம் முடிவடைந்ததும், கடவுள் தம்மை அழைப்பதுபோன்ற உணர்ச்சியைப் பெற்றார்; இந்த அதிகாரங்களை எல்லாம் எவ்வளவு அற்பமானவை என்பதை திடீரென்று அவர் உணர்ந்தார்; ஆகவே அவற்றிலிருந்து முகத்தைத் திருப்பி அந்த அதிகாரங்களை, அவர் எப்பொழுதுமே வெறுத்து வந்த இழிவான பேர்வழிகளிடம் கொடுத்துவிட்டார். அவர் சொன்னதாவது:

''எனக்கு வேண்டாம், எனக்கு வேண்டாம். எல்லாம் கடவுளாகிய உனக்குத்தான்... நான் மற்றவர்களைப் போலவே ஒரு மனிதன்தான். நான் ஒரு மனிதனைப்போல என்னுடைய ஆத்மாவையும், கடவுளையும் பற்றிச் சிந்திப்பதற்கு, என்னை விட்டு விடுங்கள்.''

''சூரியனும் ஒவ்வொரு அணுவும் தனக்குள்ளேயே பூரணமானதாக இருக்கிறது. ஆனால், அதே சமயத்தில் மனிதனால் அறிந்து கொள்ள முடியாத பிரம்மாண்டமான உருவத்தின் ஒரு பகுதியாகவும் இருக்கிறது. அதைப் போலவே, ஒவ்வொரு மனிதனும் தனக்குள்ளாகவே தன்னுடைய சொந்தக் கொள்கைகளைக் கொண்டிக்கிறான். என்றாலும், மனிதனால் உணர்ந்து கொள்ள முடியாத ஒரு பொதுவான காரியத்திற்கு அவற்றைக் கொண்டு அவன் சேவை செய்கிறான்.

ஒரு புஷ்பத்தின் மீது அமர்ந்திருக்கும் தேனீயானது ஒரு குழந்தையைக் கொட்டுகிறது. தேனீக்களைக்கண்டு பயந்துபோன அந்தக் குழந்தை மக்களைக் கொட்டுவதற்காகத்தான் தேனீக்கள் இருப்பதாகச் சொல்லுகிறது. புஷ்பத்திலிருந்து தேனை உறிஞ்சும் தேனீயை ஒரு கவியானவர் புகழ்ந்து பாடுகிறார். மலர்களிலுள்ள மணங்களை உறிஞ்சுவதற்காகவே தேனீக்கள் இருப்பதாக அவர் சொல்லுகிறார். புஷ்பங்களிலிருந்து தேனைக்கொண்டு வந்து கூட்டில் சேர்ப்பதைப்பார்த்த தேனீயை வளர்ப்பவர், தேனைச் சேகரிப்பதற்காகத்தான் தேனீக்கள் இருக்கின்றன என்று நினைக்கிறார். தேனீக்களின் வாழ்க்கையை நன்றாகக் கற்றறிந்த ஒருவர், சிறிய தேனீக்களுக்கு உணவு கொண்டு வந்து கொடுப்பதற்ககாவும், ராணி தேனீயைக் காப்பாற்றுவதற்காகவும், தங்கள் இனத்தை அழியாமல் காப்பாற்றுவதற்காகவுமே தேனீக்கள் இருப்பதாச் சொல்லுகிறார். மகரந்தத்தை எடுத்துச் சென்று மற்றொரு புஷ்பத்தில் வைத்து அது பலன் கொடுக்கும்படி தேனீ செய்வதை பார்க்கும் ஒரு தாவர சாஸ்திரி, தேனீக்கள் உயிரோடு இருப்பதற்கு இதுதான் காரணம் என்று நினைக்கிறார். செடி கொடிகள் பல இடங்களில் வளரவதற்கு தேனீக்கள் உதவியாக

இப்பதால், அந்த வேலைக்காகத்தான் அவை இருக்கின்றன என்று மற்றொரு தாவர சாஸ்திரி கூறுகிறார். ஆனால், மனிதர்கள் அறிந்து கொள்ளக்கூடிய காரணங்கள் எத்தனை இருந்தாலும், தேனீக்களின் வாழ்க்கையின் நோக்கத்தைப் பற்றிய முடிவானது இன்னும் பூரணமடையவில்லை. மனிதருடைய புத்திசாலித்தனமானது காரணங்களை அறிவதற்கு எவ்வளவுக்கெவ்வளவு உயர்ந்து கொண்டு போகப் போக, முடிவான லட்சியம் என்ன என்பது மனித புத்திக்கு அடைபடாமல் இருக்கிறது என்பது தெளிவாகிறது.

மற்ற வாழ்க்கைக்கும், அந்தத் தேனீயின் வாழ்க்கைக்கும் தொடர்பான விஷயங்களைப் பற்றியே மனிதர்கள் அறிந்துகொள்ள முடிகிறது. அம்மாதிரியேதான் சாத்திர பிரபலஸ்தர்கள், சமுதாயங்கள் ஆகியவர்களின் நோக்கங்களை அறிந்துகொள்ளு வதும் இருக்கிறது.

## 5

1813-ஆம் வருஷத்தில் நட்டாஷாவுக்கும் பெஜுகாவா வுக்கும் கல்யாணம் ஆயிற்று. முதிய ராஸ்டோவ்களின் குடும்பத்தில் அதுதான் கடைசியான, மகிழ்ச்சியான சம்பவம். கோமகன் இலியா ராஸ்டோவ் அதே வருஷத்தில் காலமானார். எப்போதும் ஏற்படுவதைப் போலவே, தந்தையின் மரணத்திற்குப் பின்னால் குடும்பம் பிரிந்து போயிற்று.

முந்தைய வருஷத்தில் நடந்த சம்பவங்கள்; மாஸ்கோ எரிந்து போனது, அதிலிருந்து ஓடியது, இளவரசர் ஆண்ட்ரூ காலமானது, நட்டாஷா அதைரியம் கொண்டது, பெட்டியா மரணமானது, முதிய கோமகனின் துக்கம் வளர்ந்தது. இவையெல்லாம், முதிய கோமகனுடைய தலையில் அடிக்குமேல் அடியாக விழுந்தன. இந்தச் சம்பவங்களுக்கு எல்லாம் அர்த்தம் என்ன என்று அவரால் அறிய முடியவில்லை. இன்னமும் அதிகமான அடிகளை எதிர்பார்ப்பவரைப் போல, தமது ஆயுளை முடித்துவிடுவதற்கு இன்னமும் அதிகமான அடிகளை அழைப்பவர் போலத் தமது முதிய தலையை ஆத்மார்த்தீகமாக தாழ்த்திக் கொண்டிருந்தார். ஆகவே, ஒருசமயம் அவர் பீதியும் கவலையும் கொண்டும், மற்றொரு சமயம் சுறுசுறுப்பும் உற்சாகமும் கொண்டும் மாறிமாறி நடந்து வந்தார்.

நட்டாஷாவின் கல்யாணத்திற்கான ஏற்பாடுகளில் அவருடைய மனம் சிறிதுகாலம் ஈடுபட்டிருந்தது. டின்னர்களையும் இராச் சாப்பாடுகளையும் அவர் நடத்தி வைத்து, அவற்றில் மகிழ்ச்சிய டைந்தவர் போலக் காணுவதற்கு முயற்சி செய்தார். ஆனால்

முன்பெல்லாம் இருந்ததைப்போல, அவருடைய மகிழ்ச்சியானது மற்றவர்களைக் கவரக் கூடிய விதமாக இப்போது இல்லை. அதற்கு மாறாக, அவரை நன்றாய் அறிந்து அவர்மீது பிரியம் கொண்டவர்களுக்கு, இப்போது அவை இரக்கத்தையே உண்டு பண்ணின.

பீயரும் அவருடைய மனைவியும் அங்கிருந்து புறப்பட்டுப் போன பின்பு, அவர் கலகலப்பு இல்லாமல் இருந்தார். தமக்கு மனச்சோர்வு ஏற்படுவதாக குறை கூறிக்கொண்டிருந்தார். சில தினங்களுக்குப் பின்னால் அவர் வியாதியுற்று படுக்கையில் படுத்தார். அவர் மீண்டும் எழுந்திருக்கப் போவதில்லை என்பதை முதலிலேயே தெரிந்து கொண்டார். டாக்டர்கள் என்னதான் உற்சாகமாகப் பேசினாலும், அவருக்கு நம்பிக்கையில்லை. கோமகள் அவருக்குப் பக்கத்தில் ஒரு நாற்காலியில் அமர்ந்து, இரண்டு வாரங்கள் வரை கவனித்து வந்தாள். அவள் மேலாடைகளைக் களைந்து படுக்கைக்குப் போவதுகூட இல்லை ஒவ்வொரு தடவையும் அவருக்கு மருந்து கொடுத்த போதெல்லாம், அவர் தேம்பித் தேம்பி அழுது மௌனமாய் அவருடைய கையை முத்தமிடுவார். கடைசி நாளன்று அவர் தேம்பி அழுதுகொண்டு, அவளையும் அங்கு பிரசன்னமாய் இல்லாத அவருடைய குமாரரையும் தம்மை மன்னிக்கும்படி கேட்டார். அவர்களுடைய சொத்துக்களை அழித்து விட்டதற்காகவே அம்மாதிரி மன்னிப்புக் கோரினார். அவரிடமிருந்த பிரதானமான குறை அதுதான். அதை அவரும் அறிவார். நற்கருணையும் அபிஷேகமும் முடிந்த பின்பு, அவர்...அமைதியாகக் காலமானார். மறுநாளன்று வரிசை வரிசையாக, அவருக்கு நடைசி மரியாதையைத் தெரிவிப்பதற்காக, அவரை அறிந்தவர்கள் பெருங்கூட்டமாக ராஸ்டோவ்கள் தங்கியிருந்த வீட்டிற்கு வந்தார்கள். இந்த அறிமுகமானவர்கள் எல்லோரும்: எத்தனையோ தடவை அவர் வீட்டில் டின்னர் அருந்தி நடனமாடி, அவரைப் பற்றி கேலியாகப் பேசியிருக்கிறார்கள். ஆனால், இப்போது அவர்கள் எல்லோரும் ஒருமுகமாக உணர்ச்சியினால் தூண்டப்பட்டு, தங்களைத் தாங்களே கண்டித்து பின்வருமாறு சொல்ல ஆரம்பித்தார்கள்: ''நல்லது, அவர் எப்படிப்பட்டவராய் இருந்தாலும் சரி; அவர் மிகச் சிறந்த மனிதர். அம்மாதிரி மனிதர்களை இக்காலங்களில் கண்டுபிடிக்க முடியாது... அவருக்கு ஏதாவது குறை இருக்குமானால், அந்தக் குறை நம்மிடம் இல்லாமலா இருக்கிறது?''

அவருடைய பண விவகாரங்கள் எல்லாம் ரொம்ப மோசமான நிலைமைக்கு வந்தன. இன்னும் ஒரு வருஷம் அவர் உயிரோடு இருப்பாரானால், என்ன நடந்திருக்கும் என்று ஒருவராலும் சொல்ல முடியாது. அச்சமயத்தில் எதிர்பாராத விதமாகக் காலமானார். அவர்

காலமான செய்தி நிக்கலஸுக்கு அவர் ருஷ்ய ராணுவத்தோடு பாரிஸில் இருந்தபோது தெரிந்தது. உடனே அவர் தம்முடைய வேலையை ராஜிநாமா செய்துவிட்டு, அந்த ராஜிநாமாவை அங்கீகரிக்கிற வரையில் காத்திராமல், ரஜா எடுத்துக்கொண்டு மாஸ்கோவுக்குப் புறப்பட்டு வந்தார். கோமகனின் பண விவகாரங்கள் எல்லாம் எம்மாதிரி இருக்கின்றன என்பது அவர் இறந்த ஒரு மாதத்திற்குப் பின்னால் தெளிவாயின. சிறிய கடன்களை கூட்டிப் பார்த்தபோது ஏற்பட்ட பெருந்தொகையானது, எல்லோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அம்மாதிரி இருக்கும் என்று எவரும் சந்தேகப்படவே இல்லை. அவருடைய சொத்தின் மதிப்பிற்கு இரண்டு மடங்கு கடன் இருந்தது.

நண்பர்களும் பந்துக்களும் தமக்கு வாரிசு பாத்தியதை வேண்டாமென்று மறுக்கும்படி நிக்கலஸுக்கு ஆலோசனை கூறினார்கள். ஆனால் அம்மாதிரி மறுப்பதானது தம்முடைய தந்தைக்கு அவமரியாதை செய்தாகும் என்று அவர் நினைத்தார். தம்முடைய தந்தையின் பெயரை புனிதமாக வைத்திருந்தபடியால், அம்மாதிரியான மறுக்கும் யோசனைகளை அவர் ஒப்புக் கொள்ளவில்லை. ஆகவே, கடன்களை அடைப்பதற்குண்டான பொறுப்போடு வாரிசு பாத்தியதையை ஒப்புக்கொண்டார்.

கோமகனுடைய நல்ல குணத்தினால் ஏற்பட்ட சக்தி மிகுந்த செல்வாக்கானது, அவர் உயிரோடு இருந்தவரையில் கடன் கொடுத்தவர்களை மௌனமாக இருக்கும்படி செய்து வந்தது. இப்போது அவர்கள் எல்லோரும் தங்களுடைய பணத்தைக் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். யாருக்கு முதலாவது கொடுக்க வேண்டுமென்பதில், எப்போதும் போலவே பொட்டாபோட்டி இருந்தது மைட்டெங்கா என்பவரைப்போல பலக்கு வெகுமதிகளாக பிராமிசரி நோட்டுகளை கோமகன் எழுதிக்கொடுத்திருந்தார். அவர்களெல்லாம் இப்பொழுது உடனே பணம் வேண்டுமென்று நெருக்கினார்கள். நிக்கலஸுக்கு கொஞ்சம்கூட அமைதியையோ ஓய்வையோ அவர்கள் கொடுக்கவில்லை. காலம்சென்ற கோமகனுக்கு (அவர்தான் கடன் வாங்கியவர்) இரங்குகிறவர்களைப்போல நடித்தவர்கள் எல்லோரும், இப்போது (கடனை வாங்காத) வாலிப வாரிசுதாரரை தாமாக கடன்களை திருப்பிக் கொடுக்கிறேன் என்று ஒப்புக்கொண்டவரை நெருக்குகிறார்கள்.

நிக்கலஸ் போட்ட திட்டங்களில் ஒன்றுகூட வெற்றி பெறவில்லை. அவடைய எஸ்டேட் ஏலத்தில் விடப்பட்டது. அதற்கு பெறுமானமுள்ள தொகையில் பாதிக்குத்தான் ஏலத்தில் போயிற்று. பாதிக்கடன் இன்னமும் அடைபடாமல்

இருந்துகொண்டிருந்தது. தம்முடைய மைத்துனரான பெஜுகாவாவிடமிருந்து 30,000 ரூபிள்களைக் கடனாகப் பெற்றுக் கொள்வதற்கு நிக்கலஸ் சம்மதித்தார். அந்தப் பணத்தை வாங்கி நியாயமாகக் கொடுக்கவேண்டிய கடனையெல்லாம் அடைத்தார். மீதமுள்ள கடனுக்காக அவரை ஜெயிலில் வைத்துவிடுவோம் என்று கடன்காரர்கள் பயமுறுத்தியதால், அவர் மீண்டும் சர்க்காரர் சேவையில் போய்ச் சேர்ந்தார்.

அவர் ராணுவத்தில் சேருவதற்கு இல்லை. அவர் சேர்ந்திருந்தால் அடுத்தபடியாக பதவி காலியாகும்போது அவர் ஒரு கர்னலாக வந்திருக்கலாம். ஆனால் அவருடைய தாயார் தன்னுடைய உயிருக்கு அவர் ஒருவரே ஆதரவாக இருப்பதைப்போல அவரை பற்றிக் கொண்டிருந்தாள். அதனால் அவர் ராணுவத்தில் சேரமுடியவில்லை. மாஸ்கோவில் அவருக்கு முன்னால் அறிமுகமானவர்களோடு தங்கியிருப்பதற்கு அவருக்குப் பிரியமில்லாமல் இருந்தபோதிலும், சிவில் சர்வீஸ் உத்யோகத்தில் அவருக்கு வெறுப்பிருந்தபோதிலும், அந்த சிவில் சர்வீஸ் உத்தியோகத்தில் மாஸ்கோவில் இருக்க ஒரு பதவியை ஒப்புக்கொண்டார். தமக்கு மிகுந்த பிரியமான ராணுவ யூனிபாரத்தை உதறினார். அந்தப் பெரிய வீட்டிலிருந்து, சைட்செவ் விராஜியோக் என்ற ஏழைகள் வசிக்கும் பகுதியிலுள்ள ஒரு சிறிய வீட்டிற்கு, தாயாருடனும் சோனியாவுடனும் குடிமாறினார்.

நட்டாஷாவும் பீயரும் அந்தச் சமயத்தில் பீட்டர்ஸ்பர்க்கில் வசித்துக் கொண்டிருந்தார்கள். நிக்கலஸின் பண விவகார நிலைமைகளைப் பற்றி அவர்களுக்குத் தெளிவாக எதுவும் தெரியாது. தமது மைத்துனரிடமிருந்து கடன் வாங்கியபடியால், தற்சமயமுள்ள மோசமான நிலைமையை தமது மைத்துனர் அறியாதபடி மறைப்பதற்கு நிக்கலஸ் முயன்றார். அவருக்கு சம்பளமாகக் கிடைத்த 1,200 ரூபிள்களைக்கொண்டு அவர் தம்மையும், தமது தாயாரையும், சோனியாவையும் காப்பாற்று வதற்கு முடியவில்லை. ஆனால் தங்களுடைய வறுமைய்யை தமது தாயார் அறிந்து கொள்ளாமல் மறைக்க வேண்டியது அவசியமாய் இருந்தபடியால், அவடைய நிலைமை இன்னும் கஷ்டமாய் இருந்தது சொகுசான நிலைமையில் வாழ்வதைத் தவிர வேறு வாழ்க்கை உண்டு என்பதை கோமகள் அறியாதவள். சிறு குழந்தையிலிருந்தே அம்மாதிரி பழக்கப்பட்டுப்போனாள், ஆகவே இப்போது ஒரு சிநேகிதியை அழைத்துவருவதற்கு வண்டி வேண்டுமென்றும், விலையுயர்ந்த சாப்பாட்டு சாமான்கள் தனக்கு வேண்டுமென்றும்; விலையுயர்ந்த ஒயின் தனது குமாரருக்கு வேண்டுமென்றும், அல்லது நட்டாஷாவுக்கு மகிழ்ச்சியைக்

கொடுக்கக்கூடிய ஒரு பொருளை வாங்கவேண்டும் என்றும் சோனியாவுக்கோ, நிக்கலஸுக்கோ பரிசுகளைக் கொடுக்க வேண்டும் என்றும் சொல்லி, அதற்காக பணம் கேட்கும்போது அது தனது குமாரருக்கு எவ்வளவு கடினமாய் இருக்குமென்பதை அவளால் உணரமுடியவில்லை.

வீட்டுக் காரியங்களை சோனியா கவனித்துக்கொண்டு, தனது அத்தையையும் கவனித்து வந்தாள். அவளுக்கு வாசிக்கும் வேலையையும் அவளே செய்து வந்தாள். அவளுடைய அத்தையின் விசித்திரப் போக்குகளையும், தன் மீது அவளுக்குள்ள ரகசியமான குரோதத்தையும் அவள் அறிவாள். முதிய கோமகளிடமிருந்து அவர்களுடைய தரித்திரத்தை மறைக்க வேண்டுமென்ற விஷயத்தில் நிக்கலஸுக்கு அவள் உதவி செய்து வந்தாள். சோனியாவுக்கு தாம் இல்லையற்ற விதமாக கடமைப்பட்டிருப்பதாக நிக்கலஸ் உணர்ந்தார். அம்மாதிரியாக அவள் அவளுடைய தாயாருக்கு, சேவை செய்தாள். சோனியாவின் பொறுமையையும் பக்தியையும் அவர் மிகுந்த சிலாக்கியமாகப் பாராட்டினார். ஆனால் அவளிடமிருந்து விலகி நிற்பதற்கு அவர் முயற்சி செய்தார்.

அவள் பூரணமாக நல்ல குணங்களோடு இருப்பதைக் கண்டு அவருடைய மனதிற்குள் அவள் மீது கோபம் ஏற்பட்டது. ஏனெனில், அவளை குறைகூறுவதற்கு எந்தவிதமான குற்றமும் அவருக்கு அகப்படவில்லை. எதையெல்லாம் சிலாக்கிய மானவையென்று மக்கள் நினைக்கிறார்களோ, அந்தக் குணங்கள் எல்லாம் அவளிடம் இருந்தன. ஆனால், அவையெல்லாம் அவரை அவள் மீது காதல் கொள்ளும்படி செய்ய முடியவில்லை. எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக அவர் அவளை மதிக்கிறாரோ, அவ்வளவுக்கவ்வளவு அவருடைய காதல் குறைவதாக அவர் உணர்ந்தார். அவருக்கு பூரண சுதந்திரம் கொடுத்து விட்டதாக அவள் எழுதியபோது, இதை அப்படியே அவர் ஒப்புக்கொண்டார். ஆகவே, தங்களுக்குள் முன்னால் ஏற்பட்டிருந்தவைகளை யெல்லாம் மறந்து வெகு காலம் ஆகிவிட்டதைப்போலவும், அவற்றை இனி எக்காலும் புதுப்பிக்க முடியாது என்பதைப் போலவும் அவர் நடந்து கொண்டார்.

நிக்கலஸுடைய நிலைமை வரவர மோசமாகிக் கொண்டு வந்தது. தமது சம்பளத்திலிருந்து ஒரு பகுதியை தனியாக ஒதுக்கி வைக்கவேண்டுமென்று அவர் நினைத்த நினைப்பெல்லாம் கனவாய் முடிந்தது அவர் சம்பளத்தில் எதையும் மீதம் செய்து வைக்க முடியாதது மட்டுமல்ல; அவருடைய தயாருடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக சில சிறிய கடன்களைக் கூட அவர் வாங்கியிருந்தார். இந்த நிலைமையிலிருந்து வெளியேறு

வதற்குண்டான வழி அவருக்கு ஒன்றும் புலப்படவில்லை. யாராவது ஒரு பணக்காரப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று அவருடைய பந்துக்கள் சொல்லிய யோசனை அவருக்கு வெறுப்பாக இருந்தது. அதை தவிர இந்தக் கஷ்டத்திலிருந்து விடுபடுவதற்கு மற்றொரு வழி அவருடைய தாயாரின் மரணமாகும். ஆனால் அந்த வழி அவருடைய மனதில் எப்போதுமே நுழைந்தது இல்லை. அவர் எதையும் விரும்பவு மில்லை; எதையும் எதிர்பார்க்கவுமில்லை. தமது நிலைமையை முணு முணுக்காமல் தாங்கிக்கொள்ளும் தமது சக்தியைப் பற்றித் தமது உள் மனதில் ஒரு சோகமான திருப்தி அவருக்கு ஏற்பட்டிருந்தது. அவருக்கு அறிமுகமானவர்கள் அவரிடம் அனுதாபம் காட்டி, அவருக்கு உதவி செய்வதாக சொல்லுவது எரிச்சலை உண்டு பண்ணியபடியால், அவர்களை அவர் தவிர்த்து வந்தார். பொழுதுபோக்கிற்கான தமாஷ்கள் எல்லாவற்றையும் அவர் தவிர்த்துவந்தார். வீட்டில் கூட தாயாடன் சீட்டு விளையாடு வதையும், தமது அறையில் மேலும் கீழும் நடப்பதையும், சுங்கான் குடித்துக் கொண்டிருப்பதையும் தவிர வேறு எதையும் செய்வதில்லை சோகமான சுபாவம் ஒன்றுதான் அவருடைய நிலைமையை தாங்கிக்கொள்ளும் பலத்தை அவருக்குக் கொடுத்து வந்தபடியால், அதைக் கைவிடாமல் காப்பாற்றி வந்தார்.

## 6

குளிர்கால ஆரம்பத்தில் இளவரசி மேரி மாஸ்கோவுக்கு வந்தாள். பட்டணத்திலிருந்த பிரஸ்தாபங்களைக் கொண்டு, ராஸ் டோவ்களின் குடும்ப நிலைமை எப்படியிருக்கிறது என்பதை அறிந்தாள். அதோடு, ‘தம்முடைய தாயாருக்காக மகன் தியாகம் செய்தார் என்று மக்கள் பேசிக்கொண்டதையும் கேட்டாள்.

''இதைத் தவிர, அவரைப் பற்றி வேறு விதமான நான் எப்போதும் எதிர்பார்த்தது இல்லை'' என்று இளவரசி மேரி, அவரிடம் தனக்குள்ள காதலைப் பற்றிய மகிழ்ச்சியான நினைப்போடு, தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். ராஸ்டோவ் குடும்பத்தைச் சேர்ந்த சகலரிடமும் தனக்குள்ள நட்பையும், அதனால் அவரும் ராஸ்டோவ் குடும்பத்தில் ஒருவளாகக் கருதப்படுவதையும் நினைத்தபோது, அவர்களைப் போய்ப் பார்க்க வேண்டியது தனது கடமை என்று அவள் உணர்ந்தாள். ஆனால், வாரோநெஜ்ஜில் நில்லஸுடன் தனக்கு ஏற்பட்டிந்த தொடர்பை அவள் நினைவு கூர்ந்ததும், அம்மாதிரி அவர்களைப் போய்ப் பார்ப்பதற்கு அவள் தயங்கினாள். பின்னால் தனது மனத்தைத் தேற்றிக் கொண்டு, அவள்

மாஸ்கோவுக்கு வந்த சில வாரங்களுக்குப் பின்னால் ராஸ்டோவ்களைப் போய்ப் பார்த்தாள்.

நிக்கலஸ் தான் அவளை முதலில் சந்தித்தார். நிக்கலஸ் அறையைக் கடந்துதான் கோமகளின் அறைக்குப் போக வேண்டும். இளவரசி மேரி எதிர்பார்த்தபடி மகிழ்ச்சியோடு அவளை நிக்கலஸ் வரவேற்கவில்லை. அவளை முதலில் பார்த்ததும், அவருடைய முகமானது கனிவற்று கடுமையாகவும், மிகவும் பெருமைகொண்ட விதமாகவும் தோன்றியது. அம்மாதிரி தோற்றத்தை அவள் இதற்கு முன் அவர் முகத்தில் கண்டதில்லை. அவளுடைய சௌக்கியத்தைப் பற்றி அவர் விசாரித்து விட்டு. அவளைத் தம்முடைய தாயாரிடன் அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே அவர்களோடு ஐந்து நிமிஷங்கள் இருந்துவிட்டு, அந்த அறையை விட்டு வெளியே போனார்.

கோமகளின் அறையை விட்டு இளவரசி மேரி வெளியே வந்ததும், நிக்கலஸ் மீண்டும் அவளைச் சந்தித்தார். அதே மாதிரியான கனிவற்ற தோற்றத்தோடு அவருடன் முன் அறைக்குச் சென்றார். அவருடைய தாயாரின் சௌக்கியத்தைப் பற்றி அவள் சொல்லிய வார்த்தைகளுக்கு அவர் எவ்வித பதிலும் சொல்ல வில்லை. ''அதைப் பற்றி உனக்கு என்ன? என்னை நிம்மதியாக இருக்க விடு'' என்று சொல்வதுபோல, அவருடைய பார்வை இருந்தது.

''இவள் ஏன் இங்கே வந்து சுற்றிப் பார்க்கிறாள்? இவளுக்கு என்ன வேண்டும்! இம்மாதிரி சீமாட்டிகளையும் இவர்களுடைய பழக்க வழக்கங்களையும் என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை'' என்று, சோனியாவுக்கு முன்பாக உரத்த குரலில் அவர் சொன்னார். தம்முடைய எரிச்சலை அடக்க முடியாமல் இருந்தது போலக் காணப்பட்டார்.

இளவரசியின் வண்டி அங்கிருந்து மறைந்த பின்புதான் அம்மாதிரி அவர் பேசினார்.

''ஓ, நிக்கலஸ், நீர் எப்படி அம்மாதிரி பேசலாம்?'' என்று தன்னுடைய மகிழ்ச்சியை மறைப்பதற்கு முடியாமல் சோனியா கூவினாள். ''அவள் மிகுந்த அன்பாக இருக்கிறாள். அவளிடம் அம்மாவுக்கு மிகுந்த பிரியம் இருக்கிறது.''

நிக்கலஸ் பதில் சொல்லவில்லை. இளவரசியைப் பற்றி மேலே எதுவும் பேசாமல் தடுப்பதற்கு அவர் முயற்சி செய்தார். ஆனால் அவள் வந்து போன பின்பு முதிய கோமகள் அவளைப்பற்றி ஒரு நாளில் பல தடவைகள் பேசுவதுண்டு.

அவள் இளவரசியின் குணங்களைத் துதிபாடுவாள். தன்னுடைய குமாரர் அவளைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று வற்புறுத்தினாள். அவளை அடிக்கடி சந்திக்கவேண்டுமென்றும் சொன்னாள். ஆனால், அவளைப் பற்றி முதிய கோமகள் பேச ஆரம்பித்ததும், அவளுக்கு நிதானம் மறைந்து விடும்.

இளவரசியைப் பற்றித் தமது தாயார் பேசும்போதெல்லாம், தாம் மௌனமாய் இருப்பதற்கு நிக்கலஸ் முயற்சி செய்தார். ஆனால், அவருடைய மௌனமானது, அவளுக்கு எரிச்சலைக் கொடுத்தது.

''அவள் மிகுந்த சிலாக்கியமான, போற்றத் தகுந்த ஒரு இளம் பெண்'' என்று சொன்னாள். ''நீ அவளைப் போய்ப் பார்க்க வேண்டும். நீ யாரை யாவது சிலரைப் பார்த்தாக வேண்டும். ஏனென்றால், எங்களை மட்டும் நீ பார்த்துக் கொண்டே யிருப்பாயானால், உனக்கு மந்தமாய் இருக்கும்.''

''ஆனால், எனக்கு யாரையும் பார்ப்பதற்கு இஷ்டமில்லை, அம்மா.''

''நீ அவளைப் பார்க்க வேண்டும் என்று முன்னால் விரும்பி இருந்தாய், இப்போது விருப்பம் இல்லை என்று சொல்லுகிறாய். உண்மையில், என் அன்பே, உன்னை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு நாள் நீ மந்தமாய் இருக்கிறாய். அடுத்த நாள் நீ ஒருவரையும் பார்க்க முடியாது என்று மறுக்கிறாய்.''

''நான் மந்தமாய் இருக்கிறேன் என்று ஒரு பொழுதும் சொல்லியதில்லை.''

''ஏன், நீயே அவளைப் பார்க்கக்கூட வேண்டாமென்று சொல்கிறாய்?'' அவள் ஒரு அருமையான இளம் பெண். நீ எப்போதும் அவள் மீது பிரியமாய் இருந்து வந்தாய். இப்போது திடீரென்று உன்னுடைய மண்டையில் ஏதோ ஒரு விசித்திரமான எண்ணம் தோன்றியிருக்கிறது. நீ என்னிடமிருந்து எல்லாவற்றையும் மறைக்கிறாய்.''

''இல்லவே இல்லை, அம்மா,''

''உனக்கு இப்பொழுது பிடித்தமில்லாத எதையாவது நான் சொல்லுவதாய் இருக்கலாம். அவள் வந்ததற்குப் பதிலாக நீ அவளைப் போய்ப் பார்க்க வேண்டும் என்றே சொல்லுகிறேன். மரியாதை முறைக்கு அம்மாதிரி செய்ய வேண்டியது அவசியம் என்பதை நீ உணர வேண்டும்... நல்லது, நான் உன்னிடம் சொல்லியாய் விட்டது. உன்னுடைய தாயாரிடம் கூட சில விஷயங்களை நீ மறைக்கிறாய். ஆகவே உன் விஷயத்தில் இனி நான் தலையிட மாட்டேன்.''

''நல்லது, அப்படியானால், நீ விரும்பினால், நான் போகிறேன்.''

''அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. உன்னுடைய நன்மைக்காகவே நான் அதை விரும்பினேன்.''

நிக்கலஸ் பெருமூச்சு விட்டார். தமது மீசையைக் கடித்துக் கொண்டார். தனிச் சீட்டாட்டம் ஆடுவதற்குச் சீட்டுகளைப் பரப்பினார். தம்முடைய தாயாரின் கவனத்தை வேறு விஷயத்தில் திருப்புவதற்கு முயற்சி செய்தார்.

அதே விதமான உரையாடல் மறுநாளும் நடந்தது. அதற்கு அடுத்த நாளும், அதற்கு அடுத்த நாளும், அதே மாதிரி நடந்தது.

இளவரசி மேரி ராஸ்டோவ்களைப் போய்ச் சந்தித்த பின்னால், அவன் எதிர்பார்க்காத விதத்தில் கனிவற்று நிக்கலஸ் வரவேற்ற பின்னால், தான் முதலாவதாக ராஸ்டோவ்களைப் போய்ப் பார்க்க வேண்டாம் என்று நினைத்தது சரியானது என்று நினைக்கலானாள்.

''நான் வேறு எதையும் எதிர்பார்க்கவில்லை'' என்று அவள் பெருமை கொண்டு தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். ''அவளிடம் எனக்கு எதுவுமில்லை, அந்த முதிய சீமாட்டியைப் பார்க்கவே நான் விம்பினேன். அவள் எப்போதும் என்னிடம் பிரியமாய் இருந்து வருகிறாள். அவளுக்கு நான் பல விதங்களில் கடமைப்பட்டிருக்கிறேன்''

அவள் தன்னை சமாதானப் படுத்திக்கொள்ள முடியவில்லை. வியாகூலத்தைப் போன்ற ஒரு உணர்ச்சியானது, அவள் ராஸ்டோவ்களைப் பார்க்கப் போனதைப்பற்றி நினைக்கும் போதெல்லாம், அவளுக்கு ஏற்பட்டு வந்தது. இனிமேல் ராஸ்டோவ்களைப் போய்ப் பார்ப்பதில்லை என்று அவள் உறுதியாகத் தீர்மானித்தாள். அந்தக் காரியத்தையே முழுவதும் மறந்துவிட வேண்டுமென்றும் அவள் தீர்மானித்தாள். என்றாலும் அவள் எப்போதும் ஒரு தர்மசங்கடமான நிலைமையில் இருப்பதாக உணர்ந்து வந்தாள். தன்னுடைய மனதைத் துன்புறுத்துவது எது என்று அவன் அவளையே கேட்டுக் கொண்டபோது, ராஸ்டோவுடன் அவளுக்குள்ள உறவுதான் அவளை அம்மாதிரி துன்புறுத்துகிறது என்பதை அவள் ஒப்புக்கொள்ள வேண்டியதாய் இருந்தது. அவருடைய கனிவற்ற மரியாதையான நடத்தையானது, அவளைப்பற்றி அவர் கொண்டிருக்கும் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதாய் இல்லை என்பதை அவள் அறிவாள். ஆனால் அந்த நடத்தை ஏதோ ஒன்றை மறைக்கிறது என்று அவள் நினைத்தாள். அதனால் அம்மாதிரி மறைக்கும் விஷயத்தை அவள் கண்டு பிடித்தாலொழிய, அவளுக்கு நிம்மதி ஏற்படாது என்று தோன்றியது.

குளிர்காலத்தின் மத்தியில் ஒருநாள், தன்னுடைய மருமகனுடைய படிப்புகளைக் கவனித்துக்கொண்டு படிப்பு அறையில் இருந்தபோது, ராஸ்டோவ் வந்திருக்கிறார் என்று அவளிடம் தெரிவிக்கப்பட்டது. தன்னுடைய பரபப்பைக் காட்டக்கூடாது என்று ஒரு உறுதியான தீர்மானம் கொண்டு அவள் குமாரி பௌரியனை வரவழைத்தாள். அவளோடு வரவேற்பு அறைக்குச் சென்றாள்.

நிக்கலஸின் முகத்தை அவள் முதலில் பார்த்தபோதே, மரியாதைக்காகத்தான் அவர் இப்போது வந்திருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்டாள்; ஆகவே, அவள் அவர் என்ன தொனியில் பேசினாரோ, அதே தொனியில் பதில் சொல்லுவது என்று உறுதி கொண்டாள்.

கோமகளின் சௌக்கியத்தைப் பற்றியும், அவர்கள் இருவருக்கும் பொதுவான நண்பர்களைப்பற்றியும், கடைசியாக வந்த யுத்த செய்திகளைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். மரியாதைக் காக குறைந்தது பத்து நிமிஷங்களாவது, வீட்டிற்குப் போனால் பேசிக்கொண்டிருக்க வேண்டும். அந்த நேரமானவுடன் வந்தவர் எழுந்து போகலாம். ஆகவே ராஸ்டோவும் எழுந்து விடைபெறுவதற்காகத் தயாரானார்.

குமாரி பௌரியனுடைய உதவியைக் கொண்டு, இளவரசி மேரி அந்த உரையாடல் முழுவதையும் திறமையாக நடத்தி வந்தாள். ஆனால், அவர் எழுந்தபோது அந்தக் கடைசி சிமிஷத்தில் அவளுக்குப் பிடித்தமில்லாத விஷயங்களைப்பற்றிப் பேசியதனால் அவள் மிகுந்த களைப்படைந்துபோனாள். வாழ்க்கையிலுள்ள மகிழ்ச்சியானது அவளக்கு மட்டும் கிடைக்காமல் போனது ஏன் என்ற கேள்வி, அச்சமயம் அவள் உள்ளத்தில் நிறைந்திருந்தது; ஆகவே, அதனால் ஏற்பட்ட நினைப்புகளினால் அவள் பராக்குப் புத்தியோடு அசையாமல் உட்கார்ந்திருந்தாள்; அவளுடைய பிரகாசமான கண்கள் அவர் எழுந்ததைக் கவனிக்காமல், தனக்கு நேராகக் குத்திட்டுப் பார்த்துக் கொண்டிருந்தன.

நிக்கலஸ் அவளை நோக்கினார். அவளுடைய பராமுகத்தை தாம் கவனிக்காதது போலக் காட்ட விரும்பினார். குமாரி பௌரியனிடம் சில வார்த்தைகள் சொல்லிவிட்டு, மீண்டும் இளவரசியை நோக்கினார் அவள் இன்னமும் அசையாமல் இருந்தாள். அவளுடைய அமைதியான முகத்தில் துன்பத் தோற்றம் விளங்கிக் கொண்டிருந்தது. அவர் திடீரென்று அவளுக்காக வருத்தமடைந்தார். அவளுடைய முகத்தில் ஏற்பட்ட வருத்தத்திற்கு அவர்தான் காரணமாய் இருக்கலாம் என்று நினைத்தார். ஆகவே, அவளுக்கு இனிமையாக எதையாவது சொல்லி, அவளுக்கு உதவி செய்ய

விரும்பினார். ஆனால், என்ன சொல்லுவது என்பது அவருக்குத் தெரியவில்லை.

''போய் வருகிறேன், இளவரசியே'' என்று அவர் சொன்னார்.

அவள் பதறி முகம் சிவந்து, பெருமூச்சு விட்டாள்.

''ஓ, என்னை மன்னிக்க வேண்டும்'' என்று தூக்கத்திலிருந்து விழித்தவள் போல அவள் சொன்னாள். ''அதற்குள் புறப பட்டுவிட்டீரா, கோமகனே! நல்லது, அப்படியானால் போய் வாரும். ஓ, கோமகளுக்கு நாள் ஒரு தலையணை கொடுக்கிறேன்.''

''ஒரு நிமிஷம் பொறுங்கள். நானே போய் எடுத்து வருகிறேன்'' என்று குமாரி பௌரியன் சொல்லிவிட்டு, அந்த அறையை விட்டு வெளியே போனாள்.

அவர்கள் இருவரும் மௌனமாய் இருந்தார்கள். இடை யிடையே ஒருவரையொருவர் நோக்கினார்கள்.

''ஆமாம், இளவரசியே'' என்று கடைசியாக நிக்கலஸ் ஒரு சோகமான புன்னகையோடு சென்னார்: ''பாகுசாராவா என்ற இடத்தில் நாம் சந்தித்த பின்பு, வெகு காலமாய் விட்டதாகத் தோன்றவில்லை. ஆனால், அதற்குப் பின்னால் எவ்வளவு காரியங்கள் நடந்து விட்டன! அச்சமயத்தில் நாம் எல்லோரும் எப்பேர்ப்பட்ட கஷ்டங்களில் அகப்பட்டுக் கொண்டிருந்தோம் என்று தோன்றியது! என்றாலும் அம்மாதிரி ஒரு காலம் வரவேண்டும் என்பதுதான் எனக்கு ரொம்பப் பிரியமாய் இருக்கிறது...ஆனால் அதைத் திரும்பக் கொண்டு வர முடியாது.''

இளவரசி மேரி உன்னிப்பாக தன்னுடைய பிரகாசமான கண்களினால் அவடைய கண்களை, அவர் இம்மாதிரி பேசியபோது நோக்கினாள். அவருடைய வார்த்தைகளுக்குப் பின்னால் மறைந்திருக்கும் அர்த்தத்தைக் கண்டு பிடிப்பதற்கு முயற்சி செய்வதைப் போலக் காணப்பட்டாள். அந்த அர்த்தம் அவள்மீது அவர் கொண்டுள்ள உணர்ச்சியைக் காட்டுவதாய் இருக்கலா மென்று நினைத்தாள்.

''ஆமாம், ஆமாம். ஆனால் கடந்த காலத்தைப்பற்றி வருத்தப்படுவதற்கு உமக்குக் காரணம் எதுவுமில்லை, கோமகனே. உம்முடைய் தற்கால வாழ்வை நான் அறிந்து கொண்டிருக் கிறபடியால், நீர் அதை மகிழ்ச்சியோடு வரவேற்பீர் என்று நினைக்கிறேன். ஏனெனில், நீர் அவ்வளவு தூரம் உம்முடைய வாழ்க்கையில் உம்முடைய சுயநலத் தியாகத்தைக் காட்டியிக்கிறீர்...''

''உன்னுடைய புகழ்ச்சியை நான் ஒப்புக்கொள்ள முடியாது'' என்று அவர் வேகமாக இடைமறித்தார். ''அதற்கு மாறாக, நான்

எப்போதுமே என்னைக் கண்டித்துக் கொண்டேயிருக்கிறேன்... ஆனால் இது சுவாரஸ்யமாகவோ, அல்லது மகிழ்ச்சியாகவோ உள்ள ஒரு விஷயம் அல்ல.''

அவருடைய முகம், மீண்டும் அவருடைய பழைய கனிவற்ற கண்டிப்பான தோற்றத்தோடு விளங்கியது. ஆனால் தான் எந்த மனிதரை நன்றாய் அறிந்து, யார்மீது காதல் கொண்டிருக்கிறாளோ, அவரை, அந்த உண்மையான மனிதரை, இப்பொழுது ஒரு வினாடிதான் பார்த்ததாக இளவரசி நினைத்தாள். இதே மனிதரிடம் தான் இப்பொழுது பேச ஆரம்பித்தாள்.

''நான் இதைச் சொல்லுவதற்கு நீர் அனுமதிப்பீர் என்று நினைக்கிறேன். நான் உமக்கும் உம்முடைய குடும்பத்திற்கும் வெகு சமீபமாக நெருங்கிவந்தேன். என்னுடைய அனுதாபத்தை நீர் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டீர் என்று நினைத்தேன். ஆனால் நான் நினைத்தது தவறு'' என்று அவள் சொன்னாள். அவளுடைய குல் நடுங்கியது. தன்னைச் சமாளித்துக்கொண்டு மேலும் பேசினாள். ''காரணம் என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் நீர் முன்பெல்லாம் வேறு மாதிரியாக இருந்தீர்...'' என்று அவள் பேசிமுடித்தாள்.

''ஏன் என்பதற்கு ஆயிரம் காரணங்கள் இருக்கின்றன'' என்று அவர் பதில் சொன்னார். 'ஏன்' என்கிற வார்த்தையை அவர் அழுத்திச் சொன்னார். ''வந்தனம், இளவரசியே, சில வேலைகளில் அது கஷ்டமாய்த்தான் இருக்கிறது'' என்று அவர் மிருதுவாகச் சொன்னார்.

''ஆகவே, அதுதான் காரணம்! அதுதான் அதற்குக் காரணம்!'' என்ற ஒருகுரல், இளவரசி மேரியின் உள்ளத்தில் ஒலித்தது. ''இல்லை, அந்த மகிழ்ச்சியும் அன்பும், அந்தக் கபடமற்ற பார்வையும், அந்த லட்சணமான தோற்றமும் மட்டுமல்ல; அவற்றை மட்டும் நான் காதலிக்கவில்லை. அவருடைய கண்ணியமான, உறுதியான சுயநலத்தியாக உணர்ச்சியை நான் ஊடுருவிப் பார்த்தேன்'' என்று அவள் தனக்குள் சொல்லிக்கொண்டாள். ''ஆமாம், அவர் இப்போது ஏழையாய் இருக்கிறார். நான் பணக்காரியாய் இருக்கிறேன்...ஆமாம், அதுதான் ஒரே காரணம்...ஆமாம், அம்மாதிரி எல்லாம் இல்லாமல் இருந்தால்...'' அவருடைய பழைய கனிவை அவள் நினைவு கூர்ந்தபோது, இப்போதுள்ள அவருடைய துக்கமான முகத்தை அவள் பார்த்தபோது, அவளுக்குத் திடீரென்று அவருடைய கனிவற்ற பார்வையின் காரணம் புரிந்தது.

''ஆனால், என்ன? கோமகனே, ஏன்?'' என்று அவள் அவளையறியாமலேயே அவரிடம் நெருங்கி கதறினாள். ''என்ன? எனக்குச் சொல்லும், நீர் எனக்குச் சொல்லியாக வேண்டும்.''

அவர் அமைதியாக இருந்தார்.

''நீர் சொல்லும், 'ஏன்' என்ற வார்த்தையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை, கோமகனே'' என்று அவள் மேலும் பேசினார். ஆனால் அது எனக்கு மிகவும் கஷ்டமாய் இருக்கிறது...அதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஏதோ ஒரு காரணத்திற்காக நம்முடைய பழைய நட்பை நீர் என்னிடமிருந்து பறிக்க விரும்புகிறீர். அதுதான் என்னை வருத்துகிறது'' என்று அவள் சொன்னாள். இச்சமயத்தில் அவளுடைய கண்களில் கண்ணீர் நிறைந்தது. அவளுடைய குரலும் நடுங்கியது. ''வாழ்க்கையில் மகிழ்ச்சியை நான் வெகு சொற்பமாய்த்தான் அனுபவித்து இருக்கிறேன். ஆகவே, ஒவ்வொரு கஷ்டமும் தாங்க முடியாதபடி பெரிதாய்த் தோன்றுகிறது...என்னை மன்னித்துவிடும். போய் வாரும்'' என்று அவள் சொல்லியதும், திடீரென்று அவள் அழ ஆரம்பித்தாள். அந்த அறையை விட்டு வேகமாக வெளியே புறப்பட்டாள்.

''இளவரசியே, கடவுளுக்காக'' என்று அவர் கூச்சலிட்டு, அவள் போவதை நிறுத்த முயற்சித்தார். ''இளவரசியே...''

அவள் திரும்பினாள். சில வினாடிகள் அவர்கள் இருவரும் மௌனமாக ஒருவர் கண்களை மற்றவர் கண்களால் நோக்கினார். எது அசாத்தியமாகவும் வெகு தூரத்தில் இருப்பதாகவும் அவர்களுக்குத் தோன்றியதோ, அது திடீரென்று சாத்தியமானதாகவும், தவிர்க்க முடியாததாகவும், வெகு சமீபத்தில் இருப்பதாகவும் மாறிவிட்டது.

## 7

1813-ஆம் வருஷத்தில் குளிர்காலத்தில் இளவரசி மேரியை நிக்கலஸ் கல்யாணம் செய்து கொண்டார். அதன் பின்னால் பால்ட் ஹில்ஸ் மாளிகைக்குத் தம்முடைய மனைவியுடனும், தாயாருடனும், சோனியாவுடனும் சென்று வசிக்க ஆரம்பித்தார்.

நான்கு வருஷங்களில் அவருக்கு இருந்த கடன்களை, அவருடைய மனைவியின் சொத்துக்க்ளில் எதையும் விற்காமல் அடைத்துவிட்டார். அவருடைய மைத்துனர் ஒருவர் இறந்துபோனதினால், அவருக்குச் சிறிது சொத்துக் கிடைத்தது. அதிலிருந்து பீயருக்குக் கொடுக்கவேண்டிய கடனையும் அடைத்துவிட்டார்.

மூன்று வருஷங்களில், அதாவது 1802-ஆம் வருஷத்தில் அவருடைய காரியங்கள் மிகுந்த திறமையாக நிர்வாகம் செய்து வந்தபடியால், பால்ட்ஹில்ஸுக்கு பக்கத்திலிந்த ஒரு சிறிய எஸ்டேட்டை அவரால் விலைக்கு வாங்க முடிந்தது. அதன் பின்னால், அவருக்குப் பிரியமான கனவாய் இருந்துவந்த அந்த அட்ராட்னோ என்ற எஸ்டேட்டை மீண்டும் விலைக்கு வாங்குவதற்கு பேச்சுவார்த்தைகள் நடத்திக்கொண்டிந்தார்.

அவசியம் ஏற்பட்டதனால் விவசாயப் பண்ணையை ஆரம்பித்தார், அதில் அவர் மிகவும் சிரத்தை காட்டி, அவருடைய அக்கறை முழுவதையும் அதிலேயே செலுத்தினார். இப்போது நிக்கலஸ் ஒரு சாதாண விவசாயியாக ஆகிவிட்டார். அவர் புதிய முறைகள் எதையும் விரும்புவதில்லை. முக்கியமாக அப்பொழுது பழக்கத்திற்கு வந்து கொண்டிருந்த ஆங்கில முறைகளை அவர் விரும்புவதில்லை. எஸ்டேட் நிர்வாகத்தைப் பற்றிய சாஸ்திரங்களைக் கண்டு அவர் சிரிப்பதுண்டு. தொழிற்சாலைகள் அவருக்குப் பிடிப்பதில்லை. விலையுயர்ந்த உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வதிலோ, அல்லது விலையுயர்ந்த விதைகளை வாங்குவதிலோ அவருக்குப் பிரியமில்லை. அவர் எஸ்டேட்டில் ஒரு குறிப்பிட்ட வேலையை மட்டும் அவர் கவனிப்பது என்பது கிடையாது. அவருடைய எஸ்டேட் முழுவதும் முழு உருவத்தில் அவருடைய மனக்கண் முன்பு எப்போதும் இருந்தகொண்டே இருக்கும். அவருடைய பார்வையில் முக்கியமாக அந்தப் பூமியில் உள்ள விளையும் சத்து எவ்வளவு, அல்லது காற்றிலுள்ள சத்து எவ்வளவு, அல்லது உரத்தில் உள்ள சத்து எவ்வளவு, அல்லது விசேஷமாக உழுவதில் என்ன பலன் என்பதெல்லாம் படுவதே இல்லை. அந்த உரத்தையோ, நிலத்திலுள்ள சத்துக்களையோ, உழவுகளையோ பலன் பெறக்கூடிய விதமாக செய்துவரும் அந்த விவசாய தொழிலாளியே, அவருடைய மனக்கண் முன்பு எப்பொழுதும் தோன்றிக் கொண்டிருப்பான். முதலில் நிக்கலஸ் விவசாயம் செய்ய ஆரம்பித்தபோது, விவசாயத்தைப் பற்றிய பல பிரிவுகளை அவர் அறிந்துகொள்ள ஆரம்பித்தபோது, அங்கிருந்த அடிமை மீதுதான் அவருக்கு அதிகமாகக் கவனம் திரும்பியது. விவசாயி என்பவன் ஒரு ஆயுதம் மட்டுமல்ல; விவசாயத்தைப் பற்றி முடிவு செய்ய வேண்டிய நீதிபதியும் ஆவான் என்று அவருக்குத் தோன்றியது. முதலில் அடிமைகள் வேலை செய்வதை கவனித்தார். அவர்களுடைய நோக்கம் என்ன, அவர்கள் எதை நல்லது, எதைக்கெடுதியானது என்று சொல்கிறார்கள் என்பதைக் கவனித்தார். அவர்களுக்கு உத்தரவு கொடுக்கிற மாதிரி அவர்

பாசாங்கு செய்தாரேயொழிய, உண்மையில் அவர்களுடைய முறைகளை அறிந்துகொள்வதிலேயே அவருடைய கவனம் இருந்தது. அவர்களுடைய பேசும் முறையையும், அவர்கள் எது நல்லது, எது கெட்டது என்று அவர்கள் செய்யும் முடிவையும் கற்றுக் கொள்வதில் அவர் கவனமாய் இருந்தார். விவசாயிகளின் சிரத்தைகளையும் ஆசைகளையும் அவர் அறிந்த பின்பு, அவர்களுடைய மொழியிலேயே பேசுவதற்கும் படித்துக் கொண்டார். அவர்களுடைய வார்த்தைகளில் மறைந்திருக்கும் பொருள்களை அறிந்துகொண்டார். அவர்களைப்போலவே அவரும் இருப்பதாக உணர்ந்தார். இவற்றையெல்லாம் தெரிந்துகொண்ட பின்புதான் அவர் தைரியமாக தமது அடிமைகளை வேலை வாங்க ஆரம்பித்தார். அதாவது, விவசாயி என்ற முறையில் தமது கடமைகளைச் செய்ய ஆரம்பித்தார். அந்த விதமாக நிக்கலஸ் செய்து வந்த நிர்வாகமானது பிரமாதமான பலன்களைக் கொடுத்தது.

அவர் எஸ்டேட் நிர்வாகத்தை மேற்கொண்ட பின்பு, அவருக்கிருந்த உள்ளொளியின் உதவியினால் அந்த கிராமத்திற்கு ஒரு மேஸ்திரியையும், ஒரு தலைவனையும், ஒரு பிரதிநிதியையும் நியமித்தார். அங்கிருந்த அடிமைகளைக் கொண்டு அம்மாதிரி அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்கும்படி சொல்லியிருந்தால், ராஸ்டோவ் நியமித்த பேர்வழிகளையே அவர்களும் தேர்ந்தெடுத்திருப்பார்கள். அந்தப் பதவிகளையெல்லாம் வேறு யாருக்கும் மாற்றாதாய் பார்த்துக்கொண்டார். உரத்தின் தன்மையைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்கு முன்பாக, அவரது வரவு செலவைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முன்பாக, விவசாயிகள் ஒவ்வொருவருக்கும் எத்தனை ஆடுமாடுகள் இருக்கின்றன என்பதைக் கண்டுபிடித்தார். அவற்றை சகலவிதங்களிலும் விருத்தி செய்வதற்கு அவர் ஏற்பாடு செய்தார். விவசாயிகளின் குடும்பங்களில் அதிகமானபேர்கள் சேர்ந்து வாழும்படி செய்தார். விவசாயிகளின் குடும்பங்கள் சிதறிப்போய்விடாமல் செய்தார். சோம்பேறிகளாய் இருந்தவர்களிடமும், ஒழுக்கங்கெட்டவர்களிடமும், சக்தியில்லாதவர்களிடமும் அவர் கடுமையாக நடந்துகொண்டார். அவர்களை தம்முடைய விவசாயப் பண்ணையிலிருந்து வெளியேற்றுவதற்கும் முயற்சி செய்தார். விவசாயிகளுடைய விதைப்பிலும் அலுப்பிலும் தம்முடையதைப் போலவே அவர் கவனமாக நடந்துகொண்டார். ஆகவே, அவரைப்போல சீக்கிரமாக விதைத்து, சீக்கிரமாக அறுவடை செய்து, தகுந்த பலனை அடைந்த மிராகதார்கள் மிகவும் சொற்பம்.

வீட்டு வேலை செய்யும் அடிமைகளிடம் தலையிடுவதில் அவருக்குப் பிரியமே கிடையாது. அவர்களைச் சோம்பேறிகள்

என்று அவர் அழைப்பது வழக்கம். அவருடைய இளக்காரத்தினால் அந்த வேலை செய்யும் அடிமைகள் கெட்டுப்போனார்கள் என்று மற்றவர்கள் குறைகூறினார்கள். ஒரு வீட்டு வேலை அடிமையைப்பற்றி ஏதாவது தீர்மானம் செய்யவேண்டியிருந்தால், முக்கியமாக அவனைத் தண்டிக்க வேண்டியிருந்தால், அவர் எப்போதுமே மனம் குழம்பி இருப்பார். அதைப்பற்றி வீட்டிலுள்ள ஒவ்வொருவரிடமும் ஆலோசனை செய்வார். நிலத்தில் வேலை செய்யும் ஆட்களுக்குப் பதிலாக, வீட்டு வேலை செய்யும் அடிகளை ராணுவ சேவையில் சேர்த்துவிடுவது சாத்தியமாய் இருந்தால், அதைச் செய்வதில் கொஞ்சங்கூட அவர் தயக்கம் கொள்ளுவதில்லை. விவசாயிகளிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதில் அவர் எப்போதும் சந்தேகம் கொண்டதில்லை. ஏனெனில், அவருடைய ஒவ்வொரு தீர்மானத்தையும் அந்த விவசாயிகள் எல்லோரும் ஆதரிப்பார்கள் என்பதை அவர் அறிவார்.

அவர் தமக்கு அப்படிச் செய்யவேண்டும் என்று தோன்றுவதற்காக ஒருவனிடம் கடுமையாக நடந்துகொள்ளவோ, அல்லது ஒருவனை தண்டிக்கவோ, அல்லது ஒருவனுக்கு வேலையை சுலபமாக்கவோ, அல்லது நன்கொடை கொடுக்கவோ அவர் சுலபமாகச் சம்மதிப்பதில்லை. அவர் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக்கூடாது என்பதைப்பற்றி எந்த அளவுகோலால் தீர்மானிக்கிறார் என்று அவரால் சொல்ல முடியாது; ஆனால் அந்த அளவு கோலானது அவருடைய மனதில் உறுதியாகவும் வளைந்து கொடுக்காததாகவும் இருந்து வந்தது.

அவர் ஒரு காரியம் நடக்கவில்லையென்பதற்கோ, அல்லது ஒழுங்கு தவறாக நடந்தது என்பதற்கோ அடிக்கடி எரிச்சல் கொள்வதுண்டு. ''நம்முடைய ருஷ்ய விவசாயிகளை வைத்துக் கொண்டு ஒருவர் என்ன செய்ய முடியும்?'' என்று அச்சமயங்களில் அவர் சொல்வதுண்டு, அவரால் அவர்களிடம் வேலை வாங்க முடியாது என்று அவர் நினைத்து வந்தார்.

இருந்தாலும், அவர் ''நம்முடைய ருஷ்ய விவசாயிகள்'' மீது பிரியம் கொண்டிருந்தார். அவர்களுடைய வாழ்க்கையிலும் அவர் மனப்பூர்வமாகப் பிரியம் கொண்டிருந்தார். அதனால், நல்ல பலன் கொடுக்கக்கூடிய அவர்களுடைய விவசாய வழிகளை அவர் நன்றாக அறிந்து கொண்டிந்தார்.

தன்னுடைய கணவருக்கு விவசாயத்தில் இருக்கிற ஆசையைக் கண்டு கோமகள் மேரி பொறாமை கொள்வதுண்டு. அந்த ஆசையில், தான் பங்கு கொள்வதற்கில்லையே என்று வருந்தி வந்தார். ஆனால், அவருக்கு அந்த உலகத்தில் ஏற்படும் மகிழ்ச்சிகளையோ, அல்லது எரிச்சல்கள்ளையோ அவளால் புரிந்து கொள்ள

முடியவில்லை. அந்த உலகம் அவளுக்குப் பழக்கமில்லாததாகவும், தூரத்தில் இருப்பதாகவும் தோன்றியது. அதேமாதிரி அதிகாலையில் எழுந்து வயல்களை காலை முழுவதும்ச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்தபின்போ, அல்லது களத்துமேட்டிற்கு போய் வந்த பின்போ, அல்லது உழுவதற்கோ, விதைப்பதற்கோ, அனுப்பதற்கோ போய் வந்த பின்போ, அவளுடன் அவர் தேநீர் பருகும்போது அவ்வளவு பரபரப்பாகவும் அவ்வளவு பரபரப்பாகவும் மகிழ்ச்சியாகவும் ஏன் காணப்படுகிறார் என்பதை அவளால் அறிந்துகொள்ள முடிய வில்லை. மாத்தியோ எர்மைஷின் என்ற விவசாயி மிகுந்த சௌகர்யமான நிலைமையில் இருப்பவன். அவன் அவனுடைய குடும்பத்தாரோடு தானியங்களை வீட்டில் கொண்டுவந்து சேர்ப்பதற்கு இரவு முழுவதும் வேலைசெய்வான். அவனுடைய சிக்கனமான விவசாயத்தைக் கண்டு ராஸ்டோவ் மிகுந்த மகிழ்ச்சிகொண்டு புகழ்வதுண்டு. எதற்காக அம்மாதிரி அவர் மகிழ்ச்சி கொள்கிறார் என்பதையும், அவளால் அறிய முடியவில்லை. மற்றவர்கள் எல்லாரும் அறுவடை செய்வதற்கு ஆரம்பிப்பதற்கு முன்பாகவே நிக்கலஸ் அவறுவடையை முடித்து தானியங்களை வீட்டில் கொண்டு வந்து சேர்த்திப்பார். இதைக் கண்டு, நிக்கலஸ் எதற்காக மகிழ்ச்சி கொள்ளுகிறார் என்பதையும் அவளால் அறிய முடியவில்லை. ஓட்ஸ்தானியப் பயிர்கள் இலைவிட்டு தளிர்த்து தண்ணீருக்காக ஏங்கி நிற்கும்போது மழை பெய்தால், அதைக் கண்டு நிக்கலஸ் சந்தோஷப்படுவதுண்டு. அந்த மழையை மகிழ்ச்சியோடு கண்சி மிட்டிப் பார்ப்பதற்காக வராந்தாவில் போய் அவர் நிற்பதுண்டு. அவ்வளவு மகிழ்ச்சி அவருக்கு ஏற்படக்காரணம் என்ன என்பதையும் அவளால் அறிய முடியவில்லை. அறுவடை சமயத்தில் மழையைப் பொழிய வைக்கப்போவதைப்போல மேகங்கள் கவிந்துகொண்டிருக்கும். அச்சமயத்தில் ஒரு காற்று வந்து அந்த மேகங்களை அப்பால் நகர்த்திக்கொண்டு போய்விடும். அப்பொழுதெல்லாம் அவர் வயிலிருந்து திரும்பி வரும்போது முகம் சிவந்து வியர்த்துப் போயிருப்பார். தமது கைகளைத் தேய்த்துக் கொண்டு, ''நல்லது, இன்னும் ஒரு நாள் மழை வராமல் இருந்தால் போதும். என்னுடைய தானியங்களையும், விவசாயிகளின் தானியங்களையும் பந்தோபஸ்தாக களஞ்சியங்களில் சேர்த்து விடலாம்'' என்று அவர் சொல்லுவதுண்டு. இம்மாதிரி எதற்காக அவர் நடந்துகொள்ளுகிறார் என்பதையும் அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை.

அவர் எப்பொழுதுமே அவளுடைய விருப்பங்களை நிறைவேற்றக் கூடியவர். அப்படியிருந்தும், அவர் அன்பான உள்ளம் கொண்டவராய் இருந்தும், யாராவது சில விவசாயிகள்

கஷ்டமான வேலைகளிலிருந்து, தங்களுக்கு விலக்கு அளிக்கவேண்டுமென்று மனுக்கள் கொண்டுவருவதாய் இருந்தால், அவற்றை அவள் நிக்கலஸிடம் கொடுக்கும்போது மட்டும், அவர் ஏன் அவ்வளவு கோபம் கொள்ளுகிறார் என்பதையும் அவளால் அறிந்து கொள்ளமுடியவில்லை. அந்த அன்பான நிக்கலஸ், அம்மாதிரி விஷயங்களில் அவளுடைய வேண்டுகோளை விடாப்பிடியாக ஏன் மறுக்கவேண்டும் என்பதையும், அவளுடைய வேலை யல்லாத இம் மாதிரி விஷயங்களில் அவள் தலையிடக்கூடாது என்று கோபமாக ஏன் சொல்லுகிறார் என்பதையும் அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவர் வேறு ஒரு தனி உலகத்தைக் கொண்டிருக்கிறார் என்றும், அதன் மீது மிகுந்த ஆவலோடு அன்பு கொண்டிருக்கிறார் என்றம், அதனுடைய விதிகளை அறிந்துகொள்ள முடியவில்லை என்றும் அவள் உணந்தாள். சில சமயங்களில் அவரைப் புரிந்து கொள்ளுவதற்காக, அவருடைய அடிமைகளுக்கு அவர் செய்துவரும் நல்ல வேலைகளைப் பற்றி அவள் பேசுவண்டு. அச்சமயம் அவர் எரிச்சல் கொண்டு பின்வருமாறு பதில் சொல்லுவார்: ''கொஞ்சங்கூட கிடையாது. அந்த நினைப்பே என் மனதில் தோன்றியது இல்லை. அவர்களுடைய நன்மைக்காக நான் அதைச் செய்யமாட்டேன். அம்மாதிரி பேசுவதெல்லாம், அண்டைவிட்டாருக்கு நன்மை செய்ய வேண்டும் என்று பேசுவதெல்லாம் வெறும்பாட்டிக் கதை, நம்முடைய குழந்தைகள் பிச்சை எடுக்கும்படி நேரிடக் கூடாது என்பது ஒன்றுதான் நாம் விரும்புவதாகும். நான் உயிரோடு இருக்கும்போதே நம்முடைய காரியங்களையெல்லாம் ஒழுக்காக அமைத்து விடவேண்டும்; அவ்வளவுதான். அதைச் செய்து முடிப்பதற்கு ஒழுங்கும் கண்டிப்பும் அத்தியாவசியமாய் இருக்கின்றன...அதைப் பற்றி அவ்வளவு தான்'' என்று அவர் கூறிவிட்டு, வேகமாக தமது விரல்களை முஷ்டி கூட்டினார். ''விவசாயியானவன் நிர்வாணமாகவும் பட்டினியாகவும், இருந்து அவனுடைய குதிரையும் பரிதாபமாய் இருந்தால், அவன் அவனுக்கோ அல்லது எனக்கோ எவ்விதமான நன்மையும் செய்ய முடியாது. அவ்வளவு தான் விஷயம்.

நிக்கலஸ் செய்தவையெல்லாம் பலன் கொடுத்தன. ஏதோ தர்மத்திற்காகப் பிறருக்கு நன்மை செய்வதைப் போன்ற நினைப்புக்கு அவர் இடம் கொடுப்பதில்லை. அதுதான் அவருடைய வெற்றிக்குக் காரணமாகும். அவருடைய செல்வம் வேகமாகப் பெருகிறது. பக்கத்து எஸ்டேட்டுகளைச் சேர்ந்த அடிமைகள் அவரிடம் வந்து தங்களையும் அவர் விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும் என்று கெஞ்சுவார்கள். அடிமைகளின்

உலகத்தில், அவர் இறந்து வெகுகாலம் ஆனபின்பும்கூட, அவரை பயபக்தியோடு போற்றி வந்தார்கள். ''அவர்தான் சரியான எஜமானர்...விவசாயிகளின் தேவைகளையே முதலில் கவனிப்பார். அதன் பின்னால்தான் தம்முடைய தேவைகளை அவர் கவனிப்பார். யாரும் அவரிடம் தலையிட முடியாது. அவர்தான் உண்மையான எஜமானர்'' என்று சொல்லிவந்தார்கள்.

## 8

அவர் நிர்வாகம் செய்து வந்த விஷயங்களில், ஒரு காரியம் நிக்கலஸுக்குச் சில சமயங்களில் கவலையைக் கொடுத்து வந்தது. அதாவது அவருடைய பழைய குதிரைப் படை சுபாவமானது, அவருக்குத் திடீரென்று கோபம் ஏற்படும்படி செய்து, பலாத்காரத்தை உபயோகிக்கும்படி தூண்டுகிறது. ஆரம்பித்தில், இம்மாதிரி செய்கைகளில் கண்டிக்கப்படக் கூடியது எதுவுமில்லையென்று அவர் நினைத்தார். ஆனால் அவருக்கு திருமணம் ஆகி இரண்டாவது வருஷத்தில், அம்மாதிரி தண்டனை கொடுப்பதைப் பற்றி அவர் கொண்டிருந்த கொள்கை திடீரென்று மாறியது.

ஒரு வசந்தகாலத்தில் பாகுசாராவா என்ற இடத்திலுள்ள கிராமத் தலைவனை அழைத்துவரும்படி சொன்னார். டிரான் இறந்துபோன பின்பு வேறு ஒருவன் அந்த வேலையைப் பார்த்து வந்தான். அவன் யோக்கிய மற்ற முறையில் நடந்ததாகவும், பல ஒழுங்கீனங்களைச் செய்ததாகவும், அவன் மீது குறை கூறினார்கள். நிக்கலஸ் வெளியே முற்றமண்டபத்திற்கு அவனிடம் கேள்விகள் கேட்பதற்காகப் போனார். அந்த கிராமத்தலைவன் சில பதில்களைச் சொன்ன பின்பு, திடீரென்று கூச்சல்களும், அடிக்கிற சப்தங்களும் கேட்டன. நிக்கலஸ் மத்தியான சாப்பாட்டிற்குத் திரும்பி வந்தபோது, தமது மனைவியிடம் சென்றார். அவள் தனது பின்னால் வேலையைக் குனிந்து செய்து கொண்டிருந்தாள். அவளிடம் அன்று காலையில் தாம் செய்து வேலைக்காக வழக்கம்போல சொல்ல ஆரம்பித்தார். அப்படிப் பேசியபோது பாகுசாராவா கிராமத் தலைவனைப் பற்றியும் அவர் பேசினார், கோமகள் மேரிக்கு திடீரென்று முகம் சிவந்து உடனே வெளிறியது. அவள் மீண்டும் தன்னுடைய தலையைக் கவிழ்த்து வைத்துக்கொண்டு, உதட்டைக் கடித்துக்கொண்டிருந்தாளே யொழிய, அவளுடைய கணவருக்குப் பதில் எதுவும் சொல்லவில்லை.

''அவன் அப்பேர்ப்பட்ட அகம்பாவம்பிடித்த அயோக்கியன்'' என்று கூறினார். அவனைப்பற்றி பேசும்போதே அவருக்கு அதிகமாகக் கோபம் வந்தது. ''அவன் குடித்து இருந்ததாகவும், அவனுக்குத் தெரியாது என்றும் என்னிடம் சொல்லியிருந்தால்...

ஆனால், என்ன விஷயம் மேரி?'' என்று அவர் திடீரென்று கேட்டார்.

கோமகள் தனது தலையை நிமிர்த்திப் பேச முயற்சித்தாள். உடனே வேகமாக மீண்டும் தலையைத் தொங்கவிட்டு, உதடுகளைச் சுளித்தாள்.

''ஏன்? என்ன வஷியம். எனது அன்பே?''

கோமகள் மேரி அழகற்றவளாய் இருந்தபோதிலும், அவள் கண்ணீர் விடும்போது அழகாய்த் தோன்றினாள். வலியினால் அவள் எப்போதும் கதறியதில்லை. அல்லது எரிச்சலினாலும் அவள் கதறியது இல்லை. ஆனால் துக்கம் ஏற்படும்போதும், இரக்கம் ஏற்படும்போதுதான் அவள் கதறுவாள். அம்மாதிரி அழும்போது, அவளுடைய பிரகாசமான கண்கள், தடுக்க முடியாத ஒரு கவர்ச்சியைக் காட்டும்.

நிக்கலஸ் அவளுடைய் கையைப் பற்றியதும், அவளால் அதற்குமேல் தன்னை அடக்கிவைக்க முடியவில்லை. உடனே அழ ஆரம்பித்தாள்.

''நிக்கலஸ், நான் அதைப் பார்த்தேன்...அவன் மீது குற்றம் இருக்கிறது. ஆனால், நீர் ஏன்...நிக்கலஸ்?'' என்று அவள் சொல்லிவிட்டு, தன்னுடைய முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டாள்.

நிக்கலஸ் எதுவும் சொல்லவில்லை. அவருடைய முகம் சிவந்தது. அவர் அவளை விட்டு எழுந்து, அந்த அறையில் மேலும் கீழும் உலாவினார். அவள் எதற்காக அழுகிறாள் என்பதை அவர் புரிந்து கொண்டார். ஆனால் அவருடைய உள்ளத்தில் அவள் சொல்லுவதை அவரால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. அவர் அவருடைய குழந்தைப் பருவத்திலிருந்தே தினசரி நடக்கும் ஒரு சாதாரண காரியம் என்று கருதி வந்ததை இப்பொழுது தவறு என்று ஒப்புக்கொள்ள முடியவில்லை. ''இது என்ன அபிமான உணர்ச்சி தானா, அல்லது முதிய மனைவிகளின் கதைகள்தானா, அல்லது அவள் சொல்வது சரியா?'' என்று தம்மையே அவர் கேட்டுக் கொண்டார். அந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு காணும் முன்பாக, அவளுடைய முகத்தை மீண்டும் அவர் நோக்கினார். அந்த முகத்தில் அன்பும் வேதனையும் நிறைந்திருந்தது. திடீரென்று அவள் சொல்வது சரிதான் என்றும், தாம் வெகுகாலமாக பாவம் செய்து வருவதாகவும் அவர் உணர்ந்தார்.

''மேரி'' என்று அவர் மிருதுவாக சொல்லி, அவளிடம் நெருங்கினார். ''இனி அம்மாதிரி ஒருக்காலும் நடக்காது. நான் வாக்குறுதி கொடுக்கிறேன்; ஒருக்காலும் நடக்காது'' என்று அவர்,

ஒரு சிறிய பையன் மன்னிப்புக் கேட்பதைப் போல, நடுங்கிய குரலில் திருப்பித் திருப்பிச் சொன்னார். கோமகளின் கண்களிலிருந்து கண்ணீர் வேகமாக இன்னும் வந்து கொண்டிருந்தது. அவள் அவருடைய கையை எடுத்து அதை முத்தமிட்டாள்.

''நிக்கலஸ், நீர் உம்முடைய மோதிரத்தை எப்போது உடைத்தீர்?'' என்று அவள் விஷயத்தை மாற்றுவதற்காகப் பேசினாள். அப்போதுதான் அவருடைய விரலில் அணிந்திருந்த மோதிரத்தை அவள் கவனித்தாள், அது செதுக்குச் சித்திரம் அமைந்த ஒரு மோதிரம்.

''இன்று காலையில்தான் –அதேசமயத்தில்தான். ஓ, மேரி, அதைப் பற்றி எனக்கு ஞாபகமூட்டாதே'' என்று சொல்லி, மீண்டும் முகம் சிவந்தார். ''நான் உனக்கு வாக்குறுதி கொடுக்கிறேன். மீண்டும் இனி அம்மாதிரி நடக்காது. இது எனக்கு எப்போதும் ஒரு ஞாபகார்த்தமாக இருக்கட்டும்'' என்று, தம்முடைய விரலில் கிடந்த உடைந்த கல் மோதிரத்தைக் காட்டினார்.

அதன் பின்னால் அவர் தம்முடைய கிராமத்து தலைவர்களிடமோ, அல்லது மேனேஜர்களிடமோ பேசும்போது, அவர் முகத்தில் திடீரென்று ரத்தம் பாய்ந்து, அவடைய கைகள் முஷ்டி சேருவது வழக்கம். உடனே அவர் தம்முடைய விரலில் உள்ள உடைந்த மோதிரத்தைப் பார்ப்பார். தம்முடைய பார்வையைக் கவிழ்த்துக் கொள்ளுவார். யார் அவருக்கு கோபத்தை உண்டு பண்ணினாரோ, அவரைப் பார்க்காமல் பார்வையைத் தவிர்ப்பார். ஆனால் கடந்த 12 மாதங்களில் ஒன்றிரண்டு தடவைகளில் அவர் தம்மை மறந்ததுண்டு. அச்சமயங்களில் அவர் தம்முடைய மனைவியிடம் சென்று, தாம் செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டு, இனிமேல் அம்மாதிரி நடக்காது என்றும், இதுதான் உண்மையில் கடைசி தடவையென்றும், மறுபடியும் வாக்குறுதி கொடுப்பார்.

''மேரி, நீ என்னை வெறுக்கலாம். நான் அதற்கு தகுதியுள்ளவன்தான்'' என்று அவர் சொல்வார்.

''நீர் போகலாம். உடனே போய்விடும். உம்மை உம்மால் அடக்க முடியவில்லை யென்றால், நீ போய் விடலாம்'' என்று அவள் வருத்தத்தோடு, தம்முடைய கணவரை இதப்படுத்தும் விதத்தில் பேசுவாள்.

அந்த மாகாணத்தில் உள்ள கனதனவான்கள் நிக்கலஸ்மீது மிகவும் மரியாதை காட்டினார்கள். ஆனால், அவர்மீது அவர்கள் பிரியமாய் இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. தம்முடைய

வகுப்பைச் சேர்ந்தவர்களின் நலன்களைப் பற்றி அவர் சிரத்தை கொள்வது இல்லை. அதனால் அவரை பெருமைக்காரர் என்று சிலரும், அறிவு இல்லாதவர் என்று சிலரும் நினைத்து வந்தார்கள். வசந்த காலம் முழுவதிலும், விதைப்பதிலிருந்து அறுவடை வரையில், அவருடைய பண்ணையில் உள்ள வேலைகளிலேயே அவர் சுறுசுறுப்பாய் இருந்து வந்தார். இலையுதிர் காலத்தில் அவர் அதேமாதிரி ஊக்கத்தோடு வேட்டையாடுவதில் ஈடுபட்டார். அந்த வேட்டையாடும் காலங்களில் ஒரு மாதமோ, அல்லது இரண்டு மாதங்களோ வீட்டிற்கு வராமலே இருப்பதுண்டு. குளிர் காலத்தில் அவர் தம்முடைய மற்ற கிராமங்களுக்குப் போய் அங்கே வாசித்துக் கொண்டிருப்பார். அவர் வாசிக்கிற புத்தகங்கள் அநேகமாக சரித்திரப் புத்தகங்களாக இருக்கும். அந்தப் புத்தகங்களை வாங்குவதற்கு வருஷம்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை அவர் செலவிடுவதுண்டு. சிந்தனைக்கு உகந்ததான ஒரு வாசகசாலைக்கு வேண்டிய புத்தகங்களை தாம் திரட்டி வருவதாக அவர் சொல்வதுண்டு. அவர் வாங்கிய புத்தகங்களை யெல்லாம் கண்டிப்பாகப் படிப்பது என்ற ஒரு வழக்கம் வைத்து வந்தார். மிகுந்த சிந்தனையான தோற்றத்தோடு தமது படிப்பு அறையில் அமர்ந்து வாசிக்க ஆரம்பிப்பார். அந்த வேலையை முதலில் ஒரு கடமையைப் போல அவர் மேற்கொண்டார். ஆனால் வழக்கத்தினால் அது அவருக்கு ஒரு விசேஷமான மகிழ்ச்சியையும், சிந்தனைக்குரிய விஷயத்தைப் படிப்பதற்கான பிரக்ஞையையும் கொடுத்து வந்தது. தமது அலுவல்கள் சம்பந்தமாகப் பிரயாணம் போவதாய் இருந்தால் ஒழிய, அநேகமாகக் குளிர்காலங்களில் அவர் தமது வீட்டிலேயே தம்முடைய குடும்பத்தோடு வசித்துவருவார். அவருடைய குழந்தைகளுக்கும், அந்தக் குழந்தைகளின் தாயாருக்கு முள்ள உறவுகளைப் பற்றி அவர் தெளிவாகக் கவனித்து வருவார். அவருக்கும் அவருடைய மனைவிக்குமுள்ள ஒற்றுமையானது வரவர நெருங்கி வந்தது. அவளிடம் அவர் நாள்தோறும் புதிய புதிதான ஆத்மீக பொக்கிஷங்களைக் கண்டு வந்தார்.

அவருக்குக் கல்யாணம் ஆனதிலிருந்து சோனியாவும் அவர் களுடனேயே வசித்து வந்தாள். தமக்கும் சோனியாவுக்குமிடையில் இருந்து வந்த விஷயங்களையெல்லாம் நிக்கலஸ் அவளுக்கு அதற்கு முன்பே சொல்லியிருந்தார். தம்மைத்தான் அதற்குக் குறைகூற வேண்டுமென்றும், அவள் சிலாக்கியமானவள் என்றும் அவர் சொல்லியிருந்தார். தம்முடைய மைத்துனியிடம் பிரியமாகவும் அன்பாகவும் இருக்கும்படி அவர் இளவரசி மேரியைக் கேட்டிருந்தார். சோனியாவுக்கு அவர் செய்த தவறை அவள் முற்றிலும் உணர்ந்தாள். தானே அதற்குக் காரணம் என்று

அவள் நினைத்தாள். தன்னுடைய செல்வம்தான் நிக்கலஸ் தன்னைக் கல்யாணம் செய்துகொள்வதற்கு காரணமென அவள் மனோராஜ்யம் செய்தாள். சோனியாவிடம் எவ்விதமான குற்றத்தையும் அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவள்மீது மிகுந்த பிரியமாக இருக்க அவள் முயற்சி செய்தாள். என்றாலும், அடிக்கடி அவள்மீது இளவரசி மேரிக்கு துவேஷம் ஏற்பட்டு வந்தது. அதை அவளால் அடக்க முடியவில்லை.

ஒரு தடவை, அவள் தன்னுடைய சிநேகிதியான நட்டாஷாவிடம் சோனியாவைப் பற்றியும், அவருக்குத்தான் செய்த அநீதியைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தாள்.

''சுவிசேஷங்களை நீ ஏராளமாக வாசித்திருக்கிறாய். சோனியாவுக்குப் பொருத்தமானதாக அதிலே ஒரு வாசகம் இருக்கிறது'' என்று நட்டாஷா சொன்னாள்.

''என்ன?'' என்று ஆச்சரியத்தோடு கோமகள் மேரி கேட்டாள்.

''அது இருக்கிறவளிடம் கொடுக்கப்படும். அது இல்லாதவளிடம் எடுத்துக் கொள்ளப்படும்'' என்ற வாக்கியம் உனக்கு நினைவு இருக்கிறதா? அவளிடம் அது இல்லை. ஏன் என்பது எனக்குத் தெரியாது. ஒருவேளை அவளிடம் தற்பெருமை இல்லாமல் இருக்கலாம். அது எனக்குத் தெரியாது. ஆனால் அவளிடமிருந்து எடுத்துக் கொள்ளப் பட்டது. அவளிடமிருந்து ஒவ்வொன்றுமே எடுத்துக்கொள்ளப்பட்டது. சில காரியங்களில் அவளுக்காக நான் மிகுந்த துக்கப்படுவதுண்டு. முன்னால் எல்லாம் அவள் நிக்கலஸை விவாகம் செய்ய வேண்டுமென்று நான் ரொம்பவும் விரும்பி வந்தேன். ஆனால், என்னவோ அந்தக் காரியம் நடக்காது என்று ஏதோ ஒரு உணர்ச்சி எனக்குத் தோன்றி வந்தது. அது ஒரு பலன் கொடுக்காத புஷ்பம் ஸ்ட்ராபெரி புஷ்பங்கள் மாதிரி. சில சமயங்களில் அவளுக்காக நான் வருந்தியதுண்டு. சில சமயங்களில் அதைப்பற்றி உன்னையும் என்னையும் போல அவள் உணர்ச்சி கொள்ளுவதில்லை என்று நான் நினைப்பதும் உண்டு.''

சுவிசேஷத்தில் சொல்லப்பட்ட அந்த வாசகத்திற்கு வேறு விதமான அர்த்தம் கொள்ள வேண்டுமென்று நட்டாஷாவிடம் கோமகள் மேரி சொன்னாள். என்றாலும், சோனியாவைப் பார்க்கும்போது நட்டாஷாவின் வியாக்யானம்தான் பொருத்த மானது என்று நினைத்தாள். தன்னடைய நிலைமையானது கஷ்டமாய் இருக்கிறது என்று சோனியா உண்மையிலேயே நினைப்பதில்லை என்று தோன்றியது. அவள் ஒரு பலனற்ற புஷ்பத்தைப் போலத் தனக்கு ஏற்பட்ட நிலைமையில் திருப்தி கொண்டிருந்தாள். அந்தக் குடும்பத்தில் உள்ளவர்களைப் பற்றி தனித்

தனியாக அவள் நினைக்காமல், குடும்பம் முழுவதிலுமே அவள் பிரியம் கொண்டிருந்தாள். ஒரு பூனையைப் போல, வீட்டில் உள்ளவர்களிடம் சார்பு கொள்ளாமல் அந்த வீட்டிடமே சார்பு கொண்டிருந்தாள். முதிய கோமகளுக்கு வேண்டிய வேலைகளை அவள் கவனித்து வந்தாள். குழந்தைகளுக்கு இளக்காரம் கொடுத்து, அதனால் அவை கெட்ட குணங்கள் கொள்ளும்படி செய்தாள். சின்னஞ்சிறிய சேவைகள் செய்வதில் அவளுக்கு எப்போதுமே சாமர்த்தியமுண்டு. அதைச் செய்வதற்கு அவள் எப்போதும் தயாராய் இருப்பாள். இந்தச் சேவைகளை எல்லோரும் அவளிடமிருந்து பெறுவார்கள். ஆனால், அதற்கு யாரும் நன்றி கொள்ளுவது இல்லை.

பால்ட் ஹில்ஸுக்குப் பக்கத்திலிருந்த கிராமாந்திர வீட்டைத் திரும்பவும் கட்டினார்கள். என்றாலும், முன்னால் இருந்ததுபோல அவ்வளவு பெரிதாகக் கட்டவில்லை.

கஷ்டமான காலத்தில் கட்டிட வேலைகளை ஆரம்பித்தபடியால் படாடோபமில்லாமல் கட்டினார்கள். அந்தப் பழைய வீட்டின் கல் அஸ்திவாரத்தின்மீது கட்டைகளினால் பிரம்மாண்டமான வீட்டைக் கட்டினார்கள். வீட்டுக்குள்ளேதான் சாந்து பூசினார்கள். கதவுகள் மொட்டைக் கதவுகளாகவே இருந்தன. சோபாக்கள் கடினமாக, சாதாரணமாக இருந்தன. நாற்காலிகளும் மேஜைகளும் அப்படியே, எல்லாவற்றையும் அந்த எஸ்டேட்டைச் சேர்ந்த அடிமைத் தச்சர்களைக்கொண்டு, அவர்களுடைய காடுகளிலுள்ள பூவரசு மரங்களினால் செய்தார்கள். அந்த வீடு விசாலமானதாய் இருந்தது. வீட்டு அடிமைகளுக்கும் விருந்தாளிகளுக்கும் போதுமான அறைகள் கொண்டிருந்தன. ராஸ்டோவ்களின் குடும்பங்களும், வால்கோனிஸ்கிகளின் உறவினர்களும் அங்கேசில வேலைகளில் வருவார்கள். அவர்களோடு ஏராளமாகக் குதிரைகளும், டஜன் கணக்கான சேவகர்களும் வருவார்கள். அவர்கள் வந்தால் மாதக் கணக்கில் அங்கே தங்குவார்கள். இதைத் தவிர, வருஷத்திற்கு நான்கு தடவைகளில், பெயர் தினங்களிலும், வீட்டுக்காரர்களின் பிறந்த தினங்களிலும் சுமார் நூறு விருந்தாளிகள் வரையில் அங்கே வந்து ஒரு நாளோ, இரண்டு நாளோ தங்குவதுண்டு. வருஷத்தின் மற்ற தினங்களில் வழக்கமான வேலைகளும், காலை ஆகாரங்கள், மத்தியான சாப்பாடுகள், டின்னர்கள், இராச்சாப்பாடுகள் ஆகியவைகளும் முறைப்படி ஒழுங்காக நடந்து வந்தன. இவையெல்லாம் அந்த எஸ்டேட்டில் விளைந்த பொருள் களாலேயே தயாரிக்கப்படுவனவாகும்.

# 9

அன்று மகாத்மா நிக்கலஸ் திருநாளுக்கு முதல் நாள். அன்று 1820-ம் வருஷம் டிசம்பர் மாதம் 5-ந் தேதி நட்டாஷா தன்னுடைய சகோதரருடைய வீட்டில், தனது கணவருடனும் குழந்தைகளுடனும் இலையுதிர் காலத்தின் ஆரம்பத்திலிந்து வசித்துவந்தாள். பீட்டர்ஸ்பர்க்குக்கு தமது சொந்த வேலையாக சுமார் மூன்று வாரங்களில் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டு பீயர் போய் இருந்தார். ஆனால் அவர் புறப்பட்டுப்போய் இப்போது ஏழு வாரங்கள் ஆகிவிட்டன. ஆகவே எந்த நிமிஷத்திலும் அவர் வரலாம் என்று எதிர்பார்க்கப்பட்டார்.

பெஜூகாவுடைய குடும்பத்தைத் தவிர நிக்கலஸுடைய பழைய சிநேகிதரான, ஓய்வு பெற்ற ஜெனரல் வாசைலி டிமிட்ரிச் டெனைசாவ் அந்த டிசம்பர் 5-ம் தேதியன்று ராஸ்டோவ்களோடு தங்கியிருந்தார்.

அவருடைய பெயர் தினமாகிய 6-ந் தேதியன்று வீடு முழுவதும் விருந்தாளிகள் இருப்பார்கள் என்று நிக்கஸ் அறிவார். ஆகவே, அவர் தம்முடைய டாக்டர் உடையை மாற்றிக் கொள்ள வேண்டியது அவசியமாய் இருந்தது. கால்களில் கூர்மையான ஜோடுகளை அணிந்து, பின்னால் நீண்டு தொங்கிக் கொண்டிருந்த கோட்டையும் அணிந்து, அவர் புதிதாகக் கட்டிய மாதா கோயிலுக்குப் போகவேண்டும். அதன் பின்னால்தான் அவரை வாழ்த்துவதற்கு வந்துள்ள நண்பர்களை வரவேற்பார். அவர்களுக்குச் சிற்றுண்டிகளை வழங்குவார். மிராசுதார்களின் தேர்தலைப் பற்றி அவர்களிடம் பேசுவார். அந்த தினத்திற்கு முதல் நாளன்று அவர் தம்முடைய வழக்கப்படி வேலைகளைக் கவனித்துவந்தார். ரயாஜான் கிராமத்தைப் பற்றிய கணக்குகளைத் தணிக்கை செய்தார். அந்தச் சொத்து அவருடைய மனைவியின் மருமனைச் சேர்ந்தது. அன்று எஸ்டேட் சம்பந்தமாக இரண்டு கடிதங்கள் எழுதினார். தானியக் கிடங்குகளைப் போய்ப்பார்த்தார். மாட்டுப் பண்ணைகளையும் குதிரை லாயங்களையும், டின்னருக்கு முன்னால் போய்ப்பார்த்து வந்தார். மறுநாளன்று மகாத்மாவின் திருநாளாகையால், பொதுவாக அதிகமாய்க் குடித்துவிட்டு உருளாதபடி, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். பின்னர் டின்னக்கு வந்தார். தம்முடைய மனைவியிடம் தனிமையாகப் பேசுவதற்கு நேரமில்லை. அங்கிருந்த நீண்ட சாப்பாட்டு மேஜை முன்பு உட்கார்ந்தார். அந்த மேஜையில் 20 பேர்களுக்கு பரிமாறப்பட்டிருந்தது. அவருடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாம் அங்கே கூடினார்கள். அந்த மேஜை முன்பாக அவருடைய

தாயார், அவருடைய தாயாரின் பழைய நண்பரான பெலோவா, அவருடைய மனைவி, அவர்களுடைய மூன்று குழந்தைகள், அந்தக் குழந்தைகளின் உபாத்தியாயினி, அவருடைய மனைவியின் மருமகன், அந்த மருமகனின் வாத்தியார், சோனியா, டெனைசாவ், நட்டாஷா, அவருடைய மூன்று குழந்தைகள், அந்தக் குந்தைகளின் தாதிகள், முதிய மைக்கேல் ஐவானாவிச் என்ற முதிய இளவரசரின் சிற்பி, இவ்வளவு பேரும் இருந்தார்கள். சிற்பி வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பின்பு, பால்ட்ஹில்ஸிலேயே தங்கி வந்தார்.

கோமகள் மேரி அந்த மேஜையின் மற்றொரு முனையில் அமர்ந்திருந்தாள். தனது கணவர் ஆசனத்தில் அமர்ந்ததும், அவர் வேகமாக மேஜை கைகுட்டையை எடுத்ததையும் டம்ளரையும் ஒயின் கிளாஸையும் தள்ளியதையும் பார்த்து, அவர் கோபமாய் இருப்பதாக முடிவுசெய்து கொண்டாள். பண்ணையிலிருந்து நேராக அவர் டின்னருக்கு வருவாரானால் அம்மாதிரிதான் சில சமயங்களில் ஏற்படுவதுண்டு. அதாவது, சூப் சாப்பிடுவதற்கு முன்பாக அம்மாதிரி இருப்பார். அம்மாதிரியான அவருடைய குணங்களை கோமகள் மேரி நன்றாக அறிவாள். அவள் நல்ல குணத்தோடு இருக்கிற காலங்களில், அம்மாதிரி சந்தர்ப்பங்களில் அவர் சூப் சாப்பிட்டு முடிகிற வரையில் அமைதியாக இருப்பாள். அதன் பின்னால், அவருடன் பேச ஆரம்பித்து, முடிவில் அம்மாதிரி கோபமாய் இருப்பதற்குக் காரணம் இல்லையென்பதை அவர் ஒப்புக்கொள்ளும்படி செய்வாள். இன்று அந்தப் போக்கை அவள் முற்றிலும் மறந்துவிட்டாள். அதனால் யாதொரு காரணமும் இல்லாமல் தன்மீது கோபமாக இருப்பதாக அவள் நினைத்துக்கொண்டு, மனம் புண்பட்டு வேதனை கொண்டாள். அவர் எங்கே போயிருந்தார் என்று அவள் கேட்டாள். அவர் பதில் சொன்னார். பண்ணையின் எல்லாம் சரியாய் இருக்கிறதா என்று மீண்டும் அவள் கேட்டாள். அவளுடைய தொனி இயற்கைக்கு விரோதமாக இருந்ததால், அதைக் கேட்டதும் அவரும் மகிழ்ச்சிக்குறைவோடு கண்களைச் சிமிட்டி, வேகமாக அவர் பதில் சொன்னார்.

''அப்படியானால், நான் நினைத்து தவறு அல்ல'' என்று கோமகள் மேரி நினைத்தாள். ''அவர் ஏன் என்மீது கோபமாய் இருக்கிறார்?'' அவருடைய தொனியிலிருந்து அவள்மீது அவர் எரிச்சல் கொண்டிருப்பதாகவும், அந்த உரையாடலை முடிக்க விரும்புவதாகவும் அவள் முடிவு செய்து கொண்டாள். அவள் கூறிய வார்த்தைகள் இயற்கைக்கு விரோதமாக இருந்தன என்பதை அவள் அறிவாள். ஆனால் மேலும் சில கேள்விகளைக் கேட்காமல் இருக்க அவளால் முடியவில்லை.

டெனைசாவின் உரையாடலால், அந்த மேஜையில் மீண்டும் பேச்சுகள் பொதுப்படையாகவும் பரபரப்பாகவும் இருந்தன. ஆனால் அவள் அவளுடைய கணவரிடம் அதன் பின்னால் பேசவில்லை. அவர்கள் மேஜையை விட்டெழுந்ததும், வழக்கம்போல முதிய கோமகளுக்கு நன்றி செலுத்துவதற்காகப் போனார்கள்.

டின்னர் முடிந்த பின்பு வீட்டுக்காரிக்கு வந்தனம் சொல்வது ருஷ்யாவில் ஒரு பழக்கம். இந்த இடத்தில் முதிய கோமகள் வீட்டுக்காரியாக இல்லாமல் இருந்தாலும், மரியாதைக்காக அவளிடம் நன்றியைக் காட்டினார்கள்.

கோமகள் மேரி தனது கணவரை முத்தமிட்டாள். தன்மீது அவர் ஏன் கோபமாய் இருக்கிறார் என்று அவள் கேட்டாள்.

''உனக்கு எப்போதுமே அம்மாதிரி விசித்திரமான எண்ணங்கள் ஏற்படுவதுண்டு. நான் கோபம் என்பதைப் பற்றி நினைத்ததுகூட இல்லை'' என்று அவர் பதில் சொன்னார்.

ஆனால் 'எப்போதும்' என்று அவர் சொல்லிய வார்த்தையை கேட்டதும், 'அவளுக்கு ''ஆமாம், நான் கோபமாய்த்தான் இருக்கிறேன். ஆனால் உன்னிடம் சொல்லமாட்டேன்'' என்று கூறுவதைப்போல இருந்தது.

நிக்கலஸும், அவருடைய மனைவியும் மகிழ்ச்சியோடு வாழ்ந்துவந்தார்கள். சோனியாவும் முதிய கோமகளும்கூட அதைக்கண்டு பொறாமை' கொண்டார்கள். அவர்கள் இருவருக்குள்ளும் அபிப்பிராயபேதம் ஏற்படவேண்டுமென்று விரும்பினார்கள். ஆனால் அவர்கள் மீது எந்தவிதமான குற்றத்தையும் அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. அப்பேர்ப்பட்ட கணவருக்கும் மனைவிக்கும்கூட சில சமயங்களில் சண்டைக்குணம் ஏற்படுவதுண்டு.

இருவரும் சந்தோஷமாக வாழ்ந்த பின்பு, எப்போதும் ஏற்படுவதைப் போல, சில சமயங்களில், அவர்கள் இருவருக்குள்ளும் எதிர்ப்பு உணர்ச்சிகள் தோன்றுவதுண்டு. அம்மாதிரி காரியங்கள் கோமகள் மேரியினுடைய கர்ப்ப காலங்களில்தான் அதிகம் ஏற்படுவதுண்டு. அச்சமயம் அம்மாதிரியான காலம்.

''நல்லது, சீமாட்டிகளே, கனவான்களே'' என்று நிக்கலஸ் உரத்த சப்தத்தில் மிகுந்த மகிழ்ச்சியோடு கூறினார். அம்மாதிரி அவர் தனக்கு எரிச்சலை உண்டுபண்ணுவதற்காகவே பேசினார் என்று கோமகள் மேரிக்குத் தோன்றியது.

''இன்று காலை ஆறு மணிக்கு எழுந்திருந்தவன் இன்னும் நான் உட்காரவில்லை. நாளையும் இதே மாதிரி கஷ்டப்பட வேண்டியிருக்கும். ஆகவே, இப்போது நான் படுக்கப்போகிறேன்.''

தமது மனைவியிடம் ஒரு வார்த்தைகூடப்பேசாமல், அவர் அங்கிருந்த சிறிய உட்காரும் அறைக்குச் சென்று சோபாவில் படுத்தார்.

''எப்போதும் இவர் இதே மாதிரிதான்'' என்று கோமகள் மேரி நினைத்தாள். என்னைத்தவிர மற்ற ஒவ்வொருவரிடமும் அவர் பேசுகிறார். நான் அவருக்குப் பிடிக்கவில்லையென்று தோன்றுகிறது. முக்கியமாக நான் இம்மாதிரி நிலைமையில் இருக்கும்போது அவருக்குப்பிடிக்கவில்லை.'' அவள் தன்னுடைய பருத்த உருவத்தைப் பார்த்தாள். கண்ணாடியில் அவள் பார்த்தபோது, அவளுடைய முகம் வெளிறிப்போய், பலவீனமாகத் தோன்றியது. அவளுடைய கண்கள் முன்பு இருந்ததைவிட இப்போது பெரியதாகத் தோன்றின.

ஒவ்வொரு காரியமும் அவளுக்கு எரிச்சலாக இருந்தது. முக்கியமாக டெனைசாவின் கூச்சலும், சிரிப்பும் நட்டாஷாவின் பேச்சும், முக்கியமாக சோனியா திடீர் திடீர் என்று அவளைப் பார்க்கும் பார்வையும் அவளுக்கு எரிச்சலாய் இருந்தன.

எப்போதுமே கோமகள் மேரிக்கு எரிச்சல் வருவதற்கு சோனியாவே முதலில் காரணமாகக் காணப்படுவாள்.

அவர்கள் என்ன பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்ந்து கொள்ளாமலே, அங்கு வந்த விருந்தாளிகளோடு சிறிது நேரம் உட்கார்ந்து இருந்த பின்பு, அவள் மெதுவாக அந்த அறையை விட்டு நழுவி, குழந்தைகள் இருக்கும் இடத்திற்குப் போனாள்.

'மாஸ்கோவுக்குப் போதல்' என்ற விளையாட்டை குழந்தைகள் விளையாடிக்கொண்டிருந்தார்கள். நாற்காலிகளை ஒன்று சேர்த்து, அவைகளை வண்டிகள் மாதிரி அவர்களுடைய விளையாட்டில் கருதினார்கள். அவளையும் தங்களுடன் வரும்படி அவர்கள் அழைத்தார்கள். அவளும் அங்கே அமர்ந்து, அவர்களுடன் சிறிது நேரம் விளையாடிக்கொண்டிருந்தாள். ஆனால், அவளுடைய கணவரையும், அவர் அனாவசியமாகக் கோபித்துக்கொண்டிருப்பதையும் நினைத்தபோது, அவளுக்குக் கவலையாய் இருந்தது. அவள் எழுந்து முன் பாதங்களால் கஷ்டத்தோடு நடந்து அந்தச் சிறிய உட்காரும் அறைக்குப் போனாள்.

''ஒருவேளை அவர் தூங்காமல் இருக்கலாம். அவர் என்ன சமாதானம் சொல்லுகிறார் என்று நாள் கேட்பேன்'' என்று தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள். அவளுடைய மூத்த

பையனான குஞ்சு ஆண்ட்ரூ, அவள் தாயைப்போலவே அவள் பின்னால் முன் பாதங்களால் நடந்து வந்தான். அவன் வருவதை அவள் கவனிக்கவில்லை.

''மேரி, என் அன்பே, அவர் தூங்கிக்கொண்டிருக்கிறார் என்று நினைக்கிறேன். அவர் மிகவும் களைப்படைந்து இருக்கிறார்'' என்று சோனியா, அங்கிருந்த பெரிய உட்காரும் அறையில் அவளைச் சந்தித்தபோது கூறினாள், (எங்கு போனாலும் அவள் தனக்குக் குறுக்கே நிற்பதாக கோமகள் மேரிக்குத் தோன்றியது) ''ஆண்ட்ரூ அவரை ஒருவேளை தூக்கத்திலிருந்து எழுப்பி விடுவான்.'' கோமகள் மேரி சுற்றிப் பார்த்தபோது, குஞ்சு ஆண்ட்ரூ அவருக்குப் பின்னால் வந்துகொண்டிப்பதைக் கண்டாள். சோனியா சொல்வது சரிதான் என்று உணர்ந்தாள். என்றாலும், அதே காரணத்தினால் அவள் முகம் சிவந்தது. கடுமையாக எதுவும் சொல்லிவிடாமல் இருப்பதற்கு கஷ்டத்தோடு முயற்சி செய்தாள். அவள் பதில் எதுவும் சொல்லவில்லை. ஆனால், சோனியா சொல்வதற்கு கீழ்ப்படிந்ததாக இருக்கக்கூடாது என்று நினைத்து, ஆண்ட்ரூவைத் தனக்குப் பின்னால் அமைதியாக வரும்படி சொல்லிவிட்டு, அந்த அறையின் வாசலுக்குப் போனாள். சோனியா மற்றொரு வாசல் வழியாக வெளியே போனாள். நிக்கலஸ் தூங்கிக்கொண்டிருந்த அறையிலிருந்து ஒரு மாதிரியான நிதானத்தோடு அவர் மூச்சுவிடும் சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது. அது அவருடைய மனைவிக்கு பழக்கமான சப்தம். அவள் அதைக் கேட்டதும் அவரைப் பார்த்தாள். அவருடைய மிருதுவான, லட்சணமான நெற்றியும், அவருடைய மீசையும், அவருடைய முகம் முழுவதும், அவர் இரவில் தூங்ககிக்ொண்டிருக்கும்போது எப்படிக் காணப்படுமோ, அதே மாதிரி அவளுக்குக் காணப்பட்டன.

நிக்கலஸ் திடீரென்று அசைந்துகொடுத்துச் செருமினார். அச்சமயத்தில் வாசலுக்கு வெளியில் நின்றுகொண்டிருந்த குஞ்சு ஆண்ட்ரூ கூச்சலிட்டான். ''அப்பா, அம்மா இங்கே நின்றுகொண்டிருக்கிறாள்'' என்று சொன்னான். கோமகள் மேரி பீதியினால் முகம் வெளிறி, தனது பையனுக்குச் சைகை காட்டினாள். அவன் மௌனமானான். அங்கே ஒரு வினாடி அமைதி நிலவியது. ஆனால் அந்த அமைதி கோமகள் மேரிக்குப் பயங்கரமாய்த் தோன்றியது. தூக்கத்திலிந்து எழுப்புவதை நிக்கலஸ் எவ்வளவு தூரம் வெறுப்பார் என்பதை அவள் அறிவாள். அதன் பின்னால் நிக்கலஸ் செருமிக்கொண்டு, மீண்டும் அசைந்து கொடுப்பது அவளுக்குக் கேட்டது. அவருடைய குரலில் கோபம் தொனிக்க பின்வருமாறு பேசினார்:

''ஒரு வினாடிகூட எனக்கு அமைதி கிடைப்பது இல்லை. மேரி, நீயா அங்கே நிற்கிறாய்? அவனை ஏன் இங்கே அழைத்து வந்தாய்?''

''நான் பார்ப்பதற்காகத்தான் வந்தேன். ஆனால் நான் கவனிக்கவில்லை...என்னை மன்னித்துவிடும்...''

நிக்கலஸ் மீண்டும் இருமினார். அதற்குமேல் எதுவும் பேசவில்லை. கோமகள் மேரி அந்த வாசலிலிருந்த பையனை அழைத்துக்கொண்டு, மீண்டும் குழந்தைகளின் அறைக்குப் போனாள். ஐந்து நிமிஷங்களுக்குப் பின்னால், அவருடைய செல்லக் குழந்தையான கறுப்புக் கண்களைக்கொண்ட மூன்று வயதான நட்டாஷா, தனது சகோதரனிடமிருந்து தன்னுடைய அப்பா தூங்கிக்கொண்டிருப்பதையும், தன்னுடைய அம்மா உட்காரும் அறையில் இருப்பதையும் கேள்விப்பட்டாள். உடனே அவளுடைய தாயாருக்குத் தெரியாமல் தந்தையிடம் ஓடினாள். அந்தக் கறுநிறக் கண்களைக்கொண்ட சிறிய பெண் கிரீச்சிடும் அந்தக் கதவை தைரியமாகத் திறந்து, சோபாவுக்கு சமீபமாகத் தனது சிறிய பருத்த கால்களால் வேகமாக நடந்துபோனாள். அங்கே அவர் தன் பக்கம் முதுகைக் காட்டிக் கொண்டு தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்து முன் பாதங்களால் உந்தி அவருடைய தலைக்குக் கீழே இருந்த கையை முத்தமிட்டாள். நிக்கலஸ் ஒரு கனிவான புன்னகையோடு திரும்பினார்.

''நட்டாஷா, நட்டாஷா'' என்ற கோமகள் மேரியின் பீதியுற்ற மெதுவான குரல், வாசல் வழியாகக் கேட்டது. ''அப்பா தூங்கவேண்டும்.''

''இல்லை, அம்மா. அவர் தூங்கவேண்டியதில்லை. அவர் சிரித்துக் கொண்டிருக்கிறார்'' என்று அந்த குஞ்சு நட்டாஷா உறுதியோடு சொன்னாள்.

நிக்கலஸ் தமது கால்களைக் கீழே தொங்கவிட்டு எழுந்து, தனது குமாரியைக் கைகளால் தூக்கிக்கொண்டார்.

''உள்ளே வா, மேரி'' என்று தமது மனைவியை அழைத்தார்.

அவள் உள்ளே சென்று தனது கணவருக்கு பக்கத்தில் அமர்ந்தாள்.

''அவன் எனக்குப் பின்னால் வந்ததை நான் கவனிக்கவில்லை'' என்று அவள் தயக்கத்தோடு சொன்னாள். ''நான் சும்மா பார்ப்பதற்காகத்தான் வந்தேன்.''

தம்முடைய சிறிய குழந்தையை ஒரு கையினால் அணைத்துக்கொண்டு, தமது மனைவியைப் பார்த்தார். அவளுடைய வருத்தமான தோற்றத்தைக் கண்டதும், மற்றொரு கையினால் அவளை அணைத்து, அவளுடைய தலையில் முத்தமிட்டார்.

''நான் அம்மாவை முத்தமிடலாமா?'' என்று நட்டாஷாவிடம் அவர் கேட்டார்.

நட்டாஷா வெட்கத்தோடு புன் முறுவல் காட்டினாள்.

''மீண்டும் ஒரு தடவை செய்யும்'' என்று அவள், நிக்கலஸ் எந்த இடத்தில் மேரியை முத்தமிட்டாரோ, அந்த இடத்தைச் சுட்டிக் காட்டி உத்தரவிட்டாள்.

''நான் கோபமாய் இருக்கிறேன் என்று நீ எதற்காக நினைக்கிறாய் என்பது எனக்குத் தெரியவில்லை'' என்று நிக்கலஸ் அவருடைய மனைவியின் மனதிலிருந்த கேள்வியை அறிந்துகொண்டவர் போலக் கேட்டார்.

''அம்மாதிரி நீர் இருக்கும்போது எவ்வளவு தூரம் நான் மன வருத்தமாகவும் ஆதரவற்றவளாகவும் உணருகிறேன் என்பது உமக்குத் தெரியவே முடியாது. எனக்கு எப்போதும் அப்படித்தான் இருக்கிறது...''

''மேரி, இந்த அசட்டுப் பேச்சுக்களை யெல்லாம் பேசாதே. நீ இம்மாதிரிப் பேசுவதற்கு நீயே வெட்கப்படவேண்டும்'' என்று' மகிழ்ச்சியோடு கூறினார்.

''நீர் நான் அழகு இல்லாமல் இருப்பதால் என்னைக் காதலிக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது... எப்போதுமே... எப்போதும்... இந்த நிலைமையில்...''

''ஓ, நீ எவ்வளவு அசட்டுத்தனமாய் இருக்கிறாய்! அழகு என்பது மட்டும் ஒருவரைக் கவருவது இல்லை. காதல் தான் அழகைப் பார்க்கும்படி நம்மைச் செய்கிறது. மால்வினாஸைப் போன்ற பெண்கள் தான் அவர்களுடைய அழகுக்காகக் காதலிக்கப்படக் கூடியவர்கள். ஆனால், எனது மனைவியைக் காதலிக்கிறேனா? நான் அவளைக் காதலிக்கவில்லை. ஆனால்... நான் அதை எப்படிச் சொல்வது என்பது எனக்குத் தெரியவில்லை. நீ இல்லாமல் இருக்கும்போது, அல்லது நம் இருவருக்குள்ளேயே இம்மாதிரி ஏதாவது ஒன்று ஏற்படும்போது, எனக்கு ஒன்றுமே ஓடுவதே இல்லை. என்னால் ஒன்றையும் செய்ய முடிவதில்லை. இப்போது நான் என்னுடைய விரல்மீது பிரியம் கொண்டிருக்கிறேனா? நான் பிரியம் கொள்ளவில்லை. ஆனால், அதை இழப்பதற்கு நான் சம்மதிப்பேனா?''

''நான் அம்மாதிரி இல்லை. ஆனால் நீர் சொல்வது எனக்குப் புரிகிறது. அப்படியானால், நீர் என் மீது கோபமாய் இல்லை என்று சொல்லுகிறீரா?

''அசாத்தியமாகக் கோபம் கொண்டிருக்கிறேன்!'' என்று அவர் சொல்லிவிட்டு, புன்முறுவலோடு எழுந்தார். தமது தலைமுடியைத் தடவி விட்டுக்கொண்டு, அந்த அறையில் உலாவ ஆரம்பித்தார்.

''நான் என்னை நினைத்துக்கொண்டிருக்கிறேன் என்பது உனக்குத் தெரியுமா, மேரி? என்று அவர் ஆரம்பித்தார். இப்போது அவர்களுக்குள் சமரசம் ஏற்பட்டுவிட்டபடியால், தாம் நினைத்துக் கொண்டிருப்பதை வெளிப்படையாகச் சொல்ல ஆரம்பித்தார்.

தாம் சொல்வதை அவள்கேட்கத் தயாராய் இருக்கிறாளா என்பதை அவர் கேட்கவில்லை. அதைப்பற்றி அவர் கவலைப் படவில்லை. அவருக்கு ஒரு நினைப்புத் தோன்றியது. ஆகவே, அந்த நினைப்பு அவளையும் சேர்ந்ததுதான். இலை துளிர் காலம் வரையில் பீயரை இங்கே தங்கியிருக்கும்படி தாம் கேட்கப் போவதாக அவளிடம் சொன்னார்.

அவர் பேசி முடிக்கிற வரையில் கோமகள் மேரி கேட்டுக்கொண்டிருந்தாள். பின்னால் அவள் சில வார்த்தைகளைப் பேசினாள். அதன் பின்னால் தான் நினைத்துக்கொண்டிருக்கிறவை களை அவள் வெளிப்படையாகச் சொல்ல ஆரம்பித்தாள். அவளு டைய நினைப்புகள் எல்லாம் குழந்தைகளைப் பற்றியதாகவே இருந்தன.

அந்த குஞ்சு நட்டாஷாவைச் சுட்டிக்காட்டி, ''அவளிடம் ஏற்கனவே பெண்மை தோன்ற ஆரம்பித்துவிட்டது'' என்று அவள் பிரஞ்சு மொழியில் சொன்னாள். ''பெண்களாகிய நாங்கள் நியாய வாதத்திற்கு விரோதமாக இருப்பதாக நீர் கண்டிக்கிறீர். இதோ, எங்களுடைய நியாய வாதத்தைப்பாரும். 'அப்பா தூங்கவேண்டும்' என்று நான் சொல்லுகிறேன். ஆனால் அவள் 'இல்லை, அவர் சிரித்துக்கொண்டிருக்கிறார்' என்று கூறுகிறாள். அவள் சொல்வது தான் சரி'' என்று கோமகள் மேரி மகிழ்ச்சிப் புன்னகையோடு கூறினாள்.

''ஆமாம், ஆமாம்'' என்று கூறிவிட்டு தமது சிறிய குமாரியை தம்முடைய வலிமையான கைகளால் நிக்கலஸ் பற்றி, அவளை உயரே தூக்கி, தமது தோள் மீது வைத்துக்கொண்டார், அவளுடைய கால்களைப் பற்றிக்கொண்டு, அந்த அறையில் மேலும் கீழும் நடந்தார். தந்தையின் முகத்திலும் மகளின் முகத்திலும் கவலையில்லாத மகிழ்ச்சி பரவி நின்றது.

''நீர் இம்மாதிரி செய்வது நியாயமல்ல என்பதை நீரே அறிவீர். ஏனெனில், இந்த ஒன்றிடம் மட்டும்தான் நீர் பிரியமாய் இருக்கிறீர்'' என்று அவருடைய மனைவி அவரிடம் பிரெஞ்சுப் மொழியில் தணிந்த குரலில் கூறினாள்.

''ஆமாம், அதற்கு நான் என்ன செய்வது? அதை வெளியே காட்டாமல் இருப்பதற்காக நான் முயற்சி செய்கிறேன்.''

அச்சமயத்தில் கதவு திறக்கும் சப்தமும், காலடிச் சப்தமும், ஹாலிலும் வெளி அறையிலும் கேட்டன. யாரோ ஒருவர் வந்திருப்பது போலத் தோன்றியது.

''யாரோ வந்திருக்கிறார்கள்.''

''அது பியர் தான் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். நான் போய்ப் பார்க்கிறேன்'' என்று கோமகள் மேரி சொல்லி விட்டு அறையை விட்டு வெளியே போனாள்.

அவள் அங்கே இல்லாத சமயத்தில் நிக்கலஸ் தமது குஞ்சு குமாரியோடு அறையைச் சுற்றி ஓட ஆரம்பித்தார். அவருக்கும் மூச்சுவாங்கவே, திடீரென்று தமது குழந்தையை சிரித்துக்கொண்டே தோளிலிந்து இறக்கிமார்பில் வைத்து அழுத்திக்கொண்டார். அவருடைய வேகமான ஓட்டமானது நடன ஆட்டத்தை அவருக்கு நினைப்பூட்டியது. அந்தக் குழந்தையின் மகிழ்ச்சியான, வட்டமான சிறிய முகத்தைப் பார்த்ததும், அவர் முதியவருமான பின்பு அது எப்படி இருக்கும் என்பதை மனோராஜ்யம் செய்தார். அவளை உயர் வட்டாரத்திற்கு அழைத்துச் செல்லுவதைப் பற்றியும், தம்முடைய முதிய தந்தை அவருடைய குமாரியோடு 'டேனியல் கூப்ப' நடனத்தை ஆடியதைப்போல, தாமும் அவளுடன் மாஜுர்க்கா நடனம் ஆடுவதைப் பற்றியும் அவர் மனோராஜ்யம் செய்தார்.

''அவரே தான், அவரே தான், நிக்கலஸ்'' என்று கோமகள் மேரி சொல்லி, அந்த அறைக்குள் சில நிமிஷங்களுக்குப் பின்னால் நுழைந்தாள். 'இப்போது நம்முடைய நட்டாஷாவுக்கு உயிர் வந்து விட்டது. அவளுடைய மகிழ்ச்சியை நீர் பார்க்க வேண்டும். அவர் இவ்வளவு காலம் வராமல் இருந்ததற்காக, அவளிடம் எத்தனை சூடுகள் பெற்றார் என்பதையும் நீர் பார்த்திருக்க வேண்டும். நல்லது, இப்போது வாரும். சீக்கிரம், சீக்கிரம். இப்போது நீங்கள் இருவரும் பிரிய வேண்டிய காலம் வந்து விட்டது'' என்று அவள் சொல்லி, தனது தந்தையைக் கட்டிக் கொண்டிருந்த அந்தச் சிறிய பெண்ணை புன்முறுவலோடு பார்த்தாள்.

அந்தக் குழந்தையை கையில் பிடித்துக்கொண்டு நிக்கலஸ் வெளியே வந்தார்.

கோமகள் மேரி உட்காரும் அறையிலேயே தங்கியிருந்தாள்.

''இம்மாதிரி ஒருவர் சந்தோஷமாய் இருக்க முடியும் என்பதை நான் ஒருக்காலும் நம்பியிருக்கவே மாட்டேன்'' என்று அவள் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். அவள் முகத்தில் புன்முறுவல் ஒளிர் விட்டது. அதே சமயத்தில் அவள் பெருமூச்சு விட்டாள். அவளுடைய ஆழ்ந்த கண்களில் ஒரு அமைதியாக

சோகம் காணப்பட்டது. இந்த வாழ்க்கையில் காண முடியாத மற்றொரு மகிழ்ச்சி இருப்பது போலவும், அந்த மகிழ்ச்சியை இப்பொழுது அவளுக்குள்ள மகிழ்ச்சியின் மூலம் அவள் உணருவதைப் போலவும், அந்தத் தோற்றம் காணப்பட்டது. அதே வினாடியில் அவளை அறியாமலேயே அதைப் பற்றியச் சிந்தனை அவளுக்குத் தோன்றியது.

## 10

1813-ஆம் வருஷத்தின் துளிர்கால ஆரம்பத்தில் நட்டாஷாவுக்கு திருமணம் நடந்தது. 1820-ஆம் வருஷத்தில் மூன்று பெண்களும் ஒரு குமாரனும் அவளுக்கு இருந்தார்கள். குமாரன் பிறக்க வேண்டுமென்பதில் அவள் மிகுந்த ஆவலாய் இருந்தாள். அந்தக் குழந்தைதான் இப்போது கைக்குழந்தையாய் இருக்கிறது. நட்டாஷா இப்போது உடல் பருத்து இருந்தாள். ஒரு காலத்தில் ஒல்லியாகவும் சுறுசுறுப்பாகவும் உயிர்த்துடிப்பும் கொண்டிந்த நட்டாஷாவை, இந்த ஒரு தடித்த உருவம் கொண்ட தாய்மையான பெண்ணிடம் அடையாளம் கண்டுகொள்ள முடியாது. அவளுடைய சாயல்கள் எல்லாம் தெளிவாக இருந்தன. அவள் ஒரு அமைதியான, மிருதுவான, நிம்மதியான தோற்றத்தோடு விளங்கினாள். அவளுடைய முகத்தில் முன்னால் எப்போதும் இருந்து பிரகாசமாய் விளங்கி வந்த பரபரப்பு இப்போது காணப்படவில்லை. அந்த பரபரப்புதான் அவளுக்குக் கவர்ச்சியைக் கொடுத்து வந்தது. அவளுடைய முகத்தையும் உடலையும் தான் இப்போது ஒருவர் பார்க்க முடியுமே தவிர, அவளுடைய உள்ளத்தைப் பார்க்கவே முடியாது. ஒரு வலிவான, லட்சணமான, தாய்மையான பெண்ணாக அவள் விளங்கினாள். பழைய சுறுசுறுப்பான ஜுவாலையானது, அவளுடைய முகத்தில் இப்போதெல்லாம் வெகு அபர்வமாகவே காணப்பட்டது. அந்த ஜுவாலையானது அவளுடைய முகத்தில் சில சமயங்களில் தோன்றும். அதாவது, அவளுடைய கணவர் வீட்டிற்கு திரும்பி வரும்போதும், அல்லது தன்னுடைய ஒரு குழந்தை வியாதியிலிந்து தம்பித் தேறி வரும்போதும், அல்லது அவளோ அல்லது கோமகள் மேரியோ இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றிப் பேசும்போதும் (அவரைப் பற்றித் தனது கணவரிடம் அவள் பிரஸ்தாபிப்பதே இல்லை. ஏனெனில் இளவரசர் ஆண்ட்ரூவைப் பற்றி அவர் பொறாமை கொண்டிருப்பாரென்று அவள் மனோராஜ்ஜியம் செய்தாள்), அல்லது யாராவது அவளைப் பாடும்படி தூண்டும்போதும் அது காணப்படும். ஆனால் அவளுடைய திருமணத்திற்கு பின்னால், பாடும் வழக்கத்தை அவள் அடியோடு

விட்டு விட்டாள். அவளுடைய லட்சணமான, பூரணமாய் வளர்ந்த அந்த உடலில், அம்மாதிரி அபூர்வமான சமயங்களில் பழைய ஜுவாலை தெரியும்போது, முன்னால் இருந்த நாட்களில் கொண்டிருந்த கவர்ச்சியைவிட இன்னும் அதிகக் கவர்ச்சியோடு அவள் காணப்பட்டாள்.

திருமணத்திற்குப் பின்னால், நட்டாஷாவும் அவளுடைய கணவரும் மாஸ்கோவிலும், பீட்டர்ஸ்பர்க்கிலும், மாஸ்கோவுக்கு பக்கத்திலுள்ள அவர்களுடைய எஸ்டேட்டிலும், அல்லது அவளுடைய தாயாருடன் நிக்கலஸ் வீட்டிலும் மாறி மாறி இருந்து வந்தார்கள். கோமகள் பெஜுகாவா உயர் வட்டாரங்களில் அடிக்கடி இப்போது காணப்படுவதில்லை. அங்கே ஒருவேளை அவள் காணப்பட்டாலும், அவள் முன்பு இருந்ததைப் போலக் கவர்ச்சியுடனோ, அல்லது சுமுகமான சுபாவத்துடனோ காணப்படுதில்லை. அதனால் அவளைச் சந்திப்பதற்கும் பலர் இப்போது விரும்புவதில்லை. நட்டாஷா தனிமையை விரும்புகிறாள் என்று சொல்லவும் முடியாது-அவள் அந்த தனிமையை விரும்புகிறாளா, இல்லையா என்பது அவளுக்கே தெரியாது. தனிமையை விரும்பவில்லை என்று சில சமயங்களில் அவள் நினைப்பதும் உண்டு-அவள் கர்ப்பம் அடைவதாலும், பிரசவங்கள் ஏற்படுவதாலும், குழந்தைகளுக்கு சிச்ருஷை செய்வதாலும், அவளுடைய கணவரின் வாழ்க்கையில் ஒவ்வொரு வினாடியும் சேர்ந்து நிற்பதாலும், அவளுக்கு ஏராளமான நேரம் வேண்டியிருக்கிறது. உயர் வட்டார சம்பந்தத்தை அறுத்துக்கொண்டால்தான் அந்த அவகாசம் அவளுக்குக் கிடைக்க முடியும். திருமணத்திற்கு முன்பாக நட்டாஷாவை அறிந்தவர்கள் எல்லோரும், அவளிடமும் ஏற்பட்ட இந்த மாறுதலைக் கண்டு அதை ஒரு அசாதாரணமானது என்று நினைத்தார்கள். வயோதிகக் கோமகள் தான் அவளுடைய தாய்மை உணர்ச்சியைக் கொண்டு ஒரு விஷயத்தை அறிந்திருந்தாள். அதாவது நட்டாஷாவின் வெகுளித் தனங்கள் எல்லாம் அவளுக்கு ஒரு கணவரும் குழந்தைகளும் வேண்டுமென்ற ஆசையினால்தான் ஏற்பட்டன என்பதே அந்த விஷயமாகும். ஒரு சமயத்தில் ஆட்ராட்னோவில் அவள் உண்மையான சிரத்தையோடு அம்மாதிரி சொன்னாள். ஆகவே, இப்போது பிறர் நட்டாஷாவை அறியாமல் காட்டும் ஆச்சரியத்தைக் கண்டு அவள் ஆச்சரியம் கொண்டாள். நட்டாஷா ஒரு சிறந்த மனைவியாகவும், தாயாராகவும் விளங்குவாள் என்பது தனக்கு எப்போதுமே தெரியுமென சொல்லிக் கொண்டிருப்பாள்.

''அவள் தன்னுடைய கணவரிடமும் குழந்தைகளிடமும் அளவு கடந்த அன்பைப் பொழிவாள். ஆகையால், சில சமயங்களில் அது அசட்டுத் தனமாய்த் தோன்றும்'' என்று கோமகள் சொன்னாள்.

புத்திசாலிகள் சொல்லும் முதல் தரமான வழியை நட்டாஷா பின்பற்றவில்லை. முக்கியமாக, பிரெஞ்சுக்காரர்கள் அந்த வழியைச் சிலாக்கியமாகச் சொல்வதுண்டு. அதாவது, திருமணம் ஆனவுடன் ஒரு பெண் தன்னை மறந்து நடக்கக் கூடாது என்றும், தன்னுடைய கலைத்திறன்களை அலட்சியம் செய்யக் கூடாது என்றும், தன்னுடைய அழகை ஜாக்கிரதையாகக் கவனித்து வர வேண்டுமென்றும், திருமணம் ஆவதற்கு முன்னால் இருந்ததை விட இப்போதுதான் அதை அதிகமாகக் கவனிக்க வேண்டுமென்றும், திருமணம் ஆவதற்கு முன்பாக தனது கணவரிடம் காட்டிய கவர்ச்சிவிட, விவாகமானதற்குப் பின்னால் தான் அதிகமாகக் காட்டவேண்டுமென்றும் சொல்வதுண்டு. அதற்கு நேர் விரோதமாக நட்டாஷா தன்னுடைய கலைப்பயிற்சிகளை எல்லாம் முழுவதும்க் கைவிட்டாள். அவற்றில் அவளுடைய சங்கீதம்தான் மிகுந்த சக்தி வாய்ந்ததாய் இருந்தது. அந்த சங்கீதமானது ஆளைமயக்குவதில் மிகுந்த சக்தி வாய்ந்ததாக இருப்பதாக அவளுக்குத் தோன்றியதால், அவள் அதை கைவிட்டாள். தன்னுடைய நடவடிக்கைகளை பற்றி அவள் கொஞ்சம்கூட சிரத்தை கொள்வதில்லை: அல்லது தன்னுடைய அலங்காரங்களைப் பற்றியோ, தான் நாசூக்காக பேச, வேண்டிய முறைகளைப் பற்றியோ, அல்லது தன்னுடைய கணவருக்குத் தான் காணப்படவேண்டிய விதங்களைப் பற்றியோ, அல்லது தன்னுடைய கணவருக்கு எரிச்சல் வரக்கூடிய விதத்தில் அசௌகரியங்கள் ஏற்படுத்தக் கூடாது என்பதைப்பற்றியோ, அவள் கவலை கொள்வது இல்லை. இந்த விதிகளுக்கு எல்லாம் நேர் மாறாக நடந்து வந்தாள். ஆளை மயக்கும்படி செய்யக்கூடிய அவளுடைய உள்ளுணர்வானது முன்பெல்லாம் அவளுக்கு வழிகாட்டியாய் இருந்தது. இப்போது அவளுடைய கணவருக்கு அவையெல்லாம் பரிகாசமாகத் தோன்றும் என்று அவள் நினைத்தாள். ஏனெனில், ஆரம்பத்திலேயே அவள் தன்னை முழுவதும்த் தன்னுடைய கணவருக்கு அர்ப்பணம் செய்துவிட்டாள். அதாவது, அவளுடைய முழு உள்ளத்தையும் எந்த் விதமான ரகசியமும் இல்லாமல் அவருக்குக் கொடுத்துவிட்டாள். கவித்துவமான காதல் உணர்ச்சிதான் அவளுடைய கணவரை அவளிடம் இழுத்தது. ஆனால் அவளுக்கும் அவருக்கும் இப்பொழுது ஏற்பட்டுள்ள ஐக்கியமானது, அந்தக் கவித்துவக் காதல் உணர்ச்சியினால் பாதுகாக்கப்படவில்லை என்றும், வேறு ஏதோ ஒன்றினால் பாதுகாக்கப்படுகிறது என்றும் அவள் உணர்ந்தாள். அந்த ''ஏதோ ஒன்று'' என்ன என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியாது. என்றாலும், உடலுக்கும் உயிருக்கும் உள்ள பந்தத்தைப் போல,

அந்த ''ஏதோ ஒன்று'' அவர்கள் இருவரையும் பிணைத்து வைத்திருப்பதாக அவள் உணர்ந்தாள்.

தன்னுடைய கணவரை கவர்ச்சி செய்வதற்காகத் தலை முடியை வாரி விடுவதும், புது மோஸ்தரான ஆடைகளை அணிவதும் உல்லாசப் பாட்டுக்களைப் பாடுவதும் அவளுக்கு விசித்திரமாகத் தோன்றின. மற்றவர்களுக்காகத் தன்னை அழகுபடுத்திக் கொள்ள வேண்டுமென்ற நினைப்பானது ஒருவேளை அவள் ஒப்புக்கொள்ளக்கூடியதாய் இருக்கலாம். ஆனால் அம்மாதிரியெல்லாம் செய்வதற்கு அவளுக்கு அவகாசமே இல்லை. பாடுவதிலோ, ஆடைகள் அணிவதிலோ, அல்லது பேசும்போது வார்த்தைகளைக் கவனித்துப் பேசுவதிலோ, அவள் கொஞ்சம்கூட சிந்தனை கொள்வதில்லையென்றால், அதற்கு முக்கியமான காரணம், இந்தக் காரியங்களுக்காக சிந்தனை செய்வதற்கு அவளுக்குப் போதுமான அவகாசம் இல்லையென்பதேயாகும்.

மனிதனுக்கு ஒரு காரியம் எவ்வளவு அற்பமாய் இருந்தாலும், அதில் பூரணமாகத் தனது கவனத்தைச் செலுத்த முடியுமென்பது எல்லோரும் அறிந்த விஷயம். ஒரு சிறிய விஷயமாய் இருந்தாலும் ஒருவன், அதில் பூரண கவனம் செலுத்தினால், அந்தச் சிறிய விஷயம் பிரம்மாண்டமாக வளர முடியுமென்பதும் எல்லோரும் அறிந்த விஷயம்.

நட்டாஷாவின் உள்ளம் முழுவதையும் கவர்ந்து கொண்டிருந்த விஷயம் அவளுடைய குடும்பமேயாகும். அதாவது, அவளுடைய கணவர் அவளுடைய குழந்தைகள் ஆகியவையாகும். அவளுடைய கணவர் முழுவதும் அவளுக்கும், அவளது குடும்பத்திற்கும் மட்டுமே சொந்தமாய் இருக்க வேண்டுமென்று அவள் நினைத்தாள். அவளுடைய குடும்பம் என்பது அவள் பெற்று வளர்த்துக் காப்பாற்றி வரும் குழந்தைகளேயாகும்.

அவள் தன்னுடைய மனதோடும், முழு உள்ளத்தோடும் தன்னுடைய மனதைப் முழுவதும் கவர்ந்த விஷயத்தை ஆழ்ந்து நினைத்துப் பார்த்தபோது அவளுக்கு அந்த விஷயம் வரவர பெரிதாகத் தோன்றியது. அதைச் சமாளிப்பதற்கு அவளுக்கு வேண்டிய சக்தி இல்லாதது போலவும், அவள் பலவீனமாய் இருப்பது போலவும் தோன்றியது. ஆகவே, அந்த ஒரு விஷயத்தில் மட்டும் ஒரு முகமாக தன்னுடைய கவனம் முழுவதையும் அவள் செலுத்தி வந்தாள். என்றாலும், அவள் அவசியமென்று நினைத்த எல்லாவற்றையும் அவளால் செய்துமுடிக்க முடியவில்லை.

இந்தக் காலத்தில் இருப்பதைப் போலவே அந்தக் காலத்திலும் பெண்களின் உரிமைகளைப் பற்றியும், கணவன் - மனைவியினுடைய உறவுகளைப் பற்றியும், அவர்களுடைய சுதந்திரங்களைப் பற்றியும், உரிமைகளைப் பற்றியும், பேச்சுக்களும் விவாதங்களும் இருந்து வந்தன. இருந்தாலும் இந்தக் காலத்தில் சொல்லப்படுவதைப் போல அவற்றையெல்லாம் பிரச்னைகளாக அந்தக் காலத்தில் நினைத்ததில்லை. இந்த விஷயங்களில் எல்லாம் நட்டாஷாவுக்குச் சிரத்தையில்லாமல் இருந்தது மட்டுமல்ல, நிச்சயமாக அவற்றைப்பற்றி அவளால் அறிந்துகொள்ளவும் முடியவில்லை.

இக்காலத்தில் இருப்பதைப் போலவே அக்காலத்திலும் அந்தப் பிரச்சினைகள் சிலருக்குத்தான் தோன்றின. அதாவது, கணவனும் மனைவியும் ஒருவரிடமிருந்து மற்றொருவர் பெறும் இன்பத்தைத் தவிர வேறு எந்த நன்மையும் திருமணத்தில் கிடையாது என்று நினைத்தவர்களுக்கு மட்டுமே அந்த பிராச்சினைகள் தோன்றுகின்றன. இல்லற இன்பமானது திருமணத்தில் ஆரம்ப பலனேயொழிய, முழு பலன் அல்ல. அந்த முழு பலனானது குடும்பம் என்பதிலேயே அடங்கியிருக்கிறது.

ஒரு டின்னரினால் எவ்வளவு அதிகமான நன்மை கிடைக்கும் என்ற பிரச்சினையைப் போன்றதுதான் மேலே குறிப்பிட்ட பிரச்சினையும் ஆகும். ஆனால், உடலுக்கு வேண்டிய போஷணைக் காகத்தான் டின்னர் சாப்பிடுகிறோம் என்ற நோக்கம் உள்ளவர்களுக்கும், குடும்பத்தை ஏற்படுத்துவதற்காகத்தான் திருமணம் செய்கிறோம் என்ற நோக்கம் உள்ளவர்களுக்கும் அந்த மாதிரி பிரச்சனை முன்காலத்தில் இருந்ததுமில்லை, இப்பொழுது இருக்கவுமில்லை.

உடலுக்கு போஷணையைக் கொடுப்பதுதான் டின்னரின் நோக்கமானால், ஏககாலத்தில் இரண்டு டின்னர்கள் சாப்பிடுகிறவருக்கு ஒருவேளை மகிழ்ச்சி அதிகமாய் இருக்கலாம்; ஆனால் அவருடைய நோக்கம் நிறைவேறாது; ஏனெனில் இரண்டு டின்னர்களை அவருடைய வயிறு ஜீரணிக்க முடியாது.

குடும்பத்தை ஸ்தாபிப்பதுதான் திருமணத்தின் நோக்கமானால், பலமனைவிகளையோ, பல கணவர்களையோ விரும்புகிறவருக்கு ஒருவேளை அதிகமான இன்பம் கிடைக்கலாம்; ஆனால் அம்மாதிரி செய்தால் ஒரு குடும்பத்தை ஸ்தாபிக்க முடியாது.

போஷாக்கு என்பதுதான் சாப்பிடுவதின் நோக்கமானால், குடும்பத்தை ஸ்தாபிப்பதுதான் திருமணம் செய்வதின் நோக்கமானால், ஒரு விஷயம் தெளிவாகிறது. அதாவது, ஒருவர்

ஜீரணிக்கக்கூடிய அளவுக்குமேல் உண்ணக்கூடாது; அதேமாதிரி ஒரு குடும்பத்திற்கு அவசியமானதற்கு அதிகமாக கணவர்களோ, அல்லது மனைவிகளோ இருக்கக்கூடாது; அதாவது ஒரு மனைவி, அல்லது ஒரு கணவர் என்றுதான் இருக்கவேண்டும். நட்டாஷாவுக்கு ஒரு கணவர் அவசியமாய் இருந்தது. அவளுக்கு ஒரு கணவர் கிடைத்தார். அவர் அவளுக்கு ஒரு குடும்பத்தைக் கொடுத்தார். வேறு ஒரு கணவரோ, அல்லது சிறந்த கணவரோ அவசியம் என்று அவளுக்குத் தோன்றவே இல்லை. அவளுடைய முழு உள்ளத்தோடு பூரண சக்தியோடு அவளுடைய கணவருக்கும் குடும்பத்திற்கும், சேவை செய்து வந்தாள். அதனால் நிலைமை வேறு மாதிரியாக இருந்தால் காரியம் எப்படியிருக்கும் என்பதைப்பற்றி அவளால் மனோராஜ்யம் செய்ய முடியவில்லை. அம்மாதிரி மனோராஜ்யம் செய்வதிலும் அவளுக்கு சிரத்தை இல்லை.

பொதுவாக உயர் வட்டாரத்தைப் பற்றி நட்டாஷா சிரத்தை கொள்ளவில்லை. கோமகள் மேரி, அவளுடைய சகோதரர், அவளுடைய தாயார், சோனியா ஆகிய பந்துக்களின் வட்டாரத்தையே அவள் அதிகமாய் மதித்து வந்தாள். குழந்தைகளின் அறையிலிருந்து உடை-கவுனோடு தலை முடியை வாரிக் கட்டாமல் குழந்தையின் துணியைக் கையில் எடுத்துக்கொண்டு மகிழ்ச்சியான தோற்றத்தோடு அவள் வருவாள்; அந்த துணியைப் பார்த்து குழந்தை இப்பொழுது மிகுந்த சௌக்கியம் அடைந்துவிட்டது என்று சொல்லி அவளுக்கு அங்கிருப்பவர்கள் இதமான வார்த்தைகள் கூறுவார்கள். அம்மாதிரி வட்டாரத்தின் உறவைத்தான் அதிகமாய் மதித்து வந்தாள்.

நட்டாஷா தன்னையே மறந்துவிட்டாள். அதனால் அவள் உடை அணியும் விதத்தைப் பற்றியும், தலை முடியை வாரி கட்டுவதைப் பற்றியும், பொருத்தமில்லாமல் பேசுவதைப் பற்றியும், மற்ற பெண்கள் மீதுள்ள பொறாமையைப் பற்றியும், அந்த வீட்டிலுள்ள பலர் கேலியாகப் பேசிக்கொள்ளுவது வழக்கமாய்விட்டது. சோனியா மீதும், குழந்தைகளின் தாதி மீதும், மற்றும் அழகுடனோ, அழகில்லாமலோ இருக்கும் ஒவ்வொரு பெண் மீதும் அவள் பொறாமை கொண்டாள். அவருடைய மனைவியின் கைப்பிடிக்குள் பீயர் இருப்பதாக, பொதுவாக ஓர் கருத்து இருந்து வந்தது. அது முற்றிலும் உண்மை. திருமணம் ஆனவுடனேயே நட்டாஷா தன்னுடைய கோரிக்கைகளைச் சொல்லிவிட்டாள். அதாவது, பீயரின் வாழ்விலுள்ள ஒவ்வொரு வினாடியும் அவளுக்கும் குடும்பத்திற்கும் சேரவேண்டும் என்று சொன்னாள். தம்முடைய மனைவியின் கருத்தைக் கண்டு பீயர் மிகுந்த ஆச்சரியம் கொண்டார். அவருக்கு அது திகைப்பைக்கொடுத்தது. என்றாலும்,

அவருக்குப் பெருமையாகவும் இருந்தது. அதனால் நட்டாஷாவின் கோரிக்கைகளுக்கு இணங்கினார்.

பீயர் அம்மாதிரி இணங்கியது பின்கண்ட விஷயங்களில் பிரதிபலித்தது. எந்தப் பெண்ணிடமும் உல்லாசமாகப் பேசுவதற்கு அவர் துணிவதில்லை. அதுமட்டுமல்ல, அந்த பெண்ணிடமும் புன்சிரிப்போடு பேசுவதற்குக்கூட அவர் துணிவதில்லை. ஏதோ ஒரு மாறுதலுக்காக, கிளப்பில் டின்னர் அருந்தவோ, அல்லது ஏதோ ஒரு போக்கில் பணத்தைச் செலவிடவோ அவர் துணிவதில்லை. அலுவல் இருந்தாலொழிய வீட்டைவிட்டு வெகு நேரம் வெளியே தங்கவும் அவர் துணிவதில்லை. அவருடைய ஆராய்ச்சி விவகாரங்களை செய்துகொண்டிருக்கும்படி அவருடைய மனைவி அனுமதித்தாள். அந்த ஆராய்ச்சிகளைப் பற்றி அவளுக்கு எதுவுமே புரியாமல் இருந்தாலும்கூட அவையெல்லாம் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை என்று அவள் கருதினாள். இம்மாதிரியாக வெளியிலுள்ள காரியங்களில் பீயருக்கு ஏற்பட்ட தடைகளுக்குப் பதிலாக அவருடைய வீட்டுக்குள் நடக்கிற காரியங்களில் அவருக்குப் பூரண சுதந்திரம் இருந்தது. அவருடைய வீட்டுக்காரியங்களை அவர் இஷ்டப்படி நடத்திவந்தார். அவருடைய வீட்டில் நட்டாஷா தனது கணவருக்கு ஒரு அடிமை யைப் போல நடந்துவந்தாள். அவர் படித்துக்கொண்டிருக்கும் போதோ, அல்லது எழுதிக்கொண்டிருக்கும்போதோ அவருடைய வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் சப்தம்போடாமல் நடந்து கொள்ளுவார்கள். அவருக்கு ஏதாவது வேண்டுமென்று சொன்னால் போதும், உடனே அந்தக் காரியம் செய்து முடிக்கப்படும். அவர் தமது விருப்பத்தை தெரிவித்தவுடனேயே அதை நிறைவேற்று வதற்கு நட்டாஷா துள்ளி எழுந்து ஓடுவாள்.

அவருடைய குடும்ப விவகாரங்கள் எல்லாம் அவருடைய உத்தரவுகளின்படியே நடப்பதாகக் கருதப்பட்டது. அதாவது, அவருடைய விருப்பத்தை நட்டாஷா யூகித்து அறிந்து நிறைவேற்றி வைப்பதாகக் கருதப்பட்டது. உரையாடல்களில் அவர் தெரிவிக்கும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டே அவர்களுடைய வாழ்க்கை முறைகளையும், எந்தெந்தக் காலத்தில் எங்கே தங்குவது என்ற விஷயத்தையும், அறிமுகமானவர்களுடன் நடந்து கொள்ளும் விதத்தையும், குழந்தைகளை வளர்ப்பதையும், தன்னுடைய வேலைகளை நிர்ணம் செய்வதையும் நட்டாஷா செய்துவந்தாள். அவருடைய விருப்பங்கள் என்ன என்பதை அவள் தெளிவாக அறிந்துகொண்ட பின்பு அவற்றை விடாப்பிடியாக பிடித்து நிறைவேற்றி வருவாள். ஏதாவது ஒரு விஷயத்தில் பீயர் தமது கருத்தை மாற்ற விரும்பினால், அப்பொழுது அவருடைய

அபிப்பிராயங்களைக் கொண்டே அவரோடு சண்டைபோட்டு எதிர்த்து நிற்பாள்.

பீயரால் எப்பொழுதும் மறக்கமுடியாத ஒரு கவலை நிறைந்த காலம் தோன்றியது. அவளுக்கு முதலாவது குழந்தை பிறந்த காலமே அதுவாகும். அந்த முதல் குழந்தை துர்பலமாய் இருந்தபடியால் அதற்கு பால் கொடுப்பதற்காக மூன்று தாதிகளை அவர்கள் மாற்ற நேரிட்டது. அச்சமயம் கவலையினால் நட்டாஷாவும் அசௌக்கிய மானாள். அந்தக் காலத்தில் ஒருநாள் பால் கொடுப்பதற்காக தாதிகளை ஏற்படுத்துவது இயற்கைக்கு விரோதமானது என்றும், கெடுதலானது என்றும், ரூசோ சொல்லிய கருத்தை பீயர் கூறினார். அந்தக் கருத்தை அவரும் ஒப்புக்கொண்டிருந்தார். அடுத்த குழந்தை பிறந்தவுடன் அவளுடைய தாயாரும் டாக்டர்களும் அவளுடைய கணவரும் குழந்தைக்கு அவள் பால் கொடுக்கக் கூடாது என்றும், அதனால் அவளுக்கு சரீர அசௌக்கியம் ஏற்படும் என்றும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். அக் காலத்தில் உயர் வட்டாரங்களில் குழந்தைகளுக்கு தாயார் பால் கொடுப்பது என்பது கேள்விப்படாத விஷயமாய் இருந்தது. அப்படியெல்லாம் இருந்தும் நட்டாஷா தன்னுடைய குழந்தைக்குத்தானே பால் கொடுத்து வந்தாள். எந்த ஆட்சேபணையையும் அவள் கவனிக்கவில்லை. அதன் பின்னால் பிறந்த எல்லா குழந்தைகளுக்கும் அவளே பால் கொடுத்து வளர்த்து வந்தாள்.

எரிச்சலினால் கணவருக்கும் மனைவிக்கும் வாதப்பிரதி வாதங்கள் ஏற்படுவதுண்டு. அவற்றை பின்னால் பீயர் நினைத்துப் பார்த்தபோது, தம்முடைய எந்தக் கருத்தை அவள் ஆட்சேபித்தாளோ அதையே அவள் செய்து வருவதைக் கண்டு ஆச்சரியமும் மகிழ்ச்சியும் கொள்ளுவார்.

கல்யாணமாகி ஏழு வருஷங்களுக்குப் பின்னால் தாம் ஒரு கெட்ட மனிதர் அல்ல என்ற மகிழ்ச்சியான, உறுதியான நம்பிக்கை பீயருக்கு ஏற்பட்டது. ஏனெனில், தம்முடைய மனைவியிடம் தாம் பிரதிபலிப்பதை அவர் கண்டார். அவருடைய உள்ளத்தில் நல்லதும் கெட்டதும் பிரிக்க முடியாதபடி கலந்து நின்றன. ஆனால் அவரிடமுள்ள நல்ல குணங்கள் மட்டும் அவருடைய மனைவியிடம் பிரதிபலித்தன. நல்லவையால் இல்லாதவை யெல்லாம் நிராகரிக்கப்பட்டன. இந்தப் பிரதிபலிப்பானது தர்க்கரீதியான காரணங்களினால் ஏற்பட்டதல்ல; வேறு ஏதோ ஒரு ஆச்சரியமான நேரடியான சிந்தனையால் ஏற்பட்டதாகும்.

## 11

**ரா**ஸ்டோவ்களோடு பீயர் தங்கியிருந்தபோது இரண்டு மாதங்களுக்கு முன்பாக இளவரசர் தியோடோரிடம் இருந்து ஒரு கடிதம் அவருக்கு வந்தது. பீட்டர்ஸ்பார்க்கிலிருந்த ஒரு சங்கத்தில் பீயர் பிரதானமான ஸ்தாபகர்களில் ஒருவராக இருந்தார். அந்தச் சங்கத்தில் சில முக்கியமான பிரச்னைகளைப் பற்றி விவாதிக்கப்போவதாகவும், அதற்காக பீயர் வரவேண்டுமென்றும் அவர் எழுதியிருந்தார்.

நட்டாஷா எப்போதும் தனது கணவருக்கு வரும் கடிதங்களைப் படிப்பதுண்டு. அந்தக் கடிதத்தைப் படித்ததும் அவர் பீட்டர்ஸ்பர்க்குப் போக வேண்டுமென்று அவளே சொன்னாள். அவர் இல்லாமல் வாழ்க்கை மிகுந்த கஷ்டமாய் இருக்குமென்பதை அவள் அறிந்த போதிலும், அந்த யோசனையை அவள் சொன்னாள். ஏனெனில், அவளுடைய கணவருக்குரிய சிறந்த புத்திசாலித் தனத்தையும், வேதாந்த விசாரணைகளில் உள்ள சிரத்தையையும், அவள் மிகுந்த முக்கியத்தோடு பாராட்டி வந்தாள். அவளுக்கு அவையெல்லாம் புரிவது இல்லை. இருந்தாலும் அம்மாதிரி விஷயங்களில் அவருக்கு இடையூறாக இருக்கக்கூடாது என்று கருதி வந்தாள். அந்தக் கடிதத்தைப் படித்த பின்பு பீயர் கேள்விக் குறியோடு தயக்கமாகப் பார்த்தார். அதற்குப் பதிலாக அவர் போகலாமென்று அவள் சொன்னாள். அதோடு அவர் எந்தத் தேதியில் திரும்பி வருவார் என்று ஒரு நிச்சயமான தேதியை அவர் சொல்ல வேண்டும் என்றும் கூறினாள். அவருக்கு நாலு வாரங்கள் ரஜா கொடுத்தாள்.

அந்த ரஜா காலம் முடிவடைந்து இரண்டு வாரங்களுக்கு மேலாகிறது. அந்த காலத்தில் நட்டாஷா இடைவிடாத பீதியும் மனச் சோர்வும் எரிச்சலும் கொண்டிருந்தாள்.

டெனைசாவ் இப்போது ஒரு ஓய்வு பெற்ற ஜெனரலாக இருக்கிறார். தற்கால அரசியல் நிலைமைகளைப் பற்றி அவர் மிகுந்த அதிருப்தி கொண்டிருந்தார். அந்த இரண்டு வார காலத்தில் அவரும் அங்கே வந்தார். நட்டாஷாவை அவர் துக்கத்தோடும் ஆச்சரியத்தோடும் பார்த்தார். ஒரு காலத்தில் மிகுந்த அன்புள்ளவளாய் இருந்த ஒருத்தியின் தோற்றத்தைக்போல் அவள் அவருக்குத் தோன்றினாள். ஒரு மந்தமான அசிரத்தையான தோற்றமும், வாயில் வந்ததைச் சொல்லும் பதில்களும், குழந்தைகளைப் பற்றிப் பேசுவதும், இவைதான் அவருடைய முன்னாளைய மனம் கவர்ந்தவளிடமிருந்து அவர் பார்த்ததும் கேட்டதுமாகும்.

அந்த இரண்டு வார காலம் முழுவதும் நட்டாஷா சோகமும் எரிச்சலும் கொண்டிருந்தாள். முக்கியமாக, அவளுடைய தாயாரோ, சகோதரரோ, சோனியாவோ, அல்லது கோமகள் மேரியோ அவளைச் சமாதானம் செய்ய முயற்சித்து பீயரை மன்னிக்கும்படி அவளைக் கேட்கும்போதும், அவருடைய தாமதத்திற்கு காரணம் எதுவாய் இருக்கலாம் என்று சொல்லுகிறபோதும் அவளுக்கு அந்தச் சோகமும் எரிச்சலும் அதிகமாயின.

இவையெல்லாம் அசட்டுத்தனம், குப்பை பேச்சு. இந்தப் பேச்சுக்களினால் ஒரு பலனும் கிடையாது. இந்த முட்டாள்தனமான சங்கங்களினால் ஒரு பலனும் கிடையாது'' என்று நட்டாஷா கூறினாள். அந்தப் பேச்சுகளுக்கெல்லாம் மிகுந்த முக்கியத்வம் உண்டு என்பதில் அவள் உறுதியாக இருந்த போதிலும் இம்மாதிரி அவள் பேசினாள்.

அவள் குழந்தைகளின் அறைக்கு பெட்டியாவுக்கு பால் கொடுப்பதற்காக போவாள். அவளுக்கு அவன் ஒருவன்தான் ஆண் குழந்தை. அவளுக்கு அந்த மூன்று மாதக்குழந்தையைப் போல யாரும் இதமாக எதுவும் சொல்ல முடிவதில்லை. அந்தக் குழந்தை அவளுடைய மார்பில் படுத்திருக்கும்போது, அந்தக் குழந்தை அதனுடைய உதடுகளை அசைக்கும்போது, அவன் மூக்கினால் அழுத்தும்போது அவளுக்கு இதமாய் இருந்தது. அந்தக் குழந்தை சொல்லியது: ''நீ கோபமாய் இருக்கிறாய். உனக்குப் பொறாமை இருக்கிறது. அவரைத் தண்டிக்க வேண்டுமென்று விரும்புகிறாய். நீ பயப்படுகிறாய். இதோ நான் இருக்கிறேன். நான் தான் அவர்...'' என்று அந்தக் குழந்தை சொல்வது போல இருந்தது. அவற்றிற்கு அவளால் பதில் கூற முடியாது. அவை முற்றிலும் உண்மையாகத் தோன்றின.

நட்டாஷா கவலை கொண்டிருந்த அந்த இரண்டு வார காலத்தில், தன்னுடைய மனதிற்கு இதம் ஏற்படுவதற்காக அந்தக் குழந்தையை அடிக்கடி எடுத்து வைத்துக்கொண்டிருப்பாள். அந்தக் குழந்தை மீது அவள் அதிக சிரத்தை கொண்டாள். அனாவசியமாக அந்தக் குழந்தைக்கு அவளவுக்கு அதிகமாக உணவு கொடுத்ததால் அது அசௌக்கியமடைந்தது. அவனுடைய அசௌக்கியத்தைக் கண்டு அவள் பீதியுற்றாள். ஆனால் அவளுக்கு வேண்டியது அதுதான். அந்தக் குழந்தைக்கு அவள் சிசுருஷை செய்யும்போது தன்னுடைய கணவரைப் பற்றிய கவலையை அவள் சுலபமாகத் தாங்கிக்கொள்ள முடிந்தது.

தன்னுடைய குழந்தைக்கு சிசுருஷை செய்து கொண்டிருந்த காலத்தில் பீயர் ஏறிவந்த பனிவண்டியின் ஓசை வெளிவாசலில் கேட்டது. அந்த முதியதாதி - தன்னுடைய எஜமானியை எப்படித்

திருப்தி செய்யலாம் என்று அறிந்திருந்தாள்–சப்தம் போடாமல், ஆனால் வேகமாக பிரகாசமுள்ள முகத்தோடு அந்த அறைக்குள் நுழைந்தாள்.

''அவர் வந்துவிட்டாரா?'' என்று நட்டாஷா மெதுவான குரலில் உடனே கேட்டாள். அந்தத் தூங்கிக்கொண்டிருக்கும் குழந்தை விழித்து விடக்கூடாதே என்பதற்காக, அவள் அசையாமல் அப்படியே இருந்தாள்.

''அவர் வந்துவிட்டார், திருமதியே'' என்று அந்தத் தாதி மெதுவாய்க் கூறினாள்.

நட்டாஷாவின் முகம் சிவந்தது. அவளுடைய காலடிகள் அவளை அறியாமலேயே அசைந்தன. ஆனால் அவளால் குதித்து எழுந்திருக்கவோ, வெளியே ஓடவோ முடியவில்லை. அந்தக் குழந்தை மீண்டும் தனது கண்களைத் திறந்து அவளைப் பார்த்தது.

''நீ இங்கேயா இருக்கிறாய்?'' என்று அது சொல்வதுபோலத் தோன்றியது. மீண்டும் அந்தக் குழந்தை தனது உதடுகளை நக்கிக்கொண்டிருந்தது. மெதுவாக அந்தக் குழந்தையைத் தனது மார்பிலிருந்து எடுத்த பின்பு, நட்டாஷா அதை சிறிது தாலாட்டி தாதியிடம் கொடுத்தாள். அதன் பின்னால் வேகமாக வாசலை நோக்கிப் போனாள். ஆனால் அந்த வாசலில் அவளுடைய மனதை ஏதோ உறுத்துவதாகத் தோன்றி அவள் நின்றாள். அதாவது, தன்னுடைய மகிழ்ச்சியில் தன்னுடைய குழந்தையை சீக்கிரமாக விட்டு வந்துவிட்டதைப் போல அவளுக்குத் தோன்றியது. அவள் சுற்றிலும் பார்த்தாள். அந்தத் தாதி தன்னுடைய உயர்த்திய, கைகளில் அந்தக் குழந்தையை வைத்துக்கொண்டு அதைக் கட்டிலில் போடுவதற்காகத் தயாரானாள்.

''திருமதியே, நீ போகலாம். நீ கவலைப்படாதே; நீ போ'' என்று அவள் மெதுவான குரலில் சொன்னாள். ஒரு தாதிக்கும் அவளுடைய எஜமானிக்கும் ஏற்படக்கூடிய அன்னியோன்னியத்தோடு அவள் பேசினாள்.

நட்டாஷா மிருதுவாக காலடிகளை எடுத்து வைத்து முன் அறைக்கு ஓடினாள்.

டெனைசாவ் தமது சுங்கானோடு படிக்கும் அறையிலிருந்து நடன அறைக்கு வந்தார். இப்போதுதான் முதல் தடவையாகப் பழைய நட்டாஷாவை அவர் பார்த்தார். பிரகாசமான, மகிழ்ச்சியான ஒளி அவளுடைய அழகிய முகத்திலிருந்து வீசியது.

''அவர் வந்துவிட்டார்'' என்று அவள் ஓடிக்கொண்டே சொன்னாள். பீயரைப் பற்றி டெனைசாவுக்கு அதிகமாகச் சிரத்தை

கிடையாது. என்றாலும் அவர் திரும்பி வந்ததைக் கண்டு டெனைசாவ் மகிழ்ச்சியடைத்தைப்போல உணர்ந்தாள்.

முன் அறையை அடைந்ததும், ரோம சட்டையோடு நின்றுகொண்டிருந்த உயரமான ஒருவர் கழுத்துப் பட்டியை அவிழ்த்துக்கொண்டிருப்பதை நட்டாஷா பார்த்தாள்.

''அவரேதான்; உண்மையில் அவர்தான். அவர் வந்துவிட்டார்'' என்று அவள் தனக்குள் சொல்லிக்கொண்டு அவரிடம் ஓடினாள். அவரை அணைந்து கொண்டு அவருடைய தலையை தனது மார்பில் அழுத்தினாள். பின்னால் அவரை விலக்கி உறைபனியால் மூடப்பட்டிருந்த அவருடைய புஷ்டியான, மகிழ்ச்சியான முகத்தை நோக்கினாள். ''ஆமாம், அவரேதான். சந்தோஷமாகவும் திருப்தியாகவும் இருக்கிறார்...''

உடனே கடந்த இரண்டு வாரங்களாக அவள் அனுபவித்த துன்பங்களையெல்லாம் நினைவுகூர்ந்தாள்; அவள் முகத்தில் ஒளிர்விட்டுக் கொண்டிருந்த மகிழ்ச்சி உடனே மறைந்தது. அவள் முகம் சுளித்து கோபமான வார்த்தைகளையும் கண்டனங்களையும் மழைபோல பீயர்மீது பொழிந்தாள்.

''ஆமாம், உமக்கு எல்லாம் நன்றாய்த்தான் இருக்கும். நீர் மகிழ்ச்சியோடு இருக்கிறீர். உமக்கு நன்றாக நேரம் போயிற்று... ஆனால் என்னைப்பற்றி என்ன? குறைந்தது உமது குழந்தை களுக்காகவாவது நீர் கொஞ்சம் இரக்கம் காட்டியிருக்கவேண்டும். இங்கே நான் குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். எனது பால் வற்றிப்போயிற்று,...பெட்டியாவின் உயிருக்கு ஆபத்தான நிலைமை ஏற்பட்டது. ஆனால் நீர் மகிழ்ச்சியாய் காலம் கழித்தீர். மகிழ்ச்சியாக...''

தம்மைக்குறைகூற முடியாது என்பதை பீயர் அறிவார். ஏனெனில் அதற்கு முன்பாக அவரால் வரமுடியவில்லை. இந்தக் கோப வார்த்தைகள் எல்லாம் முறையற்றவை என்பதையும், ஒன்றிரண்டு நிமிஷங்களில் மறைந்து விடுமென்பதையும் அவர் அறிவார். எல்லாவற்றிற்கும் மேலாகத் தாம் மகிழ்ச்சியோடும் களிப்போடும் இருப்பதையும் அவர் அறிவார். அவர் புன்முறுவல் காட்ட விரும்பினார். ஆனால் அம்மாதிரி செய்வதற்கு நினைக்கக் கூட அவர் துணியவில்லை. அவர் ஒரு இரக்கமான பீதியுற்ற தோற்றத்தோடு கீழே குனிந்தார்.

''நான் உண்மையாகச் சொல்லுகிறேன். என்னால் முன்னாலேயே வர முடியவில்லை. இப்போது பெட்டியா எப்படியிருக்கிறான்?''

''இப்போது சரியாய் இருக்கிறான். வாரும் போகலாம், நீர் செய்ததைக் கண்டு வெட்கம் அடையாமல் இருப்பதற்காக நான்

ஆச்சரியமடைகிறேன். நீர் இல்லாமல் நான் எப்படி இருந்தேன், எம்மாதிரி கஷ்டப்பட்டேன் என்பதை மட்டும் உம்மால் பார்க்க முடிந்திருந்தால்!''

''இப்போது நீ சௌக்யமாய் இருக்கிறாய் அல்லவா?''

''வாரும், வாரும்'' என்று அவள் சொல்லி அவருடைய கையை விடாமல் பற்றிக்கொண்டிருந்தாள். பின்னால் அவர்கள் இருவரும் அவர்களுடைய அறைகளுக்கப் போனார்கள்.

நிக்கலஸூம் அவருடைய மனைவியும் பீயரைப் பார்க்க வந்தபோது, அவர் குழந்தைகளின் அறையில் தம்முடைய கடைசிக் குழந்தையை எடுத்து வைத்துக்கொண்டிருந்தார். அந்தக் குழந்தை இப்போது மீண்டும் விழித்து விட்டது. தம்முடைய வலது உள்ளங்கையால் அதைத் தாங்கி ஆட்டிக் கொண்டிருந்தார். ஒரு மகிழ்ச்சியான, பிரகாசமான புன்முறுவல் அந்தக் குழந்தையின் அகலமான முகத்தில் தோன்றியது. அதனுடைய பல்லற்ற வாயை அது திறந்தது. புயல் காற்றெல்லாம் வெகு நேரத்திற்கு முன்பே ஓய்ந்து போயிற்று. இப்போது பிரகாசமான, மகிழ்ச்சியான ஒளியானது நட்டாஷாவின் முகத்தில் அவள் அவளுடைய கணவரையும் குழந்தையையும் பார்த்தபோது தோன்றியது.

''இளவரசர் தியோடோருடன் எல்லா விஷயங்களையும் நன்றாகப் பேசிமுடித்து விட்டீரா?'' என்று அவள் கேட்டாள்.

''ஆமாம், மிகுந்த சிலாக்கியமாக முடிந்துவிட்டது.''

''இதோ பாரும், அவன் தலையை உயர்த்திக் கொண்டிருக் கிறான். அவன் எம்மாதிரி என்னைப் பயமுறுத்திவிட்டான் தெரியுமா!... நீர் அந்த இளவரசியைப் பார்த்தீரா? அவள்... அவரோடு காதல் கொண்டிருப்பது உண்மையா?''

''ஆமாம், அதெல்லாம் மனோராஜ்யம்...''

அச்சமயத்தில் நிக்கலஸூம் கோமகள் மேரியும் உள்ளே வந்தார்கள். பீயர் அந்தக் குழந்தையை தமது கையில் வைத்துக்கொண்டு கீழே குனிந்தார். அவர்களை முத்தமிட்டார். அவர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொன்னார். எவ்வளவோ சுவாரஸ்யமான விஷயங்கள் இருந்தபோதிலும், அவற்றைப்பற்றி எவ்வளவோ பேசவேண்டியதிருந்த போதிலும், தனது தலையில் சிறிய தொப்பியை அணிந்துகொண்டிருந்த அந்தக் குழந்தையானது அவருடைய கவனம் முழுவதையும் இழுத்துக்கொண்டிருந்தது.

''எவ்வளவு இனிமையாய் இருக்கிறது!'' என்று கோமகள் மேரி அந்தக் குழந்தையோடு விளையாடிக் கொண்டே கூறினாள். ''இதோ பாரும் நிக்கலஸ்'' என்று அவள் தனது கணவரைப் பார்த்துக்

கூறினாள். ''இந்த இனிமையான அற்புதங்களின் கவர்ச்சியை நீர் எப்படி அறிய முடியாமல் இருக்கிறீர் என்பதை என்னால் அறிய முடியவில்லை.''

''என்னால் முடியவில்லை. என்னால் முடியவும் முடியாது'' என்று நிக்கலஸ், அந்தக் குழந்தையை கனிவற்ற விதமாய் நோக்கிப் பதில் சொன்னார். ''இது ஒரு மாமிசப் பிண்டம். வாரும் போகலாம், பீயர்.''

''அப்படியிருந்த போதிலும், அவர் மிகுந்த அன்பு கொண்ட ஒரு தந்தையாக இருக்கிறார்'' என்று கோமகள் மேரி தனது கணவரை ஆதரிக்கும் விதத்தில் பேசினாள். ''குழந்தைகள் ஒரு வருஷத்துக்கு மேலான பின்புதான் அவருக்கு அம்மாதிரி அன்பு ஏற்படுகிறது.''

''பீயர் குழந்தைகளை ரொம்ப சிலாக்யமாக சிச்ருஷை செய்து பார்த்துக் கொள்கிறார்'' என்று நட்டாஷா சொன்னாள். தம்முடைய கையானது ஒரு குழந்தையை தாங்கிக்கொள்ளுவதற்காகவே ஏற்பட்டது என்று அவர் சொல்லுகிறார், இதோ பார்.''

''ஆனால், இதற்காக அல்ல...'' என்று பீயர் திடீரென்று கூறினார். ஒரு சிரிப்போடு அந்தக் குழந்தையைத் தூக்கி அங்கிருந்த தாதியிடம் கொடுத்தார்.

## 12

ஒவ்வொரு பெரிய குடும்பத்திலும் இருப்பதைப்போலவே பால்ட்ஹில்ஸிலும் பல தனித்த உலகங்கள் இருந்து வந்தன. என்றாலும் அவையெல்லாம் இணைந்து ஒன்றாய் நின்றன. அவை ஒவ்வொன்றும் சுயமான குண விசேஷங்களைக் கொண்டிருந்த போதிலும், மற்றவர்களுக்காக விட்டுக்கொடுத்து வந்தன. மகிழ்ச்சியாகவோ, அல்லது துக்கமாகவோ அந்த வீட்டில் நடக்கும் ஒவ்வொரு சம்பவமும் இந்த உலகங்களுக்கு எல்லாம் முக்கியமானவையாய் இருக்கும். ஆனால் ஒவ்வொரு கூட்டத்திற்கும் சம்பவத்தைக் கண்டு சந்தோஷப்படுவதற்கும் அல்லது துக்கப்படுவதற்கும் வெவ்வேறு சொந்த காரணங்கள் இருக்கும். அதாவது, மற்றவர்கள் நினைக்கும் காரணங்களுக்குப் புறம்பானதாய் இருக்கும்.

உதாரணமடாக பீயர் திரும்பி வந்தது ஒரு மகிழ்ச்சியான, முக்கியமான சம்பவம். எல்லாரும் அதே மாதிரியாகவே உணர்ந்தார்கள்.

தங்களுடைய எஜமானர்களைப் பற்றி நன்றாக மதிப்பிடக் கூடியவர்கள் வேலைக்காரர்களாகும். ஏனென்றால், அவர்கள்

தங்களுடைய எஜமானர்களைப்பற்றி அவர்களுடைய உரையாடல் களிலிருந்தோ, அல்லது அவர்கள் காட்டும் உணர்ச்சிகளிலிருந்தோ மதிப்பிடுவதில்லை; எஜமானர்கள் செய்யும் செய்கைகளிலிருந்தும் நடத்தும் வாழ்க்கைகளிலிருந்துமே அவர்கள் மதிப்பிடுகிறார்கள். அந்த வேலைக்காரர்கள் பீயர் திரும்பி வந்ததைப்பற்றி மகிழ்ச்சி கொண்டார்கள். ஏனென்றால், பீயர் திரும்பி வந்து அங்கே தங்கும்போது கோமகன் நிக்கலஸ் தினந்தோறும் எஸ்டேட் வேலைகளைக் கவனிப்பதற்காக வெளியே போவதை நிறுத்திவிடுவார் என்றும், அவர் நல்ல சுபாவத்தோடும் குணத்தோடும் இருப்பார் என்றும், எல்லோருக்கும் விடுமுறை நாட்களில் நல்ல வெகுமதிகள் கிடைக்குமென்றும் நினைத்தார்கள்.

குழந்தைகளும், தாதிகளும், உபாத்தியாயினிகளும் பீயர் திரும்பி வந்ததைக் கண்டு சந்தோஷமடைந்தார்கள். ஏனென்றால், குடும்ப வாழ்க்கையில் அவர்களை பீயர் ஆதரிப்பதைப்போல வேறு யாரும் செய்வதில்லை. அவர் ஒருவர்தான் கிளாவிகார்ட் என்ற வாத்தியத்தில் ஒரு ராகத்தை வாசிப்பார். அந்த ஒரு ராகத்தை வாசித்தால்தான், அவர் சொல்லுகிறபடி, எந்தவிதமான நடனத்தையும் ஆட முடியும். அதோடுகூட, அவர்களுக்கெல்லாம் அவர் வெகுமதிகள் வாங்கி வந்திருப்பார் என்றும் நிச்சயமாக நம்பினார்கள்.

குஞ்சு நிக்கலஸுக்கு இப்போது பதினைந்து வயதாயிற்று. ஒல்லியான, அழகான உடல்வனப்போடு புத்திசாலியாகவும் இருந்தான். அவனுடைய மெல்லிய பழுப்பு நிறத் தலை முடியானது சுருளை சுருளையாய் இருந்தது. கண்கள் அழகாய் இருந்தன. அவர் பீயர் மாமா திரும்பி வந்ததைக் கண்டு மகிழ்ச்சி கொண்டான். பீயரை 'மாமா' என்றுதான் அவன் அழைப்பது வழக்கம். அவரிடம்தான் அவன் பரவசமும் ஆர்வமும் கொண்டஅன்போடு இருந்தான். பீயர் மீது அவனுக்குள்ள இந்த அன்பை அவனுக்கு யாரும் புகட்டவில்லை. அவன் அவரைப் பார்ப்பதே அபூர்வம்தான். கோமகள் மேரி அவனைக் கவனித்து வளர்த்து வந்தாள். அவள் தன்னுடைய கணவர்மீது தான் பிரியம்கொண்டு இருப்பதைப்போல, அவனும் பிரியம் கொள்ளும்படி செய்வதற்கு அவளால் முடிந்தவரை முயற்சி செய்து பார்த்தாள். குஞ்சு நிக்கலஸ் தன்னுடைய மாமா மீது பிரியம் கொண்டுதான் இருந்தான். அந்தப் பிரியமானது ஒரு இகழ்ச்சியோடு கலந்ததாக இருந்தது. ஆனால் பீயரையோ அவன் போற்றி வந்தான். அவன் ஒரு குதிரை வீரனாகவோ, அல்லது நிக்கலஸ் மாமாவைப் போல, ஒரு செயின்ட் ஜார்ஜ் வீரனாகவோ வருவதற்கு விரும்பவில்லை. அவன் பீயரைப்போல நன்றாகப் படித்து, புத்தி

சாலியாகவும், அன்போடும் இருக்கவே விரும்பினான். பீயருடைய முன்னிலையில் அவனுடைய முகம் எப்போதுமே மகிழ்ச்சியினால் பிரகாசித்துக் கொண்டிருக்கும். பீயர் அவனுடன் பேச ஆரம்பித்தால், அவன் முகம் சிவந்து மூச்சுவிடாமல் இருப்பான். அவர் பேசும்போது ஒரு வார்த்தையைக்கூட அவன் தவறவிடுவது இல்லை. பின்னால் டெஸ்ஸலெஸ்ஸிடமோ, அல்லது தனக்குத்தானோ அந்த வார்த்தைகளை நினைவு கூர்ந்து, பீயர் சொன்ன ஒவ்வொன்றின் பொருளையும் மீண்டும் யோசிப்பான். பீயருடைய கடந்தகால வாழ்க்கையும், 1812ஆம் வருஷத்திற்கு முன்பாக அவருக்கு இருந்த மகிழ்ச்சி குறையும் (அதைப்பற்றி குஞ்சு நிக்கலஸ், அவள் கேள்விப்பட்ட சில பேச்சுக்களிலிருந்து ஒரு தெளிவற்ற கவித்துவமான சித்திரத்தை அமைத்திருந்தான்), மாஸ்கோவில் அவர் அடைந்த அனுபவங்களும், அவர் சிறைவாசம் செய்ய நேரிட்டதும், பிளாட்டோன் காராட்டேவின் கூட்டுறவும் (அவனைப் பற்றிப் பீயரிடமிருந்து அவன் அறிந்து கொண்டான்), நட்டாஷா மீது அவருக்குள்ள அன்பும் (நட்டாஷா மீது இந்தச் சிறுவனும் கூட முக்கியமான மிகுந்த பிரியம் கொண்டிருந்தான்), முக்கியமாகத் தன்னுடைய தந்தையிடம் பீயருக்கு ஏற்பட்டிருந்த நட்பும் எல்லாம் ஒன்று சேர்ந்து பீயரை அவனுடைய உள்ளத்தில் ஒரு வீரனாகவும், மகாத்மாவாகவும் மதிக்கும்படி செய்தன.

நட்டாஷாவைப் பற்றியும் தன்னுடைய தந்தையைப் பற்றியும் அவள் கேள்விப்பட்ட பேச்சுகளிலிருந்தும், தன்னுடைய இறந்துபோன தந்தையைப் பற்றி மிகுந்த உணர்ச்சியோடு பீயர் பேசுவதைக் கேட்டதிலிருந்தும், மிகுந்த கனிவான மரியாதையோடு நட்டாஷா அவரைப் பற்றிப் பேசுவதைக் கேட்டதிலிருந்தும், அந்தச் சிறுவன் நட்டாஷா மீது தன்னுடைய தந்தை மிகுந்த பிரியம் கொண்டிருந்தார் என்றும், அவருடைய மரண காலத்தில் அவளை அவருடைய நண்பரிடம் விட்டுப் போனார் என்றும் யூகித்துக் கொண்டான். அவனுக்கு உருவம் ஞாபகம் இல்லாத அவனுடைய தந்தையின் நினைவானது, உருவம் செய்து காட்டமுடியாத ஒரு தெய்வத்தைப்போலத் தோன்றியது. அவரை அவன் நினைக்கும்போதெல்லாம் அவன் உள்ளம் விம்மி ஆர்வத்தினாலும் சோகத்தினாலும் கண்ணீர் பொங்குவதுண்டு. ஆகவே, பீயர் திரும்பிவந்து விட்டார் என்பதைக் கேட்டு, அந்தச் சிறுவனும் மகிழ்ச்சி கொண்டான்.

அங்கிருந்த விருந்தினர்களும் பீயர் திரும்பி வந்ததை சந்தோஷத்தோடு வரவேற்றார்கள். ஏனென்றால், அவர் எந்தக் கூட்டத்தில் இருக்கிறாரோ, அந்தக் கூட்டம் ஒன்று சேர்ந்திருக்கும்படியும், உற்சாகமாய் இருக்கும் படியும் அவர் எப்பொழுதுமே செய்து வந்தார்.

அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த வயதுவந்தவர்கள் எல்லோரும்—அவர் மனைவியைப் பற்றி சொல்ல வேண்டியதே இல்லை—தங்களுடைய நண்பர் திரும்பி வந்து விட்டபடியால், இனி வாழ்க்கை அமைதியாகவும் மிருதுவாகவும் நடந்துபோகும் என்று நினைத்தார்கள்.

முதிய சீமாட்டிகள் எல்லோரும் பீயர் அவர்களுக்கு வாங்கி வந்த பரிசுகளைக் கண்டு மகிழ்ச்சிகொண்டார்கள். முக்கியமாக, நட்டாஷா இனிமேல் சாந்தமாக இருப்பாள் என்பதற்காகவும் அவர்கள் மகிழ்ச்சி கொண்டார்கள்.

இம்மாதிரியான வெவ்வேறு வகையான உலகங்களின் உணர்ச்சிகளை பீயர் அறிவார். ஆகவே அவர்கள் எதிர்பார்த்திருந்தவைகளைத் திருப்தி செய்வதற்கு அவர் ஆரம்பித்தார்.

அதிகமான ஞாபக மறதியும் பராக்கு புத்தியும் கொண்டவராக பீயர் இருந்த போதிலும், அவருடைய மனைவி ஒரு ஜாபிதா தயார் செய்து கொடுத்தபடியால், அதன் உதவியினால் ஒவ்வொரு சாமானையும் வாங்கி வந்தார். அவருடைய மாமியாரையும் மைத்துனர் சொன்ன வேலைகளையும் மறந்துவிடவில்லை. பெலோவாவின் உடைகளுக்கு வேண்டிய துணிகளையும் தம்முடைய மனைவியின் மருமகன்களுக்கு வேண்டி விளையாட்டுச் சாமான்களையும் வாங்குவதற்கு அவர் மறக்கவில்லை. திருமணமான ஆரம்ப நாட்களில் அவர் வாங்கிவருவதாக ஒப்புக்கொண் சாமான்களையெல்லாம் மறக்காமல் வாங்கிவருவார் என்று அவருடைய மனைவி எதிர்பார்த்ததைக் கண்டு அவருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. அவர் முதல் தடவையாக வெளியூர் போய்விட்டுத் திரும்பியபோது, அவள் சொல்லிய சாமான்களில் ஒன்றைக்கூட அவர் வாங்காமல் மறந்துவிட்டதைக் கண்டு அவள் மிகுந்த கோபம் கொண்டாள். அதைப் பார்த்த பீயர் திகைத்துப் போனார். இப்போது வரவர அந்தப் பழக்கம் அவருக்கு மாறிவிட்டது. நட்டாஷா தனக்காக எதையும் கேட்கவில்லை; மற்றவர்களுக்காகத் தான் அவள் ஜாபிதாவை தயார் செய்தாள். அதுவும் அவர் அவளைக் கேட்டுக்கொண்ட பின்புதான் தயார் செய்தாள். இப்போது வீட்டிலுள்ள—ஒவ்வொருவருக்கும் ஒரு பரிசு வீதம் வாங்கிவந்து ஒன்றையும் மறக்காமல் கொண்டுவந்ததைக் கண்டு அவருக்கு ஒரு குழந்தையைப் போன்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. இச் சமயம் அவரை நட்டாஷா கண்டித்தாள் என்றால், அது நேர்எதிரான விஷயமாகும். அதாவது, அதிகமான பரிசுகளையும் விலையுயர்ந்த சாமான்களையும் அவர் வாங்கி வந்ததற்காகவே அவள் கண்டித்தாள். மற்றவர்கள் அவளிடம் காண்கிற குறைகளைப் பீயர் குணங்களாகக் கொண்டார். அந்தக் குறைகள்

என்னவென்றால், அவள் தன்னைப் பற்றிக் கவனிக்காமல் இருந்ததோடு, இப்போது செலவிலும், கஞ்சத்தனம் செய்ய ஆரம்பித்ததாகும்.

ஒரு குடும்பஸ்தராக பீயர் வாழ்க்கையை நடத்த ஆரம்பித்த காலத்தில், அவருக்கு ஏற்பட்டுவந்த ஏராளமான செலவை இப்போது அவள் பாதியாக குறைத்துவிட்டதைக் கண்டு அவர் ஆச்சரியமடைந்தார். அவருடைய முதல் மனைவி ஏற்படுத்தி வைத்துவிட்டுப்போன கடன்களால்தான் அவருடைய செல்வ நிலை குழப்பம் அடைந்திருந்தது. இப்போது அது மிகுந்த அபிவிருத்தியடைய ஆரம்பித்து விட்டது.

சிக்கனமாக செலவு செய்து வந்தபடியால் வாழ்க்கைச் செலவு வெகு தூரம் குறைந்து போய்விட்டது. அபரிமிதமாக செலவாகக்கூடிய சுகானுபவங்களையோ, அடிக்கடி மாற்றிக் கொள்ளக்கூடிய வாழ்க்கையையோ அவர் இப்பொழுது மேற்கொள்ளுவது இல்லை. அம்மாதிரி வாழ்க்கையை அவர் விரும்பவும் இல்லை. இப்போது அமைந்துள்ள வாழ்க்கை முறையானது, அவருடைய மரணகாலம் வரையில் மாறாதென்றும், அதை மாற்றுவதற்கு அவரிடம் சக்தியில்லையென்றும் அவர் நினைத்தார். ஆகவே அம்மாதிரி வாழ்க்கையினால் சிக்கனம் ஏற்பட்டது.

ஒரு மகிழ்ச்சியான புன்னகைத் தோற்றத்தோடு பீயர் தாம் வாங்கி வந்தவைகளை பரப்பி வைத்துக்கொண்டிருந்தார்.

''நீ இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்று அவர் கூறி ஒரு கடைக்காரனைப்போல ஒரு துணி மடிப்பை விரித்துக் காட்டினார்.

அவருக்கு எதிராக நட்டாஷா தனது மடியில் மூத்த பெண்ணைவைத்துக் கொண்டிருந்தாள். அவள் திடீரென்று ஜொலிக்கும் கண்களோடு அவளுக்கு காட்டிய துணியைப் பார்த்தாள்.

''இந்தத் துணி பெலோவாவிற்கா? மிகுந்த சிலாக்கியமானது'' என்று அவள் சொல்லிவிட்டு, அதைத் தொட்டுப் பார்த்தாள். ''இந்த துணி ஒரு கெஜத்திற்கு ஒரு ரூபிள் இருக்கும் என்று நான் நினைக்கிறேன்''.

பீயர் அதன் விலையை அவளுக்குச் சொன்னார்.

''ரொம்ப விலை உயர்ந்தது'' என்று நட்டாஷா கூறினாள். ''குழந்தைகள் எல்லாம், அம்மாவும்கூட, இதைக் கண்டு எவ்வளவு சந்தோஷம் அடைவார்கள் தெரியுமா? எனக்கு நீர் இதை வாங்கி வந்திருக்க வேண்டியதில்லை'' என்று சொல்லிவெட்டு, முத்துக்கள் பதித்து ஒரு தங்கச் சீப்பை அவள் பெரும் மகிழ்ச்சியோடு பார்த்து,

தனது புன்னகையை அடக்க முடியாமல் காட்டினாள். அந்தச் சீப்புதான் அப்போது மோஸ்தராக இருந்தது.

''அதை வாங்கும்படி அடலி என்னை வற்புறுத்திக் கொண்டிந்தாள். அதை வாங்கும்படி மீண்டும் மீண்டும் அவள் சொல்லிக்கொண்டே யிருந்தாள்'' என்று பீயர் சொன்னார்,

''நான் இதை எப்போது அணிந்துகொள்ள வேண்டும்'' என்று நட்டாஷா கேட்டுக்கொண்டே அந்த சீப்பை தன்னுடைய தலைமுடிச் சுருளில் செருகினாள், ''நான் குஞ்சு மாஷாவை உயர் வட்டாரத்தில் அறிமுகம் செய்யும்போது இதை அணிந்து கொள்ளுவதா? ஒரு வேளை அச்சமயம் இந்த சீப்பு மீண்டும் புது மோஸ்தராக விளங்கலாம். நல்லது, நாம் இப்போது போவோம்.''

அந்தப் பரிசுகளை எடுத்துக்கொண்டு முதலாவதாக குழந்தைகள் இருக்கும் இடத்திற்குப் போனார்கள். அதன்பின்னால் முதிய கோமகளின் அறைகளுக்குப் போனார்கள்.

அந்தக் கோமகள் தனது சிநேகிதையான பெலோவாவுடன் 'பேஷன்ஸ்' என்ற விளையாட்டை வழக்கம்போல விளையாடிக் கொண்டிருந்தாள், அச்சமயம் பீயரும் நட்டாஷாவும் அந்த வரவேற்பு அறைக்கு பரிசு மூட்டைகளைக் கைகளில் எடுத்துக்கொண்டு வந்தார்கள்.

கோமகளுக்கு இப்போது அறுபது வயதுக்கு மேலாகிவிட்டது. அவளுடைய தலைமுடி முழுவதும் நரைத்துவிட்டது. சுற்றிலும் ஜாலர் வேலை செய்த ஒரு குல்லாயைத் தலையில் அணிந்திருந்தாள். அவளுடைய முகம் சுருங்கி இருந்தது. அவளுடைய மேல் உதடு உள்ளே அமுங்கி இருந்தது. அவளுடைய கண்கள் மங்கலாய் விட்டன.

அவளுடைய குமாரனும் கணவரும் தொடர்ச்சியாக இறந்துபோனதற்கு பின்பு, அவள் இந்த உலகத்திலேயே எல்லோராலும் மறக்கப்பட்டவள்போலவும், இந்த உலகத்தில் எந்தவிதமான நோக்கமோ கருத்தோ கொண்டிராத வாழ்க்கையை நடத்தி வருகிறவள் போலவும் உணர ஆரம்பித்தாள். அவள் உண்டு, குடித்து, உறங்கி வந்தாலும் அல்லது விழித்துக் கொண்டிருந்தாலும், அவள் வாழ்ந்து வருவதாகச் சொல்வதற்கில்லை. ஏனெனில், வாழ்க்கையில் புதிய சுவாரஸ்யம் எதுவும் அவளுக்கு ஏற்படவில்லை. வாழ்க்கையிலிருந்து அவள் எதையும் எதிர்பார்க்கவில்லை; அமைதி ஒன்றையே அவள் விரும்பினாள். அந்த அமைதியை மரணம் ஒன்றே அவளுக்குக் கொடுக்க முடியும். ஆகவே அந்த மரணம் வரையில் அவள் வாழ்ந்துதான் தீரவேண்டும். அதாவது, தன்னுடைய சக்தியை உபயோகித்து அவள் வாழ்ந்தாக

வேண்டும். மிகச் சிறிய குழந்தைகளிடமும் மிகவும் வயதான மனிதர்களிடமும் காணப்படக் கூடிய ஒரு விசேஷமான அம்சத்தை அவளிடம் இப்போது காணலாம். அதாவது, அவளுடைய வாழ்க்கைக்கு எந்தவிதமான வெளிப்படையான நோக்கமும் கிடையாது. ஆனால் அவள் தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தாக வேண்டும். அவள் சாப்பிட்டாக வேண்டும்; தூங்கியாக வேண்டும்; பேசியாக வேண்டும்; வேலை செய்தாக வேண்டும்; கோபத்தைக் காட்டியாக வேண்டும். இம்மாதிரியாக அவள் செய்ய வேண்டியிருந்தது. ஏனென்றால், அவளுக்கு ஒரு வயிறு இருந்தது. மூளை, நரம்புகள், தசைகள், ஈரல்கள் இருந்தன. எந்தவிதமான வெளிக்கட்டாயத்திற்காகவும் இவைகளைச் செய்யவில்லை. அதாவது, முற்றிலும் ஆரோக்கியமாகவும் உயிர்த்துடிப்போடும் இருக்கிறர்வகள் செய்கிற மாதிரி, அவள் வெளிக்கட்டாயத்திற்காக இவைகளைச் செய்வதில்லை. தன்னுடைய நாக்கிற்கும் சுவாசப்பைகளுக்கும் வேலை கொடுக்க வேண்டும் என்பதற்காகவே அவள் பேசி வந்தாள். மூக்கிலுள்ள அடைப்பை நீக்குவதற்காகவே அவள் அழுது வந்தாள். பூரண ஆரோக்கியத்தோடு இருக்கும் மக்களுக்கு ஒரு நோக்கமாகத் தோன்றி வரும் காரியங்கள் அவளுக்கு வெறும் சால்ஜாப்பாகத் தோன்றின.

இம்மாதிரியாக காலை வேளையில்–அவள் முதல் நாளன்று பலமாகச் சாப்பிட்டிருந்தால்–அவள் கோபமாக இருப்பதுண்டு. பெலோவாவுக்கு காது செவிடாய் இருந்தபடியால், அதை ஒரு சால்ஜாப்பாக வைத்துக் கொண்டு அவள் கோபப்படுவாள்.

அவள் பெலோவாவிடம் மெதுவான குரலில் அந்த அறையின் மற்றொரு பக்கத்திலிருந்து ஏதாவது சொல்லுவாள், ''இன்று காலநிலை வெது வெதுப்பாக இருக்கிறது அல்லவா, எனது அன்பே?'' என்று அவள் மெதுவாக முனங்குவாள்.

ஆனால் பெலோவா, ''ஓ, ஆமாம், அவர்கள் வந்து விட்டார்கள்'' என்று சொல்லுவாள். உடனே கோமகள் கோபமாக ''ஓ கடவுளே, இவள் எவ்வளவு முட்டாளாகவும், எவ்வளவு செவிடாகவும் இருக்கிறாள்'' என்று முனங்குவாள்.

மற்றொரு சால்ஜாப் அவளுடைய நாசிப்பொடியாக இருக்கும்., சில சமயங்களில் அது ரொம்பவும் காய்ந்து போய் இருக்கும். சில சமயங்களில் ரொம்ப ஈரமாய் இருக்கும்; அல்லது அது அவ்வளவு மென்மையாக இருக்காது. இந்த மாதிரி காரணங்களால் அவள் கோபம் அடைந்தபின்பு, அவருடைய முகமானது மஞ்சள் நிறமாக மாறும். அவளுடைய தோழிகள் இந்த அடையாளங்களிலிருந்து அவளுடைய மனநிலையை அறிந்துகொள்ளுவார்கள். அதாவது, பெலோவா என்போது செவிடாக இருப்பாள், எப்போது அந்த

நாசிப்பொடி ஈரமாய் இருக்கும், எப்போது கோமகளின் முகம் மஞ்சளாக மாறும் என்பதை அவர்கள் அறிவார்கள். அவளுடைய ஈரலுக்கு வேலை கொடுக்க வேண்டியது எவ்வளவு அவசியமாய் இருந்ததோ, அதே மாதிரி அவளுடைய மூளைக்கும் வேலை கொடுக்க வேண்டியது அவசியமாய் இருந்தது. அந்த மூளை இன்னமும் வேலை செய்து கொண்டிருந்த படியால், அதற்கு வேலை கொடுப்பதற்காக அவள் சில சமயங்களில் சிந்தனை செய்வாள். அம்மாதிரி சிந்தனை செய்வதற்கு 'பேஷன்ஸ்' என்ற சீட்டு விளையாட்டு ஒரு சால்ஜாப்பாய் இருந்தது. அவள் அழுவதற்கு விரும்பும் போது காலஞ்சென்ற கோமகன் ஒரு சால்ஜாப்பாய் இருப்பார். அவள் பரபரப்படைய விரும்பும்போது நிக்கலஸைப் பற்றியும், அவளுடைய ஆரோக்கியத்தைப் பற்றியும் சால்ஜாப்பாகக் கொள்ளுவாள். துவேஷமாகப் பேசுவதற்கு அவள் விரும்பும்போது கோமகள் மேரியை சால்ஜாப்பாக்குவாள். அவருடைய குரலுக்கு வேலை கொடுக்க அவள் விரும்பும் போது வழக்கமாக மாலை ஏழு மணிக்கு, டின்னர் சாப்பிட்ட பின்பு, ஓய்வு கொண்டிருக்கும் நேரத்தில், அந்த வேலையை அவள் செய்வாள். அதாவது பழைய கதைகளை திரும்பத் திரும்ப முன்னால் சொன்னவர்களுக்கு சொல்லிக் கொண்டே இருப்பாள்.

அந்த முதிய சீமாட்டியின் நிலைமையை அந்த வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் அறிவார்கள். ஆனால் ஒருவரும் அதைப் பற்றிப் பேசுவதில்லை. எல்லாருமே அவளுக்குத் திருப்தி ஏற்படும் விதத்தில் சாத்தியமானவைகளை யெல்லாம் செய்து வந்தார்கள். அவளுடைய நிலைமையை அறிந்தவர்கள் போல எப்பொழுதாவது ஒரு சோகமான புன்சிரிப்போடு நிக்கலஸும் பீயரும் நட்டாஷாவும் கோமகள் மேரியும் கண்ணடித்துக் கொள்ளுவார்கள்.

அந்த கண்ணடிப்புகள் வேறு சில விஷயங்களையும் கூறுவதுபோல இருக்கும். அதாவது, அவளுடைய வாழ்க்கையை வாழ்ந்து முடித்துவிட்டது போலவும், இப்பொழுது அவர்கள் பார்ப்பது அவளுடைய பூரணமான தன்மை இல்லாததுபோலவும், நாம் எல்லோரும் அம்மாதிரி ஒரு நாள் வருவோம் என்பது போலவும், ஆகவே சந்தோஷமாக அவளுடைய கோரிக்கைகளுக்கு இணங்குவது போலவும் அந்தக் கண்ணடிப்புகள் இருக்கும். அதோடு ஒரு காலத்தில் மிகுந்த அருமையாக விளங்கிய அந்த கோமகளுக்கு, தங்களைப் போலவே பூரண உயிர்த்துடிப்போடு விளங்கிய அவளுக்கு தாங்கள் பரிவு காட்டி இரக்கம் கொள்ள வேண்டும் என்பதுபோல அந்தக் கண்ணடிப்புகள் இருக்கும்.

நெஞ்சில் ஈரமில்லாதவர்களும் அறிவில்லாதவர்களும் சிறு குழந்தைகளும் தான் இதை அறிந்துகொள்ள முடியாமல் அவளைத் தவிர்த்து வந்தார்கள்.

## 13

பீயரும் அவருடைய மனைவியும் அறைக்குள் நுழைந்த போது முதிய கோமகள் வழக்கமாக உள்ள ஒரு வேலையில் ஈடுபட்டிருந்தாள். அதாவது, மனதிற்கு வேலை கொடுக்கவேண்டும் என்ற காலத்திலெல்லாம் 'பெஷன்ஸ்' சீட்டு விளையாட்டை அவள் விளையாடுவதுண்டு. ஆகவே, பழக்கமான சுபாவத்தினால் பீயரோ, அல்லது அவளுடைய குமாரரோ எங்காவது வெளியூர் போய்விட்டுத் திரும்பி வந்தால் அவள் சொல்லுகிறபடி, இப்பொழுதும் கூறினாள். ''எனது அன்பே, எத்தனை நாட்களாகிவிட்டன. உமக்காக நாங்கள் எல்லோரும் காத்திருந்து மனம் சோர்ந்து போயிருக்கிறோம். நல்லது, கடவுளுக்கு நன்றி'' என்று சொன்னாள். அதே மாதிரி அவளுடைய வழக்கமான முறையில். ''கொடுக்கப்படும் பரிசு அவ்வளவு முக்கியமானதல்ல, எனது அன்பே. ஆனால் ஒரு வயதான பெண்ணாகிய எனக்கு நீர் கொடுக்கிறீரே, அதுதான் ரொம்ப விசேஷமானது...'' என்று அவளுக்குப் பீயர் பரிசுகளைக் கொடுத்தபோது கூறினாள். தன்னுடைய முடிவடையாத சீட்டாட்டத்திற்கு மத்தியில் பீயர் அங்கே வந்து சேர்ந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை யென்பது தெளிவாகக் காணப்பட்டது.

தன்னுடைய சீட்டாட்டத்தை முடித்தாள். அதன் பின்னால்தான் தனக்குக் கொடுக்கப்பட்ட பரிசுகளை அவள் பார்த்தாள். அந்தப் பரிசுகளில் மிகச்சிறந்த வேலைப்பாடுள்ள சீட்டுப்பெட்டி ஒன்று இருந்தது, பிரகாசமான நீலநிறங்கொண்ட சேவர்ஸ் தேநீர் கோப்பை இருந்தது. அந்த கோப்பையில் ஒரு இடைச்சியின் உருவம் வரையப்பட்டிருந்தது. அந்தக் கோப்பைக்கு ஒரு மூடியும் இருந்தது. ஒரு தங்க மூக்குப்பொடி டப்பியும் அந்தப் பரிசுகளில் இருந்தது. அந்த டப்பியின் மூடியில் கோமகனின் உருவம் வரையப் பட்டிருந்தது. பீட்டர்ஸ்பர்க்கில் அந்த உருவத்தை வரைவதற்கு பியர் ஏற்பாடு செய்தார். அம்மாதிரியான ஒரு டப்பி வேண்டுமென்று அவள் வெகுகாலமாக ஆசை கொண்டிருந்தாள். ஆனால் அச்சமயத்தில் அழுவதற்கு அவளுக்கு விருப்பமில்லை. ஆகவே, அந்தப் படத்தை பராமுமாக நோக்கிவிட்டு, சீட்டுப் பெட்டியை உன்னிப்பாகக் கவனித்தாள்.

''எனது அன்பே, உமக்கு வந்தனம். எனக்கு மகிழ்ச்சி ஏற்படும்படி நீர் செய்துவிட்டீர்'' என்று அவள் சொன்னாள். அவள் எப்பொழுதும் அம் மாதிரியே சொல்லுவாள். ''எல்லாவற்றிற்கும் மேலாக நீர் திரும்ப வந்து சேர்ந்தீர். அதைவிடச் சிலாக்கியமான எதுவும் என்னால் காணமுடியவில்லை. நீர் உமது மனைவியைக் கண்டிக்கவேண்டும். இங்கே அவளோடு எங்களால் இருக்கச் சகிக்கவில்லை. நீர் வெளியூர் போய்விட்டால் ஒரு பைத்தியக்காரப்பெண்ணைப்போல அவள் இருக்கிறாள். எதையும் அவளால் பார்க்க முடியவில்லை. எதையும் நினைவுகொள்ள முடிவதில்லை'' என்று அவள் தனது வழக்கமான வாக்கியங்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்தாள். ''இதோ பார், அன்னா டிமாபீனா'' என்று தன்னுடைய சிநேகிதியைப் பார்த்துச் சொன்னாள். ''எப்பேர்ப்பட்ட சீட்டுப் பெட்டியை எனது குமாரர் எனக்கு கொண்டு வந்திருக்கிறார் என்பதை இதோ பார்!''

வெகுமதிகளைப் பார்த்து பெலோவா புகழ்ந்தாள். தனக்குக் கிடைத்த துணிகளைக் கண்டு மகிழ்ச்சியடைந்தாள்.

பீயரும், நட்டாஷாவும், நிக்கலஸும், கோமகள் மேரியும், டெனைசாவும் ரொம்பப் பேச வேண்டுமென்று விரும்பிய போதிலும் முதிய கோமகள் முன்பாக அவர்களால் பேச முடியவில்லை. அவளிடம் மறைப்பதற்கு அவர்கள் விரும்பா விட்டாலும், அவள் கால நடப்பிற்கு வெகுகாலம் பின்தங்கியவளாக இருந்தபடியால், அவள் முன்பு ஏதாவது பேச ஆரம்பித்தால், பொருத்தமில்லாத அவளுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கும். எத்தனையோ தடவைகளில் அவளிடம் சொல்லியவற்றைத் திரும்பத்திரும்ப சொல்ல வேண்டியதிருக்கும். அதாவது, இன்னின்னார் மரணமடைந்து விட்டதாகவோ இன்னின்னார் திருமணம் செய்து கொண்டதாகவோ அவளிடம் சொல்லியிருந்தால், அதை அவளால் நினைவில் வைத்துக் கொள்ள முடிவதில்லை. என்றாலும், பழக்க தோஷத்தினால் அந்த வரவேற்பு அறையில் சாமோவாரைச் சுற்றி கூடித் தேநீர் பருகுவதற்காக அமர்ந்தார்கள். இளவரசர் வாசைலிக்கு வயது ரொம்ப அதிகமாகிவிட்டதா, கோமகள் மேரி அலெக்சிவ்னா வாழ்த்துக்களை அனுப்பினாளா, இன்னமும் தங்களைப் பற்றி அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாளா என்ற மாதிரி ஒருவருக்கும் சிரத்தையில்லாத, தனக்குக்கூட சிரத்தை இல்லாத அவளுடைய கேள்விகளுக்கு பீயர் பதில் சொல்லி வந்தார்.

யாருக்கும் சிரத்தை இல்லாத, ஆனால் தவிர்க்க முடியாத இம்மாதிரியான உரையாடல்கள் அந்த தேநீர் பருகும் காலம் முழுவதும் நடந்துகொண்டிருந்தன. குடும்பத்திலுள்ள வயது

வந்தவர்கள் எல்லாரும் அந்தத் தேநீர் மேஜையைச் சுற்றி அமர்ந்திருந்தார்கள். அந்த மேஜையின் தலைப்பில் சோனியா உட்கார்ந்திருந்தாள். சாமோவாரும் அங்கு வைக்கப்பட்டிருந்தது. குழந்தைகள் தங்களுடைய வாத்தியார்களுடனும் உபாத்தியாயினிகளுடனும் பக்கத்து அறையில் அமர்ந்து தேநீர் பருகிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய குரல்கள் அங்கிருந்து கேட்டுக் கொண்டிருந்தன. தேநீர் பருகுவற்கு ஒவ்வொருவரும் தங்களுக்குப் பழக்கமான இடங்களில் அமர்ந்தார்கள். அடுப்பிற்கு பக்கத்தில் ஒரு சிறிய மேஜைக்கு முன்பாக நிக்கலஸ் அமர்ந்திருந்தார். அவரிடம் ஒரு கோப்பைத் தேநீரைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். பார்ஜாய் நாயான வயதான சாம்பல் வர்ணம் கொண்ட மைல்கா அமைதியான சாம்பல் வர்ண முகத்தோடும் முன்பைவிட இப்பொழுது பிரதானமாய்க் காணப்பட்ட அதனுடைய பெரிய கருப்புக் கண்களோடும், அவருக்குப் பக்கத்திலிருந்த ஒரு நாற்காலியில் படுத்திருந்தது. பாதி நரைத்துப் போயிந்த சுருண்ட முடியையும் மீசையையும் கிருதாவையும் கொண்டிருந்த டெனைசாவ் கோமகள் மேரிக்குப் பக்கத்தில் தம்முடைய ஜெனரலின் யூனிபாரத்தைத் தரித்து அமர்ந்திருந்தார். பீயர் தமது மனைவிக்கும் முதிய கோமகளுக்கும் மத்தியில் அமர்ந்திந்தார். முதிய சீமாட்டிக்கு புரியக்கூடிய விஷயங்களையோ, அல்லது எவற்றில் அவளுக்குச் சிரத்தையுண்டு என்று பீயர் நினைத்த விஷயங்களையோ பற்றி அவர் பேசிக் கொண்டிருந்தார்.

சமூக விஷயங்களைப் பற்றி அவர் அவளுக்குச் சொன்னார். அவளுடைய வாலிப காலத்தில் அவளுக்கு நண்பர்களாய் இருந்து பிரபலமாய் விளங்கிய கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் இன்று உலகத்தின் நாலா பக்கங்களிலும் சிதறிக்கிடக்கிறார்கள். அவர்களும் அவளைப் போலவே, தங்களுடைய முதிய காலத்தை கழித்து வருகிறார்கள். என்றாலும், அவளுடைய வாலிப காலத்தைச் சேர்ந்த நண்பர்கள்தான் உண்மையான உயர் வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள் என்று கோமகள் நினைத்தாள். பீயருக்கு ஏற்பட்ட பரபரப்பைக் கண்டு அவர் போன பிரயாணம் மிகுந்த சுவாரஸ்யமானது என்றும், அதைப்பற்றி அவர் ஏராளமாகச் சொல்லவேண்டியது இருக்கும் என்றும், ஆனால் முதிய கோமகளுக்கு முன்னால் அவர் சொல்லமாட்டார் என்றும் நட்டாஷா நினைத்தாள். அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவராக டெனைசாவ் இல்லாதபடியால், பீயர் காட்டும் முன் ஜாக்கிரதையை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே, பீட்டர்ஸ்பர்க்கில் நடந்து கொண்டிருப்பவைகளை அறிய வேண்டும் என்ற ஆசைகொண்டிருந்தபடியால் பீயரிடம் கேள்விகள் கேட்டார். செமியோனாவ்

பட்டாளத்தில் என்ன நடந்தது என்பதையும், அராக்சீவைப் பற்றியும், பைபிள் சங்கத்தைப்பற்றியும் கேள்விகள் கேட்டார். ஒன்றிரண்டு தடவைகளில் தம்மை மறந்து பீயர் இவைகளைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். ஆனால், நிக்கலஸும் நட்டாஷாவும் அந்த பேச்சிலிருந்து அவரை மாற்றி, இளவரசர் ஐவானுடையவும், கோமகள் அலெக்சிவ்னாவுடையவும் தேக சௌக்கியத்தைப்பற்றிப் பேசவைத்தார்கள்.

''நல்லது, இந்த அசட்டுத்தனங்கள் எல்லாம்–காஷ்னரும் டாட்டாரி நாவாவும்?'' என்று டெனைசாவ் கேட்டார். ''உண்மையாகவே இன்னமும் அது நடந்துகொண்டிருக்கிறதா?''

''நடந்து கொண்டிருக்கிறதா என்றா கேட்கிறீர்?'' என்று பீயர் கூறினார். ''ஏன், முன்னைவிட அதிகமாகவே நடந்துகொண்டிருக்கிறது. பைபிள் சங்கம்தான் இப்பொழுது முழுவதும் அரசாங்கமாய் இருக்கிறது.''

''எனது அன்பான நண்பரே, அது என்ன விஷயம்?'' என்று கோமகள் கேட்டாள். அவள் தேநீரைக் குடித்து முடிந்துவிட்டபடியால் அவருடைய உணவிற்குப் பின்னால் கோபம் கொள்ளுவதற்கு ஏதாவது ஒரு சால்ஜாப் வேண்டியிருந்தது. ''அரசாங்கத்தைப் பற்றி நீங்கள் என்ன பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.''

''நல்லது, அம்மா. உனக்குத் தெரியும்'' என்று, தம்முடைய தாயாருக்கு அவளுடைய மொழியில் எம்மாதிரி சொல்லவேண்டும் என்பதை அறிந்த நிக்கலஸ் இடைமறித்துப் பேசினார். ''இளவரசர் அலெக்ஸாண்டர் காலைட்சின் என்பவர் ஒரு சங்கத்தை ஸ்தாபித்திருக்கிறார். அதனால் அவருக்கு ஏராளமாக செல்வாக்கு ஏற்பட்டிருக்கிறதென்று அவர்கள் சொல்லுகிறார்கள்.''

''அராக்சீவும் காலைட்சினும்'' என்று ஞாபக மறதியாக பீயர் பேச ஆரம்பித்தார். ''அவர்கள்தான் இப்பொழுது முழுவதிலும் அரசாங்கமாய் இருக்கிறார்கள். எப்பேர்ப்பட்ட அரசாங்கம்! ஒவ்வொன்றிலும் அரசாங்கத் துரோகத்தையே அவர்கள் காண்கிறார்கள். ஒவ்வொன்றைப் பற்றியும் அவர்கள் பீதி கொள்ளுகிறார்கள்.''

''நல்லது, இளவரசர் அலெக்ஸாண்டரை எப்படிக் குறைகூற முடியும்? அவர் மிகுந்த மதிப்பு வாய்ந்த மனிதர். மேரி அண்டோவ்நாவ்னாவின் வீட்டில் நான் பலதடவை அவரைச் சந்தித்ததுண்டு'' என்று கோமகள் ஒரு வருத்தமான குரலில் கூறினாள். அவர்கள் எல்லாரும் மௌனமாய் இருக்கவே அவளுடைய வருத்தம் இன்னும் அதிகமாயிற்று. மேலும் அவள் சொன்னாள்:

''இந்தக் காலத்தில் ஒவ்வொருவர் மீதும் குற்றம் குண்டு பிடிக்கிறார்கள். ஒரு பைபிளின் சங்கம்! நல்லது, அதில் என்ன தவறு இருக்கிறது?'' என்று சொல்லிவிட்டு அவள் எழுந்தாள். (ஒவ்வொருவரும் எழுந்தார்கள்) அவள் மிகுந்த கடுமையான தோற்றத்தோடு வரவேற்பு அறையிலுள்ள தன்னுடைய மேஜைக்கு மீண்டும் திரும்பினாள்.

அதன் பின்னால் ஏற்பட்ட வியாகூலமான மௌனமானது, அடுத்த அறையிலிருந்து வந்து கொண்டிருந்த குழந்தைகளின் குரலினாலும், சிரிப்பினாலும் கலைந்தது. ஏதோ ஒரு தமாஷான பரபரப்பு அங்கே ஏற்பட்ட தென்று தோன்றியது.

''முடிந்துவிட்டது, முடிந்துவிட்டது'' என்று குஞ்சு நட்டாஷாவின் மகிழ்ச்சியான கூச்சல் எல்லாவற்றிற்கும் மேலாக கேட்டது.

கோமகள் மேரியையும் நிக்கலஸையும் பீயர் நோக்கி, சந்தோஷமாக புன் முறுவல் கொண்டார்.

''அது ஒரு மகிழ்ச்சியான சங்கீதம்'' என்று அவர் சொன்னார்.

''அப்படியானால், அன்னா மக்காராவ்னா தன்னுடையகாலுறை வேலையை முடித்துவிட்டாள் என்று தோன்றுகிறது'' எனக் கோமகள் மேரி கூறினாள்.

''ஓ, நான் போய் பார்க்கப் போகிறேன்'' என்று பீயர் சொல்லி துள்ளி எழுந்தார். ''உனக்குத் தெரியும்'' என்று அவர் வாசலுக்குப் பக்கத்தில் நின்று சொன்னார். ''நான் அந்த சங்கீதத்தில் விசேஷமாக ஏன் பிரியம் கொண்டிருக்கிறேன் என்பது உனக்குத் தெரியுமல்லவா? எல்லாம் சரியாக இருக்கின்றன என்று எனக்கு முதலாவதாகத் தெரிவிப்பது அதுதான். நான் இன்று வீட்டை நோக்கி வந்தபோது வீடு நெருங்க நெருங்க என்னுடைய கவலையும் அதிகமாயிற்று. முன் அறையில் நான் நுழைந்தபோது ஆண்ட்ரூஷாவின் சிரிப்புக் குரல் பலமாய்க் கேட்டது. எல்லாம் சரியாய் இருக்கின்றன என்பதுதானே அதற்கு அர்த்தம்?''

''எனக்குத் தெரியும், அம்மாதிரியான உணர்ச்சியை நான் அறிவேன்'' என்று நிக்கலஸ் சொன்னார். ''ஆனால் நான் அங்கே போகக்கூடாது. ஏனெனில், அந்த காலுறைகளை எனக்குத் திடீரென்று கொண்டுவந்து கொடுக்கவேண்டுமென்று ஏற்பாடு.''

அந்தக் குழந்தைகளிடம் பீயர் சொன்னார். அவைகளின் கூச்சல்களும் சிரிப்புகளும் இன்னும் அதிகமாய் உரக்க குரலில் கேட்க ஆரம்பித்தன.

''அன்னா மக்காராவ்னா, இங்கே வா'' என்று பீயர் சொல்லுவது கேட்டது. ''நான் உத்தரவு கொடுத்தும் உடனேயே, நீ அறையின்

மத்திக்கு வரவேண்டும். 'ஒன்று, இரண்டு' என்று நான் சொல்லிய மூன்று என்று சொல்லும்போது நீ வரவேண்டும்...நீ இங்கேயே நில்லு. உன்னை நான் எனது கைகளில் எடுத்துக்கொள்ளுகிறேன். சரி ஆரம்பிக்கலாம். ஒன்று, இரண்டு...'' (இச்சமயம் பீயர் சிறிது நிறுத்தினார். அங்கே அடைமதி நிலவியது) மூன்று என்று அவர் கூச்சலிட்டபோது, குழந்தைக்ளின் பரவசமான குரல்கள் அந்த அறையை நிரப்பின. ''இரண்டு, இரண்டு'' என்று அவைகள் கூச்சலிட்டன.

அப்படியானால் இரண்டு காலுறைகள் என்று அர்த்தம். அன்னா மக்காராவ்னா அவளுக்கு மட்டும் தெரிந்த ஒரு ரகசிய முறையினால் ஒரே சமயத்தில் அதே ஊசியினால் இரண்டு காலுறைகளைப் பின்னுவதுண்டு. அவை தயாரானவுடன் குழந்தைகளின் முன்னி லையில் வெற்றிப் பார்வையோடு அவள் ஒரு உறைக்குள்ளிருந்து மற்றொரு உறையை வெளியே எடுத்துக் காட்டுவாள்.

## 14

இதற்குப் பின்னால் நல்லிரவு வணக்கம் சொல்வதற்காகக் குழந்தைகள் உள்ளே வந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரையும் முத்தமிட்ட பின்பு, உபாத்தியாயர்களும், உபாத்தியாயினிகளும் தலைகுனிந்து வணங்கிவிட்டு, அந்த அறையை விட்டு வெளியே போனார்கள். குஞ்சு நிக்கலஸும் அவனுடைய வாத்தியாரும் மட்டும் அங்கே தங்கியிருந்தார்கள். டெஸ்ஸலெஸ் அந்தப் பையனிடம் கீழே வரும்படி மெதுவாகக் கூறினார்.

''இல்லை, திருவாளர் டெஸ்ஸலெஸ்; நான் இங்கே தங்கி. இருப்பதற்கு என்னுடைய அத்தையிடம் கேட்கப்போகிறேன்'' என்று குஞ்சு நிக்கலஸ் பால்கோஸ்கி மெதுவான குரலில் சொன்னான்.

''என்னுடைய அத்தையே, நான் இங்கே இருக்கவேண்டும்'' என்று அவன் தன்னுடைய அத்தையிடம் சென்று சொன்னான்.

அவனுடைய முகத்தில் இரக்கமும் பரபரப்பும் ஆர்வமும் காணப்பட்டன. கோமகள் மேரி அவனை நோக்கினாள். உடனே பீயரையும் பார்த்தாள்.

''நீர் இங்கே இருக்கும்போது அவனால் இந்த இடத்தை விட்டு வெளியே போக முடியாது'' என்று அவள் சொ்ன்னாள்.

''நான் உம்மிடம் அவனை அழைத்து வருகிறேன், திருவாளர் டெஸ்ஸலெஸ், நல்லிரவு'' என்று 'பீயர் சொல்லிவிட்டு, அந்த ஸ்விட்ஜர்லாந்து வாத்தியாருக்கு தமது கையை நீட்டினார்.

பின்னால் ஒரு புன்னகையோடு அந்த குஞ்சு நிக்கலஸை நோக்கினார். ''நீயும் நானும் நம்மைப்பற்றி ஒருவருக்கொருவர் இன்னும் நன்றாகத் தெரிந்துகொள்ளவில்லை.........அவன் எம்மாதிரி சாயலில் வளர்ந்து வருகிறான், மேரி!'' என்று அவர் கோமகள் மேரியைப் பார்த்துச் சொன்னார்.

''என்னுடைய தந்தையைப்போல இருக்கிறேனா'' என்று அந்தப் பையன் கேட்டான். அவன் கேட்டபோது அவனுடைய முகம் சிவந்தது. அவனுடைய மகிழ்ச்சியான பிரகாசமான கண்கள் பீயரை நோக்கிப் பார்த்தன.

பீயர் தமது தலையை ஆட்டினார். அந்தக் குழந்தைகள் வந்து இடைமறித்த பேச்சை அவர் மீண்டும் ஆரம்பித்தார். கோமகள் மேரி பின்னல் வேலையைக் கையில் பற்றிக் கீழே அமர்ந்தாள். நட்டாஷா தன்னுடைய பார்வையை தன்னுடைய கணவரிடமிருந்து எடுக்கவில்லை. நிக்கலஸும் டெனைசாவும் எழுந்தார்கள். அவர்கள் தங்களுடைய சுங்கான்களைக் கொண்டுவரச் சொல்லி புகை குடித்தார்கள். இன்னும் கொஞ்சம் தேநீர் பருகுவதற்காக சோனியாவிடம் சென்றார்கள். அவள் அங்கே களைப்போடும் உறுதியோடும் சாமோவார் பக்கத்தில் இருந்தாள். அவர்கள் பீயரைக் கேள்விகள் கேட்டார்கள். சுருளை முடியையும் மெலிந்த உடம்பையும் கொண்ட அந்தப் பையன் பிரகாசமான கண்களோடு ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். அவன் திடீர் திடீரென்று எதையோ நினைத்து, தனக்குத்தானே சொல்லிக்கொண்டிருந்தான். ஏதோ ஒரு புதுமாதிரியான வேகமான உணர்ச்சியை அவன் அனுபவித்துக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவன் தன்னுடைய மெலிந்த கழுத்து தெரியும்படியாகக் காலரை வளைத்து விட்டுக்கொண்டிருந்தான். சுருளை முடிகொண்ட தலையைத் திருப்பி பீயரை அவன் பார்த்தபோது அந்த உணர்ச்சி விளங்கியது.

அரசாங்க அதிகாரத்தில் உள்ளவர்களைப் பற்றி, அப்போது பரவியிருந்த வதந்திகளைப் பற்றி அவர்கள் பேச ஆரம்பித்தார்கள். அந்த வதந்திகளில் உள்நாட்டு விஷயங்கள்தான் முக்கியமானவையாய் இருக்கின்றனவென்று பலர் நினைத்தார்கள். ராணுவ சேவையில் தமக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்காக டெனைசாவ் அரசாங்கத்தின்மீது மிகுந்த அதிருப்தி கொண்டிருந்தார். ஆகவே பீட்டர்ஸ்பர்க்கில் நடந்து கொண்டிருந்த காரியங்கள் அவருக்கு முட்டாள் தனமானவை என்று தோன்றியபோதிலும், அவற்றைக் கேட்டு மகிழ்ச்சி கொண்டார். அந்தக் காரியங்களைப் பீயரிடமிருந்து கேட்டதும், அவர் சூடாக குணதோஷங்கள் கூறினார்.

''ஒருவன் ஜெர்மனியனாய் இருக்கவேண்டுமென்ற நிலைமை முன்னால் இருந்தது. இப்போது ஒருவன் திருமதிகள் டாட்டாரி

நாவா, குடனர் ஆகியவர்களோடு நடனம் ஆடவேண்டும்; அல்லது எக்கார்ஸ்டிராசன் எழுதியவைகளைப் படிக்க வேண்டும். ஓ, அவர்கள் அந்த சிலாக்கியமான ஆசாமியான போனபார்ட்டை வெளியே விட்டிருக்க வேண்டும். அப்படிச் செய்தால் அவர் இந்த அசட்டுத்தனங்களையெல்லாம் மண்டையிலடித்து ஓட்டியிருப்பார். செமியோனாவ் பட்டாளத்தை நடத்தும்படி ஷ்வாட்ஸ் போன்ற ஒரு ஆசாமிக்குக் கொடுப்பது எவ்வளவு தமாஷாய் இருக்கிறது!' என்று அவர் கூச்சலிட்டார்.

டெனைசாவ் ஒவ்வொருவரிடமும் குற்றம் கண்டு பிடிக்கத் தயாராய் இருப்பது போல நிக்கலஸ் இல்லை. என்றாலும் அரசாங்கத்தைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருப்பது சிந்திக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்று அவர் கருதினார். 'ஏ' என்பவர் இன்ன மந்திரியாக நியமிக்கப் பட்டார்; 'பி' என்பவர் இந்த இடத்தில் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டார்; சக்கரவர்த்தி இன்னின்ன பேசினார்; இந்த மந்திரி இன்னின்ன பேசினார் என்பன போன்ற விஷயங்கள் எல்லாம் அவருக்கு மிகவும் முக்கியமானவையாகத் தோன்றின. ஆகவே, இந்த விஷயங்களில் சிரத்தை கொள்ள வேண்டியது அவசியமென்று அவர் நினைத்து, பீயரிடம் கேள்விகள் கேட்டார். இந்த இருவரும் போட்ட கேள்விகளானவை, அவர்கள் அரசாங்கத்தின் உயர் வட்டாரத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த வதந்திப் பேச்சுகளை நீடிக்கும்படி செய்தன.

தனது கணவர் வெகு நேரமாக அந்த உரையாடலைத் திருப்பி, தாம் பீட்டர்ஸ்பர்க்கிற்கு எதற்காகப் போனாரோ, அந்த விஷயத்தைச் சொல்லுவதற்கு முயற்சி செய்துகொண்டிருந்தார் என்பதை நட்டாஷா அறிந்தாள். ஆனால் தமது புதிய நண்பரிடம் கலந்து பேசச் சென்ற விஷயங்களைச் சொல்வதற்கு வழியில்லாமல் இருந்தது. ஆகவே, இளவரசர் தியோடோரிடம் அவர் பேசிய விஷயங்கள் எப்படியிருக்கின்றன என்று, தனது கணவருக்கு உதவி செய்யும் விதத்தில், நட்டாஷா கேட்டாள்.

''அது எதைப் பற்றிய விஷயம்?'' என்று நிக்கலஸ் கேட்டார்.

''எப்பொழுதும் அதே விஷயம்தான்'' என்று பீயர் பதில் சொல்லிவிட்டு தாம் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களைச் சுற்றிலும் பார்த்தார். ''விஷயங்கள் எல்லாம் ரொம்ப மோசமாய்ப் போய்க் கொண்டிருக்கின்றன என்பதை ஒவ்வொருவரும் அறிவார்கள். அம்மாதிரி போகும்படி விடக்கூடாது என்பதையும், தங்களால் முடிந்த வரையில் அதைத் தடுப்பதற்கு கௌரவமுள்ள மனிதர்கள் எல்லாரும் தங்கள் கடமைகளாகக் கொண்டிக்கிறார்கள் என்பதையும் ஒவ்வொருவரும் அறிவார்கள்.''

''கௌரவம் உள்ள கனவான்கள் என்ன செய்துவிட முடியும்?'' என்று நிக்கலஸ் தமது முகத்தை லேசாக சுளித்துக் கேட்டார். ''என்ன செய்ய முடியும்?''

''ஏன், இந்த........''

''நீங்கள் என்னுடைய படிக்கும் அறைக்கு வாருங்கள்'' என்று நிக்கலஸ் சொன்னார்.

தன்னுடைய குழந்தைக்குப் பால் கொடுப்பதற்காக வெகு நேரமாக காத்துக்கொண்டிருந்த நட்டாஷா, இப்போது அவளை அவருடைய தாதி அழைப்பதைக் கேட்டாள். உடனே அவள் குழந்தைகளின் அறைக்குச் சென்றாள். கோமகள் மேரியும் அவருக்குப் பின்னால் போனாள். ஆண்கள் படிப்பு அறைக்குப் போனார்கள். குஞ்சு நிக்கலஸ் பால்கோன்ஸ்கி தன்னுடைய மாமா கவனிக்காத விதத்தில், அவர்களுக்குப் பின்னால் போனான். அங்கே ஜன்னலுக்குப் பக்கத்தில் ஒரு மறைவான மூலையிலிருந்த எழுதும் மேஜைக்கு முன்பாக அவன் அமர்ந்தான்.

''நல்லது, நீர் என்ன செய்வீர்?'' என்று டெனைசாவ் கேட்டார்.

''எப்போதுமே சில ஆச்சரியமான திட்டங்கள் இருக்கும்'' என்று நிக்கலஸ் சொன்னார்.

''என்ன இதுதான்.....'' என்று பீயர் ஆரம்பித்தார். ஆனால் அவர் உட்காராமல் அந்த அறையில் உலாவிக் கொண்டிருந்தார். சில சமயங்களில் திடீரென்று நின்று தமது கைகளை ஆட்டிப் பேசுவார். ''பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள நிலைமை இதுதான். சக்கரவர்த்தி ஒவ்வொரு விஷயத்தையும் கவனிப்பதில்லை. அவர் இப்போது ஞானரகசியத்தில் முழுவதும்த் திரும்பி விட்டார். (இந்த ஞான ரகசியத்தை யாரிடம் கண்டாலும் பீயருக்கு இப்போது பிடிப்பதில்லை.) அவர் அமைதியை விரும்புகிறார். மதத்திலோ சட்டத்திலோ நம்பிக்கை இல்லாதவர்களால் தான் அதை அவருக்குக் கொடுக்க முடியும். அதாவது, எதைப் பார்த்தாலும் வெட்டி அழித்தும் வருகிறவர்களால்தான் அதைச் செய்ய முடியும். அவர்கள் தான் மாக்னிஸ்கி, அராக்சீவ் போன்றவர்கள். உம்முடைய எஸ்டேட்டுகளை நீரே மேல் பார்வை செய்யாமல் அமைதியாக இருக்க வேண்டுமென்று விரும்புவீரானால், உம்முடைய மேனேஜர் எவ்வளவுக்கெவ்வளவு கடுமையாய் இருக்கிறாரோ, அவ்வளவுக்கவ்வளவு உம்முடைய நோக்கம் நிறைவேறும் என்பதை நீர் அறிவீர் என்று நிக்கலஸுக்கு அவர் சொன்னார்.

''நல்லது, அது எந்த விஷயங்களில் போய் முடிகிறது?'' என்று நிக்கலஸ் கேட்டார்.

''நல்லது ஒவ்வொன்றும் அழியப்போகிறது. கோர்ட்டுகளில் திருட்டுகள் நடக்கின்றன. ராணுவத்தில் கசையடியும் உடல் பயிற்சியும் ராணுவ முகாம்களும் தவிர வேறு எதுவும் கிடையாது. மக்கள் வதை செய்யப்படுகிறார்கள். அறிவு என்பதை அமுக்குகிறார்கள். புதிதாகவும் நாணயமாகவும் இருக்கிற ஒவ்வொன்றையும் நசுக்குகிறார்கள். இம்மாதிரி வெகுகாலம் நடந்து கொண்டு போக முடியாது என்பதை ஒவ்வொருவரும் அறிவார்கள். சுமை தாங்க முடியாமல் பெருகிக் கொண்டே போவதால் அது நிச்சயமாக அறுந்து போய் விடும்'' என்று பீயர் சொன்னார். (அரசாங்கங்கள் ஏற்பட்ட காலத்திலிருந்தே, எந்த அரசாங்கத்தின் செய்கைகளைப் பரிசீலனை செய்வதாய் இருந்தாலும், இதே மாதிரிதான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.) ''நான் பீட்டர்ஸ்பர்க்கில் அவர்களுக்கு ஒரு விஷயத்தைச் சொன்னேன்.''

''யாருக்குச் சொன்னீர்?''

''நல்லது, யாருக்கு என்பதை நீர் அறிவீர்'' என்று பீயர் ஒரு அர்த்த புஷ்டியுள்ள நோக்கோடு கூறினார்.

''இளவரசர் தியோடோருக்கும் இன்னும் மற்றவர்களுக்கும் சொன்னேன். கலாசாரத்தையும் தர்மங்களையும் ஆதரிப்பது நல்லதுதான். அந்த நோக்கம் மிகச் சிலாக்கியமானது. ஆனால் தற்கால நிலைமையில் மற்றொரு விஷயம்தான் மிகவும் அவசியமாய் இருக்கிறது.''

அச்சமயத்தில் தமது மருமகன் அங்கே இருப்பதை நிக்கலஸ் கவனித்தார். அவருடைய முகம் இருண்டது. அவர் அந்தப் பையனிடம் சென்றார்.

''நீ ஏன் இங்கே இருக்கிறாய்?''

''ஏன், அவன் இருந்துவிட்டுப் போகட்டும்'' என்று பீட்டர் சொல்லி, அந்த குஞ்சு நிக்கலஸை தமது கையில் பற்றி மேலும் பேசினார். ''அது மட்டும் போதாது என்று நான் அவர்களிடம் சொன்னேன். மற்றொன்றும் அவசியமாய் இருக்கிறது. முறுக்குகள் அதிகமாய் கொண்டுபோகும் கயிறானது எந்த வினாடியும் அறுந்துபோகும் என்று நீர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது, தவிர்க்க முடியாத பேராபத்து வரப்போகிறது என்பதை ஒவ்வொருவரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது, அந்தப் பொதுவான பேராபத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, சாத்தியமான வரையில் அதிகமான பேர்கள் சேர்ந்து நிற்க வேண்டியது அவசியமாகும். வாலிபமாகவும் வலிமையாகவும் இருக்கிற ஒவ்வொன்றையும் அவர்கள் கவர்ந்து போய்க் கொடுத்துவிடுகிறார்கள். பெண்களால் சிலரைக் கெடுக்கிறார்கள்;

பட்டங்களால் சிலரைக் கெடுக்கிறார்கள்; ஆசை காட்டிப் பணத்தைக் கொடுத்து சிலரைக் கெடுக்கிறார்கள். அதனால் அவர்கள் எல்லாரும் அந்தக் கட்சியில் போய்ச் சேர்ந்துவிடுகிறார்கள். உம்மையும் என்னையும் போல சுதந்திரமான மனிதர் யாரையும் விட்டுவைப்பதில்லை. நான் என்ன சொல்கிறேனென்றால், நமது சங்கத்தின் நடவடிக்கைகளை விரிவாக்கவேண்டும். அதனுடைய நோக்கம், தர்மம் என்பதோடு மட்டும் நின்றுவிடக்கூடாது. சுதந்திரமும் செய்கையும் அதன் நோக்கங்களோடு சேர்க்கப் படவேண்டும்.''

தம்முடைய மருமகனிடமிருந்து விலகிப்போன நிக்கலஸ் எரிச்சலோடு ஒரு நாற்காலியை முன்னால் தள்ளி அதில் அமர்ந்தார். அவர் அதிருப்தியோடும் வரவர அதிகமாக முகத்தைச் சுளித்தும் இருமிக்கொண்டும் பீயர் சொல்லுவதைக் கேட்டு வந்தார்.

''ஆனால் எந்த நோக்கத்தை வைத்துக்கொண்டு செய்கையில் இறங்க வேண்டும்?'' என்று அவர் கேட்டார். ''நீர் அரசாங்கத்தைப் பற்றி எந்த விதமான மனப்பான்மையை மேற்கொள்வீர்?''

''ஏன், துணையாளர்கள் என்ற நிலைமையில் இருப்பேன். அரசாங்கம் அனுமதிக்குமானால், சங்கமானது ரகசிய சங்கமாக இருக்க வேண்டியதில்லை. அது அரசாங்கத்திற்கு விரோதமாக மட்டும் இருக்கவில்லை; அந்தச் சங்கமானது உண்மையான கன்சர்வேட்டிவ்களைக் கொண்டதாய் இருக்கிறது. அதாவது, கனவான்கள் என்று பூரணமாகச் சொல்லக்கூடியவர்கள் அடங்கிய கூட்டமாய் இருக்கிறது. புகாசியோவ் போன்றவர்களிடமிருந்து நம்முடைய புகாசியோவ் குழந்தைகளைக் கொன்றுவிடாமல் காப்பாற்றுவதற்கும், அல்லது என்னையோ, உம்மையோ, ஏதோ ஒரு தூரத்தில் உள்ள ராணுவ முகாமிற்கு அராக்சீவ் அனுப்பாமல் காப்பாற்றுவதற்கும்தான் அது அவசியமாய் இருக்கிறது. மக்களின் நன்மைக்காகவும் பொது பாதுகாப்புக்காகவுமே நாம் ஒன்று சேருகிறோம்.''

''ஆமாம், அது ஒரு ரகசியச் சங்கம். ஆகவே அது விரோதமான கெடுதல் செய்யும் சங்கமாகும். அதாவது அந்தச் சங்கத்தினால் கெடுதல் மட்டுமே செய்யமுடியும்.''

''ஏன்? ஐரோப்பாவைக் காப்பாற்றிய டூகெண்ட் பண்ட் என்ற சங்கம் ஏதாவது கெடுதல் செய்ததா?''

''(அந்தச் சமயத்தில் ருஷ்யா ஐரோப்பாவைக் காப்பாற்றியது என்பதைச் சொல்வதற்குக்கூட அவர்கள் துணிவு கொள்ளவில்லை). டூகெண்ட் பண்ட் என்ற சங்கமானது தருமத்தின் கூட்டுறவாகும்.

அதாவது, அன்பு, பரஸ்பர உதவி... இதைத்தான் கிறிஸ்து போதித்தார்.''

இந்த உரையாடல் நடந்துகொண்டிருக்கும்போது, நட்டாஷா உள்ளே வந்து மகிழ்ச்சியோடு தன் கணவரை நோக்கினாள். அவர் அப்போது பேசிக்கொண்டிருந்தவைகள் அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தன என்று சொல்லுவதற்கில்லை. அதைப்பற்றி அவளுக்குச் சிரத்தைகூட கிடையாது. அவையெல்லாம் வெகு சாதாரணமான விஷயம் என்றும், அவற்றையெல்லாம் வெகு காலத்திற்கு முன்பே அவள் அறிந்திருப்பதாகவும் அவளுக்குத் தோன்றியது. (பீயருடைய முழு உள்ளத்திலிருந்து அது வெளியே வந்ததாக அவள் அறிவாளாகையால், அவளுக்கு அம்மாதிரி தோன்றியது.) ஆனால் அவருடைய பரபரப்பான, உற்சாகமான காட்சிதான் அவளை மகிழ்ச்சி கொள்ளும்படி செய்தது.

கீழே மடக்கிவிடப்பட்ட காலருக்கு மேலாக அந்தச் சிறுவனின் மெல்லிய கழுத்து நீண்டுகொண்டிருந்தது. அவனை இப்போது எல்லாரும் மறந்துவிட்டார்கள். அவன் முன்பைவிட இப்பொழுது அதிகமான பரவச மகிழ்ச்சியோடு பீயரை பார்த்துக் கொண்டிருந்தான். பீயர் சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தையும் அவனுடைய உள்ளத்தில் ஜுவாலை விட்டுக் கொண்டிருந்தது. அவன் தன்னுடைய விரல்களால் தன்னையறியாமலேயே தன்னுடைய மாமாவின் மேஜைமீது இருந்த முத்திரை அரக்கையும், இறகு பேனாக்களையும் முறித்துவிட்டான்.

''நீர் நினைக்கிறபடி இல்லவே இல்லை. ஆனால் அந்த ஜெர்மன் டுகெண்ட்பண்ட் அப்படித்தான் இருந்தது. அம்மாதிரிதான் நானும் இப்பொழுது செய்ய விரும்புகிறேன்.''

''இல்லை, எனது நண்பரே! கோளாக்கள் தின்கிறவர்களுக்கு அந்த டுகெண்ட்பண்ட் ரொம்ப சரியாய் இருக்கலாம். ஆனால் என்னால் அதை அறிய முடியவில்லை. அதை உச்சரிக்கக்கூட முடிய வில்லை'' என்று டெனைசாவ் உறுதியான உரத்த குரலில் இடை மறித்தார். ''இங்குள்ள ஒவ்வொரு விஷயமும் பாழடைந்து போயின; கோரமாய் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் டுகெண்ட்பண்டை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நமக்குப் பிடிக்கவில்லையானால் நம்முடைய சொந்தமான பண்டை (கலகம்) நாம் செய்வோம். அதுதான் ரொம்பவும் சரி, நான் உங்களுடன் இருப்பேன்.''

பீயர் புன்னகை கொண்டார். நட்டாஷா சிரிக்க ஆரம்பித்தாள். ஆனால் நிக்கலஸ் தம்முடைய புருவங்களை முன்னைவிட அதிகமாக நெரித்துக்கொண்டிருந்தார். எந்தவிதமான பெரிய மாறுதலும் நடப்பது சாத்தியமல்லவென்பதை பீயருக்கு

எடுத்துக்காட்ட முயற்சித்தார். அவர் குறிப்பிட்ட ஆபத்துக்களெல்லாம் அவருடைய மனோராஜ்யத்தில்தான் இருக்கின்றன என்பதையும் நிரூபிக்க முயற்சித்தார். ஆனால் பீயர் எதிர்வாதத்தில் உறுதியாக இருந்தார். அவருடைய மூளையின் வேகமும் பரந்த அறிவும் அதிகமாய் இருந்தபடியால், தம்மை அவர் மடக்குவதாக நிக்கலஸ் நினைத்தார். இதனால் நிக்கலஸ் இன்னும் அதிகமாகக் கோபம் கொண்டார். ஏனெனில், அவர் இப்போது தாம் சொல்லியதைப் முழுவதும் நம்பினார். எந்தவிதமான நியாயங்களினாலும் அவர் நம்பியதாகச்சொல்ல முடியாது. ஆனால் தாம் சொல்லியதுதான் சரியென்ற கருத்து அவருக்கு பலமாக இப்போது இருந்தபடியால் அவர் அப்படி நம்பினார்.

''நான் உமக்கு இதைச் சொல்லுகிறேன்'' என்று அவர் கூறிவிட்டு, எழுந்து தம்முடைய சுங்கானை விரல்களில் பற்றி ஒரு மூலையில் வைப்பதற்காகப் போனார். பின்னால் அந்த நினைப்பை விட்டுவிட்டு மேலும் பேசினார். ''என்னால் இதை உமக்கு நிரூபிக்க முடியாது. இங்கே ஒவ்வொரு காரியமும் ஊழலாய் இருக்கிறது என்றும், ஒரு புரட்சி வருகிறது என்றும் நீர் சொல்லுகிறீர். ஆனால் எனக்கு அப்படித் தெரியவில்லை. நாம் செய்திருக்கிற பிரமாணம்கூட ஒரு நிபந்தனைக்குட்பட்டதுதான் என்று நீர் சொல்லுகிறீர். அதற்கு எனது பதில் இதுதான்: நீர் எனது சிறந்த நண்பர் என்பதை நீரே அறிவீர். ஆனால் நீர் ஒரு ரகசிய சங்கத்தை ஸ்தாபித்து அரசாங்கத்திற்கு விரோதமாக வேலை செய்வீரானால்–அது எதுவாய் இருந்தாலும் சரி –அரசாங்கத்திற்கு கீழ்ப்படிவதே என்னுடைய கடமையென்பதை நான் அறிவேன். உமக்கு விரோதமாக, உம்மை வெட்டும்படி, அராக்சீவ் ஒரு படைப்பிரிவை அழைத்துக்கொண்டு போகும்படி எனக்கு உத்தரவிடுவாரானால் நான் ஒரு வினாடிகூட தயங்கமாட்டேன். அவர் சொல்லியபடியே செய்வேன். நீர் அதைப்பற்றி உமக்கு இஷ்டமானபடி வாதம் செய்து கொள்ளலாம்.''

ஒரு தர்மசங்கடமான மௌனம் இந்த வார்த்தைகளுக்குப் பின்னால் அங்கே நிலவியது. தனது கணவரை ஆதரித்து, தனது சகோதரரை எதிர்த்து நட்டாஷா முதலாவதாகப் பேசினாள். அவருடைய வாதமானது பலவீனமாகவும் பொருத்தமில்லாமலும் இருந்தபோதிலும் அவருடைய நோக்கத்தில் அவள் வெற்றி பெற்றாள். உரையாடல் மீண்டும் ஆரம்பித்தது. ஆனால் நிக்கலஸ் கடைசியாகப் பேசியபடி விரோதபாவமான, மகிழ்ச்சிக் குறைவானவிதமாக இப்போது இல்லை.

அவர்கள் எல்லாரும் இராச்சாப்பாட்டிற்கு எழுந்தபோது, குஞ்சு நிக்கலஸ் பால்கோவிஸ்கி பீயரிடம் சென்றான். அவன் முகம்

வெளிறி இருந்தது. அவனுடைய கார்கள் பிரகாசமாக ஜொலித்துக் கொண்டிருந்தன.

''பீயர் மாமா. நீர்... இல்லை... இப்போது அப்பா உயிரோடு இருந்தால்... அவர் நீர் சொல்வதை ஒப்புக்கொள்வாரா?'' என்று கேட்டான்.

சுதந்திரமான, சிக்கலான, மிகுந்த வேகமான சிந்தனையும் உணர்ச்சிகளும் இந்தப் பையனிடம் அந்த உரையாடலின்போது எந்தவிதமான வேலை செய்திருக்கக்கூடும் என்பதை பீயர் திடீரென்று உணர்ந்தார். தாம் பேசியவைகளை யெல்லாம் அவர் நினைவு கூர்ந்தபோது அந்தச் சிறுவன் அவற்றை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்ததற்காக அவர் வருந்தினார். என்றாலும் அவர் அவனுக்கு ஒரு பதிலைச் சொல்லியாக வேண்டும்.

''ஆமாம், நான் அப்படித்தான் நினைக்கிறேன்'' என்று அவர் தயக்கத்தோடு சொல்லிவிட்டு, அந்த படிப்பு அறையிலிருந்து வெளியே போனார்.

அந்தச் சிறுவன் இப்போது தனது பார்வையை கீழே நோக்கினான். அப்போதுதான் அவன் மேஜைமீது இருந்த சாமான்களை எம்மாதிரி செய்து விட்டான் என்பதைக் கவனித்தான். அவன் முகம் சிவந்து நிக்கலஸிடம் சென்றான்.

''மாமா, என்னை மன்னிக்கவேண்டும். நான் கவனமில்லாமல் அதைச் செய்துவிட்டேன்'' என்று சொல்லி, உடைந்துகிடந்த முத்திரை அரக்கையும் பேனாக்களையும் காட்டினான்.

நிக்கலஸ் கோபமாக மாறினார்.

''ரொம்ப சரி, ரொம்ப சரி'' என்று அவர் சொல்லிவிட்டு, அந்த உடைந்த துண்டுகளை எடுத்து மேஜைக்கு அடியில் வீசினார்.

தம்முடைய எரிச்சலை மிகுந்த கஷ்டத்தோடு அடக்கிக்கொண்டு பையனிடமிருந்து தமது பார்வையைத் திருப்பினார்.

''நீ இங்கே இருந்திக்கவே கூடாது'' என்று அவர் சொன்னார்.

## 15

இராச்சாப்பாட்டின்போது நடந்த உரையாடல்களில் ராஜீய விஷயமோ, உயர் வட்டார விஷயமோ அடிபடவில்லை. நிக்கலஸுக்கு மிகவும் பிடித்தமான 1812-ம் வருஷத்திய சம்பவங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த உரையாடலை டெனைசாவ் ஆரம்பித்தார். பீயருக்கு முக்கியமாக அது பிரியமாகவும் தமாஷாகவும் இருந்தது. அந்தக் குடும்பம் மிகுந்த சிநேகமான முறையில் அங்கிருந்து கலைந்துபோயிற்று.

இராச்சாப்பாட்டிற்குப் பின்னால் தம்முடைய வெளிச் சட்டைகளைக் களைந்த பின்பு நிக்கலஸ் அங்கே காத்துக் கொண்டிருந்த தமது மானேஜரிடம் சொல்ல வேண்டியவைகளை கூறிவிட்டு, உடை-கவுனோடு படுக்கையறைக்குப் போனார். அங்கே அவர் தமது மனைவி மேஜை முன்னால் அமர்ந்து எழுதிக்கொண்டிருப்பதைக் கண்டார்.

''மேரி, நீ என்ன எழுதிக்கொண்டிருக்கிறாய்?'' என்று நிக்கலஸ் கேட்டார்.

கோமகள் மேரி நாணி முகம் சிவந்தாள். அவள் எழுதிக் கொண்டிருந்தவைகளை அவளுடைய கணவர் புரிந்துகொள்ளவோ, அல்லது ஆதரிக்கவோ மாட்டார் என்று அவள் பீதியுற்றாள்.

அவள் என்ன எழுதிக்கொண்டிருந்தாளோ, அதை அவரிட மிருந்து மறைப்பதற்கு விரும்பினாள். ஆனால் அதே சமயத்தில் திடீரென்று வந்து அவள் ஆச்சரியம்கொள்ளும்படி செய்து அதைப்பற்றி அவள் அவருக்குச் சொல்லியாகவேண்டிய நிலைமையை ஏற்படுத்தியதற்காக அவள் மகிழ்ச்சி கொண்டாள்.

''இது ஒருநாள் குறிப்பு, நிக்கலஸ்'' என்று அவள் பதில் சொல்லி, ஒரு நீல நிற நோட்டுப் புத்தகத்தை அவரிடம் கொடுத்தாள். அந்தப் புத்தகம் பூராவிலும் அவளுடைய உறுதியான பருத்த எழுத்துக் களால் எழுதப்பட்ட விஷயங்கள் நிரம்பியிருந்தன.

''ஒரு நாள் குறிப்பா?'' என்று ஒரு கேலியான புன்னகையோடு திருப்பிக் கூறி, அந்தப் புத்தகத்தைக் கையில் பற்றி எடுத்தார்.

அந்தப் புத்தகம் பிரஞ்சுப் மொழியில் எழுதப்பட்டிருந்தது.

''டிசம்பர் மாதம் 4-ந் தேதி. இன்று ஆண்ட்ரூஷா (அவளுடைய மூத்த குமாரன்) தூக்கத்திலிருந்து எழுந்ததும் உடை அணிந்துகொள்ள மறுத்தான். குமாரி லூயி எனக்குச் சொல்லி அனுப்பினாள். அவன் பிடிவாதமாகவும் விஷமத்தனம் உள்ளவனாகவும் இருந்தான். நான் முதலில் பயமுறுத்தினேன். அவனுடைய கோபம் இன்னும் அதிகமாயிற்று. பின்னால் அவனை வேறுவிதமாக நடத்த ஆரம்பித்தேன். அவனைத் தனியாக விட்டுவிட்டேன். தாதியிடம் சொல்லி மற்ற குழந்தைகளை அழைத்து வரச்சொன்னேன். அவனிடம் பிரியமில்லை என்று சொன்னேன். வெகுநேரம் வரையில் அவன் ஆச்சரியங்கொண்டு மௌனமாய் இருந்தான். பின்னால் திடீரென்று படுக்கையிலிருந்து குதித்தெழுந்து என்னிடம் ஓடிவந்தான். அவன் என்னிடம் வந்ததும் விம்மி விம்மி அழ ஆரம்பித்தான். வெகுநேரம் வரையில் அவனைச் சமாதானப்படுத்த முடியவில்லை. எனக்கு மனவருத்தம் ஏற்படும்படி அவன் நடந்துகொண்டதுதான் அவனை வெகுவாக

வருத்தியது என்பது தெளிவாய்த் தெரிந்தது. பின்னால் மாலையில் நான் அவளுடைய டிக்கட்டை அவனிடம் கொடுத்தபோது அவன் மீண்டும் பரிதாபமாக அழ ஆரம்பித்து என்னை முத்தமிட்டான். கனிவோடு பழகினால் அவனை எது வேண்டுமானாலும் செய்யும்படி செய்துவிடலாம்.''

''டிக்கட் என்றால் என்ன?'' என்று நிக்கலஸ் கேட்டார்.

''பெரிய குழந்தைகளுக்கு மாலை வேளைகளில் அவர்களுடைய நடத்தைகளுக்குத் தக்கபடி மார்க் கொடுப்பது என்று நான் வைத்திருக்கிறேன்.''

தம்மைப் பார்த்துக் கொண்டிருந்த பிரகாசமான அவளுடைய கண்களை நிக்கலஸ் பார்த்தார். மேலும் அந்தப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டிப் படித்தார். குழந்தைகளின் வாழ்க்கையில் அவைகளின் தாயாருக்கு முக்கியமாகத் தோன்றும் ஒவ்வொரு விஷயத்தையும் அந்த நாள் குறிப்பில் எழுதியிருந்தாள். அந்தச் செய்கைகள் அவைகளின் குண விசேஷத்தைக் காட்டுவதாக இருந்தன. அவைகளுடைய படிப்பினால் ஏற்படக்கூடிய அபிவிருத்திகளை பொதுவாகக் காட்டுவதாகவும் இருந்தன. அவை அநேகமாக அற்பமான விஷயங்களாய் இருந்தன. ஆனால் அவைகளின் தாயாருக்கு அம்மாதிரி தோன்றவில்லை. இப்போது தமது குழந்தைகளைப் பற்றிய நாள் குறிப்பை முதல் தடவையாகப் பார்த்த அவைகளின் தந்தைக்கும் அம்மாதிரியே அற்பமாகத் தோன்றவில்லை.

''5-ந் தேதி'' என்று தலைப்பிட்டு பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''மைட்டியா சாப்பாட்டு மேஜை முன்பாக'' துஷ்டத்தனம் செய்து கொண்டிருந்தான். அவனுக்கு சர்க்கரைப் பொங்கல் கொடுக்கக் கூடாது என்று அப்பா சொன்னார். மைட்டியாவுக்கு அந்த மாதிரி கொடுக்கவில்லை. ஆனால் அவன் மகிழ்ச்சிக் குறைவாகக் காணப்பட்டான். மற்றவர்கள் சாப்பிடும்போது அவனுக்கு ஆசையாய் இருந்தது. அம்மாதிரி இனிப்புப் பதார்த்தங்களைக் குழந்தைகளுக்குக் கொடுக்காமல் இருக்கும் தண்டனையானது, குழந்தைகளின் பேராசையை வளர்க்கும் என்றே நான் நினைக்கிறேன். இதை நிக்கலஸிடம் சொல்ல வேண்டும்.''

நிக்கலஸ் அந்தப் புத்தகத்தை கீழே வைத்துவிட்டு, தமது மனைவியைப் பார்த்தார். அந்தப் பிரகாசமான கண்கள் அவரைக் கேள்விக் குறியோடு நோக்கின. அவர் அந்த நாள் குறிப்பை அங்கீகரிப்பாரா, அல்லது வெறுப்பாரா? அவர் அதை அங்கீகரிப்பது

மட்டுமல்லாமல், தமது மனைவியைப் போற்றுவார் என்பதிலும் எவ்வித சந்தேகமும் இல்லை.

ஆனால் அதை அவ்வளவு படாடோபமாக செய்திருக்க வேண்டியதில்லை என்று நிக்கலஸ் நினைத்தார். அந்த நாள் குறிப்பை எழுதியிருக்கவே வேண்டியதில்லை என்று நினைத்தார். ஆனால் இம்மாதிரியான இடைவிடாத ஆத்மீக முயற்சியானது, அதாவது தம்முடைய குழந்தைகளின் தார்மீக நன்மையை மட்டுமே உத்தேசித்து ஒரே நோக்கமாக செய்யப்படும் அந்த ஆத்மீக முயற்சியானது, அவரை மகிழ்ச்சியடையும்படி செய்தது. அவருடைய உணர்ச்சிகளை அவரால் ஆராய்ச்சி செய்ய முடியுமானால், அவர் ஒரு விஷயத்தைக் கண்டு கொண்டிருக்கலாம். அதாவது அவருடைய மனைவியின்மீது அவர் கொண்டுள்ள கனிவான, திடமான, பெருமையான அன்பானது ஒரு விஷயத்தில் தாங்கி நின்றது. அதுதான் அவளுடைய ஆத்மீக வளர்ச்சியைப் பற்றியும் அவள் இருந்துவரும் அவருக்கு எட்டமுடியாத உயர்ந்த தார்மீக உலகத்தைப் பற்றியும் அவருக்கு ஏற்பட்டுள்ள அதிசயமான உணர்ச்சியாகும்.

அவளுடைய புத்திசாலித்தனத்தையும் நல்ல குணத்தையும் கண்டு அவர் பெருமை கொண்டிருந்தார். ஆத்மீக உலகத்தில் அவளுக்குப் பக்கத்தில் தாம் ஒரு அற்பம் போல அவர் உணர்ந்தார். ஆனால் அம்மாதிரியான ஒரு உள்ளத்தைக்கொண்ட அவள் தமக்குச் சொந்தமானது மட்டுமல்லாமல், தம்மிலேயே ஒரு பாகமாகவும் அமைந்துவிட்டதைக் கண்டு அவர் எல்லாவற்றுக்கும் மேலாக மகிழ்ச்சி கொண்டார்.

''நான் முற்றிலும் முற்றிலும் அங்கீகரிக்கிறேன்; எனது அன்பே'' என்று அவர் முக்கியமான பார்வையோடு அவளிடம் சொன்னார். சிறிது நேரம் கழித்து மேலும் அவர் கூறினார். ''இன்று நான் மோசமாகத்தான் நடந்துகொண்டேன். நீ அச்சமயம் படிப்பு அறையில் இல்லை. பீயரும் நானும் தர்க்கம் செய்ய ஆரம்பித்தோம். நான் அதிகமாகக் கோபம் அடைந்து விட்டேன். ஆனால் அவர் எப்பேர்ப்பட்ட குழந்தை மாதிரி இருக்கிறார்! அவரை நட்டாஷா தன்னுடைய கையில் அடக்கி வைத்திருக்காவிட்டால், அவருக்கு என்ன நேருமென்பது எனக்குத் தெரியாது...... அவர் ஏன் பீட்டர்ஸ்பர்க்குப் போனார் என்பது உனக்கு ஏதாவது தெரியுமா? அவர்கள் ஒரு சங்கத்தை அமைத்திருக்கிறார்கள்.......''

''ஆமாம், எனக்குத் தெரியும்'' என்றாள் கோமகள் மேரி. ''நட்டாஷா என்னிடம் சொன்னாள்.''

''நல்லது, அப்படியானால் உனக்கும் தெரியும்'', என்று நிக்கலஸ் சொன்னார். அவருடைய விவாதங்களை நினைத்துப்

பார்த்தபோது, அவர் மீண்டும் கொதிப்பு கொண்டார். ''அரசாங்கத்திற்கு விரோதமாகப் போக வேண்டியதுதான் ஒவ்வொரு நாணயமான ஆண்மகனின் கடமையென்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று விரும்பினார். அரசாங்கத்திற்குச் செய்து கொடுத்த பிரமாணமும், கடமையும்..... நீ அச்சமயம் அங்கே இல்லாமல் போனதற்காக நான் வருந்துகிறேன். டெனைசாவும், நட்டாஷாவும் என் மீது பாய்ந்தார்கள். நட்டாஷா அசட்டுத்தனமாக இருந்கிறாள். அவரை அவள் எம்மாதிரி ஆட்டி வைக்கிறாள், தெரியுமா? என்றாலும் ஒரு வாதம் ஏற்பட்டால் போதும்! அவளுக்குச் சொந்தமாகச் சொல்வதற்கு எவ்வித வார்த்தையும் கிடையாது. அவர் சொல்லியவைகளையே அவள் திருப்பிச் சொல்லுவாள்.......என்று நிக்கலஸ் பேசினார். அதாவது, நமக்கு நெருக்கமாகவும்– அருமையாகவும் உள்ளவர்களைப் பற்றித் தீர்ப்புக் கூறும்படி நமக்கு ஏற்படக்கூடிய தடுக்க முடியாத உணர்ச்சிக்கு நிக்கலஸ், அடிமையானார். நட்டாஷாவைப் பற்றி அவர் என்ன சொன்னாரோ, அதே வாதத்தை வார்த்தைக்கு வார்த்தை தமக்கும் தமது மனைவிக்கும் உள்ள உறவைப் பற்றிச் சொல்ல முடியும் என்பதை அவர் மறந்து விட்டார்.

''ஆமாம்; நான் அதைக் கவனித்திருக்கிறேன்'' என்றாள் கோமகள் மேரி.

''கடமையும் பிரமாணமும் மற்ற எல்லாவற்றையும் விட மேலானவை என்று நான் அவரிடம் சொன்னேன. அவர் உடனே எதையோ நிரூபிக்க ஆரம்பித்தார். அது என்ன என்பதைக் கடவுளே அறிவார். நீ அங்கே இல்லாமல் போனது ரொம்ப பரிதாபமானது. நீ அங்கே இருந்திருந்தால் என்ன சொல்லியிருப்பாய்?''

''எனக்குத் தெரிந்த வரையில் நீர் சொல்வது தான் சரியென்று தோன்றுகிறது. நான் நட்டாஷாவிடம் அம்மாதிரியே சொன்னேன். ஒவ்வொருவரும் கஷ்டப்படுவதாகவும், ஒவ்வொருவரும் வதைக்கப்படுவதாகவும், ஒவ்வொருவரும் கெட்டுப் போவதாகவும், நமது அண்டை வீட்டுக்காரர்களைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமையென்றும் பீயர் சொல்லுகிறார். அந்த இடத்தில் அவர் சொல்வது சரிதான்'' என்று கோமகள் மேரி கூறினாள். ''ஆனால் நமக்குப் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கடவுளால் நமக்குக் காட்டப்பட்ட பிற கடமைகளும் இருக்கின்றன என்பதை அவர் மறந்து விடுகிறார். நாம் ஆபத்துகளுக்கு உட்படுவதற்குத் தயாராய் இருந்த போதிலும், நமது குழந்தைகளை அம்மாதிரி ஆபத்துக்கு உட்படுத்தக்கூடாது என்பதை அவர் மறந்துவிடுகிறார்.''

''ஆமாம், அதுதான் விஷயம். அதைத்தான் நானும் அவரிடம் சொன்னேன்'' என்று நிக்கலஸ் கூறினார். தாம் அம்மாதிரியே கூறியதாக அவர் மனோராஜ்யம் செய்தார். ''ஆனால், அவர்கள் அவர்களுடைய கொள்கைகளையே வற்புறுத்திக்கொண்டிருந் தார்கள். அதாவது அண்டை வீட்டுக்காரர்கள்மீது பிரியம்கொள்ள வேண்டுமென்றும், கிறிஸ்துவ மதத்தை நம்ப வேண்டுமென்றும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இவற்றை யெல்லாம் குஞ்சு நிக்கலஸ் முன்பாகச் சொன்னார்கள். அவன் என்னுடைய அறைக்குள் வந்து உட்கார்ந்து அங்கிருந்த என்னுடைய சாமான்களை யெல்லாம் உடைத்துவிட்டான்.''

''ஆ, நிக்கலஸ், நான் குஞ்சு நிக்கலஸைப்பற்றி அடிக்கடி வருத்தப்படுவதுண்டு என்று உமக்குத் தெரியுமா?'' என்று கோமகள் மேரி சொன்னாள். ''அவன் அப்பேர்ப்பட்ட சிறந்த பையனாக இருக்கிறான்; என்னுடைய குழந்தைகளின் நன்மைகளுக்காக அவனைப் புறக்கணிப்பதாக எனக்குத் தோன்றுகிறது. நம் எல்லோருக்கும் குழந்தைகளும் பந்துக்களும் இருக்கிறார்கள். ஆனால் அவனுக்கு ஒருவரும் இல்லை. அவன் எப்பொழுதும் தனியாக இருந்து சிந்தித்துக்கொண்டிருக்கிறான்.''

''நல்லது, அவனுக்காக நீ உன்னைக் கண்டித்துக்கொள்ள வேண்டியது அவசியமில்லையென்று நான் நினைக்கிறேன். ஒரு பிரியமான தாயார் தன்னுடைய குமாரனுக்கு எதையெல்லாம் செய்வாளோ, அதையெல்லாம் நீ செய்துகொண்டிருக்கிறாய். அதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன். அவன் ஒரு சிறந்த பையன்! அவன் ஒரு சிறந்த பையன்! இன்று மாலை பீயர் சொல்லி யவைகளையெல்லாம் ஏதோ கனவில் இருப்பவனைப்போல அவன் கேட்டுக்கொண்டிருந்தான். நாங்கள் இராச்சாப்பாட்டுக்குப் போகும்போது நான் அவனைப் பார்த்தேன். அவன் என்னுடைய மேஜைமீது இருந்தவைகளையெல்லாம் துண்டு துண்டாக உடைத்துவிட்டான். அவனாகவே உடனே என்னிடம் வந்து சொன்னான். அவன் பொய் பேசியதை நான் பார்த்ததே இல்லை. ஒரு சிறந்த பையன்! ஒரு சிறந்த பையன்!'' என்று நிக்கலஸ் திரும்பவும் சொன்னார். அவருடைய மனதில் நிக்கலஸ் பால்கோவ்ஸ்கிமீது பிரியமே கிடையாது. என்றாலும், அந்தச் சிறுவன் ஒரு சிறந்த பையன் என்பதை ஒப்புக்கொள்ள அவருடைய உணர்ச்சி எப்பொழுதும் அவரைத் தூண்டி வந்தது.

''என்றாலும், அவனுடைய சொந்தத் தாயார் மாதிரி நான் ஆக முடியாது'' என்று கோமகள் மேரி சொன்னாள்: ''நான் அவனுடைய சொந்தத் தாயார் மாதிரி அல்ல என்பதை உணருகிறேன். அந்த நினைப்பு எனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது. அவன் ஒரு

ஆச்சரியமான பையன். அவனுக்காக நான் எப்போதும் கவலை கொள்ளுகிறேன். அவனுக்குத் தோழர்கள் இப்பார்களானால், அது மிகுந்த நன்மையாய் இருக்கும்.''

''நல்லது, அதற்கு வெகுகாலம் பிடிக்காது. அடுத்த வசந்த காலத்தில் அவனை நான் பீட்டர்ஸ்பர்க்குக்கு அழைத்துப் போகிறேன்'' என்று நிக்கலஸ் சொன்னார். ''ஆமாம், பீயர் எப்போதுமே ஒரு கனவு காண்பவர்தான். எப்போதுமே அவர் அப்படித்தான் இருப்பார்'' என்று சொல்லிவிட்டு, அவர் மீண்டும் தமது படிப்பு அறையில் நடந்த உரையாடலைப் பேசுவதற்கு ஆரம்பித்தார். அந்த உரையாடல் அவருடைய மனதை வருத்திக்கொண்டிருந்ததாகத் தோன்றியது. ''நல்லது, அராக்சீவ் கெட்டவராய் இருந்தால் என்ன, அல்லது மற்ற விஷயங்களை ப்பற்றி எனக்கு என்ன? அங்கே என்ன நடந்துகொண்டிருந்தாலும் அது என்னுடைய வேலையல்ல. உள்ள நிலைமையை அறியவோ அல்லது புரியவோ முடியாத ஒரு தாயார் இருந்தாள்; எனக்கு ஏராளமான கடன் இருந்தபடியால், என்னை ஜெயிலில் போட கடன்காரர்கள் ஏற்பாடு செய்துகொண்டிருந்தார்கள்; அப்படி யிருந்தும் நமது விவாக சமயத்தில் அவற்றைப்பற்றி நான் கவலைகொண்டிருக்கவில்லை. இப்பொழுது நீ இருக்கிறாய்; குழந்தைகள் இருக்கின்றன; நம்முடைய காரியாதிகளும் இருக்கின்றன. நான் என்னுடைய சொந்த மகிழ்ச்சிக்காகவா பண்ணையிலோ, அல்லது காரியாலயத்திலோ காலையிலிருந்து இரவுவரை உழைத்துக்கொண்டிருக்கிறேன்? இல்லை. என்னுடைய தாயாருக்கு இதம் ஏற்படும்படி செய்வதற்காக நான் வேலை செய்தாக வேண்டுமென்பதை அறிவேன். உன்னிடம் வாங்கிய பணத்தை நான் திருப்பிக் கொடுக்க வேண்டும். என்னைப்போல என்னுடைய குழந்தைகளையும் பிச்சைக்காரர்களாக விட்டுப் போகக்கூடாது. இவற்றிற்காக நான் வேலை செய்தாக வேண்டும்.''

மனிதன் உணவினால் மட்டும் வாழ்ந்து விடவில்லை யென்பதையும், இந்த விஷயங்களில் அவர்அளவுக்கு அதிகமாக முக்கியத்துவம் கொடுத்து வருகிறார் என்பதையும் கோமகள் மேரி அவரிடம் சொல்ல விரும்பினாள். ஆனால் அதைச் சொல்லக் கூடாது என்பதையும், அப்படிச் சொல்வதால் எவ்விதப் பிரயோஜனமும் ஏற்படாது என்பதையும் அறிவாள். ஆகவே அவள் அவருடைய கையை எடுத்து முத்தமிட்டாள். இம்மாதிரி முத்தமிடுவது தம்முடைய நினைப்புகளை அவள் ஒப்புக்கொண்டு உறுதி செய்வதற்கு அடையாளமாகும் என்று அவர் நினைத்தார். பின்னால் சில நிமிஷங்கள் சிந்தித்துவிட்டு, மீண்டும் உரத்த குரலில் பேசினார்.

''இன்று எலியாஸ் மிட்ராபாணிச் (அவர்தான் அவருடைய ஓவர்சீயர்) டாம்போவ் எஸ்டேட்டிலிருந்து திரும்பி வந்தார். அந்தக் காட்டிற்கு எண்பதாயிரம் ரூபிள்கள் கொடுப்பதாக அங்குள்ளவர்கள் சொல்வதாக அவர் என்னிடம் சொன்னார்.''

ஒரு ஆவலான தோற்றத்தோடு நிக்கலஸ் பேச ஆரம்பித்தார். ஆட்ராட்னோ எஸ்டேட்டை மீண்டும் சீக்கிரமாக வாங்கிவிடலாம் என்ற சாத்தியத்தைப் பற்றி அவர் பேசினார். மேலும் அவர் சொன்னதாவது: ''இன்னும் பத்து வருஷங்கள் வாழ்வேனானால், குழந்தைகளை... ஒருசிலாக்கியமான நிலைமையில் இருக்கும்படி செய்து விடுவேன்.''

தனது கணவர் கூறியவைகளை கோமகள் மேரி கவனித்துக் கேட்டாள். அவர் சொல்லியவைகளை யெல்லாம் அவள் புரிந்துகொண்டாள். அவர் இம்மாதிரி தனக்குத்தானே பேசும்போது சில சமயங்களில் தாம் என்ன பேசிக்கொண்டிருந்தார் என்பதைத் திரும்பவும் அவளிடம் கேட்பது உண்டு. அப்படிக் கேட்கும்போது அவள் வேறு எதையோ யோசித்துக் கொண்டிருந்ததாக அவருக்குத் தெரியுமானால், உடனே அவர் எரிச்சல் கொள்வதுண்டு. ஆகவே அவர் இம்மாதிரி தமக்குத்தாமே பேசும் போதெல்லாம் அவள் கவனமாக அவர் சொல்லுகிறவைகளை யெல்லாம் கேட்பதுண்டு. அவற்றில் அவருக்கு சிரத்தை இல்லாவிட்டாலும் கூட, அவள் அவற்றை கேட்பதுண்டு. அவள் அவரை நோக்கினாள். அவள் எதையும் பற்றி சிந்திக்காவிட்டாலும் வேறு எதையோ பற்றி அவள் உணர்ச்சி கொண்டாள். தான் அறிந்துகொண்ட விஷயங்களை யெல்லாம் எப்பொழுதுமே உணர்ந்துகொள்ள முடியாத இந்த மனிதரிடம் தனக்கு ஒரு கனிவான, பணிவான அன்பு இருப்பதை அவள் உணர்ந்தாள். அம்மாதிரி புரிந்துகொள்ள முடியாத நிலைமையில் அவர் இருப்பதால் அவர் மீது அவளுக்குள்ள காதலானது இன்னும் அதிகமாய்ப் பலத்தது. அதோடு ஒரு ஆர்வமான கனிவும் சேர்ந்தது. இந்த உணர்ச்சியானது அவளைப் முழுவதும் கவர்ந்திருந்தபடியால், அவளால் தன்னுடைய கணவரின் திட்டங்களின் விவரங்களைப் புரிந்துகொள்ள முடியாமல் தடுத்தது. அதோடு அவர் என்ன சொல்லிக் கொண்டிருந்தாரோ, அதற்குச் சம்பந்தமில்லாத விஷயங்கள் அவருடைய மனதில் ஓடிக்கொண்டிருந்தன. அவள் தன்னுடைய மருமகனைப் பற்றி நினைத்தாள். பீயர் பேசிக்கொண்டிருந்த போது, அந்தச் சிறுவனுக்கு ஏற்பட்ட பரபரப்பைப் பற்றி அவளுடைய கணவர் சொல்லியது அவளுடைய மனதில் மிகுந்த பலமாக அது பதிந்தது. அந்தச் சிறுவனுடைய இன்னும் பல அமைதியான பரபரப்பான குண விசேஷங்கள் அவளுடைய மனதில் தோன்றின.

அவளுடைய மருமகனைப் பற்றி அவள் நினைத்தபோது அவளுடைய குழந்தைகளைப் பற்றிய நினைப்பும் தோன்றியது. அவள் அந்தக் குழந்தைகளை அவளுடைய மருமகனுடன் ஒப்பிட்டுப் பார்க்கவில்லை. தன்னுடைய குழந்தைகளிடம் தனக்குள்ள பிரியத்தையும், தன்னுடைய மருமகனிடம் உள்ள பிரியத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். அப்படிச் செய்தபோது குஞ்சு நிக்கலஸிடம் தான் காட்டும் உணர்ச்சிகளில் ஏதோ ஒன்று குறைவதை உணர்ந்து அதற்காக அவள் வருந்தினாள்.

இந்த வித்தியாசம் அந்தக் குழந்தைகளுடைய வயது வித்தியாசத்தினால் ஏற்படலாம் என்று சில சமயங்களில் அவளுக்குத் தோன்றியது. ஆனால் தன்னுடைய மருமகனிடம் பராமுகமாக இருப்பதாக நினைத்து அதற்காக தன்னையே அவள் குறைகூறிக் கொண்டாள். இனிமேல் இதை விட சிலாக்கியமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும், கஷ்டமான கைக்கூடாத லட்சியத்தை அடைய வேண்டுமென்றும் அவளுடைய உள்ளத்தில் உறுதிசெய்து கொண்டாள். அதாவது, இந்த வாழ்க்கையில் அவளுடைய கணவர் மீதும், குழந்தைகள் மீதும், குஞ்சு நிக்கலஸ் மீதும், அவளுடைய அண்டை விட்டார்கள் மீதும் கிறிஸ்து எப்படி மனிதகுலத்தின்மீது பிரியம் கொண்டாரோ, அதேமாதிரி–தானும் பிரியம்கொள்ள வேண்டுமென்று அவள் உறுதி செய்தாள். கோமகளுடைய ஆத்மாவானது எப்போதுமே அந்த நித்தியமான அளவிட முடியாத, பூர்ணமான தெய்வத்தை நோக்கியே பிரார்த்தனை செய்துகொண்டிருந்தது. ஆகவே அவளுடைய உள்ளமானது எப்போதும் அமைதியாக இருப்பதே இல்லை. அவளுக்குள்ள ரகசியமான மனவருத்தமானது அவளுடைய முகத்தில் கடுமையாகக் காணப்பட்டது. நிக்கலஸ் அவளை நோக்கினார். ''ஓ கடவுளே, அவள் இறந்து விட்டால் நம்முடைய கதி என்ன? அவளுடைய முகம் அம்மாதிரி இருக்கும் போதெல்லாம் நான் எப்போதும் பீதியடையவதுண்டு'' என்று அவர் நினைத்தார். தெய்வச் சிலையின் முன்பாக அவர் அமர்ந்து தம்முடைய மாலை பிரார்த்தனையை ஆரம்பித்தார்.

## 16

நட்டாஷாவும் பீயரும் தனிமையாக இருந்தபோது, கணவரும் மனைவியும் பேசக்கூடிய பேச்சுக்களைப்பேச ஆரம்பித்தார்கள். அதாவது, அபூர்வமான தெளிவோடும், வேகத்தோடும், அறிவோடும் ஒருவருடைய எண்ணங்களை மற்றொருவர் புரிந்துகொண்டு வாதத்திற்கு பொருத்தமில்லாமல், ஆதாரமோ

அனுமானமோ முடிவோ இல்லாத வகையில் முற்றிலும் விசித்திரமான வழியில் பேச ஆரம்பித்தார்கள். இம்மாதிரி தனது கணவரிடம் பேசுவது நட்டாஷாவுக்கு வழக்கமாயிருந்தது. தர்க்கரீதியாக பீயர் பேச ஆரம்பித்தாரானால், தங்களுக்குள் ஏதோ ஒரு தவறு இருக்கிறது என்பது நட்டாஷாவின் உறுதியான அபிப்பிராயமாயிருந்தது. எதையாவது நிரூபிப்பதற்கோ, அல்லது அமைதியாக வாத ரீதியில் பேசுவதற்கோ அவர் ஆரம்பித்து, அவளும் அதே மாதிரி பேச ஆரம்பித்தால், அது ஒரு சண்டைக்குத்தான் காரணமாக இருக்குமென்பதை அவள் அறிவாள்.

அவர்களிருவரும் தனியாக விடப்பட்டவுடன் விரிந்த மகிழ்ச்சியான கண்களோடு அவள் அவரிடம் நெருங்கி, அவருடைய தலையைப் பற்றி தமது மார்பில் வைத்து அழுத்தி, ''இப்பொழுது நீர் முழுவதும் என்னுடையவர்; என்னுடையவரே. உம்மால் தப்பிப்போக முடியாது'' என்று சொல்லுவாள். அந்த வினாடியிலிருந்து அவர்கள் எந்தவிதமான தர்க்கரீதிக்கும் பொருத்தமில்லாமல் பற்பல விஷயங்களைப் பற்றி ஏககாலத்தில் ஒருவருக்கொருவர் பேச ஆரம்பித்தார்கள். பற்பல விஷயங்களைப் பற்றியும் ஏக காலத்தில் பேச ஆரம்பித்ததினால், அவர்கள் ஒருவரையொருவர் அறிந்து கொள்ளுவதில் தடை எதுவும் ஏற்படவில்லை. அதற்கு மாறாக, ஒருவரையொருவர் அறிந்துகொண்டிருக்கிறார்கள் என்பதைக் காட்டுவதற்கு அது ஒரு நிச்சயமான அடையாளமாய் இருந்தது.

கனவுகளில் எல்லாமே நிச்சயமற்றதாகக் காணப்படும். காரணத்திற்குப் பொருத்தமில்லாமலும், முன்பின் முரணாகவும் காணப்படும். ஆனால் அந்தக் கனவிற்கு காரணமான உணர்ச்சி ஒன்றுதான் நிச்சயமாகத் தெரியும். அதே மாதிரி, இந்த உரையாடலிலும் தர்க்க ரீதிக்குப் புறம்பான விதத்தில் தெளிவாகவும் தொடர்ச்சியாகவும் வார்த்தைகள் அமையாமல் இருந்தன. ஆனால் அவற்றிற்குக் காரணமான உணர்ச்சி அங்கே காணப்பட்டது.

தன்னுடைய சகோதரருடைய வாழ்கையைப் பற்றியும், செய்கைகளைப் பற்றியும், அவர் அங்கில்லாத சமயத்தில் அவள் எவ்வளவு தூரம் கஷ்டமடைந்து வாழ்க்கையில் விருப்புக் கொள்ளாமல் இருந்தாள் என்பதைப் பற்றியும், மேரி மீது அவளுக்குள்ள அன்பானது எவ்வளவு தூரம் எப்பொழுதும் இல்லாத விதத்தில் வளர்ந்திருக்கிறது என்பதைப் பற்றியும், தன்னைவிட ஒவ்வொரு விதத்திலும் மேரி எப்படி சிலாக்கியமானவளாய் இருக்கிறாள் என்பதைப் பற்றியும் பீயரிடம் நட்டாஷா சொல்லிக்கொண்டிந்தாள். இம்மாதிரி பேசும்போது அதாவது மேரியின் உயர்வை ஒப்புகொண்டு பேசும்போது, நட்டாஷா

உண்மையான சிரத்தையுடனேயே சொன்னாள். ஆனால் அதே சமயத்தில் மேரியையும், வேறு எந்தப் பெண்ணையும் விட தன் மீதே அவர் அதிகமாகப் பிரியம் கொள்ள வேண்டுமென்பதை பீயர் அறிந்து கொள்ளும் விதத்தில் ஜாடையாகக் குறிப்பிட்டாள். பீட்டர்ஸ்பர்க்கில் பல பெண்களை அவர் பார்த்துவிட்டு வந்திருக்கிறபடியால், இப்பொழுது மீண்டும் தன்னையே அவர் விரும்புவதாகப் புதிதாகச் சொல்ல வேண்டுமென்று அவள் விரும்பினாள்.

நட்டாஷாவுக்கு பீயர் பதில் சொன்னார். அதாவது, பீட்டர்ஸ்பர்க்கில் டின்னர்களிலும், நடனக் கச்சேரிகளிலும் சீமாட்டிகளைச் சந்திப்பது அவருக்கு எவ்வளவு சகிக்க முடியாததாய் இருந்தது என்பதை பீயர் எடுத்துக்காட்டினார்.

''சீமாட்டிகளிடம் பேசவேண்டிய தந்திரங்கள் எல்லாம் எனக்கு மறந்து போய்விட்டன. அந்தக் காரியங்கள் எல்லாம் இப்பொழுது மனத்திற்குப் பிடித்தமில்லாமல் இருக்கின்றன. அதைத் தவிர, பீட்டர்ஸ்பர்க்கில் எனக்கு ஏராளமாக வேலை இருந்தன.''

நட்டாஷா உன்னிப்பாக அவரைக் கவனித்து பேசினாள்:

''மேரி எவ்வளவு சிலாக்கியமானவளாய் இருக்கிறாள். குழந்தைகளைப் பற்றி எவ்வளவு நன்றாக அவள் அறிந்துகொள்ளுகிறாள். அவர்களுடைய உள்ளத்ததை ஊடுருவிப் பார்ப்பதைப்போல அவள் இருக்கிறாள். உதாரணமாக, நேற்றைய தினம் மைட்டியா ரொம்ப விஷமத்தனமாக......''

''அவனுடைய தந்தையைப்போலவே அவன் எம்மாதிரி இருக்கிறான்!'' என்று பீயர் இடைமறித்தார்.

மைட்டியாவின் தோற்றம் அவனுடைய தந்தையான நிக்கலஸைப் போல இருக்கிறது என்பதை அவர் எதற்காக கூறினார், என்ற விஷயத்தை நட்டாஷா அறிவாள். அதாவது, அவருடன் பீயருக்கு ஏற்பட்ட மனத்திற்கு பிடித்தமில்லாத வார்க்குவாதத்தை அவர் நினைவு கூர்ந்து, நட்டாஷா அதைப் பற்றி என்ன நினைக்கிறாள் என்பதை அவர் அறிய விரும்பினார்.

''பொதுவாக ஒப்புக்கொள்ளப்படாத விஷயம் எதைப் பற்றியும் அங்கீகரிக்காத சுபாவம் நிக்கலஸுக்கு உண்டு. ஆனால் புதிதாகத் தோன்றும் ஒரு வழியை நீர் பெரிதாக மதிக்கிறீர் என்று நான் நினைக்கிறேன்'' என ஒரு சமயம் பீயர் உபயோகித்த அதே வார்த்தைகளை அவள் திருப்பிக் கூறினாள்.

''இல்லை, வாதங்களும் கொள்கைகளும் நிக்கலஸுக்கு நேரப்போக்கைப் போன்ற ஒரு தமாஷாகும். அதுதான் முக்கியமான விஷயம்'' என்று பீயர் சொன்னார். ''உதாரணமாக, அவர் ஒரு

வாசகசாலைக்கு வேண்டிய புத்தகங்களை வாங்கி வருகிறார். ஆனால் முன்னால் வாங்கிய சீஸ்மாண்டி, ரூஸோ, மாண்டெஸ்கியூ போன்ற புத்தகங்களைப் படித்து முடிக்காமல், புதிதாக ஒரு புத்தகத்தை வாங்குவதில்லையென்று அவர் உறுதி தொண்டிருக் கிறார்'' என்று ஒரு புன்னகையோடு கூறினார். ''ஆனால் நான் எம்மாதிரி இருக்கிறேன் என்பதை நீ அறிவாய்'' என்று அவர் ஆரம்பித்தார். அதாவது, தாம் சொல்லியதைச் சுமுகப் படுத்துவதற்காக முயற்சித்தார். ஆனால் அது அவசியம் இல்லை என்பதைக் காட்டுவதற்காக நட்டாஷா இடை மறித்தாள்.

''ஆகவே, கொள்கைகள் எல்லாம் அவருக்கு ஒரு தமாஷா என்று நீர் சொல்கிறீர்......''

''ஆம், எனக்கு கொள்கைகளைத் தவிர வேறு எதுவும் அவ்வளவு முக்கியமானதல்ல. நான் பீட்டர்ஸ் பர்க்கில் இருந்த காலம் முழுவதும் நான் பார்த்த ஒவ்வொருவரையும் ஒரு கனவில் கண்டதைப்போல் கண்டேன். நான் ஒரு விஷயத்தைப் பற்றி சிந்தனை கொள்ள ஆரம்பித்தால், மற்றவையெல்லாம் எனக்குத் தமாஷாவாகவே தோன்றும்.''

''ஆ, குழந்தைகளை நீர் சந்தித்தபோது நான் அங்கே இல்லாமல் போனதற்காக வருந்துகிறேன்'' என்று நட்டாஷா கூறினாள். ''எந்தக் குழந்தை மிகுந்த மகிழ்ச்சிகரமானதாய் இருக்கிறது? லிஸா தான் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும்.''

''ஆம்'' என்று பீயர் பதில் சொன்னார். அவருடைய மனதில் என்ன ஓடிக்கொண்டிக்கிறதோ அதை மேலும் தொடர்ந்து பேசினார். ''நாம் சிந்திக்கக்கூடாதென்று நிக்கலஸ் சொல்லுகிறாள். என்னால் அப்படியிருக்க முடியவில்லை. தவிரவும், நான் பீட்டஸ்பர்க்கில் இருந்தபோது (நான் உன்னிடம் தான் இதைச் சொல்லுகிறேன்), நான் இல்லாவிட்டால் பூரா விஷயங்களும் துண்டு துண்டாகச் சிதறிப் போய்விடுமென்று நான் உணர்ந்தேன். ஒவ்வொருவரும் அவருக்கு இஷ்டப்பட்ட பாதையில் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களை எல்லாம் ஒன்று சேர்த்து வைப்பதில் நான் வெற்றி பெற்றேன். அதன் பின்பு, என்னுடைய கொள்கையானது, தெளிவாகவும் சுலபமாகவும் காணப்பட்டது. இதோ பார், நான் இதையோ அதையோ எதிர்க்க வேண்டுமென்று சொல்லவில்லை. அம்மாதிரி சொன்னால் நம்மை தவறாக நினைத்துக்கொள்ளுவார்கள். நான் அவர்களுக்கு ''நீங்கள் ஒன்று சேருங்கள். நல்ல காரியங்களை விரும்பும் நீங்கள் ஒன்று சேர்ந்து ஒரே கொடியின் கீழ் தருமத்திற்காக வேலை செய்யுங்கள் என்று சொன்னேன். இளவரசர் ஸெர்ஜி ஒரு சிலாக்கியமான புத்திசாலியான பேர்வழி.''

பீயருடைய கொள்கையின் மகத்துவத்தைப் பற்றி நட்டாஷாவுக்கு எந்தவிதமான சந்தேகமுமில்லை. ஆனால் ஒரு விஷயம் அவருடைய மன அமைதியைக் குலைத்தது. ''அவ்வளவு முக்கியமான ஒரு மனிதர், சமுதாயத்திற்கு அவசியமான ஒரு மனிதர், எனக்கு கணவராகவும் இருக்க முடியுமா? இது எப்படி நேரிட்டது?'' இந்த சந்தேகத்தை அவரிடம் சொல்லுவதற்கு அவள் விரும்பினாள். ''இப்பொழுது மற்ற எல்லாரையும்விட அவர் உண்மையிலேயே புத்திசாலியானவர் என்பதை யார் முடிவு செய்வது?'' என்று அவள் தன்னையே கேட்டுக்கொண்டாள். பீயர் மிகுந்த மரியாதை வைத்துள்ள ஒவ்வொன்றைப் பற்றியும், அவளே மனதில் ஆலோசனை செய்தாள். பிளாட்டோன் பாரட்டேவ் என்ற ஒருவரைத்தான் அவர் சொல்லியவைகளிலிருந்து அவர் மிகுந்த உயர்வாக மதிக்கிறார் என்பது தெரிந்தது.

''நான் எதைப்பற்றி யோசித்துக்கொண்டிருக்கிறேன் என்பது உமக்குத் தெரியுமா என்று அவள் கேட்டாள். பிளாட்டோன் காரேட்டேவைப் பற்றித்தான் நான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். உமது கருத்துக்களை அவர் ஒப்புக்கொள்ளுவார் என்று நீர் நினைக்கிறீரா?''

இந்தக் கேள்வியைக் கண்டு பீயர் கொஞ்சங்கூட ஆச்சரியப் படவில்லை. அவருடைய மனைவியின் சிந்தனை எந்த வழியில் போய்க் கொண்டிருக்கிறது என்பதை அவர் அறிந்து கொண்டார்.

''பிளாட்டோன் காராட்டேவா?'' என்று அவர் திருப்பிக்கூறி சிந்தனை செய்தார். அந்த விஷயத்தைப் பற்றி காராட்டேவின் கருத்து எப்படி இருக்கலாம் என்பதைப் பற்றி சிரத்தையோடு சிந்திப்பதற்கு முயற்சி செய்வதாகக் காணப்பட்டார். ''அவனுக்கு இதைப் புரிந்துகொள்ள முடியாது..... ஒரு வேளை அவன் புரிந்து கொண்டாலும் கொள்ளலாம்.''

''நான் உம்மை அசாத்தியமாகக் காதலிக்கிறேன்'' என்று நட்டாஷா திடீரென்று கூறினாள். ''அசாத்தியமாக, அசாத்தியமாகக் காதலிக்கிறேன்.''

''இல்லை, அவன் ஒப்புக்கொண்டிருக்கமாட்டான்'' என்று பீயர் சிந்தனைக்குப் பின்னால் கூறினார். ''நம்முடைய குடும்ப வாழ்க்கையைப் தான் அவன் ஒப்புக்கொண்டிருப்பான். அவன் எப்பொழுதுமே ஒவ்வொன்றிலும் மகிழ்ச்சியையும் சமாதானத்தையும் ஒழுங்கையும் கண்டுபிடிக்கவே ஆவலோடு இருப்பான். நம்மை அவன் சந்திப்பதில் நான் பெருமை கொள்வேன். நான் இங்கு இல்லாமலிருந்தபோது நடந்த விஷயங்களைப் பற்றி நீ பேசினாய். ஆனால் உன்னைப் பிரிந்த

பின்பு, உனக்காக எம்மாதிரியான விசேஷ உணர்ச்சி என் மனதில் தோன்றியது என்பதை நான் சொன்னால், நீ நம்ப மாட்டாய்.......''

''ஆம், நான் அப்படித்தான் நினைக்கிறேன்.....'' என்று நட்டாஷா ஆரம்பித்தாள்.

''அல்ல, அதுவல்ல. நான் உன்மீது பிரியம் கொண்டிருந்ததை விடவேயில்லை. யாராலும் அதற்கு மேல் பிரியம் கொண்டிருக்க முடியாது. என்றாலும் இது தனிப்பட்ட விசேஷமானதாகும்..... ஆம், நிச்சயமாக'' அவர் தமது பேச்சை முடிக்கவில்லை. ஆனால் அவர்களுடைய கண்கள் சந்தித்து மீதமுள்ளவைகளைச் சொல்லின.

''இதென்ன அசட்டுத்தனம்'' என்று நட்டாஷா திடீரென்று கூறினாள். தேன்மதிகளைப் பற்றி கூறுவது அசட்டுத்தனம். திருமணமான ஆரம்ப காலத்தில்தான்மிகுந்த மகிழ்ச்சி ஏற்படும் என்று சொல்லுவதும் அசட்டுத்தனம். அதற்கு மாறாக, இப்பொழுதுதான் சிறந்த மகிழ்ச்சி ஏற்பட்டிக்கிறது. நீர் மட்டும் போகாமல் இருந்திருந்தால்; நாம் எம்மாதிரி சண்டை போட்டுக்கொண்டோம் என்பது உமக்கு நினைவு இருக்கிறதா? அதெல்லாம் என்னுடைய தவறுதான். எப்பொழுதுமே என்னுடைய தவறுதான். நாம் எதைப்பற்றி சண்டை போட்டோம்? அதைப் பற்றி இப்பொழுது நினைவு கூட இல்லை.''

''எப்பொழுதுமே ஒரே விஷயத்தைப் பற்றிதான்'' என்று பீயர் ஒரு புன்னகையோடு கூறினார். ''பொறாமை.....''

''அதை நீர் சொல்லவேண்டாம்; என்னால் சகிக்க முடியாது'' என்று நட்டாஷா கதறினாள்.

அவளுடைய கண்கள் கனிவற்றுக் கோபமாகக் காணப்பட்டன. சிறிது நேரத்திற்குப் பின்னால் அவள், ''நீர் அவளைப் பார்த்தீரா?'' என்று கேட்டாள்.

''இல்லை, நான் பார்த்திருந்தால் கூட அவளை அடையாளம் கண்டிருக்க முடியாது''.

அவர்கள் சிறிது நேரம் மௌனமாயிருந்தார்கள்.

''ஓ, உமக்குத் தெரியுமா? நீர் படிப்பு அறையில் பேசிக்கொண்டிருந்த போது, நான் உம்மைப் பார்த்துக் கொண்டிருந்தேன்'' என்று நட்டாஷா அவர்களைச் சுற்றி மூடியிருந்த மேகத்தைக் கலைக்க ஆவல்கொண்டவளைப் போலப் பேச ஆரம்பித்தாள். ''நீர் அவனைப் போலவே இருக்கிறீர். இரண்டு மொச்சைகளைப்போல இருக்கிறீர் – அந்தச் சிறுவனைப்போலவே இருக்கிறீர் (அவளுடைய சிறிய குமாரனை அவள் குறிப்பிடுகிறாள்). ஓ, அவனிடம் போவதற்கு நேரமாய்விட்டது...

பால் வந்துவிட்டது... ஆனால் உம்மைவிட்டுப் பிரிந்துபோவதற்கு எனக்கு வருத்தமாக இருக்கிறது''.

அவர்கள் சிறிது நேரம் மௌனமாயிருந்தார்கள். பின்னால் திடீரென்று இருவரும் ஒரே சமயத்தில் ஒருவரையொருவர் நோக்கினார்கள். அவர்கள் இருவரும் ஒரே சமயத்தில் பேச ஆரம்பித்தார்கள். திருப்தியோடும் உற்சாகத்தோடும் பீயர் ஆரம்பித்தார். ஒரு அடைமதியான மகிழ்ச்சிப் புன்னகையோடு நட்டாஷா ஆரம்பித்தாள். ஒருவரையொருவர் இடைமறித்துப் பேசியபடியால், மற்றவர் பேசட்டுமென்று இருவரும் ஏக காலத்தில் பேச்சை நிறுத்தினார்கள்.

''இல்லை, நீ என்ன சொன்னாய்? பேசு, மேலே பேசு.''

''இல்லை. நீர் மேலே பேசும். நான் அசட்டுத்தனமாகப் பேசிக்கொண்டிருக்கிறேன்'' என்று நட்டாஷா கூறினாள்.

தாம் எதைப் பேச ஆரம்பித்தாரோ, அதைப் பீயர் பேசி முடித்தார். பீட்டர்ஸ்பர்க்கில் தமக்கு ஏற்பட்ட வெற்றியைப் பற்றியே அவர் பேசினார். அச்சமயத்தில், ருஷ்ய சமுதாயம் முழுவதற்கும், உலகம் முழுவதற்கும், ஒரு புதிய வழியைக் காட்டும் கடமையைத் தமக்கு விதித்திருப்பதாக அவருக்குத் தோன்றியது.

''மிகப் பெரிய பலன்களைக் கொடுக்கும் கருத்துக்கள் எப்பொழுதுமே சாதாரணமானவைகளாகத்தான் இருக்கும் என்பதை சொல்லுவதற்கே நான் விரும்பினேன். கெட்டவர்கள் ஒன்றுகூடி அதிகாரத்தைக் கைப்பற்றுவார்களானால், நாணயமானவர்கள் அதேமாதிரி செய்தாக வேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்தாகும். அது ரொம்ப எளிமையானது, சுலபமானது.''

''ஆம்,''

''இப்பொழுது நீ என்ன சொல்லுவதாய் இருந்தாய்?''

''நானா? வெறும் அசட்டுத்தனம்.''

''ஆனால், எல்லாம் ஒன்றுதானே?''

''ஓ, ஒன்றுமில்லை; அற்பமான விஷயம்'' என்று நட்டாஷா, இன்னும் அதிகமான பிரகாசத்தோடு இளநகைகொண்டு கூறினாள். பெட்டியாவைப் பற்றித்தான் உம்மிடம் சொல்லவேண்டுமென்று நான் விரும்பினேன் அவனுக்குப் பால் கொடுப்பதற்காக இன்று பெட்டியாவை என்னிடமிருந்து எடுத்துக்கொள்ள தாதி வந்தாள். அவன் சிரித்துக்கொண்டு கண்களை மூடி என்னைப் பற்றிக் கொண்டான். தான் ஒளிந்து கொள்வதாக அவன் நினைத்துக் கொண்டான் என்று தோன்றியது. எவ்வளவு இனிமையாக இருந்தது

தெரியுமா! இதோ, அவள் அங்கே அழுதுகொண்டிருக்கிறாள். நல்லது, போய் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு, அவள் அந்த அறையைவிட்டுப் போனாள்.

இதற்கிடையில் கீழே குஞ்சு நிக்கலஸ் பால்கோனிஸ்கியின் படுக்கை அறையில் ஒரு சிறிய விளக்கு வழக்கம்போல எரிந்துகொண்டிருந்தது. (இருளைக் கண்டு அந்தச் சிறுவன் பயப்படுவதுண்டு. அந்தப் பயத்தைப் போக்க அவர்கள் முயற்சி செய்தும் முடியவில்லை) நாலு தலையணைகளை அடுக்கிவைத்து அதன்மீது சாய்ந்து டெஸ்ஸலெஸ் தூங்கிக்கொண்டிருந்தார். அவருடைய ரோமன் மூக்கானது ஒழுங்காகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தது. குஞ்சு நிக்கலஸ் வியர்த்துப்போய் அப்பொழுதுதான் விழித்து படுக்கையில் எழுந்து அமர்ந்திருந்தான். விரியத்திறந்த கண்களால் எதிரே பார்த்துக்கொண்டிருந்தான். ஒரு பயங்கரமான கனவிலிருந்து அவன் விழித்தான். அவனும் பீயர் மாமாவும் அவனுடைய புளூடாச் கதையில் சொல்லப்படுகிறபடி இரும்புத் தொப்பிகள் அணிந்து ஒரு பிரம்மாண்டமான ராணுவத்தை நடத்தச் செல்வதுபோல அவன் கனவு கண்டான். இலையுதிர் காலத்தில் ஆகாயத்தில் பறக்கும் ஒட்டடைகளைப்போல அந்த ராணுவத்திலுள்ள சிப்பாய்கள் சாய்வான கோடுகளாகக் காணப்பட்டார்கள். எதிராக ''பெருமிதம்'' காணப்பட்டது. அதுவும்மேலே சொல்லியதைப் போன்றபடியே கோடுகளாகக் காணப்பட்டாலும், அவை அதிக கனமுள்ளவைகளாகத் தோன்றின. அவனும் பீயரும் மகிழ்ச்சியோடும் சிரமமில்லாமலும் அவர்களுடைய லட்சியத்தை வரவர நெருங்கிக் கொண்டிருந் தார்கள். அவர்களைத் தள்ளிக் கொண்டிருந்த அந்த கோடுகளானது திடீரென்று வேகத்தில் குறைந்தன. அந்தக் கோடுகள் சிக்கலாய் விட்டன. அதனால் மேலே நகருவதற்கு முடியாமல் கஷ்டமா யிருந்தது. நிக்கலஸ் மாமா அவர்களுக்கு எதிராக ஒரு கண்டிப்பான பயமுறுத்தும் தோற்றத்தோடுக் காணப்பட்டார்.

''நீதான் இப்படிச் செய்தாயா?'' என்று அவர் சொல்லி, அங்கிருந்த உடைந்துபோன முத்திரை அரக்குகளையும் பேனாக்களையும் காட்டினார். ''நான் உன்மீது பிரியம் கொண்டிருந்தேன். ஆனால் உங்களில் யாராவது முன்னால் அடியெடுத்து வைத்தால், அவர்களைக் கொல்லுவேன். அராக்கனிடமிருந்து எனக்கு அம்மாதிரி உத்தரவு வந்திருக்கிறது.'' குஞ்சு நிக்கலஸ் பீயரை திரும்பிப் பார்த்தான். ஆனால் அங்கே பீயர் இல்லை. அவருடைய இடத்தில் அவனுடைய தந்தை இளவரசர் ஆண்ட்ரூ காணப்பட்டார். அவனுடைய தந்தைக்கு உருவமோ, அமைப்போ இல்லை. ஆனால் அவர் அங்கே இருப்பதாகத்

தெரிந்தது. அவரைக் குஞ்சு நிக்கலஸ் அறிந்துகொண்டதும் அன்பு பெருகி மூர்ச்சையானான். அதாவது, தான் சக்தியை இழந்தது போலவும் தான் துவண்டு இருப்பதுபோலவும், தனக்கு உடல் இல்லாதது போலவும் அவன் உணர்ந்தான். அவனுடைய தந்தை அவனைத் தடவிக் கொடுத்து, அவன்மீது இரக்கம் காட்டினார். ஆனால் நிக்கலஸ் மாமா வரவர அவர்களை நெருங்கி வந்துகொண்டிருந்தார். குஞ்சு நிக்கலஸைப் பீதி பற்றியது. உடனே அவன் விழித்தான்.

''என்னுடைய தந்தை'' என்று அவன் நினைத்தான். (அந்த வீட்டில் இளவரசர் ஆண்ட்ரூஸின் நல்ல உருவப்படங்கள் இரண்டு இருந்தும், மனித உருவத்தில் அவரைப் பற்றி குஞ்சு நிக்கலஸ் எப்பொழுதுமே சிந்தித்ததில்லை) ''என்னடைய அப்பா என்னுடை இருந்து என்னைத் தடவிக்கொடுத்தார். என்மீதும், பீயர் மாமா மீதும் அவர் பிரியம் கொண்டிருக்கிறார். அவர் என்ன சொன்னாலும், நான் அதைச் செய்வேன். மூசியஸ் ஸ்காவாலா தன்னுடைய கையை எரித்துக்கொண்டான். அதே மாதிரியான காரியம் எனக்கு ஏன் ஏற்படக்கூடாது? நான் கற்றுக்கொள்ள வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். நான் கற்றுக்கொள்வேன். ஆனால் என்னுடைய படிப்பு ஒருநாள் முடிந்துவிடும். அதன் பின்னால் நான் ஏதாவது ஒரு காரியத்தைச் செய்வேன். புளூடார்ச்சினுடைய வீரர்களுக்கு வீரர்களுக்கு ஏற்பட்ட மாதிரி எனக்கு ஏற்படவேண்டுமென்று நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். அவர்கள் செய்தது போலவே நானும் செய்வேன். அவர்களைவிடச் சிலாக்கியமாக நான் செய்வேன். ஒவ்வொரு வரும் என்னை அறிந்து, என் மீது அன்புகொண்டு மகிழ்ச்சி கொள்ளுவார்கள்.'' திடீரென்று அவனுடைய விம்மல்களால் அவனுடைய மார்புயர்ந்தது. அவன் அழ ஆரம்பித்தான்.

''உனக்கு உடம்புக்கு அசௌகரியமாய் இருக்கிறதா?'' என்று டெஸ்ஸலெஸின் குரல் அவனுக்குக் கேட்டது.

''இல்லை'' என்று நிக்கலஸ் கூறிவிட்டு, மீண்டும் தன்னுடைய தலையணையில் படுத்தான்.

''அவர் நல்லவன்; அன்பானவர். அவர்மீது எனக்குப் பிரியம் உண்டு'' என்று டெஸ்ஸலெஸை, பற்றி அவன் நினைத்தான். ''ஆனால், பீயர் மாமா! ஓ, அவர் எப்பேர்ப்பட்ட அதிசயமான மனிதர்! என்னுடைய அப்பா? ஓ, அப்பா, அப்பா! ஆம், அவர்கூட திருப்தி அடையும்படி ஒரு காரியத்தை நான் செய்து முடிப்பேன்...''

★

# முதலாவது பின்னுரையின் விளக்க உரைகள்

## 1

போட்டியஸ் *(1792-1838)* என்பவர் நோல்காராட் சந்நியாசி மடத்தின் தலைவராய் இருந்தார். தாராளக் கொள்கை உள்ள இயக்கங்களையெல்லாம் அவர் எதிர்த்து வந்தார். கல்வி மந்திரியான ஏ. என். காலிட்ஸின் என்பவருக்கும் அவருக்கும் மோதல்கள் ஏற்பட்டன. *1824*-ம் வருஷத்தில் காலிட்ஸின் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். சந்நியாசியாய் இருந்த போட்டியஸ் தமது ஜோஸியங்களினால் அலெக்ஸாண்டரைப் பீதி கொள்ளும்படிச் செய்தார். ஆனால் அவருடைய செல்வாக்கு வெகுகாலம் நீடிக்கவில்லை.

எப். டபிள்யூ. ஜி. ஷெல்லி *(1775-1854)* என்பவர் முதலில் பிரஞ்சு புரட்சியிடம் அனுதாபம் காட்டிவந்தார். ஆனால் பின்னால் அவருடைய கருத்தை மாற்றிக்கொண்டார். பிச்ட்டே என்பவரைக் குறைகூறி வந்தார்.

ஜே. ஜி. பிச்ட்டே *(1762-1814)* என்பவர் ஒரு ஜெர்மன் தத்துவ சாஸ்திரி. சுதந்திரத்தில் அவர் கொண்டுள்ள ஆர்வத்தினால் செல்வாக்கு பெற்றிருந்தார்.

சாட்டாபிரியாண்ட் *(1764-1848)* என்பவர் ஒரு பிரஞ்சு எழுத்தாளரான ராஜீயவாதி, வெகு சீக்கிரமாக தமது கொள்கை களையும், ராஜீய அபிப்பிராயங்களையும் மாற்றிக்கொண்டே இருப்பார்.

போலந்துக்கு ராஜாங்க அமைப்புச் சட்டம் : *1815*-ம் வருஷத்தில் வியன்னா காங்கிரஸ் போலந்தில் ராஜபீடத்தை அமைத்தது. நெப்போலியனின் வார்ஸா ராஜ்யத்தில் முக்கால் பங்கை அது கொண்டிருந்தது. ருஷ்யாவுடன் எப்பொழுதும் ஐக்கியமாய் இருக்கவேண்டுமென்றும், ஆனால் அதற்குத் தனியாக ராஜாங்க அமைப்புச் சட்டம் ஏற்படவேண்டுமென்றும், அந்த நாட்டை ஒரு மன்னர் ஆண்டு வரவேண்டுமென்றும், அப்படி ஆளுகிறவர் ருஷ்ய சக்கரவர்த்தியாகவே இருக்கவேண்டுமென்றும், அந்தச் சக்கரவர்த்தி தமக்குப் பிரியமான ஒரு போலந்துக்காரரையோ, அல்லது ருஷ்ய சக்கரவர்த்திக் குடும்பத்தைச்சேர்ந்த ஒருவரையோ தமக்குப் பதிலாக ஆளுவதற்கு நியமிக்கலாமென்றும், வியன்னா காங்கிரஸ் தீர்மானம்

செய்தது. முதலாவது அலெக்ஸாண்டரும் அவருக்குப் பின்னால் பட்டத்திற்கு வந்த முதலாவது நிக்கலஸும் இந்த ராஜாங்க சட்டத்திற்குப் பிரமாணம் செய்தார்கள், அந்த ஏற்பாடு 1830-ம் வருஷத்தில் போலந்தில் புரட்சி ஏற்படுகிறவரையில் நீடித்திருந்தது.

பரிசுத்த ஒப்பந்தம் : ரஷ்ய ஆஸ்திரிய சக்கரவர்த்திகளாலும் பிரஷ்ய மன்னராலும் இந்தப் பிரசித்திபெற்ற பிரகடனம் முதலில் கையெழுத்திடப் பட்டது. சர்வதேச சங்கத்திற்கு அது ஒரு முன்னோடியாக இருந்தது. சமாதானத்தைக் காப்பாற்றவேண்டும் என்ற உண்மையான எண்ணத்தோடு தான் அது ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் வரவர சுதந்திரத்தை அடக்குவதற்கும், எதேச்சதிகாரத்தைக் காப்பாற்றுவதற்கும் ஒரு பிற்போக்கான கருவியாக அது உபயோகமாக ஆயிற்று. பெரிய வல்லரசுகளுக்கிடையில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டபொழுது அந்த ஒப்பந்தம் தானாகவே மாண்டு போயிற்று.

அலெக்ஸாண்டர் ஷிஷ்கோவ் (1745-1841) என்பவரைப் பற்றி 9-வது புத்தகத்தில் நெப்போலியன் படையெடுப்பின் ஆரம்பத்தில் அலெக்ஸாண்டர் சக்கரவர்த்திக்காக ஒரு கடிதத்தைத் தயார் செய்தார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. கடற்படைத் தளபதி பதவியிலிருந்து கல்வி மந்திரியாகவும் சக்கரவர்த்தியின் காரியதரிசியாகவும் பல பதவிகளை அவர் நிர்வகித்து வந்திருக்கிறார். விவசாயிகளுக்கு எழுதப் படிக்கத் தெரியும்படிக் கற்றுக் கொடுப்பதானது அவர்களுக்கு நன்மையைவிடக் கெடுதலே அதிகமாக ஏற்படும் என்பது அவருடைய கருத்து.

செமியோனாவ் பாதுகாப்புப் படை 1820-ம் வருஷத்தில் அதனுடைய புதிய ஜெர்மன் கமாண்டரான ஷ்லாரீஸ்க் என்பவர் செய்த கொடுமைகளை எதிர்த்து அவருக்குக் கீழ்ப்படிய மறுத்ததால் அந்தப் படை கலைக்கப்பட்டது. அந்தத் துருப்புக்களின் இயக்கத்தை அலெக்ஸாண்டர் கடுமையான முறைகளால் அடக்கினார். 1825-ம் வருஷத்தில் நடந்த டிசம்பர் புரட்சிக்கு அது முன்னோடியாக இருந்தது. அந்தப் படையைச் சேர்ந்த அதிகாரிகளையும் வீரர்களையும் மற்றப் படைகளில் சேர்த்துவிட்டார்கள். 1823-ம் வருஷத்தில் மீண்டும் அந்தப் பட்டாளம் அமைக்கப்பட்டது.

## 3

1795-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் துருக்கி பீரங்கிப் படையைத் திருத்தி அமைப்பதற்காகத் தம்மை கான்ஸ்டாண்டி நோபிளுக்கு அனுப்ப வேண்டுமென்று பிரஞ்சு சர்க்காரின் கமிட்டிக்கு நெப்போலியன் விண்ணப்பித்துக்கொண்டார்.

1798-ஆம் வருஷத்தில் எகிப்துக்கு போனபார்ட் கப்பலேறினார். 1799-ல் இத்தாலிக்குள் ஒரு ருஷ்ய ராணுவத்தை சுவோராவ் நடத்திச் சென்றார். காசாநோ என்ற இடத்தில் மாரியாவையும், டிரெபியா என்ற இடத்தில் மக்டோனால்ட்டையும், நாவ் என்ற இடத்தில் ஜுபர்ட்டையும் அவர் தோற்கடித்தார்.

## 4

முதலாவது அலெக்ஸாண்டர் டாகான்ரோக் என்ற இடத்தில்-1825 வருஷத்தில் மரணமாகவில்லையென்றும், ரகசியமாக சைபிரியாவுக்கு அவர் சென்று 1866-ஆம் வருஷம்வரையில் ஒரு சந்நியாசி மாதிரி அங்கே வாழ்த்து வந்ததாகவும், ஒரு வதந்தி நிலவி வந்தது. 1927-ஆம் வருஷத்தில் அலெக்ஸாண்டரின் கல்லறையைத் திறந்து பார்த்தபோது அதில் ஒன்றுமில்லை. இந்த விஷயம் மேலே சொல்லப்படும் வதந்தியை உறுதி செய்கிறது.

## 13

ருஷ்ய பைபிள் சங்கம் எ. என். காலிட்ஸின் என்பவரால் 1812-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் ஸ்தாபிக்கப்பட்டது. அந்தச் சங்கத்திற்கு ராஜீய செல்வாக்கு இருந்தது. ருஷ்யப் மொழியில் பைபிளை மொழிபெயர்த்து அந்தச் சங்கம் முதலாவதாக வெளியிட்டது. அவரை கல்வி மந்திரிப் பதவியிலிருந்தும் பைபிள் சங்கத்தின்தலைவர் பதவியிலிருந்தும் விலக்குவதற்கு போட்டியஸ் என்பவர் முயற்சி செய்து வெற்றி பெற்றார். அதன் பின்பு அந்தச் சங்கம் தேய்ந்துகொண்டு வந்தது. 1826-ல் முதலாவது நிக்கலஸ் அதைச் சமாப்தி செய்துவிட்டார். 1831 ஆம் வருஷத்தில் அரசியல் சம்பந்த மில்லாத ஒரு ருஷ்ய பைபிள்சங்கத்தை அமைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. 1917-ஆம் வருஷ புரட்சி வரையில் அந்தச் சங்கம் நடந்துகொண்டு வந்தது.

ஜான் காஸ்னர் (1773-1858) என்பவர் ஒரு கத்தோலிக்கப் பாதிரியார், முனிச் நகரத்திலிருந்து அவர் வெளியேற்றப்பட்ட பின்பு பீட்டர்ஸ்பர்க்கில் (1820-24) பைபிள் சங்கத்தின் டைரக்டர் பதவியைப் பெற்றார். அங்கே ஒரு புத்தகம் எழுதினார். பைபிள் சங்கம் கலைந்து போவதற்கு அது காரணமாயிருந்தது. அந்தப் புத்தகத்தைக் கொளுத்தும்படி உத்தரவிட்டு காஸ்னரை ருஷ்யாவிலிருந்து வெளியேற்றினார்கள்.

டாட்டாரிநாவா (1783-1856) என்பவள் பீட்டஸ்பர்க்கில் 1817-ஆம் வருஷத்தில் ஆத்மார்த்தீக சங்கம் என்று ஒன்றை ஏற்படுத்தினாள். நம்பிக்கையினால் வியாதிகளைக் குணப்படுத்துவது, ஜோஸியம் சொல்லுவது முதலிய வேலைகளை அது செய்து வந்தது. முதலாவது

அலெக்ஸாண்டரிடம் அவள் செல்வாக்குப் பெற்றிருந்தாள். முதலாவது நிக்கலஸ் பட்டத்திற்கு வந்த பின்புங்கூட அவளுடைய சங்கம் நடந்து வந்தது. 1837-ஆம் வருஷத்தில் எங்கோ ஒரு மூலையிலிருந்த கன்னியா மடத்தில் அவளைக் கைதியாக் வைத்தார்கள். அதன் பின்பு அந்தச் சங்கம் கலைந்தது.

## 14

**பா**ரனஸ் ஜூலியன் குருடனர் (1766-1824) என்பவள் ரீகாவில் ஜனனமானாள். பணக்கார உயர் வட்டாரங்களை 1807-ஆம் வருஷத்தில் அவள் துறந்து மந்திர மாயங்களில் ஈடுபட்டாள். உலகத்தைப் புதிதாக புனருத்தாரணம் செய்வதற்காகவே தான் பிறந்திருப்பதாக அவள் நினைத்தாள். 1815-ஆம் வருஷத்தில் பாடனில் தீவிரமாக வேலைசெய்துவந்தாள். முதலாவது அலெக்சாந்தருடன் பரிச்சயம் ஏற்பட்டு அவரிடம் சிறிது செல்வாக்கும் பெற்றிருந்தாள். 1817-ஆம் வருஷத்தில் ருஷ்யாவிற்கு அவள் வந்தபோதிலும் அவளுக்கு அவரிடமிருந்த செல்வாக்கு மறைந்துவிட்டது.

புகாச்சியோவ் என்பவர் மகாபெரிய காத்தரைன் காலத்தில் தோன்றிய பெரிய விவசாயிகளின் புரட்சியில் கோசாக்குத் தலைவராக இருந்தார். அவர் பல வெற்றிகளைப் பெற்று பல நகரங்களையும் கைப்பற்றினார். அதன் பின்னால் அவர் பிடிக்கப்பட்டு 1775-ஆம் வருஷத்தில் தூக்கில் போடப்பட்டார்.

டுகண்ட்பண்ட் (ஒழுக்கக் கழகம்) என்ற சங்கமானது 1808-வது வருஷத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஒரு ஜெர்மன் சங்கம். தேசாபிமானத்தை வளர்ப்பதும், ராணுவத்தைத் திருத்தி வைப்பதும், கல்வியறிவைப் பரப்புவதும் தனது நோக்கமாக அந்தச் சங்கம் கொண்டிருந்தது. ஆனால் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தை அழிக்கவேண்டும் என்பதே அதன் ரகசிய நோக்கம். 1809-ஆம் வருஷத்தில் நெப்போலியன் விரும்பியபடி அந்த சங்கம் கலைக்கப்பட்டது. ஆனால் அது ரகசியமாக நடந்து வந்தது. 1812-ஆம் வருஷத்தில் அது மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. புரட்சிகரமான நோக்கங்களை அது கொண்டிருக்கிறதென்று பரிசுத்த ஒப்பந்தம் ஏற்பட்ட சமயத்தில் ருஷ்ய சர்க்கார் அதன் மீது சந்தேகம் கொண்டார்கள்.

## 15

**கோ**மகள் மேரியின் நாள் குறிப்புக்கள் டால்ஸ்டாயினுடைய தாயார் தனது குழந்தைகளைப் பற்றி எழுதி வைத்திருந்த நாட்குறிப்புக்களைப் போலவே காணப்படுகின்றன.

★

# இரண்டாவது பின்னுரை

## 1

சரித்திரம் என்பது தேச மக்களுடையவும், மனித குலத்தினுடையவும் வாழ்க்கையேயாகும். மனித குலத்தின் வாழ்க்கையையோ, அல்லது தனிப்பட்ட ஒரு நாட்டின் மக்களின் வாழ்க்கையையோ, வார்த்தைகளின் அமைப்பதென்றால் அதாவது, நேரடியாக வருணிப்பதென்றால், அது அசாத்தியமாகக் காணப்படுகிறது.

கையில் அகப்படாமல் நழுவிப்போகும் ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கையை வார்த்தைகளில் அமைத்து விளக்கிச் சொல்லுவதற்கு புராதன சரித்திரக்காரர்கள் எல்லாரும், ஒரே விதமான முறையையே கையாண்டார்கள். மக்களை ஆண்டு வந்த தனிப்பட்டவர்களின் நடவடிக்கைகளை அவர்கள் வருணித்து, அந்த நடவடிக்கைகள் அந்த நாட்டின் பூரா மக்களின் நடவடிக்கைகளைப் பிரதிபலிப்பதாகக் கருதி வந்தார்கள்.

தனிப்பட்டவர்கள் தாங்கள் விரும்பியபடி நடக்கும்படி மக்களை எப்படி செய்து வந்தார்கள்; அந்த தனிப்பட்டவர்களின் விருப்பத்திற்கு எது வழிகாட்டியாய் இருந்தது என்பதுதான் கேள்வி. இந்தக் கேள்விக்கு நமது முன்னோர்கள் ஒரு பதிலைச்சொல்லி வந்தார்கள். அதாவது, கடவுள் என்பவர் தாம் தேர்ந்தெடுத்த ஒரு மனிதரின் விருப்பத்திற்கு மக்கள் அடங்கி நடக்கும்படிச் செய்தார் என்றும், அந்தத் தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதரின் விருப்பத்திற்கு தாமே வழிகாட்டி வந்தார் என்றும், அதன் மூலம் முன்பாகவே விதிக்கப்பட்ட முன் முடிவுகளின் நோக்கங்களை நிறைவேற்றினார் என்றும் நமது முன்னோர்கள் சொன்னார்கள்.

மனித குல நடவடிக்கைகளில் கடவுளே நேராகக் கலந்துகொள்கிறார் என்ற ஒரு நம்பிக்கையைக்கொண்டு, இந்தப் பிரச்னைகளை நமது முன்னோர்கள் தீர்த்து வைத்தார்கள்.

ஆனால், நவீன சரித்திரம், கொள்கை அளவில் இந்த இரண்டு கருத்துக்களையும் நிராகரிக்கிறது.

கடவுள் மனிதனை அடிமைப்படுத்தி, முன்–முடிவு நோக்கத்திற்கு மக்களை நடத்திச் செல்லுகிறார் என்ற நமது முன்னோர்களின் நம்பிக்கையை நவீன சரித்திரம் நிராகரித்த பின்பு, அது ஒரு காரியத்தைச் செய்யவேண்டும் என்று தோன்றலாம். அதாவது, அந்த

நவீன சரித்திரம் என்பது, ஒரு சக்தியின் வெளிப்படைத் தோற்றங்களை விட்டு, அந்த சக்தியை உற்பத்தி செய்யும் காரணங்கள் என்ன என்பதைச் சிந்தித்து அறியவேண்டும். ஆனால், நவீன சரித்திரம் இதைச் செய்யவில்லை. நமது முன்னோர்கள் கொண்டிந்த கொள்கையை பெயரளவில் நிராகரித்த போதிலும், நடவடிக்கையில் அதை இன்னும் பின்பற்றியே வருகிறது.

மனிதருக்கு கடவுள் தமது அதிகாரத்தைக் கொடுத்து அவர்களை நடத்தி வருகிறார் என்பதற்குப் பதிலாக, நவீன சரித்திரம் மற்றொன்றைச் சொல்லுகிறது. அதாவது, அசாதாரணமான, மனித சக்திக்கு மேம்பட்ட குணங்களை சில வீரர்களுக்குச் சூட்டி, அவர்களை நமக்குக் கொடுக்கிறது; அல்லது ஜனங்களை நடத்திச் செல்லும், மன்னர்களிலிருந்து பத்திரிக்கையாளர்கள் வரையில், பற்பல விதமான மனிதர்களை நமக்குக் கொடுக்கிறது. யூத, கிரேக்க, அல்லது ரோமன் தேச மக்கள்களின், முந்தைய கடவுளால் நிர்ணயிக்கப்பட்ட நோக்கங்களை மனித குலத்தின் அபிவிருத்தியைக் காட்டுவதாகப் புராதன சரித்திரக்காரர்கள் கருதி வந்தார்கள். அதற்குப் பதிலாக, நவீன சரித்திரம் தனது சொந்த நோக்கங்களை நிர்ணயித்திருக்கிறது. அதாவது, பிரெஞ்சு, ஜெர்மன், அல்லது இங்கிலீஷ் மக்களின் நன்மையில்தான், அல்லது அவர்களின் உயர்வில்தான் பொதுவாக மனித குலத்தின் நன்மையும் நாகரிகமும் அடங்கி இருக்கின்றன என்று சொல்லுகிறது. ஒரு பெரிய கண்டத்தின் ஒரு சிறிய பாகமாகிய வடமேற்குப் பிரதேசத்தில் வசிக்கிற மக்களையே அது 'மனித குலம்' என்று குறிப்பிடுகிறது.

நமது முன்னோர்களின் நம்பிக்கைகளுக்குப் பதிலாக, ஒரு புதிய கொள்கையைக் கொடுக்காமலேயே அந்த நம்பிக்கைகளை நவீன சரித்திரம் நிராகரித்துவிட்டது. மன்னர்களின் தெய்வீக அதிகாரத்தையும், நமது முன்னோர்களின் 'விதி' என்ற விஷயத்தையும், சரித்திரக்காரர்கள் நிராகரித்த பின்பு, நிலைமையின் தர்க்கரீதியானது அந்த சரித்திரக்காரர்களை மற்றொரு ரஸ்தா வழியாக அதே முடிவுக்கு வரும்படி செய்துவிட்டது. அதாவது (1) தேசமக்களை தனிப்பட்ட நபர்கள் வழிகாட்டி நடத்துகிறார்கள்; (2) தேசமக்களும், பொதுவாக மனித குலமும் விரும்பியுள்ள, எல்லாரும் அறிந்த ஒரு நோக்கம் நிலைத்திருக்கிறது.

கிப்பனிலிருந்து, பக்கின் வரையுள்ள எல்லா நவீன சரித்திரக்காரர்களுடைய சரித்திரங்களின் அடிப்படையில் (அவர்கள் ஒருவருக்கொருவர் ஒத்துக்கொள்ளாதது போலக் காட்டிக்

கொண்டாலும், அவர்களுடைய நோக்கங்களில் புதுமை இருப்பது போலக் காணப்பட்டாலும்) அந்த இரண்டு பழைமையான, தடுக்க முடியாத யூகங்கள் இருக்கின்றன.

முதலாவதாக, தனிப்பட்டவர்களின் நடவடிக்கைகளை சரித்திரக்காரர்கள் வருணிக்கிறார்கள். அவர்களுடைய அபிப்பிராயத்தில், அந்த நடவடிக்கைகள் தான் மனித குலத்தை நடத்தி வருகின்றன என்று நினைக்கிறார்கள். (ஒரு சரித்திரக்காரர், மன்னர்களும், ஜெனரல்களும், மந்திரிகளும் தான் அம்மாதிரியான தனிப்பட்டவர்கள் என்று கருதுகிறார் மற்றொருவர். பிரசங்கிகளையும், கற்றுத்தேர்ந்தவர்களையும், சீர்திருத்தக்காரர் களையும் தத்துவ சாஸ்திரிகளையும், கவிகளையும் அவர்களோடு சேர்த்துக்கொள்ளுகிறார்.) இரண்டாவதாக, மனித குலம் எந்த லட்சியத்திற்கு நடத்திச் செல்லப்படுகிறதோ அது சரித்திரக்காரர் களுக்குத் தெரிந்த விஷயம் என்று கருதப்படுகிறது. அந்த சரித்திரக்காரர்களில் ஒருவருக்கு, ரோமன் ஸ்பானிஷ், அல்லது பிரெஞ்சு ஆட்சியின் உயர்வுதான் அந்த லட்சியம் என்று தோன்றுகிறது. மற்றொருவருக்கு, சுதந்திரமும் சமத்துவமும் ஐரோப்பா என்று அழைக்கப்படுகிற உலகத்தின் ஒரு சிறு மூலையிலுள்ள, ஒருவகையான நாகரிகமும்தான் அந்த லட்சியம் என்று தோன்றுகிறது.

1789-ம் வருஷத்தில் பாரிஸில் ஒரு புரட்சி ஆரம்பமாயிற்று. அது வளர்ந்து பரவியது. மக்கள் மேற்கிலிருந்து கிழக்கே நகர்ந்து போனதன் மூலம் அது தனது சொரூபத்தைக் காட்டியது. பல தடவைகளில் அது கிழக்கு நோக்கி நகர்ந்து, கிழக்கேயிருந்து மேற்கு நோக்கி வந்த எதிர்-கிளர்ச்சியோடு மோதியது. 1812-ம் வருஷத்தில் அதனுடைய கடைசி முடிவான மாஸ்கோவிற்கு வந்து சேர்ந்தது. அதன் பின்னால், ஆச்சரியப்படும்படியான தோற்றத்தோடு ஒரு எதிர்-கிளர்ச்சி கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிவந்தது. மத்திய ஐரோப்பாவிலுள்ள தேச மக்கள் அதில் ஈடுபட்டார்கள். அந்த எதிர்-கிளர்ச்சி முதலாவது புரட்சி தோன்றிய பாரிஸுக்கு மேற்கு முகமாக வந்து, அங்கே தணிந்து போயிற்று.

அந்த இருபது வருஷ காலத்தில் ஏராளமான வயல்கள் விவசாயம் செய்யப்படாமல் விடப்பட்டன; வீடுகள் கொளுத்தப்பட்டன; வர்த்தகம் திசை மாறியது; கோடிக்கணக்கான பேர்கள் குடியேறினார்கள்; பலர் தரித்திரர்களானார்கள்: பலர் பணக்காரர்களானார்கள். சகோதர மக்களிடம் அன்பு காட்டவேண்டும் என்ற சட்டத்தை மேற்கொண்டிப்பதாகக்

கூறிக்கொண்டிருந்த கோடிக்கணக்கான கிறிஸ்தவர்கள், ஒருவரை ஒருவர் கொன்றுவந்தார்கள்.

இவற்றிற்கெல்லாம் என்ன அர்த்தம்? இவையெல்லாம் ஏன் ஏற்பட்டன? வீடுகளைக்கொளுத்தும்படியும், சகோதர மக்களைக் கொல்லும் படியும் இவர்களைச் செய்தது எது? இந்தச் சம்பவங்களுக்கெல்லாம் காரணங்கள் என்ன? இவையெல்லாம் உள் உணர்வோடு, தெளிவான, மிகுந்த நியாயமான கேள்விகள். இந்தக் கேள்விகளை, மனித குலம் அந்தக் காலவரையைச் சேர்ந்த ஞாபகச் சின்னங்களையும் பரம்பரைகளையும் சந்திக்கும்போது, தன்னைத்தானே கேட்டுக்கொள்ளுகிறது.

இந்தக் கேள்விகளுக்குப் பதில்களைக் கண்டு பிடிப்பதற்காக மனித குலத்தின் பகுத்தறிவு சரித்திர சாஸ்திரத்தை நோக்குகிறது. தேச மக்களும், மனித குலமும் தங்களைத் தாங்களே அறிந்துகொள்ளும்படி உதவி செய்வது தான் சரித்திர சாஸ்திரத்தின் நோக்கம்.

நமது முன்னோர்களின் கொள்கைகளை உதறித்தள்ளாமல், சரித்திரம் ஒப்புக்கொண்டிருக்குமானால், மக்களுக்கு நன்மை செய்வதற்காகவோ, அல்லது மக்களைத் தண்டிபப்தற்காகவோ, கடவுள் நெப்போலியனுக்கு அதிகாரத்தைக் கொடுத்து, தெய்வத்தின் விருப்பங்களை நிறைவேற்றுவதற்காக நெப்போலியனுடைய ஆசைகளை ஆண்டு வந்தார் என்று அந்தச் சரித்திரம் சொல்லலாம். அம்மாதிரியான பதிலானது தெளிவாகவும் பூரணமானதாகவும் இருக்கும். நெப்போலியனிடம் உள்ள தெய்வ முக்கியத்துவத்தை ஒருவர் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, ஆனால் நம்புகிற ஒருவருக்கு அந்தக் காலவரையைச் சேர்ந்த சரித்திரத்தில் புரியாமல் இருக்கக்கூடியது எதுவும் இருக்காது அல்லது ஒன்றுக்கொன்று மாறுபாடான விஷயங்கள் இருப்பதாகவும் அவர்களுக்குத் தோன்றாது.

ஆனால், நவீன சரித்திரம் அம்மாதிரி பதில் கொடுக்க முடியாது. மனித குல காரியங்களில் தெய்வம் நேராக சம்பந்தப்படுகிறது என்ற நமது முன்னோர்களின் கொள்கைகளை சாஸ்திரம் ஒப்புக் கொள்ளுவதில்லை. ஆகவே, சரித்திரம் வேறுவிதமான பதில்களைக் கொடுத்தாகவேண்டும்.

இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்லும்போது, நவீன சரித்திரம் இம்மாதிரி சொல்லுகிறது: இந்தக் கிளர்ச்சியின் அர்த்தம் என்ன என்பதையும், அதற்குக் காரணம் என்ன என்பதையும், அந்தச் சம்பவங்களை உண்டுபண்ணிய சக்தி எது என்பதையும் நீங்கள் அறிய விரும்புகிறீக்ள் அல்லவா? கவனித்துக் கேளுங்கள்:

''14-வது லூயி மிகுந்த பெருமை கொண்டவராகவும், தன்னம்பிக்கை கொண்டவராகவும் இருந்தார். அவர் இன்னின்னாரை வைப்பாட்டிகளாக வைத்துக்கொண்டிருந்தார். இன்னின்னாரை மந்திரிகளாக வைத்துக்கொண்டிருந்தார். பிரான்ஸ் தேசத்தை மோசமாக அவர் ஆண்டு வந்தார். அவருடைய சந்ததிகள் பலவீனமாய் இருந்தார்கள். அவர்களும் பிரான்ஸை மோசமாய்த் தான் ஆண்டு வந்தார்கள். அவர்களும் இன்னின்னார்களுக்கு தயவுகள் காட்டி, இன்னின்னார்களை வைப்பாட்டிகளாக வைத்துக்கொண்டிருந்தார்கள். அச்சமயம் சிலர் சில புத்தகங்களை எழுதினார்கள். 18-வது நூற்றாண்டின் கடைசியில் இரண்டு டஜன் பேர்கள் பாரிஸில் இருந்தார்கள். அவர்கள் மக்கள் எல்லாரும் சுதந்திரமானவர்கள் என்றும், சமத்துவம் உள்ளவர்கள் என்றும் பேசி வந்தார்கள். இவைதான் பிரான்ஸு முழுவதிலும் மக்கள் ஒருவரை ஒருவர் கொல்லவும், ஒருவரை ஒருவர் மூழ்கடிக்கவும் ஆரம்பிக்கும்படி செய்தன. அவர்கள் மன்னரையும், மற்றவர்களையும் கொன்றார்கள். அச்சமயத்தில் பிரான்ஸில் ஒரு மேதை இருந்தார். அவர்தான் நெப்போலியன். அவர் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொருவரையும் வெற்றி கொண்டார். அதாவது, அவர் ஒரு பெரிய மேதையாய் இருந்தபடியால், ஏராளமான மக்களைக் கொன்றார், ஏதோ சில காரணங்களுக்காக மக்களைக் கொல்லுவதற்கு அவர் ஆப்பிரிக்கா சென்றார். அங்கே அவர்களை மிக நன்றாகவும், மிக தந்திரமாகவும், மிக புத்திசாலித்தனமாகவும் கொன்றபடியால், பிரான்ஸுக்கு அவர் திரும்பியதும், ஒவ்வொருவரும் தமக்குக் கீழ்ப்படியவேண்டும் என்று அவர் உத்திரவிட்டார். அம்மாதிரியே எல்லாரும் அவருக்கு அடங்கி நடந்தார்கள். அவர் சக்கரவர்த்தியாக வந்த பின்பு, மீண்டும் மக்களைக் கொல்லுவதற்காக இத்தாலிக்கும், ஆஸ்திரியாவுக்கும், பிரஷ்யாவுக்கும் போனார். அங்கேயும் அவர் ஏராளமான மக்களைக் கொன்றார். ருஷ்யாவில் அச்சமயத்தில் அலெக்ஸாண்டர் என்ற ஒரு சக்கரவர்த்தி இருந்தார். அவர் ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநிறுத்தவேண்டும் என்று தீர்மானித்தார். அதனால் அவர் நெப்போலியனுக்கு விரோதமாகப் போர் செய்தார். 1807-ம் வருஷத்தில் அவர் நெப்போலியனோடு சிநேகமானார். ஆனால், 1811-ல் அவர்கள் இருவரும் மீண்டும் சண்டை போட்டுக்கொண்டபடியால், ஏராளமான மக்களைக் கொல்லுவதற்கு மீண்டும் ஆரம்பித்தார்கள். ஆறு லட்சம் பேர்களை நெப்போலியன் ருஷ்யாவுக்குள் அழைத்துச் சென்று மாஸ்கோவைக் கைப்பற்றினார். பின்னால், திடீரென்று மாஸ்கோவை விட்டு அவர் திரும்பி ஓடினார்.

ஸ்டைன் போன்றவர்களின் உதவியோடு ஐரோப்பாவை ஒன்று சேர்த்து, சமாதானத்தை குலைக்கிறவருக்கு விரோதமாக ஆயுதம் தரித்து நிற்கும்படி சக்கரவர்த்தி அலெக்ஸாண்டர் ஏற்பாடு செய்தார். நெப்போலியனின் நேச நாடுகள் எல்லாம் திடீரென்று அவருக்கு விரோதிகளாயின. அந்த நாட்டின் துருப்புகள் எல்லாம் நெப்போலியன் புதிதாய் திரட்டிய துருப்புகளுக்கு விரோதமாக முன்னேற ஆரம்பித்தன. நேச நாடுகள் நெப்போலியனைத் தோற்கடித்து, பாரிஸுக்குள் நுழைந்து நெப்போலியனைப் பட்டத்திலிருந்து விலக்கி, அவரை எல்பா தீவு என்ற இடத்திற்கு அனுப்பின. அவருக்கு இருந்த சக்கரவர்த்தி என்ற பட்டத்தைப் பறிமுதல் செய்யாமல், அவருக்கு சகல மரியாதைகளையும் காட்டி, அவரை நடத்தி வந்தன. ஐந்து வருஷங்களுக்கு முன்பாகவும், ஒரு வருஷத்திற்குப் பின்பாகவும் அவரை சட்டத்திற்கு விரோதமானவர் என்றும், ஒரு கொள்ளைக்காரர் என்றும் அழைத்து வந்த நேச நாடுகள், அவரை இம்மாதிரி நடத்தின. அதுவரை பிரெஞ்சுக்காரர்களாலும், நேச நாடுகளாலும் சிரித்து இகழப்பட்ட 18-வது லூயி என்பவர் பிரான்ஸை ஆள ஆரம்பித்தார். நெப்போலியன் தம்முடைய பழைய காப்பாளர் படையின் முன்பாகக் கண்ணீர் வடித்துவிட்டு, தமது சிம்மாசனத்தைத் துறந்து பரதேசம் போனார். அதன் பின்னால், சாமர்த்தியம் உள்ள ராஜீயவாதிகளும், ராஜதந்திரிகளும் (முக்கியமாக, டாலெராண்ட் என்பவர் இருந்தார். அவர் தமக்கு ஒரு முக்கியமான பதவியைப் பற்றிக்கொண்டு, அதன்மூலம் பிரான்ஸின் எல்லைகளை விஸ்தரித்தார்.) வீயன்னாவை கலந்து பேசினார்கள் இந்த உரையாடல்களினால் தேச மக்களை மகிழ்ச்சி அடையவோ, அல்லது துக்கம் அடையவோ செய்தாக்ள். திடீரென்று அந்த ராஜதந்திரிகளும், சக்கரவர்த்திகளும் சண்டை போட்டுக் கொள்ளும் நிலைமை வந்தது. மீண்டும் ஒருவரை ஒருவர் கொல்லுவதற்கு தங்களுடைய ராணுவங்களுக்கு உத்தரவுகள் கொடுக்கும் கட்டங்களுக்கு அவர்கள் வந்தார்கள். அச்சமயத்தில் நெப்போலியன் ஒரு சிறு படையோடுபிரான்ஸுக்கு வந்தார். அவரை வெறுத்துவந்த பிரெஞ்சுக்காரர்கள் எல்லாரும் உடனே அவருக்கு அடிபணிந்தார்கள். ஆனால், இதைக் கண்டு நேச நாட்டு சக்கரவர்த்திகள் கோபம் அடைந்து, மீண்டும் ஒரு தடவை பிரெஞ்சுக்காரர்களோடு போர் புரிவதற்காகச் சென்றார்கள். அவர்கள் அந்த மேதையான நெப்போலியனைத் தோற்கடித்தார்கள். அவர் ஒரு கொள்ளைக்காரர் என்பதை அவர்கள் திடீரென்று நினைவு கூர்ந்து, அவரை செயின்ட் ஹெலினா என்ற தீவுக்கு அனுப்பினார்கள். நாடு

கடத்தப்பட்ட அந்த நெப்போலியன் தம்முடைய உள்ளத்திற்கு மிகுந்த அருமையான, தாம் மிகவும் விரும்பிய பிரான்ஸை விட்டுப் பிரிந்திருக்க வேண்டி வந்ததால், அந்தத் தீவில் கொஞ்சம் கொஞ்சமாக மாண்டு மடிந்தார். தம்முடைய மிக்பெரிய சாதனைகளைப் பிற்கால சந்ததியாருக்குத் தத்தம் செய்துவிட்டுப் போனார். ஆனால், ஐரோப்பாவில் ஒரு பிற்போக்குத் தோன்றியது. சக்கரவர்த்திகள் மீண்டும் தங்கள் பிரஜைகளைக் கொடுமைப்படுத்த ஆரம்பித்தார்கள்.

இதைக் கேலி என்றோ, சரித்திரக் கூற்றுகளைக் கேலிச் சித்திரமாகக் காட்டுவது என்றோ யாராவது நினைப்பதாய் இருந்தால், அது தவறாகும். அதற்கு மாறாக, பற்பலவிதமான மாறுபட்ட பதில்களை சாந்தமாக வெளிப்படுத்துவதாய் இது இருக்கிறது. ஆனால், கேள்விகளுக்குப் பதில்கொடுக்க வில்லை. ஞாபகக் குறிப்புகளிலிருந்தும் தனிப்பட்ட ராஜ்யங்களில் சரித்திரங்களிலிருந்தும், பொதுவான சரித்திரங்களிலிருந்தும், அந்தக் காலவரையைச் சேர்ந்த பண்பைப்பற்றிய புதிய சரித்திரங் களிலிருந்தும், எல்லா சரித்திரக்காரர்களும் கொடுக்கக்கூடிய மாறுபட்ட பதில்களைச் சாந்தமாக வெளிப்படுத்துவதாய் இது இருக்கிறது.

இந்தப் பதில்களில் உள்ள அசட்டுத்தனமும், விசித்திரப் போக்கும் ஒரு விஷயத்தினால் ஏற்படுகின்றன. அதாவது, நவீன சரித்திரம் என்பது, ஒரு செவிடனைப்போல, ஒருவரும் கேட்காத கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறது.

மனித குலத்தினுடையவும், தேசமக்களினுடையவும் நடமாட்டங்களை வருணிப்பதே சரித்திரத்தின் நோக்கமாய் இருக்கவேண்டும் என்பதாய் இருந்தால், முதல் கேள்வி இதுதான்: சரியான பதில் கிடைக்காத வரையில், மற்றவையெல்லாம் நமக்குப் புரியாமல் இருக்க வேண்டும் என்ற நினைப்பு இல்லாமல் இருந்தால், நாம் கேட்க வேண்டிய வேள்வி இதுதான்; மக்களை ஆட்டிவைக்கிற சக்தி என்பது எது? இதற்கு நவீன சரித்திரம் சுற்றி வளைத்துக்கொண்டு பதில்களைக் கூறுகிறது. அதாவது, நெப்போலியன் ஒரு பெரிய மேதை என்றோ, அல்லது 14-வது லூயி ஒரு பெருமைக்காரர் என்றோ, அல்லது சில எழுத்தாளர்கள் சில புத்தகங்களை எழுதியிருக்கிறார்கள் என்றோ கூறுகிறது.

அவையெல்லாம் ஒரு வேளை அப்படி இருக்கலாம். அதை ஒப்புக் கொள்ள மனிதகுலம் தயாராய் இருக்கிறது. ஆனால், கேட்கப்பட்ட கேள்வி அதுவல்ல. ஒரு தெய்வீக சக்தியை நாம்

ஒப்புக்கொள்ளுவோமானால், அந்த சக்தி தனக்குள் அடங்கி, எப்பொழுதுமே விடாமல் தேசமக்களை நெப்போலியன்கள் மூலமோ, லூயிக்கள் மூலமோ அல்லது தத்துவ எழுத்தாளர்கள் மூலமோ அது ஆண்டு வருகிறது என்பதை நாம் ஒப்புக் கொள்ளுவோமானால், முன்னால் சொல்லியவையெல்லாம் சுவாரஸ்யமாய் இருக்கும். ஆனால், அம்மாதிரி ஒரு சக்தியை நாம் ஒப்புக் கொள்ளுவதில்லை. ஆகவே, நெப்போலியன்களையோ, லூயிக்களையோ, எழுத்தாளர்களையோ பற்றி நாம் பேசுவதற்கு முன்பாக, இவர்களுக்கும் தேச மக்களின் இயக்கங்களுக்கும் உள்ள தொடர்பை நமக்குக் காட்டவேண்டும்.

ஒரு தெய்வீக சக்திக்குப் பதிலாக, வேறு ஒரு சக்தி இருக்கிறது என்று சொல்லப்படுமானால், அந்தப் புதிய சக்தியின்மீதே சரித்திரத்தின் சிரத்தை முழுவதும் இருக்கிறபடியால், அந்தப் புதிய சக்தி எது என்பதை நமக்கு விளக்கிச் சொல்ல வேண்டும்.

இந்தப் புதிய சக்தி வெளிப்படையாகத் தெரியக்கூடியது என்றும், அதை ஒவ்வொருவரும் அறிந்திருக்கிறாக்ள் என்றும் சரித்திரம் தானாகவே யூகித்துக் கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. அதைத் தெரிந்திருப்பதாகக் கருத வேண்டுமென்று என்னதான் விரும்பினாலும், பல சரித்திரப் புத்தகங்களை ஒருவர் படித்துப் பார்த்தபோதிலும், சரித்திரக்காரர்கள் பற்பல விதமாக இதைப் புரிந்துகொண்டிருப்பதாகச் சொல்லியபோதிலும், இந்தப் புதிய சக்தியை உண்மையில் ஒவ்வொருவரும் நன்றாய் அறிந்திக்கிறார்கள் என்பது சந்தேகமாகவே இருக்கிறது.

## 2

அப்படியானால் தேச மக்களை எந்த சக்தி நடத்தி வைக்கிறது?

ஜீவிய சரித்திரங்களை எழுதும் சரித்திரக்காரர்களும், தனித்தனி தேசங்களின் மக்களைப்பற்றி எழுதும் சரித்திரக்காரர்களும், இந்த சக்தி இயற்கையாகவே வீரர்களிடத்திலும், மன்னர்களிடத்திலும் இருப்பதாக நினைக்கிறார்கள். அவர்கள் வருணிக்கிற ஒரு நெப்போலியனுடையவும். ஒரு அலெக்ஸாண்டருடையவும், பொதுவாக அவர்கள் வருணிக்கும் மற்றவர்களுடையவும் விருப்பங்களினால்தான் சம்பவங்கள் நடப்பதாக அவர்கள் கூறுகிறார்கள். ஒவ்வொரு சரித்திரக்காரரும் ஒரு சம்பவத்தைப் பற்றி மட்டும் குறிப்பிட்டு, எந்தச் சக்தியால் இந்தச் சம்பவம் நடைபெறுகிறது என்பதை குறிப்பிடுகிறவரையில், இம்மாதிரியான சரித்திரக்காரர்களின் பதில்கள் திருப்திகரமாகவே

இருக்கிறன. ஆனால், வெவ்வேறு நாட்டு மக்களின் சரித்திரங்களை எழுதிய சரித்திரக்காரர்களும், வெவ்வேறு நோக்கமுள்ள சரித்திரக்காரர்களும், ஒரே சம்பவத்தைப் பற்றி வருணிக்க ஆரம்பிக்கும்போது அவர்களுடைய பதில்கள் உடனே அர்த்தமற்றுப் போய்விடுகின்றன. ஏனெனில், இந்தச் சக்தியை அவர்கள் வெவ்வேறுவிதமாகப் புரிந்திருப்பதாய்க் காணப்படுகிறது. அதுமட்டுமல்ல, ஒருவருக்கொருவர் நேர் விரோதமாகவும் புரிந்துகொண்டிருப்பதாய்த் தோன்றுகிறது. ஒரு சம்பவம் நெப்போலியனால் உண்டுபண்ணப்பட்டதென்று ஒரு சரித்திரக்காரர் சொல்லுகிறார். ஆனால், மற்றொரு சரித்திரக்காரர், அதே சம்பவத்தை அலெக்ஸாண்டர்தான் தோற்றுவித்தார் என்று கூறுகிறார். ஒரு மூன்றாவது சரித்திரக்காரர், அதே சம்பவத்தை இன்னொருவர் விளைவித்தார் என்று சொல்லுகிறார். இதைத்தவிர, அம்மாதிரியான சரித்திரக்காரர்கள் தங்களுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் மறுத்துக் கொள்ளுகிறார்கள். அதாவது, ஒரு குறிப்பிட்ட மனிதரின் அதிகாரம் எந்த சக்தியின்மீது அமையப்பெற்றிருக்கிறது என்ற வியாக்கியானத்தில்கூட, தங்களுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் மறுத்துக்கொள்ளுகிறார்கள். போனபார்ட் கட்சியைச் சேர்ந்தவரான தீயர்ஸ் என்பவர், நெப்போலியனுடைய அதிகாரம் அவருடைய தர்மத்தின் மீதும் மேதையின் மீதும் அமைந்திருந்ததாகச் சொல்லுகிறார். லான்பிரே என்ற குடியரசுக்காரர், நெப்போலியனுடைய அதிகாரம் அவருடைய தந்திரங்களின் மீதும், மக்களை ஏமாற்றுவதின் மீதுமே அமைந்திருந்ததாகக் கூறுகிறார். ஆகவே, இந்த வகுப்பைச் சேர்ந்த சரித்திரக்காரர்கள் ஒருவருடைய ஆதாரத்தை மற்றொருவர் நாசமாக்கிப் பரஸ்பரம் நடந்துகொள்ளுகிறார்கள். அதன்மூலம் சம்பவங்களை உண்டுபண்ணக்கூடிய சக்தியை அறிந்துகொள்ளக் கூடிய அறிவையும் நாசமாக்குகிறார்கள் ஆகவே, சரித்திரத்தின் அதிமுக்கியமான கேள்விக்கு அவர்களால் ஒரு பதிலையும் கொடுக்க முடியவில்லை.

எல்லா தேசங்களின் மக்களையும் பற்றி சரித்திரத்தை எழுதும் சரித்திரக்காரர்கள், சம்பவங்களை உண்டுபண்ணும் சக்தியைப் பற்றிய தனித்தனி நாடுகளைப் பற்றி எழுதும் சரித்திரக்காரர்களில் கருத்து எவ்வளவு தவறானது என்பதை உணர்ந்திருப்பதாகத் தோன்றுகிறது. வீரர்களிடமோ, மன்னர்களிடமோ அந்த சக்தி இயற்கையாக இருக்கிறது என்பதை அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால், பற்பல வழிகளில் ஏராளமாகத் தோன்றும் வேகங்களின் பலனாகவே அந்த சக்தி தோன்றுகிறது

என்று நினைக்கிறார்கள். ஒரு போரைப்பற்றி எழுதும்போதோ அல்லது ஒரு நாட்டு மக்கள் அடிமையானதைப் பற்றி எழுதும்போதோ அந்த சர்வதேச சரித்திரக்காரர் அந்த சம்பவத்திற்கான காரணத்தை அதிகாரத்தில் இருக்கும் தனி ஒருவரிடம் காணுவதற்கு அவர்கள் முயற்சிப்பதில்லை. அந்த சம்பவத்தோடு கலந்துள்ள ஏராளமான பேர்களின் நடவடிக்கை தொடர்புகளிலேயே காரணம் கண்டுபிடிக்க அவர்கள் முயற்சி செய்கிறார்கள்.

இந்தக் கருத்தின்படி, பற்பல வேகங்களின் பலனாகவே சரித்திரப் பிரசித்தி பெற்றவர்களுக்கு அதிகாரம் கிடைக்கிறது. ஆகவே, அதே அதிகாரம் சம்பவங்களை உண்டுபண்ண முடியாது என்பது அவர்களின் கருத்தாகும். என்றாலும், பல விஷயங்களில் இந்த சர்வதேச சரித்திரக்காரர்கள் இன்னமும் அந்த அதிகாரம்தான் சம்பவங்களை உண்டுபண்ணுகிற சக்தி என்றும், அதுதான் அந்த சம்பவங்களுக்குக் காரணம் என்றும் நினைத்து எழுதுகிறார்கள். அவர்களுடைய அபிப்பிராயத்தில், ஒரு சரித்திர சம்பந்தமான நபர் அவருடைய காலத்துக் கால பலனால் தோன்றுகிறவர் என்றும், பற்பலவிதமான வேகங்களின் பலனே அவருடைய அதிகாரம் என்றும் நினைக்கிறார்கள். கெர்வினஸ், ஷிலாசெர், இன்னும் பலர், ஒரு சமயத்தில் பிரஞ்சு புரட்சியினாலும், 1789-ஆம் வருஷத்திய கருத்துக்களினாலும் ஏற்பட்ட பலன்தான் நெப்போலியன் என்று நிரூபித்தார்கள். அவர்கள் விரும்பாத 1812-ஆம் வருஷத்திய படையெடுப்பைப்பற்றியும், மற்ற விஷயங்களைப் பற்றியும் அவர் எழுதிய போது, அவையெல்லாம் நெப்போலியனுடைய தவறான வழிகளினால் ஏற்பட்ட பலன்கள் என்று சொன்னார்கள்; 1789-ஆம் வருடத்திய கருத்துக்களை வளரவிடாமல் நெப்போலியன் தம்முடைய கிறுக்கு புத்தியினால் செய்துவிட்டார் என்றும் கூறினார்கள். புரட்சியைப் பற்றிய கருத்துக்களும், அந்த சகாப்தத்தில் தோன்றிய பொதுவான மனப்போக்குமே நெப்போலியனுடைய அதிகாரத்தை உற்பத்தி செய்தன. ஆனால், நெப்போலியனுடைய அதிகாரம் அந்தப் புரட்சிக் கருத்துக்களையும் அந்த சகாப்தத்தின் பொதுவான மனப்போக்கையும் அடக்கி ஒடுக்கிவிட்டது.

ஒன்றுக்கொன்று மாறுபாடான இந்தவிசித்திரம் தற்செயலாக ஏற்பட்டதல்ல; ஒவ்வொரு படியிலும் இது ஏற்படுவதும் என்பதுமட்டுமல்ல, சர்வதேச சரித்திரக்காரர்களின் சரித்திரம் முழுவதுமே இம்மாதிரியான மாறுபாடுகளைக் கொண்ட ஒரு சங்கிலித் தொடராகும். தாரதம்மியங்களை ஆராய்ச்சி செய்யப்

புகுந்து, பாதி வழியில் சர்வதேச சரித்திரக்காரர்கள் நின்று விடுவதால், இந்த மாறுபாடு ஏற்படுகிறது.

மொத்தப் பலனின் வேகத்திற்கு சமமாகப் பிரிவுகளின் வேகம் இருக்க வேண்டுமானால், அந்தப் பிரிவுகளின் கூட்டுமொத்தப் பலனுக்குச் சமமாய் இருக்கவேண்டும். இந்த நிபந்தனையை சர்வதேசசரித்திரக்காரர்கள் எப்பொழுதுமே கைக்கொண்டதில்லை. ஆகவே, பலனின் வேகங்களை அவர்கள் விளக்கும்போது, பிரிவுகளின் கூட்டுமொத்தம் போதுமானதாய் இல்லை என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டாக வேண்டி இருக்கிறது. இதைத்தவிர, விளக்க முடியாத ஒரு சக்தி அந்தப் பலனைக் கொடுப்பதற்குக் காரணமாய் இருக்கிறது என்பதையும் அவர்கள் ஒப்புக் கொண்டாகவேண்டி இருக்கிறது.

1813-ம் வருடத்திய படையெடுப்பைப் பற்றியோ, அல்லது பூர்பான்களை (பிரஞ்சு ராஜ குடும்பத்தாரை) மீண்டும் பதவியில் வைத்ததைப் பற்றியோ, தனிப்பட்ட நாடுகளின் சரித்திரக்காரர் அவற்றை வருணிக்கும் போது, அவையெல்லாம் அலெக்ஸாண்டரின் விருப்பப்படியே நடந்தன என்று சொல்லுகிறார்கள். ஆனால், சர்வதேசசரித்திரக்காரரான கெர்வினஸ் என்பவர் இந்த கருத்தை மறுக்கிறார். 1813-ம் வருஷத்திய படையெடுப்புக்கும், பூர்பான்களை மீண்டும் சிம்மாசனத்தில் ஏற்றியதற்கும், அலெக்ஸாண்டரின் விருப்பத்தைத் தவிர வேறு காரணங்களும் உண்டு என்று அவர் நிரூபிக்கிறார். அதாவது, ஸ்டைன், மெட்டர்னிச், திருமதி டி ஸ்டால், டாலெரான்ட், பிச்ட்டே, சாட்டாபிரியாண்ட் முதலியவர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகளும் காரணமென்று அவர் கூறுகிறார். அந்தச் சரித்திரக்காரர் அலெக்ஸாண்டரின் அதிகாரத்தைப் பல பிரிவுகளாகப் பிரிக்கிறார் என்று தோன்றுகிறது. அதாவது, டாலெராண்ட், சாட்டா பிரியாண்ட், ஆகியவர்களாகப் பல பிரிவுகளாக்குகிறார். ஆனால், இந்தப் பிரிவுகளின் மொத்தத் தொகையைக் கூட்டினால், அதாவது சாட்டாபிரியாண்ட், டாலெராண்ட், திருமதி டி ஸ்டால் ஆகியவர்களின் நடவடிக்கைகளை மொத்தமாகக் கூட்டினால், பலனுக்குச் சமமாக அது வந்து சேரவில்லை. அதாவது, கோடிக்கணக்கான பிரஞ்சுக்கார்கள் பூர்பான்களுக்கு அடிமையான அற்புதத்திற்கு அது ஈடாக முடியாது. சாட்டாபிரியாண்ட், திருமதி டி ஸ்டால் முதலியவர்கள் ஏதோ சில வார்த்தைகளை ஒருவருக்கொருவர் பேசினால், அவர்களுக்குள் உண்டான பரஸ்பர உறவுகளைத்தான் அவை சேருமேயொழிய, கோடிக்கணக் கானவர்கள் அடிமையானதற்கு அவை காரணமாக முடியாது.

ஆகவே, இந்த உறவுகளினால் கோடிக்கணக்கானவர்கள் எப்படி அடிமையாகும்படி நேரிட்டது என்பதை விளக்கவேண்டும். அதாவது பிரிவுகளினுடைய வேகங்கள் ஒரு குறிப்பிட்ட அளவு பலனுக்குச் சமமாய் இருக்கும்போது, அந்த அளவில் ஆயிரம் மடங்கு அதிகமான பலனை எப்படி கொடுக்க முடியும்? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லும்போது, சரித்திரக்காரர் முன்னால் மறுத்த அந்தச் சக்தி என்பதையே இப்பொழுது நாடவேண்டியதாய் இருக்கிறது. அதாவது, அந்தப் பலனுக்கு அந்தச் சக்தி தான் காரணம் என்பதை, விளக்கிச் சொல்ல முடியாத அந்த சக்திதான் அந்தப் பலனுக்குக் காரணம் என்பதை அவர் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டி இருக்கிறது. அதைத்தான் சர்வதேச சரித்திரக்காரர்கள் செய்து வருகிறார்கள். அப்படிச் செய்வதனால் தனித்தனி ராஜ்யங்களின் சரித்திரக்காரர்களை அவர்கள் மறுப்பது மட்டுமல்ல, தங்களையும் தாங்களே மறுத்துக் கொள்ளுகிறார்கள்.

மழைக்குக் காரணம் என்ன என்பது விவசாயிகளுக்குத் தெளிவாகத் தெரியாது. ஆகவே, தங்களுக்கு மழை வேண்டுமானால் அதற்குத் தக்க படியும், காற்று வேண்டுமானால், அதற்குத் தக்கபடியும் அவர்கள் பேசுவார்கள். அதாவது, ''மேகங்களைக் காற்று அடித்துக்கொண்டு போய் விட்டது'' என்றோ, அல்லது ''மேகங்களைக் காற்று கொண்டுவந்து சேர்க்கிறது'' என்றோ அவர்கள் சொல்லுவார்கள். அதேமாதிரி, சர்வதேச சரித்திரக்காரர்கள் தங்களுக்கு அவசியமாய் இருக்கும்போதும், தங்களுடைய கோட்பாடுகளுக்குப் பொருத்தமாய் இருக்கும்போதும், சம்பவங்களினால் தான் சக்தி தோன்றுகிறது என்று சொல்லுவார்கள்; வேறொன்றை நிரூபிக்க அவர்கள் விரும்பும்போது, சக்திதான் சம்பவங்களை உண்டுபண்ணுகின்றது என்று சொல்லுவார்கள்.

பண்பு அல்லது கலாச்சாரம் என்பதின் சரித்திரக்காரர்கள் என்று சொல்லப்படும் மூன்றாவது வகுப்பு சரித்திரக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சர்வதேச சரித்திரக்காரர்கள் வகுத்த பாதையைப் பின்பற்றுகிறார்கள். அவர்கள் சில சமயங்களில், எழுத்தாளர்களும் பெண்களும்தான் சம்பவங்களை உற்பத்தி செய்யும் சக்திகள் என்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். என்றாலும், அந்த சக்தி என்பது முற்றிலும் வேறான ஒன்று என்று கூறுகிறார்கள். அந்த சக்தி என்பது கலாச்சாரத்தில் (சிந்தனை வேலைகளில்) இருப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள்.

இந்தக் கலாச்சார சரித்திரக்காரர்கள், அவர்களுடைய முன்னோடிகளான சர்வதேச சரித்திரக்காரர்கள் சொல்லும்

வாதத்திற்கு முற்றிலும் பொருத்தமாக, ஒரு கேள்வியைக் கேட்கிறார்கள். சில நபர்கள் இன்னின்ன விதமாக ஒருவரை ஒருவர் நடத்தியதால் சரித்திர சம்பவங்கள் ஏற்படுவதாகச் சொல்லுவதாய் இருந்தால், இன்னின்ன புத்தகங்களை இன்னின்னார் எழுதியதால்தான் அவை ஏற்பட்டன என்று ஏன் சொல்லக்கூடாது எனக் கேட்கிறார்கள். ஒவ்வொரு முக்கியமான அற்புதத்தையும் தொடர்ந்து ஏராளமான அறிகுறிகள் காணப்படுகின்றன; அவற்றில் சிந்தனை நடவடிக்கைகளின் அறிகுறியை மட்டும் இந்த சரித்திரக்காரர்கள் பொறுக்கி எடுத்து, அந்த அறிகுறிதான் சம்பவங்களுக்குக் காரணம் என்று சொல்லுகிறார்கள். சம்பவங்களின் காரணம் சிந்தனைகளின் வேலைகளினால்தான் நடைபெறுகின்றன என்பதை நிரூபிக்க அவர்கள் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும், சிந்தனைகளின் நடவடிக்கைகளுக்கும் மக்களின் இயக்கத்திற்கும் எவ்விதமான சம்பந்தமும் இருப்பதாக ஒருவரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். மக்களின் செய்கைகளை சிந்தனைகளின் நடவடிக்கை ஆண்டுவருவதாக ஒருவரும் ஒப்புக்கொள்ளவும் மாட்டார்கள். ஏனெனில், மனிதருக்குள் சமத்துவம் வேண்டும் என்ற கொள்கையிலிருந்து பிரெஞ்சு புரட்சியில் கொடூரமான கொலைகள் செய்யப்பட்டதிலிருந்தும், அல்லது அன்புக் கொள்கையை உபதேசித்ததிலிருந்தும் கொடூரமான யுத்தங்களும் கொலைகளும் ஏற்பட்டதிலிருந்தும் பார்ப்போமானால், இந்தக் கொள்கையை ஒப்புக்கொள்ளுவதற் கில்லை.

இந்தச் சரித்திரக்காரர்கள் தந்திரமான வாதங்களினால் நிரப்பப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் சொல்லும் தந்திரமான வாதங்களையெல்லாம் சரியானவை என்று நாம் ஒப்புக்கொண்ட போதிலும், அதாவது தேசமக்களை ஆண்டு வருவது, அந்த வரையறுக்க முடியாத சக்தியானது ‘சிந்தனை’தான் என்பதை நாம் ஒப்புக்கொண்டபோதிலும், சரித்திரத்தின் முக்கியமான கேள்விக்கு இன்னமும் பதில் கிடைக்கவில்லை. சர்வதேச சரித்திரக்காரர்கள் சொல்லிவரும் மன்னர்கள், ஆலோசகர்கள், இன்னும் மற்றவர்கள் ஆகியவர்களின் சக்தியோடு, இந்தப் புதிய சக்தியாகிய ‘சிந்தனை’யையும் சேர்த்துக் கொண்டாலும், இவை எல்லாம் மக்களுடன் எவ்வாறு சம்பந்தப்பட்டிருக்கின்றன என்பதை இன்னமும் விளக்கிச் சொல்லவில்லை. நெப்போலியனுக்கு அதிகாரம் இருந்ததினால், சம்பவங்கள் நடந்தன என்று சொல்லுவதை அறிந்துகொள்ளுவது சாத்தியம்; நெப்போலியன் மற்ற செல்வாக்குகளுடன் சேர்ந்து ஒரு சம்பவத்தைத்

தோற்றுவித்தார் என்று சொல்லுவதையும் கொஞ்சம் சிரமப்பட்டு புரிந்துகொள்ளலாம்; ஆனால், 'சமுதாய ஒப்பந்தம்' என்ற ஒரு புத்தகம், பிரெஞ்சுக்காரர்கள் ஒருவரை ஒருவர் மூழ்கடிக்கும்படி எப்படிச் செய்தது என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்தப் புதிய சக்திக்கும் சம்பவத்திற்கும் உண்டான சம்பந்தத்தை விளக்கிச் சொன்னாலொழிய இதைப் புரிந்துகொள்ள முடியாது.

ஒரே காலத்தில் உயிரோடு இருப்பவர்கள் எல்லாருக்கும் இடையேயும் ஏதோ ஒரு சம்பந்தம் இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆகவே, மக்களின் சிந்தனை நடவடிக்கைக்கும் அவர்களுடைய சரித்திர நடவடிக்கைகளுக்கும் சம்பந்தம் உண்டு என்பதைக் கண்டுபிடிப்பது சாத்தியமே. மனிதகுல இயக்கங்களுக்கும், மற்ற வர்த்தகம், கைத்தொழில், விவசாயம் இன்னும் உங்களுக்கு இஷ்டமானவைகளுக்கும் சம்பந்தம் இருப்பதைப் போல, அந்த சம்பந்தமும் இருக்கலாம். ஆனால், அந்த சரித்திர இயக்கம் முழுவதிற்குமே சிந்தனை இயக்கம்தான் காரணம் என்று அந்தக் கலாச்சார சரித்திரக்காரர்கள் எப்படிச் சொல்லுகிறார்கள் என்பதை அறிந்து கொள்ளுவதே கஷ்டமாய் இருக்கிறது. கீழே குறிப்பிட்டிருப்பவைகள் தான், அந்த சரித்திரக்காரர்கள் அம்மாதிரி முடிவுக்கு வரும்படி செய்திருக்கலாம்: (1) கற்றவ ர்களால்தான் சரித்திரங்கள் எழுதப்படுவதால், எல்லா மனிதகுல இயக்கத்திற்கும், அடிப்படையாய் இருப்பது, தங்களுடைய வகுப்பாரின் நடவடிக்கைகளேயாகும் என்று அவர்கள் நினைப்பது அவர்களுக்குத் திருப்தியாகவும் இயற்கையாகவும் இருக்கும். அதே மாதிரியான நினைப்புதான் வியாபாரிகளுக்கும், விவசாயிகளுக்கும், சிப்பாய்களுக்கும் இயற்கையாகவும் திருப்தியாகவும் இருக்கும். (அவர்கள் அதை வெளிப்படுத்தவில்லை யென்றால், அதற்குக் காரணம், வியாபாரிகளும் சிப்பாய்களும் சரித்திரங்கள் எழுதுவதில்லை என்பதுதான்). (2) ஆத்மீக நடவடிக்கை, நாகரீகம், கலாச்சாரம், அறிவு வளர்ச்சி ஆகியவையெல்லாம், தெளிவற்ற, வரையறுக்க முடியாத கருத்துக்கள். அவற்றின் பெயரால், அவற்றைவிட இன்னும் தெளிவற்ற வார்த்தைகளை உபயோகிப்பது மிகவும் சுலபமானது. ஆகவே, அந்த வார்த்தைகளை எந்த தத்துவங்களிலும் நுழைத்து விடலாம்.

இம்மாதிரியான சரித்திரங்களின் உண்மையான தன்மை ஒருபக்கம் இருக்கட்டும் (அது சிலருக்கு சில காரியங்களுக்காக உபயோகப்படுவதாய் இருக்கலாம்). பொதுவான சரித்திரங்கள் எல்லாம், அந்தக் கலாச்சார சரித்திரங்கள்மீது வரவர அதிகமாகச்

சார்புகொள்ள ஆரம்பிக்கின்றன. அந்தக் கலாச்சார சரித்திரங்கள், பற்பல மதங்களையும், தத்துவங்களையும், ராஜீயக் கொள்கைகளையும் சம்பவங்களுக்குக் காரணங்கள் என்று கூர்மையாக ஆராய்ந்து சொல்லுகின்றன. ஆனால், உண்மையாக நடந்த ஒரு சரித்திர சம்பவத்தைப் பற்றி அவை விஸ்தரிக்கும்போது, உதாரணமாக 1812-ம் வருஷத்திய படையெடுப்பைப் பற்றி அவை சொல்லும்போது, தங்களை அறியாமலேயே ஒரு விஷயத்தைச் சொல்லுகின்றன. அதாவது, அந்தப் படையெடுப்பு நெப்போலியனுடைய விருப்பத்தாலேயே நடந்தது என்று தெளிவாகச் சொல்லுகின்றன. அப்படிச் சொல்லுவதால், கலாச்சார சரித்திரக்காரர்கள் தங்களை அறியாமலேயே தங்களை மறுத்துக்கொள்ளுகிறார்கள்; தாங்கள் கண்டுபிடித்த அந்தப் புதிய சக்தியானது, சரித்திரத்தில் நடப்பவைகளுக்குக் காரணமல்ல என்று காட்டுகிறார்கள்; அவர்களால் ஒப்புக்கொள்ளப்படாத ஒரு சக்தியை நுழைத்தாலொழிய சரித்திரத்தை விளக்கிச் சொல்ல முடியாது என்பதையும் அவர்களே காட்டுகிறார்கள்.

## 3

ஒரு ரயில்வே எஞ்ஜின் ஓடிக்கொண்டிருக்கிறது. ''அதை எந்தச் சக்தி ஓட்டுகிறது?'' என்று ஒருவர் கேட்கிறார். ஒரு பிசாசு அதை ஓட்டுவதாக ஒரு விவசாயி சொல்லுகிறான். அதன் சக்கரங்கள் சுற்றுவதால் அந்த எஞ்ஜின் ஓடுவதாக மற்றொருவன் சொல்லுகிறான். அந்த எஞ்ஜினின் புகைக் குழாயிலிருந்து மேலே வரும் புகையைக் காற்று அடித்துக்கொண்டு போவதால் தான் அந்த எஞ்ஜின் ஓடுகிறது என்று மூன்றாவது பேர்வழி ஒருவன் கூறுகிறான்.

விவசாயி சொல்லுவதை யாரும் மறுக்க முடியாது. ஏனெனில், அவனுடைய பதில் பூரணமானதாய் இருக்கிறது. அவன் கூறுவதை மறுப்பதென்றால், பிசாசு ஒன்றும் இல்லை என்பதை அவனிடம் நிரூபிக்கவேண்டும்; அல்லது, அந்த எஞ்ஜினை ஓட்டுவது ஒரு ஜெர்மனியனே ஒழிய பிசாசு அல்ல என்பதை அவனிடம் மற்றொரு விவசாயி விளக்கிச் சொல்ல வேண்டும், இம்மாதிரி ஒருவருக்கொருவர் மாறுபாடாகச் சொல்லுவதன் மூலம்தான் அவர்கள் இருவர் சொல்லுவதும் தவறானவை என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ளமுடியும். சக்கரங்கள் சுற்றுவதனால்தான் எஞ்ஜின் ஓடுகிறது என்று சொல்லும் மனிதன், தன்னைத் தானே மறுத்துக்கொள்ளுகிறான். ஏனெனில், காரணத்தை விளக்கிச் சொல்ல அவன் ஆரம்பித்த பின்பு, சக்கரங்கள் எதனால்

சுற்றுகின்றன என்பதற்கும் அவன் காரணம் சொல்லியாகவேண்டும். பாய்லரில் உள்ள நீராவியின் அழுத்தத்தினால்தான் எஞ்ஜின் ஓட ஆரம்பிக்கிறது என்ற வியாக்கியானத்துக்கு கடைசியில் அவன் வந்தாகவேண்டும். அந்த முடிவிற்கு அவன் வருகிற வரையில், அவனுடைய வியாக்கியானத்தை மத்தியில் நிறுத்துவதற்கு அவனுக்கு உரிமை கிடையாது. புகையைக் காற்று அடித்துக்கொண்டு போவதனால் தான் எஞ்ஜின் ஓடுகிறது என்று சொல்லுகிறவனுக்கு, சக்கரங்கள் சுற்றுவதனால்தான் எஞ்ஜின் ஓடுகிறது என்ற வியாக்கியானம் சரியானதாகத் தோன்றவில்லை; ஆகவே, முதலில் அவனுக்குத் தோன்றும் காட்சியைக் காரணமாய் வைத்துக்கொண்டு, அதை வியாக்கியானமாகச் சொல்லுகிறான்.

எஞ்ஜின் ஓட்டத்திற்கு ஈடான ஒரு சக்தியைக் காட்டினால்தான், எஞ்ஜின் ஓடுவதற்கான யூகத்தைச் சரியாக விளக்கிச் சொல்லுவதாய் இருக்கும்.

மக்களின் இயக்கத்திற்கு ஈடான சக்தியைக் காட்டினால்தான், மக்களின் இயக்கத்திற்கான யூகத்தைத் தெரிந்துகொள்ள முடியும்.

இந்த யூகத்தை சொல்லுவதற்காகப் பற்பல சரித்திரக்காரர்கள் வெவ்வேறு விதமான சக்திகளைச் சுட்டிக் காட்டுகிறார்கள். ஆனால், மக்களின் இயக்கத்தை நடத்தக்கூடிய அளவுக்கு அவை ஈடாக இல்லை. அந்தச் சக்தி வீரர்களிடம் இயற்கையாகவே இருக்கின்றன என்று சிலர் நினைக்கிறார்கள். ரயில்வே எஞ்ஜினை ஒரு பிசாசு தள்ளுவதாக ஒரு விவசாயி சொல்லும் கூற்றைப் போலவே இது இருக்கிறது. சக்கரங்கள் சுற்றுவதால் எஞ்ஜின் ஓடுகிறது என்று ஒருவன் சொல்லியதைப் போல, மற்ற சக்திகளிலிருந்து ஒருசக்தி உற்பத்தியாவதாக வேறுசில சரித்திரக்காரர்கள் சொல்லுகிறார்கள். கலாச்சார செல்வாக்கினால் தான் அந்தச் சக்தி பிறப்பதாக இன்னும் சில சரித்திரக்காரர்கள் கூறுகிறார்கள்; புகையைக் காற்று அடிப்பதனால்தான் எஞ்ஜின் ஓடுகிறது என்று சொல்லுகிறவனின் கூற்றைப் போலவே இவர்களுடைய வாதமும் இருக்கிறது.

சீஸர்கள், அலெக்ஸாண்டர்கள், லூதர்கள், வால்டேர்கள் ஆகிய தனிப்பட்டவர்களின் சரித்திரங்களை எழுதுகிறவரையில், எல்லாருடைய சரித்திரங்களையும் எழுதாத வரையில், ஒரு குறிப்பிட்ட சம்பவத்தில் கலந்து கொண்ட எல்லாருடைய சரித்திரங்களையும் எழுதாத வரையில், ஒரு விஷயம் சாத்தியமானதல்ல. அதாவது, ஒரு குறிப்பிட்ட குறிக்கோளுக்குச் செல்லும்படி மக்களைக் கட்டாயப்படுத்தும் ஒரு சக்தியை உருவகம் செய்தாலொழிய, மக்களின் இயக்கத்தை வருணிப்பது

முற்றிலும் முடியாத காரியம். சரித்திரக்காரர்கள் அறிந்த அத்தகைய உருவகம் அல்லது யுகம் என்பது, சக்தி ஒன்றுதான்.

இந்த உருவகத்தைக் கொண்டுதான் சரித்திர சம்பவங்களைத் துவக்குகிறார்கள். இப்பொழுது அப்படித்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த தொகுப்புக்கு இது ஒன்றுதான் கைப்பிடியாக விளங்குகிறது. ஆனால், சரித்திர சம்பவங்களைத் தொகுப்பதற்கு வேறொன்றைக் கண்டுபிடிப்பதற்கு முன்பாக, இந்தக் கைப்பிடியை, பக்கிள் செய்ததைப்போல, உடைத்து விட்டால், அந்தத் தொகுப்பிற்கு உண்டான ஒரே ஆதரவையும் இழந்துவிட நேரிடும். சரித்திர சம்பவங்களை விளக்குவதற்கு இந்தச் சக்தி உருவகம் அவசியமானதாய் இருக்கிறது. இதை சர்வ தேச சரித்திரக்காரர்களும் கலாச்சார சரித்திரக்காரர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஏனெனில், அந்த உருவகத்தை அவர்கள் வெளிப்படையாக மறுத்துவந்த போதிலும், ஒவ்வொரு அடியிலும் தவிர்க்க முடியாதபடி அதை அவர்கள் ஒப்புக் கொள்ளும்படி நேரிட்டிருக்கிறது.

மனித குல பிரச்னைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் சரித்திர விஞ்ஞானமானது, இதுவரையில் கரன்ஸி நோட்டுகள், நாணயங்கள் ஆகியவற்றின் பணப் புழக்கத்தைப் போலவே இருந்துவருகிறது. ஜீவிய சரித்திரங்களும் தனிப்பட்ட நாடுகளின் சரித்திரங்களும், கரன்ஸி நோட்டுகளைப் போலவே இருக்கின்றன. கரன்ஸி நோட்டுகளை உபயோகப்படுத்திக் கொள்ளலாம்; புழங்கிக் கொள்ளலாம்; ஒருவருக்கும் கெடுதல் இல்லாத விதத்தில் அவற்றின் காரணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம்; நமக்கு சௌகரியமாக அமைத்துக்கொள்ளலாம். ஆனால், அந்தக் கரன்ஸி நோட்டுகளுக்குப் பின்பலமாக என்ன பாதுகாப்பு இருக்கிறது என்று ஒருவர் கேட்கிற வரையில், இவற்றையெல்லாம் செய்து கொள்ளலாம். வீரர்களின் விருப்பங்களால் சம்பவங்களை எப்படி உற்பத்தி செய்ய முடியும் என்ற கேள்வியை மட்டும் நீங்கள் கேட்காமல் இருந்தால் போதும்; அப்பொழுது தீயர்ஸ் போன்றவர்களின் சரித்திரங்கள் சுவாரஸ்யமாகவும் புத்திமதிகள் நிறைந்ததாகவும் உங்களுக்குத் தோன்றும்; கவித்துவம்கூட அதில் மிளிர்வதாகக் காணப்படும். ஆனால், கரன்ஸி நோட்டுகளைத் தங்கமாக மாற்றுவதற்கு மக்கள் முயற்சி செய்யும்போதோ, அல்லது கரன்ஸி நோட்டுகைளக் கள்ளத்தனமாக தயாரிப்பது சுலபமாய் இருக்கும்போதோ, அல்லது அளவுக்கு அதிகமாக கரன்ஸி நோட்டுகளை சர்க்கார் வெளியிடும்போதோ, அந்த காகிதப் பணத்தின் உண்மையான மதிப்பு என்ன என்ற சந்தேகம்

தோன்றுவதுண்டு. அதைப்போல, ஏராளமான சரித்திரங்களை எழுதியபோதோ, அல்லது ''இந்தக் காரியத்தை நெப்போலியன் எந்த சக்தியினால் செய்தார்?'' என்று வெகுளித்தனமாக ஒருவர் கேட்கும்போதோ, சரித்திரங்களின் உண்மையான தன்மையைப் பற்றிய சந்தேகங்கள் தோன்றுகின்றன. அதாவது, காகிதப் பணத்தை அசல் தங்கமாக மாற்றுவதற்கு விருப்பம் தோன்றுகிறது.

காகிதப் பணத்திலுள்ள உபயோகமற்றத் தன்மையை உணர்ந்து, அவற்றை உலோகப் பணமாக்க மக்கள் முயற்சிக்கிறார்கள். அந்த உலோகப் பணம் தங்கத்தைவிட தரத்தில் குறைந்தவை. சர்வதேச சரித்திரங்களையும், கலாச்சார சரித்திரங்களையும் எழுதுகிறவர்கள், இப்பேர்ப்பட்டவர்களைப் போல இருக்கிறார்கள். தங்கத்தைவிட தரம் குறைந்த அந்த உலோகப் பணம், பணத்தைப்போல ஒலிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அதற்குமேல் அதில் எதுவும் இல்லை. அறியாதவர்களைக் காகிதப் பணம் ஏமாற்றலாம். ஆனால், தரம் குறைந்த உலோகப் பணத்தினால் ஒருவரையும் ஏமாற்ற முடியாது. ஏனெனில், அந்த உலோகப் பணம் 'திணீர்' என்று ஒலிப்பதைத் தவிர, வேறு மதிப்பு எதுவும் இல்லை. பண்டமாற்றுக்கும் சரி, வேறு உபயோகங்களுக்கும் சரி, தங்கம் என்பது தங்கமாகவே இருக்கும். அதே மாதிரி சரித்திரத்தின் அத்தியாவசியமான கேள்விக்குப் பதில் சொல்லக் கூடிய நிலைமையில் இருக்கும்போதுதான் சர்வதேச சரித்திரக்காரர்களும் மதிப்புள்ளவர்களாக இருக்க முடியும். 'சக்தி என்பது என்ன?' என்பதுதான் அந்த அத்தியாவசியமான கேள்வியாகும். அந்தக் கேள்விக்கு ஒன்றுக்கொன்று மாறான பதில்கள் சர்வதேச சரித்திரக்காரர்கள் கூறுகிறார்கள். கலாச்சார சரித்திக்காரர்கள் அந்தக் கேள்விக்குப் பதில் கூறாமல் மழுப்பி, முற்றிலும் மாறான மற்றொன்றிற்குப் பதில் சொல்லுகிறார்கள், போலித்தங்கத்தை தங்கத்தைப்போல அங்கீகரிப்பதாக ஒப்புக்கொள்ளுகிறவர்களிடமும், உண்மையான தங்கத்தை அறியாதவர்களிடமும்தான் போலி தங்க நாணங்களைப் புழங்க முடியும். அதைப்போல, மனித குலத்தின் அத்தியாவசியமான கேள்விக்கு பதில் சொல்லமுடியாத சர்வதேச சரித்திரக்காரர்களும், கலாச்சார சரித்திரக்காரர்களும், அவர்களுடைய சொந்த காரியங்களுக்காக மட்டும்தான் சர்வகலாசாலைகளிலோ, அல்லது 'சிந்தனை வாசிப்பு' என்று கூறிக்கொள்ளும் வாசகர்களின் கூட்டங்களிலே தான் செலாவணியாக அவர்கள் புழங்கிக் கொள்ள முடியும்.

## 4

தெய்வம், தான் பொறுக்கி எடுத்த ஒருவனுக்கு ஒரு நாட்டு மக்கள் அடிமையாகும்படிச் செய்கிறது என்றும், அந்தப் பொறுக்கி எடுக்கப்பட்டவனின் சிந்தனையைத் தெய்வம் ஆட்கொண்டு நடத்துகிறது என்றும் நமது முன்னோர்கள் கருதிவந்தார்கள். அந்தக் கருத்தை ஒப்புக்கொள்ளாமல் உதறிவிட்ட பின்பு, சரித்திரம் என்பது முன்னுக்குப்பின் முரணாக நடக்க விருப்பம் இல்லாமலிருந்தால், இரண்டு வழிகளில் ஒன்றைப் பின்பற்றினாலொழிய ஒரு அடியைக்கூட அதனால் எடுத்துவைக்க முடியாது. அந்த இரண்டு விஷயங்களாவன: (1) மனித விவகாரங்களில் கடவுளே நேராகத் தலையிட்டு நடத்தி வருகிறார் என்ற பழங்கால கொள்கையை ஒப்புக் கொள்ளுவது; (2) சரித்திர சம்பவங்களை உற்பத்தி செய்யக்கூடிய சக்தி என்று அழைக்கப்படும் அந்த வேகத்தின் அர்த்தம் என்ன என்பதைத் தெளிவாக வரையறுத்துச் சொல்லுவது.

முதலாவது வழிக்குத் திரும்புவது அசாத்தியமான காரியம். ஏனெனில் அந்த நம்பிக்கையை அழித்துவிட்டார்கள். ஆகவே, சக்தி என்று சொல்லப்படுவது எது என்பதை விளக்கிச் சொல்ல வேண்டியது அத்தியாவசியமாய் இருக்கிறது.

''ஒரு படையைத் திரட்டவேண்டும் என்றும், யுத்தத்திற்குப் போக வேண்டும் என்றும் நெப்போலியன் உத்தரவிட்டார்.'' இம்மாதிரியான அறிக்கை நமக்குப் பழகிப்போய்விட்டது. நாம் அதில் பழக்கமாய்விட்டபடியால், நெப்போலியன் ஏதோ சில வார்த்தைகள் சொன்னார் என்பதற்காக ஆறு லட்சம் பேர் எதற்காகப் போருக்குப் போகவேண்டும் என்று கேள்வி நமக்குப் புத்தியற்றதாகத் தோன்றுகிறது. அவருக்கு அதிகாரம் இருந்தபடியால் அவர் உத்தரவிட்டபடி செய்து முடிக்கப்பட்டன.

அந்த சக்தியை கடவுள் அவருக்குக் கொடுத்தார் என்பதை நாம் நம்புவோமானால், இந்த பதில் முற்றிலும் திருப்திகரமாய் இருக்கிறது. ஆனால், அதை நாம் ஒப்புக்கொள்ளாவிட்டால், மற்றவர்கள்மீது தனி ஒரு மனிதருக்கு ஏற்பட்டுள்ள இந்த சக்தியை என்னது என்பதை நிர்ணயிக்க வேண்டியது அத்தியாவசியமாய் இருக்கிறது.

பலவீனமான ஒருவர்மீது பலமான ஒருவர் உபயோகிக்கும் சரீர பலமாக அது இருக்க முடியாது. ஹெர்க்குலிஸின் சக்தியைப் போன்ற ஒரு சரீர பலத்தினால் அடக்கி ஆளவோ, அல்லது பயமுறுத்துவதாய் இருப்பதோ அது இருக்கமுடியாது. அல்லது சில சரித்திரக்காரர்கள் தங்களுடைய அறியாமையினால் அவர்கள்

சொல்லுகிற தார்மீக சக்தியின் அடிப்படையாகத் தோன்றும் ஒரு பலனாக அது இருக்க முடியாது. அதாவது, சரித்திரத்தில் காணப்படும் முக்கியமான வீரர்கள் எல்லாருக்கும், விசேஷ பலத்தோடு கூடிய ஆத்மாவும், மேதை என்று சொல்லக்கூடிய மனமும் இருப்பதாக அவர்கள் கூறுகிறார்கள். தார்மீக பலத்தின் விசேஷத்தின் மீது இந்த சக்தி அமைந்திருப்பதாக இருக்க முடியாது. நெப்போலியனைப் போன்ற வீரர்களின் தார்மீக குணங்களைப் பற்றி பலவிதமான அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. ஆகவே, அவர்களை விட்டுவிடுவோம். ஆனால், கோடிக்கணக்கான மக்களை ஆண்டு வந்த பதினோராவது லூயி மன்னனோ, அல்லது மெட்டர்னிச்சோ எந்தவிதமான குறிப்பிட்ட தார்மீக குணங்களைக் கொண்டிருந்தார்கள் என்று சரித்திரம் நமக்குக் காட்டவில்லை. அதற்கு மாறாக, அவர்கள் ஆண்டுவந்த கோடிக்கணக்கான மக்களின் யாரையும்விட தார்மீக குணங்களில் அவர்கள் பலவீனமாகவே இருந்தார்கள்.

அதிகாரம் அல்லது சக்தியை யார் கொண்டிருக்கிறார்களோ, அவர்களுடைய சரீர பலமோ, அல்லது தார்மீக குணமோ, அந்த சக்திக்கு மூலமாய் இல்லையென்றால், அதன் மூலத்தை நாம் வேறு இடத்தில் கண்டு பிடிக்கவேண்டும். அதாவது, அதிகாரத்தைக் கையாளும் அந்த தனி மனிதனுக்கும் மக்களுக்கும் உண்டான தொடர்பில் கண்டுபிடிக்கவேண்டும்.

நீதி சாஸ்திர விஞ்ஞானமானது, அந்த சக்தியை அம்மாதிரிதான் அறிந்துகொண்டிருக்கிறது. அந்த நீதி சாஸ்திர விஞ்ஞானம்தான், சரித்திரத்தின் பண்ட மாற்று பாங்க் ஆகும். சரித்திரம் அறிந்துகொண்டிருக்கிற அந்த சக்தியின் ஞானத்தை உண்மையான தங்கத்திற்கு பண்டமாற்று செய்துகொள்ள அது மேற்கொள்ளுகிறது.

வெளிப்படையாகவோ, அல்லது மௌனமாகவோ, தங்கள் சம்மதத்தைக் காட்டி, தாங்கள் விரும்புகிற மன்னர்களுக்கு தங்கள் விருப்பத்தைக் கூட்டாக மக்கள் மாற்றிக் கொடுப்பதுதான் சக்தி என்பதாகும்.

சாத்தியமான இடங்களில் ராஜாங்கமும், சக்தி என்ற அதிகாரமும் எம்மாதிரி ஏற்பாடு செய்யப்படவேண்டும் என்பது பற்றி நீதி சாஸ்திரத்தில் விளக்கங்கள் காணப்படுகின்றன. அவையெல்லாம் மிகவும் தெளிவாக இருக்கின்றன. என்றாலும், சரித்திரத்திற்கு அந்த விளக்கத்தை உபயோகிக்கும்போது, சக்தி என்பது என்ன என்பதை வரையறுக்கக்கூடிய தெளிவான வியாக்கியானம் அவசியமாய் இருக்கிறது.

நமது முன்னோர்கள் நெருப்பு என்பதை நிச்சயமாக இருக்கக்கூடிய ஒரு பொருள் என்று கருதி வந்தார்கள். அதேமாதிரி ராஜாங்கத்தையும் சக்தியையும் நீதி சாஸ்திரம் கருதுகிறது. ஆனால், சரித்திரத்தைப் பொறுத்த வரையில், ராஜாங்கம் என்பதும், சக்தி என்பதும் கண்ணால் பார்க்கக்கூடிய அற்புதங்கள் என்றே கருதுகிறது. அதாவது, நெருப்பு என்பது ஒரு மூலப்பொருள் அல்ல என்றும், ஒரு அற்புதம் ஒன்றுமே நவீன பௌதீக சாஸ்திரம் கருதுவதைப் போலவே அது இருக்கிறது.

சரித்திரத்தின் கொள்கைக்கும், நீதி சாஸ்திரத்தின் கொள்கைக்கும் இடையிலுள்ள இந்த அடிப்படையான வித்தியாசத்திலிருந்து ஒன்று தோன்றுகிறது. அதாவது அதனுடைய அபிப்பிராயத்தில், சக்தி என்பது எப்படி அமையவேண்டும் என்பதையும், கால மாறுபாட்டுக்கு உட்படாமல் நிலையாக அது எப்படி இருக்கவேண்டும் என்பதையும், நுணுக்கமாக நீதி சாஸ்திரம் சொல்ல முடியும் என்று தோன்றுகிறது. ஆனால், காலத்தைப் பொறுத்து மாறுகின்ற அந்த சக்தி என்பது என்ன என்ற சரித்திரத்தின் கேள்விகளுக்கு அது எவ்விதமான பதிலையும் கொடுக்க முடியாது.

மக்கள் கூட்டாக தங்கள் விருப்பத்தை தங்களுடைய மன்னருக்கு மாற்றிக் கொடுப்பதுதான் சக்தி என்று சொல்லப்படுமானால், புகாசியாவ் என்பவர் மக்களின் விருப்பத்திற்குப் பிரதிநிதியாக இருந்தாரா? இல்லையென்றால் முதலாவது நெப்போலியன் மட்டும் எப்படி இருக்க முடியும்? பௌலோனில் மூன்றாவது நெப்போலியன் கைதியால் இருந்தபோது, அவர் எப்படி ஒரு குற்றவாளியாக இருந்தார்? பின்னால், அவரால் கைது செய்யப்பட்டவர்கள் எல்லாரும் எப்படி குற்றவாளிகளாக ஆனார்கள்?

அரண்மனை புரட்சிகளில் சில சமயங்களில் இரண்டு மூன்று பேர்களே தான் சம்பந்தப்பட்டிருப்பார்கள். அப்படிப்பட்ட அரண்மனை புரட்சிகள் எல்லாம், மக்களின் விருப்பத்தைப் புதிய மன்னருக்கு மாற்றிக் கொடுக்கின்றனவா? சர்வ தேச விவகாரங்களில் மக்களின் விருப்பங்களை நாட்டைப் பிடித்தவருக்கு மாற்றிக் கொடுக்கிறார்களா? 1808-ஆம் வருஷத்தில் நடந்த ரைன் மகாநாடு தனது விருப்பத்தை நெப்போலியனுக்கு மாற்றிக் கொடுத்ததா? ஆஸ்திரியர்களுடன் போர் செய்ததற்காக நமது ராணுவம் பிரெஞ்சு ராணுவத்தோடு கூட்டாகச் சேர்ந்து 1809-ஆம் வருஷத்தில் போனபோது, ருஷ்ய மக்கள் தங்கள் விருப்பத்தை நெப்போலியனுக்கு மாற்றிக் கொடுத்தார்களா?

இந்தக் கேள்விகளுக்கு மூன்று பதில்கள் தான் சாத்தியமானவை.

அவையாவன: (1) தாங்கள் விரும்பிய மன்னருக்கோ, மன்னர்களுக்கோ, தங்கள் விருப்பத்தை எப்பொழுதுமே நிபந்தனையின்றி மக்கள் மாற்றிக்கொடுக்கிறார்கள். அம்மாதிரி நியமிக்கப்பட்ட ஒரு சக்தி, அல்லது அதிகாரத்திற்கு விரோதமாக நடக்கும் ஒவ்வொரு போராட்டமும், புதிதாய்த் தோன்றும் ஒவ்வொரு சக்தியும் முதலில் அமைக்கப்பட்ட உண்மையான சக்திக்கு விரோதமானவை என்று நிச்சயமாக கருதப்படவேண்டும்; (2) அல்லது மன்னர்களுக்கு தாங்கள் மாற்றிக் கொடுக்கும் விருப்பத்தை மக்கள் நிபந்தனைகளின் பேரிலேயே செய்வதாய் இருக்க வேண்டும்; அதே நிபந்தனைகள் தெளிவாகவும், வரையறுக்கப்பட்டவையாகவும் இருக்க வேண்டும்; அதாவது எந்த நிபந்தனைகளின் பேரில் மன்னர்களிடம் அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டதோ, அந்த நிபந்தனைகளை மீறியதால்தான் சண்டைகளும் அதிகார நாசங்களும் ஏற்பட்டன என்பதை காட்டக்கூடியதாய் இருக்கவேண்டும்; (3) மக்களின் விருப்பத்தை நிபந்தனைகளின் பேரிலேயே மன்னர்களுக்கு மாற்றிக் கொடுத்தார்கள். ஆனால், அந்த நிபந்தனைகள் தெளிவற்றவை யாகவும், வரையறுக்கப்படாதவையாகவும் இருந்தன; பற்பல விதமான அதிகார பீடங்கள் தோன்றுவதற்கும், அவர்கள் சண்டை போட்டுக்கொள்ளுவதற்கும், அவர்கள் கவிழ்ந்துபோவதற்கும், இந்த தெளிவற்ற நிபந்தனைகளை மன்னர்கள் பூர்த்தி செய்யாததே காரணம் என்று சொல்லப்படவேண்டும்.

மக்களுக்கும் அவர்களுடைய மன்னர்களுக்கும் இடையிலுள்ள உறவைப்பற்றி இந்த மூன்று வழிகளில்தான் சரித்திரக்காரர்கள் விளக்கி வருகிறார்கள்.

சக்தி என்பதன் பொருளைப்பற்றி அறியாத சில சரித்திரக்காரர்கள்—முன்னால் குறிப்பிடப்பட்ட வாழ்க்கை சரித்திரங்களையும் தனிப்பட்ட நாடுகளின் சரித்திரங்களையும் எழுதியவர்கள்—மக்கள் தங்கள் விருப்பங்களை கூட்டாக நிபந்தனை இல்லாமல் சரித்திரப் பிரசித்திப் பெற்றவர்களுக்கு மாற்றிக் கொடுத்திருப்பதாக நினைக்கிறார்கள். ஆகவே, ஒரு தனி நாட்டைப் பற்றி அவர்கள் எழுதும்போது அந்தக் குறிப்பிட்ட அதிகாரம்தான் நிச்சயமான, உண்மையான சக்தி என்று அவர்கள் நினைத்துக்கொள்ளுகிறார்கள். ஆகவே, அதை எதிர்க்கிற வேறு எந்த வேகமும் ஒரு சக்தி அல்ல என்றும், சக்திக்கு எதிராகக் கிளம்பும் ஒரு பலாத்காரம் என்றும் அவர்கள் கருதுகிறார்கள்.

இந்தக் கொள்கை, சரித்திரத்தில் அநாகரீகமாய் இருந்த காலங்களுக்கும், அமைதியாய் இருந்த காலங்களுக்கும் பொருத்தமானது. ஆனால், ஏககாலத்தில் பற்பல சக்திகள் தோன்றி, ஒன்றோடொன்று சண்டை போடும் சிக்கலான, நெருக்கடியான காலங்களுக்கு இந்தக் கொள்கையை உபயோகிப்பது ஒரு அசௌகரியமாய் இருக்கும். ஏனெனில், தேசீய கன்வென்ஷன் (சட்டசபை), நிர்வாக டைரக்டரி, போனபார்ட் ஆகியவர்கள் எல்லாரும் உண்மையான சக்திக்கு எதிராக நடப்பவர்கள் என்று ஒரு நியாயமான சரித்திரக்காரர் நிரூபிக்க முடியும். குடியரசு கட்சியைச் சேர்ந்த ஒரு சரித்திரக்காரர், கன்வென்ஷன்தான் உண்மையான சக்தி என்று கூறுவார். போனபார்ட் கட்சியைச் சேர்ந்த சரித்திரக்காரர் ஏகாதிபத்தியம்தான் உண்மையான சக்தி என்று கூறுவார். மற்றவையெல்லாம் உண்மையான சக்திக்கு எதிராக நடப்பவை என்று அவர்கள் சொல்லுவார்கள். ஒருவருக்கொருவர் முரணாகச் சொல்லும் இந்த சரித்திரக்காரர்களின் வியாக்கியானங்கள் எல்லாம் சிறு குழந்தைகளக்குத்தான் திருப்தியாய் இருக்கும் என்பது தெளிவான விஷயம்.

சரித்திரத்தைப் பற்றி இம்மாதிரிப் பொய்யாகக் கூறுவதை உணர்ந்துள்ள மற்றொரு சரித்திரக்கார கோஷ்டி, வேறொருவிதமாகச் சொல்லுகிறார்கள். ''மக்கள் தங்கள் விருப்பத்தை தங்கள் மன்னர்களுக்கு நிபந்தனையின்பேரில் மாற்றிக் கொடுத்திருக் கிறார்கள்; இன்ன திட்டத்தை நிறைவேற்றவேண்டுமென்று மக்கள் நிபந்தனை விதித்து, அதை வெளிப்படையாகச் சொல்லாமல் சரித்திரத் தலைவர்களுக்கு மாற்றிக் கொடுத்திருக்கிறார்கள்'' என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால், இந்தத் திட்டத்தில் என்ன அடங்கி இருக்கிறது என்பதை இந்தச் சரித்திரக்காரர்கள் சொல்லவில்லை. அப்படியே சொல்லியிருந்தாலும், ஒருவருக்கொருவர் விரோதமாகச் சொல்லுகிறார்கள்.

ஒரு தேச மக்களின் முன்னேற்றம் எதில் அடங்கி இருக்கிறது என்பதைக் கண்டுபிடிப்பதற்கு, ஒவ்வொரு சரித்திரக்காரரும் தமது நோக்கத்திற்குப் பொருத்தமாகக் காரணங்களைத் தேடுகிறார்கள். அந்தக் காரணங்களை பிரான்ஸினுடையவோ அல்லது வேறு நாட்டினுடையவோ பிரஜைகளின் பெருமையிலும் செல்வத்திலும் சுதந்திரத்திலும் அல்லது அறிவிலும் கண்டுபிடிக்க முயற்சி செய்கிறார்கள். இந்தத் திட்டத்தின் இயல்பைப் பற்றியே இந்தச் சரித்திரக்காரர்களுக்குள் முரண்பாடுகள் இருக்கின்றன், என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. எல்லா சரித்திரக்காரர்களுக்குமே ஒரே விதமான திட்டம் இருக்கிறது என்று வைத்துக்கொண்டாலும் கூட

சரித்திரத்தின் உண்மைகள் அநேகமாக எப்பொழுதுமே அந்தக் கொள்கையை மறுக்கிறது. செல்வம், சுதந்திரம், மக்களின் ஞானம் ஆகியவைகளில்தான் அந்த சக்தி என்பது இருக்கிறது என்றால், 14-வது லூபி மன்னனும், பயங்கர ஜான் மன்னனும் எப்படித் தங்கள் ஆட்சியை அமைதியாக நடத்தினார்கள்? 16-வது லூயி மன்னனும், முதலாவது சார்லஸ் மன்னனும் எதற்காக மக்களால் சிரச்சேதம் செய்யப்பட்டார்கள்? இந்தக் கேள்விக்கு சரித்திரக்காரர்கள் பின்வருமாறு பதில் சொல்லுகிறார்கள். அதாவது 14-வது லூயி செய்த காரியங்கள், திட்டத்திற்கு விரோதமானவை என்றும், அவற்றில் ஏற்பட்ட பலன், 16-வது லூயியைத் தாக்கியது என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால், அந்தப் பலன் 14-வது லூயியையோ, அல்லது 15-வது லூயியையோ தாக்காமல், 16-வது லூயியை ஏன் தாக்கவேண்டும்? அம்மாதிரிப் பலன்களுக்குப் பெயர் என்ன? இந்தக் கேள்விகளுக்கு ஒரு பதிலும் கிடையாது, சொல்லவும் முடியாது. தங்களுடைய கூட்டு விருப்பங்களை சில மன்னர்களிடமிருந்தோ, அவர்களுடைய சந்ததிகளிடமிருந்தோ பல நூற்றாண்டுகளாக ஏன் வாபஸ்பெறாமல் இருந்தார்கள்? பின்னால் திடீரென்று அவற்றை ஐம்பது வருஷ காலத்தில் கன்வென்ஷனிடமும், டைரக்டரியிடமும் (சர்க்கார்), நெப்போலியனிடமும், அலெக்ஸாண்டரிடமும், 18-வது லூயியிடமும், மீண்டும் நெப்போலியனிடமும், 10-வது சார்லஸிடமும், லூயிபிலிப்பிடமும், குடியரசு சர்க்காரிடமும், 3-வது நெப்போலியனிடமும் எதற்காக மாற்றிக் கொடுத்தார்கள்? இம்மாதிரி வேகமாக ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் மக்களின் விருப்பத்தை மாற்றிக் கொடுத்ததைப் பற்றி எழுதும்போது முக்கியமாக சர்வதேச உறவுகள், வெற்றிகள், கூட்டு ஒப்பந்தங்கள் ஆகியவைகளைப் பற்றி எழுதும்போது, சரித்திரக்காரர்கள் ஒரு விஷயத்தை ஒப்புக்கொள்ளும்படி நேரிடுகிறது. அதாவது, இந்த மாற்றிக் கொடுப்பவைகளில் சில, சாதாரணமாக மாற்றிக் கொடுக்கப்பட்டவை அல்லவென்றும், தந்திரத்தினாலும் தவறுகளினாலும் குயுக்திகளினாலும் ராஜதந்திரிகளின் அறிவீனத்தினாலும் அல்லது ஒரு மன்னருடையவோ ஒரு கட்சித் தலைவருடையவோ பலவீனத்தினாலும் ஏற்பட்ட, தற்செயலாக நடந்த சம்பவங்கள் என்றும் அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆகவே, சரித்திர சம்பவங்களில் பெரும்பாலானவைகளை—உள்நாட்டுச் சண்டைகள், புரட்சிகள், நாடு பிடித்தல்—இந்தச் சரித்திரக்காரர்கள் மக்களின் விருப்பங்களை மாற்றிக்கொடுப்பதின் காரணமாக ஏற்படுகிறவைகள் என்று சொல்லுவதில்லை; தனியாக

ஒருவரோ, அல்லது பலரோ தங்கள் விருப்பங்கள் தவறாக மாற்றிக்கொடுப்பதால் ஏற்படும் பலன்கள் என்றே கூறுகிறார்கள். அதாவது, அதிகாரத்தை ஆக்கிரமித்துப் பிடுங்குதல் என்பதே அவர்கள் முடிவு. ஆகவே, இந்தச் சரித்திரக்காரர்களும் சரித்திர சம்பவங்கள் இந்தக் கொள்கைக்கு மாறாக இருக்கின்றன என்பதை அறிந்து ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

இந்தச் சரித்திரக்காரர்கள் ஒரு தாவர சாஸ்திரியைப்போலக் காணப்படுகிறார்கள். அந்த தாவர சாஸ்திரி விதைகளிலிந்து வளருகிற சில செடிகள் முதலில் இரண்டு இலைகள் விடுவதைக் கவனித்திருக்கிறார். ஆகவே, எல்லா செடிகளும் அதே மாதிரி இரண்டு இலைகள் விட்டே முதலில் வளர ஆரம்பிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார். பனைகளும், காளான்களும், ஓக் மரங்களும் அம்மாதிரி இரண்டு இலைகள் விட்டு வளருவது இல்லையாகையால், அந்தக் கொள்கையிலிருந்து மாறுபட்டவை என்று அவர் கூறுகிறார்.

மக்களின் விருப்பங்களை சரித்திரப்பிரசித்திப் பெற்றவர்களுக்கு நிபந்தனையோடுதான் மாற்றிக்கொடுக்கிறார்கள் என்றும், ஆனால் அந்த நிபந்தனைகள் நமக்குத் தெரியாதவை என்றும், மூன்றாவது கோஷ்டியைச் சேர்ந்த சரித்திரக்காரர்கள் யூகிக்கிறார்கள். தங்களிடம் அதிகாரத்தைக் கொடுத்த மக்களின் விருப்பங்களை சரித்திரப் பிரசித்திப் பெற்றவர்கள் நிறைவேற்றி வைப்பதால்தான் அவர்களிடம் அதிகாரம் இருக்கிறது என்று அந்தச் சரித்திரக்காரர்கள் சொல்லுகிறார்கள்.

அப்படியானால், மக்களை ஆட்டிவைக்கும் அந்தச் சக்தி, சரித்திரத் தலைவர்களிடம் இல்லாமல் மக்களிடமே இருக்கு மானால், அந்தத் தலைவர்களுக்கு என்ன முக்கியத்துவம் இருக்கிறது?

இதற்கு அந்தச் சரித்திரக்காரர்கள் பின்வருமாறு பதில் சொல்லு கிறார்கள்: ''மக்களின் விருப்பத்தைத் தலைவர்கள் வெளிப்படுத்து கிறார்கள். மக்களின் நடவடிக்கையைத் தலைவர்களின் நடவடிக்கைப் பிரதிபலிக்கிறது.''

அப்படியானால், தலைவர்களின் நடவடிக்கைகள் எல்லாம் மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிக்கிறது அல்லது ஒரு பாகத்தை மட்டும் பிரதிபலிக்கிறதா? தலைவர்களின் நடவடிக்கைகள் முழுவதுமே மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிப்பதாகச் சில சரித்திரக்காரர்கள் சொல்லுவது உண்மையானால், ஒரு காத்தரைனுடையவோ, ஒரு நெப்போலியனுடையவோ

வாழ்க்கைச் சரித்திரத்தில் காணப்படும் ராஜசபையின் இழிவான செய்கைகள் எல்லாம் தேச மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாகச் சொல்ல வேண்டி இருக்கும். அப்படிச் சொல்லுவது அசட்டுத்தனமானது என்பது பகிரங்கமான விஷயம். தத்துவவாதிகள் என்று சொல்லிக்கொள்ளும் சில சரித்திரக்காரர்கள், சரித்திரத் தலைவரின் நடவடிக்கைகளில் ஒரு பகுதியே மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாகக் கூறுகிறார்கள். அப்படியானால், அந்தத் தலைவரின் எம்மாதிரியான நடவடிக்கை மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது என்பதை நாம் கண்டு பிடிப்பதற்கு, முதலாவதாக மக்களின் வாழ்க்கை என்பது என்ன என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

இந்தக் கஷ்டத்தைச் சமாளிப்பதற்காக அந்தச் சரித்திர கோஷ்டி ஒரு வழியைக் கண்டு பிடித்திருக்கிறது. அந்த வழி தெளிவற்ற, உணர்ந்து கொள்ள முடியாத மானசீகமானதாய் இருக்கிறது; எந்த விதமான சம்பவங்களையும் இதனுள் அடக்கும்படியானதாக அவ்வளவு தூரம் பொதுவானதாக இருக்கிறது. இந்த மானசீகத்தை அடைவதுதான் மனித குலத்தின் நோக்கம் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். சர்வ சாதாரணமாக எல்லா சரித்திரக்காரர்களாலும் பொதுப்படையாகக் கையாளப்படும் வார்த்தைகள் பின் வருபவைகளாகும்: சுதந்திரம், சமத்துவம், அறிவுத் தெளிவு, முன்னேற்றம், நாகரிகம், கலாச்சாரம். மனித குலத்தின் முன்னேற்ற லட்சியத்தைப் பொதுப்படையாக யூகித்துக்கொண்டு, இந்த சரித்திரக்காரர்கள் ஏராளமான ஞாபகச் சின்னங்கள் ஏற்படுத்தியுள்ள பிரபலஸ்தர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்ய ஆரம்பிக்கிறார்கள். அதாவது மன்னர்கள், மந்திரிகள், ஜெனரல்கள், ஆசிரியர்கள், சீர்திருத்தக்காரர்கள், போப்புகள், பத்திரிகைக்காரர்கள் ஆகியவர்களைப் பற்றித் தங்களுடைய அபிப்பிராயத்தில் அவர்கள் எவ்வளவு தூரம் அந்த மானசீக லட்சியத்தை அடைவதற்கு உதவியாகவோ அல்லது இடையூறாகவோ இருக்கிறார்கள் என்பதை ஆராய்ச்சி செய்ய ஆரம்பிக்கிறார்கள். ஆனால், மனித குலத்தின் லட்சியம் சுதந்திரம், சமத்துவம், நாகரிகம், அறிவுத் தெளிவு ஆகியவைகளில் அடங்கி இருக்கிறது என்பதை எந்த வழியிலும் நிரூபித்துக்காட்டவில்லை. மக்களுக்கும், மன்னர்களுக்கும், மனித குலத்திற்கு அறிவுத் தெளிவைக் காட்டியவர்களுக்கும் உள்ள உறவை தாங்களாக யூகித்துக்கொண்ட ஒரு அஸ்திவாரத்தின்மீது அமைக்கிறார்கள். மக்களின் கூட்டு விருப்பம் சில மனிதர்களுக்கு மாற்றிக் கொடுக்கப்படுகிறது என்பதே அந்த அஸ்திவாரம், ஆனால்

கோடிக்கணக்கானவர்கள் மற்றொரு நாட்டிற்குச் செல்லுவதும், வீடுகளைக் கொளுத்துவதும், விவசாய வேலைகளைக் கைவிடுவதும், ஒருவரை மற்றொருவர் கொல்லுவதும், அந்தச் சில மனிதர்களின் நடவடிக்கைகளில் காணப்படுதில்லை. அந்தச் சில மனிதர்கள் வீடுகளைக் கொளுத்துவதுமில்லை, விவசாயவேலைகளைச் செய்வதுமில்லை, தங்கள் சகோதர இனங்களைக் கொல்லுவதுமில்லை.

இந்த விஷயத்தை சரித்திரமானது ஒவ்வொரு படியிலும் நிரூபிக்கிறது, 18-வது நூற்றாண்டின் முடிவில் மேல்நாட்டு மக்களிடம் கொதிப்பு ஏற்பட்டு, அவர்கள் கிழக்கு நோக்கிச் சென்றார்கள். அவர்கள் அம்மாதிரி சென்றதை 14, 15, 16-வது லூயிக்கள், அவர்களுடைய காதலிகள், அவர்களுடைய மந்திரிகள் ஆகியவர்களின் நடவடிக்கைகளிலிருந்து விளக்கிக் காட்டினார்களா? நெப்போலியன், ரூஸோ, டிடெராட், பாவ்மார்ச்சாய்ஸ் இன்னும் மற்றவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரங்களிலிருந்து விளக்கிக்காட்டினார்களா?

காஜான், சைபீரியா, ஆகிய கிழக்குப் பிரதேசங்களுக்கு ருஷ்ய மக்கள் போனதற்கான காரணத்தை, பயங்கர ஜானுடைய சீரழிந்த ஒழுக்கத்தைப் பற்றிய விவரங்களிலோ, அல்லது அவர் குர்பிஸ்கியோடு நடத்திய கடிதப் போக்குவரத்துக்களிலோ காண முடிந்ததா?

சிலுவைப் போர்சமயத்தில் நடந்த மக்களின் நடமாட்டங்களைப் பற்றி காட்பிரேச்கள் லூயிக்கள் அவர்களுடைய காதலிகள் ஆகியவர்களின் நடவடிக்கைகளிலிருந்து அவை தோன்றின என்று சொல்ல முடியுமா? நம்மைப் பொறுத்த வயைில் தலைவர்கள் இல்லாமல் ஒரு நாடோடிக்கூட்டத்தோடு, துறவி பீட்டரோடு மக்கள் மேற்கிலிருந்து கிழக்கே சென்றது மனதிற்கு அடைபடாத விஷயமாய் இருக்கிறது. ஜெரூசலத்தை விடுவிக்க வேண்டும் என்பதே சிலுவைப் போரின் பகுத்தறிவுள்ள புனிதமான நோக்கம் என்று சரித்தித்தலைவர்கள் தெளிவாக வரையறுத்தவுடன், அந்தச் சிலுவைப் போர் இயக்கம் நின்று போனதானது இன்னும் அதிகமாக மனதிற்குப் புரியாத விஷயமாய் இருக்கிறது. போப்புகளும், ராஜாக்களும், வீரர்களும் அந்தப் பரிசுத்த நகரத்தை விடுதலை செய்யவேண்டும் என்று மக்களைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தார்கள். என்றாலும், மக்கள் போகவில்லை. ஏனெனில், காரணம் தெரியாத ஒரு கொள்கைக்காக அவர்களைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்த அந்த வேகம் இப்பொழுது காணப்படவில்லை. காட்பிரேக்களுடையவும், மின்னேசிங்கர்

களுடையவும் சரித்திரங்கள் மக்களின் சரித்திரங்களாக எடுத்துக்கொள்ளப்பட முடியாது. ஆகவே, காட்பிரேக்கள், மின்னேசிங்கர்கள் ஆகியவர்களின் சரித்திரங்கள், காட்பிரேக்கள், மின்னேசிங்கர்களின் சரித்திரங்களாகவே இருந்தன. மக்களின் வாழ்க்கைச் சரித்திரமும், அவர்களின் உணர்ச்சிகளும் வெளியே தெரியாமலேயே இருந்து விட்டன.

ஆசிரியர்கள், சீர்திருத்தக்காரர்கள் ஆகியவர்களின் சரித்திரங் களும், மக்களின் சரித்திரங்களை நமக்கு வெளிப்படுத்தவில்லை.

ஒரு எழுத்தாளர் அல்லது ஒரு சீர்திருத்தக்காரரின் உந்தும் உணர்ச்சிகளையும், வாழ்க்கை நிலைமைகளையும், சிந்தனை களையும் கலாச்சார சரித்திரம் நமக்கு எடுத்துக் கூறுகிறது. லூதர் என்பவர் மிகுந்த கோபக்காரர் என்றும், இன்னின்ன விஷயங்களை சொன்னார் என்றும் நாம் அறிந்துகொள்ளுகிறோம் ரூஸோ என்பவர் சந்தேகக்காரர் என்றும், இன்னின்ன புத்தகங்களை எழுதி இருக்கிறார் என்றும் அறிந்து கொள்ளுகிறோம். ஆனால், 16-வது நூற்றாண்டல் ஏற்பட்ட மதச் சீர்திருத்த இயக்கத்திற்குப் பின்னால் மக்கள் ஒருவரை ஒருவர் ஏன் படுகொலை செய்தார்கள் என்பதைப் பற்றியோ, பிரஞ்ச புரட்சி காலத்தில் ஏன் ஒருவரை ஒருவர் தலையை வாங்கினார்கள் என்பதைப் பற்றியோ நாம் அறிந்துகொள்ள முடியவில்லை.

நவீன சரித்திரக்காரர்கள் செய்வதைப்போல, நாமும் இந்த இரண்டு விதமான சரித்திரங்களை ஒன்று சேர்ப்போமானால், மன்னர்களுடையவும் எழுத்தாளர்களுடையவும் சரித்திரங்களை நாம் பெறமுடியும், ஆனால் மக்களின் வாழ்க்கைச் சரித்திரத்தை நாம் பெறமுடியாது.

## 5

தேசமக்களின் வாழ்க்கையைச் சில மனிதர்களின் வாழ்க்கையில் காணமுடியாது. ஏனெனில், இவர்கள் இருவருக்கும் உள்ள தொடர்புகளைக் கண்டுபிடிக்க முடியவில்லை, மக்களின் கூட்டு விருப்பத்தைச் சில சரித்திர பிரபலஸ்தர்களுக்கு மாற்றிக் கொடுப்பதில்தான் இந்தத் தொடர்பு இருப்பதாகச் சொல்லப்படும் கொள்கை வெறும் கற்பனையாகும். சரித்திரத்தால் உறுதி செய்யப்படாத கற்பனை.

சரித்திர பிரபலஸ்தர்களுக்கு மக்களின் கூட்டு விருப்பத்தை மாற்றிக் கொடுப்பதாகச் சொல்லப்படும் கொள்கை ஒருவேளை நீதி சாஸ்திர உலகத்தில் தெளிவாய்க் காணப்படலாம், அதற்கு அது

அவசியமாயும் இருக்கலாம். ஆனால், சரித்திர சம்பந்தமாக அந்தக் கொள்கையை உபயோகப்படுத்தும் போது, அதாவது புரட்சிகள், பிற நாடுகளைப் பிடித்தல், உள்நாட்டுப் போர்கள் ஆகியவை நடக்கும்போது-அதாவது சரித்திரம் ஆரம்பமாகும்போது-அந்தக் கொள்கையால் எதையும் தெரிந்துகொள்ள முடியாது.

மக்களின் விருப்பத்தை மாற்றிக்கொடுக்கும் செய்கை எப்பொழுதும் கடந்ததில்லையாகையால் அதை நிரூபிக்க முடியாது. ஆகவே, இந்தக் கொள்கை மறுக்க முடியாத ஒன்றாகக் காணப்படுகிறது.

என்ன நடந்தாலும் சரி, காரியங்களுக்கு யார் தலைமை வகித்தாலும் சரி, மக்களின் கூட்டு விருப்பத்தை அந்த நபருக்கு மாற்றிக் கொடுத்ததால்தான் அந்த நபர் தலைமை வகிக்கிறார் என்று இந்தக் கொள்கை எப்பொழுதுமே சொல்லலாம்.

சரித்திரக் கேள்விகளுக்கு இந்தக் கொள்கை கொடுக்கும் பதில்களானது ஒரு மாட்டு மந்தையின் நடமாட்டத்தைக் கவனித்துக் கொண்டருக்கும் ஒரு நபரின் பதில்களைப் போலவே இருக்கிறது. அந்த நபர் அந்த நிலத்தில் வெவ்வேறு இடங்களில் உள்ள மேய்ச்சல் தன்மையைப் பற்றி எவ்வித கவனமும் செலுத்தாமல், மேய்ப்பவன் அந்த மந்தையை ஓட்டுவதைப் பற்றியும் கவனம் செலுத்தாமல், மந்தையின் நடமாட்டத்தைப் பற்றி மட்டும் கவனித்துக் கொண்டிருக்கிறான். இந்த மந்தையில் தலைமையில் நிற்கும் மாடுதான் அந்த மந்தையை நடத்திச் செல்லுவதாக அவன் கூறுகிறான்.

''முன்னால் நிற்கும் மாடு நடத்திச் செல்லுவதால்தான் அந்த வழியில் மந்தை போய்க்கொண்டிருக்கிறது. மற்ற மாடுகளின் கூட்டு விருப்பத்தை அந்தத் தலைமை வகிக்கும் மாட்டுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.'' முதலாவது கோஷ்டியைச் சேர்ந்த சரித்திரக்காரர்கள் சொல்வது இம்மாதிரிதான் இருக்கிறது - அதாவது, நிபந்தனையில்லாமல் மக்களின் விருப்பத்தை மாற்றிக் கொடுப்பதாக நினைக்கிறவாகள்.

''மந்தைக்கு முன்னால் போகிற நடத்திச் செல்லும் மாடுகள் மாறும்படி நேரிட்டால், மற்ற மாடுகளின் கூட்டு விருப்பத்தை ஒரு தலைமை மாட்டிடமிருந்து மற்றொரு மாட்டுக்கு மாற்றிக் கொடுப்பதால்தான் அது நேரிடுகிறது. பூரா மந்தையும் எந்த் திசையில் போகவேண்டும் என்று நினைத்துப்போகிறதோ, அச்சமயம் அதற்கு தலைமையில் நிற்கும் மாட்டுக்கு அந்தக் கூட்டு விருப்பம் மாற்றப்படுகிறது.'' வெளிப்படையாகத் தெரிந்த சில

நிபந்தனைகளின் மீதுதான் மக்களின் கூட்டு விருப்பம் மன்னர்களுக்கு மாற்றிக் கொடுக்கப்படுவதாகச் சொல்லும் சரித்திரக்காரர்களின் பேச்சு இம்மாதிரி இருக்கிறது. (இம்மாதிரி வழியில் கவனிப்பவர்களுக்கு அடிக்கடி ஒன்று நேரிடுகிறது. மக்களின் போக்கு மாறுபடும்போது, மக்களுக்கு முன்பாக நிற்காமல் பக்கவாட்டிலோ அல்லது பின்பாகத்திலோ நிற்கிறவர்களைத் தலைவர்கள் என்று கருதும்படி அவர்களுக்குத் தோன்றுகிறது.

''மாடுகளுக்கு முன்பாக தலைமையில் நிற்கும் மாடுகள் அடிக்கடி மாறிக்கொண்டே இருக்குமானால், அந்த மந்தையின் போக்கு அடிக்கடி மாறிக் கொண்டிருக்குமானால், இவையெல்லாம் ஒரு காரணத்தினால்தான் ஏற்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட வழியில் போவதற்காக அந்த மாடுகள் நமது கவனத்தைக் கவர்ந்த முன்னால் நிற்கும் மாடுகளுக்கு தங்களுடைய விருப்பத்தை மாற்றிக் கொடுத்துக்கொண்டிருக்கின்றன. அந்த மந்தையில் நடமாட்டத்தைப் பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டுமானால், அந்த மந்தையைச் சுற்றியுள்ள எல்லா திசைகளிலும் இருக்கும் முக்கியமான மாடுகளின் நடமாட்டங்களை நாம் கவனிக்க வேண்டும்.'' மன்னர்களிலிருந்து பத்திரிகைக்காரர்கள் வரையில் எல்லா சரித்திரப் பிரபலஸ்தர்களும் அவர்களுடைய யுகத்தைப் பிரதிபலிப்பதாகக் கூறும் மூன்றாவது கோஷ்டியைச் சேர்ந்த சரித்திரக்காரர்கள் சொல்லுவது இம்மாதிரி இருக்கிறது.

மக்களின் விருப்பத்தை சரித்திரப் பிரபலஸ்தர்களுக்கு மாற்றிக் கொடுப்பதாகச் சொல்லும் இந்தக் கொள்கை ஒரு வெறும் விரிவுரையாகும். அதாவது அந்தக் கேள்வியை வேறு பல வார்த்தைகளில் கூறுவதாகும்.

சரித்திரச் சம்பவங்களை எது உண்டுபண்ணுகிறது ? சக்தி. சக்தி என்றால் என்ன ? மக்களின் கூட்டு விருப்பத்தை ஒரு மனிதருக்கு மாற்றிக் கொடுப்பதுதான் சக்தி. மக்களின் விருப்பத்தை எந்த நிலைமையில் ஒரு மனிதருக்கு மாற்றிக் கொடுக்கிறார்கள் ? பூரா மக்களுடைய விருப்பத்தையும் அந்த ஒரு நபர் பிரதிபலிக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலேயே மாற்றிக் கொடுக்கிறார்கள். அதாவது சக்தி என்பது சக்தியே. வேறு வார்த்தைகளில் சொல்லவேண்டுமானால், சக்தி என்ற வார்த்தையின் அர்த்தத்தை நம்மால் அறிய முடியவில்லை என்றுதான் சொல்லவேண்டும்.

மனித அறிவு உலகம் என்பது மானசீகமான வாதத்திற்குள் அடங்கியது என்றால், நீதி சாஸ்திர முறைப்படி 'சக்தி' என்ற

வார்த்தைக்கு கொடுக்கப்பட்ட வியாக்கியானங்களைப் பற்றி நாம் குணதோஷம் கூறிய பின்பு, அதைப்பற்றி மனிதகுலம் ஒரு முடிவுக்குத்தான் வரமுடியும். அதாவது, 'சக்தி' என்பது வெறும் வார்த்தையே ஒழிய, உண்மையில் இருக்கவில்லை என்ற முடிவுக்குத்தான் வர முடியும். மானசீக வாதங்களைத் தவிர மனிதனுக்கு அற்புதங்களைப் பற்றிய அறிவோடு அனுபவம் என்பது ஒன்று இருக்கிறது. அதைக்கொண்டு தனது சிந்தனைகளை அவன் சோதித்துக் கொள்ளுகிறான். அந்த அனுபவம் என்பது நமக்கு ஒன்றைக் கூறுகிறது. அதாவது சக்தி என்பது வெறும் வார்த்தையல்ல, ஆனால், உண்மையில் நிலைத்திருக்கும் ஒரு அற்புதமாகும்.

சக்தி என்ற ஒரு உருவகம் இல்லாமல், மக்களின் கூட்டு நடவடிக்கையைப் பற்றி என்னதான் கூறினாலும், பிரயோஜனம் இல்லை என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அந்த சக்தி என்பது ஒன்று உண்டு என்பதை பழங்கால சரித்திரமும் தற்கால சம்பவங்களும் நிரூபித்து வருகின்றன.

ஒரு சம்பவம் நடைபெறும்போது ஒரு மனிதரோ, அல்லது பல மனிதர்களோ தோன்றுகிறார்கள், அவர்களுடைய விருப்பத்தினால்தான் அந்தச் சம்பவம் நடைபெறுவதாகக் காணப்படுகிறது. மூன்றாவது நெப்போலியன் ஒரு உத்தரவைப் பிறப்பிக்கிறார் , உடனே பிரஞ்சுக்காரர்கள் மெக்ஸிகோவுக்குப் போகிறார்கள், பிரஷ்ய மன்னரும் பிஸ்மார்க்கும் உத்தரவுகள் பிறப்பிக்கிறார்கள், உடனே ஒரு ராணுவம் போகிமியாவுக்குள் நுழைகிறது. முதலாவது நெப்போலியன் ஒரு உத்தரவைப் பிறப்பித்ததும், ருஷ்யாவுக்குள் ஒரு ராணுவம் நுழைகிறது. முதலாவது அலேக்ஸாண்டர் ஒரு உத்தரவைக் கொடுத்ததும், பிரஞ்சுக்காரர்கள் பூர்பான்களுக்கு அடங்கி கிடக்கிறார்கள், எம்மாதிரியான சம்பவம் நடைபெற்றாலும் அது எப்பொழுதுமே உத்தரவுகளைப் பிறப்பித்த ஒரு மனிதருடையவோ, அல்லது பல மனிதர்களுடையவோ விருப்பத்தோடு சம்பந்தமுள்ளதாய் இருக்கிறது என்பதை அனுபவம் நமக்குக் காட்டுகிறது.

மனிதகுல விவகாரங்களில் தெய்வம் தலையிடுவதாக பழங்கால நம்பிக்கை இருந்து வந்தது. அதை அனுசரித்து அதிகாரம் பெற்றுள்ள ஒருவருடைய விருப்பத்தின் பிரதிபலிப்பில் சம்பவங்களுக்கான காரணத்தைக் காண்பதற்குச் சரித்திரக்காரர்கள் விரும்பினார்கள். ஆனால், அந்த யூகம் காரணத்தினாலோ, அனுபவத்தினாலோ உறுதி செய்யப்படவில்லை.

ஒரு பக்கத்தில், தனிப்பட்ட ஒருவரின் விருப்பத்தினுடைய பிரதிபலிப்பானது - அவருடைய வார்த்தைகள் - ஒரு சம்பவத்தில் (ஒரு போரிலோ, அல்லது ஒரு புரட்சியிலோ) நடக்கும் பொதுவான நடவடிக்கையில் ஒரு பாகம்தான் என்பதை நமது சிந்தனை காட்டுகிறது. ஆகவே, நமது புத்திக்கு எட்டாத மனித சக்தியை நீறிய ஒரு அற்புதத்தை நாம் ஒப்புக்கொண்டாலொழிய, அந்த மனிதருடைய அந்த வார்த்தைகள் கோடிக்கணக்கான மக்களின் போக்குக்குக் காரணமாய் இருக்கமுடியும் என்று ஒருவரும் ஒப்புக்கொள்ளமுடியாது. மற்றொரு பக்கத்தில், அந்த வார்த்தைகள்தான் அந்த சம்பவங்களுக்குக் காரணமாய் இருந்தன என்பதை நாம் ஒப்புக்கொண்டாலும்கூட சரித்திரப் பிரபலஸ்தர்களின் வார்த்தைகள் பல சந்தர்ப்பங்களில் எந்த விதமான பலனையும் உண்டுபண்ண முடியவில்லை என்பதைச் சரித்திரம் காட்டுகிறது. அதாவது, அந்தச் சரித்திரப் பிரசித்திப்பெற்றவர்களின் ஆக்ஞைகள் பல தடவைகளில் நிறைவேற்றப்படுவதில்லை. சில சமயங்களில் அவர்களுடைய ஆக்ஞைகளுக்கு நேர்விரோதமாகக் காரியங்கள் நடக்கின்றன. மனிதகுல விவகாரங்களில் தெய்வம் தலையிட்டு நடத்திவைக்கிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ளாத வரையில் சம்பவங்களுக்குக் காரணங்கள் 'சக்தி'தான் என்பதை நாம் சொல்ல முடியாது.

அனுபவத்திலிருந்து பார்ப்போமானால், ஒருவர் வெளியிடும் விருப்பத்திற்கும் மற்றவர்கள் அதை நிறைவேற்றி வைப்பதற்கும் இடையிலுள்ள உறவுதான் 'சக்தி'.

அந்த உறவை நாம் விளக்குவதற்கு முன்பாக, அந்த விருப்பத்தைப் பிரதிபலிக்கும் ஒரு உருவகத்தை நாம் ஸ்தாபிக்கவேண்டும். அந்த விருப்பத்தை மனிதனின் விருப்பமாகக் காட்டவேண்டுமேயொழிய, தெய்வத்தின் விருப்பமாகக் காட்டக்கூடாது.

புராதன சரித்திரம் சொல்லுகிறபடி, தெய்வம் ஒரு உத்தரவைப் பிறப்பிக்குமானால், தனது விருப்பத்தை அதன்மூலம் பிரதிபலிக்குமானால், அந்த விருப்பத்தின் பிரதிபலிப்பு காலத்திற்குப் புறம்பானதாய் இருக்கும், எதனாலும் தோன்றியதாய் அது இருக்காது, ஏனெனில், ஒரு சம்பவம் தெய்வத்தை அடக்கியாள முடியாது. ஆனால், மனிதர்களின் விருப்பத்தைப் பிரதிபலிப்பதான உத்தரவுகளைப் பற்றி நாம் பேசுவோமானால், அவையெல்லாம் காலத்திற்கு உட்பட்டதாகவும், ஒன்றுக்கொன்று தொடர்புள்ளதாகவுமே இருக்கின்றன. அதாவது, சம்பவங்களோடு உத்தரவு

களுக்குள் தொடர்பை விளக்கவேண்டுமானால், இரண்டு விஷயங்களை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். (1) சம்பவங்களும் உத்தரவுகளைக் கொடுப்பவரும், காலத்தைப் பொறுத்தவரையில், என்ன நடந்தாலும், இடைவிடாத சலனத் தொடர்பில் இருக்கிறார்கள், (2) உத்தரவுகள் கொடுப்பவருக்கும் அவற்றை நிறைவேற்றுகிறவர்களுக்கும் இடையில் தவிர்க்கமுடியாத உறவு இருக்கிறது.

## 6

காலத்திற்கு உட்பட்டதாய் இல்லாத தெய்வத்தின் விருப்பம் ஒன்றுதான், பல வருஷங்களாக, பல நூற்றாண்டுகளாக நடந்துவரும் சம்பவ வரிசைகளுக்குத் தொடர்புள்ளதாக இருக்கமுடியும், ஒவ்வொன்றிலிருந்தும் சுதந்திரமாய் இருக்கும் தெய்வம் ஒன்றுதான், தனி விருப்பப்படி மனித குலத்தின் போக்கை நிர்ணயிக்கமுடியும், காலத்திற்கு உட்பட்ட மனிதன் அந்தந்த சமயத்தில் நடக்கிற சம்பவங்களில் கலந்துகொள்ளுகிறான்.

காலத்தைப் பற்றி குறிப்பிடுகிற முதலாவது நிபந்தனையை விலக்கிவிட்டு நாம் சொல்லக்கூடியது இதுதான். அதாவது, முன்னதாக ஒரு உத்தரவு இல்லாமல், பின்னதாக ஒரு உத்தரவை நிறைவேற்றி வைக்கமுடியாது. முன் உத்தரவு இருந்தால்தான், பின் உத்தரவை நிறைவேற்றமுடியும்.

எந்த உத்தரவும் திடீரென்று தோன்றியதாக எப்பொழுதும் காணப்படுவதில்லை, அல்லது அந்த உத்தரவு ஒரு சம்பவ வரிசைகள் முழுவதையும் குறிப்பிடுவதாகவும் இல்லை. ஒவ்வொரு உத்தரவும் மற்றொரு உத்தரவைத் தொடர்ந்து வருகிறது. சம்பவ வரிசைகள் முழுவதையும் அது குறிப்பிடுவதில்லை. ஒரு சம்பவத்தின் ஒரு வினாடியைத்தான் அது குறிப்பிடுகிறது.

உதாரணமாக, யுத்தத்திற்குப் போகும்படி நெப்போலியன் தமது ராணுவங்களுக்கு உத்தரவிட்டதாக நாம் சொல்லுகிறோம், அப்படிச் சொல்லும்போது, ஒன்றை ஒன்று சார்ந்து நிற்கும் உத்தரவு வரிசைகளின் முழுவதையுமே ஒன்றாக இணைத்து நாம் கூறுகிறோம். நெப்போலியன் ருஷ்யாமீது படையெடுக்கும்படி உத்தரவு பிறப்பிக்க முடியாது, அம்மாதிரி அவர் செய்ததும் இல்லை. வியன்னாவுக்கும் பெர்லினுக்கும் பீட்டர்ஸ்பர்க்கிற்கும் இன்னின்ன மாதிரி கடிதங்கள் எழுதவேண்டும் என்று அவர் இன்று உத்தரவு இடுகிறார், இன்னின்ன மாதிரி உத்தரவுகளை அவர் ராணுவத்திற்கும் கடற்படைக்கும் சப்ளை இலாகாவுக்கும் நாளை

உத்தரவுகள் பிறப்பிக்கிறார். இம்மாதிரி அவர் செய்துகொண்டே போகிறார். கோடிக்கணக்கான இந்த உத்தரவுகள் ஒரு முழு வரிசையாக அமைகின்றன. சம்பவங்களின் வரிசைகளுக்கு ஒத்ததாக அவை அமைந்து பிரஞ்சு ராணுவங்களை ருஷ்யாவுக்குள் கொண்டுவந்து சேர்த்தன.

நெப்போலியன் தமது ஆட்சிகாலம் முழுவதிலும் இங்கிலாந்துமீது படையெடுக்கவேண்டும் என்பதுபற்றி பல உத்தரவுகளைப் பிறப்பித்தார். அதற்காகச் செலவிட்ட நேரத்தையும் செய்த முயற்சிகளையும்போல வேறு எதிலும் அவர் நடந்துகொள்ளவில்லை. என்றாலும், அவரது ஆட்சிகாலம் முழுவதிலும் அவரது அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு தடவை கூட முயற்சி செய்யவில்லை. ஆனால், ருஷ்யாமீது படையெடுத்துப்போனார். அந்த ருஷ்யாவுடன் நேசபாவமாய் இருப்பது விரும்பத் தக்கது என்று அவர் கருதினார், அந்த நினைப்பை பல தடவைகளில் அவர் வெளியிட்டருக்கிறார், அப்படி இருந்தும் ருஷ்யாமீது அவர் படையெடுக்க நேரிட்டது. ஏனென்றால், அவருடைய உத்தரவுகள் சம்பவங்களின் போக்கிற்கு ஒத்ததாய் இல்லாமல் இருந்ததால், இங்கிலாந்துமீது அவர் படையெடுக்கவில்லை. ருஷ்யா விஷயத்தில் அவை ஒத்ததாய் இருந்தபடியால் ருஷ்யாமீது படையெடுத்தார்.

ஒரு உத்தரவு நிச்சயமாக நிறைவேற்றப்படவேண்டுமானால், எந்த உத்தரவை நிறைவேற்ற முடியுமோ, அந்த உத்தரவையே பிறப்பிக்கவேண்டும். ஆனால், எந்த உத்தரவை நிறைவேற்ற முடியும், எதை நிறைவேற்ற முடியாது என்பதை அறிந்துகொள்ளுவது முடியாத காரியம். கோடிக்கணக்கானவர்கள் கலந்துகொண்ட நெப்போலியனுடைய ருஷ்ய படையெடுப்பில் மட்டுமல்ல, ஒரு சாதாரண சம்பவத்தில்கூட அதை கண்டுகொள்ள முடியாது. ஏனெனில், அந்த உத்தரவை நிறைவேற்ற முடியாமல் கோடிக்கணக்கான இடையூறுகள் நேரிடலாம். நிறைவேற்றப்படும் ஒவ்வொரு உத்தரவும் நிறைவேற்றப்படாமல் இருக்கும் ஏராளமான உத்தரவுகளில் ஒன்றாகவே அது இருக்கும். சம்பவங்களின் போக்கிற்கு பொருத்தம் இல்லாத அசாத்தியமான உத்தரவுகள் எல்லாம் நிறைவேற்றப்படாமலே இருக்கும். நிறைவேற்றுவதற்குச் சாத்தியமான உத்தரவுகளை சம்பவங்களின் வரிசைக்கு ஒத்ததான மற்ற உத்தரவு வரிசைகளோடு கலந்து நிற்கும். அவைதான் நிறைவேற்றப்படும்.

ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டதால்தான் ஒரு சம்பவம் நடைபெறுவதாக நாம் தவறாக நினைத்துக்கொண்டிருக்கிறோம் ஒரு

சம்பவம் நடைபெறும்போது அதற்கு ஒத்ததான உத்தரவுகள் நிறைவேற்றப்படுகின்றன. ஆயிரக்கணக்கான மற்ற உத்தரவுகள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. அவைகளை நிறைவேற்ற முடியாததால்தான் அவை நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன என்பதை நாம் மறந்துவிடுகிறோம். இதனால்தான் நாம் தவறாக நினைக்க நேரிடுகிறது. இதைத் தவிர, இந்தத் தவறுக்கு மூலகாரணம் வேறொன்று இருக்கிறது. சரித்திர விளக்கங்களில், கணக்கற்ற ஒன்றுக்கொன்று முரணான சம்பவங்களும், சில்லறை சம்பவங்களும், ருஷ்யாவுக்குள் பிரஞ்சு ராணுவங்கள் நுழைவதற்காக ஏற்பட்ட சம்பவங்களைப் போன்ற காரணங்களும், ஒரே சம்பவமாகக் கருதி பொதுப்படையாகக் கூறப்படுகின்றன. சம்பவ வரிசைகளால் ஏற்பட்ட பலனையும் பொதுப்படையாக ஒரே சம்பவமாகக் கூறுகிறார்கள். இம்மாதிரி உத்தரவு வரிசைகள் முழுவதையுமே பொதுப்படையாக்கி, ஒரு தனி விருப்பத்தைப் பிரதிபலிப்பதாகச் சொல்லுகிறார்கள்.

ருஷ்யாமீது படையெடுக்கவேண்டும் என்று நெப்போலியன் விரும்பியதாகவும், அம்மாதிரியே அவர் படையெடுத்ததாகவும் நாம் சொல்லிக்கொள்ளுகிறோம். ஆனால், உண்மையில் நெப்போலியனுடைய நடவடிக்கைகள் எதிலும் அம்மாதிரியான ஆசையை நாம் எப்பொழுதும் காணமுடிவதில்லை. ஆனால், அவருடைய விருப்பங்களும் அல்லது உத்தரவுகளும் பற்பல விதமாக நிச்சயமற்றதாகக் காணப்படுகின்றன. நிறைவேற்றப்படாத நெப்போலியனுடைய உத்தரவு வரிசைகள் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றில் ஒரு வரிசைதான் 1812-ஆம் வருஷத்திய படையெடுப்பு நிறைவேற்றியது. நிறைவேற்றப்படாத உத்தரவுகளுக்கும் இந்த உத்தரவுகளுக்கு எந்தவிதத்திலும் வித்தியாசம் இருக்கிறது என்பது அல்ல, ஆனால், அவை சம்பவங்களின் போக்குக்கு ஒத்ததாய் இருந்தபடியால் பிரஞ்சு ராணுவத்தை ருஷ்யாவுக்குள் போகும்படிச் செய்தன. ஒரு ஸ்டென்ஸில் மூலமாக உருவத்தைத் தீட்டும்போது ஒரு குறிப்பிட்ட பக்கத்தின் வழியாக மையைத் தீட்டியதால்தான் அந்த உருவம் ஏற்பட்டது என்று சொல்ல முடியாது. ஸ்டென்ஸில் உள்ள உருவத்தின் மீது எல்லா பக்கங்களிலுமே மையைப் பூசுவதன் மூலமாகத்தான் அந்த உருவம் உண்டாகிறது.

ஆகவே சம்பவங்களுக்கும் உத்தரவுகளுக்கும் இடையில் உள்ள கால உறவை நாம் கவனிக்கும்போது, உத்தரவு என்பது எப்பொழுதுமே ஒரு சம்பவத்திற்குக் காரணமாக இருக்க முடியாது.

என்பதைக் காண்கிறோம், ஆனால், இரண்டிற்கும் இடையில் ஒரு குறிப்பிட்ட நிச்சயமான சார்பு இருக்கிறது.

இந்தச் சார்பு என்பது என்ன என்பதை நாம் அறியவேண்டுமானால், நாம் முன்னால் (5-வது அத்தியாயத்தில்) சொல்லிய இரண்டாவது விஷயத்தை இங்கே திருப்பிச்சொல்ல வேண்டியது அவசியமாய் இருக்கிறது. அதாவது ஒவ்வொரு உத்தரவும் தெய்வத்திடமிருந்து வருவதில்லை. மனிதனிடமிருந்தே வருகிறது-அதாவது, உத்தரவு கொடுக்கிற அந்த மனிதனும் சம்பவத்தில் கலந்துகொள்ளுகிறான்.

உத்தரவு கொடுப்பவனுக்கும், உத்தரவு கொடுக்கப்படுகிறவர்களுக்கும் மத்தியில் உள்ள உறவுதான் 'சக்தி' என்று சொல்லப்படுகிறது. இந்த உறவு பின்கண்ட விதமாக அமைகிறது.

மக்கள் ஒரு காரியத்தைச் செய்வதற்கு சில இணைப்புகளில் கலந்துகொள்ளுகிறார்கள். அந்தக் காரியத்தின் நோக்கங்களில் அபிப்பிராய பேதம் இருந்த போதிலும், அந்தக் காரியத்தில் சம்பந்தப்படுகிறவர்ளுக்குள் இருக்கிற உறவானது ஒரே மாதிரியாக இருக்கிறது.

இந்த இணைப்பிகளில் சேர்ந்து நிற்கும் மனிதர்கள் அதே மாதிரியான உறவை ஒருவருக்கொருவர் மேற்கொள்ளுகிறார்கள். எண்ணிக்கை அதிகமாகும்போது நேரடியாக அவர்கள் கலந்துகொள்ளும் பங்கு அதிகமாகவும், எண்ணிக்கை குறையும்போது அது குறைவாகவும், அவர்கள் இணைந்துள்ள கூட்டு நடவடிக்கையில் காணப்படும்.

கூட்டு நடவடிக்கைகளுக்காக மனிதர்கள் ஒன்று சேரும் இணைப்புகளில் ஒரு தெளிவான எடுத்துக்காட்டான உதாரணமாக இருப்பது ராணுவமேயாகும்.

ஒவ்வொரு ராணுவத்திலும் கீழ்த்தர சேவையில் இருப்பவர்களே அதிக எண்ணிக்கை உடையவர்களாய் இருப்பார்கள். அவர்களைவிட எண்ணிக்கையில் குறைந்தவர்களாகக் கீழ்த்தர சிப்பந்திகள் இருப்பார்கள். அவர்களையும்விட குறைவாக உயர்தர அதிகாரிகள் இருப்பார்கள் இதேமாதிரியாக உயர்ந்து, கடைசியில் ஒரு மனிதரிடம் அந்த ராணுவத்தின் சேனாதிபத்தியம் வந்து நிற்கும்.

ராணுவஸ்தாபனத்தை ஒரு ஸ்தூபிக்கு இணையாக ஒப்பிடுவது முற்றிலும் சரியானது. அந்த ஸ்தூபியின் அடித்தளம் பெரிதாய் இருக்கும். அதே மாதிரிதான் ராணுவத்தில் அடிப்படையில் உள்ள சாதாரண சிப்பாய்கள் பெரும் அளவில் காணப்படுகிறார்கள். அந்த ஸ்தூபிமேலே உயர உயர சிறிதாகிக்கொண்டே போகும். அதே

மாதிரி அதிகாரிகளும் பதவியில் உயர உயர எண்ணிக்கையில் குறைந்திருப்பார்கள். அந்த ஸ்தூபியின் உச்சி கூர்மையாய் இருக்கும். அந்த இடத்தில்தான் சேனாதிபதி என்பவர் ஒருவராய் இருப்பார்.

ஸ்தூபியின் அடிப்படையாக ராணுவத்தைச் சேர்ந்த சிப்பாய்கள் பெரும் அளவில் இருக்கிறார்கள். அந்த சிப்பாய்தான் குத்துவது, வெட்டுவது கொளுத்துவது ஆகிய காரியங்களைச் செய்கிறான். இவைகளைச் செய்வதற்கு தனக்கு மேலுள்ளவர்களிடமிருந்து உத்தரவுகளைப் பெறுகிறான்; அவன் தானாக எந்த உத்தரவையும் பிறப்பிப்பதில்லை. கீழ்த்தர சிப்பந்திகள் அம்மாதிரி செய்கைகளைச் சிப்பாய்களைவிடக் குறைவாகவே செய்வார்கள். அவர்கள் உத்தரவுகள் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். மேல் அதிகாரி அம்மாதிரி செய்கைகளைத் தாமே செய்வது இன்னும் குறைவாய்த்தான் இருக்கும். ஆனால் அடிக்கடி உத்தரவுகளை மட்டும் கொடுத்துக்கொண்டிருப்பார்கள். ஆனால், ஒரு ஜெனரல் என்பவர் துருப்புகளை நடத்தி, துருப்புகள் செய்யவேண்டிய வேலைகளைச் சுட்டிக்காட்டுவார். அவர் தாமாக ஆயுதத்தை உபயோகிப்பது என்பது இருக்கவே இருக்காது. ஒரு சேனாதிபதி என்பவர், நடவடிக்கைகளில் நேரடியாகக் கலந்துகொள்ளுவதே இல்லை; துருப்புகளின் நடமாட்டங்களைப் பற்றி பொதுவான உத்தரவுகளைக் கொடுத்துக்கொண்டிருப்பார். விவசாயத்திலோ, வர்த்தகத்திலோ, வேறு நிர்வாகங்களிலோ கூடி வேலை செய்யும் மக்களின் இணைப்புகளில் உள்ளவர்களில் ஒருவருக்கொருவர் இம்மாதிரியான உறவு கொண்டிருப்பதைக் காணலாம்.

ஆகவே, ராணுவத்திலோ, வேறு ஸ்தாபனங்களிலோ இருப்பவர்களை நாம் பார்த்தால், கீழிருப்பவர்களிலிருந்து மேலே இருப்பவர்கள் வரையில் கூட்டாகக் காரியம் செய்வதற்கு ஒரு விதி இருந்துவருவதை நாம் காணலாம். அதாவது, நேரடியாக எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகப் பங்கு கொள்ளுகிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு குறைவாக அவர்கள் உத்தரவு கொடுப்பதும், எண்ணிக்கையில் அவர்கள் அதிகமாய் இருப்பதும் நாம் காணக்கூடிய விஷயம்; நேரடி நடவடிக்கைகளில் எவ்வளவுக்கு எவ்வளவு குறைவாகப் பங்குகொள்ளுகிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாக அவர்கள் உத்தரவுகள் பிறப்பிப்பதையும், எண்ணிக்கையில் அவர்கள் குறைவாய் இருப்பதையும் நாம் காணமுடியும். இம்மாதிரியாக கீழே இருந்து மேலே உச்சியிலுள்ள மனிதர் வரையில் காரியங்களைச் செய்துவருகிறார்கள். உச்சியில் இருப்பவர் அந்தக் காரியத்தில் நேரடியாகப் பங்கு பெறுவது

குறைந்தபட்சமாய் இருக்கும். அவருடைய நடவடிக்கை முழுவதையுமே உத்தரவுகள் பிறப்பிப்பதிலேயே செய்து வருவார்.

உத்தரவுகள் பிறப்பிப்பவர்களுக்கும், உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகிறவர்களுக்கும் இடையிலுள்ள இந்த உறவுதான் நாம் 'சக்தி' என்ற அழைக்கப்படுவதின் உயிராய் இருக்கிறது.

எல்லா சம்பவங்களும் நடைபெறுகிற காலத்தின் நிலைமையை நாம் ஸ்தாபித்த பின்பு, நாம் ஒன்றைக் காணுகிறோம். அதாவது, சம்பவங்களின் உரிமைகளுக்கு ஒத்ததாக உறவு கொண்டு இருக்கும்போதுதான் ஒரு உத்தரவு நிறைவேற்றப்படுகிறது. உத்தரவு கொடுப்பவருக்கும், அதை நிறைவேற்றுகிறவர்களுக்கும் இடையிலுள்ள அவசியமான உறவை நாம் ஸ்தாபித்த பின்பு நாம் ஒன்றைக் காணுகிறோம். அதாவது, அந்த விஷயத்தின் தன்மையானது உத்தரவு கொடுக்கிறவர்கள் அந்தச் சம்பவத்தில் குறைவாகவே கலந்துகொள்ளும்படி நேரிடுகிறது; அவர்களுடைய நடவடிக்கைகள் எல்லாம் உத்தரவுகள் பிறப்பிப்பதிலேயே செலுத்தப்படுகின்றன.

## 7

ஒரு சம்பவம் நடக்கும்போது அதைப் பற்றி மக்கள் தங்கள் அபிப்பிராயங்களையும் விருப்பங்களையும் தெரிவிக்கிறார்கள். பலர் சேர்ந்து செய்யும் கூட்டு நடவடிக்கையாக அந்தச் சம்பவம் ஏறக்குறைய நிறைவேறலாம். சொல்லிய அபிப்பிராயங்களில் ஒன்று நிறைவேற்றப்படும்போது, அந்தச் சம்பவத்திற்கு முந்தியதான உத்தரவாக அதை நிறைவேற்றப்படும் கருத்து கருதப்படுகிறது.

ஒரு மரக்கட்டையைப் பலர் இழுத்துக்கொண்டு போகிறார்கள். அதை எப்படி, எங்கே இழுத்துக்கொண்டு போகவேண்டுமென்று ஒவ்வொருவரும் தங்கள் கருத்தைச் சொல்லுகிறார்கள். அந்தக் கட்டையை அவர்கள் அப்புறப்படுத்துகிறார்கள். ஆனால், கருத்து சொல்லியவர்களில் ஒருவருடைய யோசனைப்படி அது நடைபெறுவதாகிறது. அந்த கருத்தைச் சொல்லியவர் அம்மாதிரி செய்யும் உத்தரவு கொடுத்தவராகிறார். இங்கேதான் நாம் உத்தரவையும் சக்தியையும் அவற்றின் ஆரம்ப நிலையில் காண்கிறோம். தனது கைகளால் வேலை செய்கிற ஒரு மனிதன், தான் என்ன செய்கிறான் என்பதைப் பற்றி அவனால் நினைக்க முடியாது; அல்லது அந்தப் பொதுவான கூட்டு நடவடிக்கையினால் என்ன பலன் ஏற்படும் என்பதைப் பற்றி அவன் சிந்திக்கவும் முடியாது;

அல்லது ஒரு உத்தரவு கொடுக்கவும் அவனால் முடியாது. உத்தரவுகளை அதிகமாக கொடுத்துக் கொண்டிருக்கிறவன், தன்னுடைய வாயினால் நடக்கும் வேலைகளை அதிகமாய் செய்துகொண்டிருப்பதால், தனது கைகயினால் அவனால் குறைவாக வேலை செய்ய முடியும் என்பது தெளிவான விஷயம்.

ஏராளமான மனிதர்கள் ஒரே பொதுவான லட்சியத்திற்காக வேலை செய்யும்போது, அவர்களிலும்கூட உத்தரவுகள் கொடுக்கிற பிரிவினர்கள் நேரடியான வேலைகளில் குறைவாகவே கலந்து கொள்ளுவார்கள்.

ஒரு மனிதன் தனியாக வேலை செய்யும்போது அவன் எப்பொழுதுமே தனக்கு முன்பாகச் சில யோசனைகளை வைத்துக் கொண்டிருப்பான். அந்த யோசனைகள்தான் அவனுடைய கடந்த கால நடவடிக்கைகளை நடத்தி வைத்தன என்றும், அவனுடைய தற்கால நடவடிக்கைகளுக்குக் காரணம் என்றும், அவனுடைய எதிர்கால நடவடிக்கைக்குக் காரணம் என்றும், அவனுடைய எதிர்கால நடவடிக்கைக்கு திட்டமிட அவைதான் உதவி செய்கின்றன என்றும் அவனுக்குத் தோன்றுகிறது அதேமாதிரிதான் ஒரு பெருங்கூட்டமான மக்களுக்கும் தோன்றுகிறது; அதாவது நடவடிக்கைகளில் நேராகக் கலந்து கொள்ளாதவர்கள், நடவடிக்கைகளுக்கான நியாயங்களையும் யூகங்களையும் யோசனை செய்யும் வேலையைக் கவனிக்கும்படி விட்டு விடுகிறார்கள்.

நமக்கு தெரிந்தும் தெரியாமலும் உள்ள காரணங்களினால் பிரஞ்சக்காரர்கள் ஒருவருக்கொருவர் மூழ்கடித்தும் கொன்றுகொண்டும் இருந்தார்கள். அந்தச் சம்பவத்திற்கு ஒத்ததான ஒரு நியாயம் மக்களுக்குத் தோன்றியது. அதாவது, பிரான்ஸினுடைய நன்மைக்காகவும், சுதந்திரத்திற்காகவும், சமத்துவத்திற்காகவும் அம்மாதிரி செய்யவேண்டியது அவசியம் என்று அவர்கள் நம்பினார்கள். பின்னால், ஒருவரை ஒருவர் சொல்லுவதை மக்கள் விட்டுவிட்டார்கள். அப்பொழுதும் அதிகாரத்தை பலப்படுத்துவதற்காகவும், ஐரோப்பாவின் எதிர்ப்பைச் சமாளிப்பதற்காகவும், அம்மாதிரி செய்யவேண்டியது அவசியம் என்று அவர்கள் நம்பினார்கள். மேற்கிலிருந்து மக்கள் கிளம்பி கிழக்கு நோக்கிச் சென்று தங்கள் சகோதர இனங்களைக் கொன்றார்கள். அம்மாதிரி செய்வதற்கு, பிரான்ஸின் மகத்துவத்தையும், இங்கிலாந்தின் இழி குணத்தையும் எடுத்துக்காட்டி, அப்படிச் செய்வது நியாயம் என்று கூறினார்கள்.

சம்பவங்களுக்குக் கூறப்படும் இத்தகைய நியாயங்கள் கொஞ்சங்கூட பகுத்தறிவு இல்லாதவை என்பதையும், ஒன்றுக்கொன்று முரணானவை என்பதையும் சரித்திரம் நமக்குக் காட்டுகிறது. உதாரணமாக, ஒருவன் தன்னுடைய உரிமைகளுக்காக மற்றொருவனை கொல்லுவது என்பதும், இங்கிலாந்தை இழிவு படுத்துவதற்காக ருஷ்யாவில் லட்சக்கணக்காணவர்களைக் கொல்லுவது என்பதும் பொருத்தமற்றவை. ஆனால், இந்த நியாயங்கள் அவர்களுடைய காலத்தில் ஒரு அவசியமான முக்கியத்துவம் வாய்ந்ததாய் இருந்தது.

சம்பவங்களை உண்டுபண்ணுகிறவர்களை, தார்மீகப் பொறுப்பிலிருந்து இந்த நியாயங்கள் விடுபடும்படி செய்கின்றன. ஒரு ரயில்வே எஞ்ஜினுக்கு முன்பாகவுள்ளதண்டவாளங்கள் மீதிருக்கும் உறை பனியை அகற்றுவதற்காக எஞ்ஜின் முன்பு கட்டப்பட்டிருக்கும் துடைப்பங்களைப் போலவே இந்தத் தற்காலிக கொள்கைகள் இருக்கின்றன. அதாவது, மக்களின் தார்மீகப் பொறுப்புகளை அவை துடைத்துவிடுகின்றன.

ஒவ்வொரு சரித்திரச் சம்பவத்தையும் அலசிப்பார்க்கும்போது நேரக் கூடிய சர்வ சாதாரணமான கேள்விக்கு, இந்த நியாயங்களைச் சொல்லாமல், வேறு பதில் சொல்ல முடியாது. லட்சக்கணக்கான பேர்கள் கூட்டாகச் சேர்ந்து, பாதகங்களையும், யுத்தங்களையும், கொலை முதலியவைகளையும் எப்படிச் செய்கிறார்கள்?

மன்னர்களாலும், மந்திரிகளாலும், பார்லிமேண்டுகளாலும் பத்திரிகைகளாலும் உத்தரவிடப்படாத, அல்லது சொல்லப்படாத ஒரு காரியம் நடக்கும் என்று, ஐரோப்பாவில் தற்கால ராஜிய, சமூக சிக்கலான நிலைமைகளில் யாராவது யூகிக்க முடியுமா? அரசியல் ஐக்கியத்திலும், தேசாபிமானத்திலும், நாகரீகத்திலும், வல்லரசுகளில் சமநிலை அதிகாரத்திலும் நியாயம் காண முடியாத கூட்டு நடவடிக்கை ஏதாவது இருக்கிறதா? ஆகவே, நடக்கிற ஒவ்வொரு சம்பவமும், யாரோ தெரிவித்த விருப்பத்திற்கு ஒத்ததாக இருந்தே ஆகவேண்டும்; அம்மாதிரியாக அது ஒரு நியாயத்தைப் பெறுகிறது. அதன் பின்னால் தனிப்பட்ட ஒரு மனிதரோ, அல்லது பல மனிதர்களோ, தெரிவித்த விருப்பங்களின் பலனாக அது தோன்றியதுபோல சாட்சி அளிக்கிறது.

ஒரு கப்பல் எப்பக்கமாகச் சென்றாலும், அதன் முன்பாகம் தண்ணீரைப் பிளக்கும்போது ஏற்படக்கூடிய அலைகள், கப்பலுக்கு முன்பாகவே தோன்றிக்கொண்டிருக்கும். கப்பலின் இருக்கிறவர் களுக்கு முன்னால் பார்க்கக்கூடிய அந்த அலைகளின் அசைவு

ஒன்றுதான் கண்ணுக்குத் தெரியக் கூடியதாய் முன்னேற்றமாய் இருக்கும். கப்பல் போவது தெரியாது.

ஒவ்வொரு வினாடியும் அந்த அலையின் அசைவையும் கப்பலின் அசைவையும் கூர்மையாக நோக்கிய பின்புதான் அந்தக் கப்பல் முன்னால் போவதனால்தான் அந்த அலைகள் ஏற்படுகின்றன என்பதை நாம் அறிந்துகொள்ளமுடியும்; வெளிப்படையாகத் தெரியாமல் நாமும் அந்தக் கப்பலோடு முன்னேறிக்கொண்டிருப்பதால், அலைகள் மட்டுமே முன்னேறுவதாக நாம் கவனித்து வந்த தவறு புலப்படும்.

இதேமாதிரி சரித்திர பிரபலஸ்தர்களின் நடவடிக்கைகளையும் வினாடிக்கு வினாடி நாம் கவனித்துப் பார்த்தால் காணமுடியும். அதாவது, காலத்தோடு சேர்ந்து நடவடிக்கையும் இருக்கிறது என்பதை ஒவ்வொரு விஷயத்திலும் நாம் உணர்ந்து கவனிக்கும்போது காணமுடியும். அச்சமயம் மக்களுடன் சரித்திரப் பிரபலஸ்தர்களுக்கு உள்ள முக்கியமான உறவை நாம் மறந்துவிடக் கூடாது.

எது நடந்தபோதிலும் அந்தக் காரியம் முன்பாகவே எதிர்பார்த்து தீர்மானிக்கப்பட்டதைப்போல எப்பொழுதும் தோன்றும். கப்பல் எங்கே போனாலும், அதன் முன்னாலுள்ள அலை அந்தக் கப்பலை நடத்துவதோ அல்லது கப்பலின் வேகத்தை அதிகரிப்பதோ இல்லை; என்றாலும், கப்பலின் முன்பாக அது போய்க் கொண்டிருக்கிறது; தூரத்திலிருந்து பார்க்கும்போது, அந்த அலையானது அந்தக் கப்பலைத் தள்ளிக்கொண்டு போவதைப் போல, நமக்குத் தோன்றும்.

நடக்கிற சம்பவங்களோடு, சரித்திரப் பிரபலஸ்தர்களின் விருப்பங்களை உத்தரவுகளாக உறவுகொண்டு பார்க்கும்போது, அந்தச் சம்பவங்கள் எல்லாம் அந்த உத்தரவுகளினால்தான் ஏற்பட்டன என்று சரித்திரக் காரர்கள் நினைத்துக் கொள்ளுகிறார்கள். ஆனால், சம்பவங்களை மட்டும் நாம் சோதிப்போமானால், மக்களுக்கும் சரித்திரப் பிரபலஸ்தர்களுக்கு உள்ள உறவுகளை நாம் சோதிப்போமானால், அவர்களும் அவர்களுடைய உத்தரவுகளும் சம்பவங்களைச் சார்ந்தே நிற்கின்றன என்பதைக் கண்டுகொள்ளலாம். இம்மாதிரி முடிவுக்கு வருவதற்கு மறுக்க முடியாத ஆதாரத்தை நாம் காட்டுகிறோம். அதாவது, எத்தனையோ உத்தரவுகள் பிறப்பித்த போதிலும் சம்பவம் நடப்பதற்கான மற்றக் காரணங்கள் ஏற்பட்டாலொழிய அந்தச் சம்பவம் நடப்பதில்லை; ஆனால், அந்தச் சம்பவம் நடந்து முடிந்ததும், தொடர்ச்சியாக

வெவ்வேறு மனிதர்கள் வெளியிட்ட விருப்பங்களிலிருந்து சிலருடைய விருப்பங்கள் மட்டுமே அந்தச் சம்பவத்திற்கு ஒத்ததாக இருக்கும்; அம்மாதிரி விருப்பங்கள், அவைகளின் அந்தஸ்தையும், அவைகள் தெரிவிக்கப்பட்ட காலத்தையும் அனுசரித்து, அவைகளை உத்தரவுகளாகச் சம்பவங்களோடு உறவு கொள்ளும்படி நேரிடுகின்றன.

இம்மாதிரியான முடிவிற்கு வந்த பின்பு, சரித்திரத்தின் இரண்டு அத்தியாவசியமான கேள்விகளுக்கு நாம் நேரடியாகவும் நிச்சயமாகவும் பதில் கொடுக்க முடியும் :

(1) சக்தி என்பது என்ன ?

(2) தேச மக்களின் இயக்கங்களை உற்பத்தி செய்யும் வேகம் எது?

1. சக்தி என்பது ஒரு குறிப்பிட்ட மனிதருக்கும் மற்றவர்களுக்கும் உள்ள உறவேயாகும்; இந்த விஷயத்தில் இந்தக் குறிப்பிட்ட மனிதர் எவ்வளவு அதிகமாகக் கூட்டு நடவடிக்கை யைப்பற்றி கருத்து கூறியும், நடக்கப்போவதை கணித்தும், நியாயம் காட்டிப் பேசியும் செய்கிறாரோ, அவ்வளவுக்கு அவ்வளவு குறைவாக அவர் அந்த நடவடிக்கையில் கலந்துகொள்ளுகிறார்.

2. தேசமக்களின் இயக்கங்கள் சக்தியினால் ஏற்படுகிறவை அல்ல; அல்லது கலாச்சார நடவடிக்கைகளாலோ ஏற்படுவதும் அல்ல; அல்லது சரித்திரக்காரர்கள் யூகிப்பதைப்போல, அந்த இரண்டும் சேருவதாலும் ஏற்படுவதும் அல்ல; ஆனால், அச்சச் சம்பவங்களில் கலந்துகொள்ளுகிற எல்லா மக்களும் செய்யும் நடவடிக்கைகளால் ஏற்படுவதாகும். அவர்கள் எப்பொழுதுமே உத்தரவிட்டுப் பொறுப்பேற்றவர்கள் குறைவாகவும், நேரடி நடவடிக்கைகளில் கலந்துகொள்கிறவர்கள் அதிகமாய் இருக்கும்படியாகவும் தங்களுக்குள் இணைப்பு செய்துகொள்ளு கிறார்கள்.

தார்மீக முறையில் பார்த்ததால், அதிகாரத்தை உபயோகிப்ப வர்தான் சம்பவத்தை உண்டுபண்ணுவதாகத் தோன்றும்; ஸ்தூலமாகப் பார்த்தால் அந்த அதிகாரத்திற்கு அடங்கி நடப்பவர்கள்தான் சம்பவத்தை உண்டுபண்ணுகிறவர்களாகத் தோன்றும். ஸ்தூல பலம் இல்லாமல், தார்மீக நடவடிக்கை என்பது சாத்தியமில்லாத காரியம். ஆகவே, அந்த இரண்டில் ஏதாவது ஒன்றில் சம்பவத்திற்கான காரணம் இருப்பதாகக் கூறமுடியாது ; இரண்டும் சேர்ந்த இணைப்பில்தான் அது இருக்கிறது.

இப்பொழுது நாம் பிரிசீலனை செய்துகொண்டிருக்கும் அற்புதத்திற்கு, காரணத்தைப்பற்றிய உருவகம் அவசியம் இல்லாதது.

கடைசியாக நாம் செய்த ஆராய்ச்சியின் முடிவாக ஒரு முடிவில்லாத வட்டத்திற்கு நாம் வந்து சேர்ந்தோம் - எந்தவிதமான கொள்கை உடையவர்களாய் இருந்தாலும் அந்த வட்டத்திற்குத்தான் கடைசியாக அவர்கள் வந்து சேரவேண்டும். உஷ்ணத்தை மின்சாரம் உற்பத்தி செய்கிறது. மின்சாரத்தை உஷ்ணம் உற்பத்தி செய்கிறது. அணுக்கள் ஒன்றை யொன்று இழுக்கின்றன; சில அணுக்கள் ஒன்றையொன்று எதிர்க்கின்றன.

உஷ்ணம், மின்சாரம், அணுக்கள் ஆகியவைகளின் உள்ள தொடர்பைப் பற்றிப் பேசுவோமானால், அவை அப்படித்தான் என்றும் வேறுவிதமாக இருக்கமுடியாது என்றும் கூறுகிறோம்; ஏனென்றால், அவை அப்புடித்தான் இருக்கவேண்டும்; அதுதான் சட்டம். அதே கதிதான், சரித்திரச் சம்பவங்களுக்கும் பொருந்துகிறது. போரும் புரட்சியும் ஏன் ஏற்படுகின்றன என்பது நமக்குத் தெரியாது. ஆனால், போரையோ, புரட்சியையோ ஏற்படுத்த வேண்டுமானால், மக்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து செய்யக்கூடிய விதத்தில் அமையவேண்டும் என்பது நமக்குத் தெரியும்; இது இப்படித்தான் என்றும், வேறுவிதமாக இருக்கமுடியாது என்றும் நாம் சொல்லுகிறோம்; ஏனென்றால் அதுதான் சட்டம்.

## 8

வெளிப்டையாகத் தோன்றும் விசித்திரங்களைப் பற்றி மட்டும் பேசுவதோடு சரித்திரம் நிற்குமானால், நாம் இப்பொழுது ஸ்தாபித்துள்ள இந்த எளிய, வெளிப்படையான சட்டத்தைக் காட்டியதோடு நமது விவாதங்களை முடித்துக்கொள்ளலாம். ஆனால், சரித்திரத்தின் சட்டமானது மனிதனைக் குறிப்பிடுகிறது. ஒரு வஸ்துவின் ஒரு துளியானது கவர்ச்சியின் சட்டத்தையோ, எதிர்ப்பின் சட்டத்தையோ, தான் உணரமுடியவில்லை என்றும், அதனால் அந்தச் சட்டம் பொய்யானது என்றும் நமக்குச் சொல்ல முடியாது. ஆனால், சரித்திரத்தின் பொருளான மனிதன் தெளிவாக, ''நான் சுதந்திரமானவன். ஆகவே, நான் சட்டத்திற்கு உட்பட்டவன் அல்ல'' என்று கூறுகிறான்.

மனிதனின் சுதந்திர விருப்பப் பிரச்னையானது, வெளிப்படையாகச் சொல்லப்படாவிட்டாலும், சரித்திரத்தின் ஒவ்வொரு படியிலும் பிரசன்னமாய் இருக்கிறது.

தீவிர சிந்தனையாளர்களான சரித்திரக்காரர்கள் தங்களை அறியாமலேயே இந்தப் பிரச்னைக்கு வந்து சேருகிறார்கள். சரித்திரத்திலுள்ள முரண்பாடுகளுக்கும், தெளிவற்ற தன்மைகளுக்கும் தவறான பாதையில் சரித்திர விஞ்ஞானம் போனதற்கும், இந்தப் பிரச்னைக்குப் பதில் கண்டு பிடிக்காததே மூல காரணமாகும்.

ஒவ்வொரு மனிதனின் விருப்பமும் சுதந்திரமுள்ளதாய் இருந்தால், அதாவது, ஒவ்வொருவனும் தான் விரும்புகிறபடி நடக்க முடியுமானதாய் இருந்தால் ஒரு விஷயம் தெளிவானது. அதாவது, மனித குல நடவடிக்கைகளை ஆண்டு வரும் சட்டங்களக்கு விரோதமாக அந்த மனிதனால் ஒரு காரியத்தைச் சுதந்திரமாகச் செய்ய முடியுமானால், அந்தக் காரியம் மனிதகுலத்தை ஆண்டுவரும் சட்டங்களெல்லாம் ஒன்றுமே இல்லை என்பதை நிரூபிக்கப் போதுமானது.

மனிதர்களின் நடவடிக்கைகளை ஆளுவதற்கு ஒரு சட்டம் இருக்குமானால், மனிதனின் சுதந்திர வீருப்பம் என்பது இருக்கமுடியாது; ஏனெனில், அந்த விருப்பம் அந்தச் சட்டத்திற்கு உட்பட்டதாய்த்தான் இருக்கமுடியும்.

இந்த மாறுபாடுகளில் தான் சுதந்திர விருப்பப் பிரச்னை என்பது அடங்கி இருக்கிறது. அந்தப் பிரச்சனை புராதன காலங்களிலிருந்து மிகச் சிறந்த புத்திசாலிகளின் கவனத்தைக் கவர்ந்து வந்திருக்கிறது. மிகப் புராதனமான காலங்களிலிருந்து அதனுடைய பிரம்மாண்டமான முக்கியத்துவம் முழுவதும் இருந்துகொண்டே வருகிறது.

மதத்தின் மூலமாகவோ, சரித்திரத்தின் மூலமாகவோ, நீதி சாஸ்திரத்தின் மூலமாகவோ, தத்துவ சாஸ்திரத்தின் மூலமாகவோ நாம் மனிதனை ஆராய்வோமானால், அவசியம் என்ற ஒரு பொதுவான சட்டத்திற்கு அவன் (உயிரோடுள்ள எல்லாருமே) அடங்கி இருப்பதில்தான் இந்தப் பிரச்னை இருக்கிறது.

ஆனால், மனிதனை நமக்குள் நாம் உள்நோக்கி பார்ப்போமானால் - நமது உள்ளுணர்வைக் கொண்டு பார்ப்போமானால் - நாம் சுதந்திரமாக இருப்பது போல உணர்கிறோம்.

வாதத்திற்கு புறம்பாக வாதத்திலிருந்து சுதந்திரமாக உள்ள சுய அறிவுக்கு இந்த உள்ளுணர்வுதான் மூலமாய் இருக்கிறது.

வாதத்தைக் கொண்டு மனிதன் தன்னை ஆராய்ச்சி செய்கிறான். ஆனால், உள்ளுணர்வைக் கொண்டுதான் அவன் தன்னை அறிந்துகொள்ளுகிறான்.

தன்னைப் பற்றிய உள்ளுணர்வு இல்லாமல் வாதம் செய்வதோ, ஆராய்ச்சி செய்வதோ சாத்தியமானதல்ல.

ஒன்றை அறிந்துகொள்ள வேண்டுமானால், ஒன்றை ஆராய்ச்சி செய்ய வேண்டுமானால், ஒரு முடிவுக்கு வரவேண்டுமானால், மனிதன் முதலில் தான் உயிரோடு இருப்பதான பிரக்ஞையைப் பெறவேண்டும். மனிதன் தன்னுடைய பிரியத்தை உணர்ந்தவனாய் இருப்பதனால், அதாவது தனக்கு விருப்பம் என்பது உண்டு என்பதை அறிந்தவனாய் இருப்பதனால்தான், மனிதன் தன்னைப் பற்றிய பிரக்ஞையோடு இருக்கிறான். ஆனால், அவனுடைய விருப்பமானது - அவனுடைய வாழ்வில் உயிரானதாக அது அமைந்திருக்கிறது - சுதந்திரமாய் இருப்பதுபோல அவன் நினைக்கிறான். (நினைப்பதை மட்டும்தான் அவன் செய்ய முடியும்.)

தன்னை ஆராய்ச்சி செய்வதன் மூலம், தன்னுடைய விருப்பம் எப்பொதுமே ஒரே ஒரு சட்டத்தினால்தான் ஆளப்படுகிறது என்பதை மனிதன் காணுவானானால் (உண்ண வேண்டியதன் அவசியத்தையும், மூளையை உபயோகிக்கவேண்டியதன் அவசியத்தையும், அவனுடைய விருப்பம் ஒரு எல்லைக்கு உட்பட்டதுதான் என்பதை அவன் அறிந்துகொள்ளுவான். அது சதந்திரமாய் இல்லையென்றால், எல்லைக்கு உட்பட்டதாய் இருக்க முடியாது. ஒரு மனிதனுடைய விருப்பம் எல்லைக்கு உட்பட்டதாக அவனுக்குத் தோன்றுகிறது. ஏனெனில், அது சுதந்திரமாய் இருக்கிறது என்ற பிரக்ஞையில்தான் அவன் இருக்கிறான்.

நான் சுதந்திரமாய் இல்லை என்று எனக்கு நீங்கள் சொல்லலாம். ஆனால், என்னுடைய கையை நான் உயர்த்துகிறேன்; அதை கீழே தொங்கவிடுகிறேன். வாதத்திற்கு பொருத்தம் இல்லாத இந்தப் பதிலானது சுதந்திரத்தின் தன்மையை மறுக்க முடியா[illegible] காட்டுகிறது என்பதை ஒவ்வொருவரும் அறிவார்கள்.

வாதத்திற்கு உட்படாத ஒரு உள்ளுணர்வின் தோற்ற[illegible] பதிலாகும்.

சுதந்திரத்தின் பிரக்ஞை சுய-உணர்வுக்குப் [illegible] சுதந்திரமானதாகவோ இல்லாமல் இ[illegible] அனுபவத்திற்கும் வாதத்திற்கும் உட்[illegible]

அம்மாதிரி அது உட்பட்டிருக்கவில்லை; அம்மாதிரி இருக்கும் என்று நினைக்கவும் முடியாது.

வரிசை வரிசையான ஆராய்ச்சிகளும் வாதங்களும் மனிதன் சில சட்டங்களுக்கு உட்பட்டவன் என்பதை நிரூபிக்கின்றன. அவன் அவைகளுக்கு அடங்கி நடக்கிறான். ஆகர்ஷண சக்தி போன்ற நிலையான சட்டங்களை அவன் அறிந்த பின்பு அவற்றை எதிர்ப்பதில்லை. அதே மாதிரி, வரிசை வரிசையான ஆராய்ச்சிகளும் வாதங்களும் அவன் தனக்குள் நினைத்துக்கொண்டிருக்கும் பூரணசுதந்திரத்தைப் பெறுவது அசாத்தியம் என்று நிரூபிக்கின்றன; அவனுடைய ஒவ்வொரு நடத்தையும் அவனுடைய உறுப்புக்களையும் தன்மைகளையும் தூண்டுதல்களையும் பொறுத்தே இருக்கின்றன; என்றாலும், ஆராய்ச்சிகளினாலும் வாதங்களினாலும் ஏற்படுகின்ற இந்த முடிவுகளுக்கு அவன் எப்பொழுதும் உட்படுவதில்லை. வாதங்களிலிருந்தும் ஆராய்ச்சிகளிலிருந்தும், ஒரு கல்லை வீசினால் அது கீழேதான் வந்து விழும் என்பதை அவன் அறிந்துகொள்ளுகிறான்; சந்தேகமில்லாமல் அதை நம்புகிறான். அவன் அறிந்துகொண்ட இந்தச் சட்டம் எல்லா காரியங்களிலும் நிறைவேற்றப்படும் என்று அவன் எதிர்பார்க்கிறான்.

ஆனால், இதேமாதிரி அவனுடைய விருப்பம் என்பது சட்டங்களுக்கு உட்பட்டதுதான் என்பதை அவன் நிச்சயமாக அறிந்திருந்தும் அதை அவன் நம்புவதில்லை; நம்ப முடிவதுமில்லை.

ஆராய்ச்சிகளும் வாதங்களும் மனிதனுக்கு ஒரு விஷயத்தைக் காட்டலாம். அதாவது, ஒரே நிலைமையில், ஒரே தன்மையில் முன்பு செய்ததைப் போன்ற ஒரே காரியத்தை அவன் செய்கிறான். என்றாலும், அதே நிலைமைகளில், அதே தன்மைகளில் ஆயிரமாவது தடவையில் அவன் அக்காரியத்தைச் செய்யும்போது, ஒரே விதமாகவே அக்காரியம் எப்பொழுதும் முடிவு அடையும். என்றாலும், அவன் தன்னுடைய இஷ்டப்படிதான் செய்ய முடியும் என்பதை அந்த ஆராய்ச்சிக்கு முன்பாக எப்படி நினைத்துக் கொண்டிருந்தானோ, அதே உறுதியோடு இப்பொழுதும் நினைக்கிறான். ஒவ்வொரு மனிதனும், அவன் காட்டு மிராண்டியாய் இருந்தாலும் சரி, ஞானியாய் இருந்தாலும் சரி, அவன் ஒன்று நினைக்கிறான்: ஒரே மாதிரியான சந்தர்ப்பங்களில், இரண்டு வித்தியாசமான நடவடிக்கைகளை செய்வது அசாத்தியம் என்பதை வாதங்களினாலும், அனுபவங்களினாலும் மறுக்க

முடியாத விதத்தில் அவனுக்கு எடுத்துக் காட்டினாலும், அவன் ஒன்று நினைக்கிறான் : அதாவது, தன்னுடைய விருப்பப்படி, தான் செய்ய முடியும் என்ற பகுத்தறிவுக்குப் பொருத்தம் இல்லாத அந்த உருவகம் (அதுதான் சுதந்திரத்தின் உயிராய் இருக்கிறது) இல்லாமல், வாழ்க்கையைப் பற்றியே அவன் சிந்திக்க முடியாதென்று நினைக்கிறான். அது எவ்வளவு அசாத்தியமாய் இருந்தாலும், சுதந்திரத்தைப் பற்றிய இந்த உருவகம் இல்லாமல். வாழ்க்கையைப் பற்றி அறிந்துகொள்ளுவது அவனால் முடியாது என்றும், ஒரு வினாடிகூட அவனால் உயிர் வாழ முடியாது என்றும் அவன் நினைக்கிறான்.

அவனால் உயிர் வாழ முடியாது; ஏனென்றால், எல்லா மனிதர்களுடைய முயற்சிகளும், வாழ்க்கையிலுள்ள எல்லா தூண்டுதல்களும் சுதந்திரத்தை அதிகரிக்கவேண்டும் என்ற முயற்சிகளேயாகும். செல்வமும், தரித்திரமும், புகழும் மங்கலும், அதிகாரமும் அடிமைத்தனமும், பலமும், பலவீனமும், ஆரோக்கியமும் வியாதியும், கலாச்சாரமும் அறியாமையும், வேலையும் ஓய்வும், செழிப்பும் பட்டினியும், நன்மையும் தீமையும் எல்லாமே சுதந்திரத்தின் பெரிய அல்லது சிறிய தரங்களேயாகும்.

சுதந்திரமில்லாத ஒரு மனிதன், வாழ்க்கையை இழந்தவனுக்கு ஒப்பாகவே இருப்பான்.

சுதந்திரத்தின் உருவகமானது, புத்தியற்ற மாறுபாடுகளைப்போல வாதத்திற்குத் தோன்றுமானால், ஒரே சமயத்தில் இரண்டு விதமான காரியங்களைச் செய்வதுபோலத் தோன்றுமானால், அல்லது காரணமில்லாமல் ஒரு காரியம் நடக்க முடியும் என்பதுபோலத் தோன்றுமானால், அது ஒரே ஒரு விஷயத்தைத்தான் நிரூபிக்கிறது. அதாவது, உள்ளுணர்வு அல்லது பிரக்ஞை என்பது வாதத்திற்கு உட்பட்டதல்ல.

இந்த அசைக்க முடியாத மறுக்க முடியாத சுதந்திர உள்ளுணர்வானது வாதத்தினாலோ, அல்லது அனுபவத்தினாலோ ஆளப்படுவது அல்ல ; எல்லா சிந்தனையாளர்களும், ஒருவர்கூட விலக்கில்லாமல் இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள்; இந்த உள்ளுணர்வு இல்லாமல் மனிதனை உருவகப்படுத்திப் [illegible] முடியாத காரியம் என்றும், இந்தப் பிரச்னையின் மற்றொரு [illegible] இது அமைந்திருக்கிறது என்றும் அவர்கள் நினைக்கிறார்கள்.

சர்வ சக்தி வாய்ந்த, எல்லா நன்மை[illegible], எல்லாவற்றையுமே பார்க்கக்கூடிய அந்தக் [illegible] மனிதனாகும்.

மனிதனின் சுதந்திர உள்ளுணர்விலிருந்து உருவகமாய்த் தோன்றுகிற, 'பாவம் என்பது என்ன?' இந்தக் கேள்வி மதத்தைச் சேர்ந்ததாகும்.

புள்ளி விவரங்களினால் காட்டப்படுகிற பொதுவான, நிலையான சட்டங்களுக்கு மனிதனின் நடவடிக்கைகள் உட்பட்டவை. சுதந்திர உருவகத்திலிருந்து தோன்றிய மற்றொரு உருவகமானது என்னவென்றால், 'சமூகத்திற்கு மனிதனின் பொறுப்பு என்ன?' இந்தக் கேள்வி நீதி சாஸ்திரத்தைச் சேர்ந்ததாகும்.

மனிதனுடைய இயல்பான தன்மையிலிருந்தும், அவனுக்குள் ஏற்படும் தூண்டுதல்களிலிருந்தும், மனிதனுடைய நடவடிக்கைகள் ஏற்படுகின்றன அப்படியானால், மனச்சாட்சி என்பது என்ன? சுதந்திரத்தின் உள்ளுணர்விலிருந்து தோன்றுகிற நியாயம், அநியாயம் என்ன நினைப்புகளுக்கு வியாக்கியானம் என்ன? இந்தக் கேள்வி தர்ம சாஸ்திரத்தைச் சேர்ந்ததாகும்.

மனித குலத்தின் பொதுவான வாழ்க்கையில் மனிதன் சேர்ந்திருக்கும்போது, அந்த வாழ்க்கையை நிர்ணயிக்கும் சட்டங்களுக்கு உட்பட்டவனாக அவன் தோன்றுகிறான். ஆனால், அதே மனிதன் அந்தச் சம்பந்தம் இல்லாமல் இருக்கும்போது, சுதந்திரமாய் இருப்பதாகக் காணப்படுகிறான். தேச மக்களுடையவும், மனித குலத்தினுடையவும் கடந்தகால வாழ்க்கையை எம்மாதிரி எடுத்துக்கொள்ள வேண்டும் - சுதந்திர மனிதனால் ஏற்பட்டதாக எடுத்துக்கொள்ளுவதா, அல்லது கட்டுப்பட்ட மனிதனால் ஏற்பட்டதாக எடுத்துக்கொள்ளுவதா ? இந்தக் கேள்வி சரித்திரத்தைச் சேர்ந்ததாகும்.

ஏராளமாக அச்சடித்து அறிவைப் பரப்பும் இந்தச் சுய நம்பிக்கைக் கொண்ட யுகத்தில்தான் சுதந்திர விருப்பம் என்ற பிரச்னை ஒரு நிலைமைக்கு வந்திருக்கிறது, அதற்கு முடிவு காணாமல் அந்த நிலைமையிலேயே அது இருக்க முடியாது. நமது காலத்தில், முன்னேற்றம் அடைந்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளப் படுகிறவர்களில் பெரும்பான்மையோர் – அவர்கள்தான் அந்த மூடக்கும்பல் - இயற்கை சாஸ்திர வேலையை மேற்கொண்டிருக் கிறார்கள். அந்தச் சாஸ்திரம் இந்தப் பிரச்னையின் ஒருபாகத்தை மட்டுமே கூறுகிறது. பிரச்னைக்குப் முழுவதும் விடை பேணுவதை விட்டு, அந்த ஒரு பக்க ஆராய்ச்சியை அவர்கள் செய்துகொண்டிருக்கிறார்கள்.

ஆத்மா என்றோ, சுதந்திரம் என்றோ அவர்கள் பேசியும் எழுதியும் அச்சடித்தும் வருகிறார்கள். ஏனெனில், மனிதனுடைய வாழ்க்கை

என்பது தசைகளின் அசைவுகளில் அமைந்திருக்கிறது என்றும் அந்த அசைவுகள் நரம்புகளின் வேலைகளால் ஏற்படுகின்றன என்றும், ஆகவே ஆத்மாவோ, சுதந்திரமோ இருக்க முடியாதென்று அவர்கள் கூறுகிறார்கள். அதற்கு ஆதாரமாக, எப்பொழுதோ ஒரு காலத்தில் நாம் குரங்குகளிலிருந்து உற்பத்தியானதாகச் சொல்லுகிறார்கள். இந்த விஷயத்தை ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பாகவே, அவசியம் என்ற இந்தச் சட்டத்தை, எல்லா மதங்களும், எல்லாச் சிந்தனையாளர்களும் அங்கீகரித்தது மட்டுமல்ல, அதை மறுக்கவும் இல்லை. ஆனால் இதைக் கொஞ்சங்கூட அறியாமல், இந்த வாதத்தை நிரூபிப்பதற்காக மிகுந்த உற்சாகத்தோடு, உடற்கூறு சாஸ்திரத்தைக் கொண்டும், பிராணி நூல் சாஸ்திரத்தைக் கொண்டும் அவர்கள் முயற்சிக்கிறார்கள். இயற்கை சாஸ்திரங்கள் இந்த விஷயத்தில், இந்த பிரச்னையின் ஒரு பக்கத்திற்குத்தான் விளக்கம் கொடுக்க முடியும் என்பதை அவர்களால் கண்டுகொள்ள முடியவில்லை. ஆராய்ச்சியின் மூலம் பார்க்கும் போது வாதமும் விருப்பமும் மூளையிலிருந்து சுரக்கின்றன; பொதுவான சட்டத்தை அனுசரித்து ஏதோ ஒரு காலத்தில் மனிதன் மிருகங்களிலிருந்து வளர்ச்சி அடைந்திருக்கலாம்; ஆனால் இவையெல்லாம் ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பாகவே எல்லா மத, தத்துவக் கொள்கைகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு உண்மையை ஸ்தாபிக்கின்றன; அதாவது, வாதத்திலிருந்து பார்ப்போமானால், அவசியம் என்ற சட்டத்திற்கு மனிதன் அடிமையானவன் என்பதேயாகும்; ஆனால் இது பிரச்னைக்கு விடை கண்டுபிடிக்க ஒரு மயிரிழைகூட முன்னேறவில்லை. அந்தப் பிரச்னைக்கு மற்றொரு பக்கமும் உண்டு. அது சுதந்திரத்தின் பிரக்ஞைமீது அமையப் பட்டது.

ஏதோ ஒரு காலத்தில் மனிதர்கள் குரங்குகளிலிருந்து தோன்றியதாக சொல்லுகிறார்கள்; இந்தக் காலம் எது என்பது தெரியவில்லை; ஒரு கைப்பிடி மண்ணிலிருந்து மனிதன் உண்டு பண்ணப்பட்டான் என்று சொல்லப்படுவதைப் போலவே, முதலில் சொல்லப்பட்ட விஷயமும் தெளிவாகவே இருக்கிறது. ஆனால், இந்த இரண்டாவது விஷயத்தை மனிதனின் உற்பத்திக் காலம் என்று கூறுகிறார்கள். அவசியம் என்ற சட்டத்திற்கு உட்படவேண்டிய மனிதனுடைய சுதந்திரப் பிரக்ஞையோடு, அந்தச் சட்டத்தை இணைக்கும் பிரச்னை இருக்கிறது. அந்தப் பிரச்னையை உடற்கூறு சாஸ்திரத்தாலும், பிராணி நூல் சாஸ்திரத்தாலும் தீர்த்து வைக்க முடியாது. ஏனெனில், தவளை, முயல், வாலில்லாக் குரங்கு ஆகிய உயிரினங்களில் தசை ஆட்டங்களையும், நரம்பு ஆட்டங்களையுமே

காண்கிறோம். ஆனால், மனிதனிடத்தில் இந்தத் தசை, நரம்பு ஆட்டங்களோடு உள்ளுணர்வு என்ற பிரக்ஞையையும் காண்கிறோம்.

இந்தப் பிரச்னையைத் தீர்த்து வைக்க முடியும் என்று இயற்கை வாதிகளும், அவர்களைப் பின்பற்றுகிறவர்களும் நினைக்கிற நினைப்பானது ஒரு மாதாகோயிலில் சாந்து பூசுகிறவர்கள் நினைத்ததைப்போலவே இருக்கிறது. மாதா கோயிலின் சுவர்களில் ஒரு பக்கத்திற்குச் சாந்து பூசும்படி கொத்தர்கள் நியமிக்கப் பட்டார்கள். அவர்களுடைய மேஸ்திரி இல்லாத சமயத்தில் அவர்களுக்கு உற்சாகம் அதிசயமாகி, சுவர்களைப் பூசுவதோடு நில்லாமல், ஜன்னல்களையும், தெய்வச் சிலைகளையும், மரத்தாலான இடங்களையும் சாந்து கொண்டு பூசினார்கள். அம்மாதிரி பூசிவிட்டு எல்லாம் மழு மழுப்பாகவும் ஒரே மாதிரியாகவும் இருக்கின்றன என்று சந்தோஷம் அடைந்தார்கள்.

# 9

**சு**தந்திர விருப்பம் அல்லது அவசியம் என்ற பிரச்னைக்கு முடிவு காண்பதற்கு, மற்ற சாஸ்திரங்களைவிட, சரித்திர சாஸ்திரத்திற்கு ஒரு அனுகூலம் இருக்கிறது. சரித்திர சாஸ்திரத்தைப் பொறுத்தவரையில் மனிதனின் சுதந்திர விருப்பத்தைப் பற்றி அது பேசுவது இல்லை. அந்த விருப்பத்தினால் ஏற்பட்ட சில நிலைமைகளில் ஏற்பட்ட காரியங்களைப் பற்றியே அது கூறுகிறது.

அனுபவ விஞ்ஞானத்திற்கும், தத்துவ விஞ்ஞானத்திற்கும் உள்ள உறவு எப்படியோ, அதே உறவில்தான் மற்ற சாஸ்திரங்களோடு சரித்திர சாஸ்திரம் இருக்கிறது.

சரித்திரத்திற்கு வேண்டிய விஷயம் மனிதனின் விருப்பமல்ல; அதை நாம் எப்படி எடுத்துக் காட்டுகிறோம் என்பதேயாகும்.

ஆகவே, சரித்திரத்தைப் பொறுத்த வரையில் தீர்க்கப்படாத ரகசியமான சுதந்திர விருப்பத்திற்கும் அவசியத்திற்கும் உள்ள இணைப்பு என்ற பிரச்னை இல்லவே இல்லை. அந்தப் பிரச்னை மதத்திற்கும், நீதி சாஸ்திரத்திற்கும், தத்துவத்திற்கும் இருக்கிறது. ஏற்கனவே நடைபெற்ற அந்த இரண்டு நேர்விரோதமானவை களுக்கும் ஏற்பட்ட இணைப்பின்மீது மனிதனுடைய வாழ்க்கையைப் பற்றி எடுத்துக்கூறுவதே சரித்திரத்தின் வேலையாகும்.

உண்மையான வாழ்க்கையில் ஒவ்வொரு சரித்திர சம்பவமும், ஒவ்வொரு மனிதகுல நடவடிக்கையும், அவை சுதந்திரமாகச்

செய்யப்பட்டாலும், அல்லது கட்டாயத்தின்மீது செய்யப் பட்டாலும், வெகு தெளிவாகவும் நிச்சயமாகப் புரிந்துகொள்ளக் கூடியதாகவும் அறியப்படுகிறது; அதற்கு எந்தவிதமான மறுப்பு உணர்ச்சியும் தோன்றுவதில்லை.

சதந்திரமும், அவசியமும் எம்மாதிரி இணைந்தன என்ற கேள்வியையும் இந்த இரண்டு உருவகங்களுக்கும் உயிரைப் போன்று அமைந்திருப்பது எது என்ற கேள்வியையும் தீர்த்துவைக்க வேண்டுமானால், சரித்திரத்தின் தத்துவமானது மற்ற விஞ்ஞானங்கள் மேற்கொண்ட பாதைக்கு விரோதமான ஒரு பாதையில் போகவேண்டும்; போகவும் முடியும். சுதந்திரத்தினுடையவும் அவசியத்தினுடையவும் உருவகங்களை வரையறுத்து, பின்னால் வாழ்க்கையின் விசித்திரத்தை அந்த வரையறுப்புக்குள் அமைப்பதை விட்டு வேறொன்று செய்யவேண்டும். சரித்திரத்திற்குத் தெரிந்த ஏராளமான வாழ்க்கை விசித்திரங்கள் இருக்கின்றன; அந்த இரண்டு விஷயங்களையும் சார்ந்து இருக்கின்றவை ஏராளமாய் இருக்கின்றன. அவற்றைக்கொண்டு சுதந்திரத்தினுடையவும் அவசியத்தினுடையவும் உருவகங்களை சரித்திரம் வரையறுக்க வேண்டும்.

பல மனிதர்களோ, தனிப்பட்ட ஒருவரோ செய்கிற காரியங்களைப் பற்றி நாம் கவனிக்கும்போது, அவற்றை மனிதனின் சுதந்திர விருப்பத்தினாலும், அவசியம் என்ற சட்டத்தினாலும் ஏற்படுகிற காரியங்கள் என்று நாம் மதிக்கிறோம்.

மக்கள் நாடு பெயர்ந்து போவதையும், காட்டுமிராண்டிகள் நாடுபுகுந்து கொள்ளையடிப்பதையும், அல்லது மூன்றாவது நெப்போலியனின் உத்தரவு களையும், அல்லது வெளியே உலாவச் சொல்லுகிற ஒருவர், அன்று அவர் நடந்துபோகும் ஒரு குறிப்பிட்ட பாதையை பற்றி நாம் பேசும்போது, அவற்றிற்கு எவ்விதமான மறுப்பும் இருப்பது நமக்குத் தெரியாமல் பேசுகிறோம். இந்த நடவடிக்கைகளைச் சுதந்திரமும் அவசியமும் எவ்வளவு தூரம் நடத்தி வைக்கின்றன என்பது நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது.

சுதந்திரத்தின் தரத்தைப் பற்றிய நமது உருவகம், சம்பவத்தைப்பற்றி நாம் வெவ்வேறு விதமாக நினைக்கிறதைப் பொறுத்து மாறுபட்டதாக இருக்கும். ஆனால் ஒவ்வொரு மனிதகுல நடவடிக்கையும், சுதந்திரமும் அவசியமும் ஒரு குறிப்பிட்ட இணைப்பில் சேருவதால்தான் நடக்கிறது என்று நமக்குத் தோன்றுகிறது. நாம் சோதிக்கிற ஒவ்வொரு நடவடிக்கையிலும் ஒரு குறிப்பிட்ட அளவு சுதந்திரத்தையும், ஒரு குறிப்பிட்ட அளவு

அவசியத்தையும் காண்கிறோம். எப்பொழுதுமே எந்த நடவடிக்கையிலும் அதிக சுதந்திரத்தை நாம் காணும்போது அவசியம் குறைவாகவும் அதிக அவசியத்தை நாம் காணும்போது சுதந்திரம் குறைவாகவும் இருப்பதை நாம் காண்கிறோம்.

ஒரு நடவடிக்கையைப் பற்றி நாம் எம்மாதிரி நினைக்கிறோமோ, அதை பொறுத்துத்தான் சுதந்திரத்தினுடையவும், அவசியத்தினுடையவும் கூடுதல்கள், குறைவுகள் இருக்கின்றன. ஆனால், அவைகளின் உறவு எப்பொழுதுமே ஒன்றுக்கொன்று மாறாகவே இருக்கும்.

தண்ணீரில் மூழ்கிறவனைக் கைப்பற்றும்போது அவனையும் மூழ்கடிக்கிறான். பசியோடு உள்ள ஒரு தாய் தனது குழந்தைக்குப் பால் கொடுப்பதால் மேலும் களைப்பு அடைந்து உணவைத் திருடுகிறாள். ஒழுங்கு முறையில் பயிற்சி பெற்ற ஒருவன் அலுவலில் இருக்கும்போது, அவனுக்குக் கிடைத்த உத்தரவின்படி பாதுகாப்பில்லாத ஒருவனைக் கொல்லுகிறான். ஆனால் உத்தரவின்படி அவன் செய்வதால், அவனுடைய குற்றம் குறைவாகிறது. அவசியம் என்ற சட்டத்திற்கு அதிகமாக அடிமையாகவும், குறைவான சுதந்ததிரத்தோடும் அவன் இருக்கிறான். இந்த மனிதர்கள்எந்தச் சந்தர்ப்பங்களில் வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை அறிந்த ஒருவரைவிட, குறைவான சுதந்திரமும், அவசியம் என்ற சட்டத்திற்கு அதிகமாக அடிமைத்தனமும் கொண்டவனாக அவன் இருக்கிறான். தானே மூழ்கிக்கொண்டிருக்கிறான் என்பதை அறியாதவனையும், அந்தத் தாயார் பசியோடு இருக்கிறாள் என்பதை அறியாதவனையும், அந்தச் சிப்பாய் உத்தரவுப்படி நடக்கவேண்டியவன் என்பதை அறியாதவனையும்விட அதிகமாக சுதந்திரமுள்ளவனாய் இருக்கிறான். இருபது வருஷங்களுக்கு முன்னர் ஒருவன் ஒரு கொலை செய்துவிட்டு சமாதானமாகவும், கெடுதல் இல்லாமலும் சமூகத்தில் வாழ்ந்து வருவானானால், அவனுடைய செய்கை அவசியத்தினால் ஏற்பட்டதாகவும், அவனுடைய குற்றம் குறைவானதாகவும் காணப்படும். கொலை நடந்த மறு தினத்தில் அதைப்பற்றி யோசிக்கிறவனுக்குத் தோன்றுவதைவிட, இருபது வருஷங்கள் கழிந்த பின்பு குறைவாகவே காணப்படும். அதேமாதிரி, ஒரு பைத்தியக்காரனோ, ஒரு குடிகாரனோ, அல்லது ஒரு முன் கோபக்காரனோ செய்கிற காரியங்கள், அவர்களுடைய மனதை அறிந்த ஒருவருக்குக் குறைந்த சுதந்திரத்துடனும் அதிகமான அவசியத்துடனும் செய்யப்பட்டதாகக் காணப்படும். ஆனால், அவர்களுடைய மனதை அறியாதவருக்கு அவையெல்லாம் அதிகச்

சுதந்திரத்துடனும் குறைந்த அவசியத்துடனுமே செய்யப் பட்டதாகக் காணப்படும். இம்மாதிரி காரியங்களில் சுதந்திரத்தின் உருவகம் குறைந்தோ கூடியோ அதற்குத் தகுந்தபடி அவசியத்தின் உருவகம் கூடியோ குறைந்தோ அந்தக் காரியங்களைப் பற்றி கவனிக்கிறவர்களின் தன்மைக்கு ஏற்றபடி காணப்படும். ஆகவே, அவசியத்தின் உருவகம் அதிகமானால், சுதந்திரத்தின் உருவகம் குறைவாகவும், சுதந்திரத்தின் உருவகம் அதிகமானால், அவசியத்தின் உருவகம் குறைவாகவும் காணப்படுகின்றன.

மதமும், மனித குலத்தின் பகுத்ததறிவும், சட்ட சாஸ்திரமும், சரித்திரமும், அவசியத்திற்கும் சுதந்திரத்திற்குமுள்ள இந்த உறவை அறிந்திருக்கின்றன.

எல்லாக் காரியங்களும், ஒன்றுகூட விதிவிலக்கு இல்லாமல், அடியில் கண்ட மூன்று விஷயங்கள் முழு சுதந்திரத்தினுடையவும், அவசியத்தினுடையவும் நமது உருவகங்கள் கூடுவதும் குறைவதும் அமைந்திருக்கின்றன:

1. செய்கைகளைச் செய்கிற மனிதனுக்கும் வெளி உலகத்திற்கும் உள்ள உறவு;

2. காலத்திற்கும் அவனுக்கும் உள்ள உறவு;

3. செய்கைக்கான காரணங்களுக்கும் அவனுக்கும் உள்ள உறவு.

(1) நாம் முதலில் ஆலோசிக்க வேண்டிய விஷயம், வெளி உலகத்தோடு மனிதனுக்குள்ள உறவைப்பற்றிய கருத்தில் தெளிவாய் இருக்கவேண்டும். மனிதனுடன் சமஜீவிகளாக உள்ள ஒவ்வொன்றிற்கும் அவனுக்கும் உள்ள உறவைப்பற்றி நாம் நன்றாய்த் தெரிந்துகொள்ள வேண்டும்.

இதன்மூலம்தான் பின்கண்டவைகள் தெளிவாக நமக்குத் தோன்றுகின்றன. அதாவது, தரையில் நிற்கிறவனைவிட தண்ணீரில் மூழ்கிறவன் குறைவான சுதந்திரமும், அதிகமான அவசியமும் உள்ளவனாய் இருக்கிறான்; ஜன நெருக்கமான ஒரு ஜில்லாவில் மற்றவர்களோடு நெருங்கிய தொடர்புள்ள ஒருவன், அல்லது குடும்பக் காரியம், காரியாலயக் காரியம் ஆகியவைகளால் கட்டுப்பட்ட ஒருவன், அல்லது தொழில் கடமைகளால் கட்டுப்பட்ட ஒருவன், தனியாக ஒதுங்கி நின்று வாழ்க்கை நடத்துகிற ஒருவனைவிட சுதந்திரம் குறைவானவனாகவும், அவசியம் அதிகமானவனாகவும் இருக்கும்படி நேரிடுகிறது.

ஒரு மனிதனைச் சுற்றிலும் உள்ள உறவுகளை நீக்கிவிட்டு, அவனைப் பற்றி மட்டும் தனியாக நாம் சிந்திப்போமானால்,

அவனுடைய செய்கை ஒவ்வொன்றும் சுதந்திரமானதைப் போல நமக்குத் தோன்றும். ஆனால், அவனைச் சுற்றியுள்ள ஏதாவது ஒன்றுக்கும் அவனுக்கும் உள்ள உறவை நாம் பார்ப்போமானால், ஏதாவது ஒன்றுக்கும் அவனுக்கும் உள்ள தொர்பை நாம் பார்ப்போமானால் ஒன்றைக் காணமுடியும்; அதாவது, அவன் ஒருவனுடன் பேசும்போதோ, ஒரு புத்தகத்தைப் படிக்கும்போதோ, ஒரு வேலையை அவன் செய்துகொண்டிருக்கும்போதோ, அல்லது அவன் சுவாசம் விட்டுக்கொண்டிருக்கும்போதோ, அல்லது அவனைச் சுற்றிலும் வெளிச்சம் விழுந்துகொண்டிருக்கும்போதோ, அந்தத் தொடர்பிலிருந்து ஒன்றைக் காணமுடியும்; அதாவது, இந்தச் சந்தர்ப்பங்கள் ஒவ்வொன்றும் அவன்மீது தங்கள் செல்வாக்கை உபயோகித்து அவனுடைய நடவடிக்கைகளில் ஒரு பகுதியையாவது ஆட்சி செய்து வருகின்றன. இந்தச் செல்வாக்குகளை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக நாம் காண்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவனது சுதந்திரத்தைப் பற்றிய நமது உருவகம் குறைவடைகிறது. அவ்வளவுக்கு அவ்வளவு அவனை அழுத்திக்கொண்டிருக்கும் அவனுடைய அவசியத்தைப் பற்றிய நமது உருவகம் பெருகுகிறது.

(2) இரண்டாவதாக நாம் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய விஷயம் காலம் என்பதாகும். மனிதனுக்கும் உலகத்திற்கும் உள்ள கால உறவைப்பற்றியும், அந்தக் காலத்தில் மனிதனின் செய்கைக்குள்ள இடத்தைப்பற்றியும் நாம் தெளிவாக உணர்ந்துகொள்ள வேண்டும். இந்த இடத்தில்தான் ஆதி மனிதன் கீழே விழுந்தான். அதன் பலனாக மனித குலம் தோன்றியது. இன்று திருமணம் செய்யும்போது, ஒரு மனிதன் இருப்பதைவிட ஆதி மனிதன் சுதந்திரக் குறைவாக இருந்ததாகக் காணப்படுகிறநது. இதனால்தான், காலத்தினால் என்னோடு சம்பந்தப்பட்ட, நூற்றாண்டுகளுக்கு முன்பாக வாழ்ந்துவந்த மக்களின் நடவடிக்கைகள், இப்பொழுது வாழ்ந்து வருகிறவர்களின் சுதந்திரத்தைப் போல காணப்படவில்லை. இதன் விளைவுகளை என்னால் இன்னமும் அறிய முடியவில்லை.

சுதந்திரத்தைப் பற்றியோ, அவசியத்தைப் பற்றியோ நாம் கொண்டுள்ள உருவகத்தின் தரமானது, இந்த விஷயத்தில் சம்பவம் நடந்த காலத்திற்கும், நாம் அதைப் பரிசீலனை செய்யும் காலத்திற்கும் இடையிலுள்ள வித்தியாசத்தைப் பொறுத்து கூடவோ குறையவோ இருக்கும்.

நான் இப்பொழுதுள்ள அதே சந்தர்ப்பங்களில் ஒரு வினாடிக்கு முன்பாக நான் செய்த ஒரு காரியத்தைச் சிந்தித்துப்பார்க்கும்போது, என்னுடைய செய்கை சந்தேகம் இல்லாமல் சுதந்திரமாகச் செய்யப்பட்டதாக எனக்குத் தோன்றுகிறது. ஆனால், ஒரு மாதத்திற்கு முன்பாக, வேறு விதமான சந்தர்ப்பங்களில் நான் செய்த ஒரு காரியத்தைப் பற்றி யோசிப்பேனானால், நான் ஒன்றை ஒப்புக்கொள்ளாமல் இக்கமுடியாது. அதாவது, அந்தக் காரியத்தை நான் செய்யாமல் இருந்திருந்தால், அதனால் ஏற்பட்ட நல்ல, மனதிற்குகந்த, அவசியமான பலன்கள் ஏற்பட்டிருக்க முடியாதென்று தோன்றுகிறது. இன்னும் பத்து வருஷங்களுக்கோ, அதற்கு முன்பாகவோ, நான் செய்த ஒரு பாரியத்தைப் பற்றி யோசித்துப் பார்த்தால், அதனால் ஏற்பட்ட விளைவுகள் இன்னும் தெளிவாக எனக்குக் காணப்படுகின்றன; அந்தக் காரியத்தை நான் செய்யாமல் இருந்திருந்தால், என்ன பலன் நேரிட்டிருக்கும் என்பதை என்னால் புரிந்துகொள்ளுவது கஷ்டமாய் இருக்கும். இன்னும் பின்னால் சென்று நான் யோசிப்பேனானால், அல்லது எனது முடிவைக் கூற இன்னும் ஒத்திவைத்துக்கொண்டு போவேனானால், எனது செய்கையிலுள்ள எனது சுதந்திரத்தைப் பற்றிய நம்பிக்கை அதிகச் சந்தேகத்திற்கு இடமாய் விடுகிறது.

சரித்திரத்திலும், மனித குலத்தின் பொதுவான விஷயங்களில் நடந்த சம்பவங்கள் இதே மாதிரியான நம்பிக்கை வரிசையிலேயே காணப்படுகின்றன. நமது காலத்தில் நடக்கும் ஒரு சம்பவமானது, அதில் கலந்து கொண்டவர்களின் செய்கையினால் தான் சந்தேகமில்லாமல் ஏற்பட்டதென்று நமக்குத் தோன்றுகிறது. ஆனால், வெகு காலத்திற்கு முன்பாக நடந்த ஒரு சம்பவத்தைப் பற்றி நாம் யோசிக்கும்போது, அதனால் ஏற்பட்ட பலன்களை நாம் காண்கிறோம். ஆகவே, அதைப் பற்றி வேறுவிதமாக நாம் எதுவும் யோசிக்கமுடியாது. சம்பவங்களின் காலம், பின்னால் போகப்போக அவை எதேச்சாதிகாரமாக செய்யப்பட்டதாக நமக்குத் தோன்றுவதில்லை.

★ஆஸ்டிரோ–பிரஷ்ய யுத்தம், பிஸ்மார்க்கின் தந்திர நடவடிக்கைகளின் பலனாக ஏற்பட்டது என்று சந்தேகம் இல்லாமல் நமக்குத் தோன்றுகிறது. நெப்போலியனின் யுத்தங்கள் கூட, வீரர்களின் விருப்பத்தினால் ஏற்பட்ட விளைவுகள் என்று நமக்கு இன்னமும் தோன்றுகின்றன. ஆனால், சிலுவை யுத்த காலத்தில் அந்தச் சம்பவம், சரித்திரத்தில் அதற்குரிய இடத்தைப் பெற்றிருக்கிறது என்பதை நாம் காண்கிறோம். அது இல்லாமல் தற்கால ஐரோப்பிய சரித்திரத்தை நாம் மனோராஜ்யம் செய்யப்கூட

முடியாது. சிலுவை யுத்தத்தைப் பற்றி எழுதிய சரித்திரக்காரர்களுக்கு, அந்த சம்பவம் ஏதோ சிலருடைய விருப்பங்களின் பலனாக ஏற்பட்டதென்று தோன்றலாம். மக்கள் குடி பெயர்ந்துபோன விஷயத்தைப் பற்றி பேசம்போது, ஐரோப்பாவின் புனருத்தாரணம் முழுவதும் அட்டல்லா (அன்ஸ் மன்னர்)வின் விருப்பத்தைப் பொறுத்து இருந்தது என்பது, இன்று ஒருவர் மண்டையிலும் நுழைவதில்லை, சரித்திரத்தில் முன்னாலுள்ள காலங்களுக்குப் போக, போக சம்பவத்தில் சம்பந்தப்பட்டிருந்தவர்களின் சுதந்திரத்தைப் பற்றி நமக்குச் சந்தேகம் அதிகரிக்கிறது; அவசியத்தின் சட்டமே நமக்கு அதிகமாய்க் காணப்படுகிறது.

(3) மூன்றாவதாக நாம் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய விஷயம்; வாதத்தினால் ஏற்படும் காரணங்களின் சங்கிலி முடிவற்றதாய் இருக்கிறது. அத்ற்குள் ஒவ்வொரு காரியத்தையும் நாம் அறிந்துகொள்ள முடியும். அதே மாதிரி ஒவ்வொரு மனிதனின் செய்கையையும் நாம் அறிந்து கொள்ளமுடியும். ஆகவே, அவையெல்லாம் அதில் அடங்கி இருக்கவேண்டும். அதாவது, முன்னால் நடந்த ஒரு காரியத்தின் பலனாக பின்னால் கடக்கப்போகும் ஒரு காரியத்திற்குக் காரணமாக அடங்கி இருக்கவேண்டும். இவற்றின் தராதரங்களைக் கவனிப்பதே மூன்றாவதாக நாம் ஆலோசிக்க வேண்டிய விஷயம்.

மனிதனை ஆட்சி செய்யும் உடற்கூறு சாஸ்திரம், மனோதத்துவ சாஸ்திரம், சரித்திர சாஸ்திரம் ஆகியவைகளை நாம் நன்றாய் ஆராய்ந்து அறிந்துகொள்ளுவது நல்லது. ஒரு சம்பவத்திற்குக் காரணமாக உடற்கூறு, மனோ தத்துவம், சரித்திரம் ஆகியவைகள் எவ்வளவு தூரம் பொறுப்பாய் இருக்கின்றன என்பதை நாம் தெளிவாக அறிந்துகொள்ளவேண்டும்; நாம் ஆராய்ச்சி செய்யவேண்டிய விஷயம் எளிமையானதாகவும், மனதையும் குணத்தையும் பொறுத்த விஷயம் சிக்கல் இல்லாமலும் இருந்தால், நமது காரியங்களும் மற்றவர்களின் காரியங்களும் அவசியத்திற்கு அதிகமாக கட்டுப்பட்டவையாகவும், சுதந்திரம் குறைவாக உள்ளதாகவும் நமக்குக் காணப்படும்.

ஒரு குற்றமோ, ஒரு நல்ல காரியமோ, அல்லது ஒரு ஒழுக்கக் குறைவான விஷயமோ செய்யப்படும்போது, அதன் காரணத்தை நாம் அறியாதவரையில், அதற்கு அதிகச் சுதந்திரத்தைக் கொடுக்கிறோம். குற்றத்தைப் பொறுத்தவரையில் அதற்கு உடனே தண்டனை கொடுக்கவேண்டும் என்று நாம் வெகு அவசரமாகக் கேட்கிறோம். நல்ல காரியத்தைப் பொறுத்த வரையில், அதன்

சிலாக்கியத்தை மிகுந்த உயர்வாக மதிக்கிறோம்; நமக்கு சிரத்தை இல்லாத ஒரு காரியத்தைப் பொறுத்தவரையில், அதில் தனித் தன்மையையும் கற்பனையையும் சுதந்திரத்தையும் அதிகமாகக் காண்கிறோம். ஆனால், அந்தக் காரியத்திற்குரிய எண்ணற்ற காரணங்களில் ஒன்றாவது நமக்குத் தெரியுமானால், அவசியம் என்ற தன்மை அங்கு இருப்பதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆகவே, குற்றத்திற்கான தண்டனையை நாம் அவ்வளவாக வற்புறுத்துவது இல்லை; அல்லது, அந்த நல்ல செய்கையின் சிலக்கியத்தை ஒப்புக்கொள்ளுவதும் இல்லை; அல்லது, அந்தக் கற்பனைச் செய்கையின் சுதந்திரத்தை நாம் அங்கீகரிப்பதும் அல்ல. கெட்டவர்களுடன் ஒரு குற்றவாளி பழகியவன் என்பது நமக்குத் தெரிந்ததும் அவனுடைய குற்றம் நமது கண்களில் குறைவாகவே காணப்படுகிறது. தாய் தந்தையினுடைய சுயநலத் தியாகமும், அல்லது ஒரு பரிசை எதிர்பார்த்து செய்யப்படுகிற யாகமும், ஒன்றையும் எதிர்பாராமல் செய்யும் சுயநலத் தியாகத்தைவிட தெளிவாக நமக்குக் காணப்படுகின்றன. ஆகவே, நமது அனுதாபம் குறைகிறது. அவர்களுடைய சுதந்திரக்குறைவும் அதில் காணப்படுகிறது. ஒரு மதப்பிரிவையோ, ஒரு கட்சியையோ ஸ்தாபிக்கிறவர், அல்லது ஒன்றைக் கண்டுபிடிக்கிறவர், தங்களுடைய வேலைகளுக்காக எம்மாதிரி எப்படி வழிகளை வகுக்கிறார்கள் என்பதை நாம் அறிந்துகொண்டதும். அவர்கள் மீதுள்ள மதிப்பு நமக்குக் கறைகிறது. நாம் ஏராளமான உதாரணங்களைப் பெறமுடியுமானால், மக்களின் செய்கைகளில் உள்ள காரணத்திற்கும் காரியத்திற்கும் உள்ள பரஸ்பர சம்பந்தத்தை அறிவதற்கு நாம் இடைவிடாமல் முயற்சிசெய்வோமானால், அவர்களுடைய செய்கைகள் எல்லாம் கட்டாயத்தின் மீதே செய்யப்படுவதாகத் தோன்றும். காரியத்தோடு காரணங்களை மிகுந்த பொருத்தமாக நாம் அமைக்கும்போது, அவர்களுடைய சுதந்திரம் குறைவாய் இருப்பதாக நமக்குத் தோன்றும். சாதாரண காரியங்களை நாம் ஆராய்ச்சி செய்வோமானால், அம்மாதிரியான காரியங்களை ஏராளமாக நாம் ஆய்ச்சிக்கு எடுத்துக்கொண்டால், அவசியம் என்பதற்கு அவர்கள் அடிமைப்பட்டிருப்பது நாணயமற்ற விதமாக மகன் நடந்துகொள்ளுவதும், கெட்டவர்களின் சகவாசத்தால் ஒரு பெண் தவறாய் நடந்துகொள்ளுவதும், ஒரு குடிகாரன் ஏராளமாய் குடியில் மூழ்குவதும், நமக்கு அவர்களின் காரணங்களை அறியும்போது அவர்களின் செய்கைகள் சுதந்திரக் குறைவினால் செய்யப்பட்டதாகவே தோன்றும். ஒரு மனிதனுடைய நடவடிக்கைகள் ஒரு குழந்தையைப்போல மன

வளர்ச்சி இல்லாமல் இருக்குமானால், அல்லது ஒரு பைத்தியக்காரன் செய்வதைப்போலவோ, அல்லது ஒரு அறிவில்லாதவன் செய்வதைப்போலவோ இருக்குமானால், அதற்கான காரணங்களை நாம் அறிந்த பின்பு, அவனுடைய தன்மையையும் அவனுடைய புத்திசாலித் தனத்தையும் கருத்தில் வைத்து யோசிக்கும்போது ஒரு விஷயத்தை நாம் காண்கிறோம். அதாவது, அவசியம் என்பது அதிகமாகவும், சுதந்திரம் என்பது குறைவாகவும் இருப்பதாக நாம் காண்கிறோம். ஆகவே, காரியத்தைத் தாண்டிவிடும் காரணத்தை நாம் அறிந்தவுடன், அதனால் ஏற்படும் பலன் என்ன என்பதை நாம் முன்னதாகவே சொல்லிவிடமுடியும்.

நாம் ஆலோசனைக்கு எடுத்துக்கொண்ட இந்த மூன்று விஷயங்கள் மீதுதான் குற்றங்களுக்கான பொறுப்பற்ற தன்மைகளும், சட்டங்களின் கையாலாகாத் தன்மைகளும் அமைந்திருக்கின்றன. ஒரு மனிதனின் செய்கையைப் பற்றித் தீர்ப்பு கூறும்போது, எந்தச் சந்தர்ப்பங்களில் அந்த மனிதன் இருந்தான் என்பதை நாம் எவ்வளவு தூரம் கூடுதல், குறைவாக அறிந்திருக்கிறோமோ, அதைப் பொறுத்துத்தான் கூடுதல், குறைவான பொறுப்பும் காணப்படுகிறது. அதே மாதிரி, செய்கை செய்யப்பட்ட காலத்திற்கும் அதைப்பற்றிய ஆராய்ச்சிக்கும் இடையிலுள்ள கால அளவின் கூடுதல் குறைதலைப் பொறுத்தும் அது இருக்கிறது. அதே மாதிரி, அந்தச் சம்பவத்திற்கான காரணங்களை நாம் எவ்வளவு தூரம் கூடுதல் குறைதலாக அறிந்திருக்கிறோமோ அதைப் பொறுத்தும் அது இருக்கிறது.

## 10

ஒரு மனிதனின் வாழ்க்கையைப் பற்றி நாம் யோசிக்கும்போது வெளி உலகத்திலுள்ள தொடர்பின் கூடுதல் குறைதலும், காலத்தின் கூடுதல் குறைதலும், காரணங்கள் மீதும் நம்முடைய சார்பின் கூடுதல் குறைதலும் சேர்ந்து, சுதந்திரம், அவசியம் என்ற உருவகங்களைக் கூட்டவோ, குறைக்கவோ செய்கின்றன.

வெளி உலகத்தோடு உள்ள சம்பந்தம் தெளிவாய் தெரிந்துள்ள ஒரு மனிதனின் விஷயத்தை நாம் ஆராய்ச்சி செய்வோமானால், காரியத்திற்கும் ஆராய்ச்சிக்கும் இடையிலுள்ள காலம் அதிகமாய் இருக்குமானால், காரியத்திற்கான காரணங்கள் தெளிவாய்த் தெரியுமானால், நாம் அங்கே அவசியத்தை அதிகமாகவும், சுதந்திரத்தைக் குறைவாகவும் உருவகம் செய்கிறோம்.

வெளித்தொடர்புகள் மிகவும் குறைவாகவுள்ள ஒரு மனிதனின் விஷயத்தை நாம் ஆராய்வோமானால், அவனுடைய செய்கை சமீபத்தில் நடந்திருக்குமானால், அதற்கான காரணங்கள் நமக்குத் தெரிய முடியாமல் இருக்குமானால், அங்கே அவசியம் குறைவாகவும், சுதந்திரம் அதிகமாகவும் உள்ள ஒரு உருவகத்தை நாம் செய்கிறோம்.

நாம் வேறு முறையில் அதை நோக்கினாலும், வெளி உலகத்திற்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பை நாம் எவ்வளவு தெளிவாகப் புரிந்து கொண்டாலும், அந்தத் தொடர்பு நமக்கு எவ்வளவுதான் கிடைக்காமல் இருந்தாலும், கால அளவு எவ்வளவுதான் கூடுதல் குறைதலாக இருந்தாலும், காரியத்திற்கான காரணங்கள் எவ்வளவுதான் தெளிவாகவும் தெளிவற்றவையாகவும் இருந்தாலும், மேலே சொன்ன இரண்டு விஷயங்களில் எதிலுமே நாம் பூரண சுதந்திரத்தையோ, அல்லது பூரண அவசியத்தையோ காணமுடியாது.

(1) வெளி உலகத்தின் செல்வாக்கிலிருந்து விடுபட்டிருப்பதாக ஒரு மனிதனை எவ்வளவு தூரம்தான் நாம் மனோராஜ்யம் செய்தாலும், இடைவெளியிலிருந்து அவன் சுதந்திரம் அடைந்திருப்பதாக நாம் ஒரு பொழுதும் நினைக்கவே முடியாது.ஒவ்வொரு மனித செய்கையையும், தவிர்க்கமுடியாதபடி அவனைச்சுற்றியுள்ள சூழ்நிலையும், அவனுடைய சொந்த உடலும் ஆண்டு வருகின்றன. எனது கையை நான் உயர்த்துகிறேன்; மீண்டும்நான் தொங்கவிடுகிறேன்; எனது செய்கை சுதந்திரம் உள்ளதாகக் காணப்படுகிறது. ஆனால், என்னுடைய கையை ஒவ்வொரு திசையிலும் நான் உயர்த்த முடியுமா என்று என்னையே நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுதுதான் என்னைச் சுற்றிலுமுள்ள வஸ்துக்களோ, என்னுடைய உடல் அமைப்போ தடை செய்யாமல் இருக்கக்கூடிய திசையை நோக்கியே நான் எனது கையை உயர்த்தினேன் என்று கண்டுகொள்ளுகிறேன். எத்தனையோ திசைகள் இருக்க, அவற்றிலிருந்து நான் ஒன்றைத்தான் பொறுக்கி எடுத்தேன். ஏனெனில், அந்தத் திசையில்தான் குறைவான இடையூறுகள் இருந்தன. என்னுடைய செய்கை சுதந்திரமாய் இருக்கவேண்டுமானால், அதற்கு இடையூறுகள் எதுவும் இருக்கக்கூடாது. ஒரு மனிதன் சுதந்திரமாய் இருக்கிறான் என்று நாம் உருவகம் செய்ய வேண்டுமானால், இடை வெளிக்கு அப்பால் அவன் இருப்பதாக நாம் மனோராஜ்யம் செய்யவேண்டும். அது அசாத்தியமான காரியம்.

(2) ஒரு காரியத்தைச் செய்த காலத்தையும், அதைப்பற்றி தீர்ப்பு கூறும் காலத்தையும், எவ்வளவுதான் நெருக்கி அமைத்தாலும் அந்தக் காலத்திலிருந்து சுதந்திரம் அடைய முடியும் என்பதை நாம் உருவகம் செய்யவே முடியாது. ஏனென்றால், ஒரு வினாடிக்கு முன்பாக நான் செய்த காரியத்தை ஆலோசனை செய்து பார்ப்பேனானால், அது சுதந்திரமானதல்ல என்பதை நான் இன்னமும் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். ஏனென்றால், தடுக்க முடியாதபடி அந்த வினாடியும், அந்த வினாடியில் செய்யப்பட்ட காரியமும் இணைந்து நிற்கின்றன. எனது கையை நான் உயர்த்த முடியுமா ? நான் உயர்த்துகிறேன். ஆனால் என்னையே நான் கேட்டுக்கொள்ளுகிறதாவது : கடந்துபோன அந்த வினாடியில் என்னுடைய கையை உயர்த்தாமல் நான் இருந்திருக்க முடியுமா ? இதைப் பற்றி என்னுடைய மனதில் நம்பிக்கை ஏற்படுவதற்காக அடுத்த வினாடியில் நான் கையை உயர்த்தாமல் இருக்கிறேன். ஆனால், நான் கேள்வி கேட்ட அந்த முதல் வினாடியில், நான் அம்மாதிரி இப்பொழுது செய்யாமல் இருக்கவில்லை. காலம் கடந்துபோயிற்று. அதை என்னால் நிறுத்த முடியாது. நான் கையை உயர்த்திய காலமும், நான் கையை உயர்த்தாமல் இருந்த காலமும் ஒரே காலமல்ல; அல்லது, நான் கையை உயர்த்திய காலத்தில் என்னைச் சுற்றி நின்ற காற்றும், இப்பொழுது என்னைச் சுற்றி நிற்கும் காற்றும் ஒரு காற்றல்ல. நான் என்னுடைய முதல் காரியத்தை செய்த அதே வினாடி இனி திரும்பி வராது. அந்த வினாடியில் என்னால் ஒரே காரியத்தைத்தான் செய்ய முடியும். நான் அச்சமயம் என்ன செய்திருந்தாலும், அது ஒன்றே ஒன்றாயத்தான் இருக்க மடியும். ஒரு வினாடிக்குப் பின்னால் என்னுடைய கையை நான் உயர்த்தாமல் இருந்தேன் என்றால், அதைக்கொண்டு, முந்தைய வினாடியில் நான் உயர்த்தாமல் இருந்திருக்க முடியும் என்று நிரூபிக்க முடியாது. அந்த ஒரே ஒரு வினாடியில் ஒரு காரியத்தைத்தான் நான் செய்ய முடியும். ஆகையால், அது வேறு எந்த காரியமாகவும் இருக்க முடியாது. அச்செய்கை சுதந்திரமானது என்று நினைக்கவேண்டுமானால், தற்காலத்தில்தான் அப்படி நினைக்கவேண்டியது அவசியமாய் இருக்கிறது. தற்காலம் என்பது கடந்த காலத்திற்கும் எதிர் காலத்திற்கும் மத்தியில் உள்ள தற்காலமாகும். அதாவது, காலத்திற்கு புறம்பானதாகும். அம்மாதிரி காலத்திற்குப் புறம்பாகச் செய்வது அசாத்தியமானது.

(3) காரணங்களைப்பற்றி அறிந்துகொள்ளும் கஷ்டம் எவ்வளவுதான் அதிகரித்தபோதிலும், பூரண சுதந்திர உருவகத்தை, அதாவது, காரணமில்லாத காரியத்தை, நாம் அடையவே முடியாது,

ஒரு செய்கையில் விருப்பத்தின் தோற்றமான காரணத்தைக் கண்டுபிடிப்பது எவ்வளவுதான் கஷ்டமானதாய் இருந்தாலும், வாதமானது காரணத்தை மேற்கொள்ளவும் காரணத்தை கண்டுபிடிக்கவும் தூண்டுகிறது. ஏனெனில், காரணம் இல்லாமல் எந்தக் தோற்றத்தையும் நாம் நினைத்துப் பார்க்க முடியாது. ஒரு காரணமும் இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்வதற்கு எனது கையை நான் உயர்த்துகிறேன். ஆனால், காரணம் இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்யவேண்டும் என்று எனக்குள்ள ஆசை இருக்கிறதே, அதுதான் என்னுடைய செய்கைக்கு காரணமாகும்.

ஒரு காரணமும் இல்லாமல், திடீரென்று ஒருவன் எல்லாவிதமான செல்வாக்குகளிலிருந்தும் விடுபட்டு, ஒரு காரியத்தைச் செய்கிறான் என்று வைத்துக்கொள்ளுவோம், பூஜ்யத்திற்கு சமமான, அணுவளவான அவசியம்தான் அவன் காரியத்திற்கு இருந்திருக்கவேண்டும் என்று சொல்லுவதாய் வைத்துக்கொள்ளுவோம். அப்படி இருந்தாலும், மனிதனுக்குப் பூரண சுதந்திரம் இருப்பதாக நாம் ஒப்புக்கொள்ள முடியாது. வெளி உலகத்து செல்வாக்கு அவனைப் பாதிக்காமல் இருக்குமானால், காலத்திற்குப் புறம்பாக அவன் இருக்க முடியுமானால், காரணத்திலிருந்து சுதந்திரமாக அவன் இருக்க முடியுமானால், அவன் ஒரு மனிதனாய் இருக்க முடியாது.

அதே வழியில், ஒரு மனிதனுடைய செய்கை பூரணமாகச் சுதந்திர மற்றதாக இருக்கிறது என்றும், பூரணமாக அவசியத்திற்கு அடிமைப்பட்டு இருக்கிறது என்றும் நாம் ஒருக்காலும் நினைத்துப் பார்க்கவே முடியாது.

(1) மனிதன் அமைந்துள்ள இடைவெளி நிலைமைகளைப் பற்றிய அறிவில் நாம் எவ்வளவுதான் உயர்ந்தபோதிலும், அந்த அறிவு எப்பொழுதும் பூரணமாக முடியாது. இடைவெளி எப்படி எல்லையற்றதாகக் காணப்படுகிறதோ அதேமாதிரி அந்த நிலைமைகளும் எல்லையற்றுக் காணப்படுகின்றன. ஆகவே, மனிதனைத் தூண்டக்கூடிய அந்த எல்லா நிலைமைகளையும் நாம் வரையறுக்காமல் இருக்கிறவரையில், அவசியம் என்ற விதியானது பூரணமாய் இருக்க முடியாது, ஒரு குறிப்பிட்ட அளவு சுதந்திரம் தங்கியே நிற்கும்.

(2) நாம் சோதித்துப் பார்க்கும் செய்கையின் கடந்த காலத்திற்கும், அதைப்பற்றித் தீர்ப்பு கூறும் காலத்திற்கும் இடையிலுள்ள காலத்தை எவ்வளவுதான் நாம் நீட்டினாலும், அந்தக் கால வரையறை ஒரு குறிப்பிட்ட அளவுதான் இருக்கும்.

ஆனால், காலம் என்பது எல்லையற்றது. ஆகவே, இந்த முறையிலும் அவசியம் என்பது பூரணமாக ஏற்பட முடியாது.

(3) ஒரு காரியத்திற்கான காரணத்தின் சங்கிலியைப்பற்றி நாம் எவ்வளவுதான் அறிந்திருந்தாலும், அந்தச் சங்கிலியைப் முழுவதும் நாம் அறிய முடியாது. ஏனெனில், அது எல்லையற்றது. ஆகவே, அவசியம் என்பது பூரணமாக இருக்க முடியாது என்ற நிலைமைக்கே நாம் மீண்டும் வந்து சேருகிறோம்.

சில விஷயங்களில், உதாரணமாக மரணப்படுக்கையில் இருக்கும் மனிதனிடத்திலும் கர்ப்பத்தில் இருக்கும் குழந்தை இடத்திலும், ஒரு பரிபூரண முட்டாளிடத்திலும், சுதந்திரம் என்பது பூரணமாக இல்லாமல் இருக்கலாம். ஆனால், இதைக்கொண்டு நாம் ஆராய்ச்சி செய்யும் மனிதனை கவனிக்கக்கூடாது. அப்படிச் செய்வது, மனிதனைப்பற்றிய உருவகத்தையே நாசமாக்குவதாய் இருக்கும். ஏனெனில், சுதந்திரம் என்பது இல்லையானால், மனிதன் என்பதும் இல்லை. ஆகவே, கொஞ்சங்கூட சுதந்திரம் இல்லாமல், அவசியம் என்ற சட்டத்திற்குப் பூரணமாக மனிதனின் செய்கையை உட்படுத்துவதானது, கொஞ்சம்கூட சுதந்திரம் இல்லாமல் மனிதனின் உருவகத்தைச் செய்ய முடியாததைப்போல அசாத்தியமானது.

ஆகவே சுதந்திரம் எதுவும் இல்லாமல் மனிதனின் செய்கை அவசியம் என்ற சட்டத்திற்குப் பூரணமாய் அடிமைப்பட்டிருப் பதாக நாம் எண்ண வேண்டுமென்றால், ஒன்று செய்யவேண்டும். அதாவது, இடைவெளியின் எல்லையற்ற உறவுகளைப்பற்றிய அறிவையும், காலத்தின் எல்லையற்ற கால வரையறையின் அறிவையும், காரணங்களின் எல்லையற்ற வரிசைகளின் அறிவையும் நாம் பெறவேண்டும்.

ஒரு மனிதன் பூரண சுதந்திரமாய் இருக்கிறான் என்றும், அவசியம் என்ற சட்டத்திற்கு அவன் உட்பட்டவன் அல்லவென்றும் நாம் எண்ணுவதானால் ஒன்று செய்யவேண்டும். அதாவது, அவன் தனித்து நிற்பதாகவும், இடைவெளிக்குப் புறம்பாகவும் காலத்திற்குச் புறம்பாகவும் காரணத்திற்குச் சார்பில்லாதவனாகவும் அவன் இருப்பதாகவும் நாம் யூகித்துக்கொள்ள வேண்டும்.

முதலாவதாக, குறிப்பிட்ட விஷயத்தில், சுதந்திரம் இல்லாமல் அவசியம் என்பது சாத்தியமானால், அவசியம் என்ற சட்டங்களில் மூலமாக அவசியத்தைப்பற்றிய ஒரு வரையறுப்பை நாம் பெறவேண்டும். அதாவது, உள்ளே ஒன்றும் இல்லாத ஒரு உருவத்தைப் பெறவேண்டும்.

இரண்டாவதாக, குறிப்பிட்ட விஷயத்தில், அவசியம் என்பது இல்லாமல் சுதந்திரம் என்பது சாத்தியமானால், நாம் ஒன்று செய்யவேண்டி இருக்கும். அதாவது, இடைவெளிக்கும் காலத்திற்கும் காரணத்திற்கும் புறம்பானதான, கட்டுப்பாடற்ற சுதந்திரம் என்ற கொள்கைக்கு நாம் வந்திருக்க வேண்டும். கட்டுப்பாடும் காலவரையறையும் இல்லாமல் போனால், அது ஒன்றுமே இல்லை. அல்லது, உருவமற்ற ஒன்றாக மட்டுமே இருக்கும்.

அப்படியானால், உலகத்தைப்பற்றி மனிதனுக்குள்ள கருத்துக்கள் எல்லாம், இரண்டு அடிப்படைகளின் மீதே அமைந்திருக்கின்றன என்ற முடிவுக்கு வருகிறோம் - புத்திக்கு எட்டாத வாழ்க்கையின் சாராம்சம்; அந்த சாராம்சத்தை வரையறுக்கிற சட்டங்கள்.

வாதம் சொல்லுகிறது: (1) இடைவெளி என்பதைப் பார்க்கக்கூடிய விதத்தில் அதன் பொருள்கள் எல்லாம் கொடுத்தபோதிலும், அந்த இடைவெளி எல்லையற்றது. வேறுவிதமாக அதைப்பற்றிச் சிந்திக்க முடியாது; (2) காலம் என்பது ஒரு வினாடிகூட ஓய்வு இல்லாமல் எல்லையற்றுச் சலன மாய்க் கொண்டிருக்கிறது. வேறுவிதமாக அதைப்பற்றி நினைக்க முடியாது; (3) காரணத்திற்கும் காரியத்திற்கும் உள்ள தொடர்பிற்கு ஆரம்பம் என்பது கிடையாதபடியால், முடிவு என்பதும் கிடையாது.

உள்ளுணர்வு சொல்லுகிறது: (1) நான் தனியாய் இருக்கிறேன்; உயிரோடு இருப்பது நான் ஒருவன்தான். ஆகவே, இடைவெளியும் எனக்குள் அடக்கமானது; (2) ஓடிக்கொண்டிருக்கும் காலத்தை, தற்காலத்தில் நிலையாகவுள்ள ஒரு வினாடியின்மூலம் நான் அளந்து பார்க்கிறேன். அது ஒன்றில்தான் நான் உயிரோடு இருக்கும் பிரக்ஞை எனக்குத் தோன்றுகிறது ஆகவே, நான் காலத்திற்குப் புறம்பானவன்; (3) நான் காரணத்திற்குப் புறம்பானவன். ஏனென்றால், என்னுடைய வாழ்க்கையிலுள்ள ஒவ்வொரு சம்பவத்திற்குமான காரணம் என்பது நானேதான் என்று நான் உணருகிறேன்.

அவசியத்தின் சட்டங்களை வாதம் சொல்லுகிறது; சுதந்திரத்தின் சாராம்சத்தை உள்ளுணர்வு கூறுகிறது.

கட்டுப்படுத்தப்படாத சுதந்திரம்தான், வாழ்க்கையின் சாராம்சம் என்று மனிதனின் உள்ளுணர்வுக்குத் தோன்றுகிறது: உள்ளே ஒன்று மில்லாத அவசியம் என்பதுதான், மூன்று உருவங்களில் மனிதனின் வாதம் என்பதற்குத் தோன்றுகிறது.

சுதந்திரம் என்பதுதான் பரிசோதிக்கப்படுகிற விஷயம். அவசியம் என்பதுதான் அதைப் பரிசோதிக்கிறது. சுதந்திரம்தான் உள்ளே உள்ள பொருள். அவசியம்தான் வெளி உருவம்.

பொருளுக்கும் உருவத்திற்கும் உள்ள உறவைப்போல இந்த இரு வகையான நடவடிக்கை மூலங்களைப் பிரிப்பதன் மூலம் பரஸ்பரம் தனித் தன்மையாகவும், தனித்தனியாகப் புத்திக்கு எட்டாதவையாகவுமான சுதந்திரத்தினுடையவும், அவசியத்தினுடையவும் உருவகங்களை நாம் பெறுகிறோம்.

அவைகளை ஒன்று சேர்ப்பதன் மூலமாகத்தான் மனித வாழ்க்கையின் தெளிவான உருவகத்தை நாம் பெறமுடியும். இந்த இரண்டு உருவகங்களும், அவைகளுடைய இணைப்பினால் உருவமாகவும் பொருளாகவும் பரஸ்பரம் வரையறுத்துக் கொள்ளுகின்றன. வாழ்க்கையின் உருவகத்தை இவற்றைத் தவிர வேறுவிதமாகப் பெறுவது சாத்தியமே இல்லை.

சுதந்திர விருப்பத்திற்கும் அவசியத்திற்கும் உள்ள ஒரு வகையான உறவைப் பற்றித்தான் மனித வாழ்க்கையில் நாம் அறிந்துகொண்ட விஷயமாகும். அதாவது, வாதத்தின் சட்டங்களைப் பற்றிய உள்ளுணர்வேயாகும்.

இயற்கையின் வெளியுலகத்தைப் பற்றி நமக்குத் தெரிந்ததெல்லாம் இதுதான். அதாவது, இயற்கையின் வேதங்களுக்கும் அவசியத்திற்கும் உள்ள ஒருவிதமான உறவேயாகும்; அல்லது, வாதத்தின் சட்டங்களுக்கும் வாழ்க்கையின் சாரத்திற்கும் உண்டான உறவேயாகும்.

இயற்கையின் பெரிய வேகங்கள் நமக்கு வெளிப்புறமாகவே இருக்கின்றன. அவைகளைப் பற்றி நமக்க பிரக்ஞை கிடையாது. நாம்அவைகளை ஆகர்ஷணம் என்றும், ஜடத்துவம் என்றும், மின்சாரம் என்றும், மிருக பலம் என்றும் அழைக்கிறோம். ஆனால், மனிதனிடம் இருக்கிற வாழ்க்கையின் வேகத்தை நாம் உணர்ந்து அதைச் சுதந்திரம் என்று அழைக்கிறோம்.

ஆகர்ஷ்ணம் என்பதன் வேகத்தைத் தனியாகப் பிரித்து நாம் அறிந்துகொள்ள முடியாவிட்டாலும், ஒவ்வொரு மனிதனாலும் உணர்ந்துகொள்ள முடியும். அவசியம் என்ற சட்டத்திற்கு அது எவ்வளவு தூரம் அடங்கி இருக்கிறதோ, அவ்வளவு தூரம்தான் அதை நாம் அறிந்துகொள்ள முடிகிறது. (ஒவ்வொன்றிற்கும் கனம் உண்டு என்ற கொள்கையிலிருந்து, நியூட்டனின் கொள்கை வரையில்) அதைப்போல, சுதந்திர விருப்பத்தின் வேகத்தையும் தனியாகப் பிரித்து நாம் அறிந்துகொள்ள முடியாவிட்டாலும், அதைப்பற்றி ஒவ்வொருவருக்கும் பிரக்ஞை உண்டு. அவசியம் என்ற சட்டங்களுக்கு அது எவ்வளவு தூரம் உட்பட்டிருக்கிறதோ, அவ்வளவு தூரம்தான் அதைப்பற்றி நாம் அறிய முடிகிறது. (மனிதன்

மரணமாகக்கூடியவன் என்பதிலிருந்து, சிக்கலானப் பொருளாதார, சரித்திர சட்டங்கள் வரையில்).

வாழ்க்கையின் இந்தச் சாரத்தை வாதத்தின் சட்டங்களுக்குள் கொண்டுவருவதுதான் அறிவு எனப்படுவதாகும்.

மனிதனின் சுதந்திர விருப்பம், நேரடியாக அவன் பிரக்ஞை கொண்டுள்ளதாகும்; மற்ற வேகங்களிலிருந்து அது வேறுபட்டது. ஆனால், வாதத்தின் கண்களில், அம்மாதிரி அது எந்த வேகத்திலிருந்தும் வேறுபட்டதாகத் தோன்றவில்லை. ஆகர்ஷணம், மின்சாரம், ரசாயன சேர்க்கைகள் அகியவைகளின் வேகங்கள்தான் ஒன்றிலிருந்து ஒன்று தனித்தனியாக விளங்குபவை. அவற்றை வெவ்வேறு விதமாக வாதம் வரையறுத்திருக்கிறது. மனிதனின் சுதந்திர விருப்ப வேகமானது, அதேமாதிரி இயற்கையின் மற்ற வேகங்களிலிருந்து வாதத்தினால், கொடுக்கப்படுகிற வரையறுப்பினால் தனித்து விளங்குகிறது. வாதத்தின் சட்டங்கள் வரையறுக்கப் படுவதிலிருந்து, அதாவது அவசியத்திலிருந்து, சுதந்திரம் என்பது ஆகர்ஷணம், அல்லது உஷ்ணம், அல்லது வளர்ச்சி செய்யக்கூடிய வேகம் ஆகியவற்றிலிருந்து எவ்விதத்திலும் வித்தியாசமாய் இருப்பதாகக் காணப்படவில்லை. ஏனெனில், வாதம் என்பதற்கு அந்தச் சுதந்திரம் என்பது வாழ்க்கையின் வரையறுக்க முடியாத ஷண நேரமுள்ள பரபரப்பேயாகும்.

வேகத்தின் வரையறுக்க முடியாத சாரமே வானத்திலுள்ள கிரகங்களை கடத்திவைக்கின்றன. அதே மாதிரி உஷ்ணம், மின்சாரம், அல்லது ரசாயன சேர்க்கை, அல்லது ஜீவசக்தி ஆகிய வேகங்களின் வரையறுக்க முடியாத சாரம்தான், வானசாஸ்திரம், பௌதீக சாஸ்திரம், ரசாயனம், தாவர சாஸ்திரம், மிருக சாஸ்திரம் ஆகியவற்றின் பொருளாய் அமைகிறது. அதே வழியில்தான் சுதந்திர விருப்பத்தின் வேகமும் சரித்திரத்தின் பொருளாய் அமைகிறது. இந்த அறிய முடியாத வாழ்க்கையின் சாரத்தின் தோற்றங்களே ஒவ்வொரு விஞ்ஞானத்திற்கும் பொருளாய் அமைகிறது; என்றாலும், அந்தச் சாரமானது தத்துவ விசாரணைக்கு உரிய பொருளாகவே அமைய முடியும். அதைப்போலவே, இடைவெளியிலும் காலத்திலும் காரணத்தின் சார்பிலும் காணப்படுகிற மனித குலத்தின் சுதந்திர விருப்ப வேகமானது சரித்திரத்திற்குப் பொருளாக அமைகிறது. ஆனால், இந்தச் சுதந்திர விருப்பம் என்பது தத்துவ விசாரணைக்குப் பொருளாய் இருக்கிறது.

அனுபவ விஞ்ஞானங்களில் நமக்குத் தெரிந்தவைகளை அவசியத்தின் சட்டங்கள் என்றும், நமக்குத் தெரியாதவைகளை ஜீவ

சக்தி என்றும் அழைக்கிறோம். வாழ்க்கையின் சாரத்தில் நமக்கத் தெரிந்தவைகளுக்கு மேலாக உள்ள தெரியாதவைகளையே ஜீவசக்தி என்று சொல்லுகிறோம்.

அதேமாதிரி, சரித்திரத்திலும், நமக்குத் தேரிந்தவைகளை அவசியத்தின் சட்டங்கள் என்றும், நமக்குத் தெரியாதவைகளைச் சுதந்திர விருப்பம் என்றும் நாம் அழைக்கிறோம். மனித வாழ்க்கையின் சட்டங்களில் நமக்குத் தெரிந்தவைகளுக்கு மேலாக உள்ள தேரியாதவைகளே சரித்திரத்தில் சுதந்திர விருப்பம் என்று சொல்லப்படுகிறது.

## 11

காலத்திலும், காரணத்தின் சார்பிலும் வெளி உலகத்தோடு மனிதனுடைய சுதந்திர விருப்பத்தினால் ஏற்படும் துவக்கங்களைச் சரித்திரம் சோதனை செய்கிறது. அதாவது, இந்தச் சுதந்திரத்தை வாதத்தின் சட்டங்களைக் கொண்டு அது வரையறுக்கிறது. ஆகவே, அந்தச் சட்டங்களினால் சுதந்திர விருப்பத்தை வரையறுக்கிற வரையில், சரித்திரம் என்பது ஒரு சாஸ்திரமாய்த்தான் இருக்க முடியும்.

ஒரு சுதந்திர வேகமானது வானத்திலுள்ள கிரகங்களை ஆட்டிவைக்கிறது என்பதை, வான சாஸ்திரத்தில் ஒப்புக் கொண்டாகவேண்டும்; அதே மாதிரி, மனிதனின் சுதந்திர விருப்பமும், சட்டங்களுக்கு உட்படாமல் சரித்திர சம்பவங்களை நடத்தி வைக்கும் சக்தி வாய்ந்தது என்பதை, சரித்திரத்தைப் பொறுத்தவரையில் ஒப்புக்கொண்டாக வேண்டும்.

இம்மாதிரி சொல்லுவதாய் இருந்தால் எந்தச் சாஸ்திரத்திற்கும் சட்டங்கள் உண்டு என்ற விஷயத்தைத் தவிடுபொடியாக்குவதாய் இருக்கும். ஒரு கிரகம் கூட சுதந்திரமாக அசைய முடுயுமானால், கெப்ளருடையவும் நியூட்டனுடையவும் சித்தாந்தங்கள் அடிபட்டுப் போகின்றன. வானத்தில் எந்தக் கிரகமும் இருக்க முடியும் என்ற உருவகமும் அடிபட்டுப்போகிறது. சுதந்திர விருப்பத்தினால் ஒரு காரியம் செய்யமுடியுமானால், சரித்திரச் சட்டம் ஒன்று கூட நிலைத்திருக்க முடியாது. அதே மாதிரி, சரித்திரச் சம்பவங்களைப் பற்றி எந்த உருவகமும் ஏற்பட முடியாது.

சரித்திரத்தைப் பொறுத்தவரையில், மனிதர்களின் விருப்பங்களைப் பற்றிய பாதைகள் இருக்கின்றன. அவற்றின் ஒரு முனை, தெரியாத இடத்தில் மறைந்திருக்கிறது; மற்றொரு முனை, தற்காலத்தைப் பற்றிய மனித விருப்பத்தின் உள்ளுணர்வில்

அமைந்து இடைவெளி, காலம், காரணத்தின் சார்பு ஆகியவற்றில் இயங்கிக்கொண்டிருக்கிறது.

இந்த இயக்கத்தின் காட்சி எவ்வளவுக்கு எவ்வளவு அதியமாக நமக்குக் கண் முன்பாக தோன்றுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாக அந்த இயக்கத்தின் சட்டங்கள் நமக்கத் தெளிவாகத் தெரியும். அந்தச் சட்டங்களைக் கண்டுபிடித்து அவற்றை வரையறுப்பது தான் சரித்திரத்தின் பிரச்னை.

சரித்திர சாஸ்திரமானது இப்பொழுது போய்க்கொண்டிருக்கிற பாதையிலேயே சென்று, சம்பவங்களுக்கான காரணங்களை மனிதனின் சுதந்திர விருப்பத்தில் கண்டுபிடிக்க, அந்தச் சட்டங்களைச் சாஸ்திர பூர்வமாகச் சொல்ல முயற்சிப்பது முடியாத காரியமாகும். ஏனெனில், மனிதனின் சுதந்திர விருப்பத்தை எவ்வளவுதான் கட்டுப்படுத்தினாலும், அந்த வேகமானது சட்டத்திற்கு உட்பட்டதல்ல என்பதை நாம் ஒப்புக் கொள்ளுவோமானால், அந்த வினாடியே அந்தச் சட்டம் என்பது ஜீவித்திருப்பது சாத்தியமில்லாமல் போய்விடுகிறது.

இந்தச் சுதந்திர விருப்பம் என்ற பொருளை மிகச் சிறியதாகக் குறைத்தாலொழிய, அதாவது மிகச் சிறியதாய் அது இருக்கிறது என்று நாம் கருதினாலொழிய ஒன்றைச் செய்யமுடியாது. அதாவது, அப்படிச் செய்தால்தான் காரணங்களைக் கண்டுபிடிக்க முடியாது என்று நாம் நம்ப முடியும். அப்படி யானால், காரணங்களைக் கண்டுபிடிப்பதற்குப் பதிலாக, சட்டங்களைக் கண்டு பிடிக்கவேண்டிய பிரச்னை சரித்திரத்திற்கு ஏற்படும்.

அம்மாதிரி சட்டங்களைக் கண்டுபிடிக்கும் ஆராய்ச்சி வெகு காலத்திற்கு முன்பே ஆரம்பமாயிற்று. அதோடு சரித்திரம் கைக்கொள்ளவேண்டிய புதிய முறைகளையும் வகுத்தார்கள். அதோடு, சம்பவத்திற்கான காரணங்களை இடைவிடாமல், மேலும் மேலும் பிளந்து பிளந்து சோதிப்பதன் மூலம், சரித்திரத்தின் பழைய முறை தன்னுடைய அழிவை நோக்கி போய்க்கொண்டிருக்கிறது.

எல்லா மனிதகுல சாஸ்திரங்களும் அந்தப் பாதை வழியாகவே போய்க்கொண்டிருந்தன. மிக மிகச் சிறிய அளவைக் கண்டு பிடிப்பதற்கு, சாஸ்திரங்களில் கஷ்டமான கணித சாஸ்திரம் பழைய பரிசீலனை முறையைக் கைவிட்டது. வெவ்வேறுவிதமான அணுவிலும் அணுவான சிறியவைகளைக் கண்டுபிடிப்பதற்குப் புதிய பரிசீலனை முறைகளை மேற்கொண்டது. காரணத்தின் உருவகத்தைக் கைவிட்டு, அணுவிலும் அணுவான அறியமுடியாத மூலங்களின் சட்டங்களில் கணித சாஸ்திரம் சரணடைந்திருக்கிறது.

வேறு ரூபத்தில், ஆனால் அதே மாதிரியான சிந்தனை வழியில், மற்ற சாஸ்திரங்கள் முன்னேறுகின்றன. ஆகர்ஷண சித்தாந்தத்தைப் பற்றி நியூட்டன் வெளியிட்டபோது, சூரியனுக்கோ, அல்லது பூமிக்கோ கவரக்கூடிய தன்மை இருப்பதாகச் சொல்லவில்லை; பெரியவையிலிருந்து சிறியவை வரையுள்ள எல்லாப் பொருள்களுமே ஒன்றை ஒன்று கவரக்கூடிய தன்மை வாய்ந்ததாய் இருக்கிறது என்றே சொன்னார்; அதாவது பொருள்களின் இயக்கத்திற்கான காரணத்தைப் பற்றி அவர் எதுவும் கூறாமல், பெரியவையிலிருந்து சிரியவை வரையிலுள்ள எல்லாப் பொருளுக்கும் உண்டான பொதுவான தன்மையைப் பற்றியே அவர் கூறினார். இதே மாதிரிதான் இயற்கை சாஸ்திரங்களும் செய்திருக்கின்றன. அதாவது, காரணத்தின் கேள்வியை விட்டுவிட்டு, சட்டங்கள் என்ற சித்தாந்தங்களையே அவை தேடுகின்றன. சரித்திரமும் அதே பாதையில்தான் நிற்கிறது. தேச மக்களுடையவும் மனிதகுலத்தினுடையவும் இயக்கத்தைப் பற்றி பரிசீலனை செய்ய சரித்திரம் விரும்புமானால், தனிப்பட்டவர் களின் வாழ்க்கைகளிலுள்ள காரியங்களை எடுத்துக்காட்டாமல் இருக்க அது விரும்புமானால், அது ஒன்று செய்யவேண்டும். அதாவது, காரணத்தின் உருவகத்தை அது தள்ளிவைத்துவிட்டு, சுதந்திர விருப்பத்தை பிரித்துவைக்க முடியாத ஒன்றுக்கொன்று தொர்பான, அணுவிலும் அணுவான பொருள்களைப் பற்றி சட்டங்களை அது தேடிக் கண்டுபிடிக்கவேண்டும்.

## 12

**கா**ப்பெர்னிக்களினுடைய சித்தாந்தம் கண்டுபிடிக்கப்பட்டு நிரூபிக்கப்பட்ட காலத்திலிருந்து, பூமிதான் அசைகிறதே ஒழிய, சூரியன் அசைவதில்லை என்ற உண்மையை ஒப்புக் கொள்ளுவதானது, நமது முன்னோர்களின் பிரபஞ்ச அமைப்பைப் பற்றி கொள்கை முழுவதும் தவிடுபொடியாகும்படி செய்கிறது. அந்தச் சித்தாந்தத்தை மறுப்பதன் மூலம் கிரகங்களின் சஞ்சாரத்தைப் பற்றிய புராதன கொள்கையைக் கைவிடாமல் வைத்திருப்பது ஒருவேளை சாத்தியமாய் இருக்கலாம். ஆனால், அந்தச் சித்தாந்தத்தை மறுக்காமல் *பிட்டாலெமெயிக் கொள்கைப்படி கிரக சஞ்சாரங்களைக் கற்று அறிவது சாத்தியமில்லாதது போலத் தோன்றலாம். ஆனால் காப்பெர்னிக்களின் சித்தாந்தம் கண்டுபிடிக்கப்பட்ட பின்பும்கூட பிட்டாலெமியின் வான சாஸ்திரத்தை வெகுகாலம் வரையில் கற்று வந்தார்கள். (*கிளாடியஸ் பிட்டாலெமி என்பவர் எழுதிய சாஸ்திரத்தில் சூரிய,

சந்திரன் உட்பட எல்லா கிரகங்களுமே பூமியைச் சுற்றி வருவதாகச் சொல்லப்படுகிறது.)

பிறப்புக்களின் எண்ணிக்கையும் குற்றங்களின் எண்ணிக்கையும் கணித சாஸ்திர சட்டங்களுக்கு உட்பட்டதுதான் என்று சொல்லி நிரூபிக்கப்பட்ட காலத்திலிருந்தும், ஒரு குறிப்பிட்ட பூகோள, பொருளாதார நிலைமைகளினால்தான் அரசாங்கங்களின் அமைப்புகளும் நிர்ணயிக்கப்படுகின்றன என்று சொல்லப்பட்ட காலத்திலிருந்தும், பூமிகளில் ஏற்படுகிற விளைச்சல்களுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்புகளைப் பொறுத்துத்தான் மக்கள் குடிபெயர்வது இருக்கிறது என்று சொல்லப்பட்ட காலத்திலிருந்தும், எந்த அஸ்திவாரங்களின் மீது சரித்திரம் அமைக்கப்பட்டதோ, அந்த அஸ்திவாரங்கள் நாசமாக்கப் பட்டுவிட்டன.

இந்தப் புதிய சித்தாந்தங்களை மறுப்பதன் மூலம் சரித்திரத்தின் பழைய கொள்கையை நிறுத்திவைத்திருக்கலாம். ஆனால், அவற்றை மறுக்காமல், மனிதனின் சுதந்திர விருப்பங்களின் பலனாகத்தான் சரித்திர சம்பவங்கள் நேரிடுகின்றன என்று கூறி, அவற்றைத் தொடர்ந்து ஆராய்ச்சி செய்வது சாத்தியம் இல்லாததுபோலத் தோன்றலாம். ஏனென்றால், ஒருவிதமான அரசாங்கத்தை ஸ்தாபித்ததற்கும், மக்கள் ஒரு இடத்தில் குடிபெயர்ந்து போனதற்கும், பூகோள, பொருளாதார, மனித வர்க்க நிலைமைகள்தான் காரணம் என்று சொல்லுவதாய் இருந்தால், ஒரு விஷயம் அடிபட்டுப் போகிறது. அதாவது, தனிப்பட்டவர்களின் சுதந்திர விருப்பத்தினால் ஏற்பட்டதாக நமக்குக் காணப்படும் ஒரு வகையான அரசாங்கமோ, அல்லது குடிபெயர்ச்சியோ, அந்தச் சுதந்திர விருப்பத்தின் காரணமாக ஏற்பட்டவையல்ல என்று ஏற்படுகிறது.

என்றாலும், அந்தப் பழையகால கொள்கைப்படி உள்ள சரித்திரத்தை, புதிய சித்தாந்தங்களாகிய புள்ளிவிவரக் கணக்குகள், பூகோளம், அரசியல், பொருளாதாரம், மொழி நூல், பூதத்துவ சாஸ்திரம் ஆகியவற்றோடு கலந்தே கற்றுவருகிறார்கள். ஆனால், பின்னால் சொல்லிய இந்த சாஸ்திரங்கள் எல்லாம் பழைய சரித்திரக் கொள்கையை நேரடியாக மறுக்கின்றன.

பழைய கொள்கைகளுக்கும் புதிய கொள்கைகளுக்கும் உள்ள போராட்டம் பௌதீக தத்துவத்தில் நீண்டகாலமாகக் கடுமையாக நடந்துவந்தது. பழைய கொள்கைகளுக்கு காப்பாளனாக மதம் என்பது நின்று, புதிய கொள்கையானது ஞானோதயத்தை எதிர்த்து

நடப்பதாகக் குற்றம் சாட்டி வந்தது. ஆனால், உண்மையானது வெற்றிபெற்ற பின்பு, அந்தப் புதிய அஸ்திவாரத்தின்மீது மதம் என்பது பலமாகத் தன்னை ஸ்தாபித்துக் கொண்டது.

அதே மாதிரி, இப்பொழுது நடந்துவரும் சரித்திரத்தின் பழைய கொள்கைக்கும் புதிய கொள்கைக்குமுள்ள போராட்டமானது, நீண்டதாகவும் கடுமையானதாகவும் இருக்கிறது. அதே மாதிரி, மதம் என்பது பழைய கொள்கைக்குப் பாதுகாவலனாக நின்று, ஞானோதயத்தைக் கவிழ்ப்பதாக குற்றம் சாட்டுகிறது.

ஒவ்வொரு விஷயத்திலும் இரு பக்கங்களிலும் போராட்டமானது வெறியைக் கிளப்பிவிட்டு உண்மையை மறைக்கிறது. பல யுகங்களாகக் கட்டப்பட்டுவந்த கட்டிடம் தகர்ந்து போகிறதே என்று அதற்காக வருத்தமும் பயமும் ஒரு கட்சியில் இருக்கிறது; மற்றொரு கட்சியில், தகர்க்க வேண்டும் என்ற வெறி இருக்கிறது.

பௌதீக தத்துவத்தின் உண்மைகளை எதிர்த்துச் சண்டை போட்டவர்களுக்கு ஒன்று தோன்றியது. அதாவது, அந்த உண்மைகளை ஒப்புக்கொண்டால், அவை கடவுள் மீதுள்ள நம்பிக்கையையும், ஆகாயத்தைப் படைத்ததாகவுள்ள நம்பிக்கையையும், பெண் துறவியின் புத்திரனானஜோஷுவாவின் அற்புதத்திலுள்ள நம்பிக்கையையும் அழித்துவிடும் என்று அவர்களுக்குத் தோன்றியது. காப்பெர்னிக்கஸ், நியூட்டன் ஆகியவர்களுடைய சித்தாந்தங்களை ஆதரிப்பவர்களுக்கு, உதாரணமாக வால்டேருக்கு ஒன்று தோன்றியது. அதாவது, அந்த வான சாஸ்திர சித்தாந்தங்கள் மதத்தை அழித்து விட்டதாகத் தோன்றியது. அவர் ஆயர்ஷண சித்தாந்தத்தை ஒரு ஆயுதமாகக் கொண்டு மதத்திற்கு எதிராக அதை உபயோகித்தார்.

அதைப்போலவே, இப்பொழுது ஒன்று தோன்றுகிறது. அதாவது, ஆத்மாவினுடைய, நல்லது கெட்டதினுடைய உருவகங்களை நாம் அழிக்க வேண்டுமானால், அல்லது அந்த உருவகங்களில் மீது அமைக்கப்பட்டுள்ள அரசாங்க, மதக் கட்டுக்கோப்புகளை நாம் அழிக்க வேண்டுமானால், அவசியம் என்ற சட்டத்தை நாம் ஒப்புக்கொண்டால் போதும் என்று தோன்றுகிறது.

வால்டேர் அவருடைய காலத்தில் செய்ததைப் போல, அவசியம் என்ற சட்டத்தை ஆதரிக்கிறவர்கள், அதை மதத்திற்கு விரோதமாக ஒரு ஆயுதமாக உபயோகிக்கிறார்கள். என்றாலும், சரித்திரத்தில் உள்ள அவசியம் என்ற சட்டமானது வான சாஸ்திரத்தில் உள்ள - பாப்பெர்னிக்கஸ் என்பவரின் சட்டத்தைப் போலவே, ராஜாங்க

ஸ்தாபனங்களையும், மத ஸ்தாபனங்களையும் அழிக்கவில்லை; அவற்றின் அஸ்திவாரங்களை அவை பலப்படுத்துகின்றன.

அக்காலத்தில் வான சாஸ்திரத்தில் தோன்றிய கேள்வியைப் போலத்தான், இக்காலத்தில் சரித்திரத்திலும் கேள்வி தோன்றி இருக்கிறது; அதாவது, கண்ணுக்குத் தோன்றும் அற்புதங்களை அளப்பதற்கு வரையற்ற ஒன்றை அளவாக உபயோகிக்கலாமா என்பதை ஒப்புக்கொள்ளுவதா, இல்லையா என்பதன் மீதுதான் அபிப்பிராயப் பேதம் முழுவதும் தங்கி நிற்கிறது. அந்த விஷயம் வான சாஸ்திரத்தில், பூமி அசையாதது என்ற கொள்கையில் இருந்தது. சரித்திரத்தில், சுதந்திர விருப்பம் என்ற கொள்கையில் இருக்கிறது.

பூமி அசைகிறது என்ற கொள்கையை ஒப்புக்கொள்ளுவதற்குத் தடையாக நின்றது ஒன்றுதான். அதாவது, பூமி அசையாமல் நிற்கிறது. என்ற எண்ணத்தை மனதிலிருந்து நீக்கிவிட முடியாமல் இருந்ததுதான் அந்தக் தடையாகும். அதே மாதிரி தனிப்பட்ட நபர் இடைவெளி, காலம் காரணம் ஆகியவற்றின் சட்டங்களுக்கு உட்பட்டுத்தான் ஆகவேண்டும் என்று சரித்திரத்தில் ஒப்புக்கொள்ளுவதற்குத் தடையாக நிற்பது ஒன்றுதான். அதாவது, அந்தச் சட்டங்களுக்கெல்லாம் உட்படாமல் தான் சுதந்திரமாக இருப்பதாக ஒருவர் நினைக்கும் நினைப்பைக் கைவிட முடியாமல் இருப்பதுதான் அந்தத் தடையாகும். வான சாஸ்திரத்தில் புதிய கொள்கை பின் வருமாறு சொல்லியது: ''பூமி தன்னைச் சுற்றுவதை நாம் உணர முடியவில்லை என்பது உண்மைதான். ஆனால், பூமி அசையவில்லை என்று சொல்வது அசட்டுத்தனத்தில்தான் வந்து முடியும். பூமி அசைகிறது (நாம் உணர முடியாவிட்டாலும்) என்ற கொள்கையை நாம் ஒப்புக் கொள்ளுவோமானால், அதைப் பற்றிய சட்டங்களுக்கு அது ஒத்ததாய் இருக்கும்.'' சரித்திரத்தில் புதிய கொள்கை பின்வருமாறு சொல்லுகிறது : ''சார்பு நமக்கு இருப்பதாகப் பிரக்ஞை இல்லை என்பது உண்மைதான். ஆனால், நமக்குச் சுதந்திர விருப்பம் இருப்பதாக நாம் ஒப்புக் கொள்ளுவோமானால், அது அசட்டுத்தனத்திலேயே வந்து முடியும். ஆனால், வெளியுலகத்தின்மீதும், காலத்தின்மீதும், காரணத்தின் மீதும் நாம் சார்ந்திருக்கிறோம் என்பதை ஒப்புக்கொள்ளு வோமானால், அவற்றின் சட்டங்களுக்கு அது ஒத்ததாய் இருக்கும்.''

முதலாவது விஷயத்தில், வெளிப்பரப்பில் நாம் அசையாமல் இருக்கிறோம் என்ற உள்ளுணர்வை நாம் துறந்து, நாம் உணர்ந்துகொள்ள முடியாத அசைவை நாம் ஒப்புக்கொள்ள

வேண்டியது அவசியமாய் இருந்தது. இப்பொழுதுள்ள தற்கால விஷயத்தில், அதே மாதிரி, சுதந்திரம் என்ற நினைப்பையும் நாம் துறக்க வேண்டியது அவசியம்; அதற்குப் பதிலாக நாம் உணர்ந்து கொள்ள முடியாத ஒரு சார்பில்தான் நாம் இருக்கிறோம் என்பதை ஒப்புக்கொள்ளவேண்டியது அவசியமாய் இருக்கிறது.



# இரண்டாவது பின்னுரையின் விளக்கக் குறிப்புகள்

## 4

மூன்றாவது நெப்போலியன் 1852-லிருந்து 1871-வரையில் அரசாண்டு வந்தார். அவர் சிம்மாசனம் ஏறுவதற்கு முன்பாக அதைக் கைப்பற்ற இரண்டு தடவைகள் முயற்சி செய்து தோல்வி அடைந்தார். ஸ்ட்ராஸ்பர்க் என்ற இடத்தில் 1836-ல் முதல் தடவையாக முயற்சி செய்த பின்பு அமெரிக்காவிற்கு நாடு கடத்தப்பட்டார். மீண்டும் 1840-ல் பௌலோனில் அவர் முயற்சி செய்தபோது, கைது செய்யப்பட்டு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டார். 6 வருஷங்களுக்குப் பின்னால் சிறையிலிருந்து தப்பி இங்கிலாந்துக்குப் போனார். 'போரும் அமைதியும்' என்ற இந்தப் புத்தகத்தை எழுதுகிற சமயத்தில் அவர் சிம்மாசனத்தில் அமர்ந்து அரசாண்டு கொண்டிருந்தார்.

இளவரசர் ஆண்ட்ரி குர்ப்ஸ்கி என்பவர் 'பயங்கர ஜான்' என்ற சக்கரவர்த்தியின் முக்கியமான ஆலோசகர்களில் ஒருவராய் இருந்தார். தமது கண்டனத்தைக் காட்டுவதற்காக லித்துவேனியா என்ற நாட்டிற்கு தப்பி ஓடினார். அங்கிருந்து ஜானுக்கு அவருடைய கொடுமையையும், நம்பிக்கைத் துரோகத்தையும், எதேச்சாதிகாரத்தையும் கண்டித்து கடுமையாகக் கடிதங்கள் எழுதினார். ஜானும் அதே கடுமையோடு பதில் எழுதினார் அந்தப் பதிலில் கடவுளின் சட்டப்படி எதேச்சாதிகாரம் அவசியம் என்பதையும், மற்றவர்கள் அதற்கு அடங்கி நடக்கவேண்டிய அவசியத்தையும் பற்றி தமது தத்துவத்தை விளக்கியிருந்தார்.

11-வது நூற்றாண்டின் கடைசியில் நடந்துவந்த முதலாவது சிலுவைப் போரில் காட்பிரே என்பவர் ஒரு தலைவராய் இருந்தார்.

பீட்டர் என்ற சந்நியாசி ஒரு பிரஞ்சுக்காரர். அவர்தான் முதலாவது சிலுவைப்போரைக் கிளப்பி விட்டவர் என்று பரம்பரையாக ஒரு பேச்சு உண்டு.

மினே சிங்கரீஸ் என்பவர்கள் 12, 13-வது நூற்றாண்டுகளில் பல இடங்களிலும் நாடோடிப் பாடகர்களாக (பாணர்களாக) சுற்றி வந்துகொண்டிருந்தார்கள், காதல் கீதங்களையும் சிலுவைப் போர் கீதங்களையும் பாடுவது அவர்களுடைய வழக்கம்.

## 5

1864-ம் வருஷத்தில் பிரஞ்சு ராணுவத்தின் உதவியைக் கொண்டு மாக்ஸ்மிலியன் என்பவர் மெக்ஸிகோவின் சிம்மாசனத்தைக் கைப்பற்றினார். அமெரிக்காவின் உள்நாட்டு யுத்தம் முடிந்த பின்பு, அந்தப் பிரஞ்சு ராணுவம் மெக்ஸிகோவை விட்டு கிளம்ப வேண்டிய தாயிற்று. ஏனெனில் அமெரிக்க விவகாரங்களில் ஐரோப்பிய நாடுகள் தலையிடுவதை அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஒப்புக்கொள்ள வில்லை. 'போரும் அமைதியும்' என்ற இந்தப் புத்தகத்தின் கடைசிப் பாகத்தை டால்ஸ்டாய் எழுதிக்கொண்டிந்தபோது 1867-ஆம் வருஷத்தில் பாக்ஸ்மிலியனை மெக்ஸிகோ மக்கள் சுட்டுக் கொன்றார்கள்.

★★

லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

## மூன்றாம் பாகம்



சீதை பதிப்பகம்